உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ ஸுந்தராக்யகுருவர்யாயநம:

அருண்மொழித் தேவராகிய

# ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள்

அருளிச்செய்த

திருத்தொண்டர்புராணம்

என்னும்

# பெரியபுராணம்

இரண்டாங்காண்ட மூலமும்

சென்னை வேதாகமோக்த சைவசித்தாந்தசபையாருள்

ஒருவரும்

சென்னை கிறிஸ்டியன் காலேஜ்

தமிழ்ப்பண்டிதரும்

ஆகிய

ஸ்ரீ - சுப்பராயநாயகரவர்கள்

இயற்றிய பொழிப்புரையும்,

சென்னை-சூளை,

சைவசமயாசாரியர்கள் பக்தஜனசபையாரால்

வெளியிடப்பட்டன.

துன்முகி௵



Madras:

PRINTED AT THE STAR OF INDIA PRESS.

1896.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பெரியபுராண இரண்டாங்காண்டத்தின்

# அட்டவணை.

| பக்கம். | புராணம். | திருவிருத்தம். |
|---|---|---|
| எஅ௬ | இடங்கழிநாயனார் புராணம். ... | கக |
| எஅகூ | செருத்துணைநாயனார் புராணம். ... | எ |
| எகூக | புகழ்த்துணைநாயனார் புராணம். ... | எ |
| எகூரு | கோட்புலிநாயனார் புராணம். ... | கரு |
| | **பத்தராய்ப்பணிவார் சருக்கம்.** | |
| எகூஅ | பத்தராய்ப்பணிவார் புராணம். ... | அ |
| அ0க | பரமனையே பாடுவார் புராணம். ... | உ |
| அ0௩ | சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார் புராணம். ... | க |
| அ0ரு | திருவாரூர்ப் பிறந்தார் புராணம். ... | உ |
| அ0ச | முப்போதுந் திருமேனி தீண்டுவார் புராணம். ... | ரு |
| அ0சு | முழுநீறுபூசிய முனிவர் புராணம். ... | சு |
| அக0 | அப்பாலுமடிச்சார்ந்தார் புராணம். ... | உ |
| | **மன்னியசீர்ச் சருக்கம்.** | |
| அகக | பூசலார்நாயனார் புராணம். ... | கஅ |
| அகசு | மங்கையர்க்கரசியார் புராணம். ... | ரு |
| அகஅ | நேசநாயனார் புராணம். ... | ௬ |
| அகூ | கோச்செங்கட்சோழநாயனார் புராணம். ... | கஅ |
| அஉ௬ | திருநீலகண்டயாழ்ப்பாண நாயனார் புராணம். .. | கஉ |
| அரு0 | சடையநாயனார் புராணம். ... | க |
| அரு0 | இசைஞானியார் புராணம். ... | க |
| அருக | வெள்ளானைச் சருக்கம். ... | ௬ச |
| | ஆ திருவிருத்தம். | உருஅரு. |

ஆ காண்டம் இரண்டுக்குத் திருவிருத்தம் - சஉஅசு.

தொண்டர்சீர்பரவுவார் துணையடிவாழ்க.

---

## அறிவிப்பு.

இப்புத்தகம் வேண்டுவோர் சென்னையைச்சார்ந்த சூளை, டிமெல்லோஸ் ரோட்டு, 25 நெ.வீட்டில், சென்னை கிறிஸ்டியன் காலேஜ் தமிழ்ப்பண்டிதர், சூ - சுப்பராயநாயகரிடத்திலும், சென்னை தங்கசாலைவீதி 379 நெ. ஸ்டார் ஆப் இந்தியா பிறெஸ், ப்றொப்ரைடர், தா - குப்புசாமிநாயகரிடத்திலும், சிந்தாத்திரிப்பேட்டை கிழவசெட்டிவீதி, 14 நெ. வீட்டில் சி - நாராயணசாமி நாயகரிடத்திலும், விலைக்குப் பெற்றுக்கொள்ளலாம். விலை ரூபா 8—0—0 தபால்சார்ஜு - 0—11—0.




(ஸ்ரீ சம்பந்த சரணாலயர்) (திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனா

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞானஸம்பந்தகுருப்யோநம:

# பெரியபுராணம்

## இரண்டாங் காண்டம்.

ஐந்தாவது,

## வம்பறுவரிவண்டுச்சருக்கம்.

# திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் புராணம்.

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்.

(இதன்பொருள்.) (உலகத்தில்) வைதிகமார்க்கங்கள் எந்நாளும் தழைத்து மேன்மையடையவும், சிறந்த சைவ மார்க்கமானது நிலைபெற்றுப் பிரகாசிக்கவும், அவ்வைதிகசைவ பரம்பரையாகிய ஆன்மகோடிகள் விளங்கி யோங்கவும், பரிசுத்தம்பொருந்திய தமது திருவாய்மலர்ந்தழுதருளிய குளிர்ந்த நீர்வள மிகுந்த [illegible]கள் சூழ்ந்த சீகாழிப்பதியில் திருவவதாரஞ்செய்தருளிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளது திருவடித்தாமரைகளை எமது சிரசின்மேற் சூடிக்கொண்டு அவர் செய்தருளிய திருத்தொண்டின் பெருமையை யாம் துதிசெய்வோம்.—எ-று.

பரமபதி யாகிய சிவபெருமா னருளிச் செய்த பொதுவுஞ் சிறப்புமாகிய வேதாகம மிரண்டனுள், வேதம் வைதிகசம்பந்தமாக வுள்ள மற்றெல்லா மதங்களையும் பொதுவாகக் கூறி ஆன்மாக்களின் பரிபாகத்திற் கேற்ப அமைந்துள்ள தென்பார், '**வேதநெறி**' என்றும், அவ் வேதமாகிய நெறியே சோர்வின்றி விரைந்து சென்றா லொழிய தாங் குறித்த விடத்திற்குப் போக முடியா தாதலின் அந்நெறியும் திருத்தமுற் றிருக்கவேண்டு மென்பார், '**தழைத்தோங்க**' என்றும், அவ்வாறு விரைந்து சென்று சிவமகோததியிற் படிதற்குக் குறித்தவிடம் ஆகமாந்தமாகிய சித்தாந்த சைவமே யென்பார், '**மிகுசைவத் துறை**' என்றும், தாம் போய்ப் படிதற்குக் குறித்த துறை விளக்கமில்லா விடத்து அங்குந் தவறுதற் கேதுவுண்டாமாகலின் அத்துறையும் செவ்விதாகவே யிருக்கவேண்டுமென்பார், '**விளங்க**' என்றும், இவ் விரண்டும் ஓங்கிவிளங்கவே, இவற்றைத் தாரகமாகக் கொண்டுள்ள ஆன்மகோடிகள் பொலிவுற்றோங்கு மென்பார், '**பூதபரம்பரை பொலிய**' என்றும், வேதசாரமாயுள்ள திருநெறித் தமிழ்வேதம் வெளிப்படுதற்கேதுவாயுள்ளது திருவாயே யென்பார், '**புனிதவாய்**' என்றும், வேதநெறி தழைத்தோங்கவும், சைவத்துறை விளங்கவும், பூதபரம்பரை பொலியவுஞ் செய்தலாகிய பரப்பிரயோசனார்த்தமாகவே யழுதனரன்றி, வேறு பசி-பயம் முதலிய காரணங் கருதி ஸ்வயப்பிரயோசனார்த்தம் அழுதில ரென்பார், '**மலர்ந்தழுத**' என்றும், முப்போகமுந் தப்பாமல் விளையும் நீர்வள முதலியவற்றால் நிரம்பியுள்ளதென்பார், '**சீதவளவயல்**' என்றும், சத்திநிபாதத் துத்தமர்களாகிய சிவஞானச்செல்வர்கள் சென்று புகலடைந்து சேவிக்கும் ஆசாரியமூர்த்திகள் அவதார க்ஷேத்திர மென்பார், '**புகலி**' என்றும், வேத நெறி தழைத்தோங்குதல் முதலிய காரணங் கருதி யழுதவர் அஞ்ஞானவசத்தராய்த் துக்க மேலீட்டினா லழாமல் காருண்ணிய மிகுதியினா லழுத ஞானப்பிழம்பா யுள்ளவரோ யென்பார், '**திருஞானசம்பந்தர்**' என்றும், அவரே எமது பரமாசாரியமூர்த்திக ளாதலின் அவர் திருவடிகளை வணங்குதலே உய்திறனா மென்பார், '**பாதமலர் தலைக்கொண்டு**' என்றும், அவ்வெம் பேரருளாளர் உலகுயிர்கள் கடைத்தேறுதற்பொருட்டு நடத்திக்காட்டியருளிய திருத்தொண்டின்பெருமையைச் சிந்தித்து வணங்கி வாழ்த்துதலே யாமவருக்குச் செய்யும் பெருந்தொண்டா மென்பார், '**திருத்தொண்டு பரவுவாம்**' என்றுங் கூறினார்.

நெறியென்பது வழி. துறையென்பது அவ்வழியே நடந்துபோய்ப் படிதற்குக் குறித்தவிடம். வழியுந் துறையையுத்தேசித்தே யேற்பட்டதாகையால் அத்துறையையடைந்தே படியவேண்டுமென்பது துணியப்பட்டது. வேதமார்க்கத்தை நெறியென்றும், சித்தாந்த சைவத்தைத் துறை யென்றுங் கூறினமையின், அத்துறையினின்றும்படியப்படுவது சிவமகோததியென்பது சொல்லாமே யமைந்தது. வேதமாகிய வழியில் ஒருவன் நடக்கிறபோது பரிபாகத்தாழ்ச்சியா லிடையிற் றடைபட்டுத் தங்கி இதுவே பொருளென்று மதித்திருப்பன். அப்படித் தங்குதலேயன்றோ? அவ் வைதிகசம்பந்தமாகவுள்ள சமயபேதங்கள். புண்ணியமேலீட்டினால் சோபானமுறையாக இவற்றையெல்லாங் கடந்தபோ தடையுந் துறையாகிய சித்தாந்தசைவமே மீளாமுத்தியைத் தருவதென்பது இனிது விளங்குகின்றது. வேதநெறியினுஞ் சைவத்துறையே சிறப்புடையதென்பது தோன்ற 'மிகுசைவத்துறை' என்று கூறினர்.

வேதாகமமிரண்டும் சிவபெருமான் றிருவாக்கேயாமென்பதையும், அவ்வி ரண்டும் சைவர்களுக்கே ஸ்வப்பிரமாணமாமென்பதையும்,

" வேதமோ டாகம மெய்யா மிறைவனூல்
ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுள்ளன
நாத னுரையிவை நாடி லிரண்டந்தம்
பேதமதென்னிற்பெரியோர்க் கபேதமே."

என்னுந் திருமந்திரத்தானும்,

சமயபேதங்க ளனைத்தும் வேதத்திலே யடங்குமென்பதையும், அவை யனைத்தையுங்கடந்த பின்னரோ சைவம் பிராப்தமாமென்பதையும்,

" ஓதுசம யங்கள்பொரு ளுணரு நூல்க
ளொன்றோடொன் றொவ்வாம லுளபலவு மிவற்றுள்
யாதுசம யம்பொருணூ லியாதிங் கென்னி
லிதுவாகு மதுவல்ல வெனும்பிணக்க தின்றி
நீதியினா லிவையெல்லா மோரிடத்தே காண
நிற்பதியா தொருசமய மதுசமயம் பொருணூ
லாதலினா லிவையெல்லா மருமறையா கமத்தே
யடங்கியிடு மவையிரண்டு மரனடிக்கீ ழடங்கும்."—எனவும்,

" புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும்
புகன்மிருதி வழியுழன்றும் புகலுமாச் சிரம
வறத்துறைக ளவையடைந்து மருந்தவங்கள் புரிந்து
மருங்கலைகள் பலதெரிந்து மாரணங்கள் படித்துஞ்
சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும் வேதச்
சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றாற் சைவத்
திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகஞ்
செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்." — எனவும்

வருஞ் சிவஞானசித்தித் திருவிருத்தங்களானும்,

எல்லாச் சமயங்களினும் சித்தாந்தசைவமே சிறந்த தென்பதை,

" விண்ணவரிந் திரன்முதலோர் நார தாதி
விளங்குசப்த ரிஷிகள்கன வீணை வல்லோர்
எண்ணரிய சித்தர்மனு வாதி வேந்த
ரிருக்காதி மறைமுனிவ ரெல்லா மிந்தக்
கண்ணகன்ஞா லம்மதிக்கத் தானே யுள்ளங்
கையினெல்லிக் கனிபோலக் காட்சி யாகத்
திண்ணியநல் லறிவாலிச் சமயத் தன்றே
செப்பரிய சித்திமுத்தி சேர்ந்தா ரொன்றும்.

செப்பரிய சமயநெறி யெல்லாந் தன்றன்
றெய்வமே தெய்வமெனுஞ் செயற்கை யான
வப்பரிசா ளருமஃதே பிடித்தா லிப்பா
லடுத்ததந்நூல் களும்விரித்தே யனுமா னாதி

யொப்பவிரித் துரைப்பரிங்ஙன் பொய்மெய் யென்ன
வொன்றிலையொன் றெனப்பார்ப்ப தொவ்வா தார்க்கு
மிப்பரிசாஞ் சமயமுமா யல்ல வாகி
யாதுசம யமும்வணங்கு மியல்ப் தாகி.

இயல்பென்றுந் திரியாம லியம மாதி
யெண்குணமுங் காட்டியன்பா லின்பமாகிப்
பயனருளப் பொருள்கள்பரி வார மாகிப்
பண்புறவுஞ் சௌபான பக்ஷங் காட்டி
மயலறுமந் திரஞ்சிக்ஷை சோதி டாதி
மற்றங்க நூல்வணங்க மௌன மோலி
யயர்வறச்சென் னியில்வைத்து ராசாங் கத்தி
லமர்ந்ததுவை திகசைவ மழகி தந்தோ.

அந்தோவீ ததிசயமிச் சமயம் போலின்
றறிஞரொல்லா நவெறிய வணிமா வாதி
வந்தாடித் திரிபவர்க்கும் பேசா மோனம்
வைத்திருந்த மாதவர்க்கு மற்று மற்று
மிந்த்ராதி போகநலம் பெற்ற பேர்க்கு
மிதுவன்றித் தாயகம்வே றில்லை யில்லை
சந்தான கற்பகம்போ லருளைக் காட்டத்
தக்கநெறி யிந்நெறியே தான்சன் மார்க்கம்.":—என வருந்

தாயுமானசுவாமிகள் திருப்பாடலானும்,

"ஞானசம் பந்த ஞான தேசிக
நல்லருட் டிறத்தா னம்பி நீயே
பல்லுயிர்த் தொகுதியும் பயன்கொண் டுய்தெனக்
குடிலை யென்னுந் தடவய லுப்பண்
அருள்வித் திட்டுக் கருணைநீர்ப் பாய்ச்சி
வேதமென்னும் பாதபம் வளர்த்தனை
பாதப மதனிற் படுபயன் பலவே

அவற்றுள்

இலைகொண் டுவந்தனர் பலரோ யிலையொரீஇத்
தளிர்கொண் டுவந்தனர் பலரோ தளிரொரீஇ
யரும்பொடு மலர்பிஞ் சருங்கா யென்றிவை
விரும்பினர் கொண்டுகொண் டுவந்தனர் பலரோ
யவ்வா றுறுப்பு மிவ்வாறு பயப்ப
வோரும்வே தாந்தமென் றுச்சியிற் பழுத்த
வாரா வின்ப வருங்கனி பிழிந்து
சாரங் கொண்ட சைவசித் தாந்தத்
தேனமு தருந்தினர் சிலரே." :—எனவருங் குமரகுருபரசுவாமிகள்

திருவாக்கானுமுணர்க. இதனுள் வேதத்தை மரமாகவும், அதனுள்ளமைந்துகிடக்குஞ் சமயபேதங்களை இலை முதல் காயீறாகவும், வேதாந்தத்தைக் கனியாகவும்,

சித்தாந்த சைவத்தை அதன் சாரமாகவும் உவமித்தமையால், வேதாந்தத் தெளிவாகிய சைவசித்தாந்தமே முடிந்தநிலையாயிற்று. இவ்வுண்மைபோதரவே "வேதாந்த சித்தாந்த மேபிறவா வீடென்றான் - ஓதாமல் வேதமுணர்ந் தோன்" என்றார் கண்ணுடையவள்ளலாரும். (க)

சென்னிவளர் மதியணிந்த சிலம்பணிசே வடியார்த
மன்னியசை வத்துறையின் வழிவந்த குடிவளவர்
பொன்னிவளந் தருநாடு பொலிவெய்த நிலவியதாற்
கன்னிமதின் மருங்குமுகி னெருங்குகழு மலமூதூர்.

(இ-ள்.) கலைகள் வளர்கின்ற இளஞ் சந்திரனைத் திருமுடியில் தரித்த (வேதமாகிய) சிலம்பை யணிந்த சிவந்த திருவடிகளை யுடைய ஸ்ரீ நடராஜப் பெருமானது நிலைபெற்ற சைவசமய நெறியிலே தோன்றிய குடிப்பிறப்பினையுடைய அநபாயச்சக்கிரவர்த்தி முதலிய சோழ ராஜாக்கள் அரசாட்சிசெய்தற் குரித்தாகிய காவிரிநதி பல வளங்களைத் தருகின்ற சோழநாடானது தலைமைபெற்றோங்க, அழியாத மதிலின் பக்கங்களில் மேகங்கள் தவழும் சீகாழியென்னும் பழமையாகிய நகரம் விளங்கியுள்ளது.—எ-று.

தக்ஷனது கொடுஞ்சாபத்தினால் கலைகள் குறைந்து வருந்திச் சரணடைந்த சந்திரனைத் திருமுடியிலணிந்து பேரருள் புரிந்த கருணையாளனென்பார், '**சென்னிவளர் மதியணிந்த**' என்றும், "மறையே நமது பீடிகையா மறையே நமது பாதுகையா - மறையே நமது வாகனமா மறையே நமது நூபுரமா - மறையே நமது கோவணமா மறையே நமது விழியாகு - மறையே நமது மொழியாகு மறையே நமது வடிவாகும்" என்னும் பிரமாணப்படி வேதத்தையே திருச்சிலம்பாக வணிந்த திருவடியினையுடைய திருவாள னென்பார், '**சிலம்பணி சேவடியார்**' என்றும், "சைவ சமயமே சமயம்." என்றும், "தெய்வஞ் சிவனே சிவனருள் சமயம் - சைவஞ் சிவனொடு சம்பந்த மென்றான்-சைவம் வளர்க்குஞ் சம்பந்தமூர்த்தி" என்றுங் கூறியபடி சிவனைப்போலவே அவ னருள்சமயமாகிய சைவமும் ஓர்காலத்துங்கெடாதநிலையினதென்பார், '**சேவடியார்தமன்னியசைவத்துறை**' என்றும், சிவபெருமானே பரமபதி யென்றும் அவ னருள்சமயமாகிய சைவநெறியே யுய்யுநெறி யென்றும் பாரம்பரியமாகக் கடைப்பிடித் தொழுகியுள்ளவ ரென்பார் '**வழிவந்தகுடிவளவர்**' என்றும், மாரிசுருங்கிய கோடைகாலத்தும் ஊற்றுநீரால் உலகூட்டு முயர்வின தென்பார், '**பொன்னிவளந்தருநாடு**' என்றும், திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவவதாரங் காரணமாக உலகமனைத்தும் சிவப்பேறெய்தற் பொருட்டே யமைந்துள்ள தென்பார் '**பொலிவெய்த நிலவியது**' என்றும், கற்பாந்த வெள்ளங்கள் தோறு மழியாமல் நிலைபெற்றுள்ளதும், மேகமண்டலத்தையுங் கடந் தூடுருவிச்செல்லும் பேருயர்ச்சியினையுடையது மென்பார், '**கன்னிமதின்மருங்குமுகினெருங்கு**' என்றும், ஆன்மாக்களின் மலமாயா கன்மங்களை யொழித்துப் புனிதராக்கும் புண்ணியப்பதி யென்பார், '**கழுமலம்**' என்றும், பிரமனுக்குச் சிருட்டித் தொழிலை யுணர்த்தற்பொருட்டுச் சிவபெருமானாலேயே முன்னர் படைத்துக் காட்டப்பெற்ற சிறப்பின தென்பார், '**மூதூர்**' என்றுங் கூறினர். (உ)

அப்பதிதா னந்தணர்தங் கிடைகளரு மறைமுறையே
செப்புமொலி வளர்பூகச் செழுஞ்சோலை புறஞ்சூழ
வொப்பினக ரோங்குதலா லுகக்கடைநா ளன்றியே
யெப்பொழுதுங் கடன்மேலே மிதப்பதெனு விசைந்துளதால்.

(இ-ள்.) வேதியர் கூட்டங்கள் அருமையாகிய வேதங்களைப் பதபாணிக்கிரம முதலிய வரிசைகளுடன் அத்தியயனஞ் செய்யும் ஒலியோடு வளர்கின்ற செழிய கமுகஞ் சோலைகளும் பக்கங்களிற் சூழும்படி ஒப்பில்லாத சீகாழி நகரம் விளங்குதலால், அந்நகரமானது யுகாந்தகாலத்தி லல்லாமல் எக்காலத்தும் கடலின்மேல் மிதப்பதென்று சொல்லும்படிப் பொருந்தியுள்ளது.—எ-று.

வேதாத்தியயன வொலியோடு சோலைகளும் நகரத்தைச் சூழ்ந்திருக்குங் காட்சியானது கற்பாந்தகாலத்தி லல்லாமல் எப்பொழுதும் பேரிரைச்சலோடு கூடிய கடலின்மேல் மிதத்தல்போன் றிருந்ததென்க. (ஙு)

அரியயனே முதலமர ரடங்கவெழும் வெள்ளங்கள்
விரிசுடர்மா மணிப்பதண மீதெறிந்த திரைவரைகள்
புரிசைமுதற் புறஞ்சூழ்வ பொங்கோதங் கடைநாளில்
வரியரவ மந்தரஞ்சூழ் வடம்போல வயங்குமால்.

(இ-ள்.) திருமால் பிரமன் முதலிய தேவர்கள் (தம்வாணாள்பொன்றி) ஒடுங்கும்படி எழுகின்ற கற்பாந்தவெள்ளங்கள் விரிந்த கிரணங்களையுடைய மாணிக்கங்களழுத்திய மதிலினுள்ளுயர்ந்த மேடையின்மீது வீசிய அலையின் கீற்றுகள் மதிலின் முற்பக்கத்துச் சூழ்வனவாகிப் பொங்குகின்ற திருப்பாற்கடலைக் கடைந்த காலத்தில் (தேவர்கள்) மந்தரமலையிற் பூட்டிய வரிகளையுடைய வாசுகி யென்னும் வடத்தைப் போல விளங்கும்.—எ-று.

'அரியயனே முதலமர ரடங்கவெழும் வெள்ளங்கள்' என்றது, பிரமவிஷ்ணுக்கள் தம் வாணாளுலர்ந்து பொன்றுங்காலத் துண்டாகும் கற்பாந்தவெள்ளங்களை. கிரேதாயுகம் - திரேதாயுகம் - துவாபரயுகம் - கலியுகம் என்னும் இந்நான்குங் கூடியது ஒரு சதுர்யுகம்; அச்சதுர்யுகம் ஆயிரங்கூடின் பிரமனுக்கு ஒரு பகல் அது ஒரு கற்பமெனப்படும். அவ்வாறே ஆயிரம் சதுர்யுகங்கொண்டது ஒரு இரவு. பிரமனது பகல் நீக்கத்துக் கற்பாந்தவெள்ளம் வந்து அவனது சிருட்டித்தொழில் ஒடுங்கி நிற்கும். இரவு நீக்கத்தில் அஃது ஒழிந்து முன்போலவே சிருட்டி தொடங்கப்படும். இத்தகைய இரவும்பகலுங்கூடிய தினம் முப்பதுகொண்டது ஒருமாதம். அந்தமாதம் பன்னிரண்டு கொண்டது ஒருவருடம். அவ்வருடம் நூறுசென்றால் பிரமனுக்கு ஆயுள்முடியும். அப்பிரமனுயுள் காலம் விஷ்ணுவுக்கு ஒருபகல். அத்தகைய இரவும் பகலுங்கூடிய தினம் முப்பதுகொண்டது ஒருமாதம். அம்மாதம் பன்னிரண்டு கொண்டது ஒரு வருஷம். அவ்வருஷம் நூறு சென்றால் விஷ்ணுவுக்கு ஆயுள் முடியும். இவ்வாறு தோன்றுங் கற்பங்கள்தோறும் அழியாமல் அத்திரைவரைகளை ஓரடையாளமாகப் பெற்றுள்ள தென்பது தோன்ற 'அரியயனே முதலமர ரடங்கவெழும் வெள்ளங்கள் -விரிசுடர்மா மணிப்பதண மீதெறிந்த திரைவரைகள்' என்று கூறினர். இதனை,

"ஈண்டுமோ ரிருபா னுயிரந் தலையிட் டியன்றநாற் பத்துமூன் றிலக்க
யாண்டெனப் படுவ நான்குகத் தளவை யிம்முறை யாயிர மிறந்தாற்
காண்டகு மயனுக் கொருபக லதுவே கற்பமா மிரவுமத் துணைத்தவ்
வாண்டகைக் கந்நாண் முப்பதோர் திங்க ளஃதொரு பன்னிரண் டாண்டே.

பகர்ந்தவாண் டொருநூ றிருவகைப் பரார்த்தம் பற்றறில் வெள்ளிவண் டோடு
தகர்ந்திட வுடைத்து முடங்குகான் ஞிமிறு தழங்கிசைப் பேட்டொடு நறுந்தே
னுகர்ந்துபண் பயிற்றும் பொகுட்டலர் கமல நோன்மல ரணங்கினுக் கரங்க
நிகர்ந்தநா வகத்துப் பழமறை மொழிக்கு நெடுந்தகைக் கிறுதியந் துறுமால்.

அங்கது முகுந்தன் றனக்கொரு பகலா மம்முறை யாண்டுநூ றெய்திற்
செங்கதிர்ப் பரிதி மழுங்கவிட் டெரிக்குஞ் சேயொளி விலைவரம் பிகந்த
பைங்கதிர்க் கடவுட் கவுத்துவ மிமைப்பப் பசுந்துழாய் துயல்வரு மார்பிற்
கொங்கலர் கதுப்பிற் றிருவிளை யாடுங் குரிசிலு மெய்துவ னொடுக்கம்."

என வருங் காஞ்சிப்புராணத்தானுணர்க.

திரைவரைகள் வயங்குமெனக் கூட்டுக. பதணம்=மதிலுண்மேடை. (௪)

வளம்பயிலும் புறம்பணைப்பால் வாசப்பா சடைமிடைந்த
தளம்பொலியும் புனற்செந்தா மரைச்செவ்வித் தடமலராற்
களம்பயினீர்க் கடன்மலர்வ தொருபரிதி யெனக்கருதி
யிளம்பரிதி பலமலர்ந்தாற் போல்பவுள விலஞ்சிபல.

(இ-ள்.) வளப்பம்பொருந்திய அந்நகரத்தின்புறத்திலுள்ள வயலின் பக்கத்துப் பல பொய்கைகள், வாசனைபொருந்திய பசிய இலைகளுக்கிடையில் நெருங்கிய இதழமைந்து விளங்குகின்ற நீரிலுள்ள செந்தாமரையின் அழகிய பெரிய மலர்களால், இடமகன்ற நீர்மயமாகிய கடலில் உதிப்பது ஒரு சூரியனேயென்று கருதிப் பல இளஞ்சூரியர்களைத் தாம் உற்பவித்தாற் போன்றுள்ளன.—எ-று.

இலஞ்சிபல வுள, எனக் கூட்டுக. போல்ப என்னும் வினைமுற்று வினையெச்சப்பொருளில் வந்தமையின் இது முற்றெச்சம். (௫)

உளங்கொண்மறை வேதியர்த யோமதூ மத்திரவுங்
கிளர்ந்ததிரு நீற்றொளியிற் கெழுமியநண் பகலுமலர்ந்
தளந்தறியாப் பல்லூழி யாற்றுதலா லகவிடத்து
விளங்கியவம் மூதூர்க்கு வேறிரவும் பகலுமிகை.

(இ-ள்.) வேதத்தினுண்மைப்பொருளை மனதிற்கொண்டிராநின்ற பிராமணர்கள்செய்யும் யாகத்தில்தோன்றும் புகையினாலுண்டாகிய இராப்பொழுதும், (சிவனடியார்களது திருமேனியில்) விளங்குகின்ற விபூதியின் பிரகாசத்தினாலுண்டாகிய பகற்பொழுதுந் தோன்றி, அளவிடுதற்கருமையாகிய பல்லூழிகாலத்தையும் (சீகாழிநகரம்) செய்தலால், உலகத்தில் விளங்குகின்ற அப்பழைய சீகாழிநகரத்திற்கு இவைகட்கு வேறாகிய இரவும் பகலும் அதிகமாகும்.—எ-று.

வேதியர் செய்யும் ஓமமும் அன்னோரணியும் திருநீற்றினொளியுமே இரவையும் பகலையுமே மாறிமாறிச்செய்தலால் இவற்றிற்கு வேறாகிய இராக்காலமும் பகற்காலமும் அச்சீகாழிநகரத்திற்கு அதிகமாயினமையறிக. (௬)

பரந்தவிளை வயற்செய்ய பங்கயமாம் பொங்கெரியில்
வரம்பில்வளர் தேமாவின் கனிகிழிந்த மதுநறுநெய்
நிரந்தரநீ ளிலைக்கடையா லொழுகுதலா னெடிதவ்வூர்
மரங்களுமா குதிவேட்குந் தகையவென மணந்துளதால்.

(இ-ள்.) (அந்நகரத்தின்) பரந்த செந்நெல்விளைகின்ற வயல்களில் மலர்ந்த செந்தாமரைமலர்களாகிய சுவாலிக்கின்ற யாகாக்கினியில், அவ்வயல் வரம்புகளில் வளர்ந்த தேமாமரங்களினது இனிய பழங்கள் கிழிதலாலுண்டான தேனாகிய நறு நெய்யானது இடைவிடாமல் நீண்ட இலைநுனியின் வழியாய் ஒழுகுதலால், அச் சீகாழிநகரம் தன்னிடத்திலுள்ள தேமா மரங்களும் நெடுங்காலம் ஆகுதிசெய்யுந் தன்மையுடையனவென்று சொல்லும்படி விளங்கியுள்ளது.—எ-று.

இதனால் அவ்வூரிலுள்ள அஃறிணைப்பொருள்களும் யாககாரியங்களைச் செய்வனபோன்று விளங்குகின்றமையைக் கூறினமையின் உயர்திணைப்பொருள்களாகிய மக்கள் முதலியோர் தாங்கள்செய்யும் யாகாதிகாரியங்களைச் சிறிதும் குறைவற நடத்திவந்தார்களென்பது சொல்லாமே யமைந்தது காண்க. (எ)

வேலையழற் கதிர்படிந்த வியன்கங்குல் வெண்மதியஞ்
சோலைதொறு நுழைந்துபுறப் படுமபொழுது துதைந்தமலர்ப்
பாலணைந்து மதுத்தோய்ந்து தாதளைந்து பயின்றந்தி
மாலையெழுஞ் செவ்வொளிய மதியம்போல் வதியுமால்.

(இ-ள்.) சூரியன் மேற்றிசைக்கடலில் அஸ்தமிக்குங்காலுண்டாகிய பெரிய இராக்காலத்தில், வெள்ளிய சந்திரன் அந்நகரத்திலுள்ள சோலைகள் தோறும் நுழைந்து புறப்படும்பொழுது, நெருங்கிய மலரிடங்களைப்பொருந்தி அம்மலர்களிலுள்ள தேனில்முழுகி மகரந்தங்களையளாவி அங்கு நெடுநேரம் பழகி மாலைப்பொழுதில் தோன்றுகின்ற சிவந்த கிரணங்களையுடைய சந்திரன்போல விளங்கும்.

காமர்திருப் பதியதன்கண் வேதியர்போற் கடிகமழுந்
தாமரையும் புல்லிதழுந் தயங்கியநூ லுந்தாங்கித்
தூமருநுண் டுகளணிந்து துளிவருகண் ணீர்ததும்பித்
தேமருமென் சுரும்பிசையாற் செழுஞ்சாமம் பாடுமால்.

(இ-ள்.) அழகிய சீகாழிப்பதியிலுள்ள பிராமணர்களைப்போல, மணம் வீசுகின்ற தாமரைமலர்களும்,புல்லிதழையும் விளங்காநின்ற நூலையுந்தாங்கிக்கொண்டு தூய்மையாகிய நுண்ணிய துகள்களையணிந்து, துளிக்கின்ற கண்ணீரைச் சிந்தித் தேனுண்ணும்படி வந்த வண்டுகளின் இனிய ஓசையினால் செழிய சாமகீதம் பாடாநிற்கும்.—எ-று.

இச்செய்யுளைச் சிலேடைவகையால், வேதியர்கள் தருப்பைப்புல்லாகிய பவித்திரத்தையும் விளங்குகின்ற பூணூலையுந்தரித்துப் பரிசுத்தம்பொருந்திய நுண்பொடியாகிய திருவெண்ணீற்றினை யணிந்து ஆனந்தக்கண்ணீர்ததும்பச் சாமகீதம்பாடுவதுபோல, தாமரைகளும் புறவிதழையும் நாள நூலையுங் கொண்டு தெள்ளிய மகரந்தப்பொடிகளைப் பெற்றுத் தேனாகிய நீர்ததும்ப அழகிய வண்டின்னோசையால் சாமகீதம்பாடும் எனக்கொள்க-வேதியர் பக்ஷத்திற் பொருள்கொள்ளுங்கால், புல்லிதழ் என்பதைத் தருப்பைப்புற் பவித்திரமென்றும், நூல்என்பதைப் பூணூலென்றும், நுண்டுகள் என்பதைத் திருவெண்ணீறு என்றும், கண்ணீர் என்பதை

ஆனந்தக்கண்ணீர் என்றும், சாமம் என்பதைச் சாமவேதமென்றும் பொருள்கொள்க. தாமரைபக்ஷத்திற் பொருள் கொள்ளுங்கால், புல்லிதழ் என்பதைப் புறவிதழ் என்றும், நூல் என்பதை நாளநூல் என்றும், நுண்டுகள் என்பதை மகரந்தப்பொடியென்றும், கண்ணீர் என்பதை (கள் + நீர்) தேன் என்றும், சாமம் என்பதைக் கானம் என்றும் பொருள்கொள்க. (கூ)

புனைவார்பொற் குழையசையப் பூந்தானை பின்போக்கி
வினைவாய்ந்த தழல்வேதி மெழுக்குறவெண் சுதையொழுக்குங்
கனைவான முகிற்கூந்தற் கதிர்செய்வட மீன்கற்பின்
மனைவாழ்க்கைக் குலமகளிர் வளம்பொலிவ மாடங்கள்.

(இ-ள்.) அணியப்பெற்று நீண்ட பொற்குண்டலங்களசையாநிற்கப் பொலிவாகிய பட்டாடையின் முன்தானையைப் பின்பக்கத்திற் செருகி, தமக்குரிய சமஸ்காரங்களாகிய தொழில்களமைந்த ஆகவனீயம்-காருகபத்தியம்-தக்கணாக்கினி என்னும் முத்தீயையுடைய வேதிகைகள் மெழுகுதலைப்பொருந்த வெள்ளிய சுண்ணப்பொடியை யதன்மே லொழுக்கிக் கோலமிடுகின்ற ஒலிக்கும் மேகம்போலுங் கரிய கூந்தலையும், விளங்குகின்ற அருந்ததியையொத்த கற்பினையுமுடைய இல்வாழ்க்கைக்குரிய பிராமணகுலப்பெண்களால் வளம்பொருந்தியுள்ளன; அந்நகரத்திலுள்ளமாளிகைகள்.—எ-று.

வினைவாய்ந்த தழல் என்பதற்கு, யாகஞ் செய்தற்பொருட்டுத் தீக்கடைகோலினால் கடைந்தெடுக்குந் தொழிலமைந்த அக்கினி எனினுமாம். (கo)

வேள்விபுரி சடங்கதனை விளையாட்டிற் பண்ணைதொறும்
பூழியுற வகுத்தமைத்துப் பொன்புனைகிண் கிணியொலிப்ப
ஆழிமணிச் சிறுதேரூர்ந் தவ்விரதப் பொடியாடும்
வாழிவளர் மறைச்சிறுவர் நெருங்கியுள மணிமறுகு.

(இ-ள்.) யாகஞ்செய்யுஞ் சடங்குகளை விளையாடுமிடங்கள்தோறும் புழுதிகளால் (யாகசாலை - குண்டம் - வேதிகை முதலியனவாகப்) பொருந்த வகுத்துச் செய்து, (அவ்விளையாட்டின் முடிவில்) பொன்னாலாகியசிறு சதங்கைகள்சப்திக்க, சக்கரத்தையுடைய அழகிய சிறுதேருருட்டி, அச்சிறுதேருருட்டுதலா லெழுந்த புழுதிகளில் மூழ்குகின்ற வளரும் பருவத்தையுடைய பிராமணச்சிறுவர்களால் நெருங்கப் பெற்றுள்ளன அழகிய பிராமணர் வீதிகள்.—எ-று.

மணிமறுகு நெருங்கியுளவெனக் கூட்டுக.

யாகஞ்செய்வோர் அதன் முடிவில் அவபிருதஸ்நானஞ்செய்தவுடன் தேரூர்ந்து நகர்வலஞ்செய்தல் வழக்காதலின், அவ்வேதியச் சிறுவர்களும் தாங்கள் விளையாட்டுமூலமாகச்செய்த வேள்வியின் முடிவில் தேரூர்ந்தனரென்பார், 'ஆழிமணிச் சிறுதேரூர்ந் தவ்விரதப்பொடியாடும்-வாழிவளர் மறைச்சிறுவர்' என்று கூறினார். (கக)

விடுசுடர்நீள் மணிமறுகின் வெண்சுதைமா ளிகைமேகந்
தொடுகுடுமி நாசிதொறுந் தொடுத்தகொடி சூழ்கங்கு
லுடுவெனுநாண் மலரலர வுறுபகலிற் பலநிறத்தா
னெடுவிசும்பு தளிர்ப்பதென நெருங்கியுள மருங்கெல்லாம்.

(இ-ள்.) ஒளிவீசுகின்ற நீண்ட மணிகளழுத்திய வீதிகளின் பக்கங்களெல்லாம், வெள்ளிய சுண்ணச்சாந்து பூசிய மாளிகைகளின் மேகமண்டலத்தையளாவிய சிகரநாசிகள்தோறும் கட்டியிருக்கின்ற கொடிகள், மிகுந்த இராக்காலத்தில் நட்சத்திரமென்னும் (தம்மிடத்தழுத்திய நவமணிகளாகிய) புதிய மலர்கள் மலராநிற்க, பொருந்திய பகற்காலத்தில் பல நிறங்களோடு பெரிய ஆகாயந்தளிர்ப்பது போல நெருங்கியுள்ளன.—எ-று.

கொடியிற்கட்டியுள்ள நவமணிகளும் இராக்காலத்தில் நட்சத்திரங்கள் போலவும், பகற்காலத்தில் ஆகாயம் பலநிற மலர்களோடு தளிர்த்ததுபோலவும் இருந்தனவென்க. (௧௨)

மடையெங்கு மணிக்குப்பை வயலெங்குங் கயல்வெள்ளம்
புடையெங்கு மலர்ப்பிறங்கல் புறமெங்கு மகப்பொலிவு
கிடையெங்குங் கலைச்சூழல் கிளர்வெங்கு முரலளிகள்
இடையெங்கு முனிவர்குழா மெயிலெங்கும் பயிலெழிலி.

(இ-ள்.) அச்சீகாழிநகரத்தில் நீர்மடைகள்தோறும் முத்துக்குவியல்களும், வயலிடங்கள்தோறும் கயல்மீன் கூட்டங்களும், அவ்வயலின் பக்கவிடங்கள்தோறும் மலர்க்குவியல்களும், அந்நகர்ப்புறமெங்கும் யாகஞ்செய்யும் பொலிவுகளும், வேதங்களை அத்தியயனஞ்செய்யும் பிராமணர் கூட்டங்கள்தோறும் வேதவேதாங்கங்களும், மலர்ச்செறிவுகள் தோறும் ரீங்காரஞ்செய்யும் வண்டுகளின் கூட்டங்களும், அவ்வூரின் நடுவிடங்கள்தோறும் முனிவர் கூட்டங்களும், மதிலிடங்கள் தோறும் இடைவிடாமல் தவழ்கின்ற மேகக்கூட்டங்களுமாக இருக்கும்.—எ-று.

பிறங்கல்=மலை. மலர்களின் மிகுதி நோக்கி இவ்வாறு கூறினர். அம்மலர்கள் வயல்களிலிருந்து உழவர்களால் களையாகப்பிடுங்கி வரம்புகளில் போடப்பட்டவைகளென வறிக. (௧௩)

பிரமபுரம் வேணுபுரம் புகலிபெரு வெங்குருநீர்ப்
பொருவிறிருத் தோணிபுரம் பூந்தராய் சிரபுரமுன்
வருபுறவஞ் சண்பைநகர் வளர்காழி கொச்சைவயம்
பரவுதிருக் கழுமலமாம் பன்னிரண்டு திருப்பெயர்த்தால்.

(இ-ள்.) பிரமபுரமெனவும், வேணுபுரமெனவும், புகலியெனவும், பெருமைபொருந்திய வெங்குருவெனவும், ஒப்பற்ற பெருந்தன்மையையுடைய திருத்தோணிபுரமெனவும், பூந்தராயெனவும், சிரபுரமெனவும், எல்லாஸ்தலங்களுக்கும் முன்னே தோன்றிய புறவமெனவும், சண்பைநகரமெனவும், மேன்மை வளர்கின்ற சீகாழியெனவும், கொச்சைவயமெனவும், யாவரும் துதிக்கத்தக்க திருக்கழுமலமெனவும் சொல்லப்பட்டுவருகின்ற பன்னிரண்டு திருப்பெயர்களை யுடையது; அந்நகரம்.—எ-று.

பிரமன் தனது சிருட்டித்தொழிலைப் பெறவேண்டிப் பூசித்துப் பெற்றமையால் **பிரமபுரம்** எனவும், இந்திரன் சூரபதுமனால் துன்புற்று மூங்கிலுருவங்கொண்டு பூசித்தமையால் **வேணுபுரம்** எனவும், அச்சூரபதுமனால் வருத்தமுற்ற இந்திரன் முதலிய தேவர்கள் புகலடைந்தமையால் **புகலி** எனவும், சுக்கிரன் நாம் அசுரர்களனைவருக்கும் குருவாயிருக்கின்றோமென்று கொண்ட அகங்காரங் காரணமாக வெங்குருவாதலைத்தவிர்த்து, மீண்டும் பூசிக்க அருள்புரிந்தமையால்

**வேங்குரு** எனவும், உலகனைத்தையும் அழிக்கவெழுந்த கற்பாந்த வெள்ளத்தில் அழியாமல் தோணிபோல மிதந்தமையால் **தோணிபுரம்** எனவும், பதுமநிதி சங்கநிதி என்னும் இருநிதிகளும் வேண்டுவோர் வேண்டியவண்ணம் மாறாதுகொடுக்கும் வரத்தைப் பெறுங்காரணமாகப் பூசித்தமையால் **பூந்தராய்** எனவும், விஷ்ணுவானவர் திருப்பாற்கடலில்தோன்றிய அமிர்தத்தைத் தேவர்களுக்குப் பகிர்ந்துகொடுக்குங்காலத்து அவர்களோடு மறைந்துண்டு பின் சட்டுவத்தால் வெட்டுண்ட இரண்டசுரர்களது சிரங்களும் சிவபெருமானைப்பூசித்து இராகு கேதுக்களாகிய கிரகநிலையைப் பெற்றமையால் **சிரபுரம்** எனவும், கவுதமமுனிவரிட்ட சாபத்தினால் புறாவடிவம்பெற்ற பிரசாபதிமுனிவர் அச்சாபநீங்கப் புறாவடிவோடிருந்து பூசித்தமையால் **புறவம்** எனவும், துருவாசமுனிவர் தன்சாபத்தின்படி கோபாலகுமாரர்கள் சண்பைக்கதிர்களால் மடியச்செய்தபாவம் நீங்கப் பூசித்தமையால் **சண்பை** எனவும், காளிதனென்னும் சர்ப்பராஜன் பூசித்து வேண்டிய வரத்தைப்பெற்றமையால் **காழி** எனவும், பராசரமுனிவர் மச்சகந்தியைப் புணர்ந்ததனாலுண்டாகிய உடலின் துர்க்கந்தம் நீங்கப்பூசித்துப் பெற்றமையால் **கொச்சைவயம்** எனவும், உரோமசமுனிவர் கலிக்கஞ்சிச் சிவபெருமானைப் பூசித்துத் தமதுமலங்களைக் கழுவப்பெற்றமையால் **கழுமலம்** எனவும் அந்நகரத்திற்குப் பன்னிரண்டு திருநாமங்களும் அமைந்தனவென்றறிக. (கச)

அப்பதியி லந்தணர்தங் குடிமுதல்வ ராசின்மறைக்
கைப்படுத்த சீலத்துக் கவுணியர்கோத் திரம்விளங்கச்
செப்புநெறி வழிவந்தார் சிவபாத விருதயரொன்
றிப்புவிவா ழத்தவஞ்செ யியல்பினா ருளரானார்.

(இ-ள்.) அந்தப்பன்னிரண்டு திருநாமங்களையுடைய சீகாழிப்பதியில் பிராமணர்கள் குலத்திற்கு முதல்வரும், குற்றமற்ற வேதநெறியைத் தம் வழிப்படுத்திய நல்லொழுக்கங்களையுடைய கவுணியர்கோத்திரம் மேன்மையடையும்படி அக்கோத்திரத்திற்குரிய சூத்திரம் விதிக்கும் வழியே யொழுகுபவருமாகிய சிவபாதவிருதயரென்று, இவ்வுலகத்தார் சிவானந்தப்பெருவாழ்வடையும்படி தவத்தைச்செய்கின்ற இயல்பினையுடையவர் ஒருவரிருந்தார்.—எ-று.

வியாசமுனிவரால் ஒழுங்குபடுத்தப்பட்ட மறையென்பது தோன்ற 'ஆசின்மறை' என்றும், சிவபாதவிருதயர் உலகம் வாழவேண்டுமென்னும் பரப்பிரயோசனங் கருதித் தவஞ்செய்தனரன்றி, ஸ்வயப்பிரயோசனங்கருதிச் செய்திலரென்பது தோன்ற 'சிவபாதவிருதயரொன்- றிப்புவிவா ழத்தவஞ்செ யியல்பினார்' என்றுங் கூறினர். (கரு)

மற்றவர்தந் திருமனையார் வாய்ந்தமறை மரபின்வரு
பெற்றியினா ரெவ்வுலகும் பெறற்கரிய பெருமையினார்
பொற்புடைய பகவதியா ரெனப்போற்றும் பெயருடையார்
கற்புமேம் படுசிறப்பாற் கணவனார் கருத்தமைந்தார்.

(இ-ள்.) அச்சிவபாதவிருதயரது திருமனைவியார் வேதத்தில் விதித்த கோத்திர மமைந்த ஒத்த குடிப்பிறப்பினையுடையவரும், எவ்வுலகத்திலுமுள்ள மாதர்களும் பெறுதற்கரிய பெருமையினையுடையவரும், அழகுபொருந்திய பகவதியாரென்று பலருந் துதிக்குந் திருநாமத்தையுடையவரும், மேம்பட்ட கற்பின்

சிறப்பினுல் தமது கணவனுராகிய சிவபாதவிருதயரது கருத்தின்வழியே நடப்ப வருமாகிய ஒரு அம்மையா ரிருந்தார்.—எ-று.

எவ்வுலகும் பெறற்கரிய பெருமையாவது :—திருஞானசம்பந்தப்பிள்ளையாரைத் தம் பேறுகக் கொண்டதனு லடைந்த பெருமை. கணவன் கருத்தறிந்து அவன் சொற்கடவாது நடத்தலே கற்புடைமகளிர்க் கிலக்கண மாகலின், 'கற்புமேம்படு சிறப்பாற் கணவனுர் கருத்தமைந்தார்' என்று கூறினுர். இதனை,

"கொழுநன் சொற்கட வாதுறை கொள்கையே
வழுவி னல்லறம் வான்றவ மாற்றுதல்
தொழுது தெய்வம் பராய்மலர்த் தூவுதல்
பழுதில் கற்புடைப் பத்தினிக் கென்பவே." :—என்னுங் காசிகாண்டத்தானுணர்க. (கசு)

மரபிரண்டுஞ் சைவநெறி வழிவந்த கேண்மையினுர்
அரவணிந்த சடைமுடியா ரடியலா லறியாது
பரவுதிரு நீற்றன்பு பாலிக்குந் தன்மையராய்
விரவுமறை மனைவாழ்க்கை வியப்பெய்த மேவுநாள்.

(இ-ள்.) தாய் மரபு தந்தை மரபு என்னும் இரண்டு மரபும் வைதிகசைவநெறிவழியே வந்த உரிமையினையுடைய அவ்விருவரும் சர்ப்பாபரணத்தை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானது திருவடிகளை யன்றி வேறென்றினையும் ஒருபொருளென் றுணராது, துதிக்கத்தக்க விபூதியினது அன்பையே பரிபாலிக்குந் தன்மையுடையவர்களாய் வேதவிதிப்படி நடந்துவருகின்ற இல்வாழ்க்கையில் கண்டவர்கள் அதிசயிக்கும்படிவாழ்ந்துகொண்டிருக்குநாளில்.—எ-று.

திருநீற்றன்பு பாலித்தலாவது:—திருவெண்ணீற்றையே பெருஞ்செல்வமாகக்கொண்டு காலந்தப்பாமல் அன்புகூர்ந்தணிதலும், அவ்வாறணியுஞ் சிவநேசர்களைச் சிவனுகப்பாவித்து வணங்குதலும், அவர் ஏவின செய்தலும் முதலியனவாம். இதுமுத லிரண்டு பாடலுங் குளகம். (கஎ)

மேதினிமேற் சமண்கையர் சாக்கியர்தம் பொய்ம்மிகுத்தே
யாதியரு மறைவழக்க மருகியர னடியார்பாற்
பூதிசா தனவிளக்கம் போற்றல்பெறு தொழியக்கண்
டேதமில்சீர்ச் சிவபாத விருதயர்தா மிடருழந்தார்.

(இ-ள்.) உலகத்தில் கீழ்மக்களாகிய சமணர் - புத்தர் இவர்களுடைய பொய்ச்சமயமானது அதிகரித்து, முதன்மையாகிய அரிய வேதமார்க்கமானது குன்றிச் சிவனடியார்களிடத்து விபூதி ருத்திராக்ஷ முதலிய சிவசாதனங்கள் பரிபாலித்தலின்றி யொழிதலைக்கண்டு, குற்றமற்ற சிறப்பினையுடைய சிவபாதவிருதயர் துன்பமடைந்தார்.—எ-று.

ஆதியருமறை என்பதற்கு, சிவபெருமானுல் அருளிச்செய்யப்பட்ட வேதம் எனப் பொருள்கூறினும் பொருந்தும். (கஅ)

மனையறத்தி லின்பமுறு மகப்பெறுவான் விரும்புவார்
அனையநிலை தலைநின்றே யாடியசே வடிக்கமல
நினைவுறமுன் பரசமய நிராகரித்து நீறாக்கும்
புனைமணிப்பூண் காதலனைப் பெறப்போற்றுந் தவம்புரிந்தார்.

(இ-ள்.) இல்வாழ்க்கையில் இன்பமடைதற்குக் காரணமாகிய புத்திரனைப் பெறவேண்டி விரும்புகின்ற சிவபாதவிருதயர் அப் புத்திரனைப் பெறவேண்டிய நிலையிலேயே முதன்மையாக நின்று, (கனகசபையில்) திருநடனஞ்செய்தருளும் சிவந்த திருவடித்தாமரைகள் தமது உள்ளத்திற் பொருந்த முன்னே, புறச்சமயங்களை யழித்து நீருக்குகின்ற இரத்தினபரணங்களை யணிந்த புத்திரனைப் பெறுதற்கு யாவருந் துதித்தற்குரிய தவத்தைச் செய்தார்.—எ-று.

இல்லறத்திற்கு இன்றியமையாப் பெரும்பேறு யுள்ளது புத்திரப்பேறே யென்பதும், அ்இல்லார்க்கு மற்றெப்பேறிருந்தும் ஒரு பயனு மின்றென்பதும், அப் புத்திரனும் புறச்சமயங்களை யழித்து சற்சமயமாகிய சைவத்தை நிலைநிறுத்தற்குரியவனு யிருக்கவேண்டு மென்பதும், அவ்வா றிருப்பின் இம்மை மறுமைப் பயன்களை எளிதில் பெறக்கூடு மென்பதுங் கருதிச் சிவபாதவிருதயரும் புனைமணிப்பூண் காதலனைப் பெறுதற்குத் தவஞ்செய்தன ரொன்க. இதனை,

"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற.
எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்."—என வருந் திருக்குறள்களா னுணர்க.

"படைப்புப் பலபடைத்துப் பலரோ டுண்ணு
முடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
யிட்டுந் தொட்டுங் கௌவியுந் துழந்து
நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்து
மயக்குறு மக்களை யில்லோர்
பயக்குறை யிலர்தாம் வாழு நாளே." என்றார் புறநானூற்றினும். (கக)

பெருத்தெழுமன் பாற்பெரிய நாச்சியா ருடன்புகலித்
திருத்தோணி வீற்றிருந்தார் சேவடிக்கீழ் வழிபட்டுக்
கருத்துமுடிக் திடப்பரவுங் காதலியார் மணிவயிற்றி
லுருத்தெரிய வரும்பெரும்பே றுலகுய்ய வுளதாக.

(இ-ள்.) அதிகரித் தெழுந்த பேரன்பினால் சீகாழிப்பதியில் பெரியநாச்சியாரோடு திருத்தோணியில் வீற்றிருந்தருளும் சிவபெருமானது திருவடியில் வழிபாடுசெய்து, தங் கணவனரது எண்ணம் நிறைவேறும்பொருட்டு வணங்குகின்ற சிவபாதவிருதயர் பத்தினியாராகிய பகவதியாரது திருவயிற்றில் ஆளுடையபிள்ளையாரது திருவுருவம் தெரிதற்குரிய பெரும்பேறானது உலகத்தார் தம் பாவத்தினின்று நீங்கிப் பிழைக்கும்படி உண்டாக.—எ-று.

தங் கணவனரது கருத்து முடியும்படித் தாம் திருத்தோணிவீற்றிருந்தார் சேவடிக்கீழ் வழிபடுதலே பகவதியார்க்குத் தவமாயிற்றெனவறிக. (௨0)

ஆளுடையா ருடன்றோணி யமர்ந்தபிரா னருள்போற்றி
மூளுமகிழ்ச் சியிற்றங்கண் முதன்மறைநூன் முறைச்சடங்கு
நாளுடைய வீரைந்து திங்களினு நலஞ்சிறப்பக்
கேளிருடன் செயல்புரிந்து பேரின்பங் கிளர்வுறுநாள்.

(இ-ள்.) நம்மை அடிமையாகவுடைய உமாதேவியாரோடு திருத்தோணியில் வீற்றிருந்தருளும் சிவபெருமானது திருவருளைத் துதித்து,மிகுந்த சந்தோஷத்தினால் தங்களுக்குரிய முதன்மையாகிய வேதசாஸ்திர முறைமைப்படியே செய்யுஞ் சடங்குகளை நாளெண்ணிக்கையோடு கூடிய பத்துமாதங்களிலும் நன்மை மிகும்படிச் (சிவபாதவிருதயர்) தம்முறவினருடன் கலந்துசெய்து மிகுந்த இன்பத்தோடு விளங்குங்காலத்தில்.—எ-று.

முதன்மறை நூன்முறைச்சடங்காவது - கருப்பாதானம், புஞ்சவனம், சீமந்தம், விண்டுபலி முதலியவைகள். இவற்றுள் கருப்பாதானம் - கருத் தரிக்கும்படிச் செய்யுங் கிரியை. புஞ்சவனம் - ஆண்குழந்தை பிறக்கும்படி கருப்பவதியின் நாசியில் மருந்தைப்பிழியுங் கிரியை. அன்றிப் பூமுடிக்குங் கிரியையென்றுங் கூறுவர். சீமந்தம் - மூன்றிடத்தில் வெளிப்புள்ள பன்றிமுள்ளினால் தலைமயிரை வகிர்ந்து செய்யுங் கிரியை. விண்டுபலி - கருவானது வலியுற்றிருக்கும்படி விண்டுவை காலையிலும் மாலையிலும் பூசிக்குங் கிரியை; இவ்விண்டுபலி சீமந்தத்துள்ளே யடங்கும். நாளுடைய வீரைந்து திங்கள் என்றது, இன்னின்ன மாதத்திற்கு இத்தனை தேதிகள் வரவேண்டு மென்னும் நியதியையுடைய மாதங்களை. அதனை,

"கன்னியே ருடு சிங்கங் கடகமே முப்பத் தொன்று
மன்னிய தண்டெண் ணூன்கு மகரந்தே ளிருபத் தொன்பான்
சொன்னமீ னிறைசால் வில்லுச் சோர்விலா முப்ப தாகு
மன்னமென் னடையி னுளே யாதித்த னுடுங்கு நாளே." — என்னுஞ் செய்யுளா னுணர்க.

இதுமுதல் ஆறுபாடலுங் குளகம். (உக)

அருக்கன்முதற் கோளனைத்து மழகியவுச் சங்களிலே
பெருக்கவலி யுடனிற்கப் பேணியநல் லோரையெழத்
திருக்கிளரு மாதிரைநாட் டிசைவிளங்கப் பரசமயத்
தருக்கொழியச் சைவமுதல் வைதிகமுந் தழைத்தோங்க.

(இ-ள்.) சூரியன் முதலிய கோள்களெல்லாம் சிறந்த உச்சஸ்தானங்களிலே மிக்கவலியோடு பொருந்திநிற்க சோதிடசாஸ்திரிகளால் விரும்பத்தக்க நல்ல முகூர்த்தகாலம் வரவும், சிறப்புமிகுந்த திருவாதிரைநட்சத்திரத்தில் எட்டுத்திக்குகளும் கீர்த்திவிளங்கவும், புறச்சமயங்களின் அகங்காரமொழியவும், சைவ முதலாக வைதிகமார்க்கந்தழைத்து ஓங்கவும்.—எ-று.

சிவபெருமானுக் குரியநாளென்பதும், அதுவே திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவவதாரஞ்செய்தற் கிடனாயிருந்த தென்பதுந் தோன்ற "திருக்கிளரு மாதிரைநாட் டிசைவிளங்க" என்று கூறினார். (உஉ)

தொண்டர்மனங் களிசிறப்பத் தூயதிரு நீற்றுநெறி
யெண்டிசையுந் தனிநடப்ப வேழுலகுங் குளிர்தூங்க
அண்டர்குல மதிசயிப்ப வந்தணரா குதிபெருக
வண்டமிழ்செய் தவநிரம்ப மாதவத்தோர் செயல்வாய்ப்ப.

(இ-ள்.) சிவனடியார்களது திருவுள்ளங் களிப்படையவும், பரிசுத்தம் பொருந்திய பூதிசாதன மார்க்கமானது எட்டுத்திக்கினும் ஒப்பின்றி நடக்கவும்,

ஏழுலகத்திலுள்ளவர்களும் களிப்படையவும், தேவர்கூட்டங்கள் அதிசயமடைய வும், பிராமணர்கள்செய்யும் யாகங்கள் விருத்தியடையவும், சிறந்த தமிழ்மொழி செய்த தவமானது பூர்த்தியடையவும், மகத்தாகிய தவத்தினர்கள் செய்யும் தவ வொழுக்கம் (இடையூறின்றி) நிலைபெறவும்.—எ-று.

ஆன்மாக்களின் மல மாயாகன்மங்களை நீறாக்கி யொழித்துத் தூயராக்குத லால் 'தூயதிருநீறு' என்று கூறினார். வண்டமிழ் செய்தவமாவது, வடமொழியி லுளதாய வேதம் தன் மொழியி லில்லையே யென வருந்திச் செய்த தவம். (உ௩)

திசையனைத்தின் பெருமையெலாந் தென்றிசையே வென்றேற
மிசையுலகும பிறவுலகு மேதினியே தனிவெல்ல
அசைவில்செழுந் தமிழ்வழக்கே யயல்வழக்கின் றுறைவெல்ல
இசைமுழுது மெய்யறிவு மிடங்கொள்ளு நிலைபெருக.

(இ-ள்.) அஷ்ட திக்குகளின் பெருமைக ளனைத்தையும் தெற்குத்திக்கு ஒன்றே ஜெயித்து ஓங்கவும், விண்ணுலகத்தையும் பாதல முதலிய மற்ற வுலகங்க ளையும் இப் பூவுலக மொன்றே தனிமையாக வெல்லவும், கெடுதலில்லாத செந்த மிழ் வழக்கு ஒன்றே மற்றைப் பாஷைகளினது வழக்கின் முறைமையை வெல்ல வும், இசையிலக்கண வுணர்ச்சியும் மெய்ப்பொருளுணர்ச்சியும் பூரணமாகப் பர வியிருக்கின்ற நிலைமை பெருகவும்.—எ-று.

புண்ணிய பூமியாகிய இந் நிலவுலகத்திற் பிறந்து கன்மங்களை நுகர்ந்து இருவினையொப்பு வாய்ந்த முத்தாத்மாக்கள் முத்திபெறுதற் கேதுவாயிருப்பது இப் பூமியே யென்பதும், அதற் கனுகுணமாகப் பரமாசாரியராகிய திருஞானசம் பந்தப்பிள்ளையார் திருவவதாரஞ் செய்தற் கிடமாயுள்ள தென்பதும், மற்றைய வுலகங்கட்கு இத்தகைய சிறப்பின்றென்பதுந் தோன்ற 'மிசையுலகும் பிறவுலகு மேதினியே தனிவெல்ல' என்று கூறினார். (உ௪)

தாளுடைய படைப்பென்னுந் தொழிற்றன்மை தலைமைபெற
நாளுடைய நிகழ்கால மெதிர்கால நவைநீங்க
வாளுடைய மணிவீதி வளர்காழிப் பதிவாழ
ஆளுடைய திருத்தோணி யமர்ந்தபிரா னருள்பெருக.

(இ-ள்.) முயற்சியையுடைய மக்கட்படைப்பென்னும் (பிரமனது சிரு ட்டித்) தொழிலின் தன்மையானது முதன்மை பெறவும், நாள்களையுடைய நிக ழ்காலமும் எதிர்காலமும் குற்றத்தினின்று நீங்கவும், விளங்குகின்ற அழகிய திரு வீதிகளையுடைய சிறந்த சீகாழிப்பதி வாழவும், நம்மையடிமையாகவுடைய தோணி யப்பரது திருவருள் பெருகவும்.—எ-று.

பிரமனால் சிருட்டிக்கப்பட்ட சரம் அசரம் என்னு மிருபகுப்பினையுடைய ஆன்மவர்க்கங்கள் தீவினைபுரிந்து நிரயம்புகாமல், சிவஞானம்பெற்று வீடடைந்து, அப்படைப்பின் பிரயோசனம் முதன்மைபெற அவைகட்கு உண்மைஞானத்தை யுணர்த்தும்படி திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவவதாரஞ் செய்தன ரென் பார் 'தாளுடைய பிறப்பென்னுந் தொழிற்றன்மை தலைமைபெற' என்றும், திரு ஞானசம்பந்தப்பிள்ளையார் திருவவதாரத்திற்கு முற்காலமாகிய இறந்தகாலம் சம ணசமயப் பேரிருளான் மூடப்பட்டுக் குற்றமுற் றிருந்தமையின் அஃதொழிய

ஏனை இருகாலமுஞ் சிறக்கவென்பார் 'நாளுடைய நிகழ்கால மெதிர்கால நவை நீங்க' என்றுங் கூறினார். (உரு)

அவம்பெருக்கும் புல்லறிவி னமண்முதலாம் பரசமயப்
பவம்பெருக்கும் புரைநெறிகள் பாழ்படநல் லூழிதொறுந்
தவம்பெருக்குஞ் சண்பையிலே தாவில்சரா சரங்களெல்லாஞ்
சிவம்பெருக்கும் பிள்ளையார் திருவவதா ரஞ்செய்தார்.

(இ-ள்.) தீமையையே விருத்திசெய்கின்ற சிற்றறிவினையுடைய சமண முதலிய புறச்சமயங்களென்னும் பாவத்தை வளர்க்கும் பழுதாகிய மார்க்கங்கள் நாசமடையும்படி, கெடுதலில்லாத சரம் - அசரம் ஆகிய எல்லாஉயிர்வர்க்கங்களுக்கும் சிவஞானத்தை விருத்திசெய்யும் திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிறந்த ஊழிக்காலங்கள்தோறும் அழியாது நின்று தவத்தைவளர்க்கின்ற சீகாழிப்பதியிலே திருவவதாரஞ்செய்தருளினார்.—எ-று.

தாங்கள் வருந்திச் செய்யுந் தவம் - விரதம்-தெய்வங்கொள்கை முதலியவற்றால் தீங்கு விருத்தியாதலே யன்றி வேறொரு நன்மையுமின்றென்பதும், அதனினும் சும்மா கிடத்தலே சுகமென்பதுந் தோன்ற '**அவம்பெருக்கும்**' என்றும் அவ்வாறுசெய்தல் உண்மைநூல்களை யுணர்ந் தொழுகாத அறிவீனமே யென்பது தோன்ற '**புல்லறிவின்**' என்றும், அப்புல்லறிவினையே மேற்போர்வையாகக்கொண்டொழுகுநெறிகள் சமணம் - பௌத்தம் - உலகாயத முதலிய புறச்சமயங்களனைத்துமே யாமென்பது தோன்ற '**அமண்முதலாம் பரசமயம்**' என்றும், அச்சமயநெறிகளால் ஜனன மரண துக்கங்கள் கொழுந்துவிட் டோங்குமென்பது தோன்ற '**பவம்பெருக்கும்**' என்றும், "அரிவையரின் புறமுத்தி கந்த மைந்து மறுமுத்தி திரிகுணமு மடங்கு முத்தி - விரிவுவினை கெடுமுத்தி மலம்போ முத்தி விக்கிரக நித்தமுத்தி விவேக முத்தி - பரவுமுயிர் கெடுமுத்தி சித்தி முத்தி பாடாண முத்தியிவை பழிசேர் முத்தி" என்றபடி, இச் சமயபேதங்களனைத்தும் குற்றமுடையனவேயன்றிச் சன்மார்க்கமன்றென்பதுதோன்ற '**புரைநெறிகள்**' என்றும், பயிரை விருத்திசெய்யவேண்டின் அதனைச்சூழ்ந்துள்ள களையைப்பிடுங்கியெறிய, அப்பயிர் தானே செழித்தோங்குவது போல, புறச்சமயக் களைகளை யழிக்கின் சற்சமயமாகிய சைவப்பயிர் தானே செழித்தோங்கு மென்பது தோன்ற '**பாழ்பட**' என்றும், அரியயன் முதலிய அமரர் யாவரு மழிந்தொடுங்குதற் கேதுவாகிய மகாப்பிரளயகாலத்துங் கெடாமல் உயர்ந்தோங்கு மென்பதும், அவ் வூழிக்காலங்கடோறும் முத்தாத்மாக்கள் தாங்கள் செய்யுந் தவஞ் செழித்தோங்குதற் கிடனுயுள்ள தென்பதுந் தோன்ற '**நல்லூழிதொறுந் தவம்பெருக்குஞ் சண்பையிலே**' என்றும், பதியைப்போலவே பசுபாசங்களும் அநாதி நித்தியமென்பது தோன்ற '**தாவில்**' என்றும், அப்பசுக்க ளனைத்தும் இயங்கியற் பொருளும் நிலையியற்பொருளும் என்று இருவகையுள் அடங்குமென்பதுதோன்ற '**சராசரங்களெல்லாம்**' என்றும், அச் சராசரங்கள்தோறுஞ் சிவஞானத்தை விருத்திசெய்தற்கே யெழுந்தருளின ரன்றித் தனக்கென வொன்று வேண்டாத் தன்மைய ரென்பதுதோன்ற '**சிவம்பெருக்கும்**' என்றும், அவர் குமாரக்கடவுளின் அமிசாவதாரரா யுள்ளவ ரென்பது தோன்ற '**பிள்ளையார்**' என்றும், அவர் சிவபாதவிருதயர் செய்த தவங்காரணமாக ஔபசாரிகபுத்திரராய் அயோனிஜத்வமாகவே எழுந்தருளின ரென்பது தோன்ற '**திருவவதாரஞ் செய்தார்**' என்றுங் கூறினார்.

சிவபாதவிருதயர் சமணசாக்கியர்களால் உலகினர்க் குண்டாகும் உபத்திரவம் நீங்கும்பொருட்டே புத்திரப்பேறுவேண்டித் தவஞ்செய்தன ரன்றி வேறில்லை; இங்ஙனமாக, சிவபெருமான் வேறொரு சுத்தாத்மாவை அவருக்குப் புத்திரராகத் தராமல், தமது திருக்குமாரராகிய முருகக்கடவுளை அவருக்குப் புத்திரராகத் தந்தருளிய தென்னையெனின், சிவபாதவிருதயர் அச்செய்கையைத் தாம் செய்யக் கருதாமல் தம் புத்திரனைக் கொண்டே செய்யக் கருதினமைபோலச் சிவபெருமானும் தம் புத்திரனைக் கொண்டே அது செய்யக் கருதி, அவர்பால் செலுத்தினரென வறிக. ஆயின், அவர் பகவதியாரது கருப்பத்திற்றங்கிப் பிறத்தல் கூடுமோ? எனின், அவ்வாறு கொள்ளுதல் அசங்கதமாம். எங்ஙனமெனின், சிவபாதவிருதயரும் பகவதியாரும் புத்திரனைப் பெறவேண்டிப் பிரமதீர்த்தக்கரையிற் றவஞ்செய்யுங்கால் சிவபெருமானேவுதலால், குமாரக்கடவுள் ஓரிளங்குழந்தைத் திருவுருவங்கொண்டு அங் கெழுந்தருளச் சிவபாதவிருதயர் அக்குழந்தையை மகிழ்வுடனெடுத்துத் தம் மனைவியா லளிப்ப, அவரெடுத் துச்சிமோந்து தம் மனைக்குக் கொண்டுசென்று புத்திரராக வளர்த்துக்கொண்டன ரென்க. ஆயின், 'கருத்துமுடிந் திடப்பரவுங் காதலியார் மணிவயிற்றில் - உருத்தெரிய வரும்பெரும்பே றுலகுய்ய வுளதாக.' என்றும், 'முதன்மறைநூன் முறைச்சடங்கு நாளுடைய விளைந்து திங்களினு நலஞ்சிறப்பக் - கேளிருடன் செயல்புரிந்து பேரின்பங் கிளர்வுறுநாள்.'' என்றும் முற்கூறிய இரண்டு திருவிருத்தங்களால் பகவதியாருக்குக் கருப்பக்குறி யுண்டாயிற்றெனவும், அதற்குச் செய்யவேண்டிய முறைப்படியே பத்துமாதங்களிலுங் கருப்பச்சடங்குக ளனைத்துஞ்செய்துவந்தார்களெனவுங் கூறியவா றென்னையெனின், அவை யனைத்து மவர்களது விருப்பங் காரணமாகத் தோன்றினவே யன்றி உண்மை யன்றென வறிக. திருவிளையாடற் புராணத்தில் உக்கிரகுமாரபாண்டியன் திருவவதாரசந்தர்ப்பத்தில் குமாரக்கடவுள் உக்கிரகுமாரபாண்டியனாக அயோனிஜத்வமாகவே அவதரித்தனரெனவும், அவரவதாரங் காரணமாகத் தடாதகைப்பிராட்டியார்பால் கருப்பக்குறி யனைத்துஞ் சிறிதுங் குறைவறச் செவ்வனே காணப்பட்டன வெனவும், அதற்குப் பத்துமாதங்களினும் வேண்டிய சடங்குகளைச் செய்துவந்தார்க ளெனவும், அவையனைத்தும் பிறர் விருப்பங்காரணமாகத் தோன்றினவே யன்றி உண்மை யன்றெனவும் விளங்குகின்றமைபோலப் பகவதியார்க் குண்டாகிய கருப்பக்குறிகளும் ஔபசாரிகமாய்க் காணப்பட்டு, அவர்கள் தவஞ்செய்யு மிடத்தில் அயோனிஜராக ஓர் குழந்தைத் திருவுருவங்கொண்டு எழுந்தருளின ரென்பதே துணிபு. அதனை விளக்கவே 'தவம்பெருக்குஞ் சண்பையிலே தாவில்சரா சரங்களெல்லாஞ்-சிவம் பெருக்கும் பிள்ளையார் திருவவதா ரஞ்செய்தார்' என்று கூறினார். ஆயின், இவரை முருகக்கடவுளது திருவவதாரமென்று யாண்டுக்கூறி யுள்ளதெனின், ஆசிரியர் ஆங்காங்கு இப்புராணமடங்கலுங் கூறியிருத்தலன்றி, அருணகிரிநாதர் முதலிய அநேக சிவானுபூதிமான்களும் கூறியுள்ளாரெனவறிக. சிவபாதவிருதயர் தவஞ்செய்யும் பிரமதீர்த்தக்கரையில் முருகக்கடவுள் குழந்தைத் திருவுருவங்கொண்டு வந்தனரென்பதனை, சீகாழிப்புராணம் திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருவவதாரவத்தியாயத்தில் "ஆதியங் கடவு ளருள்வழிப்பதினு றாயிர வீருநீர் சூழ்ந்த - மேதினித் தலங்க டொறுமவ தரித்து மேவுமென் றேவிவெண் கயிலைப்- பூதல மதனிற் காழி மாநகரிற் புண்டரீ கன்றடத் தொருசார் - மாதவம் புரிவோன் முன்னிளங் கதிர்போன் மதலையாய் வந்தனன் கந்தன்" என்னுஞ் செய்யுளா னுணர்க. (உசு)

**வேறு.**

அப்பொழுதுபொற்புறு திருக்கழு மலத்தோ
ரெப்பெயரி னோருமய லெய்துமிடை யின்றி
மெய்ப்படு மயிர்ப்புளக மேவியறி யாமே
யொப்பில்களி கூர்வதொ ருவப்புற வுரைப்பார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவவதாரஞ்செய்தருளிய காலத்தில், அழகுபொருந்திய சீகாழிப்பதியிலுள்ளவர்கள் யாவரும் அயலிற் செல்வதற்கு இடமில்லாமல் (ஒன்றாகத் திரண்டுவந்து) புளகாங்கிதங்கொண்டு தங்களையறியாமல் ஒப்பற்றகளிப்பை யதிகரிக்கச்செய்கின்றமகிழ்ச்சியுண்டாக (தங்களில் ஒருவருக்கொருவர் கலந்து) பேசுவார்கள்.—எ-று.

திருஞானசம்பந்தப் பிள்ளையா ரவதரித்தகாலத்தில் அங்குள்ளோ ரனைவர்க்குந்தம்மை யறியாமலே மயிர்ப்புளகித்தல் - உவப்புண்டாதல் முதலியன தோன்றினமை உலகக்ஷேமார்த்தத்தை விளக்குதற்கெழுந்த ஓர் நன்னிமித்த மென்க.

சிவனரு ளெனப்பெருகு சித்தமகிழ் தன்மை
யிவணிது நமக்குவர வெய்தியதெ னென்பார்
கவுணியர் குலத்திலொரு காதல னுதித்தா
னவன்வரு நிமித்தமிது வென்றறி சயித்தார்.

(இ-ள்.) சிவபெருமான் திருவருளைப்போல அதிகரிக்கின்ற மனமகிழுந் தன்மையாகிய இது, இங்கு நமக்கு வரவேண்டியகாரணம் என்ன வென்பார்கள்; பின்பு, கவுணியர்கோத்திரத்தில் ஒரு சற்புத்திரர் அவதரித்தருளினர், அவர்அவதரிக்கும் நிமித்தமேஇவ்வாறு நிகழ்ந்ததென்று கூறி அதிசயமடைந்தார்கள்.—எ-று.

பூமுகை யவிழ்ந்துமண மேவுபொழி லெங்குந்
தேமருவு தாதொடு துதைந்ததிசை யெல்லாந்
தூமருவு சோதிவிரி யத்துக ளடக்கி
மாமலய மாருதமும் வந்தசையு மன்றே.

(இ-ள்.) எட்டுத்திக்குகளிலுமுள்ள பூவரும்புகள் மலர்ந்து மணம்வீசுகின்ற சோலையிடங்களெங்கும் தேன்பொருந்திய மகரந்தங்களினால் நெருங்கப்பெற்றுள்ளன; (அச் சோலையிடங்களில்) பரிசுத்தமாகிய ஒளிவீசும்படி மகரந்தப்பொடிகளைத் தன்னுடன் சேர்த்துக்கொண்டு மகத்தாகிய பொதியமலையில் தோன்றிய இளந்தென்றற்காற்றும் வந்து வீசும்.—எ-று.

பொதியமலை அகத்தியர் முதலிய முனிவர்களுக்கும், தேவர்கள்முதலியோர்க்கும் வாசஸ்தானமாதல் பற்றி 'மாமலயம்' என்று கூறினர். (உகூ)

மேலையிமை யோர்களும் விருப்பொடு காப்பில்
சோலைமலர் போலமலர் மாமழை சொரிந்தே
ஞாலமிசை வந்துவளர் காழிநகர் மேவுஞ்
சீலமறை யோர்களுட னேமவினை செய்தார்.

(இ-ள்.) விண்ணுலகத்திலுள்ள தேவர்களும் விருப்பத்தோடு ஒழிவில்லாமல் சோலைகள் மலர்சொரிவதுபோலச் சிறந்த கற்பகமலர்மாரி பொழிந்து, பின்

உலகத்தில்வந்து உயர்ந்த சீகாழிப்பதியில் வாசஞ்செய்யும் நல்லொழுக்கத்தையுடைய பிராமணர்களோடு கலந்திருந்து யாககாரியங்களைச் செய்தார்கள்.—எ-று.

தேவர்கள் திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவவதாரம் உலகிற்குப் பேருபகாரமாதல்கருதி மங்கலவரிசையாகக் கற்பகமலர்மாரி பொழிந்து ஓமவினை செய்தனரென்க. (௯0)

பூதகண நாதர்புவி வாழவருள் செய்த
நாதனரு ளின்பெருமை கண்டுநல மும்பார்
ஓதுமறை யோர்பிறி துரைத்திடினு மோவா
வேதமொழி யாலொலி விளங்கியெழு மெங்கும்.

(இ-ள்.) பூதகணத்தலைவர்கள் உலகத்தார் சிவாநந்தப்பெருவாழ் வடையும் பொருட்டுத் திருஞானசம்பந்தப்பிள்ளையாரை அவதரிக்கச்செய்த சிவபெருமானது திருவருளின் பெருமையைக்கண்டு துதித்தல் முதலிய நன்மைகளைச் செய்வார்கள்; வேதங்களை அத்தியயனஞ்செய்யும் பிராமணர்கள் (அவ் வோதற்றொழிலின்றி இடையில்) வேறு வார்த்தைகளைப் பேசினாலும், அவருரையிற் கலந்து நீங்காமல் சப்திக்கின்ற வேதபதவாக்கியங்களால் எவ்விடங்களிலும் ஒலிவிளங்கித் தோன்றும்.—எ-று.

வேதியர்கள் வேதமோதுங்கால் இடையில் யாகவிஷயமாக வேறுவார்த்தைகள் பேசினும், அவ் வேதவொலி தெய்வீகமாக அவருரையிற் கலந்து இடைவிடாமல் ஒலித்தமை பின்னர் இவர் திருவாக்கினால் தமிழ்வேதமென்னும் பெயர் கொண்டு வருவோமென்னுங் குதுகலங்கொண் டென்க. (௯க)

பயன்றருவ பைந்தருவும் வல்லிகளு மல்கித்
தயங்குபுன லுந்தெளிவ தன்மையுட னண்ணும்
வயங்கொளி விசும்புமலி னங்கழியு மாறு
நயம்புரிவ புள்ளொலிக ணல்லதிசை யெல்லாம்.

(இ-ள்.) பல விருக்ஷங்களும் பூங்கொடிகளும் செழிப்படைந்து நல்ல பயனைக் கொடுப்பனவாயின; குளிர்ச்சியோடு பொருந்தியநீர்நிலைகளும் தெளிவுடையனவாயின; பிரகாசிக்கின்ற சந்திர சூரியர்களையுடைய ஆகாயமும் மாசற்றுவிளங்கித்தோன்றுவனவாயின; சிறந்த எட்டுத்திக்குகளிலுமுள்ள பறவைகளினொலிகள் நீங்காத மங்கலகரமான ஓசையைச் செய்வன வாயின.—எ-று.

ஒளி எனப் பொதுப்படக் கூறினமையின் வெள்ளொளி செவ்வொளிகளாகிய சந்திரசூரியர்களெனப் பொருள் கூறப்பட்டது. (௯உ)

அங்கண்விழ விற்பெருகு சண்பையகன் மூதூர்ச்
சங்கபட கங்கருவி தாரைமுத லான
எங்கணு மியற்றுபவ ரின்றியு மியம்பு
மங்கல முழக்கொலி மலிந்தமறு கெல்லாம்.

(இ-ள்.) அழகிய இடங்கள்தோறும் மங்கலவிழவினால் சிறப்படைந்திருக்கும் இடமகன்ற பழமையாகிய சீகாழிப்பதியில் மங்கலவாத்திய வோசைகளால் நிறையப்பெற்ற திருவீதிகளெங்கும் சங்கம், தம்பட்டம், நரம்புக்கருவிகள், திருச்

சின்ன முதலிய வாத்தியங்கள் எவ்விடங்களிலும் அவைகளை வாசிப்பாரொருவருமில்லாமல் தெய்வீகமாகத் தாமே யொலிக்கும்.—எ-று. (௩௩)

இரும்புவன மித்தகைமை யெய்தவவர் தம்மைத்
தருங்குல மறைத்தலைவர் தம்பவன முன்றிற்
பெருங்களி வியப்பொடு பிரானருளினாலே
யருந்திரு மகப்பெற வணைந்தவணி செய்வார்.

(இ-ள்.) பெருமைபொருந்திய அந்தச் சீகாழிநகரமானது இத்தன்மையாகிய மகிழ்ச்சியினையடைய ஆளுடையபிள்ளையாரைப் புத்திரராகப் பெற்ற பிராமணகுல சிரேஷ்டராகிய சிவபாதவிருதயர் தமது திருமாளிகையின் முற்றத்தில் மிகுந்த களிப்பினாலும் அதிசயத்தினாலும் சிவபெருமானது திருவருளினாலே அருமையாகிய அழகிய புத்திரனைப்பெற்றதனாற் செய்யவேண்டிய (விழவிற்குப்பொருந்திய) அலங்காரத்தைச் செய்வாராயினர்.—எ-று.

பவனம்=திருமாளிகை. (௩௪)

காதல்புரி சிந்தைமகி ழ்க்களி சிறப்பார்
மீதணியு நெய்யணி விழாவொடு திளைப்பார்
சூதநிகழ் மங்கல வினைத்துழனி பொங்கச்
சாதக முறைப்பல சடங்குவினை செய்வார்.

(இ-ள்.) ஆசையை அதிகரிக்கச்செய்கின்ற மனமகிழ்தல் காரணமாகக் களிப்படைவார்; தேகத்தின்மேல் பூசிக்கொள்ளுகின்ற சிறந்த நெய்விழாவினால் மகிழ்ச்சியடைவார், ஆளுடைய பிள்ளையார் திருவவதாரங் காரணமாகச்செய்யும் மங்கலகரமாகிய ஆரவாரங்கள் அதிகரிக்கச் சாதகன்மஞ் செய்தற்குரிய பல சடங்குகளையுஞ் செய்வார்.—எ-று.

சாதகன்மமாவது—அத்திரமந்திரத்தை யுச்சரித்து நூறு ஓமஞ் செய்து, வாமமந்திரத்தை யுச்சரித்துக் குழந்தை திருமுகத்தை எதிர்நோக்கி, பஞ்சப்பிரம மந்திரத்தை யுச்சரித்து உச்சி மோந்து, புருடமந்திரத்தை வலக்காதில் செலுத்தல். முன் திருவிருத்தத்திலுள்ள மறைத்தலைவர் என்னும் எழுவாயை ஈண்டுத் தனித்தனி பிரித்துக் கூட்டுக. (௩௫)

மாமறை விழுக்குல மடந்தையர்க டம்மிற்
றாமுறு மகிழ்ச்சியொடு சாயன்மயி லென்னத்
தூமணி விளக்கொடு சுடர்க்குழைகண் மின்னக்
காமர்திரு மாளிகை கவின்பொலிவு செய்வார்.

(இ-ள்.) சிறந்த வேதியர்குலப்பெண்கள் தங்களுக்குள் தாங்களே யடைகின்ற மிக்க மகிழ்ச்சியுடனே சாயலையுடைய மயிலைப்போல (தங்கள் கையிலேந்திய) பரிசுத்தமாகிய மாணிக்கத்தீபங்களோடு பிரகாசிக்கின்ற காதணிகள் விளங்கச் சிவபாதவிருதயரது அழகிய திருமாளிகையை அலங்கரிப்பார்கள்—எ-று.

தூமணி விளக்கு என்பதற்கு, பரிசுத்தமும் அழகும் பொருந்திய விளக்கு எனினுமாம். (௩௬)

சுண்ணமொடு தண்மலர் துதைந்ததுகள் வீசி
யுண்ணிறை விருப்பினுட னேகையுரை செய்வார்
வெண்முளைய பாலிகைகள் வேதிதொறும் வைப்பார்
புண்ணிய நறும்புனல்கொள் பொற்குட நிரைப்பார்.

(இ-ள்.) பொற்சுண்ணப்பொடியோடு குளிர்ந்த மலர்களிற்பொருந்திய மகரந்தப் பொடிகளைக்கலந்து ஒருவர் மேலொருவர் வீசிக்கொண்டு, தங்கள் மனத்தில் நிறைந்த விருப்பத்தோடு சந்தோஷவார்த்தைகளை ஒருவர்க்கொருவர் பேசிக்கொள்ளுவார்கள்; வெண்மையாகிய முளைப்பாலிகைகளை மேடைகள்தோறும் வைப்பார்கள்; நல்ல மணம்பொருந்திய கங்கைமுதலிய புண்ணியதீர்த்தங்களையுடைய பொற்குடங்களை வரிசையாக வைப்பார்கள்.—எ-று.

புண்ணியநறும்புனல்=புண்ணியதீர்த்தம்; அவை கங்கை, யமுனை, சரஸ்வதி, நருமதை, காவேரி, குமரி, கோதாவரி என்னும் நதிதீர்த்தங்களும் பிறவுமாம்.

செம்பொன்முத லாயபல தானவினை செய்வார்
நம்பரடி யாரமுது செய்யநல முய்ப்பார்
வம்பலர் நறுந்தொடையல் வண்டொடு தொடுப்பார்
நிம்பமுத லானகடி நீடுவினை செய்வார்.

(இ-ள்.) சிவந்த சுவர்ணதானமுதலிய பல தானங்களைச் செய்வார்கள்; சிவபெருமானுக்குரிய அடியார்கள்திருவமுதுசெய்யும்படியாக நன்மையான சாமக்கிரியைகளைச்சேகரித்துக்கொடுப்பார்கள்; வாசனை வீசுகின்ற நல்ல மலர்மாலைகளை வண்டுகளோடு பந்தலில் தொங்கக்கட்டுவார்கள்; வேப்பிலைசெருகுதல் முதலாகிய சிறந்த காப்புவினைகளைச் செய்வார்கள்.—எ-று.

செம்பொன் முதலாய பல தானங்கள்:—சுவர்ணதானம், பூதானம், கோதான முதலியவைகள். (௩௮)

ஐயவி யுடன்பல வமைத்தபுகை யாலு
நெய்யகி னறுங்குறை நிறைத்தபுகை யாலும்
வெய்யதழ லாகுதி விழுப்புகையி னாலுந்
தெய்வமண நாறவரு செய்தொழில் விளைப்பார்.

(இ-ள்.) வெண்கடுகுடனே பல பொருள்களையுஞ் சேர்த்து உண்டாக்கிய காப்புப்புகையினாலும், நெய்யுடன் நல்ல மணம்பொருந்திய அகிற்கட்டைகளால் உண்டாக்கிய புகையினாலும், வெவ்விய யாகாக்கினியில் ஆகுதிசெய்வதனால் உண்டாகிய சிறந்த புகையினாலும் தெய்வத்தன்மைபொருந்திய மணம் வீசும்படியான தொழில்களைச் செய்வார்கள்.—எ-று. (௩௯)

வெய்ய தழல் என்றது, நெருப்பின் சுபாவத்தன்மையைக் கூறியபடி.

ஆயபல செய்தொழில்க ளன்றுமுதல் விண்ணோர்
நாயக னருட்பெருமை கூருநல மெய்தத்
தூயதிரு மாமறை தொடர்ந்தநடை நூலின்
மேயவிதி யையிரு தினத்தினும் விளைத்தார்.

(இ-ள்.) இவ்வாறாகிய பல தொழில்களைத் தேவர்கள் நாயகராகிய சிவபெருமானது திருவருளின் பெருமையை யாவரும் அடையத்தக்கதாகிய நன்மை

பொருந்தும்படி, பரிசுத்தமாகிய சிறந்த வேதங்களிற்கூறிய நெறியை அனுசரித்த ஸ்மிருதிகளில் சொல்லப்பட்டவிதிப்படியே (திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவவதாரஞ் செய்தருளிய) அன்றுமுதல் பத்துத் தினங்களிலும் தவறாமல் செய்து வந்தார்கள்.—எ-று. (சo)

நாமகர ணத்தழகு நாள்பெற நிறுத்திச்
சேமவுத யப்பரிதி யிற்றிகழ் பிரானைத்
தாமரை மிசைத்தனி முதற்குழவி யென்னத்
தூமணி நிரைத்தணிசெய் தொட்டிலமர் வித்தார்.

(இ-ள்.) நாமகரணஞ்செய்தற்குரிய சிறந்த பதினோராம்நாள் வந்து பொருந்த (ஆளுடைய பிள்ளையார் என்று) திருப்பெயர்தரித்து, உலகுயிர்களுக்குப் பேரின்பத்தை விளைக்கும் பாலசூரியனைப்போல விளங்குகின்ற எமது திருஞானசம்பந்தப் பெருமானைத் தாமரைமலர்மேல் வீற்றிருந்தருளும் ஒப்பற்ற முதன்மையையுடைய பிரமதேவனைப்போலப் பரிசுத்தமாகிய இரத்தினங்களைப் பதித்து அழகு செய்கின்ற தொட்டிலில் எழுந்தருளுவித்தார்கள்.—எ-று.

நாமகரணமாவது,—பெயரிடுதலிற் செய்யுங் கிரியை. (சக)

பெருமலை பயந்தகொடி பேணுமுலை யின்பால்
அருமறை குழைத்தமுது செய்தருளு வாரைத்
தருமறைவி யார்பரமர் தாள்பரவு மன்பே
திருமுலை சுரந்தமுது செய்தருளு வித்தார்.

(இ-ள்.) பெரிய பருவதராஜபுத்திரியாகிய வுமாதேவியார் விரும்பத்தக்க தமது திருமுலைப் பாலமுதத்தோடு அருமையாகிய வேதப்பொருள்களையுங் குழைத்தூட்டத் திருவமுதுசெய்தருள்பவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரைப் பெற்ற பகவதியார் சிவபெருமானுடைய திருவடிகளைத் துதிக்கும் அன்பையே தமது அழகிய ஸ்தனங்களினின்றுஞ் சுரந்து திருவமுதுசெய்தருளும்படிச் செய்தார்.—எ-று.

“அருளென்னு மன்பீன் குழவி” என்றபடி அருளுக்கு அன்பே காரணமாதலின், பகவதியார் அன்பே திருமுலைசுரந்து அமுதுசெய்வித்தனரென்க. (சஉ)

ஆறுலவு செய்யசடை யையரரு ளாலே
பேறுலகி னுக்கென வரும்பெரிய வர்க்கு
வேறுபல காப்புமிகை யென்றவை விரும்பார்
நீறுதிரு நெற்றியி னிறுத்திநிறை வித்தார்.

(இ-ள்.) கங்கைநதி தவழும் சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமானது திருவருளினாலே இவ்வுலகத்திற்கு ஒரு பெரும்பேறென்று சொல்லும்படித் திருவவதாரஞ்செய்தருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்கு மட்காப்பு முதலிய பல வேறு காப்புகளிடுதல் குற்றமாமென்று அக்காப்பைவிரும்பி அணியாதவராய்த் திருநீற்றுக்காப்பு ஒன்றினையே திருநெற்றியில் தரித்து அழகு விளங்கச் செய்தார்.—எ-று. (சங)

வே று.

தாயர்திரு மடித்தலத்துந் தயங்குமணித் தவிசினிலுந்
தூயசுடர்த் தொட்டிலினுந் தூங்குமலர்ச் சயனத்துஞ்
சேயபொருட் டிருமறையுந் தீந்தமிழுஞ் சிறக்கவரு
நாயகனைத் தாலாட்டு நலம்பலபா ராட்டினார்.

(இ-ள்.) நற்றாய்முதலிய தாய்மார் தமது மடியிலும், விளங்குகின்ற இரத்தினமழுத்திய மெத்தைகளிலும், பரிசுத்தமாகிய ஒளியினையுடைய தொட்டில்களிலும், விளங்குகின்ற புஷ்பசயனத்திலும், சிறந்த மெய்ப்பொருளமைந்த அழகிய வேதங்களும் இனிய தமிழ்மொழியும் சிறந்தோங்கும்படி அவதரித்தருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரைத் தாலாட்டுதல் முதலாகிய பல நன்மைகளையும் பாராட்டினார்கள்,—எ-று.

தாயர் என்றதனால் பாராட்டுந்தாய், ஊட்டுந்தாய், நற்றாய், கைத்தாய், செவிலித்தாய் என்னும் ஐவரையுங்கொள்க. சேயபொருள் என்பதற்கு, கிட்டுதற்கரிய பொருள் எனினும் பொருந்தும். தாலாட்டு என்பது நாவசைத்துத் தொட்டிலாட்டும்பாட்டு. அன்றி, தால் என்னு மோசையோடு தொட்டிலையாட்டுமோர் பாட்டெனினுமாம். தாலு=நா, பாராட்டுதல்=புகழ்தல். இதனைத்தாராட்டு என்பதும் உண்டு. அது, தார் - தொட்டிற்கயிற்றை, ஆட்டு-ஆட்டுதல் எனப்பொருள்படும். தாயர்-பாராட்டினார் எனக்கூட்டுக. (௩௪)

வருமுறைமைப் பருவத்தில் வளர்புகலிப் பிள்ளையார்
அருமறைக டலையெடுப்ப வாண்டதிரு முடியெடுத்துப்
பெருமழுவர் தொண்டல்லாற் பிறிதிசையோ மென்பார்போற்
றிருமுகமண் டலமசையச் செங்கீரை யாடினார்.

(இ-ள்.) தாலாட்டுப் பருவத்தின் பின் முறையே வருகின்ற செங்கீரைப் பருவத்தில், ஊழிக்காலத்தும் அழியாது வளர்ந்தோங்காநின்ற சீகாழியில் அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அருமையாகிய வேதங்கள் தலையெடுத்தோங்கும் பொருட்டு, நம்மை யடிமையாகக்கொண்ட தமது திருமுடியை மேலேயெடுத்துப் பெரிய மழுப்படையையுடைய சிவபெருமானது திருத்தொண்டினையல்லாமல் வேறொன்றினையும் யாம் உடன்பட்டுச் செய்யோமென்று மறுப்பவரைப்போல, அழகிய திருமுகமண்டலம் அசையாநிற்கச் செங்கீரையாடியருளினார்.

செங்கீரை யாடல்,—செவ்விய மதலைச் சொற்களைச் சொல்ல எத்தனித்தல். கீர்=சொல். இப்பருவத்தின் செயல், ஒருகாலை மடக்கி ஒருகாலை நீட்டி இரண்டு திருக்கரங்களையும் நிலத்தி லூன்றித் தலை நிமிர்த்து முகமசைய ஆடுதல். ()

நாமறியோம் பரசமய முலகிலெதிர் நாடாது
போமகல வென்றங்கை தட்டுவதும் புனிதன்பாற்
காமருதா ளம்பெறுதற் கொத்துவதுங் காட்டுவம்பாற்
றாமரைச்செங் கைகளினாற் சப்பாணி கொட்டினார்.

(இ-ள்.) (புறச்சமயிகளே !) நாம் உமது ஈனசமயங்களை மதியோம்; அதனால் உலகத்தில் நமக்கு எதிரில் நீங்கள் நில்லாமல் தூரநீங்கிப் போய்விடுங்களென்று தமது அழகிய திருக்கரங்களைத் தட்டுதலும், மலரகிதராகிய சிவபெருமானிடத்தில் அழகிய பொற்றாளம் பெறும்பொருட்டு ஒத்தறுத்தலும் காட்டுந் தன்மை

போலத் தாமரைமலர்போன்ற அழகிய திருக்கரங்களினால் சப்பாணிகொட்டியருளினார்.—எ-று.

அறியோம் என்னும் முற்று மறியாமையைக் குறிப்பா லுணர்த்தினது. ஒத்துதல்-ஒத்தறுத்தல்; அதாவது, தாளத்துக்குரிய மாத்திரைகளை வரையறுத்தல். சப்பாணிகொட்டுதல்,— கையுடன் கைசேரத் தட்டுதல். இதனை, ச-பாணி எனப் பிரித்து, ச-சகிதம், பாணி - கை எனப் பொருள்கொள்க. காமம் மரு என்பது, காமரு என மருவியது. (௭௬)

விதிதவறு படும்வேற்றுச் சமயங்க ளிடைவிழுந்து
கதிதவழ விருவிசும்பு நிறைந்தகடி வார்கங்கை
நதிதவழுஞ் சடைமுடியார் ஞானமளித் திடவுரியார்
மதிதவழ்மா ளிகைமுன்றின் மருங்குதவழ்ந் தருளினார்.

(இ-ள்.) வேதவிதிக்கு விரோதமாகத் தவறியிருக்கின்ற சமணமுதலிய புறச்சமயங்கள் இடையேமுறிந்து வலிகுன்றி மந்தகதியாய்த் தவழ்ந்து செல்லும் பொருட்டு, பெரிய ஆகாயத்தில் நிறைந்த வாசனைபொருந்திய நீண்ட கங்காநதியானது தவழ்ந்துசெல்லுஞ் சடைமுடியினையுடைய சிவபெருமானது மெய்ஞ்ஞானத்தை உலகத்தார்க்கு அருள்செய்தற்குரிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் சந்திரன் தவழும் தமது திருமாளிகையின் முற்றத்தின் பக்கத்தில் தவழ்ந்தருளினார்.

சூழவரும் பெருஞ்சுற்றத் தோகையருந் தாதியருங்
காழியர்தஞ் சீராட்டே கவுணியர்கற் பகமேயென்
றேழிசையும் பலகலையு மெவ்வுலகுந் தனித்தனியே
வாழவரு மவர்தம்மை வருகவரு கெனவழைப்ப.

(இ-ள்.) தம்மைச் சூழ்ந்திருக்கின்ற மிகுந்த சுற்றத்தார்களாகிய பிராமணஸ்திரிகளும், தாதிமார்களும், சீகாழிப்பதியிலுள்ளவர்களது செல்வமாயுள்ளவரே! கவுணியகோத்திரத்தார்பெற்ற கற்பகத்தருவையொத்தவரே! என்று, ஏழிசைகளும்,வேதமுதலிய பலசாஸ்திரங்களும், எல்லாவுலகத்தாரும் தனித்தனியே பெருவாழ்வடையும்படி அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரை வருகவருகவென்று அழைப்பார்கள்.—எ-று.

ஏழிசையாவன :—குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பனவாம். இவற்றுள் மிடற்றால் குரலும், நாவினால் துத்தமும், அண்ணத்தால் கைக்கிளையும், சிரத்தால் உழையும், நெற்றியால் இளியும், நெஞ்சால் விளரியும், மூக்கால் தாரமும் பிறக்கும்; இவற்றிற்கு முறையே ஓசையுவமை, மயில்-இடபம்-ஆடு-கொக்கு-குயில்-குதிரை-யானை எனவும், சுவையுவமை, பால்-தேன்-கிழான்-நெய்-ஏலம்-வாழை-மாதுளங்கனி எனவும், வாசனையுவமை, மௌவல் - முல்லை - கடம்பு-வஞ்சி-நெய்தல்-பொன்னாவிரை-புன்னை எனவும், அக்ஷரம், ஆ அ - ஈ இ- ஊ உ- ஏ எ-ஐ இ-ஓ ஒ-ஔ உ எனவும்கூறப்படும். இவற்றிற்கு மாத்திரை குரலுக்கு நான்கும், துத்தத்திற்கு நான்கும், கைக்கிளைக்கு இரண்டும், உழைக்கு மூன்றும்,இளிக்கு நான்கும்,விளரிக்கு மூன்றும், தாரத்திற்கு இரண்டுமாம். இவற்றால் எழுபாலையும் பிறக்கும் ; அவை வருமாறு:—குரலேகுரலாயின் செம்பாலையும், துத்தமே குரலாயின் படுமலைப்பாலையும், கைக்கிளையே குரலாயின் செவ்வழிப்பாலையும், இளியே குரலாயின் கொடிப்பாலையும், விளரியே குரலாயின் விளரிப்பாலை

யும், தாரமே குரலாயின் மேற்செம்பாலையுமாம். இவற்றிற்கு இறைவர் முறையே விசுவாமித்திரன், சமதக்கினி, சந்திரன், சூரியன், கவுதமன், காசிபன், ஈசன் என்பவர்கள். இவற்றிற் குயிர், ஈசன் எனவறிக.

வருக வருக என்னும் அடுக்கு உவகைப்பொருளில்வந்தது. (சகூ)

திருநகையா லழைத்தவர்தஞ் செழுமுகங்கண் மலர்வித்தும்
வருமகிழ்வு தலைசிறப்ப மற்றவர்மேற் செலவுகைத்தும்
உருகிமனங் கரைந்தலைய வுடனணைந்து தழுவியுமுன்
பெருகியவின் புறவளித்தார் பெரும்புகலிப் பிள்ளையார்.

(இ-ள்.) பெருமைபொருந்திய சீகாழியில் அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் (கைகொட்டித் தம்மை வருகவருகவென்று) அழைத்ததாய் தந்தைமுதலியவர்களுடைய சிறந்த முகாரவிந்தங்களை அழகிய புன்னகையினால் மலரச்செய்தும், அதிகரிக்கின்ற மகிழ்ச்சி சிறந்தோங்க அவர்களிடத்துத் தவழ்ந்துசென்று திருவடிகளா லுதைத்தும், மனமுருகிக் கரைந் திளகும்படி முன்னே விரைந்துசென்று தழுவியும் அவர்களுக்கு மிகுந்த மகிழ்ச்சியைத்தந்தருளினார்.—எ-று.

வளர்பருவ முறையாண்டு வருவதன்முன் மலர்வரிவண்
டுளர்கருமென் சுருட்குஞ்சி யுடனலையச் செங்கின்று
கிளரொளிக்கிண் கிணியெடுப்பக் கீழ்மைநெறிச் சமயங்க
டளர்நடையிட் டறத்தாமுந் தளர்நடையிட் டருளினார்.

(இ-ள்.) (திருஞானசம்பந்தப் பிள்ளையார் இவ்வாறு தாய்தந்தைமுதலிய பலரும் மகிழ்வெய்தும்படி) வளருகின்ற பருவம் முறையே ஒரு வருடம் வருவதற்குமுன்னே,வரிகளையுடைய வண்டுகள் மொய்க்கின்ற மலர்கள் கரிய மிருதுவாகிய சுருண்ட குடுமியோடலையும்படி செவ்வையாகநின்று, ஒளிவிளங்குகின்ற சிறுகாற்சதங்கைகள் ஒலிப்ப, தாழ்ந்தமார்க்கங்களையுடைய புறச்சமயங்கள் (பிரகாசித்தலின்றி) தளர்ந்த நடையிட்டு வருந்திக் கெடும்பொருட்டுத் தாமும் (தத்தடியிட்டு) தளர்நடைப்பருவம் அடைந்தருளினார்.—எ-று.

திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவவதாரஞ்செய்தருளினமை சமணம் பௌத்தமுதலிய புறச்சமயங்களையழித்துச் சற்சமயமாகிய சைவசமயத்தை விருத்திசெய்தற்பொருட்டே யாதலால், 'கீழ்மைநெறிச் சமயங்க - டளர்நடையிட்டறத்தாமுந்தளர்நடையிட்டருளினார்' என்று கூறினார். தளர்நடையிடுதல் = தாழ்ந்தநிலைமையில் வருதல். (ருo)

தாதியர்தங் கைப்பற்றித் தளர்நடையி னசைவொழிந்து
சோதியணி மணிச்சதங்கை தொடுத்தவடம் புடைசூழ்ந்த
பாதமலர் நிலம்பொருந்தப் பருவமுறை யாண்டொன்றின்
மீதணைய நடந்தருளி விளையாடத் தொடங்கினார்.

(இ-ள்.) தாதிமார்களுடைய கைகளைப் பிடித்துக்கொண்டு தளர்ந்த நடையினாலுண்டாகின்ற வருத்தமொழிந்து, அழகிய கிரணங்களையுடைய இரத்தினங்கள்பதித்த சதங்கை புனைந்த அரைஞாண் இடையில் சூழப்பெற் றுள்ளதாகிய திருவடித்தாமரைகள் பூமியில் பொருந்தப் பருவமுறையே ஒருவருடத்தின்மேல் விளையாடற்பருவம்வரவும், நடந்தருளி விளையாடத் தொடங்கினார் ; திருஞானசம்பந்தப்பிள்ளையார். எ-று. (ருக)

சிறுமணித்தேர் தொடர்ந்துருட்டிச் செழுமணிச்சிற் றில்களிழைக்கு
நறுநுதற்பே தையர்மருங்கு நடந்தோடி யடர்ந்தழித்துங்
குறுவெயர்ப்புத் துளியரும்பக் கொழும்பொடியா டியகோல
மறுகிடைப்பே ரொளிபரப்ப வந்துவளர்ந் தருளுநாள்.

(இ-ள்.) இரத்தினமிழைத்த சிறு தேரைப்பற்றித் தொடர்ந்து உருட்டி, சிறந்த மணிகளால் சிறுவீடுகட்டி விளையாடுகின்ற நல்ல நெற்றியையுடைய சிறு பெண்களிடத்தில் விரைந்தோடி அச்சிறுவீடுகளை நெருங்கி அழித்தும், தமது திரு மேனியில் சிறிய வெயர்வைத்துளி யரும்பச் செழிய திருவெண்ணீறணிந்த திருக் கோலமானது வீதியில் பேரொளியை வீசும்படி வந்து விளையாடி வளர்ந்தருளும் நாளில்.—எ-று.

பேதையர்=பேதைப்பருவமுள்ள பெண்கள் ; அப்பேதைப்பருவமாவது- ஐந்துவயதுமுதல் ஏழுவயதளவுமுள்ளது. 'கொழும்பொடி யாடியகோலம்' என் பதை மறுகு என்பதற்கு அடைமொழியாக்கி, செழிய பொற்சுண்ணப்பொடிக ளால் கோலமிட்டு அலங்கரிக்கப்பட்ட திருவீதி என்று கூறினும் பொருந்தும். சிற்றில்=சிறுவீடு. (௫உ)

மங்கையோ டுடனாகி வளர்தோணி வீற்றிருந்த
திங்கள்சேர் சடையார்தந் திருவருட்குச் செய்தவத்தி
னங்குரம்போல் வளர்ந்தருளி யருமறையோ டுலகுய்ய
வெங்கள்பிரா னீராண்டின் மேலோராண் டெய்துதலும்.

(இ-ள்.) ஊழிக்காலந்தோறும் வளர்ந்தோங்குகின்ற திருத்தோணியென் னும் ஆலயத்தில் பெரியநாயகியாரோடு வீற்றிருந்தருளும் சந்திர சடாதரமூர்த்தி யாகிய தோணியப்பரது திருவருளாகிய பயிருக்கு, சிவபாதவிருதயர் செய்த தவ த்தினது ஓர் முளையைப்போல அரிய வேதங்களும் உலகத்தாரும் கடைத்தேறும் பொருட்டு எமது திருஞானசம்பந்தப்பெருமான் வளர்ந்தருளி மூன்று பிராயம டையவும்.—எ-று. (௫௩)

நாவாண்ட பலகலையு நாமகளு நலஞ்சிறப்பப்
பூவாண்ட திருமகளும் புண்ணியமும் பொலிவெய்தச்
சேவாண்ட கொடியவர்தஞ் சிரபுரத்துச் சிறுவர்க்கு
மூவாண்டி னுலகுய்ய நிகழ்ந்ததனை மொழிகின்றேன்.

(இ-ள்.) நாவினு லோதப்பெற்ற வேதாகமமுதலிய பல கலைஞானங்களும் (அக்கலைத்தெய்வமாகிய) சரஸ்வதிதேவியும் சிறப்புற்றுவிளங்கவும், செந்தாமரை மலரில் வீற்றிருந்தருளும் இலட்சுமிதேவியும், புண்ணியங்களும் பிரகாச மடைய வும், சீகாழிப்பதியில் அவதரித்தருளிய சிவகுமாரராகிய திருஞானசம்பந்தப்பிள் ளையாருக்கு மூன்றும்பருவத்தில் உலகத்தார் கடைத்தேறும்படி நடந்தசெய்தி யை யான்சொல்லத் தொடங்குகின்றேன்.—எ-று.

திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவவதாரஞ்செய்வதற்கு முற்காலத்து வேதாகமமுதலிய கலைகளை யோதுவாரின்றி அவை பாழ்பட்டுக்கிடந்தன வென் பார் இறந்தகாலத்தால் 'நாவாண்ட பலகலையும்' என்றும், அப்பிள்ளையார் சிவகு மாரரே யாமென்பார், 'சேவாண்ட கொடியவர்தஞ் சிரபுரத்துச் சிறுவர்க்கு' என்றுங் கூறினர். பூ-என்றது ஈண்டு மலர்களுட் சிறந்த தாமரைமலரை ; "பூவி

னுட் சிறந்தது பொறிவாழ் பூவே" என்றார் சிவப்பிரகாசரும். 'புண்ணியம் பொலிவெய்த' என்றது சமணசாக்கியர்களால் பொலிவற்றிருந்த அறநெறியை விளக்கிச் சிவபுண்ணியத்தை விருத்திசெய்தமையை. சேவாண்ட கொடியவர்தஞ் சிரபுரத்துச் சிறுவர்க்கு என்பதற்கு, இடபக்கொடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் சீகாழியில் அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு, என்று பொருள் கூறுவதும் ஒன்று. (௫௪)

பண்டுதிரு வடிமறவாப் பான்மையோர் தமைப்பரமர்
மண்டுதவ மறைக்குலத்தோர் வழிபாட்டி னளித்தருளத்
தொண்டினிலை தரவருவார் தொடர்ந்தபிரி வுணர்வொருகாற்
கொண்டெழலும் வெருக்கொண்டாற் போலழுவர் குறிப்பயலாய்.

(இ-ள்.) முற்காலத்தில் தமதுதிருவடிகளை மறவாதபேரன்புடையவராகிய பிள்ளையாரைச் சிவபெருமானார் மிக்கதவத்தினையுடைய வேதியர்குலத் தலைவராகிய சிவபாதவிருதயரது வழிபாட்டிற்கிரங்கிப் புத்திரராகத்தந்தருளுதலால் அச்சிவபெருமானது திருத்தொண்டின் நிலைமை உலகத்தில் விளங்கும்படி அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அவ்வெம்பெருமானோடுகூடி நிற்றலை நீங்குதலாலாகிய பிரிவுணர்ச்சி ஒவ்வோர்காலத்து அதிகரித்துத் தோன்றவும், வெருட்சிகொண்டவர்போலக் குறிப்பு வேறாக அழுதருளுவார்.—எ-று.

குமாரக்கடவுள் திருஞானசம்பந்தப்பிள்ளையாராக எழுந்தருளியகாலத்தும் பூர்வசொரூபவுணர்ச்சி மாறாதவராகவே யிருந்தனரென்பார் 'பண்டுதிருவடி மறவாப்பான்மையோர்' என்றும், அவர் சிவபாதவிருதயரது தவங்காரணமாகவே சிவபெருமானால் அனுப்பப்பட்டன ரென்பார் 'தமைப்பரமர் - மண்டுதவ மறைக்குலத்தோர்வழிபாட்டினளித்தருள' என்றும், அவர்திருத்தொண்டி னிலைமையை விளக்கி யுலகிற்குபகரிக்கவே யெழுந்தருளின ரன்றி வேறன்றென்பார் 'தொண்டினிலை தரவருவார்' என்றும், சிவபெருமானோ டுடனுயிருந்து பிரிந்த பிரிவுணர்ச்சி அதிகரித்த தென்பார் 'தொடர்ந்தபிரிவுணர்வொருகாற் கொண்டெழலும்' என்றும், கண்டார்க்குக் குழந்தை வெருக்கொண்டழுவதுபோல அழுதனரன்றி அது உண்மையன்றென்பதும், பிரிவாற்றாமைகொண்டு அக்குறிப்புத் தோன்றவே யழுதனரென்பதுந் தோன்ற 'வெருக்கொண்டாற் போலழுவர் குறிப்பயலாய்' என்றுங் கூறினார். பண்டுதிருவடிமறவாமை யாவது-தாம் குமாரக்கடவுளா யிருந்தகாலத்துச் சிவபெருமானைத் திருச்சேய்ஞலூர்முதலிய க்ஷேத்திரங்களில் பிரதிட்டை செய்து பூசித்தமையை. (௫௫)

மேதகைய விந்நாளில் வேறொருநாள் வேதவிதி
நீதிமுறைச் சடங்குநெறி முடிப்பதற்கு நீராடத்
தாதையார் போம்பொழுது தம்பெருமா னருள்கூடச்
சோதிமணி மனைமுன்றிற் றொடர்ந்தழுது பின்சென்றார்.

(இ-ள்.) (திருஞானசம்பந்தப்பிள்ளையார் மூன்றுபருவச்சிறுவராய் வளர்ந்துகொண்டுவருகின்ற) சிறப்புப்பொருந்திய இந்நாள்களில் மற்றொருதினத்தில் வேதவிதிப்படி செய்கின்ற வழுவாத முறைமையினையுடைய கிரியைகளை முடிக்கும் பொருட்டுத் தமது தந்தையாராகிய சிவபாதவிருதயர் நீராடப்போகும்பொழுது, சிவபெருமானது திருவருள் கைகூடவும், விளங்குகின்ற அழகிய திருமாளிகையின்

திருமுற்றத்தினின்று தமது தந்தையாரைத் தொடர்ந்து அழுதுகொண்டு அவர் பின்னே சென்றருளினர்.—எ-று.

'நீதிமுறைச்சடங்கு' என்றது, சிரௌதம்·சுமார்த்தமுதலிய கிரியைகளை.

பின்சென்ற பிள்ளையார் தமைநோக்கிப் பெருந்தவத்தோர்
முன்செல்கை தனையொழிந்து முனிவார்போல் விலக்குதலு
மின்செய்பொலங் கிண்கிணிக்கால் கொட்டியவர் மீளாமை
யுன்செய்கை யிதுவாகிற் போதென்றங் குடன்சென்றார்.

(இ-ள்.) மிகுந்த தவத்தினையுடைய சிவபாதவிருதயர் தமக்குப் பின்னே தொடர்ந்து அழுதுகொண்டுவந்த திருஞானசம்பந்தப்பிள்ளையாரைப்பார்த்து,தாம் முன்னே நீராடச் செல்லுதலை யொழிந்து கோபிப்பவர்போல அவரது வருகையைத்தடுக்கவும், அப்பிள்ளையார் ஒளிவீசுகின்றபொன்னலாகிய சிறுசதங்கை யணிந்ததிருவடிகளைப் பூமியி லுதைத்துக்கொண்டு,தமது திருமாளிகைக்குத் திரும்பிப் போகாமையைப் (பார்த்து) உன்னுடைய செய்கை யிதுவானால் என்னுடன் வரக்கடவையென்று அவருடன் போயினர்.—எ-று.

உலகக்ஷேமார்த்தங் கருதிப் புத்திரப்பேறு வேண்டி அருந்தவஞ் செய்தவரென்பார் 'பெருந்தவத்தோர்' என்று கூறினர். (ருஎ)

கடையுகத்திற் றனிவெள்ளம் பலவிரிக்குங் கருப்பம்போ
லிடையறாப் பெருந்தீர்த்த மெவற்றிற்கும் பிறப்பிடமாய்
விடையுயர்த்தார் திருத்தோணிப் பற்றுவிடா மேன்மையதாந்
தடமதனிற் றுறையணைந்தார் தருமத்தின் றலைநின்றார்.

(இ-ள்.) தருமமார்க்கத்தில் முதன்மையாக நின்றவராகிய சிவபாதவிருதயர் யுகாந்தகாலத்தில் ஒப்பற்ற பல வெள்ளங்களைப் பரவச்செய்கின்ற கருப்பத்தை யொத்து, வற்றாத நீரையுடைய பெரிய தீர்த்தங்க ளெல்லாவற்றிற்கும் பிறப்பிடமாகி, இடபக்கொடியையுடைய சிவபெருமானது திருத்தோணியென்னும் ஆலயத் தெல்லையினின்றும் நீங்காமலிருக்கும் மேன்மையையுடையதாகிய தீர்த்தத்தின் கரையினை யடைந்தார்.—எ-று.

கற்பாந்தகாலத் துண்டாகும் வெள்ளங்க ளனைத்து மிதனிடத்தி னின்றும் விரிந்தாற்போலக் காணப்படும் விசாலமுடைய தென்பார் 'கடையுகத்திற் றனிவெள்ளம் பலவிரிக்குங் கருப்பம்போல்' என்றும், நீர் வற்றாத பெரிய கங்கை முதலிய தீர்த்தவிசேடங்களனைத்தும் இதனிடத்தினின்றே தோன்றத்தக்க காட்சியையுடையதென்பார் 'இடையறாப்பெருந்தீர்த்த மெவற்றிற்கும் பிறப்பிடமாய்' என்றும், சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருத்தோணியென்னு மாலயத்திற்குச் சமீபத்திலேயே யுள்ளதென்பார் 'விடையுயர்த்தார் திருத்தோணிப்பற்றுவிடா மேன்மையதாம்' என்றும், புறச்சமயங்களை யழித்துச் சற்சமயமாகிய சைவத்தை நிலைநிறுத்தலே பெரும்புண்ணியமெனக் கொண்டு அதனையே சாதித்தவரென்பார் 'தருமத்தின் றலைநின்றார்' என்றுங் கூறினர். (ருஅ)

பிள்ளையார் தமைக்கரையில் வைத்துத்தாம் பிரிவஞ்சித்
தெள்ளுநீர்ப் புகமாட்டார் தேவியொடுந் திருத்தோணி
வள்ளலா ரிருந்தாரை யெதிர்வணங்கி மணிவாவி
யுள்ளிழிந்து புனல்புக்கா ருலகுய்ய மகப்பெற்றார்.

(இ-ள்.) எல்லாவுலகங்களும் ஈடேறும் பொருட்டுத் திருஞானசம்பந்தப் பிள்ளையாரைப் புத்திரராகப் பெற்ற சிவபாதவிருதயர் அப்பிள்ளையாரைத் தீர்த்தக்கரையில் வைத்து, தாம் அவரைப் பிரிதற்கு அஞ்சி, தெளிவாகிய தீர்த்தத்திலிறங்கி ஸ்நானஞ்செய்வதற்கு உடன்படாதவராய், பெரிய நாயகியாருடனே திருத்தோணியில் வீற்றிருந்தருளும் தோணியப்பரை எதிரேவணங்கி அழகிய தடாகத்தினுள் ளிறங்கித் தீர்த்தத்தை யடைந்தார்.—எ-று.

வேண்டுவோர் வேண்டியவரங்களை வரையாதருளும் பேரருளாள ரென்பது தோன்ற 'வள்ளலார்' என்று கூறினார். சிவபாதவிருதயர் திருஞானசம்பந்தப் பிள்ளையாரைத் தீர்த்தக்கரையில் தனியே வைத்து நீரி லிறங்கி ஸ்நானஞ் செய்வதற்கஞ்சினவராய்ப் பின்பு உமாசகாயராகத் திருத்தோணியில் வீற்றிருந்தருளும் சிவபெருமானைவணங்கி எம்பெருமானே! எல்லாவுயிர்க்குந் தாயுந்தந்தையு மாகிய தேவரீரே இக்குழந்தையைக் காக்கவெனப் பிரார்த்தித்து நீரிலிரங்கின ரென்க. மணிவாவி என்பதற்கு, முத்துக்களைக் கரையிற்கொழிக்கின்ற வாவி எனினுமாம். அவை, தாமரை-நந்து-சங்கு முதலியவற்றினின் றுண்டாகும் முத்துக்கள். (ருகூ)

நீராடித் தருப்பித்து நியமங்கள் பலசெய்வார்
சீராடுந் திருமகனார் காண்பதன்முன் செய்ததற்பின்
ஆராத விருப்பினு லகமருடம் படியவடி
பேராது மூழ்கினார் பெருங்காதல் பெற்றாராய்.

(இ-ள்.) தீர்த்தத்தில் முழுகித் தருப்பணஞ்செய்து அதன்பின் பல நியமங்களைச் செய்யும் சிவபாதவிருதயர் செல்வமிக்க தமதுதிருக்குமாரர் தம்மைப் பார்ப்பதற்குமுன்னே செய்து முடித்தபின்பு, நீங்காத பெருவிருப்பத்தோடு அகமருஷண ஸ்நானஞ்செய்யும் பொருட்டுத் தாம்நின்றவிடத்தினின்றும் அடிபெயராமல் ஆசையுடையவராய் ஸ்நானஞ்செய்தார்.—எ-று.

தருப்பித்தல்=தருப்பணஞ்செய்தல். நியமங்கள் பல ஆவன.—சந்தியாவந்தனம், சிவபூசை, ஔபாசன முதலியன. அகமருஷணஸ்நானமாவது.— இருக்குவேதம் பத்தாவது மண்டலம் நூற்றுத்தொண்ணூறாவது சூக்தமாகிய அகமருஷணசூக்தத்தை நீரில்நின்று மூன்றுமுறை செபித்துக்கொண்டுசெய்யும் ஸ்நானம். அகமருஷணம்-பாபத்தை யொழிப்பது என்னும் பொருளது. நியமங்கள் பலசெய்வார் - செய்ததற்பின்-பெருங்காதல் பெற்றாராய் - அகமருடம் படிய மூழ்கினாரெனக் கூட்டுக. 'பெருங்காவல் பெற்றாராய்' என்றும் பாடம். (சூo)

மறைமுனிவர் மூழ்குதலு மற்றவர்தம் மைக்காணு
திறைதரியா ரெனுநிலைமை தலைக்கீடா வீசர்கழன்
முறைபுரிந்த முன்னுணர்வு மூளவழத் தொடங்கினார்
நிறைபுனல்வா விக்கரையி னின்றருளும் பிள்ளையார்.

(இ-ள்.) நீர் நிறைந்த தடாகக்கரையில் நின்றருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் வேதங்களையுணர்ந்த முனிவராகிய சிவபாதவிருதயர் அகமருஷண ஸ்நானஞ்செய்ய நீரில்மூழ்கவும், அவரைக்காணுமல் க்ஷணநேரமும் தரிக்கமாட்டாரென்னும் நிலைமையை மேற்கொண்டு சிவபெருமானது திருவடிகளை நாடோறும் முறைமையாகப் பூசித்து வந்த முன்னுணர்ச்சியானது அதிகரிக்க (அதனால்) திருவாய்மலர்ந்தழத் தொடங்கினார்.—எ-று.

முன்னுணர்வாவது:—தாம் குமாரக்கடவுளா யிருந்தகாலத் துண்டாகும் உணர்ச்சி. (௬௧)

கண்மலர்க ணீர்ததும்பக் கைமலர்க ளாற்பிசைந்து
வண்ணமலர்ச் செங்கனிவாய் மணியதரம் புடைதுடிப்ப
வெண்ணின்மறை யொலிபெருக வெவ்வுயிருங் குதுகலிப்பப்
புண்ணியக்கன் றனையவர்தாம் பொருமியழு தருளினார்.

(இ-ள்.) தாமரைமலர்போன்ற கண்களினின்றும் நீர்ததும்பும்படிக் கையாகிய மலர்களால் பிசைந்து அழகிய தாமரைமலரையும் சிவந்த கோவைக் கனியையும் ஒத்த திருவாயினது அழகியஉதடுகள் புடைபெயர்ந்து துடிக்கவும், அளவற்ற வேதங்களின் ஒலிபெருகவும், எல்லாவுயிர்களும் சந்தோஷமடையவும் தருமசொரூபமாகிய ஒரு யானைக்கன்றையொத்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் விம்மியழுதருளினார்.—எ-று. (௬௨)

மெய்ம்மேற்கண் டுளிபனிப்ப வேறெங்கும் பார்த்தழுவார்
தம்மேலைச் சார்புணர்ந்தோ சாரும்பிள் ளைமைதானோ
செம்மேனி வெண்ணீற்றார் திருத்தோணிச் சிகரம்பார்த்
தம்மேயப் பாவென்றென் றழைத்தருளி யழுதருள.

(இ-ள்.) தமது திருமேனியின் மேல் கண்ணீர்த்துளிகள் சிந்தும்படி (சிவபாதவிருதயர் மூழ்கிய அத்தீர்த்தத்தையன்றி) வேறிடங்களையும் பார்த்தழுகின்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமக்குச் சிவபெருமானிடத்து முன்பேயுள்ள சம்பந்தத்தைக்கருதியோ! அல்லது தம்மையடைந்திருக்கின்ற பிள்ளைமைத்தன்மையாலோ! (யாமறியேம்;) சிவந்ததிருமேனியில் திருவெண்ணீற்றையணிந்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருத்தோணி யென்னும் ஆலயத்தின் சிகரத்தைப் பார்த்து, அம்மே! அப்பா! என்று பலமுறை கூறியழைத்து அழுதருள.—எ-று.

திருஞானசம்பந்தப்பிள்ளையார் பூர்வவுணர்ச்சியையும்,தாம்கொண்ட கோலத்துக் கேற்பக் குழந்தைத்தன்மையையுமுடையராதல் பற்றி 'தம்மேலைச் சார்புணர்ந்தோ சாரும்பிள் ளைமைதானோ' என்றுகூறினார். இவர் திருத்தோணிச்சிகரம் பார்த் தழைத்தழுதமையின் மேலைச்சார்பும், குழந்தைகள் துக்கநேர்ந்தழுங்கால் தாய்தந்தையர்களைக் குறித்தழுவதுபோல அம்மே யப்பா வென்று அழைத்தழுதமையின் பிள்ளைத்தன்மையுங் கொள்ளக்கிடந்தன வேனும், இவர் உலகக்ஷேமார்த்தமாகவே அவதரித்தவராதலின் மேலைச்சார்பானே யழைத்தழுதருளின ரென்பதுகுறிப்பு. இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௬௩)

அங்கிலையிற் றிருத்தோணி வீற்றிருந்தா ரருளோக்கான்
முன்னிலைமைத் திருத்தொண்டு முன்னியவர்க் கருள்புரிவான்
பொன்மலைவல் லியுந்தாமும் பொருவிடைமே லெழுந்தருளிச்
சென்னியிளம் பிறைதிகழச் செழும்பொய்கை மருங்கணைந்தார்.

(இ-ள்.) அப்பொழுது திருத்தோணியென்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமான் தமது திருவருட்பார்வையினால் பண்டுள்ள திருத்தொண்டின் நிலைமையைக் கருதி (அம்மே! அப்பா! என்று கூறியழுகின்ற) பிள்ளையாருக்குத் திருவருள் செய்யும்பொருட்டுப் பர்வதராஜபுத்திரியாகிய உமாதேவியாரும் தாமும்போர்செய்தற்குரிய இடபவாகனத்தின்மேல் எழுந்தருளித் திருமுடியில் இளம்பிறைவிளங்கும்படி செழிய தீர்த்தக்கரையில் எழுந்தருளினார்.—எ-று.

திருஞானசம்பந்தப்பிள்ளையார் தாம் திருக்கயிலையிற் குமாரக்கடவுளாக வீற்றிருந்தகாலத்தும் சிவபெருமானுக்குத் திருத்தொண்டுசெய்து வந்தனரென்பதும், அதனையே இப்போதும் செய்தற்குத் திருவுள்ளங் கொண்டனரென்பதுந் தோன்ற 'முன்னிலைமைத் திருத்தொண்டு முன்னியவர்க்கு' என்று கூறினர். திருஞானசம்பந்தப்பிள்ளையார் குமாரக்கடவுளா யிருந்தகாலத்துத் திருத்தொண்டு செய்தமைபோலவே மீண்டுஞ் செய்தனரென்பதனைப் பிள்ளையார் அருளிச்செய்த திருவாலவாய்த் திருப்பதிகத்தில்,

"கோலமாய நீண்மதிற் கூடலால வாயிலாய்
பாலனாய தொண்டுசெய்து பண்டுமின்று முன்னையே
நீலமாய கண்டனே நின்னையன்றி நித்தலுஞ்
சீலமாய சிந்தையிற் றேர்வதில்லை தேவரே." என்பதனா லுணர்க.

'முன்னிலைமைத் திருத்தொண்டு முன்னியவர்க் கருள்புரிவான்' என்பதற்கு, பண்டுள்ள திருத்தொண்டின் நிலைமையைக் கருதி அப்பிள்ளையாருக்கு அருள்செய்யும்படி, என்று கூறினும் பொருந்தும். (௬௭)

திருமறைநூல் வேதியர்க்குந் தேவியர்க்குந் தாங்கொடுத்த
பெருகுவர நினைந்தோதான் றம்பெருமைக் கழல்பேணு
மொருநெறியில் வருஞானங் கொடுப்பதனுக் குடனிருந்த
வருமறையா ளுடையவளை யளித்தருள வருள்செய்வார்.

(இ-ள்.) சிறந்த வேதங்களையுணர்ந்த சிவபாதவிருதயருக்கும் அவரது தேவியாராகிய பகவதியாருக்கும் தாம் முன்புகொடுத்தருளிய சிறந்த வரத்தைத் திருவுள்ளத்திற்கருதியோ! தமது பெருமைபொருந்திய திருவடிகளைத் தியானிக்கும் ஒருமைப்பட்ட நெறியினால் வருகின்ற சிவஞானத்தை அவர்க்குக் கொடுத்தருளும் பொருட்டுத் தமது வாமபாகத்தெழுந்தருளிய அரிய வேத சொரூபியாகிய பெரிய நாயகியாரை (நோக்கிக்) கொடுத்தருளும்படி அருள்செய்வா ராயினர்—எ-று. ()

அழுகின்ற பிள்ளையார் தமைநோக்கி யருட்கருணை
யெழுகின்ற திருவுள்ளத் திறையவர்தா மெவ்வுலகுந்
தொழுகின்ற மலைக்கொடியைப் பார்த்தருளித் துணைமுலைகள்
பொழிகின்ற பாலடிசில் பொன்வள்ளத் தூட்டென்ன.

(இ-ள்.) திருவருட்கருணையானது தோன்றுதற்கிடமாகிய திருவுள்ளத்தையுடைய சிவபெருமான் (தாம் வீற்றிருந்தருளும் திருத்தோணிச்சிகரத்தைப் பார்த்து) அழுகின்ற திருஞானசம்பந்தப்பிள்ளையாரைநோக்கி (இவர்க்கு அருள்செய்யுங்கருத்தால்) எல்லாவுலகங்களும் வணங்குகின்ற பார்வதியாரைப் பார்த்தருளி, உனது இரண்டு திருமுலைகளும் பொழிகின்ற (ஞானமயமாகிய) பாலமுதத்தைப் பொற்கிண்ணத்திற் கரந்து ஊட்டுவாயாகவென்று அருள்செய்ய.—எ-று.

இது முதல் மூன்றுபாடலுங் குளகம். (௬௮)

ஆரணமு முலகேழு மீன்றருளி யனைத்தினுக்குங்
காரணமாய் வளம்பெருகு கருணைதிரு வடிவான
சீரணங்கு சிவபெருமா னருளுதலுஞ் சென்றணைந்து
வாரிணங்கு திருமுலைபொன் வள்ளத்துக் கறந்தருளி.

(இ-ள்.) வேதங்களையும் ஏழுலகங்களையும் படைத்தருளி அவை யனைத் திற்கும் காரணமாய் வளப்பமிகுந்த கருணையே திருவுருவமான சிறப்புப்பொருந் திய உமாதேவியார், சிவபெருமான் (திருமுலைப் பாலமுதத்தைப் பொற்கிண்ணத் திற்கரந்து ஊட்டென்று) அருளிச் செய்யவும், அவ்வெம்பெருமாட்டியார் திரு ஞானசம்பந்தப்பிள்ளையாரைச் சென்று சேர்ந்து, கச்சணிந்த திருமுலைகளினின் றும் (பாலமுதத்தைப்) பொற்கிண்ணத்திற் கறந்தருளி.—எ-று.

சிவபெருமானது அருளே சிவசத்தி யென்பார், 'கருணைதிரு வடிவான சீரணங்கு' என்று கூறினார். இதனை,

"மாயநட் போரையு மாயா மலமெனு மாதனையும்
வீயவிட் டோட்டி வெளியே புறப்பட்டு மெய்யருளாந்
தாயுடன் சென்றுபின் றாதையைக் கூடிப்பின் றாயைமறந்
தேயும தேகிட்டை யென்றோ னெழிற்கச்சி யேகம்பனே." — எனவரும் பட்டணத்துப்பிள்ளையார் திருவாக்கானுணர்க. 'சீரிணங்கு' என்றும் பாடம். (கூஎ)

எண்ணரிய சிவஞானத் தின்னமுதங் குழைத்தருளி
யுண்ணடிசி லெனவூட்ட வுமையம்மை யெதிர்நோக்குங்
கண்மலர்நீர் துடைத்தருளிக் கையிற்பொற் கிண்ணமளித்
தண்ணலையங் கழுகைதீர்த் தங்கணா ரருள்புரிந்தார்.

(இ-ள்.) பெரியநாயகி யம்மையார் நினைத்தற்கரிய சிவஞானத்தோடு இனிய திருமுலைப் பாலமுதத்தைக் கூட்டியருளித் தம்மை எதிர் நோக்கியழுகி ன்ற திருஞானசம்பந்தப்பிள்ளையாரது தாமரைமலர்போன்ற கண்களினின் றுஒழு குகின்ற கண்ணீரைத் துடைத்து அவருடையதிருக்கரத்தில் பொற்கிண்ணத்தைக் கொடுத்து இப்பாலுணவை நீ உண்ணுக வென்று ஊட்டியருள, சிவபெருமான் அங்குஅப்பிள்ளையாரது அழுகையைத்தீர்த்துக் கிருபைசெய்தருளினார்.—எ-று.

அங்கணர்=அழகிய கண்ணையுடையவர்; கிருபாநோக்க முடையவ ரென் னும் பொருளது. (கூஅ)

யாவர்க்குந் தந்தைதா யெனுமவரிப் படியளித்தார்
ஆவதனா லாளுடைய பிள்ளையா ராயகில
தேவருக்கு முனிவருக்குந் தெரிவரிய பொருளாகுந்
தாவிறனிச் சிவஞான சம்பந்த ராயினார்.

(இ-ள்.) சர்வான்மாக்களுக்கும் பரமபிதா மாதாக்க ளென்று சொல்லப்ப ட்ட சிவபெருமானும் உமாதேவியாருமாகிய அவர்கள் இவ்வாறு திருமுலைப் பால முதத்தோடு சிவஞானத்தையுங் கலந்து ஊட்டியருளினார்கள்; அக்காரணத்தினால் ஆளுடைய பிள்ளையாரென்று சொல்லுந் திருநாமத்தையுடையவராய், சகலதேவர் களுக்கும் முனிவர்களுக்கும் உணர்தற்கரிய உண்மைப்பொருளாகிய கெடுதலில் லாத ஒப்பற்றசிவஞானத்தோடு சம்பந்தமுடையாரென்னுங் காரணத்தினால் திரு ஞானசம்பந்தரென்னுந் திருநாமமுடையவராயினார்.—எ-று.

சிவபெருமானாலும் உமாதேவியாராலும் ஆளப்பெற்றமையின் ஆளுடைய பிள்ளையார் என்றும், சிவஞானபாலமுதுண்டு அச்சிவஞானத்தோடு சம்பந்தம் பெற்றமையின் திருஞானசம்பந்தர் என்றும் காரணப்பெயராயினமை காண்க. ()

சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங் கியஞானம்
உவமையிலாக் கலைஞான முணர்வரிய மெய்ஞ்ஞானந்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தா ரந்நிலையில்.

(இ-ள்.) தவத்தலைவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் சிவபெருமானது திருவடியொன்றினையே சிந்திக்கின்ற செல்வமிக்க சிவஞானத்தையும், ஜனனமரணங்களை (மீண்டுவராமல்) அறவேயொழிக்கின்றதன்மையில் சிறந்த ஞானத்தையும், ஒப்பில்லாத அறுபத்துநான்கு கலைஞானங்களையும், உணர்தற்கரிய மெய்ஞ்ஞானத்தையும் (அத்திருமுலைப்பாலமுதுண்டருளிய) அப்பொழுதே உணர்ந்தருளினார்.—எ-று.

ஈண்டுக் கூறிய நான்குவித ஞானங்களில், உவமையிலாக் கலைஞானம் என்றது கேட்டலெனவும், சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம் என்றது சிந்தித்தலெனவும், பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங்கியஞானம் என்றது தெளிதலெனவும், உணர்வரிய மெய்ஞ்ஞானம் என்றது நிஷ்டை எனவுங் கொள்க. இதனைக் "கேட்டலுடன் சிந்தித்தல் தெளித லிட்டை - கிளத்தலென வீரிரண்டாக் கிளக்கின் ஞானம்" என்னுஞ் சிவஞானசித்தியா னுணர்க. இந் நான்கு ஞானங்களையும் வரிசையாகவைத்துக் கூறாமல் மாற்றிக் கூறிய தென்னையெனின், எமது திருஞானசம்பந்தப்பிள்ளையார் அவைகளைச் சாதனவழியில் ஒன்றன்பின்னொன்றாக வடையாமல் ஓரவசரத்திற்றானே யெய்தினரொன்னுஞ் சுதந்திரத்தைக் காட்ட அவ்வாறு கூறினரென்க. இவ்வாறன்றி, சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானமாகிய உணர்வரி மெய்ஞ்ஞானம்-பரஞானமென்றும், பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங்கியஞானமாகிய உவமையிலாக் கலைஞானம்-அபரஞானமென்றும் இரண்டாகப் பிரித்துக் கூறுவாருமுளர். (௭௰)

எப்பொருளு மாக்குவா னீசனே யெனுமுணர்வும்
அப்பொருடா னுடையா ரடியார்க ளெனுமறிவும்
இப்படியா லிதுவன்றித் தம்மிசைவு கொண்டியலுந்
துப்புரவில் லார்துணிவு துகளாகச் சூழ்ந்தெழுந்தார்.

(இ-ள்.) சராசரங்களாகிய எல்லாப்பொருள்களையும் சிருட்டியாதியால் நடத்துகின்றவன் சர்வைசுவரிய சம்பன்னனான சிவபெருமானேயென்னு முணர்ச்சியும், அவ்வுணர்ச்சிவழி (சிவபெருமானையுணர்ந்து வழிபடுதற் குரியவிடம்) அவ்வெம்பெருமானும் அவனது மெய்யடியார்களுமே யாமென்னு முணர்ச்சியும், மெய்யுணர்ச்சியாகும்; இவ்வாறு கொள்ளுதலன்றித் தங்கள்தங்கள் கொள்கைக்கிசைந்தவாறே கொண்டொழுகுகின்ற நன்மையாகிய பிரயோசன மில்லாத சமணர் பௌத்தர்களுடைய கொள்கையைத் திரணமாக நிராகரித்து, முற்கூறிய வதனையே மேற்கொண்டருளினார்; திருஞானசம்பந்தப்பிள்ளையார்.—எ-று. (௭௧)

சீர்மறையோர் சிவபாத விருதயருஞ் சிறுபொழுதி
னீர்மருவித் தாஞ்செய்யு நியமங்கண் முடித்தேறிப்
பேருணர்விற் பொலிகின்ற பிள்ளையார் தமைநோக்கி
யாரளித்த பாலடிசி லுண்டதுநீ யெனவெகுளா.

(இ-ள்.) சிறந்த வேதியராகிய சிவபாதவிருதயரும் சிறுபொழுதிலே ஸ்நானஞ்செய்து,தாம்செய்கின்ற நியமங்களை முடித்துக்கொண்டு கரையிலேறிப் (பிள்ளைத்தன்மையொழிந்து) பேருணர்ச்சியோடு விளங்குகின்ற திருஞானசம்பந்தப் பிள்ளையாரைப்பார்த்து, நீ யார்தந்தபாலடிசிலை யுண்டாய்? என்று கோபித்து.

சிவபாதவிருதயர் தாம் சிறுகுழந்தையைக் கரையில்வைத்துவிட்டு வந்தோமென்னு மச்சத்தினல் சிறுபொழுதில் ஸ்நானஞ்செய்தனரென்க. தாஞ்செய்யுநியமங்களாவன:—சந்தியாவந்தனம் செபம் சூரியநமஸ்காரமுதலியன. திருமுலைப்பால் கடைவாயின்வழி யொழுகுதலால், யாரளித்த பாலடிசிலுண்டது நீ என்று கோபித்தனரென்க.

இதுமுதல் ஐந்து பாடலுங் குளகம். (௭௨)

எச்சின்மயங் கிடவுனக்கீ திட்டாரைக் காட்டென்று
கைச்சிறிய தொருமாறு கொண்டோச்சக் காலெடுத்தே
யச்சிறிய பெருந்தகையா ரானந்தக் கண்டுளிபெய்
துச்சியினி லெடுத்தருளு மொருதிருக்கை விரற்சுட்டி.

(இ-ள்.) எச்சில்கலக்க உனக்கு இப்பாலூட்டினவனைக் காட்டுவையென்று சொல்லித் தமதுகையில் ஒரு சிறியகோலையெடுத்து ஓங்க, அந்தச்சிறுவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் (தமது தந்தையா ரோங்கியகோலடி தம்திருமேனியிற்படாது) திருவடியைப் புடைபெயர்த்து ஓதுங்கிநின்று, கண்களினின்றும் ஆனந்தபாஷ்பம்பொழிந்து, தமதுதிருமுடியின்மேல் (சிவபெருமானைக்காட்டு நிமித்தம்) எடுத்தருளிய ஒரு திருக்கைவிரலினாலே சுட்டி.—எ-று. (௭௩)

விண்ணிறைந்த பெருகொளியால் விளங்குமழ விடைமேலே
பண்ணிறைந்த வருமறைகள் பணிந்தேத்தப் பாவையுடன்
எண்ணிறந்த கருணையினா னின்றானை யெதிர்காட்டி
யுண்ணிறைந்து பொழிந்தெழுந்த வுயர்ஞானத் திருமொழியால்.

(இ-ள்.) ஆகாயத்தில் நிறைந்த மிக்க வொளியோடு விளங்குகின்ற இளமை பொருந்திய இடபவாகனத்தின் மேல் இசையமைந்த அரிய நான்குவேதங்களும் வணங்கித்துதிக்க உமாதேவியாரோடு அளவற்ற பெருங்கருணையுடன் எழுந்தருளிய சிவபெருமானை எதிரே காண்பித்து, தமது திருவுள்ளத்தில் நிறைந்து அதிகரித்தெழுந்த திருவருள்ஞானம் நிறைந்த தமதுதிருவாக்கினால்.—எ-று. (௭௪)

எல்லையிலா மறைமுதன்மெய் யுடனெடுத்த வெழுதுமறை
மல்லனெடுந் தமிழாலிம் மாநிலத்தோர்க் குரைசிறப்பப்
பல்லுயிருங் களிகூரத் தம்பாடல் பரமர்பாற்
செல்லுமுறை பெறுவதற்குத் திருச்செவியைச் சிறப்பித்து.

(இ-ள்.) அளவில்லாத வேதத்தின்முதலாகிய பிரணவத்தைத் தகரமெய்யெழுத்தோடு முதலிற்சேர்த்து, எழுதும் வேதமாகிய வளப்பமிக்க சிறந்த தமிழ்மொழியினால், இப்பெரிய பூவுலகத்திலுள்ளவர்களுக்கு அவ் வேதப்பொருள்கள் சிறந்து விளங்கவும், ஆன்மகோடிகளனைத்தும் கேட்டுக் களிப்படையவும், தமது திருப்பாடல்கள் சிவபெருமானது திருச்செவியிற்பொருந்தும் முறைமையைப் பெறுவதற்கு அவரது திருச்செவியினைச் சிறப்பித்துக்கூறி.—எ-று.

எல்லையிலாமறைமுதல் என்றது ஓம் என்னும் பிரணவத்தை. அது தனித்து வராமல், தகரமெய்யோடு சேர்ந்துவந்தமையால் அந்தப் பிரணவமானது தகரவித்யாஸ்வரூப மென்பது பெறப்பட்டது. (எரு)

செம்மைபெற வெடுத்ததிருத் தோடுடைய செவியனென்னு
மெய்ம்மைமொழித் திருப்பதிகம் பிரமபுர மேவினார்
தம்மையடை யாளங்க ளுடன்சாற்றித் தாதையார்க்
கெம்மையிது செய்தபிரா னிவனன்றே யெனவிசைத்தார்.

(இ-ள்.) ஆன்மகோடிகள் நற்கதி யடையும்பொருட்டு எடுத்தருளிய "தோடுடையசெவியன்" என்னும் மங்களமொழியோடு கூடிய திருப்பதிகத்தில் சீகாழியில் வீற்றிருந்தருளும் சிவபெருமானை அடையாளங்களோடு எடுத்து அருளிச்செய்து, தமது தந்தையாராகிய சிவபாதவிருதயருக்கு எம்மை (திருமுலைப் பால் ஊட்டுவித்து) இவ்வாறு திருவருள்செய்த சிவபெருமான் இவனே என்று கூறியருளினார்.—எ-று.

அடையாளங்களுடன் சாற்றியதாவது:—விடையேறுதல் - மதிசூடுதல் - பொடிபூசுதல் முதலியன. (எசு)

---

திருப்பிரமபுரம் - பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

தோடுடையசெவியன்விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடையசுடலைப்பொடிபூசியென துள்ளங்கவர்கள்வ
னேடுடையமலரான்முனைநாட்பணிந்தேத்தவருள்செய்த
பீடுடையபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (க)

முற்றலாமையிளநாகமோடேனமுளைக்கொம்பவைபூண்டு
வற்றலோடுகலனாப்பலிதேர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
கற்றல்கேட்டலுடையார்பெரியார்கழல்கையாற்றொழுதேத்தப்
பெற்றமூர்ந்தபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (உ)

நீர்பரந்தநிமிர்புன்சடைமேலோர்நிலாவெண்மதிசூடி
ஏர்பரந்தவினவெள்வளைசோரவென்னுள்ளங்கவர்கள்வ
னூர்பரந்தவுலகின்முதலாகியவோரூரிதுவென்னப்
பேர்பரந்தபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (ங)

விண்மகிழ்ந்தமதிலெய்ததுமன்றிவிளங்குதலையோட்டி
லுண்மகிழ்ந்துபலிதேரியவந்தென துள்ளங்கவர்கள்வன்
மண்மகிழ்ந்தவரவம்மலர்க்கொன்றைமலிந்தவரைமார்பிற்
பெண்மகிழ்ந்தபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (ச)

ஒருமைபெண்மையுடையன்சடையன்விடையூருமிவனென்ன
வருமையாகவுரைசெய்யவமர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
கருமைபெற்றகடல்கொள்ளமிதந்ததோர்காலம்மிதுவென்னப்
பெருமைபெற்றபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (ரு)

மறைகலந்தவொலிபாடலொடாடலராகிமழுவேந்தி
யிறைகலந்தவினவெள்வளைசோரவென்னுள்ளங்கவர்கள்வன்
கறைகலந்தகடியார்பொழில்நீடியர்சோலைக்கதிர்சிந்தப்
பிறைகலந்தபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (௬)

சடைமுயங்குபுனலன்னனலன்னெரிவீசிச்சதிர்வெய்தி
யுடைமுயங்குமரவோடுழிதந்தெனதுள்ளங்கவர்கள்வன்
கடல்முயங்குகழிசூழ்குளிர்கானல்பொன்னஞ்சிறகன்னம்
பெடைமுயங்குபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (௭)

வியரிலங்குவரையுந்தியதோள்களைவீரம்விளைவித்த
வுயரிலங்கையரையன்வலிசெற்றெனதுள்ளங்கவர்கள்வன்
றுயரிலங்குமுலகிற்பலவூழிகடோன்றும்பொழுதெல்லாம்
பெயரிலங்குபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (௮)

தாணுதல்செய்திறைகாணியமாலொடுதண்டாமரையானு
நீணுதல்செய்தொழியந்நிமிர்ந்தானெனதுள்ளங்கவர்கள்வன்
வாணுதல்செய்மகளிர்ம்முதலாகியவையத்தவரேத்தப்
பேணுதல்செய்பிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (௯)

புத்தரோடுபொறியில்சமணும்புறங்கூறநெறிநில்லா
வொத்தசொல்லவுலகம்பலிதேர்ந்தெனதுள்ளங்கவர்கள்வன்
மத்தயானைமறுகவ்வுரிபோர்த்ததோர்மாயம்மிதுவென்னப்
பித்தர்போலும்பிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (௧௦)

அருநெறியமறைவல்லமுனியகன்பொய்கையலர்மேய
பெருநெறியபிரமாபுரமேவியபெம்மானிவன்றன்னை
யொருநெறியமனம்வைத்துணர்ஞானசம்பந்தனுரைசெய்த
திருநெறியதமிழ்வல்லவர்தொல்வினைதீர்த்தலெளிதாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - **பிரமபுரீசுவரர்,** தேவியார் - **திருநிலைநாயகியம்மை.**

திருத்தோணியில்வீற்றிருப்பவர் - **தோணியப்பர்.**

---

மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்தடையிற்
கண்ணுதலான் பெருங்கருணை கைக்கொள்ளு மெனக்காட்ட
எண்ணமிலா வல்லரக்க னெடுத்துமுறிந் திசைபாட
அண்ணலவற் கருள்புரிந்த வாக்கப்பா டருள்செய்தார்.

(இ-ள்.) இந்நிலவுலகத்தில் வாழ்பவர்கள் பிழைசெய்தாலும் தம்மைச் சரணாகதியாகவந்தடைந்தால் நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் மிகுந்த கிருபையோடு அவர்களுக்கு அனுக்கிரகஞ் செய்தருளுவரென்பதை விளக்கும்பொருட்டு, தம்மை மதியாத வலிய இராவணன் திருக்கைலாசத்தை யெடுத்து (அதனால் தன் வலியிழந்து) இருபதுதோளும் முறிந்து,பின் சாமகீதம்பாடச் சிவபெருமான் அவ் விராவணனுக்குத் திருவருள் செய்த கிருபாமிகுதியை (எட்டாந் திருப்பாடலில்) அருளிச்செய்தார்.—எ-று. (௭௭)

தொழுவார்க்கேயருளுவது சிவபெருமா னெனத்தொழார்
வழுவான மனத்தாலே மாலாய மாலயனும்
இழிவாகுங் கருவிலங்கும் பறவையுமாயெய்தாமை
விழுவார்க ளஞ்செழுத்துந் துதித்துய்ந்த படிவிரித்தார்.

(இ-ள்.) எத்தகையராயினும் தம்மைத் தொழுகின்ற மெய்யன்பர்களுக்கே சிவபெருமான் திருவருள்புரிவதெனக் கருதி, அவரை வணங்காதவர்களாய்க் குற்றம் பொருந்திய மனதினாலே மயக்க மடைந்த திருமாலும் பிரமனும் இழிவாகிய பன்றியும் அன்னமு மாகஉருவங்கொண்டு, (அச் சிவபெருமானது திருவடியையும் திருமுடியையும்) தேடி யறியாமல், செருக்கொழிந்த அவர்களிருவரும் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைத் துதித்துத் தங் குற்றத்தினின்று நீங்கி ஈடேறிய வகையினை (ஒன்பதாந் திருப்பாடலில்) அருளிச்செய்தார்.—எ-று. (எஅ)

வேதகா ரணராய வெண்பிறைசேர் செய்யசடை
நாதர்நெறி யறிந்துய்யார் தம்மிலே நலங்கொள்ளும்
போதமிலாச் சமண்கையர் புத்தர்வழி பழியாக்கும்
ஏதமே யெனமொழிந்தா ரெங்கள்பிரான் சம்பந்தர்.

(இ-ள்.) மெது திருஞானசம்பந்தப்பெருமான் வேதங்களுக்கு முதற்காரணராகிய வெள்ளிய இளம்பிறை யணிந்த சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமானால் விதிக்கப்பட்ட சைவநெறியை யறிந்து (அதனை யடைந்து இம்மை யம்மை வீடென்னும் புருடார்த்தங்களைப் பெற்று) ஈடேறாத புறச்சமயிகளுக்குள் நல்லறிவில்லாத வஞ்சகர்களாகிய சமணர் பௌத்தர்கள் அனுசரித்தொழுகும் ஈன மார்க்கங்கள் தீமையை விளைவிக்கு மாதலின், அவைகள் குற்றமுடையனவேயாமென்று (பத்தாந் திருப்பாடலில்) அருளிச்செய்தார்.—எ-று. (எகூ)

திருப்பதிக நிறைவித்துத் திருக்கடைக்காப் புச்சாத்தி
யிருக்குமொழிப் பிள்ளையா ரெதிர்தொழுது நின்றருள
அருட்கருணைத் திருவாள னருள்கண் டமரரெலாம்
பெருக்கவிசும் பினிலார்த்துப் பிரசமலர் மழைபொழிந்தார்.

(இ-ள்.) வேதப்பொருளைத் தமது திருப்பதிகங்களில் அமைத்துப் பாடியருளும் திருஞானசம்பந்தப்பிள்ளையார் இவ்வாறு திருப்பதிகத்தை நிறைவித்து, அப்பதிகத்தி னிறுதியில் திருக்கடைக்காப்பு அருளிச்செய்து, சிவபெருமான் திருமுன் தொழுதுகொண்டு நிற்க, பெருங்கருணைச் செல்வராகிய சிவபெருமானது திருவருளின் பெருமையைக் கண்டு ஆகாயத்திலே தேவர்களெல்லாரும் மிகவும் ஆரவாரித்துத் தேன்பொருந்திய கற்பகமலர்களாகிய மழையைப் பொழிந்தார்கள்.—எ-று.

திருக்கடைக்காப்பாவது ஒவ்வொரு திருப்பதிகங்களி னிறுதியில் தமது திருப்பெயரை யமைத்துப் பாடியருளும் திருப்பாசுரம். (அ0)

வந்தெழு மங்கலமான வானதுந் துபிமுழக்குங்
கந்தருவர் கின்னரர்கள் கானவொலிக் கடன்முழக்கும்
இந்திரனே முதற்றேவ ரெடுத்தேத்து மிசைமுழக்கும்
அந்தமில்பல் கணநாத ரரவெனுமோ சையினடங்க.

(இ-ள்.) ஆகாயத்தினின்று மெழாநின்ற தேவதுந்துபியின் முழக்கமும், கந்தருவர்களும் கின்னரர்களும் செய்கின்ற கானத்தினொலியாகிய கடலின் முழக்கமும், இந்திரன்முதலிய தேவர்கள் வாழ்த்தெடுத்துத் துதிக்கும் ஓசையின்முழக்கமும், அளவில்லாத பல சிவகணநாதர்கள் ஹரஹரவென்று துதிக்கும் ஓசையுள்ளடங்கவும்.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (அக)

வேறு.

மறைகள் கிளர்ந்தொலி வளரமுழங்கிட வானோர்தந்
நிறைமுடி யுந்திய நிரைமணி சிந்திட நீள்வானத்
துறையென வந்துல கடைய நிறைந்திட வோவாமெய்ப்
பொறைபெரு குந்தவ முனிவ ரொனுங்கடல் புடைசூழ.

(இ-ள்.) நான்குவேதங்களும் ஒலிமிக்குவளரும்படி ஆரவாரிக்கவும், தேவர்களது சிறந்த கிரீடத்திலழுத்திய இரத்தினங்கள் (அக்கிரீடங்கள் ஒன்றோடொன்று தாக்கும்போது) வரிசையாகச் சிந்துதலால், அகன்ற மேகத்தினின்றும் நீர்த்துளிகள் சிந்தினாற்போலப் பூமியில்வந்து முழுமையும் நிறையவும், கெடாதமெய்ம்மையும் பொறுமையும் அதிகரித்திருக்கின்ற தவத்தினையுடைய முனிவர்கூட்டங்கள் பக்கத்தில் சூழவும்.—எ-று.

தவமுனிவர்களது கூட்டங்களின் மிகுதிநோக்கிக் கடல் என்று உவமித்துக் கூறினர். (அஉ)

அணைவுற வந்தெழு மறிவு தொடங்கின வடியார்பால்
இணையில் பவங்கிளர் கடல்க ளிகந்திட விருதாளின்
புணையருள் ளங்கணர் பொருவிடை தங்கிய புணர்பாகத்
துணையொ டணைந்தனர் சுருதி தொடர்ந்த பெருந்தோணி.

(இ-ள்.) தமது திருவடியையடையுங் காரணமாகத்தோன்றி யெழாநின்ற மெய்யுணர்ச்சியுண்டாகிய அடியார்களிடத்து, ஒப்பற்றபிறவியாகிய பெரியகடலைக் கடக்கும்படி தமது இரண்டுதிருவடிகளாகிய மரக்கலத்தை அருளும் சிவபெருமான் போர்செய்கின்ற இடபவாகனத்தின்மேல் தமது இடப்பாக நீங்காது வீற்றிருந்தருளும் பெரியநாயகியாரோடும் வேதங்கள் நீங்கா தொலிக்கின்ற பெரிய திருத்தோணியென்னும் ஆலயத்தில் எழுந்தருளினர். எ-று. (அ௩)

அண்ணலணைந்தமை கண்டு தொடர்ந்தெழு மன்பாலே
மண்மிசை நின்ற மறைச்சிறு போதக மன்னாருங்
கண்வழி சென்ற கருத்து விடாது கலந்தேகப்
புண்ணியர் நண்ணிய பூமலி கோயிலி னுட்புக்கார்.

(இ-ள்.) சிவபெருமான் திருத்தோணியென்னுமாலயத்தில் எழுந்தருளினமையைக்கண்டு தம்மிடத்தினின்று நீங்காது தொடர்ந்து அதிகரிக்கின்ற பேரன்பினாலே பூமியின்மேல்நின்ற வேதவுணர்ச்சியின் மிக்க சிறிய யானைக்கன்றையொத்த திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் கண்ணாகிய வழியே சிவபெருமான்

விஷயத்திற் சென்ற தமது எண்ணம் நீங்காமல் அவரோடுகலந்து பின்செல்ல, புண்ணியசொரூபராகிய சிவபெருமான் எழுந்தருளிய அழகுமிக்க திருக்கோயிலினுட் சென்றருளினார்.—எ-று. (௮௪)

ஈறில் பெருந்தவ முன்செய்து தாதை யெனப்பெற்றார்
மாறு விழுந்த மலர்க்கை குவித்து மகிழ்ந்தாடி
வேறு விளைந்த வெருட்சி வியப்பு விருப்போடுங்
கூறு மருந்தமி ழின்பொரு ளான குறிப்போர்வார்.

(இ-ள்.) முடிவில்லாத பெரிய தவத்தை முன்னே செய்து, அதனால் திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்குத் தந்தையா ரென்னும் பேற்றினைப் பெற்றவராகிய சிவபாதவிருதயர் ஓச்ச வெடுத்த கோல், தானே நழுவிவிழுந்த தாமரைமலர் போன்ற கைகளைச் சிரசின்மேற் குவித்து மகிழ்ந்து ஆனந்தக்கூத்தாடி, தனித்தனி யுண்டாகிய அச்சம் - அதிசயம்-விருப்பு ஆகிய இவைகளோடும் அவர் திருவாய்மலர்ந்தருளிய அரிய திருநெறித்தமிழின் பொருளாகிய அதி நுட்பங்களை யுணர்பவராய்.—எ-று.

திருஞானசம்பந்தப்பிள்ளையாரது மகிமையை யறியாமல் அவரைத் தம் வசப்பட்டவராகக் கருதிக் கோல்கொண் டோச்சத் தொடங்கினோ மென்னும் அச்சமும், சற்றுநேரத்திற்குமுன் தம் வசப்பட்டவர்போலக் காணப்பட்டிருந்தவர் அதிசீக்கிரத்திலேயே இத்தகைய தெய்வீக மகிமையைப்பெற்றனரோ வென்னும் வியப்பும், இச்சிறிய பெருந்தகையாரால், புறச்சமயக் களைகளைக் களைந்து சைவப் பயிரை விருத்திசெய்யக் கருதியிருந்த நமது எண்ணம் நிறைவேறப் பெற்றோமென்னும் விருப்பும் சிவபாதவிருதயரிடத்து நிகழ்ந்தனவென்க.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௮௫)

தானுவி னைத்தனி கண்டு தொடர்ந்தவர் தம்மைப்போற்
காணுதல் பெற்றில ரேனு நிகழ்ந்தன கண்டுள்ளார்
தோணி புரத்திறை தன்னருளாத றுணிந்தார்வம்
பேணு மனத்தொடு முன்புகு காதலர் பின்சென்றார்.

(இ-ள்.) தோணியப்பரை இடபவாகனத்தின்மேல் பெரியநாயகியாரோடுந் தனியே தரிசித்து, அவர் பின்றொடர்ந்துசென்ற திருஞானசம்பந்தப்பிள்ளையாரைப்போலக் கண்டு வணங்கப்பெற்றிலராயினும், அங்கு நிகழ்ந்த அற்புதத்தைக் கண்டு, அது தோணியப்பரது திருவருளாதலை யூகித் துணர்ந்து, அன்புமிகுந்த மனத்தோடும் முன்னே சென்றருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்குப் பின்னேசென்றார்.—எ-று.

'முன்புபுகாதவர் பின்சென்றார்' என்றும் பாடம். (௮௬)

அப்பொழு தங்க ணணைந்தது கண்டவ ரல்லாதார்
முப்புரி நூன்மறை யோர்களு ரோம முகிழ்ப்பெய்தி
இப்படி யொப்பதொ ரற்புத மெங்குள தென்றென்றே
துப்புறழ் வேணியர் கோயிலின் வாய்தல் புறஞ்சூழ.

(இ-ள்.) அப்பொழுது அங்கே நிகழ்ந்த தெய்வீக நிகழ்ச்சியைப் பார்த்தவர்களும், அங்ஙனம் பாராது கேட்டவர்களுமாகிய முப்புரி நூலையணிந்த பிராம

ணர்களனைவரும் மயிர்ப்புளகங்கொண்டு, இதற்கு ஒப்பாகிய ஒரு அற்புதம் எங்கே நிகழ்ந்ததென்று சொல்லிக்கொண்டு, பவளம்போலச் சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமானது திருக்கோயில் வாயிலின்புறத்தில்வந்து சூழ்ந்துநிற்க.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (அஎ)

பொங்கொளி மால்விடை மீது புகுந்தணி பொற்றோணித்
தங்கி யிருந்த பெருந்திரு வாழ்வு தலைப்பட்டே
யிங்கெனை யாளுடை யானுமை யோடு மிருந்தானென்
றங்கெதிர் நின்று புகன்றனர் ஞானத் தமுதுண்டார்.

(இ ள்.) சிவஞானப்பாலமுதுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் மிக்க ஒளிவிளங்குகின்ற விஷ்ணுவாகிய இடபவாகனத்தின்மேல் முன் காட்சி கொடுத்தருளி அழகிய திருத்தோணியென்னு மாலயத்தில் வீற்றிருந்தருளிய பெரிய ஞானச்செல்வராகிய சிவபெருமானை யடைந்து, இங்கு என்னை யடிமையாகவுடைய சிவபெருமான் உமாதேவியாரோடும் எழுந்தருளியிருந்தா ரென்று அங்கு அவ் வெம்பெருமான் திருமுன்னே நின்று (தம்மைப் புறஞ்சூழ்ந்து நிற்குந் தந்தையார் முதலியோர் கேட்கும்படி) அருளிச்செய்தனர்.—எ-று. (அஅ)

இன்னிசை யேழு மிசைந்த செழுந்தமி ழீசர்க்கே
சொன்முறை பாடு தொழும்பருள் பெற்ற தொடக்கோடும்
பன்மறை வேதியர் காண விருப்பொடு பாலூறும்
பொன்மணி வாயினர் கோயிலி னின்று புறப்பட்டார்.

(இ-ள்.) இனிய குரல் முதலிய எழிசைகளும் பொருந்திய செழிய திருநெறித்தமிழைச் சிவபெருமானுக்கே முற்கூறிய முறைப்படியே அமைத்துப் பாடுகின்ற தொண்டாகிய அருளைப்பெற்ற இயல்போடும், பல வேதங்களை யுணர்ந்த பிராமணர்கள் காணும்படி விருப்பத்துடன் திருமுலைப்பால் மணம்வீசும் அழகிய மாணிக்கம்போற் சிவந்த திருவாயினையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருக்கோயிலினின்றும் புறப்பட்டார்.—எ-று.

சொன்முறைபாடு தொழும்பாவன:—தாம் பாடியருளும் திருப்பதிகங்களில் சிவபெருமான் றிருவடையாளங்களையமைத்துப் பாடுவதன்றி, எட்டாந்திருப்பாசுரத்தில் இராவணனுக்கருளிய தன்மையையும், ஒன்பதாந் திருப்பாசுரத்தில் மாலயனுக்கருளிய கருணையினியல்பையும், பத்தாந்திருப்பாசுரத்தில் சமணபுத்தர்களது இழிவையும் அமைத்துப்பாடி, முடிவில் திருக்கடைக்காப்பு அருளிச்செய்யு முறைமையாகும். (அகூ)

பேணிய வற்புத நீடருள் பெற்ற பிரான்முன்னே
நீணிலை யிற்றிகழ் கோபுர வாயிலி னேய்தி
வாணில விற்றிகழ் வேணியர் தொண்டர்கள் வாழ்வெய்துந்
தோணி புரத்தவர் தாமெதிர் கொண்டு துதிக்கின்றார்.

(இ-ள்.) யாவராலும் விரும்பத்தக்க அற்புதமாகிய சிவபெருமானது மிக்க திருவருளைப்பெற்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருமுன்னே உயர்ந்த நிலைகளால் விளங்குகின்ற திருக்கோபுரவாயிலின் முன்னேசென்று ஒளிபொருந்திய இளம்பிறையோடு விளங்குகின்ற சடைமுடியையுடைய சிவபெருமானடியார்க

ளாகிய வாழ்வையுடைய திருத்தோணிபுரத்திலுள்ளவர்கள் யாவரும் எதிர்கொண்டு துதிக்கின்றார்கள்.—எ-று. (௬௦)

வேறு.

காழியர் தவமே கவுணியர் தனமே கலைஞானத்
தாழிய கடலே யதனிடை யமுதே யடியார்முன்
வாழிய வந்திம் மண்மிசை வானோர் தனிநாதன்
ஏழிசை மொழியா டன்றிரு வருள்பெற் றனையென்பார்.

(இ-ள்.) சீகாழிப்பதியிலுள்ளவர்கள் செய்த தவப்பயனாயுள்ளவரே! கவுணியகோத்திரத்தார்பெற்ற பெருஞ்செல்வமாயுள்ளவரே! வேதவேதாங்கமுதலிய கலைஞானங்களில் ஆழ்ந்த சமுத்திரம்போன்றவரே! அச்சமுத்திரத்தின்கண் திரட்டியெடுக்கப்பட்ட அமுதம்போன்றவரே! இந்நிலவுலகத்தில் அடியார்களுக்கு முன்னே அவர்கள் சிவாநந்தப்பெருவாழ்வடையும்படி யெழுந்தருளி ஒப்பற்ற தேவர்கள் நாயகராகிய சிவபெருமான் (திருவருளையும்) ஏழிசைபோன்ற இனிய வார்த்தையையுடைய உமாதேவியாரது திருவருளையும் நீபெற்றாயென்று துதிப்பார்கள்.—எ-று. (௬௧)

மறைவளர் திருவே வைதிக நிலையே வளர்ஞானப்
பொறையணி முகிலே புகலியர் புகலே பொருபொன்னித்
துறைபெறு மணியே சுருதியி னொளியே வெளியேவந்
திறையவ னுமையா ளுடனரு டரவெய் தினையென்பார்.

(இ-ள்.) வேதத்திற்சொல்லப்பட்டு வளர்ந்தோங்குகின்ற அருட்செல்வமாயுள்ளவரே! அவ்வேதசம்பந்தமாகிய வைதிகமார்க்கங்கள்நின்று நிலவுதற்குரியவோரிடமாயுள்ளவரே! சிவஞானமாகிய சூற்கொண்ட மேகம்போன்றவரே! சீகாழியிலுள்ளவர்களுக்குப் புகலிடமாயுள்ளவரே! அலைகள் கரையைமோதுகின்ற காவிரிநதித்துறைபெற்ற முத்தையொத்தவரே! வேதத்தின்முடிவில் விளங்கும் பேரொளியாயுள்ளவரே! சிவபெருமான் உமாதேவியாரோடு திருமேனிகொண்டெழுந்தருளித் திருவருள்செய்யப்பெற்றனை யென்று துதிப்பார்கள்.—எ-று.

மறைவளர்திருவே-என்பதற்கு, வேதமார்க்கம் வளர்தற்குரிய பெருஞ்செல்வமாயுள்ளவரே என்று கூறினும் பொருந்தும். (௬௨)

புண்ணிய முதலே புனைமணி யரைநா ணொடுபோதுங்
கண்ணிறை கதிரே கலைவளர் மதியே கவின்மேவும்
பண்ணியல் கதியே பருவம தொருமூ வருடத்தே
யெண்ணிய பொருளாய் நின்றவ னருள்பெற் றனையென்பார்.

(இ-ள்.) சிவபுண்ணியங்களுக்கு முதல்வரே! மணிகளணிந்த அரைநாணோடுமேவாநின்ற கட்புலனுக்குநிறைந்த இளஞ்சூரியனே! கலைகள் வளராநின்ற இளஞ்சந்திரனே! இனிமைபொருந்திய பண்களுக்கிசைந்த மந்தமுதலாகியகதியே! மூன்றுவருடப்பருவத்தில் அன்பர்கள் மதித்துச் சொல்லுகின்ற மெய்ப்பொருளாய்நின்ற சிவபெருமானது திருவருளை நீபெற்றாயென்று துதிப்பார்கள்.—எ-று.

வேறு.

என்றினைய பலகூறி யிருக்குமொழி யந்தணரு மேனை யோரு
நின்றுதுதி செய்தவர்தா ணீண்முடிகண் மேலேந்தி நிரந்த போது

சென்றணைந்த தாதையார் சிவபாத விருதயர்தாந் தெய்வ ஞானக்
கன்றினைமுன் புக்கெடுத்துப் பியலின்மேற் கொண்டுகளி கூர்ந்து செல்ல.

(இ-ள்.) என்றிவ்வாறான பல ஸ்தோத்திரங்களைச் சொல்லி, வேதத்தை யுணர்ந்த பிராமணர்களும் மற்ற சிவனடியார்களும் நின்று துதிசெய்து, அவரது திருவடிகளை யுயர்ந்தசிரசின்மேல் சூடிக்கொண்டு சூழ்ந்துநின்றபொழுது, திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்குப் பின்சென்றுவந்த தந்தையாராகிய சிவபாதவிருதயர் தெய்வத்தன்மைபொருந்திய சிவஞானக்கன்றை முன்சென்றெடுத்துத் தோளின் மேல்வைத்துத் தாங்கிக்கொண்டு களிப்படைந்துசெல்ல.—எ-று.

தெய்வஞானக்கன்று என்றது, திருஞானசம்பந்தப்பிள்ளையாரை. கன்று = யானைக்கன்று. (௩௪)

மாமறையோர் குழாத்தினுடன் மல்குதிருத் தொண்டர்குழா மருங்கு சூ
தாமறுவை யுத்தரியந் தனிவிசும்பி லெறிந்தார்க்குந் தன்மை யாலே[ழ்ந்து
பூமறுகு சிவானந்தப் பெருக்காறு போதவதன் மீது பொங்கும் [கும்.
காமர்நுரைக் குமிழியெழுந் திழிவனபோல் விளங்குபெருங் காட்சித் தா

(இ-ள்.) பெருமைபொருந்திய பிராமணர்கூட்டத்துடன் நிறைந்த மற்றத் திருத்தொண்டர்கூட்டமும் பக்கங்களிற்சூழ்ந்து, தாங்கள் (உடையின்மேல் சுற்றிய) ஆடைகளையும், உத்தரீயங்களையும் ஒப்பற்ற ஆகாயத்தில்வீசி, ஆரவாரிக்குந் தன்மையால் அழகிய (சீகாழிப்பதியின்) திருவீதியானது சிவானந்தமென்னும் பெருக்கினையுடைய ஆறுபெருகுங்கால், அவ்வாற்றின்மீது பொங்குகின்ற அழகிய நுரைகளோடுகூடிய குமிழிகளெழுந்து, பின் கீழ்ப்பட்டு அடங்குவனபோல விளங்குகின்ற மிக்க காட்சியையுடையதாகும்.—எ-று. (௩௫)

நீடுதிருக் கழுமலத்து நிலத்தேவர் மாளிகைமே னெருங்கி யங்கண்,
மாடுநிறை மடவார்கண் மங்கலமா மொழிகளால் வாழ்த்தி வாசத், தோ
டுமலி நறுமலருஞ் சுண்ணமும்வெண் பொரியினொடுந் தூவி நிற்பார், கோ
டுபயில் குலவரைமேன் மின்குலங்கள் புடைபெயருங் கொள்கைத் தாக.

(இ-ள்.) உயர்ந்த சிகரங்களையுடைய இமாசலமுதலிய சிறந்த மலைகளின் மேல் மின்னற்கூட்டங்கள் புடைபெயர்ந்துசெல்லுந் தோற்றம்போல, உயர்வுபொருந்திய சீகாழிப்பதியிலுள்ள பிராமணர்களது திருமாளிகையின்மேல் நெருங்கி அவ்விடத்துப் பக்கங்களில் நிறைந்த பிராமணஸ்திரீகள் மங்கலகரம்பொருந்திய வாழ்த்தொலிகளால் வாழ்த்தி, வாசனைபொருந்திய இதழ்கள்நிறைந்த நல்ல மலர்களையும், வாசனைப்பொடியையும், வெள்ளிய பொரியுடன் தூவுவார்கள்.-எ-று.

கொள்கைத்தாகமடவார்கள் வாழ்த்தித் தூவி நிற்பாரெனக் கூட்டுக. ()

மங்கலதூரியந்துவைப்பார் மறைச்சாமம் பாடுவார் மருங்கு வேதி
ப், பொங்குமணி விளக்கெடுத்துப் பூரணகும் பமுநிறைப்பார் போற்றி
செய்வார், அங்கவர்கண் மனத்தெழுந்த வதிசயமும் பெருவிருப்பு மன்
பும் பொங்கத், தங்குதிரு மலிவீதிச் சண்பைநகர் வலஞ்செய்து சாருங்
காலை.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் நிலைபெற்ற செல்வமிக்க திருவீதியையுடைய சீகாழிநகரத்தைப் பிரதக்ஷணஞ்செய்து வரும்பொழுது, அந்நகரத்திலுள்ளவர்கள் தமது மனத்தில் தோன்றிய அதிசயமும் பெரியவிருப்பமும் அன்

பும் அதிகரிக்க, மங்கலகரமான வாத்தியங்களை யொலிப்பவர்களும், சாமவேதத்தைப்பாடுபவர்களும், வேதிகையின்பக்கங்களிலுள்ள பொலிவுபொருந்திய இரத்தினவிளக்குகளையேந்திப் பூரணகும்பங்களை வரிசையாகவைப்பவர்களும், துதிசெய்பவர்களுமானார்கள்.—எ-று. (௩௭)

தந்திருமா ளிகையின்க ணெழுந்தருளிப் புகும்பொழுது சங்கநாதம்
அந்தரதுந் துபிமுதலா வளவிலபெரு கொலிதழைப்ப வணைந்து புக்கார்
சுந்தரப்பொற் றோணிமிசை யிருந்தபிரா னுடனணைந்த துணைவி யாகும்
பைந்தொடியா டிருமுலையின் பாலறா மதுரமொழிப் பவள வாயார்.

(இ-ள்.) அழகிய பொற்றோணியில் வீற்றிருந்தருளிய தோணியப்பரோடு எழுந்தருளியிருந்த தலைவியாகிய பெரியநாயகியம்மையாரது திருமுலைப்பால் கமழும் மதுரமொழியோடு கூடிய பவளம்போலும் சிவந்த திருவாயையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது திருமாளிகையின்கண் எழுந்தருளிப்போகும்பொழுது, சங்கவாத்தியவொலியும், தேவதுந்துபிமுதலிய அளவில்லாத வாத்தியங்களின் பேரொலியும் அதிகரித்துண்டாகச்சென்றருளினார்.—எ-று. (௩௮)

தூமணிமா ளிகையின்க ணமர்ந்தருளி யன்றிரவு தொல்லை நாத
மாமறைக டாண்டபெருந் திருத்தோணி மன்னிவீற் றிருந்தார் செய்ய
காமருசே வடிக்கமலங் கருத்திலுற விடையறாக் காதல் கொண்டு
நாமநெடுங் கதிருதிப்ப நண்ணினார் திருத்தோணி நம்பர் கோயில்.

(இ-ள்.) பரிசுத்தமாகிய இரத்தினங்களழுத்திய தமது திருமாளிகையிலெழுந்தருளி, அன்றிரவில் பழமையான (பதவாக்கியமென்னும்) ஒலிவடிவானமகத்தாகிய வேதங்கள் திரண்டு ஒருநவமான பெரியதிரு தோணியில் நிலைத்து வீற்றிருந்தருளும் தோணியப்பரது சிவந்த அழகிய திருவடித்தாமரைகள் தமதுள்ளத்தில் பொருந்தும்படி, நீங்காத பெருவிருப்பங்கொண்டு, புகழ்பெற்ற மிக்க கிரணங்களையுடைய சூரியனுதிக்கும்பொழுது, திருத்தோணியென்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளிய சிவபெருமான் திருக்கோயிலையடைந்தருளினார்; (திருஞானசம்பந்தப்பிள்ளையார்.—எ-று. (௩௯)

காதலுட னணைந்துதிருக் கழுமலத்துக் கலந்துவீற் றிருந்த தங்கள்
தாதையா ரையும்வெளியே தாங்கரிய மெய்ஞ்ஞானந் தம்பால் வந்து
போதமுலை சுரந்தளித்த புண்ணியத்தா யாரையுமுன் வணங்கிப்போற்றி
மேதகைய வருள்பெற்றுத் திருக்கோலக் காவிறைஞ்ச விருப்பிற்சென்றார்

(இ-ள்.) மிக்க அன்புடன் திருக்கோயிலுட்சென்றருளி, சீகாழியில் நிலைபெற்று வீற்றிருந்தருளிய தமது தந்தையாராகிய தோணியப்பரையும், தம்மிடத்து அருள்வடிவங்கொண்டு வெளியேவந்து தாங்குதற்கரிய மெய்ஞ்ஞானமாகிய திருமுலைப்பாலைச் சுரந்து கொடுத்தருளிய புண்ணியசொரூபியாகிய பெரியநாயகியம்மையாரையும் சந்நிதிமுன்னின்று வணங்கித் துதித்து மேன்மையான அவரது திருவருளைப்பெற்றுத் திருக்கோலக்காவென்னுந் தலத்தைத் தரிசிக்க விருப்பத்தோடெழுந்தருளினார்.—எ-று.

தாங்குதல் - ஈண்டு அடங்குதலென்னும்பொருட்டு. தம்பால் வெளியே வந்து போதமெய்ஞ்ஞானமுலை சுரந்தளித்த புண்ணியத்தாயாரெனக் கூட்டுக. ()

பெருக்கோலிட் டலைபிறங்குங் காவிரிநீர் பிரசமலர் தரளஞ் சிந்த
வரிக்கோல வண்டாட மாதரார் குடைந்தாடு மணிநீர் வாவித் [ன்
திருக்கோலக் காவெய்தித் தேவர்பிரான் கோயில்வலஞ் செய்து முன்னி
றிருக்கோலிட் டறிவரிய திருப்பாத மேத்துவதற் கெடுத்துக் கொள்வார்.

(இ-ள்.) பெருகுதலுடனே ஆரவாரஞ்செய்து அலைகளைவீசும் காவிரிநீரானது தேன்பொருந்திய மலர்களையும், முத்துக்களையும் ஒருபால்சிந்த, வரிகளையுடைய அழகிய வண்டுகள்சூழ்ந்தொலிக்க, பெண்கள் நீரிற்படிந்தாடுகின்ற அழகிய நீர் நிறைந்த தடாகங்களையுடைய திருக்கோலக்காவென்னும் க்ஷேத்திரத்தையடைந்து,தேவர்கள் நாயகராகிய சிவபெருமானது திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்து எதிரில்நின்று, வேதங்கள் ஓலமிட்டும் அறிதற்கரிய திருவடித்தாமரைகளைத் துதிப்பதற்குத் தொடங்குகின்றவரானார்.—எ-று. (௧0௧)

மெய்ந்நிறைந்த செம்பொருளாம் வேதத்தின் விழுப்பொருளை வேணிமீது
பைந்நிறைந்த வரவுடனே பசுங்குழவித் திங்கள்பரித் தருளு வானை
மைந்நிறைந்த மிடற்றானை மடையில்வா ளைகள்பாய வென்னும் வாக்காற்
கைந்நிறைந்த வொத்தறுத்துக் கலைப்பதிகங் கவுணியர்கோன் பாடுங்காலை.

(இ-ள்.) மெய்ம்மைநிறைந்த செவ்விய பொருள்களையுடைய வேதங்களில் சொல்லப்பட்ட சிறந்த மெய்ப்பொருளாயுள்ளவரும், சடைமுடியின்மீது படத்தையுடைய பாம்புடனே பசிய இளஞ்சந்திரனையுந் தரித்தருள்பவரும், காளகண்டத்தையுடையவருமாகிய சிவபெருமானை "மடையில்வாளைகள்பாய" என்னும் முதலையுடைய திருவாக்கினால் கவுணிகர்குலத்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது திருக்கரங்களால் நிறைந்த பண்ணிற்கமைந்த தாளமாத்திரையை வரையறுத்து வேதப்பொருளாகிய திருப்பதிகத்தை அருளிச்செய்யும்பொழுது.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௧0௨)

---

**திருக்கோலக்கா - பண் - தக்கராகம்.**

திருச்சிற்றம்பலம்.

மடையில்வாளைபாயமாதரார்
குடையும்பொய்கைக்கோலக்காவுளான்
சடையும்பிறையுஞ்சாம்பற்பூச்சுங்கீ
ளுடையுங்கொண்டவுருவமென்கொலோ. (௧)

பெண்டான்பாகமாகப்பிறைச்சென்னிக்
கொண்டான்கோலக்காவுகோயிலாக்
கண்டான்பாதங்கையாற்கூப்பவே
யுண்டானஞ்சையுலகமுய்யவே. (௨)

பூணற்பொறிகொளரவம்புன்சடைக்
கோணற்பிறையன்குழகன்கோலக்கா
மாணப்பாடிமறைவல்லானையே
பேணப்பறையும்பிணிகளானவே. (௩)

தழுக்கொள்பாவந்தளரவேண்டுவீர்
மழுக்கொள்செல்வன்மறிசேரங்கையான்

குழுக்கொள்பூதப்படையான்கோலக்கா
விழுக்காவண்ணமேத்திவாழ்மினே. (ச)

மயிலார்சாயன்மாதோர்பாகமா
வெயிலார்சாயவெரித்தவெந்தைதன்
குயிலார்சோலைக்கோலக்காவையே
பயிலாநிற்கப்பறையும்பாவமே. (ரு)

வெடிகொள்வினையைவீட்டவேண்டுவீர்
கடிகொள்கொன்றைகலந்தசென்னியான்
கொடிகொள்விழவார்கோலக்காவுளெம்
மடிகள்பாதமடைந்துவாழ்மினே. (சு)

நிழலார்சோலைநீலவண்டினங்
குழலாரபண்செய்கோலக்காவுளான்
கழலான்மொய்த்தபாதங்கைகளாற்
றொழலார்பக்கற்றுயரமில்லையே. (எ)

எறியார்கடல்சூழிலங்கைக்கோன்றன்னை
முறியார்தடக்கையடர்த்தமூர்த்திதன்
குறியார்பண்செய்கோலக்காவையே
நெறியாற்றொழுவார்வினைகணீங்குமே. (அ)

நாற்றமலர்மேலயனுநாகத்தி
லாற்றலணைமேலவனுங்காண்கிலாக்
கூற்றமுதைத்தகுழகன்கோலக்கா
வேற்றா ர்பாதமேத்திவாழ்மினே. (கூ)

பெற்றமாசுபிறக்குஞ்சமணரு
முற்றதுவர்தோயுருவிலாளருங்
குற்றநெறியார்கொள்ளார்கோலக்காப்
பற்றிப்பரவப்பறையும்பாவமே. (கo)

நலங்கொள்காழிஞானசம்பந்தன்
குலங்கொள்கோலக்காவுளானையே
வலங்கொள்பாடல்வல்லவாய்மையா
ருலங்கொள்வினைபோயோங்கிவாழ்வரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - **சத்தபுரீசுரர்** ; தேவியார் - **ஓசைகொடுத்தநாயகியம்மை.**

**கையதனு லொத்தறுத்துப் பாடுதலுங் கண்டருளிக் கருணை கூர்ந்த**
**செய்யசடை வானவர்த மஞ்செழுத்து மெழுதியசெம் பொற்றாளங்கள்**
**ஐயரவர் திருவருளா லெடுத்தபா டலுக்கிசைந்த வளவா லொத்த**
**வையமெலா முய்யவரு மறைச்சிறுவர் கைத்தலத்து வந்த வன்றே.**

(இ-ள்.) தமது திருக்கரங்களினால் தாளமாத்திரையை வரையறுத்துப் பாடத்தொடங்கவும், அதனைக்கண்டருளி, அவரிடத்துக் கிருபைவைத்த சிவந்த

சடைமுடியையுடைய சிவபெருமானது ஸ்ரீ பஞ்சாக்ஷரமெழுதிய செம்பொன்னாலாகிய தாளங்கள், அச்சிவபெருமானுடைய திருவருளில்,தொடங்கிய திருப்பதிகங்களுக்குப் பண்ணுக்கிசைந்த முறைமையால். தாளத்தை வரையறுத்துப் பாடியருளும்படி, உலகங்களெல்லாம் நற்கதி யடையும்பொருட்டு அவதாரஞ்செய்தருளிய பிராமணகுலச் சிறுவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருக்கரத்தில் வந்தன.—எ-று.

'நற்செம்பொற்றாளம்' என்றும், 'வந்தது' என்றும் பாடம். (௧௱௩)

காழிவரும் பெருந்தகையார் கையில்வருந் திருத்தாளக் கருவி கண்டு
வாழியதந் திருமுடிமேற் கொண்டருளி மனங்களிப்ப மதுர வாயில்
ஏழிசையுந் தழைத்தோங்க வின்னிசைவண் டமிழ்ப்பதிக மெய்தப்பாடி
தாழுமணிக் குழையாரமுன் றக்கதிருக் கடைக்காப்புச் சாத்தி நின்றார்.

(இ-ள்.) சீகாழியில் அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார்(சிவபெருமான் திருவருளால்) தமது திருக்கரத்தில்வந்த திருத்தாளத்தைப் பார்த்து, வாழ்வடைந்த தமது திருமுடியின்மேற் சூடியருளி, தமது திருவுள்ளங் களிப்படையும்படி, மதுரமான திருவாயினின்றும் ஏழிசைகளும் தழைத்தோங்க. இனிய இசையையுடைய வளவிய தமிழ்ப்பதிகத்தைப் பொருந்தப்பாடி யருளி,தொங்குகின்ற அழகிய குண்டலத்தை யணிந்த சிவபெருமான் சந்நிதியில் பொருந்திய திருக்கடைக்காப்புச் சாத்தி நின்றருளினார்.—எ-று. (௧௱௪)

உம்பருல கதிசயிப்ப வோங்கியநா தத்தளவி னுண்மை நோக்கித்
தும்புருநா ரதர்முதலாஞ் சுருதியிசைத் துறையுளோர் துதித்து மண்மேல்
வம்பலர்மா மழைபொழிந்தார் மறைவாழ வந்தருளு மதலையாருந்
தம்பெருமா னருள்போற்றி மீண்டருளிச் சண்பைநகர் சாரச் செல்வார்.

(இ-ள்.) விண்ணுலகத்திலுள்ள தேவர்கள் அதிசயிக்கும்படி, உயர்ந்த அதி மதுரநாதத்தின் அளவினது உண்மையைப் பார்த்து, தும்புரு நாரதர் முதலிய சுருதியோடுகூடிய இசைநூலில் வல்லவர்கள் (திருஞானசம்பந்தப்பிள்ளையாரை) ஸ்தோத்திரஞ்செய்து, பூமியின்மேல் வாசனை வீசுகின்ற புஷ்பமாரி பொழிந்தார்கள்; வேதமார்க்கங்கள் வாழ்வடையும்படி அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் சிவபெருமானது திருவருளைத் துதித்து, (அத்திருக்கோலக்காவினின்றும்) மீண்டு சீகாழிநகரத்தையடையும்படி எழுந்தருள்வாராயினார்.—எ-று.

செங்கமல மலர்க்கரத்துத் திருத்தாளத் துடனடந்து செல்லும்போது
தங்கள்குலத் தாதையார் தரியாது தோளின்மேற் றரித்துக் கொள்ள
அங்கவர்தந் தோளின்மிசை யெழுந்தருளி யணைந்தார்சூழ்ந் தமரரேத்துந்
திங்களணி மணிமாடத் திருத்தோணி புரத்தோணிச் சிகரக் கோயில்.

(இ-ள்.) தமது தாமரைமலர்போன்ற திருக்கரத்தி லேந்திய திருத்தாளத்துடன் நடந்தருளிச் செல்லும்பொழுது, தங்கள் குலத்துக்குரிய தந்தையாராகிய சிவபாதவிருதயர் (பிள்ளையார் பூமியில் நடந்துபோவதைக் கண்டு) சகிக்காமல், திருத்தோளின்மேல் தாங்கிக்கொண்டு செல்ல, அச்சிவபாதவிருதயரது திருத்தோளின்மேல் எழுந்தருளி, தேவர்கள் பிரதக்ஷணஞ்செய்து துதிக்கின்ற சந்திரன் தவழும் அழகிய மாளிகைகளையுடைய சீகாழிப்பதியில் திருத்தோணியென்னுஞ் சிகரத்தையுடைய திருக்கோயிலை யடைந்தருளினார்.—எ-று.

தோணிமிசை யெழுந்தருளிச் சிகரக்கோயில் அணைந்தார் எனக் கூட்டுக. (௧௦௬)

திருப்பெருகும்பெருங்கோயில் சூழவலங்கொண்டருளித் திருமுன்னின்றே
யருட்பெருகு திருப்பதிகமெட்டொருகட் டளையாக்கி யவற்றுளொன்று
விருப்புறுபொற் றிருத்தோணி வீற்றிருந்தா தமைப்பாட மேவுகாதற்
பொருத்தமுற வருள்பெற்றுப் போற்றியெடுத் தருளினார் பூவார்கொன்
[றை.

(இ-ள்.) செல்வமிக்க பெரிய திருக்கோயிலைப் பிரதக்ஷிணஞ்செய்தருளிச் சிவபெருமானது சந்நிதியில் நின்று, திருவருள் பெருகுகின்ற திருப்பதிக மெட்டையும் ஒரு கட்டளையாக்கி, அவ்வெட்டனுள் ஒன்றை விருப்பம்பொருந்திய பொன்மயமாகிய திருத்தோணியில் வீற்றிருந்தருளிய சிவபெருமானைப் பாடப் பொருந்திய அன்புண்டாக, அவரது திருவருளைப் பெற்றுத் துதித்து "பூவார் கொன்றை" என்னும் முதலையுடைய திருப்பதிகத்தை அடியெடுத்துப் பாடியருளினார்.—எ-று.

அருட்பெருகு திருப்பதிக மெட்டொருகட் டளையாக்கி என்றது, தக்கராகத்துக்குரிய கட்டளை எழனுள் திருக்கோலக்காவி லருளிச்செய்த திருப்பதிக மொன்றுநீக்கி, "பூவார்கொன்றை" முதல் ஒருவிகற்பமான திருப்பாசுரத்தையுடைய திருப்பதிக மெட்டினை ஓர் கட்டளையாக்கி என வறிக. (௧௦௭)

---

**சீகாழி - பண் - தக்கராகம்.**

திருச்சிற்றம்பலம்.

பூவார்கொன்றைப்புரிபுன்சடையீச
காவாவெனநின்றேத்துங்காழியார்
மேவார்புரமூன்றட்டாரவர்போலாம்
பாவாரின்சொற்பயிலும்பரமரே.

காரார்வயல்சூழ்காழிக்கோன்றனைச்
சீரார்ஞானசம்பந்தன்சொன்ன
பாரார்புகழ்ப்பாடல்வல்லவ
ரோரார்வானத்தினிதாயிருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

எடுத்ததிருப் பதிகத்தி னிசைதிருத்தா ளத்தினொ லிசையவொத்தி
யடுத்தநடை பெறப்பாடி யார்வமுற வணங்கிப்போந் தலைநீர்ப் பொன்னி
மடுத்தவயற் பூந்தரா யவர்வாழ மழவிளங்கோ லத்துக்காட்சி
கொடுத்தருளி வைகினார் குறைவிலா நிறைஞானக் கொண்டலார்தாம்.

(இ-ள்.) குறைவில்லாமல் நிறைந்த சிவஞானக்கொண்டலாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் தாம் பாட எடுத்தருளிய திருப்பதிகத்தினோசையைத் திருத்தாளத்தினால் பொருந்தவளையறுத்து, அப்பதிகத்துக் கிசைந்தபண் பொரு

ந்தும்படிப் பாடியருளி, அன்போடு நமஸ்கரித்துச் சென்று, அலைகளையுடைய நீர் நிறைந்த காவிரியைத் தன்னுட்கொண்ட வயல்கள் சூழ்ந்த சீகாழிப்பதியிலுள்ளவர்கள் வாழ்வடையும்படி தமது இளம்பருவத் திருக்கோலத்திற் கிசைந்த காட்சி கொடுத்தருளித் திருமாளிகையில் எழுந்தருளினார்.—எ-று.

ஞானக்கொண்டல் = ஞானமேகம். (௧0அ)

---

திருக்கழுமலம் - திருத்தாளச்சதி - பண் - வியாளக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

பந்தத்தால்வந்தெப்பால்பயின்றுநின்றவும்பரப்
 பாலேசேர்வாயேனோர்காண்பயில்கணமுனிவர்களுஞ்
சிந்தித்தேவந்திப்பச்சிலம்பின்மங்கைதன்னொடுஞ்
 சேர்வார்நாணாணீள்கயிலைத்திகழ்தருபரிசதெலாஞ்
சந்தித்தேயிந்தப்பார்ச்சனங்கணின்றுதங்கணாற்
 றாமேகாணாவாழ்வாரத்தகவுசெய்தவனதிடங்
கந்தத்தாலெண்டிக்குங்கமழ்ந்திலங்குசந்தனக்
 காடார்பூவார்சீர்மேவுங்கழுமலவளநகரே.

கஞ்சத்தேனுண்டிட்டேகளித்துவண்டுசண்பகக்
 கானேதேனேபோராருங்கழுமலநகரிறையைத்
தஞ்சத்தார்சண்பைக்கோன்சமைத்தநற்கலைத்துறை
 தாமேபோல்வார்தேனேரார்தமிழ்விரகன்மொழிக
ளெஞ்சத்தேவென்றிக்கேயிமைத்திசைத்தமைத்தகொண்
 டேழேயேழேநாலேமூன்றியலிசையிசையியல்வா
வஞ்சத்தேவின்றிக்கேமனங்கொளப்பயிற்றுவோர்
 மார்வேசேர்வாள்வானோர்சீர்மதிநுதன்மடவரலே.

திருச்சிற்றம்பலம்.

---

அங்கிலையி லாளுடைய பிள்ளையார் தமைமுன்ன மளித்த தாயார்
முன்னுதிக்க முயன்றதவத் திருநன்னி பள்ளிமுதன் மறையோ ரெல்லா
மன்னுபெரு மகிழ்ச்சியுடன் மங்கலதூ ரியந்துவைப்ப மறைக ளோதிக்
கன்னிமதிற் சண்பைநகர் வந்தணைந்து கவுணியர்கோன் கழலிற்றாழ்ந்தார்

(இ-ள்.) அச்சமயத்தில் திருஞானசம்பந்தப்பிள்ளையாரைப் பெற்றருளிய தாயாராகிய பகவதியார் முன்னே அவதரிக்கும்படி தவத்தைச் செய்த திருநனிபள்ளிமுதலிய ஸ்தலங்களிலுள்ள பிராமணர்களெல்லாரும், நிலைபெற்ற பெருமகிழ்ச்சியோடு மங்கலவாத்தியங்கள் ஒலிப்ப வேதபாராயணஞ்செய்து, அழியாத மதிலையுடைய சீகாழிப்பதியை வந்துசேர்ந்து, கவுணியகுலத்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவடிகளை வணங்கினார்கள்,—எ-று. (௧0௯)

மங்கலமா மெய்ஞ்ஞான மண்களிப்பப் பெற்றபெரு வார்த்தை யாலே
யெங்கணுநீள் பதிமருங்கி லிருபிறப்பா ளருமல்லா லேனை யோரும் [ஞ்
பொங்குதிருத் தொண்டர்களு மதிசயித்துக் குழாங்கொண்டு புகலியார்த
சிங்கவிள வேற்றின்பால் வந்தணைந்து கழல்பணியுஞ் சிறப்பின் மிக்கார்.

(இ-ள்.) மங்கலகரமாகிய சிவஞானத்தை உலகத்திலுள்ளவர்கள் மகிழ்வடையும்படி (தோணியப்பராது திருவருளால்) பெற்ற பெரும்புகழ் காரணமாக, சிறந்த எல்லாஸ்தலங்களிலுமுள்ள பிராமணர்களும், அவரொழிந்த மற்றைய வருணத்தாரும், (பூதிசாதனங்களால்) விளங்குகின்ற சிவனடியார்களும் ஆச்சரியமடைந்து கூட்டங் கூட்டமாகக் கூடி, சீகாழியி லுள்ளவர்களது இளமைபொருந்திய ஆண்சிங்கத்தை யொத்த திருஞானசம்பந்தப்பிள்ளையாரிடத்து வந்துசேர்ந்து, அவரது திருவடியை வணங்குஞ் சிறப்பினால் மேம்பட்டவர்களாயினார்கள். ()

வந்ததிருத் தொண்டர்க்கு மல்குசெழு மறையவர்க்கு மற்றுளோர்க்குஞ்
சிந்தைமகிழ் வுறமலர்ந்து திருவமுது முதலான சிறப்பின் செய்கை
தந்தமளவினில்விரும்புந் தகைமையினாற் கடனாற்றுஞ் சண்பைமூதூர்
எந்தைபிரான் சிவலோக மெனவிளங்கி யெவ்வுலகு மேத்து நாளில்.

(இ-ள்.) அவ்வாறு வந்தருளிய அடியார்களுக்கும், நிறைந்த செல்வத்தையுடைய பிராமணர்களுக்கும், மற்றவர்களுக்கும் மனமகிழும்படி இனிய வார்த்தைகள்சொல்லித் திருவமுது செய்வித்தல் முதலிய சிறப்பினையுடைய செய்கைகளை தத்தமக்குரிய பொருளளவிற் கேற்ப விருப்பங்கூருந்தன்மையினால் முறைமைப்படி செய்தற்கிடனாகிய பழைய சீகாழிநகரமானது எமது தந்தையாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் சிவலோகம்போலத் திருக்கூட்டங்களால் விளக்கமுற்று, எல்லாவுலகத்தாராலுந் துதிக்கப்படுங்காலத்தில்.—எ-று. (ககக)

செழுந்தரளப் பொன்னிசூழ் திருநன்னி பள்ளியுள்ளோர் தொழுது
திங்கட், கொழுந்தணியுஞ் சடையானை யெங்கள்பதி யினிற்கும்பிட் டருள வங்கே, யெழுந்தருள வேண்டுமென விசைந்தருளித் தோணிவீற் றிருந்தார் பாதந், தொழுந்தகைமை யாலிறைஞ்சி யருள்பெற்றுப் பிறபதியுந் தொழமுன் செல்வார்.

(இ-ள்.) செழுமைபொருந்திய முத்துக்களைக் கரையிற் கொழிக்கின்ற காவிரிநதி சூழ்ந்த திருநனிபள்ளியென்னும் ஸ்தலத்திலுள்ள பிராமணர்கள் வந்து வணங்கி, இளம்பிறையையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானை எங்கள் ஸ்தலத்தில் வணங்கியருள, (நீதவரீர்) அவ்விடத்திற் கெழுந்தருளவேண்டுமென் றிரப்ப, அதற்கு உடன்பட்டுத் திருத்தோணியி லெழுந்தருளிய சிவபெருமானது திருவடியை அஷ்டாங்க முறைப்படி வணங்கி அவரது திருவருளைப் பெற்று, திருநனிபள்ளியேயன்றி மற்ற க்ஷேத்திரங்களையும் வணங்கும்படி முன்னெழுந்தருள்வாராயினார்; திருஞானசம்பந்தப்பிள்ளையார்.—எ-று. (ககஉ)

தாதவிழ்செங் தாமரையி னகவிதழ்போற் சீறடிக டரையின் மீது
போதுவதும் பிறரொருவர் பொறுப்பதுவும் பொறாவன்பு புரிந்த சிந்தை
மாதவஞ்செய்தாதையார்வந்தெடுத்துத்தோளின்மேல்வைத்துக்கொள்ள
காதர்க்ழ றம்முடிமேற் கொண்டகருத் துடன்போந்தார் ஞானமுண்டார்.

(இ-ள்.) பூந்தாதோடு மலர்ந்த செந்தாமரைமலரின் அகவிதழ்போன்ற சிறிய திருவடிகள் பூமியின்மேல் நடந்துசெல்லுதலையும், வேறொருவர் அவைகளைத் தாங்கிச் செல்லுதலையும் பொறுக்காத அன்புமிகுந்த சிந்தையோடு மகத்தாகிய தவத்தைச்செய்த தந்தையாராகிய சிவபாதவிருதயர்வந்து, அவரையெடுத்துத் தமது திருத்தோளின்மேல் வைத்துக்கொண்டுசெல்ல, சிவஞானப்பாலமுதுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிவ்பெருமானது திருவடிகளைத் தமது திருமுடியிற் கொண்ட திருவுள்ளத்தோடும் சென்றருளினார்.—எ-று. (௧௧௩)

தேனலருங் கொன்றையினார் திருநன்னி பள்ளியினைச் சாரச் செல்வார்
வானணையு மலர்ச்சோலை தோன்றுவதெப் பதியென்ன மகிழ்ச்சியெய்திப்
பானல்வயற் றிருநன்னி பள்ளியெனத் தாதையார் பணிப்பக் கேட்டு
ஞானபோ னகர்தொழுது நற்றமிழ்ச்சொற் றொடைமாலை நவில லுற்றார்.

(இ-ள்.) தேன்பொருந்திய கொன்றைமாலையை யணிந்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருநனிபள்ளி யென்னும் ஸ்தலத்திற்குச் சமீபமாகச்செல்லும் திருஞானசம்பந்தப்பிள்ளையார், மேகமண்டலத்தை யளாவிய மலர்களையுடைய சோலை தோன்றுவது எந்த க்ஷேத்திரமென்று கேட்டருள, அதற்குத் தந்தையாராகிய சிவபாதவிருதயர்மகிழ்வடைந்து, நீலோற்பலங்கள் மலரும் வயல்கள்சூழ்ந்த திருநனிபள்ளியென்று சொல்லக்கேட்டு (தமது திருக்கரங்களைக் குவித்து) வணங்கி, நல்ல திருநெறித் தமிழ்வேதமாகிய திருப்பதிகம் பாடியருளினார்.—எ-று. ()

வேறு.

காரைகள் கூகை முல்லை யெனநிகழ் கலைசேர் வாய்மைச்
சீரியற் பதிகம் பாடித் திருக்கடைக் காப்புத் தன்னி
ஞரியோர் பாகர் வைகு நனிபள்ளி யுள்கு வார்தம்
பேரிடர் கெடுதற் காணை நமதெனும் பெருமை வைத்தார்.

(இ-ள்.) "காரைகள்கூகைமுல்லை" என்னு முதலையுடைய வேதப்பொருளமைந்த மெய்ம்மையாகிய சிறப்பினையுடைய திருப்பதிகத்தைப் பாடியருளி (அப்பதிகத்தி னிறுதிப் பாசுரமாகிய) திருக்கடைக்காப்பில், உமாதேவியாரை இடப்பாகத்திலுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருநனிபள்ளியைத் தியானிப்பவரது மிக்க துன்பங்கள் கெடுதற்கு (ஐயமின்றென்று) திருவாணை நமது என்னும் பெருமையையும் வைத்தருளினார்.—எ-று. (௧௧௫)

திருநனிபள்ளி - பண் - பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

காரைகள்கூகைமுல்லைகளவாகையீகைபடர்தொடரிகள்ளிகவினிச்
சூரைகள்பம்மிவிம்முசுடுகாடமர்ந்தசிவன்மேயசோலைநகர்தான்
றேரைகள்சாரைசாயமிதிகொள்ளவாளைகுதிகொள்ளவள்ளைதுவளந்
நாரைகளாரல்வாரவயன்மேதிவைகுநனிபள்ளிபோலுநமர்காள்.

சடையிடைபுக்கொடுங்கியுட்டங்குவெள்ளம்வளர்திங்கள்கண்ணியயலே
யிடையிடைவைத்ததொக்குமலர்தொத்துமாலையிறைவன்னிடங்கொள்பதிதான்

மடையிடைவாளைபாயமுகிழ்வாய்நெரிந்துமணநாறுநீலமலரு
கடையுடையன்னம்வைகுபுனலம்படப்பைநனிபள்ளிபோலுநமர்காள்.

கடல்வரையோதமல்குகழிகானல்பானல்கமழ்காழியென்றுகருதப்
படுபொருளாறுநாலுமுளதாகவைத்தபதியானஞானமுனிவ
னிடுபறையொன்றவத்தர்பியன்மேலிருந்துவிசையாலுரைத்தபனுவல்
நடுவிருளாடுமெந்தைநனிபள்ளியுள்கவினைகெடுதலாணைநமதே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - **நற்றுணையப்பர்**, தேவியார்-**பர்வதராஜபுத்திரி.**

---

ஆதியார் கோயில்வாயி லணைந்துட்க் கன்புகூரு
நீதியாற் பணிந்து போற்றி நீடிய வருண்முன் பெற்றுப்
போதுவார் தம்மைச் சூழ்ந்து பூசுரர் குழாங்கள் போற்றுங்
காதல்கண் டங்க மர்ந்தார் கவுணியர் தலைவனூர்தாம்.

(இ-ள்.) சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக்கோயிலின் திருவாயிலை யடைந்து உள்ளே எழுந்தருளி அன்புமிக்க முறைமையோடு வணங்கித் துதித்து, அவரது நிறைந்த திருவருளைத் திருமுன்னே பெற்று எழுந்தருள்பவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார், தம்மைச் சூழ்ந்து அவ்வூரிலுள்ள கூட்டமாகிய பிராமணர்கள் (தாம் அங்கு வசிக்கும் விருப்பினால்) தம்மைத் துதிக்கும் விருப்பத்தைப் பார்த்து அவ்விடத்திற்கு எழுந்தருளினார்.—எ-று. (கககூ)

அம்பிகை யளித்த ஞான மகிலமு முய்ய வுண்ட
நம்பெருந் தகையார் தம்மை யெதிர்கொண்டு நண்ண வேண்டி
யும்பரும் வணங்கு மெய்ம்மை யுயர்தவத் தொண்ட ரோடு
தம்பெரு விருப்பால் வந்தார் தலைசையந் தணர்க ளெல்லாம்.

(இ-ள்.) உமாதேவியார் கொடுத்தருளிய சிவஞானமாகிய திருமுலைப்பாலமுதத்தைச் சர்வலோகங்களும் கடைத்தேறும்பொருட்டுத் திருவமுதுசெய்தருளிய நமது பேரருளாளராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரை எதிர்கொண்டழைக்க விருப்பங்கொண்டு, திருத்தலைச்சங்காட்டில் வாழும் பிராமணர்களெல்லாம், தேவர்களும் வணங்கத்தக்க மெய்ம்மையோடு உயர்ந்த தவத்தினையுமுடைய அடியார்கள் கூட்டத்துடன் மிக்க பெருவிருப்பத்தோடு (அத் திருநனிபள்ளியில்) வந்தார்கள்.—எ-று. (ககஎ)

காவண மெங்கு மிட்டுக் கமுகொடு கதலி நாட்டிப்
பூவணை தாமந் தூக்கிப் பூரண கும்ப மேந்தி
யாவண வீதியெல்லா மலங்கரித் தண்ணலாரை
மாவணை மலர்மென் சோலை வளம்பதிக் கொண்டு புக்கார்.

(இ-ள்.) எவ்விடத்திலும் நடைப்பந்தல்போட்டு, கமுகமரங்களையும் வாழைமரங்களையும் நாட்டி, மலர்களால் தொடுத்த மாலையைத் தொங்கக் கட்டி, பூரணகலசங்களைக் கையிலேந்திக்கொண்டு, ஆவணவீதிகளையெல்லாம் அலங்காரஞ்செய்து, வண்டுகள் மொய்க்கின்ற மிருதுவாகிய மலர்களை யுடைய சோலைகள் சூழ்ந்த

செல்வமிக்க திருத்தலைச்சங்காடு என்னும் ஸ்தலத்திற்குத் திருஞானசம்பந்தப்பிள்ளையாரை, அழைத்துக்கொண்டு போனார்கள்.—எ-று.

ஆவணவீதி=கடைவீதி. (கக அ)

திருமறை யோர்கள் சூழ்ந்து சிந்தையின் மகிழ்ச்சி பொங்கப்
பெருமறை யோசை மல்கப் பெருந்திருக் கோயி லெய்தி
யருமறைப் பொருளா னாரைப் பணிந்தணி நற்சங் கத்தின்
றருமுறை நெறியக் கோயில் சார்ந்தமை யருளிச்செய்தார்.

(இ-ள்.) அருட்செல்வத்தையுடைய பிராமணர்கள் சூழ்ந்து தமது மனதில் மகிழ்ச்சி யுண்டாகும்படியாகச் சிறந்த வேதங்களை யோதுகின்ற வோசை நிறையும்படி பெரிய திருக்கோயிலை யடைந்து, அரிய வேதப்பொருளாகிய சிவபெருமானை வணங்கி, அழகிய நல்ல வலம்புரிச்சங்கினது வடிவத்தைக் காட்டுமுறைமையினால் அந்தத்திருக்கோயி லமைந்திருக்குந் தன்மையைத் தமது திருப்பதிகத்தி லருளிச்செய்தார்.—எ-று. (கக௯)

கறையணி கண்டர் கோயில் காதலாற் பணிந்து பாடி
மறையவர் போற்ற வந்து திருவலம் புரத்து மன்னும்
இறைவரைத் தொழுது பாடுங் கொடியுடை யேத்திப் போந்து
நிறைபுனற் றிருச்சாய்க் காடு தொழுதற்கு நினைந்து செல்வார்.

(இ-ள்.) விடம்பொருந்திய கண்டத்தையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கோயிலை விருப்பத்தோடு வணங்கித் திருப்பதிகம்பாடி அங்குள்ள பிராமணர்கள் சூழ்ந்து துதிக்க எழுந்தருளி, திருவலம்புரமென்னும் க்ஷேத்திரத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமானை வணங்கி, அவரைப் பாடுகின்ற "கொடியுடை" என்னு முதலையுடைய திருப்பதிகத்தைத் துதித்து, அவ்விடத்தினின்று மெழுந்தருளி, நீர்வளமிகுந்த திருச்சாய்க்காடு என்னும் ஸ்தலத்தை வணங்கத் திருவுள்ளங்கொண்டு எழுந்தருள்வாராயினார்.—எ-று. (கஉ0)

**திருவலம்புரம் - பண் - பழம்பஞ்சுரம்.**

திருச்சிற்றம்பலம்.

கொடியுடைமும்மதிலூடுருவக்குனிவெஞ்சிலைவாங்கி
யிடிபடவெய்தவமரர்பிரானடியாரிசைந்தேத்தத்
துடியிடையாளையோர்பாகமாகத்துதைந்தாரிடம்போலும்
வடிவுடைமேதிவயல்படியும்வலம்புரநன்னகரே.

நல்லியநான்மறையோர்புகலித்தமிழ்ஞானசம்பந்தன்
வல்லியதோலுடையாடையினான்வலம்புரநன்னகரைச்
சொல்லியபாடல்கள்பத்துஞ்சொல்லவல்லவர்தொல்வினைபோய்ச்
செல்வனசேவடிசென்றணுகிச்சிவலோகஞ்சேர்வாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - **வலம்புரிநாதர் தேவியார்-வடுவகிர்க்கண்ணம்மை.**

பன்னகப் பூணி னாரைப் பல்லவ னீச்ச ரத்துச்
சென்னியால் வணங்கி யேத்தித் திருந்திசைப் பதிகம் பாடிப்
பொன்னிசூழ் புகாரி னீடு புனிதர்தந் திருச்சாய்க் காட்டு
மன்னுசீர்த் தொண்ட ரெல்லா மகிழ்ந்தெதிர் கொள்ளப் புக்கார்.

(இ-ள்.) சர்ப்பாபரணத்தை யணிந்த சிவபெருமானைத் திருப்பல்லவனீச்சரமென்னுந் திருக்கோயிலின்கண் சிரசால் வணங்கித் துதித்து, திருந்திய இசை பொருந்திய திருப்பதிகத்தை யருளிச்செய்து, காவிரிநதிசூழ்ந்த காவிரிப்பூம்பட்டினத்தில் வீற்றிருந்தருளிய சிவபெருமானது திருச்சாய்க்காடென்னும் ஸ்தலத்தில் வாழும் சிறப்பினையுடைய அடியார்களெல்லாம் மகிழ்ச்சியடைந்து (வணங்கி) எதிர்கொள்ள, அத்தலத்திற் கெழுந்தருளினார்.—எ-று. (கஉக)

வானளவு யுயர்ந்த வாயி லுள்வலங் கொண்டு புக்குத்
தேனலர் கொன்றை யார்தந் திருமுன்பு சென்று தாழ்ந்து
மானிடந் தரித்தார் தம்மைப் போற்றுவார் மண்பு காரென்
றானெலா முருக வேத்தி யுச்சிமேற் குவித்தார் செங்கை.

(இ-ள்.) மேகமண்டலம்வரையிலு முயர்ந்த திருக்கோபுரவாயிலினுள்ளே யெழுந்தருளிப் பிரதக்ஷணஞ்செய்து உள்ளே புகுந்து தேனோடு மலர்ந்த கொன்றைமாலையையணிந்த சிவபெருமான் சந்நிதியில் சென்று வணங்கி, மானை இடது திருக்கரத்தில் தரித்தருளிய அவ்வெம்பெருமானைத் துதிப்பவர் "மண்புகார்" என்று திருப்பதிகத்தின் முதலில் எடுத்துத் தமது திருமேனிமுழுவதும் உருகும்படி துதித்து, சிவந்த திருக்கரங்களைத் தமது சிரசின்மேல் குவித்து வணங்கினார்.

'மானிடந்தரித்தார்' என்பதற்கு, மான்போலும் மருண்ட பார்வையையுடைய உமாதேவியாரை இடப்பாகத்தில் வைத்தவர் என்று கூறினும் பொருந்தும். (கஉஉ)

---

திருச்சாய்க்காடு - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

மண்புகார்வான்புகுவர்மனமிளையார்பசியாலுங்
கண்புகார்பிணியறியார்கற்றாருங்கேட்டாரும்
விண்புகாரெனவேண்டாவெண்மாடநெடுவீதித்
தண்புகார்ச்சாய்க்காட்டெந்தலைவன்றாள்சார்ந்தாரே.

கொம்பந்துபுடைத்தொல்குநூபுரஞ்சேர்மெல்லடியார்
அம்பந்தும்வரிக்கழலுமரவஞ்செய்பூங்காழிச்
சம்பந்தன்றமிழ்ப்பகர்ந்தசாய்க்காட்டுப்பத்தினையும்
எம்பந்தமெனக்கருதியேத்துவார்க்கிடர்கெடுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - சாயாவனேசுவரர், தேவியார் - குயிலினுநன்மொழியம்மை.

சீரினிற் றிகழ்ந்த பாட்டிற் றிருக்கடைக் காப்புப் போற்றிப்
பாரினிற் பொலிந்த தொண்டர் போற்றிடப் பயில்வார் பின்னும்
ஏரிசைப் பதிகம் பாடி யேத்திப்போந் திறைவர் வெண்கா
டாருமெய்க் காத லோடும் பணிவதற் கணைந்தா ரன்றே.

(இ-ள்.) சிறப்போடு விளங்குகின்ற அத்திருப்பதிகத்தில் திருக்கடைக்காப்பை அருளிச்செய்து, உலகத்தில் விளங்கிய அடியார்கள் துதிக்க அங்கு எழுந்தருளும் திருஞானசம்பந்தப்பிள்ளையார் பின்னும் அழகிய இசையையுடைய திருப்பதிகம்பாடித் துதித்து, அவ்விடத்தினின்று மெழுந்தருளிச் சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருவெண்காட்டை நிறைந்த உண்மையான அன்புடன் வணங்கும் பொருட்டுச் சென்றருளினார்.—எ-று. (கஉ௩)

பொன்னிதழ்க் கொன்றை வன்னி புனலிள மதியி னோடு
சென்னியர் திருவெண் காட்டுத் திருத்தொண்ட ரெதிரே வந்திங்
கின்னதன் மையர்க ளாகு மெனவொணு மகிழ்ச்சி பொங்க
மன்னுசீர்ச் சண்பை யாளு மன்னரைக் கொண்டு புக்கார்.

(இ-ள்.) பொன்போலும் இதழ்களையுடைய கொன்றைமலரும், வன்னிப்பத்திரமும், கங்கைநதியும், இளம்பிறையுமாகிய இவைகளால் விளங்குகின்ற சடைமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருவெண்காட்டிலுள்ள திருத்தொண்டர்களெல்லாம் எதிர்கொண்டுவந்து, இவ்விடத்து இத்தன்மையராணர்களென் றெடுத்துச் சொல்லவொண்ணாத களிப்புண்டாக, நிலைபெற்ற சிறப்பினையுடைய சீகாழிப்பதியை யாளாநின்ற திருஞானசம்பந்தப்பிள்ளையாரை அழைத்துக்கொண்டு சென்றார்கள்.—எ-று. (கஉச)

முத்தமிழ் விரகர் தாமு முதல்வர்கோ புரத்து முன்னர்ச்
சித்தநீ டுவகை யோடுஞ் சென்றுதாழ்ந் தெழுந்துட் புக்குப்
பத்தரா மடியார் சூழப் பரமர்கோ யிலைச்சூழ் வந்து
நித்தனார் தம்முன் பெய்தி நிலமுறத் தொழுது வீழ்ந்தார்.

(இ-ள்.) இயலிசைநாடகமென்னு முத்தமிழையு முணர்ந்த திருஞானசம்பந்தப்பிள்ளையாரும், முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமானது திருக்கோபுரத்தின் முன்னே மனதில் மிகுந்த சந்தோஷத்தோடும் சென்று வணங்கி யெழுந்து உள்ளேபுகுந்து, சிவபத்தராகிய அடியார்கள் தம்மைச் சூழ்ந்துவர, சிவபெருமான் திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்து, நித்தராகிய அவ்வெம்பெருமானது சந்நிதியை யடைந்து, பூமியில் திருமேனிபொருந்தச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தருளினார்.—எ-று.

நித்தனார்=அழிவில்லாதவர். (கஉரு)

மெய்ப்பொரு ளாயி னாரை வெண்காடு மேவி னாரைச்
செப்பரும் பதிக மாலை கண்காட்டு நுதன்முன் சேர்த்தி
முப்புரஞ் செற்றார் பாதஞ் சேருமுக் குளமும் பாடி
யொப்பரு ஞான முண்டா ருளமகிழ்ந் தேத்தி வாழ்ந்தார்.

(இ-ள்.) (வேதத்திற்சொல்லும்) உண்மைப்பொருளாயுள்ளவரும், திருவெண்காடு என்னும் ஸ்தலத்தில் வீற்றிருந்தருள்பவருமாகிய சிவபெருமானைச் சொல்லுதற்கரிய திருப்பதிகமாகிய மாலையை "கண்காட்டுநுதல்" என்று முதலடியில்

வைத்து, திரிபுரதகனராகிய சிவபெருமான் திருவடிகளை யடையச்செய்யும் முக்குளத்தையும் (அத்திருப்பதிகத்தில் அமைத்துப்) பாடியருளி, ஒப்பற்ற சிவஞானப்பாலமுதுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் மனமகிழ்ந்து அவ்வெம்பெருமானைத் துதித்துச் சிவானந்தப் பெருவாழ்வடைந்தருளினார்.—எ-று.

சிவபெருமானது சோம சூரி யாக்கினி யென்னும் மூன்று திருக்கண்களினின்றுந் தோன்றிய துளிவடிவாகிய முக்குளமும் தன்னையடைந்து மூழ்குவார்க்குச் சிவபெருமான் திருவடியையடைதற்குரிய சிவஞானத்தைத் தருதலின் 'முப்புரஞ்செற்றார்பாதஞ் சேருமுக்குளம்' என்று கூறினார் ; இதனை,

"முன்னவரின் முன்னவனை முதனுகத்தி லறுசமய முதல்வி போற்றி
யன்னமுடி யரியானை யானந்த நடமெனக்கா வாடு கென்றாள்
பன்னகங் கணத்தானு மப்படியா னந்தநடம் பண்ணு நின்றான்
றுன்னியவா னந்தசலங் கண்மூன்றில் விழுந்ததொரு துளிக ளாக.

முத்துளிகள் விழுந்தவிட முக்குளமாய் முச்சுடரின் முதற்பேர் பெற்றுச்
சித்தியெலா மளித்தனர்காண் முன்னுகத்தின் மருத்துவனைச் சிதைக்க வேண்டி
யத்திரமொன் றெடுத்துவிழித் தாயிரவாண் டமைந்தனரன் றவர்க ணூடே
சுத்தசலந் துளித்துளியா மூவகையா விழுந்ததந்தத் தோயந் தன்னில்." -என்றும்,

"முக்குளத்திற் படிந்தவர்கண் மூவகையோ டணையும்வினை மூன்றுந் தீர்வர்
முக்குணமுங் கழன்றிடுவ ரதற்கடியா கியபாச மூன்றுந் தீர்வர்
முக்கடமா வுரிபுனைவர் முத்தலைவேல் பிடிப்பரரா முந்நூ லாவர்
முக்கணுடை யவர்சூழ முத்தொழிலுந் தந்தொழிலா முடிப்பர்தாமே."—என்னும்

திருவெண்காட்டுப் புராணத்தா னுணர்க. (௧௨௪)

---

திருவெண்காடு - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

கண்காட்டுநுதலானுங்கனல்காட்டுங்கையானும்
பெண்காட்டுமுருவானும்பிறைகாட்டுஞ்சடையானும்
பண்காட்டுமிசையானும்பயிர்காட்டும்புயலானும்
வெண்காட்டிலுறைவானும்விடைகாட்டுங்கொடியானே.

பேயடையாபிரிவெய்தும்பிள்ளையினோடுள்ளநினை
வாயினவெலாம்பெறுவரையுறவேண்டாவொன்றும்
வேயனதோளுமைபங்கன்வெண்காட்டுமுக்குளநீர்
தோய்வினையாரவர்தம்மைத்தோயாவாந்தீவினையே.

தண்பொழில்சூழ்சண்பையர்கோன்றமிழ்ஞானசம்பந்தன்
விண்பொலிவெண்பிறைச்சென்னிவிகிர்தனுறைவெண்காட்டைப்
பண்பொலிசெந்தமிழ்மாலைபாடியபத்திவைவல்லார்
மண்பொலியவாழ்ந்தவர்போய்வான்பொலியப்புகுவாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - சுவேதாரணியேசர், தேவியார் - பிரமவித்தியாநாயகியம்மை.

அருமையாற் புறம்புபோந்து வணங்கியங் கமருநாளிற்
றிருமுல்லை வாயி லெய்திச் செந்தமிழ் மாலை சேர்த்தி
மருவிய பதிகண் மற்றும் வணங்குவார் மறையோ ரேத்தத்
தருமலி புகலி வந்து ஞானசம் பந்தர் சார்ந்தார்.

(இ-ள்.) (சிவபெருமானைவிட்டுப் பிரிதற்கரிய) அருமைப்பாடுடன் வணங்கிப் புறத்திற்சென்று, அத்தலத்தி லெழுந்தருளியிருக்குநாளில், தென்றிருமுல்லைவாயிலென்னும் ஸ்தலத்தையடைந்து, சிறந்த தமிழ்ப்பதிகமாலையைச் சாத்தியருளி, அத்திருமுல்லைவாயிலுக்குச் சமீபத்திலுள்ள மற்றக்ஷேத்திரங்களையும் வணங்கும் கருத்துள்ளவராய்ப் பிராமணர்கள் துதிக்கப் பல விருக்ஷங்கள் நிறைந்த சீகாழிப்பதியைத் திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளி யடைந்தார்.—எ-று ()

தோணிவீற் றிருந்தார் தம்மைத் தொழுதுமுன் னின்று தூய
ஆணியாம் பதிகம் பாடி யருட்பெரு வாழ்வு கூரச்
சேணுயர் மாட மோங்கு திருப்பதி யதனிற் செய்ய
வேணியார் தம்மை நாளும் போற்றிய விருப்பின் மிக்கார்.

(இ-ள்.) திருத்தோணியென்னும்ஆலயத்தில் வீற்றிருந்தருளும் தோணியப்பரைவணங்கி அவர் சந்நிதியில் நின்று, பரிசுத்தமாகிய (வேதாகமப்பொருளிற்கு) உரையாணியாகிய திருப்பதிகத்தைப் பாடியருளித் திருவருளாகிய சிவானந்தப்பெருவாழ் வதிகரிக்க, ஆகாயத்தையளாவிய மாளிகைகளோங்கிய அச்சீகாழியென்னும் க்ஷேத்திரத்தில் வீற்றிருந்தருளும் சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமானை நாள்தோறும் துதிக்கும் விருப்பத்தில் சிறந்திருந்தார்.—எ-று. ()

வைகுமந் நாளிற் கீழ்பான் மயேந்திரப் பள்ளி வாசஞ்
செய்பொழிற் குருகா வூருந் திருமுல்லை வாயி லுள்ளிட்
டெய்திய பதிக ளெல்லா மின்புற விறைஞ்சி யேத்தித்
தையலாள் பாகர் தம்மைப் பாடினார் தமிழ்ச்சொன் மாலை.

(இ-ள்.) அவ்வாறு சீகாழிப்பதியில் எழுந்தருளியிருக்கும் நாள்களில் அச்சீகாழியின்கீழ்ப்பாகத்திலுள்ளதிருமயேந்திரப்பள்ளி,வாசனைவீசுகின்ற சோலைகள் சூழ்ந்த திருக்குருகாவூர், திருமுல்லைவாயில் முதலாகப்பொருந்திய திருப்பதிகளையெல்லாம் தம் மனத்தில் அன்புண்டாக வணங்கித், துதித்துப் பார்வதிபாகராகிய சிவபெருமானைத் திருநெறித்தமிழ்வேதமாகிய திருப்பதிகமாலையாற் பாடியருளினார்.—எ-று. (கஉகூ)

அவ்வகை மருங்கு சூழ்ந்த பதிகளி லரனார் பொற்றாண்
மெய்வகை ஞான முண்ட வேதியர் விரவிப் போற்றி
யுய்வகை மண்ணு ளோருக் குதவிய பதிகம் பாடி
யெவ்வகை யோரு மேத்த விறைவரை யேத்து நாளில்.

(இ-ள்.) அவ்வாறு சீகாழிக்குச்சமீபத்திலுள்ள ஸ்தலங்களிலெழுந்தருளிய சிவபெருமானது அழகிய திருவடிகளை மெய்ம்மையாகிய சிவஞானப் பாலமுதுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அடைந்து துதித்து, உலகத்திலுள்ளவர்களுக்கு உய்யும் நெறியையுணர்த்துகின்ற திருப்பதிகங்களைப் பாடியருளி, எத்தகைய மேம்பாடுடையவர்களும் தம்மைத் துதிக்கச் (சீகாழியை யடைந்து) தோணியப்பரைத்துதித்து அங்கு எழுந்தருளியிருக்குநாளில்.—எ-று. (கஙo)

வேறு.

திருநீல கண்டத்துப் பெரும்பாணர் தெள்ளமுதின்
வருநீர்மை யிசைப்பாட்டு மதங்கசூ ளாமணியார்
ஒருநீர்மை யுடனுடைய பிள்ளையார் கழல்வணங்கத்
தருநீர்மை யாழ்கொண்டு சண்பையிலே வந்தணைந்தார்.

(இ-ள்.) திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனார் தெள்ளிய அமுதம்போலச் செவிக்கு இன்பத்தைத்தருகின்ற இசைப்பாட்டில்வல்ல மதங்க சூளாமணியென்னும் தம்மனைவியாரோடு ஒருமைப்பட்ட அன்புடன் திருஞானசம்பந்தப்பிள்ளையாருடைய திருவடிகளை வணங்கும்பொருட்டு இன்பத்தைத்தருகின்ற யாழையெடுத்துக்கொண்டு சீகாழியில் வந்துசேர்ந்தார்.—எ-று. (கஙக)

பெரும்பாணர் வரவறிந்து பிள்ளையா ரெதிர்கொள்ளச்
சுரும்பார்செங் கமலமலர்த் துணைப்பாதந் தொழுதெழுந்து
விரும்பார்வத் தொடுமேத்தி மெய்ம்மொழிக ளாற்றுதித்து
வரும்பான்மை தருவாழ்வு வந்தெய்த மகிழ்சிறந்தார்.

(இ-ள்.) திருநீலகண்டப்பெரும்பாணநாயனாரது வருகையைத் திருஞானசம்பந்தப்பிள்ளையா ரறிந்து, அவரை யெதிர்கொண்டருள, வண்டுகள் ஆரவாரிக்கும் செந்தாமரைமலர்போன்ற இரண்டு திருவடிகளையும் அத்திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனார் (தமது பத்தினியாரோடும்) வணங்கி யெழுந்து விரும்புகின்ற அன்போடும் அஞ்சலிசெய்து, மெய்ம்மையாகிய திருவாக்கினால் துதித்து, (தாம் அவரைத் தரிசிக்கவேண்டுமென்று) வந்ததன்மையினால் அடையவேண்டிய பெருவாழ்வானது, அவ்வாறு தரிசித்தமாத்திரத்தில் தம்மைவந்தடைய, அதனால் மகிழ்ச்சியடைந்தவராயினார்.—எ-று. (கஙஉ)

அளவிலா மகிழ்ச்சியினார் தமைநோக்கி யையர்நீ
ருளமகிழ விங்கணைந்த வுறுதியுடை யோமென்றே
யிளநிலா நகைமுகிழ்ப்ப விசைத்தவரை யுடன்கொண்டு
களநிலவு நஞ்சணிந்தார் பாலணையுங் கவுணியனார்.

(இ-ள்.) அளவில்லாத சந்தோஷத்தையுடைய திருநீலகண்டயாழ்ப்பாணநாயனாரைப்பார்த்தருளி, ஐயரே! நீர் மனமகிழும்படி யிங்குவந்ததனால் வரும்பயனாகிய வுறுதியையுடையோமென்று இளமையாகிய நிலாவைப்போலத் திருநகை தோன்றும்படிச் சொல்லியருளி அவரைத் தம்முடன் அழைத்துக்கொண்டு, கண்டத்தில் விளங்கும் விஷத்தையணிந்த தோணியப்பரது சந்நிதியிற்செல்லும் திருஞானசம்பந்தப்பிள்ளையார்.—எ-று. (கஙங)

கோயிலினிற் புறமுன்றிற் கொடுபுக்குக் கும்பிடுவித்
தேயுமிசை யாழுங்க ளிறைவருக்கிங் கியற்றுமென
ஆயபுகழ்ப் பிள்ளையா ரருள்பெற்ற வதற்கிறைஞ்சி
மேயதொடைத் தந்திரியாழ் வீக்கியிசை விரிக்கின்றார்.

(இ-ள்.) திருக்கோயிலின் திருமுற்றத்தின் புறத்தில் அவரை யழைத்துக்கொண்டுசென்று சுவாமியை வணங்கச்செய்து, இவ்விடத்தில் உங்கள் சிவபெ

ருமானுக்கு இசைபொருந்திய யாழைவாசியுமென்று அருளிச்செய்ய, நிறைந்த புகழையுடைய திருஞானசம்பந்தப் பிள்ளையாரது திருவருளை இசைபாடும்பொருட்டுத் தாம் பெற்றதைக்கருதி அவரை வணங்கி இசைபொருந்திய தொடையினையுடைய தந்திரிகளோடுகூடிய யாழைப்பிணித்து யாழ்வாசிக்கின்றார்.—எ-று.

தந்திரி என்பது, யாழின் நரம்பு. (௧௫௪)

தானநிலைக் கோல்வடித்துப் படிமுறைமைத் தகுதியினா
லானவிசை யாராய்வுற் றங்கணர்தம் பாணியினை
மானமுறைப் பாடினியா ருடன்பாடி வாசிக்க
ஞானபோ னகர்மகிழ்ந்தார் நான்மறையோ ரதிசயித்தார்.

(இ-ள்.) மந்தர மத்திம தாரமென்னும் மூவகை நாதங்களையளந்து கட்டிய எல்லையில் நிலைமையோடுகூடிய யாழினைப் பண்ணுறுத்தி, அத்தானங்களில் மூவகை நாதங்களும்பொருந்து முறைமையான தகுதியோடும் பொருந்திய குரல்முதலிய ஏழிசைகளைத் தனித்தனி தானம் ஒவ்வொன்றினும் ஆராய்ந்து, சிவபெருமான் பரமான பண்ணிற்கிசைந்த பாடலை ஏழிசையின் கால அளவைமுதலிய இலக்கணங்களையுணர்ந்த பாடினியாரோடு வாசிக்கவும், அதனைக் கேட்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் மகிழ்ச்சியடைந்தருளினார்; அங்குள்ள நான்கு வேதங்களையுணர்ந்த பிராமணர்களும் ஆச்சரிய மடைந்தார்கள்.—எ-று. (௧௫௫)

யாழிலெழு மோசையுட னிருவர்மிடற் றிசையொன்றி
வாழிதிருத் தோணியுளார் மருங்கணையு மாட்சியினைத்
தாழுமிரு சிறைப்பறவை படிந்ததனி விசும்பிடைநின்
றேழிசைநூற் கந்தருவர் விஞ்சையரு மெடுத்திசைத்தார்.

(இ-ள்.) யாழினின்று முண்டாகும் ஓசையோடு, திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனாரும் அவர் பத்தினியாருமாகிய இருவரது கண்டத்தெழும் இசைகளும் ஒன்றுபட்டு வாழ்வையுடைய திருத்தோணியப்பரது திருச்செவியிற் பொருந்துஞ் சிறப்பினைச் சந்திரமண்டலத்தினின்றும் இசைக்கு உருகி வீழாநின்ற கின்னர மிதுனங்கள் நெருங்கிய பெரிய ஆகாயத்தினின்றும் ஏழிசையோடுகூடிய இசைநூலில் வல்ல கந்தருவர்களும் விஞ்சையர்களும் அந்த இசையை வியந்தெடுத்துக் கூறினார்கள்.—எ-று. (௧௫௬)

எண்ணருஞ்சீர்த் திருத்தோணி யெம்பெருமான் கழல்பரவிப்
பண்ணமையா ழிசைகூடப் பெரும்பாணர் பாடியபின்
கண்ணுதலா ரருளினாற் காழியர்கோன் கொடுபோந்து
நண்ணியுறை யிடஞ்சமைத்து நல்விருந்து சிறந்தளிப்ப.

(இ-ள்.) அளவிடுதற்கரிய சிறப்பினையுடைய திருத்தோணியென்னு மாலயத்தில் வீற்றிருந்தருளும் எமது சிவபெருமானது திருவடிகளைவணங்கி, பண்ணமைந்தயாழில் சப்தசுரங்களும் பொருந்தத் திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார் பாடியபின்பு, தோணியப்பரது திருவருளினால் திருஞானசம்பந்தப்பிள்ளையார் அவரை யழைத்துக்கொண்டுபோய் அவர்பொருந்தி வசித்தற்கு ஓர் இடத்தையமைத்து, நல்ல அறுசுவையோடுகூடிய விருந்தினை மனமகிழ்ந்து செய்தருள.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௧௫௭)

பிள்ளையா ரருள்பெற்ற பெரும்பாணர் பிறையணிந்த
வெள்ளநீர்ச் சடையாரை யவர்மொழிந்த மெய்ப்பதிக
முள்ளபடி கேட்டலுமே யுருகுபெரு மகிழ்ச்சியராய்த்
தெள்ளமிர்த மருந்தினார்போற் சிந்தைகளி யுறத்தொழுதார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவருளைப்பெற்ற திருநீலகண்டயாழ்ப்பாணநாயனர், இளம்பிறையணிந்த கங்கைநதி தவழும் சடைமுடியையுடைய சிவபெருமானை அத்திருஞான சம்பந்தப்பிள்ளையார் அருளிச்செய்த மெய்ம்மையாகிய திருப்பதிகங்களை அவரருளிச்செய்தபடி திருக்கூட்டங்களால் பாடியருள, அதனைக் கேட்டவளவில் அதனால் மனமுருகுகின்ற மிக்க மகிழ்ச்சியுடையவராய்த் தெளிவாகிய தேவாமிர்த முண்டவர்போல மனங்களிப்புண்டாகும்படி (அத்திருப்பதிகப் பொருள்களைச்சிந்தித்துத்) தொழுதார்.—எ-று. (கரூஅ)

காழியார் தவப்பயனாங் கவுணியர்தந் தோன்றலா
ராழிவிட முண்டவர்த மடிபோற்றும் பதிகவிசை
யாழின்முறை மையினிட்டே யெவ்வுயிரு மகிழ்வித்தா
ரேழிசையும் பணிகொண்ட நீலகண்ட யாழ்ப்பாணர்.

(இ-ள்.) சீகாழியிலுள்ளவர்களது தவப்பயனாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருப்பாற்கடலில்தோன்றிய ஆலாகலவிஷத்தை யுண்டருளிய சிவபெருமானது திருவடிகளைத் துதிக்கும் திருப்பதிகங்களின் இசையை யாழில் (பதிகங்களுக்கமைந்த) பண்முறைசேர்த்து வாசித்து எவவகைப்பட்ட ஆன்மாக்களையும் மகிழச்செய்வித்தார்; குரல்முதலிய ஏழிசைகளையும் தம் வழிப்படுத்திய திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனர்.—எ-று (கருகூ)

சிறியமறைக் களிறளித்த திருப்பதிக விசையாழி
னெறியின்மே பெரும்பாணர் பின்னுநீ ரருள்செய்யு
மறிவரிய திருப்பதிக விசையாழி விட்டடியேன்
பிறிவின்றிச் சேவிக்கப் பெறவேண்டு மெனத்தொழுதார்.

(இ-ள்.) சிறிய வேதக்கன்றாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அருளிச்செய்த திருப்பதிகங்களின இசையை யாழிலேற்றி முறைப்படி வாசிக்கும் திருநீலகண்டயாழ்ப்பாணநாயனர் (இப்பொழுது சுவாமிகளது திருவருளைப்பெற்றுத் தேவரீர் அருளிச்செய்த திருப்பதிகங்களை யாழிலிட்டு வாசித்தேன்) பின்னும் சுவாமிகளருளிச்செய்யும் அறிதற்கரிய திருப்பதிகங்களி னிசையையும் அடியேன் யாழிலமைத்துப்பாடித் தேவரீரைப் பிரியாமல் சேவித்து வரப் பெற வேண்டு மென்றுவணங்கினர்.—எ-று. (கசo)

மற்றதற்குப் பிள்ளையார் மனமகிழ்வுற் றிசைந்தருளப்
பெற்றவர்தாந் தம்பிரா னருளிதுவே யெனப்பேணிச்
சொற்றமிழ்மா லையினிசைகள் சுருதியாழ் முறைதொடுத்தே
யற்றைநாட் போலென்று மகலாநண் புடனமர்ந்தார்

(இ-ள்.) அவரது வேண்டுகோளுக்குத் திருஞானசம்பந்தப்பிள்ளையார் மனமகிழ்ந்து இசைந்தருளப்பெற்ற திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனர் இது சிவ

பெருமான் திருவருளேயென்று அவ்வுடன்பாட்டைவிரும்பி அவர் அருளிச்செய்யும் திருபதிகங்களின் இசைகளைச் சுருதியையுடைய யாழில் முறைமையாகத் தொடுத்து அந்நாள்போல எந்நாளும் நீங்காத நண்போடு மகிழ்ந்திருந்தார்.—எ-று.

சிரபுரத்தி லமர்ந்தருளுந் திருஞான சம்பந்தர்
பரவுதிருத் தில்லைநடம் பயில்வாரைப் பணிந்தேத்த
விரவியெழும் பெருங்காதல் வெள்ளத்தை யுள்ளத்திற்
றரவிசையுங் குறிப்பறியத் தவமுனிவர்க் கருள்செய்தார்.

(இ-ள்.) சீகாழிப்பதியி லெழுந்தருளியிருக்கின்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார் யாவராலும் துதித்தற்குரிய ஸ்ரீசிதம்பரத்தில் ஆனந்தத்தாண்டவஞ்செய்தருளும் ஸ்ரீநடராசப்பெருமானை வணங்கித் துதிக்கும்படித் தமதுதிருவுள்ளத்தில் கலந்தெழுகின்ற பெரிய ஆசையாகிய வெள்ளத்தைச் (சிவபெருமான்திருவருள்) தோற்றுவிக்க, அதற்குத் தாம் திருவுள்ளமிசைந்த குறிப்பினையறியும்படி தவமுனிவராகிய சிவபாதவிருதயருக்கு அருளிச்செய்தார்.—எ-று. (கசஉ)

பிள்ளையா ரருள்செய்யப் பெருந்தவத்தாற் பெற்றெடுத்த
வள்ளலார் தாமுமுடன் செல்வதற்கு மனங்களிப்ப
வெள்ளிமால் வரையென்னத் திருத்தோணி வீற்றிருந்த
புள்ளிமா னுரியானைத் தொழுதருளாற் புறப்பட்டார்.

(இ-ள்.) (தாம் ஸ்ரீசிதம்பரத்திற் கெழுந்தருளும் குறிப்பினை) திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது தந்தையாருக் கருளிச்செய்ய, மிகுந்த தவத்தைச்செய்து புத்திரராகப்பெற்றெடுத்த சிவபாதவிருதயரும்அவருடன்செல்வதற்குஉடன்பட்டுத் தம் மனத்தில் களிப்படைய, பெரிய வெள்ளிமலையைப்போல விளங்கித் திருத்தோணியென்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளிய புள்ளிகளையுடைய மான்றோலை உடையாகப்போர்த்த தோணியப்பனை வணங்கி அவரது திருவருளைப்பெற்றுத் திருத்தில்லைப்பதிக்கு எழுந்தருளினர்.—எ-று. (கசங)

தாவில்யாழ்ப் பாணரொடுந் தாதையார் தம்மோடு
மேவியசீ ரடியார்கள் புடைவரவெங் குருவேந்தர்
பூவின்மே லயன்போற்றும் புகலியினைக் கடந்துபோய்த்
தேவர்கடம் பெருந்தேவர் திருத்தில்லை வழிச்செல்வார்.

(இ-ள்.) சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார், கெடுதலில்லாத திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனாரும், தந்தையாராகிய சிவபாதவிருதயரும், நிலைபெற்ற சிறப்பினையுடைய அடியார்களும் தம்பக்கத்தில் சூழ்ந்துவர, தாமரைமலரிலுள்ள பிரமனால் பூசிக்கப்பட்ட சீகாழியைக்கடந்து சென்றருளித் தேவர்கள்தேவராகிய ஸ்ரீநடராசப்பெருமானது ஸ்ரீசிதம்பரத்தின்வழியைநோக்கிச் செல்கின்றவராயினர்.—எ-று. (கசச)

வேறு.

கள்ளி ருட்கணின் றுடுவா னுறைபதி நடுவுகண் டனபோற்றி
முள்ளி டைப்புற வெள்ளிதழ்க் கேதகை முகிழ்விரி மணஞ்சூழப்

புள்ளு டைத்தடம் பழனமும் படுகரும் புடைகழித் திடப்போந்து
கொள்ளி டத்திரு நதிக்கரை யடைந்தனர் கவுணியர் குலதீபர்.

(இ-ள்.) சர்வசங்காரகாலமாகிய நடுராத்திரியில் நின்று நிருத்தஞ்செய்த ருளும் சிவபெருமான் வீற்றிருந்தருளியஸ்தலங்கள் இடையிலுள்ளவைகளை வண ங்கித்துதித்து, புறத்தில் இடையிடையே முட்களையுடைய வெள்ளிய இதழ்க ளோடுகூடிய தாழையின்பூவரும்பு விரிந்து மணம்வீச, பறவைகளையுடைய அக ன்றவயல்களும், நீர்நிலைகளும் வழியிடையில் நீங்கச் சென்றருளிச் சிறந்த கொள் ளிடமென்னு நதியின்கரையை யடைந்தார்; கவுணியர்குலத் தலைவராகிய திரு ஞானசம்பந்தப்பிள்ளையார்.—எ-று. (கசரு)

வண்டி னாத்தெழு செழுமலர்ப் பிறங்கலு மணியுமா ரமுமுந்தித்
தண்ட லைப்பல வளத்தொடும் வருபுன ஞழ்ந்துசே வடிதாழத்
தெண்டி ரைக்கடற் பவளமும் பணிலமுஞ் செழுமணித் திரண்முத்துங்
கொண்டி ரட்டியுந் தோதமங் கெதிர்கொளக் கொள்ளிடங் கடந்தேறி.

(இ-ள்.) வண்டுகள் ஆரவாரித்துச் சுழலும் செழியமலர்த்தொகுதிகளையும், முத்துக்களையும், சந்தனத்தையும் வாரிக்கொண்டு சோலையிலுள்ள பலவளங்க ளோடு வருகின்ற கொள்ளிடவெள்ளமானது அடங்கி (திருஞானசம்பந்தப்பிள்ளை யாரது) திருவடிகளைத்தாழவும், தெள்ளிய அலைகளையுடைய கடலினின்றும் வரு கின்ற ஓதமானது பவளத்தையும், சங்குகளையும், செழியஇரத்தினக்கூட்டங்களை யும், முத்துக்களையும் வாரிக்கொண்டு அலைவழியேவீசி, அங்கே தம்மையெதிர்கொ ள்ளவும் கொள்ளிடநதியைக் கடந்தேறி.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கசசு)

பல்கு தொண்டர்தங் குழாத்தொடு முடன்வரும் பயின்மறை யவர்சூழச்
செல்க திப்பயன் காண்பவர் போற்களி சிந்தைகூர் தரக்கண்டு
மல்கு தேவரோ முதலனைத் துயிர்களும் வணங்கவேண் டினவெல்லா
நல்கு தில்லைசூழ் திருவெல்லை பணிந்தனர் ஞானவா ரமுதுண்டார்.

(இ-ள்.) நிறைந்த அடியார் திருக்கூட்டங்களோடும் தம்முடன்வருகின்ற வேதாத்தியயனஞ்செய்யும் பிராமணர்கள் சூழவும், சிவகதிப்பேற்றைத் தமதுகண் களால் காண்பவர்போலத் தமதுதிருவுள்ளத்தில் மகிழ்ச்சியதிகரிக்கப்பார்த்தருளி நிறைந்த தேவர்கள்முதல் எல்லாவுயிர்களும் வணங்க அவரவர்கள்வேண்டிய பொ ருள்களையெல்லாம் வேண்டியவாறே யருள்செய்யும் திருத்தில்லையைச்சூழ்ந்த திரு வெல்லையை வணங்கினர்; சிவஞானமாகிய அரிய திருமுலைப்பாலமுதுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார்.—எ-று.

ஞானவாரமுதுண்டார் கண்டு திருவெல்லைபணிந்தனர் எனக் கூட்டுக. ()

செங்க ணேற்றவர் தில்லையே நோக்கியித் திருந்துல கினிற்கெல்லா
மங்க லந்தரு மழவிளம் போதகம் வருமிரு மருங்கெங்குந்
தங்கு புள்ளொலி வாழ்த்துரை யெடுத்துமுன் ஞமலா மதுவாசப்
பொங்கு செம்முகை கரங்குவித் தலர்முகங் காட்டின புன்றபொய்கை.

(இ-ள்.) சிவந்தகண்களையுடைய இடபத்தைவாகனமாகக்கொண்டருளும் ஸ்ரீநடராசப்பெருமா னெழுந்தருளிய திருத்தில்லையேநோக்கியருளி, இத்திருத்தமாகிய உலகங்களுக்கெல்லாம் சுகத்தைத்தந்தருளும் இளங்களிறாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையா ரெழுந்தருளுகின்ற இரண்டுபக்கங்களிலும் தங்கியிருக்கின்ற பறவைகளின் ஒலியால் மங்கலவாழ்த்துக் கூறி, முன்னே தேன்மணம்வீசுகின்ற செந்தாமரையின் பூவரும்புகளாகிய கைகளைக்குவித்து அத் தாமரைமலர்களாகிய முகங்களைக் காட்டின; நீர்நிறைந்த தடாகங்கள்.—எ-று. (௧௪௮)

கலவ மென்மயி லினங்களித் தழைத்திடக் கடிமணக் குளிர்கால்வந் [ப்ப
துலவி முன்பணிந் தெதிர்கொளக் கிளர்ந்தெழுந் துடன்வருஞ் சுரும்பார்
விலகு செந்தளி ரொளிநிறந் திகழ்தர விருகுழை புடையாட
மலர்மு கம்பொலிந் தசையமென் கொம்பர்நின் றாடுவ மலர்ச்சோலை.

(இ-ள்.) மலர்களையுடைய சோலைகளில் மிருதுவாகிய கலாபத்தையுடைய மயிற்கூட்டங்கள் மகிழ்ந்து அழைக்கவும், வாசனைமிகுந்த குளிர்ந்த தென்றற்காற்றுவந்து உலாவி முன்னேவணங்கி யெதிர்கொள்ளவும், நெருங்கி மேலெழுந்து அத்தென்றலோடுவரும் வண்டுகள் ஆரவாரிக்கவும், விளங்குகின்ற சிவந்த துளிராகிய செவ்வொளிநிறம் விளங்கவும், பெரியகுழைகள் பக்கங்களிலாடவும்,மலராகிய முகம் பொலிவுற்று அசையவும், மெல்லிய பூங்கொம்புகள் ஆடுவனவுமாம்.

குழை=துளிர். (௧௪௯)

இழைத்த டங்கொங்கை யிமயமா மலைக்கொடி யின்னமு தெனஞானங்
குழைத்த ளித்திட வமுதுசெய் தருளிய குருளையார் வரக்கண்டு
மழைத்த மந்தமா ருதத்தினு னறுமலர் வண்ண நுண் டுகடூவித்
தழைத்த பொங்கெழின் முகஞ்செய்து வணங்கின தடம்பணை வயற்சாலி

(இ-ள்.) விசாலமான மருநிலத்திற்பொருந்திய வயல்களிலுள்ள நெற்பயிர்கள் ஆபரணமணிந்த வுயர்ந்த ஸ்தனங்களையுடைய பார்வதிதேவியார் இனியதிருமுலைப்பாலென்று சிவஞானத்தைக்குழைத்து ஊட்டியருளத் திருவமுதுசெய்தருளிய இளஞ்சிங்கத்தையொத்த திருஞானசம்பந்தப்பிள்ளையா ரெழுந்தருளிவர அவரைப்பார்த்து, குளிர்ந்த சிறுதென்றலால் நல்லமணமுள்ள மலர்களையும், அழகிய நுண்ணிய பூந்தாதுகளையுந்தூவி, மிகுந்த அழகினையுடைய செழிய முகமலர்ந்து வணங்கின.—எ-று. (௧௫௦)

ஞால முய்ந்திட ஞானமுண் டவரெழுந் தருளுமந் நலங்கண்டு
சேல லம்புதண் புனற்றடம் படிந்தணை சீதமா ருதம்வீசச்
சால வும்பல கண்பெறும் பயன்பெறுந் தன்மையிற் களிகூர்வ
போல சைந்திரு புடைமிடைந் தாடின புறம்பணை நறும்பூகம்.

(இ-ள்.) மருதநிலத்திலுள்ள வயலின்புறத்தேநிற்கும் நல்ல கமுகமரங்கள் உலகத்தார் நற்கதியடையும் பொருட்டுச் சிவஞானப்பாலமுதுண்டருளியதிருஞானசம்பந்தப் பிள்ளையார் எழுந்தருளிவருகின்ற நலத்தைப் பார்த்து, கெண்டைமீன்கள் கலக்குகின்ற குளிர்ந்த நீரையுடைய தடாகங்களில்படிந்துவருகின்ற

குளிர்ந்த தென்றற்காற்று வீசவும், மிகுந்த பலகண்களைத் தாம் அடைந்த தன்மையால் களிப்புமிக்கனபோல அசைந்து இருபக்கத்திலும் நெருங்கி ஆடின.—எ-று.

கண் = கணு. நறும்பூகம் ஆடினவெனக் கூட்டுக. (கருக)

பவந்த விர்ப்பவர் தில்லைசூ ழெல்லையின் மறையவர் பயில்வேள்விச்
சிவந்த ரும்பய னுடையவா குதிகளின் செழும்புகைப் பரப்பாலே
தவந்த ழைப்பவந் தருளிய பிள்ளையார் தாமணை வுறமுன்னே
நிவந்த நீலநுண் டுகில்விதா னித்தது போன்றது நெடுவானம்.

(இ-ள்.) தம்மையடைந்த ஆன்மாக்களின் பிறவித்துன்பத்தை நீக்கியருளும் ஸ்ரீநடராசப்பெருமானது திருத்தில்லையைச்சூழ்ந்த எல்லையில்வாழும் பிராமணர்கள் செய்கின்ற யாகத்தில்பெய்த நன்மையைத்தரும் பயன்களையுடைய நெய் முதலிய ஆகுதியிலுண்டாகும் செழிய புகையின் மிகுதியினால் தவநெறிகள் தழைத்தோங்கும்படிவந்து அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளுநிமித்தம் பெரிய ஆகாயமானது முற்பட்டு உயர்ந்த நீலநிறமாகிய நுண்ணிய வஸ்திரத்தை விதானஞ்செய்த தன்மைபோன்றிருந்தது.—எ-று.

விதானம் = மேற்கட்டி. (கரு௨)

கரும்பு செந்நெல்பைங் கமுகொடு கலந்துயர் கழனியம் பணைநீங்கி
யரும்பு மென்மலர் தளிர்பல மூலமென் றனைத்தினு கரமான
மருங்கி னந்தன வனம்பணிந் தணைந்தனர் மாடமா ளிகையோங்கி
நெருங்கு தில்லைசூழ் நெடுமதிற் றென்றிரு வாயினே ரணித்தாக.

(இ-ள்.) கரும்புகளும், செந்நெற்பயிரும் பசிய கமுகமரங்களோடு கலந்து உயர்ந்திருக்கின்ற வயல்களையுடையமருதநிலத்தைக்கடந்து, அரும்புகளும்- மெல்லியமலர்களும்-தளிர்களும்-பழங்களும் - கிழங்குகளும் என்று சொல்லப்பட்ட எல்லாப்பொருள்களுக்கும் பிறப்பிடமான பக்கத்திலுள்ள திருநந்தன வனத்தைப் பணிந்து, மாடங்களும் - மாளிகைகளும் உயர்ந்துநெருங்கிய திருத்தில்லையைச் சூழ்ந்த நெடிய மதிலின் தென்திசைத் திருவாயிலின்நேரே சமீபமாக எழுந்தருளினார்; (திருஞானசம்பந்தப்பிள்ளையார்).—எ-று. (கருங)

பொங்கு கொங்கையிற் கறந்தமெய்ஞ் ஞானமாம் போனகம் பொற்குன்ற
மங்கை செங்கையா லூட்டவுண் டருளிய மதலையார் வந்தாரென்
றங்கண் வாழ்பெருந் திருத்தில்லை யந்தண ரன்பர்க ளுடனீண்டி
யெங்கு மங்கல வணிமிக வலங்கரித் தெதிர்கொள வணைவார்கள்.

(இ-ள்.) பூரித்த தமது கொங்கையினின்றுங் கறந்த மெய்ஞ்ஞானமாகிய அமுதத்தைப் பர்வதராஜபுத்திரியாகிய உமாதேவியார் தமது சிவந்த திருக்கரங்களால்ஊட்ட அமுதுசெய்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளினாரென்று அவ்விடத்துவாழ்கின்ற பெருமைபொருந்திய தில்லைவாழந்தணர்கள் சிவனடியார்களோடு கூடி ஸ்ரீசிதம்பரமுழுமையும் மங்கலகரமான அழகு மிகும்படி அலங்காரஞ்செய்து, அவரை எதிர்கொள்ள வருபவர்களானார்கள்.—எ-று. ()

வேத நாதமு மங்கல முழக்கமும் விசும்பிடை நிறைந்தோங்கச்
சீத வாசநீர் நிறைகுடந் தீபங்க டிசையெலா நிறைந்தாரச்
சோதி மாமணி வாயிலின் புறஞ்சென்று சோபன வாக்கமுஞ் சொல்லிக்
கோதி லாதவர் ஞானசம் பந்தனை யெதிர்கொண்டு கொடுபுக்கார்.

(இ-ள்.) வேதபாராயணவோசையும், மங்கலகரமானவோசையும் ஆகாயத்தில் நிறைந்து ஓங்கவும், குளிர்ந்த நறுமணங்கமழும் நீர்நிறைந்த கும்பங்களும்- தீபங்களும்- திக்குகளெல்லாம் நிறைந்திருக்கவும், ஒளிபொருந்திய பெரிய இரத்தினங்களழுத்திய தென்மதில் திருவாயிலின் புறத்திற்சென்று மங்கலகரமான ஆசீர்வசனங்களைச்சொல்லிக் குற்றமற்ற அத்தில்லைவாழந்தணர்கள் திருஞானசம்பந்தப்பிள்ளையாரை எதிர்கொண்டு அழைத்துப்போனார்கள்.—எ-று. (கருரு)

செல்வ மல்கிய தில்லைமூ தூரினிற் றென்றிசைத் திருவாயி
லெல்லை நீங்கியுள் புகுந்திரு மருங்குநின் றெடுக்குமேத் தொலிசூழ
மல்ல லாவண மறுகிடைக் கழிந்துபோய் மறையவர்நிறைவாழ்க்கைத்
தொல்லை மாளிகை நிரைத்திரு வீதியைத் தொழுதணைந் தனர் தூயோர்.

(இ-ள்) பலவகைச்செல்வங்களும் நிறைந்த பழைமையாகிய ஸ்ரீ சிதம்பரத்தின் தென்திசையிலுள்ள திருவாயிலின் எல்லையைக்கடந்து உள்ளேபுகுந்து, இருபக்கங்களிலும் பிராமணர் முதலானவர்கள் நின்றுகூறும் வாழ்த்தொலிசூழவும், வளப்பம்பொருந்திய ஆவணவீதியைக்கடந்து சென்று, தில்லைவாழந்தணர்கள் நிறைந்துவாழ்கின்ற பழையதிருமாளிகை வரிசையோடுகூடிய திருவீதியைத் திருஞானசம்பந்தப்பிள்ளையார் வணங்கிச்சென்றருளினார்.—எ-று. (கருசு)

மலர்ந்த பேரொளி குளிர்தரச் சிவமணங் கமழ்ந்துவான் றுகண்மாறிச்
சிலம்ப லம்புசே வடியவர் பயில்வுறுஞ் செம்மையாற் றிருத்தொண்டு
கலந்த வன்பர்தஞ் சிந்தையிற் றிகழ்திரு வீதிகண் களிசெய்யப்
பலன்கொண் மைந்தனு ரெழுநிலைக் கோபுரம் பணிந்தெழுந் தனர்போற்றி

(இ-ள்.) மிகுந்த பேரொளியானது குளிர்ச்சியைத்தரச் சிவமணம் வீசிக்குற்றத்தினின்று நீங்கியும், வேதமாகிய சிலம்புகள்சப்திக்கின்ற சிவந்த திருவடியையுடைய ஸ்ரீ நடராசப்பெருமான் பொருந்தியிருக்குந் தன்மையினாலும், திருத்தொண்டுடன்கூடிய அடியார்களது திருவுள்ளத்தையொத்த திருவீதிகள் தமது திருக்கண்களுக்குப் பேரானந்தத்தை விளைவிக்க, உண்மைப்பயனைக்கொண்ட திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுநிலைக்கோபுரத்தைத் துதித்துவணங்கியெழுந்தார்.—எ-று. (கருஎ)

நீடு நீணிலைக் கோபுரத் துட்புக்கு நிலவிய திருமுன்றின்
மாடு செம்பொனின் மாளிகை வலங்கொண்டு வானுற வளர்திங்கள்
சூடு கின்றபே ரம்பலந் தொழுதுபோந் தருமறை தொடர்ந்தேத்த
ஆடு கின்றவர் முன்புற வணைந்தன ரணிகிளர் மணிவாயில்.

(இ-ள்.) உயர்ந்து நீண்ட நிலைகளையுடைய திருக்கோபுரத்தினுள்ளே புகுந்தருளி விளங்குகின்ற திருமுற்றத்தினருகே செம்பொன்னாலாகிய திருமாளிகை

யைப் பிரதக்ஷணஞ்செய்து, விண்ணுலகைப் பொருந்த வளர்கின்ற சந்திரனை யணிந்த பேரம்பலத்தை வணங்கிச் சென்றருளி, அரிய வேதங்கள் பின்தொடர்ந்து துதிக்கும்படி ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளும் ஸ்ரீநடராசப்பெருமான் சந்நிதியில் அழகாக விளங்குந் திருவணுக்கன் றிருவாயிலை யடைந்தருளினர்.

திருவணுக்கன் றிருவாயில் என்பது, ஸ்ரீநடராசப்பெருமான் சந்நிதியின் சமீபத்திலிருக்குந் திருவாயில் என வறிக. (௧௫௮)

நந்தி யெம்பிரான் முதற்கண நாதர்க ணலங்கொள்பன் முறைகூட
அந்தமில்லவ ரணுகிமுன் னெருமுதிரு வணுக்கனந் திருவாயில்
சிந்தை யார்வமும் பெருகிடச் சென்னியிற் சிறுச்செய்ய கையேற
வுய்ந்து வாழ்திரு நயனங்கள் களிகொள வுருகுமன் பொடுபுக்கார்.

(இ-ள்.) திருநந்திதேவர் முதலிய சிவகணநாதர்கள் நன்மை மிகுந்த பல வரிசைகளாய்க் கூடிநிற்கவும், அளவில்லாத அடியார்கூட்டங்கள் நெருங்கி முன்னின்று வணங்குகின்ற திருவணுக்கன் றிருவாயிலில், தமது மனதில் அன்பு அதிகரிக்கவும், சிரசில் சிறிதாகிய சிவந்த திருக்கரங்கள் குவிந்து ஏறவும், சிவபெருமானைத்தரிசித்து மகிழ்ந்து வாழ்கின்ற திருவிழிகள் களிப்படையவும் அதிகரிக்கின்ற அன்புடன் புகுந்தருளினர்.—எ-று. (௧௫௯)

அண்ண லார்தமக் களித்தமெய்ஞ் ஞானமே யானவம் பலமுந்தம்
முண்ணி றைந்தஞா னத்தெழு மானந்த வொருபெருந் தனிக்கூத்துங்
கண்ணின் முன்புறக் கண்டுகும் பிட்டெழுங் களிப்பொடுங் கடற்காழிப்
புண்ணி யக்கொழுந் தனையவர் போற்றுவார் புனிதராடிய பொற்பு.

(இ-ள்.) சிவபெருமான் தமக்கு அளித்தருளிய மெய்ஞ்ஞானமே திருவுருவமாகிய திருவம்பலத்தையும், தமது திருவுள்ளத்தில் நிறைந்த திருவருள்ஞானத்தினால் உண்டாகின்ற சிவானந்தரூபமான ஒப்பற்ற பெரிய திருநடனத்தையும் தமது திருக்கண்களால் பிரத்தியக்ஷத்தில் தரிசித்து வணங்கி, அதனா லுண்டாகின்ற பேரானந்தத்தோடும் கடல்சூழ்ந்த சீகாழிப்பதியில் அவதரித்தருளிய சிவபுண்ணியமாகிய தருவின் கொழுந்தையொத்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிவபெருமான் திருநடனஞ் செய்தருளும் பொலிவைத் துதிப்பாராயினர்.—எ-று.

சிவஞானமும், அச் சிவஞானத்தினா லுண்டாகிய சிவாநந்தமுமே திருவம்பலமும், ஸ்ரீநடராசப்பெருமான் செய்தருளும் திருக்கூத்துமா மென்பார் 'மெய்ஞ்ஞானமேயானவம்பலமுந்தம்-முண்ணிறைந்தஞானத்தெழு மானந்த வொருபெருந்தனிக்கூத்தும்' என்று கூறினர். (௧௬௦)

உணர்வி னேர்பெற வருஞ்சிவ போகத்தை யொழிவின்றி யுருவின்க
ணணையு மைம்பொறி யளவினு மெளிவர வருளினை யெனப்போற்றி [ற்
றிணையில் வண்பெருங் கருணையே யேத்திமுன் னெடுத்தசொற் பதிகத்தி
புணரு மின்னிசை பாடின ராடினர் பொழிந்தனர் விழிமாரி.

(இ-ள்.) மெய்யுணர்ச்சிவாயிலாய்ப் பொருந்தவருகின்ற சிவபோகத்தை நீக்கமின்றி உடம்பிற்பொருந்திய கண்முதலிய ஐம்பொறியளவிற்கும் எளிதாக உணரும்வண்ணம் அருள்செய்தனையென்று துதித்து, (ஸ்ரீநடராசப்பெருமானது) ஒப்பற்ற வளம்பொருந்திய பேருளையே துதித்து, முன் எடுத்தருளிய திருப்பதி

கத்தைப் பொருந்த இனிய இசையோடு பாடியருளினார்; தமது திருக்கண்களி னின்றும் ஆனந்தபாஷ்பஞ் சொரிந்தருளினார்.—எ-று. (கசக)

வேறு.

ஊழி முதல்வர்க் குரிமைத் தொழிற் சிறப்பால்
வாழிதிருத் தில்லைவா ழந்தணரை முன்வைத்தே
யேழிசையு மோங்க வெடுத்தா ரெமையாளுங்
காழியர்தங் காவலனார் கற்றாங் கெரியோம்பி.

(இ-ள்.) ஊழிக்காலத்து மழியாத முதற்பெருங் கடவுளாகிய ஸ்ரீநடரா சப்பெருமானுக்கு உரிமையாகிய பணிவிடைகளைச் செய்யுஞ் சிறப்பினால் சிவாநந் தப் பெருவாழ்வையுடைய தில்லைவாழந்தணர்களைத் திருப்பதிகத்தின் முதலிரண் டடியிற் சிறப்பித்து, எம்மை யடிமையாகக் கொண்டருளிய சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் "கற்றாங்கெரியோம்பி" என்னு முதலையுடைய திருப்பதிகத்தை ஏழிசைகளும் நிரம்பும்படிப் பாடியருளினார்.—எ-று. (கசஉ)

---

கோயில் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

கற்றாங்கெரியோம்பிக்கலியைவாராமே
செற்றார்வாழ்தில்லைச்சிற்றம்பலமேய
முற்றாவெண்டிங்கண்முதல்வன்பாதமே
பற்றாநின்றாரைப்பற்றாபாவமே.

பறப்பைபடுத்தெங்கும்பசுவேட்டெரியோம்புஞ்
சிறப்பர்வாழ்தில்லைச்சிற்றம்பலமேய
பிறப்பில்பெருமானைப்பின்றாழ்சடையானை
மறப்பிலார்கண்டீர்மையறீர்வாரே.

ஞாலத்துயர்காழிஞானசம்பந்தன்
சீலத்தார்கொள்கைச்சிற்றம்பலமேய
சூலப்படையானைச்சொன்னதமிழ்மாலை
கோலத்தாற்பாடவல்லார்நல்லாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - சபாநாதர், தேவியார் - சிவகாமியம்மை.

மூலத்தானமூர்த்திகள் பெயர் - திருமூலநாதர், தேவியார் - உமையம்மை.

---

பண்ணார் பதிகத் திருக்கடைக்காப் புப்பரவி
யுண்ணாடு மென்பு முயிருங் கரைந்துருக்கும்
விண்ணா யகன்கூத்து வெள்ளவெளி யேதிளைத்துக்
கண்ணா ரமுதுண்டார் காலம் பெறவழுதார்.

(இ-ள்.) பண்ணமைந்த திருப்பதிகத்தின் திருக்கடைக்காப்பை யருளிச் செய்து, உள்ளே யமைந்த எலும்பு முயிருங் கரைந்துருகச்செய்யும் தேவர்கள்

நாயகராகிய ஸ்ரீநடராசப்பெருமானது ஆநந்தத்தாண்டவத்தைத் திருவம்பலத்தில் தரிசித்துத் தமதுதிருக்கண்களால் நிறைந்த சிவாநந்தவமிர்தத்தை யுண்டருளினார்; உலகுயிர்கள் நன்மையடைதற்குரிய பரிபாககாலம்வந்த காரணத்தினால் (அம்மே! அப்பா! வென்று கூறி) அழுதருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார்.

முன்மா லயனறியா மூர்த்தியார் முன்னின்று
சொன்மாலை யாற்கால மெல்லாந் துதித்திறைஞ்சிப்
பன்மா மறைவெள்ளஞ் சூழ்ந்து பரவுகின்ற
பொன்மா ளிகையைவலங் கொண்டு புறம்போந்தார்.

(இ-ள்.) முன்னம் திருமாலும் பிரமனும் (பன்றியாகவும் அன்னமாகவும் உருவங்கொண்டு அடியையு முடியையுந்) தேடி யறியாத ஸ்ரீநடராசப்பெருமான் சந்நிதியில் நின்று, திருப்பதிக மாலையால் பூசாகாலங்கள்தோறும் துதித்து வணங்கி, பெருமைபொருந்திய எல்லா வேதங்களுஞ் சூழ்ந்து துதிக்கின்ற கனகசபையைப் பிரதக்ஷணஞ்செய்துகொண்டு புறத்தில் எழுந்தருளினார்.—எ-று. (சுசு)

செல்வத் திருமுன்றிற் றாழ்ந்தெழுந்து தேவர்குழா
மல்குந் திருவாயில் வந்திறைஞ்சி மாதவங்கள்
நல்குந் திருவீதி நான்குந் தொழுதங்க
ணல்குந் திறமஞ்சு வார்சண்பை யாண்டகையார்.

(இ-ள்.) திருவருட் செல்வம் நிறைந்த திருமுற்றத்தைப் பணிந்தெழுந்து, தேவர்கூட்டங்கள் நிறைந்த திருவாயிலை வணங்கி, (அடைந்தவர்களுக்கு) மகத்தாகிய தவங்களைத்தந்தருளும் நான்குதிருவீதிகளையும் வணங்கி அவ்விடத்தில் வசித்தருளுவதற்கு அஞ்சுகின்றவரானார்; சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார்.—எ-று. (சுரு)

செய்ய சடையார் திருவேட் களஞ்சென்று
கைதொழுது சொற்பதிகம் பாடிக் கழுமலக்கோன்
வைகி யருளுமிட மங்காக மன்றாடு
மையன் றிருக்கூத்துக் கும்பிட் டணைவுறுநாள்.

(இ-ள்.) சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருவேட்கள மென்னும் ஸ்தலத்தையடைந்து, திருக்கரங்களைக் கூப்பி வணங்கி, இனிய சொற்களை யுடைய திருப்பதிகம் பாடியருளி, தாம் வசித்தருளுமிடம் அத் தலமாகக்கொண்டு, கனகசபையில் ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளும் ஸ்ரீநடராசப்பெருமானுடைய திருநடனத்தை வணங்கிவரும் நாட்களில்.—எ-று.

கைம்மான் மறியார் கழிப்பாலை யுள்ளணைந்து
மெய்ம்மாலைச் சொற்பதிகம் பாடி விரைக்கொன்றைச்
செம்மாலை வேணித் திருவுச்சி மேவியுறை
யம்மானைக் கும்பிட் டருந்தமிழும் பாடினார்.

(இ-ள்.) திருக்கரத்தில் மான்கன்றை யேந்திய பால்வண்ணநாதர் எழுந்தருளிய திருக்கழிப்பாலையென்னும் ஸ்தலத்தை யடைந்தருளி, மெய்ம்மை நிறைந்த இனிய சொற்களையுடைய திருப்பதிகமாலையை யருளிச்செய்து, வாசனைபொருந்திய கொன்றைமலரா லாகிய மாலையைச் சிவந்த சடைமுடியில் தரித்தருளிய

திருவுச்சி யென்னுமாலயத்தில் வீற்றிருந்தருளும் உச்சேசராவணங்கி அரிய திருப்பதிகம் பாடியருளினார்; (திருஞானசம்பந்தப்பிள்ளையார்)—எ-று. (கசுஎ)

பாடும் பதிகமிசை யாழ்ப்பாண ரும்பயிற்றி
நாடுஞ் சிறப்பெய்த நாளுநடம் போற்றுவார்
நீடுந் திருத்தில்லை யந்தணர்க ணீண்மன்று
ளாடுங் கழற்கணுக்க ராம்பே றதிசயிப்பார்.

(இ-ள்.) தாம் அருளிச்செய்கின்ற திருப்பதிகங்களின் இசையைத் திருநீலகண்டயாழ்ப்பாணநாயனாரும் யாழிலமைத்துவாசித்து யாவராலும் துதிக்கத்தக்க சிறப்பினையடைய, நாள்தோறும் திருநடனத்தைத் துதிக்குங் கருத்தினையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிறப்புமிகுந்த தில்லைவாழந்தணர்கள் உயர்ந்த கனகசபையில் திருநடனஞ்செய்தருளும் (ஸ்ரீநடராசப்பெருமானது) திருவடிகளுக்கு அணுக்கராயிருக்கும்பேற்றினை (திருவுள்ளத்திற்கருதி) அதிசயமடையவராயினார்.

ஆங்கவர்தஞ் சீலத் தளவின் மையுநினைந்தே
யோங்கி யெழுங்காத லொழியாத வுள்ளத்தார்
தேங்கமழுஞ் சோலைத் திருவேட் களங்கடந்து
பூங்கிடங்கு சூழ்புலியூர்ப் புக்கணையும் போழ்தின்கண்.

(இ-ள்.) அங்குவசிக்கும் அத்தில்லை வாழந்தணர்களது நல்லொழுக்கத்தின் மிகுதியையுந் திருவுள்ளத்திற்கருதி, அதிகரித்தெழுகின்ற பெருவிருப்பானது நீங்காத திருவுள்ளத்தையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையார் தேன்மணம்வீசுகின்றசோலைகள்சூழ்ந்த திருவேட்களத்தினின்றும் நீங்கி, மலர்கள்நிறைந்த அகழ்சூழ்ந்த ஸ்ரீ சிதம்பரத்தை யடைந்தருளும்பொழுது.—எ-று.

இது முதலிரண்டு பாடலுங் குளகம். (கசுஅ)

அண்டத் திறைவ ரருளா லணிதில்லை
முண்டத் திருநீற்று மூவா யிரவர்களுந்
தொண்டத் தகைமைக் கணநாத ராய்த்தோன்றக்
கண்டப் பரிசுபெரும் பாணர்க்குங் காட்டினார்.

(இ-ள்.) சர்வ அண்டங்களுக்குந் தலைவராகிய சிவபெருமானது திருவருளினால் அழகிய ஸ்ரீ சிதம்பரத்தில் வாழும் திருநீற்றுப்புண்டரமணிந்த தில்லைமூவாயிரவர்களும் திருத்தொண்டுசெய்யுந் தன்மையையுடைய சிவகணநாதராய்த் தோன்றக்கண்டு, அத்தன்மையைத் திருநீலகண்டப்பெரும்பாணநாயனாருக்குங் காட்டியருளினார்.—எ-று. (கஎ0)

செல்வம் பிறிவறியாத் தில்லைவா ழந்தணரு
மெல்லையில்சீர்ச் சண்பை யிளவே றெழுந்தருளி
யொல்லை யிறைஞ்சாமுன் றாமு மூடனிறைஞ்சி
மல்ல லணிவீதி மருங்கணைய வந்தார்கள்.

(இ-ள்.) திருவருட்செல்வத்தினின்றும் நீங்காத தில்லைவாழந்தணர்களும், அளவற்ற சிறப்பினையுடைய சீகாழிப்பதியில் அவதரித்தருளிய இளஞ்சிங்கம் போன்ற திருஞானசம்பந்தப்பிள்ளையா ரெழுந்தருளி விரைந்து வணங்குவதற்கு முன்னே தாங்களுமுடனே வணங்கி, வளப்பம்பொருந்திய அழகிய திருவீதியில் அவர் இருபக்கத்திலும் சூழவந்தார்கள்.—எ-று. (கஎக)

பொங்கியெழுங் காதல் புலனுகப் பூசுரர்தஞ்
சிங்க மனையார் திருமுடியின் மேற்குவித்துப்
பங்கயத்தின் செவ்வி பழித்து வனப்போங்குஞ்
செங்கையொடுஞ் சென்று திருவாயி லுட்புக்கார்.

(இ-ள்.) அதிகரித்தெழுகின்ற விருப்பமே வழியாக, பிராமணர் குலச்சிங்கம்போன்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது திருமுடியின்மேற் குவிக்கப்பட்டுத்தாமரையின் பொலிவைப்பழித்து அழகுமிகுந்த திருக்கரங்களோடு மெழுந்தருளித்திருக்கோபுரத்தின் திருவாயிலினுள்ளே புகுந்தருளினுர்.—எ-று. (கஎஉ)

ஒன்றிய சிந்தை யுருக வுயர்மேருக்
குன்றனைய பேரம் பலமருங்கு கும்பிட்டு
மன்று ணிறைந்தாடு மாணிக்கக் கூத்தரெதிர்
சென்றணைந்து தாழ்ந்தார் திருக்களிற் றுப்படிக்கீழ்.

(இ-ள்.) ஒருமைப்பட்ட தமது திருவுள்ள முருகும்படி உயர்ந்த மேருமலையையொத்த பேரம்பலத்தையருகில்வணங்கி, கனகசபையில் நிறைந்து ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளும் மாணிக்கம்போன்ற ஸ்ரீநடராசப்பெருமான் சந்நிதியில் சென்றருளித் திருக்களிற்றுப் படியின் கீழேவிழுந்து வணங்கியருளினுர்; (திருஞானசம்பந்தப் பிள்ளையார்)—எ-று. (கஎங)

வேறு.

ஆடி னுய்நறு நெய்யொடு பாறயி ரென்றெடுத் தார்வத்தாற்
பாடி னூர்பின்னு மப்பதி கத்தினிற் பரவிய பாடலொன்றி
னீடு வாழ்தில்லை நான்மறை யோர்தமைக் கண்டவந் நிலையெல்லாங்
கூடு மாறுகோத் தவர்தொழு தேத்துசிற் றம்பல மெனக்கூறி.

(இ-ள்.) "ஆடினுய் நறு நெய்யோடு பாறயிர்" என்று முதலில் எடுத்து அன்போடு திருப்பதிகத்தைப் பாடியருளிப் பின்னும் அத்திருப்பதிகத்தில் கட்டளையிட்டருளிய ஒரு திருப்பாசுரத்தில், சிறப்பாக வாழ்கின்ற தில்லைவாழந்தணர்களைச் சிவகணநாதராகத் தாம் பார்த்தருளிய அவ்வுடையாளங்களை யெல்லாம் பொருந்தவைத்து, அத்தகைய தில்லைவாழந்தணர்கள் வணங்கித் துதிக்கும் சிற்றம்பலம் என்று திருவாய்மலர்ந்தருளி.—எ-று.

இது முதலிரண்டு பாடலுங் குளகம் (கஎச)

---

கோயில் - பண் - காந்தார பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

ஆடினுய்நறுநெய்யொடுபாறயிரந்தணர்பிரியாதசிற்றம்பல
நாடினுயிடமாநறுங்கொன்றைநயந்தவனே
பாடினுய்மறையோடுபல்கீதமும்பல்சடைப்பனிகால்கதிர்வெண்டிங்கள்
சூடினுயருளாய்சுருங்கவெமதொல்வினையே.

நீலத்தார்கரியமிடற்றூர்நல்லநெற்றிமேலுறைகண்ணினுர்பற்று
சூலத்தார்சுடலைப்பொடிநீறணிவார்சடையார்

சீலத்தார்தொழுதேத்துசிற்றம்பலஞ்சேர்தலாற்கழற்சேவடிகைதொழக்
கோலத்தாயருளாயுனகாரணங்கூறுதுமே.

நாறுபூம்பொழினண்ணியகாழியுண்மறைவல்லஞானசம்பந்தன்
ஊறுமின்றமிழாலுயர்ந்தாருறைதில்லைதன்னு
ளேறுதொல்புகழேந்துசிற்றம்பலத்தீசனையிசையாற்சொன்னபத்திவை
கூறுமாறுவல்லாருயர்ந்தாரொடுங்கூடுவரே.

திருச்சிற்றம்பலம்.

---

இன்ன தன்மையி லின்னிசைப் பதிகமுந் திருக்கடைக் காப்பேத்தி
மன்னு மானந்த வெள்ளத்திற் றிளைத்தெதிர் வந்துமுன் னின்றாடும்
பின்னு வார்சடைக் கூத்தர்பே ரருள்பெறப் பிரியாத விடைபெற்றுப்
பொன்னினம்பலஞ்சூழ்ந்துதாழ்ந்தெழுந்துபோந்தணைந்தனர்புறமுன்றில்

(இ-ள்.) இத்தன்மையாகிய இனிய இசையையுடைய திருப்பதிகத்தை யும் திருக்கடைக் காப்பையும் அருளிச்செய்து, நிலைபெற்ற பேரானந்த வெள்ளத்திற்படிந்து, பிரத்தியக்ஷமாக எதிரே நின்று ஆனந்தத் தாண்டவஞ்செய்தருளும் பின்னலாகிய நீண்ட சடைமுடியையுடைய ஸ்ரீநடராசப்பெருமானது பேரருளைப் பெற்ற காரணத்தினால், அவரிடத்தினின்றும் பிரியா விடைபெற்றுக் கனகசபையைப் பிரதக்ஷணஞ்செய்து நமஸ்கரித்தெழுந்து திருமுற்றத்தின் புறத்தில் அடைந்தருளினார்.—எ-று. (௬௭௫)

அப்பு றத்திடை வணங்கியங் கருளுட னணிமணித் திருவாயில்
பொற்பு றத்தொழு தெழுந்துடன் போதரப் போற்றிய புகழ்ப்பாணர்
நற்ப தந்தொழு தடியனேன் பதிமுத னதிநிவாக் கரைமேய
வொப்பி றானங்கள் பணிந்திட வேண்டுமென் றுரைசெய வதுநேர்வார்.

(இ-ள்.) அவ்விடத்தினின்றும் வணங்கி அங்கே சிவபெருமான் திருவருளோடும் அழகிய மணிகளிழைத்த திருவணுக்கன்றிருவாயிலை நன்றாகவணங்கி யெழுந்து திருநீலகண்டயாழ்ப்பாணநாயனாருடன் கோயிலுள்புறத்தே யெழுந்தருள, தம்மைத் துதிக்கின்ற புகழையுடைய திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனார் திருஞானசம்பந்தப்பிள்ளையாரது சிறந்த திருவடிகளை வணங்கி அடியேனுடைய ஜனனக்ஷேத்திரமாகிய திருவெருக்கத்தம்புலியூர் முதலாக நிவாவென்னு நதிக்கரையிற் பொருந்திய ஒப்பற்ற பலக்ஷேத்திரங்களையும் தேவரீர் வணங்கி யருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, அதற்கு உடன்பட்டவரானார்.—எ-று.

நிவாநதி யென்பது இக்காலத்து வடவெள்ளாறு என வழங்குகின்றது. ()

பொங்கு தெண்டிரைப் புனிதநீர் நிவாக்கரைக் குடதிசை மிசைப்போந்து
தங்கு தந்தையா ருடன்பரி சனங்களுந் தவமுனி வருஞ்செல்லச்
செங்கை யாழ்த்திரு நீலகண் டப்பெரும் பாணனா ருடன்சேர
மங்கை யார்புகழ் மதங்கசூ ளாமணி யாருடன் வரவந்தார்.

(இ-ள்.) பொங்குகின்ற தெள்ளிய அலைகள்பொருந்திய பரிசுத்தமான நீரையுடைய நிவாநதிக்கரையின் மேற்றிசையில் எழுந்தருளி, தம்மைவிட்டு நீங்காத தந்தையாராகிய சிவபாத விருதயரோடு அடியார் திருக்கூட்டமும், தவத்தையு

டைய முனிவர்கூட்டங்களுஞ் சூழ்ந்துவர, செவ்வியகையில் யாழையேந்திய திருநீலகண்டப்பெரும்பாணநாயனரோடு மங்கையர்கள் புகழும் மதங்கசூளாமணியாரு முடன்வர,எழுந்தருளிவந்தார்; (திருஞானசம்பந்தப்பிள்ளையார்.)-எ-று. (கஎஎ)

இருந்த டங்களும் பழனமுங் கடந்துபோ யெருக்கத்தம் புலியூரின்
மருங்கு சென்றுற நீலகண் டப்பெரும் பாணனர் வணங்கிக்கார்
நெருங்கு சோலைசூ ழிப்பதி யடியனேன் பதியென நெடிதின்புற்
றருங்க லைச்சிறு மழவிளங் களிறனு ரங்கணைந் தருள்செய்வார்.

(இ-ள்.) பெரிய தடாகங்களையும் வயல்களையுங் கடந்துசென்று திருவெருக்கத்தம்புலியூரென்னும் ஸ்தலத்திற்குச்சமீபமாகச் செல்லவும், அப்பொழுது திருநீலகண்டயாழ்ப்பாணநாயனர் வணங்கி மேகங்கள் நெருங்கிய சோலைசூழ்ந்த இத்திருவெருக்கத்தம்புலியூர் அடியேனுடைய ஜனன க்ஷேத்திரமென்று சொல்ல, அரிய வேதாகமப்பொருள்களை ஓதாதுணர்ந்த சிறிய இளங்களிற்றையொத்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் மிக்கமகிழ்ச்சியடைந்து அத்தலத்தை யடைந்தருளி (திருநீலகண்டயாழ்ப்பாணநாயனரை நோக்கி) அருள்செய்வாராயினர்-.எ-று.

களிறு=யானை. (கஎஅ)

ஐயர் நீரவ தரித்திட விப்பதி யளவின்மா தவமுன்பு
செய்த வாறெனச் சிறப்புரைத் தருளியச் செழும்பதி யிடங்கொண்ட
மைகொள் கண்டர்தங் கோயிலி னுட்புக்கு வலங்கொண்டு வணங்கிப்பா
ருய்ய வந்தவர் செழுந்தமிழ்ப் பதிகமங் கிசையுட னுரைசெய்தார்.

(இ-ள்.) ஐயரோ! நீர் திருவவதாரஞ்செய்வதற்கு இத்திருவெருக்கத்தம்புலியூர் அளவில்லாத மகத்தாகியதவத்தை முன்புசெய்தமை நன்றாயிருந்ததென்று அந்த ஸ்தலத்தின் சிறப்பினைப்புகழ்ந்து, செழுமைபொருந்திய அந்தஸ்தலத்தை யிடமாகக்கொண்டருளிய காளகண்டத்தையுடைய சிவபெருமானது திருக்கோயிலினுள்ளேபுகுந்து பிரதக்ஷணஞ்செய்து,செழிய தமிழ்ப்பதிகத்தை இசையுடன் அருளிச்செய்தார்; உலகங்களெல்லா மீடேறும்படி அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார்.—எ-று. (கஎகூ)

அங்கு நின்றெழுந் தருளிமற் றவருட னம்பொன்மா மலைவல்லி
பங்கர் தாமினி துறையுநற் பதிபல பரிவொடும் பணிந்தேத்தித் [ந்தர்
துங்க வண்டமிழ்த் தொடைமலர் பாடிப்போய்த் தொல்லைவெங் குருவே
செங்க ணேற்றவர் திருமுது குன்றினைச் சென்றெதி ரணைகின்றார்.

(இ-ள்.) பழையசீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அத்திருநீலகண்டயாழ்ப்பாணநாயனரோடு திருவெருக்கத்தம்புலியூரினின்று மெழுந்தருளி, அழகிய பர்வதராஜ புத்திரியாகிய உமாதேவியாரை யிடப்பாகத்திலுடைய சிவபெருமான் இனிது வீற்றிருந்தருளும் சிறப்புப்பொருந்திய பல க்ஷேத்திரங்களை அன்போடுவணங்கித் துதித்து, மிக்க வளப்பம்பொருந்திய தமிழ்ச்சொற்களாகிய மலரால் தொடுத்த திருப்பதிகமாலைகளை அருளிச்செய்து போய், சிவந்த கண்களையுடைய இடபத்தை வாகனமாகக்கொண்ட சிவபெருமான் வீற்றிருந்தருளும் ஸ்ரீவிருத்தாசலத்தைக் குறித்துச்சென்று, அங்கு எழுந்தருளுகின்றவரானார்.—எ-று. (கஅ௦)

மொய்கொண் மாமணி கொழித்துமுத் தாறுசூழ் முதுகுன்றை யடைவோமென், றெய்து சொன்மலர் மாலைவண் பதிகத்தை யிசையொடும் புனைந்தேத்திச், செய்த வத்திரு முனிவருந் தேவருந் திசையெலா நெருங்கப்புக், கையர் சேவடி பணியுமப் பொருப்பினி லாதர வுடன் சென்றார்.

(இ-ள்.) கூட்டமாகிய பெரிய முத்துகளைக்கொழித்து மணிமுத்தாநதி சூழ்ந்த திருமுதுகுன்றை யடைவோமென்று, நன்மைபொருந்திய சொன் மலராகிய வளவிய திருப்பதிகமாலையை இசையுடனே அருளிச்செய்து துதித்து,அருமையாகச் செய்த தவத்தையுடைய சிறந்த முனிவர்களும் தேவர்களும் எல்லாத் திசைகளிலும் நெருங்கப் புகுந்து பழமலைநாதரது திருவடிகளை வணங்குகின்ற அத்திருமுதுகுன்றத்தில் மிக்க விருப்பத்தோடு சென்றருளினார்.—எ-று. (கஅக)

---

திருமுதுகுன்றம் - பண் - நட்டபாஷை.

திருச்சிற்றம்பலம்.

மத்தாவரைநிறுவிக்கடல்கடைந்தவ்விடமுண்ட
தொத்தார்தருமணிநீண்முடிச்சுடர்வண்ணனதிடமாங்
கொத்தார்மலர்குளிர்சந்தகிலொளிர்குங்குமங்கொண்டு
முத்தாறுவந்தடிவீழ்தருமுதுகுன்றடைவோமே.

தழையார்வடவியவீதனிற்றவமேபுரிசைவன்
இழையாரிடைமடவாளொடுமினிதாவுறையிடமா
மழைவானிடைமுழவவ்வெழில்வளைவாளுகிரெரிகண்
முழைவாளரிகுமிறும்முயர்முதுகுன்றடைவோமே.

முகில்சேர்தருமுதுகுன்றுடையானைமிகுதொல்சீர்ப்
புகலின்னகர்மறைஞானசம்பந்தனுரைசெய்த
நிகரில்லனதமிழ்மாலைகளிசையோடிவைபத்தும்
பகரும்மடியவர்கட்கிடர்பாவமடையாவே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - பழமலைநாதர், தேவியார் - பெரியநாயகியம்மை.

---

வான நாயகர் திருமுது குன்றினை வழிபட வலங்கொள்வார்
தூந றுந்தமிழ்ச் சொல்விருக் குக்குறட் டிணைமலர் மொழிந்தேத்தி
ஞான போனகர் நம்பர்தங் கோயிலை நண்ணியங் குள்புக்குத்
தேன லம்புதண் கொன்றையார் சேவடி திளைத்தவன் பொடுதாழ்ந்தார்.

(இ-ள்.) சிவஞானப் பாலமுதுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் விண்ணுலகத்திலுள்ள தேவர்களுக்குத் தலைவராகிய பழமலைநாதர் வீற்றிருந்தருளும் ஸ்ரீவிருத்தாசலத்தை வழிபடுதற்குப் பிரதக்ஷணஞ் செய்கின்றவராய்ப் பரிசுத்தம்பொருந்திய நல்ல தமிழ்ச்சொற்களாலாகிய திருவிருக்குக்குறள் என்னும் அளவொத்த திருப்பதிகமாலையை அருளிச்செய்து துதித்து, சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கோயிலினுள்ளேசென் றருளி, தேன் ததும்புகின்ற குளிர்ந்த

கொன்றைமலர்மாலையைத் தரித்த பழமலைநாதரது சிவந்த திருவடிக் கீழ்க்கலந்த அன்போடும் வணங்கியருளினார்.—எ-று. (கஅஉ)

---

திருமுதுகுன்றம் - திருவிருக்குக்குறள் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

நின்றுமலர் தூவி - யின்றுமுதுகுன்றை
நன்றுமேத்துவீர்க் - கென்றுமின்பமே.

நின்றுமுதுகுன்றை- நன்றுசம்பந்தன்
ஒன்றுமுரைவல்லா - ரென்றுமுயர்வாரே.

திருச்சிற்றம்பலம்.

---

தாழ்ந்தெ ழுந்துமுன் முரசதிர்ந் தெழுமெனுந் தண்டமிழ்த் தொடைசாத்தி, வாழ்ந்து போந்தங்கண் வளம்பதி யதனிடை வைகுவார் மணிவெறபுச், சூழ்ந்த தண்புனல் சுலவுமுத் தாறொடு தொடுத்தசொற்றொடைமாலை, வீழ்ந்த காதலாற் பலமுறை விளம்பியே மேவினார் சில நாள்கள்.

(இ-ள்.) பழமலைநாதரது சந்நிதியில் வணங்கியெழுந்து "முரசதிர்ந்தெழும்" என்னும் முதலையுடைய குளிர்ந்த தமிழ்ப்பதிகமாலையை அருளிச்செய்து பேரானந்த வாழ்வடைந்து ஆலயத்தினின்றும் புறத்தில் வந்தருளி, அழகிய இடத்தையுடைய வளவிய அத் தலத்தில் எழுந்தருளி யிருக்கும் திருஞானசம்பந்தப்பிள்ளையார் அழகிய அத்திருமுதுகுன்றினைச் சூழ்ந்த குளிர்ந்த நீரானது அலைவீசுகின்ற மணிமுத்தாநதியோடு சேர்த்துப் பாடியருளிய சொற்களமைந்த பல திருப்பதிகமாலைகளைத் தமதுள்ளத்திற்பொருந்திய அன்பினால் பலமுறையும் அருளிச்செய்து சிலநாள்கள் அங்கு எழுந்தருளி யிருந்தார்.—எ-று. (கஅங)

---

திருமுதுகுன்றம் - திருமுக்கால் - பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

முரசதிர்ந்தெழுதிருமுதுகுன்றமேவிய
பரசமர்படையுடையீரே
பரசமர்படையுடையீருமைப்பரவுவா
ரரசர்களுலகிலாவாரே.

மூடியசோலைசூழ்முதுகுன்றத்தீசனை
நாடியஞானசம்பந்தன்
பாடியஞானசெந்தமிழ்
பாடியவவர்பழியிலரே.

திருச்சிற்றம்பலம்.

---

ஆங்கு நாதரைப் பணிந்துபெண் ணாகட மணைந்தரு மறையோசை
யோங்கு தூங்கானை மாடத்து ளமர்கின்ற வொருதனிப் பரஞ்சோதிப்

பாங்க ணைந்துமுன் வலங்கொண்டு பணிவுற்றுப் பரவுசொற் றமிழ்மாலே
நீங்கு நீங்குவீர் தொழுமின்க ளெனுமிசைப் பதிகமுந் தெரிவித்தார்.

(இ-ள்.) அந்த ஸ்தலத்தில் வீற்றிருந்தருளும் பழமலைநாதனை வணங்கி, திருப்பெண்ணாகடமென்னும் க்ஷேத்திரத்தையடைந்து,அரிய வேதங்களினோசை மிகுந்த திருத்தூங்கானைமாட மென்னுந் திருக்கோயிலில் வீற்றிருந்தருளும் ஒப்பற்ற சுடர்க்கொழுந்தீசனை யடைந்து பிரதக்ஷணஞ்செய்து சந்நிதியில் நின்று வணங்கி, பாபமாகிய குற்றத்தினின்றும் நீங்கவேண்டுகின்றவர்களே ! 'தொழுமின்கள்' என்னும் இறுதியையுடைய துதித்தற்குரிய இனிய தமிழ்ச்சொற்களமைந்த இசையோடுகூடிய திருப்பதிகமாலையைஅருளிச்செய்தார்.—எ-று.

திருத்தூங்கானைமாடம் - பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

ஒடுங்கும்பிணிபிறவிகேடென்றிவையுடைத்தாயவாழ்க்கையொழியத் தவ
மடங்குமிடங்கருதிநின்றீரெல்லாமடிகளடிநிழற்கீழாளாம்வண்ணங்
கிடங்குமதிலுஞ்சுலாவியெங்குங்கெழுமனைகடோறுமறையின்னொலி
தொடங்குங்கடந்தைத்தடங்கோயில்சேர் தூங்கானைமாடந்தொழுமின்களே

மண்ணார்முழவதிருமாடவீதிவயற்காழிஞானசம்பந்தனல்ல [யான்
பெண்ணாகடத்துப்பெருங்கோயில்சேர் பிறையுரிஞ்சுந் தூங்கானைமாடமே
கண்ணார்கழல்பரவுபாடல்பத்துங்கருத்துணரக்கற்றாருங்கேட்டாரும்போய்
விண்ணோருலகத்துமேவிவாழும்விதியதுவேயாகும்வினையுமாயுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சுடர்க்கொழுந்தீசர், தேவியார்-கடந்தைநாயகியம்மை.

வேறு.

கருவ ரைப்பிற் புகாதவர் கைதொழு
மொருவ னைத்தொழு துள்ள முவந்துபோய்ப்
பெருவ ரத்தினிற் பெற்றவர் தம்முடன்
றிருவ ரத்துறை சேர்துமென் றேகுவார்.

(இ-ள்.) சனனமாகிய எல்லையில் அணுகாத மெய்யடியார்கள் வணங்கித் துதிக்கும் ஒப்பற்ற சிவபெருமானை வணங்கி மகிழ்ந்து அவ்விடத்தினின்றும் நீங்கி, மிகுந்த வரத்தினால் தம்மைப் புத்திரராகப் பெற்ற சிவபாதவிருதயரோடும் திருநெல்வாயில் திருவரத்துறையை யடைவோமென்று எழுந்தருள்வாராயினர் ; (திருஞானசம்பந்தப்பிள்ளையார்).—எ-று. (கஅரு)

முந்தை நாள்களோ ரோவொரு கான்முது
தந்தை யார்பியன் மேலிருப் பார்தவிர்ந்
தந்த ணாள ரவரருகேசெலச்
சிந்தை செய்திருப் போடுமுன் சென்றனர்.

(இ-ள்.) முன்னாட்களில் ஒவ்வொருதினத்தில் தமது முதியதந்தையாராகிய சிவபாதவிருதயரது திருத்தோளின்மேல் எழுந்தருளிச் செல்பவராகிய திரு

ஞானசம்பந்தப்பிள்ளையார் அவ்வாறு செல்லுதலையொழிந்து, பிராமணர்கள் அவரு க்குச் சமீபத்தில் சூழ்ந்துவர, திருவரத்துறையைத் தரிசிக்கவேண்டுமென்று கரு திய விருப்பத்துடன் அவர்களுக்கு முன்னே சென்றருளினர்.—எ-று. (கஅசு)

ஆதி யார்த மரத்துறை நோக்கியே
காத லாலணை வார்கடி தேகிடத்
தாதை யாரும் பரிவுறச் சம்பந்தர்
பாத தாமரை நொந்தன பைப்பய.

(இ-ள்.) முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திரு வரத்துறையை நோக்கி மிக்க விருப்பத்தோடு செல்லுங் கருத்தினையுடையவராய் விரைந்துசென்றருள, தந்தையாராகிய சிவபாதவிருதயரும் (பிள்ளையாரது திரு வடிகள் நிலத்தில் நடந்துசெல்லுதலைப் பொறாது)வருந்த, திருஞானசம்பந்தப்பிள் ளையாரது திருவடித்தாமரைகள் சிறிதுசிறிது வருத்தமடைந்தன.—எ-று. (கஅஎ)

மறைய னைத்து மொருவடி வாமென
நிறைம திப்பிள்ளை நீணிலஞ் சேர்ந்தெனத்
துறைய லைக்கங்கை சூடு மரத்துறை
யிறைவ னைத்தொழு வான்விரைந் தேகினர்.

(இ-ள்.) வேதங்களனைத்தும் ஒருதிருவுருவங்கொண்டு வந்தாற்போலவும், கலைகள் நிறைந்த இளஞ்சந்திரன் நீண்ட உலகத்தில் வந்து சேர்ந்ததுபோலவும், கரையில் அலைகளை வீசுங் கங்கைநதியைத் தரித்த அரத்துறைநாதனை வணங்கும் பொருட்டு விரைந்து எழுந்தருளினர்.—எ-று. (கஅஅ)

பாச மற்றில ராயினும் பார்மிசை
யாசை சங்கரற் காயின தன்மையாற்
றேசு மிக்க திருவுரு வானவ
ரீச னைத்தொழு தேதொழு தேகினர்.

(இ-ள்.) (அறம் பொரு ளின்பங்களிற் சிறிதும்) பற்றில்லாதவ ராயினும் உலகத்தில் அன்பானது சிவபெருமானிடத்திற் பொருந்திய தன்மையினால், சிவ ஞானப் பொலிவுமிகுந்த திருவுருவத்தையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிவபெருமானை இடைவிடாமல் வணங்கிக்கொண்டே சென்றருளினர்.—எ-று.

இந்த மாநிலத் தின்னிரு ணீங்கிட
வந்த வைதிக மாமணி யானவர்
சிந்தை யாரமு தாகிய செஞ்சடைத்
தந்தை யார்கழ றாழ்ந்தெழுந் தேகினர்.

(இ-ள்.) இப் பெரிய நிலவுலகத்திலுள்ள ஆன்மாக்களது அஞ்ஞானமா கிய இருள்நீங்கும்படி அவதரித்தருளிய வைதிகசூளாமணியாகிய திருஞானசம்பந் தப்பிள்ளையார் தமது திருவுள்ளத்தில் நிறைந்த ஞானமிர்தமாகிய சிவந்த சடைமு டியையுடைய சிவபெருமானது திருவடிகளை வணங்கிக்கொண்டு சென்றருளினர்.

மாறன் பாடி யெனும்பதி வந்துற
வாறு செல்வருத் தத்தி னசைவினால்

வேறு செல்பவர் வெய்துறப் பிள்ளையா
ரேறு மஞ்செழுத் தோதியங் கெய்திட.

(இ-ள்.) அப்பொழுது மாறன்பாடி யென்னும் பதியினைவந்து சேர, அங்கு வழிநடந்து செல்லும் வருத்தத்தின் தளர்ச்சியினால் தம்முடன் சூழ்ந்துவரும் அடியார்கூட்டங்களும் இளைப்படைய, அதனால் திருஞானசம்பந்தப்பிள்ளையார் உயர்வு பொருந்திய ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை யோதியருளி அங்கே சென்றருள. ()

உய்ய வந்தசம் பந்த ருடன்வந்தார்க்
கெய்து வெம்மை யிளைப்பஞ்சி னன்போலக்
கைக ளாயிரம் வாங்கிக் கரந்துபோய்
வெய்ய வன்சென்று மேல்கடல் வீழ்ந்தனன்.

(இ-ள்.) (உலகத்திலுள்ள ஆன்மகோடிகள்) கடைத்தேறும்பொருட்டு அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரோடு வந்த திருக்கூட்டத்தார்க்குத் தனது உஷ்ணத்தினா லுண்டாகிய இளைப்பினைக்கண்டு பயந்தவனைப்போல, சூரியன் தன் கிரணங்களாகிய ஆயிரங்கைகளையுஞ்சுருக்கி மறைந்து மேற்றிசைக் கடலில் சென்று வீழ்ந்தான்.—எ-று. (ககூஉ)

அற்றை நாளிர வப்பதி யின்னிடைச்
சுற்று நீடிய தொண்டர்கள் போற்றிடப்
பெற்ற மூர்ந்த பிரான்கழல் பேணுவார்
வெற்றி மாதவத் தோருடன் மேவினார்.

(இ-ள்.) அன்று இரவில் அந்த மாறன்பாடி யென்னும் ஸ்தலத்தில் தம்மைச் சூழ்ந்து நெருங்கியிருக்கின்ற அடியார் திருக்கூட்டங்கள் துதிக்க, இடபத்தை வாகனமாக நடத்தியருளிய சிவபெருமானது திருவடிகளை விரும்பி வழிபாடு செய்யும் திருஞானசம்பந்தப்பிள்ளையார் வெற்றிபொருந்திய மகத்தாகிய தவமுனிவர்களுடன் எழுந்தருளினார்.—எ-று. (ககூங)

இந்நி லைக்க ணெழில்வளர் பூந்தராய்
மன்ன னார்தம் வழிவருத் தத்தினை
யன்ன மாடுந் துறைநீ ரரத்துறைச்
சென்னி யாற்றர் திருவுளஞ் செய்தனர்.

(இ-ள்.) இவ்வாறு பிள்ளையார் அன்றிரவில் அடியார்திருக்கூட்டத்துடன் மாறன்பாடி யென்னும் ஸ்தலத்தில் எழுந்தருளியிருக்கும்பொழுது, அழகு வளர்கின்ற சீகாழிப்பதியில் அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது வழி நடந்ததனாலுண்டாகிய வருத்தத்தை அன்னங்கள் குடைந்தாடுகின்ற நீர்த்துறைகளையுடைய திருநெல்வாயிலரத்துறையில் வீற்றிருந்தருளுஞ் சிரசில் கங்கைநதியைத் தரித்த சிவபெருமான் தமது திருவுள்ளத்திற்கொண்டருளினார் .எ-று.

ஏறு தற்குச் சிவிகை யிடக்குடை
கூறி யூதக் குலவுபொற் சின்னங்கண்
மாறின் முத்தின் படியினா னன் மன்னிய
நீறு வந்த விமல ரருளுவார்.

(இ-ள்.) எழுந்தருளுதற்கு முத்துச்சிவிகையும், பிடித்தருளுதற்கு முத்துக்குடையும், தமது திருநாமத்தை யாவரு மறியக் கூறி யூதுதற்கு விளங்குகின்ற பொன்னு லாகிய திருச்சின்னங்களும் மாறுபடாத முத்தின்வகையினு லாகிய இவைகளை, விபூதியை விரும்பியணிந்த சிவபெருமான் அருள்வாராயினர்.—எ-று.

நீடு வாழ்பதி யாகுநெல் வாயிலின்
மாட மாமனை தோறு மறையோர்க்குக்
கூடு கங்குற் கனவிற் குலமறை
தேடு சேவடி தோன்றமுன் சென்றுபின்.

(இ-ள்.) மிக்க வாழ்க்கையினையுடைய பதியாகிய திருநெல்வாயிலரத்துறையிலுள்ள மேல்மாடங்களோடு கூடிய மாளிகைகளில்வாழும் பிராமணர்களுக்கு அன்றிரவில் சொப்பனத்தில் வேதங்கள் தேடுகின்ற சிவந்த திருவடிகள் அவர்களுக்குத் தெரியும்படி முன்சென்று, பின்பு.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (கசுசு)

ஞான சம்பந்த னம்பா லணைகின்றான்
மான முத்தின் சிவிகை மணிக்குடை
யான சின்னநம் பாற்கொண் டருங்கலைக்
கோன வன்பா லணைந்து கொடுமென.

(இ-ள்.) திருஞானசம்பந்தன் நம்மிடத்து வருகின்றான் ஆதலால் பெருமைபொருந்திய முத்துச் சிவிகையையும், முத்துக்குடையையும், வெற்றியைக் கூறித் தெரிவிப்பதாகிய முத்துச்சின்னத்தையும் நமதுதிருக்கோயிலினின்று மெடுத்துக்கொண்டு, அரிய வேதாகமங்களை ஓதாதுணர்ந்த தலைவனாகிய அத் திருஞானசம்பந்தனிடத்துச் சென்று கொடுங்களென்று.—எ-று. (கசுஎ)

அந்த ணாளர்க் குரைத்தவப் போழ்தினில்
வந்து கூடி மகிழ்ந்தற் புதமுறுஞ்
சிந்தை யோடுஞ் செழுநீ ரரத்துறை
யிந்து சேகரர் கோயில்வந் தெய்தினர்.

(இ-ள்.) பிராமணர்களுக்குச் சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளிய சமயத்தில் அவர்களெல்லாரும் ஒன்றாகவந்துசேர்ந்து மகிழ்ச்சியடைந்து ஆச்சரியமிக்க மனதோடும் செழிய நீர்வளம்பொருந்திய திருவரத்துறையில் வீற்றிருந்தருளும் சந்திரசேகரராகிய சிவபெருமானது திருக்கோயிலை வந்து சேர்ந்தார்கள்.—எ-று.

ஆங்கு மற்ற வருளடி யாருட
னோங்கு கோயிலுள் ளார்க்குமுண் டாயிட
வீங்கி தென்ன வதிசய மென்பவர்
தாங்க ளம்மறை யோர்க்குமுன் சாற்றினர்.

(இ-ள்.) அந்தச் சொப்பனரூபமாகிய திருவருள் அங்கிருக்கும் அடியார்களோடு சிறந்த திருக்கோயிலிலுள்ள அகத்தொண்டர்களுக்கும் உண்டாகவும், இவ்விடத்தில் இது என்ன அதிசயமென்று கூறுபவர்களாய் அவர்களும் அங்குவந்துகூடிய பிராமணர்களுக்கு முன்னே தெரிவித்தார்கள்.—எ-று.

'ஆங்குற்றவருளடியாருடன்' என்பதற்கு, அவ்விடத்திலுள்ள திருவருளையுடைய சிவனடியார்களோடு எனக்கூறினும் பொருந்தும். ஓங்கு கோயிலுள்ளார் என்றது, சிவபெருமானைப் பூசிக்கும் ஆதிசைவர் முதலானவர்களை. (கககக)

சால மிக்க வியப்புறு தன்மையின்
பால ராதலும் பள்ளி யெழுச்சியின்
கால மெய்திடக் காதல் வழிப்படுஞ்
சீல மிக்கார் திருக்காப்பு நீக்கினர்.

(இ-ள்.) இவ்வாறு அங்குச்சேர்ந்த யாவரும் மிக்க அதிசயமுற்ற தன்மையை யுடையராதலும், திருப்பள்ளி யெழுச்சிக்குரிய விடியற்காலம் வரவும், அன்பின்வழிப்பட்ட நலவொழுக்க மிகுந்த அந்தப் பிராமணர்கள் யாவரும் திருவாயிலின் திருக்காப்பினைத் திறந்தார்கள்—எ-று. (உ00)

திங்க ளீர்மைச் செழுந்திரண் முத்தினாற்
றுங்க வெண்குடை தூய சிவிகையும்
பொங்க வூதும பொருவருஞ் சின்னமு
மங்க ணாத ரருளினாற் கண்டனர்.

(இ-ள்.) சந்திரன்போலுங் குளிர்ந்த வொளியமைந்த செழுமைபொருந்திய திரண்ட முத்துக்களாலாகிய உயர்ந்த வெண்குடையும், பரிசுத்தமாகிய முத்துச்சிவிகையும், சிறப்போடு ஊதுகின்ற ஒப்பற்ற திருச்சின்னமும், சிவபெருமானது திருவருளினால் அங்கிருக்கக் கண்டார்கள்.—எ-று. (உ0க)

கண்ட பின்னவர் கைதலை மேற்குவித்
தெண்டி சைக்கும் விளக்கிவை யாமெனத்
தொண்ட ரோடு மறையவர் சூழ்ந்தெழுந்
தண்டர் நாடு மறிவுற வார்த்தனர்.

(இ-ள்.) அவ்வாறு கண்டபின்பு அப்பிராமணர்கள் தமது கைகளைத் தலையின்மேற் குவித்து, எட்டுத்திக்குகளுக்கும் இவை விளக்காமென்று துதிக்க, அடியார்களோடு மற்றப் பிராமணர்களும் திரண்டெழுந்து தேவர்களுலகமும் அறியும்படி ஆரவாரித்தார்கள்.—எ-று. (உ0உ)

சங்கு துந்துபி தாரை பேரிமுதற்
பொங்கு பலவிய நாதம் பொலிந்தெழ
வங்க ணனரு ளாலவை கொண்டுடன்
பொங்கு காத லெதிர்கொளப் போதுவார்.

(இ-ள்.) சங்கமும், துந்துபியும், தாரையும், பேரியுமுதலாகிய சிறந்த பல வாத்தியங்களினோசை அதிகரித்தோங்க, அழகிய கண்ணுளராகிய சிவபெருமானுடைய திருவருளினால் அவைகளை யுடன்கொண்டு அதிகரிக்கின்ற விருப்பத்தோடு திருஞானசம்பந்தப்பிள்ளையாரை எதிர்கொள்ளும்படிபோகின்றவர்களாய்.

பொங்குகாத லெதிர்கொள என்பதற்கு, தாமெதிர்கொள்ளுதற்கு முன்னே தமது காதல்விரைந் தெதிர்கொள்ள எனினுமாம்.

இதுமுதல் இரண்டுபாட்டுங் குளகம். (உ0ந)

மாசில் வாய்மைநெல் வாயின் மறையவ
ராசில் சீர்ச்சண்பை யாண்டகை யார்க்கெதிர்

தேசு டைச்சிவி கைமுத லாயின
வீச ரின்னரு ளாற்றாங்கி யேகினர்.

(இ-ள்.) குற்றமற்ற மெய்யன்பினையுடைய திருநெல்வாயி லரத்துறையில் வாசஞ்செய்யும் பிராமணர்கள் பழுதற்ற சிறப்பினையுடைய சீகாழிப்பதியில் அவதரித்தருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்கெதிரில் ஒளிபொருந்திய முத்துச் சிவிகை முதலானவைகளைச் சிவபெருமானது இனிய திருவருளினால் எடுத்துக் கொண்டு சென்றார்கள்.—எ-று. (உ0௪)

இத்த லையிவ ரின்னண மேகின
ரத்த லைச்சண்பை நாதர்க்கு மவ்விரா
முத்த நற்சிவி கைமுத லாயின
வுய்த்த ளிக்கும் படிமுன் னுணர்த்துவார்.

(இ-ள்.) திருநெல்வாயி லரத்துறையிலுள்ள பிராமணர்முதலிய அடியார்கள் இவ்வாறு முத்துச்சிவிகை முதலியவைகளை எடுத்துச் சென்றார்கள்; அங்கு மாறன்பாடியி லெழுந்தருளியிருக்கும் சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்கும் அன்றிரவில் நல்ல முத்துச்சிவிகை முதலியவைகளை ஏறிச்செலுத்தும் வண்ணம் அவர்க்குமுன் அறிவிப்பவராய்.—எ-று.

இதுமுதல் நான்குபாடலுங் குளகம். (உ0௫)

அள்ள னீர்வயல் சூழு மரத்துறை
வள்ள லார்நா மகிழ்ந் தளிக்குமவை
கொள்ள லாகுங்கொண் டுய்த்தல் செய்வாயென
வுள்ள வாறருள் செய்ய வுணர்ந்தபின்.

(இ-ள்.) சேற்றையுடைய நீர்வளமிக்க வயல்கள்சூழ்ந்த திருநெல்வாயி லரத்துறையி லெழுந்தருளிய அருள்வள்ளலாகிய சிவபெருமான் நாம் மகிழ்ந்து கொடுத்தருளுமவைகளை நீ கைக்கொள்ளுதல் பொருந்தும், அதனால், அவைகளைப் பெற்றுக்கொண்டு சிவிகையையேறிச் செலுத்துவாயாகவென்று உள்ளவண்ணம் அருள்செய்யத் திருஞானசம்பந்தப்பிள்ளையார் துயில்நீங்கித் திருக்கண்விழித்த பின்பு.—எ-று. (உ0௬)

சண்பை யாளியார் தாங்கண்ட மெய்யருட்
பண்பு தந்தையார் தம்முடன் பாங்கமர்
தொண்ட ருக்கருள் செய்து தொழாமுனம்
விண்பு லப்பட வீங்கிரு ணீங்கலும்.

(இ-ள்.) சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் தாம் சொப்பனத்திற்கண்ட மெய்யருளாகிய பண்பினைத் தந்தையாராகிய சிவபாதவிருதயரோடு பக்கத்திற்சூழ்ந்த அடியார்களுக்கும் அருளிச்செய்து திருவருளை வணங்கு முன்னமே, ஆகாயம் கண்களுக்குத் தோன்றும்படி அதிகரித்த இருளானது நீங்கவும்.—எ-று. (உ0௭)

மாலை யாமம் புலர்வுறும் வைகறை
வேலை செய்வினை முற்றிவெண் ணீறணி
கோல மேனிய ராய்க்கைம் மலர்குவித்
தேல வஞ்செழுத் தோதி யெழுந்தனர்.

(இ-ள்.) மாலைப்பொழுதோடு கூடிய இராக்காலம் நீங்கும் விடியற்காலத்தில், செய்யவேண்டிய நித்திய கன்மங்களை முடித்துத் திருவெண்ணீறுதரித்த அழகிய திருமேனியையுடையவராய்த் தாமரைமலர்போன்ற கைகளைக்குவித்துத் திருவரத்துறைக்குச் செல்லும்படி ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை யுச்சரித்துக்கொண் டெழுந்தருளினார்.—எ-று. (உ௦அ)

போத ஞானப் புகலிப் புனிதனைச்
சீத முத்தின் சிவிகைமே லேற்றிடக்
காதல் செய்பவன் போலக் கருங்கடன்
மீது தேரின்வந் தெய்தினன் வெய்யவன்.

(இ-ள்.) மிக்க சிவஞானத்தையுடைய சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரைக் குளிர்ச்சிபொருந்திய முத்துச்சிவிகையின்மேலேற்றுதற்கு விருப்பங்கொள்பவன்போலச் சூரியன் கருங்கடலினிடத்துத் தேரின்மேல் உதயமாயினான்.—எ-று. (உ௦௯)

ஆய போழ்தி னரவெனு மார்ப்புடன்
றூய முத்தின் சிவிகை சுடர்க்குடை
மேய சின்னங்கள் கொண்டுமெய் யன்பரோ
டேய வந்தணர் தாமெதிர் தோன்றினார்.

(இ-ள்.) அவ்வாறாகிய சமயத்தில் ஹரஹரவென்னு மாரவாரத்துடன் பரிசுத்தம்பொருந்திய முத்துச்சிவிகையையும், ஒளியையுடைய முத்துக்குடையையும், அழகிய முத்துச்சின்னங்களையும் எடுத்துக்கொண்டு மெய்யன்பர்களோடு பொருந்திய பிராமணர்களும் திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்கு எதிரில் வந்தார்கள்.—எ-று. (உ௧௦)

வந்து தோன்றிய வந்தணர் மாதவர்
கந்த வார்பொழிற் காழிநன் னாடர்மு
னந்த மில்சீ ரரத்துறை யாதியார்
தந்த பேரரு டாங்குவீ ரென்றனர்.

(இ-ள்.) அவ்வாறு திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்கு எதிரில்வந்துதோன்றிய பிராமணர்களும், மகத்தாகிய தவத்தையுடைய அடியார்களும் மணம்வீசுகின்ற உயர்ந்த சோலைகள்சூழ்ந்த நல்ல சீகாழியில் அவதரித்தருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்கு முன்னே நின்று, முடிவில்லாத சிறப்பினையுடைய திருவரத்துறையில் வீற்றிருந்தருளும் சிவபெருமான் கொடுத்தருளிய மிக்க திருவருளாகிய இவைகளைக் கைக்கொள்வீராகவென்று கூறினார்கள்.—எ-று. (உ௧௧)

என்று தங்களுக் கீச ரருள்செய்த
தொன்று மங்கொழி யாமை யுரைத்துமு
னின்று போற்றித் தொழுதிட நேர்ந்தது
மன்று ளாரரு ளென்று வணங்கினார்.

(இ-ள்.) இவ்வாறு தங்களுக்குச் சிவபெருமானருளிச்செய்த தொன்றையும் திருஞானசம்பந்தப்பிள்ளையாரிடத்து விடாமல் கூறி அவர் திருமுன்னின்று

துதித்து வணங்கவும், பிள்ளையார், இவ்வாறு நிகழ்ந்தது ஸ்ரீநடராசப்பெருமானது திருவருளேயாமென்று வணங்கியருளினார்.—எ-று. (உகஉ)

மெய்ம்மை போற்றி விடாத விருப்பினாற்
றம்மை யுன்னும் பரிசுதந் தாள்பவர்
செம்மை நித்தில யானச் சிறப்பரு
ளெம்மை யாளுவப் பானின் றளித்ததே.

(இ-ள்.) உண்மையைப் பாதுகாத்து நீங்காத அன்பினால் தம்மை எக்காலத்தும் இடைவிடாது சிந்திக்கும் தன்மையை எமக்குத்தந்து ஆட்கொண்டருளுஞ் சிவபெருமான் அழகிய முத்துச்சிவிகையாகிய சிறப்பினையருளுந் திருவருள், எம்மை யாளாகக்கொண்டருளும் மகிழ்ச்சிகாரணமாக இன்று அளிக்கப்பட்டது.

எந்தை யீச னெனவெடுத் திவ்வருள்
வந்த வாறுமற் றிவ்வண மோவென்று
சிந்தை செய்யுந் திருப்பதி கத்திசை
புந்தி யாரப் புகன்றெதிர் போற்றுவார்.

(இ-ள்.) "எந்தையீசன்" என்று முதலில் எடுத்து, இத்திருவருள் வந்தவகை (யான் வழிநடந்த வருத்தத்தில் சிவபெருமானைச் சிந்தித்துவந்த) இவ்வண்ணமோவென்று, தாம் சிந்திக்கின்ற திருப்பதிகத்தில் இனிய இசையும் திருவுள்ளமும் பொருந்த அருளிச்செய்து எதிரில்நின்று துதிக்கின்றவராயினார்; (திருஞானசம்பந்தப் பிள்ளையார்.)—எ-று. (உகச)

---

திருநெல்வாயில் திருவரத்துறை - பண் - பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

எந்தையீசனெம்பெருமானேறமர்கடவுளென்றேத்திச்
சிந்தைசெய்பவர்க்கல்லால்சென்றுகைகூடுவதன்றாற்
கந்தமாமலருந்திக்கடும்புனனிவாமல்குகரைமே
லந்தண்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (க)

ஈரவார்சடைதன்மேலிளம்பிறையணிந்தவெம்பெருமான்
சீருஞ்செல்வமுமேத்தாச்சித்தர்கடொழச்செல்வதன்றால்
வாரிமாமலருந்திவருபுனனிவாமல்குகரைமே
லாருஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (உ)

பிணிகலந்தபுன்சடைமேற்பிறையணிசிவனெனப்பேணிப்
பணிகலந்துசெய்யாதபாவிகடொழச்செல்வதன்றான்
மணிகலந்துபொன்னுந்திவருபுனனிவாமல்குகரைமே
லணிகலந்தநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (ங)

துன்னவாடையொன்றுடுத்துத்தூயவெண்ணீற்றினராகி
யுன்னிநைபவர்க்கல்லாலொன்றுங்கைகூடுவதன்றாற்
பொன்னுமாமணியுந்திப்பொருபுனனிவாமல்குகரைமே
லன்னமாருநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (ச)

வெருகுரிஞ்சுவெங்காட்டிலாடியவிமலனென்றுள்கி
யுருகிநைபவர்க்கல்லாலொன்றுங்கைகூடுவதன்றான்

முருகுரிஞ்சுபூஞ்சோலைமொய்ம்மலர்சுமந்திழிநிவாவந்
தருகுரிஞ்சுநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (ரு)

உரவுநீர்ச்சடைக்கரந்தவொருவனென்றுள்குளிர்ந்தேத்திப்
பரவிநைபவர்க்கல்லாற்பரிந்துகைகூடுவதன்றாற்
குரவநீடியர்சோலைக்குளிர்புனனிவாமல்குகரைமே
லரவமாருநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (சா)

நீலமாமணிமிடற்றுநீறணிசிவனெனப்பேணுஞ்
சீலமாந்தர்கட்கல்லாற்சென்றுகைகூடுவதன்றாற்
கோலமாமலருந்திக்குளிர்புனனிவாமல்குகரைமே
லாலுஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (எ)

செழுந்தண்மால்வரையெடுத்தசெருவலியிராவணனலற
வழுந்தவூன்றியவிரலான்போற்றியென்பார்க்கல்லதருளான்
கொழுங்கனிசுமந்துந்திக்குளிர்புனனிவாமல்குகரைமே
லழுந்துஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (அ)

நுணங்குநூலயன்மாலுமிருவருநோக்கரியானை
வணங்கிநைபவர்க்கல்லால்வந்துகைகூடுவதன்றான்
மணங்கமழ்ந்துபொன்னுந்திவருபுனனிவாமல்குகரைமே
லணங்குஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (கூ)

சாக்கியப்படுவாருஞ்சமண்படுவார்களுமற்றும்
பாக்கியப்படகில்லாப்பாவிகடொழச்செல்வதன்றாற்
பூக்கமழ்ந்துபொன்னுந்திப்பொருபுனனிவாமல்குகரைமே
லார்க்குஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடமருளே. (கம)

கறையினார்பொழில்சூழ்ந்தகாழியுண்ஞானசம்பந்த
னறையும்பூம்புனல்பரந்தவரத்துறையடிகடம்மருளை
முறைமையாற்சொன்னபாடன்மொழியுமம்மாந்தர்தம்வினைபோய்ப்
பறையுமையுறவில்லைபாட்டிவைபத்தும்வல்லார்க்கே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - அரத்துறைநாதர்; தேவியார் - ஆனந்தநாயகியம்மை.

---

பொடிய ணிந்த புராண னரத்துறை
யடிக டம்மரு ளேயிது வாமெனப்
படியி லாதசொன் மாலைகள் பாடியே
நெடிது போற்றிப் பதிக நிரப்பினார்.

(இ-ள்.) விபூதியையணிந்த புராதனராகிய திருவரத்துறையி லெழுந்தருளிய சிவபெருமானது திருவருள் (சிந்தனைசெய்பவர்க்கல்லால் சென்று கைகூடுவதன்று) என்னும் இத்தன்மையேயாமென்று ஒப்பில்லாத இனிய சொற்களமைந்த மாலைகளை அருளிச்செய்து,அச்செய்யுட்கள்தோறும் அத்தகையபொருள்களை யமைத்துத் துதித்துத் திருப்பதிகத்தை நிரப்பி யருளினார்.—எ-று. (உகரு)

சோதி முத்தின் சிவிகைசூழ் வந்துபார்
மீது தாழ்ந்துவெண் ணீற்றொளி போற்றிநின்
றோதி யாரரு ளாதலி லஞ்செழுத்
தோதி யேறினா ருய்ய வுலகெலாம்.

(இ-ள்.) பிரகாசம்பொருந்திய முத்துச்சிவிகையைப் பிரதக்ஷணஞ்செய்து பூமியின்மீது திருமேனி பொருந்த விழுந்து வணங்கித் திருவெண்ணீற்றின் ஒளிபோன்று விளங்குகின்ற முத்துச்சிவிகையி னொளியைத் துதித்து நின்று, அச் சிவிகை முதற்கடவுளாகிய சிவபெருமானது திருவருளாற் கிடைக்கப்பெற்றதாதலால், உலகங்களெல்லாம் கடைத்தேறும்பொருட்டு ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை யோதி அதில் எழுந்தருளினார்; (திருஞானசம்பந்தப்பிள்ளையார்.)—எ-று.

எழுதாக்கிளவியாகிய வேதத்தின் முத லிடை கடைகளிற் சிவபெருமான் திருநாமமாகிய பிரணவத்தைக் கூறுதல்போலவே, அருண்மொழித்தேவராகிய ஸ்ரீ சேக்கிழார்பெருமானருளிச்செய்த இத்திருத்தொண்டர்புராணத்தும் ஸ்ரீ நடராசப்பெருமான் அடியெடுத்துக் கொடுத்தருளப்பெற்ற "உலகெலாம்" என்றதை முதலினும், "உய்யவுலகெலாம்" என, ஈண்டு இடையினும், "நிலவியுலகெலாம்" எனமுடிவினும் கூறியிருத்தலின் இதுவும் அவ்வேதங்களோடு சாமியமுடையதென்பது ஆன்றோர் வழக்கு என வறிக. (உகசு)

வேறு.

தொண்ட ரார்த்தனர் சுருதிக ளார்த்தன தொல்லை
யண்ட ரார்த்தன ரகிலமு மார்ப்புட னெய்தக்
கொண்ட லார்த்தன முழவமு மார்த்தன குழுமி
வண்ட றாப்பொலி மலர்மழை யார்த்தது வானம்.

(இ-ள்.) மெய்யடியார்கள் ஹரஹர வென்று ஆரவாரித்தார்கள்; நான்கு வேதங்களும் ஆரவாரித்தன; பழமையாகிய தேவர்களும் ஆரவாரித்தார்கள்; எல்லாப்பொருள்களும் ஆரவாரத்தோடு பொருந்தும்படி சப்த மேகங்களும் ஆரவாரித்தன; தேவதுந்துபிகளும் நெருங்கி ஆரவாரித்தன; வண்டுகள் நீங்காத பொலிவினையுடைய புஷ்பமாரியும் ஆகாயத்தில் ஆரவாரித்துப் பொழிந்தது.—எ-று.

வளையு மார்த்தன வயிர்களு மார்த்தன மறையின்
கிளையு மார்த்தன கிளைஞரு மார்த்தனர் கெழுவுங்
களைக ணார்த்ததோர் கருணையி னார்த்தன முத்து
விளையு மாக்கதிர் வெண்குடை யார்த்தது மிசையே.

(இ-ள்.) சங்கவாத்தியங்களும் ஆரவாரித்தன; ஊது கொம்புகளும் ஆரவாரித்தன; வேதத்தின் சாகைகளும் ஆரவாரித்தன; பந்துக்களாகிய பிராமணர்களும் ஆரவாரித்தார்கள்; ஆன்மகோடிகளின் உயிர்க் குயிராய் நின்ற சிவபெருமானது திருவருளும் விளக்கமுற் றோங்கின; முத்தினாலாகிய மிக்க கிரணங்களையுடைய வெண்குடையும் தமது திருமுடியின்மேல் கவிக்கப்பட்டு விளங்கியது.—எ-று.

களைகணாரது என்பது, களைகணார்த்தது என விகாரப்பட்டது. (உகஎ)

பல்கு வெண்கதிர்ப் பத்திசேர் நித்திலச் சிவிகை
புல்கு நீற்றொளி யுடன்பொலி புகலிகா வலனு

ரல்கு வெள்வளை யலைத்தெழு மணிநிரைத் தரங்க
மல்கு பாற்கடல் வளர்மதி யுதித்தென வந்தார்.

(இ-ள்.) நிறைந்த வெள்ளிய கிரணங்களையுடைய முத்துக்களா லாகிய பத்தியமைந்த சிவிகையில், பொருந்திய திருவெண்ணீற்றி னொளியோடு விளங்குஞ் சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் வெண்மைபொருந்திய சங்குகளை அலைத்தெழுகின்ற அழகிய வரிசைகளாகிய அலைகள் நிறைந்த திருப் பாற்கடலில் கலைகள் வளர்கின்ற இளஞ்சந்திரன் உதயஞ் செய்ததுபோல எழுந் தருளிவந்தார்.—எ-று. (உகக)

நீடு தொண்டர்கண் மறையவ ரேனையோர் நெருங்கி
மாடு கொண்டெழு மகிழ்ச்சியின் மலர்க்கைமேற் குவித்தே
யாடு கின்றன ரயர்ந்தன ரளவிலா னந்தங்
கூடு கின்றகண் பொழிபுனல் வெள்ளத்திற் குளித்தார்.

(இ-ள்.) சிறந்த திருத்தொண்டர்களும், பிராமணர்களும், அவரொழிந்த மற்றவர்களும் இடமின்றி நெருங்கி (திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளும் பேரழகைக் கண்டு தமது மனத்தை) இடமாகக்கொண் டெழுகின்ற மகிழ்ச்சியினால் தாமரைமலர்போன்ற கைகளைச் சிரமேற் குவித்து ஆனந்தக் கூத்தாடுகின்றவராயும், அதனால் பரவசமடைந்தவராயும், அளவில்லாத பேரானந்தத்தால் கண்களினின்றும் பொழிகின்ற ஆனந்தவெள்ளத்தில் மூழ்கினார்கள்.—எ-று.

செய்ய பொன்புனை வெண்டர ளத்தணி சிறக்கச்
சைவ மாமறைத் தலைவர்பாற் பெறுந்தனிக் காளம்
வைய மேழுடன் மறைகளு நிறைதவத் தோரு
முய்ய ஞானசம் பந்தன்வந் தானென வூத.

(இ-ள்.) வெள்ளிய முத்துக்களின் அழகு சிறக்கும்படி சிவந்த பொன்னினால் அலங்கரிக்கப்பெற்ற வைதிக சைவங்களுக்குத் தலைவராகிய அரத்துறைநாதரிடத்திற் பெற்ற ஒப்பில்லாத முத்துக்காளமானது, ஏழுலகங்களும்-வேதங்களும்-நிறைந்த தவத்தினர்களும் ஈடேறும்படி திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளினாரென்று ஊதவும்.—எ-று. (உஉக)

சுற்று மாமறைச் சுருதியின் பெருகொலி நடுவே
தெற்றி னார்புர மெரித்தவர் தருதிருச் சின்ன
முற்று மானவண் ஞானமே முலைசுரந் தூட்டப்
பெற்ற பாலரு வாயன்வந் தானெனப் பிடிக்க.

(இ-ள்.) (திருஞானசம்பந்தப்பிள்ளையாரைச்) சூழ்ந்த மகத்தாகிய வேதங்களின் பேரோசையின் நடுவே, பகைவரது திரிபுரங்களை யெரித்தருளிய சிவபெருமானால் கொடுத்தருளப்பட்ட முத்துச்சின்னமானது, (சித்தும் அசித்துமாகிய) எல்லாப்பொருள்களுந் தாமேயாகிய உமாதேவியார் சிவஞானத்தையே திருமுலைப் பாலமுதமாகக் கறந்து உண்பிக்கப்பெற்ற பாலறுவாயர் எழுந்தருளினாரென்று ஊதவும்.—எ-று. (உஉஉ)

புணர்ந்த மெய்த்தவக் குழாத்தொடும் போதுவார் முன்னே
யிணைந்த நித்திலத் திலங்கொளி நலங்கிளர் தாரா

யணைந்த மாமறை முதற்கலை யகிலமு மோதா
துணர்ந்த முத்தமிழ் விரகன்வந் தானென வூத

(இ-ள்.) தம்மோடு கூடச்சென்ற மெய்ம்மையாகிய தவமுனிவர் கூட்டங்களுடன் எழுந்தருளும் திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு முன்னே வரிசையாகப் பொருந்திய முத்துக்களால் விளங்கும் ஒளியோடு நன்மையிருந்த முத்துத் தாரையானது பெருமைபொருந்திய வேதாகம முதலிய எல்லாக் கலைகளையும் ஓதாதுணர்ந்த முத்தமிழ்விரகர் எழுந்தருளினாரென்று ஊதவும்.—எ-று. (உஉங)

தெருளு மெய்க்கலை விளங்கவும் பாருளோர் சிந்தை
யிருளு நீங்கவு மெழுதுசொன் மறையளிப் பவர்தாம்
பொருளு ஞானமும் போகமும் போற்றியென் பாருக்
கருளு மங்கணர் திருவரத் துறையைவந் தணைந்தார்.

(இ-ள்.) தெளிவைத் தருகின்ற மெய்ம்மையாகிய வேதாகமமுதலிய கலைஞானங்கள் நிலைபெற்று விளங்கவும், உலகத்திலுள்ள ஆன்மகோடிகளின் மனத்திலுள்ள அஞ்ஞானமாகிய இருள் நீங்கவும், எழுதும் தேவாரத் திருப்பதிகங்களாகிய வேதத்தை யருளிச்செய்யும் திருஞானசம்பந்தப்பிள்ளையார், பொருளையும்-மெய்ஞ்ஞானத்தையும் - போகத்தையும் தம்மைத் துதிக்கும் அடியார்களுக்குக் கொடுத்தருளும் அருட்கண்ணராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருவரத்துறையைவந்து சேர்ந்தருளினார்.—எ-று.

வடமொழியி லுள்ள வேதம் எழுதாக்கிளவியாதலின் அவற்றினின்றும் வேறு பிரித்தற்கு, 'எழுதுசொன்மறை' என்று கூறினார். சிவபெருமான் தம்மை யடைந்த மெய்யடியார்களுக்கு இம்மை மறுமை யாகிய இருவகைப் பயன்களையுந் தாமே தந்தருளுவ ரென்பார் 'பொருளு ஞானமும் போகமும் போற்றியென் பாருக் - கருளு மங்கணர்' என்று கூறினார். "பொன்னுமெய்ப் பொருளுந் தருவானைப் போகமுந் திருவும் புணர்ப்பானை" என்று அருளிச்செய்தார் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளும். (உஉச)

வந்து கோபுர மணிநெடு வாயில்சேய்த் தாகச்
சந்த நித்திலச் சிவிகைநின் றிழிந்துதாழ்ந் தெழுந்து
சிந்தை யார்வமு மகிழ்ச்சியும் பொங்கிமுன் செல்ல
வந்தி நாண்மதி யணிந்தவர் கோயிலுள் ளடைந்தார்.

(இ-ள்.) திருக்கோபுரத்தின் அழகிய நீண்ட திருவாயிலுக்குச் சிறிதுதூரமாகவந்து அழகிய முத்துச்சிவிகையினின்றும் பூமியிலிறங்கி, (ஸ்தூலலிங்கமாகிய திருக்கோபுரத்தை) நமஸ்கரித்து எழுந்து, தமது திருவுள்ளத்தில் அன்பும் மகிழ்ச்சியும் அதிகரித்து முன்னே செல்ல, மாலைக்காலத்தில் தோன்றும் இளம்பிறையையணிந்த சிவபெருமானது திருக்கோயிலினுள்ளே அடைந்தருளினார்.—எ-று.

மன்னு கோயிலை வலங்கொண்டு திருமுன்பு வந்து
சென்னி யிற்கரங் குவித்துவீழ்ந் தன்பொடு திளைப்பா
ரென்னை யும்பொரு ளாகவின் னருள்புரிந் தருளும்
பொன்ன டித்தலத் தாமரை போற்றியென் றெழுந்தார்.

(இ-ள்.) நிலைபெற்ற திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்து சுவாமிசந்நிதியில் வந்து தமது சிரசில் திருக்கரங்களைக் குவித்து நிலத்தில் வீழ்ந்து வணங்கி

அன்பில் மூழ்கிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அடியேனையும் ஒருபொருளாக மதித்து இனிய திருவருள் புரிந்தருளிய அழகிய திருவடித்தாமரைகளுக்கு நமஸ்காரமென்று எழுந்தருளினர்.—எ-று. (உஉகூ)

வேறு.

சூடி னார்கர கமலங்கள் சொரிந்திழி கண்ணீ
ராடி னார்திரு மேனியி லரத்துறை விரும்பி
நீடி னார்திரு வருட்பெருங் கருணையே நிகழப்
பாடி னார்திருப் பதிகமே ழிசையொடும் பயில.

(இ-ள்.) தாமரைமலர்போன்ற திருக்கரங்களைச் சிரசின்மேற் சூடினர்; தமது திருமேனிமுழுதும் கண்களினின்றும் சிந்தி வீழ்கின்ற ஆனந்தபாஷ்பத்தில் மூழ்கினர்; திருவரத்துறையென்னுந் திருக்கோயிலை விரும்பி நிலைபெற்றெழுந்தருளும் சிவபெருமானது திருவருளாகிய பெருங்கருணையைப் பெறும்படி ஏழிசைகளும் பொருந்தத் திருப்பதிகம் பாடியருளினர்.—எ-று. (உஉஎ)

இசைவி ளங்கிட வியல்பினிற் பாடிநின் றேத்தி
மிசைவி ளங்குநீர் வேணியா ரருளினன் மீண்டு
திசைவி ளங்கிடத் திருவருள் பெற்றவர் சிலநா
ளசைவில் சீர்த்தொண்டர் தம்முட னப்பதி யமர்ந்தார்.

(இ-ள்.) எட்டுத்திக்கி லுள்ளவர்களும் கடைத்தேறும்பொருட்டுச் சிவபெருமானது திருவருளைப்பெற்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார் ஏழிசைகளும் விளங்க முறைமைப்படி திருப்பதிகத்தை யருளிச்செய்து நின்று துதித்து, ஆகாய கங்கை விளங்கும் சடைமுடியையுடைய சிவபெருமானது திருவருளினல் திருக்கோயிலினின்றுந் திரும்பி, நீங்காத சிறப்பினையுடைய திருத்தொண்டர்களோடு அத்திருநெல்வாயிலரத்துறையென்னுந் திருப்பதியில் சிலநாள் வீற்றிருந்தருளினர்.

தேவர் தம்பிரான் றிருவரத் துறையினி லிறைஞ்சி
மேவு நாட்களில் விமலனர் நெலவெண்ணெய் முதலாத்
தாவி லன்பர்க டம்முடன் றொழுதுபின் சண்பைக்
காவ லாரருள் பெற்றுடன் கலந்துமீண் டணைந்தார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் தேவர்கள் நாயகராகிய சிவபெருமானது திருவரத்துறையை வணங்கி அங்கு எழுந்தருளியிருக்குநாள்களில், மலரகிதராகிய அவ்வெம்பெருமான் வீற்றிருந்தருளும் திருநெல்வெண்ணெய் முதலிய திருப்பதிகளைக் கெடாத (மெய்யன்பினை யுடைய) அடியார்களுடன் வணங்கிப் பின்பு திருவருள் பெற்று அடியார்களோடு கலந்து மீளவும் திருவரத்துறையை யடைந்தருளினர்.—எ-று. (உஉகூ)

விளங்கு வேணுபு ரத்திருத் தோணிவீற் றிருந்த
களங்கொள் கண்டர்தங் காதலி யாருடன் கூட
வுளங்கொ ளப்புகுந் துணர்வினில் வெளிப்பட வுருகி
வளங்கொள் பூம்புனற் புகலிமேற் செலமனம் வைத்தார்.

(இ-ள்) பலவகைச் செல்வங்களால் குறைவற்று விளங்குகின்ற சீகாழிப்பதியில்திருத்தோணி யென்னு மாலயத்தில் வீற்றிருந்தருளும் காளகண்டராகிய தோணியப்பர் தமது பிராட்டியாரோடு தம்முடைய திருவுள்ளத்தில்பொருந்த எழுந்

ருளிஉணர்வில் வெளிப்பட்டு விளங்க,அதனால் திருவுள்ளமுருகி, வளப்பம்பொருந்திய அழகிய நீர்வளமிக்க சீகாழிக்குச்செல்லும்படி திருவுளங்கொண்டருளினார்.

அண்ண லார்திரு வரத்துறை யடிகளை வணங்கி
நண்ணு பேரரு ளால்விடை கொண்டுபோய் நடங்கொண்
டுண்ணி றைந்தபூங் கழலினை யுச்சிமேற் கொண்டே
வெண்ணி லாமலர் நித்திலச் சிவிகைமேற் கொண்டார்.

(இ-ள்.) பெருமையிற் சிறந்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவரத்துறையில் வீற்றிருந்தருளும் அரத்துறைநாதனை வணங்கி, நிலைபெற்ற மிக்க திருவருளினால் விடைபெற்றுக்கொண்டு மீண்டு ஆனந்தக்கூத்தாடி, தமது திருவுள்ளத்தில் நிறைந்த அழகிய திருவடிகளைச் சிரசின்மேற்கொண்டு, வெள்ளிய நிலாவைப்போலக் கிரணங்களைவீசுகின்ற முத்துச்சிவிகையின்மேல் எழுந்தருளினார்.()

சிவிகை முத்தினிற் பெருகொளி திசையெலாம் விரிக்கக்
கவிகை வெண்மதிக் குளிரொளி கதிர்செய்வான் கலப்பக்
குவிகை மேற்கொண்டு மறையவர் குணலையிட் டாடப்
புவிகை மாறின்றிப் போற்றவந் தருளினார் போந்தார்.

(இ-ள்.) முத்துச்சிவிகையினின்று முண்டாகின்ற மிக்க ஒளியானது திக்குகள்தோறும் பரவவும், முத்துக்குடையின் வெள்ளிய சந்திரன்போன்ற குளிர்ந்த ஒளியானது விளங்குகின்ற ஆகாயத்தில் பரவவும், தம்மைச் சூழ்ந்துவருகின்ற பிராமணர்கள் குவித்தகைகளைச் சிரசின்மேல் வைத்துக்கொண்டு குணலையிட்டுக் கூத்தாடவும், உலகத்திலுள்ள ஆன்மகோடிகளால் யாதொரு கைம்மாறும் அடையாமல் அவர்களை இரட்சிக்கும்பொருட்டு அவதரித்தருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் சென்றருளினார்.—எ-று.

குணலை யென்பது சந்தோஷ மிகுதியினால் கைதட்டிக் கூவும் ஓரொலி. கைம்மாறு=பிரதியுபகாரம். (உ௩உ)

மறைமு ழங்கின தழங்கின வண்டமிழ் வயிரின்
குறைந ரன்றன முரன்றன வளைக்குலங் காள
முறைமி யம்பின வியம்பல வொலித்தன முரசப்
பொறை கறங்கின பிறங்கின போற்றிசெய் யரவம்.

(இ-ள்.) வேதங்கள் ஆரவாரித்தன; சிறந்த திருநெறித்தமிழ்வேதம் ஒலித்தன; ஊதுகொம்புகள் சப்தித்தன; சங்குகளும் எக்காளங்களும் ஒலித்தன; பலவாத்தியங்களும் முறைப்படி ஒலித்தன; மலைபோன்ற பெரிய முரசவாத்தியங்கள் முழங்கின; சிவனடியார்கள் ஹரஹர வென்று துதிசெய்கின்ற பேரோசைகள் ஒலித்தன:—எ-று. (உ௩௩)

உடைய பிள்ளையார் வருமெல்லை யுள்ளவப் பதியோர்
புடையி ரண்டினுங் கொடியொடு பூந்துகில் விதான
நடைசெய் காவணந் தோரணம் பூகநற் கதலி
மிடையு மாலைகள் நிறைகுடம் விளக்கொடு நிரைத்தார்.

(இ-ள்.) நம்மை அடிமையாகவுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருநெல்வாயிலரத்துறை முதலிய ஸ்தலங்களைத் தெரிசித்துக்கொண்டு சீகாழிப்பதிக்கு எழுந்தருளிவரும் சமயத்தில், இடையிலுள்ள க்ஷேத்திரங்களிலிருக்கும் அடி

யார்கள் இரண்டுபக்கங்களிலும் கொடிகளையும், அழகிய பட்டுக்களாலாகிய விதானங்களையும், நடைப் பந்தல்களையும், தோரணங்களையும், கமுகமரங்களையும், நல்ல வாழைமரங்களையும், நெருங்கிய பூமாலைகளையும், பூரணகும்பங்களையும், மங்கலதீபங்களையும் வரிசையாகவைத்தார்கள்.—எ-று.

விதானம்=மேற்கட்டி. (உ௩௪)

அனைய செய்கையா லெதிர்கொளும் பதிகளா னவற்றின்
வினைத ரும்பவந் தீர்ப்பவர் கோயில்கண் மேவிப்
புனையும் வண்டமிழ் மொழிந்தடி பணிந்துபோந் தணைந்தார்
பனைநெ டுங்கைமா வுரித்தவர் மகிழ்பெரும் பழுவூர்.

(இ-ள்.) அத்தன்மையாகிய செய்கைகளோடு எதிர்கொண்டுவணங்கும் அத்திருப்பதிகளில்,இருவினைகளாலுண்டாகின்ற பிறவித்துன்பத்தையொழித்தருளும் சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கோயில்களையடைந்து, இனியசொற்களைப் புனைந்து பாடுகின்ற சிறந்த தமிழ்ப்பதிகங்களை யருளிச்செய்து சிவபெருமான் திருவடிகளை வணங்கி, பின், பனைபோன்ற நீண்ட துதிக்கையினையுடைய கயாசுரனென்னும் யானையையுரித்தருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருப்பழுவூர் வீரட்டம் என்னும் ஸ்தலத்தை யடைந்தருளினார்.—எ-று. (உ௩௫)

வேறு.

அங்கணைந் திளம்பிறை யணிந்த சென்னியார்
பொங்கெழிற் கோபுரந் தொழுது புக்கபின்
றுங்கநீள் விமானத்தைச் சூழ்ந்து வந்துமுன்
பங்கயச் சேவடி பணிந்து பாடுவார்.

(இ-ள்.) அத்திருப்பழுவூரை யடைந்து இளம்பிறை யணிந்த சிரத்தினையுடைய சிவபெருமானது மிக்க அழகுபொருந்திய திருக்கோபுரத்தை வணங்கி உள்ளேபுகுந்த பின்பு, மிகவும் உயர்ந்தவிமானத்தைப் பிரதக்ஷணஞ்செய்து சுவாமி சந்நிதியில்வந்து நின்று தாமரைமலர்போன்ற சிவந்த திருவடிகளை வணங்கித் திருப்பதிகம் பாடுகின்றவரானார்.—எ-று. (உ௩௬)

மண்ணினிற் பொலிகுல மலையர் தாந்தொழு
தெண்ணில்சீர்ப் பணிகள்செய் தேத்துந் தன்மையி
னண்ணிய வகைசிறப் பித்து நாதரைப்
பண்ணினிற் றிகழ்திருப் பதிகம் பாடினார்.

(இ-ள்.) உலகத்தில் அழகோடு விளங்குகின்ற சிறந்த மலையாளர்கள் வணங்கி அளவில்லாத சிறந்த திருத்தொண்டுகளைச் செய்து வணங்குந்தன்மையினால், அம்மலையாளரைப் பொருந்திய முறைப்படி சிறப்பித்துச் சிவபெருமானைப் பண்ணோடு விளங்குகின்றதிருப்பதிகம்பாடி யருளினார்.—எ-று. (உ௩௭)

---

**திருப்பழுவூர் திருவிராகம் - பண் - இந்தளம்.**

திருச்சிற்றம்பலம்.

**எண்ணுமொரொழுத்துமிசையின்கிளவிதேர்வார்**
**கண்ணுமுதலாயகடவுட்கிடமதென்பர்**

மண்ணின்மிசையாடிமலையாளர்தொழுதேத்திப்
பண்ணிசைகொண்டுபயில்கின்றபழுவூரே.

அந்தணர்களானமலையாளரவரேத்தும்
பந்தமலிகின்றபழுவூரரனையாரச்
சந்தமிகுஞானசமபந்தனுரைபேணி
வந்தவணமேத்துமவர்வானமுடையாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - வடமூலநாதர், தேவியார் - அருந்தவநாயகியம்மை.

---

பாவின திசைவழி பாடி யங்ககன்
றியாவருந் தொழுதுட னேத்த வெய்தினர்
மூவுல குய்யநஞ் சுண்ட மூர்த்தியார்
மேவிய பெருந்திரு விசய மங்கையில்.

(இ-ள்.) திருப்பாசுரத்திற்கேற்ற இசையின்வழியே திருப்பதிகம் அருளிச்செய்து, அத்தலத்தினின்றும் நீங்கி, தம்மை எல்லாரும்வணங்கித் துதிக்க, சுவர்க்க மத்திய பாதலமென்னும் மூன்றுலகத்தாரும் உய்யும்பொருட்டு (திருப்பாற்கடலிற்றோன்றிய) ஆலாகல விஷத்தை யுண்டருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பெருமைபொருந்திய திருவிசயமங்கையென்னும் ஸ்தலத்திற்கு எழுந்தருளினர்.—எ-று. (உகூஅ)

அந்தணர் விசயமங் கையினி லங்கணர்
தந்தனி யாலயஞ் சூழ்ந்து தாழ்ந்துமுன்
வந்தனை செய்துகோ தனத்தை மன்னிய
செந்தமிழ் மாலையிற் சிறப்பித் தேத்தினர்.

(இ-ள்.) பிராமணர்கள் நிறைந்து வாழ்ந்திருக்கும் திருவிசயமங்கையில் வீற்றிருந்தருளும் சிவபெருமானது ஒப்பற்றதிருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்து வணங்கித் திருமுன்னின்று துதித்து, "கோதனம்" என்பதைப் பொருந்திய திருப்பதிகமாலையிற் சிறப்பித்துப் பாடி யருளினர்.—எ-று.

இத்தலத்தில் பசுவானது சிவபெருமானைப் பூசித்துப் பேறுபெற்ற காரணத்தினால் 'கோதனத்தை மன்னிய' என்று கூறியருளினர். கோதனம் என்பது பசு. (உகூகூ)

---

திருவிசயமங்கை - பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

கீதமுன்னிசைதரக்கிளரும்வீணையர்
பூதமுன்னியல்வுடைப்புனிதர்பொன்னகர்
கோதனம்வழிபடக்குலவுநான்மறை
வேதியர்தொழுதெழுவிசயமங்கையே.

விண்ணவர்தொழுதெழுவிசயமங்கையை
நண்ணியபுகலியுண்ஞானசம்பந்தன்

பண்ணியசெந்தமிழ்ப்பத்தும்வல்லவர்
புண்ணியர்சிவகதிபுகுதறிண்ணமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - விசயநாதர்; தேவியார் - மங்கைநாயகியம்மை.

---

விசயமங் கையினிட மகன்று மெய்யர்தா
னசைவில்வை காவினி லணைந்து பாடிபபோந்
திசைவளர் ஞானசம் பந்த ரெய்தினார்
திசையுடை யாடையர் திருப்பு றம்பயம்.

(இ-ள்.) திருவிசயமங்கையினின்றும் நீங்கி,மெய்ப்பொருளாகிய சிவபெருமான் நீங்காதெழுந்தருளிய திருவைகாவென்னுந் திருப்பதியையடைந்து திருப்பதிகம் அருளிச்செய்து, அவவிடத்தினின்றும் எழுந்தருளித் திக்குகளை ஆடையாகவுடைய சிவபெருமான் எழுந்தருளிய திருப்புறம்பயமென்னும் ஸ்தலத்தைப் புகழ்வளர்கின்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார் அடைந்தருளினார்.—எ-று. (உசO)

புறம்பயத் திறைவனை வணங்கிப் போற்றிசெய்
திறம்புரி நீர்மையிற பதிகச் செந்தமிழ்
நிறம்பயி லிசையுடன் பாடி நீடிய
வறந்தரு கொள்கையா ரமர்ந்து மேவினார்.

(இ-ள்.) திருப்புறம்பயத்தி லெழுந்தருளிய சாக்ஷிநாதனை வணங்கித் துதிசெய்யுந் திறத்தினால் திருநெறித் தமிழ்வேதமாகிய திருப்பதிகத்தை நன்மைபொருந்திய ஏழிசைகளும் அமையப்பாடியருளி, மிக்க சிவதருமங்களை விருத்திசெய்கின்ற கொள்கையினையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அத் தலத்தில் விரும்பி எழுந்தருளினார்.—எ-று. (உசக)

அத்திருப் பதிபணிந் தகன்று போயனற்
கைத்தலத் தவாபதி பிறவுங் கைதொழு
முத்தமிழ் விரகரா முதல்வர் நண்ணினார்
செய்த்தலைப் பணிலமுத் தீனுஞ் சேய்ஞலூர்.

(இ-ள்.) அத்திருப்புறம்பயத்தை வணங்கி அவவிடத்தினின்றும்நீங்கி,மழுப்படையேந்திய திருக்கரத்தை யுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் மற்றையக்ஷேத்திரங்களையும் வணங்குகின்ற முத்தமிழ் விரகராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் வயல்களில் சங்குகள் முத்துகளையீனும் திருச்சேய்ஞலூரை யடைந்தருளினார்.—எ-று. (உசஉ)

திருமலி புகலிமன் சேரச் சேய்ஞலூ
ரருமறை யவர்பதி யலங்க ரித்துமுன்
பெருமறை யொடுமுழ வொலிபி றங்கவே
வருமுறை யெதிர்கொள வந்து முந்தினார்.

(இ-ள்.) பலவகைச்செல்வங்களும்நிறைந்தசீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளவும், திருச்சேய்ஞலூரில்வாழும் அரியவேதங்களையுணர்ந்த பிராமணர்கள் அந்தஸ்தலத்தை யலங்காரஞ்செய்து, தம்முன்னே சிற

ந்த வேதங்களோடு முழவப்பறையின் ஓசையதிகரிக்க எதிர்கொண்டு வரவேண்டிய முறைமைப்படியேவந்து சேர்ந்தார்கள்.—எ-று. (உ௬௩)

ஞானசம் பந்தரு காய ஞர்சடைத்
தூநறுந் தொடையன்முன் சூட்டும் பிள்ளையார்
பான்மையில் வரும்பதி யென்று நித்தில
யானமுன் னிழிந்தெதி ரிறைஞ்சி யெய்தினார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப் பிள்ளையாரும், சிவபெருமான் தமது சடைமுடியில் தரித்த பரிசுத்தம்பொருந்திய நல்ல திருமாலையை முன்னேசூட்டி யருளப்பெற்ற சண்டேசப்பிள்ளையார் பத்திமுறைமைப்படி அவதரித்தருளிய திருப்பதியாகுமென்று முத்துச்சிவிகையி னின்று மிறங்கியருளி எதிரேவணங்கி அத்திருச்சேய்ஞலூரை யடைந்தருளினார்.—எ-று. (உ௬௪)

மாமறை யாளர்வண் புகலிப் பிள்ளையார்
தாமெழுந் தருளிடத் தங்கள் பிள்ளையார்
காமரும பதியில்வந் தருளக் கண்டன
ராமகிழ் வுடன்பணிந் தாடி யார்த்தனர்.

(இ-ள்.) அத் திருச்சேய்ஞலூரில் வாழும் மகத்தாகிய வேதங்களையுணர்ந்த பிராமணர்கள், வளப்பம்பொருந்திய சீகாழியி லவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரெழுந்தருளவும், தங்கள் மரபில் முன்ன ரவதரித்தருளிய சண்டேசப்பிள்ளையார் அழகுபொருந்திய அத்திருப்பதியில் மீளவும் எழுந்தருளக்கண்டவர்கள்போல மகிழ்வோடு வணங்கி ஆனந்தக்கூத்தாடி யாரவாரித்தார்கள்.—எ-று.

களித்தனர் புண்ணியக் கரக வாசநீர்
தெளித்தனர் பொரிகளு மலருஞ் சிந்தினர்
துளித்தனர் கண்மழை சுருதி யாயிர
மளித்தவர் கோயிலு ளவூர்முன் பெய்தினார்.

(இ-ள்.) சந்தோஷித்தார்கள் ; புண்ணியமயமான கமண்டலத்திலுள்ள மணங்கமழும் நல்ல நீரைத் தெளித்தார்கள் ; பொரிகளையும் மலர்களையுமிறைத்தார்கள் ; தமது கண்களினின்றும் ஆனந்தபாஷ்பஞ் சிந்தினார்கள் ; அளவில்லாத வேதங்களை யருளிச்செய்த சிவபெருமானது திருக்கோயிலினுள்ளே அத்திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு எதிரில் வந்தார்கள்.—எ-று. (உ௬௬)

வெங்குரு வேந்தரும் விளங்கு கோயிலைப்
பொங்கிய விருப்பினாற் புடைவ லங்கொடு
செங்கைகள் சென்னிமேற் குவித்துச் சென்றுபுக்
கங்கணா மூன்புற வணைந்து தாழ்ந்தனர்.

(இ-ள.) சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் விளங்குகின்ற திருக்கோயிலை மிக்க பேரன்போடு பக்கத்தில் பிரதக்ஷணஞ்செய்து சிவந்த திருக்கரங்களைச் சிரசின்மேற் குவித்துச்சென்று உள்ளே நுழைந்து, கருணாநிதியாகிய சிவபெருமான் சந்நிதியில் வந்து நின்று வணங்கியருளினார்.—எ-று.(உ௬௭)

வேதியர் சேய்ஞலூர் விமலர் தங்கழல்
காதலிற் பணிந்தவர் கருணை போற்றுவார்

தாதைதா டடிந்தசண் டீசப் பிள்ளையார்
பாதகப் பயன்பெறும் பரிசு பாடினார்.

(இ-ள்.) பிராமணர்கள் வாழும் திருச்சேய்ஞலூரில் வீற்றிருந்தருளும் சிவபெருமான் திருவடிகளை அன்போடு வணங்கி அவ்வெம்பெருமானது திருவருளைத் துதிசெய்கின்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார், தாம் செய்யுஞ் சிவபூசைக்கு இடையூறு செய்த தந்தையாகிய எச்சதத்தனது கால்களை வெட்டியருளிய சண்டீசப்பிள்ளையார் செய்த பாதகத்தின் பயனாகிய திருவருளைப் பெற்றதன்மையைத் தமது திருப்பதிகத்தில் அமைத்துப் பாடியருளினார்.—எ-று.

பாதகப்பயன்பெறும் பரிசாவது-சண்டீசப்பிள்ளையார் தாம்செய்யும் சிவகருமஞ் சிதைத்தவன் தமது தந்தையென்று சிறிதும்யோசியாமல் அவனது தாளைத் துணித்த பாதகத்தின்பயனாகச் சிவபெருமான் தாமணிந்த திருத்தாம முதலியவற்றைத் தரித்துச் சிவகணத்தலைவராய் வீற்றிருக்கச்செய்தமையை. இதனை,

"தாதையைத் தாளற வீசிய சண்டிக்கு மண்டத்தொடு முடனே
பூதலத் தோர்கள் வணங்கப்பொற் கோயிலும் போனக முமருளிச்
சோதி மணிமுடித் தாமமு நாமமுந் தொண்டர்க்கு நாயகமும்
பாதகத் துக்குப் பரிசுதந் தானுக்கே பல்லாண்டு கூறுதுமே."— என்னும்
அருள்வாக்கியத்தா னுணர்க. (உசஅ)

---

திருச்சேய்ஞலூர் - பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

பீரடைந்தபாலதாட்டப்பேணாதவன்றாதை
வேரடைந்துபாய்ந்ததாளைவேர்தடிந்தான்றனக்குத்
தாரடைந்தமாலைசூட்டித்தலைமைவகுத்தலென்னே
சீரடைந்தகோயின்மல்குசேய்ஞலூர்மேயவனே.

சேயடைந்தசேய்ஞலூரிற்செல்வன்சீர்பரவித்
தோயடைந்ததண்வயல்சூழ்தோணிபுரத்தலைவன்
சாயடைந்தஞானமல்குசம்பந்தனின்னுரைகள்
வாயடைந்துபாடவல்லார்வானுலகாள்பவரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் பெயர் - சத்தகிரீசர், தேவியார் - சகிதேவியம்மை.

---

இன்னிசை வண்டமிழ் பாடி யேத்தியு
நன்னெடும் பதியுளோர் நயக்க வைகிய
பின்னர்வெண் பிறையணி வேணிப் பிஞ்ஞகர்
மன்னிய திருப்பனந் தாள்வ ணங்கினார்.

(இ-ள்.) இனிய இசைபொருந்திய சிறந்த தமிழ்ப்பதிகத்தை யருளிச்செய்து துதித்து, நன்மைமிகுந்த அத்திருச்சேய்ஞலூரில் வாழ்பவர்கள் தம்மை விரும்பும்படி யெழுந்தருளியபின்பு, வெண்மையாகிய இளம்பிறையையணிந்த சடைமு

டையையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருப்பனந்தாளென்னும் ஸ்தலத்தையடைந்து வணங்கினார்.—எ-று. (உசகூ)

ஆங்கணி சொன்மலர் மாலை சாத்தியப்
பாங்குபக் தணைநல்லூர் பணிந்து பாடிப்போய்த்
தீங்குதீர் மாமறைச் செம்மை யந்தண
ரோங்குமோ மாம்புலி யூர்வந் துற்றனர்.

(இ-ள்) அத்திருப்பதியில் அழகிய சொற்களாகிய மலரால் தொடுக்கப்பட்ட திருப்பதிகமாலையை யருளிச்செய்து அத்திருப்பதியின் அருகிலுள்ள திருப்பந்தண நல்லூரையடைந்து வணங்கித் திருப்பதிகம் பாடியருளி, அவ்விடத்தினின்று நீங்கிக் குற்றமற்ற பெரிய வேதங்களையுணர்ந்த நல்லொழுக்கமுடைய பிராமணர்கள் சிறப்புற்று வாழும் திருவோமாம் புலியூர்வந்து சேர்ந்தருளினார்.—எ-று.

மற்றநற் பதிவட தளியின் மேவிய
வற்புத ரடிபணிந் தலர்ந்த செந்தமிழ்ச்
சொற்றொடை பாடியங் ககன்று சூழ்மதிற்
பொற்பதி வாழ்கொளி புத்தூர் புக்கனர்.

(இ-ள்.) அந்த நல்ல திருவோமாம்புலியூரில் வடதளியென்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமானது திருவடிகளைவணங்கி மலர்ந்த செந்தமிழ்ச்சொற்களாலாகிய திருப்பதிகமாலையை யருளிச்செய்து அத்திருப்பதியினின்று மெழுந்தருளி, மதில்சூழ்ந்த அழகிய திருப்பதியாகிய திருவாழ்கொளிபுத்தூரை யடைந்தருளினார்.—எ-று. (உருக)

சீவளர் கோயிலை யணைந்து தேமலர்க்
கார்வளர் கண்டர்தாள் பணிந்து காண்பவர்
பார்புகழ் பதிகங்கள் பாடி நீடுவார்
வார்பொழிற் கடம்பையும் வணங்கி மீண்டனர்.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய திருக்கோயிலையடைந்து, தேன்பொருந்திய நீலோற்பல மலர்போன்ற காளகண்டத்தையுடைய சிவபெருமானது திருவடிகளை வணங்கித் தெரிசிக்கும் திருஞானசம்பந்தப்பிள்ளையார் உலகத்தார் புகழும் திருப்பதிகங்களை யருளிச்செய்து செல்கின்றவராய் நீண்ட சோலைகள்சூழ்ந்த திருக்கடம்பையென்னும் க்ஷேத்திரத்தையும் வணங்கி அவ்விடத்தினின்று மெழுந்தருளினார்.—எ-று. (உருஉ)

நம்பனை நலந்திகழ் நாரை யூரினிற்
கும்பிடும் விருப்பொடு குறுகிக் கூடிய
வம்பலர் செந்தமிழ் மாலை பாடிநின்
றெம்பிரான் கவுணியர் தலைவ ரேத்தினார்.

(இ-ள்.) எமது பெருமானும் கவுணியர் குலத்தலைவருமாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் நன்மைமிகுந்த திருநாரையூரில் வீற்றிருந்தருளும் சிவபெருமானைவணங்கும் விருப்பத்தோடு சென்றருளிச் சிவமணங்கமழும் திருநெறித் தமிழ்ப்பதிகமாலையை யருளிச்செய்து துதித்தருளினார்.—எ-று. (உருங)

அப்பதி பணிந்தருந் தமிழ்பு னைந்துதம்
மெய்ப்படு விரும்பொடு மேவு நாளரன்

பொற்பதி பலவுமுன் பணிந்து போந்தனர்
பைப்பணி யவர்கருப் பறிய லூரினில்.

(இ-ள்.) அத் திருநாரையூரை வணங்கி அருமையாகிய தமிழ்ப்பதிகத்தை யருளிச்செய்து உண்மை பொருந்திய அன்போடு எழுந்தருளியிருக்கும்நாள்களில், சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளையும் வணங்கிக்கொண்டு படத்தையுடைய சர்ப்பத்தை ஆபரணமாகத்தரித்த சிவபெருமானது திருக்கருப்பறியலூர் என்னும் ஸ்தலத்திற்கு எழுந்தருளினார்.—எ-று. (உருச)

பரமர்தங் கழல்கருப் பறிய லூரினிற்
சிரபுரச் சிறுவர்கை தொழுது செந்தமி
ழுரையிசை பாடியம் மருங்கி னுள்ளவாஞ்
சுரர்தொழும் பதிகளுந் தொழுது பாடினார்.

(இ-ள்.) சீகாழியி லவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிவபெருமானது திருவடிகளைத் திருக்கருப்பறியலூரில் சென்று வணங்கிச் செந்தமிழ்ச்சொற்களோடுகூடிய இசைபொருந்திய திருப்பதிகத்தை யருளிச்செய்து,அத்திருப்பதியின் பக்கங்களி லுள்ளனவாகிய தேவர்கள் வணங்கும் (திருநின்றியூர் முதலிய) பல திருப்பதிகளையும் வணங்கித் திருப்பதிகம் பாடியருளினார்.—எ-று. ()

வேறு.

மண்ணுலகு செய்ததவப் பயனா யுள்ள வள்ளலா ரப்பதிகள் வணங்கி யேகி, யெண்ணின்முர சிரங்கியெழப் பணில மார்ப்ப விலங்கியகா ளஞ்சின்ன மெங்கு மூதக், கண்வளர்மென் கரும்புமிடை கதிர்ச்செஞ் சாலி கதலிகமு குடனோங்குங் கழனி நாட்டுத், தெண்ணிலவு சூடியநம் பெருமான் வைகுந் திருப்பிரம புரஞ்சாரச் செல்லும் போது.

(இ-ள்.) நிலவுலகத்தி லுள்ளவர்கள் செய்த தவப்பயனாக விளங்குகின்ற அருள்வள்ளலாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அந்தத் திருப்பதிகளை வணங்கிக்கொண்டு எழுந்தருளி, அளவில்லாத முரசவாத்தியங்கள் சப்தித்து எழவும், சங்கவாத்தியங்கள் ஒலிக்கவும், விளங்குகின்ற எக்காளமும் - முத்துச்சின்னமும் எவ்விடங்களிலு மூதவும், கணுக்கள் நிறைந்த மெல்லிய கரும்புகளும், நெருங்கிய கதிர்களையுடைய செந்நெற்பயிர்களும், வாழைமரங்களும், கமுகமரங்களும் ஓங்கி வளர்ந்திருக்கும் வயல்கள் சூழ்ந்த சோழநாட்டில், தெள்ளிய கிரணங்களையுடைய சந்திரனையணிந்த நமது பெருமானாகிய தோணியப்பர் வீற்றிருந்தருளும் சீகாழிப்பதியையடையச் செல்லும்பொழுது.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (உருரு)

பிள்ளையா ரெழுந்தருளக் கேட்ட செல்வப் பிரமபுரத் தருமறையோர் பெருகு காத, லுள்ளமகிழ் சிறந்தோங்கத் தோணி மேவு முமைபாகர் கழல்வணங்கி யுவகை கூர, வெள்ளமறை யொலிபெருகு மறுகு தோறு மிடைமகர தோரணங்கள் கதலி பூகந், தெள்ளுபுன னிறைகுடங்க டீப தூபஞ் செழுங்கொடிக ணிரைத்தெதிர்கொள் சிறப்பிற் செல்வார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளுதலைக் கேள்விப்பட்ட செல்வம்நிறைந்த சீகாழியில் வாழும் அரிய வேதங்களையுணர்ந்த பிராமணர்கள் மிருந்த அன்பினால் தமது உள்ளத்தில் மகிழ்ச்சியதிகரித்தோங்கவும், திருத்தோ

ணியென்னு மாலயத்தில் வீற்றிருந்தருளும் பார்வதிபாகராகிய தோணியப்பரது திருவடிகளை வணங்கி (திருஞானசம்பந்தப்பிள்ளையாரது வருகைலயக் குறித்து) சந்தோஷ மதிகரிக்கவும், கூட்டமான வேதங்களின் ஓசை மிகுந்த திருவீதிகள் தோறும் நெருங்கிய மகரதோரணங்களையும், வாழைமரங்களையும், கமுகமரங்களையும், தெளிந்த நீர்நிறைந்த பூரணகும்பங்களையும், தீபங்களையும், தூபங்களையும் செழுமையாகிய கொடிச்சீலைகளையும் வரிசையாக வைத்து எதிர்கொண் டழைத்துவருவதற்குரிய சிறப்போடு செல்கின்றவரானார்கள்.—எ-று. (௨௫௭)

ஆரணங்கண் மதுரவொலி யெழுந்து பொங்க வரசிலையுந் தருப்பையும்பெய் தணிந்த வாசப், பூரணகும் பங்கணிறை கரக மேந்திப் புதுமலரு நறுந்துகளும் பொரியுந் தூவி, வாரணங்கு முலையுமையாள் குழைத்த செம்பொன் வள்ளத்தி லமுதுண்ட வள்ள லாரைச், சீரணங்கு மணிமுத்தின் சிவிகைமீது செழுந்தாளக் குடைநிழற்கீழ்ச் சென்று கண்டார்.

(இ-ள்.) வேதங்களையோதுகின்ற இனிய வோசையெழுந்து அதிகரிக்கவும், அரசிலையையும் தருப்பையையும்வைத்து அலங்கரிக்கப்பெற்ற வாசனைபொருந்திய பூர கும்பங்களையும்-நிறைந்த கரகங்களையுந் தாங்கிக்கொண்டு, புதிய மலர்களையும்- நல்ல பொற்சுண்ணப்பொடிகளையும்-பொரிகளையுந்தூவி, கச்சணிந்த அழகிய ஸ்தனங்களையுடைய உமாதேவியார் சிவந்த பொற்கிண்ணத்தில் சிவஞானத்தோடு குழைத்து ஊட்டிய திருமுலைப் பாலையுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரை அழகு விளங்கு முத்துச்சிவிகையின்மேல் செழுமைபொருந்திய முத்துக்குடையின் நிழலின் கீழ்ச்சென்று தெரிசித்தார்கள்.—எ-று (௨௫௮)

கண்டபொழு தேகைக டலைமேற் கொண்டு கண்களிப்ப மனங்களிப்பக் காதல் பொங்கித், தொண்டர்களு மறையவருஞ் சென்று சூழ்ந்து சொல்லிறந்த மகிழ்ச்சியினாற் றுதித்த வோசை, யெண்டிசையு நிறைவித்தா ராடை வீசி யிருவிசும்பின் வெளிதூர்த்தா ரேறு சீர்த்தி, வண்டமிழ்நா யகருமிழிந் தெதிரே சென்று வணங்கியவ ருடன்கூட மகிழ்ந்து புக்கார்.

(இ-ள்.) அவ்வாறு தெரிசித்தபொழுதே தமது கைகளைச் சிரசின்மேற்கூப்பிக் கண்கள் களிப்படையவும் மனங்களிப்படையவும் அன்பு அதிகரித்து திருத்தொண்டர்களும், பிராமணர்களும் சந்நிதியில்சென்று சூழ்ந்து அளவில்லாத சந்தோஷத்தினால் துதிசெய்த வோசையை எட்டுத்திக்குகளிலும் நிறையச்செய்தார்கள் ; தமது உத்தரீயங்களைவீசிப் பெரியஆகாயத்தின் வெளியை மறைந்தார்கள்; உயர்ந்த கீர்த்தியையுடைய வளம்பொருந்திய திருநெறித் தமிழ்த்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் முத்துச்சிவிகையினின் றுமிறங்கி அவர்களுக் கெதிரில்சென்று வணங்கி அவர்களோடுகூட மகிழ்ச்சியடைந்து சீகாழிநகரத்திற் புகுந்தருளினார்.—எ-று. (௨௫௯)

திங்களணி மணிமாட மிடைந்த வீதி சென்றணைந்து தெய்வமறைக் கற்பின் மாதர், மங்கலவாழ்த் திசையிரண்டு மருங்கு மல்க வானவர்நாயகர்கோயின் மருங்கு சார்ந்து, துங்கநிலைக் கோபுரத்தை யிறைஞ்சிப் புக்குச் சூழ்ந்துதிருத் தோணிமிசை மேவி னார்க, டங்கழரு முன்புதாழ்ந் தெழுந்து நின்று தமிழ்வேதம் பாடினார் தாளம் பெற்றார்.

(இ-ள்.) சிவபெருமானிடத்துப் பொற்றாளம்பெற்றருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் சந்திரனையளாவிய அழகிய மாடங்கள்நிறைந்த திருவீதியைச் சென்றுசேர்ந்து, தெய்வத்தன்மைபொருந்திய வேதியர் குலத்திற்பிறந்த கற்பினையுடைய பிராமணஸ்திரிகள் செய்யும் மங்கலவாழ்த்தின் ஓசையானது இரண்டுபக்கங்களிலும் நிறைய, தேவர்கள் நாயகராகிய சிவபெருமான் திருக்கோயிலின் சமீபத்தையடைந்து, உயர்ந்த நிலைகளோடுகூடிய திருக்கோபுரத்தை வணங்கி யுள்ளேபுகுந்து பிரதக்ஷணஞ்செய்து திருத்தோணியில் எழுந்தருளிய தோணியப்பரோடு பெரிய நாயகியாரது சந்நிதியில் நமஸ்கரித்து எழுந்துநின்று திருநெறித் தமிழ்வேதமாகிய திருப்பதிகம் பாடியருளினார்.—எ-று. (உகூ0)

பரவுதிருப் பதிகவிசை பாடி நீடும் பரன்கருணைத் திருவருளின் பரிசு போற்றி, விரவுமலர்க் கண்பனிப்பக் கைகள் கூப்பி வீழ்ந்தெழுந்து புறம் போந்து வேத வாய்மைச், சிரபுரத்துப் பிள்ளையார் செல்லும் போது திருநீல கண்டயாழ்ப் பாணர் பின்னே, வரவவரை வளம்பெருகு மனையிற்போக வருள்செய்து தந்திருமா ளிகையின் வந்தார்.

(இ-ள்.) வேதங்களின் மெய்ப்பொருளையுணர்ந்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் யாவரும் புகழத்தக்க இசைபொருந்திய திருப்பதிகத்தை யருளிச்செய்து, சிறந்த சிவபெருமானது திருவருளின் தன்மையைத்துதித்து, கருணைபொருந்திய தாமரைமலர்போன்ற திருக்கண்கள் ஆனந்தபாஷ்பஞ்சிந்தத் திருக்கரங்களைச் சிரசிற்குவித்து சாஷ்டாங்கமாக வணங்கியெழுந்து புறத்தில்வந்து செல்லும்பொழுது திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனார் பின்றொடர்ந்துசெல்ல, அப்பெரும்பாணனை அவரிருக்கும் சிறந்த திருமனைக்குப் போகும்படி அருள்செய்து, தமது திருமாளிகைக்கு எழுந்தருளினார்.—எ-று. (உகூக)

மறையவர்க ளடிபோற்றத் தந்தை யாரு மருங்கணைய மாளிகையிலணையும் போதி, னிறைகுடமு மணிவிளக்கு முதலா யுள்ள நீடுமறைக் குலமகளிர் நெருங்கி யேந்த, விறைவர்திரு நீற்றுக்காப் பேந்தி முன்சென் றீன்றதா யார்சாத்தி யிறைஞ்சி யேத்த, முறைமையவர்க் கருள்செய்து மடத்திற் புக்கார் முதல்வர்பான் மணிமுத்தின் சிவிகை பெற்றார்.

(இ-ள்.) முதற்கடவுளாகிய சிவபெருமானிடத்து அழகிய முத்துச்சிவிகையைப்பெற்றருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் பிராமணர்கள் தமது திருவடிகளைவணங்கத் தந்தையாராகிய சிவபாதவிருதயரும் பக்கத்தில்வரத் திருமாளிகைக்கு எழுந்தருளும்பொழுது, பூரணகும்பமும், இரத்தினதீபமும் முதலிய மங்கலப்பொருள்களைச் சிறந்த வேதியர்குலப்பெண்கள் நெருங்கி யேந்திவரவும், சிவபெருமானது திருநீற்றுக்காப்பினைக் கையிலெடுத்துத் திருமுன்சென்று பகவதியம்மையார் திருநெற்றியிலிட்டுச் சிவபெருமானை வணங்கித்துதிக்க, அவரவர்களுக்கேற்ற முறைமைப்படியே கருணைசெய்து திருமடத்திற் புகுந்தருளினார்.—எ-று. (உகூஉ)

செல்வநெடு மாளிகையி லமர்ந்து நாளுந் திருத்தோணி மிசையாரைச் சென்று தாழ்ந்து, மல்குதிருப் பதிகங்கள் பலவும் பாடி மனமகிழ்ந்து போற்றிசைத்து வைகுநாளி,லொல்லைமுறை யுபநயனப் பருவமெய்த வுலகிறந்த சிவஞான முணரப் பெற்றார், தொல்லைமுறை விதிச்சடங்கு மறையோர் செய்யத் தோலேோடு நூ லணிந்தார் சுரர்கள் போற்ற.

(இ-ள்.) செல்வம்பொருந்திய உயர்ந்த திருமாளிகையி லெழுந்தருளி நாள்தோறும் தோணியப்பரை யடைந்துவணங்கிச் சிறந்த பல திருப்பதிகங்களை யருளிச்செய்து திருவுள்ள மகிழ்ந்து துதித்து அங்கு எழுந்தருளியிருக்கும் நாள்க ளில், வேதவிதிப்படி செய்யும் உபநயனப்பருவம் விரைந்துவந்தடைய, உலகத் தினரால் உணரப்படாத சிவஞானத்தை யுணர்ந்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் பழையமுறைமையான விதிப்படியே உபநயனச்சடங்குகளைப்பிராமணர்கள் செ ய்யத் தோலோடு சேர்ந்த உபவீதத்தைத் தேவர்கள் துதிக்கும்படி தரித்தருளி னர்.—எ-று.

தோலொடுநூல் தாங்குதலாவது – இரண்டங்குல வளவினதாகத் தறித்த மான்றோலோடு சேர்ந்த பூணூலைத் தரித்தலென வறிக. (உகூரு)

ஒருபிறப்பு மெய்தாமை யுடையார் தம்மை யுலகியல்பி னுபநயன முறைமை யாகு, மிருபிறப்பி னிலைமையினைச் சடங்கு காட்டி யெய்து விக்கு மறைமுனிவ ரெதிரே நின்று, வருதிறத்தின் மறைநான்குந் தந்தோ மென்று மந்திரங்கண் மொழிந்தவர்க்கு மதுர வாக்காற், பொருவிறப்ப வோதினர் புகலி வந்த புண்ணியரு ரெண்ணிறந்த புனித வேதம்.

(இ-ள்.) எழுவகைப்பிறப்பினுள் ஒரு பிறப்பையும் அடையப் பெறுதவரா கிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரை உலகத்தின் முறைமைப்படிசெய்யும் விதியா கிய துவிசனுந்தன்மையைச் சடங்குகளால்காட்டி யடையச்செய்கின்ற வேதங் களையுணர்ந்த பிராமணர்கள் அவரெதிரோநின்று, ஓதிவருகின்ற முறைமையினையு டைய நான்கு வேதங்களையும் உமக்குத் தந்தோமென்று மந்திரங்களைக்கூறும் அப் பிராமணர்களுக்குச் சீகாழிப்பதியி லவதரித்தருளிய புண்ணிய சொரூபராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் மதுரம்பொருந்திய தமதுதிருவாக்கினால் ஒப்பெடுத் துரைத்தலில்லாவண்ணம் எண்ணிறந்த பரிசுத்தமான வேதங்களை யோதியருளி னர்.—எ-று.

“உதியா மரியா வுணரா மறவா - விதிமா லறியா விமலன் புதல்வா” என் று கூறும் அருள்வாக்கியப்படியே யோங்கி விளங்கும் ஸ்ரீசுப்பிரமணியக்கடவுள து அபராவதாரமூர்த்தியாகலின் எமது ஆளுடையபிள்ளையாரை ‘ஒருபிறப்புமெ ய்தாமை யுடையார்தம்மை’ என்று கூறியருளினர். ‘தந்தோம்’ என்பதனை, தந்து ஓம் எனப் பிரித்து, கொடுத்து ஓம் என்று கூறி, எனினும் பொருந்தும்.

சுருதியா யிரமோதி யங்க மான தொல்கலைக ளெடுத்தியம்புந் தோ ன்ற லாரைப், பருதியா யிரகோடி விரிந்தா லென்னப் பரஞ்சோதி யருள் பெற்ற பான்மை மேன்மை, கருதியா தரவோடும் வியப்புற் றேத்துங் க லைமறையோர் கவுணியனூர் தம்மைக் கணமுன், வருதியா னப்பொருளெ ன் றிறைஞ்சித் தாமுன் வல்லமறை கேட்டையந் தீர்ந்து வாழ்ந்தார்.

(இ-ள்.) அநேகம் வேதங்களை யெடுத்தோதி, அவற்றின் அங்கமாகிய பழைய ஆறுகலைகளையும் எடுத்து அருளிச்செய்யுந் தலைவராகிய திருஞானசம்பந் தப் பிள்ளையாரை, ஆயிரங்கோடிசூரியர்களுதித்தாற்போல விளங்கும் மிக்க சோ திசொரூபராகிய தோணியப்பரது திருவருளைப்பெற்ற மேன்மையைச் சிந்தித்து அன்போடும் அதிசயித்துத் துதிக்கும் கலைகளையுணர்ந்த பிராமணர்கள் திருஞான சம்பந்தப்பிள்ளையாரைத் தம்முன் பிரத்தியட்சமாகவருகின்ற தியானம்பொருளே

யென்று கருதி வணங்கித் தாங்கள் முன்பு பயின்ற வேதப்பொருள்களைக் கேட்டு அதனால் சந்தேகந்தீர்ந்து வாழ்ந்தார்கள்.—எ-று.

வேதங்கள் சாகோபசாகைகளாகப் பலவாறு விரிந்துகிடத்தலின், 'சுருதி யாயிரமோதி' என்றும், மந்திரம் - வியாகரணம் - நிகண்டு - சந்தோபிசிதம்-நிருத்தம் - சோதிட மென்னு மாறும் அவ் வேதத்திற்கு அங்கமாயுள்ளதென்பது தோன்ற, 'அங்கமான தொல்கலைகள்' என்றும், சோம சூரி யாக்கினி யென்னும் முச்சுடருக்கும் பேரொளியைத் தரும் அருட்பெருஞ்சோதி யென்பது தோன்ற, 'பரஞ்சோதி' என்றும், தியானப்பொருள் பிரத்தியக்ஷமாதல்போலத் திருஞான சம்பந்தப்பிள்ளையாரும் அவர்கண்முன் காணநிற்றலின், 'வருதியானப்பொருள்' என்றும், வேதியர்கள் தாங்கள் முன்பே பழகியுள்ள வேதங்களின் மெய்ப்பொருள்களை யெமது பிள்ளையார்பாற் கேட்டு அதனால் தெளிவடைந்தார்களென்பது தோன்ற, 'தாமுன்வல்லமறைகேட்டையந்தீர்ந்துவாழ்ந்தார்' என்றுங் கூறினர்.

மந்திரங்க ளானவெலா மருளிச் செய்து மற்றவற்றின் வைதிகநூற் சடங்கின் வந்த,சிந்தைமயக் குறுமையந் தெளிய வெல்லாஞ் செழுமறை யோர்க் கருளியவர் தெளியு மாற்றான், முந்தைமுதன் மந்திரங்க ளெல்லாந் தோன்று முதலாகு முதல்வனு மெழுத்தஞ் சென்பா, ரந்தியினுண் மந்திரமஞ் செழுத்து மேயென் றஞ்செழுத்தின் றிருப்பதிக மருளிச் செய்தார்.

(இ-ள்.) வேதத்திலுள்ள எல்லாமந்திரங்களையும் அருளிச்செய்து,அம்மந்திரங்களில் வேதவிதிப்படிசெய்யுஞ் சடங்குகளிலுண்டாகிய மனத்தைமயக்குகின்ற சந்தேகந்தீரும்படி எல்லாவற்றையும்சிறந்த பிராமணர்களுக்கு ஓதியருளி அவர்கள் தெளிவடையும்பொருட்டு, முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமானது ஸ்ரீபஞ்சாக்ஷரமே பழைய முதன்மைபொருந்திய மந்திரங்களெல்லாந் தோன்றுதற்கு முதற்காரணமென்பவராய் "அந்தியுண் மந்திரமஞ்செழுத்துமே" என்னும் இறுதியையுடைய ஸ்ரீபஞ்சாக்ஷரத் திருப்பதிகத்தை யருளிச்செய்தார்.—எ-று. (உகூகூ)

---

### ஸ்ரீ பஞ்சாக்ஷரத்திருப்பதிகம் - பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

துஞ்சலுந் துஞ்சலிலாதபோழ்தினு
நெஞ்சகநைந் துநினைமினாடொறும்
வஞ்சகமற்றடிவாழ்த்தவந்தகூற்
றஞ்சவுதைப்பனவஞ்செழுத்துமே.

மந்திரநான்மறையாகிவானவர்
சிந்தையுணின்றவர்தம்மையாள்வன
செந்தழலோம்பியசெம்மைவேதியர்க்
கந்தியுண்மந்திரமஞ்செழுத்துமே.

நற்றமிழ்ஞானசம்பந்தனுன்மறை
கற்றவன்காழியர்மன்னனுன்னிய

அற்றமின்மாலையீ ரைந்துமஞ்செழுத்
துற்றனவல்லவரும்பராவரே.

திருச்சிற்றம்பலம்.

அத்தகைமை பிள்ளையா ரருளிச் செய்ய வந்தணர்க ளருடலைமேற் கொண்டு தாழ்ந்து, சித்தமகிழ் வொடுசிறப்பத் தாமுந் தெய்வத் திருத் தோணி யமர்ந்தாரைச் சென்று தாழ்ந்து, மெய்த்தவிசைப் பதிகங்கள் கொண்டு போற்றி விரைமலர்த்தாண் மனங்கொண்டு மீண்டு போந்து, பத்தருட னினிதமரும் பண்புகூடப் பரமர்தாள் பணிந்தேத்திப் பயிலு நாளில்.

(இ-ள்.) அவவாறு திருஞானசம்பந்தப்பிள்ளையார் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்திருப் பதிகத்தை யருளிச்செய்ய, அதனைக்கேட்ட பிராமணர்கள் அவரது திருவருளைச் சிரமேற் கொண்டு வணங்கி மனமகிழ்ச்சி யடைய, திருஞானசம்பந்தப்பிள் ளையாரும் (அந்தப் பிராமணர்களோடு) தெய்வத்தன்மைபொருந்திய திருத்தோணி யில் வீற்றிருந்தருளுந் தோணியப்பரைச்சென்று வணங்கி, மெய்ம்மைபொருந்திய இசையினையுடைய திருப்பதிகங்களை அருளிச்செய்து துதித்து, அவ்வெம்பெருமா னது வாசனைபொருந்திய தாமரைமலர்போன்ற திருவடிகளைத் தம்மனதிற் சிந்தி த்துத் திருமாளிகைக்கு எழுந்தருளி, அடியார்களோடுசந்தோஷித்திருக்கும் திரு க்கூட்டப் பொலிவுபொருந்தச் சிவபெருமானது திருவடிகளை வணங்கித் துதித்து எழுந்தருளியிருக்கும் நாள்களில்.—எ-று. (உ௬எ)

வேறு.

பந்தணை மெல்விர லாளும் பரமரும் பாய்விடை மீது
வந்துபொன் வள்ளத் தளித்த வரம்பின்ஞா னத்தமு துண்ட
செந்தமிழ் ஞானசம் பந்தர் திறங்கேட் டிறைஞ்சுதற் காக
வந்தணர் பூந்தராய் தன்னி லணைந்தனர் நாவுக் கரையர்.

(இ-ள்.) பந்துபொருந்திய மெல்லிய விரல்களையுடைய உமாதேவியாரும் சிவபெருமானும் பாய்ந்து செல்கின்ற இடபவாகனத்தின்மீதுஎழுந்தருளிப் பொற் கிண்ணத்திற் கறந்தூட்டிய அளவில்லாத சிவஞானமாகிய திருமுலைப்பாலமுதத் தையுண்டருளிய சிறந்த தமிழ்த்தலைவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரது பெருமையைக் கேள்வியுற்று அவரைவணங்கும்பொருட்டு, பிராமணர்கள்வாழும் சீகாழிப்பதிக்குத் திருநாவுக்கரசுசுவாமிகள் எழுந்தருளினர்.—எ-று. (உ௬அ)

வாக்கின் பெருவிறன் மன்னர் வந்தணைந் தாரெனக் கேட்டுப்
பூக்கமழ் வாசத் தடஞ்சூழ் புகலிப் பெருந்தகை யாரு
மாக்கிய நல்வினைப் பேறென் றன்பர் குழாத்தொடு மெய்தி
யேற்கும் பெருவிருப் போடு மெதிர்கொள வெய்தும் பொழுதில்.

(இ-ள்.) மிகச்சிறந்த திருவாக்கினையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் தம் மைக் காணும்பொருட்டுச் சீகாழிக்கு எழுந்தருளினரென்று கேள்வியுற்று, மலர் கள் வாசனைவீசுகின்ற தடாகங்கள் சூழ்ந்த சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந் தப் பிள்ளையாரும் (இவரெழுந்தருளியது) நாம்செய்தநல்வினைப்பயனென்று அடி

யார் திருக்கூட்டத்தோடும் சென்று எற்கின்ற மிக்க விருப்பத்தோடும் அவரை யெதிர்கொள்ளும்படி எழுந்தருளும்பொழுது.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (உ௬௯)

சிந்தை யிடையறா வன்புந் திருமேனி தன்னி லசைவுங்
கந்த மிகையாங் கருத்துங் கையுழ வாரப் படையும்
வந்திழி கண்ணீர் மழையும் வடிவிற் பொலிதிரு நீறு
மந்தமி லாத்திரு வேடத் தரசு மெதிர்வந் தணைய.

(இ-ள்.) தமது திருவுள்ளத்தில் நீங்காத அன்பும், திருமேனியில் முதுமை காரணமாக வுண்டாகிய தளர்ச்சியும், இந்திரியங்களா லுணரப்படும் விஷயங்களனைத்துங் குற்றமேயென்னுங் கருத்தும், திருக்கரத்தில் உழவாரப்படையும்,அன்புகாரணமாகத் தோன்றிச் சொரிகின்ற ஆனந்தக்கண்ணீராகிய மழையும், திருமேனியில் விளங்குகின்ற திருவெண்ணீறுமாகிய அளவில்லாத திருவேடத்தினையுடைய திருநாவுக்கரசுசுவாமிகளும் தமக்குஎதிரில் எழுந்தருளிவரவும். எ-று.

கண்ட கவுணியக் கன்றுங் கருத்திற் பரவுமெய்க் காதற்
றொண்டர் திருவேட நேரே தோன்றிய தென்று தொழுதே
யண்டரும் போற்ற வணைந்தங் கரசு மெதிர்வந் திறைஞ்ச
மண்டிய வார்வம் பெருக மதுர மொழியருள் செய்தார்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் இவ்வாறு எழுந்தருளுதலைப் பார்த்தருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரும், உள்ளத்திற் சிவபெருமானைத் துதிக்கின்ற மெய்யன்பினையுடைய அடியார் திருவேடம் எதிரேகாணப்பட்டதென்று வணங்கித் தேவர்களும் துதிக்க அடைந்தருளி, அவ்விடத்துத் திருநாவுக்கரசுசுவாமிகளும் தமக்கெதிரேவந்து வணங்க, மிக்க அன்பானது அதிகரிக்க மதுரமகிய பிரியவசனங்களை அவருடன் அருளிச்செய்தார்.—எ-று.

'கருத்திற்பரவுமெய்க்காதல்' என்பது தொண்டர் என்பதற்கு விசேடணமாக்கப்பட்டது. அன்றி, ஆளுடையபிள்ளையார் பக்ஷங்கொள்ளுங்கால்,திருஞானசம்பந்தப் பிள்ளையாரும் தமது திருவுள்ளத்தில் வழிபட்டுத் துதிக்கின்ற மெய்யன்பினையுடைய அடியார் திருவேடம், எனக் கூட்டுக. கவுணியக்கன்றும் தொழுது அணைந்து அருள்செய்தார் என முடிக்க. (உ௭௧)

பேரிசை நாவுக் கரசைப் பிள்ளையார் கொண்டுடன் போந்து
போர்விடை யார்திருத் தோணிப் பொற்கோயி லுட்புகும் போதி
லார்வம் பெருக வணையு மவருடன் கும்பிட் டருளாற்
சீர்வளர் தொண்டரைக் கொண்டு திருமா ளிகைதனிற் சேர்ந்தார்.

(இ-ள்.) மிகுந்தகீர்த்தியையுடைய திருநாவுக்கரசுசுவாமிகளைத் திருஞானசம்பந்தப்பிள்ளையார் எதிர்கொண்டழைத்துச் சென்று,போர்செய்கின்ற இடபவாகனத்தையுடைய தோணியப்பரது அழகிய திருக்கோயிலினுள்ளே சென்றருளும்பொழுது அன்பு அதிகரிக்கத் தம்முடன் வருகின்ற திருநாவுக்கரசுசுவாமிகளோடு தோணியப்பரை வணங்கி, அவ்வெம்பெருமானது திருவருளினால், சிறப்புவளர்கின்ற அத்திருநாவுக்கரசரையழைத்துக்கொண்டு தமது திருமாளிகைக்கு எழுந்தருளினார்.—எ-று.

பொற்கோயில்—பொன்மயமாகிய கோயில் எனினுமாம். (உ௭௨)

அணையுந் திருத்தொண்டர் தம்மோ டாண்ட வரசுக்கு மன்பா
லிணையி றிருவமு தாக்கி யியல்பா லமுதுசெய் வித்துப்
புணரும் பெருகன்பு நண்பும் பொங்கிய காதலிற் கும்பிட்
டுணருஞ்சொன் மாலைகள் சாத்தி யுடன்மகிழ் வெய்தி யுறைந்தார்.

(இ-ள்.) தம்மோடெழுந்தருளிய திருத்தொண்டர்களோடு திருநாவுக்கரசுசுவாமிகளுக்கும் அன்பினால் ஒப்பில்லாத திருவமுதுசமைத்து முறைமைப்படி திருவமுதுசெய்வித்து, மிகுதியாகப்பொருந்திய அன்பும் சிநேகமும்அதிகரிக்கின்ற ஆசையோடு தோணியப்பரைவணங்கி மெய்ப்பொருளை யுணர்தற்குரிய தமிழ்ச்சொற்களாலாகிய திருப்பதிகங்களை யருளிச்செய்து அவருடன் மகிழ்ச்சியடைந்து எழுந்தருளியிருந்தார்.—எ—று. (உஎங)

அந்நாள் சிலநாள்கள் செல்ல வருட்டிரு நாவுக் கரையர்
மின்னார் சடையண்ண லெங்கு மேவிடங் கும்பிட வேண்டிப்
பொன்மார்பின் முந்நூல் புனைந்த புகலிப் பிரானிசைவோடும்
பின்னாக வெய்த விறைஞ்சிப் பிரியாத நண்பொடு போந்தார்.

(இ-ள்.) அவ்வாறு சிலநாள்கள் செல்லவும், அருட்செல்வராகிய திருநாவுக்கரசுசுவாமிகள் மின்னலைப்போல விளங்கும் சடைமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் ஸ்தலங்களெவ்விடத்துஞ்சென்று வணங்க விருப்பங்கொண்டு அழகிய திருமார்பில் முப்புரிநூலையணிந்த சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் சம்மதத்துடன் (வழிவிடுதற்பொருட்டு) தமக்குப் பின்னே (சிறிதுதூரம்) எழுந்தருள, அவரைவணங்கி நீங்காத நண்புடன் எழுந்தருளினார்.

திருநாவுக்கரையர் கும்பிடவேண்டி இறைஞ்சிப் போந்தார் எனக்கூட்டுக.

வாக்கின் றனிமன்ன ரேக மாறாத் திருவுளத் தோடும்
பூக்கம ழும்பணை சூழ்ந்த புகலியின் மீண்டும் புகுந்து
தேக்கிய மாமறை வெள்ளத் திருத்தோணி வீற்றிருந் தாரைத்
தூக்கின் றமிழ்மாலை பாடித் தொழுதங் குறைகின்ற நாளில்.

(இ-ள்.) ஒப்பற்ற திருநாவுக்கரசுசுவாமிகள் சென்றருள,அவரிடத்தினின்று நீங்காத திருவுள்ளத்தோடும் தாமரைமலர்கள் வாசனைவீசுகின்ற வயல்கள் சூழ்ந்த சீகாழிப்பதிக்கு மீளவும் சென்றருளி, உயர்ந்த வேதங்கள் நிறைந்த திருத்தோணியென்னு மாலயத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமானைச் செய்யுட்களாலாகிய திருப்பதிகமாலையை யருளிச்செய்து வணங்கி அங்கு எழுந்தருளியிருக்கும் நாள்களில்.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (உஎரு)

செந்தமிழ் மாலை விகற்பச் செய்யுட்க ளான்மொழி மாற்றும்
வந்தசொற் சீர்மாலை மாற்றும் வழிமொழி யெல்லா மடக்குஞ்
சந்தவி யமகமேக பாதந் தமிழிருக் குக்குறள் சாத்தி
யெந்தைக் கெழுகூற் றிருக்கை யீரடி யீரடி வைப்பு.

(இ-ள்.) செந்தமிழ்ப்பதிகங்களை விகற்பமான செய்யுட்களினால் திருமொழிமாற்றும்,முன்வந்த சொல்லோடுகூடிய சீராலாகியஅடியை அப்படியே மாற்றிச் சொல்லுகின்ற திருமாலைமாற்றும், திருவழிமொழியும், எல்லா அடிகளினுக்கு மடக்

காய் வருகின்ற சந்தத்தையுடைய திருஇயமகமும், திருஏகபாதமும், இனிய தமிழ்ச்சொற்களமைந்த திருவிருக்குக்குறளுமாகிய திருப்பதிகங்களை யருளிச்செய்து, எமது சிவபெருமானுக்குத் திருவெழுகூற்றிருக்கையும், ஈரடிமேல் ஈரடிவைப்பும். இதுமுத லிரண்டுபாட்டுங் குளகம். (உஎசு)

---

திருமொழிமாற்று-பண்-வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

* காடதணிகலங்காரரவம்பதிகாலதனிற்
றோடதணிகுவர்சுந்தரக்காதினிற்றூச்சிலம்பர்
வேடதணிவர்விசயற்குருவம்வில்லுங்கொடுப்பர்,
பீடதணிமணிமாடப்பிரமபுரத்தாரே.

கல்லுயர்கழுமலவிஞ்சியுண்மேவியகடவுடன்னை
நல்லுயர்ஞானசம்பந்தன்ஞானத்தமிழினன்குணர்தல்
சொல்லுதல்கேட்டல்வல்லோர்தொல்லைவானவர்தங்களோடுஞ்
செல்குவர்சீரருளாற்பெறலாஞ்சிவலோகமதே.

திருச்சிற்றம்பலம்.

---

சீகாழி - திருமாலைமாற்று.

திருச்சிற்றம்பலம்.

யாமாமாநீயாமாமா யாழீகாமாகாணுகா,
காணுகாமாகாழீயா,மாமாயாநீமாமாயா.

(இதன்பொருள்.)

யாமாமா என்பது - எனது ஆத்மபோத சேட்டையுங் கருவிகளின் சேட்டையும் இவைகளால் அவைகள் ஆமாறெவ்வாறென்னில், நீயாமாம் எ - து - அறிவுக்கறிவாய் நிற்கின்ற நினது சேட்டையொழிந்து வேறொன்றற்ற சற்காரியமாயுள்ளவனே, மாயாழீ- எ-து- மிகுதிப்பட்டு மேலாயிருந்துள்ள நாதசொரூபமாயிராநின்ற யாழையுடையானே, அத்தன்மை மிகுதிப்பட்டு நலஞ்சிறந்துள்ள யாழை யிடைவிடாமல் தடவி வாசித்தலான் மகாநல்ல வீணைதடவியென்றும் பொருள். கா - இது இடைநிலை, மாகாணுகா - எ-து - பரமாகாசத்தைக் கீழ்ப்படுத்தப்பட்டு மலைகளுக்கெல்லாங் குலமலையாகிய ஸ்ரீகயிலாயத்தின் கண்ணே யெழுந்தருளி யிருப்பவனே, காணுகா - எ-து - என்னுள்ளக் கண்ணுக்குத் தோன்றப்பட்டுள்ள திருமேனியையுடையானே, மாகாழீயா - எ-து-ஊழிகாலத்தின் கண்ணும் அழிவின்மையாகிய மேன்மையைப் பொருந்தியுள்ள காழியையுடையானே,மாம் எ-து-ஈங்குன தருள்பெறுத பேரிழப்பையுடையமாகிய எம்மை, ஆயாநீ - எ - து- இடபவாகனத்தின் கண்ணே யேறிவந்தெனக்குப் பொய்கைக்கரையின் கண்ணே வெளிப்பட்டவனே. மாமாயா-எ-து- மாமாயையாகிய குடிலையைக்கொண்ட சுத்தமாயையினுள்ள தத்துவங்களையுண்டாக்கிக் கன்மம் புசித்தல் காரணமாகத் திரோதாயி சத்தியாலே மறைத்துள்ள மயக்கமேயறிவாகப் பெத்தத்தைச் செலுத்தப்ப

---

*காடது-பதி. அணிகலம்-காரரவம். காலதனிற்றூச்சிலம்பர்.தோடதணிகுவர் சுந்தரக்காதினில். வேடதணிவர் உருவம். விசயற்கு வில்லுங்கொடுப்பர் இவ்வாறு மொழிமாற்றத்தக்கது.

ட்டவனே, இடையே கிறுத்தின, கா - எ-து - அந்த மாயாமயக்கம், என தறிவிற் சிவியாமல் ஒழித்து உன்னை யெனக் குள்ளபடி தந்து என்னை நீ இகழாமற்கொண்டு இவ்வாறு நீ யிரண்டறவாழ்ந்து இரக்ஷிப்பாயாக.—என்றவாறு.

நேரகழாமிதயாசைழிதா யேனோகியேனோகிளாயுழிகா
காழியுளாகினையேகினையே தாழிசையாதமிழாகரனே.

(இதன்பொருள்.)

நேரகழாமிதயாசைழிதா - என்பது - மானைக் காட்டி மானைப் பிடிப்பது போல வெனற்பால திருமேனி கொண்டருளி யென்னை யொருகாலத்திலும் விட்டு நீங்கப்படாமல் எனனிடத்திலே மிருதியாகச் சீவிக்கப்பட்ட மலத்திரயங்களாகிய குற்றங்களை அழியாநின றுள்ளவனே, ஏனோகி - எ து - உனது பரிபூரணமான அணுவுருவநிலையில எனக்குண்டான தாசோகநிலையெல்லா நீயே, ஏனோகிளாயுழி - எ-து - என்னிடததிலே நின்று என்னை யொழித்துக் கோதிலாவமுதாக நீயேவாழப்பட்டு என்னைச் சிறிதுந் தோன்றவிடாமல் இரட்சியாநின்றுள்ளவனே, காழியுளா எ-து - இத்தன்மையான பிரமசாயுச்சியத்தை அடியேற்குப் பிரசாதிப்பான பொருட்டாகக் காழியென்னும்பதியைப்படைத்துள்ளானே என தொருவிண்ணப்பத்தைக் கேட்டருள்வாயாக, கினையே கினையே தாழிசை-எ-து உன்னைச் செய்யுட் கருத்தாகவுடைய இம் மாலைமாற்றென்னும் பெயரையுடையதுமாய் விரிந்துள்ள பாடலானது, ஆதமிழாகரனே - எ-து ஐயோ தமிழுக்குப் படுதுறையாகிய யான் எனது போதத்தாற்பாடிய பாடலென்று உலகத்தாருரை செய்வதே யாதலால் நீயறிய யான பாடியதில்லை யெனகின்ற செய்தி யுனக்கே நிகழுமாதலால், இப்பாடலையேத்தத் தவஞ்செய்தாரு மடிமை குலையாத சாயுச்சியத்தைப் பெறுவார்கள்.—என்றவாறு.

திருச்சிற்றம்பலம்.

---

### திருவழிமொழித்திருவிராகம்-பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

சுரருலகுநரர்கள்பயில்தரணிதலமுரணழியவரணமதின்முப்
புரமெரியவிரவுவகைசரவிசைகொள்கரமுடையபரமனிடமாம்
வரமருளவரன்முறையினிரனிரைகொள்வருசுருதிசிரவுரையினாற்
பிரமனுயரரனெழிலகொள்சரணவிணைபரவவளரபிரமபுரமே.

ஒழுகலரிதழிகலியினுழியுலகுபழிபெருகும்வழியைநினையா
முழுதுடலிலெழுமயிர்கடழுவுமுனிகுழுவினொடுகெழுவுசிவனைத்
தொழுதுலகிலிழுகுமலமழியுமவகைகழுவுமுரைகழுமலநகர்ப்
பழுதிலிறையெழுதுமொழிதமிழ்விரகனவழிமொழிகள் மொழிதகையவே

திருச்சிற்றம்பலம்.

---

### திருக்கோமூத்திரி-பண்-காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பூமகனூர்புத்தேளுக்கிறைவனூர்குறைவிலாப்புகலிபூமேன்
மாமகளூர்வெங்குருநற்றோணிபுரம்பூந்தராய்வாய்ந்தவிஞ்சிச்

சேமமிகுசிரபுரஞ்சீர்ப்புறவகிறைபுகழ்ச்சண்பைகாழிகொச்சை
காமனைமுன்காய்ந்தநுதற்கண்ணவனூர்கழுமலநாங்கருதுமூரே.

அம்மான்சேர்கழுமலமாச்சிரபுரம்வெங்குருகொச்சைபுறவமஞ்சீர்
மெய்ம்மானத்தோணிபுகலிமிகுகாழிதோணிபுரந்தேவர்கோனூர்
அம்மான்மன்னுயர்சண்பைதராயனூர்வழிமடக்குமாவின்பாய்ச்சல்
தம்மானென்றியஞானசம்பந்தன்றமிழ்கற்போர்தக்கோர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கழுமலம் - திருஇயமகம்.

திருச்சிற்றம்பலம்.

உற்றுமைசேர்வதுமெய்யினையேயுணர்வதுநின்னருள்மெய்யினையே
கற்றவர்காய்வதுகாமனையேகனல்விழிகாய்வதுகாமனையே
யற்றமறைப்பதுமுன்பணியேயமரர்கள்செய்வதுமுன்பணியே
பெற்றமுகந்ததுகந்தனையேபிரமபுரத்தையுகந்தனையே.

கற்றவர் காய்வது காமனையே-என்பது உனது சத்தியதரிசனத்தை யிலைவறக் கற்றவர்கள் விடப்பட்டது பசுத்துவம்பொருந்தியக்ஷேத்திரமாகிய தேகாதிபிரபஞ்சமே.

அற்ற மறைப்பது முன்பணியே-என்பது உனது நிருவாணத்தை மறைப்பது முன் தொங்கலான பாம்புகளே. மற்றவை வெளிப்படை.

பருமதின்மதுரைமன்னவையெதிரேபதிகமதெழுதிலையவையெதிரே
வருநதியிடைமிசைவருகரனேவசையொடுமலர்கெடவருகரனே
கருதலின்னிசைமுரல்தருமருளேகழுமலமமரிறைதருமருளே
மருவியதமிழ்விரகன்மொழியேவல்லவர்தம்மிடர்திடமொழியே.

(இதன்பொருள்.)

பருமதின் மதுரைமன்னவை யெதிரே - எ - து - பருத்தமதில்சூழ்ந்த மதுரைக்குப் பதியாகியபாண்டியராசனது சபைக்குமுன்பே,பதிகமதெழுது-எ-து திருப்பதிகம் எழுதப்பட்ட, இலையவை-எ-து-ஏடுகளானவை, வருநதியிடைமிசை வருகரனே-எ-து-வருகின்ற வைகையாற்றினடுவே எதிரிட்டுப் போம்வகை துணைசெய்து செலுத்திப் போக்குகின்ற திருக்கரங்களையுடையவனே, வசையொடும் அலர்கெட - எ-து - ஏடெதிர்போக விசயஞ்செய்து சமணரது புறனுரையும் பரிபவச்சொல்லும் கெடுவான்பொருட்டு, அருகு - எ - து - சமணரை, அரனே-எ-து கெடுக்கப்பட்டவனே, கருதலின்னிசைமுரல் தருமருளே - எ-து - கேட்போரது கருத்தையழிக்கும் இசைத் திறத்துக் குரியாருமாய்த் தன்மசீலருமாகிய மறையோர்வாழ்கின்ற, கழுமலம் அமர் இறை தருமருளே - எ-து - திருக்கழுமலத்தின்கண் வீற்றிருக்கும் தம்பிரான், பிரசாதத்திருவருளை, மருவியதமிழ்விரகன்மொழியே - எ-து - இடைவிடாமற் பொருந்திய தமிழ்விரகனாகிய யான்பாடிய பாடலையே, வல்லவர்தம்மிடர் திடமொழியே - எ-து - சொல்கின்றவர்களுடைய பிறவித்துன்பமானது விட்டுநீங்குமது சத்தியமே.—எ-று.

திருச்சிற்றம்பலம்.

திருஏகபாதம் - பண் - வியாளக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

பிரமபுரத்துறைபெம்மானெம்மான்
பிரமபுரத்துறைபெம்மானெம்மான்
பிரமபுரத்துறைபெம்மானெம்மான்
பிரமபுரத்துறைபெம்மானெம்மான்.

(இதன்பொருள்.)

பிரம புரத்துறை பெம்மானெம்மான் - என்பது - பிரமம் - ஞானுகாசமாகிய பராசத்தியை, புரத்து-அந்தப் பரிபூரணத்தை, உறை- மிகுதியாக வியக்கப்பட்ட, பெம்மான்-பெருமான், எம்மான்-எந்தப்பெரியோன்; (இனிப்பொழிப்பு) ஞானுகாசமாகிய பராசத்தியான பரிபூரணத்தை மிகுதியாக வியந்து அந்தப் பராசத்திக்கு அதீதமாகிய சுகமே வடிவாய் முதல் நடு விறுதி காணப்படாத வஸ்து எந்தப்பெரியோன். பிரமபுரத்துறை பெம்மானெம்மான் - என்பது- பிரமம்,மேல்-புரம்-நிலம், உறை-நீர், பெம்-விருப்பம், மான்-மான்போலும் விழியையுடைய பெண், எம் - எம்மை நீங்காத நிலைமையையுடைய, ஆன்-ஆத்மா; (இனிப் பொழிப்பு) ஆகாசத்தின்கண்ணே யோடுகின்ற கங்காதேவியைவிரும்பித் திருமுடியிலேவைத்தவன் எம்மை நீங்காத நிலைமையையுடைய எமதுயிர். பிரமபுரத்துறை பெம்மானெம்மான் - என்பது - பிரமம் - பிரமத்துவம், புரம்- சரீரம், உறை- எண்ணுதல், பெம் - ஆசை, ஆன் - அமையாமை, எம்மான் - என்னையொக்கவந்தவன்; (இனிப்பொழிப்பு) பிரமரூபத்திலே யெண்ணப்பட்ட என்னை முத்தியிலேவிடுகைக்கு அமையாத இச்சையனுகிவந்தவன் என்னையொத்த தன்மையன். பிரமபுரத்துறை பெம்மானெம்மான் - என்பது - பிரமபுரத்து-பிரமபுரம் என்கின்ற சீகாழிப்பதியிலே-உறை-வீற்றிராநின்ற, பெம்மான் - கர்த்தாவானவன், எம்மான்-என்னுடைய சுவாமி; (இனிப்பொழிப்பு) பிரமபுர மென்கின்ற சீகாழிப்பதியிலே வீற்றிராநின்ற கர்த்தாவானவன் என்னுடைய சுவாமி என்றவாறு. பெரியோனும் எனக் குயிரானவனும், என்னை யொக்கவந்தவனும்,சீகாழிப்பதியில் வீற்றிருக்கும் கடவுளெனைக் கூட்டிப் பொருள்கொள்க.

கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை
கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை
கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை
கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை.

(இதன்பொருள்.)

கழுமலமுதுபதிக் கவுணியன்கட்டுரை - கழுமல்-என்பது - மிகுதிப்பட்ட குற்றம், அமுது - நீர், பதிக்க-விளைவிக்க, உணியன்-உள்ளளீ, கட்டு-வடிவாகக்கட்டுண்டல், உரை-தேய்தல்; (இனிப் பொழிப்பு) - மிகுதிப்பட்ட தோஷமாயுள்ள சுக்கில சுரோணிதமாகிய விருவகைநீரின்கண் பதிந்து விளைதற்குள்ள நீயுமாயந்தக் கருப்பாசய நீரின்கண்ணே சிரமுதலாகிய அவயவமாகத் தோற்றிப் பூமியின்கண் செனித்துப் பரிணமித்துப் பின்பு தேய்ந்து மரிக்கின்றசென்மத்தையும். பரிணமித்தல்=வேறுபடுதல். கழுமலமுதுபதிக் கவுணியன் கட்டுரை-என்பது கழு -

கழுவப்படும், மலம் உது-ஆணவமலமுமற்றதனுடன் சுட்டிச்சொல்லப்பட்டமாயா மலத்தையும், கன்மமலத்தையும், பதி-பாதி, கவுணி-உள்ளே யகப்படுத்திக் கவளீகரித்துக்கொள்ளுதல், அண்கண் - ஆத்மாவினிடத்து, துளை-இறைவர்; (இனிப் பொழிப்பு) கீழ்ச்சொல்லிப்போந்த சென்மத்தையுங் கழுவி மலத்திரயங்களையும் கழுவாநிற்கும் (என்ற பதம் நிற்க, இனிச் சிவனதுநாம முறைக்கற்பாற்று) தமது பாதியாகிய திருவருளினாலே என்னை யகப்படுத்திக் கவளீகரித்துக்கொண் டந்த அருள்வழியாக எனதிடத்தி லிடையறாமல் வாழுந் தன்னை யெனக்குத்தந் தடிமை கொலையாம லெக்கண்ணும் விட்டுவிளங்குங் கர்த்தர், பாதி எனற்பாலது பதியெனக் குறுகிநின்றது. கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை-என்பது-கழும்-மயக்கம், அலம்-அலக்கண்படுதல், அமுது - அமுதம, பதி-கர்த்தா, க-சிரசு, உணியன்-உண்ணப்பட்டவன், கட்டு - விளக்கம், உரை- பொன்; (இனிப் பொழிப்பு) மாயாமயக்கத்தின் கண்ணே மயங்கிப் பெத்தமுத்தியிரண்டுந் தெரியாமல் திண்டாட்டப்பட்ட மலபோதர்க்கு அமுதம்போன்று அரிதாயுள்ளவனுமாய் விட்டு விளங்கா நின்ற பொன்னுருவுடையவனுய்ச் சிருட்டிக்குக் கர்த்தாவாகிய பிரமனது சிரக்கபாலத்திலே பிச்சைகொண்டு நுகருங்கருணையாளன் கழுமலமுதுபதிக் கவுணியன்கட்டுரை - என்பது-கழுமல முதுபதி-கீழ்ச்சொன்ன பதியின்கண்-கவுணியன் - கவுணியகோத்திரத்துவந்த மறையோனாகிய எனது, கட்டு - காட்டாகியபாடலை, உரை-உரைப்பீராக; (இனிப்பொழிப்பு) திருக்கழுமலமென்னு மூளாப்பழங் கிழமைப்பன்னிருபெயர்பெற்ற அநாதிமூலமாகிய பதியிடத்துக் கவுணியகோத்திரத்தில் உற்பவமான யான் நிவேதிக்கப்படுங் காட்டாகிய இப்பாடலைக் கீழ்ச்சொன்ன வற்றிலும் மலத்திரயங்களிலும் அழுந்தாநின்ற ஒருத்தராகிலும் பலராகிலும் உரை செய்வார் உயர்ந்தாரே யாதலால் இப்பாடலை இடைவிடாமல் உரைசெய்வீராக என்றவாறு. காட்டு என்பது-கட்டு எனக் குறுகிநின்றது.

திருச்சிற்றம்பலம்.

இத்திருவுளக்கருத்துகள் கண்ணுடையவள்ளலார் செய்தருளியவை.

---

**திருப்பிரமபுரம் - திருவிருக்குக்குறள் - பண் - குறிஞ்சி.**

திருச்சிற்றம்பலம்.

அரனையுள்குவீர், பிரமனூருளெம்
பரனையேமனம், பரவியுய்ம்மினே.

தொழுமனத்தவர், கழுமலத்துறை
பழுதில்சம்பந்தன், மொழிகள்பற்றுமே.

திருச்சிற்றம்பலம்.

---

**திருவெழுகூற்றிருக்கை.**

திருச்சிற்றம்பலம்.

ஒருருவாயினைமானாங்காரத்
தீரியல்பாயொருவிண்முதல்பூதல
மொன்றியவிருசுடரும்பர்கள்பிறவும்
படைத்தளித்தழிப்பமும்மூர்த்திகளாயினை

யிருவரோடொருவனாகிநின்றனை
யோராநீழலுன்கழலிரண்டு
முப்பொழுதேத்தியநால்வர்க்கொளிநெறிகாட்டினை
நாட்டமூன்றாகக்கோட்டினை
யிருநதியரவமோடொருமதிசூடினை
யொருதாளீரயின்மூவிலைச்சூல
நாற்கான்மானமறியைந்தலையரவ
மேந்தினைகாய்ந்தநால்வாய்
மும்மதத்திருக்கோட்
டொருகரியீடழித்துரித்தனை
யொருதனுவிருகாலவளையவாங்கி
முப்புரத்தோடுநானிலமஞ்சக்
கொன்றுதலத்துறவவுணரையறுத்தனை
யைம்புலனாலாமந்தக்கரண
முக்குணமிருவளியொருங்கியவானோ
ரேத்தநின்றனையொருங்கியமனத்தோ
டிருபிறப்போர்ந்துமுப்பொழுதுகுறைமுடித்து
நான்மறையோதியைவகைவேள்வி
யமைத்தாறங்கமுதலெழுத்தோதி
வரன்முறைபயின்றெழுவான்றனைவளர்க்கும்
பிரமபுரம்பேணினை
யறுபதமுரலும்வேணுபுரம்விரும்பினை
யிகலியமைந்துணர்புகலியமர்ந்தனை
பொங்குநாற்கடல்சூழ்வெங்குருவிளங்கினை
பாணிமூவுலகும்புதையமேன்மிதந்த
தோணிபுரத்துறைந்தனை
தொலையாவிருநிதி
வாய்ந்தபூந்தராயேய்ந்தனை
வரபுரமென்றுணர்சிரபுரத்துறைந்தனை
யொருமலையெடுத்தவிருதிறலரக்கன்
விறல்கெடுத்தருளினைபுறவம்புரிந்தனை
முந்நீர்த்துயின்றோனான்முகனறியாப்
பண்பொடுநின்றனைசண்பையமர்ந்தனை
யைவுறுமமணருமறுவகைத்தேரரு
மூழிபுறமுணராக்காழியமர்ந்தனை
யெச்சனேழிசையோன்கொச்சையைமெச்சினை
யாறுபதமுமைந்தமர்கல்வியு
மறைமுதனான்கு
மூன்றுகாலமுந்தோன்றநின்றனை
யிருமையினொருமையுமொருமைதன்பெருமையு
மறுவிலாமறையோர்
கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை
கழுமலமுதுபதிக்கவுணியனறியு

மனையதன்மையையாதலினுன்னை,
நினையவல்லவரில்லைநீணிலத்தே.

திருச்சிற்றம்பலம்.

---

**ஈரடிமேல்வைப்பு - பண் - காந்தாரபஞ்சமம்.**

திருச்சிற்றம்பலம்.

தக்கன்வேள்விதகர்த்தவன்பூந்தராய்
மிக்கசெம்மைவிமலன்வியன்கழல்
சென்றுசிந்தையில்வைக்கமெய்க்கதி
நன்றதாகியநம்பன்றனே.

புந்தியான்மிகநல்லவர்பூந்தரா
யந்தமில்லெமதடிகளைஞானசம்
பந்தன்மாலைகொண்டேத்திவாழுநும்
பந்தமார்வினைபாறிடுமே.

திருச்சிற்றம்பலம்.

---

நாலடி மேல்வைப்பு மேன்மை நடையின் முடுகு மராகஞ்
சால்பினிற் சக்கர மாறி விகற்பங்கள் சாற்றும் பதிக
மூல விலக்கிய மாக வெல்லாப் பொருள்கோளு முற்ற
ஞாலத் துயர்காழி யாரைப் பாடினா ஞானசம பந்தர்.

(இ-ள்.) நாலடிமேல்வைப்பும், சிறப்பான ஓசை நடையில் முடுகுதலையுடைய திருவிராகமும், தகுதியாகிய சக்கரமாற்றும் முதலிய விகற்பங்களால்சொல்லப்பட்ட திருப்பதிகங்களை யாப்பியலுக்குப் பொருந்திய மூலவிலக்கியமாக அதில் எண்வகைப்பொருள்கோளும் (அணியிலக்கண முதலியவைகளும்) குறைவின்றிப் பொருந்த, நிலவுலகத்தில் உயர்ந்தோங்குகின்ற சீகாழிப்பதியில வீற்றிருந்தருளும் தோணியப்பரைத் திருஞானசம்பந்தப் பிள்ளையார் பாடியருளினர்.—எ று.

எண்வகைப் பொருள்கோளாவன:—யாற்று நீர்ப்பொருள்கோள், மொழிமாற்றுப் பொருள்கோள், நிரனிறைப்பொருள்கோள், விற்பூட்டுப்பொருள்கோள், தாப்பிசைப்பொருள்கோள், அளைமறிபாப்புப் பொருள்கோள், கொண்டுகூட்டுப் பொருள்கோள், அடிமறிமாற்றுப் பொருள்கோள் என்பன. 'எல்லாப்பொருள் கோளும்' என்ற உம்மையால், அணியும் வருவிக்கப்பட்டது. (உ.எ)

---

**நாலடிமேல்வைப்பு.**

திருச்சிற்றம்பலம்.

இயலிசையெனும்பொருளின்றிறமாம்
புயலனமிடறுடைப்புண்ணியனே
கயலனவரிநெடுங்கண்ணியொடு
மயலுலகடிதொழவமர்ந்தவனே

கலனாவதுவெண்டலைகடிபொழிற்புகலிதன்னு
ணிலநாடொறுமின்புறநிறைமதியருளினனே.

புண்ணியர்தொழுதெழுபுகலிந்நகர்
விண்ணவரடிதொழவிளங்கினனை
நண்ணியஞானசம்பந்தன்வாய்மை
பண்ணியவருந்தமிழ்பத்தும்வல்லார்
நடலையவையின்றிப்போய்நண்ணுவார்சிவனுலக
மிடரானவையின்றித்தாமெய்துவர்தவநெறியே.

திருச்சிற்றம்பலம்.

---

### திருச்சண்பைநகர் திருவிராகம் - பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

எந்தமதுசிந்தைபிரியாதபெருமானெனவிறைஞ்சியிமையோர்
வந்துதுதிசெய்யவளர்தூபமொடுதீபமலிவாய்மையதனா
லந்தியமர்சந்திபலவர்ச்சனைகள்செய்யவமர்கின்றவழகன்
சந்தமலிகொந்தளநன்மாதினொடுமேவுபதிசண்பைநகரே.

வாரின்மலிகொங்கையுமைநங்கையொடுசங்கரன்மகிழ்ந்தமருமூர்
சாரின்முரல்தெண்கடல்விசும்புறமுழங்கொலிகொள்சண்பைநகர்
பாரின்மலிகின்றபுகழ்நின்றதமிழ்ஞானசம்பந்தனுரைசெய் [மேற்
சீரின்மலிசெந்தமிழ்கள்செப்புமவர்சேர்வர்சிவலோகநெறியே.

திருச்சிற்றம்பலம்.

---

### திருச்சக்கரமாற்று - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

விளங்கியசீர்ப்பிரமனூர்வேணுபுரம்புகலிவெங்குருமேற்சோலை
வளங்கவருந்தோணிபுரம்பூந்தராய்சிரபுரம்வண்புறவமண்மேற்
களங்கமிலூர்சண்பைகமழ்காழிவயங்கொச்சைகழுமலமென்றினைய
விளங்குமரன்றன்னைப்பெற்றிமையவர்தம்பகையெறிவித்திறைவனூரே.

அக்கரஞ்சேர்தருமனூர்புகலிபூந்தராய்தோணிபுரமணிநீர்ப்பொய்கை
புக்கரஞ்சேர்புறவஞ்சீர்ச்சிலம்பனூர்புகழ்க்காழிசண்பைதொல்லூர்
மிக்கரஞ்சீர்க்கழுமலமேகொச்சைவயம்வேணுபுரமயனூர்மேவிச் [ரே.
சக்கரஞ்சீர்த்தமிழ்விரகன்றான்சொன்னதமிழ்தரிப்போர்தவஞ்செய்தோ

திருச்சிற்றம்பலம்.

இன்னிசை பாடின வெல்லாம் யாழ்ப்பெரும் பாணனார் தாமு
மன்னு மிசைவடி வான மதங்கசூ ளாமணி யாரும்
பன்னிய வேழிசை பற்றிப் பாடப் பதிகங்கள் பாடிப்
பொன்னின் திருத்தாளம் பெற்றார் புகலியிற் போற்றி யிருந்தார்.

(இ-ள்.) இனிய இசையோடுபொருந்திய திருப்பதிகங்களை யெல்லாம் சிறந்த திருநீலகண்டயாழ்ப்பாண நாயனாரும், பெருமைபொருந்திய இசையே ஓருருவங்கொண்டாற்போலவிளங்கும் மதங்கசூளாமணியென்னும் பெயரையுடைய அவரதுமனைவியாரும் இசைநூலிற்கூறிய குரல்முதலிய ஏழிசைகளையும் அமைத்துப் பாட, சிவபெருமானிடத்துப் பொன்னாலாகிய திருத்தாளம்பெற்றருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருப்பதிகங்களை யருளிச்செய்துதுதித்துச் சீகாழிப்பதியில் எழுந்தருளியிருந்தார்.—எ-று. (உஎஅ)

அங்க ணமர்கின்ற நாளி லருந்தமிழ் நாடெத்தி னுள்ளுந்
திங்கட் சடையண்ண லார்தந் திருப்பதி யாவையுங் கும்பிட்
டெங்குந் தமிழ்மாலை பாடி யேத்தியிங் கெய்துவ னென்று
தங்குலத் தாதையா ரோடுந் தவமுனி வர்க்கருள் செய்தார்.

(இ-ள்.) அச்சீகாழிப்பதியி லெழுந்தருளியிருக்கும் நாள்களில், அரிய தமிழ் நாடெங்குமுள்ள சந்திரசடாதரமூர்த்தியாகிய சிவபெருமானது திருப்பதிகளையெல்லாம் வணங்கி அத்திருப்பதிகள்தோறும் திருப்பதிகங்களை யருளிச்செய்து துதித்து,மீண்டும் இங்குவருகிறேனென்று தமதுகுலத்தந்தையாராகிய சிவபாதவிருதயரோடும் தவத்தையுடைய பிராமணர்களுக்கும் அருளிச்செய்தார்.—எ-று. (உஎக)

பெருகு விருப்புட னோக்கிப் பெற்ற குலத்தாதை யாரு
மருமையா லும்மைப் பயந்த வதனாற் பிரிந்துறை வாற்றே
னிருமைக்கு மின்ப மளிக்கும் யாகமும் யான்செய வேண்டு
மொருமையா லின்னஞ் சிலநா ளுடனெய் துவனென் றுரைத்தார்.

(இள்) திருஞானசம்பந்தப்பிள்ளையாரைப் புத்திரராகப்பெற்ற குலத்தந்தையாராகிய சிவபாதவிருதயரும் மிகுந்த விருப்பத்தோடும் பார்த்து, அருமையாகிய தவத்தினாலும்மைப்பெற்ற காரணத்தினால் உம்மைப் பிரிந்திருக்கச் சகிக்கமாட்டேன்; அன்றியும், இம்மை மறுமையென்னு மிரண்டிற்கும் சுகத்தைத் தரத்தக்கதாகிய யாகங்களையும் யான் செய்யவேண்டியிருக்கிறது; ஆகையால் இன்னும் சிலகாலம் ஒருமைப் பாட்டோடு உம்மைப் பிரியாதிருப்பேனென்று கூறினார். ()

ஆண்டகை யாரு மிசைந்தங் கம்பொற் றிருத்தோணி மேவு
நீண்ட சடையா ரடிக்கீழ்ப் பணிவுற்று நீடருள் பெற்றே
யீண்டு புகழ்த்தாதை யார்பின் னெய்திட யாழ்ப்பாண ரோடுங்
காண்டகு காழி தொழுது காதலி னாற்புறம் போந்தார்.

(இ ள்.) (இவ்வாறு சிவபாதவிருதயர் கூறியதற்குத்) திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் சம்மதித்தருளி, அச்சீகாழியில் அழகிய திருத்தோணியில் வீற்றிருந்தருளும் நீண்ட சடைமுடியையுடைய தோணியப்பரது திருவடிக்கீழ்வணங்கி அவரது மிக்க திருவருளைப்பெற்று, சிறந்தபுகழையுடைய சிவபாதவிருதயர் தமது பின்னேவர, திருநீலகண்டயாழ்ப்பாணநாயனாரோடுங் காட்சியமைந்த சீகாழிப்பதியைவணங்கி அன்போடும் அவ்விடத்தினின்றும் புறம்பே யெழுந்தருளினார். ()

அத்திரு மூதூரி னுள்ளா ரமர்ந்துடன் போதுவார் போத
மெய்த்தவ ரந்தணர் நீங்கா விடைகொண்டு மீள்வார்கண் மீள

முதநுன் சிவிகைமேற் கொண்டு மொய்யொளித் தாமநிரைத்த
நித்தில வெண்குடைமீது நிறைமதி போல நிழற்ற.

(இ-ள்.) அந்தப் பழைய சீகாழிநகரத்தில் வசிப்பவர்களில் விரும்பி உடன் போகின்றவர்கள் போகவும், மெய்ம்மையாகிய தவமுனிவர் - பிராமணர் என்னுமிவர்களுள் பிரியாவிடைபெற்றுத் திரும்புகின்றவர்கள் திரும்பவும், முத்துச்சிவிகையின்மேல் எழுந்தருளி, மிக்க ஒளியையுடைய மாலைகட்டிய முத்துக்களாலாகிய வெண்குடையானது திருமுடியின்மேல் சோடசகலைகளும் நிறைந்த பூரணசந்திரனைப்போல நிழல் செய்யவும்.—எ-று. (உஅஉ)

சின்னந் தனிக்காளந் தாரை சிரபுரத் தாண்டகை வந்தா
ரென்னுந் தகைமை விளங்க வேற்ற திருப்பெயர் சாற்ற
முன்னெம் மருங்கு நிரந்த முரசுடைப் பல்லிய மார்ப்ப
மன்னுந் திருத்தொண்ட ராஞர் வந்தெதிர் கொண்டு வணங்க.

(இ-ள்.) முத்துச்சின்னம் - ஒப்பற்ற எக்காளம்-தாரையென்னுமிம் மூன்றும் சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையா ரெழுந்தருளுகின்றதன்மை கேட்போர் யாவர்க்கும் புலப்படும் பொருட்டுப் பிள்ளையாருக்குப்பொருந்திய (பாலறுவாயன்- ஞானசம்பந்தன்- முத்தமிழ் விரகன்முதலிய) திருநாமங்களைத் தெரிவிக்கவும், முன்னே எப்பக்கத்திலும் வரிசையாயுள்ள முரசத்தை முதலாகவுடைய பலவாத்தியங்கள் ஆரவாரிக்கவும், நிலைபெற்ற திருத்தொண்டராயுள்ளவர்கள் எதிர்கொண்டுவந்து வணங்கவும்.—எ-று.

"சின்னந்தனிக் காளந்தாரை சிரபுரத்தாண்டகை வந்தா-ரென்னுந் தகைமை விளங்கவேற்ற திருப்பெயர்சாற்ற' என்றதனை, "திருச்சின்ன-முற்றுமானவண் ஞானமே முலைசுரந்தூட்டப்-பெற்றபாலறுவாயன் வந்தானெனப்பிடிக்க" எனவும், "தனிக்காளம்-வையமேழுடன்மறைகளுநிறைதவத்தோரு-மும்யஞானசம்பந்தன் வந்தானெனவூத" எனவும், "தாரை-யணைந்தமாமறை முதற்கலையகிலமுமோதா-துணர்ந்த முத்தமிழ் விரகன் வந்தானெனவூத" எனவும் முன்னர் அருளிச்செய்தமையானுணர்க. (உஅங)

சங்கநா தங்க ளொலிப்பத் தழங்குபொற் கோடு முழங்க
மங்கல வாழ்த்துரை யெங்கு மல்க மறைமுன் னியம்பத்
திங்களும் பாம்பு மணிந்தார் திருப்பதி யெங்குமுன் சென்று
பொங்கிய காதலிற் போற்றப் புகலிக் கவுணியர் போந்தார்.

(இ-ள்.) சங்கவாத்திய வோசைகளொலிக்கவும், விளங்குகின்ற பொன்மயமாகிய கொம்புவாத்தியங்கள் சப்திக்கவும், மங்கலவாழ்த்தி ஞேசையெங்கும் நிரம்பவும், வேதவாக்கியங்கள் முன்னே யொலிக்கவும், சீகாழிப்பதியி லவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார், சந்திரனையும் சர்ப்பத்தையும் (பகைநீங்க) அணிந்த சிவபெருமானது திருப்பதிகளெங்கும் முன்னேசென்று நிறைந்த அன்பினால் வணங்கச் சென்றருளினார்.—எ-று. (உஅச)

திருமறைச் சண்பைய ராளி சிவனூர் திருக்கண்ணூர் மீகாயில்
பெருவிருப் பாலணைந் தேத்திப் பிஞ்ஞகர் கோயில் பிறவு
முருகிய வன்பா லிறைஞ்சி யுயர்தமிழ் மாலைகொண் டேத்தி
வருபுனற் பொன்னி வடபாற் குடதிசை நோக்கி வருவார்.

(இ-ள்.) சிறந்த வேதங்களையுணர்ந்த சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் கண்ணுயிரநாதர் வீற்றிருந்தருளும் திருக்கண்ணார்கோயில் என்னும்ஸ்தலத்தை மிக்க அன்போடுசென்று துதித்து,சிவபெருமானது ஸ்தலங்கள் பலவற்றையும் மனதையுருக்குகின்ற பேரன்பினால் வணங்கிச் சிறந்த தமிழ்ப்பதிகளையருளிச்செய்து துதித்து, பெருகிவருகின்ற நீரையுடைய காவிரிநதியின் வடபாலில் மேற்றிசைநோக்கி யெழுந்தருள்வாராயினர்.—எ-று. (உஅ௫)

போற்றிய காதல் பெருகப் புள்ளிருக் குந்திரு வேளூர்
நாற்றடந் தோளுடை மூன்று நயனப் பிரான்கோயி னண்ணி
யேற்றவன் பெய்த வணங்கி யிருவர்புள் வேந்த ரிறைஞ்சி
யாற்றிய பூசனை சாற்றி யஞ்சொற் பதிக மணிந்தார்.

(இ-ள்.) துதிசெய்கின்ற அன்பானது அதிகரிக்கத்திருப்புள்ளிருக்கும்வேளூர் என்னும் ஸ்தலத்தில் எழுந்தருளிய பெரிய நான்கு திருத்தோள்களையும் திரிநேத்திரங்களையுமுடைய ஸ்ரீ வயித்தியநாதரது திருக்கோயிலையடைந்து பொருந்திய அன்போடு நமஸ்கரித்து, சம்பாதி சடாயுவென்னுமிரண்டு பறவையரசர்கள் சிவபெருமானை வணங்கிச்செய்த பூசனைகளை யெடுத்துக்கூறி அழகியசொற்களமைந்த திருப்பதிகஞ் சாத்தியருளினர்.—எ-று. (உஅ௬)

---

**திருப்புள்ளிருக்குவேளூர் - பண் - சீகாமரம்.**

திருச்சிற்றம்பலம்.

கள்ளார்ந்தபூங்கொன்றைமதமத்தங்கதிர்மதிய
முள்ளார்ந்தசடைமுடியெம்பெருமானாருறையுமிடந்
தள்ளாயசம்பாதிசடாயுவென்பார்தாமிருவர்
புள்ளானார்க்கரையனிடம்புள்ளிருக்கும்வேளூரே.

செடியாயவுடல்தீர்ப்பான்றீவினைக்கோர்மருந்தாவான்
பொடியாடிக்கடிமைசெய்தபுள்ளிருக்கும்வேளூரைக்
கடியார்ந்தபொழிற்காழிக்கவுணியன்சம்பந்தன்சொன்
மடியாதுசொல்லவல்லார்க்கில்லையாமறுபிறப்பே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - **வயித்தியநாதர்** - தேவியார் தையனாயகியம்மை.

---

நீடு திருநின்றி யூரி னிமலனார் நீள்கழ லேத்திக்
கூடிய காதலிற் போற்றிக் கும்பிட்டு வண்டமிழ் கூறி
நாடுசீர் நீடூர் வணங்கி நம்பர் திருப்புன்கூர் நண்ணி
யாடிய பாத மிறைஞ்சி யருந்தமிழ் பாடி யமர்ந்தார்.

(இ-ள்.) செல்வமிருந்த திருநின்றியூரிலெழுந்தருளிய இலட்சுமீசரது சிறந்த திருவடிகளை நமஸ்கரித்துப் பொருந்திய அன்போடுதுதித்துவணங்கி வளம்பொருந்திய திருப்பதிகமருளிச்செய்து, விரும்பத்தக்க சிறப்பினையுடைய திருநீடூரையடைந்து வணங்கி,சிவலோகநாதர் வீற்றிருந்தருளும் திருப்புன்கூரை யடைந்து கனகசபையில் ஆனந்தத் தாண்டவஞ்செய்தருளும் அவரது திருவடிகளைவணங்கி அரிய தமிழ்ப்பதிகம்பாடி அங்கு எழுந்தருளினர்.—எ-று. (உஅ௭)

அங்குநின் றேகியப் பாங்கி லரனூர் மகிழ்கோயி லான
வெங்கணுஞ் சென்று பணிந்தே யேத்தி யிமவான் மடந்தை
பங்க ருறைபழ மண்ணிப் படிக்கரைக் கோயில் வணங்கித்
தங்கு தமிழ்மாலை சாத்தித் திருக்கொறுக் கைப்பதி சார்ந்தார்.

(இ-ள்.) அத்திருப்புன்கூரினின்றும் எழுந்தருளி அதன்பக்கத்தில் சிவபெருமான் மகிழ்ந்து வீற்றிருந்தருளும் ஸ்தலங்கள் எவ்விடத்துஞ்சென்று வணங்கித்துதித்து, பர்வதராஜபுத்திரியாகிய உமாதேவியாரை யிடப்பாகத்திலுடைய நீலகண்டேசர் வீற்றிருந்தருளும் திருப்பழமண்ணிப் படிக்கரைத் திருக்கோயிலையடைந்து வணங்கிப் பொருந்திய திருப்பதிகமாலை சாத்தியருளி, திருக்கொறுக்கை வீரட்டமென்னுந் திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று.

திருக்கொறுக்கை என்பது சிவபெருமான் மன்மதனையெரித்த இடமாதலின் இது அட்டவீரட்டத் தொன்று. (உஅஅ)

திருக்கொறுக் கைப்பதி மன்னித் திருவீரட் டான மமர்ந்த
பொருப்புவில் லாளரை யேத்திப் போந்தன்னி யூர்சென்று போற்றிப்
பருக்கை வலாயுரித் தார்தம் பந்தணை நல்லூர் பணிந்து
விருப்புடன் பாட லிசைத்தார் வேதந் தமிழால் விரித்தார்.

(இ-ள்.) திருக்கொறுக்கையென்னுந் திருப்பதியை யடைந்தருளி, அங்குத் திருவீரட்டானத்தில் வீற்றிருந்தருளும் மேருமலையை வில்லாகவுடைய வீரட்டேசரைத் துதித்து, அவ்விடத்தினின்று மெழுந்தருளி, திருஅன்னியூரை யடைந்து துதித்து, பருத்த துதிக்கையையுடைய கஜாசுரனென்னும் யானையையுரித்த பசுபதிநாதரது திருப்பந்தணை நல்லூரையடைந்து வணங்கி, அன்போடு திருப்பதிகத்தை யருளிச்செய்தார்; வேதங்களைத் தமிழ்ப்பதிகங்களால் விரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார்.—எ-று.

வேதந்தமிழால் விரித்தார் பாடலிசைத்தார் எனக்கூட்டுக.

பருக்கைவரை யுரித்தார் என்பதன் வரலாற்றை முன்னர்க் காண்க. ()

அப்பதி போற்றி யகல்வா ரரனூர் திருமணஞ் சேரி
செப்பருஞ் சீர்த்தொண்ட ரோடுஞ் சென்று தொழுதிசை பாடி
யெப்பொரு ளுந்தரு மீசர் எதிர்கொள் பாடிப்பதி யெய்தி
யொப்பில் பதிகங்கள் பாடி யோங்குவேள் விக்குடி யுற்றார்.

(இ-ள்.) அத்திருப்பதியைத் துதித்து அவ்விடத்தினின்று மெழுந்தருளும் திருஞானசம்பந்தப்பிள்ளையார் வள்ளல்நாதர் வீற்றிருந்தருளும் திருமணஞ்சேரியைச் சொல்லுதற்கரிய சிறப்பினையுடைய திருத்தொண்டர்களோடும் சென்றுவணங்கித் திருப்பதிகம் பாடியருளி, சராசரங்களாகிய எல்லாப்பொருள்களையுந் தந்தருளுகின்ற ஐராவதேசர் வீற்றிருந்தருளும் திருஎதிர்கொள்பாடி யென்னுந் திருப்பதியையடைந்து ஒப்பற்ற திருப்பதிகங்களை யருளிச்செய்து, சிறப்புற்றோங்கும் திருவேள்விக் குடியென்னும் ஸ்தலத்தை யடைந்தருளினார்.—எ-று. (உகூ0)

செழுந்திரு வேள்விக் குடியிற் றிகழ்மண வாளநற் கோலம்
பொழிந்த புனற்பொன்னி மேவும் புனிதத் துருத்தி யிரவிற்

நழும்பிய தன்மையுங் கூடத் தண்டமிழ் மாலையிற் பாடிக்
கொழுந்துவெண் டிங்க ளணிந்தார் கோடிகா விற்சென் றணைந்தார்.

(இ-ள்.) செழுமைபொருந்திய திருவேள்விக்குடியில் (பகலில்) விளங்குகின்ற நல்ல திருமணவாளக்கோலத்தின் றன்மையும், (மேகங்கள்) பொழிந்த நீரையுடைய காவிரிநதிக்கரையிற் பொருந்திய பரிசுத்தமாகிய திருத்துருத்தியென்னும் ஸ்தலத்தில் இரவில்பொருந்திய தன்மையுமாகிய இவ்விரண்டும் பொருந்தக் குளிர்ந்த தமிழ்ப்பதிகத்தில் அருளிச்செய்து, இளமைபொருந்திய வெண்பிறையணிந்த சிவபெருமானது திருக்கோடிகாவைச் சென்றடைந்தருளினர்.—எ-று

---

திருத்துருத்தியும் திருவேள்விக்குடியும், பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

ஓங்கிமேலுழிதருமொலிபுனற்கங்கையையொருசடைமேற்
றாங்கினாரிடுபலிதலைகலனாக்கொண்ட தம்மடிகள்
பாங்கினாலுமையொடும்பகலிடைப்புகலிடப்பைம்பொழில்சூழ்
வீங்குநீர்த்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே.

விண்ணுலாம்விரிபொழில்விரைமணற்றுருத்திவேள்விக்குடியு
மொண்ணுலாமொலிகழலாடுவாரரிவையோடுறைபதியை
நண்ணுலாம்புகலியுளருமறைஞானசம்பந்தன்சொன்ன
பண்ணுலாமருந்தமிழ்பாடுவாராடுவார்பழியிலரே.

திருச்சிற்றம்பலம்.

திருத்துருத்தி - சுவாமிபெயர் - முத்தாவதேசர் தேவியார் - அமிர்தமுகிழம்பிகை.
திருவேள்விக்குடி சுவாமிபெயர் - கல்யாணசுந்தரர்,
தேவியார் - பரிமளசுகந்தநாயகி.

---

திருக்கோடி காவி லமர்ந்த தேவர் சிகாமணி தன்னை
யெருக்கோ டிதழியும் பாம்பு மிசைந்தணிந் தானைவெள் ளேனப்
பருக்கோடு பூண்ட பிரானைப் பணிந்துசொன் மாலைகள் பாடிக்
கருக்கோடி நீப்பார்கள் சேருங் கஞ்சனூர் கைதொழச் சென்றார்.

(இ-ள்.) திருக்கோடிகாவென்னுந் திருப்பதியில் வீற்றிருந்தருளும் தேவர்களசிகாமணியும், எருக்கமலரோடு கொன்றைமலரையும் சர்ப்பத்தையும் இசைந்து அணிந்தவரும், திருமாலாகிய வெள்ளிய பன்றியின் பெரியகொம்மை யணிந்தவருமாகிய சிவபெருமானைவணங்கித் திருப்பதிகங்கள்பாடியருளி, எண்ணிறந்த பிறவிகளை நீக்கிக்கொள்ளும் அடியார்கள் சேர்ந்து வாழ்ந்திருக்கும் திருக்கஞ்சனூர் என்னுந் திருப்பதியை வணங்கச் சென்றருளினர்.—எ-று.

'வெள்ளேனப் பருக்கோடு பூண்டபிரான்' என்பதன் வரலாறு - முன்னொருகாலத்தில், இரணியாக்ஷ னென்னு மசுரன் பூமியைப் பாயாகச் சுருட்டிப் பாதலத்திற்போய்ப் பதுங்கியிருக்க, விஷ்ணுவானவர் வராகவுருவங்கொண்டு பாத

லத்திற் சென்று அவ் வகரானைத் தனது கோட்டாற் குத்திக்கொன்று பூமியை முன்போ னிறுத்தி அவ் வகங்காரத்தினால் உலகுயிர்களை வதைக்கத் தொடங்க, அதையறிந்த தேவர்கள் முதலியோர் திருக்கயிலையை யடைந்து சிவபெருமானை ப்பணிந்து நிகழ்ந்தவற்றை யுணர்த்த அவ்வெம்பெருமான் ஒருருத்திரத் திருவுரு வங்கொண் டெழுந்தருளி அவ்வராகத்தின் கோட்டைப் பறித்துத் தமக்கு ஆபர ணமாக வணிந்துகொண்டனர் என்பதாம். (உகஉ)

கஞ்சனூ ராண்டதங் கோவைக் கண்ணுற் றிறைஞ்சிமுன் போந்து
மஞ்சணி மாமதில் சூழு மாந்துறை வந்து வணங்கி
யஞ்சொற் றமிழ்மாலை சாத்தி யங்ககன் றன்பர் முன்னாகச்
செஞ்சடை வேதியர் மன்னுந் திருமங் கலக்குடி சேர்ந்தார்.

(இ-ள்.) திருக்கஞ்சனூரென்னுந் திருப்பதியையாண்டருளும் தமது தலை வராகிய சிவபெருமானைத்தரிசித்து முன்னேவணங்கி,அங்குநின்று மெழுந்தருளி மேகங்கள்தவழும் பெரிய மதில்கள்சூழ்ந்த திருமாந்துறையென்னும் ஸ்தலத்தை யடைந்துவணங்கி,அழகியசொற்களமைந்த தமிழ்ப்பதிகமாலையைச் சாத்தியருளி, அவ்விடத்தினின்று நீங்கி அடியார்கள் எதிர்கொள்ளச் சிவந்த சடைமுடியையு டைய வேதமுதல்வராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருமங்கலக் குடியெ, ன்னும் ஸ்தலத்தை யடைந்தருளினார்.—எ-று. (உகங)

வெங்கண் விடைமேல் வருவார் வியலூ ரடிகளைப் போற்றித்
தங்கிய வின்னிசை கூடுந் தமிழ்ப்பதி கத்தொடை சாத்தி
யங்க ணமர்வார்தம் முன்னே யருள்வேடங் காட்டத் தொழுது
செங்கண்மா லுக்கரி யார்தந் திருந்து தேவன்குடி சேர்ந்தார்.

(இ-ள்.) கோபக்கண்ணையுடைய இடபவாகனத்தின்மேல் எழுந்தருள்பவ ராகிய திருவியலூரில்வீற்றிருந்தருளும் யோகானந்தேசரைவணங்கிநிலைபெற்றஇனி யஇசையோடுகூடிய தமிழ்ப்பதிகமாகிய மாலையைச்சாத்தி அங்கு எழுந்தருளியிரு க்கும் திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு முன்னே திருந்துதேவன்குடி யென்னுந் திருப்பதியி லெழுந்தருளிய கர்க்கடேசர் தமது அருள்வேடத்தைத் தரிசிப்பிக்க வணங்கி, சிவந்த கண்களையுடைய விஷ்ணுவினால் காண்பதற்கரிய சிவபெருமா னது திருந்துதேவன்குடியை யடைந்தருளினார்.—எ-று. (உகச)

திருந்து தேவன்குடி மன்னுஞ் சிவபெரு மான்கோயி லெய்திப்
பொருந்திய காதலிற் புக்குப் போற்றி வணங்கிப் புரிவார்
மருந்தொடு மந்திர மாகி மற்று மிவர்வேட மாமென்
றருந்தமிழ் மாலை புனைந்தா ரளவில்ஞா னத்தமு துண்டார்.

(இ-ள்.) திருந்துதேவன் குடியென்னுந் திருப்பதியில் வீற்றிருந்தருளும் கர்க்கடேசரது திருக்கோயிலையடைந்து பொருந்திய அன்போடு உள்ளேபுகுந்து துதித்து வணங்கி அன்பு புரிகின்றவராய் "மருந்தொடு மந்திரமாகிய பிறவும் இவர் திருவேடமே யாமென்னுங் கருத்தமைத்து, (" மருந்துவேண் டில்லிவை மந்திரங் கள்ளிவை") என்றுதொடங்கி அருமையாகிய தமிழ்ப்பதிகத்தை யருளிச்செய் தார்; அளவில்லாத சிவஞானப் பாலமுதுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள் ளையார்.—எ-று. (உகரு)

**திருந்துதேவன்குடி—பண் - கொல்லி.**

திருச்சிற்றம்பலம்.

மருந்துவேண்டில்லிவைமந்திரங்கள்ளிவை
புரிந்துகேட்கப்படும்புண்ணியங்கள்ளிவை
திருந்துதேவன்குடித்தேவர்தேவெய்திய
வருந்தவத்தோர்தொழுமடிகள்வேடங்களே.

சேடர்தேவன்குடித்தேவர்தேவன்றனை
மாடமோங்கும்பொழில்மல்குதண்காழியா
னுடவல்லதமிழ்ஞானசம்பந்தனற்
பாடல்பத்தும்வல்லார்க்கில்லையாம்பாவமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - **கர்க்கடேசர்**, தேவியார் - **அருமருந்துநாயகியம்மை.**

---

மொய்திகழ் சோலையம் மூதூர் முன்னகன் றந்நெறி செல்வார்
செய்தரு சாலி கரும்பு தெங்குபைம் பூகத் திடைபோய்
மைதிகழ் கண்டர்தங் கோயின் மருங்குள்ள வெல்லாம் வணங்கி
யெய்தினர் ஞானசம்பந்த ரின்னம்ப ரீசர்தங் கோயில்

(இ-ள்.) நெருங்கி விளங்குகின்ற சோலைகள் சூழ்ந்த அந்தப் பழமைபொருந்திய திருந்துதேவன் குடியென்னுந் திருப்பதியைமுன்னேநீங்கி, அவ்வழியில் செல்கின்றவராய், வயலில் வளர்கின்ற செந்நெற்பயிர்களும் கரும்புஞ்சோலைகளும், தென்னஞ்சோலைகளும், பசிய கமுகஞ்சோலைகளுமாகிய இவற்றினிடையேசென்று, பக்கங்களிலுள்ள காளகண்டராகிய சிவபெருமானது திருக்கோயில்களெல்லாவற்றையும் வணங்கித் திருஇன்னம்பரென்னுந் திருப்பதியில் வீற்றிருந்தருளும் எழுத்தறிந்த நாதரது திருக்கோயிலை யடைந்தருளினார்; திருஞானசம்பந்தப்பிள்ளையார்.—எ-று. (உகசு)

இன்னம்பர் மன்னும் பிரானை யிறைஞ்சி யிடைமடக் கான
பன்னுந் தமிழ்த்தொடை மாலைப் பாடல் புனைந்து பரவிப்
பொன்னங் கழலிணை போற்றிப் புறம்போந் தணைந்து புகுந்தார்
மன்னுந் தடங்கரைப் பொன்னி வடகுரங் காடு துறையில்.

(இ-ள்.) திருஇன்னம்பரென்னுந் தலத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமானை வணங்கி, இடைமடக்காயுள்ள திருப்பதிகமாலையை யருளிச்செய்து துதித்துப் பொன்போலும் அழகிய இரண்டு திருவடிகளையும்வணங்கி, அத்தலத்தினின்றும் புறத்திற்சென்று, காவிரியாற்றினது பெரிய வடக்குக் கரையோரத்திலிருக்கும் வடகுரங்காடு துறையென்னுந் திருப்பதிக்கு எழுந்தருளினார்.—எ-று. (உகஎ)

**திரு இன்னம்பர் - திருமுக்கால் - பண் சாதாரி.**

திருச்சிற்றம்பலம்.

எண்டிசைக்கும்புகழின்னம்பர்மேவிய
வண்டிசைக்குஞ்சடையீரே
வண்டிசைக்குஞ்சடையீருமைவாழ்த்துவார்
கொண்டிசைக்குந்தொழிலோரே.

ஏடமர்பொழிலணியின்னம்பரீசனை
நாடமர்ஞானசம்பந்த
னாடார்ஞானசம்பந்தனற்றமிழ்
பாடவல்லார்பழியிலரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-**எழுத்தறிந்தநாதர்** - தேவியார்-**பூங்கொம்பனையம்மை.**

வடகுரங் காடு துறையில் வாலியார் தாம்வழி பட்ட
வடைவுந் திருப்பதி கத்தி லறியச் சிறப்பித் தருளிப்
புடைகொண் டிறைஞ்சினர் போந்து புறந்துள்ள தானங்கள் போற்றிப்
படைகொண்ட மூவிலை வேலார் பழனத் திருப்பதி சார்ந்தார்.

(இ-ள்-) திருவடகுரங்காடுதுறை யென்னுந் திருப்பதியில் வாலிபூசித்து வழிபட்ட முறைமையையும் தமதுதிருப்பதிகத்தில் ("வாலியார்வழிபடப் பொருந்தினார்" என) யாவருமறியச் சிறப்பித்தருளிப் பிரதக்ஷணஞ்செய்துவணங்கி அவ்விடத்தினின்று மெழுந்தருளி,அதன்பக்கங்களிலுள்ள ஸ்தலங்களையும் துதித்து,மூன்றிலைவடிவாகிய சூலாயுதத்தையேந்திய ஆப்தசகாயர் வீற்றிருந்தருளும் திருப்பழன மென்னுந் திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று. (உகஅ)

**திருவடகுரங்காடுதுறை - பண் - சாதாரி.**

திருச்சிற்றம்பலம்.

கோங்கமேகுரவமேகொழுமலைப்புன்னையேகொடிமுல்லை
வேங்கையேஞாழலேவிம்முபாதிரிகளேவிரவியெங்கு
மோங்குமாகாவிரிவடகரையடைகுரங்காடுதுறை
வீங்குநீர்ச்சடைமுடியடிகளாரிடமெனவிரும்பினாரே.

கோலமாமலரொடுதூபமுஞ்சாந்தமுங்கொண்டுபோற்றி
வாலியார்வழிபடப்பொருந்தினார்திருந்துமாங்கனிகளுந்தி
யாலுமாகாவிரிவடகரையடைகுரங்காடுதுறை
நீலமாமணிமிடற்றடிகளைநினையவல்வினைகள்வீடே.

தாழிளங்காவிரிவடகரையடைகுரங்காடுதுறைப்
போழிளமதிபொதிபுரிதருசடைமுடிப்புண்ணியனைக்

காழியானருமறைஞானசம்பந்தன்கருதுபாடல்
கோழையாவழைப்பினுங்கூடுவார்நீடுவானுலகினூடே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - அழகு சடைமுடிநாதர், தேவியார் - குவலயநாயகியம்மை.

---

பழனத்து மேவிய முக்கட் பரமேட்டி யார்பயில் கோயி
லுழைபுக் கிறைஞ்சிநின் றேத்தி யுருகிய சிந்தைய ராகி
விழைசொற் பதிகம் விளம்பி விருப்புடன் மேவி யகல்வா
ரழனக்க பங்கய வாவி யையாறு சென்றடை கின்றார்.

(இ-ள்.) திருப்பழனமென்னும் ஸ்தலத்தில் பொருந்திய மூன்று கண்களை யுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கோயிலினுள்புகுந்து நமஸ்கரித்து நின்று துதித்து, அன்பினாலுருகுகின்ற திருவுள்ளமுடையவராகி, யாவரும் விரும்புகின்ற சொற்களமைந்த திருப்பதிகத்தை யருளிச்செய்து, விருப்பத்துடன் அங்குச் சிலநாள்வசித்தருளி, பின் அவ்விடத்தினின்று நீங்கும் திருஞானசம்பந்தப் பிள்ளையார் நெருப்பைப்போல விளங்குகின்ற தாமரைத்தடாகங்கள் சூழ்ந்த திருவையாறுஎன்னும் ஸ்தலத்தைச்சென்று சேர்கின்றவராயினர்.—எ-று.

அழனக்கபங்கயம் என்பதற்கு, நெருப்பைப்பழிக்கத்தக்க செந்நிறமமைந்த தாமரையென்று கூறினும் பொருந்தும். (உகூகூ)

வேறு.

மாடநிரை மணிவீதித் திருவையாற் றினில்வாழு மல்குதொண்டர்
நாடஇயப் புகலிவரு ஞானபோ னகர்வந்து நண்ணி னாரென்
றாடலொடு பாடலறா வணிமூதூ ரடையவலங் காரஞ் செய்து
நீடுமனக் களிப்பினொடு மெதிர்கொள்ள நித்திலயா னத்து நீங்கி.

(இ-ள்.) மாளிகைகளின் வரிசைகள்பொருந்திய அழகிய வீதிகளையுடைய திருவையாற்றில் வாழ்கின்ற சிறந்த திருத்தொண்டர்கள் உலகத்திலுள்ள ஆன்மகோடிகள் கடைத்தேறும்பொருட்டுச் சீகாழிப்பதியில்திருவவதாரஞ்செய்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் இங்கு எழுந்தருளிவந்தாரென்று, ஆடலும் பாடலும் நீங்காத அழகிய பழமைபொருந்திய அத்திருப்பதி முழுமையும் சிறப்பாக அலங்காரஞ்செய்து மிகுந்த மனமகிழ்ச்சியோடு மெதிர்கொண்டுவர, (அதனைக் கண்டருளியபிள்ளையார்) முத்துச்சிவிகையினின்றும் கீழே இறங்கியருளி.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கூ00)

வந்தணைந்த திருத்தொண்டர் மருங்குவர மானேந்து கையர் தம்பா
னந்திதிரு வருள்பெற்ற நன்னகரை முன்னிறைஞ்சி நண்ணும் போதி
லைந்துபுல னிலைக்லங்கு மிடத்தஞ்ச லென்பார்த மையா றென்று
புந்திநிறை செந்தமிழின் சந்தவிசை போற்றிசைத்தார் புகலி வேந்தர்.

(இ-ள்.) தம்மை யெதிர்கொள்ள வந்து சேர்ந்த திருத்தொண்டர்கள் பக்கத்தில் சூழ்ந்துவர, மானேந்திய திருக்கரத்தினையுடைய சிவபெருமானிடத்துத் திருநந்திதேவர் பூர்வம் தவஞ்செய்து திருவருளைப்பெற்ற நல்ல திருவையாற்றை

முன்னே வணங்கிச் செல்லும்பொழுது ஐம்புலன்களும் (தமக்குரிய பொறியினின்று நீங்கி) நிலைகலங்குமிடத்து அஞ்சேலென்று அருள்செய்யும் சிவபெருமானது திருவையாறிதுவேயென்று'தமது திருவுள்ளத்தில் நிறைந்த (புலனைந்தென்னு முதலையுடைய) செந்தமிழ்ச் சொற்களாலாகிய சிறந்த இசையினையுடைய திருப்பதிகத்தைச் சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் பாடியருளினார்.—எ-று.

---

**திருவையாறு-பண்-மேகராகக்குறிஞ்சி.**

திருச்சிற்றம்பலம்.

புலனைந்தும்பொறிகலங்கிநெறிமயங்கியறிவழிந்திட்டைமேலுந்தி
யலமந்தபோதாகவஞ்சேலென்றருள்செய்வானமருங்கோயில்
வலம்வந்துமடவார்கணடமாடமுழவதிரமழையென்றஞ்சிச்
சிலமந்தியலமந்துமரமேறிமுகில்பார்க்குந்திருவையாறே.

அன்னமலிபொழில்புடைசூழையாற்றெம்பெருமானையந்தண்காழி
மன்னியசீர்மறைநாவன்வளர்ஞானசம்பந்தன்மருவுபாட
லின்னிசையாலிவைபத்துமிசையுங்காலீசனடியேத்துவார்கள்
தன்னிசைவோடமருலகிற்றவநெறிசென்றெய்துவார்தாழாதன்றே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - **செம்பொற்சோதிநாதர்** - தேவியார்-**அறம்வளர்த்தநாயகி.**

---

மணிவீதி யிடங்கடந்து மாலயனுக் கரியபிரான் மன்னுங் கோயி
லணிநீடு கோபுரத்தை யணைந்திறைஞ்சி யுள்ளெய்தி யளவில்காத
றணியாத கருத்தினுடன் றம்பெருமான் கோயில்வலங் கொண்டு தாழ்ந்து
பணிசூடு மவர்முன்பு பணிந்துவீழ்ந் தெழுந்தன்பாற் பரவுகின்றார்.

(இ-ள்.) அழகிய திருவீதியைக் கடந்து (பன்றியாகவும் அன்னமாகவுமுருவங்கொண்டு திருவடியையுந் திருமுடியையுந் தேடிய) திருமால் பிரமனென்னுமிருவர்க்குங் காண்பதற்கரிய சிவபெருமான் வீற்றிருந்தருளுந்திருக்கோயிலின் அழகு மிக்க திருக்கோபுரத்தை யடைந்து வணங்கி உள்ளேசென்று அளவற்ற அன்புநீங்காத திருவுள்ளத்தோடும் தமது சிவபெருமானது திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்து வணங்கி, சர்ப்பாபரணத்தை யணிந்த அவ்வெம்பெருமான் சந்நிதியில் வீழ்ந்து நமஸ்கரித்தெழுந்து அன்போடு துதிக்கின்றவராயினார்.—எ-று.

கோடல்கோங் கங்குளிர்கூ விளமென்னுந் திருப்பதிகத் தொடை மாலை
நீடுபெருந் திருக்கூத்து நிறைந்ததிரு வுள்ளத்து நிலைமை தோன்ற
வாடுமா றதுவல்லா னையாற்றெம் மையனே யென்று நின்று
பாடினா ராடினார் பண்பினொடுங் கண்பொழிநீர் பரந்து பாய.

(இ-ள்.) "கோடல்கோங்கங் குளிர்கூவிளம்" என்னு முதலையுடைய சிறந்த திருப்பதிகமாலையில், (ஸ்ரீநடராசப்பெருமானது) மிகச் சிறந்த திருக்கூத்தின் நிலைமை நிறைந்த தமது திருவுள்ளத்தின் தன்மை விளங்க "ஆடுமாறு வல்லா னுமையாறுடையையனே" என்று அமைத்துத் திருமுன்னே நின்று

பாடியருளினார் ; அன்போடு கண்களினின்றும் சிந்துகின்ற ஆனந்தபாஷ்பம் பரவிப் பாயும்படி ஆனந்தக்கூத்தாடியருளினார்.—எ-று. (௩0௩)

---

**திருவையாறு-பண்-இந்தளம்.**

திருச்சிற்றம்பலம்.

கோடல்கோங்கங்குளிர்கூவிளமாலைகுலாயசீ
ரோடுகங்கையொளிவெண்பிறைசூடுமொருவனார்
பாடல்வீணைமுழவங்குழன்மொந்தைபண்ணாகவே
யாடுமாறுவல்லானுமையாறுடையையனே.

பலிதிரிந்துழல்பண்டங்கன்மேயவையாற்றினைக்
கலிகடிந்தகையான்கடற்காழியர்காவல
னொலிகொள்சம்பந்தனொண்டமிழ்பத்துமவல்லார்கள்போய்
மலிகொள்விண்ணிடைமன்னியசீர்பெறுவார்களே.

திருச்சிற்றம்பலம்.

---

பலமுறையும் பணிந்தெழுந்து புறம்போந்து பரவுதிருத் தொண்டரோடு
நிலவுதிருப் பதியதன்க ணிகழுநா ளிகரிலா நெடுநீர்க் கங்கை
யலையுமதி முடியார்தம் பெரும்புலியூர் முதலான வணைந்து போற்றிக்
குலவுதமிழ்த் தொடைபுனைந்து மீண்டணைந்து பெருகார்வங்கூருநாளில்.

(இ-ள்.) பலமுறையும் வணங்கியெழுந்து திருக்கோயிலின்புறத்திற்சென்று, சூழ்ந்து துதிக்கின்ற அடியார் திருக்கூட்டத்தோடும் விளங்குகின்ற அத்திருவையாற்றில் எழுந்தருளியிருக்கும்நாளில், ஒப்பில்லாத மிக்க நீரையுடைய கங்காநதி பாயும் சந்திரசேகரராகிய சிவபெருமானது திருப்பெரும்புலியூர் முதலிய ஸ்தலங்களையடைந்து போற்றி, விளங்குகின்ற திருப்பதிகத்தை யருளிச்செய்து, மீண்டு அத்திருவையாற்றை யடைந்து மிக்க அன்புகூர்ந்து வசிக்கும்நாள்களில்.

குடதிசைமேற் போவதற்குக் கும்பிட்டங் கருள்பெற்றுக் குறிப்பினோடும்
படருநெறி மேலணைவார் பாமார்திரு நெய்த்தானப் பதியி னண்ணி
யுடையுமன முறவணங்கி யருந்தமிழ் மாலைகள்பாடி யங்கு நின்றும்
புடைவளர்மென் கரும்பினொடு பூகமிடை மழபாடி போற்றிச் சென்றார்

(இ-ள்.) மேற்குத்திக்கிலுள்ள ஸ்தலங்களைத் தெரிசனஞ் செய்வதற்குத் திருவுள்ளங்கொண்டு வணங்கி, அத் திருவையாற்றி லெழுந்தருளிய செம்பொற் சோதிநாதரது திருவருள்பெற்றுத் திருவுள்ளக்குறிப்போடும் பொருந்திய வழியே செல்லும் திருஞானசம்பந்தப்பிள்ளையார், நெய்யாடியப்பர் வீற்றிருந்தருளும் திருநெய்த்தானமென்னுந் திருப்பதியையடைந்து சிவபெருமானிடத்துச் செல்லுந் திருவுள்ளத்தோடும் பொருந்த வணங்கி, அருமையாகிய திருப்பதிகங்களை அருளிச்செய்து அத்திருப்பதியினின்று மெழுந்தருளிப் பக்கங்களில் வளர்கின்ற மெல்லிய கரும்பஞ்சோலைகளோடு கமுகஞ்சோலைகளும் நெருங்கிய திருமழபாடியென்னுந் திருப்பதியைத் துதித்து அங்குச் சென்றருளினார்.—எ-று.

செங்கைமான் மறியார்தந் திருமழபா டிப்புரத்துச்சேரச் செல்வார்,
அங்கையா ரழலென்னுந் திருப்பதிக மெடுத்தருளி யணைந்த போழ்தின்,
மங்கைவாழ் பாகத்தார் மழபாடி தலையினால் வணங்கு வார்கள், பொங்கு
மாதவமுடையா ரெனத்தொழுது போற்றிசைத்தே கோயில் புக்கார்.

(இ-ள்.) சிவந்த திருக்கரத்தில் மான்கன்றை யேந்திய வச்சிரத்தம்பநாத ரெழுந்தருளிய திருமழபாடியில் அடையச்சென்றருளும் திருஞானசம்பந்தப் பிள்ளையார் "அங்கையாரழல்" என்னு முதலையுடைய திருப்பதிகத்தை யெடுத்து அருளிச்செய்து அங்கு எழுந்தருளும்பொழுது, உமாதேவியார் வாழ்கின்ற வாமபாகத்தையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருமழபாடி யென்னுந் திருப்பதியைத் தம் தலையினால் வணங்குகின்ற அடியார்கள் அதிகரிக்கின்ற மிக்க தவத்தினையுடையாரெனத் தொழுது ("மங்கையானுறையும் மழபாடியைத்-தங் கையாற்றொழுவார் தகவாளரே" என்று அத்திருப்பதிகத்தில் அமைத்துத்) துதித்துத் திருக்கோயிலிற் சென்றருளினார்.—எ-று. (௩௦௬)

---

திருமழபாடி-பண்-கவுசிகம்.

திருச்சிற்றம்பலம்.

அங்கையாரழலன்னழகார்சடைக்
கங்கையான்கடவுள்ளிடமேவிய
மங்கையானுறையும்மழபாடியைத்
தங்கையாற்றொழுவார்தகவாளரே.

மந்தமுந்துபொழின்மழபாடியு
ளெந்தைசந்தமினிதுகந்தேத்துவான்
கந்தமார்கடற்காழியுண்ஞானசம்
பந்தன்மாலைவல்லார்க்கில்லைபாவமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வச்சிரத்தம்பநாதர், தேவியார்-அழகம்மை.

---

மழபாடி வயிரமணித் தூணமர்ந்து மகிழ்கோயில் வலங்கொண டெ
ய்திச், செழுவாச மலர்க்கமலச் சேவடிக்கீழ்ச் சென்றுதாழ்ந் தெழுந்து
நின்று, தொழுதாடிப் பாடிநறுஞ் சொன்மாலைத் தொடையணிந்து துதி
த்துப் போந்தே, யொழியாத நேசமுட னுடையவரைக் கும்பிட்டங்
குறைந்தார் சின்னாள்.

(இ-ள்.) திருமழபாடியில் வச்சிரத்தம்பநாதர் விரும்பி யெழுந்தருளியிருக்குந் திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்து, மிக்கவாசனைபொருந்திய தாமரைமலர்போன்ற திருவடியின்கீழ்ச் சென்று சாஷ்டாங்கமாக வணங்கி யெழுந்து நின்று தொழுது, ஆடிப்பாடி நல்ல சொற்க ளமைந்த திருப்பதிகமாலை யணிந்து துதித்து, அங்குநின்று மெழுந்தருளி நீங்காத அன்புடன் நம்மை யடிமையாக வுடைய அவ்வெம்பெருமானை வணங்கி, அத்திருப்பதியில் சிலநாள் எழுந்தருளியிருந்தார்.—எ-று. (௩௦௭)

அதன்மருங்கு கடந்தருளாற் றிருக்கானூர் பணிந்தேத்தி யான்ற சைவ, முதன்மறையோ ரன்பிலா லந்துறையின் முன்னவனைத் தொழுது போற்றிப், பதநிறைசெந் தமிழ்பாடிச் சடைமுடியார் பயில்பதியும் பணிந்து போற்றி, மதகரட வரையுரித்தார் வடகரைமாந் துறையணைந்தார் மணிநூன் மார்பர்.

(இ-ள்.) அழகிய பூணூலையணிந்த மார்பினையுடைய திருஞானசம்பந்தப் பிள்ளையார் அத்திருமழபாடியின் பக்கத்தில் நீங்கிச்சென்று, சிவபெருமான் திருவருளினால் திருக்கானூரை யடைந்து வணங்கித் துதித்து, நிறைந்த சைவர்களாகிய முதன்மைபொருந்திய பிராமணர்கள் வாழும் திருவன்பிலாலந்துறையி லெழுந்தருளிய சத்தியவாகீசரை வணங்கித்துதித்துச் சொற்கள் நிறைந்த சிறந்த திருப்பதிகம்பாடியருளி, சடைமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் மற்றக்ஷேத்திரங்களையும் வணங்கித் துதித்து, மதம்பெருகுகின்ற கயாசுர னென்னும் யானையையுரித்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் காவிரி வடகரையிலுள்ள திருமாந்துறை யென்னுந் திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று. (௩0அ)

சென்றுதிரு மாந்துறையிற் றிகழ்ந்துறையுந் துறைநதிவாழ் சென்னியார்த
முன்றில்பணிந் தணிநெடுமா ளிகைவலஞ்செய் துள்புக்குமுன்புதாழ்ந்து
துன்றுகதிர்ப் பரிதிமதி மருத்துக்க டொழுதுவழி பாடுசெய்ய
நின்றநிலை சிறப்பித்து நிறைதமிழின் சொன்மாலை நிகழப்பாடி.

(இ-ள்.) திருமாந்துறையில் சென்று, அங்கு விளங்கி யெழுந்தருளும் கங்கைநதியணிந்த சடைமுடியையுடைய ஆம்பிரவனேசரது திருமுற்றத்தை வணங்கி, அழகிய நீண்ட திருமாளிகையைப் பிரதக்ஷணஞ் செய்து, உள்ளே புகுந்து சந்நிதியில் நின்று வணங்கி, பொருந்திய கிரணங்களையுடைய சூரியனும், சந்திரனும், மருத்துக்களும் வணங்கி வழிபாடுசெய்யும்படி யெழுந்தருளிய நிலைமையைச் சிறப்பித்து நிறைந்த தமிழ்ச்சொற்களாலாகிய திருப்பதிகமாலையை விளங்கப் பாடியருளி.—எ-று.

துறைநதி = துறையையுடைய நதி.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (௩0௯)

---

திருமாந்துறை பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

பெருகுசந்தனங்காரகில்பீலியும்பெருமரநிரந்துந்திப்
பொருதுகாவிரிவடகரைமாந்துறைப்புனிதனெம்பெருமானைப்,
பரிவினாலிருந்திரவியுமதியமும்பாரவினர்பணிந்தேத்த
மருதவானவர்வழிபடுமலரடிவணங்குதல்செய்வோமே.

வரைவளங்கவர்காவிரிவடகரைமாந்துறையுறைவானைச்
சிரபுரம்பதியுடையவன்கவுணியன்செழுமறைநிறைநாவ

ஊரவெனும்பணிவல்லவன்ஞானசம்பந்தனன்புறுமாலை
பாவிடுந்தொழில்வல்லவரல்லலும்பாவமுமிலர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - **ஆம்பிரவனேசர்**, தேவியார் - **அழகாலமர்ந்தநாயகியம்மை.**

---

அங்கணகன் றம்மருங்கி லங்கணர்தம் பதிபிறவு மணைந்துபோற்றிச்
செங்கமலப் பொதியவிழச் சேல்பாயும் வயன்மதுவாற் சேறுமாறாப்[ந்தர்
பொங்கொலிநீர் மழநாட்டுப் பொன்னிவட கரைமிசைப்போய்ப் புகலிவே
நங்கள்பிரான் றிருப்பாச்சி லாச்சிரா மம்பணிய நண்ணும் போதில்.

(இ-ள்.) சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அத்திருமாந் துறையினின்று நீங்கி அதன்சமீபத்திலுள்ள சிவபெருமானது ஸ்தலங்கள் பிறவற்றையும் அடைந்து துதித்து, செந்தாமரையின் அரும்புகளலரச் சேலைகள்பாயும் வயல்கள் அத்தாமரைமலரினின்றுஞ் சிந்துகின்ற தேன்பெருக்கினால் சேறுபடுதல் நீங்காத மிக்க ஒலிபொருந்திய நீர்சூழ்ந்த மழநாட்டில் காவிரிநதியின் வடகரைவழியாகச் சென்று,நமது சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருப்பாச்சிலாச்சிராமமென்னுந்திருப்பதியை வணங்கும்பொருட்டு எழுந்தருளுங்காலத்தில்.—எ-று. (ந௬௰)

அந்நகரிற் கொல்லிமழ வன்பயந்த வரும்பெறலா ரமுதமென்சொற்
கன்னியிள மடப்பிணையாங் காமருகோ மளக்கொழுந்தின் கதிர்செய்மேனி
மன்னுபெரும் பிணியாகு முயலகன்வந் தணைவுறமெய் வருத்தமெய்தித்
தன்னுடைய பெருஞ்சுற்றம் புலம்பெய்தத் தானுமனந் தளர்வுகொள்வான்

(இ-ள்.) அந்த நகரத்தில் கொல்லிமழவனென்னு மரசன் தான்பெற்றபெறுதற்கரிய அமுதம்போன்ற மெல்லிய சொற்களையுடைய கன்னிகையும், இளமைபொருந்திய மடமையாகிய பெண்மானையொத்தவளுமாகிய அழகிய இளங்கொழுந்து போல்பவளது ஒளிவீசுகின்ற தேகத்தின்கண் நிலைபெற்ற பெரும்பிணியாகிய முயலகன் என்னும் வலிவந்தடைய, அதனால் அப்புத்திரியின் தேகம்வருத்தப்பட, அதுகாரணமாக அவ்வரசன் தன்னுடைய மிகுந்த சுற்றத்தாரும் வருந்தத் தானும் வருந்துவானாயினான்.—எ-று. (ந௬க)

மற்றுவே றொருபரிசாற் றவிராமை மறிவளருங் கையார்பாதம்
பற்றியே வருங்குலத்துப் பான்மையினா னதலினாற் பரிவுதீரப்[மூன்றுஞ்
பொற்றொடியைக் கொடுவந்து போர்க்கோலச் சேவகராய்ப் புரங்கண
செற்றவர்தங் கோயிலினுட் கொடுபுகுந்து திருமுன்பே யிட்டுவைத்தான்.

(இ-ள்.) மணிமந்திரவௌஷதமுதலிய வுபாயங்களில் வேறொருபாயத்தாலும் அந்நோய் நீங்காமையைக்கண்டு, மானேந்திய திருக்கரத்தினையுடைய சிவபெருமான் றிருவடிகளைப் பாரம்பரியமாக வழிபட்டுவருகின்ற சைவமரபிற்பிறந்தவனாதலால், அந்நோயினாலுண்டாகிய துன்ப நீங்கும்பொருட்டுப் பொன்வளையலணிந்த தமது புத்திரியைக் கொண்டுவந்து, போர்க்கோலங்கொண்ட சேவகராய் முப்புரங்களையும் நகைத்தெரித்தருளிய சிவபெருமானது திருக்கோயிலினுள்ளே கொண்டுவந்து சந்நிதியில் கிடத்திவைத்திருந்தான்.—எ-று. (ந௬௨)

அவ்வளவி லாளுடைய பிள்ளையா ரெழுந்தருளி யணுகவெய்தச்
செவ்வியமெய்ஞ் ஞானமுணர் திருஞான சம்பந்தன் வந்தானென்றே
யெவ்வுலகுந் துயர்நீங்கப் பணிமாறுந் தனிக்காளத் தெழுந்த வோசை [ன்.
வெவ்வுயிர்க்கு மவன்கேளா மெல்லியலை விட்டெதிரோ விரைந்துசெல்வா

(இ-ள்.) அக்காலையில் திருஞானசம்பந்தப்பிள்ளையா ரெழுந்தருளி அத்திருப்பதியை யடைந்தருளவும், சிறந்த மெய்ஞ்ஞானத்தை யுணர்ந்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் வந்தருளினாரென்று எவ்வுலகத்திலுள்ளவர்களும் துன்பத்தினின்று நீங்கும்பொருட்டு ஊதுகின்ற ஒப்பற்ற முத்துக்காளத்தினின்று முண்டாகிய வோசையைத் (தன் மகளுக்குண்டாகிய நோயைக்குறித்துப்)பெருமூச்சுவிட்டுக்கொண் டிருக்கும் அக்கொல்லிமழவன்கேட்டுத் தனதுபுத்திரியைச் சந்நிதியில் விட்டு, அவரை யெதிர்கொள்ளும்படி விரைந்து செல்வானாயினான்.—எ-று. ()

மாநகர மலங்கரிமின் மகரதோ ரணநாட்டு மணிநீர்வாசத்
தூநறும்பூ ரணகும்பஞ் சோதிமணி விளக்கினொடு தூபமேந்து
மேனையணி பிறவுமெலா மெழில்பெருக வியற்றுமென வேவித்தானும்
வானவர்நா யகர்மகனார் வருமுன்பு தொழுதணைந்தான் மழவர்கோமான்.

(இ-ள்.) பெரிய நகரத்தை அலங்காரஞ்செய்யுங்கள்; மகரதோரணங்களை நாட்டுங்கள்; அழகிய நீர் நிறைந்த வாசனையுடைய பரிசுத்தமாகிய நல்ல பூரணகும்பங்களும், பிரகாசிக்கின்ற இரத்தினதீபங்களும், தூபங்களும் ஏந்துங்கள்; மற்ற அலங்காரங்களாகிய எல்லாவற்றையும் அழகுண்டாகும்படிச் செய்யுங்களென்று ஏவி, மழநாட்டரசனாகிய அக்கொல்லிமழவனும்,தேவர்கள் நாயகராகிய சிவபெருமானது திருக்குமாரராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளுதற்கு முன்னே எதிர்கொள்ளும்படிகைகுவித்து வணங்கிக்கொண்டு சென்றான். ()

பிள்ளையா ரெழுந்தருளப் பெற்றேனென் றானந்தம் பெருகுகாதல்
வெள்ளநீர் கண்பொழியத் திருமுத்தின் சிவிகையின்முன் வீழ்ந்தபோது
வள்ளலா ரெழுகவென மலர்வித்த திருவாக்கான் மலர்க்கைசென்னி
கொள்ளமகிழ்ந்துடன்சென்று குலப்பதியின் மணிவீதி கொண்டுபுக்கான்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் இங்கு எழுந்தருளத்தக்க பேறு பெற்றேனென்று கூறி, ஆனந்தத்தால் பெருகுகின்ற ஆனந்தக்கண்ணீர் கண்களினின்றும் இடையறாதுசொரிய, அவரது முத்துச்சிவிகையின் முன்னேவீழ்ந்து வணங்கினபொழுது, அருள்வள்ளலாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் மழவனே! நீ எழக்கடவையென்று திருவாய்மலர்ந்தருளிய திருவாக்கினால் அவனெழுந்து தாமரைமலர்போன்ற கைகளைச் சிரசின்மேற்குவித்து மகிழ்ந்து, பிள்ளையாருடன்சென்று,சிறந்த தனது நகரத்தின் அழகிய திருவீதியில் அழைத்துக்கொண்டு போயினான்.—எ-று. (௩௧௫)

மங்கலதூ ரியமுழங்கு மணிவீதி கடந்துமதிச் சடையார்கோயிற்
பொங்குசுடர்க் கோபுரத்துக் கணித்தாகப் புனைமுத்தின் சிவிகைநின்று
மங்கணிழிந் தருளுமுறை யிழிந்தருளி யணிவாயில் பணிந்துபுக்குத்
தங்கள்பிரான் கோயில்வலங் கொண்டுதிரு முன்வணங்கச் சாருங்காலை.

(இ-ள்.) மங்கலவாத்தியங்கள் முழங்குகின்ற அழகிய வீதிகளைக்கடந்து சந்திரனையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானது திருக்கோயிலின் மிக்க

பேரொளியையுடைய திருக்கோபுரத்திற்குச் சமீபமாக அழகாக அலங்கரிக்கப்ப ட்ட முத்துச்சிவிகையினின்றும் அங்குத் தாம் இறங்கவேண்டிய முறைப்படியே யிறங்கியருளி, அழகிய திருவாயிலைப்பணிந்து உள்ளேபுகுந்து,தமது சிவபெருமான் திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்து திருமுன்னே வணங்கும்படி திருஞானசம் பந்தப்பிள்ளையார் செல்லும்பொழுது.—எ-று. (ருகசு)

கன்னியிளங் கொடியுணர்வு கழிந்துநிலன் சேர்ந்ததனைக் கண்டுநோ க்கி, யென்னிதுவென் றருள்செய்ய மழவன்று னெதிரிறைஞ்சி யடியே ன்பெற்ற, பொன்னிவளை முயலகனும் பொருவிலரும் பிணிபொருந்தப் புனிதர்கோயின், முன்னணையக் கொணர்வித்தே னிதுபுகுந்த படியென் று மொழிந்துநின்றான்.

(இ-ள்.) கொல்லிமழவன் புத்திரியாகிய இளங்கொடிபோன்ற அப்பெண் அறிவழிந்து பூமியில்மயங்கிடந்ததைத்திருஞானசம்பந்தப்பிள்ளையார்பார்த்தருளி, இப்பெண் இவ்வாறு வீழ்ந்துகிடப்பது என்னகாரணமென்று கேட்டருள, அக் கொல்லிமழவன் எதிரேவணங்கி, அடியேன்பெற்ற இப்பெண்ணை முயலகனென் னும் ஒப்பற்ற பெரும்பிணிவந்தடைய, (அப்பிணி நீங்கும்பொருட்டு) மலரகிதரா கிய சிவபெருமானது திருக்கோயிலின்முன் கொண்டுவந்துவிடச் செய்தேன்; இது தான் நடந்ததென்று சொல்லி நின்றான்.—எ-று. (ருகஎ)

வேறு.

அணிகிளர்தாரவன் சொன்னமாற்ற மருளொடுங் கேட்டங் கிலையி னின்றே, பணிவளர் செஞ்சடைப்பாச்சின்மேய பரம்பொருளாயினானை ப்பணிந்து, மணிவளர் கண்டரோ மங்கையைவாட மயல்செய்வ தோவி வர்மாண்பதென்று, தணிவில் பிணிதவிர்க் கும்பதிகத் தண்டமிழ் பாடி னார் சண்பைநாதர்.

(இ-ள்.) அழகுவிளங்குகின்ற மலர்மாலையையணிந்த அக்கொல்லிமழவன் சொன்னவார்த்தையைக் கிருபையோடுங் கேட்டு அவ்விடத்திலேயே நின்றருளி, சர்ப்பாபரணத்தையணிந்த சிவந்த சடைமுடியையுடைய திருப்பாச்சிலாச்சிராம த்தின் கண்ணெழுந்தருளிய நீலகண்டேசுரனைவணங்கி "மணிவளர்கண்டரோ மங் கையைவாட மயல் செய்வதோ விவர்மாண்பே" என்று இறுதியில் அமைத்து, நீங் குதலில்லாத முயலகனென்னும் நோயைத் தவிர்க்கும் ("துணிவளர்திங்கள்") என் னும் முதலையுடைய குளிர்ந்த தமிழ்ப்பதிகத்தைத் திருஞானசம்பந்தப்பிள்ளையார் பாடியருளினார்.—எ-று. (ருகஅ)

---

### திருப்பாச்சிலாச்சிராமம் - பண் - தக்கராகம்.

### முயலகனோய்தீர்த்த பதிகம்.

திருச்சிற்றம்பலம்.

துணிவளர்திங்கள்துலங்கிவிளங்கச்சுடர்ச்சடைசுற்றிமுடித்துப்
பணிவளர்கொள்கையர்பாரிடஞ்சூழவாரிடமும்பலிதேர்வ
ரணிவளர்கோலமெலாஞ்செய்துபாச்சிலாச்சிராமத்துறைகின்ற
மணிவளர்கண்டரோமங்கையைவாடமயல்செய்வதோவிவர்மாண்பே.

கலைபுனைமானுரிதோலுடையாடைகனல்சுடராலிவர்கண்கள்
தலையணிசென்னியர்தாரணிமார்பர்தம்மடிகளிவரென்ன
அலைபுனல்பூம்பொழில்சூழ்ந்தமர்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
விலைபுனைவேலரோவேழையைவாடவிடர்செய்வதோவிவரீடே. (உ)

வெஞ்சுடராடுவர்துஞ்சிருண்மாலைவேண்டுவர்பூண்பதுவெண்ணூல்
நஞ்சடைகண்டர்நெஞ்சிடமாகநண்ணுவர்நம்மையயந்து
மஞ்சடைமாளிகைசூழ்தருபாச்சிலாச்சிராமத்துறைகின்ற
செஞ்சுடர்வண்ணரோபைந்தொடிவாடச்சிதைசெய்வதோவிவர்சீரே. ()

கனமலர்க்கொன்றையலங்கலிலங்கக்கனல்தருதூமதிக்கண்ணி
புனமலர்மாலையணிந்தழகாயபுநிதர்கொலாமிவரென்ன
வனமலிவண்பொழில்சூழ்தருபாச்சிலாச்சிராமத்துறைகின்ற
மனமலிமைந்தரோமங்கையைவாடமயல்செய்வதோவிவர்மாண்பே. (ச)

மாந்தர்தம்பால்நறுநெய்மகிழ்ந்தாடிவளர்சடைமேற்புனல்வைத்து
மோந்தைமுழாக்குழல்தாளமோர்வீணைமுதிரவோர்வாய்முரிபாடி
யாந்தைவிழிச்சிறுபூதத்தர்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
சாந்தணிமார்பரோதையலைவாடச்சதுர்செய்வதோவிவர்சார்வே. (ரு)

நீறுமெய்பூசிநிறைசடைதாழநெற்றிக்கண்ணாலுற்றுநோக்கி
யாறதுசூடியாடரவாட்டியைவிரற்கோவணவாடை
பாறருமேனியர்பூதத்தர்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
வேறதுவேறியரோழையைவாடவிடர்செய்வதோவிவரீடே. (சு)

பொங்கிளநாகமோரேகவடத்தோடாமைவெண்ணூல்புனைகொன்றை
கொங்கிளமாலைபுனைந்தழகாயகுழகர்கொலாமிவரென்ன
வங்கிளமங்கையோர்பங்கினர்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
சங்கொளிவண்ணரோதாழ்குழல்வாடச்சதுர்செய்வதோவிவர்சார்வே. ()

ஏவலத்தால்விசயற்கருள்செய்தேயிராவணனையீடழித்து
மூவரிலும்முதலாய்நடுவாயமூர்த்தியையன்றிமொழியாள்
யாவர்களும்பரவும்மெழிற்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
தேவர்கள்தேவரோசேயிழைவாடச்சிதைசெய்வதோவிவர்சீரே. (அ)

மேலதுநான்முகனெய்தியதில்லைக்கீழதுசேவடிதன்னை
நீலதுவண்ணனுமெய்தியதில்லையெனவிவர்நின்றதுமல்லா
லாலதுமாமதிதோய்பொழிற்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
பாலதுவண்ணரோபைந்தொடிவாடப்பழிசெய்வதோவிவர்பண்பே. (கூ)

நாணொடுகூடியசாயினரேனுநகுவரவரிருபோது
மூணொடுகூடியவுட்குந்தகையாருரைகளவைகொளவேண்டா
வாணொடுபெண்வடிவாயினபாச்சிலாச்சிராமத்துறைகின்ற
பூணெடுமார்பரோபூங்கொடிவாடப்புனைசெய்வதோவிவர்பொற்பே. (கo)

அகமலியன்பொடுதொண்டர்வணங்கப்பாச்சிராமத்துறைகின்ற
புகைமலிமாலைபுனைந்தழகாயபுனிதர்கொலாமிவரென்ன

நகைமலிதண்பொழில்சூழ்தருகாழிநற்றமிழ்ஞானசம்பந்தன்
றகைமலிதண்டமிழ்கொண்டிவையேத்தச்சாரகிலாவினைதானே. (கக)

திருச்சிற்றம்பலம்.

முயலகன் என்பது ஒருவகை வலிநோய்.

சுவாமிபெயர் - நீலகண்டேசர், தேவியார் - விசாலாக்ஷியம்மை.

பன்னு தமிழ்மறை யாம்பதிகம் பாடித் திருக்கடைக் காப்புச்சாத்தி
மன்னுங் கவுணியர் போற்றிநிற்க மழவன் பயந்த மழலைமென்சொற்
கன்னி யுறுபிணி விட்டுநீங்கக் கதுமெனப் பார்மிசை நின்றெழுந்து[தாள்.
பொன்னின் கொடியென வொல்கிவந்து பொருவலித்தாதைபுடையணைந்

(இ-ள்.) யாவருந் துதிக்குந் தமிழ்வேதமாகிய திருப்பதிகமோதித்திருக்கடைக்காப்பினையுஞ் சாத்தியருளி, நிலைபெற்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார் வணங்கிநிற்க, கொல்லிமழவன் பெற்ற மிருதுவாகிய மழலைச்சொல்லையுடைய புத்திரியானவள் தன்னையடைந்த முயலகனென்னும் வலிநோயானது விட்டுநீங்க, (அதனை யுணர்வுபெற்று) விரைந்து பூமியினின்று மெழுந்து பொற்கொடிபோல அசைந்துவந்து, போர்செய்யும் வலியையுடைய தன் பிதாவின் பக்கத்திலடைந்தாள்.—எ-று. (௬கக)

வன்பிணி நீங்கு மகளைக்கண்ட மழவன் பெருகு மகிழ்ச்சிபொங்கத்
தன்றனிப் பாவையுந் தானுங்கூடச் சண்பையர் காவலர் தாளில்வீழ
நின்ற வருமறைப் பிள்ளையாரு நீரணி வேணி நிமலர்பாத [தார்.
மொன்றிய சிந்தை யுடன்பணிந்தா ரும்பர் பிரான்றிருத் தொண்டரார்த்

(இ-ள்.) வலிய நோயினின்று நீங்கிய தனது புத்திரியைக்கண்ட மழநாட்டரசன் மிக்க மகிழ்ச்சியதிகரிக்கத் தனது ஒப்பற்ற புத்திரியுந் தானுமாகச்சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவடிகளில் வீழ்ந்து வணங்க, அங்கு நின்றருளிய அரிய வேதங்களையுணர்ந்த திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் கங்கையையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானது திருவடிகளைப்பொருந்திய திருவுள்ளத்தோடும் வணங்கியருளினார்; தேவர்கள் நாயகராகிய சிவபெருமானது திருத்தொண்டர்கள் சந்தோஷத்தினால் ஆரவாரித்தார்கள்.—எ-று.

'அருமறைப்பிள்ளையார்' என்பதற்கு,அரிய வேதப்பொருளாயுள்ள திருஞானசம்பந்தப்பிள்ளையார் எனினும் பொருந்தும். (௬உ0)

நீடு திருவாச்சி ராமமன்னு நேரிழை பாகத்தர் தாள்வணங்கிக்
கூடு மருளுட னங்கமர்ந்து கும்பிடுங் கொள்கைமேற் கொண்டுபோந்தே
யாடல் பயின்றார் பதிபிறவு மணைந்து பணிந்தடி போற்றியேகிச் [றார்.
சேடர்கள் வாழுந் திருப்பைஞ்ஞீலிச் சிவபெரு மானை யிறைஞ்சச் சென்

(இ-ள்.) உயர்ந்த திருப்பாச்சிலாச்சிராமத்தில் எழுந்தருளிய உமாதேவியாரை யிடப்பாகத்திலுடைய சிவபெருமானது திருவடிகளை வணங்கிப்பொருந்திய திருவருளோடும் அத்திருப்பதியி லிருந்தருளிச் சிவபெருமானை நாள்தோறும் வணங்குகின்ற கொள்கையை மேற்கொண்டு அத்தலத்தினின்று மெழுந்தருளி, கனக சபையில் ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளும் சிவபெருமான் வீற்றிருந்தருளும்

மற்றைய க்ஷேத்திரங்களையும் அணைந்து வணங்கி, அங்குநின்று மெழுந்தருளி, அறிவிற்சிறந்தபெரியோர்கள் வாழ்ந்திருக்கும் திருப்பைஞ்ஞீலியி லெழுந்தருளிய சிவபெருமானைவணங்கும்பொருட்டுச்சென்றருளினார்.—எ-று. (௩உக)

பண்பயில் வண்டினம் பாடுஞ்சோலைப் பைஞ்ஞீலி வாணர்கழல்பணிந்து
மண்பர வுந்தமிழ் மாலைபாடி வைகி வணங்கி மகிழ்ந்துபோந்து
திண்பெருந் தெய்வக் கயிலையில்வாழ் சிவனார் பதிபல சென்றிறைஞ்சிச்
சண்பை வளந்தரு நாடர்வந்து தடந்திரு வீங்கோய் மலையைச்சார்ந்தார்.

(இ-ள்.) இசைகளைப் பயில்கின்ற வண்டின்கூட்டங்கள் பாடுகின்ற சோலைகள் சூழ்ந்த திருப்பைஞ்ஞீலியில் வாழ்ந்தருளும் மாற்றறிவரதேசரது திருவடிகளைவணங்கி உலகத்தார் துதிக்கும் திருப்பதிகம் பாடியருளி,அத்திருப்பதியிலெழுந்தருளிய அவ்வெம்பெருமானைப் பணிந்து மகிழ்ச்சியடைந்து, அவ்விடத்தினின்று மெழுந்தருளி, அழியாத நிலைமையையுடைய மிக்க தெய்வீகம்பொருந்திய திருக்கயிலாயத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமானது திருப்பதிகள் பலவுஞ்சென்றுவணங்கி, சீகாழியென்னும் வளந்தருகின்ற திருநாட்டையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையார் விசாலமாகிய திருவீங்கோய் மலையைவந்து சேர்ந்தருளினார்.—எ-று.

செங்கட் குறவரைத் தேவர்போற்றுந் திகழ்திருவீங்கோய் மலையின் மேவுங், கங்கைச் சடையார் கழல்பணிந்து கலந்த விசைப்பதி கம்புனைந்து, பொங்கர்ப் பொழில்சூழ் மலையுமற்றும் புறத்துள்ள தானங்க ளெல்லாம்போற்றிச், கொங்கிற் குடபுலஞ் சென்றணைந்தார் கோதின்மெய்ஞ் ஞானக் கொழுந்தனையார்.

(இ-ள்.) சிவந்த கண்களையுடைய குறவர்களை (அம்மலையின்சிறப்பினால்) தேவர்கள் வாழ்த்தும் விளங்குகின்ற திருவீங்கோய் மலையிலெழுந்தருளிய கங்கையையணிந்த சடைமுடியையுடைய மரகதாசலேசரது திருவடிகளைவணங்கி இசைபொருந்திய திருப்பதிகம் பாடியருளி, மரக்கொம்புகள் நிறைந்த சோலைசூழ்ந்த மலையையும் அதனருகிலுள்ள ஸ்தலங்களையுந் துதித்து,மேற்குநாடாகிய கொங்குதேசத்தில் சென்றருளினார்; குற்றமற்ற மெய்ஞ்ஞானக் கொழுந்துபோன்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார்.—எ-று. (௩உ௩)

**வேறு.**

அண்டர்பிரா னாலயங்க ளம்மருங்குள் ளனபணிந்து
தெண்டிரைநீர்த் தடம்பொன்னித் தென்கரையாங் கொங்கினிடை
வண்டலையும் புனற்சடையார் மகிழ்விடங்க டொழுதணைந்தார்.
கொண்டல்பயி னெடும்புரிசைக் கொடிமாடச் செங்குன்றூர்.

(இ ள்.) தேவர்கள் நாயகராகிய சிவபெருமான் எழுந்தருளிய திருக்கோயில்கள் அக்கொங்குதேசத்தின் பக்கத்திலுள்ளவைகளை வணங்கி, கொங்குநாட்டில் தெளிவாகியஅலைநீரையுடைய விசாலமாகிய காவிரிநதியின் தென்கரையிலிருக்கும் வண்டுகள் சுழல்கின்ற கங்கைநதியணிந்த சடைமுடியையுடைய சிவபெருமான் மகிழ்ந்து வீற்றிருந்தருளும் திருக்கொடுமுடி முதலிய ஸ்தலங்களைவணங்கி, மேகங்கள் தவழ்கின்ற நீண்ட மதிலையுடைய திருக்கொடிமாடச் செங்குன்றூர் என்னுந் திருப்பதியையடைந்தருளினார்,—எ-று.

அந்நகரில் வாழ்வாரு மடியவரு மனமகிழ்ந்து
பன்னெடுந்தோ ரணமுதலாப் பயிலணிகள் பலவமைத்து
முன்னுறவந் தெதிர்கொண்டு பணிந்தேத்தி மொய்கரங்கள்
சென்னியுறக் கொண்டணைந்தார் சினவிடையார் செழுங்கோயில்.

(இ-ள்.) அத் திருக்கொடிமாடச்செங்குன்றூரில் வாழ்கின்றவர்களும், அடியார்களும் மனமகிழ்ச்சியடைந்து நீண்ட தோரணமுதலாகப் பொருந்திய பல அலங்காரங்களைச்செய்து முன்னே எதிர்கொண்டுவந்து வணங்கித் துதித்து,நெருங்கிய தமது கைகளைச்சிரசின்மேற் கூப்பியழைத்துக்கொண்டு, கோபம்பொருந்திய இடபத்தை வாகனமாகவுடைய அர்த்தநாரீசர் வீற்றிருந்தருளும் செழுமைபொருந்திய திருக்கோயிலை யடைந்தார்கள்.—எ-று. (கஉ௫)

தம்பெருமான் கோயிலினு ளெழுந்தருளித் தமிழ்விரகர்
கம்பரவர் திருமுன்பு தாழ்ந்தெழுந்து நலஞ்சிறக்க
விம்பருமும் பருமேத்த வின்னிசைவண் டமிழ்பாடிக்
கும்பிடுமோ தாவுடனக் கோநகரி லினிதமர்ந்தார்.

(இ-ள்.) முத்தமிழ் விரகராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது முதல்வராகிய சிவபெருமானது திருக்கோயிலினுள்ளெழுந்தருளி,அவ்வெம்பெருமான் சந்நிதியில் சாஷ்டாங்கமாக வணங்கியெழுந்து நன்மை யதிகரிக்கவும், மண்ணுலகத்திலுள்ளவர்களும் விண்ணுலகத்திலுள்ளவர்களும் துதிக்கவும் இனிய இசைபொருந்திய வளவிய திருப்பதிகம்பாடியருளி, வணங்கும் விருப்பத்தோடும் அப்பெருமைபொருந்திய திருக்கொடிமாடச்செங்குன்றூர் என்னு நகரத்தில் இனிமையோடும் வசித்திருந்தருளினார்.—எ-று. (கஉ௬)

அப்பாலைக் குடபுலத்தி லாறணிந்தா ரமர்கோயி
லெப்பாலுஞ் சென்றேத்தித் திருநணு வினையிறைஞ்சிப்
பைப்பாந்தள் புனைந்தவரைப் பரவிப்பண் டமர்கின்ற
வைப்பான செங்குன்றூர் வந்தணைந்து வைகினார்.

(இ-ள்.) அப்பால் (கொங்குநாட்டைச்சேர்ந்த) மேற்குத்திக்கில் கங்கைநதியையணிந்த சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கோயில்கள் எவ்விடத்துஞ் சென்று வணங்கி,திருநணுவென்னுந் திருப்பதியைவணங்கிப் படத்தையுடைய பாம்பைஆபரணமாகவணிந்தருளிய சங்கமேசரைத் துதித்து, தாம் முன்பெழுந்தருளியிருந்த ஸ்தலமாகிய திருக்கொடிமாடச்செங்குன்றூரை வந்து சேர்ந்து அங்கு எழுந்தருளியிருந்தார்.—எ-று.

திருநணு என்பது, பவானிகூடல் என வழங்குகின்றது. இது, காவிரிநதி ஒருபுறத்தும் பவானியென்னுநதி யொருபுறத்தும் வந்து கூடுமிடத் திருப்பதனால் பவானிகூடலென வழங்குகிறது. (கஉ௭)

ஆங்குடைய பிள்ளையா ரமர்ந்துறையு நாளின்கட்
டோங்குதுளி முகிற்குலங்கள் சுரந்தபெய லொழிகாலை
வீங்கொலிநீர் வைப்பெல்லாம் வெயில்பெற விருப்புவரப்
பாங்கர்வனா யுங்குளிரும் பனிப்பருவ மெய்தியதால்.

(இ-ள்.) அத்தலத்தில் திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளியிருக்கும் நாள்களில், சிந்துகின்ற துளிகளையுடைய மேகக்கூட்டங்கள் மழைபெய்யுங்காலம் நீங்கியபொழுது, மிக்கவொலியையுடைய சமுத்திரஞ்சூழ்ந்த உலகத்திலு

ள்ளவர்கள் யாவரும் வெயிலைப்பெறுமையினால் அதனிடத்து விருப்புமுண்டாக, பக்கத்திலுள்ள மலைகளும் குளிரடையத்தக்க முன்பனிக்காலம் வந்தது.—எ-று.

வைப்பு - இடவாகுபெயர். (௩௨௮)

அளிக்குலங்கள் சுளித்தகல வரவிந்த முகம்புலராப்
பளிக்குமணி மாகதவல் லியிற்கோத்த பான்மையெனத்
துளித்தலைமெல் லறுகுபனி தொடுத்தசையச் சூழ்பனியாற்
குளிர்க்குடைந்து வெண்படாம் போர்த்தனைய குன்றுகளும்.

(இ-ள்.) வண்டினக்கூட்டங்கள் வெறுத்து நீங்கவும், தாமரைமலர்கள் முக ங்கருகவும், பளிங்குக்கற்களை மரகதக்கொடியிற்கோத்த தன்மைபோல மெல்லிய அறுகம்புற்கள் நுனிகளிற் பனித்துளிகளைக்கோத்து அசையவும், மலைகளும்சூழ்ந்த பனியினாலுண்டாகிய குளிருக்குத்தோற்று வெள்ளிய படத்தைப்போர்த்த தன் மையை யொத்திருந்தன.—எ-று. (௩௨௯)

மொய்யொளிகூர் குளிர்வாடை முழுதுலவும் பொழுதேயாய்க்
கொய்தளிர்மென் சோலைகளுங் குலைந்தசையக் குளிர்க்கொதுங்கி
வெய்யவனுங் கரநிமிர்க்க மாட்டான்போல் விசும்பினிடை
யைதுவெயில் விரிப்பதுவு மடங்குவது மாகுமால்.

(இ-ள்.) நெருங்கிய ஒளிமிகுந்த குளிர்காற்றானது இடைவிடாமல் வீசுகின்றகாலமேயாகிக் கொய்யத்தக்க மெல்லிய துளிர்களையுடைய சோலைகளும் நடுக்குற்று அசைய, அக்குளிர்க்குத தோற்றுச்சூரியனும் தனது கிரணமாகிய கரங்களை நீட்டமாட்டாதவன்போல ஆகாயத்தில் அழகியகிரணங்களைச் சிறிது பரப்புவதும் அடக்கிக்கொள்ளுவதுமா யிருக்கும்.—எ-று. (௩௩௦)

நீடியவப் பதிகளெலா நிரைமாடத் திறைகடொறும்
பேடையுடன் பவளக்காற் புறவொடுங்கப் பித்திகையிற்
றோடலர்மென் குழன்மடவார் துணைக்கலச வெம்முலையு
ளாடவர்தம் பணைத்தோளு மணிமார்பு மடங்குவன.

(இ-ள்.) நீண்ட அந்நகரத்தின் இடங்களிலெல்லாம் வரிசையாயுள்ள மாளிகைகளின் இறப்புகடோறும் பவளம்போலும கால்களையுடைய ஆண்புறாக்கள் தம் பெட்டைகளோடு ஒடுங்க, சிறுசண்பகப்பூவின இதழ்களலர்ந்த மிருதுவாகிய கூந்தலையுடைய பெண்களது இரண்டு கலசம்போனற வெப்பத்தைத் தரும் ஸ்தனங்களுள் புருஷர்களது பருத்த தோள்களும் அழகிய மார்பும் அடங்குவனவாம்.

இறை=வீட்டிறப்பு. மாதாகளுடைய ஸ்தனங்கள் குளிர்காலத்தில் வெம்மையையும், வேனிற்காலத்தில் தணமையையும் தருதலின் 'வெம்முலையுளாடவர் தம் பணைத்தோளு மணிமாாபு மடங்குவன' எனறு கூறினார். இதனை,

"வாவியுறை நீரும் வடநிழலும் பாவகமும்
ஏவனைய கண்ணா ரிளமுலையும்—ஓவியமே
மென்சீத காலத்தில் வெம்மைதரும் வெம்மைதனி
லின்பாருஞ் சீதளமா மே" என்பதனானுணர்க. (௩௩௧)

அரிசனமுங் குங்குமமு மரைத்தமைப்பா ரயலெல்லா
பரியவகிற் குறைபிளந்து புகைப்பார்கள் பாங்கெல்லாம்

எரியுமிழ்பேழ் வாய்த்தோணி யிரும்பிரப்பா ரிடையெல்லாம்.
விரிமலர்மென் புறவணிந்த மீப்புலத்து வைப்பெல்லாம்.

(இ-ள்.) விரிந்த மிருதுவாகிய மலர்களையுடைய குறிஞ்சிநிலத்தைச்சார்ந்த உயர்வாகிய இடங்களிலெல்லாம் மஞ்சளையுங் குங்குமத்தையுஞ் சேரவரைத்துப் (பூசுவித்தம்) பக்கங்களிலெல்லாம் வைப்பார்கள்; பெரிய அகிற்கட்டைகளைப் பிளந்து பக்கங்களிலெல்லாம் புகையிடுவார்கள்; நெருப்பை வீசுகின்ற அகன்ற வாயையுடைய இரும்பாற்செய்த தோணியைக் (குளிரின்பொருட்டு) இடங்கடோறும் சமீபத்தி லிழுத்துக்கொள்ளுவார்கள்.—எ-று.

தோணியிரும்பாவது—இரும்பினால் தோணிவடிவாகச்செய்து தீநிறைக்கப்பட்டுக் குளிரின்பொருட்டுச் சமீபத்தி லிழுத்துக்கொள்ளுமோர்கருவி. (௩௩௨)

அந்நாளிற் கொடிமாடச் செங்குன்றூ ரமர்ந்திருந்த
மெய்ஞ்ஞானப் பிள்ளையா ருடன்மேவும் பரிசனங்கள்
பன்னாளு மந்நாட்டிற் பயின்றதனாற் பனித்தகுளிர்
முன்னான பிணிவந்து மூள்வதுபோன் முடுகுதலும்.

(இ-ள்.) அம் முன்பனிக்காலத்தில் திருக்கொடிமாடச்செங்குன்றூரில் எழுந்தருளியிருந்த உண்மைஞானத்தை யுணர்ந்த திருஞானசம்பந்தப்பிள்ளையாரோடு வசிக்கின்ற பரிசனங்களாகிய அடியார்கள் அத்திருப்பதியில் பலநாளும்வசித்ததனால் நடுக்கத்திற்குக் காரணமான குளிரை முன்னிட்டுவரும் சுரநோய் வந்து தொடர்வதுபோல நெருங்கிவரவும்.—எ-று.

சுரநோய் அடியார்களை வாதிப்பதுபோல் வந்துதொடரினும் அவர்களுக்கு ஒருதீங்கும் விளைக்கு மாற்றலுடைய தன்றென்பது தோன்ற 'பனித்தகுளிர் முன்னான பிணிவந்து மூள்வதுபோன் முடுகுதலும்' என்று கூறினார். பனித்தகுளிர் முன்னான பிணியாவது - குளிர் முன்னேகண்டு பின்பு சுரங்காணும்நோய்; அதாவது நளிர்சுரம்.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௩௩௩)

அந்நிலைமை யாளுடைய பிள்ளையார்க் கவர்களெலா
முன்னறிவித் திறைஞ்சுதலு முதல்வனா ரருடொழுதே
யிந்நிலத்தி னியல்பெனினு நமக்கெய்தப் பெறாதென்று
சென்னிமதி யணிந்தாரைத் திருப்பதிகம் பாடுவார்.

(இ-ள்.) அச்சுரநோய் தொடருந்தன்மையைத் திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு அத்திருக்கூட்டத் தடியார்களெல்லாம் முன்னே தெரிவித்து வணங்கவும், (அதனைக்கேட்டருளிய பிள்ளையார்) முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமானது திருவருளை வணங்கி, இச்சுரநோய் இந்நாட்டிற் கியற்கையா யிருப்பினும் நம்மை யடைதற்குரியன வல்லவென்று, சந்திரசேகரராகிய சிவபெருமானைத் திருப்பதிகம்பாடுவாராயினார்.—எ-று. (௩௩௪)

வேறு.

அவ்வினைக் கிவ்வினை யென்றெடுத் தைய ரமுதுசெய்த
வெவ்விட முன்றடுத் தெம்பிடர் நீக்கிய வெற்றியினா
லெவ்விடத் தும்மடி யாரிடர் காப்பது கண்ட மென்றே
செய்வ்வினை தீண்டா திருநீல கண்ட மெனச்செப்பினார்.

(இ-ள்.) "அவ்வினைக்கிவ்வினை" என்றுமுதலில் தொடங்கி, சிவபெருமான் (திருமால் முதலியதேவர்களைக் காக்கும்பொருட்டு) உண்டருளிய கொடியவிடத்தை முன்னேதடுத்து எமது துன்பத்தை நீக்கியருளிய வெற்றியினால், எவ்விடத்திலும் அடியார்களது துன்பத்தைநீக்கிப் பாதுகாத்தருள்வது அவரது திருநீலகண்டமே யாதலின், அக்கண்டமே இவ்வினைக்குத் தீர்வென்றுகருதி "செய்வினைவந்தெமைத் தீண்டப்பெறாத் திருநீலகண்டம்" என்று இறுதியில் அமைத்து பாடியருளினார்.—எ-று.

பிணிக்கு மருந்துமுதலியன தீர்வாதல்போலச் செய்வினைக்குத் திருநீலகண்டம் தீர்வென்பதாயிற்று. (௧௩௫)

---

## திருநீலகண்டத்திருப்பதிகம்-பண் வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

அவ்வினைக்கிவ்வினையாமென்றுசொல்லுமஃதறிவீ
ருய்வினைநாடாதிருப்பதுமுந்தமக்கூனமன்றே
கைவினைசெய்தெம்பிரான்கழல்போற்றுதுநாமடியோஞ்
செய்வினைவந்தெமைத்தீண்டப்பெறாதிருநீலகண்டம். (௧)

காவினையிட்டுங்குளம்பலதொட்டுங்கனிமனத்தா
லேவினையாலெயின்மூன்றெரித்தீரென்றிருபொழுதும்
பூவினைக்கொய்துமலரடிபோற்றுதுநாமடியோந்
தீவினைவந்தெமைத்தீண்டப்பெறாதிருநீலகண்டம். (௨)

முலைத்தடமூழ்கியபோகங்களுமற்றெவையுமெல்லாம்
விலைத்தலையாவணங்கொண்டெமையாண்டவிரிசடையீ
ரிலைத்தலைச்சூலமுந்தண்டுமழுவுமிவையுடையீர்
சிலைத்தெமைத்தீவினைதீண்டப்பெறாதிருநீலகண்டம். (௩)

விண்ணுலகாள்கின்றவிச்சாதரர்களும்வேதியரும்
புண்ணியரென்றிருபோதுந்தொழப்படும்புண்ணியரே
கண்ணிமையாதனமூன்றுடையீருங்கழலடைந்தோந்
திண்ணியதீவினைதீண்டப்பெறாதிருநீலகண்டம். (௪)

மற்றிணையில்லாமலைதிரண்டன்னதிண்டோளுடையீர்
கிற்றெமையாட்கொண்டகேளாதொழிவதுந்தன்மைகொலோ
சொற்றுணைவாழ்க்கைதுறந்துந்திருவடியேயடைந்தோஞ்
செற்றெமைத்தீவினைதீண்டப்பெறாதிருநீலகண்டம். (௫)

மறுக்குமனத்தினைமாற்றியெம்மாவியைவற்புறுத்திப்
பிறப்பில்பெருமான்றிருந்தடிக்கீழ்ப்பிழையாதவண்ணம்
பறித்தமலர்கொடுவந்துமையேத்தும்பணியடியோஞ்
சிறப்பிலித்தீவினைதீண்டப்பெறாதிருநீலகண்டம். (௬-௭)

கருவைக்கழித்திட்டுவாழ்க்கைகடிந்துங்கழலடிக்கே
யுருகிமலர்கொடுவந்துமையேத்துதுநாமடியோஞ்

செருவிலரக்கனைச்சீரிலடர்த்தருள்செய்தவரோ
திருவிலித்தீவினை தீண்டப்பெறுதிருநீலகண்டம். (அ)

காற்றமலர்மிசைநான்முகனாரணன்வாதுசெய்து
தோற்றமுடையவடியுமுடியுந்தொடர்வரியீர்
தோற்றினுந்தோற்றுந்தொழுதுவணங்குதுநாமடியோஞ்
சீற்றமதாம்வினை தீண்டப்பெறுதிருநீலகண்டம். (கூ)

சாக்கியப்பட்டுஞ்சமணுருவாகியுடையொழிந்தும்
பாக்கியமின்றியிருதலைப்போகமும்பற்றும்விட்டார்
பூக்கமழ்கொன்றைப்புரிசடையீரடிபோற்றுகின்றோந்
தீக்குழித்தீவினை தீண்டப்பெறுதிருநீலகண்டம். (க0)

பிறந்தபிறவியிற்பேணியெஞ்செல்வன்கழலடைவா
னிறந்தபிறவியுண்டாகியிமையவர்கோனடிக்கட்
டிறம்பயில்ஞானசம்பந்தனசெந்தமிழ்பத்தும்வல்லார்
நிறைந்தவுலகினில்வானவர்கோனொடுங்கூடுவரோ. (கக)

திருச்சிற்றம்பலம்.

இஃது, கொங்குதேயத்திருப்பதிக ளேழனு ளொன்றாகிய திருக்கொடிமாடச்செங்குன்றூரென்னுந் திருச்செங்கோட்டில் திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளியகாலத்தில் ஓதியருளியது. இதனை நாடோறும் நியமமாகப் பாராயணஞ்செய்துவந்தால், நளிர்சுரமுதலிய தீயநோய்கள் நிவர்த்தியாகுமெனவறிக.

---

ஆய குறிப்பினி லாணை நிகழ வருளிச்செய்து
தூய பதிகத் திருக்கடைக் காப்புத் தொடுத்தணிய
மேயவப் பொற்பதி வாழ்பவர்க்கே யன்றி மேவுமந்நா
டீய பனிப்பிணி யந்நா டடங்கவுந் தீர்ந்ததன்றே.

(இ-ள்.) இவ்வாறு இடர்காக்குங் குறிப்பினால் (திருநீலகண்டம் எனத்) திருவாணை நிகழத் திருப்பதிகம்பாடியருளிப் பரிசுத்தமாகிய அத்திருப்பதிகத்தினிறுதியில் திருக்கடைக்காப்பையுந் தொடுத்துச் சாத்தியருள, அழகுபொருந்திய அந்தத் திருப்பதியில் வாழ்பவர்களுக்கேயல்லாமல், அந்நாளில் வரும் கொடிய நளிர்சுரம் அந்நாடு முழுமையும் விட்டொழிந்தது.—எ-று.

அந்நா டடங்கவும் என்றதனால், இறந்தகால நிகழ்காலங்களினன்றி, இனி எதிர்காலத்து வராமல் ஒழிந்ததென்க. (கூகூசு)

அப்பதி யின்க ணமர்ந்து சிலநாளி லங்ககன்று
துப்புறழ் வேணியர் தானம் பலவுந் தொழுதருளி
முப்புரி நூலுடன் றோலணி மார்பர் முனிவரொடுஞ்
செப்பருஞ் சீர்த்திருப் பாண்டிக் கொடுமுடிசென்றணைந்தார்.

(இ-ள்.) முப்புரிநூலோடு கரிய மான்றோலையும் சேர்த்தணிந்த மார்பினையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அத்திருப்பதியின்கண் ணெழுந்தருளியிருந்து சிலநாள் சென்றபின்பு, அவ்விடத்தினின்றும்நீங்கிப் பவளம்போலும் சிவந்த

சடைமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளையும் வணங்கியருளி, அடியார்திருக்கூட்டங்களோடும் சொல்லுதற்கரிய சிறப்பினையுடைய திருப்பாண்டிக்கொடுமுடி யென்னுந் திருப்பதியைச் சென்று சேர்ந்தருளினார்.—எ-று. (கூஉஎ)

பருவ மறுப்பொன்னிப் பாண்டிக் கொடுமுடி யார்தம்பாத
மருவி வணங்கி வளத்தமிழ் மாலை மகிழ்ந்துசாத்தி
விரிசுடர் மாளிகை வெஞ்சமாக் கூடல் விடையவர்தம்
பொருவிறு ளம்பல போற்றிக் குணதிசைப் போதுகின்றார்.

(இ-ள்.) காலந்தப்பாமல் வெள்ளம்வந்துகொண்டிருக்கும் காவிரிநதியின் தென்கரையிலுள்ள திருப்பாண்டிக்கொடுமுடி யென்னுந் திருப்பதியி லெழுந்தருளிய சிவபெருமானது திருவடிகளையடைந்து வணங்கி, வளம்பொருந்திய திருப்பதிகமாலையை மகிழ்ந்து சாத்தியருளி, பரந்த கிரணங்களையுடைய மாளிகைகள் பொருந்திய திருவெஞ்சமாக்கூடல் முதலாக இடபவாகனத்தையுடைய சிவபெருமானது ஒப்பற்ற பல திருப்பதிகளைத் துதித்துக் கீழ்த்திசைநோக்கிச் செல்கின்றவராயினார்.—எ-று. (கூஉஅ)

செல்வக் கருவூர்த் திருவா னிலைக்கோயில் சென்றிறைஞ்சி
நல்லிசை வண்டமிழ்ச் சொற்றொடை பாடியக் நாடகன்று
மல்கிய மாணிக்க வெற்பு முதலா வணங்கிவந்து
பல்கு திரைப்பொன்னித் தென்கரைத் தானம் பலபணிவார்.

(இ-ள்.) பலவகைச்செல்வங்கள் நிறைந்த திருக்கருவூரென்னுந் திருப்பதியில் திருவானிலையென்னுந் திருக்கோயிலையடைந்து வணங்கி, நல்ல இசைபொருந்திய வளவிய தமிழ்ச்சொற்களா லாகிய திருப்பதிகம் பாடியருளி, அக் கொங்குநாட்டை நீங்கி, ஒளிபொருந்திய இரத்தினகிரி முதலாகிய திருப்பதிகளை வணங்கி யெழுந்தருளிவந்து, மிக்க அலைகளையுடைய காவிரியாற்றின் தென்கரையிலுள்ள பல திருப்பதிகளையும் வணங்குவாராயினார்.—எ-று.

மாணிக்கவெற்பு=இரத்தினகிரி. (கூஉகூ)

பன்னெடுங் குன்றும் படர்நெடுங் கானும் பலபதியு
மங்கிலைத் தானங்க ளாயின வெல்லா மமர்ந்திறைஞ்சி
மன்னு புகலியில் வைதிக வாய்மை மறையவனார்
பொன்னியல் வேணிப் புனிதர் பராய்த்துறை யுட்புகுந்தார்.

(இ-ள்.) ஊழிக்காலத்தும் அழியாத சீகாழிப்பதியில் அவதரித்தருளிய வைதிகநெறியின் உண்மைப்பொருளாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் உயர்ந்த பல மலைகளும், படர்ந்த பெருங்காடுகளும், பல ஊர்களுமாகிய அவ்விடத்திலுள்ள பல திருப்பதிகளெல்லாவற்றையும் விரும்பி வணங்கியருளி, பொன்போல் விளங்குகின்ற சடைமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருப்பராய்த்துறை யென்னும் ஸ்தலத்தை யடைந்தருளினார்.—எ-று. (கூசo)

நீடும் பராய்த்துறை நெற்றித் தனிக்கண்ணர் கோயினண்ணிக்
கூடுங் கருத்தொடு கும்பிட்டுக் கோதி றமிழ்ச்சொன்மாலை
பாடுங் கவுணியர் கண்பனி மாரி பரந்திழியச்
சூடுங் கரதலத் தஞ்சலி கோலித் தொழுதுநின்றார்.

(இ-ள்.) சிறந்த திருப்பாய்த்துறையி லெழுந்தருளிய ஒப்பற்ற நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமானது திருக்கோயிலை யடைந்து, அன்புபொருந்திய திருவுள்ளத்தோடும் வணங்கிக் குற்றமற்ற தமிழ்ச்சொற்களாலாகிய திருப்பதிக மாலையைப் பாடியருளும் திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது திருக்கண்களினின்றும் குளிர்ந்த ஆனந்தபாஷ்பம் பரவிச் சிந்த, சிரசின்மேற்குடிய திருக்கரங்களைக் குவித்து வணங்கிநின்றருளினர்.—எ-று. (ஙசக)

தொழுது புறம்பணைந் தங்குநின் றேகிச் சுரர்பணிவுற்
றெழுதிரு வாலந் துறைதிருச் செந்துறை யேமுதலா
வழுவில்பல் கோயில்கள் சென்று வணங்கி மகிழ்ந்தணைவார்
செழுமலர்ச் சோலைத் திருக்கற் குடிமலை சேரவந்தார்.

(இ-ள்-) வணங்கிப் புறத்திற்சென்று அத்திருப்பதியினின்று மெழுந்தருளி, தேவர்கள் நமஸ்கரித்தெழுகின்ற திருவாலந்துறை, திருச்செந்துறை முதலாகிய குற்றமற்ற பல திருப்பதிகளையும் அடைந்து வணங்கி மகிழ்வோடும் வருகின்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார் செழுமைபொருந்திய மலர்கள் நிறைந்த சோலை சூழ்ந்த திருக்கற்குடிமலை யென்னும் திருப்பதியை அடைய வெழுந்தருளினர். ()

வேறு.

கற்குடி மாமலை மேலெழுந்த கனகக்கொழுந்தினைக் கால்வளையப்
பொற்றிரண் மேருச் சிலைவளைத்த போர்விடையாளியைப் போற்றி
நற்றமிழ்மாலைபுனைந்தருளிஞானசம்பந்தர்புலன்களைந்துஞ் [சைத்து
செற்றவர்மூக்கீச்சரம்பணிந்து திருச்சிராப்பள்ளிச்சிலம்பணைந்தார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருக்கற்குடியென்னும் பெரிய மலையின்மேல் எழுந்தருளிய பொற்கொழுந்துபோல்பவரும், பொன்மயமாகிய திரண்ட மேருவாகிய வில்லை அதன் காற்குதை வளையும்படி வளைத்தருளிய போர் செய்யும் இடபத்தைவாகனமாகவுடையவருமாகிய உச்சிவரதநாதனைத் துதித்து, நல்ல தமிழ்ப்பதிகமாலையைச் சாத்தியருளி, ஐம்புலன்களையும் இயல்பாகவே நீக்கியருளிய பஞ்சவனநாதர் வீற்றிருந்தருளும் திருமூக்கீச்சரமென்னுந் திருப்பதியை யடைந்துவணங்கித் திருச்சிராப்பள்ளிமலையை யடைந்தருளினர்.—எ-று.

மூக்கீச்சரம் என்பது உறையூர். (ஙசங)

செம்மணி வாரி யருவிதூங்குஞ் சிராப்பள்ளிமேய செழுஞ்சுடரைக்
கைம்மலையீருரிபோர்வைசாத்துங்கண்ணுதலாரைக்கழல்பணிந்து
மெய்ம்மகிழ்வெய்தியுளங்குளிரவிளங்கியசொற்றமிழ்மாலைவேய்ந்து
மைம்மலர்கண்டர்தமானைக்காவைவணங்கும்விருப்பொடுவந்தணைந்தார்.

(இ-ள்.) அருவியாறானது சிவந்த பல இரத்தினங்களை வாரிக்கொண்டு புரண்டு ஓடுகின்ற திருச்சிராப்பள்ளிமலையி லெழுந்தருளிய செழுமைபொருந்திய ஒளிப்பிழம்பாயுள்ளவரும், துதிக்கையையுடைய கயாசுரனென்னும் யானையின் தோலைப் போர்த்தருளிய நெற்றிக்கண்ணை யுடையவருமாகிய தாயுமானேசரது திருவடிகளை வணங்கித் திருமேனியில் மகிழ்ச்சியினலாகிய புளகாங்கித மடைந்து ஆனந்தத்தால் திருவுள்ளங் குளிர்ச்சியடைய, நல்ல சொற்களமைந்த திருப்

பதிகம்பாடியருளி, கருநிறம்விளங்கும் கண்டத்தையுடைய சம்புகேசுவரர் எழுந்தருளிய திருவானைக்காவென்னுந் திருப்பதியை வணங்கும் விருப்பத்தோடும் வந்துசேர்ந்தருளினார்.—எ-று. (௩௪௪)

விண்ணவர் போற்றிசெ யானைக்காவில் வெண்ணாவல்மேவிய மெய்ப்பொருளை, நண்ணி யிறைஞ்சிமுன் வீழ்ந்தெழுந்து நாற்கோட்டு நாகம் பணிந்ததுவு, மண்ணல் கோச்செங்க ணரசன் செய்த வடிமையு மஞ்சொற் றொடையில் வைத்துப், பண்ணுறு செந்தமிழ் மாலைபாடிப் பரவினின் றேத்தினர் பான்மையினால்.

(இ-ள்.) தேவர்கள் துதிக்கும் திருவானைக்காவில் வெண்ணாவல் விருக்ஷத்தின்கீ ழெழுந்தருளிய மெய்ப்பொருளாயுள்ள சிவபெருமானை யடைந்து வணங்கிச் சந்நிதியில் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தெழுந்து, நான்கு கொம்புகளையுடைய ஒரு யானை வழிபட்டமையையும், பெருமையிற் சிறந்த கோச்செங்கட்சோழநாயனார் செய்தருளிய அடிமைத்திறத்தையும் அழகிய சொற்களமைந்த திருப்பதிகத்தி லமைத்து, இசை பொருந்திய திருப்பதிகமாலையைப் பாடியருளி அன்போடுவணங்கிநின்று துதித்தருளினார்.—எ-று. (௩௪௫)

திருவானைக்கா - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

மழையார்மிடறுமழுவாளுடையா
யுழையார்கரவாவுமையாள்கணவா
விழவாரும்வெண்ணாவலின்மேவியவெம்
மழகாவெனுமாயிழையானவளே.

செங்கட்பெயர்கொண்டவன்செம்பியர்கோன்
அங்கட்கருணைபெரிதாயவனே
வெங்கண்விடையாயெம்வெண்ணாவலுளா
யங்கத்தவாவாயினளாயிழையே.

வெண்ணாவலமர்ந்துறைவேதியனைக்
கண்ணார்கமழ்காழியர்தந்தலைவன்
பண்ணோடிசைபாடியபத்தும்வல்லார்
விண்ணோரவரோத்தவிரும்புவரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சம்புகேசுவரர், தேவியார்-அகிலாண்டேஸ்வரியம்மை.

நாரணனுன்முகன் காணவுண்மை வெண்ணாவலுண்மை மயேந்திரமுஞ்
சீரணி நீடு திருக்கயிலை செல்வத் திருவாரூர் மேயபண்பு
மாரணத் துட்பொரு ளாயினரை யானைக்காவின்கட் புகழ்ந்துபாடி
யேரணியும்பொழில்சூழ்ந்தசண்பையேந்தலாரெல்லையின்பமுற்றார்.

(இ-ள்.) திருமால் பிரம னென்னு மிருவரும் அறியவொண்ணாத தன்மையோடு வெண்ணாவல்விருக்ஷத்தின்கண் ணெழுந்தருளியதன்மையையும், திரும

யேந்திரத்தும், சிறப்புமிக்க திருக்கயிலையிலும், செல்வம் நிறைந்த திருவாரூரிலும் எழுந்தருளியதன்மையையும், வேதத்தினுட்பொருளாகிய சிவபெருமானைத் திருவானைக்காவினிடத்துப் புகழ்ந்து பாடியருளி, அழகுபொருந்திய சோலைகள் சூழ்ந்த சீகாழிப்பதியி லவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அளவில்லாத பேரின்பமடைந்தருளினார்.—எ-று. (௩௬௬)

---

### திருமயேந்திரமும், ஸ்ரீகயிலாயமும், திருவானைக்காவும், திருவாரூரும்;

கூடசதுக்கம்.

திருச்சிற்றம்பலம்.

மண்ணதுவுண்டரிம்மலரோன்காணா
வெண்ணாவல்விரும்புமயேந்திரருங்
கண்ணதுவோங்கியகயிலையாரு
மண்ணலாரூராதியானைக்காவே.

ஏனமாலயனவர்காண்பரியார்
கானமார்கயிலைநன்மயேந்திரரு
மானவாரூராதியானைக்காவை
ஞானசம்பந்தன்றமிழ்சொல்லுமே.

திருச்சிற்றம்பலம்.

---

கைதொழு தேத்திப் புறத்தணைந்து காமர்பதியதன் கட்சிலநாள்
வைகி வணங்கி மகிழ்ந்தணைவார் மன்னுந் தவத்துறை வானவர்தா [ந்து
ளெய்தி யிறைஞ்சி யெழுந்துநின்றே யின்றமிழ்மாலைகொண்டேத்திப்போ
வைதிக மாமணி யம்மருங்கு மற்றுள்ளதானம் வழுத்திச்செல்வார்.

(இ-ள்.) வைதிகசூளாமணியாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது திருக்கரங்களைக் கூப்பி வணங்கித் துதித்துப் புறத்திலெழுந்தருளி, அழகிய அத்திருவானைக்காவின்கண் சிலநாள் எழுந்தருளியிருந்து வணங்கி மகிழ்ந்து செல்கின்றவர், நிலைபெற்ற திருத்தவத்துறையி லெழுந்தருளிய சிவபெருமானது திருவடிகளையடைந்து வணங்கி எழுந்துநின்று, இனியதிருப்பதிகம் பாடித் துதித்து, அங்குநின்று மெழுந்தருளி, அதன் பக்கங்களிலுள்ள மற்றத் திருப்பதிகளையுந் துதித்துச்செல்கின்றவராயினார்.—எ-று. (௩௬௭)

ஏறுயர்த் தார்திருப் பாற்றுறையு மெறும்பியூர் மாமலையேமுதலா
வேறு பதிகள் பலவும் போற்றி விரவுதிருத் தொண்டர் வந்துசூழ
வீறில் புகழ்ச்சண்பை யாளியார்தா மெண்டிசையோருந்தொழுதிறைஞ்ச
நீறணி செம்பவ ளப்பொருப்பி னெடுங்களமாநகர் சென்றுசேர்ந்தார்.

(இ-ள்.) இடபக்கொடியையுயர்த்திய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருப்பாற்றுறையும், பெரிய திருவெறும்பிமலையும் முதலாகிய வேறு திருப்பதிகள் பலவற்றையும் வணங்கித் துதித்து, தம்மோடு உடன்வந்த திருத்தொண்டர்கள் சூழ்ந்துவர, முடிவில்லாத புகழையுடைய சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் எட்டுத்திக்கி லுள்ளவர்களும் தொழுது வணங்க, விபூதியணிந்த

சிவந்த பவளமலைபோன்ற நித்தியசுந்தரேசர் வீற்றிருந்தருளும் பெரிய திருநெடுங் களமென்னுந் திருப்பதியைச் சென்றடைந்தருளினர்.—எ-று. (ந.சஅ)

நெடுங்களத் தாதியை யன்பானின்பால் நேசஞ் செலாவகை நேர் விலக்கு, மிடும்பைக டீர்த்தருள் செய்வாயென்னு மின்னிசை மாலைகொ ண் டேத்தியேகி, யடும்பணிச் செஞ்சடை யார்பதிக ளனைத்தும் பணிந்து நியமம்போற்றிக், கடுங்கை வரையுரித்தார் மகிழ்ந்த காட்டுப்பள் ளிப்பதி கைதொழுவார்.

(இ-ள்.) திருநெடுங்களமென்னுந் திருப்பதியிலெழுந்தருளும் முதல்வரா கிய சிவபெருமானை, அன்பினால் தேவரீரிடத்து எமது நேயம் செல்லாவண்ணம் முன்னின்று தடுக்கும் துன்பத்திற் கேதுவாகிய மலமாயாகன்மங்களை நீக்கியருள் செய்வாயென்னும் பொருளையுடைய இனிய இசைபொருந்திய திருப்பதிகம் பாடி யருளி, அவ்விடத்தினின்று நீங்கி, கொல்லுந்தொழிலையுடைய பாம்பையணிந்த சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமான் எழுந்தருளும் திருப்பதிகளெல்லா வற்றையும் வணங்கி நியமத்தோடு துதித்து, கொடிய கோபத்தையுடைய யானை யை யுரித்த சிவபெருமான்மகிழ்ந்து வீற்றிருந்தருளும் மேலைத்திருக்காட்டுப்பள்ளி யென்னுந் தலத்தை வணங்குவாராயினர்.—எ-று. (ந.சக)

---

### திருநெடுங்களம்-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

மறையுடையாய்தோலுடையாய்வார்சடைமேல்வளரும்
பிறையுடையாய்பிஞ்ஞகனேயென்றுன்னைப்பேசினல்லாற்
குறையுடையார்குற்றமோராய்கொள்கையினாலுயர்ந்த
நிறையுடையாரிடர்களையாய்நெடுங்களமேயவனே.

நீடவல்லவார்சடையான்மேயநெடுங்களத்தைச்
சேடர்வாழுமாமறுகிற்சிரபுரக்கோனலத்தா
னாடவல்லபனுவன்மாலைஞானசம்பந்தன்சொன்ன
பாடல்பத்தும்பாடவல்லார்பாவம்பறையுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-நித்தியசுந்தரேசர், தேவியார்-ஒப்பிலாநாயகியம்மை.

---

சென்று திகழ்திருக் காட்டுப்பள்ளிச் செஞ்சடை நம்பர்தங் கோயி லெய்தி, முன்றில் வலங்கொண் டிறைஞ்சி வீழ்ந்து மொய்கழற் சேவடி கைதொழுவார், கன்றணை யாவின் கருத்து வாய்ப்பக் கண்ணுதலானைமு ன் போற்றிசெய்து, மன்றுணின் றுடன் மனத்துள் வைப்பார் வாருமன் னுமுலை பாடிவாழ்ந்தார்.

(இ-ள்.) விளங்குகின்ற திருக்காட்டுப்பள்ளியை யடைந்து சிவந்தசடை முடியையுடைய சிவபெருமானது திருக்கோயிலிற் சென்றருளித் திருமுற்றத்தில் பிரதக்ஷணஞ்செய்து தொழுது வணங்கி, நெருங்கிய வீரக்கழலையணிந்த சிவந்த திருவடிகளை வணங்குகின்றவர், கன்றையடைந்த பசுவைப்போலத் திருவுள்ளங்

*கரைய, நெற்றிக்கண்ணையுடைய அவ் வெம்பெருமானைத் துதித்து, கனகசபையில் ஆடியருளும் திருநடனத்தைத் தமது திருவுள்ளத்தில் வைத்தருள்பவராய் "வாருமன்னும்முலை" என்னு முதலையுடைய திருப்பதிகத்தை யருளிச்செய்து, அதனால் சிவானந்தப்பெருவாழ் வடைந்தருளினார்.—எ-று.* (௬௫௦)

---

மேலைத்திருக்காட்டுப்பள்ளி-பண்-கொல்லி.

*திருச்சிற்றம்பலம்.*

*வாருமன்னும்முலைமங்கையோர்பங்கின*
*ஞாருமன்னும்பலியுண்பதும்வெண்டலை*
*காருமன்னும்பொழில்சூழ்ந்தகாட்டுப்பள்ளி*
*நீருமன்னுஞ்சடைநிமலர்தந்நீர்மையே.*

*பொருபுனல்புடையணிபுறவநன்னகர்மன்ன*
*னருமறையவைவல்லவணிகொள்சம்பந்தன்சொற்*
*கருமணிமிடற்றினன்கருதுகாட்டுப்பள்ளி*
*பரவியதமிழ்சொலப்பறையுமெய்ப்பாவமே.*

*திருச்சிற்றம்பலம்.*

சுவாமிபெயர்-தீயாடியப்பர், தேவியார்-வார்கொண்டமுலையம்மை.

---

*அங்கப் பதியின் றெழுந்தருளி யணிதிரு வாலம் பொழில்வணங்கிப், பொங்கு புனற்பொன்னிப் பூந்துருத்திப் பொய்யிலியாரைப் பணிந்துபோற்றி, யெங்கு நிகழ்திருத் தொண்டர்குழா மெதிர்கொள்ள வெப்பதி யுந்தொழுது, செங்கயல் பாய்வய லோடைசூழ்ந்த திருக்கண்டி யூர்தொழச் சென்றணைந்தார்.*

(இ-ள்.) *அவ்விடத்து அத்திருப்பதியினின்று மெழுந்தருளி, அழகியதிருவாலம்பொழில் என்னுந் திருப்பதியை வணங்கி, பெருகுகின்ற நீரையுடைய காவிரிநதிக்கரையிலிருக்கும் திருப்பூந்துருத்தி யென்னும் ஸ்தலத்தி லெழுந்தருளிய மெய்ப்பொருளாகிய புட்பவனநாதரை வணங்கித் துதித்து, எவ்விடத்திலுமுள்ள அடியார்கூட்டங்க ளெதிர்கொண்டுவர, இடையிலுள்ள பல திருப்பதிகளையுந் தொழுது, சிவந்த கயல்மீன்கள் பாயும் வயல்களும், நீரோடைகளுஞ்சூழ்ந்த திருக்கண்டியூரை யடைந்து வணங்கச் சென்றடைந்தருளினார்.—எ-று.*

*திருக்கண்டியூரென்பது பிரமனது சிரங்கொய்த தலமாதலின், இது அட்டவீரட்டத்துள் ஒன்று.* (௬௫௧)

கண்டியூர் வீரட்டர் கோயிலெய்திக் கலந்தடியாருடன் காதல்பொங்கக், கொண்ட விருப்புடன் சூழ்ந்திறைஞ்சிக் குலவு மகிழ்ச்சியின் கொள்கையினுற், றொண்டர் [illegible]
*மிழ் மாலைதன்னி, லண்டர் பிரான்ற னருளின் வண்ண மடியார் பெருமையிற் கேட்டருளி.*

(இ-ள்.) *திருக்கண்டியூரில் வீற்றிருந்தருளும் வீரட்டேசரது திருக்கோயிலையடைந்து அடியார்களோடு அன்புமேலிடக்கலந்து, திருவுள்ளத்திற் பொருந்திய*

விருப்பத்தோடும் வணங்கியெழுந்து, விளங்குகின்ற சந்தோஷமேலீட்டினால் அடியார் திருக்கூட்டத்தினைப் பார்த்து நின்றருளி, நல்லசொற்களால் தொடுக்கப்பட்ட இசையோடுகூடிய திருப்பதிகத்தில் தேவர்கள் பெருமானாகிய வீரட்டேசரது திருவருளின்தன்மையை அவரடியார் உணரும்பெருமையினால் ("வினவினேனறியாமையில்லுரைசெய்ம்மின்") என வினவியருளி.—எ-று.

இதுமுதலிரண்டுபாடலுங் குளகம். (௩௹௨)

வினவியெடுத்த திருப்பதிக மேவு திருக்கடைக் காப்புத்தன்னி, லனைய நினைவரி யோன்செயலை யடியாரைக் கேட்டு மகிழ்ந்ததன்மை, புனைவுறு பாடலிற் போற்றிசெய்து போந்து புகலிக் கவுணியனார், துனைபுனற் பொன்னித் திரைவலங்கொள் சோற்றுத் துறைதொழச் சென்றடைவார்.

(இ-ள்.) வினவியெடுத்தருளிய திருப்பதிகத்திற் பொருந்திய திருக்கடைக்காப்பில்,அப்பெருங்கருணையையுடைய நினைத்தற்கரிய சிவபெருமானது திருவருட்பெருமையை அடியாரை வினவித் தாம் மகிழ்ந்ததன்மையைத் தாம் அருளியதிருப்பதிகத்தினும் திருக்கடைக்காப்பிலுந் துதித்தருளி, சீகாழிப்பதியி லவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அத்திருப்பதியினின்று நீங்கி, விரைந்து செல்லும் நீரையுடைய காவிரியின் அலைகள் வலம்வருகின்ற திருச்சோற்றுத்துறையென்னும் ஸ்தலத்தை வணங்கும்படிச் சென்று சேர்வாராயினர்.—எ-று. ()

---

திருக்கண்டியூர்-பண்-கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

வினவினேனறியாமையிலுரைசெய்ம்மினீரருள்வேண்டுவீர்
கனைவிலார்புனற்காவிரிக்கரைமேயகண்டியூர்வீரட்டன்
தனமுனேதனக்கின்மையோர்தமராயினாண்டமாளத்தான் [தே.
அனவில்வாழ்க்கைகொண்டாடிப்பாடியிவ்வையமாப்பலிதேர்ந்த

கருத்தனைப்பொழில்சூழுங்கண்டியூர்வீரட்டத்துறைகள்வனை
யருத்தனைத்திறமடியர்பான்மிகக்கேட்டுகந்தவினாவுரை
திருத்தமாந்திகழ்காழிஞானசம்பந்தன்செப்பியசெந்தமி
ழொருத்தராயினும்பலர்களாயினுமுரைசெய்வாருயர்ந்தார்களே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வீரட்டேசர், தேவியார்-மங்களநாயகியம்மை.

---

வேறு.

அப்பர் சோற்றுத் துறைசென் றடைவோமென்
றொப்பில் வண்டமிழ் மாலை யொருமையாற்
செப்பி யேசென்று சேர்ந்தனர் சேர்விலார்
முப்பு ரஞ்செற்ற முன்னவர் கோயின்முன்.

(இ-ள்.) பகைவர்களது முப்புரத்தை நகைத்தெரித்தருளிய முதல்வராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கோயிலின்முன்னேநின்று, "அப்பர் சோ

ற்றுத்துறை சென்றடைவோம்" என்னும் இறுதியையுடைய ஒப்பற்ற வளம் பொருந்தியதிருப்பதிகமாலையைஒருமைப்பட்ட திருவுள்ளத்தோடும் பாடி அடைந்தருளினார்.—எ-று. (௩௫௪)

திருச்சோற்றுத்துறை பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

செப்பநெஞ்சேநெறிகள்சிற்றின்பந்
துன்பனென்னுதருளே துணையாக
வொப்பரொப்பர்பெருமானொளிவெண்ணீற்
றப்பர்சோற்றுத்துறைசென்றடைவோமே.

அந்தண்சோற்றுத்துறையெம்மாதியைச்
சிந்தைசெய்ம்மினடியீராயினீர்
சந்தம்பரவுஞானசம்பந்தன்
வந்தவாறேபுனைதல்வழிபாடே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-தொலையாச்செல்வர், தேவியார்-ஒப்பிலாம்பிகையம்மை.

தொல்லை நீடிருச் சோற்றுத் துறையுறை
செல்வர் கோயில் வலங்கொண்டு தேவர்க
ளல்ல றீர்க்கநஞ் சுண்டா ரடியிணை
யெல்லை யில்லன்பு கூர விறைஞ்சினார்.

(இ-ள்.) பழமைபொருந்திய சிறந்த திருச்சோற்றுத்துறையி லெழுந்தருளிய தொலையாச்செல்வரது திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்து திருமால்முதலியதேவர்கள் அடைந்த துன்பத்தைத் தீர்க்கும்பொருட்டு விஷத்தையுண்டருளிய சிவபெருமானது இரண்டு திருவடிகளையும் அளவில்லாத அன்பு அதிகரிக்கும்படி வணங்கியருளினார்.—எ-று. (௩௫௫)

இறைஞ்சி யேத்தி யெழுந்துநின் றின்னிசை
நிறைந்த செந்தமிழ் பாடி நிலாவியங்
குறைந்து வந்தடி யாருட னெய்தினார்
சிறந்த சீர்த்திரு வேதி குடியினில்.

(இ-ள்.) வணங்கித் துதித்து எழுந்துநின்று இனிய இசைபொருந்திய செந்தமிழ்த் திருப்பதிகம் அருளிச்செய்து, அத்திருப்பதியில் வசித்தருளிப் பின்பு மகிழ்ச்சியடைந்து, மிக்ககீர்த்தியையுடைய திருவேதிகுடியென்னுந்திருப்பதியில் அடியார் திருக்கூட்டத்தோடும் அடைந்தருளினார்.—எ-று. (௩௫௬)

வேத வேதியர் வேதி குடியினி
னாதர் கோயி லணைந்து நலந்திகழ்
பாத பங்கம் போற்றிப் பணிந்தெழுந்
தோதி னார்தமிழ் வேதத்தி னோங்கிசை.

(இ-ள்.) வேதங்களை யோதியுணர்ந்த பிராமணர்கள் வாழும் திருவேதிகுடியென்னூர் திருப்பதியில் வேதபுரீசரது திருக்கோயிலை யடைந்து, நன்மைவிளங்

குகின்ற அவ்வெம்பெருமானது திருவடித்தாமரைகளைத் துதித்து நமஸ்கரித்தெழுந்து, திருநெறித்தமிழ்வேதமாகிய திருப்பதிகத்தின் ஓங்கிய இசையையும் ஓதியருளினார்.—எ-று.

வேதவேதியர் என்பதை வேதப்பொருளாயுள்ள பிள்ளையார் எனவும், ஓதாமல் வேதமுணர்ந்தபிள்ளையார் எனவும் திருஞானசம்பந்தப்பிள்ளையார் பக்ஷம் பொருள்கூறினும் பொருந்தும். (௩௫௭)

எழுது மாமறை யாம்பதி கத்திசை
முழுதும் பாடி முதல்வரைப் போற்றிமுன்
னெழுது போந்துவந் தெய்தினார் சோலைசூழ்
பழுதில் சீர்த்திரு வெண்ணிப் பதியினில்.

(இ-ள்.) எழுதுகின்ற பெரிய தமிழ்வேதமாகிய திருப்பதிகத்தின்கண் இசைமுழுவதும் ஓதியருளி, முதல்வராகிய வேதபுரீசரைத் திருமுன்னே துதித்து வணங்கி, அவ்விடத்தினின்று மெழுந்தருளி, சோலைகள்சூழ்ந்த குற்றமற்ற சிறப்பினையுடைய திருவெண்ணியென்னுந் திருப்பதியில் மகிழ்ந்தடைந்தருளினார். ()

வெண்ணி மேய விடையவர் கோயிலை
நண்ணி நாடிய காதலி னுண்மதிக்
கண்ணி யார்தங் கழலிணை போற்றியே
பண்ணி னீடும் பதிகமுன் பாடினார்.

(இ-ள்.) திருவெண்ணியி லெழுந்தருளிய இடபவாகனத்தையுடைய வெண்ணிநாதரது திருக்கோயிலையடைந்து மிகுந்த அன்போடும் இளம்பிறையைக் கொண்டைமாலையாக வணிந்த சிவபெருமானது திருவடிகளைத் துதித்து, இசைமிகுந்த திருப்பதிகத்தைச் சந்நிதியில்நின்று பாடியருளினார்.—எ-று. (௩௫௯)

பாடி நின்று பரவிப் பணிந்துபோ
யாடு மங்கணர் கோயிலங் குள்ளன
மாடு சென்று வணங்கி மகிழ்ந்தனர்
நீடு சண்பை நிறைபுகழ் வேதியர்.

(இ-ள்.) திருப்பதிகம்பாடி நின்று துதித்து வணங்கி, அவ்விடத்தினின்றுஞ் சென்றருளி, அத் திருப்பதியின் பக்கங்களிலுள்ளனவாகிய நடனமூர்த்தியாகிய சிவபெருமானது திருக்கோயிலின்கண் சென்று வணங்கி மகிழ்ந்தருளினார்; ஊழிக்காலத்து மழியாத சீகாழிப்பதியி லவதரித்தருளிய நிறைந்த கீர்த்தியையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையார்.—எ-று.

வேதியர் மகிழ்ந்தனர் எனக்கூட்டுக. (௩௬௦)

## வேறு.

மொய்தருஞ் சோலைசூழ் முளரிமுள் ளடவிபோய்
மெய்தரும் பரிவிலான் வேள்வியைப் பாழ்படச்
செய்தசங் கரர்திருச் சக்கரப் பள்ளிமுன்
பெய்தவந் தருளினா ரியலிசைத் தலைவனார்.

(இ-ள்) நெருங்கிய சோலைசூழ்ந்த தாமரைத்தண்டின் முட்காடென்னும் மருதநிலத்தின் மேற்சென்றருளி, உண்மையாகிய அன்பில்லாத தக்கனுனவன்

செய்தயாகத்தைப் பாழாகச்செய்தருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருச்சக்கரப்பள்ளியென்னுந்திருப்பதியானது தமக்குமுன்னே பொருந்த, அங்கு எழுந்தருளினார்; இயற்றமிழிலும் இசைத்தமிழிலும் முதல்வராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார்.—எ-று. (நுசுக)

தாமரை மருதநிலக் கருப்பொரு ளாதலால், மருதநிலத்தை 'முளரிமுள்ளடவி' என்று கூறினர். (நுசுக)

சக்கரப் பள்ளியார் தந்தனிக் கோயிலுட்
புக்கருந் தியினுடன் புனைமலர்த் தாள்பணிந்
தக்கணைப் பரமர்பா லன்புறும் பரிவுகூர்
மிக்கசொற் றமிழினால் வேதமும் பாடினார்.

(இ-ள்.) திருச்சக்கரப்பள்ளியி லெழுந்தருளிய பசுபதிநாதரது திருக்கோயிலினுட்சென்று அன்போடும் அழகியதாமரைமலர்போன்ற திருவடிகளை வணங்கி, அக்குமணியைத் திருவரையிலணிந்த சிவபெருமானிடத்து அன்பாலாகிய பரிவு மிகுந்த சிறந்த தமிழ்ச்சொற்களால் திருநெறித் தமிழ்வேதமாகிய திருப்பதிகத்தையும் பாடியருளினார்.—எ-று. (நுசுஉ)

தலைவர்தஞ் சக்கரப் பள்ளிதன் னிடையகன்
றலைபுனற் பணைகளி னருகுபோ யருமறைப்
புலனுறுஞ் சிந்தையார் புள்ளமங் கைப்பதிக்
குலவுமா லந்துறைக் கோயிலைக் குறுகினார்.

(இ-ள்.) அரிய வேதங்களின் மெய்ப்பொருளை யோதாதுணர்ந்த திருவுள்ளத்தையடைய திருஞானசம்பந்தப்பிள்ளையார் முதற்பெருங் கடவுளாகிய சிவபெருமானது திருச்சக்கரப்பள்ளியென்னுந் திருப்பதியினின்றுநீங்கி, அலைகின்ற நீரையுடையவயலின் பக்கத்திற்சென்று திருப்புள்ளமங்கை யென்னுந் திருப்பதியில் விளங்கும் திருவாலந்துறையென்னுந் திருக்கோயிலை யடைந்தருளினார்.—எ-று.

மன்னுமக் கோயில்சேர் மான்மறிக் கையர்தம்
பொன்னடித் தலமுறப் புரிவொடுந் தொழுதெழுந்
தின்னிசைத் தமிழ்புனைந் திறைவர்சே லூருடன்
பன்னுபா லைத்துறைப் பதிபணிந் தேகினார்.

(இ-ள்.) நிலைபெற்ற அத் திருவாலந்துறையென்னுந் திருக்கோயிலினுள்ளெழுந்தருளும் மான்கன்றையேந்திய திருக்கரத்தினையுடைய சிவபெருமானது அழகிய திருவடிகளை அன்போடும் சிரசிற்பொருந்த வணங்கியெழுந்து இனியஇசை பொருந்திய திருப்பதிகம்பாடியருளி, சிவபெருமானது திருசேலூரோடு யாவரும் புகழுந்திருப்பாலைத் துறையென்னுந் திருப்பதியைவணங்கி அவ்விடத்தினின்றும் சென்றருளினார்.—எ-று. (நுசுச)

காவின்மேன் முகிலெழுங் கமழ்நறும் புறவுபோய்
வாவிநீ டலவன்வாழ் பெடையுடன் மலர்நறும்
பூவின்மேல் விழைவுறும் புகலியார் தலைவனார்
சேவின்மே லண்ணலார் திருநலூர் நண்ணினார்.

(இ-ள்.) தடாகங்களிலுள்ள பெரியஆண்நண்டுகள் தம்முடன் வாழ்கின்ற பெட்டைநண்டுகளோடு அங்குமலர்ந்த நல்லதாமரைமலர்களின்மேல் விருப்புற்று

வசிக்கும் சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார், சோலைகளின்மேல் மேகங்கள்தவழ்கின்ற வாசனைகமழும் நல்லமுல்லைநிலத்தின் வழியேசென்று இடபவாகனத்தின்மேலெழுந்தருளும் சிவபெருமானது திருநல்லூரென்னும் திருப்பதியையடைந்தருளினர்.—எ-று. (நசரு)

மன்றலங் கழனிசூழ் திருநலூர் மறைவலோர்
துன்றுமங் கலவினைத் துழனியா லெதிர்கொளப்
பொன்றயங் கொளிமணிச் சிவிகையிற் பொலிவுறச்
சென்றணைந் தருளினர் சிரபுரச் செம்மலார்.

(இ-ள்.) வாசனைபொருந்திய அழகிய வயல்கள்சூழ்ந்த திருநல்லூரில்வாழும் வேதங்களையுணர்ந்த பிராமணர்கள் பொருந்திய மங்கலவினைக்குரிய ஆரவாரத்தோடும் எதிர்கொண்டுவர, சீகாழிப்பதியி லவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் பொன்மயமாக விளங்குமொளியையுடைய முத்துச்சிவிகையின்மேல் அழகு பொருந்த எழுந்தருளிச்சென்றார்.—எ-று. (நசசு)

நித்திலச் சிவிகைமே னின்றிழிந் தருளியே
மொய்த்தவந் தணர்குழா முன்செலப் பின்செலும்
பத்தரும் பரிசனங் களுமுடன் பரவவே
வத்தர்தங் கோபுரந் தொழுதணைந் தருளினர்.

(இ-ள்.) முத்துச்சிவிகையினின்று மிறங்கியருளி, தம்மை எதிர்கொள்ளும்படி நெருங்கிவந்த பிராமணர் கூட்டங்கள் முன்னேசெல்ல, தமக்குப் பின்னே வருகின்ற அடியார்களும் பரிசனங்கள் சூழ்ந்துவர, சிவபெருமானது திருக்கோபுரத்தைவணங்கி உள்ளே சென்றருளினர்.—எ-று. (நசஎ)

வெள்ளிமால் வரையைநேர் விரிசுடர்க் கோயிலைப்
பிள்ளையார் வலம்வரும் பொழுதினிற் பெருகுநீர்
வெள்ளவா னந்தமெய் பொழியமே லேறிநீர்
துள்ளுவார் சடையரைத் தொழுதுமுன் பரவுவார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் வெள்ளியங்கிரியையொத்த மிக்க ஒளியினையுடைய திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ் செய்யும்பொழுது பெருகுகின்ற ஆனந்தக்கண்ணீர் மழைபோலத் திருமேனியில்பொழியக் கங்கைநீர்மேலேறித் ததும்புகின்ற நீண்ட சடைமுடியையுடைய சிவபெருமானைவணங்கிச் சந்நிதியில்நின்று துதிப்பாராயினர்.—எ-று. (நசஅ)

பரவுசொற் பதிகமுன் பாடினர் பரிவுதான்
வரவயர்த் துருகுமோர் மனனுடன் புறமணைந்
தரவுடைச் சடையர்பே ரருள்பெறும் பெருமையால்
விரவுமப் பதியமர்ந் தருளியே மேவினர்.

(இ-ள்.) யாவருந் துதிக்கத்தக்க நல்ல சொற்களமைந்த திருப்பதிகத்தையருளிச்செய்து, அன்பானது தமதுதிருவுள்ளத்து வருதலால் அயர்ந்து உருகுகின்ற மனத்தோடு அத்திருக்கோயிலின்புறத்தி லடைந்தருளி, சர்ப்பத்தையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானது மிக்க திருவருளைப்பெறுகின்ற பெருமையினால் பல வளங்களும்நிறைந்த அத்திருநல்லூரென்னும் திருப்பதியின்கண் விரும்பி எழுந்தருளினர்.—எ-று. (நசகூ

வேறு.

அன்ன தன்மையி லப்பதி யினிலமர்ந் தருளி
மின்னெ டுஞ்சடை விமலர்தாள் விருப்பொடு வணங்கிப்
பன்னு மின்னிசைப் பதிகமும் பலமுறை பாடி
நன்னெ டுங்குல நான்மறை யவர்தொழ நயந்தார்.

(இ-ள்.) அத்தன்மையாக அத்திருப்பதியில் வசித்தருளி, மின்னலைப்போலும் நீண்ட சடைமுடியையுடைய பெரியபாண்டவேசரது திருவடிகளை அன்போடுவணங்கி,சொல்லுகின்ற இனியஇசைபொருந்திய திருப்பதிகங்களையும் பலமுறை பாடியருளி, நல்ல உயர்ந்த குலத்தினையுடைய நான்குவேதங்களையுமுணர்ந்த பிராமணர்கள்வணங்க விரும்பி யெழுந்தருளினார்.—எ-று. (௩௭௦)

நீடு மப்பதி நீங்குவார் திகழ்திரு நல்லூ
ராடு வார்திரு வருள்பெற வகன்றுபோந் தங்கண்
மாடு முள்ளன வணங்கியே பரவிவந் தணைந்தார்
தேடு மாலயற் கரியவர் திருக்கரு காவூர்.

(இ-ள்.) உயர்ந்த அத்திருப்பதியினின்று நீங்குகின்றவர் விளங்குகின்ற அத்திருநல்லூரின்கண் ணெழுந்தருளும் திருத்தமூர்த்தியாகிய பெரிய பாண்டவேசரது திருவருளைப் பெற்றதனால் அவ்விடத்தினின்று நீங்கி,அத்திருப்பதியின் பக்கத்தி லுள்ளனவாகிய ஸ்தலங்களையும் வணங்கித் துதித்து, அடியையும் முடியையுந்தேடிய திருமால் பிரமனென்னு மிருவருக்கும் காண்பதற்கரியவராகிய முல்லைவனேசர் வீற்றிருந்தருளும் திருக்கருகாவூரென்னுந் திருப்பதியைவந்தடைந் தருளினார்.—எ-று. (௩௭௧)

வந்து பந்தர்மா தவிமணங் கமழ்கரு காவூர்ச்
சந்த மாமறை தந்தவர் கழலிணை தாழ்ந்தே
யந்த மில்லவர் வண்ணமா ரழல்வண்ண மென்று
சிந்தை யின்புறப் பாடினார் செழுந்தமிழ்ப் பதிகம்.

(இ-ள்.) குருக்கத்திப் பந்தர்கள் மணம்வீசுகின்ற திருக்கருகாவூரை யடைந்தருளி, இசைபொருந்திய பெரிய வேதங்களை யருளிச்செய்த சிவபெருமானது இரண்டுதிருவடிகளையும் வணங்கி, முடிவில்லாத அவ்வெம்பெருமானது திருவண்ணம் நிறைந்த அழல்வண்ணமென்னுங்கருத்தமைந்த "அத்தர்வண்ணமழலும் மழல்வண்ணமே" என்று இறுதியிலமைத்துச் செழுமைபொருந்திய திருப்பதிகத்தைத்தமது திருவுள்ளத்தில் ஆனந்தமதிகரிக்கும்படி பாடியருளினார்.—எ-று. (௩௭௨

---

திருக்கருகாவூர் - பண் - கவுசிகம்.

திருச்சிற்றம்பலம்.

முத்திலங்குமுறுவலுமையஞ்சவே
மத்தயானைமறுகவ்வுரிவாங்கியக்
கத்தைபோர்த்தகடவுள்கருகாவூரெம்
மத்தர்வண்ணமழலும்மழல்வண்ணமே.

கலவமஞ்ஞையுலவுங்கருகாவூர்
நிலவுபாடலுடையான்றனநீள்கழல்
குலவுஞானசம்பந்தனசெந்தமிழ்
சொலவல்லாரவர்தொல்வினை தீருமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - முல்லைவனேசர் - தேவியார் - **கரும்பனையாளம்மை.**

பதிக வின்னிசை பாடிப்போய்ப் பிறபதி பலவு
நதிய ணிந்தவர் கோயில்க ணண்ணியே வணங்கி
மதுர முத்தமிழ் வாசக ரணைந்தனர் மன்று
ளதிர்சி லம்படி யார்மகி ழவளிவ ணல்லூர்.

(இ-ள்.) இனிய இசைபொருந்திய திருப்பதிகம் பாடியருளி, அத்திருப்பதியினின்று நீங்கி, மற்றைய பல திருப்பதிகளிலும் கங்கையையணிந்த சிவபெருமான் எழுந்தருளிய திருக்கோயில்களையடைந்து வணங்கி, மதுரம்பொருந்திய முத்தமிழ்விரகராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் கனகசபையில் (ஆனந்தத் தாண்டவஞ்செய்தருளுங் காரணத்தினால்) சப்திக்கின்ற திருச்சிலம்பணிந்த திருவடிகளையுடைய சாட்சிநாதர்மகிழ்ந்து வீற்றிருந்தருளும் திருஅவளிவணல்லூரொன்னுந் திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று. (௩௭௩)

மன்னு மப்பதி வானவர் போற்றவு மகிழ்ந்த
தன்மை யார்பயில் கோயிலுட் டம்பரி சுடையா
ரென்னு நாமமு நிகழ்ந்திட வேத்திமுன் னிறைஞ்சிப்
பன்னு சீர்ப்பதி பலவுமப் பாற்சென்று பணிவார்.

(இ-ள்.) நிலைபெற்ற அத்திருப்பதியின்கண் (மண்ணுலகத்தினரோ யல்லாமல்) விண்ணுலகத்தினர் வணங்குதலாலும் மகிழுந் தன்மையையுடைய சிவபெருமான் எழுந்தருளிய திருக்கோயிலினுள் அவரைத் தம்பரிசுடையாரொன்னுந் திருநாமமுந்தோன்ற ("தம்பரிசினோடு சுடுநீறுதடவந் திடவமேறி") எனத்துதித்துச் சந்நிதியில் நின்றுவணங்கி, யாவரும் புகழும் சிறப்பினையுடைய பலதிருப்பதிகளையும் அப்புறஞ்சென்று வணங்குவாராயினார்.—எ-று. (௩௭௪)

---

**திருஅவளிவணல்லூர் - திருவிராகம் பண் - சாதாரி.**

திருச்சிற்றம்பலம்.

கொம்பிரியவண்டுலவுகொன்றைபுரிநூலொடுகுலாவித்
தம்பரிசினோடுசுடுநீறுதடவந்திடவமேறிக்
கம்பரியசெம்பொனெடுமாடமதிள்கல்வரைவிலாக
வம்பெரியவெய்தபெருமானுறைவதவளிவணலூரே.

ஆனமொழியாயதிறலோர்பரவுமவளிவணலூர்மேற்
போனமொழிநன்மொழிகளாயபுகழ்தோணிபுரவூரன்

ஞானமொழிமாலைபலநாடுபுகழ்ஞானசம்பந்தன்
றேனமொழிமாலைபுகழ்வார்துயர்கடீயதிலர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - சாட்சிநாதர், தேவியார் - சௌந்தரநாயகியம்மை.

---

பழுதில் சீர்த்திருப் பருதிநன் னியமமும் பணித்தங்
கெழுது நான்மறை யாம்பதி கத்திசை போற்றி
முழுது மானவர் கோயில்கள் வணங்கியே முறைமை
வழுவில் சீர்த்திருப் பூவனூர் வணங்கிவந் தணைந்து.

(இ-ள்.) குற்றமற்ற சிறப்பினையுடைய திருப்பருதிநியமமென்னுந் திருப்பதியை வணங்கி, அத்திருப்பதியில் எழுதுகின்ற சிறந்த தமிழ்வேதமாகிய திருப்பதிகத்தை இசையோடு பாடியருளி, சராசரங்களாகிய வெல்லாந் தாமேயாக வியாபித்து நிற்குஞ் சிவபெருமா னெழுந்தருளிய திருக்கோயில்கள் பலவற்றையும் வணங்கி, நன்னெறியினின்றுந் தவறுதலில்லாத சிறப்பினையுடைய திருப்பூவனூரைத் தொழுது அங்குவந் தடைந்தருளி.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௲எ௫)

பொங்கு காதலிற் போற்றிபங் கருளுடன் போந்து
பங்க யத்தடம் பணைப்பதி பலவுமுன் பணிந்தே
யெங்கு மன்பர்க ளேத்தொலி யெடுக்கவந் தணைந்தா
ரங்க ணர்க்கிட மாகிய பழம்பதி யாரூர்.

(இ-ள்.) மிகுந்த அன்போடு துதித்து அத்தலத்தினின்றுந் திருவருளோடு சென்றருளி, தாமரைமலர்கள் பொருந்திய தடாகங்களையும் வயல்களையு முடைய பல திருப்பதிகளையும் முன்னே வணங்கி, எவ்விடத்திலு மடியார்கள் வாழ்த்தொலிசெய்ய, பசுபதீசரொழுந்தருளும் பழையதிருப்பதியாகிய திருவாவூரைவந்தடைந்தருளினார்.—எ-று. (௲எ௬)

பணியு மப்பதிப் பசுபதீச் சரத்தினி திருந்த
மணியை யுள்புக்கு வழிபடும் விருப்பினால் வணங்கித்
தணிவில் காதலிற் றண்டமிழ் மாலைகள் சாத்தி
யணிவி ளங்கிய திருநலூர் மீண்டும்வந் தணைந்தார்.

(இ-ள்.) யாவரும் வணங்குகின்ற அத்திருவாவூர்ப் பசுபதீச்சரத்தின்கண் இனிமையோடு வீற்றிருந்தருளும் மாணிக்கம்போன்ற பசுபதிநாதனைத் திருக்கோயிலுட்சென்று வழிபடுதற்குரிய விருப்பத்தோடும் வணங்கி, அடங்காத அன்பினால் குளிர்ந்த தமிழ்ப்பதிகங்களை அருளிச்செய்து, அழகு விளங்குகின்ற திருநல்லூரென்னுந் திருப்பதியை மீளவும்வந் தடைந்தருளினார்.—எ-று. (௲எஎ)

மறைவி ளங்குமப் பதியினின் மணிகண்டர் பொற்றாள்
நிறையு மன்பொடு வணங்கியே நிகழ்பவர் நிலவும்
பிறைய ணிந்தவ ரருள்பெறப் பிரசமென் மலர்வண்
டறைந றும்பொழிற் றிருவலஞ் சுழியில்வந் தடைந்தார்.

(இ-ள்.) வேதங்கள் நிலைபெற்று விளங்குகின்ற அத் திருப்பதியில் வீற்றிருந்தருளும் காளகண்டராகிய சிவபெருமானது அழகிய திருவடிகளை மிக்க அன்போடும் வணங்கி அங்கு எழுந்தருளும் திருஞானசம்பந்தப்பிள்ளையார் விளங்குகின்ற இளம்பிறையணிந்த சிவபெருமானது திருவருளைப் பெறும்பொருட்டு, தேன் பொருந்திய மிருதுவாகிய மலர்களில் வண்டுகள் ரீங்காரஞ்செய்கின்ற நல்ல மணம்பொருந்திய சோலைகள் சூழ்ந்த திருவலஞ்சுழி யென்னுந் திருப்பதியில் வந்து சேர்ந்தருளினார்.—எ-று. (கூஎஅ)

மதிபு னைந்தவர் வலஞ்சுழி மருவுமா தவத்து
முதிரு மன்பர்கண் முத்தமிழ் விரகர்த முன்வந்
தெதிர்கொள் போழ்தினி லிழிந்தவ ரெதிர்செல மதியைக்
கதிர்செய் வெண்முகிற் குழாம்புடை சூழ்ந்தெனக் கலந்தார்.

(இ-ள்.) சந்திரனை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமான் எழுந்தருளும் திருவலஞ்சுழி யென்னுந் திருப்பதியில்வாழும் மகத்தாகிய தவத்திற் சிறந்த அடியார்கள் முத்தமிழ் விரகராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருமுன் வந்து எதிர்கொள்ளும்பொழுது, பிள்ளையார் முத்துச்சிவிகையினின்று மிறங்கி அவர்களுக் கெதிரே சென்றருளவும், அவ்வடியார்கள், பிரகாசிக்கின்ற வெள்ளிய மேகக்கூட்டங்கள் சந்திரனைப் பக்கத்திற் சூழ்ந்தாற்போல, அவ்வெமதுபிள்ளையாரைச் சூழ்ந்து கலந்தார்கள்.—எ-று. (கூஎகூ)

கலந்த வன்பர்க டொழுதெழக் கவுணியர் தலைவ
ரலர்ந்த செங்கம லக்கரங் குவித்துட னணைவார்
வலஞ்சு ழிப்பெரு மான்மகிழ் கோயில்வந் தெய்திப்
பொலங்கொணீள்சுடர்க் கோபுர மிறைஞ்சியுள் புக்கார்.

(இ-ள்.) தம்மை எதிர்கொண்டுவந்த அடியார்கள் வணங்கி யெழ, கவுணியர் குலத்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் மலர்ந்த செந்தாமரைமலர் போன்ற இரண்டு திருக்கரங்களைக் கூப்பி அவர்களொடு செல்கின்றவர் திருவலஞ்சுழியில் கற்பகத்தீசர் வீற்றிருந்தருளும் திருக்கோயிலையடைந்து பொன்மயமாகியஉயர்ந்தஒளியையுடைய திருக்கோபுரத்தைவணங்கி உள்ளே புகுந்தருளினார்.

மருவ லார்புர முனிந்தவர் திருமுன்றில் வலங்கொண்
டுருகு மன்புட னுச்சிமே லஞ்சலி யினராய்த்
திருவ லஞ்சுழி யுடையவர் சேவடித் தலத்திற்
பெருகு மாதர வுடன்பணிந் தெழுந்தனர் பெரியோர்.

(இ ள்.) சிவஞானத்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் பகைவர்களது திரிபுரங்களையுங் கோபித் தெரித்தருளிய கற்பகத்தீசரது திருமுற்றத்தைப் பிரதக்ஷணஞ்செய்து, மனமுருகுகின்ற அன்போடும் உச்சிமேல்வைத்த அஞ்சலியஸ்தராய்த் திருவலஞ்சுழியி லெழுந்தருளிய அவ் வெம்பெருமானது சிவந்த திருவடிகளில் மிகுந்த அன்போடு வணங்கி யெழுந்தருளினார்.—எ-று. (கூஅக)

ஞான போனகர் நம்பர்முன் றொழுதெழு விருப்பா
லான காதலி லங்கண ரவர்தமை வினவு
மூன மில்லிசை யுடன்விளங் கியதிருப் பதிகம்
பான லார்மணி கண்டரைப் பாடினார் பரவி.

(இ-ள்.) சிவஞானப்பாலமுதுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிவபெருமானது சந்நிதியில் வணங்கி யெழுகின்ற விருப்பத்தினுலுண்டாகிய அன்பினால், அவ்வெம்பெருமானை (அவரது அருட்குணங்களை) வினவும் பொருளையுடைய குற்றமற்ற இசையோடு விளங்குந் திருப்பதிகத்தை நீலோற்பலமலர்போலுங் காளகண்டத்தையுடைய சிவபெருமானைத் துதித்துப் பாடியருளினார். ()

திருவலஞ்சுழி-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

விண்டெலாமலரவ்விரைநாறுதண்டேன்விம்மி
வண்டெலாநசையாலிசைபாடும்வலஞ்சுழித்
தொண்டெலாம்பரவுஞ்சுடர்போலொளியீர்சொலீர்
பண்டெலாம்பலிதேர்ந்தொலிபாடல்பயின்றதே.

வீடுஞானமும்வேண்டுதிரேல்விரதங்களால்
வாடிஞானமென்னாவதுமெந்தைவலஞ்சுழி
நாடிஞானசம்பந்தனசெந்தமிழ்கொண்டிசை
பாடுஞானம்வல்லாரடிசேர்வதுஞானமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-கற்பகத்தீசர், தேவியார் - மங்களநாயகியம்மை.

---

புலன்கொ ளின்றமிழ் போற்றினர் புறத்தினி லணைந்தே
யிலங்கு நீர்ப்பொன்னி சூழ்திருப் பதியினி லிருந்து
நலங்கொள் காதலி னுதர்தா ளுடொறும் பரவி
வலஞ்சுழிப்பெரு மான்றொண்டர் தம்முடன் மகிழ்ந்தார்.

(இ-ள்.) (யாவரும் அன்போடு) அறிவில் கொள்ளத்தக்க இனிய தமிழ்ப்பதிகத்தால் துதித்து, அத்திருக்கோயிலின் புறத்திலடைந்து, விளங்குகின்ற நீரையுடைய காவிரிநதிசூழ்ந்த அத் திருப்பதியி லெழுந்தருளியிருந்து, நன்மைபொருந்திய அன்போடுஞ் சிவபெருமானது திருவருளைத் தினந்தோறுந் துதித்து, திருவலஞ்சுழியி லெழுந்தருளிய சிவபெருமானது அடியார்களோடு மகிழ்ந்திருந்தருளினார்.—எ-று. (ஙஅங)

மகிழ்ந்த தன்றலை வாழுமந் நாளிடை வானிற்
றிகழ்ந்த ஞாயிறு துணைப்புண ரோரையுட் சேர்ந்து
நிகழ்ந்த தன்மையி னிலவுமேழ் கடனீர்மை குன்ற
வெகுண்டு வெங்கதிர் பரப்பலின் முதிர்ந்தது வேனில்.

(இ-ள்.) மகிழ்ச்சியடைந்து அத் திருவலஞ்சுழி யென்னுந் திருப்பதியில் வாழ்ந்திருக்கும் நாளில், ஆகாயத்தின்கண் விளங்குகின்ற சூரியன் மிதுனராசியோடுகூடியிருந்ததன்மையினால், விளங்குகின்ற ஏழ்கடல்களும் நீர்மை குன்றும்படிக் கோபித்து, அச்சூரியன் தமது வெவ்விய கிரணங்களைப் பரப்புதலினால் முதுவேனிற்காலம் அதிகரித்தது.—எ-று.

மிதுனராசி இரட்டையாகலின் 'துணைப்புணரோரை' என்று கூறினார்; "தண்டியாழ் விழவிரட்டை சவைமகண் மிதுனந் தானே" என்பது நிகண்டு.

ஏழ்கடனீர்மை குன்றலாவது.—நீர்வாழுயிர்கள் பிறவாமையும், மணி முதலியன தோன்றாமையுமாம்; இதனை;

"நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி
தானல்கா தாகி விடின்"—என்னுந் திருக்குறட்குப் பரிமேலழகர் கூறிய வுரையானுணர்க. (௩௮௪)

தண்பு னற்குளிர் கான்றுஞ் சந்தனத் தேய்வை
பண்பு நீடிய வாசமென் மலர்பொதி பனிநீர்
நண்பு டைத்துணை நங்கைமணி முத்தணி நாளு
முண்ப மாதுரி யச்சுவை யுலகுளோர் விரும்ப.

(இ-ள்.) குளிர்ந்த நீரோடு சீதளம்பொருந்திய தென்றற்காற்றையும், நல்லசந்தனக்குழம்பையும், நன்மை மிகுந்த வாசனைபொருந்திய மிருதுவான மலர்கள் சேர்ந்த பனிநீரையும், நண்பினையுடைய மனைவியையும், விளங்குகின்ற முத்துமாலையையும், நாள்தோறும் உண்பனவாகிய மதுரம்பொருந்திய உணவுகளையும் உலகத்திலுள்ளவர்கள் விருப்பங்கொள்ள.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௩௮௫)

வேறு.

அறன்மலியுங் கான்யாற்றி னீர்நசையா லணையுமான்
பெறலரிய புனலென்று பேய்த்தேரின் பின்றொடரு
முறையுணவு கொள்ளும்புட் டேம்பியய விரைதேரும்
பறவைசிறை விரித்தொடுங்கப் பனிப்புறத்து வதியுமால்.

(இ-ள்.) கருமணல் மிகுந்த காட்டாற்றின்கண் நீர் விருப்பத்தினால் செல்லும் மான்கூட்டங்கள் பெறுதற்கரிய நீர் இதுவென்று நினைத்து, கானலின்பின் சென்று தொடரும்; மழைத்துளிகளை யுணவாகக்கொண் டுண்ணும் சாதகப்பறவைகள் (அம்மழைத்துளிகளைப் பெறாமையால்)வருந்தி, பக்கங்களில் வேறு இரைகளைத்தேடும்; பறவைகள் தஞ் சிறகுகளை விரித்துக்கொண்டு வெயில்வெப்பம் பொறாமையால் ஒடுங்குதற்குக் குளிர்ந்த இடங்களைத் தேடியிருக்கும்.—எ-று. ()

நீணிலைமா ளிகைமேலு நிலாமுன்றின் மருங்கினிலும்
வாணிழனற் சோலையிலு மலர்வாவிக் கரைமாடும்
பூணிலவு முத்தணிந்த பூங்குழலார் முலைத்தடத்துங்
காணுமகிழ்ச் சியின்மலர்ந்து மாந்தர்கலந் துறைவரால்.

(இ-ள்.) உயர்ந்த நிலைகளையுடைய மாளிகைகளின்மேலும், சந்திரகாந்தக்கற்கள் பதித்த முற்றத்தின் பக்கங்களிலும், ஒளிபொருந்திய நிழலையுடைய நல்ல சோலைகளிலும், தாமரைமலர்கள் பொருந்திய தடாகக்கரையின் பக்கங்களிலும், விளங்குகின்ற முத்துமாலையை யணிந்த மாதர்களது முலைத்தடங்களிலும் தம்மிடத்துண்டாகின்ற சந்தோஷத்தினால் மனிதர்கள் கலந்திருப்பார்கள்.

மாதர்களது ஸ்தனங்கள் உஷ்ணகாலத்துத் தண்மையைத் தருதலின், பூங்குழலார் முலைத்தடத்து மாந்தர் கலந்துறைவ ரென்க. (௨௮௭)

மயிலொடுங்க வண்டாட மலர்க்கமல முகைவிரியக்
குயிலொடுங்காச் சோலையின்மென் றளிர்கோதிக் கூவியெழத்
துயிலொடுங்கா வுயிரனைத்துந் துயில்பயிலச் சுடர்வானில்
வெயிலொடுங்கா வெம்மைதரும் வேனில்விரி தருநாளில்.

(இ-ள்.) மயில்கள் ஓங்கவும், வண்டுகள் ஆடவும், தாமரைமலரின் அரும்புகள் விரியவும், குயில்கள் உயர்ந்த சோலைகளிலுள்ள மெல்லிய மாந்தளிர்களை வாயாற் கோதிக்கொண்டு கூவி யெழவும், பகலில் உறங்கா வுயிர்களனைத்தும் (உறக்கம் வருதலால்) நித்திரைசெய்யவும், சூரியனுனவன் ஆகாயத்தில் தனது கிரணங் குறையாமல் உஷ்ணத்தைத் தருகின்ற முதுவேனிற்காலம், எங்கும் அதிகரித்தபொழுது.—எ-று.

பகலில் உறங்காவுயிர், காக்கை - மாடப்புறு முதலியன. பகலில்உறங்குமுயிர், கூகை-வௌவால் முதலியன.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (ஙஅஅ)

சண்பைவரும் பிள்ளையார் சடாமகுடர் வலஞ்சுழியை
யெண்பெருகத் தொழுதேத்திப் பழையாறை யெய்துதற்கு
நண்புடைய வடியார்க ளுடன்போத நடந்தருளி
விண்பொருநீண் மதிளாறை மேற்றளிசென் றெய்தினார்.

(இ-ள்.) சீகாழிப்பதியி லவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் சடைமுடியையுடைய சிவபெருமா னெழுந்தருளிய திருவலஞ்சுழியென்னுந் திருப்பதியை நினைவு அதிகரிக்க வணங்கித் துதித்து, திருப்பழையாறையென்னுந் திருப்பதியை யடைதற்கு, தம்மிடத்து நண்புபொருந்திய அடியார்கள் தம்முடன்வரச்சென்றருளி, விண்ணுலகத்தை யளாவிய உயர்ந்த மதில்கள்சூழ்ந்த திருவாறை மேற்றளியென்னும் ஸ்தலத்தைச் சென்றடைந்தருளினார்.—எ-று. (ஙஅக)

திருவாறை மேற்றளியின் வீற்றிருந்த செந்தீயி
னுருவாள ரடிவணங்கி யுருகியவன் பொடுபோற்றி
மருவாருங் குழன்மலையாள் வழிபாடு செய்யவரு
டருவார்தந் திருச்சத்தி முற்றத்தின் புறஞ்சார்ந்தார்.

(இ-ள்.) திருவாறைமேற்றளியென்னுந் திருப்பதியில் வீற்றிருந்தருளும் சிவந்த அழல்வண்ணராகிய சோமேசரது திருவடிகளைவணங்கி, நெக்கு விட்டுருகுகின்ற அன்போடுதுதித்து, வாசனைபொருந்திய கூந்தலையுடைய உமாதேவியார் பூசனைசெய்ய, அவ்வம்மையார்க்குத் திருவருள்செய்த சிவக்கொழுந்தீசரது திருச்சத்திமுற்றமென்னுந் திருப்பதியின்புறத்தை யடைந்தருளினார்.—எ-று. (ஙகூ0)

திருச்சத்தி முற்றத்திற் சென்றெய்தித் திருமலையா
ளருச்சித்த சேவடிக ளார்வமுறப் பணிந்தேத்திக்
கருச்சுற்றி லடையாமற் கைதருவார் கழல்பாடி
விருப்புற்றுத் திருப்பட்டீச் சரம்பணிய மேவுங்கால்.

(இ-ள்.) திருச்சத்திமுற்றமென்னுந் திருப்பதியை யடைந்தருளி அழகிய பர்வதராஜபுத்திரியாகிய உமாதேவியார் அருச்சனைசெய்த சிவந்த திருவடிகளை அன்புபொருந்த வணங்கித்துதித்து, பிறவியாகிய சுழலில்அகப்பட்டு வருந்தாமல் கிருபைசெய்தருளும் சிவக்கொழுந்தீசரது திருவடிகளைத்துதித்துத் திருப்பட்டீச்சரத்தைவணங்க விருப்பங்கொண்டு எழுந்தருளுங் காலத்தில்.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (ஙகூக)

வெம்மைதரு வேனிலிடை வெயில்வெப்பந் தணிப்பதற்கு
மும்மையிலத் தமிழ்விரகர் முடிமீதே சிவபூதந்
தம்மையறி யாதபடி தண்டரளப் பந்தரொடுத்
தெம்மைவிடுத் தருள்புரிந்தார் பட்டீச ரென்றியம்ப.

(இ-ள்.) வெப்பத்தைத் தருகின்ற வேனிற்காலத்திலுண்டாகிய வெயிலின்வெம்மையைத் தணிப்பதற்கு முத்தமிழ் விரகராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருமுடியின்மேல் சிவபூதங்கள் தம்மை யொருவரும் அறியாதவண்ணம் குளிர்ந்த முத்துப்பந்தரையெடுத்து, திருப்பட்டீசர் எங்களை விடுத்தருளினாரென்றுகூற.—எ-று. (௩கூஉ)

அவ்வுரையு மணிமுத்தின் பந்தருமா காயமெழச்
செவ்வியமெய்ஞ் ஞானமுணர் சிரபுரத்துப் பிள்ளையா
ரிவ்வினைதா னீசர்திரு வருளாகி லிசைவதெனை
மெய்விரவு புளகமுடன் மேதினியின் மிசைத்தாழ்ந்தார்.

(இ-ள்.) அந்தவார்த்தையும் அழகிய முத்துப்பந்தரும் ஆகாயத்தி லெழாநிற்கவும், சிறந்த மெய்ஞ்ஞானத்தை யுணர்ந்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் இச்செய்கை சிவபெருமானது திருவருளாயின் அதற்கு உடன்படத்தக்கதென்று, திருமேனியிலுண்டாகிய புளகாங்கிதத்தோடு பூமியின்மேல் விழுந்து வணங்கியருளினார்.—எ-று. (௩கூ௩)

அதுபொழுதே யணிமுத்தின் பந்தரினை யருள்சிறக்கக்
கதிரொளிய மணிக்காம்பு பரிசனங்கள் கைக்கொண்டார்
மதுரமொழி மறைத்தலைவர் மருங்கிமையோர் பொழிவாசப்
புதுமலரா லப்பந்தர் பூம்பந்த ரும்போலும்.

(இ-ள்.) அப்பொழுது அழகிய முத்துப்பந்தரைச் சிவபெருமானது திருவருள் யாவர்க்கும் விளங்கும்படி, மிக்க வொளியினையுடைய அம்முத்துப்பந்தரின் அழகிய காம்பைப் பிள்ளையாரைச்சூழ்ந்த பரிசனங்களாகிய திருத்தொண்டர்கள் கையில் தாங்கினார்கள் ; மதுரம்பொருந்திய திருவாக்கினையுடைய வேதமுதல்வராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு இருபக்கங்களிலும் தேவர்கள் பொழியும் வாசனைபொருந்திய புதிய கற்பகமலர்களால் அம்முத்துப்பந்தரானது பூப்பந்தரையும் ஒத்துவிளங்கும்.—எ-று. (௩கூ௪)

தொண்டர்குழா மார்ப்பெடுப்பச் சுருதிகளின் பெருந்துழனி
யெண்டிசையு நிறைந்தோங்க வெழுந்தருளும் பிள்ளையார்
வெண்டரளப் பந்தர்நிழன் மீதணையத் திருமன்றி
லண்டர்பிரா னெடுத்ததிரு வடிநீழ லெனவமர்ந்தார்.

(இ-ள்.) அடியார் திருக்கூட்டங்கள் அரகரவென்று ஆரவாரிக்கவும், வேதங்கள் (சானித்தியமாகவொலிக்கும்) மிக்கஆரவாரம் எட்டுத்திக்குகளிலும் நிறைந்தோங்கவும், வெள்ளிய முத்துப்பந்தர் திருமுடியின்மேல் நிழல்செய்துவர அதன் கீழ் எழுந்தருளும் திருஞானசம்பந்தப்பிள்ளையார் கனகசபையில் தேவர்கள் நாயகராகிய ஸ்ரீ நடராசப்பெருமான் எடுத்தருளிய குஞ்சிதபாதத்தின் நிழலென வீற்றிருந்தருளினார்.—எ-று.

சிவபெருமான் திருவருள் சுரந்து கொடுத்தருளிய முத்துப்பந்தரானது வேனிற்காலத் துண்டாகிய வெயிலின்வெப்பத்தை யொழித்துக் குளிர்ச்சிசெய்த வின் 'திருமன்றி - லண்டர்பிரா னெடுத்ததிரு வடிநீழ லெனவமர்ந்தார்' என்று கூறினர்.

"மாசில் வீணையு மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈச னெந்தை யிணையடி நீழலே."—என வரும் திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரத்தா னுணர்க. (கூகூ)

பாரின்மிசை யன்பருடன் வருகின்றார் பன்னகத்தி
னாரமணிந் தவர்தந்த வருட்கருணைத் திறம்போற்றி
யீரமனங் களிதழைப்ப வெதிர்கொள்ள முகமலர்ந்து
சேரவருந் தொண்டருடன் றிருப்பட்டீச் சரமணைந்தார்.

(இ-ள்.) பூமியின்மேல் அடியார் திருக்கூட்டங்களோடும் எழுந்தருளும் திருஞானசம்பந்தப்பிள்ளையார் பாம்பாகிய ஆரத்தையணிந்த சிவபெருமான் தந்தருளிய திருவருளின் திறத்தைத்துதித்து அன்புபொருந்திய திருவுள்ளத்தில் மகிழ்ச்சியதிகரிக்கத் தம்மை யெதிர்கொள்ளும்படி முகமலர்ச்சிகொண்டு கூடிவருகின்ற அடியார்களோடு திருப்பட்டீச்சரமென்னுந் திருப்பதியை யடைந்தருளினர். ()

சென்றணைந்து திருவாயிற் புறத்திறைஞ்சி யுள்புக்கு
வென்றிவிடை யவர்கோயில் வலங்கொண்டு வெண்கோட்டுப்
பன்றிகிளைத் தறியாத பாததா மரைகண்டு
முன்றொழுது விழுந்தெழுந்து மொழிமாலை போற்றிசைத்தார்.

(இ-ள்.) அத்திருப்பதியைச்சென்றுசேர்ந்து திருக்கோபுரத்திருவாயிலின் புறத்து வணங்கி யுள்ளேபுகுந்து, வெற்றிபொருந்திய இடபவாகனத்தையுடைய திருப்பட்டீசநாதரது திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்து வெண்மைபொருந்திய கொம்பினையுடைய திருமாலென்னும் பன்றியானது பூமியைக் கீண்டுசென்றும் காணுதற்கரிய திருவடித் தாமரைகளைத் தரிசித்துச் சந்நிதியில்வணங்கிப் பூமியில் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தெழுந்து,நல்லசொற்களாலாகிய திருப்பதிகமாலையைத் துதித்தருளினர்.—எ-று. (கூசஎ)

---

### திருப்பட்டீச்சரம் - திருவிராகம் - பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

பாடன்மறைசூடன்மதிபல்வளையோர்பாகமதின்மூன்றொர்கணையாற்
கூடவெரியூட்டியெழில்காட்டிநிழல்கூடுபொழில்சூழ்பழசையுண்
மாடமழபாடியுறைபட்டீசரமேயகடிகட்டரவினர்
வேடநிலைகொண்டவரைவீடுநெறிகாட்டிவினைவீடுமவரே. (க)

நீரின்மலிபுன்சடையர்நீளரவுகச்சையதுநச்சிலையதோர்
கூரின்மலிசூலமதுவேந்தியுடைகோவணமுமானினுரிதோல்

காரின்மலிகொன்றைவிரிதார்கடவுள்காதல்செய்துமேயநகர்தான்
பாரின்மலிசீர்ப்பழசைசபட்டீசரமேத்தவினைபற்றழியுமே. (௨)

காலைமடவார்கள்புனலாடுவதுகவ்வைகடியார்மறுகெலா
மாலைமணநாறுபழையாறைமழபாடியழகாயமலிசீர்ப்
பாலையனநீறுபுனைமார்பனுறைபட்டீசரமேபரவுவார்
மேலையொருமால்கடல்கள்போற்பெருகிவிண்ணுலகமாளுமவரே. (௩)

கண்ணின்மிசைநண்ணியிழிவிப்பமுகமேத்துகமழ்செஞ்சடையினான்
பண்ணின்மிசைநின்[illegible]லபாணிபடவாடவலபான்மதியினான்
மண்ணின்மிசைநேரின்மழபாடிமலிபட்டீசரமேமருவுவார்
விண்ணின்மிசைவாழுமிமையோரொடுடனாதலதுமேவலெளிதே. (௪)

மருவமுழவதிரமழபாடிமலிமத்தவிழவார்க்கவரையார்
பருவமழைபண்கவர்செய்பட்டீசரமேயபடர்புன்சடையினான்
வெருவமதயானையுரிபோர்த்துமையையஞ்சவருவெள்விடையினா
னுருவமெரிகழல்கடொழவுள்ளமுடையாரையடையாவினைகளே. (௫)

மறையினொலிகீதமொடுபாடுவனபூதமடிமருவிவிரவார்
பறையினொலிபெருகநிகழ்நட்டமமர்பட்டீசரமேயபனிகூர்
பிறையினொடுமருவியதோர்சடையினிடையேற்றபுனறோற்றநிலையா
மிறைவனடிமுறைமுறையினேத்துமவர்தீத்தொழில்களில்லர்மிகவே. ()

பிறவிபிணிமூப்பினொடுநீங்கியிமையோருலகுபேணலுறுவார்
துறவியெனுமுள்ளமுடையார்கள்கொடிவீதியழகாயதொருசீ
ரிறைவனுறைபட்டீசரமேத்தியெழுவார்கள்வினையேதுமிலவாய்
நறவவிரையாலுமொழியாலும்வழிபாடுமறவாதவவரே. (௭)

நேசமிகுதோள்வலவனாகியிறைவன்மலையைநீக்கியிடலும்
நீசன்விறல்வாட்டிவரையுற்றதுணராதநிரம்பாமதியினா
னீசனுறைபட்டீசரமேத்தியெழுவார்கள்வினையேதுமிலவாய்
நாசமறவேண்டுதலினண்ணலெளிதாமமரர்விண்ணுலகமே. (௮)

தூயமலரானுநெடியானுமறியாரவன்றோற்றநிலையின்
னேயவகையானதனையாரதறிவாரணிகொண்மார்பினகலம்
பாயநலநீறதணிவானுமைதனோடுமுறைபட்டீசரமே
மேயவனதீரடியுமேத்தவெளிதாகுநலமேலுலகமே. (௯)

தடுக்கினையிடுக்கிமடவார்களிடுபிண்டமதுவுண்டுழறருங்
கடுப்பொடியுடற்கயவர்கத்துமொழிகாதல்செய்திடாதுகமழ்சேர்
மடக்கயல்வயற்கொண்மழபாடிநகர்நீடுபழையாறையதனுட்
படைக்கொருகரத்தன்மிகுபட்டீசரமேத்தவினைபற்றறுதலே. (௧௦)

மந்தமலிசோலைமழபாடிநகர்நீடுபழையாறையதனிற்
பந்தமுயர்வீடுநலபட்டீசரமேயபடர்புன்சடையனை

யந்தண்மறையோரினிதுவாழ்புகலிஞானசம்பந்தனணியார்
செந்தமிழ்கள்கொண்டினிதுசெப்பவலதொண்டர்வினைநிற்பதிலவே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - **பட்டீசரநாதர்**, தேவியார் - **பால்வளைநாயகியம்மை.**

---

அருள்வெள்ளத் திறம்பரவி யளப்பரிய வானந்தப்
பெருவெள்ளத் திடைமூழ்கிப் போராத பெருங்காதற்
றிருவுள்ளப் பரிவுடனே செம்பொன்மலை வலலியார்
தருவள்ளத் தமுதுண்ட சம்பந்தர் புறத்தணைந்தார்.

(இ-ள்.) சிவந்த பொன்மயமான மலையரசன் புத்திரியாகிய உமாதேவியார் கொடுத்தருளிய பொற்கிண்ணத்துத் திருமுலைப்பாலமுதுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் பட்டீசரதுதிருவருள்வெள்ளத்தின்றிறத்தைத்துதித்து, அளவிடுதற்கரிய பேரானந்தவெள்ளத்தில்முழுகி,நீங்காத மிக்கஅன்புபொருந்திய திருவுள்ளக்கனிவோடும் திருக்கோயிலின்புறத்து அடைந்தருளினார்.—எ-று.

'அருள் வள்ளற்றிறம்' என்றும் பாடம். (௩௯௮)

அப்பதியி லமர்கின்ற வாளுடைய பிள்ளையார்
செப்பருஞ்சீர்த் திருவாறை வடதளியிற் சென்றிறைஞ்சி
யொப்பரிய தமிழ்பாடி யுடனமருந் தொண்டருட
னெப்பொருளு மாய்நின்ற ரிரும்பூளை யெய்தினார்.

(இ-ள்.) அத்திருப்பட்டீச்சரமென்னுந் திருப்பதியி லெழுந்தருளியிருக்கின்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார் சொல்லுதற்கரிய சிறப்பினையுடைய திருவாறை வடதளியென்னுந் தலத்தையடைந்து வணங்கி, ஒப்பற்ற தமிழ்ப்பதிகம் பாடியருளி,தம்மோடுவசிக்கும் அடியார்களோடும் சராசரங்களாகிய எல்லாப்பொருள்களுந் தாமேயாக நின்ற காசியாரண்ணியேசுரர் வீற்றிருந்தருளும் திரு இரும்பூளையென்னுந் திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று. (௩௯௯)

தேவர்பிரா னமர்ந்ததிரு விரும்பூளை சென்றெய்தக்
காவணநீ டோரணங்க ணட்டியுடன் களிசிறப்பப்
பூவணைமா லைகணாற்றிப் பூரணபொற் குடநிரைத்தங்
கியாவர்களும் போற்றிசைப்பத் திருத்தொண்ட ரெதிர்கொண்டார்.

(இ-ள்.) தேவர்கள் நாயகராகிய காசியாரண்ணியேசுரர் வீற்றிருந்தருளும் திருஇரும்பூளையென்னுந் தலத்தைச்சென்றடையவும், அங்குள்ள அடியார்கள் நடைப்பந்தரையும், நீண்ட மகரதோரணங்களையும் எவ்விடங்களிலும் நாட்டி மகிழ்ச்சியதிகரிக்கப் பூமாலைகளைத்தொங்கவிட்டுப் பொன்மயமாகிய பூரணகும்பங்களை வரிசையாகவைத்துக் கண்டோர் யாவருந்துதிக்கத் (திருஞானசம்பந்தப்பிள்ளையாரை) எதிர்கொண்டார்கள்.—எ-று. (௪00)

வண்டமிழின் மொழிவிரகர் மணிமுத்தின் சிவிகையினைத்
தொண்டர்குழாத் தெதிரிழிந்தங் கவர்தொழத்தா மூந்தொழுதே

யண்டர்பிரான் கோயிலினை யணைந்திறைஞ்சி முன்னின்று
பண்டருமின் னிசைப்பதிகம் பரம்பொருளைப் பாடுவார்.

(இ-ள்.) வளம்பொருந்திய திருநெறித்தமிழ்த்தலைவ ராகிய திருஞான சம்பந்தப்பிள்ளையார் அழகிய முத்துச்சிவிகையினின்றும் அடியார் திருக்கூட்டத்திற்கு எதிரே இறங்கியருளி, அங்கு அவ்வடியார்கள் வணங்கத் தாமும்வணங்கித் தேவர்கள்பெருமானாகிய காரியாரண்ணியேசரது திருக்கோயிலையடைந்து வணங்கிச் சந்நிதியில்நின்று, பண்ணமைந்த இனியஇசையோடுகூடிய திருப்பதிகத்தைப் பரம்பொருளாகிய சிவபெருமான்மேல் பாடுவாராயினார்.—எ-று. (௬௦௪)

நிகரிலா மேருவரை யணுவாக நீண்டானை
நுகர்கின்ற தொண்டர்தமக் கமுதாகி நொய்யானைத்
தகவொன்ற வடியார்க டமைவினவித் தமிழ்விரகர்
பகர்கின்ற வருமறையின் பொருள்விரியப் பாடினார்.

(இ-ள்.) ஒப்பில்லாத மகமேருமலையானது தன்னளவிற்கு அணுவாக மகத்திற்கு மகத்தானவரை, சிவானந்தத்தை யனுபவிக்கின்ற மெய்யடியார்களுக்கு அமுதம்போலத்தித்தித்து அணுவிற்கு அணுவாயுள்ளவரை முத்தமிழ் விரகராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அடியார்களைநோக்கி (அவ்வெம்பெருமான் பெருமையைப்) பொருந்த வினவி, சொல்லுகின்ற அருமையாகிய வேதத்தின் மெய்ப்பொருள் விரியும்படித் திருப்பதிகம் பாடியருளினார்.—எ-று.

'மேருவரை யணுவாக' என்றதனால், மகத்திற்கு மகத்தாய்நிற்கும் வியாபக வியல்புள்ளவனென்பதும், 'நொய்யானை' என்றதனால், அணுவிற்கணுவாய்நிற்கும் சூக்கும வியல்புள்ளவனென்பதுந் தோன்றுமாறு காண்க; இதனை,

"அண்டமோரணுவாம்பெருமைகொண்டணுவோரண்டமாஞ்சிறுமைகொண்
டுண்டவூ ணுனக்காம் வகையெனதுள்ள முள்கலந்தெழுபரஞ்சோதி [டடியே
கொண்டநாண் பாம்பாம் பெருவரை வில்லிற் குறுகலர் புரங்கண்மூன் றெரித்த
கண்டனே நீல கண்டனே கங்கை கொண்டசோ ளேச்சரத் தானே"—என்னுங்
கருவூர்த்தேவர் திருவிசைப்பாவானும்,

"அண்டங்க ளெல்லா மணுவாக வணுக்க ளெல்லா
மண்டங்க ளாகப் பெரிதாய்ச் சிறிதாயி னானு
மண்டங்க ளுள்ளும் புறம்புங் கரியாயி னானு
மண்டங்க ளின்று மெனவென்ப ரறிந்த நல்லோர்."—என வருந் திருவிளையாடற்புராணத்தானு முணர்க. (௬௦௨)

---

## திருஇரும்பூளை-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

சீரார்கழலேதொழுவீரிதுசெப்பீர்
வாரார்முலைமங்கையொடும்முடனாகி
யேராரிரும்பூளையிடங்கொண்டவீசன்
காரார்கடனஞ்சமுதுண்டகருத்தே.

எந்தையிரும்பூளையிடங்கொண்டவீசன்
சந்தம்பயிலசணைபையுள்ஞானசமபநதன்
செந்தணடமிழ்செபபியபத்திவைவல்லார்
பந்தம்மறுத்தோங்குவர்பான்மையினுலே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - காசியாரண்ணியேசுரர், தேவியார்-ஏலவார்குழலம்மை.

பாடுமரைதைப்பெரும் பாழியே முதலாகச்
சேடர்பயி றிருச்சேறை திருநாலூர் குடவாயி
னாடியசீர் நறையூர்தென் றிருப்புத்தூ ரயந்திறைஞ்சி
நீடுதமிழ்த் தொடைபுனைந்த நெடுநகரி லினிதமர்ந்தார்.

(இ-ள்.) யாவரும் துதிக்கின்ற திருஅரதைப்பெரும்பாழி யென்னுந் திருப்பதி முதலாகப் பெரியோர்கள் வாசஞ்செய்யும் திருச்சேறை - திருநாலூர் - திருக்குடவாயில் - யாவரும் விரும்புகின்ற சிறப்பினையுடைய திருநறையூர் - அழகிய திருப்புத்தூர் முதலிய க்ஷேத்திரங்களை விரும்பி வணங்கிச் சிறந்த திருப்பதிகம் பாடியருளி அத்தலங்களில் இனிதாக வசித்திருந்தருளினர்.—எ-று. (௪0௩)

அங்கணினி தமருநா ளடல்வெள்ளே னத்துருவாய்ச்
செங்கணெடு மால்பணியுஞ் சிவபுரத்துச் செ றடைந்து
கங்கைசடைக் கரந்தவர்தங் கழலவணங்கித் காதலினாற்
பொங்குமிசைத் திருப்பதிக முனணின்று போற்றிசைத்தார்.

(இ-ள்.) அத்திருப்பதிகளில் இனிமையோடும் எழுந்தருளியிருக்கும்நாள்களில், சிவந்த கண்களையுடைய விஷ்ணுவானவர் வலிய சுவேதவராகரூபமாய் வழிபாடுசெய்த திருச்சிவபுரமென்னுந் திருப்பதியைச் சென்று சேர்ந்து, கங்கைநதியைச் சடையில் மறைத்தருளிய பிரமபுரீசரது திருவடிகளை வணங்கி அன்போடு இசைநிறைந்த திருப்பதிகத்தைத் திருமுன்னின்று பாடியருளினர்.—எ-று. ()

போற்றிசைத்துப் புனிதரருள் பெற்றுப்போந் தெவ்வுயிருந்
தோற்றுவித்த வயன்போற்றுந் தோணிபுரத் தந்தணரு
ரேற்றுமிசை யேற்றுவந்த விறைவர்தமை யேத்துதற்கு
நாற்றிசையோர் பரவுதிருக் குடமூக்கு நண்ணினர்.

(இ-ள்.) எல்லா வுயிர்களையும் சிருஷ்டித்த பிரமனால் வணங்கப்பெற்ற சீகாழிப்பதியி லவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருப்பதிகம் பாடித் துதித்து, மலரகிதராகிய பிரமபுரீசரது திருவருளைப்பெற்று அவவிடத்தினின்று நீங்கி, இடபவாகனத்தின்மேல் ஏறுதலை விரும்பிய ஸ்ரீகும்பேசரைத் துதிக்கும்பொருட்டு நான்குதிக்கி லுள்ளவர்களும் வணங்குகின்ற ஸ்ரீகும்பகோணமென்னுந் திருப்பதியை யடைந்தருளினர்.—எ-று.

குடமூக்கு என்பது, கும்பகோணம். (௪0௫)

தேமருவு மலர்ச்சோலைத் திருக்குடமூக் கினிற்செல்வ
மாமறையோர் பூந்தராய் வள்ளலார் வந்தருளத்

தூமறையி னொலிபெருகத் தூரியமங் கலமுழங்கக்
கோமுறைமை யெதிர்கொண்டு தம்பதியுட் கொடுபுக்கார்.

(இ-ள்.) சீகாழிப்பதியி லவதரித்தருளிய அருள்வள்ளலாகிய திருஞான சம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளவும்,தேன்பொருந்திய மலர்களையுடைய சோலை சூழ்ந்த ஸ்ரீகும்பகோண மென்னும் திருப்பதியில் வாழ்கின்ற இருவகைச்செல்வங் களும் நிறைந்த சிறந்த வேதியர்கள் தூய்மையாகிய வேதகோஷங்க ளதிகரிக்க வும், மங்கலவாத்தியங்கள் முழங்கவும் சிறந்த முறைமைப்படியே எதிர்கொண்டு, தமது திருப்பதிக்கு அழைத்துக்கொண்டுசென்றார்கள்.—எ-று. (சு0சு)

திருஞான சம்பந்தர் திருக்குடமூக் கினைச்சேர
வருவார்தம் பெருமானை வண்டமிழின் றிருப்பதிக
முருகாநின் றுண்மகிழக் குடமூக்கை யுவந்திருந்த
பெருமானெம் மிறையென்று பெருகிசையாற் பரவினார்.

(இ-ள்.) ஸ்ரீ கும்பகோணத்தை யடைய எழுந்தருள்பவராகிய திருஞான சம்பந்தப்பிள்ளையார் தமது பெருமானாகிய கும்பேசரை வளம்பொருந்திய தமிழ்ச் சொற்களா லாகிய திருப்பதிகத்தால் திருவுள்ளங் கனிந்து உருகி மகிழ, திருக் குடமூக்கென்னும் திருப்பதியை விரும்பி யெழுந்தருளியிருந்த பெருமான் எம்மி றைவனென்று இறுதியில் வைத்து நிறைந்த இசையோடும் ("அரவிரிகோடனீ டல்" என்னு முதலையுடைய) திருப்பதிகத்தைப்பாடியருளினார்—எ-று. (சு0எ)

---

### திருக்குடமூக்கு பண் பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

அரவிரிகோடனீடலணிகாவிரியார்த்தயலே
மரவிரிபோதுமவ்வன்மணமல்லிகைகள்ளவிழுங்
குரவிரிசோலைசூழ்ந்தகுழகன்குடமூக்கிடமா
யிரவிரிதிங்கள்சூடியிருந்தானவனெம்மிறையே.

வெண்கொடிமாடமோங்குவிறல்வெங்குருநன்னகரா
னண்பொடுநின்றசீரான்றமிழ்ஞானசம்பந்தனல்ல
தண்குடமூக்கமர்ந்தானடிசேர்தமிழ்பத்தும்வல்லார்
விண்புடைமேலுலகம்வியப்பெய்துவர்வீடெளிதே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - கும்பேசுவரர், தேவியார் - மங்களாம்பிகை.

---

வந்தணைந்து திருக்கீழ்க்கோட் டத்திருந்த வான்பொருளைச்
சிந்தைமகிழ் வுறவணங்கித் திருத்தொண்ட ருடன்செல்வா
ரந்தணர்கள் புடைசூழ்ந்து போற்றிசைப்ப வவரோடுங்
கந்தமலர்ப் பொழில்சூழ்ந்த காரோணஞ் சென்றடைந்தார்.

(இ-ள்.) அத் திருப்பதியில் திருக்குடந்தைக் கீழ்க்கோட்டத்தின்கண் எழுந்தருளிய மெய்ப்பொருளாகிய மடந்தைபாகேசரை வந்தடைந்தருளித் திரு

வுள்ளமகிழும்படி வணங்கி, அடியார் திருக்கூட்டத்தோடும் அங்குநின்று மெழுந் தருளுகின்றவர் அங்குள்ள பிராமணர்கள் பக்கங்களிற் சூழ்ந்து துதிக்க, அப்பிரா மணர்களோடும் வாசனை வீசுகின்ற மலர்களையுடைய சோலைசூழ்ந்த திருக்குடந் தைக்காரோணத்தைச் சென்று சேர்ந்தருளினர்.—எ-று. (சுoரு)

பூமருவுங் கங்கைமுதற் புனிதமாம் பெருந்தீர்த்த
மாமகந்தா னாடுதற்கு வந்துவழி படுங்கோயி
றாமருவு மலர்க்கையாற் றொழுதுவலங் கொண்டணைந்து
காமர்கெட நுதல்விழித்தார் கழல்பணிந்து கண்களித்தார்.

(இ-ள்.) பொலிவினையுடைய கங்கைமுதலிய பரிசுத்தமாகிய பெரிய புண் ணியதீர்த்தங்களெல்லாம் (மாசிமாதத்தில் வருகின்ற) மாமகநாளில் அங்கு மூழ்கு தற்குவந்து வழிபாடுசெய்யுந் திருக்கோயிலைப் பரிசுத்தம்பொருந்திய தாமரைமலர் போன்ற திருக்கரங்களால் குவித்துவணங்கிப் பிரதக்ஷணஞ்செய்துவந்து, மன்மத னழியும்படி நெற்றிக்கண்ணைத் திறந்தருளிய சிவபெருமானது திருவடிகளை வண ங்கிக் கண்கள் களிகூர்ந்தருளினர்.—எ-று.

பூமருவு கங்கை என்பதற்கு, பூமியில் பொருந்திய கங்கையெனவும், மலர் கள் நிறைந்த கங்கையெனவும் பொருள்கூறினும்பொருந்தும். கங்கைமுதற் புனித மாம் பெருந்தீர்த்தம்-கங்கை யமுனை முதலிய சப்த தீர்த்தங்களும், மற்றக்ஷேத்தி ரதீர்த்தங்களுமாம்; அவை, மாமகநாளில் வந்து வழிபடுதலெவ்வாறென்னின், அ வைகட்கு ஸ்தூலமாகிய ஆதிபௌதிகரூபமேயன்றி, சூக்ஷுமமாகிய ஆதியான்மிக ரூபமுமுண்மையின் அவற்றோடு கலந்து வழிபாடுசெய்யுமெனவறிக. காமன் என் பதை அவனது இழிவு குறித்துப் பலர்பாலாகக் கூறினர். (சுoசு)

கண்ணாரு மருமணியைக் காரோணத் தாரமுதை
நண்ணாதார் புரமெரித்த நான்மறையின் பொருளானைப்
பண்ணார்ந்த திருப்பதிகம் பணிந்தேத்திப் பிறபதியு
மெண்ணார்ந்த சீரடியா ருடன்பணிவுற் றெழுந்தருளி.

(இ-ள்.) அருமையாகிய கண்மணிபோன்றவரும், திருக்குடந்தைக்காரோ ணத்தி லெழுந்தருளிய அமுதம்போன்றவரும், பகைவராகிய அசுரர்களது முப்பு ரங்களையும் நகைத்தெரித்தருளிய நான்கு வேதங்களின் மெய்ப்பொருளாயுள்ள வருமாகிய சோமநாதேசரைப் பண்ணமைந்த திருப்பதிகத்தால்வணங்கித் துதித்து, அதன் சமீபத்திலுள்ள மற்ற திருப்பதிகளையும் மதிக்கத்தக்க சிறப்பினையுடைய அடியார்களோடு வணங்கி, அவவிடத்தினின்று மெழுந்தருளி.—எ-று.

இதுமுத லிரண்டு பாடலுங் குளகம். (சுசுo)

திருநாகேச் சரத்தமர்ந்த செங்கனகத் தனிக்குன்றைக்
கருநாகத் துரிபுனைந்த கண்ணுதலைச் சென்றிறைஞ்சி
யருஞானச் செந்தமிழின் றிருப்பதிக மருள்செய்து
பெருஞான சம்பந்தர் பெருகார்வத் தின்புற்றார்.

(இ-ள்.) பெருமைபொருந்திய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருநாகே ச்சரமென்னுந் திருப்பதியில் வீற்றிருந்தருளும் சிவந்த பொன்மலைபோன்றவரும், கரிய கஜாசுர னென்னும் யானையின் தோலை யுரித்துப் போர்த்தருளிய நெற்றிக்

கண்ணையுடையவருமாகிய சண்பகாரண்ணியேசரை யடைந்து வணங்கி, பெறுத ற்கரிய திருவருள்ஞானம் நிறைந்த செந்தமிழ்த் திருப்பதிகம் பாடியருளி, மிகு ந்த ஆசையோடு இன்பமடைந்தார்.—எ-று. (சகக)

மாநாக மருச்சித்த மலர்க்கமலத் தாள்வணங்கி
நாளும் பரவுவார் பிணிதீர்க்கு நலம்போற்றிப்
பானுறு மணிவாயர் பரமர்திரு விடைமருதிற்
பூநாறும் புனற்பொன்னித் தடங்கரைபோய்ப் புகுகின்றார்.

(இ-ள்.) சிவஞானப்பால்மணங் கமழுந் திருவாயினையுடைய திருஞான சம்பந்தப்பிள்ளையார் அஷ்டமாநாகங்களும் பூசித்துச் சிவப்பிரசாதம்பெற்ற (சிவ பெருமானது) தாமரைமலர்போன்ற திருவடிகளைவணங்கி, நாள்தோறும் வணங்கு கின்ற அன்பர்களது தீவினைப்பிணியை நீக்கியருளும் அவரது திருவருணலத்தைத் துதித்து, மருதவாணர் வீற்றிருந்தருளும் திருவிடைமருதூர் என்னுந் திருப்பதியி ன்கண் மலர்கள் வாசனை வீசும் நீரையுடைய காவிரிநதியின் உயர்ந்த கரைவழி யேசென்று புகுகின்றவராயினார்.—எ-று. (சகஉ)

ஓங்குதிருப் பதிகமோ டேகலனென் றெடுத்தருளித்
தாங்கரிய பெருமகிழ்ச்சி தலைசிறக்குந் தன்மையினா
லீங்கெனையா ளுடையபிரா னிடைமருதீ தோவென்று
பாங்குடைய வின்னிசையாற் பாடியெழுந் தருளினார்.

(இ-ள்.) சிறந்த திருப்பதிகத்தை "ஓடேகலன்" என்று முதலில்தொட ங்கி, அடங்காத பெருமகிழ்ச்சியானது அதிகரித்தோங்குந்தன்மையினால், இங்கு என்னை அடிமையாகவுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருவிடைமருதூ ரிதுவோ? என்று இறுதியி லமைத்து, இனிய இசையோடு பாடியருளி, அத்திருப் பதியில் எழுந்தருளினார்.—எ-று. (சகங)

---

**திருவிடைமருது - பண் - தக்கராகம்.**

திருச்சிற்றம்பலம்.

ஓடேகலனுண்பதுமூரிடுபிச்சை
காடேயிடமாவதுகல்லானிழற்கீழ்
வாடாமுலைமங்கையுந்தானுமகிழ்ந்
தீடாவுறைகின்றவிடைமருதீதோ.

கண்ணார்கமழ்காழியுள்ஞானசம்பந்
தனண்ணார்புகழெந்தையிடைமருதின்மேற்
பண்ணோடிசைபாடியபத்தும்வல்லார்கள்
விண்ணோருலகத்தினில்வீற்றிருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - மருதீசர், தேவியார் - நலமுலைநாயகியம்மை.

---

அடியவர்க ளெதிர்கொள்ள வெழுந்தருளி யங்கணைந்து
முடிவில்பரம் பொருளானார் முதற்கோயின் முன்னிறைஞ்சிப்

படியில்வலங் கொண்டுதிரு முன்பெய்திப் பார்மீது
நெடிதுபணிந் தெழுந்தன்பு நிறைகண்ணீர் நிரந்திழிய.

(இ-ள்.) அத்திருப்பதியிலுள்ள அடியார்கள் எதிர்கொண்டுவர, அவர்களோடு அங்கு எழுந்தருளி, முடிவில்லாத பரம்பொருளாயுள்ள சிவபெருமானது முதன்மைபொருந்திய திருக்கோயிற்றிருவாயிலின் முன்னே வணங்கி நிலத்தில் பிரதக்ஷிணஞ்செய்து சந்நிதியில்சென்று, பூமியில் நெடுநேரம் சாஷ்டாங்கமாகவிழுந்து நமஸ்கரித்தெழுந்து, அன்பினால்நிறைந்த ஆனந்தக்கண்ணீர் திருமேனியில் பரவியொழுக.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (சுகச)

பரவுறுசெந் தமிழ்ப்பதிகம் பாடியமர்ந் தப்பதியில்
விரவுவார் திருப்பதிகம் பலபாடி வெண்மதியோ
டரவுசடைக் கணிந்தவர்தந் தாள்போற்றி யார்வத்தா
லுரவுதிருத் தொண்டருடன் பணிந்தேத்தி யுறையுநாள்.

(இ-ள்.) யாவரும் துதிக்கின்ற செந்தமிழ்த்திருப்பதிகம்பாடியருளி அத்திருப்பதியில் எழுந்தருளியிருக்குந் திருஞானசம்பந்தப்பிள்ளையார் பின்னும் பல திருப்பதிகங்களையருளிச்செய்து,வெள்ளிய இளம்பிறையோடுபாம்பினையும் (பகைநீங்கச்) சடைமுடியிலணிந்த சிவபெருமானது திருவடிகளைத் துதித்து, அன்போடு கலந்த அடியார்களுடன்வணங்கிஅங்கு எழுந்தருளியிருக்கும் நாள்களில்.—எ-று.

மருங்குளநற் பதிகள்பல பணிந்துமா நதிக்கரைபோய்க்
குரங்காடு துறையணைந்து குழகனார் குரைகழல்கள்
பெருங்காத லிற்பணிந்து பேணியவின் னிசைபெருக
வருங்கலைநூற் றிருப்பதிக மருள்செய்து பரவினார்.

(இ-ள்.) அதன் பக்கத்திலுள்ள நன்மைபொருந்திய பல திருப்பதிகளையும் வணங்கி, பெரிய காவிரிநதியின் கரைவழியேசென்று திருக்குரங்காடுதுறை யென்னுந் திருப்பதியையடைந்து ஆபத்சகாயநாதரது சப்திக்கின்ற வீரக்கழலையணிந்த திருவடிகளை மிக்க அன்போடுவணங்கி, யாவரும் விரும்பும் இனிய இசைபெருகும்படி அரிய தமிழ்வேதமாகிய திருப்பதிகத்தை அருளிச்செய்துதுதித்தார். ()

வேறு.

அம்ம லர்த்தடம் பதிபணிந் தகன்றுபோந் தருகு
மைம்ம லர்க்களத் திறைவர்தங் கோயில்கள் வணங்கி
நம்ம லத்துயர் நீங்கவந் தருளிய ஞானச்
செம்ம லார்திரு வாவடு துறையினைச் சேர்ந்தார்.

(இ-ள்.) நமது மலத்திரயங்களாலுண்டாகிய துன்பம்நீங்கும்படி (சீகாழிப் பதியில்) அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார், அந்த மலர்களையுடைய தடாகங்கள்சூழ்ந்த திருக்குரங்காடுதுறையைவணங்கி, அங்குநின்று மெழுந்தருளி, அதன்பக்கங்களிலுள்ள நீலமலர்போலுங் கண்டத்தையுடைய சிவபெருமானது திருக்கோயில்கள் பலவற்றையும் வணங்கி, திருவாவடுதுறையென்னுந்திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று. (சுகஎ)

மூவ ருக்கறி வரும்பொரு ளாகிய மூலத்
தேவர் தந்திரு வாவடு துறைத்திருத் தொண்டர்

பூவ லம்புதண் பொருபுனற் றடம்பணைப் புகலிக்
காவ லர்க்கெதிர் கொள்ளுமா தரவுடன் கலந்தார்.

(இ-ள்.) பிரமன்-விஷ்ணு-உருத்திரனென்னு மும்மூர்த்திகட்கும் அறிதற்கரிய மெய்ப்பொருளாகிய மூலமூர்த்தியாக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ மாசிலாமணியீசரது திருவாவடுதுறையில்வாழும் திருத்தொண்டர்கள் பூக்கள் அலம்புங் கரையைமோதுகின்ற குளிர்ந்த நீர்நிறைந்த பெரிய வயல்களையுடைய சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரை எதிர்கொள்ளும் விருப்பத்துடன் சேர்ந்துவந்தார்கள்.—எ-று.

'மூவருக்கறிவரும் பொருளாகிய மூலத்தேவர்' என்பதனை,
"தேவதேவன்மெய்ச்சேவகன்றென்பெருந்துறைநாயகன்
மூவராலுமறியொணுமுதலாயவானந்தமூர்த்தியான்
யாவராயினுமன்பரன்றியறியொணுமலர்ச்சோதியான்
தூயமாமலர்ச்சேவடிக்கணஞ்சென்னிமன்னிச்சுடருமே" எனவரும் திருவாசகத்திருமுறையா னுணர்க. (சகஅ)

வந்த ணைந்தவர் தொழாமுன மலர்புகழ்ச் சண்பை
யந்த ணர்க்கெலா மருமறைப் பொருளென வந்தார்
சந்த நிலத்திலச் சிவிகைநின் றிழிந்தெதிர் தாழ்ந்தே
சிந்தை யின்புற விறைவர்தங் கோயின்முன் சென்றார்.

(இ-ள்.) பரந்த புகழையுடைய சீகாழியில்வாழும் பிராமணர்களுக்கெல்லாம் அரிய வேதத்தின் மெய்ப்பொருளைப்போல அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் தம்மை எதிர்கொள்ளவந்த அடியார்கள் வணங்குவதற்கு முன்னே அழகிய முத்துச்சிவிகையினின்றுங் கீழ்இறங்கி எதிரேவணங்கித் தமது திருவுள்ளமகிழ, ஸ்ரீ மாசிலாமணியீசரது திருக்கோயிலின்முன் அடைந்தருளினர். ()

நீடு கோபுர மிறைஞ்சியுள் புகுந்துநீ ணிலையான்
மாடு சூழ்திரு மாளிகை வலங்கொண்டு வணங்கி
யாடு மாதியை யாவடு துறையுளா ரமுதை
நாடு காதலிற் பணிந்தெழுந் தருந்தமிழ் நவின்றார்.

(இ-ள்.) நீண்ட திருக்கோபுரத்தை வணங்கி யுள்ளேபுகுந்து, உயர்ந்த நிலைகளோடு பக்கங்களில்சூழ்ந்த திருமாளிகையைப் பிரதக்ஷணஞ்செய்து வணங்கி, கனகசபையில் ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளும் முதல்வரும், திருவாவடுதுறையில் வீற்றிருந்தருளும் அரிய அமுதம்போல்பவருமாகிய ஸ்ரீ மாசிலாமணியீசனை மிக்க அன்போடுவணங்கி யெழுந்து அரிய தமிழ்ப்பதிகம் பாடியருளினர். ()

அன்பு நீடிய வருவிகண் பொழியுமா வந்தான்
முன்பு போற்றியே புறம்பணை முத்தமிழ் விரகர்
துன்பு போமனத் திருத்தொண்டர் தம்முடன் றொழுதே
யின்ப மேவியப் பதியினி லினிதமர்ந் திருந்தார்.

(இ-ள்.) அன்பினால் பெருகுகின்ற ஆனந்தபாஷ்பம் கண்களினின்றுஞ் சொரியத்தக்கவிருப்பத்தோடு ஸ்ரீமாசிலாமணியீசனை முன்னேவணங்கிப்புறத்தில் எழுந்தருளும் இயலிசை நாடக மென்னு முத்தமிழ்த்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் துன்பமென்பது சிறிதுமில்லாத மனத்தினையுடைய அடியார்க

ளோகேலந்து வணங்கிப் பேரின்பமடைந்து, அத்திருப்பதியில் இனிதாக எழுந்தரு ளியிருந்தார்.—எ-று. (சஉக)

மேவி யங்குறை நாளினில் வேள்விசெய் வதனுக்
காவ தாகிய காலம்வந் தணைவுற வணைந்து
தாவில் சண்பையர் தலைவர்க்குத் தாதையார் தாமும்
போவ தற்கரும் பொருள்பெற வெதிர்நின்று புகன்றார்.

(இ-ள்.) அத்திருப்பதியில் பொருந்தியெழுந்தருளியிருக்கும்பொழுது, யா கஞ்செய்வதற்குத் தக்ககாலம்வர, கெடாத புகழையுடைய காழியர் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார்க்குத் தந்தையாராகிய சிவபாதவிருதயரும் பிள்ளை யாரையடைந்து, தாம் யாகஞ்செய்யும்பொருட்டுச் சீகாழியை யடையும்படி அரிய பொருளைப்பெறுதற்கு அவர் திருமுன்னேநின்று மொழிந்தார்.—எ-று. (சஉஉ)

தந்தை யார்மொழி கேட்டலும் புகலியார் தலைவர்
முந்தை நாளிலே மொழிந்தமை நினைந்தருண் முன்னி
யந்த மில்பொரு ளாவன வாவடு துறையு
ளெந்தை யாரடித் தலங்களன் றோவென வெழுந்தார்.

(இ-ள்.) தந்தையாராகிய சிவபாதவிருதயரது சொல்லைக்கேட்டவுடனே சீகாழியிலுள்ளார்க்குத் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் தாம் யாத்தி ரைசெய்யக்கருதிப் புறப்படுங்காலத்தில் அவர்தம்முடன் யாகஞ்செய்யவேண்டுமெ ன்று கூறியதைத் திருவுள்ளத்திற்கருதித் திருவருளைச்சிந்தித்து, அழிவில்லாத பொருளாயுள்ளன திருவாவடுதுறையுள் வீற்றிருந்தருளும் எமது தந்தையாராகிய மாசிலாமணியீசரது திருவடிகளன்றோ என்றுகூறி யெழுந்தருளினார்.—எ-று.

'முந்தைநாளிலே மொழிந்தமையாவது,—திருஞானசம்பந்தப் பிள்ளை யார் தமது தந்தையாராகிய சிவபாதவிருதையரையும், மற்ற வேதியர்களையும்நோ க்கி யாம் இத் தமிழ்நாட்டிலுள்ள பல திருப்பதிகளையும் அடைந்து வணங்கித் திருப்பதிகம்பாடி இங்கு வருகின்றோமென்று கூறத் தந்தையார் " யான் உம்மை அருமையாகப் பெற்றுப் பிரிந்திருக்கமாட்டேன்; அன்றியும், இம்மை மறுமைப் பயன்களையளிக்கும் யாகமும் நான்செய்யவேண்டியிருக்கின்றது. ஆகையால் இன் னுஞ் சிலநாள் உம்முடன் வருவேன் " என்று முன்னர்க் கூறினமையை. (சஉங)

சென்று தேவர்தம் பிரான்மகிழ் கோயின்முன் பெய்தி
நின்று போற்றுவார் நீணிதி வேண்டினார்க் கீவ
தொன்று மற்றிலே னுன்னடி யல்லதொன் றறியே
னென்று போருள் வினவிய செந்தமி ழெடுத்தார்.

(இ-ள்.) அவ்வாறு எழுந்தருளித் தேவர்கள் நாயகராகிய ஸ்ரீ மாசிலாமணி யீசுரர்மகிழ்ந்துவீற்றிருந்தருளும் திருக்கோயிலின் முன்அடைந்துதிருமுன்னின்று துதிக்கும் திருஞானசம்பந்தப்பிள்ளையார் மிக்கபொருளைவிரும்பி எம்மைவந்தடை ந்தார்க்குக்கொடுக்குஞ் செல்வப்பொருள் வேறொன்றுமில்லேன்; தேவரீரது திரு வடிகளையல்லது பிறிதொன்றையு மறியேன்; என்று, அவ்வெம்பெருமானது திருவ ருளினைப் (பொருள்கருதி) வினவிய செந்தமிழ்த்திருப்பதிகத்தை யெடுத்தருளி னார்.—எ-று. (சஉச)

திருவாவடுதுறை நாலடிமேல்வைப்பு - பண் - காந்தார பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

இடரினுந்தளரினுமெனதுறுநோய்
தொடரினுமுனகழறொழுதெழுவேன்
கடறனிலமுதொடுகலந்தநஞ்சை
மிடறினிலடக்கியவேதியனே,
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையானே. (க)

வாழினுஞ்சாவினும்வருந்தினும்போய்
வீழினுமுனகழல்விடுவேனல்லேன்
றாழிளந்தடம்புனறயங்குசென்னி
போழிளமதிவைத்தபுண்ணியனே,
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையானே. (உ)

நனவிலுங்கனவிலுநம்பாவுன்னை
மனதிலும்வழிபடன்மறவேனம்மான்
புனல்விரிநறுங்கொன்றைப்போதணிந்த
கனலெரியனல்புல்குகையவனே,
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையானே. (ங)

தும்மலோடருந்துயர்தோன்றிடினு
மம்மலரடியலாலரற்றெனாக்
கைமல்குவரிசிலைக்கணையொன்றினான்
மும்மதிலெரியெழமுனிந்தவனே,
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையானே. (ச)

கையதுவீழினுங்கழிவுறினுஞ்
செய்கழலடியலாற்சிந்தைசெய்யேன்
கொய்யணிநறுமலர்குலாயசென்னி
மையணிமிடறுடைமறையவனே,
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையானே. (ரு)

வெந்துயர்தோன்றியோர்வெருவுறினு
மெந்தாயுன்னடியலாலேத்தாதென்னா
வைந்தலையரவுகொண்டரைக்கசைத்த
சந்தவெண்பொடியணிசங்கரனே,
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையானே. (சு)

வெப்பொடுவிரவியோர்வினைவரினு
மப்பாவுன்னடியலாலரற்றேதென்று
வொப்புடையொருவனையுருவழிய
வப்படியழலெழவிழித்தவனே,
யிதுவோவெமையாளுமா-றீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையானே. (எ)

பேரிடர்பெருகியோர்பிணிவரினுஞ்
சீருடைக்கழலலாற்சிந்தைசெய்யே
னேருடைமணிமுடியிராவணனை
யாரிடர்படவரையார்த்தவனே,
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவேவுனதின்னருளாவடுதுறையானே. (அ)

உண்ணினும்பசிப்பினுமுறங்கினுநின்
ஞெண்மலரடியலாலுரையாதென்னுக்
கண்ணனுங்கடிகமழ்தாமரைமே
லண்ணலுமளப்பரிதாயவனே,
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையானே. (கூ)

பித்தொடுமயங்கியோர்பிணிவரினு
மத்தவுன்னடியலாலரற்றேதென்னுப்
புத்தருஞ்சமணரும்புறனுரைக்கப்
பத்தர்கட்கருள்செய்துபயின்றவனே
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையானே. (கo)

அலைபுனலாவடுதுறையமர்ந்த
விலைநுனைவேற்படையெம்மிறையை
நலமிகுஞானசம்பந்தன்சொன்ன
விலையுடையருந்தமிழ்மாலைவல்லார்,
வினையாயினநீங்கிப்போய்விண்ணவர்வியனுலகந்
நிலையாகமுன்னேறுவார்நிலமிசைநிலையிலரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - மாசிலாமணியீசர், தேவியார் - ஒப்பிலாமுலையம்மை.

---

எடுத்த வண்டமிழ்ப் பதிகநா லடியின்மே லிருசீர்
தொடுத்த வைப்பொடு தொடர்ந்தவின் னிசையினுற் றுதிப்பார்
மடுத்த காதலில் வள்ளலா ரடியிணை வழுத்தி
யடுத்த சிந்தையா லாதரித் தஞ்சலி யளித்தார்.

(இ-ள்.) பாடத்தொடங்கி யருளிய சிறந்த தமிழ்த்திருப்பதிகத்தை நால டியின்மேல் இருசீர்தொடுத்த ஈரடிவைப்போடு ஒற்றுமைப்பட்ட இனிய இசை

யோடு பாடியருளும் திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது திருவுள்ளத்தில் நிறைந்த விருப்பத்தோடு அருள்வள்ளலாகிய ஸ்ரீமாசிலாமணியீசரது இரண்டு திருவடிகளையுந் துதித்துப்பொருந்திய திருவுள்ளத்தோடும் விரும்பிக் கைகுவித்து வணங்கினார்.—எ-று. (சுஉரு)

நச்சி யின்றமிழ் பாடிய ஞானசம் பந்த
ரிச்சை யேபுரிந் தருளிய விறைவரின் னருளா
லச்சி றப்பருள் பூதமுன் விரைந்தகன் பீடத்
துச்சி வைத்தது பசும்பொனா யிரக்கிழி யொன்று.

(இ-ள்.) (தந்தையாருக்குப் பொருளீதலை) விரும்பி இனிய திருப்பதிகம் பாடியருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவுள்ளத்தின்படியே கொடுத்தருளிய ஸ்ரீமாசிலாமணியீசரது இனியதிருவருளினால், அவர்விரும்பிய பொருட்சிறப்பை அருளும்படி ஓர் சிவபூதமானது பிள்ளையார் திருமுன்னே விரைந்துவந்து பசிய ஆயிரம் பொன்முடிந்த ஒரு முடிப்பை அகன்ற பலிபீடத்தின் உச்சியில் வைத்தது.—எ-று. (சுஉசு)

வைத்த பூதமங் கணைந்துமுன் னின்றுநல் வாக்கா
லுய்த்த விக்கிழி பொன்னுல வாக்கிழி யுமக்கு
நித்த னாருள் செய்ததென் றுரைக்கநேர் தொழுதே
யத்த னார்திரு வருணினைந் தவனிமேற் பணிந்தார்.

(இ-ள்.) பலிபீடத்தின்மேல் பொற்கிழியைவைத்த சிவபூதமானது திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருமுன்னின்று நல்வாக்கினால் நான் வைத்த இக்கிழி, பொன்னை யெடுக்குந்தோறுங் குறையாத உலவாக்கிழியாம்; இதனை உமக்கு ஸ்ரீமாசிலாமணியீசர் அருளிச்செய்ததென்றுகூற, அப்பூதத்தின் எதிரில் கைகூப்பி வணங்கிச் சிவபெருமானது திருவருளை நினைந்து பூமியில் சாஷ்டாங்கமாகவிழுந்து வணங்கினார்.—எ-று. (சுஉஎ)

பணிந்தெ ழுந்துகை தொழுதுமுன் பனிமலர்ப் பீடத்
தணைந்த வாடகக் கிழிதலைக் கொண்டரு மறைக
டுணிந்த வான்பொரு ளரும்பொரு டூயவாய் மையினாற்
றணிந்த சிந்தையத் தந்தையார்க் களித்துரை செய்வார்.

(இ-ள்.) பூமியில் விழுந்து நமஸ்கரித்தெழுந்து திருக்கரங்களைக்கூப்பி அஞ்சலிசெய்து, தமக்கு முன்னே குளிர்ந்த தாமரை மலர்போன்ற பத்திரபீடத்தின் மேல் இருக்கின்ற பொற்கிழியைச் சிரமேற் சூடிக்கொண்டு, அரிய வேதங்களால் துணிந்து சொல்லப்பட்ட சிறந்த மெய்ப்பொருளாகிய மாசிலாமணியீசர் தந்தருளிய அப்பொன்முடிப்பைப் பரிசுத்தமாகிய மெய்யுணர்ச்சியினால் சாந்தமடைந்திருக்கின்ற மனத்தினையுடைய தமது தந்தையாராகிய சிவபாத விருதயருக்குக்கொடுத்து பின்வருமாறு அருளிச் செய்வாராயினார்.—எ-று. (சுஉஅ)

ஆதி மாமறை விதியினா லாறுசூழ் வேணி
நாத னாைமுன் னாகவே புரியுநல் வேள்வி
தீது நீங்கநீர் செய்யவுந் திருக்கழு மலத்து
வேத வேதிய ரனைவருஞ் செய்யவு மிகுமால்.

(இ-ள்.) முதன்மையாகிய பெரிய வேதங்கள்விதித்த முறைமைப்படியே கங்காநதி பாய்கின்ற சடைமுடியையுடைய சிவபெருமானை முதல்வராகக்கொண்டு நீர் செய்கின்றயாகத்தைக் குற்றமறச்செய்யவும், சீகாழிப்பதியிலுள்ள வேதங்களையுணர்ந்த பிராமணர்களனைவருஞ்செய்யவும் (இப்பொருள் நாள்தோறும் குறைவின்றி) அதிகரித்திருக்கும்.—எ-று.

திருமால் யாகரூபிஎன்பதும், சிவபெருமான் யாகத்தலைவனென்பதும், அவ்வெம்பெருமானை முதல்வராகக்கொண்டு செய்யும் யாகமே சிறப்புற்றோங்குமென்பதும், ஏனையரைத் தலைவராகக்கொண்டு செய்யும் யாகம் இடையூறுற்றழியுமென்பதும், ஏனையரைப் பதியாகக்கொண்டு செய்தலால் நிரயமேயன்றி வேறு பயனின்றென்பதும், இதுவே எல்லாவேதங்களின் உண்மைக் கருத்தென்பதுந் தோன்ற, 'ஆதிமாமறைவிதியி னலாறுசூழ்வேணி - நாதனைமுன்னாகவே புரியுநல்வேள்வி' என்று கூறினர். இதனை,

"விச்சுவன்சிறைப்புள்ளரசுயர்த்தவன்விளம்பும்
விச்சுவாதிகனெனுழ்வலிச்சினவிடையூர்தி
யெச்சமேசுரும்புளர்துழாயலங்கலானென்ப
வெச்சநாயகன்பொலந்துணரிதழிமாலிகையான்" என்றும்,

"எச்சத்தாலெச்சமென்னுமறைப்பொருளிதுவோகூறி
னெச்சத்தின்வேறுமேனைக்கருமங்கட்கெச்சம்போல
வெச்சத்திற்குயர்ந்தோன்வெள்ளையேற்றினனெனுங்கருத்தா
லெச்சச்சொலதனுண்முக்கட்பகவனையியம்புமங்கண்.

ஆதலினெச்சந்தன்னுலணங்கொருபாகன்றன்னை
மாதவன்முதலாம்விண்ணோர்வணங்கினர்வழிபட்டுய்யப்
போதுவரென்பதன்றேயம்மறைப்பொருளாமன்றி
யேதமிலெச்சந்தன்னுற்றனைத்தொழுமென்பதாமோ.

சகந்தனிலெவருந்தம்மினுயர்ந்தவர்தமைப்பூசிப்ப
ருகந்தவர்க்கன்றித்தம்மோடொத்தவரிழிந்தோர்தம்மை
யகந்தெறப்பூசைசெய்வாராருளார்விதியுமற்றே
மகந்தனக்கரசன்முக்கண்வள்ளலேயென்னும்வேதம்" என்றும் வரும்

காஞ்சிப்புராணத்தா னுணர்க. (௬உ௯)

என்று கூறியங் கவர்தம்மை விடுத்தபி னவரு
நன்று மின்புறு மனத்தொடும் புகலிமே னண்ண
வென்றி ஞானசம் பந்தரும் விருப்பொடு வணங்கி
மன்ற லாவடு துறையினின் மகிழ்ந்தினி திருந்தார்.

(இ-ள்.) என்று அருளிச்செய்து அச்சிவபாத விருதயரைச் சீகாழிக்குச் செல்ல அனுமதி கொடுத்தனுப்பின பின்பு, அச் சிவபாதவிருதயர் நன்மையும் இன்பமும் பொருந்திய மனத்தோடும் சீகாழிக்குச்செல்ல, (பரசமயங்களை நிராகரிக்கும்) வெற்றியையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் ஸ்ரீ மாசிலாமணியீசரை விருப்பத்தோடுவணங்கி மலர்மணங்கமழும் திருவாவடுதுறையென்னுந் திருப்பதியில் மகிழ்ச்சியடைந்து இனிதாக எழுந்தருளியிருந்தார்.—எ-று. (௬௩0)

அண்ண லார்திரு வாவடு துறையமர்ந் தாரா
யுண்ணி லாவிய காதலி னற்பணிந் துறைந்து

மண்ணெ லாமுய வந்தவர் போந்துவார் சடைமேற்
றெண்ணி லாவணி வார்திருக் கோழம்பஞ் சேர்ந்தார்.

(இ-ள்.) பெருமையிற் சிறந்தோராகிய திருவாவடுதுறையின்கண் வீற்றிருந்தருளும் ஸ்ரீ மாசிலாமணியீசரைத் தமதுள்ளத்தின்கண் ணிறைந்த அன்பினால் வணங்கி அங்கு வாசஞ்செய்து, உலகத்திலுள்ள ஆன்மகோடிகளனைத்துங் கடைத்தேறும் பொருட்டு அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அங்குநின்றுமெழுந்தருளி, நீண்ட சடைமுடியின்மேல் தெளிவாகிய கிரணங்களையுடைய சந்திரனையணிந்த கோகிலேசுரர் வீற்றிருந்தருளும் திருக்கோழம்பம் என்னுந்திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று. (௪௩௧)

கொன்றை வார்சடை முடியரைக் கோழம்பத் திறைஞ்சி
யென்று நீடிய வின்னிசைப் பதிகமுன் னியம்பி
மன்று ளார்மகிழ் வைகன்மா டக்கோயின் மருங்கு
சென்று சார்ந்தனர் திருவளர் சிரபுரச் செல்வர்.

(இ-ள்.) கொன்றைமலர்மாலையையணிந்த நீண்ட சடைமுடியையுடைய கோகிலேசரைத் திருக்கோழம்பத்தின்கண்வணங்கி எக்காலத்தும் நிலைபெற்றுவிளங்கும் இனிய இசையையுடைய திருப்பதிகத்தைத் திருமுன்னின்று பாடியருளி, கனகசபையில் திருநடனஞ் செய்தருளும் சிவபெருமான் மகிழ்ந்து எழுந்தருளிய திருவைகல்மாடக்கோயிலின் பக்கத்தில் சென்றடைந்தருளினார்; பலவகைச் செல்வங்களும் விருத்தியாகின்ற சீகாழிப்பதியி லவதரித்தருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையார்.—எ-று.

சிரபுரச்செல்வர் சென்று சார்ந்தனர் எனக்கூட்டுக. (௪௩௨)

வைக னீடுமா டக்கோயின் மன்னிய மருந்தைக் *
கைக ளஞ்சலி கொண்டுதாழ்ந் தெழுந்துகண் ணருவி
செய்ய வின்னிசைச் செந்தமிழ் மாலைகண் மொழிந்து
நைவு முள்ளத்த ராய்த்திரு நல்லத்தி னண்ணி.

(இ-ள்.) சிறந்த திருவைகன்மாடக்கோயிலில் எழுந்தருளிய அமுதம்போல்பவராகிய சிவபெருமானைத் திருக்கரங்களை அஞ்சலியாகக் குவித்து வணங்கியெழுந்து கண்களினின்றும் ஆனந்தபாஷ்பம் அருவிபோற்சொரிய, இனிய இசை பொருந்திய செந்தமிழ்த்திருப்பதிகமாலையைப் பாடியருளி, (அன்பினால்) கசிந்துருகுந் திருவுள்ள முடையவராய்த் திருநல்லமென்னுந் திருப்பதியை யடைந்தருளி.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௪௩௩)

நிலவு மாளிகைத் திருநல்ல நீடுமா மணியை
யிலகு சேவடி யிறைஞ்சியின் றமிழ்கொடு துதித்துப்
பலவு மீசர்தந் திருப்பதி பணிந்துசெல் பவர்தா
மலைபு னற்றிரு வழுந்தூர்மா டக்கோயி லடைந்தார்.

(இ-ள்.) விளங்குகின்ற மாளிகைகளையுடைய திருநல்லமென்னுந் திருப்பதியில் எழுந்தருளியிருக்கும் மாணிக்கம்போன்ற உமாமகேசுரரது விளங்குகின்ற சிவந்த திருவடிகளைவணங்கி இனியதமிழ்ப்பதிகத்தால் துதித்து, சிவபெருமான் வீற்றிருந்தருளிய திருப்பதிகள் பலவற்றையும் வணங்கிச் செல்கின்ற திருஞானசம்பந்

தப்பிள்ளையார் அலைகின்ற நீர்வளம்பொருந்திய திருவழூந்தூரிலுள்ள திருமாடக் கோயிலை யடைந்தருளினார்.—எ-று.

தாம் - அசைநிலை. (சஙச)

மன்னு மாமட மகிழ்ந்தவான் பொருளினை வணங்கிப்
பன்னு பாடலிற் பதிகவின் னிசைகொடு பரவிப்
பொன்னி மாநதிக் கரையினின் மீண்டுபோந் தணைந்து
சொன்ன வாறறி வார்தமைத் துருத்தியிற் றொழுதார்.

(இ-ள்.) நிலைபெற்ற மாடக்கோயிலின்கண் எழுந்தருளிய மெய்ப்பொருளாகிய வேதபுரீசரைவணங்கிப் புகழத்தக்க பாடலாகியதிருப்பதிகத்தை இனிய இசையோடு அருளிச்செய்து துதித்து, பெரிய காவிரிநதியின் கரையில் மீளவும் வந்தடைந்தருளி, தம் அடியார்கள் குறையிரந்து கூறியவற்றை அறிந்து அருள்புரியும் முத்தாவதேசரைத் திருத்துருத்தியில்வணங்கி யருளினார்.—எ-று.

மாமாடம் என்பது, மாமடம் எனக் குறுக்கல் விகாரம் பெற்றது. (சஙரு)

திரைத்த டம்புனற் பொன்னிசூழ் திருத்துருத் தியினில்
வரைத்த லைப்பசும் பொன்னெனும் வண்டமிழ்ப் பதிக
முரைத்து மெய்யுறப் பணிந்துபோந் தலவுமந் நதியின்
கரைக்கண் மூவ லூர்க் கண்ணுத லார்கழல் பணிந்தார்.

(இ-ள்.) அலைகளையுடைய மிக்க நீர்நிறைந்த காவிரிநதிசூழ்ந்த திருத்துருத்தி யென்னுந் திருப்பதியில் "வரைத்தலைப் பசும்பொன்" என்னும் முதலையுடைய வளம்பொருந்திய தமிழ்த்திருப்பதிகம் பாடியருளித் தமது திருமேனி பூமியிற் பொருந்த வணங்கி, அங்குநின்று மெழுந்தருளி விளங்குகின்ற அக் காவிரிநதியின் கரையிலுள்ள திருமூவலூர் என்னுந் தலத்தி லெழுந்தருளிய நெற்றிக் கண்ணராகிய வழித்துணைநாதரது திருவடிகளை வணங்கியருளினார்.—எ-று. ()

---

திருத்துருத்தி-திருவிராகம்-பண்-நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

வரைத்தலைப்பசும்பொனோடருங்கலங்களுந்திவந்
திரைத்தலைச்சுமந்துகொண்டெறிந்திலங்குகாவிரிக்
கரைத்தலைத்துருத்திபுக்கிருப்பதேகருத்தினை
யுரைத்தலைப்பொலிந்துனக்குணர்த்துமாறுவல்லமே.
கற்றுமுற்றினார்தொழுங்கழுமலத்தருந்தமிழ்
சுற்றுமுற்றுமாயினானவன்பகர்ந்தசொற்களாற்
பெற்றமொன்றுயர்த்தவன்பெருந்துருத்திபேணவே
குற்றமுற்றுமின்மையிற்குணங்கள்வந்துகூடுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-முத்தாவதேவர், தேவியார்-அமிர்தமுகிழாம்பிகை.

---

மூவ லூருறை முதல்வரைப் பரவிய மொழியான்
மேவு காதலி லேத்தியே விருப்பொடும் போந்து

பூவ லம்புதண் புனற்பணைப் புகலியர் தலைவர்
வாவி சூழ்திரு மயிலாடு துறையினில் வந்தார்.

(இ-ள்.) பூக்கள் அலம்புகின்ற குளிர்ந்த நீர்நிறைந்த வயல்கள் சூழ்ந்த சீகாழியிலுள்ளவர்களுக்குத் •தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருமூவலூரில் எழுந்தருளிய முதற்பெருங் கடவுளாகிய வழித்துணைநாதனைப் பரவுகின்ற திருப்பதிகத்தினால் பொருந்திய அன்போடு துதித்து, அங்குநின்று விருப்பத்தோடும் எழுந்தருளி, தடாகங்கள் சூழ்ந்த திருமயிலாடுதுறை யென்னுந் திருப்பதியில் எழுந்தருளினார்.—எ-று.

திருமயிலாடுதுறை என்பது, ஸ்ரீ மாயூரம். (சஙஎ)

மல்கு தண்டலை மயிலாடு துறையினின் மருவுஞ்
செல்வ வேதியர் தொண்டரோ டெதிர்கொளச் சென்று
கொல்லை மான்மறிக் கையனைக் கோயில்புக் கிறைஞ்சி
யெல்லை யில்லதோ ரின்பமுன் பெருகிட வெழுந்தார்.

(இ-ள்.) நெருங்கிய சோலைகள் சூழ்ந்த திருமயிலாடுதுறையில் வாசஞ்செய்யும் செல்வத்தையுடைய பிராமணர்கள் அடியார் திருக்கூட்டத்தோடு எதிர்கொண்டுவர, அங்குச் சென்றருளி, தினைக்கொல்லையில்வாழும் மான்கன்றையேந்திய திருக்கரத்தையுடைய ஸ்ரீமாயூரநாதனைத் திருக்கோயிலிற் சென்று வணங்கி அளவில்லாத பேரின்பமானது அதிகரிக்க எழுந்தருளினார்.—எ-று.

'கொல்லை மான்மறி' என்றது, மான்களின் சாதித்தன்மையை நோக்கிக் கூறியதென வறிக. (சஙஅ)

உள்ள மின்புற வுணர்வுறும் பரிவுகொண் டுருகி
வெள்ளந் தாங்கிய சடையனை விளங்குசொற் பதிகத்
தெள்ளு மின்னிசைத் திளைப்பொடும் புறத்தணைந் தருளி
வள்ள லாருமற் றுளபதி மருவுதன் மகிழ்ந்தார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது திருவுள்ளத்தில் இன்பமுண்டாக ஸ்ரீமாயூரநாதனைச் சிந்திக்கும் பேரன்பால் உருகி, கங்கைநதியணிந்த சடைமுடியையுடைய அவ்வெம்பெருமானை விளங்குகின்ற நல்ல சொற்களாலாகிய திருப்பதிகத்தில் தெள்ளிய இனிய இசையைப்பாடுதலோடும் திருக்கோயிலின்புறத்து வந்தருளி, அதன் பக்கத்திலுள்ள மற்றத் திருப்பதிகளையும் அடைந்து வணங்கத் திருவுள்ளங் கொண்டருளினார்.—எ-று. (சஙக)

அத்திருப்பதி யகன்றுபோ யணிகிளர் சூலக்
கைத்த லைப்படை வீரர்செம் பொன்பள்ளி கருதி
மெய்த்த காதலில் விளநகர் விடையவர் பாதம்
பத்தர் தம்முடன் பணிந்திசைப் பதிகமுன் பகர்ந்தார்.

(இ-ள்.) அத்திருப்பதியை நீங்கிச் சென்று, திருக்கரத்தில் அழகுவிளங்கும் சூலப்படையை யேந்திய சொர்ணபுரீசரது திருச்செம்பொன்பள்ளியைக்கருதிச் சென்றருளி, உண்மையாகிய அன்பினால் திருவிளநகர் என்னுந் திருப்பதியில் எழுந்தருளிய இடபவாகனத்தை யுடைய பதஞ்சலிமனோகரரது திருவடிகளை அடியார்களோடும் வணங்கி இசைபொருந்திய திருப்பதிகத்தைத் திருமுன்னின்று பாடியருளினார்.—எ-று. (சச0)

பாடு மப்பதி பணிந்துபோய்ப் பறிய லூர் மேவுந்
தோடு லாமல ரிதழியுந் தும்பையு மடம்புங்
காடு கொண்டசெஞ் சடைமுடிக் கடவுளர் கருது
நீடு வீரட்டம் பணிந்தனர் நிறைமறை வேந்தர்.

(இ-ள்.) திருப்பதிகம்பாடிய அத்திருவிளநகரென்னுந் திருப்பதியைவண ங்கிச்சென்று திருப்பறியலூரிலுள்ள இதழ்பொருந்திய கொன்றைமலரும், தும் பைமலரும், அடம்பமலரும் நிறைந்திருக்கின்ற சிவந்த சடைமுடியையுடைய வீரட்டேசர் விரும்பி எழுந்தருளும் சிறந்த திருவீரட்டத்தை வணங்கியருளி னார்; நிறைந்த வேதத்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார்.—எ-று.

திருப்பறியலூர் என்பது தக்ஷசம்மாரஞ் செய்த ஸ்தலமாதலின், இது அட் டவீரட்டத்தொன்று. (௪௪௧)

பரமர் தந்திருப் பறியலூர் வீரட்டம் பரவி
விரவு காதலின் வேலையின் கரையினை மேவி
யரவ ணிந்தவர் பதிபல வணைந்துமுன் வணங்கிச்
சிரபு ரத்தவர் திருத்தொண்ட ரெதிர்கொளச் செல்வார்.

(இ-ள்.) சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிவபெரு மான் வீற்றிருந்தருளும் திருப்பறியலூர் வீரட்டானமென்னுந் திருப்பதியை வண ங்கி, நிறைந்த விருப்பத்தோடும் கீழ்ச்சமுத்திரக்கரையை யடைந்து, சர்ப்பாபரண த்தை யணிந்த சிவபெருமான் எழுந்தருளிய பல திருப்பதிகளையும் அடைந்து வணங்கி, அங்கங்குள்ள அடியார்கள் தம்மை யெதிர்கொள்ளும்படிச் செல்வாராயி னார்.—எ-று. (௪௪௨)

### வேறு.

அடியவர்கள் களிசிறப்பத் திருவேட்டக் குடிபணிந்தங் கலைவாய்ப் போகிக், கடிகமழு மலர்ப்பழனக் கழனிநாட் டகன்பதிகள் கலந்து நீங் கிக், கொடிமதில்சூழ் தருமபுரங் குறுகினார் குண்டர்சாக் கியர்தங் கொள் கை, படியறியப் பழுதென்றே மொழிந்துய்யு நெறிகாட்டும் பவளவாயார்

(இ-ள்.) சமணரும் பௌத்தருமாகிய இவர்கள் கொண்டிருக்கும் சமயக் கொள்கைகளை உலகிலுள்ள யாவரும் அறியும்படிக் குற்றமென்றுகூறி, உய்யும் நன் னெறியை யுணர்த்தியருளிய பவளம்போலுந் திருவாயினையுடைய திருஞானசம்ப ந்தப்பிள்ளையார் தம்மை யெதிர்கொண்டுவந்த அடியார்கள் மனமகிழ்ச்சியடையத் திருவேட்டக்குடியென்னுந் திருப்பதியை வணங்கி, அங்குநின்று கடற்கரைவழி யே சென்று, வாசனை வீசுகின்ற மலர்களையுடைய வயல்கள் சூழ்ந்த சோழநாட்டி லுள்ள இடமகன்ற பல திருப்பதிகளை யடைந்து வணங்கிச்சென்று, கொடிகள் கட்டிய மதில் சூழ்ந்த திருத்தருமபுரம் என்னுந் திருப்பதியை யடைந்தருளினார்.

தருமபுரம் பெரும்பாணர் திருத்தாயர் பிறப்பிடமா மதனாற் சார
வரும்வர்தஞ் சுற்றத்தார் வந்தெதிர்கொண் டடிவணங்கி வாழ்த்தக்கண்டு
பெருமையுடைப் பெரும்பாண ரவர்க்குரைப்பார் பிள்ளையா ரருளிச்செய்த
வருமையுடைப் பதிகந்தாம் யாழினாற் பயிற்றும்பே றருளிச் செய்தார்.

(இ-ள்.) தருமபுர மென்னுந் திருப்பதியானது திருநீலகண்டப்பெரும்பாணநாயனர் திருத்தாயார்க்கு ஜனனக்ஷேத்திரமாம்; அக்காரணத்தினால், திருஞானசம்பந்தப்பிள்ளையாரைச் சார்ந்து வருகின்ற அத் திருநீலகண்டயாழ்ப்பாணநாயனரது சுற்றத்தார்கள் பிள்ளையாரை எதிர்கொண்டுவந்து திருவடிகளில் வணங்கித் துதிக்கக்கண்டு, பெருமைபொருந்திய திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனர் அச்சுற்றத்தாரைப்பார்த்து, திருஞானசம்பந்தப்பிள்ளையார் தாம் அருளிச்செய்யும் அருமையாகிய திருப்பதிகங்களை யாழிலிட்டு வாசிக்கும்பேற்றினை அடியேனுக்கு அருளிச்செய்தாரென்று கூறுவாராயினர்.— எ-று.

பிள்ளையார் அருளிச்செய்தாரென்று பெரும்பாணர் உரைப்பார், எனக் கூட்டுக. (சசச)

கிளைஞருமற் றதுகேட்டுக் கெழுவுதிருப் பதிகத்திற் கிளர்ந்த வோசை
யளவுபெறக் கருவியினீ ரமைத்தியற்று மதனாலே யகில மெல்லாம்
வளரவிசை நிகழ்வதென விளம்புதலும் வளப்புகலி மன்னர் பாத
முளநடுங்கிப் பணிந்துதிரு நீலகண்டப் பெரும்பாண ருணர்த்து கின்றார்.

(இ-ள்.) சுற்றத்தாரும் அதனைக்கேட்டு, பெருமைபொருந்திய திருப்பதிகத்தில் விளங்குகின்ற வோசையை எடுத்தல் முதலிய அளவுகள் பொருந்த நீர் யாழிலமைத்துப் பாடுகின்றமையால் எல்லாவுலகங்களிலும் புகழுண்டாக விளங்குகின்றதென்று கூறுதலும், திருநீலகண்டப்பெரும்பாணநாயனர் திருவுள்ளம் நடுங்கி, வளப்பம்பொருந்திய சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவடிகளை வணங்கிப் பின் வருமாறு விண்ணப்பஞ் செய்வாராயினர்.—எ-று. ()

அலகிறிருப் பதிகவிசை யளவுபடா வகையிவர்க ளன்றி யேயு
முலகிலுள்ளோ ருந்தெரிந்தங் குண்மையினை யறிந்துய்ய வுணர்த்தும் பண்
பலர்புகழுந் திருப்பதிகம் பாடியரு ளப்பெற்றாற் பண்பு நீடி [பாற்
யிலகுமிசை யாழின்க ணடங்காமை யான்காட்டப் பெறுவ னென்றார்.

(இ-ள்.) அளவிடப்படாத திருப்பதிகத்தின் இசையானது யாழிலமைத்துப் பாடுதற்கு அடங்காதவகையை இவ்வெனது சுற்றத்தாரேயன்றி உலகத்திலுள்ள யாவரும் அறிந்து அதனிடத்துள்ள உண்மையை யுணர்ந் துய்யும்பொருட்டுத் தெரிவிக்கு நிமித்தம் பலரும் புகழத்தக்க ஓர் திருப்பதிகத்தைத் தேவரீர் பாடியருள அடியேன் பெற்றுக்கொண்டால் சிறப்போங்கி விளங்கும் இசையானது யாழிலமைத்துப்பாட அடங்காமையை யான் அவர்களுக்குக் காட்டப்பெறுவேனென்று கூறினர்.—எ-று. (சசரு)

வேதநெறி வளர்ப்பவரும் விடையவர்முன் றொழுதுதிருப் பதிகத் துண்
பூதலத்தோர் கண்டத்துங் கலத்தினிலு நிலத்துநூல் புகன்ற வேத [மை
நாதவிசை முயற்சிகளா லடங்காத வகைகாட்ட நாட்டு கின்றார்
மாதர்மடப் பிடிபாடி வணங்கினர் வானவரும் வணங்கி யேத்த.

(இ-ள்.) உலகத்தில் வேதநெறியை வளர்க்கும் திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் இடபவாகனத்தை யுடைய சிவபெருமான் திருமுன்னின்று வணங்கித் திருப்பதிகத்திலுள்ள இசையின் உண்மையை உலகத்துள்ளோரது கண்டத்திலும் யாழிலும், உலகத்தில் காந்தர்வவேதநூலிற் கூறிய நாதத்துக் குரிய இசை

யை வேறுபடுத்தும் முயற்சிகளினால் அடங்காதவகையைக் காட்டும்படிச் செய்கின்றவராய், (மண்ணுலகத்தினரோ யன்றி) விண்ணுலகத்துள்ள தேவர்களும் வணங்கித் துதிக்கும்படி "மாதர்மடப்பிடி" என்னு முதலையுடைய திருப்பதிகத்தைப் பாடி வணங்கியருளினார்.—எ-று.

வேதநெறிவளர்ப்பவர் காட்டுகின்றாராய்ப் பாடிவணங்கினார் என்க. (சசஎ)

---

**திருத்தருமபுரம் - யாழ்மூரி - பண் - வியாழக்குறிஞ்சி.**

திருச்சிற்றம்பலம்.

மாதர்மடப்பிடியு மட வன்னமுமன்னதோர்
நடை யுடைம் மலை மக டுணையெனமகிழ்வர்
பூதவினப்படைநின் றிசை பாடவுமாடுவ
ரவர் படர் சடை நெடு முடியதோர்புனலர்
வேதமொடேழிசைபா டுவ ராழ்கடல்வெண்டிரை
யிரைந் நுரை கரை பொருது விம்மிநின்றயலே
தாதவிழ்புன்னைதயங் குமலர்ச்சிறைவண்டறை
யெழில் பொழில் குயில் பயில் தருமபுரம்பதியே. (க)

பொங்குநடைப்புகலில் விடை யாமவரூர்திவெண்
பொடி யணி தடங்கொண் மார்பு பூணநூல்புரள
மங்குலிடைத்தவழு மதி சூடுவராடுவர்
வளங் கிளர் புன லரவம் வைகியசடையர்
சங்குகடற்றிரையா லுதை யுண்டுசெரிந்திரிந்
தொசிந் தசைந் திசைந்து சேரும் வெண்மணற்குவைமேற்
றங்குகதிர்ம்மணிநித் தில மெல்லிருளொல்கநின்
றிலங் கொளிந் நலங் கெழிற் றருமபுரம்பதியே. (உ)

விண்ணுறுமால்வரைபோல் விடை யேறுவராறுசு
டுவர் விரி சுரி யொளிகொள் தோடுநின்றிலங்கக்
கண்ணுற நின்றொளிருங் கதிர் வெண்மணிக்கண்ணியர்
கழிந் தவ ரழிந் திடு முடைதலைகலனாப்
பெண்ணுறநின்றவர்தம் முரு வம்மயன் மால்தொழ
வரி வையைப் பிணைந் திணைந் தணைந்ததும்பிரியார்
தண்ணிதழ்முல்லையொடெண் ணிதழ் மவ்வன்மருங்கலர்
கருங் கழிந் நெருங் குநற் றருமபுரம்பதியே. (ங)

வாருறுமென்முலைநன் னுத லேழையொ டாடுவர்
வளங் கிளர் விளங்கு திங்கள் வைகியசடையர்
காருறநின்றலரும் மலர்க் கொன்றையங்கண்ணியர்
கடு விடை கொடி வெடிகொள் காடுறைபதியர்
பாருறவிண்ணுலகம் பர வப்படுவோரவர்
படு தலை பலி கொளல் பரிபவந்நினையார்
தாருறுநல்லரவம் மலர் துன்னியதாதிர்
தழை பொழின் மழைந் நுழை தருமபுரம்பதியே. (ச)

நேருமவர்க்குணரப் புகி லில்லைநெடுஞ்சடைக்
 கடும் புனல் படர்ந் திடப் படுவதோர்நிலையர்
பேருமவர்க்கெனையா யிர முன்னைப்பிறப்பிறப்
 பிலா தவ ருடற்ற டாத பெற்றியராரறிவா
ராரமவர்க்கழலவா யதோர் நாகமழைக்குற
 வெழுஉங் கொளு மலர் கொள்பொன் னிதழிநல்லலங்கல்
தாரமவர்க்கிமவான் மக ளூர்வதுபோர்விடை
 கடி படு செடி பொழிற றருமபுரம்பதியே. (ரு)

கூழையங்கோதைகுலா யவ டம்பிணைபுல்கமல்
 குமென் முலைப் பொறி கொள்பொற் கொடியிடைதுவர்வாய்
மாழையொண்கண்மடவா ளையோர் பாகமகிழ்ந்தவர்
 வலம் மலி படை விடை கொடிகொடும்மழுவாள்
யாழையுமெள்கிடவே ழிசை வண்டுமுரன்றினந்
 துவன் றிமென் சிறைஉ கறை யுறந்நறவ்விரியுநற்
றாழையுஞாழலுநீ டிய கானலிலள்ளலி
 சைபுள் ளினந் துயில் பயில் தருமபுரம்பதியே. (சு)

தேமருவார்குழ லென்ன நடைப்பெடைமான்விழித்
 திருந் திழை பொருந்து மேனி செங்கதிர்விரியத்
தூமருசெஞ்சடையிற் றுதை வெணமதிதுன்றுகொன்றை
 தொல் புனல் சிரங் கரந் துரிந்ததோலுடையர்
காமருதண்கழிநீ டிய கானல்கண்டகங்
 கடல் லடை கழி யிழிய முண்டகத்தயலே
தாமரைசேர்குவளைப் படு கிற்கழுநீர்மலர்
 வெறி கமழ் செறி வயற் றருமபுரம்பதியே. (எ)

தூவணநீறகலம் பொலி யவ்வினைபுல்கமல்
 குமென் மலர் வரை புரை திரள்புயமமணிவர்
கோவணமும்முழையின் னத ளும்முடை யாடையர்
 கொலை மலி படையோர் சூல மேந்தியகுழகர்
பாவணமாவலறத் தலை பத்துடையவ்வரக்க
 னவ் வலி யோர் கவ்வைசெய் தருள்புரிதலைவர்
தாவணவேறுடையெம் மடி கட்கிடம்வன்றடங்
 கடல் லிடுந் தடங் கரைத் தருமபுரம்பதியே. (அ)

வார்மலிமென்முலைமா தொரு பாகமதாகுவர்
 வளங் கிளர் மதி யரவம் வைகியசடையர்
கூர்மலிசூலமும்வெண் மழு வும்மவர்வெல்படை
 குனி சிலை தனி மலைய தேந்தியகுழகர்
ஆர்மலியாழிகொள்செல் வனு மலவிகொடாமரைம்
 மிசை யவ னடிம் முடி யளவுதாமறிவார்
தார்மலிகொன்றையலங் கலு கந்தவர்தங்கிடந்
 தடங் கடல் லிடுந் திரைத் தருமபுரம்பதியே. (கூ)

புத்தர்கடத்துவர்மெய்த் துறி புல்கியகையர்பொய்
மொழிந் தழிவில் பெற்றி யுற்ற கற்றவர்புலவோர்
பத்தர்களத்தவமெய்ப் பய ஞகவுகந்தவர்
நிகழ்ந் தவர் சவந் தவர் சுடலைப்பொடியணிவர்
முத்தனவெண்ணகையொண் மலை மாதுமைபொன்னணி
புணர் முலை யிணை துணை யணைவதும்பிரியார்
தத்தருவித்திரளுந் திய மால்கடலோதம்வந்
தடர்ந் திடுந் தடம் பொழிற் றருமபுரம்பதியே. (கo)

பொன்னெடுகன்மணிமா ளிகை சூழவிழவம்மலி
பொரு புனல் திரு வமர் புகலியென்றுலகிற்
றன்னெடுநேர்பிறவில் பதி ஞானசம்பந்தனசொ
துசெந் தமிழ்த் தடங் கடற் றருமபுரம்பதியைப்
பின்னெடுவார்சடையிற் பிறை யும்மரவும்முடை
யவன் பிணை துணை கழல்கள் பேணுதலுரியா
ரின்னெடுநல்லுலகெய் துவ ரெய்தியபோகமு
முறு வர்க ளிடர் பிணி துயரணைவிலரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - **யாழ்மூரிநாதர்**, தேவியார் - **சதாமதுராம்பிகையம்மை.**

---

வண்புகலி வேதியனுர் மாதர்மடப் பிடியெடுத்து வனப்பிற் பாடிப்
பண்பயிலுந் திருக்கடைக்காப் புச்சாத்த வணங்குபெரும் பாண ஞர்தா
நண்புடையாழ்க் கருவியினின் முன்புபோற் கைக்கொண்டு நடத்தப் புக்
கெண்பெருகு மப்பதிகத் திசைநரம்பி லிடவடங்கிற் றில்லை யன்றே.[கார்க்

(இ-ள்.) வளம்பொருந்திய சீகாழிப்பதியில் அவதரித்தருளிய திருஞான சம்பந்தப்பிள்ளையார் "மாதர்மடப்பிடி" என்று முதலில் தொடங்கிச் சிறப்போடு பாடியருளி இசைநிறைந்த திருக்கடைக்காப்பை யருளிச்செய்ய, திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனுர் வந்து தமக்குப் பயிற்சியாகிய யாழில் முன்போ லமைத்துப் பாடத்தொடங்கியவர்க்குப் பெருமைபொருந்திய அத் திருப்பதிகத்தின் இசை யானது யாழ் நரம்பி லமைத்துப்பாட அடங்கவில்லை.—எ-று.

தாம் அன்று ஏ அசைநிலை. (சசஅ)

அப்பொழுது திருநீல கண்டவிசைப் பெரும்பாண ரதனை விட்டு
மெய்ப்பயமும் பரிவுமுறப் பிள்ளையார் கழலிணைவீழ்ந் தெழுந்து நோக்கி
யிப்பெரியோ ரருள்செய்த திருப்பதிகத் திசையாழி லேற்பே னென்னச்
செப்பியதிக் கருவியைநான் றொடுதலினன் றேயென்று தெளிந்து செய்
[வார்.

(இ-ள்.) அப்பொழுது இசையிலக்கணமுணர்ந்த திருநீலகண்டப்பெரும் பாணநாயனுர் அந்த யாழைப் பூமியில் வைத்து உடம்பில் அச்சமும் அன்பும் பொருந்தத் திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவடிகளில் வீழ்ந்து வணங்கி யெழுந்து அவரைப் பார்த்து இந்தப் பெரியவர் அருளிச்செய்த திருப்பதிகத்தின்

இசையை யாழிலமைத்துப் பாடுவேனென்று யான் முன்பு கூறியது இவ் வியாழை யான் கையில் தீண்டுதலினாலன்றோ வென்று தம்முள் ஆராய்ந்து இவ்வாறு செய்வாராயினார்.—எ-று. (சசகூ)

வீக்குநரம் புடையாழி னால்விளைந்த திதுவென்றங் கதனைப் போக்க
வோக்குதலுந் தடுத்தருளி யையரோ யுற்றவிசை யளவி னானி
ராக்கியவிக் கருவியினைத் தாருமென வாங்கிக்கொண் டவனி செய்த
பாக்கியத்தின் மெய்வடிவாம் பாலரு வாயர்பணித் தருளு கின்றார்.

(இ-ள்.) இக்குற்றமானது,பிணித்த நரம்பினையுடைய யாழைக் கையிற்பிடித்ததனால் விளைந்ததென்று,அந்தயாழை முரிக்கக்கருதிமேல் ஓங்குதலும், உலகத்தார் செய்த பாக்கியத்தின் உண்மைவடிவாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அதனைத் தடுத்தருளி, ஐயரோ! பொருந்திய இசையினளவாக நீர் செய்த இந்த யாழைக் கொடுமென்று அதனைத் தமது திருக்கரத்தில் வாங்கிக்கொண்டு அவரோடு கூறியருள்கின்றார்.—எ-று. (சடுய)

ஐயர்நீர் யாழிதனை முரிக்குமதெ னாளுடையா ளுடனே கூடச்
செய்யசடை யாரளித்த திருவருளின் பெருமையெலாந்தெரிய நம்பா
லெய்தியவிக் கருவியினி லளவுபடு மோநந்த மியல்புக் கேற்ப
வையகத்தோ ரறிவுறவிக் கருவியள வையினியற்றல் வழக்கே யென்றார்.

(இ-ள்.) ஐயரோ! நீர் இந்த யாழை முரிப்பது என்னகாரணம்; உமாதேவியாரோடு கூட வெழுந்தருளிச் சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமான் அளித்தருளிய திருவருளின் பெருமையெல்லாம் உணர, நம்மிடத்துப் பொருந்திய இந்த யாழில் அளவுபடுமோ? (அளவுபடாது; ஆகையால்) நமது தகுதிக்குப் பொருந்த உலகத்திலுள்ளோ ரறிய இந்த யாழ்க்கருவியி னளவிற்குப் பாடுதல் முறைமையேயென்று அருளிச்செய்தார்.—எ-று. (சடுக)

சிந்தையா லளவுபடா விசைப்பெருமை செயலளவி லெய்து மோ
நீ, ரிந்தயா ழினைக்கொண்டே யிறைவர்திருப் பதிகவிசை யிதனி லெய்
த, வந்தவா றேபாடி வாசிப்பீ ரெனக்கொடுப்பப் புகலி மன்னர், தந்த
யா ழினைத்தொழுது கைக்கொண்டு பெரும்பாணர் தலைமேற் கொண்டார்.

(இ-ள்.) மனத்தினால் அளவிடப்படாத இசையின் பெருமையானது செய்கையினால் அளவிடப்படுமோ? (அளவிடப்படாதே.) நீர் இந்த யாழைக்கைக்கொண்டு சிவபெருமானைக்குறித்துப் பாடுகின்ற திருப்பதிகத்தி னிசையை இந்த யாழிற் பொருந்த இயன்றவளவு திருப்பதிகத்தி லமைத்துப் பாடி வாசிப்பீரென்று கொடுத்தருள, சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் கொடுத்தருளிய யாழைத் திருநீலகண்டப்பெரும்பாணநாயனார் தொழுதுவாங்கிச் சிரமேற் சூடிக்கொண்டார்.எ-று. (சடுஉ)

அணைவுறுமக் கிளைஞருடன் பெரும்பாண ராளுடைய பிள்ளை யார்தந்
துணைமலர்ச்சே வடிபணிந்து துதித்தருளத் தோணிபுரத் தோன்ற லாரு
மிணையில்பெருஞ் சிறப்பருளித் தொண்டருட னப்பதியி லினிது மேவிப்
பணைநெடுங்கை மதயானை யுரித்தவர்தம் பதிபிறவும் பணியச் செல்வார்.

(இ-ள்.) தம்மை யடைந்த அச்சுற்றத்தாரோடு திருநீலகண்டப்பெரும்பாணநாயனார் திருஞானசம்பந்தப்பிள்ளையாரது தாமரை மலர்போன்ற இரண்டு திரு

வடிகளைவணங்கித் துதித்தருள, சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரும் அவருக்கு ஒப்பற்ற பெருஞ்சிறப்பினைச் செய்து அடியார் திருக்கூட்டத்தோடும் அத்திருத்தருமபுரத்தில் இனிமையோடு எழுந்தருளி, பருத்து நீண்ட துதிக்கையினையுடைய மதம்பொருந்திய கயாசுரனென்னும் யானையையுரித்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் மற்றத்திருப்பதிகளையும் வணங்கும்படிச்செல்கின்றவராயினார்.—எ-று. (௪௰௧)

பங்கயப்பா சடைத்தடஞ்சூழ் பழனநாட் டகன்பதிகள் பலவு நண்ணி, மங்கையொரு பாகத்தா மகிழ்கோயி லெனைப்பலவும் வணங்கிப் போற்றித், தங்கிசையாழ்ப் பெரும்பாண ருடன்மறையோர் தலைவனார் சென்று சார்ந்தார், செங்கைமான் மழுவேந்துஞ் சினவிடையா ரமர்ந்தருளுந் திருநள் ளாறு.

(இ-ள்.) பசிய இலைகள்பொருந்திய தாமரைத்தடாகங்கள்சூழ்ந்த வயல்களையுடையசோழநாட்டிலுள்ள விசாலமாகிய பலதிருப்பதிகளையும் அடைந்து, உமாதேவியாரை வாகபாகத்திலுடைய சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளும் திருக்கோயில்கள் வேறு பலவற்றையும் வணங்கித் துதித்து, சிவந்த திருக்கரத்தில் மானையும் மழுவையும் ஏந்தியருளிய கோபம்பொருந்திய இடபவாகனத்தையுடைய சிவபெருமான் எழுந்தருளும் திருநள்ளாறென்னுந் திருப்பதியைப் பொருந்திய இசையினையுடைய யாழையேந்திய திருநீலகண்டப்பெரும்பாண நாயனாரோடு வேதியர் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் சென்று சேர்ந்தருளினார்.—எ-று. ()

நள்ளாற்றி லெழுந்தருள நம்பர்திருத் தொண்டர்குழா நயந்துசென்று, கொள்ளாற்றி லெதிர்கொண்டு குலவியுடன் சூழ்ந்தணையக் குறுகிக் கங்கைத், தெள்ளாற்று வேணியர்தந் திருவளர்கோ புரமிறைஞ்சிச் செல்வக் கோயி, லுள்ளாற்ற வலங்கொண்டு திருமுன்பு தாழ்ந்தெழுந்தா ருணர்வின் மிக்கார்.

(இ-ள்.) திருநள்ளாறென்னுந் திருப்பதியி லெழுந்தருளவும், சிவபெருமானது அடியார் திருக்கூட்டங்கள் விரும்பிச்சென்று எதிர்கொள்ளவேண்டிய முறைமைப்படியே எதிர்கொண்டு மகிழ்ந்தடைந்து தம்முடன் சூழ்ந்துவர, மெய்யுணர்விற் சிறந்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் அங்கு எழுந்தருளி, தெளிவாகிய கங்கைநதியை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானது அழகுவளர்கின்ற திருக்கோபுரத்தைவணங்கித் திருவருட் செல்வநிறைந்த திருக்கோயிலினுள் சிறப்பாகப் பிரதக்ஷணஞ்செய்துசந்நிதியில்நின்று வணங்கி யெழுந்தருளினார்.—எ-று.

உருகியவன் புறுகாத லுள்ளுருகி நனையீரம் பெற்றாற் போல
மருவுதிரு மேனியெலா முகிழ்த்தெழுந்த மயிர்ப்புளகம் வளர்க்குநீரா
யருவிசொரி திருநயனத் தானந்த வெள்ளமிழிக் தலைய நின்று
பொருவில்பதி கம்போக மார்த்தபூண் முலையாளென் றெடுத்துப்போற்றி.

(இ-ள்.) நெக்குருகுதற்குக் காரணமாகிய அன்புபொருந்திய பெருவிருப்பத்தினால் உள்ளமுருகி நனைக்கும் ஈரத்தைத் தாம்பெற்றாற்போலப் பொருந்திய திருமேனி முழுவதும் அரும்பியெழுந்த உரோமாஞ்சிதமென்னும் (பயிரை) வளர்க்கும் நீராகி அருவிபோலச் சிந்துகின்ற திருக்கண்களினின்றும் ஆனந்தபாஷ்பம்

பெருகி யொழுகத் திருமுன்னின்று ஒப்பற்ற திருப்பதிகத்தை "போகமார்த்த பூண்முலையாள்" என்று முதலெடுத்துத் துதித்து.—எ-று.

இதுமுதல் ஐந்துபாடலுங் குளகம். (சுருகு)

---

**திருநள்ளாறு - பண் - பழந்தக்கராகம்.**

திருச்சிற்றம்பலம்.

போகமார்த்தபூண்முலையாடன்னோடும்பொன்னகலம்
பாகமார்த்தபைங்கண்வெள்ளேற்றண்ணல்பரமேட்டி
யாகமார்த்ததோலுடையன்கோவணவாடையின்மே
னாகமார்த்தநம்பெருமான்மேயதுநள்ளாறே.

தண்புனலும்வெண்பிறையுந்தாங்கியதாழ்சடைய
னண்புநல்லார்மல்குகாழிஞானசம்பந்தனல்ல
பண்புநள்ளாறேத்தும்பாடல்பத்துமிவைவல்லா
ருண்புநீங்கிவானவரோடுலகிலுறைவாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - **தேர்ப்பாரண்ணியேசுரர்;**

தேவியார் - **போகமார்த்த பூண்முலையம்மை.**

யாணரம்பி லர்ரவிய விசைகூடப் பாடியே யெண்ணில் கற்பச்
சேணளவு படவோங்குந் திருக்கடைக்காப் புச்சாற்றிச் செங்க ணாகப்
பூணகலத் தவர்பாதம் போற்றிசைத்துப் புறத்தணைந்து புவன மேத்தும்
பாணனார் யாழிலிடப் பாலறா வாயரருள் பணித்த போது.

(இ-ள்.) (திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனாரது) யாழின் நரம்பிற்கிசைய இயற்றமிழும் இசைத்தமிழும் பொருந்தப் பாடி, அளவற்ற கற்பகாலவரையும் விண்ணுலகமளவும் அழியாது நிலைபெற விளங்கும் திருக்கடைக்காப்பினைச் சாத்தியருளி, சிவந்த கண்ணையுடைய சர்ப்பாபரணத்தைத்திருமார்பி லணிந்தருளிய சிவபெருமானது திருவடிகளைத் துதித்துப் புறத்தில் எழுந்தருளி, உலகத்தார் துதிக்கும் திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனார் அத்திருப்பதிகத்தை யாழிலிட்டு வாசிக்கும்படி திருஞானசம்பந்தப்பிள்ளையார் கட்டளை யிட்டபொழுது.—எ-று.

யாழ் + நரம்பு - என்பது, யாணரம்பு - என்றாயிற்று ; இதனை,

"ஐம்மூன்றதாமுடல்வன்மைபின்வந்திடிலாறுடைந்தா
மெய்ம்மாண்பதாநவ்வரின்முன்னழிந்துபின்மிக்கணவ்வாம்
மம்மேல்வரினிருமூன்றுமுடன்மற்றியல்புசந்தி
தம்மாசகலங்கிடப்பின்களாமென்பதாழ்குழலே" எனவரும் வீரசோழியத்தா னுணர்க. (சுருஎ)

பிள்ளையார் திருத்தாளங் கொடுபாடப் பின்புபெரும் பாண னார்தாந்
தெள்ளமுத வின்னிசையின் நேம்பொழிதந் திரியாழைச் சிறக்க வீக்கிக்

கொள்ளவிடும் பொழுதின்கட் குவலயத்தோர் களிகூரக் குலவு சண்பை
வள்ளலார் திருவுள்ள மகிழ்ந்துதிருத் தொண்டருடன் மருவுங் காலை.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருப்பொற்றாளத்தைத் திருக்கரத்திற்றாங்கி அத்திருப்பதிகத்தைப் பாடத்தொடங்கப் பின்பு திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார் தெள்ளிய அமுதம்போன்ற இனிய இசைத்தேன் பொழிகின்ற நரம்பினையுடைய யாழைப்பண்ணிற்கு அமையக்கட்டி இசைபொருந்த அமைத்துத்திருப்பதிகத்தைப்பாடத் தொடங்குகையில் உலகத்தார் களிப்படைய விளங்குகின்ற சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவுள்ளமகிழ்ந்து திருத்தொண்டர்களோடு எழுந்தருளி யிருக்கும்பொழுது.—எ-று. (௩௫௮)

மன்னுதிரு நள்ளாற்று மருந்தைவணங் கிப்போந்து வாச நன்னீர்ப்
பொன்னிவளந் தருநாட்டுப் புறம்பணைசூழ் திருப்பதிகள்பலவும்போற்றிச்
செந்நெல்வயற் செங்கமல முகமலருந் திருச்சாத்த மங்கை மூதூர்
தன்னிலெழுந் தருளினார் சைவசிகா மணியார்மெய்த் தவத்தோர் சூழ.

(இ-ள்.) நிலைபெற்ற திருநள்ளாற்றில் எழுந்தருளிய அமுதம் போல்பவராகிய சிவபெருமானைப்பணிந்து அவ்விடத்தினின்று நீங்கி மணம்பொருந்திய நல்ல நீரையுடைய காவிரிநதியானது பல வளங்களையுந் தருகின்ற சோழநாட்டில் வயல்கள்சூழ்ந்த பல திருப்பதிகளையுந் துதித்து, செந்நெற்பயிர்கள் பொருந்திய வயல்களில் செந்தாமரை மலர்கள் மலர்கின்ற பழமைபொருந்திய திருச்சாத்த மங்கையென்னுந் திருப்பதியில் சைவசிகாமணியாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் உண்மையாகிய தவத்தினையுடைய அடியார் திருக்கூட்டங்கள் தம்மைச் சூழும்படி எழுந்தருளினார்.—எ-று. (௩௫௯)

நிறைசெல்வத் திருச்சாத்த மங்கையினி னீலநக்கர் தாமுஞ் சைவ
மறையவனா ரெழுந்தருளும் படிகேட்டு வாழ்ந்துவழி விளக்கி யெங்குந்
துறைமலிதோ ரணங்கதலி கமுகுநிறை குடந்தூப தீபமாக்கி [சார்ந்தார்.
முறைமையில்வந் தெதிர்கொள்ள வுடனணைந்து முதல்வனார் கோயில்

(இ-ள்.) பலவகைச் செல்வங்களும் நிறைந்த திருச்சாத்த மங்கையென்னுந் திருப்பதியில் எழுந்தருளியிருக்கின்ற திருநீலநக்கநாயனாரும் சைவவேதியராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் எழுந்தருளுந் தன்மையைக்கேட்டுச் சந்தோஷித்து, பிள்ளையாரெழுந்தருளும் வழியைச் சுத்தஞ்செய்து எவ்விடங்களிலும் இடையிடையே நெருங்கிய தோரணங்களையும், வாழைமரங்களையும், கமுகமரங்களையும் பூரணகும்பங்களையும், தூபதீபங்களையும்வைத்து முறைமைப்படிவந்து எதிர்கொள்ள அவரோடு எழுந்தருளி, முதற்பெருங்கடவுளாகிய அயவந்தீசரது திருக்கோயிலை யடைந்தருளினார்.—எ-று. (௩௬௦)

அயவந்தி யமர்ந்தருளு மங்கணர்தங் கோயின்மருங் கணைந்துவானோ [கர்
ருயவந்தித் தெழுமுன்றில் புடைவலங்கொண் டுட்புக்கா ரொழுகுஞ்செக்
மயவந்தி மதிச்சடையார் முன்றாழ்ந்து பாதவமிவ் வைய மெல்லாஞ்
செயவந்த வந்தணனார் செங்கைமேற் குவித்தெழுந்து திருமுன் னின்றார்.

(இ-ள்.) அயவந்தி என்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளும் அருட்கண்ணராகிய சிவபெருமானது திருக்கோயிலில் சென்று தேவர்கள் சிவஞானப்பேருவா

ழ்வடையும்படித் துதித்தெழாநின்ற திருமுற்றத்தின் புறத்தைப் பிரதக்ஷணஞ் செய்து உள்ளேபுகுந்து,(அழகு) ஒழுகுகின்ற செவ்வானம்போலும் இளம்பிறையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானது திருமுன்புவணங்கி இவ்வுலகத்தாரனைவரும் மகத்தாகிய தவத்தைச்செய்த காரணத்தினால் அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிவந்த திருக்கரங்களைச் சிரசின்மேற்குவித்து வணங்கியெழுந்து திருமுன்னின்றருளினார்.—எ-று. (௪௬௧)

போற்றிசைக்கும் பாடலினாற் பொங்கியெழு மாதரவு பொழிந்துவிம்மி
யேற்றின்மிசை யிருப்பவர்தம் மெதிர்நின்று திளைத்துப்போந் தெல்லையி
னீற்றுநெறி மறையவர்தா நீலநக்கர் மனையிலெழுந் தருளி யன்பா [ல்லா
லாற்றும்விருந் தவரமைப்ப வன்பருட னின்புற்றங் கமுது செய்தார்.

(இ-ள்.) அளவிடப்படாத சைவசமயத்தைவளர்க்கும் திருஞானசம்பந்தப்பிள்ளையார் போற்றுதல்செய்யுந்திருப்பதிகத்தினால் அதிகரித்தெழுகின்ற ஆனந்தக்கண்ணீர் சொரிந்து விம்மி, இடபவாகனத்தின்மேல் வீற்றிருந்தருளும் சிவபெருமான் திருமுன்னின்று பேரானந்தத்தில்மூழ்கி அங்குநின்றுஞ் சென்றருளி, திருநீலநக்கநாயனாரது திருமாளிகைக்கு எழுந்தருளி,அவர் அன்போடு விருந்துசெய்விக்க அடியார் திருக்கூட்டத்தோடு விரும்பி அங்குத் திருவமுது செய்தருளினார். ()

நீடுதிரு நீலநக்கர் நெடுமனையில் விருந்தமுது செய்து நீர்மைப்
பாடும்யாழ்ப் பெரும்பாண ருந்தங்க வங்கிரவு பள்ளி மேவி
யாடுமவ ரயவந்தி பணிவதனுக் கன்பருட னணைந்து சென்று
நாடியநண் புடைநீல நக்கடிக ளுடனாதர் கழலிற் றாழ்ந்து.

(இ-ள்.) சிறந்த திருநீலநக்கநாயனாருடைய பெருமைபொருந்திய திருமாளிகையில் திருவமுதுசெய்து, பண்ணின்அமைவோடு பாடுகின்ற திருநீலகண்டயாழ்ப்பாணநாயனாரும் அத்திருமாளிகையில் வசிக்க அங்குத் தாமும் இராத்திரி நித்திரைசெய்து, திருநடனமூர்த்தியாகிய சிவபெருமான் எழுந்தருளும் அயவந்தியென்னுந் திருக்கோயிலைவணங்குவதற்கு அடியார்திருகூட்டத்தோடும் எழுந்தருளி, விரும்பத்தக்க நண்பினையுடைய திருநீலநக்கநாயனாரோடு அயவந்திநாதரது திருவடிகளில் வணங்கி.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௪௬௩)

கோதிலா வாரமுதைக் கோமளக்கொம் புடன்கூடக் கும்பிட் டேத்தி
யாதியா மறைப்பொருளா லருந்தமிழின் றிருப்பதிக மருளிச் செய்வார்
நீதியாய் நிகழ்கின்ற நீலநக்கர் தம்பெருஞ்சீர் நிகழ வைத்துப்
பூதிசா தனர்பரவும் புனிதவிய லிசைப்பதிகம் போற்றி செய்தார்.

(இ-ள்.) குற்றமற்ற அரிய அமுதம்போலும் அயவந்தீசரை அழகிய பூங்கொம்புபோன்ற உமாதேவியாரோடு வணங்கித் துதித்து முதன்மையாகிய வேதத்தின் மெய்ப்பொருளோடு அரிய தமிழ்த்திருப்பதிகத்தை அருளிச்செய்கின்றவராய்ச் சைவமார்க்கத்தில் ஒழுகுகின்ற திருநீலநக்கநாயனாருடைய சிறந்தகீர்த்தியைத் (திருக்கடைக்காப்பில்) விளங்கவைத்து,விபூதிருத்திராக்கமென்னுஞ்சைவசாதனத்தையணிந்த மெய்யடியார்களால் துதிக்கத்தக்க பரிசுத்தமான இயலமைந்த இசையினையுடைய திருப்பதிகத்தை யருளிச்செய்து துதித்தார்.—எ-று. ()

திருச்சாத்தமங்கை - பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

திருமலர்க்கொன்றைமாலைதிளைக்குமதிசென்னிவைத்தீ
ரிருமலர்க்கண்ணிதன்னோடுடனாவதுமேற்பதொன்றே
பெருமலர்ச்சோலைமேகமுரிஞ்சும்பெருஞ்சாத்தமங்கை
யருமலராதிமூர்த்தியயவந்தியமர்ந்தவனே.

மறையினார்மல்குகாழித்தமிழ்ஞானசம்பந்தன்மன்னு
நிறையினார்நீலநக்கன்னெடுமாநகரென்றுதொண்ட
ரறையுமூர்சாத்தமங்கையயவந்திமேலாய்ந்தபத்து
முறைமையாலேத்தவல்லாரிமையோரிலுமுந்துவரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - அயவந்தீசர், தேவியார் - இருமலர்க்கண்ணம்பிகையம்மை.

---

பரவியகாதலிற்பணிந்து பாலரு வாயர்புறத் தணைந்து பண்பு
விரவியநண் புடையடிகள் விருப்புறுகா தலிற்றங்கி மேவுநாளி
லரவணிந்தார் பதிபிறவும் பணியவெழு மாதரவா லணைந்து செல்வா
ருரவுமனக் கருத்தொன்று முள்ளமுடை யவர்க்குவிடை யுவந்து நல்கி.

(இ-ள்.) சிவஞானப்பால்மணங்கமழுந் திருவாயினையுடைய திருஞான சம்பந்தப்பிள்ளையார் மிக்க அன்புடன்வணங்கித் திருக்கோயிலின் புறத்திற்சென்று, நற்குணமமைந்த நண்பினையுடைய திருநீலநக்கநாயனார்விரும்பத்தக்க அன்பினால் அங்குத்தங்கி எழுந்தருளியிருக்கும் நாள்களில், சர்ப்பாபரணத்தை யணிந்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் மற்றத்திருப்பதிகளையும் வணங்கும்பொருட்டு அதிகரித்தெழுகின்ற அன்பினால் அங்குநின்று மெழுந்தருளுகின்றவர் உணர்வமைந்த மனக்கருத்தொன்றிய திருவுள்ளத்தையுடைய திருநீலநக்கநாயனாருக்கு மகிழ்ந்து விடைகொடுத்தருளி.—எ-று.

இதுமுதல் இரண்டுபாடலுங் குளகம். (சகூடு)

வேறு.

மற்றவர்தம்பெருங்கேண்மைமகிழ்ந்துகொண்டு மாலயனுக்கரியபிரான்மருவுதானம், பற்பலவுஞ்சென்றுபணிந்தேத்திப்பாடிப் பரமர்திருத்தொண்டர்குழாம்பாங்கினெய்தக், கற்றவர்வாழ்கடனாகைக்காரோணத்துக்கண்ணுதலைக்கைதொழுதுகலந்தவோசைச், சொற்றமிழ்மாலைகள்பாடிச்சிலநாள்வைகித்தொழுதகன்றூர்தோணிபுரத்தோன்றலார்தாம்.

(இ-ள்.) சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அத்திருநீலநக்கநாயனாருடைய மிகுந்த சிநேகத்தை மகிழ்ந்து, திருமால்பிரமனென்னு மிருவராலுங் காண்டற்கரிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளையுஞ் சென்று வணங்கித் துதித்துத் திருப்பதிகம்பாடிச் சிவனடியார் திருக்கூட்டங்கள் தமக்கு அருகிற்சூழ்ந்துவர, (உண்மைநூல்களைக் கசடறக்) கற்றுணர்ந்தபுலவர்கள் வாழ்கின்ற திருக்கடனாகைக்காரோணம் என்னுந் திருப்பதியில் எழுந்தருளிய சிவபெருமானைக் கைகூப்பி வணங்கி இசையமைந்த சொற்களாலாகிய திருப்பதிகங்க

ளை யருளிச்செய்து சிலகாலம் அங்கு வசித்தருளி அத்திருப்பதியைவணங்கி அவ்விடத்தினின்றும் நீங்கி யருளினார்.—எ-று. (சஙசு)

கடனாகைக்காரோணம் என்பது, நாகபட்டினம்.

கழிக்கானன் மருங்கணையுங் கடைநாகை யதுநீங்கிக் கங்கை யாற்றுச்
சுழிக்கானல் வேணியர்தம் பதிபலவும் பரவிப்போய்த் தோகை மார்தம்
விழிக்காவி மலர்பழனக் கீழ்வேளூர் விமலர்கழல் வணங்கி யேத்தி
மொழிக்காதற் றமிழ்மாலை புனைந்தருளி யங்ககன்றார் மூதூர் நின்றும்.

(இ-ள்.) உப்பங்கழியாற்றி னருகிலிருக்கின்ற திருக்கடனாகைக் காரோணமென்னுந் திருப்பதியைநீங்கி, கங்கையாற்றின்சுழிக்கு இடமாயகன்ற நல்லசடைமுடியையுடைய சிவபெருமானது திருப்பதிகள் பலவற்றையும் வணங்கிச்சென்று பெண்களினது கண்களுக்கொப்பாகிய நீலோற்பலங்கள் மலர்கின்ற வயல்கள்சூழ்ந்த திருக்கீழ்வேளூர் என்னுந் திருப்பதியில்வீற்றிருந்தருளும் அக்ஷயலிங்கேசரது திருவடிகளைவணங்கித் துதித்து விரும்பத்தக்க நல்ல சொற்களமைந்த திருப்பதிகம்பாடி யருளி, அப்பழமையாகிய திருப்பதியினின்றும் நீங்கியருளினார்.—எ-று.

அது - பகுதிப்பொருள்விகுதி. (சஙஎ)

அருகணையுந் திருப்பதிக ளானவெலா மங்கணரைப் பணிந்து போற்றிப், பெருகியஞா னம்பெற்ற பிள்ளையா ரெழுந்தருளும் பெருமைகேட்டுத், திருமருவு செங்காட்டங் குடிநின்று சிறுத்தொண்ட ரோடிச் சென்றங், குருகுமனங் களிசிறப்ப வெதிர்கொண்டு தம்பதியுட் கொண்டு புக்கார்.

(இ-ள்.) பக்கங்களிலுள்ள திருப்பதிகள்தோறும் எழுந்தருளிய சிவபெருமானை வணங்கித்துதித்து, சிறந்த சிவஞானத்தைப்பெற்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளும் பெருமையைக்கேட்டு, அஷ்ட ஐசுவரியங்களும் நிறைந்த திருச்செங்காட்டங் குடியென்னுந் திருப்பதியினின்றும் சிறுத்தொண்டநாயனார் அங்கு விரைந்துசென்று (அன்பினால்) உருகுகின்ற மனத்தில் மகிழ்வுண்டாக அவரை எதிர்கொண்டு தமது திருப்பதிக்கு அழைத்துச் சென்றார்.—எ-று. (சஙஅ)

சிறுத்தொண்ட ருடன்கூடச் செங்காட்டங் குடியிலெழுந் தருளிச் சீர்த்தி, நிறுத்தெண்டிக் கினுநிலவுந் தொண்டரவர் நண்பமர்ந்து நீல கண்டம், பொறுத்தண்ட ருயக்கொண்டார் கணபதீச் சரத்தின்கட் போக மெல்லாம், வெறுத்துண்டிப் பிச்சைநுகர் மெய்த்தொண்ட ருடனணைந் தார் வேத வாயர்.

(இ-ள்.) திருநெறித்தமிழ்வேதந் தோன்றுதற் கிடமாகிய திருவாயினையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையார் தம்மை எதிர்கொண்டுவந்த சிறுத்தொண்டநாயனாரோடு திருச்செங்காட்டங் குடியென்னுந் திருப்பதியிலெழுந்தருளி, நிறுத்துகின்ற கீர்த்தியானது எட்டுத்திக்கிலும் விளங்கப்பெற்ற சிறுத்தொண்டநாயனாரது சிநேகத்தைவிரும்பி, திருநீலகண்டத்தைப்பெற்றுத் தேவர்களுய்யும்படி ஆட்கொண்டருளிய சிவபெருமானது கணபதீச்சரமென்னுந் திருக்கோயிலில் மாயாபோகங்களனைத்தையும் வெறுத்துப் பிக்ஷான்னத்தை யுண்டுகளிப்புற்றிருக்கின்ற மெய்யடியார்களோடும் அடைந்தருளினார்.—எ-று.

இருவினை யொப்புவாய்ந்து மலபரிபாகம்பெற்ற சிவஞானிகள் மாயாசம்பந்தமாகிய யான் எனதென்னும் இருவகைப்பற்றையு மொழித்துச் சிவனருளே சிந்தனையாகவுள்ளவராதலில், அவர்கட்குப்பிச்சையேற்றுண்டலால் சிறிதுந்தாழ்வின் றென்பார், 'போகமெல்லாம் வெறுத்துண்டிப் பிச்சைநுகர் மெய்த்தொண்டர்' என்று கூறினர்.

"ஊணெலாமட்டசோறு நம்மதேயுவரிசூழ்ந்த
பாரெலாம்பாயறுன்னற் கோவணம்பரிக்குமாடை
சீரெலாஞ்சிறந்தசாந்தந் தெய்வநீறணிபூண்கண்டி
நீரெலாஞ்சுமந்தவேணி நிருத்தனுட்கொண்டவன்றே."—எனவருந் திருவிளையாடற்புராணத்தா னுணர்க. (௬௬௯)

அங்கணைந்து கோயில்வலங் கொண்டருளி யரவணிந்தா ரடிக்கீழ் வீழ்ந்து, செங்கணரு விகள்பொழியத் திருமுன்பு பணிந்தெழுந்து செங்கை கூபபித், தங்கள்பெருந் தகையாரைச் சிறுத்தொண்டர் தொழவிருந்த தன்மை போற்றிப், பொங்கியெழு மிசைபாடிப் போற்றிசைத்தங் கொருபரிசு புறம்பு போந்தார்.

(இ-ள்.) அத்திருக்கோயிலையடைந்து பிரதக்ஷணஞ்செய்தருளிப் பாம்பை ஆபரணமாகவணிந்த கணபதீசரது திருவடிகளில் வீழ்ந்து சிவந்த திருக்கண்களினின்றும் ஆனந்தக்கண்ணீர் அருவிபோற்சொரியத் திருமுன்பு வணங்கியெழுந்து அழகியதிருக்கரங்களைச் சிரசிற்குவித்துத் தமதுபெருங்கருணைவள்ளலாகிய கணபதீசரைச் சிறுத்தொண்டநாயனர் வணங்க எழுந்தருளிய தன்மையைத் திருப்பதிகத்தில் சிறப்பித்து, அதிகரித்தெழுகின்ற இசையமைந்த திருப்பதிகத்தை அருளிச்செய்து துதித்து அவ்வாலயத்தில் (நீங்குதற்கரிய ஆராமையால்) ஒருவாறு புறத்தில் அடைந்தருளினர்.—எ-று. (௬௭௦)

---

**திருச்செங்காட்டங்குடி - பண் - பஞ்சமம்.**

திருச்சிற்றம்பலம்.

பைங்கோட்டுமலர்ப்புன்னைப்பறவைகாள்பயப்பூரச்
சங்காட்டந்தவிர்த்தென்னைத்தவிராநோய்தந்தானே
செங்காட்டங்குடிமேயசிறுத்தொண்டன்பணிசெய்ய
வெங்காட்டுள்ளனலேந்திவிளையாடுமபெருமானே.

செந்தண்பூமபுனல்பரந்தசெங்காட்டங்குடிமேய
வெந்தநீறணிமார்பன்சிறுத்தொண்டனவன்வேண்ட
வந்தண்பூங்கலிக்காழியடிகளையேயடிபாவுஞ்
சந்தங்கொள்சம்பந்தன்றமிழுரைப்போர்தக்கோரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - **கணபதீசர்**; தேவியார் - **திருக்குழல்நாயகியம்மை.**

---

போந்துமா மாத்திரர்தம் போரேற்றின் றிருமனையிற் புகுந்துசிந்தை
வாய்ந்தமா தவராவர்தா மகிழ்ந்தருள வமர்ந்தருளி மதிலகண் மூன்றுங்
காய்ந்தமால் விடையார்தங் கணபதீச் சரம்பரவு காதல்கூர
வேந்துநூ லணிமார்ப ரின்புற்றங் கன்பருட னிருந்தநாளில்.

(இ-ள்.) பூணூலையணிந்த திருமார்பினையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அவ்வாறு திருக்கோயிலினின்றும் புறத்தில் எழுந்தருளி, மாமாத்திரர் குலச்சிங்கம்போல்பவராகிய சிறுத்தொண்டநாயனாரது திருமாளிகையிற்சென்று, மகத்தாகியதவச்சிந்தையையுடைய சிறுத்தொண்டநாயனார் மகிழ்வடையும்படி அங்கு வசித்தருளி, அசுரர்களது திரிபுரங்களையும் நகைத்தெரித்தருளிய விஷ்ணுவாகிய இடபத்தை வாகனமாகக்கொண்ட சிவபெருமானது கணபதீச்சரமென்னு மாலயத்தைவணங்கும் ஆசையானது அதிகரிக்க இன்பமடைந்து அடியார் திருக்கூட்டத்தோடும் அத்திருப்பதியில் எழுந்தருளியிருந்த காலத்தில்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௬௭௧)

திருமருக னகரின்க ணெழுந்தருளித் திங்களுடன் செங்கட்பாம்பு
மருவுநெடுஞ் சடைமவுலி மாணிக்க வண்ணர்கழல் வணங்கிப்போற்றி
யுருகியவன் புறுகாத லுள்ளலைப்பத் தெள்ளுமிசை யுடனேகூடப் [தாம்.
பெருகுதமிழ்த் தொடைசாத்தி யங்கிருந்தார் பெரும்புகலிப் பிள்ளையார்

(இ-ள்.) பெருமைபொருந்திய சீகாழியில்அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் (அத்திருச்செங்காட்டங் குடியினின்றும்) திருமருகல் என்னுந் திருப்பதியில் எழுந்தருளி, இளம்பிறையோடு சிவந்தகண்களையுடைய பாம்புகளும் (பகையின்றிப்) பொருந்திய நீண்ட சடைமுடியையுடைய ஸ்ரீமாணிக்கவண்ணநாதரது திருவடிகளைவணங்கித் துதித்து அன்பினாலுருகுகின்ற பெருவிருப்பமானது தமது திருவுள்ளத்தை யலைக்கத் தெளிவாகிய இசையோடு சிறந்த திருப்பதிகம் அருளிச்செய்து அங்கு எழுந்தருளியிருந்தார்.—எ-று.

தாம்- அசைநிலை. (௬௭௨)

## வேறு.

அந்நாளி லொருவணிகன் பதிகனாகி யணைவானோர் கன்னியையுமுடனே கொண்டு, பொன்னார்மேருச்சிலையார் கோயின்மாடு புறத்திலொரு மடத்திரவு துயிலும்போது, மின்னார்வெள் ளெயிற்றரவு கவ்வுதலுங் கிளர்ந்த விடவேகங்கடிதுதலை மீக்கொண்டேறத், தன்னுயிர் நீங்குமவன் றன்மைகண்டு சாயலிளங் கன்னிநிலை தளர்ந்துசோர்வாள்.

(இ-ள்.) அக்காலத்தில் வழிப்போக்கனாகவருகின்ற ஒருவைசியன் ஒருபெண்ணைத் தன்னுடன் அழைத்துக்கொண்டு, பொன்மயமாகிய மேருமலையை வில்லாகவுடைய சிவபெருமானது திருக்கோயிலின்பக்கத்தில் ஒருதிருமடத்தில் அன்றிரவு நித்திரைசெய்யும்பொழுது ஒளிபொருந்திய வெள்ளிய பற்களையுடைய ஒரு பாம்புகடிக்கவும், அதிகரித்த விடவேகமானது விரைந்து தலைக்கொண்டு செல்ல, அதனால் தன் உயிர்விட்டுநீங்கும் அவ்வைசியனது தன்மையைப்பார்த்து மயில்போலுஞ்சாயலையுடைய அவ்விளம்பெண்ணானவள் தன்உறுதிநிலைதளர்ந்து வருந்துவாளாயினாள்.—எ-று. (௬௭௩)

வாளரவு தீண்டவுந்தான் றீண்ட கில்லாண் மறுமாற்ற மற்றொருவர் கொடுப்பா ரின்றி, யாளரியே றனையானை யணுக வீழ்ந்தே யஞ்சந்தமலர்க் கொடிபோல்வா ளரற்றும் போது, கோளுருமும் புள்ளரசு மனையாசொல்லாக் கொள்கையினா லூந்தீர்க்கக் குறையா தாக, நீளிரவு புலர்காலை மாலை வாச நெறிகுழலா ணெடிதயர்ந்து புலம்புகின்றாள்.

(இ-ள்.) ஒளிபொருந்திய பாம்புகடிக்கவும், அசைகின்ற பூங்கொம்புபோன்ற அப்பெண்ணானவள் தான் அவனைத் தீண்டாதவளாகி மறுவார்த்தைசொல்பவர் ஒருவருமில்லாமல், ஆண்சிங்கம்போன்ற அவனுக்குச் சமீபத்தில் வீழ்ந்து அழுகின்ற சமையத்தில் வலிய இடியையும் கருடனையுமொத்த மாந்திரிகர்கள் மணிமந்திராவுஷத முதலிய எல்லாவுபாயங்களாலும் தீர்க்க அவ்விடம் நீங்காமல், மிக்க இரவுநீங்கும் விடியற்காலத்தில் வாசனைபொருந்தியமாலையையணிந்த நெறித்த கூந்தலையுடைய அப்பெண்ணானவள் மிகவும் வருந்திப் புலம்புவளாயினள். ()

அன்னையையு மத்தனையும் பிரிந்துநின்னை யடைவாக வுடன்போந்தே னரவால்வாடி, யென்னையுயிர் விட்டகன்றா யானென்செய்கே னிவ்விடுக்கண் டீர்க்கின்றார் யாருமில்லை, மன்னியசீர் வணிகர்குல மணியே யானும் வாழேனென் றென்றயர்வாண் மதியினாலே,சென்னியிளம் பிறையணிவார் கோயில்வாயிற் றிசைநோக்கித் தொழுதழுதாள் செயலொன் றில்லாள்.

(இ-ள்.) (அருமையாகப்பெற்ற) தாய்தந்தையர்களைப் பிரிந்து உன்னையே சார்பாகக்கருதி உன்னுடன்வந்தேன்; நீயோ? பாம்பினால் கடிக்கப்பட்டு இறந்து, என்னை உயிரோடுவிட்டு நீங்கினாய்; இதற்கு நான் என்னசெய்வேன்; இத்துன்பத்தை நீக்குகின்றவர் இங்கு ஒருவருமில்லை; நிலைபெற்ற சிறப்பினையுடைய வைசியர்குலத்திற்குச் சிரோரத்தினம்போன்றவனே! யானும் இங்கு உயிர்கொண்டு வாழேன்! வாழேன்!! என்று பல்முறைகூறி வருந்துகின்ற அக்கன்னிகையானவள் தனது புத்தியினாலே, சடைமுடியில் இளம்பிறையணிந்த சிவபெருமானது திருக்கோயிற்றிருவாயிலின் திசையைநோக்கித் தனக்கோர் செயலில்லாதவளாய் வணங்கியழுதாள்.—எ-று.

திசைநோக்கிக் கைதொழுதாள், என்றும் பாடம். (சஎ௫)

அடியாரா மிமையவர்தங் கூட்டமுய்ய வலைகடல்வாய் நஞ்சுண்ட வமுதேசெங்க, ணெடியானு நான்முகனுங் காணக்கோல நீலவிட்வரவணிந்த நிமலாவெந்து, பொடியான காமனையி ரதிவேண்டப் புரிந்தளித்த புண்ணியனே பொங்கர்வாசக், கடியாரு மலர்ச்சோலை மருங்குசூழுங் கவின்மருகற் பெருமானே காவாயென்றும.

(இ-ள்.) உமது அடியார்களாகிய (விஷ்ணு பிரமன்முதலிய) தேவர்கூட்டங்கள் பிழைக்கும்பொருட்டு அலைகின்ற திருப்பாற்கடலிற் றோன்றிய ஆலாகலவிஷத்தையுண்டருளிய அமுதம்போன்றவரே! சிவந்த கண்களையுடைய விஷ்ணுவும் பிரமனும் காண்பதற்கரிய அழகிய நீலநிறம்பொருந்திய விடத்தையுடைய பாம்பை ஆபரணமாகவணிந்த. அநாதிமலமுத்தரே! நெற்றிக்கண்ணினால் எரிந்து சாம்பலாகிய. மன்மதனது உயிரை அவன் மனைவியாகிய இரதிதேவியானவள் (தனக்கு மாங்கல்லியபிச்சை தந்தருளவேண்டுமென்று)வேண்டிக்கொள்ள அவ்வாறே கிருபைசெய்து அவனை உயிர்ப்பித்துக் கொடுத்தருளிய புண்ணியசொரூபரே! மரக்கொம்புகளோடு நிறைந்த வாசனைவீசுகின்ற மலர்கள்பொருந்திய சோலைகள் பக்கங்களிற் சூழப்பெற்ற அழகிய திருமருகல் என்னுந்திருப்பதியில் வீற்றிருந்தருளும் எமது ஆண்டவரே! அடியாள்படுகின்ற துன்பத்தைநீக்கிக் காத்தருள்வீராகவென்றும்,—எ-று.

எல்லாத்தேவர்களையுங் கொல்ல வெழுந்த கொடிய ஆலாகலவிடத்தையு ண்டு அவர்களுயிரைக் காத்தருளிய வுமக்கு இச்சிறுவிடத்தையு முண்டு இவனுயி ரைக் காத்தல் அருமையன்றென்பார் 'அடியாரா மிமையவர்தங் கூட்டமுய்ய வ லைகடல்வாய் நஞ்சுண்டவமுதே' என்றும், கருடன்பகைக்கு அஞ்சிச்சரணடைந்த பாம்பையணிந்து "ஏன் கருடாசுகமா" என்று கேட்கத்தக்க பேரருளீந்த வுமக்கு எனது துயரத்தையொழித்துக் கருணைசெய்தல் எளிதேயென்பார், 'நீலவிடவரவ ணிந்த நிமலா' என்றும், இரதிதேவி வேண்ட இறந்த மன்மதனை யெழுப்பிக் கொடுத்ததுபோல என்பொருட்டு இவனை யெழுப்பிக்கொடுத்தல் புண்ணியத்துட் புண்ணியமே யென்பார், 'பொடியான காமனுயிரிரதிவேண்டப் புரிந்தளித்த புண் ணியனே' என்றுங், கூறினர். (சுஎசு)

வந்தடைந்த சிறுமறையோ னுயிர்மேற்சீறி வருங்காலன் பெருங்கா ல வலயம்போலுஞ், செந்தறுகண் வெள்ளெயிற்றுக் கரியகோலஞ் சிதை ந்துருள வுதைத்தருளுஞ் செய்யதாளா, விந்தவிடக் கொடுவேக நீங்குமா றும் யானிடுக்கட் குழிநின்று மேறுமாறு, மந்திமதிக் குழவிவளர் செய் யவேணி யணிமருகற் பெருமானே யருளாயென்றும்.

(இ-ள்.) அடைக்கலமாகவந்தடைந்த பிராமணச் சிறுவராகிய மார்க்கண் டேயரது உயிரைக் கவரும்பொருட்டுக் கோபித்துவந்த இயமனது பெரிய கால சக்கரம்போலும் வெவ்விய கோபக்கண்ணையும், வெள்ளிய வக்கிரதந்தங்களையு மு டைய கரிய உருவமானது பூமியில் அழிந்து உருளும்படி யுதைத்து, அம்மார்க்க ண்டேயரைக் காத்தருளிய சிவந்த திருவடிகளையுடைய பெருமானே! மாலைக்கா லத்திற்றேன்றும் இளம்பிறைவளர்கின்ற சிவந்த சடைமுடியையுடைய அழகிய திருமருகலில் எழுந்தருளிய எமது ஆண்டவரோ! இந்தவிஷத்தின் கொடியவேக மானது இவனைவிட்டு நீங்கும் வகையையும், யான் இத்துன்பமாகிய படுகுழியினி ன்றுங் கரையேறும் வகையையும் எனக்கு அருள்செய்வீராக வென்றும்.—எ-று.

அஞ்சி வந்தடைந்த மார்க்கண்டேயரைப் பிடிக்கவந்த இயமனையுதைத்து அவருயிரைக்காத்தருளிய வுமக்கு, அரவுகடித்து அவ்வியமன்கைப்பட்ட இவ னுயிரை மீட்டுத்தருதல் அரிதன்றென்பார் 'வந்தடைந்த சிறுமறையோனுயிர்மே ற்சீறிவருங்காலன் பெருங்கால வலயம்போலுஞ்- செந்தறுகண் வெள்ளெயிற்றுக்க ரியகோலஞ் சிதைந்துருள வுதைத்தருளுஞ் செய்யதாளா' என்றும், தக்கன் சா பத்திற்கஞ்சிச் சரண்புகுந்த சந்திரனைத் திருமுடியிற்றரித்து அச்சாபந்தொடராவ ண்ணங் காத்தருளியதுபோல, ஈண்டு உமது திருவடியை யடைந்த எம்மையும் இவ் விடவேகத்தினின்றுங் காத்தருளவேண்டுமென்பார் 'அந்திமதிக்குழவிவளர் செய்யவேணி யணிமருகற்பெருமானே" என்றுங் கூறினர். (சுஎஎ)

இத்தன்மை சிவனருளே சிந்தித்தேங்கு மிளங்கொடிபோ லுடங்கு மிடை யேழையேத்து, மத்தன்மை யோசையெழுந் தெங்கள்சண்பை யாண்டகையார் கும்பிடவந் தணைகின்றார்தம், மெய்த்தன்மை விளங்கு திருச் செவியிற்சார மேவுதலுந் திருவுள்ளக் கருணைமேன்மேல், வைத்த ன்ன மெனவயர்வாண் மாடநீடு மாதவத்தோர் சூழவெழுந் தருளிவந்தார்.

(இ-ள்.) இவ்வாறு சிவபெருமான் றிருவருளையே சிந்தித்து வருந்துகின்ற இளங்கொடிபோலத் துவளும் இடையினையுடைய அக்கன்னிகையானவள்

துதிக்கின்ற அத்தன்மையாகிய வோசையெழுந்து சிவபெருமானை வணங்கும்பொருட்டுத் திருக்கோயிலுக்கு எழுந்தருளுஞ் சீகாழித்தலைவராகிய எமது திருஞானசம்பந்தப்பிள்ளையாரது உண்மைத்தன்மைவிளங்கும் திருச்செவியிற்கேட்கவும், அன்னம்போல வருந்தியழுகின்ற அப் பெண்ணினிடத்து திருவுள்ளக் கருணையை மிகவும் வைத்து: சிறந்ததாகிய தவத்தினையுடைய அடியார்கள் சூழ எழுந்தருளி வந்தார்.—எ-று. (சுஎஅ)

சிரபுரத்து மறையவனார் சென்றுநின்று சிவபெருமா னருள்போற்றிச் சிந்தைநைந்து, பரிவுருவா டனைநோக்கிப் பயப்படேனீ பருவரலு நும்பரிசும் பகர்வாயென்னக், கரமலர்க ளுச்சியின்மேற் குவித்துகொண்டு கண்ணருவி சொரிந்திழியக் காழிவேதந், புரவலனார் சேவடிக்கீழ் வீழ்ந்துதாங்கள் போந்ததுவும் புகுந்ததுவும் புகலலுற்றாள்.

(இ-ள்.) சீகாழிப்பதியி லவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அவ்விடத்திற் சென்றுநின்றருளிச் சிவபெருமான் றிருவருளைத் துதித்து மனமுருகி வருத்தப்படுகின்ற அப்பெண்ணைப்பார்த்து நீ சிறிதும் பயப்படாதே ; நீ படுகின்றதுன்பத்தையும்,உனது வரலாற்றையும் சொல்லுவாயாக வென்று கேட்டருளவும், அப்பெண் தாமரைமலர்போன்ற கைகளைச் சிரசின்மேற்குவித்துக் கண்களில் அருவிபோலக் கண்ணீர்சொரிந்து ஒழுகத் திருஞானசம்பந்தப்பிள்ளையாரது சிவந்த திருவடிகளில் வீழ்ந்து வணங்கித் தாங்கள்வந்த சங்கதியையும்,இங்குநிகழ்ந்த சங்கதியையும் சொல்லத்தொடங்கினாள்.—எ-று. (சுஎகூ)

வளம்பொழில்சூழ் வைப்பூர்க்கோன் றாமனெந்தை மருமகன்மற் றிவனவற்கு மகளிர்நல்ல, விளம்பிடியா ரோரெழுவ ரவரின்மூத்தா ளிவனுக்கென் றுரைசெய்தே யேதிலானுக், குளம்பெருகத் தனம்பெற்றுக் கொடுத்தபின்னு மோரொருவ ராகவெனை யொழியவீந்தான், றளர்ந்தழியு மிவனுக்காத் தகவுசெய்தங் கவரைமறைத் திவனையே சார்ந்துபோந்தேன்.

(இ-ள்.) எனது தகப்பன் வளப்பம்பொருந்திய சோலைகள்சூழ்ந்த வைப்பூருக்குத் தலைவனாகிய தாமன் என்பவன்; இவன் அவனுக்கு மருமகன் ; அவனுக்கு இளமைபொருந்திய பெண்யானைபோன்ற நல்லபுத்திரிகள் ஏழுபேர் ; அவர்களில் மூத்தபுத்திரியை இவனுக்கு மணஞ்செய்வதென்று நிச்சயித்து (ப்பின்கொடாமல்) தன் மனமகிழப் பொருள்பெற்றுக்கொண்டு, அயலானுக்குக் கலியாணஞ்செய்து கொடுத்த பின்னும், என்னைநீக்கி ஒவ்வொரு புத்திரிகளாகப் பொருள்வாங்கிக்கொண்டு பிறர்க்குக் கொடுத்தான் ; அதனால் மனந்தளர்ந்து வருந்திய இவனுக்காக நடுவுநிலைமைகருதி, அங்கு எனது தந்தைதாய் முதலியவர்களைவிடுத்து இவனையே துணையாகக் கொண்டுவந்தேன்.—எ-று. (சுஅ0)

மற்றிவனும் வாளரவந் தீண்டமாண்டான் மறிகடலிற் கலங்கவிழ்த்தார் போலநின்றேன், சுற்றத்தா ரெனவந்து தோன்றியென்பாற் றுயரொலா நீங்கவருள் செய்தீரென்னக், கற்றவர்கள் தொழுதேத்துங் காழிவேந்தர் கருணையினாற் காரிகையா டனக்குநல்கப், பற்றியவா ளரவுவிடந் தீருமாறு பணைமருகற் பெருமானைப் பாடலுற்றார்.

(இ-ள்.) (நான் கலியாணஞ்செய்துகொள்ளக் கருதித் தொடர்ந்துவந்த) இவனும் ஒளிபொருந்திய பாம்புகடிக்க இறந்தான் ; யானோ ! அலைகள் மடங்கு

ன்ற கடலில் கப்பல்கவிழப்பெற்ற வணிகர்போல வருந்துகின்றேன் ; தேவரீர் என து சுற்றத்தாரைப்போல என் கண்முன்வந்து காட்சிகொடுத்து என்னிடத்துள்ள துன்பங்களெல்லாம் நீங்கும்படித் திருவருள்செய்தீரென்று கூற, உண்மைநூல்க ளைக் கற்றுணர்ந்த பெரியோர்கள் வணங்கித் துதிக்குஞ் சீகாழித்தலைவராகிய திரு ஞானசம்பந்தப்பிள்ளையார் கிருபையோடு அக்கன்னிகைக்கு விடந்தீண்டி யிறந்த வனை உயிர்ப்பித்துக் கொடுக்கத் திருவுள்ளங்கொண்டு அவனைக்கடித்த ஒளிபொ ருந்திய பாம்பின் விஷந்தீரும்பொருட்டு வயல்கள்சூழ்ந்த திருமருகலில் எழுந்தரு ளிய சிவபெருமானைப் பாடத்தொடங்கினார்.—எ-று. (சஅக)

சடையானை யெவ்வுயிர்க்குந் தாயானானைச் சங்கரனைச் சசிகண்ட மவுலியானை, விடையானை வேதியனை வெண்ணீற்றானை விரவாதார் புரமூன்று மெரியச்செற்ற, படையானைப் பங்கயத்து மேவினானும் பாம்பணையிற் றுயின்றானும் பரவுங்கோல, முடையானை யுடையானே தகுமோவிந் தவொள்ளிழையா ளுண்மெலிவென் றெடுத்துப்பாட.

(இ-ள்.) சடைமுடியையுடைய பெருமானை, எல்லாவுயிர்களுக்குந் தாயா யுள்ளவரை, ஆன்மாக்களுக்குப் பேரின்பசுகத்தைக் கொடுத்தருளுங் கருணை யாளரை, சந்திரனால் காணப்பட்ட திருமுடியையுடையதயாநிதியை, இடபத்தை வாகனமாகவுடைய தருமமூர்த்தியை, வேதமுதல்வரை, திருவெண்ணீறணிந்த திரு மேனியையுடைய திருவாளரை, பகைவராகிய அசுரர்களது திரிபுரங்களும் எரியச் செய்த விஷ்ணுவாகிய பாணத்தையுடைய வீரசொரூபரை, தாமரை மலரிற்பொரு ந்திய பிரமனும் சேஷசயனத்திற்பள்ளிகொண்ட திருமாலும் வணங்குகின்ற திரு க்கோலமுடைய பரத்துவப்பொருளா யுள்ளவரைக்குறித்து எம்மை யாளுடைய பெருமானே ! இந்தஒளிபொருந்திய ஆபரணமணிந்த பெண்ணானவள் மனம்வருந் துதல் தகுமோவென்று திருப்பதிகத்தி லமைத்துப் பாடியருள.—எ-று.

சசிகண்ட மவுலியானை என்பதற்கு, இளம்பிறை யணிந்த திருமுடியையு டையவரை எனினும் பொருந்தும். கண்டம்= துண்டு. கோலம்= அழகு.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (சஅஉ)

---

### திருமருகல் - விடந்தீர்த்த திருப்பதிகம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

சடையாயெனுமால்சரணீயெனுமால்
விடையாயெனுமால்வெருவாவிழுமால்
மடையார்குவளைம்மலரும்மருக
லுடையாய்தகுமோவிவளுண்மெலிவே. (க)

சிந்தாயெனுமால்சிவனேயெனுமால்
முந்தாயெனுமான்முதல்வாவெனுமால்
கொந்தார்குவளைகுலவும்மருக
லெந்தாய்தகுமோவிவளேசறவே. (உ)

அறையார்கழலுமழல்வாயரவும்
பிறையார்சடையுமுடையாய்பெரிய

மறையார்மருகன்மகிழ்வாயிவளை
யிறையார்வளைகொண்டெழில்வவ்வினையே. (ங)

ஒலிநீர்சடையிற்கரந்தாயுலகம்
பலிநீதிரிவாய்பழியில்புகழாய்
மலிநீர்மருகன்மகிழ்வாயிவளை
மெலிநீர்மையளாக்கவும்வேண்டினையே. (ச)

துணிநீலவண்ணம்முகிறோன்றியன்ன
மணிநீலகண்டமுடையாய்மருகற்
கணிநீலவண்டார்குழலாளிவடன்
னணிநீலவொண்கண்ணயர்வாக்கினையே. (ரு)

பலரும்பரவப்படுவாய்சடைமேன்
மலரும்பிறையொன்றுடையாய்மருகற்
புலருந்தனையுந்துயிலாள்புடைபோந்
தலரும்படுமோவடியாளிவளே. (சு)

வழுவாள்பெருமான்கழல்வாழ்கவெனா
வெழுவாணினைவாளிரவும்பகலு
மழுவாளுடையாய்மருகற்பெருமான்
றொழுவாளிவளைத்துயராக்கினையே. (எ)

இலங்கைக்கிறைவன்விலங்கலெடுப்பத்
துலங்கல்விறலூன்றலுந்தோன்றலனாய்
வலங்கொண்மதில்சூழ்மருகற்பெருமா
னலங்கல்லிவளையலராக்கினையே. (அ)

எரியார்சடையும்மடியும்மிருவர்
தெரியாததோர்தீத்திரளாயவனே
மரியார்பிரியாமருகற்பெருமா
னரியாளிவளையயர்வாக்கினையே. (கூ)

அறிவில்சமணும்மலர்சாக்கியருந்
நெறியல்லனசெய்தனர்நின்றுழல்வார்
மறியேந்துகையாய்மருகற்பெருமா
னெறியார்குழலியிறைநீக்கினையே. (க0)

வயஞானம்வல்லார்மருகற்பெருமா
னுயர்ஞானமுணர்ந்தடியுள்குதலா
லியன்ஞானசம்பந்தனபாடல்வல்லார்
வியன்ஞாலமெல்லாம்விளங்கும்புகழே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-மாணிக்கவண்ணேசர், தேவியார் - வண்டுவார்குழலம்மை.

பொங்குவிடந் தீர்ந்தெழுந்து நின்றான்சூழ்ந்த பொருவிறிருத் தொண்டர்குழாம் பொலியவார்ப்ப, வங்கையினை யுச்சியின்மேற் குவித்துக் கொண்டங் கருட்காழிப் பிள்ளையா ரடியில்வீழ்ந்த, நங்கையவ டனைநயந்த நம்பியோடு ஞாலத்தி லின்புற்று வாழும்வண்ண, மங்குறவழ் சோலைமலி புகலிவேந்தர் மணம்புணரும் பெருவாழ்வு வகுத்துவிட்டார்.

(இ-ள்.) (அவ்வணிகன்) தலைக்கொண்ட விஷந்தீர்ந்து உயிர்பெற்றெழுந்து நின்றான்; அப்பொழுது பிள்ளையாரைச் சூழ்ந்துநின்ற ஒப்பற்ற அடியார் திருக்கூட்டங்கள் அரகரவென்று மிகுதியாகஆரவாரிக்கும்பொழுது, அவ்விடத்து அழகிய கைகளைச் சிரசின்மேற்குவித்துக்கொண்டு அருளாளராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவடிகளில் வீழ்ந்துவணங்கிய அப்பெண்ணை அவளால் இச்சிக்கப்பட்ட அவ்வணிகனோடு இந் நிலவுலகத்தில் இன்பமடைந்து வாழும்படி, மேகங்கள் தவழுஞ் சோலைசூழ்ந்தசீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் கலியாணஞ் செய்துவாழும் பெரிய இல்லறவாழ்க்கையை அவர்களுக்கு அமைத்து ஊர்க்குச் செல்லவிடுத்தார்.—எ-று. (௪௮௫)

மற்றவர்க்கு விடைகொடுத்தங் கமருநாளின் மருகனக ரினில்வந்து வலியபாசஞ், செற்றபுகழ்ச் சிறுத்தொண்டர் வேண்ட மீண்டுஞ் செங்காட்டங் குடியிலெழுந் தருளவேண்டிப், பற்றியெழுங் காதன்மிக மேன்மேற்சென்று பரமனார் திறத்துன்னிப் பாங்கரொங்குஞ், சுற்றுமருந் தவரோடுங் கோயிலெய்திச் சுடர்மழுவாண் டவர்பாதந் தொழுவான்புக்கார்.

(இ-ள்.) அவ்விருவர்க்கும் விடைகொடுத்து அங்கு எழுந்தருளியிருக்கும் நாள்களில், கொடிய பாசபந்தங்களையொழித்த புகழினையுடைய சிறுத்தொண்டநாயனார் திருமருகலென்னுந் திருப்பதிக்குவந்து பிரார்த்தித்தலால், மீண்டும் திருச்செங்காட்டங்குடிக்கு எழுந்தருள விரும்பித் தொடர்ந்தெழுகின்ற ஆசையதிகரிக்கச்சென்று சிவபெருமான் திருவருட்பகுதியை எண்ணி, எப்பக்கங்களிலும் சூழ்ந்துவருகின்ற அரிய தவத்தினையுடைய திருத்தொண்டர்களோடுந் திருக்கோயிலையடைந்து விளங்குகின்ற மழுவையேந்திய சிவபெருமானது திருவடிகளை வணங்கும்படி உள்ளே எழுந்தருளினார்.—எ-று. (௮௪)

புக்கிறைஞ்சி யெதிர்நின்று போற்றுகின்றார் பொங்குதிரை நதிப்புனலும் பிறையுஞ்சேர்ந்த, செக்கர்முடிச் சடைமவுலி வெண்ணீற்றார்தந் திருமேனி யொருபாகம் பசுமையாக, மைக்குலவு கண்டத்தர் மருகற்கோயின் மன்னுநிலை மனங்கொண்டு வணங்குவார்முன், கைக்கனலார் கணபதீச் சரத்தின்மேவுங் காட்சிகொடுத் தருளுவான்காட்டக்கண்டார்.

(இ-ள்.) சென்று வணங்கிச் சந்நிதியில்நின்று துதிக்கும் திருஞானசம்பந்தப்பிள்ளையார் அலைகள் பொங்குகின்ற கங்கையும், இளம்பிறையுந்தங்கிய செவ்வானம்போலுஞ் சடைமுடியையும் திருவெண்ணீற்றையுமுடைய சிவபெருமானது திருமேனியின் ஒருபாகம் பச்சைநிறமாகக் காளகண்டத்தையுடைய சிவபெருமான் திருமருகல் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் நிலைமையைத் திருவுள்ளத்திற்கொண்டுவணங்கும் அவர்க்குமுன்னே, திருக்கரத்தில் மழுப்படையேந்திய சிவபெருமான் தாம் கணபதீச்சரத்தில் எழுந்தருளுந் திருக்கோலத்தைக் கொடுத்தருளும்படி தரிசிப்பிக்க இங்குத் தரிசித்தார்.—எ-று. (௪௮௭)

**வேறு.**

மருக லமர்ந்து நிறைந்தகோல மல்குசெங் காட்டங் குடியின்மன்னிப்
பெருகு கணப தீச்சரத்தார் பீடுடைக் கோலமே யாகித்தோன்ற
வுருகிய காதலு மீதுபொங்க வுலகர்முன் கொள்ளு முணர்வு நீட
வருவிகண் வார்வுறப் பாடலுற்று ரங்கமும் வேதமு மென்றெடுத்து.

(இ-ள்.) திருமருகலென்னுந் திருப்பதியிலெழுந்தருளுந் திருக்கோலமானது சிறந்த திருச்செங்காட்டங்குடியிற் பொருந்தி விளங்குகின்ற கணபதீச்சரமென்னுந் திருக்கோயிலில் எழுந்தருளும் கணபதீசரது பெருமைபொருந்திய திருக்கோலமேயாகித் தோன்ற, (அதனால்) உருகுகின்ற அன்பும் அதிகரிக்க உலகத்தாரிடத்துக்கொண்ட காருண்ணியவுணர்ச்சி மேலிட, கண்களினின்றும் ஆனந்தபாஷ்பம் அருவிபோற் சொரிய "அங்கமும் வேதமும்" என்று முதலில் எடுத்துத் திருப்பதிகம்பாடத் தொடங்கினார்.—எ-று. (சஅசு)

---

**திருச்செங்காட்டங்குடியும், திருமருகலும்-வினவுரை**

**பண் - நட்டபாஷை.**

திருச்சிற்றம்பலம்.

அங்கமும்வேதமுமோதுநாவரந்தணர்நாளுமடிபரவ
மங்குன்மதிதவழ்மாடவீதிமருகனிலாவியமைந்தசொல்லாய்
செங்கயலார்புனற்செல்வமல்குசீர்கொள்செங்காட்டங்குடியதனுட்
கங்குல்விளங்கெரியேல்வியாடுங்கணபதியீச்சரங்காமுறவே.

நாலுகுலைக்கமுகோங்குகாழிஞானசம்பந்தனலந்திகழு
மாலின்மதிதவழ்மாடமோங்குமருகலின்மற்றதன்மேன்மொழிந்த
சேலுங்கயலுந்திளைத்தகண்ணார்சீர்கொள்செங்காட்டங்குடியதனுட்
சூலம்வல்லான்கழலோதுபாடல்சொல்லவல்லார்வினையில்லையாமே.

திருச்சிற்றம்பலம்.

---

கண்டடி போற்றி வினவப்பாடிக் கணபதி யீச்சரங் காதலித்த
வண்டர் பிரானை வணங்கி வைகு மப்பதி யிற்சில நாள்கள்போற்றித்
தொண்டருடனருள் பெற்றுமற்றத் தொல்லைத் திருப்பதி யெல்லைநீங்கிப்
புண்டரி கத்தடஞ் சூழ்பழனப் பூம்புக லூர்தொழப் போதுகின்றார்.

(இ-ள்.) கணபதீசரது திருக்கோலத்தைத் திருமருகலில் தரிசித்துத் திருவடிகளைத் துதித்து ("மங்குன் மதிதவழ் மாடவீதி மருகனிலாவிய மைந்தசொல்லாய்") என்று வினவிப் பாடியருளி, கணபதீச்சரத்தை விரும்பி யெழுந்தருளுஞ் சிவபெருமானை வணங்கி, தாம்வசித்த அத்திருமருகற்பதியில் சிலகாலம் சிவபெருமானைத் துதித்து அடியார்களோடும் அவ்வெம்பெருமான் திருவருளைப்பெற்று பழமையாகிய அத்திருப்பதியினின்று நீங்கித் தாமரைத்தடாகங்கள் சூழ்ந்தவயல்களையுடைய திருப்பூம்புகலூரென்னுந் திருப்பதியைவணங்க எழுந்தருளுகின்றார்.

சீரின் மலிந்த சிறப்பின்மேவுஞ் சிறுத்தொண்டர் நண்புடன் செல்லநல்
வேரி நறுந்தொங்கன் மற்றவரும் விடையருளப்பெற்று மீண்டபின்பு

நீரின் மலிந்த சடையர்மேவி நிகழும் பதிகள் பலபணிந்து
பாரின் மலிந்து நிறைந்த செல்வம் பயில்புக லூர்நகர்ப் பாங்கணைந்தார்.

(இ-ள்.) புகழால்நிறைந்த சிறப்போடுபொருந்திய சிறுத்தொண்டநாயனுர் கண்போடு தம்முடன்வர, நல்ல தேன்பொருந்திய மலர்மாலையைத்தரித்த அந்நாய ஞரும் விடைகொடுக்கப்பெற்று தம் ஊர்க்குத் திரும்பினபின்பு, கங்கை நீரால்வி ளங்குஞ் சடைமுடியையுடைய சிவபெருமான் எழுந்தருளும் பல திருப்பதிகளைவ ணங்கி, உலகத்தில் அதிகரித்து நிறைந்த பலவகைச் செல்வங்கள்பொருந்திய திரு ப்புகலூரின் சமீபத்தில் சென்றருளினுர்.—எ-று. (சஅஅ)

திருப்புக லூர்த்திருத் தொண்டரோடுஞ் செம்மை முருகனுர் மெய் மகிழ்ந்த, விருப்பொடு சென்றெதிர் கொள்ளவந்து வேதமுதல்வர்தங்கோ யிலெய்திப், பொருப்புறழ் கோபுரத் துட்புகுந்து பூமலி முன்றில் புடை வலங்கொண், டொருப்படு சிந்தையொ டுள்ளணைந்தா ரோதாதுஞான மெலாமுணர்ந்தார்.

(இ-ள்.) திருப்புகலூரில் வசிக்கும் அடியார்களோடும் நல்லொழுக்கத்தை யுடைய முருகநாயனுர் உண்மையாகிய விருப்பத்தோடு சென்று எதிர்கொள்ள அங்கு எழுந்தருளி, வேதமுதல்வராகிய அக்கினீசரது திருக்கோயிலையடைந்து ம லைபோன்ற திருக்கோபுரத்தி னுள்ளேபுகுந்து அழகிய திருமுற்றத்தைப் பிரதக்ஷ ணஞ்செய்து, சகலஞானங்களையும் ஓதாதுணர்ந்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் ஒருமைப்பட்ட திருவுள்ளத்தோடும் திருக்கோயிலினுள்ளே எழுந்தருளினுர். ()

புக்கெதிர் தாழ்ந்து விழுந்தெழுந்து பூம்புக லூர்மன்னு புண்ணியனை நெக்குரு குஞ்சிந்தை யன்புபொங்க நிறைமலர்க் கண்ணீ ரருவிசெய்ய மிக்கத் தமிழ்த்தொடை மாலைசாத்தி மேவிய வேழிசை பாடிப்போந்து [illegible]கு நிறைசீர் முருகர்முன்பு செல்ல வவர்மடஞ் சென்றுபுக்கார்.

(இ-ள்.) திருக்கோயிலி னுள்ளேபுகுந்து அழகிய திருப்புகலூரின்கண் வீற் றிருந்தருளும் புண்ணிய சொரூபராகிய அக்கினீசரது சந்நிதியில்தாழ்ந்து சாஷ்டா ங்கமாக வணங்கியெழுந்து, கசிந்துருகுகின்ற திருவுள்ளத்தில் அன்புமேலிட, நிறை ந்த தாமரைமலர்போன்ற திருக்கண்களினின்றும் ஆனந்தக்கண்ணீர் அருவிபோ ற்சொரியச் சிறந்த தமிழ்த்திருப்பதிகம் அருளிச்செய்து பொருந்திய ஏழிசைகளை யும் அதனிடத்து அமைத்துப் பாடித் திருக்கோயிலினின்றும் புறத்தில் வந்தருளி, எட்டுத்திக்குகளிலும் நிறைந்த கீர்த்தியையுடைய முருநாயனுர்வந்து எதிர் கொண் டழைத்துச்செல்ல, அவரது திருமடத்தைச்சென்று சேர்ந்தருளினுர்.—எ-று. ()

ஆங்கவர் போற்றுஞ் சிறப்பின்மேவி யப்பதிதன்னி லமருநாளில்
வாங்கு மலைச்சிலை யார்மகிழ்ந்த வர்த்தமா னீச்சரர்தாள்வணங்கி
யோங்கிய வன்பின் முருகனுர்தம் முயர்திருத்தொண்டு சிறப்பித்தோங்கு
பாங்குடை வண்டமிழ் பாடிநாளும் பரமர்தம் பாதம் பணிந்திருந்தார்.

(இ-ள்.) அத்திருமடத்தில் முருகநாயனுர் வழிபடுஞ் சிறப்பினுல் வாசஞ் செய்து அத்திருப்புகலூரில் எழுந்தருளியிருக்கும் நாள்களில் மேருமலையை வில்லா கவளைத்த சிவபெருமான்மகிழ்ந்தெழுந்தருளும் வர்த்தமானீச்சரரது திருவடிகளை

வணங்கி, சிறந்த அன்பினையுடைய முருகநாயனாரது உயர்ந்த திருத்தொண்டைச் சிறப்பித்து,உயர்ந்ததன்மையையுடைய வளவிய தமிழ்த்திருப்பதிகம்பாடியருளி அவ்வெம்பெருமானது திருவடிகளை நாள்தோறும் வணங்கி அங்கெழுந்தருளியிருந்தார்.—எ-று. (௪௯௧)

**திருப்புகலூர் -வர்த்தமானீச்சரம் - பண்-பியந்தைக்காந்தாரம்.**

திருச்சிற்றம்பலம்.

ஈசனேறமர்கடவுளின்னமுதெந்தையெம்பெருமான்
பூசுமாசில்வெண்ணீறர்பொலிவுடைப்பூம்புகலூரின்
மூசுவண்டறைகொன்றைமுருகன்முப்போதுஞ்செயமுடிமேல்
வாசமாமலருடையார்வர்த்தமானீச்சரத்தாரே.

பொங்குதண்புனல்சூழ்ந்துபோதணிபொழிற்புகலூரின்
மங்குன்மாமதிதவழும்வர்த்தமானீச்சரத்தாரைத்
தங்குசீர்த்தமிழ்ஞானசம்பந்தன்றண்டமிழ்பத்து
மெங்குமேத்தவல்லார்களெய்துவரிமையவருலகே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வர்த்தமானீசுவரர், தேவியார்-கருந்தார்குழலியம்மை.

---

மற்றத் திருப்பதி வைகு நாளில் வாக்கின் பெருவிறன் மன்னனார்தாம், புற்றிடங் கொண்டாரை வந்திறைஞ்சிப் பொன்மதி லாரூர்ப் புகழ்ந்து போற்றிச், சிற்றிடைப் பொற்றொடிப் பங்கர் தங்குந் திருப்புக லூர்தொழச் சிந்தைசெய்து, கொற்றவ னாருள் பெற்ற தொண்டர் குழாத்துட னவ்வூர் குறுக வந்தார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் அத்திருப்புகலூரில் எழுந்தருளியிருக்கும் நாள்களில் சிறந்த திருநாவுக்கரசுசுவாமிகள் திருவாரூரி லெழுந்தருளிய ஸ்ரீவன்மீகநாதனை யடைந்து வணங்கிப் பொன்மயமாகிய மதில்சூழ்ந்த திருவாரூரைப்புகழ்ந்து துதித்து, உமாதேவியாரை வாமபாகத்திலுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருப்புகலூரைவணங்கத் திருவுள்ளங்கொண்டு அவ்வெம்பெருமானது திருவருளைப் பெற்ற அடியார் திருக்கூட்டத்தோடும் அத்திருப்புகலூரைச் சமீபிக்க வந்தருளினார்.—எ-று. (௪௯௨)

நாவுக்கரச ரெழுந்தருளு நல்ல திருவார்த்தை கேட்ட போதே, சேவிற்றிகழ்ந்தவர் மைந்தரான திருஞான சம்பந்தர் சிந்தையன்பு, மேவுற்ற காதன் மிகப்பெருக விரைந்தெதிர் கொள்ளமெய் யன்ப ரோடும், பூவிற் பொலிபொய்கை சூழ்புக லூர்ப் புறம்பணை யெல்லை கடந்து போந்தார்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் எழுந்தருளுகின்ற நல்ல மங்கலவார்த்தையைக் கேட்டவுடனே இடபவாகனத்தின்மேல் விளங்கும் சிவபெருமானது திருக்குமாரராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது திருவுள்ளத்தில் அன்பு பொருந்திய பெருவிருப்பானது அதிகரிக்க அவரை விரைவாக எதிர்கொள்ளும் பொருட்டு,மெய்யடியார்களோடும் மலர்களால்விளங்கும் தடாகங்கள்சூழ்ந்த திருப்புகலூரின் புறத்திலுள்ள திருவெல்லையைக்கடந்து சென்றருளினார்.—எ-று.

அங்கண ராரூர் வணங்கிப் போந்த வரசு மெதிர்வந் தணைய வாசப்
பொங்கு புனற்றண் புகலி வந்த பூசுரர் சிங்கமும் பொற்பி னெய்தித்

தங்களி னன்பின் முறைமை யாலே தாழ்ந்து வணங்கித் தனித்தனியே
மங்கல மாகிய நல்வரவின் வாய்மை விளம்பி மகிழும்போது.

(இ-ள்.) அருட்கண்ணராகிய தியாகேசப்பெருமான் எழுந்தருளுந் திருவாரூரைவணங்கித் திருப்புகலூரைத் தரிசிக்க வந்தருளிய திருநாவுக்கரசுசுவாமிகளும், அவரை எதிர்கொள்ளும்பொருட்டு வந்தருளிய மணம்பொருந்திய மிக்க நீர்வளமமைந்த குளிர்ந்த சீகாழிப்பதியில் அவதரித்தருளிய வேதியர் குலச்சிங்கமாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் சிறப்பாக எதிர்கொண்டு,தங்கள் தங்களிடத்துண்டாகிய அன்பின் முறைமைப்படி தனித்தனியே சாஷ்டாங்கமாக வணங்கிச் சுபகரமாகிய நல்வரவின் உண்மையை ஒருவர்க்கொருவர் வினவி மகிழ்ந்தருளும்பொழுது.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௪௬௪)

மெய்த்திரு ஞானசம் பந்தர்வாக்கின் வேந்தனை நோக்கி விருப்பினாலே
யப்பரை யிங்கணை யப்பெறும்பே றருளுடை யோமியா மந்தணாரூ
ரெப்பரி சாற்றொழு துய்ந்த தென்று வினவிட வீறில் பெருந்தவத்தோர்
செப்பியவண்டமிழ்மாலையாலே திருவாதிரைநிகழ் செல்வஞ்சொன்னார்.

(இ-ள்.) உண்மைப்பொருளாகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருநாவுக்கரசுசுவாமிகளைப்பார்த்து, அப்பராகிய உம்மை இங்கு அடையப்பெற்ற பெரிய திருவருளை யாம் உடையோம்; மிக்க குளிர்ச்சியை யுடைய திருவாரூரை எவ்வகையாகத்தொழுது உய்ந்தருளியதென்று வினவ, முடிவில்லாத பெருந்தவத்தையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் தாம் அப்பொழுதருளிய "முத்துவிதானம்" என்னும் முதலையுடைய சிறந்த திருப்பதிகத்தினால் திருவாதிரை மஹோத்ஸவத்தில் நடந்த சிறப்பினைச் சொல்லியருளினார்.—எ-று.

"ஒருமையிற் பன்மையும் பன்மையி னொருமையும்
ஓரிடம் பிறவிடந் தழுவலு முளவே"—என்னும் விதியினால் அப்பரை முன்னிலைப்படுத்தி அவரையே நோக்கிக் கூறுதலால், உம்மை எனச் சொல்லல் வேண்டிய முன்னிலையிலே, அப்பர் எனப் படர்க்கைச்சொல் சேர்த்துச் சொல்லப்பட்டமையால், இது இடவழுவமைதி.

"திண்பொரு ளெய்தலாகுந் தெவ்வரைச் செருக்க லாகு
நண்பொடு பெண்டிர் மக்கள் யாவையு நண்ணலாகு
மொண்பொரு ளாவ தையா வுடன்பிறப் பாக்கலாகா
எம்பியை யீங்குப் பெற்றே னென்னெனக் கரியதென்றான்."— என்றார் பிறரும். (௪௬௫)

அரசரு ளிச்செய்த வாய்மை கேட்ட வப்பொழு தேயருண்ஞான
முண்ட, சிரபுர வேந்தருஞ் சிந்தையின்கட் டென்திரு வாரூர் வணங்கு
தற்கு, விரவிய காதலிற் சென்று போற்றி மீண்டுமவர் தம்முடன் மே
வுவனென், றுரவு கடற்கன் மிதப்பின்வந்தார்க் குரைத்துடன் பாடுகொ
ண் டொல்லை போந்தார்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் அருளிச்செய்த திருப்பதிகத்தினுண்மையைக்கேட்டபொழுதே திருவருண்ஞானமுதத்தை யுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் தமது திருவுள்ளத்தில் அழகிய திருவாரூரை வணங்கும்

பொருட்டு உண்டாகிய ஆசையினால், யான் திருவாரூரையடைந்து துதித்து மறுபடியும் இங்குவந்து உம்முடன் சேர்வேனென்று, வலிய சமுத்திரத்தில் கல்லாகிய தெப்பத்தில் மிதந்துவந்த திருநாவுக்கரசுசுவாமிகளுக்கு உரைத்தருளி, அவரது அநுமதிபெற்றுத் திருவாரூருக்கு விரைந்து சென்றருளினார்.—எ-று. (௪௯௬)

சொற்பெரு வேந்தருந் தோணி மூதூரத் தோன்றலபின் காதலொரு டரத்தாமும், பொற்புக லூர்தொழச் சென்றணைந்தார் புகலிப் பிரானும் புரிந்தசிந்தை, விற்குடி வீரட்டஞ் சென்றுமேவி விடையவர் பாதம் பணிந்து போற்றிப், பற்பல வாயிரந் தொண்டரோடும் பாடலன் நான்மறை பாடிப் போந்தார்.

(இ-ள்) திருநாவுக்கரசுசுவாமிகளும் பழமைபொருந்திய சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்குப் பின்னே தமது விருப்பம் தொடர்ந்து செல்லத் தாமும் அழகிய திருப்புகலூரைவணங்கச் சென்றடைந்தருளினார்; திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் விரும்பிய திருவுள்ளத்தோடும் திருவிற்குடி வீரட்டானமென்னுந் திருப்பதியைச் சென்றடைந்து இடபவாகனத்தையுடைய சிவபெருமானது திருவடிகளை வணங்கித் துதித்து, அநேகமாயிரந் திருத்தொண்டர்களோடும் "பாடலன் நான்மறை" என்னும் முதலையுடைய திருப்பதிகத்தைப் பாடிக்கொண்டே அத்திருவாரூருக்குச் சென்றருளினார்.—எ-று.

திருவிற்குடி என்பது, சலந்தராசுரனைச் சம்மாரஞ்செய்த க்ஷேத்திரமாதலின் இது அட்டவீரட்டத் தொன்று. (௪௯௭)

---

திருவாரூர் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

பாடலன் நான்மறையன் படிபட்ட கோலத்தன் திங்கள்
சூடலன் மூவிலையசூலம் வலனேந்தி
கூடலர் மூவெயிலும் எரியுண்ணக் கூர்எரி கொண்டெல்லி
யாடலன் ஆதிரையன் ஆரூர் அமர்ந்தானே.

நல்லபுனற் புகலித் தமிழ்ஞானசம்பந்தன் நல்ல
அல்லிமலர்க் கழனி ஆரூர் அமர்ந்தானை
வல்லதோர் இச்சையினால் வழிபாடிவை பத்தும் வாய்க்கச்
சொல்லுதல் கேட்டல் வல்லார் துன்பந்துடைப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

---

துணரிணர்ச் சோலையுஞ் சாலி வேலித் துறைநீர்ப் பழனமுஞ் சூழ்கரும்பின், மணமலி கானமு ஞானமுண்டார் மருங்குற நோக்கி மகிழ்ந்தருளி, யணைபவ ரள்ளற் கழனி யாரூ ரடைவோ மெனமொழிந் தன்புபொங்கப், புணரிசைச் செந்தமிழ் கொண்டு போற்றிப் பொன்மதி லாரூர்ப் புறத்தணைந்தார்.

(இ-ள்.) சிவஞானப் பாலமுதுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் பூங்கொத்துகள்நிறைந்த சோலைகளும், செந்நெல்வேலி சூழ்ந்த நீர்த்துறைகளையுடைய வயல்களும் பக்கங்களில்சூழ்ந்த மணமிகுந்த கரும்பின் காடுகளும், இருபக்

கங்களிலும் பொருந்தப்பார்த்து மகிழ்கூர்ந்து செல்பவர் "அள்ளல்கொள்கழனி யாரூரடைவோம்" என்று மொழிந்து அன்பு அதிகரிக்க இசையோடுகூடிய செந்தமிழ்த்திருப்பதிகம்பாடித் துதித்துப் பொன்மயமாகிய மதில்சூழ்ந்த திருவாரூர்ன் புறத்து அணைந்தருளினார்.—எ-று. (௪௬௮)

திருவாரூர் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

உள்ளமோரிச்சையினாலுகந்தேத்தித்தொழுமின்றொண்டீர்மெய்யே
கள்ளமொழிந்திடுமினகரவாதிருபொழுதும
வெள்ளமோவார்சடைமேற்கரந்திட்டவெள்ளேற்றான்மேய
அள்ளல்கொள்கழனியாரூரடைவோமே.

நல்லபுனற்புகலித்தமிழ்ஞானசம்பந்தனல்ல
அல்லிமலர்க்கழனியாரூரமர்ந்தானை
வல்லதோரிச்சையினால்வழிபாடிவைபத்தும்வாய்க்கச்
சொல்லுதல்கேட்டல்வல்லார்துன்பந்துடைப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

வானுயர் செங்கதிர் மண்டலத்து மருங்கணை யுங்கொடி மன்னு மாரூர், தானொரு பொன்னுல கென்னத் தோன்றுந் தயங்கொளி முனகணடு சண்பைவந்த, பானிற நீற்றர் பருக்கை யானைப் பதிகத் தமிழிசை பாடிப் பாடித், தேனொடு வண்டு முரலுஞ் சோலைத் திருபபதி மற்றதனெல்லை சேர்ந்தார்.

(இ-ள்.) சீகாழிப்பதியி லவதரித்தருளிய பால்போலுந் திருவெண்ணீற்றை யணிந்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் ஆகாயமளவு முயர்ந்த சூரியமண்டலத்தினருகை யளாவிய கொடியாடைகள் நிலைபெற்ற திருவாரூரானது தானும் ஒரு சுவர்க்கலோகம்போலத் தோன்றுகின்ற பேரொளியைமுன்னே தரிசித்து "பருக்கையானை" என்னு முதலையுடைய செந்தமிழ்த்திருப்பதிகத்தை இசையோடு பாடியருளிப் பெண்வண்டுகளோடு ஆண்வண்டுகளும் (பண்களைப்) பாடுகின்ற சோலைசூழ்ந்த அத்திருவாரூர்த் திருப்பதியின் எல்லையைச் சேர்ந்தருளினார்.எ-று. ()

திருச்சிற்றம்பலம்.

திருவாரூர்த்திருவிராகம்-பண்-நட்டராகம்.

பருக்கையானைமத்தகத்தரிக்குலத்துகிர்ப்புக
நெருக்கிவாயநித்திலங்கிரக்குநீள்பொருப்பனூர்
கருக்கொள்சோலைசூழநீடுமாடமாளிகைககொடி
யருக்கன்மண்டலத்தளாவுமந்தணாரூரென்பதே.

வல்லிசோலைசூதநீடுமன்னுவீதிபொன்னுலா
வல்லிமாதமர்ந்திருந்தவந்தணாரூராதியை

நல்லசொல்லுஞானசம்பந்தனுவினின்னுரை
வல்லதொண்டர்வானமாளவல்லர்வாய்மையாகவே.

திருச்சிற்றம்பலம்.

---

பொங்கிய சிந்தை விருப்பின் வெள்ளம் பொழிந்து புவிமேற் பொலிவதென்ன,வெங்குங் குளிரொளி வீசுமுத்தி னிலங்கு சிவிகை யிழிந்தருளிச், செங்கை நிறைமலர் கொண்டு தூவித் திருவிருக் குக்குறள் பாடியேத்தி,தங்கள் பிரானரசாளு மாரூர் தனைப்பணி வுற்றார் தமிழ்விரகர்.

(இ-ள்.) முத்தமிழ்விரகராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது திருவுள்ளத்தினின்றும் பொங்கியெழுந்த ஆசையின் வெள்ளம்சொரிந்து பூமியில் விளங்குவதுபோல, எவ்விடங்களிலும் குளிர்ந்த பிரகாசத்தை வீசுகின்ற அழகிய முத்துச் சிவிகையினின்று மிரங்கியருளிச் சிவந்த திருக்கரங்களில் நிறைந்த மலர்களைக்கொண்டு அருச்சித்துத் திருவிருக்குக்குறளென்னுந்திருப்பதிகம் பாடித் துதித்துத் தமது தியாகராசப்பெருமான் அரசாண்டருளுந் திருவாரூரை வணங்கியருளினார்.—எ-று. (௫௦௦)

---

திருவாரூர் - திருவிருக்குக்குறள் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

சித்தந்தெளிவீர்கா, ளத்தனாரூரைப்
பத்திமலர்தூவ, முத்தியாகுமே.

சீரூர்சம்பந்த, னாரூரைச்சொன்ன
பாரூர்பாடலார், பேராரின்பமே.

திருச்சிற்றம்பலம்.

---

வேறு.

படியின் ஞானமுண் டருளிய பிள்ளையைப் பணிதற்
கடியர் சென்றெதிர் கொளவெழுந் தருளுமஞ் ஞான்று
வடிகொள் சூலத்தர் மன்னிய பொன்மதி லாரூர்க்
கடிகொள் பேரணிப் பொலிவையார் முடிவுறக் காண்பார்.

(இ-ள்.) ஒப்பற்ற சிவஞானப்பாலமுதுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரை வணங்குவதற்கு அடியார்கள்சென்று எதிர்கொள்ள எழுந்தருளும்பொழுது, கூர்மையாகிய சூலப்படையை யேந்திய தியாகராசப்பெருமான் வீற்றிருந்தருளும் பொன்மயமாகிய மதில்சூழ்ந்த திருவாரூரின் விளங்குகின்ற பெரிய அலங்காரப் பொலிவை முடிவாகக் காணவல்லவர்கள் யார்? (ஒருவருமில்லை).—எ-று.

படியில் - உலகத்தில் எனினுமாம். (௫௦௧)

கான மான்மத களிர்பெருஞ் சேற்றிடை நறும்பொற்
றாத றுந்துகள் சொரிதலிற் சுடரொளிப் படலை
யான வீதிக ளடிவலித் தவைகளைந் தலைய
வான மாரியிற் பொழிந்தது மலர்மது மாரி.

(இ-ள்.) மணம்பொருந்திய கஸ்தூரிசேர்ந்த குளிர்ந்த கலவைச்சேற்றினிடத்து நல்ல பொன்னிறமாகிய தூய்மைமிக்க மகரந்தங்களை இறைத்தலினால் மிகுந்த ஒளிவீசுதலையுடைய வீதிகளானவை கால்களை உறுத்துதலால், அக்கலவைச் சேறுகளைந்தோடும்படி, (தேவர்கள்சொரியும்) கற்பகமலரினின்றொழுகுந் தேன் மாரியானது ஆகாயத்தினின்று பெய்யும் நீர்மாரிபோல இடையறாது சொரிந்தது.

ஆட னீடுவ துகிற்கொடி யணிகுழற் கொடிக
ளோடு சூழ்வன சுரும்பொடு தமனியத் தசும்பு
காடு கொண்டன கதலிதோ ரணநிரைக் கமுகு
மாட மாளிகை மண்டபங் களின்மருங் கெலலாம்.

(இ-ள்.) மாடங்களும், மாளிகைகளும், மண்டபங்களுமாகிய இவற்றின் பக்கங்களிலெல்லாம் சீலைக்கொடிகளும் அழகிய கூந்தலையுடைய பெண்களாகிய பூங்கொடிகளும் சிறப்புற்றோங்குவன ; வண்டுகளோடு பொற்கலசங்களும் மலரிதழ்களைச் சூழ்வன ; வரிசையாகவுள்ள வாழைமரங்களும் மகரதோரணங்களும் கமுகமரங்களும் காடாகச் சூழ்ந்துள்ளன —எ-று. (௫௦௩)

மாலை சூழ்புறங் கடைகளின் மணிநிரை விளக்கின்
கோல நீள்சுட ரொளியுடன் கோத்திடை தூக்கு
நீல மாமணி நிழல்பொர நிறமபுகர் படுக்கும்
பால வாயின பவளவே திகைமலர்ப் பந்தர்.

(இ-ள்.) பவளமணிகளாலாகிய மேடைகளி லிட்டிருக்கும் பூப்பந்தர்கள் மாலைகள்சூழ்ந்த தலைவாயில்களினும், வரிசையாகவுள்ள இரதினதீபங்களினும் அழகுமிக்க பேரொளியோடு இடையிடையேகோத்தத தூக்கும் பெரிய நீலரத்தினங்களின் ஒளிபாய்தலால், தன்னிறத்தைப் புகர்நிறமாகச் செய்யுந் தன்மையவாயின.—எ-று.

புகர்நிறம்=கபிலநிறம் ; அதாவது - கருமைகலந்த பொன்னிறம. மலர்ப்பந்தர் நிறம்புகர்படுக்கும் பாலவாயினவெனக் கூட்டுக. (௫௦௪)

தழைம லர்த்தடஞ் சாலைக டெற்றிகள் சதுக்கங்
குழைமு கத்தவ ராடரங் கிமையவர் குழாமும்
விழைசி றப்பின வியலிட மியாவையு மிடைந்து
மழைமு ழக்கென வியம்பின மங்கல வியங்கள்.

(இ-ள்.) தேவர்கூட்டமும்விரும்புஞ் சிறப்பினவாகிய தழைத்தமலர்களையுடைய தடாகங்களும், அறச்சாலைகளும், திண்ணைகளும், நாற்சந்திகளும் குண்டலத்தையணிந்த மாதர்கள் நடிக்கும் நடனசாலைகளும், பரந்த மற்றிடங்களுமாகிய எவ்விடங்களிலும், மங்கலவாத்தியங்கள் நெருங்கி மேகமுழக்கம்போல முழங்கியொலித்தன.—எ-று. (௫௦௫)

விரவு பேரணி வேறுவே றின்னன விளங்கும்
பிரச மென்மலர்ச் சோலைசூழ் பெருந்திரு வாரூ
ரரச ளிப்பவ ரருளினா லடியவர் குழுவும்
புரிச னங்களும் புறத்தணைந் தெதிர்கொளும் பொழுது.

(இ-ள்.) இவ்வாறான மிக்க அலங்காரங்கள் வெவவேறாக விளங்குகின்ற தேன்பொருந்திய மெல்லிய மலர்களையுடைய சோலைசூழ்ந்த பெரிய திருவாரூரில் அரசாட்சிசெய்யும் ஸ்ரீ தியாகராசப்பெருமானது திருவருளினால் அடியார் திருக்கூட்டங்களும், அந்நகரத்திலுள்ள மகாசனங்களும் நகர்ப்புறத்துவந்து பிள்ளையாரை எதிர்கொள்ளும்பொழுது.—எ-று.

'எதிர்தொழும்பொழுது' என்றும் பாடம்.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௫௬)

வந்தி றைஞ்சுமெய்த் தொண்டர்தங் குழாத்தெதிர் வணங்கிச்
சந்த முத்தமிழ் விரகராஞ் சண்பையர் தலைவ
ரந்த மாயுல காதியாம் பதிகமங் கெடுத்தே
யெந்தை தானெனை யென்றுகொ ளுங்கொலென் றிசைத்தார்.

(இ-ள்.) பண்ணமைந்த முத்தமிழ்விரகராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் தம்மை எதிர்கொண்டு வணங்கிய மெய்யடியார் திருக்கூட்டத்திற்கு எதிரில் தாமும் வணங்கி "அந்தமாயுலகாதியாம்" என்னு முதலையுடைய திருப்பதிகத்தைத்தொடங்கி, "எந்தைதானெனை யென்றுகொளுங்கொல்" என்று இறுதியிலமைத்துப் பாடியருளினார்.—எ-று.

அங்கு-அசைநிலை. (௫௭)

---

திருவாரூர் - பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

அந்தமாயுலகாதியுமாயினான்
வெந்தவெண்பொடிபூசியவேதியன்
சிந்தையேபுகுந்தான்றிருவாரூரெம்
மெந்தைதானெனையென்றுகொளுங்கொலோ.

வன்னிகொன்றைமதியொடுகூவிளஞ்
சென்னிவைத்தபிரான்றிருவாரூரை
மன்னுகாழியுள்ஞானசம்பந்தன்வாய்ப்
பன்னுபாடல்வல்லார்க்கில்லைபாவமே.

திருச்சிற்றம்பலம்.

---

ஆன வத்திருப் பதிகமும் பாடிவந் தணையு
ஞான வித்தகர் மெய்த்தவர் சூழவந் நகரார்
தூந றுஞ்சுண்ண மலர்பொரி தூய்த்தொழு தேத்த
வான நாயகர் கோயில்வா யிலின்மருங் கணைந்தார்.

(இ-ள்.) அவவாறாகிய திருப்பதிகத்தை யருளிச்செய்து அங்கு எழுந்தருளும் ஞான சொரூபராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார், மெய்ம்மையாகிய தவத்தினையுடைய திருத்தொண்டர்கள் தம்மைச் சூழ்ந்துவரவும், அந் நகரத்திலுள்ள மகாசனங்கள் தூய்மையாகிய நல்ல பொற்சுண்ணப்பொடிகளையும்- மலர்களையும்- பொரிகளையுந் தூவி வணங்கித் துதிக்கவும், தேவர்கள் நாயகராகிய ஸ்ரீ தியாகராசப்பெருமான் வீற்றிருந்தருளும் திருக்கோயிற் றிருவாயிலின் பக்கத்து வந்தருளினார்.—எ-று. (௬௦௮)

மன்னு தோரண வாயின்முன் வணங்கியுள் புகுவார்
தன்னு ளெவ்வகைப் பெருமையுந் தாங்கிய தகைத்தாம
பன்னெ டுஞ்சுடர்ப் படலையின் பரப்பினைப் பார்த்துச்
சென்னி தாழ்ந்துதே வாசிரி யன்றொழு தெழுந்தார்.

(இ-ள்.) நிலைபெற்ற மகரதோரணங்களையுடைய திருவாயிலின்முன்னே வணங்கி உள்ளே எழுந்தருளும் பிள்ளையார் தன்னிடத்து எவவகைப்பட்ட பெருமையையும் தாங்கும் தகைமையுடைத்தாய்ப் பலவாக விரிந்த ஒளிப்பிழம்பின் பரப்பினைப் பார்த்தருளித் தேவாசிரியமண்டபத்தைச் சிரமுறத் தாழ்ந்து வணங்கியெழுந்தார்.—எ-று.

திருமால் பிரமன் முதலியதேவர்களும் முனிவர்களும் திருத்தொண்டர்களும் இடைவிடாது நெருங்கப்பெற்ற தன்மையை யுடையதாகலின் 'தன்னுளெவவகைப் பெருமையுந்தாங்கிய தகைத்தாம்' என்று கூறினார்.

"பூவார் திசைமுக னிந்திரன பூமிசை
மாவா ழகலத்து மான்முத லானவர்
ஓவா தெவரு நிறைந்துறைந் துள்ளது.
தேவா சிரிய னெனுந்திருக் காவணம்"—என்றார் முன்னார்த் திருக்கூட்டச் சிறப்பினும். (௬௦௯)

மாடு சூழ்திரு மாளிகை வலங்கொண்டு வணங்கிக்
கூடு காதலிற் கோபுரம் பணிந்துகை குவித்துத்
தேடு மாலயர்க் கரியராய்ச் செழுமணிப் புற்றி
னீடு வார்முன்பு நிலமுறப் பலமுறை பணிந்தார்.

(இ-ள்.) பக்கத்திற் சூழ்ந்த திருமாளிகையைப் பிரதக்ஷணஞ்செய்து வணங்கி, பொருந்திய அன்பினால் திருக்கோபுரத்தை வணங்கித் (திருவடியையும் திருமுடியையும்) தேடிய திருமாலுக்கும் பிரமனுக்குங் காண்பதற்கு அரியராகிச் செழுமைபொருந்திய அழகிய புற்றினிடத்தில் வீற்றிருந்தருளும் ஸ்ரீவன்மீகநாதரது திருமுன்பு கைகளைச் சிரசின்மேற்குவித்துப் பூமியில் திருமேனி பொருந்தப் பலமுறை வணங்கியருளினார்.—எ-று. (௬௧௦)

பணிந்து வீழ்ந்தனர் பதைத்தனர் பரம்பிய புளக
மணிந்த மேனியோ டாடினர் பாடின ரறிவிற்
றுணிந்த மெய்ப்பொரு ளானவர் தமைக்கண்டு துதிப்பார்
தணிந்த சிந்தையின் விளைந்தெழு வேட்கையிற் றாழ்ந்தார்.

(இ-ள்.) மெய்யுணர்வினால் துணிந்து சொல்லப்பட்ட உண்மைப்பொருளாகிய ஸ்ரீ வன்மீகநாதனைத் தரிசித்துத் துதிக்குந் திருஞானசம்பந்தப்பிள்ளையார் (அவ்வெம்பெருமான்றிருமுன்னே) சாஷ்டாங்கமாகவிழுந்து வணங்கினார்; பதைபதைத்தார்; புளகாங்கிதராய் ஆனந்தக்கூத்தாடினார்; பாடினார்; சாந்தமாகிய தமது திருவுள்ளத்தினின்றும் அதிகரித்தெழுகின்ற அன்பினால் மீளவும் பணிந்தார்.—எ-று. (௫௧௧)

செஞ்சொல் வண்டமிழ்த் திருப்பதி கத்திசை யெடுத்து
நஞ்சு போனக மாக்கிய நம்பர்முன் பாடி
மஞ்சு சூழ்திரு மாளிகை வாயிலின் புறம்போந்
தஞ்செ ழுத்துமெய் யுணர்ந்தவர் திருமடத் தணைந்தார்.

(இ-ள்.) ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தின் மெய்ப்பொருளையுணர்ந்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் நல்ல சொற்களமைந்த இனிய தமிழ்த்திருப்பதிகத்தை இசையோடு எடுத்து (திருப்பாற்கடலிற்றோன்றிய) ஆலாகல விஷத்தை யுணவாகக் கொண்டருளிய ஸ்ரீ வன்மீகநாதர் திருமுன்னின்று பாடி, மேகங்கள்சூழ்ந்த திருமாளிகைத் திருவாயிலின்புறத்திற்சென்று திருமடத்தை யடைந்தருளினார். ()

அங்க ணைந்தமர்ந் தருளுவா ரானெறி யமர்ந்த
செங்க ணேற்றவர் சேவடி வணங்கிமுன் றிளைத்துப்
பொங்கு பேரொளிப் புற்றிடங் கொண்டவர் புனிதப்
பங்க யப்பதந் தொழுதுகா லந்தொறும் பணிந்தார்.

(இ-ள்.) அங்கு சென்று எழுந்தருளியிருக்குந் திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவானெறியென்னுந் திருக்கோயிலினுள் வீற்றிருந்தருளும் சிவந்த கண்க[illegible]யுடைய இடபத்தை வாகனமாகக்கொண்ட சிவபெருமானது திருவடிகளை வ[illegible]ங்கித் திருமுன்னின்று (ஆனந்தக்கடலுள்) முழுகி, மிக்க ஒளியையுடைய புற்[illegible]யிடமாகக் கொண்டருளிய வன்மீகநாதரது பரிசுத்தம்பொருந்திய தாமரை[illegible]ர் போன்ற திருவடிகளைவணங்கிக் காலந்தோறும் (வழுவாமற்) பணிந்துவந்தார். ()

புற்றி டங்கொளும் புனிதனைப் போற்றிசை பெருகப்
பற்று மன்பொடு பணிந்திசைப் பதிகங்கள் பாடி
நற்ற வத்திருத் தொண்டர்க ளுடனலஞ் சிறப்ப
மற்ற வண்பதி தன்னிடை வைகுமந் நாளில்.

(இ-ள்.) புற்றைத்தமக்கு இடமாகவுடைய ஸ்ரீவன்மீகநாதனைத் துதிக்கும் இசையானது எவ்விடத்தும் பரவப்பொருந்திய அன்போடும் வணங்கி, இசைபொருந்திய திருப்பதிகங்களைப் பாடியருளி, நல்ல தவத்தினையுடைய திருத்தொண்டர்களோடு நன்மை யதிகரிக்க, வளப்பம்பொருந்திய அத்திருப்பதியில் எழுந்தருளியிருக்கும்நாள்களில்.—எ-று.

இதுமுதல் இரண்டுபாடலுங் குளகம். (௫௧௪)

மல்ல னீடிய வலிவலங் கோளிலி முதலாத்
தொல்லை நான்மறை முதல்வர்தம் பதிபல தொழுதே
யெல்லை யிற்றிருப் பதிகங்க ளாற்பணிந் தேத்தி
யல்ல றீர்ப்பவர் மீண்டுமா ரூர்தொழ வணைந்தார்.

(இ-ள்.) ஆன்மாக்களுடைய பிறவித்துன்பத்தை நீக்கியருளுந் திருஞானசம்பந்தப்பிள்ளையார் பழமையாகிய நான்குவேதங்களுக்கும் முதல்வராகிய சிவபெருமான் எழுந்தருளிய வளப்பமிகுந்த திருவலிவலம்-திருக்கோளிலிமுதலிய பலதிருப்பதிகளையுந்தொழுது அளவற்ற திருப்பதிகங்களால் வணங்கித்துதித்து,மீளவும் திருவாரூரை வணங்கும்படி எழுந்தருளினார்.—எ-று. (ருகரு)

ஊறு காதலி லொளிவளர் புற்றிடங் கொண்ட
வாறு லாவிய சடைமுடி யையரைப் பணிந்து
நீறு வாழ்வென நிகழ்திருத் தொண்டர்க ளோடும்
ஈறி லாத்திரு ஞானசம் பந்தரங் கிருந்தார்.

(இ-ள்.) நித்தியப்பொருளாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அதிகரிக்கின்ற பெருவிருப்பத்தினால் ஒளிபொருந்திய புற்றை யிடமாகக்கொண்ட கங்கைநதி தவழுஞ் சடைமுடியையுடைய ஸ்ரீ வன்மீகநாதரைவணங்கி, திருவெண்ணீற்றையே பெருஞ்செல்வமாகக் கொண்டொழுகும் அடியார் திருக்கூட்டங்களோடும் அத்திருப்பதியில் எழுந்தருளினார்.—எ-று.

'ஈறில்சீர்' என்றும் பாடம். (ருகசு)

அங்கு நன்மையில் வைகுமந் நாள்சில வகல
நங்க டந்திரு நாவினுக் கரசரை நயந்து
பொங்கு சீர்ப்புக லூர்தொழ வருளினார் போவார்
தங்கு மப்பதிப் புறம்பணை சார்ந்தருள் செய்வார்.

(இ-ள்.) அத்திருப்பதியில் சுகமாக வாழ்ந்திருக்கும் நாள்களில் சிலநாள் [illegible]ழிய, நமது திருநாவுக்கரசுசுவாமிகளைக் காணவிரும்பி, [illegible]சிறப்பினையுடைய [illegible]ருப்புகலூரைவணங்கத் திருவுருளினால் எழுந்தருளுகின்றவர்,சிறப்புப்பொருந்திய [illegible]த்திருவாரூர்த் திருப்பதியின் புறத்திலுள்ள மருதநிலத்தை அடைந்தருள்செ[illegible]ராயினார்.—எ-று. (ருகஎ)

வேறு.

புவனவா ரூரினிற் புறம்புபோந் ததனையே நோக்கி நின்றே
யவமிலா நெஞ்சமே யஞ்சனீ யுய்யுமா றறிதியென்றே
சிவனதா ரூர்தொழாய் நீமற வாதென்று செங்கை கூப்பிப்
பவனமாய்ச் சோடையா யெனுந்திருப் பதிகமுன் பாடினாரே.

(இ-ள்.) உலகத்திற் சிறப்புற்றோங்கிய திருவாரூரின்புறத்தை யடைந்து அத்திருவாரூரைத் திரும்பிப்பார்த்து நின்று, குற்றமில்லாத என்னுடையமனமே! நீ அஞ்சாதே; யான் கூறும் உய்யுநெறியை அறிவாயாக; அதாவது, சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருவாரூரை நீ மறவாது வணங்குவாயாகவென்று தமது சிவந்த திருக்கரங்களைக் கூப்பி "பவனமாய்ச் சோடையாய்" என்னு முதலையுடைய திருப்பதிகத்தை அத்திருவெல்லையின் முன்னின்று பாடியருளினார்.—எ-று.

புவனவாரூர் - என்பதற்கு நீர்வளம்பொருந்திய திருவாரூர் எனினுமாம். ()

---

திருவாரூர் - பண் - காந்தாரம்.

*திருச்சிற்றம்பலம்.*

பவனமாய்ச்சோடையாய்நாவெழாப்பஞ்சுதோய்ச்சட்டவுண்டு
சிவனதாள்சிந்தியாப்பேதைமார்போலநீவெள்கினுயே
கவனமாய்ப்பாய்வதோரேறுகந்தேறியகாளகண்ட
னவனதாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சனெஞ்சே.

பல்விதழ்மாதவியல்லிவண்டியாழ்செயுங்காழியூர
னல்லவேநல்லவேசொல்லியஞானசம்பந்தனரு
ரெல்லியம்போதெரியாடுமெமீசனையேத்துபாடல்
சொல்லவேவல்லவர்தீதிலரோதநீர்வையகத்தே.

*திருச்சிற்றம்பலம்.*

---

காழியார் வாழவந் தருள்செயுங் கவுணியப் பிள்ளையார்தா
மாழியா னறியொணு வண்ணலா ரூபணிந் தரிதுசெல்வார்
பாழிமா லியானையின் னுரிபுனைந் தார்பனை யூர்பணிந்து
வாழிமா மறையிசைப் பதிகமும் பாடியப் பதியில்வைகி.

(இ-ள்.) சீகாழிப்பதியிலுள்ளாரனைவரும் சிவஞானப் பெருவாழ்வடையும்படிக் கவுணியர்கோத்திரத்தில் அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார், விஷ்ணுவினல் அறிதற்கரியவராகிய ஸ்ரீவன்மீகநாதரது திருவாரூரைவணங்கி நீங்குதற்கரிய ஆராமையோடுசெல்கின்றவர், பலம்பொருந்திய மதமயக்கத்தையுடைய (கயாசுரனென்னும்) யானையின் தோலையுரித்துப்போர்த்த சவுந்தரேசரது திருப்பனையூரைப்பணிந்து,சிறந்த திருநெறித்தமிழ்வேதமாகிய இனிய இசை பொருந்தி. திருப்பதிகமும்பாடி அத்திருப்பதியில்வசித்து.—எ-று.

வாழி = அசை நிலை.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௫[illegible])

அங்குநின் றரிதெழுந் தருள்வா ரகிலகா ரணருமானர்
தங்குநற் பதிகளும பிறபணிந் தருளிவண் டமிழ்புனைந்தே
யெங்குமெய்த் தவர்குழா மெதிர்கொளத் தொழுதெழுந்தருளிவந்[illegible]ர்
பொங்குதண் பாசடைப் பங்கயப் புனல்வயற் புகலூர்சார

(இ-ள்.) அத்திருப்பனையூரினின்றும் அருமையாக எழுந்தருளுகின்றவர் எல்லாவற்றிற்கும் முதற்காரணராக விளங்கும் சிவபெருமான் எழுந்தருளும் நன்மைபொருந்திய மற்றதிருப்பதிகளையும்வணங்கி வளவிய திருப்பதிகம்பாடியருளி, உண்மையாகிய தவத்தினையுடைய அடியார் திருக்கூட்டங்கள் எவ்விடத்தும் தம்மையெதிர்கொண்டுவணங்கத் தாமும்வணங்கி,விளங்குகின்ற குளிர்ந்த பசியஇலைகளையுடைய தாமரைகள் நிறைந்த நீர்வளம்பொருந்திய வயல்சூழ்ந்த திருப்புகலூரைச்சார எழுந்தருளி வந்தார்.—எ-று. (௫௦)

காவினுக் கரசரு நம்பிசீர் முருகரு மற்றுகாமச்
சேவுகைத் தவர்திருத் தொண்டரா னவர்கண்முன் சென்றுசீதப்
பூவினிற் பொலிபுனற் புகலியார் போதகத் தெதிர்பணிந்தே
மேவமற் றவருடன் கூடவே விமலர்கோ யிலையடைந்தார்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகளும் அருட்செல்வராகிய சிறந்தமுருகநாயனாரும், இடபத்தை யேறிநடத்தும் சிவபெருமானது அடியார் திருக்கூட்டங்களும் எதிர்சென்று, குளிர்ந்த தாமரைமுதலிய மலர்களால் விளங்குகின்ற நீர்வளம் பொருந்திய சீகாழியி லவதரித்த சிவஞானக் கன்றாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாருக் கெதிரேவணங்கி அவரோடுகலக்க, பிள்ளையாரும் அவ்வடியார் திருக்கூட்டங்களோடு கூடச் சிவபெருமானது திருக்கோயிலை யடைந்தருளினார்.—எ-று.()

வேறு.

தேவர்தந் தலைவனார் கோயிலைப்புக் கனைவருஞ் சீர்நிலத் துறவணங்கிப், பாவருந் தமிழிசைப பதிகமுன பாடிமுன் பரவுவார் புறம்பணைந்தே, தாவிலசீா முருகனார் திருமனைக்கெய்தியத் தனிமுதற் றொண்டரா தாமே யாவையுங் குறைவறுத் திடவமாந் தருளுவா ரினிதினங் குறையுநாளில்.

(இ-ள்.) தேவர்கள் நாயகராகிய சிவபெருமானது திருக்கோயிலினுள் புகுந்து அனைவரும்பூமியில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கிப் பரவிய அரிய இசையினையுடைய தமிழ்த்திருப்பதிகத்தை முன்னின்றுபாடி வணங்குந் திருஞானசம்பந்தப்பிள்ளையார் (அங்கு நின்றும்) புறத்திலெழுந்தருளிக் கெடாத சிறப்பினையுடைய முருகநாயனாரது திருமனையையடைந்து, ஒப்பற்ற முதன்மை பொருந்திய அந்நாயனார் திருவமுது செய்தற்குவேண்டிய எவற்றையும் குறைவற நடத்த, விரும்பியருள்பவராய் மகிழ்வாக அங்கு எழுந்தருளியிருக்கும் நாள்களில்.—எ-று. ()

நீலநக் கடிகளு நிகழ்சிறுத் தொண்டரு முடனணைந் தெய்துநீர்மைச்
சீலமெய்த் தவாகளுங் கூடவே கும்பிடுஞ் செய்கைநேர் நின்று வாய்மைச்
சீலமிக் குயாதிருத் தொண்டினுண மைத்திறந் தன்னையே தெளியநாடிக்
கோலமுய்த தவர்களோ டளவளா விக்கலந் தருளினா ராங்கநாடா.

(இ-ள்.) சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருநீலநக்கநாயனாரும், விளங்குகின்ற சிறுத்தொண்டநாயனாரும் அவர்களோடுகூடி வந்த நல்லொழுக்கத்தினையுடைய மெய்யடியார் திருக்கூட்டங்களும் தம்மோடு ஒருங்குகூடிவந்து சிவபெருமானை வணங்கும் செய்கையில் கலந்து நின்று, மெய்ம்மையமைந்த்துயர்ந்த திருத்தொண்டின உண்மைத்தன்மையைத் தெளிவாக ஆராய்ந்து, அதனால் அவர்களோடு காலம்போக்கிக் கலந்திருந்தருளினா.—எ-று. (ருஉந)

கும்பிடுங் கொள்கையிற் குறிகலந் திசையெனும் பதிகமுன் னனபாட
நம்பெருந் தலைமையால் நிலைமைசால பதியதன்பெருமைசால் புறவிளம்பி
யும்பரும் பரவுதற் குரியசொற் பிள்ளையா ருள்ளமெய்க் காதல் கூர
நம்பர்தம் பதிகளா யினவெலைப் பலவுமு னணணியே தொழுநயந்தார்.

(இ-ள்.) (திருமால் பிரமன்முதலிய) தேவர்களும் வணங்குதற்குரிய புகழையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையார் தாம் நாடோறுஞ் சிவபெருமானை வணங்குங் கொள்கையினால், "குறிகலந்த விசை" என்னும் பதிகமுதலையுடைய

திருப்பாடலில், தம் பெருந்தன்மையினால் அழியாத நிலைமைபெற்ற அத்திருப்பதியின் பெருமையை மிகுதியாகச்சிறப்பித்து தமது திருவுள்ளத்தில் மெய்ம்மையாகிய அன்பு அதிகரிக்கச் சிவபெருமான் வீற்றிருந்தருளும் மற்றத் திருப்பதிகளையும் முன்னேயடைந்து வணங்கும்படி விருப்பங்கொண்டருளினார்.—எ-று.

'உம்பரும் பரவுதற்குரிய சொற்பிள்ளையார்' என்பதற்கு, திருமால்முதலிய தேவர்களும் வணங்குதற்குரிய தேவாரத் திருப்பதிகங்களை அருளிச்செய்யும் பிள்ளையார், எனினுமாம். (௫உ௪)

---

திருப்புகலூர் - பண் - நட்டபாஷை.

திருச்சிற்றம்பலம்.

குறிகலந்தவிசைபாடலினானசையாலிவ்வுலகெல்லா
நெறிகலந்ததொருசீர்மையனாயெருதேறும்பலிபேணி
முறிகலந்ததொருதோலரைமேலுடையானிடமொய்ம்மலரின்
பொறிகலந்தபொழில்சூழ்ந்தயலேபுயலாரும்புகலூரே.

புற்றில்வாழுமரவம்மரையார்த்தவன்மேவும்புகலூரைக்
கற்றநல்லவர்காழியுண்ஞானசம்பந்தன்றமிழ்மாலை
பற்றியென்றுமிசைபாடியமாந்தர்பரமன்னடிசேர்ந்து
குற்றமின்றிக்குறைபாடொழியாப்புகழோங்கிப்பொலிவாரே.

திருச்சிற்றம்பலம்.

---

வேறு.

புள்ள லம்புதண் புனற்புக லூருறை புனிதனா ரருள்பெற்றுப்
பிள்ளை யாருட னாவினுக் கரசரும் பிறபதி தொழச்செல்வார்
வள்ள லார்சிறுத் தொண்டரு நீலநக் கரும்வளம் பதிக்கேக
வுள்ள மன்புறு முருகருங் கொழியவு முடன்பட விசைந்தார்கள்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் திருநாவுக்கரசுசுவாமிகளும் பறவைக் கூட்டங்கள் சப்திக்கின்ற குளிர்ந்த நீர்வளம்பொருந்திய திருப்புகலூரில் வீற்றிருந்தருளும் அக்கினீசுரரது திருவருளைப்பெற்று, மற்றத் திருப்பதிகளையும் வணங்கச்செல்லுங் கருத்துடையவர்களாய், வள்ளற்றன்மையையுடைய சிறுத்தொண்டநாயனாரும் திருநீலநக்கநாயனாரும் தத்தந் திருப்பதிகளுக்குச் செல்லவும், அன்புபொருந்திய திருவுள்ளத்தையுடைய முருகநாயனார் அத்திருப்புகலூரிலேயே தங்கவும் அவர்களுடன்படும்படித் தாமும் இசைந்தார்கள்.—எ-று.

வள்ளற்றன்மையாவது, வேண்டுவோர் வேண்டியவற்றை வரையாது கொடுக்கும் ஔதாரிய குணம். அது, சிவபெருமான் பைரவத் திருவேடங்கொண்டெழுந்தருளி எமக்கு நரமாமிசம் படைக்கவென, அவ்வாறே தமது புத்திரனையரிந்து சமைத்தூட்டினமையாம்.

சிறுத்தொண்டநாயனார் தமது திருப்பதியாகிய திருச்செங்காட்டங்குடிக்கும், திருநீலநக்கநாயனார் தமது திருச்சாத்தமங்கைக்குஞ் செல்லவும், முருகநாயனார் தமது க்ஷேத்திரமாகிய அத் திருப்புகலூரிலேயே தங்கவும் உடன்பட்டன

ரு்க. பிள்ளையாருடனாவினுக்கரசரும் பிறபதி தொழச் செல்வாராய் இசைந்த னமொனக் கூட்டுகே. (இஉடு)

கண்ணு கன்புக லூரினைத் தொழுதுபோம் பொழுதினிற் கடற்காழி
யண்ண லார்திரு நாவினுக் கரசர்த மருகுவிட் டகலாதே
வண்ண நித்திலச் சிவிகையும பின்வர வழிக்கொள வுறுங்காலை
யெண்ணில் சீர்த்திரு நாவினுக் கரசரு மற்றவாக் கிசைக்கின்றார்.

(இ-ள்.) இடமகன்ற திருப்புகலூரை வணங்கிச் செல்லும்பொழுது கடற்கரையிலுள்ள சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருநாவுக்கரசுசுவாமிகளை விட்டுப்பிரியாமல் அழகிய முத்துச்சிவிகையும் பின்னேவர வழிக்கொள்ளும்பொழுது, அளவற்ற சிறப்பினையுடைய திருநாவுக்கரசுசுவாமிகளும் அவ்வாளுடைய பிள்ளையாரைநோக்கி அருளிச்செய்கின்றார்.—எ-று. (ருஉசு)

நாய னாருமக் களித்தருள் செய்தவிந் நலங்கிள ரொளிமுத்தின்
றூய யானத்தின் மிசையெழுந் தருளுவீ ரென்றலுஞ் சுடர்த்திங்கண்
மேய வேணியா ரருளுமிவ் வாறெனில் விரும்புதொண் டர்களோடும்
போய தெங்குநீ ரங்குயான் பின்வரப் போவதென் றருள்செய்தார்.

(இ-ள்.) சிவபெருமான உமக்குக் கொடுத்தருளிய இந்த அழகுவிளங்கும் ஒளிபொருந்திய முத்துக்களாலாகிய பரிசுத்தமான சிவிகையின்மேல் எழுந்தருளுவீரென்று கூறவும், (அதற்குப்பிள்ளையார்) விளங்குகின்ற சந்திரனையணிந்தசடைமுடியையுடைய சிவபெருமான் றிருவருளும் இவ்வாறெனில், விரும்புகின்ற அடியார்களோடும் நீர் முன்பு எங்கு எழுந்தருளுகின்றீரோ அங்கு யானும் பின் வருவேனென்று அருளிச்செய்தார்.—எ-று. (ருஉஎ)

என்று பிள்ளையார் மொழிந்தருள் செய்திட விருந்தவத் திறையோரு
நன்று நீரருள் செய்ததே செய்வனென் றருள்செய்து நயப்புற்ற
வன்றை நாண்முத லுடன்செலு நாளெலா மவ்வியல் பினிற்செல்வார்
சென்று முன்னுறத் திருவம்ப ரணைந்தனர் செய்தவக் குழாத்தோடும்.

(இ-ள்.) இவ்வாறு திருஞானசம்பந்தப்பிள்ளையார் கூறியருள, சிறந்த த்தலைவராகிய திருநாவுக்கரசுசுவாமிகளும் (அவரைப்பார்த்து) இது நன்று; நீர் ளிச்செய்தபடியே செய்வேனென்று கூறியருளி, அவ்வாறு செய்யவிரும்பிய றுமுதல் அவருடன் செல்லுநாளெல்லாம் அவ்வாறே செல்பவராய் முன் சென்று, அ[illegible]க்கச்செய்யுந் தவத்தினையுடைய அடியார் திருக்கூட்டத்தும் திருவம்பர் என்னுந் திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று (ருஉஅ)

மை மன்னருந் தமபிரா னருள்வழி நிற்பது தலைச்செல்வார்
பண்பு மேம்படு பனிக்கதிர் நித்திலச் சிவிகையிற் பணிந்தேறி
வண்பெ ரும்புக லூரினைக் கடந்துபோய வரும்பரி சனத்தோடுந்
திண்பெ ருந்தவ ரணைந்ததெங் கென்றுபோய்த் திருவம்பர் நகர்புக்கார்.

(இ-ள்.) சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் சிவபெருமான்றிருவருளின்வழியே ஒழுகுதலைமேற்கொள்பவராய்ச் சிறந்த குணத்தையுடைய குளிர்ந்த கிரணங்களைவீசும் முத்துச்சிவிகையின்மேல்வணங்கி யேறியருளி, வளம்பொருந்திய திருப்புகலூரைக் கடந்துசென்று, மிக்க தவத்தினையுடைய திரு

நாவுக்கரசுசுவாமிகள் தம்முடன்வரும் அடியார் திருக்கூட்டத்தோடும் எங்குசென்றாரென்று வினவிப்போய்த் திருவம்பரென்னும் திருப்பதியை யடைந்தருளினார்.()

அம்பர் மாநக ரணைந்துமா காளத்தி லண்ணலா ரமர்கின்ற
செம்பொன் மாமதிற் கோயிலை வலங்கொண்டு திருமுன்பு பணிந்தேத்தி
வம்பு லாமலர் தூவிமுன் பரவிய வண்டமி ழிசைமாலை
யும்பர் வாழநஞ் சுண்டவர் தமைப்பணிந் துருகுமன் பொடுதாழ்ந்தார்.

(இ-ள்.) திருவம்பர் என்னும் பெரிய திருப்பதியை யடைந்து மாகாளத்தில் சிவபெருமான் எழுந்தருளிய சிவந்த பொன்மயமாகிய பெரியமதில்கள்சூழ்ந்த திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்து சந்நிதியில் நின்று வணங்கித் துதித்து, வாசனை கமழும் மலர்களைத் தூவி, முன் பாடியருளிய வளவிய இசையமைந்த திருப்பதிகத்தினால் தேவர்கள் வாழும்படி ஆலாகலவிஷத்தை யமுது செய்தருளிய ஸ்ரீகாளகண்டேசுரரைப் பணிந்து மனமுருகுதற்குக் காரணமாகிய அன்புடன் வணங்கி யருளினார்.—எ-று.

மாகாளம் என்பது திருவம்பர்என்னுந் திருப்பதியில் சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக்கோயிலின் பெயர். (௫௬௦)

தாழ்ந்து நாவினுக் கரசுடன் நம்பிரான் கோயின்முன் புறமெய்திச்
சூழ்ந்த தொண்டரோ டப்பதி யமர்பவர் சுரநதி முடிமீது
வீழ்ந்த வேணியர் தமைப்பெறுங் காலங்கள் விருப்பினுற கும்பிட்டு
வாழ்ந்தி ருந்தனர் காழியார் வாழவந் தருளிய மறைவேந்தர்.

(இ-ள்.) சீகாழியிலுள்ளவர்கள் சிவஞானப் பெருவாழ்வடையும்படி அவதரித்தருளிய வேதமுதல்வராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் ஸ்ரீ காளகண்டேசுரரை வணங்கித் திருநாவுக்கரசுசுவாமிகளுடன் அவ்வெம்பெருமான் திருக்கோயிலின் முன்புறத்திலடைந்து தம்மைச்சூழ்ந்திருக்கும் அடியார்திருக்கூட்டத்தோடும் அத்திருப்பதியில் வசிப்பவராய், கங்கைநதி வீழ்தற்கு இடமாகிய சடைமுடியுடைய சிவபெருமானை வணங்குதற்குரிய காலங்களதோறும் விருப்பத்தோடு வணங்கிச் சுகமாக எழுந்தருளி யிருந்தார் —எ-று. (௫௬

பொருவி லாதசொற் புல்குபொன் னிறமுதற் பதிகங்க ளாற்போற்றித்
திருவி னார்ந்தகோச் செங்கணா னாங்காச் செய்தகோ யிலைச்சேர்ந்து
மருவு வாய்மைவண் டமிழ்மலர் மாலையவ் வளவனைச் சிறப்பித்துப்
பெருகு காதலிற் பணிந்துமுன் பரவினார் பேணிய வுணர்வோடும்.

(இ-ள்.) ஒப்பற்ற நல்ல சொற்களமைந்த "புல்கு பொன்னிறம்" முதலிய திருப்பதிகங்கள்பாடித் துதித்து, பலவகைச் செல்வங்களால் நிறைந்த கோச்செங்கட்சோழநாயனார் அத்திருப்பதியிற்செய்ததிருஅம்பர்ப்பெருந்திருக்கோயிலையடைந்துமெய்ம்மைபொருந்திய வளவிய திருப்பதிகத்தில் அக் கோச்செங்கட்சோழநாயனாரைச் சிறப்பித்து மிக்க விருப்பத்தோடும் வணங்கிப் பொருந்திய மெய்யுணர்வினால் திருமுன்னின்று துதித்தார்.—எ-று. (௫௬௨)

---

**திருஅம்பர்மாகாளம் - பண் - நட்டராகம்.**

*திருச்சிற்றம்பலம்.*

புல்குபொன்னிறம்புரிசடைநெடுமுடிப்போழிளமதிசூழப்
பில்குதேனுடைநறுமலர்க்கொன்றையும்பிணையல்செய்தவர்மேய
மல்குதண்டுறையரிசிலின்வடகரைவருபுனன்மாகாளம்
மல்லுநண்பகலுந்தொழுமடியவர்க்கருவினையடையாவே.

மாறுதன்னெடுமண்மிசையில்லதுவருபுனன்மாகாளத்
தீறுமாதியுமாகியசோதியையேறமர்பெருமானை
நாறுபூம்பொழிற்காழியுள்ஞானசம்பந்தனதமிழ்மாலை
கூறுவாரையுங்கேட்கவல்லாரையுங்குற்றங்கள்குறுகாவே.

*திருச்சிற்றம்பலம்.*

சுவாமிபெயர் - **காளகண்டேசர்**, தேவியார் - **மகாதேவியம்மை.**

---

**திருஅம்பர்ப்பெருந்திருக்கோயில் - பண் - காந்தாரபஞ்சமம்.**

*திருச்சிற்றம்பலம்.*

எரிதரவனல்கையிலேந்தியெல்லியி
னரிதிரிகானிடைநட்டமாடுவ
ரரிசிலம்பொருபுனலம்பர்மாநகர்க்
குரிசில்செங்கணவன்கோயில்சேர்வரே.

அழகனையடிகளையம்பர்மேவிய
நிகழ்கழ்சடைமுடிநீலகண்டனை
யுமிழ்திரையுலகினின்மேலாதுவீர்கொண்மின்
றமிழ்கெழுவிறகினன்றமிழ்செயமாலையே.

*திருச்சிற்றம்பலம்.*

சுவாமிபெயர்-**பிரமபுரீநாதர்**; தேவியார்-**பவளவண்ணப்பூங்குழலம்மை.**

---

ன்ன வாறுசொன் மாலைக ளாற்றுதித் திறைஞ்சியங் கமர்நாளிற்
ானி மாமதிற் றிருக்கட வூர்தொழக் காதல்செய் ருளிப்போய்
னு கோயில்கள் பிறவு வணங்கியே வாக்கின்மன் னவரோடு
ம ரு டும்பதி யணை வுறக் கலயரோ டடியவ ரெதிர்கொண்டார்.

(இ-ள்.) இவ்வாறு நல்ல சொற்களமைந்த திருப்பதிகங்களால் துதித்து வணங்கி அத்திருப்பதியில் எழுந்தருளியிருக்குநாள்களில், அழியாத பெரியமதில் சூழ்ந்த திருக்கடவூரை வணங்க விருப்பங்கொண்டுசென்று, மற்றத்திருப்பதிகளில் பொருந்திய திருக்கோயில்களை வணங்கித் திருநாவுக்கரசுசுவாமிகளுடன் அந்தப் பெரிய திருக்கடவூரைச் சமீபிக்கவும் குங்குலியக்கலயநாயனாரோடு அடியார் திருக்கூட்டங்களும் எதிர்கொண்டார்கள்.—எ-று.

திருக்கடவூர் என்பது, மார்க்கண்டேயர்பொருட்டுச் சிவபெருமான் இயமனையுதைத்த க்ஷேத்திரமாதலின், இது அட்டவீரட்டத்தொன்று. (௫௩௩)

மற்ற வண்பதி யணைந்துவீ ரட்டத்து மழவிடை யார்கோயிற்
சுற்று மாளிகை வலங்கொண்டு காலனை யுதைத்துருட் டியசெய்ய
பொற்சி லம்பணி தாமரை வணங்கிமுன் போற்றியுய்ந் தெதிர்நின்று
பற்ற றுப்பவர் சடையுடை யானெனும் பதிகவின் னிசைபாடி.

(இ-ள்.) ஆன்மாக்களின் பாசபந்தங்களை யொழித்தருளும் திருஞானசம்பந்தப்பிள்ளையார் வளப்பம்பொருந்திய அத்திருக்கடவூரையடைந்து திருவீரட்டானத்தில் எழுந்தருளும் இளமைபொருந்திய இடபவாகனத்தையுடைய அமிர்தகடேசரது திருக்கோயிலைச்சூழ்ந்த அழகிய திருமாளிகையைப் பிரதக்ஷணஞ் செய்து, இயமனையுதைத் துப் பூமியிலுருட்டிய சிவந்தபொற்சிலம்பையணிந்த தாமரை மலர்போன்ற திருவடிகளை வணங்கி முன்னின்றுதுதித்து ஆனந்தமடைந்து எதிரில் நின்று, "சடையுடையான்" என்னுமுதலையுடைய திருப்பதிகத்தை இனிய இசையோடு பாடியருளி.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (நுஙச)

---

**திருக்கடவூர்த் திருவீரட்டானம்-பண்-காந்தாரபஞ்சமம்.**

திருச்சிற்றம்பலம்.

சடையுடையானுநெய்யாடலானுஞ்சரிகோவண
வுடையுடையானுமையார்ந்தவொண்கண்ணுமைகேள்வனுங்
கடையுடைநன்னெடுமாடமோங்குங்கடவூர்தனில்
விடையுடையண்ணலும்வீரட்டானத்தரனல்லனே.

வெந்தவெண்ணீறணிவீரட்டானத்துறைவேந்தனை
யந்தணர்தங்கடவூருளானையணிகாழியான்
சந்தமெல்லாமடிச்சார்த்தவல்லமறைஞானசம்
பந்தனசெந்தமிழ்பாடிபாடக்கெடும்பாவமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-**அமிர்தகடேசர்**, தேவியார்-**அபிராமியம்மை.**

பரவி யேத்தியங் கரிதினிற் போந்துபார் பரவுசீ ரரசோடு
விரவு நண்புடைக் குங்கிலி யப்பெருங் கலயர்தம் மனைமேவிக்
கரையில் காதன்மற் றவரமைத் தருளிய விருந்தினி தமர்ந்தங்குச்
சிரபு ரத்தவர் திருமயா னமும்பணிந் திருந்தனர் சிறப்பெய்தி.

(இ-ள்.) சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் வணங்கித் துதித்து, அங்குநின்று நீங்குதற்கரிய ஆராமையோடும் புறத்திற்சென்று, உலகத்தார் துதிக்கத்தக்க புகழினையுடைய திருநாவுக்கரசுசுவாமிகளுடன் பொருந்திய நண்பினையுடைய சிறந்த குங்கிலியக்கலயநாயனாரது திருமனையை யடைந்தருளி, அளவற்ற விருப்பத்தினையுடைய அவர் அமைத்தருளிய விருந்தை இனிமையாக

வுண்டு, அங்குள்ள திருக்கடவூர் மயானத்தையும் வணங்கிச் சிறப்புற்று எழுந்தருளியிருந்தார்.—எ-று. (ருசுரு)

சிறப்பு டைத்திருப் பதியத னிடைச்சில நாளமர்ந் தருளோடும்
விறற்பெ ருங்கரி யுரித்தவர் கோயில்கள் விருப்பொடுந் தொழச்செல்வார்
மறைப்பெ ருந்திருக் கலயரு முடன்பட வணங்கிய மகிழ்வோடு
மறப்பெ ரும்பய னனையவத் தொண்டரோ டணைந்தனர் திருவாக்கூர்.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய அத்திருப்பதியில் சிலநாள் வசித்திருந்து (உயிர்களின்மேல்வைத்த) கருணையினால், வல்லமைபொருந்திய பெரிய (கயாசுரனென்னும்) யானையையுரித்துப்போர்த்த சிவபெருமான் எழுந்தருளுந் திருக்கோயில்கள் பலவற்றையும் விருப்பத்தோடு வணங்கச்செல்லுந் திருஞானசம்பந்தப்பிள்ளையார் வேதியர்குலத்திற் றோன்றிய மிக்க திருவருட்செல்வத்தையுடைய குங்கிலியக்கலயநாயனாரும் உடன்பட, சிவபெருமானை வணங்கிய மகிழ்ச்சியோடும், சிவபுண்ணியத்தின் பெரும்பயனையொத்த அவ்வடியவரோடு திருவாக்கூர் என்னுந் திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று. (ருசுசு)

தக்க வந்தணர் மேவுமப் பதியினிற் றான்றோன் றி மாடத்துச் [டி
செக்கர் வார்சடை யணணலைப் பணிந்திசைச் செந்தமிழ்த் தொடைபா
மிக்க கோயில்கள் பிறவுடன் றொழுதுபோய் மீயச்சூர் பணிந்தேத்திப்
பக்கம் பாரிடம் பாடநின் றாடுவார் பாம்பு நகர்சேர்ந்தார்.

(இ-ள்.) தகுந்த நல்லொழுக்கத்தையுடைய வேதியர்கள்வாழும் அத்திருவாக்கூர்த் திருப்பதியில் தான்றோன்றி மாடமென்னுந் திருக்கோயிலில் எழுந்தருளும் செவ்வானம்போலும் நீண்ட சடைமுடியையுடைய சுயம்புநாதனை வணங்கி இசையமைந்த செந்தமிழ்த் திருப்பதிகம்பாடியருளி, சிறப்புப்பொருந்திய மற்றத் திருக்கோயில்களையும் வணங்கிச் சென்று, திருமீயச்சூர்என்னுந் திருப்பதியை வணங்கித் துதித்து, இருபக்கங்களிலும் பூதகணங்கள் துதிக்க நின்றாடியருளும் சிவபெருமானது திருப்பாம்புரமென்னுந் திருப்பதியை யடைந்தருளினார். ()

[...]ம்பு ரத்துறை பரமனைப் பணிந்துநற் பதிகவின் னிசைபாடி
வ[...]பு னற்சடை முடியினார் மகிழ்விட மற்றுமுள் ளனபோற்றிக்
க[...]ி னிற்றிகழ் கரும்பொடு செந்நெலின் கழனியம் பணைநீங்கித்
தே[...]பொ ழிற்றிரு வீழிமா மிழலையின் மருங்குறச் செல்கின்றார்.

(இ-ள்.) திருப்பாம்புரத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமானை வணங்கி, இனி[...] இசைபொருந்திய நல்ல திருப்பதிகம்பாடியருளி, தாவிச்செல்லுகின்ற கங்கை[...] யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமான் மகிழ்ந்து எழுந்தருளும் மற்[...] திருப்பதிகளையுந் துதித்து, மூங்கிலைப்போல் உயர்ந்து விளங்குகின்ற கரும்பஞ்சோலைகளும் செந்நெற்பயிர்களும்நிறைந்த வயல்களையுடைய மருதநிலத்தைக் கடந்து, தேன்பொருந்திய சோலைகள்சூழ்ந்த சிறந்த திருவீழிமிழலையின் பக்கத்தில் செல்கின்றவராயினார்.—எ-று. (ருசுஅ)

வேறு.

அப்பொழுதி னண்ட வரசை யெதிர்கொண்ட
மெய்ப்பெருமை யந்தணர்கள் வெங்குருவாழ் வேந்தனார்

பிற்படவந் தெய்தும் பெரும்பேறு கேட்டுவப்பா
ரொப்பரிசி லல்வந் தணைந்தங் கெதிர்கொண்டார்.

(இ-ள்.) அப்பொழுது திருநாவுக்கரசுசுவாமிகளை எதிர்கொண்ட உண்மையாகிய பெருமைபொருந்திய (திருவீழிமிழலையில் வாழும்) வேதியர்கள் சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் பின்னால்வந்து சேரும் பெரும்பயனைக் கேள்விப்பட்டுச் சந்தோஷிப்பவர்களாய் எத்தகையசிறப்போடுவந்து அங்கு அவரை எதிர்கொண்டார்கள் (என்றால்).—எ-று. (ருகக)

நிறைகுடந் தூபதீப நீடநிரைத் தேந்தி
நறைமலர்ப் பொற்சுண்ண நறும்பொரியுந் தூவி
மறையொலிபோய் வானளப்ப மாமுரச மார்ப்ப
விறைவர்திரு மைந்தர்தமை யெதிர்கொள்வர வேற்றார்.

(இ-ள்.) பூரணகும்பங்களையும் தூபதீபங்களையும் வரிசையாக நெருங்க ஏந்தி, தேன்நிறைந்த மலர்களோடு பொற்சுண்ணங்களையும் நல்ல பொரிகளையுந் தூவி,வேதபாராயண வோசைசென்று விண்ணுலகத்தை யளக்கவும், பெரியமுரசவாத்தியங்க ளொலிக்கவும் சிவபெருமான் திருக்குமாரராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளை எதிர்கொண்டார்கள்.—எ-று. (ருசo)

வந்துதிரு வீழி மிழலைமறை வல்ல
வந்தணர்கள் போற்றிசைப்பத் தாமுமணி முத்தின்
சந்தமணிச் சிவிகை நின்றிழிந்து தாழ்ந்தருளி
யுய்ந்தமறை யோர்தம் முடனணைந்தங் குள்புகுவார்.

(இ-ள்.) இவ்வாறு எதிர்கொண்டுவந்து திருவீழிமிழலையில்வாழும் வேதங்களில் வல்ல பிராமணர்கள் துதிக்கத் திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் அழகிய முத்துச்சிவிகையினின்றும் இறங்கி வணங்கியருளி, பேறுபெற்றுய்ந்த வேதியர்களோடுசேர்ந்து அத்திருப்பதியினுள் எழுந்தருளுவாராயினார்.—எ-று. (ருசக)

அப்போ தரையார் விரிகோ வணவாடை-
யொப்போ தரும்பதிகத் தோங்கு மிசைபாடி
மெய்ப்போதப் போதமர்ந்தார் தங்கோயின் மேவினார்
கைப்போது சென்னியின்மேற் கொண்டு கவுணியனார்.

(இ-ள்.) அப்பொழுது கவுணியர் குலத்தலைவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் தாமரைமலர்போன்ற திருக்கரங்களைச் சிரசின்மேற் குவித்துக் கொண்டு "அரையார் விரிகோவணவாடை" என்னும் முதலையுடைய ஒப்பற்ற திருப்பதிகத்தை மிக்க இசையோடும் பாடியருளி, உண்மைஞானத்தையுணர்ந்த மெய்யடியார்களுடைய இதயகமலத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானது திருக்கோயிலை யடைந்தருளினார்.—எ-று. (ருசஉ)

---

**திருவீழிமிழலை - பண் - தக்கராகம்.**

திருச்சிற்றம்பலம்.

**அரையார்விரிகோவணவாடை, நரையார்விடையூர்தியந்தான்**
**விரையார்பொழில்வீழிம்மிழலை, யுரையாலுணர்வாருயர்வாரே.**

களிர்காழியுள்ஞானசம்பந்தன், குளிரார்சடையானடிகூற
மிளிரார்பொழில்வீழிம்மிழலை, கிளர்பாடல்வல்லார்க்கில்லைகேடே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - வீழியழகர், தேவியார் - சுந்தரகுசாம்பிகை.

நாவின் றனிமன்னர் தாமு முடனண்ண
மேவிய விண்ணிழிந்த கோயில் வலங்கொள்வார்
பூவியலு முந்தியான் போற்றப் புவிக்கி ழிந்த
தேவியலு மெய்கண்டு சிந்தைவியப் பெய்தினார்.

(இ-ள்.) ஒப்பற்ற திருநாவுக்கரசுசுவாமிகளும் தம்மோடு எழுந்தருள அங்குள்ள விண்ணுலகினின்றுமிழிந்த விமானக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்கின்றவர், நாபிக்கமலத்தையுடைய திருமால்வணங்குங் காரணத்தினால் உலகத்தில் இறங்கிய தெய்வத்தன்மைபொருந்திய (அவ்விமானத்தின்) திருவுருவத்தைக்கண்டு தமது திருவுள்ளத்தில் அதிசயமடைந்தருளினார்.—எ-று. (ருசங)

வலங்கொண்டு புக்கெதிரே வான நதியின்
சலங்கொண்ட வேணித் தனிமுதலைத் தாழ்ந்து
நிலங்கொண்ட மேனியராய் நீடுபெருங் காதல்
புலங்கொண்ட சிந்தையினாற் பொங்கியிசை மீப்பொழிந்தார்.

(இ-ள்.) திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்து உள்ளேபுகுந்து, கங்கை நீரையணிந்த சடைமுடியையுடைய ஒப்பற்ற சிவபெருமானைவணங்கிப் பூமியிற் படிந்த திருமேனியுடையவராய் அதிகரித்த பெருவிருப்பமானது இடமாகக்கொண்ட திருவுள்ளத்துடன் இசையாகப் பாடியருளினார்.—எ-று. (ருசச)

போற்றிச் சடையார் புனலுடையா னென்றெடுத்துச்
சாற்றிப் பதிகத் தமிழ்மாலைச் சந்தவிசை
யாற்ற மிகப்பாடி யானந்த வெள்ளத்தி
னீற்றழகர் சேவடிக்கீழ் நின்றலைந்து நீடினார்.

(இ-ள்.) துதித்து "சடை[illegible]யான்" என்று முதலில்தொடங்[illegible] தமிழ்த்திருப்பதிகத்தமைந்த பண்ணை இசைபெருகப்பாடி[illegible]ண[illegible]றக்கோலமுடைய சிவபெருமானது திருவடியின்கீழ் நிலைபெற்றுச் சிவா[illegible]ப்பருவெள்ளத்தில் மூழ்கிச் சிறந்தார்.—எ-று. (ருசரு)

---

திருவீழிமிழலை - பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

சடையார்புனலுடையானொருசரிகோவணமுடையான்
படையார்மழுவுடையான்பல்பூதப்படையுடையான்

மடமான்விழியுமைமாதிடமுடையானெனையுடையான்
விடையார்கொடியுடையானிடம்வீழிம்மிழலையே.

வீழிம்மிழலைமேவியவிகிர்தன்றனைவினைசேர்
காழிந்கர்க்கலைஞானசம்பந்தன்றமிழ்பத்தும்
யாழின்னிசைவல்லார்சொலக்கேட்டாரவரெல்லா
மூழின்வலிவினைபோயிடவுயர்வானடைவாரே.

திருச்சிற்றம்பலம்.

நீடியபே ரன்புருகி யுள்ளலைப்ப நேர்நின்று
பாடியெதி ராடிப் பரவிப் பணிந்தெழுந்தே
யாடிய சேவடிக ளார்வமுற வுட்கொண்டு
மாடுயர் கோயிற் புறத்தரிது வந்தணைந்தார்.

(இ-ள்.) மிக்க பேரன்பானது உள்ளத்தையுருக்கி யலைக்கத் திருமுன்னின்றுபாடி எதிரில் ஆனந்தக்கூத்தாடித் துதித்து வணங்கி யெழுந்து, கனகசபையில் திருநடனஞ்செய்தருளுந் திருவடிகளை அன்போடு திருவுள்ளத்திற்சிந்தித்து, உயர்ந்த திருக்கோயிலின்புறத்து நீங்குதற்கரிய ஆராமையோடும்வந்துசேர்ந்தருளினார்.—எ-று. (௫௩௬)

வந்தணைந்து வாழ்ந்து மதிற்புறத்தோர் மாமடத்துச்
செந்தமிழ்ச்சொல வேந்தருஞ் செய்தவருஞ் சேர்ந்தருளச்
சந்தமணிக் கோபுரத்துச் சாரந்தவட பாற்சண்பை
யந்தணர்சூ ளாமணியா ரங்கோர் மடத்தமர்ந்தார்.

(இ-ள்.) இவ்வாறு வந்துசேர்ந்து சிவானந்தப் பெருவாழ்வடைந்து திருமதிலின்புறத்திலுள்ள ஒருபெரியதிருமடத்தில் சிறந்த திருநாவுக்கரசுசுவாமிகளும் அருமையாகச்செய்த தவத்தினையுடைய திருத்தொண்டர்களுஞ் சேர்ந்தருள, சீகாழியிலுள்ள வேதியர் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அழகிய திருக்கோபுரத்தைச்சார்ந்தவடபக்கத்திலுள்ளஒருதிருமடத்தில் எழுந்தருளினார்.எ-று.

அங்க ணமர்வா ரரனா ரடியிணைக்கீழ்த்
தங்கிய காதலின்ற காலங்க டப்பாமே
பொங்குபுகழ் வாகீச ருங்கூடப் போற்றிசைத்தே
யெங்குமிடர் தீர்ப்பா ரின்புற் றுறைகின்றார்.

(இ-ள்.) அத்திருமடத்தில் எழுந்தருளிய பிள்ளையார் சிவபெருமானது இரண்டு திருவடிகளிலும் பொருந்திய அன்பினால் காலங்கடோறுந் தவறாமல் மிக்க புகழையுடைய திருநாவுக்கரசுசுவாமிகளும் உடன்வரச்சென்று அவ்வெம்பெருமானைத்துதித்து,உலகமெங்குமுள்ள ஆன்மகோடிகளின்பிறவித்துன்பத்தை நீக்குகின்றவராய் மகிழ்ந்து வசித்தருளினார்.—எ-று. (௫௩௮)

ஓங்குபுனற் பேணு பெருந்துறையு முள்ளிட்ட
பாங்கார் திலதைப் பதிமுற்ற மும்பணிந்து

வீங்கொலிநீர் வீழி மிழலையினின் மீண்டுமணைந்
தாங்கினிது கும்பிட் டமர்ந்தொழுகு மந்நாளில்.

(இ-ள்.) நீர்வளப்ப மிகுந்த திருப்பேணுபெருந்துறையையும், அதனுள்ளடங்கிய திலதைப்பதியின் திருமுற்றத்தையும் வணங்கி, ஒளிமிகுந்த நீர்சூழ்ந்த திருவீழிமிழலைக்கு மீளவும் எழுந்தருளி அங்கு வீழியழகரை வணங்கித் தங்கியிருக்கும் நாள்களில்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (ருசக)

வேறு.

சேணுயர் மாடப் புகலியுள்ளார் திருஞான சம்பந்தப் பிள்ளையாரைக், காணும் விருப்பிற் பெருகுமாசை கைம்மிகு காதல்கரையிகப்பப், பூணு மனத்தொடு தோணிமேவும பொருவிடை யார்மலர்ப் பாதம் போற்றி, வேணு புரத்தை யகன்றுபோந்து வீழிமிழலையில் வந்தணைந்தார்.

(இ-ள்.) விண்ணுலகளவு முயர்ந்த மாளிகைகளையுடைய சீகாழிப்பதியிலுள்ள பிராமணர்கள் திருஞானசம்பந்தப்பிள்ளையாரைத் தரிசிக்கவேண்டுமென்னும் அன்பினால் அதிகரித்த ஆசையான து அளவுகடந்து வளர, அன்புபொருந்திய மனதோடும் திருத்தோணியில் வீற்றிருந்தருளும் ரிஷபாரூடராகிய சிவபெருமானதுதாமரைமலர்போன்ற திருவடிகளைத்துதித்து அச்சீகாழிப்பதியைவிட்டுநீங்கிப் புறப்பட்டுத் திருவீழிமிழலைக்கு வந்து சேர்ந்தார்கள்.—எ-று. (ருரு0)

ஊழி முடிவி லுயர்ந்த வெள்ளத் தோங்கிய காழி யுயர்பதியில்
வாழி மறையவர் தாங்க ளெல்லாம வந்து மருங்கணைந் தார்களென்ன
வீழி மிழலையின் வேதியர்கள் கேட்டு மெய்ஞ்ஞான முண்டாரைமுன்னா
வேழிசை சூழ்மறை யெய்தவோதி யெதிர்கொண முறைமையிற் கொண
[டுபுக்கார்.

(இ-ள்.) யுகாந்தகாலத்தில் பொங்கியெழுந்த சலப்பிரளயத்தில் அழியாது மிதந்தோங்கிய உயர்ந்த சீகாழிப்பதியிலுள்ள பிராமணர்களனைவரும் மெய்ஞ்ஞானப்பாலையுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரைக் கருதித் திருவீழிமிழலையின் அருகில்வந்தார்களென்று அத்திருவீழிமிழலையில்வாழும்பிராமணர்கள் கேள்விப்பட்டு ஏழிசைகளும் பொருந்தியவேதங்களையோதிக்கொண்டு எதிர்கொள்ளவேண்டிய முறைமைப்படி யழைத்துக்கொண்டு தமது திருப்பதிக்குள் வந்தார்கள்.—எ-று.

ஊழி என்பது ... ஆயிரம் சதுர்யுகங்கொண்ட பிரமனது ஒருபகல். (ருருக)

... சண்பைத் திருமறை யோர்களெல்லாந் தம்பிரா னாரைப் பணிந்து போந்து, நண்பிற் பெருகிய காதல்கூர்ந்து ஞானசம்பந்தர் மடத்தினெய்திப், பண்பிற் பெருகுங் கழுமலத்தார் பிள்ளையார் பாதம் பணிந்து பூண்டே, யெண்பெற்ற தோணி புரத்தி லெம்மோ டெழுந்தரு ளப்பெற வேண்டு மென்றார்.

(இ-ள்.) சீகாழிப்பதியில் வாழும் பிராமணர்களனைவரும் வீழியழகரை வணங்கிச் சென்று நண்பினால் மிக்க விருப்பமுற்றுத் திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருமடத்தையடைந்து, அவரது திருவடியைவணங்கிச் சிரசிற்பூண்டு,

தேவரீர் எம்மோடு பெருமைபொருந்திய சீகாழிப்பதிக்கெழுந்தருள வேண்டுமெ ன்று பிரார்த்தித்தார்கள்.—எ-று. (ருஉ)

என்றவர் விண்ணப்பஞ் செய்தபோதி லீறில் சிவஞானப் பிள்ளையாரு
நன்றிது சாலவுந் தோணிமேவு நாதர் கழலிணை நாமிறைஞ்ச
வின்று கழித்து மிழலைமேவு மிறைவ ரருள்பெற்றுப் போவதென்றே
யன்று புகலி யருமறையோர்க் கருள்செய் தவர்க்கு முகமளித்தார்.

(இ-ள்.) இவ்வாறு அந்தப்பிராமணர்கள் விண்ணப்பஞ்செய்தபொழுது முடிவில்லாத திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் நீவிர்கூறியது மிகவும் நன்றேயாம், திருத்தோணியில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானது திருவடிகளை நாம் வணங்கத் திருவீழிமிழலையில் எழுந்தருளும் வீழியழகரது திருவருளைப்பெற்று நாளைச்செல்வதென்று சீகாழியி லிருந்துவந்த சிறந்தபிராமணர்களுக்கு அப்பொழுது அருளிச்செய்து உபசாரஞ் செய்தருளினர்.—எ-று. (ருங)

மேற்பட்ட வந்தணர் சண்பை நீடும் வேதியர்க் காய விருந்தளிப்பப், பாற்பட்ட சிந்தைய ராய்மகிழ்ந்து பரம்பொரு ளானர் தமைப்பரவுஞ், சீர்ப்பட்ட வெல்லை யினிதுசெல்லத் திருத்தோணி மேவிய செல்வர்தாமே, கார்ப்பட்ட வண்கைக் கவுணியர்க்குக் கனவிடை முன்னின் றருள்செய்கின்றார்.

(இ-ள்.) (திருவீழிமிழலையிலிருக்கும்) மேன்மைபொருந்திய வேதியர்கள் சீகாழியினின்றும்வந்த வேதியர்களுக்குத் தக்க விருந்துசெய்ய, அவ்வந்தணர்கள் பிள்ளையாரருள்வழிப்பட்ட சிந்தையையுடையவர்களாய்மகிழ்ந்து, அப்பிள்ளையார் பரம்பொருளாகிய சிவபெருமானைத் துதிக்கும் சிறந்த காலஅளவைக்கருதி, அங்கு தாமிருக்குமிடத்திற்கு இனிதாகச்செல்லவும், திருத்தோணியில்வீற்றிருந்தருளும் தோணியப்பர் மேகத்தையொத்த வண்மை பொருந்திய திருக்கரத்தையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்குச் சொப்பனத்தில் முன்னின் றெழுந்தருளி அருள்செய்கின்றார்.—எ-று. (ருச)

தோணியி லுமங் கிருந்தவண்ணந் தூமறை வீழி மிழலைதன்னுட்
சேணுயர் விண்ணின் றிழிந்தவிந்தச் சீர்கொள் விமானத்துக் காட்டுகின்
றோம், பேணும் படியா லறிதியென்று பெயர்ந்தருள் செய்யப் பெருந்
வங்கள், வேணு புரத்தவர் செய்யவந்தார் விரவும் புளகத் தொடுமுண
ர்ந்தார்.

(இ-ள்.) நாம் அங்குத் திருத்தோணியில் எழுந்தருளியிருக்குந்தன்மையைப் பரிசுத்தமாகிய வேதங்கள் வாழும் இத்திருவீழிமிழலையில் மிகவுயர்ந்த விண்ணின்றிழிந்த இந்தச் சிறந்த விமானத்துள் தரிசனங் கொடுக்கின்றோம், அங்கு சென்று விரும்பு முறைமைப்படி அறிவாயாக வென்று அருளிச்செய்ய, சீகாழியி லுள்ளவர்கள் மிக்க தவஞ்செய்த காரணத்தினால் அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது திருமேனியிற் பொடித்த புளகாங்கிதத்தோடும் அந்தச் சொப்பனத்தை நன்றாக வுணர்ந்தருளினர்.—எ-று. (ருரு)

அறிவுற்ற சிந்தைய ராயெழுந்தே யதிசயித் துச்சிமே லங்கை கூப்பி, வெறியுற்ற கொன்றையி னார்மகிழ்ந்த விண்ணிழி கோயிலிற் சென்று

புக்கு, மறியுற்ற கையுடைத் தோணிமேன்முன் வணங்கும் படியங்குக் கண்டு வாழ்ந்து, குறியிற் பெருகுந் திருப்பதிகங் குலவிய கொள்கையிற் பாடுகின்றார்.

(இ-ள்.) உணர்ந்த திருவுள்ளத்தோடும் விழித்து எழுந்து, அதிசயமடைந்து அழகிய திருக்கரங்களை உச்சிமேற் குவித்து, வாசனைபொருந்திய கொன்றை மாலையையணிந்த வீழியழகர் மகிழ்ந்தருளிய விண்ணிழி விமானக்கோயிலிற் சென்று புகுந்து மானேந்திய திருக்கரத்தையுடையசிவபெருமானைத் திருத்தோணியில் முன் வணங்கியதன்மைபோலத் தரிசித்து வணங்கிச் சிவானந்தமடைந்து, தாம் தரிசித்த குறிப்பாற் சிறந்த திருப்பதிகத்தை நற்கொள்கையோடு பாடுகின்றவராயினார்.—எ-று. (௫௫௬)

மைம்மரு பூங்குழ லென்றெடுத்து மாறில் பெருந்திருத் தோணிதன்மேற், கொம்மை முலையினாள் கூடநீடு கோலங் குலவு மிழலைதன்னிற், செம்மை தருவிண் ணிழிந்த கோயிற் றிகழ்ந்த படியிது வென்கொ லென்று, மெய்ம்மை விளங்குந் திருப்பதிகம் பாடி மகிழ்ந்தனர் வேதவாயர்.

(இ-ள்.) திருநெறித்தமிழ்வேதங்கமழுந் திருவாயினையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையார் "மைம்மரு பூங்குழல்" என்று முதலில் தொடங்கிக் கெடுதலில்லாத திருத்தோணியின்கண் குவிந்த ஸ்தனங்களையுடைய பெரியநாயகியாரோடு கூட எழுந்தருளிய திருக்கோலமானது விளங்குகின்ற திருவீழிமிழலையில் சிறந்த விண்ணிழிவிமானக்கோயிலில் விளங்குவது யாதுகாரணமென்று உண்மைபொருந்திய திருப்பதிகம்பாடி மகிழ்வடைந்தருளினார். (௫௫௭)

---

திருப்புகலியும்-திருவீழிமிழலையும்-வினவுரை-பண்-நட்டபாஷை.

திருச்சிற்றம்பலம்.

[illegible]மைம்மருபூங்குழற்கற்றைதுற்றவாணுதன்மான்விழிமங்கையோடும்
[illegible]பாய்ம்மொழியாமறையோர்களேத்தப்புகலிநிலாவியபுண்ணியனே
[illegible]பம்மிறையேயிமையாதமுக்கணீசவென்னேசவிதென்கொல்சொல்லாய்
[illegible]ய்ம்மொழிநான்மறையோர்மிழலைவிண்ணிழிகோயில்விரும்பியதே.

[illegible]ண்ணிழிகோயில்விரும்பிமேவும்வித்தகமென்கொலிதென்றுசொல்லிப்
[illegible]ணியனைப்புகலிந்நிலாவு[illegible]வகொடியோடிருந்தானைப்போற்றி
[illegible]ணியசீர்த்திகலங்[illegible]ள்கேள்விநான்மறைஞானசம்பந்தன்சொன்ன
[illegible]டல்வல்லார்களிந்தப்பாரொடுவிண்பரிபாலகரே

திருச்சிற்றம்பலம்.

---

செஞ்சொன் மலர்ந்த திருப்பதிகம் பாடித் திருக்கடைக் காப்புச்சாற்றி
யஞ்சலி கூப்பி விழுந்தெழுவா ரானந்த வெள்ள மலைப்பப்போந்து
மஞ்சிவர் சோலைப் புகலிமேவு மாமறை யோர்தமை நோக்கிவாய்மை
நெஞ்சி னிறைந்த குறிப்பின்வந்த நீர்மைத் திறத்தை யருள்செய்கின்றார்.

(இ-ள்.) இனிய சொற்களமைந்த திருப்பதிகம்பாடித் திருக்கடைக்காப்பையுஞ் சாத்தியருளி அஞ்சலியஸ்தராய் வணங்கி யெழுகின்ற பிள்ளையார் ஆனந்தபாஷ்பமொழுகச் சந்நிதியினின்றும் புறத்திற் சென்று, மேகங்கள் தவழும் சோலைசூழ்ந்த சீகாழியில் வாழும் சிறந்த பிராமணர்களைப் பார்த்து உண்மைநிறைந்த திருவுள்ளக்குறிப்பினால் புலப்பட்ட திருவருளின் வரலாற்றை அருளிச்செய்வாராயினார்—எ-று. (௫௫அ)

பிரம புரத்தி லமர்ந்த முக்கட் பெரிய பிரான்பெரு மாட்டி யோடும்
விரவிய தானங்க ளெங்குஞ் சென்று விரும்பிய கோலம் பணிந்துபோற்றி
வருவது மேற்கொண்ட காதல்கண்டங் கமர்ந்தவகையிங்களித்ததென்று
தெரிய வுரைத்தருள் செய்துநீங்கள் சிரபுர மாநகர் செல்லுமென்றார்.

(இ-ள்.) சீகாழிப்பதியி லெழுந்தருளிய திரிநேத்திரங்களையுடைய பெரியபெருமானாகிய தோணியப்பர் பெரியநாயகியாரோடும் எழுந்தருளிய திருப்பதிகளெங்குஞ் சென்று அங்கங்கு அவ்வெம்பெருமானெழுந்தருளிய திருக்கோலங்களைப் பணிந்து துதித்து வருதலையே மேற்கொண்டொழுகும் எனது விருப்பத்தைப்பார்த்து, அத்திருத்தோணியிலெழுந்தருளும் திருக்கோலத்தை இங்குக்காட்டியருளியதென்று அவ்வேதியர்களுக்குத் தெரியும்படி யுரைத்து, நீங்கள் சிறந்த சீகாழிப்பதிக்குச் செல்லுங்களென்று கூறியருளினார்.—எ-று.

'விரும்பிய கோலம்' என்பது சிவபெருமான் ஆன்மகோடிகளருள்பெற்றுய்யும்பொருட்டு ஆங்காங்குக் கொண்டருளிய சந்திரசேகரர் முதல் இலிங்கோற்பவர் ஈறாக வுள்ள இருபத்தைந்து சிவமூர்த்தங்களையுமாம்: அவற்றை,

"மதியணி யுஞ்சடை யாருமை கேள்வர் மழவிடையார்
சதியி னடம்புரி வார்கலி யாணர் தலையினுண்பார்
கதிமதற் செற்றவர் காலற்குங் கால ரெயிலெரித்தார்
துதியிற் சலந்தர னைவதைத்த சுதந்திரரே.

அத்தி யுரித்தவர் வேள்வி யழித்தவர் மாலத்தனார்
சத்தியொர் பாகர் கிராதர்கங் காளர்சண் டேசருக்குச்
சித்தி யளித்தவ ராலால முண்டவர் செம்பொறியான்
பத்தியி னுக்கொரு சக்கர மீந்த பரம்பரனே.

கரிமுக னார்க்கருள் செய்தார்சோ மாஸ்கந்தர் காலொன்றுளா
ருரிய சுகாதனர் ஏரேறு பதேச ரிலிங்கத்துற்று
ரிருபதி னேறடைந்து விக்கிர கங்களென் னும்மிவர்தாந்

தெரிவுறக் கொண்டெமைத் தாமாள வந்த செயலிதுவே."—என்னுஞ் செய்யுட்களானுணர்க. (௫௫௬)

என்று கவுணியப் பிள்ளை யார்தா மியம்பப் பணிந்தரு ளேற்றுக்
கொண்டே, யொன்றிய காதலி னுள்ள மங்க ணொழிய வொருவா றகன்
று போந்து, மன்று ணடம்புரிந் தார்மகிழ்ந்த தானம் பலவும் வணங்கிச்
சென்று,நின்ற புகழ்த்தோணி நீடுவாரைப் பணியு நியதிய ராயுறைந்தார்.

(இ-ள்.) இவ்வாறு திருஞானசம்பந்தப்பிள்ளையார் அருளிச்செய்ய, அவர்கள் வணங்கி அத்திருவருளை மேற்கொண்டு, பொருந்திய அன்பினால் தமது மனம்

அப்பின்ளையாரிடத்துத் தக்க ஒருவாறு பிரிந்துசென்று, கனகசபையில் ஆனந்தத்தாண்டவம் புரிந்தருளும் ஸ்ரீநடராசப்பெருமான் வீற்றிருந்தருளிய பல திருப்பதிகளையும் வணங்கிச் சீகாழியை யடைந்து, நிலைபெற்ற புகழையுடைய திருத்தோணியில் எழுந்தருளுந் தோணியப்பனை வணங்கும் நியமமுடையவர்களாய் வாழ்ந்தார்கள்.—எ-று. (௫௬0)

சிரபுரத் தந்தணர் சென்ற பின்னைத் திருவீழி மேவிய செல்வர் பாதம்
பரவுதல் செய்து பணிந்து நாளும் பணியின் வழாத்திருத் தொண்டர் சூழ
வுரவுத் தமிழ்த்தொடை மாலைசாத்தி யோங்கிய நாவுக் கரசரோடும்
விரவிப் பெருகிய நண்புகூர மேவி யினிதங் குறையுநாளில்.

(இ-ள்.) சீகாழியிலிருந்து வந்த பிராமணர்கள் போனபின்பு திருவீழிமிழலையி லெழுந்தருளிய வீழியழகரது திருவடிகளை நாடோறுந் துதித்து வணங்கி, நற்குண மமைந்த அடியாரிருக்கூட்டங்கள் சூழ்ந்துவர, சிறந்த தமிழ்த்திருப்பதிகம் பாடியருளி, மேன்மைபொருந்திய திருநாவுக்கரசுசுவாமிகளோடுங் கலந்து மிக்க நண்பு மிகும்படிப் பொருந்தி இனிதாக அங்கு எழுந்தருளியிருக்கும்நாள்களில்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம் (௫௬௧)

வேறு.

மண்ணின்மிசை வான்பொய்த்து நதிக டபபி மன்னுயிர்கள் கண்சாம்பி யுணவு மாறி,விண்ணவர்க்குஞ் சிறப்பிலவரும் பூசை யாற்று மிக்கபெரும் பசியுலகில் விரவக் கண்டு, பண்ணமரு மொழியுமையாண முலையினஞானப் பாலரு வாயருட னரசும் பார்மேற், கண்ணுதலான் றிருநீற்றுச்சார்வி னோர்க்குங் கவலைவரு மோவென்று கருதநிற் கொண்டார்.

(இ-ள்.) உலகத்தில் மழைபெய்யாமல் காவிரிமுதலிய நதிகள்காலத்தில் நீர்பெருகாது தவறி, நிலைபெற்ற உயிர்கள் பசியால்கண்சோர்ந்து உண்ணும் உணவுமாறி, தேவர்களுக்குஞ் சிறப்பாகச் செய்துவருகின்ற பூசைகளைச் செய்யாமல் மிக்கபெரும்பசியானது உலகில் எங்கும் பரவப்பார்த்து,இசைபொருந்திய மொழியினை யுடைய உமாதேவியாரது திருத்தனங்களிற் சுரந்த சிவஞானப்பால் மணங்கமழுந் திருவாயினையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையாரோடு திருநாவுக்கரசுசுவாமிகளும் உலகத்தில் சிவபெருமானது திருவெண்ணீற்றை யணிந்த அடியார்களுக்கும் இப்பஞ்சத்தினால் சிறிதுந் துன்பம் வருமோவென்று தமது திருவுள்ளத்திற் கருதினார்கள்.—எ-று.

'விண்ணவர்க்குஞ்சிறப்பில்வரும்பூசை' என்றது, நித்திய நைமித்திகங்களை; இதனை,

"சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு" என்னுந் திருக்குறட்குப் பரிமேலழகர்கூறிய வுரையா னுணர்க. (௫௬௨)

வானாகி நிலனாகி யனலுமாகி மாருதமா யிருசுடராய் நீருமாகி
யூனாகி யுயிராகி யுணர்வுமாகி யுலகங்க ளனைத்துமா யுலகுக் கப்பா
லானாத வடிவாகி நின்றார் செய்ய வடிபரவி யன்றிரவு துயிலும்போது
கானுடுகெங்காளர்மிழலைமூதூர்காதலித்தார்கனவிலணைந்தருளிச்செய்வார்

(இ-ள்.) விண்ணாகியும், மண்ணாகியும், நெருப்பாகியும், காற்றாகியும், சந்திரசூரியராகியும், நீராகியும், ஊனாகியும், உயிராகியும், உணர்வாகியும், எல்லாவுலகங்களினும் நிறைந்த வியாபகப்பொருளாகியும், அவ்வுலகங்களுக் கப்பாற்பட்ட வியாபக சித்ரூபமாகியும் நின்ற சிவபெருமானது சிவந்த திருவடிகளைச்சிந்தித்து அன்றிரவு நித்திரைசெய்யும்பொழுது, மகாமசானத்தில் நிருத்தஞ் செய்தருளும் கங்காளராகிய வீழியழகர் அவர்களது சொப்பனத்தி லெழுந்தருளி அருளிச்செய்வாராயினர்.—எ-று.

காணுங் கங்காளர் என்பது, பரமபதியாகிய சிவபெருமான் சர்வசம்மார காலத்தில் சகல சீவகோடிகளையும், சர்வலோகங்களையுஞ் சங்கரித்தருளுவர். அப்போது அவையனைத்துஞ் சுடலையாய்விடும். அத்தகைய மகாமசானத்தின்கண் அவ்வெம்பெருமான், தானே முதற்பெருங்கடவு ளென்பதும், தனக்குமே லொரு கடவு ளின்றென்பதும், யான் பரம் யான்பரம் என் றிறுமாப் பெய்தி யுழலும் மால் அயன்முதலிய யாவரும் இடையே இறந்தழிந் தொழியும் பசுப்பிராணிகளே யாமென்பதும், தானே முதலு முடிவு மில்லாத முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளா யுள்ளவ னென்பதும், தன்னை யடைந்து வழிபாடுசெய்யு மெய்யன்பரோ மீளா முத்திபெற் றுய்வரென்பதும் நிலைநிறுத்துவான் வேண்டித் தாண்டவம் புரிந்தருளுவர். அக்காரணத்தால், சமத்தாடி, சுடலையாடி முதலிய பல பரியாய நாமங்கள் அவ் வெம்பெருமானுக்கு வழங்குமென வறிக.

கங்காளம்=உடலின் முழுவெலும்பு. அது பிரமவிஷ்ணுக்க ளிருவரும் தம்வாணாளுலந்து அழிவெய்துங்காலத்துச் சிவபெருமா னவர்க ளென்பினை மாலையாகக் கோத்தணிந்தருளுவர். இதனை,

"நங்காயிதென்னதவகரம்போடெலும்பணிந்து
கங்காளந்தோண்மேலேகாதலித்தான்காணேடீ
கங்காளமாமாகேள்காலாந்தரத்திருவர்
தங்காலஞ்செய்யத்தரித்தனன்காண்சாழலோ."—எனவருந்திருவாசகத் திருமுறையா னுணர்க. (ருசுரு)

உலகியல்பு நிகழ்ச்சியினி லணைந்த தீய வுறுபசிநோ யுமையடையா தெனினு மும்பா, லிலவுசிவ நெறிசார்ந்தோர் தம்மை வாட்ட நீக்குதற்கு நித்தமொரோர் காசு நீடு, மிலகுமணிப் பீடத்துக் குணக்கு மேற்கும் யாமளித்தோ மும்மக்கிந்தக் காலந் தீர்ந்தா, லலகில்புக ழீர்தவிர்வ தாகு மென்றே யருள்புரிந்தார் திருவீழி மிழலை யையர்.

(இ-ள்.) உலகவியற்கையாகிய காலபேதத்தினா லுண்டாகிய இக்கொடிய பசிநோயானது உங்களைச்சேராதாயினும், உம்மிடத்தில்விளங்கியசைவநெறியை யடைந்த அடியாரை (அந்தப்பசிநோயின்) துயரத்தினின்றும் நீக்கும்பொருட்டுத் தினந்தோறும் ஒவ்வொரு பொற்காசைக் கிழக்கிலும் மேற்கிலுஞ் சிறந்துவிளங்குகின்ற அழகிய பலிபீடத்தில் உங்களுக்கு யாம் கொடுத்தருளினோம்; மிக்க புகழையுடையவர்களே! இந்தப் பஞ்சகாலம் நீங்கினால் அப் பொற்காசு நீங்குமென்று திருவீழிமிழலையில் எழுந்தருளிய சிவபெருமான் அருளிச்செய்தார்.—எ-று. ()

தம்பிரா னருள்புரிந்து கனவினீங்கச் சண்பையர் ளிளவேறு தாமுணர்ந்து, நம்பிரா னருளிருந்த வண்ண மென்றே நாவினிலைச யரசரொடு

க் கூட கண்ணி, வம்புலா மலரிதழி வீழி நாதர் மணிக்கோயில் வலஞ் செய்யப் புகுந்த வேலை, யம்பிகா பதியருளாற் பிள்ளை யார்தா மபிமுகத் துப் பீடிகைமேற் காசு கண்டார்.

(இ-ள்.) சிவபெருமான் அவ்விருவர்க்கும் சொப்பனத்தில் இவ்வாறு அருளிச்செய்து எழுந்தருளவும், சீகாழியி லவதரித்தருளிய இளஞ்சிங்கம்போன்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார் அக் கனவை யுணர்ந்து நமது சிவபெருமான் றிருவருள் இவ்வாறு இருந்ததென்று திருநாவுக்கரசுசுவாமிகளோடுகூட எழுந்தருளி வாசனை வீசுகின்ற கொன்றைமலர் மாலையையணிந்த வீழியழகாது அழகிய திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்யப் புகுந்தபொழுது, உமாசகாயராகிய சிவபெருமான் றிருவருளினால் திருஞானசம்பந்தப்பிள்ளையார் கிழக்குப்பலிபீடத்தின்மேல் பொற்காசுகண்டருளினார்.—எ-று.

திருஞானசம்பந்தப்பிள்ளையார் கிழக்குப் பலிபீடத்தினும், திருநாவுக்கரசுசுவாமிகள் மேற்குப் பலிபீடத்தினும் சிவபெருமான் றிருவருளாற் பொற்காசு பெற்றனரென்க. திருநாவுக்கரசுசுவாமிகள் பொற்காசு பெற்றமையை அவர் புராணத்தில்,

"விண்ணின் றிழிந்த விமானத்தின் கிழக்கு மேற்குப் பீடத்தி
லண்ணல் புகலி யாண்டகையார் தமக்கு மாண்ட வரசினுக்கு
நண்ணு நாள்க டொறுங்காசு படிவைத் தருள நானிலத்தி
லெண்ணி லடியா ருடனமுது செய்தங் கிருந்தா ரிருவர்களும்,"—எனக்

கூறியதனால் ஈண்டுக் கூறுதொழிந்தனர் எனவறிக. (௫௬௫)

காதலொடுந் தொழுதெடுத்துக் கொண்டு நின்று கைகுவித்துப் பெருமகிழ்ச்சி கலந்து பொங்க, நாதர்விரும் படியார்க ளுளு நாளு நல்விருந் தா யுண்பதற்கு வருகவென்று, தீதில்பறை நிகழ்வித்துச் சென்றதொண் டர் திருவமுது கறிநெய்பா றயிரொன் றின்ன, வேதமுறு தினிதுண்ண வூட்டி யங்க ணிருதிறத்துப் பெருந்தவரு மிருந்தநாளில்.

(இ-ள்.) அன்போடும் அப் பொற்காசை வணங்கி யெடுத்துக்கொண்டு திருமுன்னின்று கைகுவித்து மிக்க சந்தோஷமானது கலந்து அதிகரிக்க, சிவபெருமான் விரும்புகின்ற அடியார்கள் நாள்தோறும் நல்லவிருந்தாக உண்பதற்கு வரக்கடவரென்று குற்றமற்ற பறையை (இருபொழுதுஞ்) சாத்தித் தெரிவித்து, அதுகேட்டு வந்த அடியார்கள் திருவமுது-கறி-நெய்-பால்-தயிர்-என்று சொல்லும் இவைபோன்ற சிறந்த வுணவுகளைக் குறைவில்லாமல் உண்ணும்படி உபசரித்து உண்பித்துத் திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் திருநாவுக்கரசுசுவாமிகளும் அத் திருவீழிமிழலையில் எழுந்தருளியிருந்தகாலத்தில்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௫௬௬)

நாவினுக்கு வேந்தர்திரு மடத்திற் றொண்டர் நாட்கூறு திருவமுது செய்யக் கண்டு, சேவுகைத்தா ரருள்பெற்ற பிள்ளையார்தந் திருமடத்தி லமுதாக்கு வாரைநோக்கித், தீவினைக்கு நீரொன்று மடைவி லாதீர் திருவமுது காலத்தா லாக்கி யிங்கு, மேவுமிக்க வடியவருக் களியா வண்ணம் விளைந்தவா றென்கொலோ விளம்பு மென்றார்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகளது திருமடத்திலிருக்கும் அடியார்கள் போசனகாலத்தில் திருவமுதுசெய்தலைப் பார்த்து,இடபவாகனத்தை யுடையசிவ பெருமான் திருவருளைப்பெற்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது திருமடத் தில் திருவமுது சமைக்கும் *பாகுகர்களைப் பார்த்து, எக்காலத்தும் தீவினையைப் பொருந்தாத பாகுகர்களே! காலத்தில் திருவமுது சமைத்து இங்கு வருகின்ற சிறந்த அடியார்களுக்குப் படைக்காதபடிநேரிட்டது யாதுகாரணமோ சொல்லு ங்களென்று அருளிச்செய்தார்.—எ-று. (௫௬௭)

திருமறையோர் தலைவர்தா மருளிச் செய்யத் திருமடத்தி லமுத மைப்போர் செப்பு வார்க, ளொருபரிசு மறிந்திலோ மிதனை யும்மை யு டையவர்பாற் பெறும்படிக்கா சொன்றுங் கொண்டு, கருதியவெல் லாங் கொள்ள வேண்டிச் சென்றாற் காசுதனை வாசிபட வேண்டு மென்பர், பெருமுனிவர் வாகீசர் பெற்ற காசு பேணியே கொள்வரிது பிற்பா டென்றார்.

(இ-ள்.) சிறந்த வேதியர்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் இவ் வாறு அருளிச்செய்ய அவரது திருமடத்தில் திருவமுது சமைக்கும் பாகுகர்கள் விண்ணப்பஞ்செய்வார்கள், இதனை ஒருவகையாலும்யாமறியோம்; உம்மை ஆட் கொண்டருளிய சிவபெருமானிடத்து நீர் பெற்ற படிக்காசு ஒன்றையும் எடுத்துக் கொண்டு வேண்டிய சமான்களை வாங்க விரும்பி வணிகரிடத்துச் சென்றால், அப் பொற்காசுக்கு வட்டந் தரவேண்டுமென்று சொல்கின்றார்கள்; சிறந்த தவமுனி வராகிய திருநாவுக்கரசுசுவாமிகள் பெற்ற பொற்காசை (வட்டமின்றி) உடனே விரும்பிக்கொள்கின்றார்; இதுதான் காலந்தாழ்த்தற்குக் காரணமென்று கூறினார் கள்.—எ-று.

'ஒருபரிசும்' அறிந்திலோம் என்றது, வாசிபடுதற்கும் வாசிபடாமைக்கும் உரிய காரணத்தை. வாசி=வட்டம். 'இது பிற்பாடு' என்பதற்கு, தேவரீர் பெற்ற பொற்காசு இரண்டாம்பக்ஷமாக மாறுகிறது என்றும், அவ்வாறு வட்டங் கொடு ப்பினும் அவரது பொற்காசு மாறியபின்னரோ இது மாறுகிறது என்றும்பொருள் கூறினும் பொருந்தும். (௫௬௮)

திருஞான சம்பந்த ரதனைக் கேட்டுச் சிந்திப்பார் சிவபெருமா னம க்குத் தந்த, வொருகாசு வாசிபட மற்றக் காசு நன்றாகி வாசிபடா தொ ழிவா னந்தப், பெருவாய்மைத் திருநாவுக் கரசர் தொண்டாற் பெறுங்கா சா மாதலினாற் பெரியோன் றன்னை, வருநாள்க டருங்காசு வாசி தீரப் பாடுவனென் றெண்ணியது மனத்துட் கொண்டார்.

(இ-ள்.) அவர்கள் கூறியவார்த்தையைத் திருஞானசம்பந்தப்பிள்ளையார் கேட்டுச் சிந்திக்கின்றார்; சிவபெருமான் நமக்குக் கொடுத்தருளிய ஒருபொற்காசு வட்டங்கொடுத்து மாற்றவும், திருநாவுக்கரசுசுவாமிகள்பெற்ற பொற்காசு வட்டங் கொடாமல் மாற்றவும் நேர்ந்ததற்குக் காரணம், அந்த மெய்ம்மையையுடைய திரு நாவுக்கரசர் கைத்தொண்டு செய்தலாற் பெற்ற காசாகும்; ஆதலால், முதற்பெரு ங்கடவுளாகிய சிவபெருமானை இனிவரும் நாள்களில் கொடுத்தருளும் படிக்காசு வட்டமில்லாதொழியப் பாடுவேனென்று கருதி, அதனைத் தமது திருவுள்ளத்திற் கொண்டருளினார்.—எ-று. (௫௬௯)

* பாகுகர்கள்=சமையல்செய்வோர்.

மற்றைநாட் டம்பிரான் கோயில் புக்கு வாசிதீர்த் தருளுமெனப் பதிகம் பாடிப், பெற்றபடி நற்காசு கொண்டு மாந்தர் பெயர்ந்துபோ யாவணவீ தியினிற் காட்ட, நற்றவத்தீ ரிக்காசு சால நன்று வேண்டுவன நாந் தருவோ மென்று நல்க, வற்றைநாட் டொடங்கிநாட் கூறுதன்னி லடியவரை யமுதுசெய்வித் தார்வ மிக்கார்.

(இ-ள்.) மறுநாள் சிவபெருமான் றிருக்கோயிலிற் சென்று "வாசிதீரவே காசுநல்குவீர்" என்று திருப்பதிகம்பாடி அதனால்பெற்ற வாசிதீர்ந்த படிக்காசைப் பாருகர்கள் கையிற்கொண்டுசென்று கடைவீதியிற் காட்ட, (வணிகர்கள்) அவர்களைப் பார்த்து நல்ல தவமுடையவர்களே! நீவிர் கொண்டுவந்த இப் பொற்காசு மிகவும் நல்லது, உமக்கு வேண்டியவற்றை நாம் தருகின்றோமென்று கொடுக்க, அந்நாள்தொடங்கிப் போசனகாலத்தில் அடியார்களுக்குத் திருவமுதுசெய்வித்து அன்பிற் சிறந்தவராயினார்.—எ-று. (௫௭௦)

---

திருவீழிமிழலை-திருவிருக்குக்குறள்-பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

வாசிதீரவே, காசுநல்குவீர்
மாசின்மிழலையீ, ரேசலில்லையே (௧)

இறைவராயினீர், மறைகொண்மிழலையீர்
கறைகொள்காசினை, முறைமைநல்குமே. (௨)

செய்யமேனியீர், மெய்கொண்மிழலையீர்
பைகொளரவினீ, ருய்யநல்குமே. (௩)

நீறுபூசினீ, ரேறதேறினீர்
கூறுமிழலையீர், பேறதருளுமே. (௪)

காமன்வேவவோர், தூமக்கண்ணினீர்
நாமமிழலையீர், சேமநல்குமே. (௫)

பிணிகொள்சடையினீர், மணிகொள்மிடற்றினீ
ரணிகொண்மிழலையீர், பணிகொடருளுமே. (௬)

மங்கைபங்கினீர், துங்கமிழலையீர்
கங்கைமுடியினீர், சங்கைதவிர்மினே. (௭)

அரக்கனெரிதர, விரக்கமெய்தினீர்
பரக்குமிழலையீர், கரக்கைதவிர்மினே. (௮)

அயனுமாலுமாய், முயலுமுடியினீ
ரியலுமிழலையீர், பயனுமருளுமே. (௯)

பறிகொள்தலையினா, ரறிவதறிகிலார்
வெறிகொண்மிழலையீர், பிறிவதரியதே. (௧௦)

காழிமாநகர், வாழிசம்பந்தன்
வீழிமிழலைமேற், றாழுமொழிகளே. (௧௧)

அருவிலையிற் பெறுங்காசு மவையே யாகி யமுதுசெயத் தொண்டரள விறந்து பொங்கி, வருமவர்க ளெல்லார்க்கும் வந்தா ருக்கு மகிழ்ந்துண்ண வின்னடிசின் மாளா தாகத், திருமுடிமேற் றிங்களொடு கங்கைசூடுஞ் சிவபெருமா னருள்செய்யச் சிறப்பின் மிக்க, பெருமைதரு சண்பைநகர் வேந்தர் நாவுக் கரசரிவர் பெருஞ்சோற்றுப் பிறங்க லீந்தார்.

(இ-ள்.) அரிய விலைகொடுத்துப் பெறும் படிக்காசும் பொற்காசுகளேயாய்த் திருவமுதுசெய்யும்படி அடியார் திருக்கூட்டங்கள் அளவற்று வருபவர்கள் யாவருக்கும், வந்தவர்களுக்கும் மகிழ்ந்து உண்ண இனிய திருவமுது குறையாதிருக்கும்படி அழகிய சடைமுடியின்மேல் சந்திரனோடு கங்காநதியைத் தரித்த சிவபெருமான் றிருவருள்செய்ய, மிக்க மேன்மைபொருந்திய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருநாவுக்கரசுசுவாமிகள் என்னும் இவ்விருவரும் மிக்க திருவமுதை அடியார்களுக்குக் கொடுத்தருளினார்கள்.—எ-று.

பிறங்கல்=மலை, மிகுதிநோக்கி இவ்வாறு கூறினார். (௫௭௧)

அவனிமிசை மழைபொழிய வுணவு மல்கி யனைத்துயிருந் துயர்நீங்கி யருளி னாலே, புவனமெலாம் பொலிவெய்துங் கால மெய்தப் புரிசடையார் கழல்பலநாள் போற்றி வைகித், தவமுனிவர் சொல்வேந்த ரோடுங் கூடத் தம்பிரா னருள்பெற்றுத் தலத்தின் மீது, சிவன்மகிழுந் தானங்கள் வணங்கப் போவார் தென்றிருவாஞ் சியமூதூர் சென்று சேர்ந்தார்.

(இ-ள்) பின், பூமியின்மேல் மழைபெய்தலால் பலவகைத் தானியங்கள் மலிந்து எல்லாவுயிர்களும் பசித்துன்பத்தினின்று நீங்கிச் சிவபெருமான் றிருவருளினால் உலகமுழுவதும் (பஞ்சம்நீங்கி) க்ஷேமமடையுங்காலம் வரவும்,முறுக்காகிய சடைமுடியையுடைய சிவபெருமான் றிருவடிகளைப் பலநாள் துதித்து அங்குவசித்திருந்து, பின் தவமுனிவராகிய திருநாவுக்கரசுசுவாமிகளோடு அவ்வெம்பெருமான் திருவருளையடைந்து, உலகத்தில் சிவபெருமான் மகிழ்ந்து எழுந்தருளிய பல திருப்பதிகளையும் வணங்கிச்செல்லுந் திருஞானசம்பந்தப்பிள்ளையார் அழகிய திருவாஞ்சியமென்னும் பழையதிருப்பதியைச் சென்று சேர்ந்தருளினார்.—எ-று.

நீடுதிரு வாஞ்சியத்தி லமர்ந்த முக்க ணீலமிடற் றருமணியை வணங்கிப் போற்றிப், பாடொலிநீர்த் தலையாலங் காடு மாடு பரமர்பெரு வேளூரும் பணிந்து பாடி, காடுபுகழ்த் தனிச்சாத்தங் குடியி னண்ணி நம்பர் திருக் கரவீர நயந்து பாடித், தேடுமறைக் கரியார்தம் விளமர் போற்றித் திருவாரூர் தொழநினைந்து சென்று புக்கார்.

(இ-ள்.) சிறந்த திருவாஞ்சியத்தில் எழுந்தருளிய மூன்றுகண்களையும்,காளகண்டத்தையுமுடைய அரிய மாணிக்கம்போன்ற சுகவாஞ்சிநாதனை வணங்கித் துதித்து,மிக்க ஒலியையுடைய நீர்வளம்பொருந்தியதிருத்தலையாலங்காட்டையும், அதன்பக்கத்திலுள்ள பிரியாநாயகரெழுந்தருளும் திருப்பெருவேளூரையும் வணங்கித் திருப்பதிகம்பாடி யருளி, மிக்க புகழையுடைய ஒப்பற்ற திருச்சாத்தங்குடியென்னுந் திருப்பதியை யடைந்து, சிவபெருமானது திருக்கரவீர மென்னுந் திருப்பதியை விரும்பித் திருப்பதிகம்பாடியருளி, முறையிட்டுத்தேடிய வேதங்களால் காண்டற்கரிய பதஞ்சலிமனோகரர் வீற்றிருந்தருளும் திருவிளமர் என்னுந்

திருப்பதியையடைந்து துதித்துத் திருவாரூரை வணங்கத் திருவுள்ளங்கொண்டு சென்றடைந்தருளினார்.—எ-று. (௩௭௩)

நம்பர்மகிழ் திருவாரூர் வணங்கிப் போந்து நலங்கொடிருக் காறாயி னண்ணி யேத்திப், பைம்புனன்மென் பணைத்தேவூ ரணைந்து போற்றிப் பரமர்திரு நெல்லிக்காப் பணிந்து பாடி, யும்பர்பிரான் கைச்சினமும் பர வித் தெங்கூ ரோங்குபுகழ்த் திருக்கொள்ளிக் காடும் போற்றிச், செம் பொன்மதிட் கோட்டூரும் வணங்கி யேத்தித் திருமலிவெண் டுறைதொழு வான் சென்று சேர்ந்தார்.

(இ-ள்.) ஸ்ரீ தியாகராசப்பெருமான் மகிழ்ந்து எழுந்தருளிய திருவாரூரை வணங்கிச் சென்று, நன்மைபொருந்திய திருக்காறாயிலையடைந்து துதித்து, பசிய நீர்வளமமைந்த மிருதுவாகிய வயல்கள்சூழ்ந்த திருத்தேவூரை யடைந்து துதித்து, சிவபெருமானது திருநெல்லிக்காவை வணங்கித் திருப்பதிகம்பாடி, தேவர்கள் நாயகராகிய பரமசிவன் எழுந்தருளிய திருக்கைச்சினம் என்னுந் திருப்பதியையுந் துதித்து, திருத்தெங்கூரையும் மிக்க புகழையுடைய திருக்கொள்ளிக்காட்டையுந் துதித்து, செம்பொன்னாலாகிய மதில்சூழ்ந்த திருக்கோட்டூரையும் வணங்கித் துதித்து, பலவகைச்செல்வங்க ணிறைந்த திருவெண்டுறை என்னுந் திருப்பதியைவணங்கும்படிச் சென்று சேர்ந்தருளினார்.—எ-று. (௩௭௪)

மற்றவ்வூர் தொழுதேத்தி மகிழ்ந்து பாடி மாலயனுக் கரியபிரான் மருவுந் தானம், பற்பலவுஞ் சென்றுபணிந் தேத்திப் பாடிப் பரவுதிருத் தொண்டர்குழாம் பாங்கி னெய்தக், கற்றவர்வாழ் தண்டலைநீ ணெறியுள் ளிட்ட கனகமதிற் றிருக்களருங் கருதார் வேள்வி, செற்றவர்சேர் பதிபி றவுஞ் சென்று போற்றித் திருமறைக்கா டதன்மருங்கு சேர்ந்தா ரன்றே.

(இ-ள்.) அத்திருப்பதியை வணங்கித்துதித்து மகிழ்ந்து திருப்பதிகம்பாடியருளி, திருமால் பிரமனென்னு மிருவருக்கும் அடைதற்கரிய சிவபெருமான் எழுந்தருளிய திருப்பதிகள் பலவற்றையும் அடைந்து வணங்கித் துதித்துத் திருப்பதிகம்பாடி யருளி, பரவிய அடியார் திருக்கூட்டங்கள் பக்கத்தில் சூழ்ந்துவர, (உண்மை நூல்களைக்) கற்றுணர்ந்த புலவர்கள் வாழ்ந்திருக்குந் திருத்தண்டலைநீணெறியோடு சேர்ந்த பொன்மயமாகிய மதில்சூழ்ந்த திருக்களரையும், தம்மை மதியாத தக்ஷன்செய்த யாகத்தை யழித்த சிவபெருமான் எழுந்தருளிய மற்றத் திருப்பதிகளையுஞ் சென்று துதித்துத் திருமறைக்காடு என்னுந் திருப்பதியின் அருகிற் சேர்ந்தருளினார்.—எ-று.

திருமறைக்காடு என்பது, ஸ்ரீ வேதாரண்ணியம். (௩௭௫)

காரமண்வெஞ் சுரமருளாற் கடந்தார் தாமுங் கடற்காழிக் கவுணியர்தந் தலைவர்தாமுஞ், சேரவெழுந் தருளியவப் பேறு கேட்டுத் திருமறைக்காட் டகன்பதியோர் சிறப்பிற் பொங்கி, யூரடைய வலங்கரித்து விழவு கொள்ள வுயர்கமுகு கதலிநிறை குடந்தீ பங்கள், வார்முரச மங்கலநா தங்கண் மல்க வெதிர்கொள்ள வடியருடன் மகிழ்ந்து வந்தார்.

(இ-ள்.) கரிய சமணர்களாகிய வெவ்விய பாலைநிலத்தைச் சிவபெருமான் திருவருளாற்கடந்த திருநாவுக்கரசுசுவாமிகளும், கடற்கரையிலுள்ள சீகாழிப்பதியிலவதரித்த கவுணியர்குலத் தலைவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரும் சேர்

ந்து எழுந்தருளிய பெரும்பேற்றை இடமகன்ற திருமறைக்காடு என்னுந் திருப்பதியிலுள்ளவர்கள் கேள்விப்பட்டு மிகச் சந்தோஷித்து அவ்வூர் முழுமையும் அலங்காரஞ்செய்து திருவிழாக்கொள்ளும்பொருட்டு உயர்ந்த கமுகமரங்களும், வாழைமரங்களும், பூரணகும்பங்களும், தூப தீபங்களும், வார் இறுக்கிய முரசப்பறை முதலிய பல மங்கலவாத்தியங்களும், நிறைந்துவர எதிர்கொள்ளும்படி அடியார் கூட்டத்தோடு மகிழ்ந்து வந்தார்கள்.—எ-று. (ருஎசு)

முன்னணைந்த திருநாவுக் கரசர் தம்மை முறைமையா லெதிர்கொண்டு களிப்பின் மூழ்கிப், பின்னணைய வெழுந்தருளும் பிள்ளை யார்தம் பெருகியபொற் காளத்தி னோசை கேட்டுச், சென்னிமிசைக் கரங்குவித்து முன்பு சென்று சேணிலத்து வணங்குதலுந் திருந்து சண்பை, மன்னவரு மணிமுத்தின் சிவிகை நின்று வந்திழிந்து வணங்கியுடன் மகிழ்ந்துபோந்தார்.

(இ-ள்.) முன்னே எழுந்தருளிய திருநாவுக்கரசுசுவாமிகளை எதிர்கொள்ள வேண்டிய முறைமைப்படி எதிர்கொண்டு ஆனந்தக்கடலுண் முழுகி, அவருக்குப் பின்னே அடையும்படி எழுந்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது சிறந்த பொற்காளத்தின் ஓசையைக் கேட்டுச் சிரசின்மேல் கைகளைக்குவித்து அவர் முன்னேசென்று தூரத்தில் நின்று வணங்கவும், திருத்தமாகிய சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் அழகிய முத்துச்சிவிகையினின்று மிறங்கி வணங்கி அவர்களோடு மகிழ்ந்து சென்றருளினர்.—எ-று. (ருஎஎ)

சொல்லரச ருடன்கூடப் பிள்ளை யார்தாந் தூமணிநீர் மறைக்காட்டுத் தொல்லைமூதூர், மல்குதிரு மறுகின்கட் புகுந்தபோது மாதவர்கண் மறையவர்கண் மற்றுமுள்ளோர், செல்லையில்லா வகையரவென் றெடுத்த வோசை யிருவிசும்புந் திசையெட்டு நிறைந்து பொங்கி, யொல்லொலிநீர் வேலையொலி யடக்கிவிண்மே லும்பர்நாட் டப்புறத்து முற்றதன்றே.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகளோடுகூடத் திருஞானசம்பந்தப்பிள்ளையார் தூய்மையாகிய முத்துக்களையுடைய நீர் சூழ்ந்த திருமறைக்காடென்னும் பழைய திருப்பதியின் அழகிய திருவீதியில் சென்றபொழுது, மகத்தாகிய தவமுனிவர்களும், வேதியர்களும், மற்றுமுள்ள அடியார்களும் அளவில்லாதவகை அரகரவென்று எடுத்த ஓசையானது பெரிய விண்ணுலகத்திலும் எட்டுத்திக்குகளிலும் நிறைந்துபரவி ஓல்லென்னு மொலியையுடைய நீர்பொருந்திய சமுத்திரவோசையையடக்கி விண்ணிலுள்ள தேவலோகத்திற்கு அப்புறத்துஞ் சென்றது.—எ-று.

ஓல் என்பது ஒலிக்குறிப்பு, அன்று ஏ - அசைநிலை. (ருஎஅ)

அடியவரும் பதியவரு மருங்குபோற்ற வணிமறுகி னூடெய்தி யருகுசூழ்ந்த, கொடிநுடங்கு செழுந்திருமா ளிகையின் முன்னர்க் கோபுரத்தைத் தாழ்ந்திறைஞ்சிக் குறுகிப் புக்கு, முடிவிலிமை யவர்முனிவர் நெருங்குந் தெய்வ முன்றில்வலங் கொண்டுபோ் சென்று முன்னுட், படியின்மறை யருச்சித்துக் காப்புச்செய்த பைம்பொன்மணித் திருவாயிற் பாங்கு வந்தார்.

(இ-ள்.) திருத்தொண்டர்களும் அத்திருப்பதியி லுள்ளவர்களும் பக்கங்களினின்றுந் துதிக்க அழகிய திருவீதியிற்சென்று, பக்கத்திற்சூழ்ந்த கொடிகளசை

நின்ற செழிய திருமாளிகையின் முன்னுள்ள திருக்கோபுரத்தை வணங்கித் துதித்து உள்ளேபுகுந்து, அளவில்லாத தேவர்களும் முனிவர்களும் நெருங்கியிருக்கின்ற தெய்வத்தன்மை பொருந்திய திருமுன்றிலைப் பிரதக்ஷணஞ்செய்து நேரே சென்று, பூர்வத்தில் ஒப்பற்ற வேதங்கள் பூசித்துத் திருக்காப்புச் செய்த பசும்பொன்மயமாகிய அழகிய திருவாயிலின் சமீபத்தில் வந்தார்கள்.—எ-று.

காப்புச்செய்தல்=மூடுதல். ' அருகுதாழ்ந்து' என்றும் பாடம். (ருஎக)

அருமறைக டிருக்காப்புச் செய்து வைத்த வக்கதவந் திறந்திடவம் மறைக ளோதும், பெருகியவன் புடையடியா ரணைந்து நீக்கப் பெறுமையினு லன்றுமுத லாகப் பின்னை, யொருபுடையோர் வாயிலமைத் தொழுகுந் தன்மை யுள்ளபடி கேட்டருளி யுயர்ந்த சண்பைத், திருமறையோர் தலைவர்வியப பெய்த நின்று திருநாவுக் கரசருக்குச் செப்புகின்றார்.

(இ-ள்.) அரிய வேதங்கள் திருக்காப்புச் செய்துவைத்த அத்திருக்கதவந் திறக்கும் பொருட்டு அவ்வேதங்களை யோதுகின்ற மிக்க அன்பினையுடைய அடியார்கள் அடைந்து அத்திருக்காப்பை நீக்கப்பெறாமையினால், அக்காலந் தொடங்கிப் பின்னாட்களில் (தென்பாலில்) ஒரு திருவாயிலமைத்துப் போக்குவரவு செய்யுந்தன்மையை உயர்ந்த சீகாழியிலவதரித்த வேதியர்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் உள்ளபடி அங்குள்ளவர்களால் கேட்டருளி, ஆச்சரியப்பட்டு நின்று திருநாவுக்கரசுசுவாமிகளோடு சொல்லுகின்றார்.—எ-று. (ருஅ0)

அப்பரோ வேதவனத் தையர் தம்மை யபிமுகத்துத் திருவாயி றிறந்து புக்கே, யெப்பரிசு நாமிறைஞ்ச வேண்டு நீரே யிவ்வாயி றிருக்காப்பு நீங்கு மாறு, மெய்ப்பொருள்வண டமிழ்பாடி யருளு மென்ன விளங்குமொழி வேந்தாது மேற்கொண் டென்னை, யிப்பரிசு நீரருளிச் செய்தீராகி லிதுசெய்வே னெனப்பதிக மெடுத்துப் பாட.

(இ-ள்.) அப்பரே! ஸ்ரீ வேதாரண்ணியத்தி லெழுந்தருளிய சிவபெருமானைச், சந்நிதிக்கு எதிர்முகமாகவுள்ள திருவாயிலைத்திறந்து உள்ளேசென்று நாம் எவ்வகையாலும் வணங்கவேண்டும்; ஆகையால், நீரே இத்திருவாயில் திறக்கும்வண்ணம் உண்மைப்பொருளமைந்த சிறந்த தமிழ்த்திருப்பதிகம் பாடியருளுமென்று கூற, விளங்குகின்ற திருநாவுக்கரசுசுவாமிகள் அதனை ஏற்றுக்கொண்டு, தேவரீர் எனக்கு இவ்வாறு அருளிச்செய்தீராகில் அடியேன் இக்காரியத்தைச் செய்வேனென்றுதிருப்பதிகமெடுத்துப் பாடியருள.—எ-று.

இதமுத லிரண்டுபாடலுங் குளகம். (ருஅக)

பாடியவப் பதிகப்பாட் டான பத்தும் பாடவிரம் பியபின்னும் பைம்பொன் வாயிற், சேடேயர்பொற் கதவுதிருக் காப்பு நீங்காச் செய்கையினுல் வாகீசர் சிந்தை நொந்து, நீடுதிருக் கடைக்காப்பி லரிது வேண்டி நின்றெடுக்கத் திருக்கதவு நீங்கிக் காட்ட, ஆடியசே வடியார்த மடியார் விண்ணோ ரார்ப்பெழுந்த தகிலாண்ட மனைத்து மூழ்க.

(இ-ள்.) பாடியருளிய அத்திருப்பதிகத்தின் திருப்பாடல்கள் பத்தும்பாடும்படி விரம்பிய பின்னும் பசிய பொன்மயமாகிய திருவாயிலுக் கிட்டிருக்கும் மிக

வும் உயர்ந்த பொற்கதவுகள் திருக்காப்பு நீங்காத செய்கையினால் திருநாவுக்கரசு சுவாமிகள் மனம்வருந்தி, சிறந்த அப் பத்தாம் பாடலாகிய திருக்கடைக்காப்பின் இரண்டாமடியில் ("இரக்கமொன்றிலீ ரெம்பெருமானிரே" என்று) அரிதாகக் குறையிரந்து எடுத்தருள, உடனே திருக்கதவந் திறந்துகாட்ட, பொன்னம்பலத் தில் திருநடனஞ்செய்யுஞ் சிவந்த திருவடிகளையுடைய சிவபெருமானது அடியார் களும், தேவர்களும் செய்த அரகரவென்னும் ஆரவாரம் எல்லா அண்டங்களும் நிறையும்படி அதிகரித் தெழுந்தது.—எ-று.

திருநாவுக்கரசுசுவாமிகள் தமது திருப்பதிகத்தின் பத்தாம்பாசுரத்தின் முத லடிபாடிப் பத்தும் நிரம்பவும் திருக்கதவந் திறவாமையால், இரண்டாமடியில் வரு ந்தி வேண்டி "இரக்கமொன்றிலீரெம்பெருமானிரே" என்று பாடியருள, உட னே திறந்து காட்டியதென்பார் 'பாடநிரம்பிய பின்னும்' என்று கூறினர். ()

வேறு.

மற்றது கண்ட போதே வாக்கின்மன் னவரை நோக்கிப்
பொற்புக ழியர்த மன்னர் போற்றிட வவரும் போற்றி
யற்புத நிலையி னார்க ளணிதிரு மறைக்கா டாளுங்
கொற்றவர் கோயில் வாயி னேர்வழி குறுகிப் புக்கார்.

(இ-ள்.) அத்திருக்கதவந் திருக்காப்பு நீங்கியதைக் கண்டவுடனே அழகிய சீகாழியித் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருநாவுக்கரசுசுவாமிகளை ப்பார்த்துத் துதிக்க, அவரும் உடன்வணங்கி, அற்புதமானதெய்வீகம்பொருந்திய அவர்களிருவரும் அழகிய திருமறைக்காட்டை அரசாண்டருளுஞ் சிவபெருமா னது திருக்கோயிற் றிருவாயிலின் நேர்வழியில் சென்று சேர்ந்தார்கள்.—எ-று. ()

கோயிலுட் புகுவா ருச்சி குவித்தசெங் கைக ளோடுந்
தாயினு மினிய தங்க டம்பிரா னாரைக் கண்டார்
பாயுநீ ரருவி கண்க ளூங்கிடப் படியின் மீது
மேயின மெய்ய ராகி விதிர்ப்புற்று விரைவின் வீழ்ந்தார்.

(இ-ள்.) திருக்கோயிலினுள் ளெழுந்தருளும் அவ்விருவரும் உச்சியின்மேல் குவித்த அழகிய திருக்கரங்களோடும், நற்றாயினும் இனியவராகிய தங்கள் சிவபெ ருமானைத் தரிசித்துப் பாய்கின்ற ஆனந்தபாஷ்பமானது கண்களினின்றும் அரு விபோலொழுகப் பூமியில்விழுந்து வணங்கிய திருமேனியை யுடையவர்களாய்ப் புளகாங்கிதங்கொண்டு விரைந்து பணிந்தார்கள்.—எ-று.

சிவபெருமான் தமதன்பர்க ளிடத்து நற்றாயினு மிக்க பேரருள் புரிந்தா ளுங் கருணையாள ரென்பார் 'தாயினுமினிய தங்கடம்பிரானாரைக் கண்டார்' என் று கூறினர்.

"தாயினுநல்லசங்கரனுக்கன்ப
ராயவுள்ளத்தமுதருந்தப்பெறார்
பேயர்பேய்முலையுண்டுயிர்போக்கிய
மாயன்மாயத்துட்பட்ட மனத்தரே"—எனவருந் திருநாவுக்கரசு
சுவாமிகள் தேவாரத்தாலுணர்க. (இஅசு

அன்பினுக் களவு காணு ரானந்த வெள்ள மூழ்கி
யென்புநெக் குருக நோக்கி யிறைஞ்சிநேர் விழுந்து நம்பர்
முன்புநிற் பதுவு மாற்ருர் மொழிதடு மாற வேத்தி
மின்புரை சடையார் தம்மைப் பதிகங்கள் விளம்பிப் போந்தார்.

(இ-ள்) அன்பினுக்கு ஓரளவு காணுதவர்களாய்ப் பேரானந்த வெள்ளத்தில் முழுகி எலும்புகள் நெக்குருகும்படி தரிசித்துத் திருமுன்விழுந்து வணங்கிச் சிவபெருமான் சந்நிதியில் நிற்கவுஞ் சகியாதவர்களாய் வார்த்தை குழறும்படித் துதித்து, மின்னலையொத்த சடைமுடியையுடைய சிவபெருமானைத் திருப்பதிகங்கள் பாடியருளித் திருக்கோயிலி னின்றும்புறத்தில் எழுந்தருளினார்கள்.—எ-று. ()

புறம்புவந் தணைந்த போது புகலிகா வலரை நோக்கி
நிறங்கிளர் மணிக்க பாட நீங்கவு மடைப்பு நிற்கத்
திறந்தவா றடைக்கப் பாடி யருளுநீ ரென்றார் தீய
மறம்புரி யமணர் செய்த வஞ்சனை கடக்க வல்லார்.

(இ-ள்.) திருக்கோயிலின் புறத்தில் வந்தடைந்தபொழுது, கொடிய பாவத்தொழிலைச் செய்கின்ற சமணர்கள் செய்த வஞ்சனைகளை யொழிக்கவல்லவராகிய திருநாவுக்கரசுசுவாமிகள் சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரைப் பார்த்து, ஒளிமிக்க இரத்தினங்க ளழுத்தப்பெற்ற திருக்கதவுகள் மறுபடியும் அடைக்கவுந் திறக்கவும், திறந்தவகைபோல அடைபடும்படி தேவரீர் திருப்பதிகம் பாடியருளுமென்று கூறியருளினார்.—எ-று. (ருஅசு)

அன்றவ ரருளிச் செய்ய வருமறைப் பிள்ளை யாரும்
வென்றிவெள் விடையார் தம்மை விருப்பினுற் சதுர மென்னு
மின்றமிழ்ப் பதிகப் பாட லிசைத்திட விரண்டு பாலு
நின்றவக் கதவு காப்பு நிரம்பிட வடைத்த தன்றே.

(இ ள்.) அப்பொழுது திருநாவுக்கரசுசுவாமிகள் இவ்வாறு அருளிச்செய்ய, அரிய வேதப்பொருளாயுள்ள திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் வெற்றிபொருந்திய வெள்ளிய இடபத்தை வாகனமாகவுடைய சிவபெருமானை விருப்பத்தோடும் 'சதுரம்" என்னு முதலையுடைய இனிய தமிழ்த்திருப்பதிகத்தின் முதற்பாசுரத்தை யருளிச்செய்ய, இருபக்கத்திலும்நின்ற அத்திருக்கதவுகள் திருக்காப்பு நிரம்பும்படி அடைபட்டன.—எ-று. (ருஅஎ)

திருமறைக்காடு - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

சதுரம்மறைதான்றுதிசெய்துவணங்கு
மதுரம்பொழில்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
விதுநன்கிறைவைத்தருள்செய்தவெனக்குன்
கதவந்திருக்காப்புக்கொளுங்கருத்தாலே. (க)

சங்கந்தரளம்மவைதான்கரைக்கெற்றும்
வங்கக்கடல்சூழ்மறைக்காட்டுறைமைந்தா

மங்கையுமைபாகமுமாகவிதென்கொல்
கங்கைசடைமேலடைவித்தகருத்தே. (உ)

குரவங்குருக்கத்திகள்புன்னைகண்ஞாழன்
மருவும்பொழில்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
சிரமும்மலருந்திகழ்செஞ்சடைதன்மே
லரவம்மதியோடடைவித்தவழகே. (ங)

படர்செம்பவளத்தொடுபன்மலர்முத்தம்
மடலம்பொழில்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
வுடலம்முமைபங்கமதாகியுமென்கொல்
கடனஞ்சமுதாவதுவுண்டகருத்தே. (ச)

வானோர்மறைமாதவத்தோர்வழிபட்ட
தேனார்பொழில்சூழ்மறைக்காட்டுறைசெல்வா
வேனோர்தொழுதேத்தவிருந்தநீயென்கொல்
கானார்கடுவேடுவனானகருத்தே. (ரு)

பலகாலங்கள்வேதங்கள்பாதங்கள்போற்றி
மலரால்வழிபாடுசெய்மாமறைக்காடா
வுலகேழுடையாய்கடைதோறுமுன்னென்கொ
றலைசேர்பலிகொண்டதிலுண்டதுதானே. (சா)

வேலாவலயத்தயலேமிளிர்வெய்துஞ்
சேலார்திருமாமறைக்காட்டுறைசெல்வா
மாலோடயனிந்திரனஞ்சமுனென்கொல்
காலார்சிலைக்காமனைக்காய்ந்தகருத்தே. (எ)

கலங்கொள்கடலோதமுலாவுகரைமேல்
வலங்கொள்பவர்வாழ்த்திசைக்கும்மறைக்காடா
விலங்கையுடையானடர்ப்பட்டிடவெய்த
வலங்கல்விரலூன்றியருள்செய்தவாறே. (அ)

கோனென்றுபல்கோடியுருத்திரர்போற்றுந்
தேனம்பொழில்சூழ்மறைக்காட்டுறைசெல்வா
வேனங்கழுகானவருன்னைமுனென்கொல்
வானந்தலைமண்டியுங்கண்டிலாவாறே. (கூ)

வேதம்பலவோமம்வியந்தடிபோற்ற
வோதம்முலவும்மறைக்காட்டிலுறைவா
யேதில்சமண்சாக்கியர்வாக்கிவையென்கொ
லாதரொடுதாமலர்தூற்றியவாறே. (௧௦)

காழிநகரான்கலைஞானசம்பந்தன்
வாழிமறைக்காடனைவாய்ந்தறிவித்த
வேழினிசைமாலையீரைந்திவைவல்லார்
வாழியுலகோர்தொழவானடைவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-மறைக்காட்டீசர், தேவியார்-யாழைப்பழித்த மொழியம்மை.

---

அடைத்திடக் கண்டு சண்பை யாண்டகை யாரு மஞ்சொற்
றொடைத்தமி ழாளி யாருந் தொழுதெழத் தொண்ட ரார்த்தார்
புடைப்பொழிக் திழிந்த வெங்கும் பூமழை புகலி வேந்தர்
நடைத்தமிழ்ப் பதிகமாலை நிரம்பிட நவின்று போற்ற.

(இ-ள்.) திருக்கதவுகள் அடைபடக்கண்டு திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் திருநாவுக்கரசுசுவாமிகளும் நமஸ்கரித்து எழ, அடியார்கள் அரகரவென்று ஆரவாரித்தார்கள் ; சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் இனிய நடையையுடைய தமிழ்த்திருப்பதிகம் நிரம்பப் பாடித் துதிக்க, பக்கங்களில் கற்பகவருஷம் பொழிந்து சிந்தின.—எ-று.

இதமுத லிரண்டுபாடலுங் குளகம். (௫௮௮)

அத்திரு வாயி றன்னி லற்றைநா டொடங்கி நேரே
மெய்த்திரு மறைகள் போல மேதினி புக்குப் போற்ற
வைத்தெதிர் வழக்கஞ் செய்த வரம்பிலாப் பெருமை யோரைக்
கைத்தலங் குவித்துத் தாழ்ந்து வாழ்ந்தது கடல்சூழ் வையம்.

(இ-ள்.) அத்திருவாயிலில் அக்காலந்தொடங்கி எதிர்முகமாக உண்மையாகிய வேதங்கள்போல உலகத்திலுள்ளவர்கள் அடைந்து துதிக்கும்படி வைத்து, அதுபோலவே, எதிர்காலத்தும் அடைக்கவுந் திறக்கவுமாகிய வழக்கத்தைச் செய்தருளிய அளவில்லாத பெருமையையுடைய அவ்விரண்டு பரமாசாரிய மூர்த்திகளையும் சமுத்திரஞ்சூழ்ந்த உலகத்திலுள்ள அடியார்கள் தங்கள் கைகளைச்சிரசின் மேற்குவித்து வணங்கிச் சிவானந்தப்பெருவாழ் வடைந்தார்கள்.—எ-று. (௫௮௯)

அருமறை யான வெல்லா மகலிரு விசும்பி லார்த்துப்
பெருமையின் முழங்கப் பஞ்ச நாதமும் பிறங்கி யோங்க
விருபெருந் தகையோர் தாமு மெதிரெதி ரிறைஞ்சிப் போந்து
திருமடங் களின்முன் புக்கார் செழும்பதி விழவு கொள்ள.

(இ-ள்.) அருமையாகிய வேதங்களெல்லாம் அகன்ற பெரிய ஆகாயத்தில் முழங்கிப் பெருமையோடு சப்திக்கவும், பஞ்ச துந்துபிகளும் விளங்கி யொலிக்கவும், செழுமைபொருந்திய அத்திருப்பதியிலுள்ளவர்கள் மங்கலவிழவு கொள்ளவும் பெருந்தன்மையையுடைய அவ்விருவர்களும் ஒருவருக்கொருவர் எதிரெதிராக வணங்கித் தாங்களிருக்குந் திருமடங்களுக்குச் சென்றார்கள்.—எ-று.

பஞ்சநாதமாவன :—தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி என்பன. (௫௯௰)

## திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் புராணம்.

வேதங்க ளெண்ணில் கோடி மிடைந்துசெய் பணியை மிக்க
வேதங்க ணம்பா னீப்பா ரிருவருஞ் செய்து வைத்தார்
நாதங்கொள் வடிவாய் நின்ற நதிபொதி சடையார் செய்ய
பாதங்கள் போற்று மேலோர் பெருமையார் பகரு நீரார்.

(இ-ள்.) அளவில்லாத வேதங்கள்நெருங்கி மூடவுந் திறக்கவுஞ் செய்யவேண்டிய திருப்பணியை நம்மிடத்துள்ள தீவினைகளை யொழித்தருளும் இவ்விருவரும் செய்துவைத்தார்கள் ; நாதசொரூபராய் நின்ற கங்கைநதி பொருந்திய சடைமுடியையுடைய சிவபெருமானது சிவந்த திருவடிகளைத் துதிக்கும் இப்பெரியோர்களது மேன்மையை யார்தான் எடுத்துச்சொல்லுந் திறமுடையவர்கள்.—எ-று.

நாதம் என்றது, சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரியென்னும் நான்குவாக்குகட்கும் காரணமான பிரதான நாதத்தை என்க. நாதவடிவாகிய வேதங்கள் செய்யத்தக்க செய்கையைச் செய்வதற்கு அந்நாத ரூபியாகிய சிவபெருமான் திருவருளைப்பெற்ற மேலோர்களே ஏற்றவரன்றி வேறொருவரானுஞ் செய்துமுடித்தல் கூடாமையான் அவரது பெருமை மனம்வாக்குக் கடங்காதென்பார் "நாதங்கொள் வடிவாய்நின்ற நதிபொதிசடையார் செய்ய, பாதங்கள் போற்றுமேலோர் பெருமையார் பகருநீரார்" என்று கூறினர். (ருகக)

திருமறை நம்பர் தாமுன் பருள்செய்த வதனைச் செப்பு
மொருமையி னின்ற தொண்டர் தம்பிரா னார்பா லொக்க
வருமருட் செய்கை தாமே வகுத்திட வல்லோ ரென்றாற்
பெருமறை யுடன்மெய்த் தொண்டர்க் கிடையீடு பெரிதாமன்றே.

(இ-ள்) சிறந்த வேதங்கள் முன்பு சிவபெருமான் அருளிச்செய்தனவாம் ; அவ்வேதார்த்தங்களை யமைத்துத் தமிழ் வேதமாகச் செய்தருளும், ஒருமைப்பாட்டில்நின்ற திருஞானசம்பந்தப் பிள்ளையார் தாமே அச் சிவபெருமானிடத்துப் பொருந்திய திருவருட்செய்கையைச் செய்யவல்லவ ரென்றால், அவரொழிந்த என்போலும் அடியார்களுக்குப் பெருமைபொருந்திய அவ்வேதங்களோடு வேறுபாடு மிகப்பெரிதாகும்.—எ-று.

ஆதியில் சிவபெருமா னருளிச்செய்த வேதங்கள் பூசித்துத் திருக்காப்பிட்டுச் சென்ற திருக்கதவானது, அவ்வெம்பெருமான் திருக்குமாரரும், அவ்வேதத்திற்கூறும் பிரணவப்பொருளா யுள்ளவரும், அவ்வேதப்பொருளைத் திருநெறித் தமிழ்வேதமாகிய திருப்பதிகங்களா லருளிச்செய்பவருமாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அச்சிவபெருமானைப்போல அருட்செய்கைசெய்ய வல்லவராதலால், அவர் முதற்றிருப்பாசுரம் பாடியருளிய மாத்திரத்தானே எளிதி னடைக்கப்பட்டது. யான் திருப்பதிகம் பாடிமுற்றுப்பெறுமளவுந் திறவாமல், திருக்கடைக்காப்பில் "இரக்கமொன்றிலீர்" எனவருந்திப் பாடியிரக்க அரிதிற் றிறக்கப்பட்டது ; ஆதலால், அப்பிள்ளையாரது திருவருள் வழித்தாய் நிற்கும் வேதத்திற்கும் எனக்கும் மிக்க வேறுபாடுண்டென்று கருதித் திருநாவுக்கரசுசுவாமிகள் சிந்தித்தன ரென்க.

இடையீடு—இடையிலுள்ள தூரம்; அது, ஈண்டு வேறுபாடு என்னும் பொருளில்வந்தது. (ருகஉ)

இவ்வகை திருமறைக்காட் டிறையவ ரருளை யுன்னி
மெய்வகை தெரிந்த வாக்கின் வேந்தர்தாந் துயிலும் போதின்
மைவளர் கண்டர்சைவ வேடத்தால் வந்து வாய்மூ
ரவவிடை யிருத்து மங்கே வாவென்றங் கருளிப் போக.

(இ-ள்.) உண்மை ஞானத்தையுணர்ந்த திருநாவுக்கரசுசுவாமிகள் இவ்வாறு திருமறைக்காட்டில் எழுந்தருளிய சிவபெருமானது திருவருளைச்சிந்தித்து அருநித்திரை செய்யும்பொழுது, காளகண்டத்தையுடைய சிவபெருமான் சைவவேடத்தோடும் எழுந்தருளி, நாம் திருவாய்மூரென்னுந் திருப்பதியி லிருப்போம், அவவிடத்திற்கு நீ தொடர்ந்து வருவாயாகவென்று அருளிச் செய்துபோக.—எ-று.

கண்டவப் போதே கைகள் குவித்துடன் கடிது செல்வார்
மணடிய காதலோடு மருவுவார் போன்றுங் காணு
ரெண்டிசை நோக்கு வாருக் கெய்துவார் போல வெய்தா
வண்டர்தம் பிரானார் தம்பின் போயினா ராவத் தோடும்.

(இ-ள்.) தரிசித்த அப்பொழுதே தமது திருக்கரங்களைக்குவித்துச் சிவபெருமானோடு விரைந்து சென்றருளுந் திருநாவுக்கரசுசுவாமிகள் அவரை மிக்க விருப்பத்தோடு சமீபிப்பவர் போன்றும், பின் அவரைக்காணாதவராய் எட்டுத்திக்குகளையும் பார்க்கின்ற அத்திருநாவுக்கரசருக்குச் சமீபிப்பவர்போலத் தோன்றிச் சமீபியாத தேவர்கள் நாயகராகிய சிவபெருமானுக்குப் பின்னே ஆசையோடுஞ் சென்றருளினார்.—எ-று. (௫௱௬௪)

அங்கவ ரேகச் சண்பை யாண்டகை யாரு மப்ப
ரெங்குற்ற தென்று கேட்ப வெய்தினார் திருவாய் மூரிற்
பொங்கிய காதலாலென் றுரைத்திடப் போன தன்மை
சங்கையுற் றென்கொ லென்று தாமுமங் கணையப் போந்தார்.

(இ-ள்.) திருவாய்மூரை நோக்கித் திருநாவுக்கரசுசுவாமிகள் சென்றருள, சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் அடியார் திருக்கூட்டங்களை நோக்கி அப்பமூர்த்திகள் எங்கு எழுந்தருளினாரென்றுகேட்டருள, (அவர்கள்) திருவாய்மூரில்பொருந்திய ஆசையினால் சென்றனரென்றுகூற, அவர் அங்குச்சென்றதன்மையாது காரணமோவென்று ஐயுற்றுத் தாமும் அத்திருப்பதியை யடையச் சென்றருளினார்.—எ-று.

ஆண்டகை - ஆணினது தகைமையை யுடையவர் என்பூராதலால், அன்மொழித் தொகைப்பெயர். அப்பர் எங்குற்றார் எனக் கூறவேண்டியதை, அப்பரெங்குற்றது, என்று கூறியது பால் வழுவமைதி. (௫௱௬௫)

அங்கிலே யணைந்த போதி லம்பிகை யுடனே கூட,
மன்னிய வாடல் காட்டத் தளரிள வளரும் பாடிச்
சென்னியால் வணங்கி வாய்மூ ரரசொடுஞ் சென்று புக்கங்
கின்னியல் புறமுன்கூடி யிருவரும் போற்றி செய்தார்.

(இ-ள்.) அத் திருப்பதியை யடையச்சென்றபொழுது சிவபெருமான் உமாதேவியாரோடு நிலைபெற்ற திருநடனத்தைக் காட்டியருள "தளிரிளவளர்" என்னு முதலையுடைய திருப்பதிகம்பாடிச் சிரசால் வணங்கிப் பின்திருநாவுக்கரசு சுவாமிகளோடு திருவாய்மூருக்குச் சென்று சேர்ந்து, அங்கு மிக்கஅழகுபொருந்த ச் சந்நிதியை யடைந்து அவ்விருவரும் சிவபெருமானைத் துதித்தார்கள்.—எ-று.()

---

திருவாய்மூர் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

---

தளிரிளவளரொளியுமைபாடத்தாளம்மிடவோர்கழல்வீசிக்
கிளரிளமணியரவரையார்த்தாடும்வேடக்கிறிமையார்
விளரிளமுலையவர்க்கருணல்கிவெண்ணீறணிந்தோர்சென்னிமேல்
வளரிளமதியமொடிவராணீர்வாய்மூரடிகள்வருவாரே.

திங்களொடருவரைப்பொழிற்சோலைத்தேனலங்கானலந்திருவாய்மூர்
அங்கமொடருமறையொலிபாடலழனிறவண்ணர்தமடிபரவிச்
சங்கடம்வினைகெடமொழியவல்லஞானசம்பந்தன்தமிழ்மாலை
தங்கியமனத்தினாற்றொழுதெழுவார்தவநெறியுலகுக்கோர்தவநெறியே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - வாய்மூரீசர் ; தேவியார் - பாலினு நன்மொழியம்மை.

---

நீடுசீர்த் திருவாய் மூரி னிலவிய சிவனார் தம்மைப்
பாடுசொற் பதிகந் தன்னாற் பரவியப் பதியில் வைகிக்
கூடுமெய் யன்பு பொங்க விருவருங் கூடி மீண்டு
தேடுமா மறைகள் கண்டார் திருமறைக் காடு சேர்ந்தார்.

(இ-ள்.) மிக்க சிறப்பினையுடைய திருவாய்மூரில் விளங்குகின்ற சிவபெருமானைப் பாடுகின்ற இனிய சொற்களமைந்த திருப்பதிகத்தினால் துதித்து அத் திருப்பதியில் வசித்துச் (சிலநாளாயினபின்) பொருந்திய மெய்யன்பு அதிகரிக்க, அவ் விருவருங்கூடித்திரும்பி, சிறந்த வேதங்கள் பூசித்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் ஸ்ரீவேதாரண்ணியத்தை யடைந்தார்கள். எ-று. (ருகூஎ)

சண்பைநா டுடைய பிள்ளை தமிழ்மொழித் தலைவரோடு
மண்பயில் கீர்த்திச் செல்வ மாமறைக் காட்டு வைகிக்
கண்பயி லொற்றி யார்தங் கழலிணை பணிந்து போற்றிப்
பண்பயில் பதிகம் பாடிப் பரவியங் கிருந்தா ரன்றே.

(இ-ள்.) சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருநாவுக்கரசுசுவாமிகளோடு உலகத்தில் நிறைந்த புகழையும் செல்வத்தையு முடைய சிறந்த வேதாரண்ணியத்தில் வசித்தருளி நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானது திருவடிகளை வணங்கிப்போற்றி, பண்ணமைந்த திருப்பதிகம் பாடித் துதித்து அங்கு எழுந்தருளியிருந்தார்.—எ-று.

அன்று ஏ அசைநிலை. (ருகூஅ)

இவ்வகை யிவர்க ளங்க ணிருந்தன ராக விப்பாற்
செய்வகை யிடையே தப்புந் தென்னவன் பாண்டி நா
மெய்வகை நெறியி னில்லா வினையமண் சமய மிக்குக்
கைவகை முறைமைத் தன்மை கழியமுன் கலங்குங்காலை.

(இ-ள்.) இவ்வாறு திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் திருநாவுக்கரசுசுவாமிகளும் அங்கு எழுந்தருளியிருக்க, இதன்மேல், செய்யும் வேதமுறைமையினின்றும் இடையில் தவறிய பாண்டியராசன் அரசாட்சி செய்யும் பாண்டிநாட்டில் உண்மையாகிய நன்னெறியில் ஒழுகாத தீவினையையுடைய சமணசமயம் அதிகரித்து நல்லொழுக்கமாகிய முறைமையானது நீங்க முன்னே கலங்கியிருக்குங்காலத்தில்.—எ-று.

பாண்டியன் சமணர்கள் செய்த துர்ப்போதனையினால் தான் கடைப்பிடித்தொழுகிய சைவநெறியினின்றும் வழுவினனன்றி இதற்குமுன எக்காலத்துமின்றென்பார் 'இடையேதப்பும்' என்றும், இவன் அச்சமணசமயத்தைச் சார்ந்தொழுகவே, "மன்னவனெப்படி மன்னுயிரப்படி" என்னும் பழமொழிப்படி அந்நாட்டுக் குடிகளும் சைவசமயத்தினின்று நீங்கிச் சமணப்படுகுழியில் வீழ்ந்து கலங்கினரென்பார் "பாண்டிநாட்டு - மெய்வகை நெறியி னில்லா வினையமண் சமயமிக்குக் - கைவகை முறைமைத் தன்மை கழியமுன் கலங்குங் காலை' என்றுங் கூறினர். (௫௯௯)

தென்னவன் றானு முன்செய் தீவினைப் பயத்தி னாலே
யந்நெறிச் சார்வு தன்னை யறமென நினைந்து நிற்ப
மன்னிய சைவ வாய்மை வைதிக வழக்க மாகு
நன்னெறி திரிந்து மாறி நவைநெறி நடந்த தன்றே.

(இ-ள்) பாண்டியனும் முற்பிறப்பிற் செய்த தீவினைப்பயனால் அந்த அவநெறியாகிய சமணசமயச் சார்பை அறநெறியென்று மதித்து ஒழுகுதலால், மெய்ம்மை பொருந்திய வைதிகசித்தாந்த சைவமாகிய சற்சமயமானது திரிந்து வேறுபட்டுக் குற்றம்பொருந்திய சமண சமயம் எங்கும் பரவியது.—எ-று.

தென்னவன் முற்பிறப்பில் நல்வினை செய்திருப்பானாயின், ஈண்டுத் தவறுதற்கேது உண்டாகாது ; அஃதின்மையின், சற்சமயமாகிய சைவமரபிற் பிறந்தும், "பல்லாவுளுய்த்து விடினுங் குழக்கன்று-வல்லதாந் தாய்நாடிக் கோடலைத் - தொல்லைப் - பழவினையு மன்ன தகைத்தேதற் செய்த - கிழவனை நாடிக் கொளற்கு" என்னும் பிரமாணத்திற் கிசையச் சமணநெறியைச் சார்ந்து அஃதே யறமெனக் கருதி யொழுகின னென்க. வேதாந்தத்தின் தெளிவே சித்தாந்த சைவமென்பார் 'மன்னிய சைவவாய்மை வைதிக வழக்கமாகு நன்னெறி' என்றும், இவ் வமணசமயம் இப்பாண்டியன் காலத்திற்குமுன் ஒரு சிறிதுங் கிடையாதென்பதும், இவன் காலத்திற்றானே பையப்பையப் பரவியதென்பதுந் தோன்ற, 'நவைநெறி நடந்தது' என்றுங் கூறினர். நிற்ப என்னுஞ்செயவெனெச்சம் காரணப்பொருட்டாய் இறந்தகாலத்தைக்காட்டியது. அன்று ஏ அசைநிலை. (௬௦௦)

பூழியர் தமிழ்நாட் டுள்ள பொருவில்சீர்ப் பதிக ளெல்லாம்
பாழியு மருகர் மேவும் பள்ளிகள் பலவு மாகிச்
சூழிருட் குழூஉக்கள் போலத் தொடைமயிற் பீலி யோடு
மூழிநீர் கையிற் பற்றி யமணரே யாகி மொய்ப்ப.

(இ-ள்.) பாண்டியர்களது தமிழ்நாட்டிலுள்ள ஒப்பற்ற சிறப்பினையுடைய ஊர்களிலெல்லாம் அருகக் கடவுள் கோயில்களும், சமண முனிவர்கள் வசிக்கும் பல மடங்களுமாகி, நெருங்கிய இருட்கூட்டங்கள் போலக் கட்டிய மயிற்பீலியோடு கமண்டலநீரைக் கையில் பிடித்துக்கொண்டு சமணர்களே யாகி யெங்கும் நெருங்க.—எ-று.

பள்ளி = சமணமுனிவர் வசிக்குமடம். மூழி = கமண்டலம். தமிழ்த்தலைவராகிய அகத்திய முனிவருக்கும், தமிழைவளர்த்த பாண்டியர்களுக்கும், முதலிடை கடையென்னு முச்சங்கப் புலவர்களுக்கும் உறைவிடம் இதுவே யென்பார், பாண்டிநாட்டைத் தமிழ்நாடென்று கூறினர். “சந்தனப்பொதியச் செந்தமிழ் முனிவனுஞ் - சவுந்தர பாண்டிய னெனுந்தமிழ்நாடனுஞ் - சங்கப்புலவருந் தழைத்தினி திருந்த - மங்கலப்பாண்டிவள நாடென்ப” என்பதனுனுணர்க. “மருவு முத்தமிழை முன்னாள்வளர்த்த பாண்டியனேபோல” என்றார் நிகண்டினுள்ளும்.

சமணர்கள் மயிர்பறிதலையுந் தொடைமயிற்பீலியும் ஊத்தைவாயு முறிபொதிகலனும் பாயுடை யிடையும் படிறுறுமனனும் மாசுண்மேனியு முடையராய் அத்தமிழ்நாடெங்கு நிறைந்திருத்தல் பற்றி, “சூழிருட் குழூஉக்கள்போல * * அமணரேயாகி மொய்ப்ப” என்று கூறினர். (சூ௦௧)

பறிமயிர்த் தலையும் பாயும் பீலியுந் தடுக்கு மேனிச்
செறியுமுக் குடையு மாகித் திரிபவ ரெங்கு மாகி
யறியுமச் சமய நூலி னளவினி லடங்கிச் சைவ
நெறியினிற் சித்தஞ் செல்லா நிலைமையி னிகழுங் காலை.

(இ-ள்.) மயிர் பறித்த தலையும், இடையிலுடுத்தபாயும், கையிற்பிடித்த மயிற்பீலியும் பக்கத்திலிடுக்கிய தடுக்கும் உடம்பின்மேற்பிடித்த முக்குடையுமாகத்திரியும் சமணர்கள் எவ்விடங்களிலும் நிறைந்து, அவர்கள் மெய்யென்று கருதியறிந்த புறச்சமயமாகிய அச்சமண சமயத்தின் நூலளவையி லடங்கி, வேதசாரமாகிய சைவமார்க்கத்தில் மனஞ்செலுத்தாத நிலைமையோடு (அப்பாண்டி நாட்டிலுள்ளவர்கள்) ஒழுகுங்காலத்தில். எ-று.

முக்குடைகளாவன.—சந்திராதித்தியம், நித்தியவிநோதம், சகலபாசனம் என்பனவாம். அளவை = பிரமாணம். (சூ௦௨)

வரிசிலைத் தென்ன வன்றா னுய்தற்கு வளவர் கோமான்
றிருவுயிர்த் தருளுஞ் செல்வப் பாண்டிமா தேவி யாருங்
குலகழ லமைச்ச ராங் குலச்சிறை யாருமென்னு
மிருவர்தம் பாங்கு மன்றிச் சைவமங் கெய்தா தாக.

(இ-ள்.) வரிந்த வில்லைப்பிடித்த பாண்டியராசன் (சமணசமயத்தினின்றும்) கடைத்தேறும்பொருட்டுச் சோழராசன் மங்கலமாகப்பெற்றருளிய செல்வ

ப்புத்திரியாராகிய மங்கையர்க் கரசியாரும், சத்திக்கின்ற வீரக்கழலையணிந்த மந்திரியாராகிய குலச்சிறைநாயனருமென்று கூறும் இவ்விருவரிடத்தன்றி அந்நாட்டில் (வேறொருவரிடத்தும்) சைவமார்க்கம் வழங்காதிருக்க.—எ-று. (௬௦௩)

ஆங்கவர் தாங்க ளங்க ணரும்பெறற் றமிழ்நா டுற்ற
தீங்கினுக் களவு தேற்றாச் சிந்தையிற் பரிவு கொண்டே
யோங்கிய சைவ வாய்மை யொழுக்கத்தி னின்ற தன்மை
பூங்கழற் செழியன் முன்பு புலப்படா வகைகொண் டுய்த்தார்.

(இ-ள்.) அவ்விடத்து அவர்களிருவரும் பெறுதற்கரிய பாண்டிநாடு அடைந்திருக்கின்ற கேட்டுக்கு ஓரெல்லை அறியாமல் மனதில் வருத்தங்கொண்டு, சிறந்த மெய்ம்மையாகிய சைவமார்க்கத்தில் ஒழுகுந்தன்மையை அழகிய வீரக்கழலையணிந்த பாண்டியனுக்கு முன்னே தெரியாதிருக்கும் வண்ணம் அனுஷ்டித்து வந்தார்கள்.—எ-று.

தீங்கினுக் களவுதேற்றாமையாவது, சமணர்களாலுண்டாகிய தீங்கு நீங்குதற்குரிய காலவளவு தெளியாமை. பாண்டியன் தாங்கள் கடைப்பிடித் தொழுகும் மெய்ச்சமயமாகிய சைவவொழுக்கத்தை யுணர்வானாயின் தீங்கு விளைப்பானாகலின் அவனறியாவகை யொழுகின ரென்க. தேற்றா - ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். (௬௦௪)

இந்நெறி யொழுகு கின்றா ரோழுல குய்ய வந்த
மன்னிய புகலி வேந்தர் வைதிக வாய்மைச் சைவச்
செந்நெறி விளக்கு கின்றார் திருமறைக் காடு சேர்ந்த
நன்னிலை கன்னி நாட்டு நல்வினைப் பயந்தாற் கேட்டார்.

(இ-ள்.) இவ்வாறு (பாண்டிய னறியாவண்ணம் மறைந்து) ஒழுகுகின்ற அவ்விருவரும் ஏழுலகங்களும் ஈடேறும்பொருட்டு நிலைபெற்ற சீகாழிப்பதியி லவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் வேதத்திற்கூறும் மெய்ச்சமயமாகிய சிறந்த சைவமார்க்கத்தைப் பிரகாசப்படுத்தும் பொருட்டு, ஸ்ரீ வேதாரண்ணியத்திற் கெழுந்தருளிய நல்லசங்கதியைப் பாண்டிநாடு செய்த பெருந்தவத்தினாலே கேள்வியுற்றார்கள்.—எ-று. (௬௦௫)

கேட்டவப் பொழுதே சிந்தை கிளர்ந்தெழு மகிழ்ச்சி பொங்க
நாட்பொழு தலர்ந்த செந்தா மரைநகை முகத்த ராகி
வாட்படை யமைச்ச னாரு மங்கையர்க் கரசி யாருஞ்
சேட்படு புலத்தா ரேனுஞ் சென்றடி பணிந்தா ரொத்தார்.

(இ-ள்.) அவ்வாறு கேள்வியுற்ற பொழுதே வாளாயுதத்தை யேந்திய குலச்சிறை நாயனரும் மங்கையர்க் கரசியாரும் தங்கள் மனதில் பூரித்தெழுகின்ற மகிழ்ச்சியானது அதிகரிக்க, அன்றலர்ந்த செந்தாமரை மலர்போலும் மலர்ந்த முகத்தை யுடையவர்களாய்த் தூரதேசத்தி லுள்ளவராயினும் சமீபத்திற்சென்று பிள்ளையாரது திருவடிகளை வணங்கினவரை யொத்தார்கள்.—எ-று.

மந்திரியாரும் மங்கையர்க் கரசியாரும் திருமறைக்காட்டில் பிள்ளையாரெழுந்தருளினரென்னுஞ் செய்தி கேள்விப்பட்டவுடனே அங்குச்சென்று அவரது

திருவடியை வணங்கித் தங்கருத்து முற்றுப்பெறப் பெற்றதுபோலு மகிழ்கூர்ந்தன ரென்பார் 'சேட்படு புலத்தாரோனுஞ் சென்றடி பணிந்தாரொத்தார்' என்று கூறி ஞர்.

"கற்பலர் கொடியன் ஞருந் தென்னவன் கண்போல் வாரு
மற்புணை யமண்பே யோட்டி யன்றுதங் கோமான் மெய்யிற்
பொற்புறு நீறு கண்டு பூதிசா தனத்தா லெய்துஞ்
சிற்பர வீடு கண்ட மகிழ்ச்சியுட் டிளைத்தோ ராஞர்."—எனவருந் திரு விளையாடற் புராணத்தா னுணர்க. (௬0௬)

காதலான் மிக்கோர் தாங்கள் கைதொழுங் கருத்தி ஞலே
போதவிழ் சோலை வேலிப் புகலிகா வலஞர் செய்ய
பாதங்கள் பணிமி னென்று பரிசன மாக்க டம்மை
மாதவஞ் சுருதி செய்த மாமறைக் காட்டில் விட்டார்.

(இ-ள்) விருப்பத்திற் சிறந்த அவ் விருவரும் (திருஞானசம்பந்தப்பிள்ளை யை) வணங்கவேண்டுமென்னுங் கருத்தினுல் அரும்புகளலர்ந்த சோலை சூழ்ந்த சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது சிவந்த திருவடிகளை வணங் குங்களென்று, வேதங்கள் மகத்தாகிய தவத்தைச்செய்த திருமறைக்காட்டிற்குத் தமது பரிசனங்களை யனுப்பினார்கள்.—எ-று. (௬0எ)

ஆங்கவர் விடமுன் போந்த வறிவுடை மாந்த ரங்க
ணீங்கிவண் டமிழ்நாட் டெல்லை பிற்பட நெறியி னேகி
ஞாங்கர்நீர் நாடுங் காடு நதிகளுங் கடந்து வந்து
தேங்கமழ் கைதை நெய்தற் றிருமறைக் காடு சேர்ந்தார்.

(இ-ள்.) அங்கு அவ்விருவரும் அனுப்ப முன்னே சென்ற நல்லறிவினை யுடைய பரிசனங்கள் அவ்விடத்தினின்று நீங்கி, வளப்பம்பொருந்திய பாண்டிநா ட்டெல்லை பிற்படும்படி வழியேசென்று அருகிலுள்ள நீர்வளம்பொருந்திய நாடுக ளையும் காடுகளையும் நதிகளையுங் கடந்து, தேன் கமழ்கின்ற தாழைகள் சூழ்ந்த நெய்தநிலத்திலுள்ள ஸ்ரீவேதாரண்ணியத்தை யடைந்தார்கள்.—எ-று.

கைதை நெய்தநிலக் கருப்பொருளாகலின் 'கைதைநெய்தல்' என்று கூறினர், நெய்தல் என்பது, கடற்சார்பூமி. (௬0அ)

திருமறைக் காடு நண்ணிச் சிரபுர நகரில் வந்த
அருமறைத் தலைவ ஞரங் கமர்ந்திருந் தருளுஞ் செல்வப்
பெருமடத் தணைய வந்து பெருகிய விருப்பிற் ருங்கள்
வருமுறைத் தன்மை யெல்லாம் வாயில்கா வலர்க்குச் சொன்ஞர்.

(இ-ள்.) இவ்வாறு வேதாரண்ணியத்தை யடைந்து சீகாழிப்பதியிலவதரித் தருளிய சிறந்த வேதமுதல்வராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளி யிருக்கும் அருட்செல்வத்தையுடைய பெரிய திருமடத்தை யடைந்து, மிக்க விரு ப்பத்தோடும் தாங்கள் அங்குவந்ததன்மைகளையெல்லாம் வாயில்காவலாளருக்குத் தெரிவித்தார்கள்.—எ-று. (௬0௯)

மற்றவர் சென்று புக்கு வளவர்கோன் மகளார் தென்னர்
கொற்றவன் றேவி யாருங் குலச்சிறை யாரு மேவப்

பொற்கழல் பணிய வந்தோ மெ
சொற்றன ரென்று போற்றித் தொழுதுவிண் ணப்பஞ் செய்தார்.

(இ-ள்.) (அதைக்கேட்ட) வாயிலாளர்கள் சென்றுஉள்ளேபுகுந்து, சோழ ராசன் புத்திரியாராகிய பாண்டிமாதேவியாரும் (மந்திரியாராகிய) குலச்சிறைநாய னாரும் எங்களை ஏவுதலால் அழகிய திருவடிகளை வணங்கவந்தோமென்று சிலர் திருவாயிலின் புறத்துவந்து சொன்னார்களென்று துதித்து வணங்கி விண்ணப்பஞ் செய்தார்கள்.—எ-று. (௬௪௰)

புகலிகா வலர்தாங் கேட்டுப் பொருவிலா வருண்முன் கூர
வகமலர்ந் தவர்க டம்மை யழையுமென் றருளிச் செய்ய
நகைமுகச் செவ்வி நோக்கி நற்றவ மாந்தர் கூவத்
தகவுடை மாந்தர் புக்குத் தலையினால் வணங்கி நின்றார்.

(இ-ள்.) அதனைத் திருஞானசம்பந்தப்பிள்ளையார் கேட்டருளி ஒப்பற்ற திருவரு ளதிகரிக்க, மனமகிழ்ந்து அவர்களை இங்கு அழையுங்களென்று அருளிச் செய்ய, பிள்ளையாரது மலர்ந்த திருமுகத்தின் சமயத்தைப்பார்த்து, நல்ல தவத்தி னையுடைய வாயிலாளர்க ளழைக்க நல்ல புண்ணியத்தையுடைய அப் பரிசனங் கள் உள்ளே புகுந்து சிரசினால் அவரது திருவடிகளை வணங்கித்திருமுன்னின் றார்கள்.—எ-று. (௬௪௧)

நின்றவர் தம்மை நோக்கி நிகரில்சீர்ச் சண்பை மன்னர்
மன்றலங் குழலி யாரா மானியார் தமக்கு மானக்
குன்றென நின்ற மெய்ம்மைக் குலச்சிறை யார்த மக்கு
நன்றுதான் வினவக் கூறி நற்பதம் போற்று வார்கள்.

(இ-ள்.) ஒப்பற்ற சிறப்பினையுடைய சீகாழித்தலைவராகிய திருஞானசம்ப ந்தப்பிள்ளையார் தம்முன்னின்ற பரிசனங்களைப் பார்த்து (இயற்கை) மணம் வீசுகி ன்ற அழகிய கூந்தலையுடைய மங்கையர்க்கரசியாருக்கும், சைவாபிமானத்திற்கு ஓர் மலைபோல நிற்கின்ற மெய்ம்மைபொருந்திய குலச்சிறைநாயனாருக்குமுள்ள க்ஷேமங்களை வினவியருள, அப்பரிசனங்கள் அதற்கு விடைகூறி வணங்கி விண் ணப்பஞ்செய்வார்கள்.—எ-று. (௬௪௨)

கன்னிநா டமணர் தம்மாற் கட்டழிந் திழிந்து தங்கண்
மன்னனு மவர்கண் மாயத் தழுந்தமா தேவி யாருங்
கொன்னவி லயில்வேல் வென்றிக் குலச்சிறை யாருங் கூடி
யிந்நிலை புகலி வேந்தர்க் கியம்புமென் றிறைஞ்சி விட்டார்.

(இ-ள்.) சமணர்களால் பாண்டிநாடானது நன்னிலை கெட்டு இழிவை யடைந்து தங்க ளரசனாகிய பாண்டியராசனும் அச்சமணர்களது மயக்கத்தி லழு ந்த, அப்பாண்டியனது பத்தினியாராகிய மங்கையர்க்கரசியாரும், அச்சந்தருகின்ற கூரிய வெற்றிவேலேந்திய குலச்சிறைநாயனாருஞ் சேர்ந்து யோசித்து, இந்தச் செய்தியைத் திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்குச் சொல்லுங்களென்று (தேவரீ ரெழுந்தருளியிருக்குந் திசைநோக்கி) வணங்கி எங்களையனுப்பினார்கள்.—எ-று. ()

## வேறு.

என்றவர்கள் விண்ணப்பஞ் செய்த பின்ன ரேறுயர்த்த சிவபெருமான் றொண்ட ரெல்லா, நன்றுநமை யாளுடைய நாதன் பாத நண்ணாத வெண்ணிலமண் குண்டர் தம்மை, வென்றருளி வேதநூ னெறியே யாக்கி வெண்ணீறு வேந்தனையு மிடுவித் தங்கு, நின்றசெயல் சிவனடியார் செயலேயாக நினைந்தருள வேண்டுமென நின்று போற்ற.

(இ-ள்.) இவ்வாறு அப்பரிசனங்கள் விண்ணப்பஞ்செய்தபின்பு இடபக்கொடியை யுயர்த்திய சிவபெருமானது அடியார்திருக்கூட்டங்களெல்லாம் இது நன்று; நம்மை யாளாகவுடைய சிவபெருமானது திருவடிகளையடையாத அளவில்லாத சமணர்களாகிய கீழ்மக்களைச் செயித்தருளி வேதமார்க்கமாகிய சைவசமயமே பரவச்செய்து, பாண்டியராசனையும் திருவெண்ணீறு தரிக்கச்செய்து, அப்பாண்டிநாட்டில் நிகழும் ஒழுக்கம் சிவனடியாரொழுக்கமேயாகும்வண்ணந் தேவரீர் திருவுள்ளங்கொண்டருளவேண்டுமென்று நின்று துதிக்க.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (௬௧௪)

மற்றவர்கட் கருள்புரிந்து பிள்ளை யாரும் வாகீச முனிவருடன் கூடச் சென்று, பெற்றமுயர்த் தவர்பாதம் பணிந்து போந்து பெரியதிருக் கோபுரத்து ளிருந்து தென்னா, டுற்றசெயல் பாண்டிமா தேவியாரு முரிமையமைச் சருமுரைத்து விட்ட வார்த்தை, சொற்றனிமன் னவருக்குப் புகலி மன்னர் சொல்லியெழுந் தருளுதற்குத் துணிந்த போது.

(இ-ள்.) அவ்வடியார்களுக்கு (அவ்வாறு செய்குவமென்று) திருவருள்புரிந்து திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் திருநாவுக்கரசுசுவாமிகளோடு திருக்கோயிலினுள் ளெழுந்தருளி இடபக்கொடியையுடைய சிவபெருமானது திருவடிகளை வணங்கிப் புறத்திற் சென்று பெரிய திருக்கோபுரத்தினுள்ளிருந்தருளிப் பாண்டிநாட்டிலுள்ளவர்களடைந்திருக்குந் தாழ்வைக்குறித்து மங்கையர்க்கரசியாரும் அரசுரிமைக் குரிய மந்திரியாராகிய குலச்சிறைநாயனாரும் (பரிசனங்கள் மூலமாகச் சொல்லியனுப்பிய சங்கதியை ஒப்பற்ற திருநாவுக்கரசுசுவாமிகளுக்குக் கூறியருளி அப்பாண்டிநாட்டிற் கெழுந்தருளத் திருவுள்ளந் துணிந்தபொழுது.—எ-று.

தென்னாடு - இடவாகுபெயர். தெற்கின்கண்ணுள்ள நாடாதல்பற்றிப் பாண்டிநாட்டைத் தென்னாடு என்று கூறினர். தென்னன்நாடு என்பது தென்னாடு என மரீஇயதென்பாருமுளர். (௬௧௫)

அரசருளிச் செய்கின்றார் பிள்ளா யந்த வமணகையர் வஞ்சனைக் கோ ரவதி யில்லை, யுரைசெய்வ துளதுறுகோ டானுந் தீய வெழுந்தருள வுடன்படுவ தொண்ணா தென்னப், பரசுவது நம்பெருமான் கழல்க ளென்றாற் பழுதணையா தெனப்பகர்ந்து பரமர் செய்ய, விரைசெய் மலர்த் தாள்போற்றிப் புகலிவேந்தர் வேயுறுதோ ளியையெடுத்து விளம்பினரே.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் திருஞானசம்பந்தப்பிள்ளையாரைப் பார்த்து அருளிச்செய்கின்றார், பிள்ளையே! அந்தச் சமணராகிய கீழ்மக்கள் செய்யும் வஞ்சனைக்கோ ஓர் எல்லையில்லை; அன்றியும் யாம் சொல்வதொன்றுண்டு; பொருந்திய கிரகங்களும் (உமக்கு) இப்போது வலியில்லனவாகும் ஆதலால் நீர் அவ்விடத்

திலெழுந்தருளுதற்கு உடன்படுவது தகுதியன்றென்று தடுத்துக்கூற, அதற்குத் திருஞானசம்பந்தப்பிள்ளையார் நாம் சதாகாலமுந் துதிப்பது நமது சிவபெருமான் திருவடிகளேயாகில் நாள்கோள் முதலியவற்றால் ஒரு குற்றமும் நெருங்காதென்று கூறியருளிச் சிவபெருமானது வாசனைபொருந்திய செந்தாமரை மலர்போன்ற திருவடிகளைத் துதித்து "வேயுறுதோளி" என்னு முதலையுடைய திருப்பதிகத்தைப் பாடியருளினார்.—எ-று.

திருஞானசம்பந்தப்பிள்ளையார் மிகச் சிறுவரென்பதும், சமணர்கள் மிக்க கொடியவரென்பதும், அவர்கள் செய்யுந் தீங்கும் அளவில்லன என்பதுந் தோன்ற 'பிள்ளாயந்த வமண்கையர் வஞ்சனைக்கோ ரவதி யில்லை' என்று கூறினார். இதனை,

"ஆதகா திதுவென் றோதுவார் நாவுக் கரையர்நீர் சிறியவ ரவரோ
பாதக மஞ்சார் தம்மொடும் பன்னாட் பழகிய வெனையவர் செய்த
வேதனை யளந்து கூறுவ தென்னை விடுகெதில் லம்மவோ வுமக்கிப்
போதுநாள் கோள்கள் வலியில வென்னப் புகலியர் வேந்தரும் புகல்வார்.

எந்தையெம்பெருமானருளிலார்போலவின்னணமிசைப்பதெனவர்செய்
வெந்தவேதனையினுய்ந்தநீர்நாள்கோள்விலங்குபுள்ளவுணர்பேய்பூத
மந்தமில்பலவுமம்மையோடப்பனாணையானடப்பனவவர்நஞ்
சிந்தையேகோயில்கொண்டுவீற்றிருப்பத்தீங்கிழையாவென வெழுந்தார்."

எனவருந் திருவிளையாடற்புராணத்தா னுணர்க. (சுகசு)

---

வேயுறுதோளி - பண் - பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

வேயுறுதோளிபங்கன்விடமுண்டகண்டன்மிகநல்லவீணைதடவி
மாசறுதிங்கள்கங்கைமுடிமேலணிந்தெனுளமேபுகுந்தவதனா
ஞாயிறுதிங்கள்செவ்வாய்புதன்வியாழம்வெள்ளிசனிபாம்பிரண்டுமுடனே
யாசறுநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே.

தேனமர்பொழில்கொளாலைவிளைசெந்நெறுன்னிவளர் செம்பொனெங்குதி
நான்முகனாதியாயபிரமாபுரத்துமறைஞானஞானமுனிவன் [கழ.
றானுறுகோளுநாளுமடியாரைவந்துநலியாதவண்ணமுரைசெய்
யானசொன்மாலையோதுமடியார்கள்வானிலரசாள்வராணைநமதே.

திருச்சிற்றம்பலம்.

---

சிரபுரத்துப் பிள்ளையா ரருளிச் செய்த திருப்பதிகங் கேட்டதற்பின் றிருந்து நாவுக், கரசுமதற் குடன்பாடு செய்துதாமு மவர்முன்னே யெழுந்தருள வமைந்தபோது, புரமெரித்தார் திருமகனா ரப்ப ரிந்தப் புனனாட்டி லெழுந்தருளி யிருப்பீ ரென்று, கரகமலங் குவித்திறைஞ்சித் தவிர்ப்ப வாக்கின் காவலருந் தொழுதரிதாங் கருத்தி னோர்ந்தார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையா ரருளிச்செய்த திருப்பதிகத்தைக் கேட்டருளியபின்பு, திருத்தமாகிய திருநாவுக்கரசுசுவாமிகளும் அதற்கு உடன்பட்டு, தாமும் அப்பிள்ளையாருக்கு முன்னே பாண்டிநாட்டிற் கெழுந்தருள அமை

ந்தபொழுது, சிவபெருமானது திருக்குமாரராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அப்பரோ! நீர் இக்தச்சோழமண்டலத்திலேதானே எழுந்தருளியிருப்பீரென்று தாமரை மலர்போன்ற திருக்கரங்களைக் குவித்து வணங்கித் தம்மோடுவருதலை தடுக்க, திருநாவுக்கரசுசுவாமிகளும் வணங்கி நீங்குதற்கரியகருத்தோடும் அதற்கு ஒருவாறு சம்மதித் தருளினார்.—எ-று.

மங்கையர்க்கரசியாருங் குலச்சிறைநாயனாரும் பரிசனங்கள் மூலமாகத் தெரிவித்தது தமக்குமாத்திரமே யென்பதும், தாங்க ளிருவருங் கூடிச்சென்று அவ் வற்பசமயத்தை யழிப்பின் ஒருவருக்கு ஆற்றல் போதாமையால் இருவர்கூடி யழித்தன ரென்னுமோ ரிழிசொல் உலகி னிகழுமென்பதுங் கருதிப் பிள்ளையார் திருநாவுக்கரசுசுவாமிகளைச் சோழநாட்டிலேயே இருக்கச்செய்தனரென்க. (கூகஎ)

வேதம்வளர்க் கவுஞ்சைவம் விளக்குதற்கும் வேதவனத்தருமணி யைமீண்டும் புக்குப், பாதமுறப் பணிந்தெழுந்து பாடிப் போற்றிப் பரசியருள் பெற்றுவிடை கொண்டு போந்து, மாதவத்து வாகீசர் மருந்தவண்ணம் வணங்கியருள் செய்துவிடை கொடுத்து மன்னுங், காதலினு லருமையுறக் கலந்து நீங்கிக் கதிர்ச்சிவிகை மருங்கணைந்தார் காழி நாதர்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் வேதமார்க்கத்தை விருத்திசெய்யவும், அதன் சாரமாகிய சித்தாந்தசைவத்தை விளக்கமுறச்செய்யவும் மீளவுஞ் சென்று வேதாரண்ணியத்தி லெழுந்தருளும் அரிய மாணிக்கம்போன்ற சிவபெருமானது திருவடிகளிற் பொருந்த வணங்கியெழுந்து திருப்பதிகம் பாடித் துதித்துத் திருவருள்பெற்று விடைகொண்டு புறத்துவந்து, மகத்தாகிய தவத்தினையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் தம்மைத் தடுக்காதவண்ணம் வணங்கி யருள்செய்து, அவர்க்குவிடைகொடுத்து, பொருந்திய ஆசையோடு அருமையாகக்கலந்து நீங்கி, ஒளிபொருந்திய முத்துச்சிவிகையின் அருகுஎழுந்தருளினார்.—எ-று.

'காழி நாடர்' என்றும் பாடம். (கூகஅ)

திருநாவுக் கரசருமங் கிருந்தா ரிப்பாற் றிருஞான சம்பந்தர் செழுநீர் முத்தின், பெருநாமச் சிவிகையின்மீ தேறிப் பெற்ற மூயர்த்தவர்தாள் சென்னியின்மேற் பேணு முள்ளத், தொருநாமத் தஞ்செழுத்து மோதி வெண்ணீற் றொளிவிளங்குந் திருமேனி தொழுதார் நெஞ்சில், வருநாமத் தன்புருகுங் கடலா மென்ன மாதவரார்ப் பொலிவைய நிறைந்த தன்றே.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகளும் (அவருடன் செல்லாது) அங்கு இருந்தருளினார்; இதன்மேல், திருஞானசம்பந்தப்பிள்ளையார் செழிய நீர்மையையுடைய சிறந்த முத்துச்சிவிகையின்மீ தெழுந்தருளி இடபக்கொடியையுடைய சிவபெருமானது திருவடிகளைச் சிரசின்மேற் கொள்ளுந் திருவுள்ளத்தோடும் ஒப்பற்ற திருநாமமாகிய ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை யோதிக்கொண்டு, அவ்வெம்பெருமானது திருவெண்ணீற்றி னொளிவிளங்குந் திருமேனியை வணங்கினார்; மிக்க தவத்தையுடைய அடியார்திருக்கூட்டங்கள் தம்மனதிற் பொருந்தவருகின்ற பல திருநாமங்களால் அன்புவெள்ளமுருகி யோடப்பெற்ற ஓர்கடலைப்போல ஆரவாரஞ் செய்யும் பேரோசையானது உலகமுழுமையும் நிறைந்தது.—எ-று. (கூகக)

வேறு.

பொங்கியெழுந் திருத்தொண்டர் போற்றெடுப்ப நாற்றிசையு
மங்கலதூ ரியந்தழங்க மறைமுழங்க மழைமுழுங்குஞ்

சங்கபட கம்பேரி தாரைகா ளந்தாள
மெங்குமெழூந் தெதிரியம்ப விருவிசும்பு கொடிதூர்ப்ப.

(இ-ள்.) பேரானந்தத்தா லதிகரித்தெழுகின்ற அடியார் திருக்கூட்டங்கள் துதிக்கவும், நான்கு திக்குகளிலும் மங்கலவாத்திய முழங்கவும், வேதங்க ளொலிக்கவும் மேகம்போலச் சப்திக்கின்ற சங்கமும், படகமும், பேரிகையும், தாரையும், எக்காளமும், தாளமும் எவ்விடத்து மதிகரித்தெழுந்து மாறுபட்டொலிக்கவும், கொடியாடைகள் பெரிய ஆகாயத்தைத் தூர்க்கவும்.—எ-று. (௬௨௦)

மலர்மாரி பொழிந்திழிய மங்கலவாழ்த் தினிதிசைப்ப
வலர்வாசப் புனற்குடங்க ளணிவிளக்குத் தூபமுட
னிலைநீடு தோரணங்க ணிரைத்தடியா ரெதிர்கொள்ளக்
கலைமாலை மதிச்சடையா ரிடம்பலவுங் கைதொழுவார்.

(இ-ள்.) கற்பக மலர்மாரி யொழிந்து சிந்தவும், மங்கலவாழ்த்துகள் இனிமையோடு இசைக்கவும், மலரோடு வாசனைபொருந்திய பூரண கும்பங்களையும், அழகிய விளக்குகளையும், தூபத்தோடு நிலையாகவுயர்ந்த மகர தோரணங்களையும், அங்கங்குள்ள அடியார்கள் வரிசையாகவைத்து எதிர்கொள்ளவும், கிரணவரிசையமைந்த சந்திரனையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானெழுந்தருளிய பலதிருப்பதிகளையும் வணங்குவா ராயினார்.—எ-று. (௬௨௧)

தெண்டிரைசூழ் கடற்கானற் றிருவகத்தி யான்பள்ளி
யண்டர்பிரான் கழல்வணங்கி யருந்தமிழ்மா மறைபாடிக்
கொண்டல்பயின் மணற்கோடு சூழ்கோடிக் குழகர் தமைத்
தொண்டருடன் றொழுதணைந்தார் தோணிபுரத் தோன்றலார்.

(இ-ள்.) சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் தெள்ளிய அலைகள்சூழ்ந்த கடற்கரையிலுள்ள திருஅகத்தியான்பள்ளி யென்னுந் திருப்பதியிலெழுந்தருளிய தேவர்கள் நாயகராகிய சிவபெருமானது திருவடிகளைவணங்கி அரிய திருநெறித் தமிழ்வேதமாகிய திருப்பதிகம் பாடியருளி, மேகங்கள் தவழும் மணற்குன்றுகள் சூழ்ந்த திருக்கோடிக்குழகரென்னுந் திருப்பதியை அடியார் திருக்கூட்டத்தோடும்வணங்கிச் சென்றருளினார்.—எ-று. (௬௨௨)

கண்ணார்ந்த திருநுதலார் மகிழ்ந்தகடிக் குளமிறைஞ்சி
யெண்ணார்ந்த திருவிடும்பா வனமேத்தி யெழுந்தருளி
மண்ணார்ந்த பதிபிறவு மகிழ்தருமன் பால்வணங்கிப்
பண்ணார்ந்த தமிழ்பாடிப் பரவியே செல்கின்றார்.

(இ-ள்.) நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளிய திருக்கடிக்குள மென்னுந் திருப்பதியை வணங்கி, யாவராலும் புகழப்பெற்ற திருஇடும்பாவனமென்னுந் திருப்பதியைத் துதித்து, அங்குநின்று மெழுந்தருளி உலகத்திற்பொருந்திய மற்ற க்ஷேத்திரங்களையும் மகிழத்தக்க அன்போடும் வணங்கி இசையமைந்த திருப்பதிகம் பாடித் துதித்துச் செல்கின்றவராயினார்.—எ-று. ()

திருவுசாத் தானத்துத் தேவர்பிரான் கழல்பணிந்து
மருவியசெந் தமிழ்ப்பதிக மால்போற்றும் படிபாடி
யிருவினையும் பற்றறுப்பா ரெண்ணிறந்த தொண்டருடன்
பெருகுவிருப் பினராகிப் பிறபதியும் பணிந்தணைவார்.

(இ-ள்.) திருவுசாத்தானமென்னுந் திருப்பதியி லெழுந்தருளிய தேவர்கள் நாயகராகிய சிவபெருமான் திருவடிகளை வணங்கி, பொருந்திய செந்தமிழ்த் திருப்பதிகத்தில் திருமால் துதித்த தன்மையை யமைத்துப் பாடியருளி, தம்மை யடைந்தவர்களது இருவினைகளையும் அறவே யொழித்தருளுந் திருஞானசம்பந்தப்பிள்ளையார் அளவற்ற அடியார் திருக்கூட்டங்களோடு மிக்க விருப்பமுடையவராய் மற்ற க்ஷேத்திரங்களையும் வணங்கிச்செல்வா ராயினார்.—எ-று.

நல்வினையுந் தீவினைபோலவே பிறவிக் கேதுவாய், இருப்புவிலங்கும் பொன் விலங்கும் போல்வதாகலின் "இருவினையும் பற்றறுப்பார்" என்று கூறினார்;

"இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு."—என்னுந் திருக்குறளுக்குப் பரிமேலழகர் கூறிய வுரைவிசேடத்தா னுணர்க. (கூஉச)

திருவுசாத்தானம் - பண்-கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

நீரிடைத் துயின்றவன் றம்பிநீள்சாம்புவன்
போர்படைச்சுக்கிரீவ னனுமான்றொழுக்
காருடைநஞ்சுண்டுகாத் தருள்செய்தவெஞ்
சீருடைச்சேடர்வாழ் திருவுசாத்தானமே,

வரைதிரிந் திழியுநீர்வளவயற்புகலிமன்
றிரைதிரிந் தெறிகடற்றிருவுசாத்தானரை
யுரைதெரிந் துணருஞ்சம்பந்தனொண்டமிழ்வல்லார்
நரைதிரையின்றியேநன்னெறிசேர்வரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - மந்திரபுரீசர்; தேவியார் - பெரியநாயகியம்மை.

கருங்கழிவே லைப்பாலைக் கழிநெய்தல் கடந்தருளித்
திருந்தியசீர்ப் புனனாட்டுத் தென்மேல்பாற் றிசைநோக்கி
மருங்குமிடை தடஞ்சாலி மாடுசெறி குலைத்தெங்கு
நெருங்கிவளர் கமுகுடுத்த நிறைமருத வழிச்சென்றார்.

(இ-ள்.) கரிய உப்பங்கழிகளையுடைய கடற்கரையிலுள்ள மிக்க நெய்தனிலத்தைக் கடந்து, திருத்தமாகிய சிறப்பினையுடைய சோழநாட்டின் தென்மேற்றிசையைநோக்கிப் பக்கங்களில் நெருங்கிய மிக்கசெந்நெற்பயிர்களும் அதனருகில் நிறைந்த குலைகளையுடைய தென்னமரங்களும், அதனருகில் நெருங்கி வளர்கின்ற கமுகமரங்களுஞ் சூழ்ந்த நிறைந்த மருதநிலத்தின் வழியே சென்றருளினார்.

பாலை என்பதில், ஐகாரம் சாரியை. (கூஉரு)

சங்கங்கள் வயலெங்குஞ் சாலிகழைக் கரும்பெங்குங்
கொங்கெங்கு நிறைகமலக் குளிர்வாசத் தடமெங்கு
மங்கங்கே யுழவர்குழா மார்க்கின்ற வொலியெங்கு
மெங்கெங்கு மலர்ப்படுகை ரிவைகழிய வெழுந்தருளி.

(இ-ள்.) வயலிடங்களில் சங்குகளும், செந்நெற்பயிர்களும், கரும்புகளும், மகரந்தங்கள் நிறைந்த தாமரைமலர்களையுடைய குளிர்ந்த மணம் பொருந்திய

தடாகங்களும், அவ்வவ் விடங்களில் உழவர்கூட்டங்கள் ஆரவாரிக்கின்ற பேரோசைகளும், மலர்களையுடைய நீர்நிலைகளுமாகிய இவைக ளனைத்தும் பிற்படும்படி யெழுந்தருளி.—எ-று.

கழைக்கரும்பு-ஒருபொருட் பன்மொழி ; அன்றி, கழைபோன்ற கரும்பு எனினுமாம்; கழை=கரும்பு, மூங்கில். கொங்கு=மகரந்தம். (௬௨௬)

தடமெங்கும் புனல்குடையுந் தையலார் தொய்யினிற
மிடமெங்கு மந்தணாக ளோதுகிடை யாகநிலை
மடமெங்குந் தொண்டர்குழா மனையெங்கும் புனைவதுவை
நடமெங்கு மொலியோவா நற்பதிக ளவைகடந்து.

(இ-ள்.) தடாகங்களில் நீராடுகின்ற பெண்களினது தொய்யிலெழுதிய (கலவைச் சாந்தின்) நிறமும்,எவ்விடங்களிலும் பிராமணர்கள் வேதமோதுங் கூட்டங்களும், யாகசாலைகளும்,மடங்களெங்கும் அடியார்திருக்கூட்டங்களும்,வீடுகள் தோறும் கலியாணங்களும் நாடகசாலைக ளெங்கும் நடனவோசைகளும் நீங்காத நன்மைபொருந்திய பல திருப்பதிகளையுங் கடந்து.—எ-று. (௬௨௭)

நீர்நாடு கடந்தருளி நெடும்புறவிற் குறும்புதல்கள்
கார்நாடு முகைமுல்லைக் கடிநாறு நிலங்கடந்து
போர்நாடுஞ் சிலைமறைவர் புன்புலவைப் பிடைபோகிச்
சீர்நாடுந் தென்பாண்டி நன்னாடு சென்றணைவார்.

(இ-ள்.) சோழநாட்டைக் கடந்து இடையிலுள்ள நெடிய முல்லைநிலத்தில் சிறிய புதல்களில் கார்காலத்தை நாடும் அரும்புகளையுடைய முல்லைமலர்கள் மணங்கமழும் அந்நிலத்தைக் கடந்து, போரை விரும்புகின்ற வில்லையுடைய மறவர்கள் வாழும் சிறிய பாலைநிலத்தை யடைந்து சென்று, பின், சிறப்பை நாடியிருக்கும் அழகிய பாண்டிநாட்டைச் சென்று சேர்வாராயினார்.—எ-று.

திருஞானசம்பந்தப்பிள்ளையா ரெழுந்தருளுதற்கு முன்னர் சமணப் பேரிருளான் மூடப்பட்டு ஒளிமாழ்கிக் கிடத்தலின், இந்நாடு தனக் கெப்போது நற்காலம் வருமோவென்று எதிர்நோக்கியிருந்ததென்பார், 'சீர்நாடுந் தென்பாண்டி நன்னாடு' என்று கூறினார். (௬௨௮)

மன்றன்மலர்ப் பிறங்கன்மருங் கெறிந்துவரு நதிகள்பல
சென்றணைந்து கடந்தேறித் திரிமருப்பின் கலைபுணர்மான்
கன்றுதெறித் தனவுகைக்குங் கானவதர் கடந்தணைந்தார்
கொன்றைநறுஞ் சடைமுடியார் மகிழ்ந்ததிருக் கொடுங்குன்றம்.

(இ-ள்.) வாசனைபொருந்திய மலர்க்கூட்டங்களை இருபக்கங்களிலும் வீசி வருகின்ற பல நதிகளையுமடைந்து சென்று கரையேறி, முறுக்காகிய கொம்பினையுடைய கலைமானோடு சேர்ந்த பெட்டைமான் கன்றுகள் பரல்களைக் காலால் தெறித்தோடுகின்ற காட்டுவழியைக் கடந்து, நறுமணங் கமழுங் கொன்றைமாலையை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளிய திருக்கொடுங்குன்றமென்னுந் திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று. (௬௨௯)

கொடுங்குன்றத் தினிதமர்ந்த கொழும்பவளச் செழுங்குன்றை
யடுங்குன்ற முரித்தானை வணங்கியருந் தமிழ்பாடி.

நெடுங்குன்றும் படர்கானு நிறைநாடுங் கடந்துமதி
தொடுங்குன்ற மதின்மதுரைத் தொன்னகர்வந் தணைகின்றார்.

(இ-ள்.) திருக்கொடுங்குன்றத்தில் மகிழ்ந் தெழுந்தருளிய செழிய பவள மலைபோல்பவரும், தொல்லவந்த மலைபோன்ற (கயாசுரனென்னும்; யானையையுரித்தவருமாகிய சிவபெருமானை வணங்கி அரிய தமிழ்த்திருப்பதிகம் பாடியருளி, பெரியமலைகளையும், படர்ந்த காடுகளையும்,நீர்நிறைந்த நாடுகளையுங் கடந்து, சந்திரனைத்தொடுகின்ற மலைபோலுயர்ந்த மதில்சூழ்ந்தபழமையாகியமதுராபுரிவந்து சேர்கின்றவராயினார்.—எ-று. (௬௯௰)

வேறு.

இங்நிலை யிவர்வந் தெய்த வெண்பெருங் குன்ற மேவு
மங்நிலை யமணர் தங்கட் கழிவுமுன் சாற்ற லுற்றுப்
பன்முறை வெருக்கொண் டுள்ளம் பதைப்பத்தீக் கனாக்க ளோடுந்
துன்னிமித் தங்க ளங்கு நிகழ்ந்தன சொல்ல லுற்றாம்.

(இ-ள்.) இவ்வாறு திருஞானசம்பந்தப்பிள்ளையார் வந்தடைந் தருளவும், பெரிய எட்டு மலைகளிலும் வசிக்கும் கொடிய நிலைமையையுடைய சமணர்களுக்குப் பின்வருங் கெடுதியை முன்பு தெரிவிக்கப் பலமுறையும் மனம் மயக்கங்கொண்டு பதைக்க, தீய கனவுகளும் துர்ச்சகுனங்களுமாகிய அங்கு நடந்தவைகளை யாம் சொல்லத்தொடங்குகின்றோம்.—எ-று.

எண்பெருங் குன்றமாவன:—அஞ்சனம், கிரவுஞ்சம், கோவர்த்தனம், திரிகூடம், காஞ்சி, குஞ்சரசையம், ஏமகூடம் விந்தியம் என்பனவாம். (௬௯௧)

பள்ளிகண் மேலு மாடு பயிலமண் பாழி மேலு
மொள்ளித ழசோகின் மேலு முணவுசெய் கவளங் கைமிற்
கொள்ளுமண் டபங்கண் மேலுங் கூகையோ டாந்தை தீய
புள்ளின மான தம்மிற் பூசலிட் டழிவு சாற்றும்.

(இ-ள்) சமணமுனிவர்கள் வசிக்கும் மடங்களின் மேலும், பக்கங்களிற் பொருந்திய அருகன் கோயில்களின்மேலும், ஒளிபொருந்திய பூவிதழ்களையுடைய அசோகவிருக்ஷங்களின் மேலும், உணவுகின்ற கவளத்தைக் கையில் கொள்ளுகின்றமண்டபங்களின்மேலும் கோட்டான்களும் ஆந்தைகளும் தீமையை விளைவிக்கு மற்றப் பறவைக்கூட்டங்களு மாகிய இவைகள் தங்களுக்குள்ளே போர்செய்து பின்வருங் கெடுதியைத் தெரிவிக்கும்,—எ-று. (௬௯௨)

பீலியுந் தடுக்கும் பாயும் பிடித்தவை வழுவி வீழக்
கால்களுந் தடுமா றாடிக் கண்களு மிடமே யாடி
மேல்வரு மழிவுக் காக வேறுகா ரணமுங் காணார்
மாலுழந் தறிவு கெட்டு மயங்கின ரமண ரெல்லாம்.

(இ-ள்.) மயிற்பீலியும், தடுக்கும், பாயும் முதலாகப் பிடித்திருந்த பொருள்கள் அவ்வவ் விடங்களினின்றும் வழுவி வீழ, கால்களுந் தடுமாற்ற மடைந்து, கண்களும் இடந்துடித்து, மேல் வருங் கெடுதிகளுக்கு வேறொரு காரணமுங் காணாமல், மயக்கமுற்று அறிவுகலங்கிச் சமணர்களெல்லாம் மயங்கினார்கள்.

காணார் என்பது, முற்றெச்சம். (௬௯௩)

கந்தியர் தம்மிற் றாமே கனன்றெழு கலாங்கள் கொள்ள
வந்தவா றமணர் தம்மின் மாறுகொண் டூறு செய்ய
முந்தைய வுரையிற் கொண்ட பொறைமுத லவையும் விட்டுச்
சிந்தையிற் செற்ற முன்னாந் தீக்குணத் தலைநின் றார்கள்.

(இ-ள்.) தவப்பெண்கள் தங்களுக்குள் தாங்களே வெகுண்டெழுந்து கோபஞ் செய்யவும், சமணமுனிவர்கள் நேரிட்டவாறே தம்முள் தாமே பகைகொண்டு ஒருவருக்கொருவர் துன்பஞ்செய்யவும், முற்பட்ட சமண நூலில் தாங் கொண்ட பொறைமுதலிய குணங்களை யொழித்து, மனதில் கோபமுதலியன வாகிய தீக்குணங்களில் தலைமையாக நின்றார்கள்.—எ-று. (௬௩௪)

இப்படி யமணர் வைகு மெப்பெயர்ப் பதியு மெய்து
மொப்பிலுற் பாத மெல்லா மொருவரி னொருவர் கூறி
மெய்ப்படு தீக்க னாவும் வேறுவே றாகக் கண்டு
செப்புவான் புறத்து ளோருந் தென்னவன் மதுரை சேர்ந்தார்.

(இ-ள்.) இவ்வாறு சமணர்கள் வசிக்கும் எப்படிப்பட்ட பெயரையுடைய நகரங்களிலும் நிகழ்ந்த ஒப்பற்ற துன்னிமித்தங்களையெல்லாம் ஒருவரோடொருவர் சொல்லி, மெய்ம்மை பொருந்திய கொடிய சொப்பனங்களும் வெவ்வேறாகக் கண்டு அரசனுக்குச் சொல்லும்படிப் புறத்திலுள்ள சமணமுனிவர்களும் பாண்டியராசனது மதுராபுரியை யடைந்தார்கள்.—எ-று.

உற்பாதம்=துன்னிமித்தம். சொப்பனத்தி னிகழ்தல் சாக்கிரத்திற் பொய்ப்பட் டொழிதலு முளவாகலின், அதனை நீக்குதற்கு 'மெய்ப்படு தீக்கனா' என்று கூறினார். 'புறத்துளோரும்' என்னும் இறந்தது தழீஇய எச்சவும்மையால் அம் மதுராபுரியினுள்ளாரையுங் கொள்க. புறமாவது அஞ்சனமுதலிய எட்டுமலைகளும் பிறவுமாம். (௬௩௫)

அந்நகர் தன்னில் வாழ்வார் புறம்புநின் றணைவார் கூடி
மன்னவன் றனக்குங் கூறி மருண்டவுள் ளத்த ராகித்
துன்னிய வழுக்கு மெய்யிற் றூசிலார் பலரு மீண்டி
யின்னன கனவு கண்டே மெனவெடுத் தியம்ப லுற்றார்.

(இ-ள்.) அம்மதுராமாநகரத்தில்வாழும் சமணமுனிவர்களும் புறத்திலின்றும்வந்த சமணமுனிவர்களும் ஒருங்குசேர்ந்து நிகழ்ந்த சங்கதியைப் பாண்டியனுக்குக்கூறி மயங்கிய மனமுடையவர்களாய், அழுக்கடைந்திருக்குந் தம்முடம்பில் ஆடையில்லாத அச்சமணமுனிவர் பலருங்கூடி, யாங்கள் இத்தன்மையனவாகிய தீக்கனவைக் கண்டோமென்று எடுத்துச் சொல்லுகின்றார்கள்.—எ-று. (௬௩௬)

சீர்மலி யசோகு தன்கீ ழிருந்தநந் தேவர் மேலே
வேரொடு சாய்ந்து வீழக் கண்டன மதன்பின் னாக
வேர்கொண்முக் குடையுந் தாமு மெழுந்துகை நாற்றிப் போக
வூருளோ ரோடிக் காணக் கண்டன மென்று ரைப்பார்.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய அசோக விருட்சமானது அதன்கீ ழெழுந்தருளி யிருந்த நமது அருகக்கடவுளின்மேல் அது வேரோடு சாய்ந்து விழக்கண்

டோம்; அதன்பின்பு, அக்கடவுள் அழகிய மூக்குடையுந் தாமுமாக அதன்கீழிருந் தெழுந்து கைகளைத் தொங்கவிட்டுச் செல்ல, ஊரிலுள்ளவர்கள் ஓடி அதனைப் பார்க்கக் கண்டோம் என்று சொல்வார்கள்.—எ-று. (சுஙஎ)

குண்டிகை தகர்த்துப் பாயும் பீறியோர் குரத்தி யோடப்
பண்டிதர் பாழி நின்றுங் கழுதைமேற் படர்வார் தம்மி
னொண்டொடி யியக்கி யாரு முளையிட்டுப் புலம்பியோடக்
கண்டன மென்று சொன்னார் கையறு கவலை யுற்றார்.

(இ-ள்.) கமண்டலத்தை யுடைத்துப் பாயையுங் கிழித்து ஒரு குருபன்னி யோடவும், பண்டிதர்களாகிய சமணமுனிவர்களது மடங்களினின்று நீங்கிக் கழுதையின் மேலேறிச் செல்பவர்களுள் ஒளிபொருந்திய வளையலையணிந்த தருமதேவதையும் ஊளையிட்டுப்புலம்பி யோடவும் கனவு கண்டோமென்று சொன்னார்கள் அளவற்ற துன்பத்தை யடைந்த சமணர்கள்.—எ-று.

ஊளையென்பது, உளை எனக் குறுக்கல் விகாரம்பெற்றது. (சுஙஅ)

கானிடை நட்ட மாடுங் கண்ணுத லன்ப ரெல்லா
மீனவன் மதுரை தன்னில் விரவிடக் கண்டோ மென்பார்
கோனவன் றானும் வெய்ய கொழுந்தழன் முழுகக் கண்டோ
மானபி னெழவுங் கண்டோ மதிசய மிதுவா மென்பார்.

(இ-ள்.) மசானத்தில் நடனஞ் செய்கின்ற நெற்றிக் கண்ணையுடைய சிவனது அடியார்களெல்லாம் பாண்டியனது மதுராபுரியில் வந்து பரவியிருக்கக் கண்டோமென்பார்கள்; அப்பாண்டியனும் கொடிய நெருப்பில் முழுகக்கண்டோம்; அவ்வாறுமுழுகியபின்பு அந்நெருப்பினின்று மெழுந்திருக்கவுங் கனவுகண்டோம்; இது ஆச்சரியமா மென்று சொல்வார்கள்.—எ-று. (சுஙகூ)

மழவிடை யிளங்கன் றொன்று வந்துநங் கழகந் தன்னை
யுழறிடச் சிதறி யோடி யொருவருந் தடுக்க வஞ்சி
விழவொரு புகலுமின்றி மேதினி தன்னை விட்டு
நிழலிலா மரங்க ளேறி நின்றிடக் கண்டோ மென்ன.

(இ-ள்.) இளமைபொருந்திய இடபக்கன்று ஒன்று வந்து நமது (பண்டிதரது) சபையைக் கலக்க, (அதனால் அவர்கள்) சிதறியோடி ஒருவரும் அதனைத் தடுக்கப் பயந்து, தாங்களடைய ஒரு புகலிடமு மில்லாமல், பூமியை விட்டு நிழலில்லாத மரங்களி லேறிநிற்கக் கனவுகண்டோமென்று கூற.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (சுசஂ0)

ஆவதென் பாவி காளிக் கனத்திற மடிகண் மார்க்கு
மேவிய தீங்கு தன்னை விளைப்பது திடமே யென்று
கோவுறு மனத்த ராகி நுகர்பெரும் பதமுங் கொள்ளார்
யாவது செயலென் றெண்ணி யிடருழன் றழுங்கி னார்கள்.

(இ-ள்,) பாவிகளே! இதற்குத் தீர்வு செய்யத்தக்கது யாது; இக் கனவின் வரலாறு நமது சமணமுனிவர்களுக்கு வருகின்ற தீங்கைச்செய்வது உறுதியேயென்று வருந்திய மனமுடையவர்களாய்த் தாமுண்ணுதற்குரிய உணவுகளை

யுங் கொள்ளாமல் இனிச் செய்யவேண்டியது யாது என்று எண்ணித் துன்புற்று வருந்தினார்கள்.—எ-று. (சுசக)

அவ்வண்ண யமணரெல்லா மங்கிலை மையர்க ளாகச்
சைவநன் மரபில் வந்த தடமயின் மடமென் சாயற்
பைவளை ரரவே ரல்குற் பாண்டிமா தேவி யார்க்கு
மெய்வகை யமைச்ச ரார்க்கும் விளங்குநன் னிமித்த மேன்மேல்.

(இ-ள்.) அச்சமணர்க ளெல்லாரும் அவ்வாறு துன்பமுடையவர்களாகவும், சிறந்த சைவமரபில் அவதரித்த பெரிய மயில்போலும் மிருதுவான சாயலையுடைய மங்கையர்க்கரசியாருக்கும், மெய்ம்மைபொருந்திய மந்திரியாராகிய குலச்சிறை நாயனாருக்கும் நற்சகுனங்கள் மேலு மேலும் விளங்கா நிற்கும்.—எ-று.

பைவளரரவு=படத்தையுடைய பாம்பு. (சுசஉ)

அளவிலா மகிழ்ச்சி காட்டு மரும்பெரு நிமித்த மெய்த
வுளமகிழ் வுணருங் காலை யுலகெலா முய்ய வந்த
வளரொளி ஞான முண்டார் வந்தணைந் தருளும் வார்த்தை
கிளர்வுறு மோகை கூறி வந்தவர் மொழியக் கேட்டார்.

(இ-ள்.) அளவில்லாத மகிழ்ச்சியைத் தெரிவிக்கும் அருமையாகிய பெரிய நன்னிமித்தங்க ளுண்டாக அதனால் மனமகிழ்ந் திருக்குங்காலத்தில், எல்லா வுலகங்களும் ஈடேறும்படி அவதரித்த ஒளி வளர்கின்ற சிவஞானப் பாலுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளுஞ் செய்தியை மிக்கஉவகை கூறிவந்த பரிசனங்கள் சொல்ல (மங்கையர்க்கரசியார்) கேட்டருளினார்.—எ-று. (சுசங)

அம்மொழி விளம்பி னோர்க்கு வேண்டுவ வடைய நல்கி
மெய்ம்மையில் விளங்கு காதல் விருப்புறு வெள்ள மோங்கத்
தம்மையு மறியா வண்ணங் கைமிக்குத் தழைத்துப் பொங்கி
விம்மிய மகிழ்ச்சி கூர மேவிய சிறப்பின் மிக்கார்.

(இ-ள்.) பிள்ளையார் எழுந்தருளும் நல்வரவைக் கூறிய அப்பரிசனர்களுக்கு வேண்டிய பொருள்களை நிரம்பக்கொடுத்து, மெய்ம்மையாக விளங்குகின்ற பெருவிருப்பாகிய வெள்ளம்பெருகத் தம்மை யறியாதபடி அளவு கடந்து மிகுத்துப் பொங்கி யதிகரித்த மகிழ்ச்சி யுண்டாகப் பொருந்திய சிறப்பில் மேம்பட்டவ ராயினார்.—எ-று. (சுசச)

மங்கையர்க் கரசி யார்பால் வந்தடி வணங்கி நின்ற
கொங்கலர் தெரிய லாராங் குலச்சிறை யாரை நோக்கி
நங்கடம் பிரானா ராய ஞானபோ னகர்முன் பெய்தி
யிங்கெழுந் தருள வுய்ந்தோ மெனவெதிர் கொள்ளு மென்றார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் மதுராபுரிக்கு எழுந்தருளி (வருதலைக் கேள்வியுற்று) மங்கையர்க் கரசியாரிடத்து வந்து அவரது திருவடிகளை வணங்கிநின்ற மணங்கமழும் மாலையைத் தரித்த குலச்சிறைநாயனாரைப்பார்த்து, நமது பெருமானாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரிடத்துச்சென்று,தேவரீர் இங்கு எழுந்தருளியதால் அடியேங்கள் பிழைத்தோமென்று விண்ணப்பஞ்செய்து, அவரை யெதிர்கொண்டழைத்து வாருமென்று கூறியருளினார்.—எ-று. (சுசரு)

மன்றலங் குழலி னாரை வணங்கிப்போந் தமைச்ச னாரும்
வென்றிவே லரச னுக்கு முறுதியே யெனவி ளைந்து
பொன்றிகழ் மாட வீதி மதுரையின் புறத்துப் போகி
யின்றமிழ் மறைதந் தாரை யெதிர்கொள வெய்துங் காலை.

(இ-ள்.) மந்திரியாராகிய குலச்சிறை நாயனாரும் மணம்பொருந்தியஅழகிய கூந்தலையுடைய மங்கையர்க்கரசியாரை வணங்கிப் புறத்திற்சென்று, இது வெற்றி பொருந்திய வேலாயுதத்தை யுடைய பாண்டியராசனுக்கும் உறுதியைத் தரத்தக்க தேயாகுமென்று கருதி, இலக்ஷ்மிவிலாசம் பொருந்திய மாடங்களமைந்த திரு வீதிகளையுடைய மதுரைமாநகரத்தின் புறத்தில் விரைந்துசென்று, இனிய திரு நெறித்தமிழ்வேதமாகிய தேவாரப்பதிகங்களை யருளிச்செய்யுந் திருஞானசம்பந் தப்பிள்ளையாரை யெதிர்கொள்ளும்படி சென்றபொழுது.—எ-று.

'பொன்றிகழ்மாடம்' என்பதற்கு, பொன்மயமாகவிளங்குகின்றமாடம் என்று பொருள்கூறினும்பொருந்தும்.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௬௪௬)

அம்புய மலராள் போல்வா ராலவா யமர்ந்தார் தம்மைக்
கும்பிட வேண்டு மென்று கொற்றவன் றனக்குங் கூறித்
தம்பரி சனங்கள் சூழத் தனித்தடை யோடுஞ் சென்று
நம்பரை வணங்கித் தாமு நல்வர வேற்று நின்றார்.

(இ-ள்.) தாமரைமலரில் வாழுந் திருமகளை யொத்த மங்கையர்க்கரசியார் திருவாலவாயில் வீற்றிருந்தருளும் ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமானை வணங்கவேண்டு மென்று பாண்டியராசனுக்குஞ் சொல்லித் தமது பரிசனங்கள் சூழ்ந்துவர ஒப்ப ற்ற காவலாளரோடுஞ் சென்று, அச் சொக்கலிங்கப்பெருமானை வணங்கித் தாமும் (திருஞானசம்பந்தப்பிள்ளையாரது) நல்வரவை யெதிர்கொண்டு நின்றார்.—எ-று.

ஆலவாய் என்பது, மதுராபுரியின் திருப்பெயரி னொன்று. (௬௪௭)

வேறு.

திருநிலவு மணிமுத்தின் சிவிகையின்மேற் சேவித்து
வருநிலவு தருமதிபோல் வளரொளிவெண் குடைநிழற்றப்
பெருகொளிய திருநீற்றுத் தொண்டர்குழாம் பெருகிவர
வருள்பெருக வருஞானத் தமுதுண்டா ரணைகின்றார்.

(இ-ள்.) தம்மைச் சேவித்து வருகின்ற நிலவைவீசும் பூரணசந்திரன் போல வொளி வளர்கின்ற வெள்ளிய முத்துக்குடை நிழற்றவும், ஒளி பெருகுகி ன்ற திருவெண்ணீறணிந்த அடியார் திருக்கூட்டங்கள் பெருகிச் சூழ்ந்துவரவும், அழகுவிளங்குகின்ற முத்துச்சிவிகையின்மேல் திருவருள் பெருக வருகின்ற சிவ ஞானப்பாலமுதுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளுவாராயி னார்.—எ-று.

மணிமுத்து - இருபெயரொட்டு. (௬௪௮)

துந்துபிகண் முதலாய தூரியங்கள் கிளராமே
யந்தணரா மாதவர்க ளாயிரமா மறையெடுப்ப

வந்தெழுமங் கலநாத மாதிரமுட் படமுழங்கச்
செந்தமிழ்மா ருதமெதிர்கொண் டெம்மருங்குஞ் சேவிப்ப.

(இ-ள்.) (பிள்ளையார் மதுராபுரிக்கு எழுந்தருளுங் காரணமாகமுழங்கும்) தேவதுந்துபி முதலிய வாத்தியங்களின் ஒலி மேம்படாமல் பிராமணர்களாகிய தவமுனிவர்கள் அளவற்ற வேதங்களை யெடுத்தோதவும், அதிகரித் தெழுகின்ற மங்கலவாழ்த்தொலிகள் எட்டுத்திக்குந் தம்முள் ளடங்கும்படி யொலிக்கவும், செந்தமிழ்மொழியோடு கலந்து வருகின்ற சிறு தென்றற்காற்றானது எப் பக்கங்களிலுஞ் சேவித்துவரவும்.—எ-று.

செந்தமிழ்மொழி தோன்றுதற் கிடமாகிய பொதியமலையிற் றோன்றி வருதலால், தென்றலைச் செந்தமிழ்மாருதமென்று கூறினார். (௬௪௧)

பண்ணியவஞ் சனைத்தவத்தாற் பஞ்சவனாட் டிடைப்பரந்த
வெண்ணிலமணை னுமபாவ விருஞ்சேனை யிரிந்தோட
மண்ணுலக மேயன்றி வானுலகுஞ் செய்தபெரும
புண்ணியத்தின் படையெழுச்சி போலெய்தும பொலிவெய்த.

(இ-ள்.) சமணர்கள் செய்த வஞ்சனையாகிய தவத்தினால் பாண்டிநாட்டிற் பரவிய அளவற்ற சமணரென்னும் பாவமாகிய பெரிய சேனைகள் புறங்காட்டியோடவும், மண்ணுலகத்தினரேயன்றி விண்ணுலகத்தினருஞ் செய்த பெரிய புண்ணியத்தினது படையெழுச்சிபோல் பிள்ளையாரெழுந்தருளுங் காட்சிதோன்றவும்.

துன்னுமுழு வுடற்றுகளாற் சூழுமுணர் வினிற்றுகளா
லன்னெறியிற் செறிந்தடைந்த வமண்மாசு கழுவுதற்கு
மன்னியொளிர் வெண்மையினாற் றூய்மையினால வழுதியர்தங்
கன்னிநாட் டிடைக்கங்கை யணைந்ததெனுங் கவினகாட்ட.

(இ-ள்.) சமணரது உடல் முழுவதும் அடைந்த அழுக்கினாலும், அவர்களறிவிற் பொருந்திய அஞ்ஞானமாகிய அழுக்கினாலும், அவநெறியிற் சேர்ந்து அடைந்த அமணராகிய அழுக்கைக் கழுவுதற்கு (அடியார திருமேனியில்) நிலைபெற்று விளங்கும் விபூதியின் வெண்ணிறத்தாலும் பரிசுத்தத்தினாலும் பாண்டியர்களது நாட்டில் கங்கைநதியானது திரண்டுவந்ததுபோலும் அழகைக்காட்டவும்.—எ-று.

பானல்வயற் றமிழ்நாடு பழிநாடும் படிபரந்த
மானமிலா வமணென்னும் வல்லிருள்போய் மாய்வதனுக்
கானபெரு கொளிப்பரப்பா லண்டமெலாங் கொண்டதொரு
ஞானமணி விளக்கெழுந்து வருவதென நலம்படைப்ப.

(இ-ள்.) நீலோற்பல மலர்களையுடைய வயல்கள் சூழ்ந்த பாண்டிநாடானது பழியையடையும்படி பரவிய வெட்கமில்லாத சமணரென்னும் பெரிய இருளானது கெட்டு அழிதற்குத் தோன்றிய மிக்க ஒளியின் பரப்பினால் எல்லாவண்டங்களைந் தன்னுள்ளடக்கிய தான அழகிய ஒரு ஞானதீப மெழுந்துவருவதுபோலுந் தோற்றத்தைச் செய்யவும்.—எ-று. (௬௫௨)

புரசைவயக் கடகளிற்றுப் பூழியர்வண் டமிழ்நாட்டுத்
தரைசெய்தவப் பயன்விளங்கச் சைவநெறி தழைத்தோங்க

வுரைசெய்திருப் பேர்பலவு மூதுமணிச் சின்னமெலாம்
பரசமய கோளரிவந் தாரென்று பணிமாற.

(இ-ள்.) முகப்படாத்தோடு வெற்றியையும் மதத்தினையுங் கொண்ட யானைச்சேனையையுடைய பாண்டியர்களது வளப்பம்பொருந்திய பாண்டிநாடானது செய்த தவப்பயன் விளங்கவும், சைவசமயந் தழைத்தோங்கவும், திருஞானசம்பந்தப் பிள்ளையாரது பல திருநாமங்களையும் புகழ்ந்து ஊதுகின்ற முத்துச்சின்னங்களெல்லாம் பரசமயகோளரியா ரெழுந்தருளினாரென்று ஊதவும்.—எ-று.

பணிமாற என்றது, ஈண்டு ஊத என்னும் பொருளில் வந்தது. (சுருங)

வேறு.

இப்பரி சணையுஞ் சண்பையர் பெருமா னெழுந்தரு ளும்பொழு திசைக்கு, மொப்பினித் திலப்பொற் றனிப்பெருங் காள முலகுய்ய வொலித்தெழு மோசை, செப்பரும் பெருமைக் குலச்சிறை யார்தஞ் செவிநிறை யமுதெனத் தேக்க, வப்பொழு தறிந்து தலத்தின்மேற் பணிந்தே யளப்பருங் களிப்பின ரானார்.

(இ-ள்.) இத்தகைய காட்சியோடு அடைந்தருளுந் திருஞானசம்பந்தப் பிள்ளையார் எழுந்தருளும்பொழுது (அவரது பல திருநாமங்களை யெடுத்தோதி) ஒலிக்கின்ற ஒப்பற்ற முத்துக்களாலாகிய அழகிய பொற்காளத்தினின்றும் உலகுயிர்க ளீடேறும்பொருட்டுச் சப்தித்தெழுகின்ற பேரோசையானது சொல்லுதற்கரிய பெருமையினையுடைய குலச்சிறைநாயனாரது திருச்செவியில் நிறைந்த அமுதம்போல அதிகரிக்க, அப்பொழுது அதனைக் கேட்டுப் பூமியில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கி அளவற்ற சந்தோஷமுடையவரானார்.—எ-று. (சுருச)

அஞ்சலி குவித்த கரங்களுந் தலைமே லணைந்திடக் கடிதுசென் றணைவார்
நஞ்சணி கண்டர் தந்திரு மகனா ருடன்வரு நற்றவக் கடலை (ந்து
நெஞ்சினி னிறைந்த வார்வமுன் செல்லக் கண்டுநீ ணிலத்திடைத் தாழ்
பஞ்சவர் பெருமான மந்திரித் தலைவர் பாங்குற வணைந்துமுன் பணிந்தார்.

(இ-ள்.) பாண்டியராசனது முதல் மந்திரியாராகிய குலச்சிறைநாயனார் அஞ்சலியாகக் குவித்த கைகளுஞ் சிரசின்மேற் பொருந்த விரைந்து சென்று அணைபவராய், சிவபெருமான் திருக்குமாரராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையாருடன்வருகின்ற நல்லதவக்கடல்போன்ற அடியார் திருக்கூட்டங்களைமனதில் பொருந்திய ஆசையானது தம்முன் செல்லத் தரிசித்துப் பெரிய பூமியில்விழுந்து வணங்கிப் பக்கத்திற் பொருந்த அடைந்து அவர் திருமுன்வணங்கினார்.—எ-று.

நிலமிசைப் பணிந்த குலச்சிறை யாரை நீடிய பெருந்தவத் தொண்டர்
பலருமுன் னணைந்துவணங்கிமற் றவர்தாம் படியினின் றெழாவகைகண்டு
மலர்மிசைப் புத்தேள் வழிபடும் புகலி வைதிக சேகரர் பாதங்
குலவியிங் கணைந்தார் தென்னவ னமைச்சர் குலச்சிறை யாரெனக் கூற.

(இ-ள்.) பூமியில் விழுந்து வணங்கிய குலச்சிறைநாயனாரைச் சிறந்த பெருந்தவத்தினை யுடைய திருத்தொண்டர்கள் பலரும்முன் சென்று வணங்கி, அக்குலச்சிறைநாயனார் பூமியினின்றும் எழாமையைப் பார்த்துத் திரும்பி, தாமரைமலரில் வசிக்கும் பிரமன் பூசித்த சீகாழியி லவதரித்த வைதிக முதல்வராகிய திரு

ஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவடிகளை யடைந்து, பாண்டியனது முதல்மந்திரி யாராகிய குலச்சிறைநாயனார் இவ்விடத்து அடைந்தாரென்று (அவர் அடியற்ற பனைபோல் விழுந்துகிடக்கும் நிலைமையை) விண்ணப்பஞ்செய்ய.—எ-று. (சுருசு)

இவ்வுரைச் செல்வ ரவருரை கேட்டுத் திருமுகத்தாமரை மலர்ந்து [ளைந்து
விரவொளி முத்தின் சிவிகைநின் றிழிந்து விரைந்துசென் றவர்தமை ய
கரகம லங்கள் பற்றியே யெடுப்பக் கைதொழு தவருமுன் னிற்ப
வரமிகு தவத்தா லவரையே நோக்கி வள்ளலார் மதுரவாக் களிப்பார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் அத் திருத்தொண்டர்கள் கூறிய வார்த்தையைக் கேட்டுத் திருமுகமாகிய தாமரை மலர்ந்து பரவிய ஒளியினை யுடைய முத்துச்சிவிகையினின்று மிறங்கி விரைந்துசென்று அக்குலச்சிறைநாய னாரையடைந்து தாமரைமலர்போன்ற தமது திருக்கரங்களால் பற்றியெடுக்க, அந் நாயனாரும் கைகூப்பி வணங்கித் திருமுன்னிற்க, அருள்வள்ளலாகிய பிள்ளையார் (அக்குலச்சிறைநாயனார் செய்த) மிக்க தவங் காரணமாக அவரைப் பார்த்தருளி மதுரம்பொருந்திய திருவாக்கருளுவாராயினார்.—எ-று. (சுருஎ)

செம்மையர் பெருமான் குலமக ளார்க்குந் திருந்திய சிந்தையீ ருமக்கு
நம்பெரு மான்றன் றிருவருள் பெருகு நன்மைதான் வாலிதே யென்ன
வம்பல ரலங்கன் மந்திரி யாரு மண்மிசைத் தாழ்ந்தடி வணங்கித்
தம்பெருந் தவத்தின் பயனனை யார்க்குத் தன்மையா நிலையுரைக்கின்றார்.

(இ-ள்) சோழராசபுத்திரியாராகிய மங்கையர்க்கரசியாருக்கும் செம்மையா கிய மனத்தினையுடைய உமக்கும் நமது சிவபெருமான் றிருவருள் பெருகும் க்ஷே மமானது நன்கிருந்ததோவென்று வினவ, மணம்வீசுகின்ற பூமாலையைத்தரித்த குலச்சிறைநாயனாரும் பூமியில் விழுந்து பிள்ளையாரது திருவடிகளை வணங்கித் தமது பெரிய தவப்பயனை யொத்த பிள்ளையாருக்கு அத்திருவருள் நிகழுந்தன் மையான நிலைமையைக் கூறுவாராயினார்.—எ-று. (சுருஅ)

சென்றகா லத்தின் பழுதிலாத் திறமு மினியெதிர் காலத்தின் சிறப்பு
மின்றெழுந் தருளப் பெற்றபே றிதனா லெற்றைக்குந் திருவருளுடையோ
நன்றியி னெறியி லழுந்திய நாடு நற்றமிழ் வேந்தனு முய்ந்து [ன்பார்.
வென்றிகொ டிருநீற் றொளியினில விளங்கு மேன்மையும் படைத்தன மெ

(இ-ள்.) சென்றகாலத்தின் பழுதில்லாத திறத்தையும், மேல் எதிர்காலத் தில் நிகழுஞ்சிறப்பையும் இப்பொழுது தேவரீர் இங்கெழுந்தருளப்பெற்ற பேற்றி னால் அடியேங்கள் எக்காலத்துந் திருவருளையுடையேம்; (அஃதன்றியும்) கொடி யசமணசமயத்தில் அழுந்திய இப்பாண்டிநாடும் நல்லதமிழ்த்தலைவனாகிய பாண்டிய ராசனும் பிழைத்து வெற்றிபொருந்திய விபூதிப்பிரகாசத்தினால் விளக்கமடையும் மேன்மையையும் பெற்றோமென்றுகூறுவாராயினார்.—எ-று. (சுருக)

இங்கெழுந் தருளும் பெருமைகேட் டருளி யெய்துதற் கரியபே றெய்தி
மங்கையர்க் கரசி யாருநம முடைய வாழ்வெழுந் தருளிய தென்றே [வம்
யங்குநீ ரெதிர்சென் றடிபணி வீரென் றருள்செய்தா ரெனத்தொழு தார்
பொங்கிய களிப்பான் மீளவும் பணிந்து போற்றினார் புரவல னமைச்சர்.

(இ-ள்.) தேவரீர் இங்கு எழுந்தருளும் பெருமையைக்கேட்டு மங்கையர்க்கரசியாரும் அடைதற்கரிய பெரும்பயனையடைந்து நம்முடைய பெருவாழ்வு எழுந்தருளியதென்று, அங்கு நீர் எதிர்கொண்டு சென்று திருவடி வணங்குமென்று அடியேனை யேவினாரென்று நமஸ்கரித்து மிக்க மகிழ்ச்சியினால் பாண்டியன் மந்திரியாராகிய குலச்சிறைநாயனார் மீண்டும் வணங்கி ஸ்தோத்திரம் பண்ணினார்.—எ-று. (சுசுo)

ஆங்கனம் போற்றி யடிபணிந் தவர்மே லளவிலா வருள்புரி கருணை, தாங்கிய மொழியாற் றகுவன விளம்பித் தலையளித் தருளுமப் பொழுதி, லோங்கெயில் புடைசூழ் மதுரைதோன் றுதலு முயர்தவத் தொண்டரை நோக்கி, யீங்குநம் பெருமான் றிருவால வாய்மற் றெம்மருங் கினதென வினவ.

(இ-ள்.) அவ்வாறு துதித்துத் திருவடிகளில் வணங்கிய குலச்சிறைநாயனாரிடத்து அளவற்ற திருவருளைச் செய்யுங்கருணையோடுகூடிய திருவாக்கால் இனியவசனங்களைக் கூறியருளும்பொழுது, உயர்ந்த மதில்சூழ்ந்த மதுராபுரிதோன்றவும், மிக்க தவத்தினையுடைய அடியார்களைப் பார்த்து இங்கு நமது சோமசுந்தரப்பெருமானெழுந்தருளுந் திருவாலவாய் எவ்விடத்துள்ளதென்று வினவியருள.—எ-று. (சுசுக)

அன்பரா யவர்முன் பணிந்தசீ ரடியா ரண்ணலா ரடியிணை வணங்கி, முன்புநின் றெடுத்த கைகளாற் காட்டி முருகலர் சோலைகள் சூழ்ந்து, மின்பொலி விசும்பை யளக்குநீள் கொடிசூழ் வியனெடுங் கோபுரந் தோன்று, மென்பணி யணிவா ரினிதமர்ந் தருளுந் திருவால வாயிது வென்றார்.

(இ-ள்.) பேரன்புடையவராய்ப் பிள்ளையார் திருமுன்வணங்கிய சிறந்த குலச்சிறைநாயனார் அவரது திருவடிகளை வணங்கித் திருமுன்னேநின்று எடுத்தகைகளால் காட்டியருளி, வாசனைவீசுகின்ற சோலைகளால் சூழப்பட்டு மின்னல்விளங்கும் மேகமண்டலத்தை யளாவியிருக்கும் நீண்டகொடிகள்நெருங்கிய பெரிய திருக்கோபுரந்தோன்றுகின்ற இது, எலும்பை ஆபரணமாக அணிந்தருளும் ஸ்ரீசுந்தரேசரெழுந்தருளிய திருவாலவாய் என்றுகூறினார்.—எ-று. (சுசுஉ)

தொண்டர்தாம் போற்றிக் காட்டிடக் கண்டு துணைமலர்க் கரங்குவித் தருளி, மண்டுபே ரன்பான் மண்மிசைப் பணிந்து மங்கையர்க் கரசியென் றெடுத்தே, யெண்டிசை பரவு மாலவா யாவ திதுவெயென் றிருவர்தம் பணியுங், கொண்டமை சிறப்பித் தருளிநற் பதிகம் பாடினார் குவலயம்போற்ற.

(இ-ள்.) குலச்சிறைநாயனார் வணங்கிக் காட்டப்பார்த்து இரண்டுதிருக்கரங்களையுஞ் சிரசின் மேற்குவித்து மிக்க பேரன்பினால் பூமியில் பொருந்த வணங்கி "மங்கையர்க்கரசி" என்று முதலிலெடுத்து, எட்டுத்திக்கிலுள்ளாருந் துதிக்கும் "ஆலவாயாவது மிதுவே" என்று இறுதியிலமைத்து மங்கையர்க்கரசியாருங் குலச்சிறைநாயனாருமாகிய இருவரது திருத்தொண்டையுங்கொண்ட தன்மையைச் சிறப்பித்து உலகத்தார் துதிக்கும்படி நல்லதிருப்பதிகம் பாடியருளினார்.—எ-று.

இருவர் தம்பணியுஞ் சிறப்பித்தமையாவது, மங்கையர்க்கரசியாரை ஒரு திருப்பாடலினுங் குலச்சிறைநாயனாரை ஒரு திருப்பாடலினுமாகவமைத்துச் சிறப்பித்து, திருக்கடைக்காப்பில் இருவரையும் ஒருங்குசேர்த்துச்சிறப்பித்தருளினமையாம். இதுவே எபன்து, இதுவெ எனக்குறுக்கல் விகாரம் பெற்றது. (௬௬௩)

திருவாலவாய் பண் புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

மங்கையர்க்கரசிவளவர்கோன்பாவைவரிவளைக்கைமடமானி
பங்கயச்செல்விபாண்டிமாதேவிபணிசெய்துநாடொறும்பரவப்
பொங்கழலுருவன்பூதநாயகனால்வேதமும்பொருள்களுமருளி
யங்கயற்கண்ணிதன்னொடுமமர்ந்தவாலவாயாவதுமிதுவே.

வெற்றவேயடியாரடிமிசைவீழும்விருப்பினன்வெள்ளைநீறணியுங்
கொற்றவன்றனக்குமந்திரியாயகுலச்சிறைகுலாவிநின்றேத்து [திட்
மொற்றைவெள்விடையனும்பரார்தலைவனுலகினிலியற்கையையொழித்
டற்றவரகத்துச்சிவனுறைகின்றவாலவாயாவதுமிதுவே.

பன்னலம்புணரும்பாண்டிமாதேவிகுலச்சிறையெனுமிவர்பணியும்
அந்நலம்பெறுசீராலவாயீசன்றிருவடியாங்கவைபோற்றிக்
கன்னலம்பெரியகாழியுள்ஞானசம்பந்தன் செந்தமிழிவைகொண்
டின்னலம்பாடவல்லவரிமையோரேத்தவீற்றிருப்பவரினிதே.

பாடிய பதிகம் பரவியே வந்து பண்புடை யடியவ ரோடுந்
தேடுமா லயனுக் கரியவர் மகிழ்ந்த திருவால வாய்மருங் கணைந்து
நீடுயர் செல்வக் கோபுர மிறைஞ்சி நிறைபெரு விருப்புடன் புக்கு
மாடுசூழ் வலங்கொண் டுடையவர் கோயின் மந்திரி யாருடன் புகுந்தார்.

(இ-ள்.) தாம் பாடத்தொடங்கிய திருப்பதிகத்தை யவ்வாறு துதித்துச் சென்று, நற்குணமமைந்த அடியார்களோடு திருவடியையுந் திருமுடியையுந் தேடிய திருமால் பிரமனென்னு மிருவர்க்குங் காணுதற்கரிய ஸ்ரீசொக்கலிங்கப்பெருமான் மகிழ்ந்தெழுந்தருளிய திருவாலவாயின் அருகணைந்து, மிகவுமுயர்ந்த செல்வத்தையுடைய திருக்கோபுரத்தை வணங்கி நிறைந்த பெருவிருப்பத்தோடும் புகுந்து பிரதக்ஷணஞ்செய்து ஸ்ரீசுந்தரேசரது திருக்கோயிலினுள் குலச்சிறைநாயனாரோடு சென்றருளினார்.—எ-று. (௬௬௪)

வேறு.

ஆளு மங்கண ராலவா யமர்ந்தினி திருந்த
காள கண்டரைக் கண்களின் பயன்பெறக் கண்டு
நீள வந்தெழு மன்பினாற் பணிந்தெழ நிறையார்
மீள வும்பல முறைநில முறவிழுந் தெழுவார்.

(இ-ள்.) தம்மையாண்டருளும் அருட்கண்ணராகிய திருவாலவாயில் மகிழ்ந்தெழுந்தருளும் ஸ்ரீசொக்கலிங்கப் பெருமானைக் கண்களாலடையும் பயன் பெறத் தரிசித்து அதிகரித்தெழுகின்ற அன்பினால் வணங்கி யெழவும் ஆற்றாராய் மீண்டும் பலதரம் நிலத்திற்பொருந்த விழுந்து நமஸ்கரித்தெழுவார்.—எ-று. (௬௩௫)

அங்க மெட்டினு மைந்தி னளவின்றி வணங்கிப்
பொங்கு காதலின் மெய்ம்மயிர்ப் புளகமும் பொழியுஞ்
செங்க ணீர்தரு மருவியுந் திகழ்திரு மேனி
யெங்கு மாகிநின் றேத்தினார் புகலிய ரிறைவர்.

(இ-ள்.) அஷ்டாங்கமுறைமையாகவும் பஞ்சாங்கமுறைமையாகவும் பலதரம் நமஸ்கரித்து,பெருவிருப்பினால் உடம்பில் மயிர்ப்புளகமும், சிவந்தகண்களினின்று மொழுகுகின்ற ஆனந்தக்கண்ணீரும் விளங்குகின்ற திருமேனிமுழுதுமாகி நின்று துதித்தார்; சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார்.

புகலியரிறைவர் ஏத்தினார் எனக் கூட்டுக.

தலை, இருகரம், இருகன்னம், முகவாய், இருபுயம் என்னும் எட்டு அவயவங்களும் பூமியிற்பொருந்த வணங்குதல் அஷ்டாங்கமென்றும், தலை, இருகரம், இருமுழந்தாள் என்னுமைந்தும் பூமியிற்பொருந்த வணங்குதல் பஞ்சாங்கமென்றும், இருகரங்களையுஞ் சிரசின்மேற் கூப்பிவணங்குதல் திரியாங்கமென்றும், சிரம் ஒன்றினைமாத்திரந் தாழ்த்திவணங்குதல் ஏகாங்கமென்றும் நூல்கள்கூறும்.

"வலஞ்செய்து தண்டதனை மானவிதி வழிதழுவத்
தலந்தன்னிற் பணிந்தெழுக தலைகரமற் றிருகன்னந்
துலங்குமுக வாய்ப்புயங்க ளெனுமெட்டுந் தோயமயி
ரிலங்குசிரங் கரமுழந்தா ளெனுமைந்து மிசைந்திடவே." எனவும்,

"சிரங்கர முழந்தாண் மண்ணைத் திண்டிற்பஞ் சாங்க மாகுஞ்
சிரந்தனிற் கரங்கள் கூப்பிற் றிரிவித வங்க மாகுஞ்
சிரந்தனைத் தாழ்த்து நிற்கை தேரினே காங்க மாகும்
வரம்பெறு மெட்டு மைந்து மத்திம மூன்றே கம்பின்" எனவும் வருஞ்
செய்யுட்களா னுணர்க. (௬௩௬)

நீல மாமிடற் றாலவா யானென நிலவு
மூல மாகிய திருவிருக் குக்குறண் மொழிந்து
சீல மாதவத் திருத்தொண்டர் தம்மொடுந் திளைத்தார்
சாலு மேன்மையிற் றலைச்சங்கப் புலவனார் தம்முன்.

(இ-ள்.) "நீலமாமிடற் றாலவாயிலான்" என்று விளங்கும் முதலையுடைய திருவிருக்குக் குறளென்னுந் திருப்பதிகம்பாடியருளி,மிக்க மேன்மையையுடைய முதற்சங்கப்புலவராக வெழுந்தருளிய ஸ்ரீசொக்கலிங்கப்பெருமான் திருமுன்பு நல்லொழுக்கமமைந்த மிக்கதவத்தினையுடைய திருத்தொண்டர்களோடும் பேரின்பவெள்ளத்தில் மூழ்கினார்.—எ-று.

ஸ்ரீ சுந்தரேசர் தலைச்சங்கத்திருந்து தமிழாராய்ந்த புலவருட்டலைவராகலின் 'தலைச்சங்கப்புலவனார் தம்முன்' என்று கூறினார்; இதனை, "வேங்கடங் குமரி தீம்புனற் பௌவத், தின்றமிழ் வரைப்பகத் தொல்லிசை நிறுத்த, செந்நாப் புலவர்

செய்தியின் றொப்பி,ருடகக் குடுமி மாடக் கூடலின், முன்னர்ச் சங்கக் கன்மாப் பலகையிற், றிரிபுர மெரித்த விரிசடைக் கடவுண், மன்றன் மராத்தார்க் குன்றெறி யிளஞ்சேய், திண்டிறற் புலமைக் குண்டிகைக் குறுமுனி, புவிபுகழ் மருதங் கவினிய முரிஞ்சிப், பதிமுடி நாக னிதியின் கிழவ, னினையர்நா லூற்றுநாற் பத்தொன் பதின்ம, ரனையர் நானூன் காயிர நூற்றெழுபடு, நாற்பத்தொன் பதின்மர் பார்க்கிற்செந் தமிழோர், புரிந்தன செய்யுட் பெரும்பரி பாடலு, முதுமையடுத்த நாரையுங் குருகுந, கதியுறச் செய்த களரியா விரையு, மாங்கவ ரிருந்தது மத்தொகை யாகு மீஙகிவர் தம்மை யிரீஇயபாண் டியாகள்,* காய்சின வழுதிமு தற் கடுங்கோ னீறு, வேசிலா வகையெண் பத்தொன பதின்மர், கவியரங்கேறினு ரெழுவ ராகு, மகதுவ முடைய வகத்திய மிலககணம்'' எனவரும் ஆசிரியப்பாவானுணர்க. (௬௬௭)

---

திருவாலவாய் - திருவிருக்குக்குறள் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

நீலமாமிடற் - றாலவாயிலான்
பாலதாயினார் - ஞாலமாள்வரே.
அடிகளாலவாய் - படிகொள்சம்பந்தன்
முடிவிலின்றமிழ் - செடிகணீங்குமே.

திருச்சிற்றம்பலம்.

---

சேர்த்து மின்னிசைப் பதிகமுந் திருக்கடைக் காப்புச்
சாத்தி நல்லிசைத் தண்டமிழ்ச் சொன்மலர் மாலை
யேர்த்து மின்புறப் பாடிவெண் பிறையணி சென்னி
மூர்த்தி யார்கழல் பரவியே திருமுன்றி லணைய.

(இ-ள்.) இனிய இசையமைந்த திருப்பதிகத்தையுந் திருக்கடைக்காப்புப் பாடியருளி, நல்ல இசைபொருந்திய குளிர்ந்த தமிழ்ச்சொற்களாலாகிய பாமாலையை மீளவும் இன்ப முண்டாகப் பாடியருளி, வெண்மையாகிய இளம்பிறையணிந்த சடைமுடியையுடைய ஸ்ரீ சுந்தரேசரது திருவடிகளை வணங்கித் திருக்கோயிலின் றிருமுன்றிலையடைந்தருள.—எ-று. (௬௬௮)

பிள்ளை யாரெழுந் தருளிமுன் புகுதுமப் பொழுது
வெள்ள நீர்பொதி வேணியார் தமைத்தொழும விருப்பா
லுள்ள ணைந்திட வெதிர்செலா தொருமருங் கொதுங்குந்
தெள்ளு நீர்விழித் தெரிவையார் சென்று முன்பெய்த.

(இ-ள்.) திருஞான சம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளி சுவாமி தரிசனஞ்செய்யும்பொருட்டு உள்ளணையும்பொழுது, கங்கைநீர் பொருந்திய சடைமுடியையுடைய சிவபெருமானை வணங்கும் விருப்பத்தால் தாம் சென்றுள்ளிருக்கவும் அப்பிள்ளையாருக் கெதிர்செல்லாமல் ஒருபக்கத்தில் ஒதுங்குகின்ற ஆனந்தக்கண்ணீர் துளிக்கின்ற கண்களையுடைய மங்கையர்க்கரசியார் பிள்ளையார் திருமுன்னே சென்றடைந்தருள.—எ-று. (௬௬௯)

மருங்கின் மந்திரி யார்பிள்ளை யார்கழல் வணங்கிக்
கருங்கு ழற்கற்றை மேற்குவி கைத்தளி ருடையார்
பருங்கை யானைவாழ் வளவர்கோன் பாவையா ரென்னப்
பெருங்க ளிப்புடன் விரைந்தெதிர் பிள்ளையா ரணைந்தார்.

(இ-ள்.) அருகில் வருகின்ற குலச்சிறைநாயனார் திருஞானசம்பந்தப் பிள்ளையாரது திருவடிகளை வணங்கி, கரிய கூந்தலின்மேல் குவித்த தளிர்போலுங் கைகளையுடைய இவ்வம்மையார் பருத்த துதிக்கையினையுடைய யானைச்சேனைகள் வாழ்கின்ற சோழராசன் புத்திரியாராகிய பாண்டிமாதேவியார் என்று கூற, (அதுகேட்ட பிள்ளையார்) மிக்க களிப்போடும் விரைந்து சென்று, அவரெதிரில் அடைந்தருளினார்.—எ-று. (௬௭0)

தென்ன வன்பெருந் தேவியார் சிவக்கன் றின்னு செய்ய
பொன்ன டிக்கம லங்களிற் பொருந்தமுன் விழுந்தார்
மன்னு சண்பையர் வள்ளலார் மகிழ்சிறந் தளிக்கு
மின்ன ருட்பெருஞ் சிறப்பொடுந் திருக்கையா லெடுத்தார்.

(இ-ள்.) பாண்டிமாதேவியார் சிவஞானக்கன்றாகிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரது திருவடிகளில் சிரமுறவிழுந்து வணங்கினார்; நிலைபெற்ற சீகாழித் தலைவராகிய பிள்ளையார் மகிழ்கூர்ந்து அவ்வம்மையாரைப் பாதுகாக்கும் இனிய திருவருட் பெருஞ்சிறப்போடுந் தமது திருக்கரத்தால் எடுத்தருளினார்.—எ-று. ()

ஞான போனக ரெதிர்தொழு தெழுந்தநற் றவத்து
மானி யார்மனக் கருத்துமுற் றியதென மதித்தே
பான லங்கண்க ணீர்மல்கப் பவளவாய் குழறி
யானு மென்பதி யுஞ்செய்த தவமென்கொ லென்றார்.

(இ-ள்.) சிவஞானப்பாலமுதுண்டருளிய பிள்ளையாரது திருமுன் வணங்கியெழுந்த நல்லதவத்தினையுடைய மங்கையர்க்கரசியார் தமது திருவுள்ளக்கருத்து முடிந்ததென்று மதித்து, நீலோற்பலமலர்போன்ற கண்களினின்றும் ஆனந்த பாஷ்பஞ்சிந்தப் பவளம்போன்ற வாய்மொழிகுழறி (தேவரீர் இங்கு எழுந்தருள) அடியேனும் எனது நாயகனும்செய்த தவம்யாதோ! வென்று கூறியருளினார்.

மானியார் என்பது, மங்கையர்க்கரசியாருக்கு ஒரு திருப்பெயர். (௬௭௨)

யாழின் மென்மொழி யார்மொழிந் தெதிர்கழல் வணங்கக்
காழி வாழவந் தருளிய கவுணியர் பிரானுஞ்
சூழு மாகிய பரசம யத்திடைத் தொண்டு
வாழு நீர்மையீ ருமைக்காண வந்தன மென்றார்.

(இ-ள்.) யாழின் ஓசைபோலும் இனியசொற்களையுடைய மங்கையர்க்கரசியார் இவ்வாறுகூறி மீளவும் அவரது திருவடிகளைவணங்க, சீகாழிப்பதி வாழும்படியவதரித்தருளிய பிள்ளையாரும் சூழ்ந்திருக்கின்ற புறச்சமயத்தார்களுளிருந்தும் சைவநெறித் திருத்தொண்டில் (வழுவாது) வாழுந் தன்மையையுடையஅன்பரோ! உம்மைக்காணுதற்கு வந்தோமென்று கூறியருளினார்.—எ-று. (௬௭௩)

இன்ன வாறருள் செய்திடத் தொழுதடி வீழ்ந்தார்
மன்னு மந்திரி யார்வரு திறமெலா மொழிய

வன்ன மென்னடை யார்தமக் கருள்செய்து போக்கித்
துன்னு மெய்த்தொண்டர் சூழவந் தருளுமப் பொழுது.

(இ-ள்.) பிள்ளையார் இவ்வாறுகூறியருள, மங்கையர்க்கரசியார் அவரது திருவடிகளில் வணங்கி விழுந்தார்; நிலைபெற்ற குலச்சிறைநாயனார் (சமணர்களால்) நேரிட்ட தீங்குகளனைத்து மெடுத்துச்சொல்ல, அன்னம்போலும் மெல்லிய நடையினையுடைய அவ்வம்மையாருக்கு விடைகொடுத்தனுப்பி நெருங்கிய அடியார்கள் தம்மைச்சூழ்ந்துவர எழுந்தருளும்பொழுது.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௬௭௪)

செல்வ மல்கிய திருவால வாயினிற் பணிசெய்
தல்கு தொண்டர்கள் பிள்ளையார் மருங்கணைந் திறைஞ்சி
மல்கு காரம ணிருள்கெட வீங்குவந் தருள
வெல்லை யிற்றவஞ் செய்தன மெனவெடுத் திசைத்தார்.

(இ-ள்.) பலவகைச்செல்வங்கள் நிறைந்த திருவாலவாய்த் திருப்பதியில் திருத்தொண்டுசெய்து வாழும் அடியார்கள் திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்குச் சமீபத்தில்வந்து வணங்கி, நிறைந்த சமணர்களாகிய இருள்கெடும்படி தேவரீர் இங்கு ஞானசூரியன்போல எழுந்தருள அளவற்ற தவத்தைச் செய்தோமென்று கூறினார்கள்.—எ-று. (௬௭௫)

அத்தி ருத்தொண்டர் தங்களுக் கருண்முக மளித்து
மெய்த்த காதலி னவரொடும் புறத்தினின் மேவிச்
சித்த மின்புறு மமைச்சனார் திருமடங் காட்டப்
பத்தர் போற்றிடப் பரிசனத் தொடுமினி தமர்ந்தார்.

(இ-ள்.) அவ்வாறு கூறிய அடியார்களுக்குத் திருவருளோடு முகமலர்ந்து, மெய்ம்மையாகிய விருப்புடன் அவர்களோடுபுறத்திற்சென்று, மனதில் மகிழ்வுற்றிருக்கின்ற குலச்சிறைநாயனார் தாம் வசித்தற்குரிய திருமடத்தைக்காட்ட, அத்திருமடத்தில் அடியார்கள் துதிக்கத் தமது பரிசனங்களோடும் மகிழ்வாக எழுந்தருளினார்.—எ-று. (௬௭௬)

பரவு காதலிற் பாண்டிமா தேவியா ரருளால்
விரவு நண்பொடு குலச்சிறை யார்விருந் தளிப்பச்
சிரபு ரத்துவந் தருளிய செல்வரங் கிருந்தா
ரிரவி மேற்கட லணைந்தன னெல்லிவந் தணைய.

(இ-ள்.) நிறைந்த அன்பினையுடைய பாண்டிமாதேவியாரது அனுமதியினால் கலந்த நண்போடு குலச்சிறைநாயனார் விருந்துசெய்யச் சீகாழிப்பதியிலவதரித்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் அத்திருமடத்தி லெழுந்தருளி யிருந்தார்; பின், இராக்காலம்வரச் சூரியன் மேற்றிசைக்கடலையடைந்தான்.—எ-று. (௬௭௭)

வழுதி மாநக ரதனிடை மாமறைத் தலைவர்
பழுதில் சீரடி யாருடன் பகல்வரக் கண்ட
கழுது போல்வருங் காரமண் குண்டர்கள் கலங்கி
யிழுது மெய்யிருட் கிருளென வீண்டின ரொருபால்.

(இ-ள்.) சிறந்த வேதமுதல்வராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் சூற்ற மற்ற சிறந்த அடியார் திருக்கூட்டத்தோடும் பாண்டிமாநகரத்தில் பகலிலெழுந் தருளிவரக்கண்ட பேய்போல்வராகின்ற கரியசமணர்களாகிய கீழ்மக்கள் மனங் கலங்கித் தங்களுடம்பினிருளுக்குப் பூதவிருளிழுக்கடையுமென்றுசொல்லும்படி ஒருபக்கத்தில் வந்துகூடினார்கள்.—எ-று. (௬௭௮)

அங்கண் மேவிய சமணர்கள் பிள்ளையா ரமர்ந்த
துங்க மாமடந் தன்னிடைத் தொண்டர்தங் குழாங்க
ளெங்கு மோதிய திருப்பதி கத்திசை யெடுத்த
பொங்கு பேரொலி செவிப்புலம் புக்கிடப் பொறார்.

(இ-ள்.) அங்குக்கூடிய சமணர்கள் திருஞானசம்பந்தப்பிள்ளையா ரெழு ந்தருளியிருக்குஞ் சிறந்த திருமடத்தில் அடியார் திருக்கூட்டங்கள் எவ்விடத்து மோதிய திருப்பதிகத்தி னிசையாலெழுப்பிய மிக்க பேரொலியானது காதில் கேட்க அதுகேட்டு மனம்பொறாமல்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௬௭௯)

மற்றிவ் வான்பதி மன்னவன் மாறனை யெய்திச்
சொற்று மென்றுதஞ் சூழ்ச்சியு மொருபடி துணிவார்
கொற்ற வன்கடைக் காவலர் முன்சென்று குறுகி
வெற்றி வேலவற் கெங்களை விளம்புவீ ரென்றார்.

(இ-ள்.) இப்பெரிய மதுராபுரிக்கு அரசனாகிய பாண்டியனையடைந்து சொல்லுவோமென்று தமது வஞ்சகவுபாயத்தையும் ஒருவாறு துணிந்து செய்ப வர்களாய்ப் பாண்டியனது தலைவாயிற் காவலாளர் முன்சென்று, நீங்கள்போய் வெற்றிபொருந்திய வேற்படையையுடைய பாண்டியராசனுக்கு எங்கள் வருகை யைத் தெரிவியுங்களென்று சொன்னார்கள்.—எ-று. (௬௮0)

வாயில் காவலர் மன்னவன் றனையெதிர் வணங்கி
யாப மாகிவந் தடிகண்மா ரணைந்தன ரென்ன
வேயி னுனையை வாரென வவருஞ்சென் றிசைத்தார்
பாயி னுலுடல் மூடுவார் பறைதப்புடன் புக்கார்.

(இ-ள்.) வாயில்காப்பவர் சென்று பாண்டியனை யெதிரே வணங்கி, நமது சமணாசாரியர்கள் கூட்டமாகச்சேர்ந்து வந்தார்களென்று சொல்ல, அவன் வருகி ன்றவர்கள் தடையின்றிவரக்கடவரென்று கூற, அதனைஅவ் வாயில் காப்போர் சென்று சொன்னார்கள்; பாயினால் தம் முடம்பை மூடிய சமணர்கள் பதைபதை ப்புடன் உள்ளே புகுந்தார்கள்.—எ-று. (௬௮௧)

புக்க போதவ ரழிவுறு மனத்திடைப் புலர்ச்சி
மிக்க தன்மையை வேந்தனுங் கண்டெதிர் வினவி
யொக்க நீர்திரண் டணைவதற் குற்றதென் னென்னத்
தக்க தல்லதீங் கடுத்தது சாற்றுதற் கென்றார்.

(இ-ள்.) அவ்வாறு உள்ளேபுகுந்தபொழுது அவர்களது கலங்கிய மனத் திலுண்டாகிய தளர்ச்சி யதிகரித்திருக்குந் தன்மையைப் பாண்டியனு முணர்ந்து

எதிரேவினவி, நீங்கள் இருங்குறிரண்டுவெருவதற்கு நேர்ந்ததிங்கு யாதென்றுகேட்க, அவர்கள் இங்கு நேர்ந்ததைசொல்லத்தக்கதல்லவென்று கூறினார்கள்.—எ-று. ()

ஆவ தேனுமக் கடுத்தது கூறுவீ ரென்று
காவ லன்பரிந் துரைத்தலுங் காரமண் கையர்
மாவ லாயுன்றன் மதுரையிற் சைவவே தியர்தா
மேவ லாலின்று கண்டுமுட் டியாமென்று விளம்ப.

(இ-ள்.) பாண்டியராசன் (அச்சமணமுனிவர்களைப்பார்த்து) ஆகவேண்டியதென்ன, உங்களுக்குநேரிட்ட துன்பத்தைச் சொல்வீர்களென்று மனமிரங்கிக் கூறவும், கரியசமணராகிய கீழ்மக்கள் யானைச்சேனையையுடைய பாண்டியனே! உன்து மதுராபுரியில் சைவவேதியர்கள் இன்றுவருதலால் நாங்கள் அவர்களைக் கண்டு முட்டானோமென்று கூறினார்கள்.—எ-று.

மாவலன் - மிக்க பராக்கிரமத்தையுடையவன் எனினுமாம். சைவர்களைக் காணின், கண்டுமுட்டென்றலும், கண்டோமென்று சொல்லக் கேட்பின், கேட்டுமுட்டென்றலும் சமணசமயக்கொள்கைகளாம். (சுஅஉ)

என்று கூறலுங் கேட்டுமுட் டியானுமென் றியம்பி
நன்று நல்லறம் புரிந்தவா நானென்று நகுவான்
கன்று முள்ளத்த னாகியக் கணுஞ்த லடியா
ரின்று மாநக ரணைந்ததென் னவர்கள்யா ரென்றான்.

(இ-ள்.) அவ்வாறு சமணர்கள்கூறவும், அதைக்கேட்ட பாண்டியன் யானுங் கேட்டுமுட்டானேனென்று கூறி, நான் நல்லதருமத்தைச் செய்தது நன்றாயிருந்ததென்று சிரித்துக் கோபித்த மனமுடையவனாய் அந்தச் சிவனடியார்கள் இன்றைக்கு நமது பெரியநகரத்திற்குவந்தது யாதுகாரணம், அவர்கள் யாரென்று கேட்டான்.—எ-று. (சுஅச)

மாலை வெண்குடை வளவர்சோ ணாட்டுவண் புகலிச்
சூல பாணிபான் ஞானம்பெற் றானென்று சுருதிப்
பால னன்பர்தங் குழாத்தொடும் பனிமுத்தின் சிவிகை
மேலணைந்தன னெங்களை வாதினில் வெல்ல.

(இ-ள்.) (அதற்குச் சமணர்கள்) ஆத்திமாலையையும் வெண்கொற்றக்குடையையுமுடைய சோழர்களது நாட்டில் வளம்பொருந்திய சீகாழியிலிருக்கின்ற பிராமணச்சிறுவனொருவன் சிவனிடத்திலே ஞானம்பெற்றவனென்று குளிர்ந்த முத்துச்சிவிகைமேற்கொண்டு எங்களை வாதில் வெல்லும்பொருட்டு அடியார்கூட்டத்தோடும் வந்திருக்கின்றான்.—எ-று. (சுஅரு)

என்று கூறுவா ரித்திற முன்புதா மறிந்த
தொன்று மங்கொழி யாவகை யுரைத்தலுந் தென்னன்
மன்ற லம்பொழிற் சண்பையார் வள்ளலார் நாமஞ்
சென்று தன்செவி நிறைத்தலுஞ் செயிர்த்துமுன் சொல்வான்.

(இ-ள்.) என்று கூறுஞ்சமணர்கள் இவ்வாறு தாம் கேட்டறிந்ததொன்றையும் மறையாமல் சொல்லவும், அதுகேட்ட பாண்டியன் மணம்பொருந்திய அழகிய சோலைசூழ்ந்த சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரது

திருநாமமானது சென்று தன்செவியை நிறைத்தவுடனேகோபித்து அவர்களுக்கு முன்னே சொல்வானாயினன்.—எ று. (௬அ௬)

மற்ற மாமறை மைந்தனிம் மருங்கணைந் தானே
லுற்ற செய்தொழி லியாதுசெய் கோமென வுரைப்பச்
செற்ற மீக்கொண்ட சிந்தையுஞ் செய்கையு முடையோர்
கொற்ற மன்னவன் மொழிக்கெதிர் குறித்துரை செய்வார்.

(இ-ள்.) அந்தப் பிராமணச்சிறுவன் இந்நகரத்திற்குவந்தானாயின் இதற்கு நாம் செய்யவேண்டிய தொழில் என்னவென்று கேட்க, கோப மேற்கொண்டிருக்கின்ற மனமும் கொடுஞ்செய்கையுமுடைய சமணர்கள் வெற்றிபொருந்திய பாண்டியனது சொல்லுக்கு மறுமொழி யோசித்துச் சொல்வாராயினர்.—எ-று.(௬அஎ)

வந்த வந்தணன் றன்னைநாம் வலிசெய்து போக்குஞ்
சிந்தை யன்றியச் சிறுமறை யோனுறை மடத்தில்
வெந்த ழற்பட விஞ்சைமந் திரத்தொழில் விளைத்தா
லிந்த நன்னக ரிடத்திரா னேகுமென் றிசைத்தார்.

(இ-ள்.) இங்குவந்த பிராமணச்சிறுவனை நாம் வலிந்து துரத்துஞ் சிந்தையில்லாமல், அந்தச்சிறுவன்வசிக்கின்ற மடத்தில் நெருப்புப்பற்றியெரிய மந்திரவித்தை செய்வோமானால் அவன் இந்தப்பட்டணத்தி லிராமல் உடனே போய்விடுவான் என்று சொன்னார்கள்.—எ-று. (௬அஅ)

வேறு.

ஆவதொன் றிதுவே யாகி லதனையே விரைந்து செய்யப்
போவதென் றவரைப் போக்கிப் பொய்பொரு ளாகக் கொண்டான்
யாவது முரையா டாதே யெண்ணத்திற் கவலை யோடும்
பூவணை யமளி புக்கான் பொங்கெழிற் றேவி சேர்ந்தாள்.

(இ-ள்.) பொய்ப்பொருளை மெய்ப்பொருளாகக் கருதியிருக்கும் பாண்டிய ராசன் (சமணர்கள்கூறும் அவ்வார்த்தையைக் கேட்டுச்) செய்யத்தக்கது இதுவேயானால் அச்செய்கையையே விரைந்து செய்யக்கடவீர்களென்று அவர்களை யனுப்பி, யாதொரு பேச்சுமின்றி மனதிற்கவலையோடும் புஷ்பசயனத்திற் சேர்ந்தான், மிக்க அழகினையுடையபாண்டிமாதேவியாரும் அங்குச்சேர்ந்தார்.—எ-று. (௬அ௯)

மன்னவ னுரைப்ப தின்றி யிருக்கமா தேவி யார்தா
மென்னுயிர்க் குயிரா யுள்ள விறைவநீ யுற்ற தென்னோ
முன்னுள மகிழ்ச்சி யின்றி முகம்புலர்ந் திருந்தா யின்று
பன்னிய வுள்ளத் தெய்தும் பருவர லருள்செ யென்றார்.

(இ-ள்.) (அப்பொழுது) பாண்டியன் யாதொருபேச்சுமின்றியிருக்க, பாண்டிமாதேவியார் என்னுயிர்க்குயிராகிய நாயகரோ! நீரடைந்த கவலையாது? முன் அடைந்திருந்த மகிழ்ச்சியில்லாமல் முகம்வாடியிருக்கின்றீர், உமது மனதிற்பொருந்திய துன்பத்தைச்சொல்லுவீராக வென்றார்.—எ-று. (௬௯௦)

தேவியார் தம்மை நோக்கித் தென்னவன் கூறுகின்றான்
காவிநீள் கண்ணி னாய்கேள் காவிரி நாட்டின் மன்னுந்

தாவில்சீர்க் கழும லத்தான் சங்கர னருள்பெற் றிங்கு
மேவினு னடிகண் மாரை வாதினில் வெல்லவென்று.

(இ ள்.) பாண்டியன் தமது தேவியாரைப்பார்த்துச் சொல்லுகின்றான், நீலோற்பல மலர்போலும் நீண்ட கண்களையுடைய பிராண நாயகியே! கேட்பாயாக, சோழநாட்டிலுள்ள கெடாத சிறப்பினையுடைய சீகாழியிலிருக்கின்ற ஒரு பிராமணச்சிறுவன் சிவனது கிருபையைப்பெற்று எமது ஆசாரியர்களாகிய சமண முனிவர்களை வாதுசெய்து வெல்லும்பொருட்டு இங்குவந்திருக்கின்றான்.—எ-று.()

வெண்பொடி பூசுந் தொண்டர் விரவினு ரவரை யெல்லாங்
கண்டுமுட் டடிகண் மாரகள் கேட்டுமுட் டியானுங் காதல்
வண்டுணத் துதைந்த கோதை மானியே யிங்குவந்த
பண்புமற் றிதுவே யாகும பரிசுவே றிலலையென்றான்.

(இ-ள்) வெள்ளிய விபூதியைப் பூசுகின்ற சிவனடியார்கள் (அவனுடன்) நெருங்கிவந்தார்கள்; அவர்களையெல்லாம் ஆசாரியர்கள்பார்த்துக் கண்டு முட்டானார்கள்; யானுங் கேட்டுமுட்டானேன்; வண்டுகள் தேனுண்ணும்படி நெருங்கிய மலாமாலையணிந்த எனது பிராணநாயகியே! இங்கு நிகழ்ந்ததன்மையிதுவேயாம்; வேறொன்று மில்லையென்று கூறினன.—எ-று. (சுசுஉ)

மன்னவ னுரைப்பக் கேட்டு மங்கையர்க் கரசி யார்தா
மின்னிலை யிதுவே யாகி னீடிய தெய்வத் தன்மை
யன்னவர் வாது செய்தால வென்றவா பக்கஞ் சேர்ந்து
துன்னுவ துறுதி யாதுஞ் சுழிவுறேன் மன்ன வென்றா

(இ ள்.) இவ்வாறு பாண்டியராசன் சொல்ல மங்கையர்க்கரசியார் கேட்டு உமது மனக்கவலைக்குக் காரணமிதுவேயானால், மிக்க தெய்வத்தன்மையைக்குறித்து அவ்விருபக்ஷத்தாரும் வாதுசெய்தால் வென்றவர் பக்ஷஞ்சேர்ந்து அவர்கள் அனுசரிக்குஞ்சமயத்தையே கைக்கொண்டொழுகுவது உறுதியாகும்; எமது தலைவரே இதைக்குறித்து நீர்வருந்த வேண்டாமென்று கூறினார்.—எ-று. (சுசுந)

சிந்தையிற் களிப்பு மிக்குத் திருங்கழு மலத்தார் வேந்தர்
வந்தவா றெம்மையாள வெனவரு மகிழ்ச்சி யோடுங்
கொந்தலர் குழலார் போதக் குலச்சிறை யாரங் கெய்த
விந்தகன் மாற்ற மெல்லா மவாக்குரைத் திருந்த பின்னர்.

(இ-ள்) பூங்கொத்துகள் அலர்ந்த கூந்தலையுடைய மங்கையர்க்கரசியார் மனதிற் களிப்பு மிகுந்து, சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் இங்கு எழுந்தருளியது எம்மை யாட்கொள்ளும்பொருட்டே யென்றுண்டாகிய மகிழ்ச்சியோடுந் தமது திருமாளிகைக்குச் செல்ல, உடனே குலச்சிறைநாயனார் அங்கு வரவும், இந்தச் சுபவார்த்தைகளை யெல்லாம் அவர்க்குக் கூறி அங்கெழுந்தருளியிருந்தபின்பு.—எ-று. (சுசுச)

கொற்றவ னமைச்ச ருருங் கைதலை குவித்து நின்று
பெற்றனம் பிள்ளை யாரிங் கணைந்திடப் பெரும்பே றென்பா
ரிற்றைநா ளீச னன்பர் தம்மைநா மிறைஞ்சப் பெற்றோ
மற்றினிச் சமணர் செய்யும் வஞ்சனை யறியே மென்றார்.

(இ-ள்.) பாண்டியராசன் முதல்மந்திரியாராகிய குலச்சிறைநாயனாரும் தமது கைகளைச் சிரசின்மேற் குவித்து வணங்கிநின்று திருஞானசம்பந்தப்பிள்ளையார் இங்கு எழுந்தருளத்தக்க பெரிய பேறுபெற்றோமென்பவராய், இந்நாளில் சிவனடியார்களை நாம் வணங்கப்பெற்றோம், இனிச் சமணர்கள்செய்யும் வஞ்சனையை அறியோமென்று கூறினார்.—எ-று. (சுகரு)

மானியார் தாமு மஞ்சி வஞ்சரிப் புலையர் தாங்க
ளீனமே புரிய வல்லார் செய்வதென் னுமென் றெண்ணி
ஞானசம் பந்தர் தம்பா னன்மையல் லாதசெய்யு
மூனம்வந் தடையில் யாமு முயிர்துறந் தொழிவ தென்றார்.

(இ-ள்.) மங்கையர்க்கரசியாரும் அச்சமுற்று வஞ்சகமாகிய இச்சமணப் புலையர்கள் கொடுமையையே செய்யவல்லவர்கள்; அதற்கு நாம் என்னசெய்வதென்று கருதி, திருஞானசம்பந்தப்பிள்ளையாரிடத்து இவர்கள் கொடுமாகச் செய்யுங் கெடுதிகள் யாதாயினும் வருமாயின் யாமும் உயிர்விடுவதே உறுதியென்று கூறினார்.—எ-று. (சுகசு)

இவர்நிலை யிதுவே யாக விலங்குவேற் றென்ன னான
வவனிலை யதுவா மந்நா ளருகர்தந் நிலையா தென்னிற்
றவமறைந் தல்ல செய்வார் தங்கண்மந் திரத்தாற் செந்தீ
சிவநெறி வளர்க்க வந்தார் திருமடஞ் சேரச் செய்தார்.

(இ-ள்.) இவ்விருவருடைய எண்ண மிவ்வாறிருக்க, விளங்குகின்ற வேற்படையையுடைய பாண்டியராசனது எண்ண மவ்வாறாகும்: அந்நாளில் சமணர்களது நிலைமை யாதென்றால், வஞ்சகத் தவவேடத்தால் மறைந்து தகாதகாரியங்களைச் செய்யும் அச்சமணர்கள் தாங்கள் கற்றிருக்கும் ஆபிசாரமந்திரத்தினால் சைவநெறியை வளர்க்கும்பொருட்டு எழுந்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருமடத்தில் சிவந்த அக்கினி பற்றும்படிச்செய்தார்கள்.—எ-று. (சுகஎ)

வேறு.

ஆதி மந்திர மஞ்செழுத் தோதுவார் நோக்கு
மாதி ரத்தினு மற்றைமந் திரவிதி வருமே
பூதி சாதனர் மடத்திற்றாம் புனைந்தசா தனைகள்
சாதி யாவகை கண்டமண் குண்டர்க டளர்ந்தார்.

(இ-ள்.) முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமானது திருமந்திரமாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை யோதுகின்ற சிவஞானிகள் பார்க்குந் திக்குகளிலும் மற்ற மந்திரங்களின் விதிகள் வந்துபலிக்குமோ! (பலியா.) விபூதிசாதனத்தை யுடைய அடியார்கள் எழுந்தருளியிருக்குந் திருமடத்தில் தாங்கள் செய்த மந்திரசாதனைகள் பலியாமையைக் கண்டு சமணராகிய கீழ்மக்கள் தளர்ச்சியடைந்தார்கள்.—எ-று.

'ஆதிமந்திர மஞ்செழுத்து' என்பதற்கு, எல்லாமந்திரங்கட்கு மூலமந்திரமாகிய ஸ்ரீபஞ்சாக்ஷரம் எனினுமாம். (சுகஅ)

தளர்ந்து மற்றவர் தாஞ்செய்த தீத்தொழில் சரியக்
கிளர்ந்த வச்சமுன் கெழுமிய கீழ்மையோர் கூடி
விளங்கு நீண்முடி வேந்தனீ தறியினம் மேன்மை
யுளங்கொ ளானமர் விருத்தியு மொழிக்குமென் றுணர்வார்.

(இ-ள்.) அந்தச் சமணர்கள் தாங்கள் செய்த கொடுந் தொழில்கள் பலியா தொழியவும் மனந்தளர்ந்து அச்சமிக்க இழிதொழில ராகிய அவர்கள் ஒருங்கு கூடி, விளங்குகின்ற நீண்டகிரீடத்தையுடைய பாண்டியராசன் இதனையறிந்தால் நமது மேன்மையை ஒருபொருளாக மதியான், நம்முடைய விருத்தியையும் ஒழித்துவிடுவான் என்று யோசிப்பாராயினர்.—எ-று.

'தீத்தொழில்' என்பதற்குத் தீப்பற்றச்செய்யுந் தொழில் எனினுமாம். விருத்தி - சமணர்கள் ஜீவிப்பதற்கு விட்டிருக்கும் நிலமுதலியவைகள்.

"இவ்வ கைப்பல வமணர்க ளெருட னீண்டி
மெய்வ கைத்திற மறிந்திடில் வேந்தனும் வெகுண்டு
சைவ னாகிநம் விருத்தியுந் தவிர்க்குமற் றினிநாஞ்
செய்வ தென்னென வஞ்சனை தெரிந்துசித் திரிப்பார்." — என்று முன் திருநாவுக்கரசுசுவாமிகள் புராணத்துங் கூறியருளினர். (௬௯௯)

மந்தி ரச்செயல் வாய்த்தில மற்றினிச் செய்யும்
புந்தி யாவதிங் கிதுவெனப் பொதிதழல் கொடுபுக்
கந்தண் மாதவர் திருமடப் புறத்தய லிருள்போல்
வந்து தந்தொழில் புரிந்தனர் வஞ்சனை மனத்தோர்.

(இ-ள்.) நாம் செய்யும் மந்திரத்தொழில்கள் பலியா தொழிந்தன; இனிச் செய்யவேண்டிய யோசனையாவது இதுவே யென்று கருதி, வஞ்சகமனத்தினையுடைய சமணர்கள் பொதிந்த நெருப்பைக் கையிற்கொண்டு சென்று, அழகிய தண்மையை யுடைய தவமுனிவர்கள் எழுந்தருளிய திருமடத்தின் பக்கத்தில் இருள் வருவதுபோலத் திரண்டுவந்து தமது கொடுந்தொழிலைச் செய்தார்கள்.

பொதிதழல்=பிற ரறியாது மறைத்துக்கொணர்ந்த தழல். அந்தண்மாதவமாவது—உயிர்கண்மேல் வைத்த அழகிய திருவருட் டன்மையோடும் வேதாகம முறைப்படிச்செய்துகைகூடிய தவம். (எ00)

திரும டப்புறச் சுற்றினிற் றீயபா தகத்தோர்
மருவு வித்தவத் தொழில்வெளிப் படுதலு மறுகிப்
பரிச னத்தவர் பதைப்பொடுஞ் சிதைத்தது நீக்கி
யருக ரித்திறம் புரிந்தமை தெளிந்துசென் றணைவார்.

(இ-ள்.) கொடிய பாபிகளாகிய சமணர்கள் திருமடத்தின் புறமாகிய சுற்றிடங்களில் தீப்பற்றச்செய்த அக் கொடுந்தொழில் வெளிப்படவும், பரிசனங்களாகிய அடியார்கள்மயங்கிப் பதைப்புடனே அதனைத்தணித்து அத்தீயை யொழித்து, சமணர்கள் இத்தீங்குசெய்தமையைத்தெளிந்து பிள்ளையாரிடத்துச் செல்வாராயினர்.—எ-று. (எ0க)

கழும லப்பதிக் கவுணியர் கற்பகக் கன்றைத்
தொழுது நின்றமண் குண்டர்செய் தீங்கினைச் சொன்ன
பொழுது மாதவர் துயிலுமித் திருமடப் புறம்பு
பழுது செய்வதே பாவிகா ளெனப்பரிந் தருளி.

(இ-ள்.) சீகாழிப்பதியில் அவதரித்த கவுணியகுலத்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரை வணங்கி நின்று அச் சமணராகிய கீழ்மக்கள் செய்த

மையைச் சொன்னபொழுது, மகத்தாகிய தவத்தினையுடைய அடியார்கள் நித் திரைசெய்யும் இத்திருமடத்தின் அயலில் பாவிகளே! நீங்கள் தீக்கொளுத்தலா கிய குற்றஞ்செய்தல் தகுமோவென்று இரங்கியருளி.—எ-று. (எ0௨)

இதுமுதல் இரண்டுபாடலுங் குளகம்.

என்பொ ருட்டவர் செய்ததீங் காயினு மிறையோ
னன்ப ருக்கெய்து மோவென்று பின்னையு மச்ச
முன்பு றப்பின்பு முனிவுற முத்தமிழ் விரகர்
மன்பு ரக்குமெய்ம் முறைவழு வெனமனங் கொண்டார்.

(இ-ள்.) அவர்கள் என்பொருட்டுச்செய்த தீங்காயினும் இது சிவனடியார் களுக்கு வருமோவென்று பின்னும் அச்சமானது முன்னே யுண்டாகப் பின்பு ...டு, திருஞானசம்பந்தப்பிள்ளையார் பாண்டியன் அரசாட்சிசெய்யுந் ...றமையின் வழுவினால் நேர்ந்ததென்று தமது திருவுள்ளத்திற் ...றார்.—எ-று.

...டியவர்களாகிய சமணர்கள் சிவனடியார்களுக்கு இதுபோல இன்னும் ...யாது தீங்கு விளைப்பார்களோ வென்று முன்னே அச்சமும், அவர்கள் செய்த தீமையைக் கருதிப் பின்னே கோபமுங்கொண்டனரென்பார் 'அச்ச முன்புறப் பின்பு முனிவுற' என்று கூறினர். முத்தமிழ்விரகர்—இயலிசை நாடகமென்னு முத்தமிழையு மறிந்தவர். அரசன் நீதியோடு அரசாட்சிசெய்யின் குடிகள் ஒரு சிறிதுந் தீங்குசெய்ய அஞ்சுவர், அவன் கொடுங்கோன்மையனா யிருத்தல்பற்றிக் குடிகளுங் கொடுமைசெய்கின்றன ரென்று கருதின ரென்பார் 'மன்புரக்கு மெய்ம்முறை வழுவெனமனங்கொண்டார்' என்று கூறினர். (எ0௩)

வெய்ய தீங்கிது வேந்தன்மேற் றெனும்விதி முறையாற்
செய்ய னேதிரு வாலவா யெனுந்திருப் பதிகஞ்
சைவர் வாழ்மடத் தமணர்க ளிட்டதீத் தழல்போய்ப்
பைய வேசென்று பாண்டியற் காகெனப் பணித்தார்.

(இ-ள்.) கொடிதாகிய இத் தீங்கானது அரசன்மேலது என்று கூறும் தருமசாஸ்திர முறைமையினால் "செய்யனேதிருவாலவாய்" என்னு முதலையு டைய திருப்பதிகத்தில் சைவர்களாகிய அடியார்கள்வாழும் திருமடத்தில் சமணர் களிட்ட தீத்தழல் போய் "பையவே சென்று பாண்டியர்க்காக" என்று பாடி யருளினர்.—எ-று. (எ0௪)

---

திருவாலவாய் - பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

செய்யனேதிருவாலவாய்மேவிய
வையனேயஞ்சலென்றருள்செய்யெனைப்
பொய்யராமமணர்கொளுவுஞ்சுடர்
பையவேசென்றுபாண்டியற்காகவே.

அப்பனாலவாயாதியருளினால்
வெப்பந்தென்னவன்மேலுறமேதினிக்

கொப்பஞானசம்பந்தனுரைபத்துஞ்
செப்பவல்லவர்தீதிலாச்செல்வரே.

திருச்சிற்றம்பலம்.

---

வேறு.

பாண்டிமா தேவியார் தமது பொற்பிற் பயிலுநெடு மங்கலநாண் பாது காத்து, மாண்டகையார் குலச்சிறையா ரன்பி னாலு மரசன்பா லபராத முறுத லாலு, மீண்டுசிவ நெறியடையும் விதியி னாலும் வெண்ணீறு வெப்பகலப் புகலி வேந்தர், தீண்டியிடப் பேறுடைய னாத லாலுந் தீப்பிணியைப் பையவே செல்க வென்றார்.

(இ-ள்.) பாண்டிமாதேவியாரது அழகோடு விளங்குகின்ற சிறந்த திருமங்கிலியநாணைப் பாதுகாக்கவேண்டினமையாலும், ஆண்தனமையையுடைய குலச்சிறைநாயனாரது அன்பினாலும், பாண்டியனிடத்தில் அபராதம் பொருந்துதலினாலும், மீளவும் அப்பாண்டியன் சைவநெறியை யடையும் ஊழ்முறைமை யுண்மையினாலும், அவன்வெப்புநோய் நீங்கும்படித் திருஞானசம்பந்தபிள்ளையார் தமது திருக்கரத்தால் திருவெண்ணீற்றையெடுத்து இடத்தக்க பேற்றையுடையவனாகலாலும் கொடியசுரநோயைப் "பையவேசென்று பாண்டியற்காக" என்று அருளிச்செய்தார்.—எ-று.

திருஞானசம்பந்தப்பிள்ளையார் "பையவே' என்னாது, "பாண்டியற்காகவே" என்றுமாத்திரங் கூறின், உடனே பாண்டிய னிறந்துவிடுவன். அவனிறப்பின், மங்கையர்க்கரசியாரது மங்கலநாணிற்கும், குலச்சிறைநாயனார்கொண்டிருக்கு மன்பிற்கும், அவன் சைவநெறியை யடையவேண்டு மூழிற்கும், தமது திருக்கரத்தால் விபூதி எடுத்து இடவேண்டிய முறைமைக்கும் பின்னம்வருமாகலின் மெல்லச்சென்று அவனைத் தீப்பிணிபற்றவேணடுமென்பது கருதி "பையவே சென்று பாண்டியற் காக" என்று கூறியருளினார். சமணர்கள் தீக்கொளுவுதற்கு உத்தரவளித்தவனாகலான், அவனிடத்துக்குற்றமுறுதலின "அரசன்பாலபராத முறுதலாலும்" என்று கூறினார். (எ0ரு)

வேறு.

திருந்தி சைப்பதி கத்தொடை திருவால வாயின்
மருந்தி னைச்சண்பை மன்னவர் புனைந்திட வருளால்
விரிந்த வெந்தழல் வெம்மைபோய்த் தென்னனை மேவிப்
பெருந்த மூற்பொதி வெதுப்பெனப் பெயர்பெற்றதன்றே.

(இ-ள்.) சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருந்திய இசையினையுடைய திருப்பதிகமாலையைத் திருவாலவாயில் வீற்றிருந்தருளும் அமிர்தம்போல்பவராகிய ஸ்ரீசுந்தரேசப்பெருமான்மேல் பாடியருள, அவ்வெம்பெருமான் திருவருளினால் பரந்து எரிகின்ற வெவ்விய அக்கினியின் வெப்பமானது சென்று [illegible] வெப்புநோயெ

செய்ய மேனியர் திருமக னாருறை மடத்தி
லையு றுள்ளத்த ராயமண் கையர்தா னணுகிக்
கையி னாலெரி யிடவுடன் படுமெல்லி காப்ப
வெய்ய வன்குண கடலிடை யெழுந்தனன் மீது.

(இ-ள்.) சிவந்த திருமேனியை யுடைய சிவபெருமான் திருக்குமாரராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளும் திருமடத்தில் சமணர்கள் வருந்திய மனமுடையவர்களாக யடைந்து தங்கள் கையினால் தீக்கொளுவுவிக்க உடன்பட்டிருந்த இராப்பொழுது ஒழியவும், சூரியன் கீழ்கடலினிடத்து மேலே உதயமாயினன்.—எ-று. (எ0எ)

இரவு பாதகர் செய்ததீங் கிரவிதன் மரபிற்
குரவ வோதியார் குலச்சிறை யாருடன் கேட்டுச்
சிரபு ரப்பிள்ளை யாரையித் தீயவர் நாட்டு
வரவ ழைத்தநா மாயவத் தேயெனமன மயங்கி.

(இ-ள்.) இராப்பொழுது பாதகராகிய சமணர்கள் செய்த தீங்கினைக் குலச்சிறைநாயனாரோடு சூரியகுலத்தி லவதரித்தவராகிய குராமலரையணிந்த கூந்தலையுடைய மங்கையர்க்கரசியார் கேள்விப்பட்டு, திருஞானசம்பந்தப்பிள்ளையாரைக் கொடியவர்களாகிய இச் சமணர்கள் வசிக்கும் பாண்டிநாட்டில் வரவழைத்த நாம் இனி இறந்து உயிர்விடுவதே யுறுதியென்று மனமயங்கி.—எ-று. (எ0அ)

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம்.

பெருகு மச்சமோ டாருயிர் பதைப்பவர் பின்பு
திரும டப்புற மருங்குதீ தின்மையிற் றெளிந்து
கருமு ருட்டமண் கையர்செய் தீங்கிது கடைக்கால்
வருவ தெப்படி யாமெனமனங்கொளும் பொழுது.

(இ-ள்.) மிக்க அச்சத்தோடு தமதுயிர்பதைபதைக்கு மவ்விருவரும் பின்பு திருமடத்தின்புறத்தில் ஒரு தீங்குமில்லாமையை யுணர்ந்து, கரிய முருட்டுடலையுடைய சமணராகிய கீழ்மக்கள் செய்த தீங்காகும்; இதுமுடிவில் எவ்வாறு விளையுமோவென்று மனதில் எண்ணியிருக்கும்பொழுது.—எ-று. (எ0கூ)

அரச னுக்குவெப் படுத்ததென் றருகுகஞ் சுகிக
ளுரைசெ யப்பதைத் தொருதனித் தேவியார் புகுத
விரைவு மச்சமு மிறைகொளக் குலச்சிறை யாரும்
வரைசெய் பொற்புய மன்னவன் மருங்குவந் தணைந்தார்.

(இ-ள்.) பாண்டியனுக்குச் சுரநோய் வந்ததென்று அவனருகிலுள்ள கஞ்சுகிகள் சொல்லவும் ஒப்பற்ற பாண்டிமாதேவியார் மனம்பதைத்து உள்ளேசெல்ல, மலைபோலும் அழகிய புயத்தையுடைய பாண்டியன்பக்கத்தில் குலச்சிறைநாயனாரும் விரைவும் அச்சமும் அதிகரிக்க வந்துசேர்ந்தார்.—எ-று.

கஞ்சுகிகள் = மெய்காப்பாளர். (எக0)

வேந்த னுக்குமெய் விதிர்ப்புற வெதுப்புறு வெம்மை
காந்து வெந்தழற் கனமென மெய்யெலாங் கவர்ந்து
போந்து மாளிகைப் புறத்துமுன் னோர்களும் புலர்ந்து
தீந்து போம்படி யெழுந்தது விழுந்துட றிரங்க.

(இ-ள்.) பாண்டியனுக்கு உடல் நடுங்கும்படி வருத்துகின்ற வெப்புநோயானது எரிகின்ற கொடிய தீத்தழிப்புப்போல உடல்முழுமையும்பரவி, மாளிகையின் புறத்துவந்து நின்றவர்களும் வாடித் தீயும்படி உடம்பு விழுந்து நிலைதவறி வருந்த எழுந்தது.—எ-று. (எகக)

உணர்வு மாவியு மொழிவதற் கொருபுடை யொதுங்க
வணைய லுற்றவ ரருகுதூ ரத்திடை யகலப
புணரி ளங்கத லிக்குருத் தொடுதளிர் புடையே
கொணரி னுஞ்சுருங் கொணடவை நுணடுக ளாக.

(இ-ள்.) பாண்டியனது உணர்வும் உயிரும் உடம்பினின்றுமொழியும் பொருட்டு ஒருபக்கத்தி லொதுங்கவும், அவனருகிலவந்தவர்கள் (சுரததின சுவாலைக்காற்றுமல்) தூரத்தில் நீஙகவும, இளமை பொருந்திய வாழைக்குருத்துகளையும் நீர்க்குளிரிமுதலிய தளிர்களையும பககத்தில கொண்டுவநதாலும் அவைகள் கருகி நுண்ணிய பொடிகளாகவும்.—எ-று. (எகஉ)

மருத்து நூலவர் தஙகள்பல கலைகளில் வகுத்த
திருத்த குநதொழில யாவையுஞ் செய்பவு மேனமே
லுருத்தெ ழுநதவெப புயிரையு முருக்குவ தாகக்
கருதெதா ழிந்துணா மறநதனன கெளரியா தலைவன.

(இ-ள்.) ஆயுள்வேதியாகள் தஙகட் குரிய பல சாஸ்திரஙகளிலும் வகுத்துக் கூறிய திருததமாகிய மணிமந்திராவுஷத முதலிய பரிகாரஙகள யாவுஞ்செயயவும அடஙகாமல அதிகரிததெழுநத வெப்புநோயான து அவனுயிரையும் அழிபபதாக மேமபட, அதனால பாண்டியராசன உணாவொழிநது உணவூட்டலையு மொழிநதான்.—எ-று. (எகந)

ஆன வன்பிணி நிகழ்வுழி யமணர்க ளெலலா
மீன வன்செயல கேட்டலும வெய்துயிரத் தழிநது
போன கங்குலுட புகுநததின விளைவுகொ லெனபாா
மான முஞ்தெரி யாவகை மனனனமாட் டணைநதாா.

(இ-ள்.) அவவாறாகிய பாண்டியன் சுரநோயினால் வருந்தும்பொழுது சமணர்களனைவரும பாண்டியனது செயலைக்கேட்கவும் பெருமூச்செறிநது மனமழிந்து, செனற இரவில நாம் செயத தீச்செயலாலுணடாகிய பபணிதுவோவெனறு சொல்பவராய தஙகள் மானமும் அறியாமல் பாண்டியனிடதது வந்தார்கள். ()

வேறு.

மாலபெருக்குஞ சமணகையா மருங்கு சூழ்ந்து வழுதிநிலை கண்டழிந்து வந்த நோயின, மூலநெறி யறியாமே தங்க டெய்வ மொழிநவின் மந் திரங்கொணடு முன்னும பின்னும, பீலிகொடு தைவருதற் கெடுத்த போது பிடித்தபீ லிகள்பிரமபி னோடுந் தீய்ந்து, மேலெரியும் பொரிசிதறி வீழக் கண்டு வெப்பினதி சயநோக்கி வெருவின் மிக்கார்.

(இ-ள்.) மயக்கத்தை விருத்திசெய்கின்ற சமணர்களாகிய கீழ்மக்கள் பாண்டியன் பக்கத்தில் சூழ்ந்து அவனது நோயின் நிலைமையைக் கண்டு வருந்தி நோய் வந்த காரணத்தையறியாமல், தங்கள் தெய்வமாகிய அருகக்கடவுளது நாமங்களைக்

கூறுதலாகிய மந்திரங்களைச் செபித்துத்தடவுதற் கெடுத்தபொழுது, பிடித்த பீலிகள் பிரம்பினோடுந் தீய்ந்து மேலே எரிந்ததனால் தீப்பொரிகள் சிதறி விழக்கண்டு வெப்புநோயின் அதிசயத்தைப் பார்த்து மிக்க அச்சமுற்றார்கள்.—எ-று.

பாண்டியனிடத் துண்டாகிய சுரநோயை நீக்கக்கருதிய சமணர்கள் அந்நோயுண்டாகிய காரணத்தையும் அதைத் தீர்க்கும் வகையையு முணர்ந்து செய்ய வேண்டும், அவ்வாறுசெய்யக்கருதாமல் மயிற்பீலிகொண்டு தடவித்தீர்க்கத்தொடங்கினராகலின் 'மால்பெருகுஞ்சமணகையர்' என்று கூறினர்; இதனை,

"நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்."—என்னுந் திருக்குறளானு முணர்க. ()

கருகியமா சுடையயாக்கைத் தீயோர் தங்கள் கைத்தாங்கு குண்டிகைநீர் தெளித்துக் காவா, யருகனே யருகனே யென்றென் றோதி யடல வழுதி மேற்றெளிக்க வந்நீர் பொங்கி, பெருகுமெரி தழற்சொரிந்த நெய்போ லாகிப் போத்தொரு தழல்தன்மேற் பெய்தாற்போல, வொருவருமிங் கிருமருங்கு மிராது போமென் றமணரைப்பார்த் துரைத்தரச னுணர்வு சோர்ந்தான்.

(இ-ள்.) கறுத்த அழுக்கடைந்திருக்கு முடம்பினையுடைய கொடிய சமணர்கள் தங்கள் கையில் தொங்குகின்ற கமண்டலநீரைத் தெளித்து, அருகக்கடவுளே! அருகக்கடவுளே! காக்கக்கடவாயென்று பலமுறை யோதி வலிமை பொருந்திய பாண்டியன்மேல் தெளிக்க, அந்நீரானது பொங்கிப் பற்றியெரிகின்ற நெருப்பில் சொரிந்த நெய்போலாகி, மீளவும் ஒரு நெருப்பை அச்சுரநோயின் மேல்சொரிந்ததுபோலிருக்கவும், பாண்டியன் (சமணர்களைப் பார்த்து) நீங்களொருவரும் இங்கு என்னிருபக்கங்களிலும் இராமல் போய்விடுங்களென்று கூறி அறிவு சோர்ந்திருந்தான்.—எ-று. (எகசு)

வேறு.

பாண்டிமா தேவி யாரும் பயமெய்தி யமைச்சர் பாரம்
பூண்டவர் தம்மை நோக்கிப் புகலியில் வந்து நம்மை
யாண்டுகொண் டவர்பாற் கங்கு லமணர்தாஞ் செய்த தீங்கு
மூண்டவா றிதுவ தாகி முடிந்ததோ வென்று கூற.

(இ-ள்.) பாண்டிமாதேவியாரும் அச்சமுற்று மந்திரித்தலைமையாகிய பாரத்தை மேற்கொண்ட குலச்சிறைநாயனாரைப் பார்த்து, சீகாழிப்பதியி லவதரித்து நம்மை யாட்கொண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் விஷயத்தில் இராப்பொழுது சமணர்கள்செய்த தீமையானது மூண்டு இத்தகைய சுரநோயாய் நேர்ந்ததோவென்று கூற.—எ-று. (எகஎ)

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம்.

கொற்றவ னமைச்ச னாரங் குலச்சிறை யாருந் தாழ்ந்து
மற்றிதன் கொடுமை யிந்த வஞ்சகர் மதில்கண் மூன்றுஞ்
செற்றவ ரன்பர் தம்பாற் செய்ததீங் கரசன் பாங்கு
முற்றிய திவர்க ளாக்கின் முதிர்வதே யாவ தென்றார்.

(இ-ள்.) பாண்டியன் மந்திரியாராகிய குலச்சிறைநாயனாரும் வணங்கி, இச்சுரநோயின் கொடுமையானது முப்புரங்களையு மழித்த சிவபெருமானது அடியார்

களிடத்து வஞ்சகர்களாகிய சமணர்கள் செய்த தீங்கின் விளைவாகும்; இதுஅரச னிடத்துச் சேர்ந்தது; இந்நோயை இவர்கள் தீர்க்கமுயன்றால் தணியாமல் மேலு மேலும் அதிகரிப்பதே யாகுமென்று கூறியருளினார்.—எ-று. (௭௧௮)

இருதிறத் தவரு மன்ன னெதிர்பணிந் திந்த வெப்பு
வருதிறம் புகலி வந்த வள்ளலார் மதுரை நண்ண
வருகர்கள் செய்த தீய வனுசித மதனால் வந்து
பெருகிய திதற்குத் தீர்வு பிள்ளையா ரருளே யென்று

(இ-ள்.) மங்கையர்க்கரசியார் குலச்சிறைநாயனாரென்னு மிருவரும் பாண்டியனெதிரே வணங்கி இந்தச் சுரநோய் வருதற்குக் காரணம் சீகாழியி லவதரித்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் மதுராபுரிக்கு எழுந்தருள, (அது பொறாமல்) சமணர்கள் செய்த கொடிய அனுசிதத்தினால் இந்நோய்வந்து விருத்தியடைந்தது; இது நீங்குதற்குப் பரிகாரம் அந்த திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவருளே யாகுமென்று கூறி.—எ-று. (௭௧௯)

இதுமுதல் விரண்டுபாட்டுங் குளகம்

காயமு மனமு மாசு கழுவுதல் செய்யார் செய்யு
மாயமு மிந்த நோயை வளர்ப்பதே வளர்வெண் டிங்கண்
மேயவே ணியர்பா லான ஞானம்பெற் றவர்வி ரும்பி நோக்கின்
றீயவிப் பிணியே யன்றிப் பிறவியுந் தீரு மென்றார்.

(இ-ள்.) தங்கள் உடம்பிலும் மனத்திலுமுள்ள அழுக்கைக் கழுவாத சமணர்கள் செய்கின்ற மாயமாகிய உபசாரங்களும் இந்தச் சுரநோயை விருத்தி செய்தற்கே ஏதுவாகும்; கலைகள் வளர்கின்ற வெள்ளிய சந்திரனையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானிடத்து உண்மைஞானத்தைப் பெற்றருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவுள்ளம் விரும்பி நோக்கினால், கொடிய இச்சுரநோயேயன்றிப் பிறவிநோயுந் தீருமென்று மொழிந்தார்கள்.—எ-று.

காயமாசு அழுக்கும், மனமாசு வஞ்சகம் பொறாமை முதலிய தீக்குணங்களுமாம்; காயத்திலுள்ள மாசை நீராடுதலினாலும், மனத்திலுள்ள மாசைச் சிவசிந்தனை முதலியவற்றாலும் ஒழிக்கவேண்டும்; இவர்கள் அவ்வாறு செய்யாமையின், 'காயமு மனமு மாசு கழுவுதல் செய்யார்' என்றும், நோய் தீர்த்தற்குரிய பரிகாரஞ் செய்யத்தெரியாது மயங்கி மயிற்பீலிகொண்டு மந்திரித்து மதனாற் சிறிதும் பயன்பெறாமையின் 'செய்யுமாயமும்' என்றும், அம்மந்திரமுதலியவற்றால் சிறிதுந் தணிவுபெறாமல் மேலுமேலும் பெருகுதலின் 'இந்தநோயை வளர்ப்பதே' என்றும், அதனைத் தீர்த்தற்குரியவர் மெய்ஞ்ஞானப் பாலுண்டருளிய பிள்ளையாரே யென்பார் 'வளர்வெண் டிங்கள் மேய வேணியர்பா லான ஞானம்பெற்றவர்' என்றும், அவர் வேறொரு பரிகாரமுஞ் செய்யக் கருதாமலே திருவுள்ளங்கொண்டு நோக்குதலாகிய சட்சுதீக்ஷை செய்தமாத்திரத்தானே இச்சுரநோயேயன்றித் தொன்றுதொட்டே தொடர்ந்துவரும் பிறவிநோயும் அறவே யொழிந்துவிடுமென்பார் 'விரும்பி நோக்கத் தீயவிப் பிணியேயன்றிப் பிறவியுந் தீரு மென்றார்' என்றுங் கூறினார். (௭௨௦)

மீனவன் செவியி னூடு மெய்யுணர் வளிப்போர் கூற
ஞானசம் பந்த ரென்னு நாமமந் திரமுஞ் செல்ல

வானபோ தயர்வு தன்னை யகன்றிட வமண ராகு
மானமில் லவரைப் பார்த்து மாற்றமொன் றுரைக்க லுற்றான்.

(இ-ள்.) பாண்டியன் செவியில் மெய்யுணர்ச்சியை யளிக்கு மவவிருவரும் இவ்வாறு கூறுங்கால் திருஞானசம்பந்தரென்னுந் திருநாமமாகிய மந்திரமும் அச் சொற்களோடு கலந்து தன் செவியில் செல்ல, அப்பொழுது நோய்ச் சோர்வினின்றுஞ் சிறிது நீங்க, சமணர்களாகிய மானமில்லாத கீழ்மக்களைப்பார்த்து ஒரு வார்த்தை சொல்லத்தொடங்கினன் —எ-று. (எஉக)

மன்னவ னவரை நோக்கி மற்றிவர் செய்கையெல்லா
மின்னவா றெய்து நோய்க்கே யேதுவா யினவென் றெண்ணி
மன்னிய சைவ நீதி மாமறைச் சிறுவர் வந்தா
லன்னவ ரருளா லிந்நோ யகலுமே லறிவே னென்றான்.

(இ-ள்.) பாண்டியராசன் இச் சமணர்கள் செய்யும் செய்கைகளெல்லாம் யான் இவ்வாறு அடைந்திருக்கின்ற வெப்புநோய்க்கு ஏதுவா யிருக்கின்றன வென்று நினைத்து அவவிருவரையும்பார்த்து, நிலைபெற்ற சைவநீதியையுடைய சிறந்த பிராமணச் சிறுவராகிய திருஞானசம்பந்தர் இங்குவந்தால் அவரது திருவருளால் இச்சுரநோய் நீங்குமாயின் நான் அறிவேனென்று கூறினன்.—எ-று. (எஉஉ)

என்றுமுன் கூறிப் பின்னும் யானுற்ற பிணியைத் தீர்த்து
வென்றவர் பக்கஞ் சேர்வன் விரகுண்டே லழையு மென்ன
வன்றவ ருவகை பொங்கி யார்வத்தா லணையை நூக்கிச்
சென்றநீர் வெள்ளம் போலுங் காதல்வெள் ளத்திற் செல்வார்.

(இ-ள்.) இவ்வாறு முன்னே கூறிப் பின்னும் யானடைந்திருக்கின்ற இச் சுரநோயைத் தீர்த்துச் செயித்தவர்கள் பக்ஷஞ்சேர்வேன், (ஆதலின் இந்நோய் நீக்கும்) உபாயம் அவரிடத்துண்டாயின் அழையுமென்று கூற, அவ்விருவருங் களிகூர்ந்து ஆரவாரத்தோடு கரையை யுடைத்துச்சென்ற நீர்வெள்ளம்போலும் பெருவிருப்பாகிய வெள்ளத்திற் செல்வாராயினர்.—எ-று. (எஉங)

பாயுடைப் பாத கத்தோர் திருமடப் பாங்கு செய்த
தீவினைத் தொழிலை நோக்கி யுள்ளழி திருவுள் ளத்தான்
மேயவத் துயர நீங்க விருப்புறு விரைவி னோடு
நாயகப் பிள்ளை யார்த நற்பதம் பணிவா ராகி.

(இ-ள்.) பாயாகிய உடையையுடுத்த பாதகராகிய சமணர்கள் திருமடத்தின் பக்கத்தில் செய்த தீவினைச்செயலைப் பார்த்து வருந்திய திருவுள்ளத்தோடு அத்துன்ப நீங்கும்படி விருப்ப மிக்க விரைவோடும் பரமாசாரிய முதல்வராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது நல்ல திருவடிகளை வணங்குபவர்களாய்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (எஉச)

மன்னவ னிடும்பை தீர மற்றவன் பணிமேற் கொண்டே
யன்னமென் னடையி னரு மணிமணிச் சிவிகை யேறி
மின்னிடை மடவார் சூழ வேற்படை யமைச்ச ருரு
முன்னணைந் தேகச் சைவ முதல்வனார் மடத்தைச் சார்ந்தார்.

(இ-ள்.) பாண்டியன் துன்பத்தினின்று நீங்கும்படி அவன் கட்டளையை மேற்கொண்டு, அன்னம்போன்ற மெல்லிய நடையினையுடைய மங்கையர்க்கரசியாரும் அழகிய இரத்தினச் சிவிகையிலேறி மின்னற்கொடிபோலும் இடையினையுடைய பாங்கியர்கள் சூழ்ந்துவர, வேலாயுதத்தை யேந்திய குலச்சிறை நாயனாரும் (குதிரையி லேறிக்கொண்டு) முன்னே செல்லச் சென்று, சைவசமயத் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருமடத்தை யடைந்தருளினார்.—எ-று.

திருமடஞ் சாரச் சென்று சேயரிக் கண்ணி னார்முன்
வருபரி யிழிந்து நின்ற வமைச்சனார் வந்த பான்மை
சிரபுரப் பிள்ளை யார்க்கு விண்ணப்பஞ் செய்வீ ரென்னப்
பரிசனத் தவரும் புக்குப் பதமறிந் துணர்த்து கின்றார்.

(இ-ள்.) பிள்ளையாரது திருமடத்தைச சமீபிக்கச்சென்றுசெவ்வரிபரந்த கண்களையுடைய மங்கையர்க் கரசியாருக்கு முன்னே ஏறிவந்த குதிரையினின்று மிறங்கிநின்ற குலச்சிறைநாயனார் வந்ததன்மையைத் திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு விண்ணப்பஞ் செய்வீர்களென்று கூற, பரிசனங்கள் உள்ளேசென்று சமயமறிந்து சொல்லுகின்றார்கள்.—எ-று. (எஉசு)

பாண்டிமா தேவி யாரும் பரிவுடை யமைச்ச னாரும்
மீண்டுவந் தணைந்தா ரென்று விண்ணப்பஞ் செய்யச் சண்பை
யாண்டகை யாரு மீண்ட வழையுமென் றருளிச் செய்ய
மீண்டுபோந் தழைக்கப் புக்கார் விரைவுறு விருப்பின் மிக்கார்.

(இ-ள்.) மங்கையர்க் கரசியாரும் அன்பினையுடைய குலச்சிறை நாயனாரும் இங்கு வந்திருக்கின்றார்களென்று விண்ணப்பஞ்செய்தபொழுது சீகாழித்தலைவராகிய பிள்ளையாரும் அவர்களை இங்கே யழையுங்களென்று அருளிச்செய்ய அவர்கள் மீண்டுவந்தழைக்க, விரைந்துசெல்லும் விருப்பிற்சிறந்த அவவிருவரும் உள்ளேபுகுந்தார்கள்.—எ-று. (எஉஎ)

வேறு.

ஞானத்தின் றிருவுருவை நான்மறையின் றனித்துணையை
வானத்தின் மிசையன்றி மண்ணில்வளர் மதிக்கொழுந்தைத்
தேனக்க மலர்க்கொன்றைச் செஞ்சடையார் சீர்தொடுக்குங்
கானத்தி னெழுபிறப்பைக் கண்களிப்பக் கண்டார்கள்.

(இ-ள்.) மெய்ஞ்ஞானமே திருவுருவமாக வுள்ளவரை, நான்கு வேதங்களுக்கும் ஒப்பற்ற துணைவராயுள்ளவரை, விண்ணுலகத்தன்றி மண்ணுலகத்தில் வளர்கின்ற இளஞ்சந்திரன்போல்பவரை, தேன்விளங்குகின்ற கொன்றைமலர்மாலையைத்தரித்த சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமானது சிறந்த புகழைப்பாடுகின்ற ஏழிசையின் உற்பத்திஸ்தானமாயுள்ளவரைத் தங்கள்கண்கள்களிகூரும் படித் தரிசித்தார்கள்.—எ-று

இவர் மெய்ஞ்ஞானசொரூபியாகிய குமாரக்கடவுளது அவதாரமாயுள்ளவரோ வென்பார் "ஞானத்தின் றிருவுருவை' என்றும், நான்குவேதங்களிலும் முடிந்தபொருளாயுள்ளவ ரென்பார் 'நான்மறையின் றனித்துணையை' என்றும், மதிக்கொழுந்து இளமையையும் குளிர்ச்சியையும் ஒளியையு முறுவதுபோல, இவரும் இளம்பருவத்தையும், உயிர்கண்மேற் றண்ணளியையும், சைவநெறி விளங்கச்

செய்தலையும் பெற்றுள்ளவ ரென்பார் 'மண்ணில்வளர் மதிக்கொழுந்தை' என்றும், சப்தசுரங்களுந் தோன்றுதற்கு இத்திருவுருவமே முதற்காரணமன்றி வேறின்றென்பார் 'கானத்தி னெழுபிறப்பை' என்றுங் கூறினர்.

"மறைவளர் திருவே வைதிக நிலையே வளர்ஞானப்
பொறையணி முகிலே புகலியர் புகலே பொருபொன்னித்
துறைபெறு மணியே சுருதியி னொளியே வெளியேவந்
திறையவ னுமையா ளுடனரு டரவெய் தினையென்பார்."—என்று முன்னங் கூறியுள்ளமையானு முணர்க. (௭௨௮)

கண்டபொழு தமண்கொடியோர் செய்தகடுந் தொழினினைந்தே
மண்டியகண் ணருவிநீர் பாயமலர்க் கைகுவித்துப்
புண்டரிகச் சேவடிக்கீழ்ப் பொருந்தநில முறவீழ்ந்தார்
கொண்ட குறிப் போடுநெடி துயிர்த்தழிந்த கொள்கையராய்.

(இ-ள்.) பிள்ளையாரைத் தரிசித்தபொழுது சமணர்களாகிய கொடியவர்கள் செய்த தீத்தொழிலை நினைத்துத் தங்கள் மனதிற்கொண்ட குறிப்போடு பெருமூச்செறிந்து மனந்தளர்ந்த கொள்கையை யுடையவர்களாய், நெருங்கிய கண்களினின்றுங் கண்ணீரானது அருவிபோலப் பாயத் திருக்கரங்களைக் குவித்துத் தாமரை மலர்போன்ற சிவந்த திருவடிகளில் சிரசுபொருந்தப் பூமியில் விழுந்துவணங்கினார்கள்.—எ-று.

கொண்ட குறிப்பாவது :—பாண்டியனுக்குண்டாகிய சுரநோயை யொழித்துத் திருநீறு தரிப்பித்துச் சமணரையோட்டிச் சைவநெறியைப் பரவச்செய்ய வேண்டுமென்று குறித்த கொள்கை. (௭௨௯)

உரைகுழறி மெய்நடுங்கி யொன்றுமறிந் திலராகித்
தரையின்மிசைப் புரண்டயர்ந்து சரணகம லமபற்றிக்
கரையில்கவ லைக்கடற்கோர் கரைபற்றி னார்போன்று
விரவுறுமெய் யன்பினால் விடாதொழிவார் தமைக்கண்டு,

(இ-ள்.) உரைகுழறி உடல்நடுங்கித் தம்மை மறந்தவர்களாய்ப் பூமியின்மேல் புரண்டு சோர்ந்து பிள்ளையாரது திருவடித் தாமரைகளைப் பிடித்து எல்லையில்லாத கவலையென்னுங் கடலுக்கு ஓர் கரையைக்கண்டு பிடித்தவரை யொத்து, நீங்காத மெய்யன்பினால் (அத்திருவடிகளை) விடாதுபற்றிக் கிடப்பவர்களைப் பார்த்தருளி.—எ-று.

இதுமுதல் நான்குபாடலுங் குளகம். (௭௩௦)

அருமறைவாழ் பூம்புகலி யண்ணலா ரடிபூண்ட
விருவரையுந் திருக்கையா லெடுத்தருளித் தேற்றிடவுந்
தெருமந்து தெளியாதார் தமைநோக்கிச் சிறப்பருளித்
திருவுடையீ ருங்கள்பாற் றீங்குளதோ வெனவினவ.

(இ-ள்.) அரிய வேதங்கள் நிலைபெற்று விளங்கும் அழகிய சீகாழிப்பதியில் அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது திருவடிகளைப்பற்றிய அவ்விருவரையுந் திருக்கரத்தினாலெடுத்துத் தேற்றவும் மயங்கித் தெளியாத அவர்க

ளைப் பார்த்துச் சிறந்த திருவருள்செய்து, அருஞ்செல்வத்தை யுடையவர்களே உங்களிடத்தில் யாதாயினும் தீங்கு நேர்ந்ததோவென்று வினவியருள.—எ-று.

வெஞ்சமணர் முன்செய்த வஞ்சனைக்கு மிகவழிந்தே
யஞ்சினோந் திருமேனிக் கடாதென்றே யதுதீர்ந்தோம்
வஞ்சகர்மற் றவர்செய்த தீத்தொழில்போய் மன்னவன்பா
லெஞ்சலிலாக் கொடுவெதுப்பா யெழாநின்ற தெனத்தொழுது.

(இ-ள்.) கொடிய சமணர்கள் முன்னே செய்த வஞ்சனைக்கு மிக அஞ்சி வருந்தினோம், பின் அத்தீங்கு தேவரீரது திருமேனியைப்பொருந்தாது என்று அவ்வருத்தத்தினின்று நீங்கினோம்; வஞ்சகராகிய அச்சமணர்கள்செய்த தீத்தொழிலானது பாண்டியனிடத்துச்சென்று குறைவில்லாத கொடிய சுரநோயாகியெழுந்ததென்று வணங்கி.—எ-று. (எஙஉ)

வெய்யதொழி லமண்குண்டர் விளைக்கவரும் வெதுப்பவர்தாஞ்
செய்யுமதி மாயைகளாற் றீராமைத் தீப்பிணியான்
மையலுறு மன்னவன்முன் மற்றவரை வென்றருளி
லுய்யுமெம துயிருமவ னுயிருமென வுரைத்தார்கள்.

(இ-ள்.) கொடுந்தொழிலையுடைய சமணர்களாகிய கீழ்மக்கள் செய்த தீங்கினால் அரசனுக்கு வந்த சுரநோயானது அவர்கள் செய்யும் மிக்க மாயாசாலங்களினால் நீங்காமையின், அச்சுரநோயினால் மயங்கிக்கிடக்கும் பாண்டியராசனுக்கு முன்னே அவர்களை வென்றருளினால் எங்களுயிரும் அப்பாண்டியனுயிரும் உய்யுமென்று விண்ணப்பஞ்செய்தார்கள்.—எ-று.

"செய்யுமதி யாண்மைகளால்" என்றும் பாடம். (எஙங)

வேறு.

என்றவ ருரைத்த போதி லெழில்கொள்பூம் புகலி வேந்த
ரொன்றுநீ ரஞ்ச வேண்டா வுணர்விலா வமணர் தம்மை
யின்றுநீ ருவகை யெய்த யாவருங் காண வாதில்
வென்றுமீ னவனை வெண்ணீ றணிவிப்பன் விதியா லென்றார்.

(இ-ள்.) இவ்வாறு அவ்விருவரும் விண்ணப்பஞ்செய்தபொழுது அழகிய சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் நீங்கள் சிறிதும் அஞ்சவேண்டாம்; மெய்யுணர்ச்சியில்லாத சமணர்களை இன்றைக்கு நீங்கள் மகிழ்ச்சியடையும்படி சமஸ்த ஜனங்களுங் காண வாதில் வென்று பாண்டியனை வேதவிதிப்படியே திருவெண்ணீறு அணிவிப்போமென்று கூறியருளினார்.—எ-று. (எஙச)

வேறு.

மொழிந்தருள வதுகேட்டு முன்னிறைஞ்சி முகமலர்வா
ரழுந்துமிடர்க் கடலிடைநின் றடியோமை யெடுத்தருளச்
செழுந்தரளச் சிவிகையின்மேற் றென்னாடு செய்தவத்தா
லெழுந்தருளப் பேறுடையோ மென்பெறோ மெனத்தொழுலும்.

(இ-ள்.) இவ்வாறு பிள்ளையா ரருளிச்செய்ய அதனைக்கேட்டு முன்னின்று வணங்கி முகமலர்ச்சியுடையவராய் அழுந்தியதுன்பக்கடலினின்றும் அடியோங்களை யெடுத்தடிமைகொள்ளும்பொருட்டுச் செம்மைபொருந்திய முத்துச்சிவி

கையின்மேல் பாண்டிநாடுசெய்த தவங் காரணமாகத் தேவரீர் எழுந்தருளத்தக்க பேற்றையுடையோமாயினேம்; இனி யாதுபேற்றைப் பெறுேமென்று வணங்கவும்.—எ-று. (௭௩௫)

வேறு.

ஆவது மழிவு மெல்லா மவர்செய லமணர் ராகும்
பாவகா ரிகளை நோக்கும் பழுதுட னீங்கி வெலலச்
சேவுயர் கொடியி ஞாதந் திருவுள்ள மறிவே னென்று
பூவலர் பொழில்சூழ் சண்பைப் புரவலர் போது கின்றார்.

(இ-ள்) தோன்றுவதும் அழிவதுமாகிய அனைத்துஞ் சிவபெருமானது செயலேயாகும், ஆகையால் சமணர்களாகிய பாவிகளைப் பார்த்து வாதுசெய்தலாகிய குற்றம் விரைந்து நீங்கி அவர்களை வெல்லும்பொருட்டு, இடபத்தைக் கொடியாகவுயர்த்திய ஸ்ரீசொக்கலிங்கப்பெருமானது திருவுள்ளக்குறிப்பை யானறிந்து வருவேனென்று மலர்கள் அலர்ந்த சோலைசூழ்ந்த சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளுவாராயினர்.—எ-று. (௭௩௬)

வையக முய்ய வந்த வள்ளலார் மடத்தி னின்று
மெய்யணி நீற்றுத் தொண்டர் வெள்ளமுந் தாமும் போந்து
கையிணை தலையின் மீது குவியக்கண் மலர்ச்சி காட்டச்
செய்யவார் சடையார் மன்னுந் திருவால வாயுட் புக்கார்.

(இ-ள்.) உலகத்தார் ஈடேறும்பொருட்டு அவதரித்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது திருமடத்தினின்றும் திருவெண்ணீறணிந்த திருமேனியையுடைய அடியார் திருக்கூட்டங்களுந் தாமுமாகச்சென்று இரண்டு திருக்கரங்களுஞ் சிரசின்மேற் குவியவும் கண்கள் மலர்ந்துகாட்டவும், சிவந்து நீண்ட சடைமுடியையுடைய ஸ்ரீசுந்தரேசர் வீற்றிருந்தருளும் திருவாலவாயென்னுந் திருக்கோயிலுள் புகுந்தருளினர்.—எ-று. (௭௩௭)

நோக்கிட விதியி லாரை நோக்கியான் வாது செய்யத்
தீக்கனன் மேனி யானே திருவுள மேயென் றெணணில்
பாக்கியப் பயனு யுள்ள பாலரு வாயர் மெய்ம்மை
நோக்கிவண் டமிழ்செய் மாலைப் பதிகந்தா னுவல லுற்றார்.

(இ-ள்.) பார்ப்பதற்கு விதியில்லாத சமணர்களைப்பார்த்து அடியேன் வாதுசெய்யும்பொருட்டு நெருப்பைப்போலும் ஒளிவீசுகின்ற திருமேனியையுடைய பெருமானே! தேவரீருக்குத் திருவுள்ளமோ வென்று வினவி, அளவற்ற செல்வப்பயனுயுள்ள திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவருளி னுண்மையைச் சிந்தித்து வளவிய தமிழ்த்திருப்பதிகமாலையை அருளிச்செய்யத்தொடங்கினர்.—எ-று.

"தீயாரைக் காண்பதுவுந் தீதே" என்று கூறும் நீதிவாக்கியப்படிப் புறச்சமயப் பாவிகளாகிய சமணரைப் பார்த்து விவகரித்தலுந் தீமையேயென்பார், 'நோக்கிட விதிஇலாரை' என்று கூறினர். (௭௩௮)

கானிடை யாடு வாரைக் காட்டுமா வுரிமுன் பாடித்
தேனலர் கொன்றை யார்தந் திருவுள நோக்கிப் பின்னு
மூனமில் வேத வேள்வி யென்றெடுத் தரையின் மாலை
மானமி லமணர் தம்மை வாதில்வென் றழிக்கப் பாடி.

(இ-ள்.) மகாமசானத்தில் நடிக்கும் சிவபெருமானை "காட்மோவுரி" என்று முதலையுடைய திருப்பதிகத்தை முன்னே பாடியருளி, தேன் அலர்ந்த கொன்றைமலர்மாலையைத் தரித்த அவ்வெம்பெருமானது திருவுள்ளக்குறிப்பை யுணர்ந்து பின்னுங் குற்றமில்லாத "வேதவேள்வி" என்று முதலில் தொடங்கித் திருப்பதிகமாலையை மானமில்லாத சமணர்களை வாதில் வென்று அழிக்கப்பாடியருளி.

இதுமுத விரண்டுபாடலுங் குளகம். (எஙகூ)

ஆலமே யமுத மாக வுண்டுவா னவர்க்க ளித்துக்
காலனை மார்க்கண் டற்காக் காய்ந்தனை யடியேற் கின்று
ஞாலநின் புகழே யாக வேண்டுநான் மறைக ளேத்துஞ்
சீலமே யால வாயிற் சிவபெரு மானே யென்றார்.

(இ-ள்.) (திருப்பாற்கடலிற் றோன்றிய) ஆலாகலவிஷத்தை யமுதாகவுண்டு (அவ்விஷத்தைக்கண்டஞ்சிய) தேவர்களுக்கு அமுதத்தைக் கொடுத்தருளி, மார்க்கண்டேயர் பொருட்டு இயமனையுதைத்தருளினீர் ; இன்று அடியேனுக்கு இவ்வுலகம் நின் புகழேயாகப் (புறச்சமய நீங்கி விளஙக) வேண்டும், நான்கு வேதங்களுந் துதிக்கும் சிறந்த குணங்களை யடையவரோ ! திருவாலவாயி லெழுந்தருளிய சிவபெருமானே ! என்று கூறியருளினார்.—எ-று.

விடவேகத்திற் கஞ்சி யபயமிட்டடைந்த தேவர்களைக் காத்தற்பொருட்டு அவ்விடத்தையுண்டும், இயமனுக் கஞ்சிச் சரணமடைந்த மார்க்கண்டேயர்பொருட்டு அவ்வியமனை யுதைத்தும காத்தருளினமைபோல, அடியேன் இக்கொடிய சமணர்களை வென்று சைவநெறியைப் பரவச்செய்தற்குத் திருவருள் புரியவேண்டுமென்பார், 'ஆலமேயமுதமாக * * ஞாலநின்புகழேயாக வேண்டும்' என்று கூறினார். (எசo)

---

திருவாலவாய் - பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

காட்டுமாவதுரித்துரிபோர்த்துட
லோட்டமூன்றுடையாயுரைசெய்வனுன்
வேட்டுவேள்விசெய்பாவமண்கையரை
யோட்டிவாதுசெயத்திருவுள்ளமே.

செந்தெனமுரலுந்திருவாலவாய்
மைந்தனேயென்றுவல்லமணைசறச்
சந்தமார்தமிழ்கேட்டமெய்ஞ்ஞானசம்
பந்தன்சொற்பகரும்பழிநீங்கவே.

திருச்சிற்றம்பலம்.

---

திருவாலவாய் - நாலடிமேல்வைப்பு.

திருச்சிற்றம்பலம்.

வேதவேள்வியைநிந்தனைசெய்துழ
லாதமில்லியமணொடுதேரரை

வாதில்வென்றழிக்கத்திருவுள்ளமே
பாதிமாதுடனாயபரமனே,
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்
னாலவாயிலுறையுமெம்மாதியே.

கூடலாலவாய்க்கோனைவிடைகொண்டு
வாடன்மேனியமணரைவாட்டிட
மாடக்காழிச்சம்பந்தன்மதித்தவிப்
பாடல்வல்லவர்பாக்கியவாளரே.

திருச்சிற்றம்பலம்.

---

நாதர்தம் மருண்முன் பெற்று நாடிய மகிழ்ச்சி பொங்கப்
போதுவார் பணிந்து போற்றி விடைகொண்டு புனித நீற்றின்
மேதகு கோலத் தோடும் விருப்புறு தொண்டர் சூழ
மூதெயிற் கபாட நீடு முதற்றிரு வாயில் சார்ந்தார்.

(இ-ள்.) ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமானது திருவருளை முன்னே பெற்று, விரும்புகின்ற மகிழ்ச்சியதிகரிக்கப் புறத்திற் செல்லும் பிள்ளையார் வணங்கித் துதித்து விடைபெற்றுப் பரிசுத்தம்பொருந்திய திருவெண்ணீறணிந்த சிறந்த திருக்கோலத்தோடும் விருப்பத்தையுடைய அடியார் திருக்கூட்டங்கள் தம்மைச் சூழ்ந்துவர, பழமையாகிய மதிலினிடத்திற் கதவோடுகூடிய முதற்றிருவாயிலையடைந்தருளினார்.—எ-று.

தன்னை யணியும் ஆன்மாக்களினது மலமாயாகன்மங்களைப் போக்குதலின் 'புனிதநீறு' என்று கூறினார். கோலம்=திருவுருவம்; அழகு எனினுமாம்.

அம்மலர்க் குழலி னார்க்கு மமைச்சர்க்கு மருள வேண்டிச்
செம்மணிப் பலகை முத்தின் சிவிகைமேற் கொண்ட போதி
லெம்மருங் கினிலுந் தொண்ட ரெடுத்தவார்ப் பெல்லையின்றி
மும்மைநீ டுலக மெல்லா முழுது டனிறைந்த தன்றே.

(இ-ள்.) அழகிய மலரையணிந்த கூந்தலையுடைய மங்கையர்க்கரசியாருக்குங் குலச்சிறைநாயனாருக்குந் திருவருள் செய்யக் கருதிச் சிவந்த மாணிக்கங்களழுத்திய பலகையையுடைய முத்துச்சிவிகையின்மேலெழுந்தருளியபொழுது எந்தப்பக்கங்களிலுஞ் சூழ்ந்துநிற்கும் அடியார்கள் அரகரவென்றெடுத்த பேரோசையானது அளவுகடந்து பெரியமூன்றுலகங்களெங்கும் உடனே சென்று நிறைந்தது.—எ-று. (எசஉ)

பல்லிய நாதம் பொங்கப் படர்திரு நீற்றின் சோதி
நல்லொளி வட்ட மாகி நண்ணிமேல் வருவ தென்ன
வில்வளர் தரளக் கோவை வெண்குடை நிழற்ற வெவ்வே
றெல்லையின் முத்தின் காளந் தாரைசங் கெங்கு மோத.

(இ-ள்.) பலவாத்தியங்களின் ஓசைகள் அதிகரித் தொலிக்கவும், பரவிய திருவெண்ணீற்றினொளியானது நல்ல ஒளிவட்டமாய் மேல் கவிந்துவருவதுபோல

ஒளிவீசுகின்ற முத்துக்கோவைகளாலாகிய வெண்குடையானது நிழலைச்செய்ய வும், வெவ்வேருகிய அளவில்லாத முத்துக்காளமும், தாரையும் சங்கவாத்தியமும் எங்கும் ஊதவும்.—எ-று. (எசுங)

கண்ணினுக் கணியா யுள்ளா ரெழுச்சியிற் காட்சி பெற்ருர்
நண்ணிய சமயம் வேறு நம்பின ரெனினு முன்பு
பண்ணி தவங்க ளென்கொல் பஞ்சவன் றஞ்ச மேவிப்
புண்ணிய மூர்த்தி வந்து மதுரையிற் புகுத வென்ருர்.

(இ-ள்) கண்ணுக்கு அழகாகவிளங்குந் திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளுதலினுல் 'தரிசிக்கத்தக்க பேற்றைப்பெற்ற அந் நகரத்திலுள்ளவர்கள், பொருந்திய வேறுசமயத்தை யடைந்தவர்களாயினும் அவர்கள் பாண்டியன் முற் சனனத்திற்செய்த' தவங்கள் என்னவோ அவனுயிர்க்கு ஒருபற்றுக்கோடாகிப் புண்ணியவடிவினராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளிவந்து மதுரை யிற் பிரவேசிக்க என்று சொன்னுர்கள்.—எ-று. (எசுச)

தென்னவன் றேவி யாருந் திருமணிச் சிவிகை மீது
பின்வர வமைச்சர் முன்பு பெருந்தொண்டர் குழாத்துச் செல்லப்
பொன்னணி மாட வீதி யூடெழுந் தருளிப் புக்கார்
கன்னிநா டுடையான் கோயில் காழிநா டுடைய பிள்ளை.

(இ-ள்.) பாண்டிமாதேவியாரும் அழகிய இரத்தினச் சிவிகையின்மேல் பின்னே வரவும், மிகுந்த அடியார் திருக்கூட்டத்தோடும் குலச்சிறைநாயனுர் முன்னே செல்லவும் சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் பொன் மயமாகிய அழகிய மாடவீதியினுள்ளே சென்றருளிப் பாண்டியராசனது மாளி கையினுள் ளெழுந்தருளினுர்.—எ-று.

கன்னிநாடு என்பது, பாண்டிநாட்டுக் கொருபெயர். (எசுரு)

கொற்றவன் றன்பான் முன்பு குலச்சிறை யார்வந் தெய்திப்
பொற்றட மதில்சூழ் சண்பைப் புரவலர் வரவு கூற
முற்றுயர் சிறிது நீங்கி முழுமணி யணிப்பொற் பீட
மற்றவன் முடியின் பக்கத் திடுகென வல்ல னுனன்.

(இ-ள்.) குலச்சிறைநாயனுர் பாண்டியனுக்குமுன்னேவந்து சேர்ந்து பொ ன்னுலாகிய பெரிய மதில்கள்சூழ்ந்த சீகாழித்தலைவராகிய பிள்ளையாரது வருகை யை யெடுத்துச்சொல்ல, அவன் முன்னடைந்துள்ள சுரநோயா லாகிய துன்பஞ் சிறிது நீங்கி, பெரிய இரத்தினங்க ளழுத்திய அழகிய பொற்பீடத்தைத் தனது முடியின்பக்கத்தில் இடுங்களென்று கூறினுன்.—எ-று. (எசுசு)

மந்திரி யாரைப் பின்னு மெதிர்செல மன்ன னேவச்
சிந்தையுண் மகிழ்ந்து போந்தார் செயலையான் சமயத் துள்ளோர்
வெந்துணை ரலங்கள் மன்னன் பரிசுகண் டிதுவோ பண்பா
லந்தனிச் சமயந் தன்னை நாட்டுமா றென்று பின்னும்.

(இ-ள்.) பின்னும் பாண்டியன் பிள்ளையாரை யெதிர்கொள்ளும்படிக் குல ச்சிறைநாயனுரை யேவ, அவர் மனதில் மகிழ்கூர்ந்து சென்றருளினுர்; அசோக விருக்ஷத்தின் கீழிருக்கும் அருகக்கடவுளது சமயத்தராகிய சமணர்கள் பசிய

கொத்தாகிய வேப்ப மலர்மாலையணிந்த பாண்டியன் செய்தியை யறிந்து நண் போடு நமது ஒப்பற்ற சமயத்தை நிலைநிறுத்தும் வண்ணம் இதுவோவென்று கூறிப் பின்னும்.—எ-று. செயலை=அசோகமரம்.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (எசஎ)

நின்னற நெறியை நீயே காத்தருள் செய்தி யாகி
லன்னவர் தம்மை யிங்கே யழைத்தனை யவரும் யாமு
முன்னுற வொக்கத் தீர்க்க மொழிந்துமற் றவராற் றீர்ந்த
தென்னினு மியாமுந் தீர்த்தோ மாகவு மிசைவா யென்றார்.

(இ-ள்.) உனது சமயநெறியை நீயே பாதுகாத்து நிலைபெறச் செய்யவேண்டும், ஆனால் அவரை இங்கே வரவழைத்தாய், அவரும் யாங்களும் நின் முன்னே ஒருங்கு சுரநோயைத் தீர்க்கும்படிக் கூறி, அவரால் இந்நோய் நீங்கியதாயினும் யாங்களும் தீர்த்ததாகச்சொல்ல உடன்படுவாயென்று கூறினார்கள்.—எ-று. ()

பொய்தவ மாகக் கொண்ட புன்றலைச் சமணர் கூறச்
செய்தவப் பயன்வந் தெய்துஞ் செவ்விமுன் னுறுத லாலே
யெய்திய தெய்வச் சார்வா லிருதிறத் தீருந் தீருங்
கைதவம் பேச மாட்டே னென்றுகை தவனுஞ் சொன்னான்.

(இ-ள்.) பொய்யினையே தவமாகக் கொண்டொழுகும் புல்லிய தலையினையுடைய சமணர்கள் இவ்வாறுகூற, பூர்வசன்மத்திற் செய்த தவப்பயன் வந்தடையும் பரிபாககாலம் வருதலால், பாண்டியன் (அவர்களைப்பார்த்து) நீங்கள் இருபக்ஷத்தீரும் அடைந்திருக்கும் உங்கள் தெய்வச்சார்பினால் தீருங்கள் நான் வஞ்சகம் பேசமாட்டேனென்று கூறினான்.—எ-று. (எசஅ)

என்றவ னுரைப்பக் குண்ட ரெண்ணங்கெட் டிருந்த வெல்லைத்
தென்றமிழ் நாடு செய்த செய்தவக் கொழுந்து போல்வார்
வன்றனிப் பவன முன்னர் வாயிலு ளணைந்து மாடு
பொன்றிகழ் தாளப் பத்திச் சிவிகைநின் றிழிந்து புக்கார்.

(இ-ள்.) இவ்வாறு பாண்டியராசன் சொல்ல (அதுகேட்ட) கீழ்மக்களாகிய சமணர்கள் தமது மனக்கருத்துச் சிதைந்திருந்தபொழுது, பாண்டிநாடுசெய்த சிறந்த தவக்கொழுந்துபோன்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார் வலிய அரண்மனையின் முன்வாயிலுள் அணைந்து, அதன்பக்கத்தில் பொன்மயமாக விளங்குகின்ற பத்தியாகிய முத்துச்சிவிகையினின்று மிறங்கி உள்ளே புகுந்தருளினார்.—எ-று.

குலச்சிறை யார்முன் பெய்தக் கொற்றவன் றேவி யாருந்
தலத்திடை யிழிந்து சென்றார் தண்டமிழ் நாட்டு மன்ன
னிலத்திடை வானி னின்று நீளிரு ணீங்க வந்த
கலைச்செழுந் திங்கள் போலுங் கவுணியர் தம்மைக் கண்டான்.

(இ-ள்.) குலச்சிறைநாயனார் முன்செல்லப் பாண்டிமா தேவியாரும் சிவிகையினின்றும் பூமியிலிறங்கிச் சென்றருளினார், குளிர்ந்த தமிழ்நாட்டரசனாகிய பாண்டியன் மிக்க இருளைநீக்கும்பொருட்டு ஆகாயத்தினின்றும் பூமியில்வந்த செழிய கலைகள்நிறைந்த சந்திரன்போன்ற திருஞானசம்பந்தப்பிள்ளையாரைத்தரிசித்தான்.—எ-று. (எருக)

கண்டவப் பொழுதே வேந்தன் கையெடுத் தெய்த நோக்கித்
தண்டுணர் முடியின் பாங்கர்த் தமணியப் பீடங் காட்ட.
வண்டமிழ் விரகா மேவி யதன்மிசை யிருந்தார் மாயை
கொண்டவல் லமண ரெல்லாங் குறிப்பினு ளச்சங் கொண்டார்.

(இ-ள்.) பாண்டியன் பிள்ளையாரைத் தரிசித்தபொழுதே சிரசின்மேற் கைகூப்பி யெடுத்துப் பொருந்தப்பார்த்துக் குளிர்ந்த வேப்ப மலர்மாலையணிந்த முடியின்பக்கத்தி லிட்டிருக்கின்ற இரத்தினாசனத்தைக் காட்ட, வளவிய முத்தமிழ்விரகராகிய பிள்ளையார் அப்பீடத்தின்மீது வீற்றிருந்தருளினார்; மயக்கமடைந்திருந்த வலிய சமணர்களெல்லாரும் தம்மனக்குறிப்பில அச்சங்கொண்டார்கள்.

செழியனும் பிள்ளை யார்தந் திருமேனி காணப்பெற்று
விழியுற நோக்க லாலே வெம்மைநோய் சிறிது நீங்கி
யழிவுறு மனத்தோர் நிற்க வந்தணர் வாழ்வை நோக்கிக்
கெழுவுறு பதியா தென்று விருப்புடன் கேட்ட போது.

(இ-ள்.) பாண்டியராசனும் திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவுருவத்தைத் தரிசிக்கப்பெற்றுக் கண்களால் பொருந்தப் பார்த்தமையினாலே சுரநோய் சிறிது தணிந்து, மனம் வருந்திய அச்சமணர்கள் நிற்க, பிள்ளையாரைப் பார்த்துத் தேவரீர் எழுந்தருளியிருக்குந் திருப்பதியாதென்று விருப்பத்துடன் கேட்டபொழுது.—எ-று. (எ௫௩)

'அழிவுறுமனநேர்நிற்க' என்றும் பாடம்.

வேறு.

பொன்னிவளந் தருநாட்டுப் புனற்பழனப் புறம்பணைசூழ்
கன்னிமதிற் கழுமலநாங் கருதுமூ ரெனச்சிறந்த
பன்னிரண்டு பெயர்பற்றும் பரவியசொற் றிருப்பதிகந்
தென்னவன்முன் பருள்செய்தார் திருஞான சம்பந்தர்.

(இ-ள்.) நாம் விரும்பிய ஊராவது காவிரிநதி பலவளங்களைத்தருகின்ற நீர் நிறைந்த வயல்கள்பொருந்திய மருதநிலஞ்சூழ்ந்த அழியாத மதிலையுடைய திருக்கழுமலம் என்று சிறப்புப்பொருந்திய பன்னிரண்டு திருப்பெயர்களையும் அமைத்துத் துதித்த ("பிரமனூர் வேணுபுரம்") என்னு முதலையுடைய திருப்பதிகத்தைத் திருஞானசம்பந்தப்பிள்ளையார் பாண்டியனுக்கு முன்னே பாடியருளினார்.

---

**திருப்பிரமபுரம் - திருச்சக்கரமாற்று - பண் - காந்தாரம்.**

திருச்சிற்றம்பலம்.

பிரமனூர்வேணுபுரம்புகலிவெங்குருப்பெருநீர்த்தோணி
புரமன்னுபூந்தராய்பொன்னஞ்சிரபுரம்புறவஞ்சண்பை
யரன்மன்னுதண்காழிகொச்சைவயமுள்ளிட்டங்காதியாய
பரமனூர்பன்னிரண்டாய்நின்றதிருக்கழுமலநாம்பரவுமூரே.

காவிமலர்புரையுங்கண்ணார்கழுமலத்தின்பெயரைநாளும்
பாவியசீர்ப்பன்னிரண்டுநன்னூலாற்பத்திமையாற்பனுவன்மாலை

நாவினலம்புகழ்சீர்நான்மறையான்ஞானசம்பந்தன்சொன்ன
மேவியிசைமொழிவார்விண்ணவரிலெண்ணுதலைவிருப்புளாரே.

திருச்சிற்றம்பலம்.

---

பிள்ளையார் செம்பொன்மணிப் பீடத்தி லிருந்தபொழு
துள்ளநிறை பொறுமையினு லுழையிருந்த காமணர்
கொள்ளுமனத் திடையச்ச மறைத்துமுகங் கோபத்தீத்
துள்ளியெழு மெனக்கண்கள் சிவந்துபல சொல்லுவார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் செம்பொன் மயமாகிய இரத்தினாசனத்தில் வீற்றிருந்தபொழுது அருகிலிருந்த கரிய சமணர்கள் தம்மனதில்நிறைந்த பொறுமையினால் மனதிற்கொண்ட அச்சத்தை மறைத்துத் தங்கள் முகத்தில் கோபாக்கினி துள்ளியெழுவதுபோலக் கண்கள் சிவந்து பல வார்த்தைகளைச் சொல்வாராயினர்.—எ-று. (எருரு)

காலையெழுங் கதிரவனைப் புடைசூழுங் கருமுகில்போற்
பீலிசேர் சமண்கையர் பிள்ளையார் தமைச்சூழ்வா
ரோலவே வாதினால் வெல்வதனுக் கெண்ணித்தாங்
கோலுநூ லெடுத்தோதித் தலைதிமிர்ப்பக் குரைத்தார்கள்.

(இ-ள்.) உதயகாலத்தி லெழுகின்ற பாலசூரியனைப் பக்கங்களிற்சூழ்ந்த கரிய மேகக்கூட்டங்கள்போல மயிற்பீலிபொருந்திய சமணராகிய கீழ்மக்கள் திருஞானசம்பந்தப்பிள்ளையாரைச் சூழ்ந்து அவரை வாதினால் வெல்லக்கருதித் தங்களால் கற்பித்துச் சொல்லப்பட்ட ஆருகதநூலை யெடுத்துக்கூறித் தலை நடுக்குற்று வருந்தக் குரைத்தார்கள்.—எ-று. (எருசு)

பிள்ளையா ரதுகேளாப் பேசுநீர் நும் பொருளெல்லை
யுள்ளவா றென்றருள வூத்தைவாய்ப் பறிதலையர்
துள்ளியெழுந் தநேகராய்ச் சூழ்ந்துபத றிக்கதற
வொள்ளிழையா ரதுகண்டு பொறுராகி யுண்ணடுங்கி.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் அதனைக்கேட்டு நீவிர் கொண்டிருக்கும் பொருளின்அளவை நுமது சாஸ்திரத்திற்கூறுமுறைப்படி யெடுத்துச் சொல்லுங்களென்று அருளிச்செய்ய, ஊத்தைவாயையும் மயிர்பறித்த தலையையுமுடைய சமணர்கள் (அதுகேட்டவுடனே) அநேகராய்த் துள்ளியெழுந்து பிள்ளையாரைச் சூழ்ந்து பதறிக்கதற,அதனை ஒளிபொருந்திய ஆபரணத்தை யணிந்த மங்கையர்க்கரசியார் பார்த்து மனம்பொறுமல் நடுக்கங்கொண்டு.—எ-று.

இதுமுதல் இரண்டுபாடலுங் குளகம். (எருஎ)

வே று.

தென்னவன் றன்னை நோக்கித் திருமேனி யெளியர்போலு
மின்னருட் பிள்ளை யார்மற் றிவருவ ரெண்ணி லார்கண்
மன்னநின் மயக்க மெங்கள் வள்ளலார் தீர நல்கும்
பின்னையிவ் வமணர் மூள்வார் வல்லரேற் பேச வென்றார்.

(இ-ள்.) பாண்டியனைப்பார்த்து இனிய அருளையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையாரோ மிகச் சிறுபாலர்; இச்சமணர்களோ எண்ணில்லாதவர்கள்; என்

பிராணநாயகரே! நீர் அடைந்திருக்கும் சுரநோயின் மயக்கம் எங்கள் அருள்வள்ளலாகிய பிள்ளையார் நீங்கும்படி யருள்செய்தபின்பு, இச்சமணர்கள் வாதுசெய்ய வல்லராகில் பேசுகவென்று கூறினர்.—எ-று. (எ௫அ)

மாறனு மவரை நோக்கி வருந்தனீ யென்று மற்றும்
வேறுவா தென்கொ லென்மேல் வெப்பொழித் தருகர் நீரு
மாறணி சடையி னருக் கன்பரா மிவரு நீங்க
டேறிய தெய்வத் தன்மை யென்னிடைத் தெரிப்பீ ரென்றான்.

(இ-ள்.) பாண்டியராசனும் மங்கையர்க்கரசியாரைப்பார்த்து நீ வருந்தேலென்று கூறி, வேறு வாதம் யாதிருக்கின்றது; சமணராகியநீங்களும் கங்கையையணிந்த சடைமுடியையுடைய பரமசிவனுக்கு அன்பராகிய இவரும் என்னிடத்துள்ள வெப்புநோயை நீக்கி, நீங்கள் நிச்சயித்திருக்குந் தெய்வத்தன்மையை என்னிடத்தில் தெரிவியுங்களென்று கூறினான்.—எ-று. (எ௫௯)

ஞானவா ரமுத முண்டார் நற்றவத் திருவை யொத்த
மானினேர் விழியி னய்கேண் மற்றெனைப் பால னென்று
நீநனி யஞ்ச வேண்டா நிலையிலா வமணர்க் கென்று
மானெளி யேன லேனென் றெழுந்திருப் பதிகம் பாடி.

(இ-ள்.) அரிய சிவஞானாமிர்தத்தை யுண்டருளிய பிள்ளையார் நல்ல தவத்தையுடைய இலக்குமிபோன்ற மங்கையர்க்கரசியாரைப்பார்த்தருளி, மான்போலும் பார்வையையுடைய மாதேவியே! கேட்பாயாக, என்னைச் சிறுபாலனென்று நீ கொஞ்சமும் அஞ்சவேண்டாம்; நன்னிலையில்லாத இச்சமணர்களுக்கு நான் எளியேன் அல்லேன் என்று ("மானினேர் விழிமாதராய்") என்னு முதலையுடைய திருப்பதிகம் பாடியருளி—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (எ௬௦)

**திருவாலவாய் பண்-கொல்லி.**

திருச்சிற்றம்பலம்.

மானினேர்விழிமாதராய்வழுதிக்குமாபெருந்தேவிகேள்
பானல்வாயொருபாலனீங்கிவனென்றுநீபரிவெய்திடே
லானைமாமலையாதியாயவிடங்களிற்பலவல்லல்சேர்
ஈனருக்கெளியேனலேன்திருவாலவாயரனிற்கவே.

எக்கராமமண்கையருக்கெளியேனலேன்திருவாலவாய்ச்
சொக்கனென்னுளிருக்கவேதுளங்கும்முடித்தென்னன்முன்னிவை
தக்கசீர்ப்புகலிக்குமன்றமிழ்நாதன்ஞானசம்பந்தன்வா
யொக்கவேயுரைசெய்தபத்துமுரைப்பவர்க்கிடரில்லையே.

திருச்சிற்றம்பலம்.

---

பெற்றியா லருளிச் செய்த பிள்ளையார் தமக்கு முன்னஞ்
சுற்றுநின் றழைத்த லோவா வருகர்க்குந் தென்னர் கோமா

னிற்றைநா ளென்னை யுற்ற பிணியையீ ரிகலித் தீருந்
தெற்றெனத் தீர்த்தார் வாதில் வென்றவ ரென்று செப்ப.

(இ-ள்.) அன்போடு திருப்பதிகம் பாடியருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரையும் அவர்முன்னே சூழ்ந்து நின்று குரைத்தலில் ஒழியாத சமணர்களையும்பாண்டியராசன்பார்த்து, இந்நாளில் என்னையடைந்த சுரநோயை நீங்களிருவரும் வேறுபட்டுத்தீருங்கள்; விரைவில் முன்தீர்த்தவர்யாரோ அவரோ வென்றவரென்றுசொல்ல.—எ-று. (எகூக)

மன்னவன் மாற்றங் கேட்டு வடிவுபோன் மனத்து மாசு
துன்னிய வமணர் தென்னர் தோன்றலை நோக்கி நாங்க
ளுன்னுடம் பதனில் வெப்பை யொருபுடை வாம பாக
முன்னமந் திரித்துத் தெய்வ முயற்சியாற் றீர்த்து மென்றார்.

(இ-ள்.) பாண்டியன் கூறிய வார்த்தையைக் கேட்டு, தம்முடம்பைப்போல மனத்திலும் மாசுபடிந்திருக்கும் சமணர்கள் அப்பாண்டியராசனைப் பார்த்து நாங்கள் உமது உடம்பிலுள்ள ஒருபாகமாகிய இடப்பாகத்துநோயை முன்னே மந்திரித்துத் தெய்வமுயற்சியினால் தீர்ப்போமென்று கூறினார்கள்.—எ-று.

யாதுமொன் றறிவி லாதா ரிருளென வணையச் சென்று
வாதினின் மன்ன வன்றன் வாமபா கத்தைத் தீர்ப்பார்
மீதுதம் பீலிகொண்டு தடவிட மேன்மேல் வெப்புத்
தீதுறப் பொறாது தென்னன் சிரபுரத் தவரைப் பார்த்தான்.

(இ-ள்.) சிறிது நல்லறிவில்லாத சமணர்கள் இருளைப்போலச் சமீபத்திற்சென்று வாதுகாரணமாகப் பாண்டியனுடைய இடப்பாகத்திலுள்ள நோயைத் தீர்க்கின்றவர்களாய் மயிற்பீலியைக் கையிலெடுத்து அவ்வரசன்மேல் தடவ, அதனால் மேலுமேலும் வெப்புநோய் அதிகரிக்க, பாண்டியன் அதனைப் பொறுக்காமல் திருஞானசம்பந்தப்பிள்ளையாரைப் பார்த்தான்.—எ-று. (எகூஙு)

தென்னவ னோக்கங் கண்டு திருக்கழு மலத்தார் செல்வ
ரன்னவன் வலப்பால் வெப்பை யாலவா யண்ண லீரோ
மன்னுமந் திரமு மாகி மருந்துமாய்த் தீர்ப்பீ ரென்று
பன்னிய மறைக ளேத்திப் பகர்திருப் பதிகம் பாடி

(இ-ள்.) சீகாழியிலுள்ளவர்களுக்குச் செல்வராகிய பிள்ளையார் பாண்டியனுடைய குறிப்பைப்பார்த்து அவனது வலப்பாகத்திலுள்ள சுரநோயைத் திருவாலவாயி லெழுந்தருளிய முதல்வரோ! நீரே நிலைபெற்ற மந்திரமும் மருந்துமாய்த் தீர்த்தருள்வீரென்று வேதங்களேத்தித் துதிக்கும் ("மந்திரமாவதுநீறு") என்னு முதலையுடைய திருப்பதிகம் பாடியருளி.—எ-று

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (எகூச)

---

**திருவாலவாய்-திருநீற்றுப்பதிகம்-பண்-காந்தாரம்.**

திருச்சிற்றம்பலம்.

**மந்திரமாவதுநீறுவானவர்மேலதுநீறு**
**சுந்தரமாவதுநீறுதுதிக்கப்படுவதுநீறு**
**தந்திரமாவதுநீறுசமயத்திலுள்ளதுநீறு**
**செந்துவர்வாயுமைபங்கன்றிருவாலவாயான்றிருநீறே.** (க)

வேதத்திலுள்ளதுநீறுவெந்துயர்தீர்ப்பதுநீறு
போதந்தருவதுநீறுபுன்மைதவிர்ப்பதுநீறு
ஓதத்தகுவதுநீறுவுண்மையிலுள்ளதுநீறு
சீதப்புனல்வயல்சூழ்ந்ததிருவாலவாயான்றிருநீறே. (௨)

முத்திதருவதுநீறுமுனிவரணிவதுநீறு
சத்தியமாவதுநீறுதக்கோர்புகழ்வதுநீறு

சித்திதருவதுநீறுதிருவாலவாயான்றிருநீறே. (௩)

காணவினியதுநீறுகவினைத்தருவதுநீறு
பேணியணிபவர்க்கெல்லாம்பெருமைகொடுப்பதுநீறு
மாணந்தகைவதுநீறுமதியைத்தருவதுநீறு
சேணந்தருவதுநீறுதிருவாலவாயான்றிருநீறே. (௪)

பூசவினியதுநீறுபுண்ணியமாவதுநீறு
பேசவினியதுநீறுபெருந்தவத்தோர்களுக்கெல்லா
மாசைகெடுப்பதுநீறுவந்தமதாவதுநீறு
தேசம்புகழ்வதுநீறுதிருவாலவாயான்றிருநீறே. (௫)

அருத்தமதாவதுநீறுவவலமறுப்பதுநீறு
வருத்தந்தணிப்பதுநீறுவானமளிப்பதுநீறு
பொருத்தமதாவதுநீறுபுண்ணியர்பூசும்வெண்ணீறு
திருத்தகுமாளிகைசூழ்ந்ததிருவாலவாயான்றிருநீறே. (௬)

எயிலதுவட்டதுநீறுவிருமைக்குமுள்ளதுநீறு
பயிலப்படுவதுநீறுபாக்கியமாவதுநீறு
துயிலைத்தடுப்பதுநீறுசுத்தமதாவதுநீறு
அயிலைப்பொலிதருசூலத்தாலவாயான்றிருநீறே. (௭)

இராவணன்மேலதுநீறுவெண்ணத்தகுவதுநீறு
பராவணமாவதுநீறுபாவமறுப்பதுநீறு
தராவணமாவதுநீறுதத்துவமாவதுநீறு
அராவணங்குந்திருமேனியாலவாயான்றிருநீறே. (௮)

மாலொடயனறியாதவண்ணமுமுள்ளதுநீறு
மேலுறைதேவர்கடங்கண்மெய்யதுவெண்பொடிநீறு
ஏலவுடம்பிடர்தீர்க்குமின்பந்தருவதுநீறு
ண்டமிடற்றெம்மாலவாயான்றிருநீறே. (௯)

குண்டிகைக்கையர்களோடுசாக்கியர்கூட்டமுங்கூடக்
கண்டிகைப்பிப்பதுநீறுகருதவினியதுநீறு
எண்டிசைப்பட்டபொருளாரேத்துந்தகையதுநீறு
அண்டத்தவர்பணிந்தேத்துமாலவாயான்றிருநீறே. (௧௦)

ஆற்றலடல்விடையேறுமாலவாயான்றிருநீற்றைப்
போற்றிப்புகலிநிலாவுபூசுரன்ஞானசம்பந்தன்

றேற்றித்தென்னனுடலுற்றதீப்பிணியாயினதீரச்
சாற்றியபாடல்கள்பத்தும்வல்லவர்நல்லவர்தாமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருவளர் நீறு கொண்டு திருக்கையாற் றடவத் தென்னன்
பொருவரு வெப்பு நீங்கிப் பொய்கையிற் குளிர்ந்த தப்பான்
மருவிய விடப்பான் மிக்க வழலெழ மண்டு தீப்போ
லிருபுடை வெப்புங் கூடி யிடங்கொளா தென்னப் பொங்க.

(இ-ள்.) திருவருட் செல்வமிக்க விபூதியை யெடுத்துத் தமது திருக்கரத்தால் தடவியருள, பாண்டியனது ஒப்பற்ற வலப்பாகத்துச் சுரநோய் தணிந்து பொய்கைபோலக் குளிர்ந்திருந்தது ; பொருந்திய இடப்பாகத்துச்சுரநோய் மிக்க சுவாலையெழும்படிப் பற்றியெரிகின்ற தீயைப்போல இருபக்கத்திலுள்ள சுரமும் ஒன்றுகச்சேர்ந்து இடம் போதாதென்று சொல்லும்படி யதிகரிக்க.—எ-று. ()

உறியுடைக் கையர் பாயி னுடுக்கையர் நடுக்க மெய்திச்
செறிமயிற் பீலி தீயத் தென்னன்வெப் புறுதீத் தம்மை
யெறியமா சுடலுங் கன்றி யருகுவிட் டேற நிற்பா
ரறிவுடை யாரை யொத்தா ரறிவிலா நெறியி னின்றுர்.

(இ-ள்.) உறிபொருந்திய கையும் பாயுடையுமுடைய சமணர்கள் நடுக்கங்கொண்டு நெருங்கிய மயிற்பீலிகள் தீயும்படிப் பாண்டியனுடைய சுரநோயாலாகிய சுவாலையானது தம்மைச்சுட, அழுக்கடைந்திருக்குமவர்களுடம்பும் அத்தீயால் கன்றி, அவனருகில் நில்லாமல் தூரத்தில் நிற்பவர்களாய் நல்லறிவில்லாத அவநெறியில் நிற்கும் அச்சமணர்கள் அறிவுடையவர்களை யொத்தார்கள்.—எ-று.

சுரத்தின் சுவாலையைத் தாங்கமாட்டாத சமணர்கள் அஞ்சித் தூரத்தில் நின்றமையால், தீவினைக்கஞ்சித் தூரத்தொதுங்கும் பேரறிவினையுடைய பெரியோர்களை யொத்தனரென்று கூறினர். (எசுசு)

பலர்தொழும் புகலி மன்ன ரொருபுடை வெப்பைப் பாற்ற
மலர்தலை யுலகின் மிக்கார் வந்ததி சயித்துச் சூழ
விலகுவேற் றென்னன் மேனி வலமிட மெய்தி நீடு
முலகினிற் றண்மை வெம்மை யொதுங்கினு லொத்த தன்றே.

(இ-ள்.) பலரும் வணங்குகின்ற சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் பாண்டியனது வலப்பாகத்திலுள்ள வெப்பை நீக்கியருள, பரந்த இடத்தையுடைய உலகத்தில் வாழும் பெரியோர்கள் யாவரும் வந்து அதிசயித்துச் சூழ்ந்து நிற்க, அப்பொழுது விளங்குகின்ற வேற்படையையுடைய அப்பாண்டியன் உடம்பானது பெரிய உலகத்திலுள்ள தண்மையும் வெம்மையும் தன் வலப்புறத்தையும் இடப்புறத்தையு மடைந்து ஒதுங்கினுற் போன்றிருந்தது.—எ-று.

திருஞானசம்பந்தப்பிள்ளையார் பரிசத்தால் வலப்பாகம் மிகத் தண்மையுற்றும், சமணர்கள் பரிசத்தால் இடப்பாகம் மிக வெம்மையுற்றுங் கிடந்தமையின் 'வலமிட மெய்திநீடு - முலகினிற்றண்மை வெம்மை யொதுங்கினு லொத்த தன்றே' என்று கூறினர்.

"பொழிந்த தண்மதுத் தார்புனை பூழியர் கோனுக்
கிழிந்த செய்கையர் கைதொட வெரியிடு சுரத்தாற்
கழிந்த துன்பமுங் கவுணியர் கைதொடச் சுரந்தீர்ந்
தொழிந்த வின்பமு மிருவினை யொத்தபோ லொத்த"—என வருந்
திருவிளையாடற் புராணத்தானு முணர்க. (எசுஎ)

மன்னவன் மொழிவ னென்னே மதித்தவிக் கால மொன்றில்
வெந்நர கொருபா லாகும் வீட்டின்ப மொருபா லாகுந்
துன்னுநஞ் சொருபா லாகுஞ் சுவையமு தொருபா லாகு
மென்வடி வொன்றி லுற்றே னிருதிறத் தியல்பு மென்பான்.

(இ-ள்.) அப்பொழுது பாண்டியன் கூறுவான், இஃது என்னே! கருதிய இவ்வோர்காலத்தில் கொடிய நரகயாதனை யொருபக்கமாம், மோக்ஷவின்ப மொருபக்கமாம், கொடுமைபொருந்திய விஷமொரு பக்கமாம், இனிய சுவைபொருந்திய அமுதமொரு பக்கமாம், என் உடம்பு ஒன்றில் இவ்விருவகையான பொருள்களி னியல்புகளையு மடைந்தேனென்று கூறுவானாயினன்.—எ-று.

சமணர்கள் தீர்க்கத்தொடங்கிய இடப்பாகத்து நோய் வெந்நரகும் துன்னு நஞ்சும்போல வருத்துகின்றதென்பதும், பிள்ளையார் தீர்க்கத்தொடங்கிய வலப்பாகத்து நோய்தணிந்து வீட்டின்பமும் சுவையமுதமும் போலக் குளிர்ந்து இன்பந்தருகின்றதென்பதுங் கருத்து. (எசுஅ)

வெந்தொழி லருகர் தோற்றீ ரென்னைவிட் டகல நீங்கும்
வந்தெனை யுய்யக் கொண்ட மறைக்குல வள்ள லாரே
யிந்தவெப் படைய நீங்க வெனக்கருள் புரிவீ ரென்று
சிந்தையாற் றொழுது சொன்னான் செலகதிக் கணிய னானான்.

(இ-ள்.) கொடுந் தொழிலையுடைய சமணர்களே நீங்கள் தோற்றீர்கள்; இனி என்னைவிட்டுத் தூரநீங்குங்கள்; இங்கு எழுந்தருளி என்னையுய்யும்படி ஆண்டருளிய அருள்வள்ளலாகிய பிள்ளையாரே! தேவரீர் இந்தச் சுரநோய் முழுமையும் நீங்கும்படி அடியேனுக்கு அருள்புரிவீராக வென்று மோக்ஷத்திற்குச் சமீபித்தவனான பாண்டியன் மனத்தால் வணங்கிக்கூறினான்.—எ-று.

பாண்டியன் சுரநோயால் பீடிக்கப்பட்டுச் சோர்ந்துள்ளவனாகலான் எழுந்து நமஸ்கரித்துச் சொல்லக்கூடாமையின் மனப்பூர்வகமாகத் தொழுது கூறினனென்பார் 'சிந்தையாற்றொழுது சொன்னான்' என்றும், பிள்ளையார் தமது திருக்கரத்தினால் விபூதி யெடுத்து இடத்தக்க பேறுபெற்றவனாகலின் சிவனடியாரிற் சிறந்தவனாயினா னென்பார் 'செலகதிக் கணியனானான்' என்றுங் கூறினார். (எசுக)

திருமுகங் கருணை காட்டத் திருக்கையி னீறு காட்டிப்
பெருமறை துதிக்கு மாற்றாற் பிள்ளையார் போற்றிப் பின்னு
மொருமுறை தடவ வங்க ளொழிந்துவெப் பகன்று நீங்க
மருவுதீப் பிணியு நீங்கி வழுதியு முழுது முய்ந்தான்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது திருமுகமானது பெருங்கருணையைக் காட்டத் திருக்கரத்தில் விபூதியை யெடுத்துச் சிறந்தவேதங்கள் துதிக்கு முறைமைப்படித் துதித்துப் பின்னும் ஒருமுறை (இடப்பாகத்தைத்) தடவி

யருள, அவ்விடப்பாகத்தினின்றுஞ் சுரநோய் நீங்கப் பாண்டியனும் கொடுமை பொருந்திய சுரநோயேயன்றிப் பிறவிநோயும் முழுவது நீங்கி யுய்ந்தான்.—எ-று.

பிள்ளையார் விபூதி யெடுத்திட்டதனால் பாண்டியன் சுரநோயே யன்றித் தன் னுடம்பின்கூனும், பிறவிநோயுமாகிய அனைத்துந் தீரப்பெற்றனனென்பார் "வெப்பகன்றுநீங்க - மருவுதீப் பிணியு நீங்கி வழுதியு முழுது முய்ந்தான்" என்று கூறினார். இதனை,

"பிள்ளை யாரிடப் பாகமும் பண்டுபோற் பெருமான்
வெள்ளை நீறுதொட் டங்கையா னீவுமுன் மேனா
ளுள்ள கூனொடு வெப்புநோ யொழிந்துமீ னுயர்த்த
வள்ளன் மாசறக் கடைந்தவின் மணியெனப் பொலிந்தான்."—எனவருந்

திருவிளையாடற்புராணத்தானு முணர்க. (எஎ0)

கொற்றவன் றேவி யாருங் குலச்சிறை யாருந் தீங்கு
செற்றவர் செய்ய பாத தாமரை சென்னி சேர்த்திப்
பெற்றனம் பெருமை யின்று பிறந்தனம் பிறவா மேன்மை
யுற்றனன் மன்ன னென்றே யுளங்களித் துவகை மிக்கார்.

(இ-ள்.) பாண்டிமாதேவியாருங் குலச்சிறைநாயனாரும் பாண்டிய னடைந்ததுன்பத்தை யொழித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது சிவந்த திருவடித் தாமரைகளைத் தமதுசிரசில் சூடி (நாம் அடைதற்கரிய) பெருமையைப் பெற்றோம்; இன்றே பிறந்தவர்களாயினோம்; பாண்டியனுங் கிடைத்தற்கரிய மேன்மையை யடைந்தானென்று மனமகிழ்ந்து சந்தோஷமிக்கா ராயினார்.—எ-று. ()

மீனவன் றன்மே லுள்ள வெப்பெலா முடனே மாற
வானபே ரின்ப மெய்தி யுச்சிமே லங்கை கூப்பி
மானமொன் றில்லார் முன்பு வன்பிணி நீக்க வந்த
ஞானசம் பந்தர் பாத நண்ணிநா னுய்ந்தே னென்றான்.

(இ-ள்.) பாண்டியன் தன்னுடம்பிலுள்ள சுரநோயனைத்தும் உடனே நீங்க, அதனால் பேரின்பமடைந்து சிரசின்மேல் அழகிய கைகளைக் குவித்து மானஞ் சிறிதுமில்லாத சமணர்களுக்கு முன்னே வலிய சுரநோயை நீக்கும்படி யெழுந்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவடிகளை யடைந்து நான் பிழைத்தே னென்று கூறினன்.—எ-று. (எஎஉ)

வேறு.

கந்துசீறு மாவியானை மீனவன் கருத்துநேர்
வந்துவாய்மை கூறமற்ற மாசுமேனி நீசர்தா
முந்தைமந் திரத்துவிஞ்சை முற்றுமெஞ்ச வஞ்சியே
சிந்தைசெய்து கைவருந் திறந்தெரிந்து தேடுவார்.

(இ-ள்.) கட்டுத்தறியைக் கோபித்து முறிக்கும் மதமயக்கம்பொருந்திய யானைச்சேனையையுடைய பாண்டியராசன் தன் மனங்கோடாது பிள்ளையார்முன்பு நின்று உண்மையையெடுத்துச் சொல்ல, அழுக்குப்படிந்த உடம்பினையுடைய சமணர்கள் முன்பு தாங்கற்ற மந்திரவித்தைகள் முழுதும்பயன்படாதொழிய, அதனால் அச்சமுற்று ஆலோசித்துத் தங்கள் எண்ணங் கைகூடுந்திறத்தைத் தெரிந்து கூறுவாராயினர்.—எ-று. (எஎங)

சைவமைந்தர் சொல்லின்வென்றி சந்தவின்சொன் மாலையாற்
கைதவன்றன் வெப்பொழித்த தன்மைகண் டறிந்தனம்.
மெய்தெரிந்த தர்க்கவாதம் வெல்லலாவ தன்றுவே
றெய்துதீயி னீரில்வெல்வ தென்றுதம்மி லெண்ணினார்.

(இ-ள்.) சைவசமயச் சிறுவராகிய பிள்ளையாரது சொல்லின் வெற்றியை இசையமைந்த இனிய திருப்பதிகமாலையால் பாண்டியனுடைய சுரநோய் ஒழித்த தன்மையைக் கண்டறிந்தோம்; நாம் உண்மையாகத் தெரிந்த தர்க்கவாதத்தால் இவரை வெல்லுதல் கூடாது; ஆகலின் வேறாகப் பொருந்திய தீயினாலும் நீரினாலும் வெல்லவேண்டுமென்று தங்களுக்குள் எண்ணினார்கள்.—எ-று. (எ௪௪)

பிள்ளையாரு முங்கள்வாய்மை பேசுமின்க ளென்றலுந்
தள்ளுநீர்மை யார்கள்வேறு தாக்கவாதி னுத்தரங்
கொள்ளும்வென்றி யன்றியே குறித்தகொள்கை யுண்மைதா
னுள்ளவாறு கட்புலத்தி லுய்ப்பதென்ன வொட்டினார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் (அச்சமணர்கள் குறிப்பையுணர்ந்து) உங்கள் உண்மையைக் கூறுங்களென்று சொல்லவும், பெருமையழிந்த சமணர்கள் வேறு தர்க்கவாதங்களினால் பேசி வெல்லும் வெற்றியில்லாமல், நாமிருவரும் நிச்சயித்திருக்குஞ் சமயவுணர்ச்சியை உள்ளபடியே பிரத்தியட்சமாகக் காட்டி வெல்வதென்று நிச்சயித்தார்கள்.—எ-று. (எ௪௫)

என்றுவாது கூறலு மிருந்ததென்னர் மன்னனுங்
கன்றியென் னுடம்பொடுங்க வெப்புநோய் கவர்ந்தபோ
தொன்றுமங் கொழித்திலீர்க ளென்னவா துமக்கெனுச்
சென்றுபின்னு முன்னுநின்று சில்லிவாயர் சொல்லுவார்.

(இ-ள்.) இவ்வாறு சமணர்கள் பிரத்தியக்ஷமாகக்காட்டுவதே வாதென்று சொல்லவும், அங்கிருந்த பாண்டியராசனும், எனது உடம்பு வருந்தி யொடுங்கும்படிச் சுரநோய் அதிகரித்திருந்தபொழுது அதனை நீங்கள் சிறிதும் நீக்காதொழிந்தீர்கள் அத்தகைய உங்கட்கு என்னவாதிருக்கின்றதென்று சொல்ல, ஓட்டைவாயர்களாகிய சமணர்கள் பின்னும் அப்பாண்டியனுக்கு முன்சென்று நின்று சொல்லுகின்றார்கள்.—எ-று. (எ௪௬)

என்னவாது செய்வதென் றுரைத்ததே வினாவெனச்
சொன்னவாச கந்தொடங்கி யேடுகொண்டு சூழ்ச்சியான்
மன்னுதம் பொருட்கருத்து வாய்மைதீட்டி மாட்டினால்
வெந்நெருப்பின் வேவுறாமை வெற்றியாவ தென்றனர்.

(இ-ள்.) நீங்கள் என்ன வாதுசெய்வதென்று பாண்டியன் சொன்னதையே வினாவாகவைத்து அவன்சொன்ன வாசகந்தொடங்கி, ஏட்டையெடுத்து இரகசியமாக நிலைபெற்ற தங்கள்தங்கள்சமயப்பொருள்களி னுண்மையை அதிலெழுதிக் கொடிய நெருப்பிலிட்டால், அதில் வேவாப்பெருமையே வெற்றியாவது என்று கூறினார்கள்.—எ-று. (எ௪௭)

என்றபோது மன்னனென் றியம்புமுன்பு பிள்ளையார்
நன்றுநீ ருரைத்தவாறு நாடுதீயி லேடுதான்

வென்றிடிற் பொருட்கருத்து மெய்ம்மையாவ தென்றிரேல்
வன்றனிக்கை யானைமன்னன் முன்புவம்மி னென்றனர்.

(இ-ள்.) இவ்வாறு சமணர்கள் சொன்னபொழுது (அதற்குத்தரமாக) அரசன் ஒன்று சொல்லுதற்குமுன்னே திருஞானசம்பந்தப்பிள்ளையார் நீங்கள் சொல்லியது நன்று; காணத்தக்கநெருப்பில் இட்ட ஏடு வேவாதிருக்கில் தங்கள் சமயப்பொருள்களின் கொள்கை உண்மையாம் என்பீராகில், வலிய துதிக்கையினையுடைய யானைச்சேனைகள் சூழ்ந்த பாண்டியராசன் முன்பு வாருங்களென்று கூறியருளினார்.—எ-று. (எஎஅ)

வேறு.

அப்ப டிக்கெதி ரமணரு மிணைக்துறு மளவி
லொப்பில் வண்புகழ்ச் சண்பையர் காவல ருரையாற்
செப்ப ருந்திறன் மன்னனுந் திருந்தவை முன்னர்
வெப்பு றுந்தழ லமைக்கென வினைஞரை விடுத்தான்.

(இ-ள்.) அவ்வாறு வாதுசெய்தற்கு எதிர்த்த சமணர்களும் உடன்பட்டு வந்த சமயத்தில், ஒப்பற்ற சிறந்த புகழையுடைய திருஞானசம்பந்தப் பிள்ளையாரது ஆஞ்ஞையினால் சொல்லுதற்கரிய வல்லமையையுடைய பாண்டியராசனும் திருத்தமாகிய தனது சபையின்முன்னே வெப்பம்பொருந்திய அக்கினி அமைக்கும்படி வேலைக்காரரை யேவினான்.—எ-று. (எஎகூ)

ஏய மாந்தரு மிந்தனங் குறைத்துட னடுக்கித்
தீய மைத்தலுஞ் சிகைவிடு புகையொழிந் தெழுந்து
காயும் வெவ்வழற் கடவுளும் படரொளி காட்ட
வாயு முத்தமிழ் விரகரு மணையவந் தருளி.

(இ-ள்.) பாண்டியன் ஏவிய வேலைக்காரரும் உடனே கட்டைகளைவெட்டி யடுக்கி அக்கினியை வளர்க்கவும் புகையொழிந்து கொழுந்துவிட்டெழுந்து சுடுகின்ற வெவ்விய அக்கினிதேவனும் பரவிய ஒளியைக்காட்ட, ஆராய்கின்ற முத்தமிழ் விரகராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரும் அதன்சமீபத்தில் வந்தருளி.—எ-று.

இதுமுத லிரண்டுபாட்டுங் குளகம். (எஅ0)

செங்க ணேற்றவ ரேபொரு ளென்றுதாந் தெரித்த
பொங்கி சைத்திருப் பதிகநன் முறையினைப் போற்றி
யெங்க ணாதனே பரம்பொரு ளெனத்தொழு தெடுத்தே
யங்கை யான்முடி மிசைக்கொண்டு காப்புநா ணவிழ்த்தார்.

(இ-ள்.) சிவந்த கண்களையுடைய இடபத்தை வாகனமாகவுடைய சிவபெருமானே மெய்ப்பொருளாயுள்ளவனென்று தாம் பாடியருளிய மிக்க இசையினையுடைய நல்ல திருப்பதிகத்திருமுறையை ஸ்தோத்திரஞ்செய்து எங்கள் சிவபெருமானே பரம்பொருளென்றுசொல்லி வணங்கித் திருக்கரத்தினால் எடுத்துத் தமது சிரசின்மேற்கொண்டருளித் திருக்காப்பிட்டகயிற்றை அவிழ்த்தருளினார்

சாற்று மெய்ப்பொரு டருந்திரு முறையினைத் தாமே
நீற்று வண்கையான் மறித்தலும் வந்துநேர் துளதா

றாற்ற டம்புயத் தண்ணலார் மருவுநள் ளாறு
போற்று மப்பதி கம்போக மார்த்தபூண் முலையாள்.

(இ-ள்.) சொல்லுகின்ற மெய்ப்பொருளையுணர்த்தும் தமிழ்வேதத் திருமுறையை விழுதியணிந்த வளவிய திருக்கரத்தினால் மறிக்கவும் நான்கு பெரிய திருப்புயங்களையுடைய சிவபெருமான எழுந்தருளிய திருநள்ளாற்றைத் துதிக்கும், "போகமார்த்த பூண்முலையாள்" என்னு முதலையுடைய அத்திருப்பதிகம் வந்து தோன்றியது.—எ-று. (எ௮உ)

---

திருநள்ளாறு - பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

போகமார்த்தபூண்முலையாள்தன்னோடும்பொன்னகலம்
பாகமார்த்தபைங்கண்வெள்ளேற்றண்ணல்பரமேட்டி
யாகமார்த்ததோலுடையன்கோவணவாடையின்மேல்
நாகமார்த்தநம்பெருமான்மேயதுநள்ளாறே. (க)

தோடுடையகாதுடையன்றோலுடையன்றொலையாப்
பீடுடையபோர்விடையன்பெணணுமோர்பாலுடைய
னேடுடையமேலுலகோடேழ்கடலுஞ்சூழ்ந்த
நாடுடையநம்பெருமான்மேயதுநள்ளாறே. (உ)

ஆன்முறையாலாற்றவெண்ணீறாடியணியிழையோர்
பான்முறையால்வைத்தபாதம்பத்தர்பணிந்தேத்த
மான்மறியும்வெண்மழுவுஞ்சூலமும்பற்றியகை
நான்மறையானம்பெருமான்மேயதுநள்ளாறே. (௩)

புல்கவல்லவார்சடைமேற்பூம்புனல்பெய்தயலே
மல்கவல்லகொன்றைமாலைமதியோடுடன்சூடிப்
பல்கவல்லதொண்டர்தம்பொற்பாதநிழற்சேர
நல்கவல்லநம்பெருமான்மேயதுநள்ளாறே. (௪)

ஏறுதாங்கியூர்திபேணியேர்கொளிளமதிய
மாறுதாங்குஞ்சென்னிமேலோராடரவஞ்சூடி
நீறுதாங்கிநூல்கிடந்தமார்பினிரைகொன்றை
நாறுதாங்குநம்பெருமான்மேயதுநள்ளாறே. (௫)

திங்களுச்சிமேல்விளங்குந்தேவனிமையோர்க
ளெங்களுச்சியெம்மிறைவனென்றடியேயிறைஞ்சத்
தங்களுச்சியால்வணங்குந்தன்னடியார்கட்கெல்லா *
நங்களுச்சிநம்பெருமான்மேயதுநள்ளாறே. (௬)

வெஞ்சுடர்த்தீயங்கையேந்திவிண்கொண்முழவதிர
வஞ்சிடத்தோராடல்பாடல்பேணுவதன்றியும்போய்ச்

செஞ்சடைக்கோர்திங்கள்சூடித்திகழ்தருகண்டத்துள்ளே
நஞ்சடைந்தநம்பெருமான்மேயதுநள்ளாறே. (எ)

சிட்டமார்ந்தமும்மதிலுஞ்சிலைவரைதீயம்பினாற்
சுட்டுமாட்டிச்சுண்ணவெண்ணீறாடுவதன்றியும்போய்ப்
பட்டமார்ந்தசென்னிமேலோர்பான்மதியஞ்சூடி
நட்டமாடுநம்பெருமான்மேயதுநள்ளாறே. (அ)

உண்ணலாகாநஞ்சுகண்டத்துண்டுடனேயொடுக்கி
யண்ணலாகாவண்ணனீழலாரழல்போலுருவ
மெண்ணலாகாவுள்வினையென்றெள்கவலித்திருவர்
நண்ணலாகாநம்பெருமான்மேயதுநள்ளாறே. (கூ)

மாசுமெய்யர்மண்டைத்தேரர்குண்டர்குணமிலிகள்
பேசும்பேச்சைமெய்யென்றெண்ணியந்நெறிசெல்லன்மின்
மூசுவண்டார்கொன்றைசூடிமும்மதிலும்முடனே
நாசஞ்செய்தநம்பெருமான்மேயதுநள்ளாறே. (க0)

தண்புனலும்வெண்பிறையுந்தாங்கியதாழ்சடையன்
நண்புநல்லார்மல்குகாழிஞானசம்பந்தனல்ல
பண்புநள்ளாறேத்துபாடல்பத்துமிவைவல்லா
ருண்புநீங்கிவானவரோடுலகிலுறைவாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

அத்தி ருப்பதி கத்தினை யமர்ந்துகொண் டருளி
மைத்த வெங்கடு மிடற்றுநள் ளாறரை வணங்கி
மெய்த்த நற்றிரு வேட்டினைக் கழற்றிமெய்ம் மகிழ்ந்து
கைத்த லத்திடைக் கொண்டனர் கவுணியர் தலைவர்.

(இ-ள்.) கவுணியகோத்திரத் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அத்திருப்பதிகத்தை விரும்பிக் கொண்டருளிக் காளகண்டராகிய தெர்ப்பாரண்ணியேசரை வணங்கி மெய்ம்மை பொருந்திய அத்திருப்பதிக மெழுதிய திருவேட்டைக் கழற்றி, திருமேனி பூரிக்க மகிழ்கூர்ந்து திருக்கரத்திற் கொண்டருளினார்.

நன்மை யுய்க்குமெய்ப் பதிகத்தி னாதனென் றெடுத்து
மென்னை யாளுடை யீசன்ற னாமமே யென்று
மன்னு மெய்ப்பொரு ளாமெனக் காட்டிட வன்னி
தன்னி லாகெனத் தளிரிள வளரொளி பாடி.

(இ-ள்.) நன்மையைத் தருகின்ற மெய்ம்மைபொருந்திய திருப்பதிகத்தில் நாதனென் றெடுத்தும், என்னை யாண்டருளுஞ் சிவபெருமானது திருநாமமே எப்பொழுதும் நிலைபெற்ற மெய்ப்பொருளா யுள்ளதென்று காட்டும்படி இது நெருப்பி லழியாது நிலைபெறுகவென்று "தளிரிளவளரொளி" என்னு முதலையுடைய திருப்பதிகம் பாடியருளி.—எ-று.

நெருப்பில்வெந்தழியாது பச்சென்றிருந்து வெற்றியைத் தருதலால் ' நன்மையுய்க்கும் ' என்றும், பொய்யா மொழியாகிய வேதத்தின்மெய்ப்பொருளைமந் திருத்தலின் 'மெய்ப்பதிகம்' என்றும், போகமார்த்த பூண்முலையாள் தன்னொடும் பொன்னகலம் - பாகமார்த்த பைங்கண்வெள் ளேற்றண்ணல் பரமேட்டி " என்றமையால் ' நாதனென்றெடுத்தும் ' என்றுங் கூறினர்.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (எஅ௩)

---

திருநள்ளாறு - திருவிராகம் - பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

தளிரிளவளரொளிதனதெழில்தருதிகழ்மலைமகள்
குளிரிளவளரொளிவனமுலையிணையவைகுலவலில்
நளிரிளவளரொளிமருவுநள்ளாறர்தநாமமே
மிளிரிளவளரெரியிடிலிவைபழுதிலைமெய்ம்மையே.

சிற்றிடையரிவைதன்வனமுலையிணையொடுசெறிதரு
நற்றிறமுறுகழுமலநகர்ஞானசம்பந்தன
கொற்றவனெதிரிடையெரியினிலிடவிவைகூறிய
சொற்றெரியொருபதுமறிபவர்துயரிலர்தூயரே.

திருச்சிற்றம்பலம்.

---

செய்ய தாமரை யகவித ழினுமிகச் சிவந்த
கையி லேட்டினைக் கைதவன் பேரவை காண
வெய்ய தீயினில் வெற்றரை யவர்சிந்தை வேவு
வைய முய்ந்திட வந்தவர் மகிழ்ந்துமுன் னிட்டார்.

(இ-ள்.) உலகத்தார் கடைத்தேறும்படி அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிவந்த தாமரைமலரின் அகவிதழைப் பார்க்கினும் மிகச் சிவந்த திருக்கரத்தில் எடுத்த திருவேட்டைப் பாண்டியராசனது பெரிய சபையிலுள்ளவர்கள் காணவும், வெற்றரையினையுடைய சமணர்கள் மனம்புழுங்கவும், மகிழ்ந்து கொடிய நெருப்பில் முன்னே இட்டருளினர்.—எ-று. (எஅ௫)

இட்ட வேட்டினி லெழுதிய செந்தமிழ்ப் பதிக
மட்டு லாங்குழல் வனமுலை மலைமகள் பாகத்
தட்ட மூர்த்தியைப் பொருளென வுடைமையா லமர்ந்து
பட்ட தீயிடைப் பச்சையாய் விளங்கிய தன்றே.

(இ-ள்.) அவ்வாறு இட்டருளிய திருவேட்டி லெழுதப்பட்ட செந்தமிழ்த்திருப்பதிகமானது தேன்பொருந்திய மலர்க்கூந்தலையும் அழகிய ஸ்தனங்களையுமுடைய உமாதேவியாரை இடப்பாகத் துள்ள அட்டமூர்த்தியாகிய ஸ்ரீசிவபெருமானை மெய்ப்பொருளாக வுடைமையால் நிலைபெற்று மிருத்தெரிகின்ற அக்கினியில் அவ் வேடு பச்சையாய் விளங்கியது.—எ-று. (எஅ௬)

மைய னெஞ்சுடை யமணருந் தம்பொருள் வரைந்த
கையி லேட்டினைக் கதுவுசெந் தீயினி லிடுவா
ருய்யு மோவிது வெனவுறுங் கவலையா முணர்வா
னையு நெஞ்சின ராகியே நடுங்கிநின் றிட்டார்.

(இ-ள்.) மயக்கம் பொருந்திய மனத்தினையுடைய சமணர்களும தமது பொருளைக் குறித்து எழுதிய கையிலிருக்கும் ஏட்டை மூண்டு எரிகின்ற சிவந்த அக்கினியிலிடுகின்றவராய் இவ்வேடு நெருப்பில் எரியாது நிற்குமோ வென்னும் கவலை நிறைந்த உணர்வோடு வருந்திய மனமுடையவர்களாய் நடுங்கி நின்று அவ் வக்கினியிலிட்டார்கள்.—எ-று. (எசுஎ)

அஞ்சு முள்ளத்த ராகியு மறிவிலா வமணர்
வெஞ்சு டர்ப்பெருந் தீயினி லிழுத்திய வேடு
பஞ்சு தீயிடைப் பட்டது படக்கண்டு பயத்தா
னெஞ்சு சோரவும் பீலிகை சோர்ந்திலர் நின்றார்.

(இ-ள்.) நல்லறிவில்லாத சமணர்கள் அஞ்சிய மனமுடையவர்களாகியும், கொடிய சுவாலையையுடைய பெருந்தீயி லிட்ட ஏடானது அத்தீயிலிட்ட பஞ்சு போலாகியது; அவ்வாறாகக்கண்டு பயத்தினால் தம் மனஞ்சோரவும், பிடித்த மயிற் பீலியானது கைசோர்ந்து விழாமல் நின்றார்கள்.—எ-று. (எசுஅ)

மான மன்னவ னவையின்முன் வளர்த்தசெந் தீயின்
ஞான முண்டவ ரிட்டவே டிசைத்தநா ழிகையி
லீன மின்மைகண் டியாவரும் வியப்புற வெடுத்தார்
பான்மை முன்னையிற் பசுமையும் புதுமையும் பயப்ப.

(இ-ள்.) பெருமைபொருந்திய பாண்டியராசனது சபையின்முன்னே மூட்டிய சிவந்த அக்கினியில் சிவஞானப்பாலமுதுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார்இட்டருளிய திருவேடானது குறித்த நாழியிலே பழுதில்லாதிருத்தலைக்கண்டு யாவரும் அதிசயிக்க முன்னுள்ள தன்மையினும் பசுமையும் புதுமையு முடைத்தா யிருக்கும்படி எடுத்தருளினார்.—எ-று. (எசுகூ)

எடுத்த வேட்டினை யவையின்முன் காட்டியம முறையி
லடுத்த வண்ணமே கோத்தலு மதிசயித் தரசன்
றொடுத்த பீலிமுன் றாக்கிய கையரை நோக்கிக்
கடுத்து நீரிட்ட வேட்டினைக் காட்டுமி னென்றான்.

(இ-ள்.) (திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது திருக்கரத்தினால் தீயினின் றும்) எடுத்தருளிய திருவேட்டைப் (பாண்டியராசனது சபைக்குமுன்னே யாவருமறியக்) காட்டியருளி அத்திருமுறையில் முன் வைத்திருந்த முறைப்படியே கோத்தருளவும் பாண்டியராசன் ஆச்சரியமடைந்து கற்றையாகக்கட்டிய மயிற் பீலியைத் தூக்கிய கையையுடைய சமணர்களைப் பார்த்துக் கோபித்து நீங்கள் அக்கினியி லிட்ட ஏட்டைக் காட்டுங்களென்று கூறினான்.—எ-று. (எஅ௦)

## வேறு.

அருகர்தா மிட்ட வேடு வாங்கச்சென் றணையும் போதிற்
பெருகுதீக் கதுவ வெந்து போர்த்தமை கண்ட மன்னன்
றருபுனல் கொண்டு செந்தீத் தணிப்பித்தான் சமண ரங்குக்
கருகிய சாம்ப லோடுங் கரியலான் மற்றென் காண்பார்.

(இ-ள்.) சமணர்கள் தாங்களிட்ட ஏட்டை எடுக்கச் சென்றபொழுது மிக்க தீச்சுவாலை வீச, (அதனால்) உடல்வெதும்பி அவர்கள் நீங்கினமையைப் பார்த்தஅரசன் நீரைவூற்றி அந்நெருப்பைத்தணிப்பித்தான்; அப்பொழுது சமணர்கள் அவ்விடத்திற் கருகியசாம்பலுங் கரியு மல்லாமல் வேறு எதைக் காண்பார்கள். ()

செய்வதொன் றறிகி லாதார் திகைப்பினுற் றிரண்ட சாம்பல்
கையினுற் பிசைந்து தூற்றிப் பார்ப்பது கண்ட மன்ன
னெய்திய நகையி னேடு மேடின்ன மரித்துக் காணும்
பொய்யினுன் மெய்மை யாக்கப் புகுந்தநீர் போமி னென்றுன்.

(இ-ள்.) மேல் செய்யுங் காரியஞ் சிறிது மறியாத சமணர்கள் தடுமாற்றத்தோடு திரண்ட சாம்பலைத் தங்கள் கைகளினுல் பிசைந்து தூற்றிப் பார்ப்பதைக் கண்ட பாண்டியன் பொருந்திய புன்சிரிப்போடும் (அவர்களைப் பார்த்து நீங்களிட்ட) ஏட்டை இன்னம் அரித்துப் பாருங்கள்; பொய்ம்மையினுல் மெய்ம்மையை விளைவிக்க முயன்ற நீங்கள் போங்களென்று கூறினுன்.—எ-று. (எகஉ)

வெப்பெனுந் தீயில் யான்முன் வீடுபெற் றுய்ய நீங்க
ளப்பொழு தழிந்து தோற்றீ ராதலா லதுவா ருக
விப்பொழு தெரியி லிட்ட வேடுய்ந்த தில்லை யென்றுற்
றுப்புர வுடையீர் நீங்க டோற்றிலீர் போலு மென்றுன்.

(இ-ள்.) நான் வெப்புநோயென்னுந் தீயினின்றும் முன்பு விடுதலைப்பெற்றுப் பிழைக்க, நீங்கள் அப்பொழுதே செயலழிந்துதோற்றீர்கள்; ஆதலால் அதுவே வழியாக இப்பொழுது நீங்கள் நெருப்பிலிட்ட ஏடு உய்ந்ததில்லை யென்றுல், வன்மையையுடைய சமணர்களே! நீங்கள் இவ்வாதில் தோற்கவில்லைபோலும் என்று கூறினுன்.—எ-று. (எகங)

தென்னவ னகையுட் கொண்டு செப்பிய மாற்றந் தேரார்
சொன்னது பயனுக் கொண்டு சொல்லுவார் தொடர்ந்த வாது
மூன்றுற விருகாற் செய்தோ முக்காலி லொருகால் வெற்றி
யென்னினு முடையோ மெம்மை யினியொன்று காண்ப தென்றுர்.

(இ-ள்.) பாண்டியன் புன்னகை யுட்கொண்டுசொல்லிய சொற்பொருளை யறியாமல் அவன்சொன்னசொல்லைப் பயனுள்ள சொல்லாகக் கருதிச் சொல்லுகின்றுர்; தொடுத்த வாதினைமுன்னே இரண்டுதரஞ்செய்தோம்; மூன்றுதரத்தில் ஒருதரமாயினும் வெற்றியடைவோம் ஆதலால் எம்மை இனி ஒருதரம் வாதுசெய்து காணத்தக்கதென்றுர்கள்.—எ-று. (எகச)

தோற்கவு மாசை நீங்காத் துணிவிலார் சொல்லக் கேட்டிம்
மாற்றமென் னுவதென்று மன்னவன் மறுத்த பின்னும்

நீற்றணி விளங்கு மேனி நிறைபுகழ்ச் சண்பை மன்னர்
வேற்றுவா தினியென் செய்வ தென்றலு மேற்கோ ளேற்பார்.

(இ-ள்.) தோற்றும், பின்னும் வெல்லவேண்டுமென்னும் ஆசைநீங்காத சமணர்கள் இவ்வாறு சொல்லக்கேட்டு, பாண்டியன் (நீங்கள்கூறும்) இவ்வார்த்தையால் என்னபிரயோசனமென்று மறுத்த பின்னும், திருவெண்ணீற்றுப் பொலிவு விளங்குந்திருமேனியையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையார் சமணர்களைப் பார்த்து இனி வேறு என்னவாது செய்வோமென்று கேட்டருளவும் (சமணர்கள் அவர்கூறிய வார்த்தையை) மேற்கொள்வாராயினர்.—எ-று. (எகூகு)

நீடுமெய்ப் பொருளி னுண்மை நிலைபெறுந் தன்மை யெல்லா
மேடுற வெழுதி யற்றவ் வேட்டினை யாமு நீரு
மோடுநீ ராற்றி லிட்டா லொழுகுதல் செய்யா தங்கு
நாடிமுன் றங்கு மேடு நற்பொருள் பரிப்ப தென்றார்.

(இ-ள்.) சிறந்த மெய்ப்பொருளினது உண்மைநிலைபெற்ற இயல்புகளையெல்லாம் ஏட்டி லெழுதி அவ் வேட்டை யாங்களும் நீரும் வைகையாற்றிலோடுகின்ற தண்ணீரிலிட்டால் அவ்வாற்றுநீரோடு செல்லாது, அந்நீரில் எதிர்ந்து செல்லும் ஏடே மெய்ப்பொருளையுடையது என்று சொன்னார்கள்.—எ-று. (எகூசு)

என்றமண் கையர் கூற வேறுசீர்ப் புகலி வேந்தர்
நன்றது செய்வோ மென்றங் கருள்செய நணுகவந்து
வென்றிவே லமைச்ச னார்தாம் வேறினிச் செய்யு மிவ்வா
தொன்றினுந் தோற்றார் செய்வ தொட்டியே செய்வ தென்றார்.

(இ-ள்.) இவ்வாறு சமணர்களாகிய கீழ்மக்கள்சொல்ல, மிக்க புகழையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையார் (நீவிர்கூறியது) நன்று ; அதனைச்செய்வோமென்று அருளிச்செய்ய, வெற்றிபொருந்திய வேற்படையையேந்திய குலச்சிறைநாயனார் அரசனுக்குச் சமீபமாகவந்து வேறாகச்செய்யப்படும் இவ்வாது ஒன்றில் தோற்றவர்கள் யாது செய்வது? அதனை யிதுவென்று உடன்பட்டு, இனி வாது செய்யவேண்டுமென்று கூறினார்.—எ-று. (எகூஎ)

அங்கது கேட்டு நின்ற வமணரு மவர்மேற் சென்ற
பொங்கிய வெகுளி கூரப் பொறாமைகா ரணமே யாகத்
தங்கள்வாய் சோர்ந்து தாமே தனிவாதி லழிந்தோ மாகில்
வெங்கழு வேற்று வானிவ் வேந்தனே யென்று சொன்னார்.

(இ-ள்.) அங்கு அதைக்கேட்டுநின்ற சமணர்கள் அக்குலச்சிறைநாயனார் மேலுண்டாகிய கோபமானது அதிகரிக்கப் பொறாமையே காரணமாகத் தங்கள் வாய்சோர்ந்து, தாங்களே ஒப்பற்ற இவ்வாதில்தோற்றோமாகில் எங்களைக்கொடிய கழுவில் ஏற்றுகிறவன் இப்பாண்டியனே யென்று கூறினார்கள்.—எ-று. (எகூஅ)

மற்றவர் சொன்ன வார்த்தை கேட்டலு மலய மன்னன்
செற்றத்தா லுரைத்தி ருங்கள் செய்கையு மறந்தீ ரென்று
பற்றிய பொருளி னோடு படர்புனல் வைகை யாற்றிற்
பொற்புற விடுவ தற்குப் போதுவ தென்று கூற.

(இ-ள்.) அச்சமணர்கள் சொல்லிய வார்த்தையைப் பொறியமலைக்குத் த லைவனாகிய பாண்டியன் கேட்டவுடனே நீங்கள் கோபத்தாலிவ்வாறு கூறினீர்கள்; உங்கள்செய்கையையும் மறந்தீர்களென்று கூறி, நீங்களனுசரித்தொழுகும் சமய வுண்மையெழுதிய ஏட்டினைப் பார்த்துசெல்லும் நீரையுடைய வைகையாற்றில் விடு வதற்குப் புறப்படுங்களென்றுகூற.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (எ௯௯)

பிள்ளையார் முன்னம் பைம்பொற் பீடத்தி னிழிந்து போந்து
தெள்ளுநீர்த் தரளப் பத்திச் சிவிகைமே லேறிச் சென்றார்
வள்ளலா ரவர்தம் பின்பு மன்னன்மா வேறிச் சென்று
னுள்ளவா றறிகி லாதா ருணர்வுமா லேறிச் சென்றார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் முன்பு பசிய பொற்பீடத்தினி ன்று மிறங்கிச்சென்று தெளிந்த நீர்மைமையுடைய முத்துச்சிவிகையி லெழுந்த ருளிச் சென்றார் ; அருள்வள்ளலாகிய அப்பிள்ளையாருக்குப் பின்னே பாண்டிய ராசன் குதிரைமேலேறிச் சென்றான் ; உண்மையையுணராத சமணர்கள் மயக்க மேற்கொண்டு சென்றார்கள்.—எ-று. (அ00)

தென்னவன் வெப்புத் தீர்ந்து செழுமணிக் கோயி னீங்கிப்
பின்னுற வணைந்த போது பிள்ளையார் பெருகுஞ் செல்வ
மன்னிய மதுரை மூதூர் மறுகில்வந் தருளக் கண்டு
துன்னிய மாதர் மைந்தர் தொழுதுவே றினைய சொன்னார்.

(இ-ள்.) பாண்டியன் சுரநோய் ஒழிந்து செழுமைபொருந்திய அழகிய கோயிலினின்று நீங்கிப் பின்சென்றபொழுது, திருஞானசம்பந்தப்பிள்ளையார் மிக்க செல்வநிறைந்த பழமையாகிய மதுராபுரியின் திருவீதியி லெழுந்தருளப்பார் த்து அங்குநெருங்கிய ஸ்திரீகளும் புருஷர்களும் வணங்கித் தனித்தனி இவவாறு சொல்வாராயினார்.—எ-று. (அ0௧)

மீனவன் கொண்ட வெப்பை நீக்கிநம் விழுமந் தீர்த்த
ஞானசம் பந்த ரிந்த நாயனார் காணு மென்பார்
பானறுங் குதலைச் செய்ய பவளவாய்ப் பிள்ளை யார்தா
மானசீர்த் தென்ன னாடு வாழவந் தணைந்தா ரென்பார்.

(இ-ள்.) பாண்டியன்கொண்ட சுரநோயை யொழித்து நமது துன்பத்தை நீக்கியருளிய திருஞானசம்பந்தரென்னுந் திருநாமமுடையார் இந்தநாயனாரோகாணு மென்பார்கள் ; சிவஞானப் பான்மணங்கமழுங் குதலைச்சொல்லையும் சிவந்த பவ ளம்போன்ற திருவாயையுமுடைய இப்பிள்ளையார், மிக்க சிறப்பினையுடைய பா ண்டிநாடு பெருவாழ்வடையும்படி எழுந்தருளினாரென்று கூறுவார்கள்.—எ-று.

எரியிடை வாதிற் றோற்ற திவர்க்குநம் மருக ரென்பார்
புரிசடை யண்ண லீதே பொருளெனக் கண்டோ மென்பார்
பெருகொளி முத்தின் பைம்பொற் சிவிகைமேற் பிள்ளை யார்தாம்
வருமழ கென்னே யென்பார் வாழ்த்தன கண்க ளென்பார்.

(இ-ள்.) நமது சமணாசாரியர்கள் நெருப்பில் ஏடிட்டுச் செய்தவாதில் தோற்றது இப்பிள்ளையாரிடத்திலேயே யென்பார்கள்; முறுக்காகிய சடைமுடியையுடைய சிவபெருமானது திருவெண்ணீறே மெய்ப்பொருளென்று அறிந்தோமென்பார்கள்; மிக்க ஒளியினையுடைய பசும்பொன்மயமாகிய முத்துச்சிவிகையின்மேல் இப்பிள்ளையார் எழுந்தருளிவரும் அழகு என்ன வியப்பென்று சொல்லுவார்கள்; நமது கண்கள் (இவர்வரும் பொலிவைக்காணுதலால்) பெருவாழ்வடைந்தன வென்பார்கள்.—எ-று. (அ0௩)

ஏதமே விளைந்த திந்த வடிகண்மா ரியல்பா லென்பார்
நாதனு மால வாயி னம்பனே காணு மென்பார்
போதமா வதுவு முக்கட் புராணனை யறிவ தென்பார்
வேதமு நீறு மாகி விரவிடு மெங்கு மென்பார்.

(இ-ள்.) இந்தச் சமணாசாரியர்களுடைய செய்கையினால் நமக்கெல்லாம் குற்றமே நேர்ந்ததென்று சொல்லுவார்கள்; முதற்கடவுளும் திருவாலவாயி லெழுந்தருளிய ஸ்ரீ சுந்தரேசரே யென்று சொல்லுவார்கள்; (நாமடையவேண்டிய) மெய்ஞ்ஞானமாயுள்ளதும் மூன்று கண்களையுடைய அச்சுந்தரேசனை உணரும் உணர்ச்சியே யென்பார்கள்; இனி எவ்விடங்களிலும் வேதமும் விபூதியுமாய்ப் பரவிவிடும் என்பார்கள்.—எ-று. (அ0௪)

அடிகண்மார் முகங்க ளெல்லா மழிந்தன பாரீ ரென்பார்
கொடியவஞ் சனைக ளெல்லாங் குலைந்தன போலு மென்பார்
வடிகொள்வேன் மாறன் காதன் மாறின வண்ண மென்பார்
விடிவதாய் முடிந்த திந்த வெஞ்சம ணிருளு மென்பார்.

(இ-ள்.) நமது சமணாசாரியர்களுடைய முகங்களெல்லாம் வாடி யிருத்தலைப் பாருங்களென்று சொல்லுவார்கள்; அவர்கள் செய்யும் கொடிய வஞ்சனைகளனைத்தும் அழிந்தன போலுமென்று சொல்லுவார்கள்; வடித்த வேற்படையையேந்திய பாண்டியன் (நமது சமணமுனிவர்கள்மேல் வைத்த) அன்பு நீங்கினமை இவ்வண்ணமோ வென்பார்கள்; இந்தக் கொடியசமணர்களாகிய பேரிருளும் விடிவதாய் முடிந்ததென்று சொல்லுவார்கள்.—எ-று. (அ0௫)

நெருப்பினிற் றோற்றார் தாங்க ணீரில்வெல் வர்களோ வென்பா
ரிருப்புநெஞ் சுடைய ரேனும் பிள்ளையார்க் கெதிரோ வென்பார்
பருப்பொரு ளுணர்ந்தார் தாங்கள் படுவன பாரீ ரென்பார்
மருப்புடைக் கழுக்கோல் செய்தார் மந்திரி யார்தா மென்பார்.

(இ-ள்.) நெருப்பில் ஏடிட்டுத் தோற்ற சமணர்கள் இனி நீரில் ஏடிட்டு வெல்வார்களோ வென்பார்கள்; இச் சமணமுனிவர்கள் இரும்பைப்போலக் கடினசித்தமுடையவர்களாயிருப்பினும் பிள்ளையாரோடு வாது செய்வதற்கு எதிர் நிற்பாரோவென்று சொல்லுவார்கள்; நுண்பொருளல்லாத ஸ்தூலப்பொருளையுணர்ந்த சமணர்கள் தாங்கள் படும்பாடுகளைப் பின்பு பாருங்களென்று சொல்லுவார்கள்; மந்திரியாராகிய குலச்சிறைநாயனார் கொம்புகளை நுனியிற் கூரிட்டுத்தைத்த கழுமரங்களைச் செய்தாரென்று சொல்லுவார்கள்.—எ-று.

பருப்பொருள் = நுண்மையற்றபொருள்; அதாவது - சிறப்பில்லாத பிண்டப்பொருள் என்பதாம். (அ0௬)

ஏடுகள் வைகை தன்னி லிடுவதற் கணைந்தா ரென்பா
ரோடுநீ ருடன்செ லாது நிற்குமோ வோலை யென்பார்
நீடிய ஞானம் பெற்றார் நிறுத்தவும் வல்ல ரென்பார்
காடெலாங் காண விங்கு நண்ணுமா காணீ ரென்பார்.

(இ-ள்.) (இவ் விருதிறத்தாரும் தத்தஞ் சமயக்கொள்கைகளை யெழுதிய) ஏடுகளை வைகையாற்றிலிடுதற்கு வந்தார்களென்று சொல்லுவார்கள்; அவ்வேடு ஓடுகின்ற நீர்ப்பெருக்கோடு செல்லாமல் நிற்குமோவென்பார்கள்; சிறந்த சிவஞானமிர்தத்தை யுண்டருளிய பிள்ளையார் (தாம் இடுகின்ற ஏட்டைநீர்வழியே செல்லாமல்) நிறுத்தவும் வல்லவரென்று சொல்லுவார்கள்; (இவ்வதிசயத்தை) நாட்டிலுள்ளாரனைவருங் காணும்படி இங்கு வருகின்றதைக் காண்பீர்களாகவென்று சொல்லுவார்கள்.—எ-று. (அ0எ)

தோற்றவர் கழுவி லேறத் துணிவதே யருக ரென்பா
ராற்றிய வருளின் மேன்மை பிள்ளையார்க் கழகி தென்பார்
நீற்றினாற் றென்னன் றீங்கு நீங்கிய வண்ணங் கண்டார்
போற்றுவா ரெல்லாஞ் சைவ நெறியினைப் போற்று மென்பார்.

(இ-ள்.) (இவ்வாதில்) தோற்றவர்கள் கழுவில் ஏறும்படி அருகர்கள் துணிந்தது நிச்சயமென்று சொல்லுவார்கள்; மிக்க திருவருட் சிறப்பினையுடைய இக்காரியம் இப்பிள்ளையாருக்கு அழகாயிருந்ததென்று சொல்லுவார்கள்; விபூதியினால் பாண்டியனது சுரநோய் நீங்கியதன்மையைக் கண்டவர்கள் யாரும் சைவமார்க்கத்தைப் போற்றுவார்கள் ஆதலால், எல்லீரும் அந்நெறியினையே போற்றுங்களென்று சொல்லுவார்கள்.—எ-று. (அ0அ)

இன்னன விரண்டு பாலு மீண்டின ரெடுத்துச் சொல்ல
மின்னொளி மணிப்பொற் காம்பின் வெண்குடை மீது போதப்
பன்மணிச் சிவிகை தன்மேற் பஞ்சவ னாட்டு ளோர்க்கு
நன்னெறி காட்ட வந்தார் நான்மறை வாழ வந்தார்.

(இ-ள்.) (பிள்ளையாரெழுந்தருளுந் திருவீதியின்) இருபக்கத்திலும் நெருங்கிய ஸ்திரீபுருஷர்களனைவரும் இத்தகையவார்த்தைகளை எடுத்துச்சொல்ல, மின்போலும் ஒளிவிளங்கும் மணிக ளழுத்திய பொற்காம்பினை யுடைய வெள்ளிய முத்துக்குடைமேல் விளங்கிவர, பாண்டிநாட்டிலுள்ளவர்களுக்கு நன்னெறியை யுணர்த்தவந்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் பல முத்துக்களாலாகிய சிவிகையின்மேல் நான்கு வேதங்களும் நிலைபெற்று வாழும்படி எழுந்தருளினார்.—எ-று.

தென்றமிழ் விளங்க வந்த திருக்கழு மலத்தான் வந்தான்
மன்றுளா ரளித்த ஞான வட்டில்வண் கையன் வந்தான்
வென்றுல குய்ய மீள வைகையில் வெல்வான் வந்தா
னென்றுபன் மணிச்சின் னங்க ளெண்டிசை நெருங்கி யேங்க.

(இ-ள்.) அழகிய தமிழ்நாடு விளங்கும்படி யவதரித்த திருஞானசம்பந்தப் பிள்ளையாரெழுந்தருளினார்; கனகசபையில் ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளும் ஸ்ரீ சிவபெருமானருளிய சிவஞானப்பால் நிறைந்த பொற்கிண்ணத்தை யேந்திய அழகிய திருக்கரத்தையுடையவ ரெழுந்தருளினார்; (அனல்வாதத்தால் சமணர்

களை) வென்று, மீளவும் உலகத்தா ருய்யும்படி வைகைநதியில் வெல்லுகின்றவர் எழுந்தருளினர் என்று பல முத்துச்சின்னங்கள் எட்டுத்திக்குகளிலும் நெருங்கி யொலிக்கவும்.—எ-று.

தமிழ் ஆகுபெயராய் அது வழங்கும் நிலத்தை யுணர்த்திற்று; அன்றி, தமிழ் விளங்க என்பதற்கு, தமிழ்மொழி விளக்கமுற எனினும் பொருந்தும். தென் - தெற்கு எனவுமாம். (அ௬0)

பன்மணி முரசு சூழ்ந்த பலவிய மியம்பப் பின்னே
தென்னனுந் தேவி யாரு முடன்செலத் திரண்டு செல்லும்
புன்னெறி யமணர் வேறோர் புடைவரப் புகலி வேந்தர்
மன்னிய வைகை யாற்றின் கரைமிசை மருவ வந்தார்.

(இ-ள்.) சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் பல மணிக ளழுத்திய முரசுமுதலியவாகச் சூழ்ந்த பல வாத்தியங்க ளொலிக்கவும், தமக்குப் பின்னே பாண்டியனும் பாண்டிமாதேவியாருங் கூடவரவும், கூட்டமாகச் செல் லுகின்ற புல்லிய சமயநெறியையுடைய சமணர்கள் வேறோர் பக்கத்திற் செல்ல வும், நிலைபெற்ற வைகையாற்றின்கரையிலே பொருந்தவந்தருளினர்.—எ-று. ()

கார்கெழு பருவம் வாய்ப்பக் காமுறு மகளி ருள்ளஞ்
சீர்கெழு கணவன் றன்பால் விரைவுறச் செலலு மாபோ
னீர்கெழு பெளவ நோக்கி நிரைதிரை யிரைத்துச் செல்லும
பார்கெழு புகழின மிக்க பண்புடை வைகை யாறு.

(இ-ள்.) மழைபெய்தற்குரிய நிறைந்த கார்ப்பருவம்வர, அதனால், தங்கண வனை விருமபிய பெணகளின மனமானது சிறப்புமிக்க தமது நாயகனிடத்து விரைந்து செல்லும் வகைபோல, (அக் கார்ப்பருவம் வர) உலகத்தில் நிறைந்த புக ழாற் சிறந்த வைகைநதியானது நீர நிறைந்த சமுத்திரத்தை நோக்கி வரிசையாக அலைகளைவீசி யொலித்துப்பாயும்.—எ-று.

தனது நாயகனைப்பிரிந்த தலைவி கார்காலத்தைக்கண்டு தன்னாயகன் இன் னம் வரவில்லையேயென்று வருந்துத லியல்பாகலின், "காா்கெழுபருவம் வாய்ப் பக் காமுறு மகளிருள்ளம் - சீர்கெழுகணவன் றனபால் விரைவுறச் செல்லுமா போல், என்று கூறினர். (அ௬உ)

ஆற்றினீர் கடுக வோடு மருங்குற வரச னோக்கி
நீற்றணி திகழ்ந்த மேனி நிறைமதிப் பிள்ளை யாரும்
வேற்றுரு வருகர் நீரும விதித்தவே டிடுக வென்றான்
தோற்றவர் தோலா ரென்று முன்னுறத் துணிந்திட் டார்கள்.

(இ-ள்.) வைகையாற்று நீர விரைந்து செல்லுங் கரையி னருகு வருங்கால் பாண்டியராசன் பார்த்துத் திருவெண்ணீற்றுப்பொலிவு விளங்குந் திருமேனியை யுடைய பூரணசந்திரன்போன்ற திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் வேற்றுச் சின் னங்களையுடைய அருகரோ! நீங்களும் நியமிக்கப்பட்ட ஏட்டை இடுக்கடவீரெ ன்றான் ; (அதைக் கேட்ட சமணர்கள்) முன் தோற்றவர் பின்னுந் தோல்விய டையாரென்று முற்பட்டுத் துணிந்து (தமது கையிலிருக்கும் ஏட்டை அவ்வாற்று நீரில்) இட்டார்கள்.—எ-று.

நிறைமதிப்பிள்ளையார்-என்பதற்கு, பேரறிவினையுடைய பிள்ளையார் எனி னுமாம். (அகஙட)

படுபொரு ளின்றி நெல்லிற் பதடிபோ லுள்ளி லார்மெய்
யடுபவர் பொருளை யத்தி நாத்தியென் றெழுதி யாற்றிற்
கடுகிய புனலைக் கண்டு மவாவினாற் கையி லேடு
விடுதலும் விரைந்து கொண்டு வேலைமேற் படர்ந்த தன்றே.

(இ-ள்.) மெய்ப்பொருளைக் கருதுதலின்றி (அரிசியாகிய உள்ளீடில்லாத) நெல்லிற் பதர்போல, அறிவாகிய உள்ளீடில்லாமல் மெய்ப்பொருளைப் பொய்ப் பொருளென்று கருதுஞ சமணர்கள் (தமது நூலிற் கூறும் பொருளை) "அத்தி நாத்தி" என்று எழுதி, ஆற்றில் அதிவேகத்துடன் பாயும் நீரைப் பார்த்தும் அவா வின் மேலீட்டினால் கையிலிருக்கும் ஏடுகளை விடவும், அவ் வேட்டை வைகை யாறு விரைந்து அடித்துக்கொண்டு கடலை நோக்கிச் சென்றது.—எ-று. (அகஙச)

ஆறுகொண் டோடு மேட்டைத் தொடர்ந்தெதி ரணைப்பார் போலத்
தேறுமெய் யுணர்வி லாதார் கரைமிசை யோடிச் சென்றார்
பாறுமப் பொருண்மேற் கொண்ட பட்டிகை யெட்டா தங்கு
நூறுவிற் கிடைக்கை முன்னே போனது நோக்கிக் காணார்.

(இ-ள்.) தெளிந்த மெய்யுணர்ச்சியில்லாத சமணர்கள ஆறு அடித்துக்கொ ண்டு (கடலை நோக்கிச்) செல்லும் ஏட்டைப் பின்றொடர்ந்து எதிரே அணைப்பவர் போலக் கரைமேலோடிச் சென்றார்கள்; நிலைபெறுதழியும் பொய்ப்பொருளை எழுதிய அவ வேடுகள் அவர்கள் கைக்கு எட்டாமல் நூறு விற்கிடை தூரத்திற்கு அப்பாற் சென்றமையைப் பாாத்துக்காணுதவரானார்கள்.—எ-று.

பாறுதல்=ஓடுதல்; ஈண்டு வாதில் நிலைபெறாமையைக் குறித்தது. (அகஙரு)

காணவு மெய்தா வண்ணங் கடலின்மேற் செல்லு மேடு
நாணிலா வமணர் தமமை நட்டாற்றில விட்டுப போகச்
சேணிடைச் சென்று நின்றார் சிதறினா திகைத்தார் மன்ன
னாணையில் வழுவ மாட்டா தஞ்சுவா ரணைய மீணடார்.

(இ-ள்.) கண்ணாற் காணுதற்குங் கூடாதபடிக் கடலைநோக்கிச் செல்லும் ஏடானது சிறிதும் நாணமில்லாத சமணர்களை நட்டாற்றில் விட்டுச்செல்ல, அதி தூரஞ்சென்று நின்ற அச்சமணர்கள் (ஒருவரோடொருவர் சேராமல்) சிதறி மன ந்திகைத்துப் பாண்டியனது ஆக்கினையினின்றும் வழுவமாட்டாமல் அஞ்சினவர் களாய் ஒரு சேரத்திரும்பினார்கள்.—எ-று.

நட்டாற்றில்விடுதலாவது—தன்னை நம்பினவர்களை ஆதரியாமல் ஆபத்துக் குள்ளாக்கிவிடுதல். (அகஙசு)

வேறொரு செயலி லாதார் வெருவுற்று நடுங்கித் தம்பா
லீறுவந் தெய்திற் றென்றே மன்னவ னெதிர்வந் தெய்தி
யூறுடை நெஞ்சி லச்சம் வெளிப்பட வொளிப்பார் போன்று
மாறுகொண் டொரு மிட்டால் வந்தது காண்டு மென்றார்.

(இ-ள்.) வேறொரு செயலுமில்லாத அச்சமணர்கள் அஞ்சி நடுக்கங்கொ ண்டு தங்களுக்கு அழிவுகாலம் வந்ததென்று பாண்டியனுக்கு எதிரில்வந்து நின்று

துன்பமடைந்திருக்குந் தமது மனதில் அச்சமானது வெளிப்பட அதனை ஒளிப்பார்போலப் (பிள்ளையாரைப்பார்த்து)எதிரியாயிருக்கும் நீவிரும் உம்முடைய ஏட்டையிட்டால் நேரிவேவதைப் பார்ப்போமென்று சொன்னார்கள்.—எ-று.

வேறொரு செய லில்லாமை யாவது.—திருஞானசம்பந்தப்பிள்ளையாரை வெல்லுதற்கு வேறொரு தொழிலையு முணராமை. (௮௧௭)

மாசுசே ரமண ரெல்லா மதியினின் மயங்கிக் கூற
வாசிலா நெறியிற் சேர்ந்த வாசனு மவரை விட்டுத்
தேசுடைப் பிள்ளை யார்தந் திருக்குறிப் பதனை நோக்கப்
பாசுரம் பாட லுற்றார் பரசம யங்கள் பாற.

(இ-ள்.) குற்றம்பொருந்திய சமணர்களெல்லாரும் தங்களறிவில் மயக்கமுற்று இவவாறு கூற, குற்றமற்ற சைவநெறியிற்சேர்ந்த பாண்டியராசனும் அந்தச் சமணர்களை விட்டுச் சிவஞானப் பொலிவுநிறைந்த திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருக்குறிப்பைப்பார்க்க, அப்பிள்ளையார் புறச்சமயங்கள் நிலைகெட்டோடும்படித் திருப்பாசுரம் பாடத்தொடங்கினார்.—எ-று.

'பரசமயங்கள்' என்பது, வேதசம்பந்த மல்லாத உலகாயதம் - சைனம் - பவுத்தம் முதலிய மதங்களும், வேதசம்பந்தமான பாஞ்சராத்திரம் சாங்கியம் முதலிய மதங்களுமாம். அவை, புறப்புறச்சமயம் - புறச்சமயம் - அகப்புறச் சமயம் - அகச்சமயம் என்று நானகுவகையாய், ஒவ்வொன்றும் அவ் வாறு பிரிவினதாயுள்ள உலகாயதமுதல் பேதவாதம் ஈறாகிய இருபத்துநான்கு சமயபேதங்களையுமாமெனவறிக. இவற்றின் விரிவை முன்னர்க்காண்க. (௮௧௮)

தென்னவன் மாறன் றானுஞ் சிரபுரத் தலைவர் தீண்டிப்
பொன்னவில் கொன்றை யாரதந் திருநீறு பூசப் பெற்று
முன்னைவல் வினையு நீங்கி முதல்வனை யறியுந் தன்மை
துன்னினான் வினைக ளொததுத் துலையென நிற்ற லாலே.

(இ-ள்.) பாண்டியராசனும் சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது திருக்கரத்தினால் தீண்டிப் பொன்னுக்கொப்பாகப் புகழ்ந்து சொல் கொன்றைமலர் மாலையையணிந்த சிவபெருமானது திருவெண்ணீற்றைப் பூசப்பெறுதலால் தான் முன்பு செய்துள்ள தீவினையினின்று நீங்கி துலையிலிட்ட பொருள்போல இருவினை யொப்புவாய்ந்து நிற்றலால் சிவபெருமானையறியுஞ் சத்திநிபாதத்தன்மையை யடைந்தான்.—எ-று.

இருவினை யொப்புவாய்ந்து மல பரிபாக முற்றவிடத்தே சத்திநி பாதமுண்டாகும்; சத்தி-சிற்சத்தி, நிபாதம்-பதிதல், அதாவது ஆன்மாவினது ஞானத்தைத் தடுக்கும் ஆணவமல சத்தி நழுவும் அவசரத்திலே சிவத்தினது சிற்சத்தி பதிந்து அவ்வான்மாவின் நித்தியஞானக் கிரியையை விளக்குவதாம். அந்தச் சத்திநிபாதம் மந்ததரம்-மந்தம்-தீவிரம்-தீவிரதரம் என நான்குவகைப்படும். (௮௧௯)

வேறு.

உலகியல் வேதநூ லொழுக்க மென்பது
நிலவுமெய்ந் நெறிசிவ நெறிய தென்பதுங்
கலதிவா யமணர்காண் கிலார்க ளாயினும்
பலர்புகழ் தென்னவ னறியும் பான்மையால்.

(இ-ள்.) உலக இயல்பாயுள்ளது வேதசாஸ்திரத்தின் வழியொழுகும் ஒழுக்கமே யென்பதையும், அவ்வேதத்தில் நிலைபெற்று விளக்கும் மெய்ந்நெறியாயுள்ளது சைவநெறியே யென்பதையும், கலகஞ் செய்யும் வாதத்தை வாயினை யுடைய சமணர்கள் காணாராயினும், யாவராலும் புகழ்ப்பெற்ற பாண்டியராசன் அவற்றை அறியுந்தன்மையால்.—எ-று. (அஉ0)

---

திருப்பாசுரம் - பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

வாழ்கவந்தணர்வானவரானினம்
வீழ்கதண்புனல்வேந்தனுமோங்குக்
ஆழ்கதீயதெல்லாமரனாமமே
சூழ்கவையகமுந்துயர்தீர்கவே. (க)

அரியகாட்சியராய்த்தமதங்கைசே
ரெரியரோறுகந்தேறுவர்கண்டமுங்
கரியர்காடுறைவாழ்க்கையராயினும்
பெரியாராரறிவாரவர்பெற்றியே. (உ)

வெந்தசாம்பல்விரையெனப்பூசியே
தந்தையாரொடுதாயிலர்தம்மையே
சிந்தியாவெழுவார்வினைதீர்ப்பரா
லெந்தையாரவரெவ்வகையார்கொலோ. (ங)

ஆட்பாலவர்க்கருளும்வண்ணமுமாதிமாண்புங்
கேட்பான்புகிலளவிலலைகிளக்கவேண்டா
கோட்பாலனவும்வினையுங்குறுகாமையெந்தை
தாட்பால்வணங்கித்தலைநின்றிவைகேட்கதக்கார். (ச)

ஏதுக்களாலுமெடுத்தமொழியாலுமிக்குச்
சோதிக்கவேண்டாசுடர்விட்டுளனெங்கள்சோதி
மாதுக்கநீங்கலுறுவீர்மனம்பற்றிவாழ்மின
சாதுக்கண்மிக்கீரிறையேவந்துசார்மின்களே. (ரு)

ஆடும்மெனவும்மருங்கூற்றமுதைத்துவேதம்
பாடும்மெனவும்புகழல்லதுபாவநீங்கக்
கேடும்பிறப்பும்மறுக்கும்மெனக்கேட்டீராகில்
நாடுந்திறத்தார்க்கருளல்லதுநாட்டலாமே. (சா)

கடிசேர்ந்தபோதுமலரானகைக்கொண்டுநல்ல
படிசேர்ந்தபால்கொண்டங்காட்டிடத்தாதைபண்டு
முடிசேர்ந்தகாலையறவெட்டிடமுக்கண்மூர்த்தி
யடிசேர்ந்தவண்ணமறிவார்சொலக்கேட்டுமன்றே. (எ)

வேதம்முதல்வன்முதலாகவிளங்கிவைய
மேதப்படாமேயுலகத்தவரேத்தல்செய்யப்

பூதம்முதல்வன்முதலேமுதலாப்பொலிந்த
சூதன்ஒலிமாலையென்றேகலிக்கோவைசொல்லே. (அ)

பாராழிவட்டம்பகையானலிந்தாட்டவாடிப்
பேராழியானதிடர்கண்டருள்செய்தல்பேணி
நீராழிவிட்டேறிநெஞ்சிடங்கொண்டவற்குப்
போராழியீந்தபுகழும்புகழுற்றதன்றே. (௯)

மாலாயவனும்மறைவல்லநான்முகனும்
பாலாயதேவர்பகரில்லமுதூட்டல்பேணிக்
காலாயமுந்நீர்கடைந்தார்க்கரிதாயெழுந்த
வாலாலமுண்டங்கமரர்க்கருள்செய்ததாமே. (௧0)

அற்றன்றியந்தண்மதுரைத்தொகையாக்கினானும்
தெற்றென்றுதெய்வந்தெளியார்கரைக்கோலைதெண்ணீர்
பற்றின்றிப்பாங்கெதிர்விரவும்பண்புநோக்கிற்
பெற்றென்றுயர்த்தபெருமான்பெருமானுமன்றே. (௧௧)

நல்லார்கள்சேர்புகலிஞானசம்பந்தனல்ல
வெல்லார்களும்பரவுமீசனையேத்துபாடல்
பல்லார்களுமதிக்கப்பாசுரஞ்சொன்னபத்தும
வல்லார்கள்வானோருலகாளவும்வல்லரன்றே. (௧உ)

திருச்சிற்றம்பலம்.

---

அந்தணர் தேவரா னினங்கள் வாழ்கவென்
றிந்தமெய்ம் மொழிப்பய னுலக மின்புறச்
சந்தவேள் விகள்முதல் சங்க ராக்குமுன்
வந்தவர்ச் சனைவழி பாடு மன்னவாம்.

(இ-ள்.) "வாழ்கவந்தணர் வானவ ரானினம்" என்று கூறிய இவ்வுண்மை மொழியின்பொருள் உலகத்தாரின்பமடையும்படிச் சிவபெருமானுக்குமுற்பட்ட (வேதவிதியாய்) வந்தஅழகிய யாகமுதலிய அருச்சனையும் வழிபாடும் நிலைபெறும் பொருட்டாம்.—எ-று.

சிவபெருமானை முதல்வராகக்கொண்டு, யாகாதிகிருத்தியஞ் செய்தற்குரிய வைதிகசைவவேதியரும், பரார்த்த பூசையாகிய சிவார்ச்சனை செய்தற்குரிய ஆதிசைவவேதியருமாகிய இருதிறத்தினரு மடங்கப் பொதுப்பட "வாழ்கவந்தணர்" என்றும், விஷ்ணுப்பிரம்மேந்திராதி தேவர்கள் அங்கதேவதைகளா யிருந்து அவ்விருவகைப்பயனையும் ஏற்றுக்கோடலால், "வானவர்" என்றும், வேள்வி சிவார்ச்சனை யிரண்டிற்கும் இன்றியமையாச் சிறப்பினதாயிருந்து பஞ்சகௌவியங்களைத்தருதலின், "ஆனினம்" என்றுங் கூறியருளியதாம். (அஉ௧)

வே று.

வேள்வி நற்பயன் வீழ்புன லாவது
நாளு மர்ச்சனை நல்லுறுப் பாதலா
லாளு மன்னனை வாழ்த்திய தர்ச்சனை
மூளு மற்றிவை காக்கு முறைமையால்

(இ-ள்.) வேள்வியின் நல்லபயனுகியமழையை "வீழ்கதண்புனல்" என்று அருளியது, நாள்தோறுஞ் சிவார்ச்சனைக்குரிய நல்ல வுறுப்பாயிருத்தலா லாகும்; உலகத்தை அரசாட்சி செய்யும் அரசனைக்குறித்து "வேந்தனுமோங்குக" என்று வாழ்த்தியது, சிவார்ச்சனை முதலிய அறங்களை வழுவாது காக்கும் முறைமையினுலாகும்.—எ-று.

அந்தணரும், வானவரும், ஆனினமும் நிலைபெற்றோங்கவே, அவர்கள் செய்யு மிருவகைப் பூசைகளால் மாத மும்மாரி தவறாது பெய்யுமாதலின், "வீழ்க தண்புனல்" என்றும், இவை யனைத்திற்கும் அரசனது செங்கோன்மையே காரணமாதலின் "வேந்தனும் ஓங்குக" என்று கூறியருளியதாம். (அஉஉ)

ஆழ்க தீயதென் றேரதிற் றயனெறி
வீழ்க வென்று வேறெல்லா மரன்பெயர்
சூழ்க வென்றது தொல்லுயிர் யாவையும்
வாழி யஞ்செழுத் தோதி வளர்கவே.

(இ-ள்.) "ஆழ்கதீய தெல்லாம்" என்று அருளிச்செய்தது, புறச்சமயங்களனைத்தும் அழியக்கடவன வென்று கூறியதாம்; வேறுயுள்ள எவ்விடங்களிலும சிவபெருமான் திருப்பெயர் சூழ்கவென்று அமைத்து "அரனுமமேசூழ்க" என்று அருளிச்செய்தது, அநாதியாகவே யுள்ள ஆன்மகோடிகளனைத்தும் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை யுச்சரித்து வாழ்கவென்று கூறியருளியதாகும்.—எ று.

வேந்தன் செங்கோல் கோடாது அரசாட்சிசெய்யின் புறச்சமயங்கள் பாழ்பட் டொழியு மாதலின், "ஆழ்க தீயதெல்லாம்" என்றும், அவ்வாறாகவே உலகனைத்தும் சிவநாமமாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தையே யோதி யுய்யுமாதலின், "அரனுமமே சூழ்க" என்றுங் கூறியதாம். (அஉ௩)

சொன்ன வையக முந்துயர் தீர்கவே
யென்னு நீர்மை யிகபரத் திற்றுயர்
மன்னி வாழுல கத்தவர் மாற்றிட
முன்ன ஞானசம் பந்தர் மொழிந்தனர்.

(இ ள்.) புகழ்ந்து சொல்லப்பட்ட "வையகமுந் துயர்தீர்கவே" என்று அருளிச்செய்தது, இம்மை மறுமைகளிலுள்ள துன்பத்தைப்பெற்று உலகததில் வாழுமனிதர்கள் அதனையொழிக்கும் பொருட்டுத் திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது முதற்றிருப்பாசுரத்தில் அருளிச்செய்தனர்.—எ-று.

அவ்வாறு உலகனைத்தும் ஸ்ரீபஞ்சாக்ஷரோச்சாரணஞ் செய்யவே தமது பிறவித்துன்ப நீங்கி முத்திபெறுதல் சத்தியமாதலின், "வையகமுந்துயர்தீர்கவே" என்று கூறியருளியதாம். (அஉ௪)

அரிய காட்சிய ரென்பதவ் வாதியைத்
தெரிய லாநிலை யாற்றெரி யாரென
வுரிய வன்பினிற் காண்பவர்க் குண்மையாம்
பெரிய நல்லடை யாளங்கள் பேசினார்.

(இ-ள்.) "அரிய காட்சியராய்" என்று அருளிச்செய்தது அச்சிவபெருமானை உணரக்கூடாத (பௌத்தம் சமண முதலிய சமயங்களின்) நிலைமையினுல் அறியப்படாரென்னும் பொருள்பட,பொருந்திய மெய்யன்பினுல் தரிசிப்ப

வர்க்கு அறிவிற்கறிவாய் விளங்கும் சிறந்த நல்ல அடையாள விலக்கணங்களை அருளிச்செய்தார்.—எ-று. (அ௨௫)

ஆயி னும்பெரி யாரவ ரென்பது
மேய விவ்வியல் பேயன்றி விண்முதல்
பாய பூதங்கள் பல்லுயி ரண்டங்க
ளேயும் யாவு மிவர்வடி வென்றதாம்.

(இ-ள்.) "ஆயினும்பெரியர்" என்று அருளிச்செய்தது, பொருந்திய அரிய காட்சியர் முதலிய இலக்கணங்களே யன்றி, ஆகாயமுதலாகப் பரந்த பஞ்சபூதங்களும் பலஉயிர்வர்க்கங்களும், சகல அண்டங்களும் இவையல்லாத மற்றும் பொருந்திய எல்லாப்பொருள்களும் இவரது திருவுருவமே யென்றருளியதாம்.—எ-று.

'விண்முதல் பாய பூதங்கள் பல்லு யிரண்டங்கள் ஏயு யாவு மிவர்வடிவு' என்பதனை,

"வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி
யூனாகி யுயிராகி யுண்மையுமா யின்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை யென்சொல்லி வாழ்த்துவனே."—என வரும் அருள்வாக்கினானு முணர்க. (அ௨௬)

பின்பு மாரறி வாரவர் பெற்றியே
யென்ப தியாருணர் வாலுஞ்சென் றெட்டொணா
மன்பெ ருந்தன்மை யாரென வாழ்த்தினா
ரன்பு சூழ்சண்பை யாண்டகை யாரவர்.

(இ-ள்.) அன்பு நிறைந்த சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் பின்பும் "ஆரறிவாரவர்பெற்றியே" என்று அருளிச்செய்தது எத்தகையாரது உணர்வினாலுஞ் சென்றடையக்கூடாத நிலைபெற்ற பெருந்தன்மையையுடையாரென்று வாழ்த்தினா ரென்றதாம்.—.எ-று (அ௨௭)

வெந்த சாம்பல் விரையென் பதுதம
தந்த மில்லொளி யல்லா வொளியெலாம்
வந்து வெந்தற மற்றப் பொடியணி
சந்த மாக்கொண்ட வண்ணமுஞ் சாற்றினார்.

(இ-ள்.) "வெந்தசாம்பல் விரையெனப்பூசி" என்றருளியது, தமது முடிவில்லாத சுயஞ்சோதியென்று கூறும் ஒளியல்லாத மற்றைய வொளிகளெல்லாந் தம்மிடத்தொடங்கித் தமது இரௌத்திரியென்னுஞ் சத்தியால் நீறாய்விட, அந்தச் சுடலைப்பொடியை அழகிய சந்தனமாகக்கொண்டு அணிந்த முறைமையையுஞ் சாற்றியருளினார்.—எ-று.

பூதமுதல் நாத மீறாகவுள்ள முப்பத்தாறு தத்துவங்களும், அத் தத்துவமூர்த்திகளாகிய பிரமன்-விஷ்ணு - இந்திரன்-சோம-சூரி-யாக்கினி முதலிய தேவர்களும் மகாசங்காரகாலத்தில் தனது இரௌத்திரி யென்னுஞ் சத்தியால் தகிக்கப்பட்டுத் தன்னிடத் தொடுங்குதலால், அத் தகிக்கப்பட்ட பொடியைத் தனது திருமேனியில் கலவைச்சந்தனம்போலப் பூசி நடித்தலின், "மற்றப்பொடியணி சந்தமாக்கொண்டவண்ணம்" என்று கூறியருளினார். (அ௨௮)

தமக்குத் தந்தையர் தாயில ரென்பது
மமைத்தி யாவையு மாங்கவை வீந்தபோ
திமைத்த சோதி யடக்கிப்பின் னீதலா
லெமக்கு நாதர் பிறப்பில ரென்றதாம்.

(இ-ள்.) தமக்குத் "தந்தையாரொடுதாயிலர்" என்று அருளியது, இவவுலகத்தில் சடசித்துக்களாகிய எல்லாப்பொருள்களையுஞ் சிருட்டித்து. பின்பு அப்பொருள்கள் தத்தமியல்பு குன்றியொடுங்குங் காலத்தில், விளங்குகின்ற பராசத்தியிலொடுக்கிப் பின் தோற்றுவித்தலால் எமது முதல்வராகிய சிவபெருமான் பிறப்பு இறப்பில்லாதவரென்று அருளிச்செய்ததாம்.—எ-று.

எல்லாப்பொருள்களுந் தனனிடத்திற்றோன்றி யொடுங்க, தானொன்றிற்றோன்றுதலு மொடுங்குதலு மின்மையால் 'பிறப்பிலா' என்றுகூறினர். உபலக்ஷணத்தால், இறப்புமில்லாதவரென்பது வருவிக்கப்பட்டது. இதனை,

"எல்லார் பிறப்பு மிறப்புமியற் பாவலர்தஞ்
சொல்லாற் றெளிந்தோநஞ் சோணேச—ரில்லிற்
பிறந்தகதை யுங்கேளேம் பேருலகில் வாழ்ந்
திறந்தகதை யுங்கேட் டிலேம்" — என வருங் குகைநமசிவாயமூர்த்திகள் திருவாக்கானு முணர்க. (அஉகூ)

தம்மை யேசிந்தி யாவெனுந் தன்மைதான்
மெய்ம்மை யாகி விளங்கொளி தாமென
விம்மை யேகினை வார்தம மிருவினைப்
பொய்ம்மை வல்லிருள் போக்குவ ரென்றதாம்.

(இ-ள்.) "தம்மையே சிந்தியா வெழுவார் வினைதீர்ப்பர்" என்று அருளியது மெய்ப்பொருளாய் விளங்குகின்ற ஒளிவடிவாயுள்ளவர் சிவபெருமானேயென்று இம்மையில் தியானிக்கும் அடியார்களது நல்வினைதீவினைகளுக்குக் காரணமாகிய மயக்கத்தைத்தரும் வலிய ஆணவவிருளை நீக்கியருளுவர் என்று கூறியருளியதாம்.—எ-று. (அகூ0)

எந்தை யாரவ ரெவ்வகை யார்கொலென்
றிந்த வாய்மைமற் றெப்பொருட் கூற்றினு
முந்தை யோரையே கூற்றின் மொழிவதென்
றந்தண் பூந்தராய் வேந்த ரருளினர்.

(இ-ள்) "எந்தையாரவ ரெவ்வகையார்கொல்" என்று அருளிய இந்த உண்மைமொழியின் பொருள், திருமால்பிரமன்முதலிய முதற்பொருளாய்க் கூறும் எப்பொருட்பகுதிகளினும் முதற்காரணராகிய சிவபெருமானையே அப் பகுதிகளிற் கூறுவதென்று அழகிய சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அருளிச்செய்தனர்.—எ-று.

சிவபெருமான் அவ்வப்பொருட்கூற்றில் அதுவதுவாகியும் அன்றாகியும் விளங்கிநிற்றலால் தனக்கென வோரியல்புகூற வமையாமையின், 'எவ்வகையார்கொல்' என்று அருளிச்செய்தனர். இதனை,

"இன்றெனக்கருளியிருள்கடிந் துள்ளத்தெழுகின் றஞாயிறேபோன்று
நின்றநின் றன்மைநினைப்பறநினைந்தேனீயலாற்பிறிதுமற்றின்மை [னே
சென்றுசென் றணுவாய்த்தேய்ந்துதேய்ந்தொன்றாந்திருப்பெருந் துறையுறைசிவ

யொன்றுநீயல்லையன்றியொன்றில்லையாருன்னையறியகிற்பாரே" — எனவருந் திருவாசகத் திருமுறையானு முணர்க. (௮௯௧)

ஆதி யாட்பா லவர்க்கரு ளுந்திற
நாதன் மாட்சிமை கேட்க நவிலுங்கா
லோது மெல்லை யுலப்பில வாதலின்
யாது மாராய்ச்சி யில்லைபா மென்றதாம்.

(இ-ள்.) சிவபெருமான் ஆட்கொள்ளும் பகுதியையுடைய அடியார்களுக்கு அருள்செய்யுந் தன்மையையும், அவ்வெம்பெருமானது முதன்மைக்குணத்தையும் யாவருங்கேட்கும்படி சொல்லுமிடத்தில், யாம்கூறுஞ் சொல்லளவி லடங்காவாதலால் எவ்வளவும் வினவி யறியு மாராய்ச்சி யின்மையின, "ஆட்பாலவர்க்கருளும் வண்ணமுமாதி மாண்பும் கேட்பான புகிலளவில்லை கிளக்கவேண்டா' என்று கூறி யருளியதாம்.—எ-று. (௮௯௨)

அன்ன வாதலி லாதியார் தாளடைந்
தின்ன கேட்கவே யேற்றகோட் பாலவு
முன்னை வல்வினை யுமமுடி வெய்துமத்
தன்மை யார்க்கென் றனர்சண் பை காவலர்.

(இ-ள்.) அத்தன்மையுடையனவாதலால் சிவபெருமானது திருவடிகளையடைந்து இவ்வியல்புகளைக் கேட்குங்கால் மேற்கூறிய தன்மையையுடைய அடியார்களுக்கு பொருந்திய நல்வினையும் பழமையாகிய தீவினையும் முடிவெய்தும் என் றருளிச்செய்தார் ; சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார். ()

மன்னு மேதுக்க ளாலெனும வாய்மைதான்
றன்ன தொப்புவே றின்மையிற் சங்கர
னின்ன தன்மையை யேது வெடுத்துக்காட்
டன்ன வாற்று லளப்பில னென்றதாம.

(இ-ள்.) நிலைபெற்ற "ஏதுக்களாலு மெடுத்தமொழியாலுமிக்குச் - சோதிக்கவேண்டா" னென்றருளிய தன் மெய்ப்பொருளாவது, தனக்குச் சமானமான பொருள் வேறொன்றிலலாமையினால் சிவபெருமான தமது ஒப்பற்றதன்மையை ஏதுக்களாலும், திருஷ்டாந்தங்களினாலும் அளவிடுதற்கரியவனொன் றருளியதாம்.

"தன்னதொப்புவேறின்மை" என்றதனை,

"மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி
மயானத்தான் வார்சடையா னென்னி னல்லா
னொப்புடைய னல்ல னொருவ னல்ல
னோரூர னல்லனோ ருவம னில்லி
யப்படியு மந்நிறமு மவவண் ணமு
மவனருளே கண்ணாகக் காணி னல்லா
லிப்படிய னிந்நிறத்த னிவ்வண் ணத்த
னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொ ணாதே."— என
வருந் திருத்தெளித்தமிழ்வேதத்தானும்,

'ஏது வெடுத்துக்காட் டன்ன வாற்று லளப்பிலன்' என்றதனை,

"மறையினு லயனுன் மாலான் மனத்தினுல் வாக்கான் மற்றுங்
குறைவிலா வளவி னுலுங் கூருெணு தாகி நின்ற
விறைவனுர் கமல பாத மின்றியா னியம்பு மாசை
நிறையினுர் குணத்தோர்க் கெல்லா நகையினை நிறுதது மன்றே"— என
வருஞ் சிவஞானசித்தித் திருவிருத்தத்தானு முணர்க. (அ௩௪)

தோன்று காட்சி சுடர்விட் டுளனென்ப
தான்ற வங்கி புறத்தொளி யாயன்பி
னூன்ற வுள்ளெழுஞ் சோதியாய் நின்றன
னேன்று காண்பார்க் கிதுபொரு ளென்றதாம.

(இ-ள்.) "சுடர்விட்டுள னெங்கள்சோதி" என்று கூறியருளியதன் மெய்ப்பொருளாவது, திருவருளோடுகூடிக்காணுஞ் சிவஞானிகளுக்கு, மிகுந்த அக்கினியானது புறத்திலுள்ள ஒளியாக அன்பினுல் சிந்திக்குங்கால் (புறத்திலுள்ள ஒளிகளையெல்லாம் விளக்கும்) அகத்தொளியாய் நிற்கின்றுன் என்று கூறியருளியதாம்.—எ-று.

'ஆன்றவங்கி புறததொளியாய்' என்றதனுல், சந்திரசூரியர்களையுங் கொள்க. சிவபெருமான் புறத்தொளியாயுள்ள அச்சோமசூரியாக்கினி யென்னு முச்சுடருக்கும் உளளிருந் தொளிகொடுக்கும் சுயஞ்சோதியாகிய பேரொளியாய் நிற்றலின் 'உள்ளெழுஞ் சோதியாய் நின்றனன்' எனறு கூறினுர். (அ௩௫)

வேறு.

மாதுக்க நீங்க லுறுவீர்மனம பற்று மென்ப
தாதிச் சுடாச்சோ தியையன்பி னகத்துள் ளாக்கிப்
போதித்த நோக்குற் றுழியாமற் பொருந்தி வாழ்ந்து
பேதித்த பந்தப் பிறப்பின் னெறிபேர்மி னென்றும்.

(இ-ள்.) "மாதுக்கநீங்கலுறுவீர் மனம்பற்றிவாழ்மின்" என்றருளியது, எல்லாவொளிகட்கு முதற்காரண வொளியாயுள்ள சிவபெருமானை அனபினுல தமது அகத்துட்சேர்த்து ஞானநோக்கமுற்று அதனை நீஙகாமல் கூடிவாழ்ந்து (அநாதியாகவே) பேதிக்கின்ற மலமாயாபந்தத்தாலாகிய பிறப்பின்வழியை யொழிப்பீர் என்று அருளியதாம்.—எ-று. (அ௩௬)

வேறு.

ஈண்டு சாதுக்க ளென்றெடுத் தோதிற்று
வேண்டும் வேட்கைய வெல்லாம விமலர்தாள்
பூண்ட வன்பினிற் போற்றுவீர் சார்மினென்
றூண்ட சண்பை யரச ரருளினுர்.

(இ-ள்.) இவவிடத்து "சாதுக்கள் மிக்கீ ரிறையேவந்து சார்மின்கள்" என்று அருளியது, வேண்டும் விருப்பமுடையன வெல்லாம் சிவபெருமானது திருவடிகளிற்பூண்ட அன்புகாரணமாகக்கொண்டு துதிக்கின்ற அடியார்களே! நீங்கள் அவ்வெம்பெருமானது திருவடிகளை அடையுங்களென்று நம்மை அடிமையாகக்கொண்ட திருஞானசம்பந்தப்பிள்ளையார் அருளிச்செய்தனர்.—எ-று. (அ௩எ)

வேறு.

ஆடும்மென வாந்திருப் பாட்டி னமைத்த மூன்று
நீடும்புக ழோபிறர் துன்பநீத் தற்கோ வென்று
தேடு மூணர்வீ ருலகுக்கிவை செய்த நீசர்
கூடுங் கருணைத் திறமென்றனர் கொள்கை மேலோர்.

(இ-ள்.) "ஆடும்" என்னு முதலையுடைய திருப்பாசுரத்தில் "ஆடும்மெனவும் மருங்கூற்றமுதைத்து வேதம் பாடும் மெனவும்" என்று அருளிச்செய்தமூன்றும் மிக்கபுகழைக் கருதியோ? அல்லது தன்னையடைந்தாரது துன்பத்தை நீக்குதற்பொருட்டோ? என்று ஆராயும் அறிவினையுடையீர்! சிவபெருமான் உலகத்தார்பொருட்டு இச்செயல்மூன்றையுஞ் செய்தருளியது அவரது காருண்ணியத்தின் திறம் என்று அருளிச்செய்தனர்; மேம்பட்ட கொள்கையினை யுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையார்.—எ-று.

சிவபெருமான் உலகுயிர்கள்மேல் வைத்த காருண்ணியவியல்பால் செய்தருளும் பஞ்சகிருத்திய தாண்டவத்தைப் பதஞ்சலிவியாக்கிரபாதர் பொருட்டுத் திருவம்பலத்தில் நடித்தருளுவதும், எவ்வுயிர்களையுங் கவர்ந்துசெல்லும் இயமனை மார்க்கண்டேயர்பொருட்டு உதைத்தருளியதும், உலகுயிர்கள் விதிநிஷேதங்களை யுணர்ந்து ஒழுகுதற்பொருட்டு வேதங்களையருளிச் செய்ததுமாகிய இவையனைத்தும் சிவபெருமான் உலகுயிர்மேல்வைத்த பெருங்கருணைத் திறமேயன்றித் தனக்கோர்புகழ்கருதியன்றாகலின் 'கூடுங்கருணைத்திறம்' என்று கூறி யருளினர். ()

கருதுங் கடிசேர்ந்த வெனுந்திருப் பாட்டி லீசர்
மருவும் பெரும்பூசை மறுத்தவர்க் கோறன் முத்தி
தருதன் மையதாதல் சண்டீசர் தஞ்செய்கை தக்கோர்
பெரிதுஞ் சொலக்கேட்டன மென்றனர் பிள்ளை யார்தாம்.

(இ-ள்.) யாவருஞ் சிந்திக்கத்தக்க "கடிசேர்ந்த" என்னு முதலையுடைய திருப்பாசுரத்தில், சிவபெருமானைக் குறித்துச் செய்யும் சிறந்த பெரும்பூசையைச் சிதைத்தவர்களைக் கொல்லுதலே முத்திபெறுதற் கேதுவாயுள்ள தென்பதைச் சண்டேசநாயனாரது திவ்வியசரித்திரமுறைமையால் மேலோர்கள் மிகவுஞ் சிறப்பித்துச் சொல்லக் கேள்வியுற்றோகூறியருளினர்; திருஞானசம்பந்தபிள்ளையார்.

சிவபூசையைச் சிதைத்தவன் தன் பிதாவென்று சிறிதுங் கருதாது அவன் தாளைத்துணித்த பாவத்தையும் புண்ணியமாகக் கருதி முத்தியளித்தலின் 'மருவும் பெரும்பூசை மறுத்தவர்க் கோறன்முத்தி தருதன்மையதாதல்' என்று கூறியருளினர். இதனை,

"தீதில்லைமாணிசிவகருமஞ்சிதைத்தானைச்
சாதியும்வேதியன்றாதைதனைத்தாளிரண்டுஞ்
சேதிப்பவீசன்றிருவருளாற்றேவர்தொழப்
பாதகமேசோறுபற்றினவாதோணோக்கம்." — என வருந் திருவாசகத் திருமுறையானு முணர்க. (அ௩.௩)

வேத முதல்வ னெனும்மெய்த் திருப்பாட் டினினே
ராதி யுலகோ ரிடர்நீங்கிட வேத்த வாடும்

பாத முதலாம் பதினெண் புரா ணங்க ளென்றே
யோதென் றுரைசெய் தனர்யாவு மோதா துணர்ந்தார்.

(இ-ள்.) "வேதம்முதல்வன்" என்று அருளிய மெய்ம்மைபொருந்திய திருப்பாசுரத்தின் பொருள் (அவ்வேதத்தால் பிரதிபாதிக்கப்படும்) முதற்கடவுளாயுள்ளவர் உலகத்தார் பிறவித்துன்பத்தினின்று நீங்கும்பொருட்டுத் துதிக்கத் திருவம்பலத்தில் திருநடனஞ் செய்தருளும் திருவடியை யுடைய சிவபெருமானேயாம்; (அவர் முதற்கடவுளென்பதை யுணர்த்துதற்குரிய பிரமாணங்கள் அவவேதமே யன்றிப்) பதினெண் புராணங்களு மாமெனறு, அப்புராணங்களை யோதியுணர்வாயென்று சகலஞானங்களையும் ஓதாதுணர்ந்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் அருளிச்செய்தார்.—எ-று.

வேதத்தின் அர்த்தமே புராணங்க ளாகலின் "பதினெண் புராணங்களென்றே யோதென் றுரைசெய்தனர்' என்று கூறியருளினர். (௮௪௦)

பாவுற்ற பாராழி வட்டத்திருப் பாட்டி னுண்மை
காவற் றொழிலா னெனுங்கண்ணனுங் காவல் பெற்ற
தியாவர்க்கு மேலாய வீசனரு ளாழிபெற்று
மேவுற்ற சீருற்றது வென்றனா வேதவாயர்.

(இ-ள்.) சிறந்த "பாராழிவட்டம" என்று அருளிச்செய்த திருப்பாசுரத்தின் உண்மைப்பொருள், காவற்றொழிலை யுடையானென்று கூறும் திருமாலும் அக்காக்குந் தொழிலை யடைந்தது எல்லாத தேவாகட்கும மேலாகிய சிவபெருமான் கொடுததருளிய (சுதரிசன மென்னும) சக்கரததைப் பெற்றதனு லுண்டாகிய புகழ் உலகில் நிலைபெற்றதென்று திருநெறிததமிழ்வேத மோதியருளுந் திருவாயினையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையாா கூறியருளினர்.—எ-று.

சிவபெருமான சலந்தராசுரனை யழித்தற்பொருட்டுத் தமது திருவடிப் பெருவிரலினற் பூமியி லொருசக்கரங்கீறி இதனை யெடுக்கவென, அவனவவாறே யதனை யெடுத்துச் சிரமேற் றூங்க, உடனே அவனுடலை இரண்டாகப்பிளந்த அச சக்கரப்படையைத் திருமால் பகைவரை யழித்தற்பொருட்டுச் சிவபெருமானை ஆயிரந்தாமரைமலராற் பூசிக்குங்கால், அவற்றுளொருமலர் குறைய உடனே தனது கண்ணைப் பிடுங்கி யருச்சித்தமையால சிவபெருமான் றிருவுள மகிழ்ந்து அதனையீந்தருளினரென்பது புராணவரலாறு.

"அருமலரோன்சிரமொன்றறுத்தீரசெறுத்தீரழற்சூலத்திலந்தகனைத்
திருமகள்கோனெடுமால்சிறப்பாகியபூசனைசெய்பொழுதி
லொருமலராயிரத்திற்குறைவாணிறைவாகவோர்கண்மலர்சூட்டலுமே
பொருவிறலாழிபுரிந்தளித்தீர்பொழிலார்திருப்புத்தூர்ப்புனிதனீரே." —
எனவரும் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் தேவாரததாலும்,

"சலந்தர னுடலங் கீண்ட சக்கரப் படையாய் போற்றி
வலந்தரு மதனை மாயோன் வழிபடக் கொடுத்தாய் போற்றி
யலர்ந்தசெங் கமலப் புத்தே ணடுச்சிர மரிந்தாய் போற்றி
சிலந்தியை மகுடஞ்சூட்டா வரசருள் செல்வம் போற்றி." —என வருந் திருவிளையாடற்புராணத்தானு முணர்க. (௮௪௧)

மாலா யவனென்ன வருந்திருப் பாட்டின் மாலுந்
தோலா மறைநான் முகனுந்தொடர் வானமரா
ரேலா வகைசுட்ட நஞ்சுண் டிறவாமைக் காத்த
மேலாங் கருணைத் திறம் வெங்குரு வேந்தர் வைத்தார்.

(இ-ள்.) "மாலாயவன்" என்று அருளிய திருப்பாசுரத்தில், திருமாலும் வெற்றிபொருந்திய வேதங்களை யுணர்ந்த பிரமனும் முதலாகிய தேவர்கள் தன்னெதிர் நிற்காவண்ணம் எரித்த ஆலாகலவிஷத்தை யுண்டருளி அத்திருமால்முதலியோ ரிறவாமற் காத்தருளிய சிறந்த திருவருளின் திறத்தைச் சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் வைத்தருளினர்.—எ-று.

சிவபெருமான் திருப்பாற்கடலிற் றோன்றிய விடத்தைத் திருமிடற்றிலடக்கித் திருமால்முதலியோரைக் காத்தருளிய திவ்ய சரித்திரத்தை முன் திருநீலகண்டநாயனார் புராணத்துக் கூறினமையின் ஆண்டுக் கண்டுணர்க.

"ஓத விடமுண் டுபயநிறத் தாமரைமேற்
கோதையர்க்குத் தாலி கொடுத்தவரார்" —என வருந் தைவீகவுலாவானு முணர்க. (அ௪௨)

வேறு.

ஆனவற் றன்றி யென்ற வத்திருப் பாட்டிற் கூடன்
மாநக ரத்துச் சங்கம் வைத்தவன் றேற்றத் தேறு
வீனர்க ளெலலைக் கிட்ட வேடுநீ ரெதிர்ந்து செலவில்
ஞானமீ சன்பா லன்பே யென்றனர் ஞானமுண்டார்.

(இ-ள்.) சிறந்த "அற்றன்றி" என்று அருளிய திருப்பாசுரத்தில் பெரிய மதுரைத் திருப்பதியில் முத்தமிழ்ச் சங்கத்தை வளர்த்த பாண்டியராசன் தெளிவிக்கத்தெளியாத கீழ்மக்களாகிய சமணர்கள் ஏடு இடும் வைகையாற்றினெல்லையில் தாம் இடும் ஏடானது அவ்வாற்றுநீரில் எதிர்ந்து சென்றால், மெய்ஞ்ஞானமாவது சிவபெருமானிடத்து வைத்த அன்பே என்று அருளிச்செய்தார்; சிவஞானப்பாலமுதுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார்.—எ-று. (அ௪௩)

வேறு.

வெறியார் பொழிற்சண் பையர்வேந்தர் மெய்ப்பா சுரத்தைக்
குறியே றியவெல்லை யறிந்துகும் பிட்டே னல்லேன்
சிறியே னறிவுக் கவர்தந்திருப் பாதந் தந்த
நெறியே சிறிதியா னறிநீர்மைகும் பிட்டே னன்பால்.

(இ-ள்.) வாசனைபொருந்திய சோலைசூழ்ந்த சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அருளிச்செய்த மெய்ம்மைபொருந்திய திருப்பாசுரத்தை அப்பாசுரத்திற் குறித்த பொருளினளவை யறிந்து துதித்தவ னல்லேன்; சிறியேனுடைய சிற்றறிவிற்கு அவ்வருள் வள்ளலாரது திருவடிகள் தந்தருளிய திருவருளின்வழியே சிறிது அடியேனறிந்த வண்ணம் அன்பால் துதித்தேன்—எ-று. ()

அலரும்விரை சூழ்பொழிற் காழியு ளாதி ஞான
மலருந்திரு வாக்குடை வள்ளலா ருள்ள வண்ணம்
பலருமுணர்ந் துய்யப் பகர்ந்து வரைந்தி யாற்றி
னிலவுந்திரு வேடு திருக்கையா னீட்டி யிட்டார்.

(இ-ள்.) மலர்களலரும் வாசனைசூழ்ந்த சோலையையுடைய சீகாழியிலவதரித்தருளிய சிவஞானநிறைந்த திருவாக்கினையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையார் வேதசிவாகமங்களிற் கூறும் உண்மைநெறியைத் திருப்பாசுரமாக அருளிச்செய்து அதனை எட்டிலெழுதி வைகையாற்றில் விளங்குகின்ற அத்திருவேட்டை (இதுவே மெய்ப்பொருளென்று) யாவரு முணர்ந்துய்யும்பொருட்டுத் தமது திருக்கரத்தினால் நீட்டி யிட்டருளினார்.—எ-று. (அசரு)

வேறு.

திருவுடைப் பிள்ளை யார்தந் திருக்கையா லிட்ட வேடு
மருவிய பிறவி யாற்றின் மாதவர் மனஞ்சென் றாற்போற்
பொருபுனல் வைகை யாற்றி லெதிர்த்துநீர் கிழித்துப் போகு
மிருநிலத் தோர்கட் கெல்லா மிதுபொரு ளென்று காட்டி.

(இ-ள்.) திருவருட் செல்வத்தையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது திருக்கரத்தாலிட்டருளிய திருப்பாசுர மெழுதிய திருவேடானது தம்மைத் தொடர்ந்த பிறவியாகிய ஆற்றில் மகத்தாகிய தவத்தினையுடைய அடியார்களது மனமானது (அதன் வழித்தாகாது தன் வழித்தாய்ச்) சென்றாற்போலப் பெரிய நிலவுலகத்தி லுள்ளவர்களுக்கெல்லாம் இச்சைவ சமயப்பொருளே மெய்ப்பொருளென்று காட்டிக் கரையை மோதிச்செல்லுகின்ற நீர்நிறைந்த வைகையாற்றின் கண் எதிர்த்து அந்நீரைக் கிழித்துச் செல்லும்—எ-று. (அசசு)

எம்பிரான் சிவனே யெல்லாப் பொருளுமென் றெழுது மேட்டிற்
றம்பிரா னருளால் வேந்தன் றன்னைமுன் னோங்கப் பாட
வம்புய மலராள் மார்ப னநபாய னென்னுஞ் சீர்த்திச்
செம்பியன் செங்கோ லென்னத் தென்னன்கூ னிமிர்ந்த தன்றே.

(இ-ள்.) எமது ஆண்டவராகிய சிவபெருமானே சடசித்துக்களாகிய எல்லாப்பொருள்களுமா யுள்ளவரென்னும் பொருளை யமைத்தெழுதிய திருப்பாசுரத்தில், சிவபெருமான் திருவருளினால் அரசனைக்குறித்து "வேந்தனு மோங்குக" என்று முன்பு பாடியருளுதலால் இலக்ஷுமி வசிக்கும மார்பினையுடைய புகழமைந்த அநபாயசோழமகாராஜாவினுடைய செங்கோலைப்போல, அந்தப் பாண்டியராசன் அடைந்திருந்த கூனானது நிமிர்ந்தது.—எ-று.

அரசனை விஷ்ணு அமிசம் பொருந்தியுள்ளவனென்று கூறுதல் மரபாகலான், 'அம்புயமலராள் மார்ப னநபாயனென்னுஞ் சீர்த்திச்செம்பியன்' என்று கூறினார். திருஞானசம்பந்தப்பிள்ளையார் முன்னமே விபூதியெடுத்துப் பூசப்பெற்றுச் சுரநோயோடு தனது கூனும் நீங்கத்தக்க பரிபாகம் பெற்றுள்ளவனாகலான், "வேந்தனு மோங்குக" என்ற வுடனே கூன் ஒழிந்து கூன்பாண்டியனென்னும் பெயர் மாறி, நின்றசீர்நெடுமாறனென்னும் பெயர் பெற்றனனென்க. (அசஎ)

ஏடுநீ ரெதிர்ந்து செல்லும் பொழுதிமை யோர்க ளெல்லா
நீடிய வாழ்த்திற் போற்றி நிமிர்ந்தபூ மாரி தூர்த்தா
ராடியல் யானை மன்ன னற்புத மெய்தி நின்றான்
பாடுசே ரமண ரஞ்சிப் பதைப்புடன் பணிந்து நின்றார்.

(இ-ள்.) திருப்பாசுரமெழுதிய திருவேட்டானது வைகைநீர்ப் பெருக்கில் எதிர்ந்து செல்லும்பொழுது எல்லாத்தேவர்களும் மிக்க வாழ்த்தொலியால் துதித்து நிறைந்த பூமழைபொழிந்தார்கள்; வெற்றிபொருந்திய அழகிய யானைப்படையையுடைய பாண்டியராசன் அற்புதமடைந்து நின்றான்; இறுமாப்புடைய சமணர்கள் அஞ்சிப் பதைபதைப்போடு தலைகுனிந்துநின்றார்கள்.—எ-று.(அ௬அ)

ஆற்றின்மேற் செல்லு மேடு தொடர்ந்தெடுப் பதற்கு வேண்டிக்
காற்றினுங் கடுகச் செல்லுங் கடுமபரி யேறிக் கொணடு
கோற்றொழி றிருத்த வல்ல குலச்சிறை யார்பின் சென்றா
ரேற்றுயர் கொடியி னானைப் பாடினா ரேடு தங்க.

(இ-ள்.) வைகையாற்றில் எதிர்ந்துசெல்லுந் திருப்பாசுரத் திருவேட்டைச் செங்கோற்றொழிலைத் திருத்தவல்லவராகிய குலச்சிறைநாயனார் தொடர்ந்தெடுக்க விரும்பிக் காற்றைப்பார்க்கிலும் வேகமாகச் செல்லுங் கடுநடையையுடைய குதிரையின்மே லேறிக்கொண்டு பினசென்றருளினா; அத் திருப்பாசுரத் திருவேடு (அவ்வாறெதிர்ந்து செல்லாமல்) தங்கும்பொருட்டு (பிள்ளையார்) இடபக்கொடியையுடையசிவபெருமானைத்திருப்பதிகம்பாடி யருளினார்.—எ-று. (அ௬௯)

ஏடகம் பிள்ளை யார்தாம் வன்னியென் றெடுத்துப் பாடக்
கூடிய நீரி லேடு குலச்சிறை யாருங் கூடிக்
காடிட மாக வாடுங் கண்ணுதல் கோயின் மாடு
நீடுநீர் நடுவுட் புக்கு நினறவே டெடுத்துக் கொண்டார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவேடகத் திருப்பதிகத்தை "வன்னி" என்று முதலெடுத்துப் பாடியருள, நீரில பொருந்திய திருவேட்டினைக் குலச்சிறைநாயனாருஞ் சென்றடைந்து, மகாமசானமேநாடகசாலையாக அமர்ந்து திருநடனஞ் செய்தருளும் நெற்றிக்கண்ணராகிய ஸ்ரீசிவபெருமானது திருக்கோயிலின் பக்கத்தில் மிக்க ஆற்று நீரின் நடுவிற்சென்று அங்கு நின்ற திருவேட்டையெடுத்தருளினார்.—எ-று. (அ௭0)

---

திருவேடகம் - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

வன்னியுமத்தமுமதிபொதிசடையினன்
பொன்னியறிருவடிபுதுமலரவைகொடு
மன்னியமறையவர்வழிபடவடியவ
ரின்னிசைபாடலரேடகத்தொருவனே.

கோடுசர்தனமகில்கொண்டிழிவைகைநீ
ரோடுசென்றணைதருமேடகத்தொருவனை
நாடுதென்புகலியுண்ஞானசம்பந்தன
பாடலபத்திவைவல்லார்க்கில்லையாம்பாவமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - ஏடகநாதர், தேவியார் - உமையம்மை.

---

தலைமிசை வைத்துக் கொண்டு தாங்கரு மகிழ்ச்சி பொங்க
வலைபுனற் கரையி லேறி யங்கினி தமர்ந்த மேருச்
சிலையுடை யவர்தாள் போற்றி மீண்டுசென் றணைவார் தெய்வ
மலைமகள் குழைத்த ஞான முண்டவர் தம்பால் வந்தார்.

(இ-ள்.) திருவேட்டை எடுத்துச் சிரமேற்கொண்டு பெருமகிழ்ச்சி பொங்க அலைகின்ற நீரையுடைய வைகைநதிக் கரையிலேறி அங்கு இனிமையோடு வீற்றிருந்தருளும் மேருமலையாகிய வில்லையுடைய சிவபெருமானது திருவடிகளைத் துதித்துத் திரும்பிச்செல்கின்றவராய்த் தெய்வத்தன்மை பொருந்திய பர்வத ராசபுத்திரியாகிய உமாதேவியார் குழைத்தூட்டிய சிவஞானமிர்தத்தை யுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரிடத்து வந்தருளினார்.—எ-று. (அ௱௩)

மற்றவர் பிள்ளை யார்தம் மலரடி வணங்கிப் போற்றிக்
கொற்றவன் முதலா யுள்ளோர் காணமுன் கொணர்ந்த வேடு
பற்றிய கையி லேந்திப் பண்பினு ளியார்க்குங் காட்ட
வற்றருள் பெற்ற தொண்ட ரரவொலி யெழுந்த தன்றே.

(இ-ள்.) அக்குலச்சிறைநாயனார் திருஞானசம்பந்தப்பிள்ளையாரது தாமரைமலர்போன்ற திருவடிகளை வணங்கித் துதித்துப் பாண்டியராசன் முதலிய சபையிலுள்ளவர்களனைவருங் காணும்படி முன்பு கொண்டுவந்த திருப்பாசுரமெழுதிய திருவேட்டை யெடுத்த திருக்கரத்தில் தாங்கி முறைமைப்படி யாவர்க்குங் காட்டியருள, பாசபந்தங்களை யொழித்துத் திருவருளை யடைந்த அடியார்கள் செய்யும் அரகர வென்னும் பேரோசையானது எங்கும் பரவியது.—எ-று.

மன்னவன் மாறன் கண்டு மந்திரி யாரை நோக்கித்
துன்னிய வாதி லொட்டித் தோற்றவிச் சமணர் தாங்கள்
முன்னமே பிள்ளை யார்பா லனுசித முற்றச் செய்தார்
கொன்னுனைக் கழுவி லேற்றி முறைசெய்க வென்று கூற.

(இ-ள்.) அதனைப் பாண்டியராச னறிந்து குலச்சிறைநாயனாரைப்பார்த்து, பொருந்திய வாதில் உடன்பட்டுத் தோற்ற இந்தச் சமணர்கள் (வாது செய்தற்கு) முன்னமே இத் திருஞானசம்பந்தப்பிள்ளையாரிடத்திலே அனுசிதம் வரும்படிச் செய்தார்கள்; ஆதலால், இவர்களைக்கொல்லத்தக்க மிக்க கூர்மையையுடைய கழுவில் ஏற்றித் தண்டஞ் செய்வீராக வென்று சொல்ல.—எ-று.

'கழுவிலேற' என்றும் பாடம்.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (அ௱௫)

புகலியில் வந்த ஞானப் புங்கவ ரதனைக் கேட்டு
மிகலில ரெனினுஞ் சைவ ரிருந்துவாழ் மடத்திற் றீங்கு
தகவிலாச் சமணர் செய்த தன்மையாற் சாலு மென்றே
பகையிலா வேந்தன் செய்கை விலக்கிடா திருந்த வேலை.

(இ-ள்.) சீகாழிப்பதியி லவதரித்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் அதனைக் கேட்டும், தாம் அவர்கள்மேல் சிறிதும் பகையில்லாதவராயினும் சிவனடியார்களிருந்து வாழுந் திருமடத்தில் தகுதியில்லாத அச்சமணர்கள் தீங்குவிளைத்த

தன்மையால், இத்தண்டனை தகும் என்று குற்றமற்ற பாண்டியராசனது செய்கையை விலக்காமலிருந்தபொழுது.—எ-று. (அ௱௪)

பண்புடை யமைச்ச ரும் பாருளோ ரறியு மாற்றாற்
கண்புடை பட்டு நீண்ட கழுத்தறி நிரையி லேற்ற
நண்புடை ஞான முண்டார் மடத்துத்தீ நாடி யிட்ட
வெண்பெருங் குன்றத் தெண்ணா யிரவரு மேறினார்கள்.

(இ-ள்.) நற்குண மமைந்த குலச்சிறைநாயனாரும் உலகத்தா ரறியும்படி (சமணர்களைக்) கணுவோடுபுடைபருத்துநீண்டவரிசையாகிய கழுமரங்களில்ஏற்ற, யாவரிடத்தும் அன்பினையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையா ரெழுந்தருளுந் திருமடத்தில் விரும்பித் தீப்பற்றச்செய்த பெரிய எட்டுமலைகளிலு மிருந்து வந்த எண்ணாயிரம் சமணர்களும் ஏறினார்கள்.—எ-று. (அ௱௫)

தோற்றவர் கழுவி லேறித் தோற்றிடத் தோற்றுந் தம்ப
மாற்றிடை யமண ரோலை யழிவினா லார்ந்த தம்பம்
வேற்றொரு தெய்வமின்மை விளக்கிய பதாகைத் தம்பம்
போற்றுசீர்ப் பிள்ளை யார்தம் புகழ்ச்சயத் தம்பமாகும்.

(இ-ள்.) வாதில் தோற்ற சமணர்கள் கழுவிலேறியிருக்கத் தோற்றுகின்ற அக் கழுஸ்தம்பமானது வைகையாற்றில் சமணர்கள் தங்கள் சமயவுண்மையை யெழுதியிட்ட ஏடானது தோற்ற காரணத்தினால் பொருந்திய ஸ்தம்பமாகவும், (சிவபெருமானை யன்றி) வேறொரு தெய்வமில்லாமையை விளக்கிய துவசஸ்தம்பமாகவும், யாவருந் துதிக்குஞ் சிறப்பினையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது புகழை நிறுத்திய வெற்றிஸ்தம்பமாகவும் விளங்கும்.—எ-று. (அ௱௬)

தென்னவன் றனக்கு நீறு சிரபுரச்செல்வ ரீந்தார்
முன்னவன் பணிந்து கொண்டு முழுவது மணிந்து நின்றான்
மன்னனீ றணிந்தானென்று மற்றவன் மதுரை வாழ்வார்
துன்னினின் றார்களெல்லாந் தூயநீ றணிந்து கொண்டார்.

(இ-ள்.) சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் பாண்டியராசனுக்கு விபூதிகொடுத்தருளினார்; முன்னே அப் பாண்டியன் வணங்கி அதனையேற்றுக்கொண்டு சரீரமுழுவதும் அணிந்து நின்றான்; பாண்டியராசன் விபூதியணிந்தானென்று அம் மதுரைப்பதியில் வாழ்கின்றவர்களும் அவனைச் சார்ந்து நின்றவர்களுமாகிய யாவரும் பரிசுத்தம்பொருந்திய விபூதியை யணிந்துகொண்டார்கள்.—எ-று. (அ௱௭)

பூதிமெய்க் கணிந்து வேந்தன் புனிதனா யுய்ந்த போது
நீதியும் வேத நீதி யாகியே நிகழ்ந்த தெங்கும்
மேதினி புனித மாக வெண்ணீற்றின் விரிந்த சோதி
மாதிரந் தூய்மை செய்ய வமணிருண் மாய்ந்த தன்றே.

(இ-ள்.) பாண்டியராசன் விபூதியைத் தனது தேகத்திலணிந்து பரிசுத்தனாய் உயர்ந்து விளங்கியபொழுது, இராசநீதியும் வேத மார்க்கமாகவே எங்கும் விளங்கியது; அதனால், உலகத்திலுள்ளோர் பரிசுத்தராகத் திரு வெண்ணீற்றினால்

பரந்த ஒளியானது எட்டுத்திக்குகளையும் பரிசுத்தமாக்கச் சமணர்களாகிய பேரிருளொழிந்தது.—எ-று. (அ௫அ)

மீனவற் குயிரை நல்கி மெய்ந்நெறி காட்டி மிக்க
வூனமாஞ் சமணை நீக்கி யுலகெலா முய்யக் கொண்ட
ஞானசம பந்தர் வாய்மை ஞாலத்திற பெருகி யோங்கத்
தேனலர் கொன்றை யாரதந திருநெறி நடநத தன்றே.

(இ-ள்.) (சுரநோயினால் வருந்தி இறக்கும் நிலைமையிலிருந்த) பாண்டிய ராசனுடைய உயிரைப் பாதுகாத்து, மெய்ம்மையாகிய சைவசமயநெறியைப் பிரகாசப்படுத்தி, குற்றம் பொருந்திய சமணநெறியை யொழித்து உலகத்துள்ளாரனைவரும் பிழைக்கும்படி ஆட்கொண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது உண்மையாகிய கீர்த்தியானது உலகத்தில் அதிகரிததோங்கும்படித் தேன் பொருந்திய கொன்றைமலர்மாலையையணிநத சிவபெருமானது சிறந்த சைவமார்க்கம் எங்கும்பரவியது.—எ-று. (அ௫௯)

மறையவர் வேள்வி செய்ய வானவர் மாரி நல்க
விறைவனன் னெறியி னோங்க விகத்தினி லவனி யின்பங்
குறைவில தென்னினுங் கூறறை யுதைத்தவர் நாமங கூறி
நிறைகடற் பிறவித் துன்ப நீங்கிடப் பெற்ற தன்றே.

(இ-ள்.) வேதியர்கள் யாகாதிகளைச் செய்யவும், (அவர்கள் யாகஞ்செயுஞ் காரணததால்) தேவாகள் மாத மும்மாரி பெய்யவும், (அதனால் முப்போக முந தப்பாமல்விளைதலின) அரசன் தருமநெறியிலேநடக்கவும், (அக்காரணஙகளினால்) உலகமானது இமமையின்பத்தில் சிறிதுஙகுறைவற்றதா யிருப்பினும், (மறுமைப் பயனுககாக) இயமனை யுதைததருளிய ஸ்ரீ சிவபெருமான் திருநாமமாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தைத துதித்து, நிறைந்த கடலபோலும் பிறவித்துன்பத்தினினும் நீஙகும்படிப் பெற்றுக்கொணடது.—எ-று.

பிறவித்துன்பஙகள் தன்னாலும் பிறவான்மாக்களாலும் வரும் **ஆதியான்மிகம்**, தேவர்களால் வரும் **ஆதிதைவிகம்**, பிருவிதி முதலிய பஞ்சபூதஙகளால வரும் **ஆதிபௌதிகம்** என மூனறு வகைப்படும். இவற்றை முறையே,

"தன்னாற் பிறராற் றனக்குவருந் தீங்குநல
மின்னா விலங்கரவந் தேளெறும்பு—சென்முதனீ
ரட்டையல வன்முதலை மீனரவ மாதியினால்
கட்டமுமிங் கான்மிகமே காண்.

கருவிற் றுயர் செனிக்குங் காலைத் துயர்மெய்
திரைநரைமூப் பிற்றிளைத் துச் செத்து—நரகத்தி
னூழ்ந் துயர்புவியை யாளின்ப மாதியெலா
மூழுதவு தைவிகமென் றோர்.

பனியா விடியாற் பனிவா டையினாந்
துனிதென் றலினஞ் சுகமுந்—தனையனைய
நீரினு மின்பின் னலுநெருப்பி னுந்துயரின்
போரிற் பவுதிகமா கும்."—என வருந் திருவெண்பாக்களா லுணர்க.

அங்கயற் கண்ணி தன்னோ டாலவா யமர்ந்த வண்ணல்
பங்கயச் செய்ய பாதம் பணிவனென் றெழுந்து சென்று
பொங்கொளிச் சிவிகை யேறிப் புகலியர் வேந்தர் போந்தார்
மங்கையர்க் கரசி யாரு மன்னனும் போற்றி வந்தார்.

(இ-ள்.) சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் ஸ்ரீமீனாக்ஷி யம்மையாரோடு திருவாலவாயில் வீற்றிருந்தருளும் ஸ்ரீசுந்தரேசரது தாமரைமலர் போன்ற சிவந்த திருவடிகளை வணங்குவேனென்று எழுந்துசென்று மிக்க ஒளியினையுடைய முத்துச்சிவிகையிலேறிச் சென்றருளினார்; பாண்டிமாதேவியாரும் பாண்டியராசனும் துதித்துக்கொண்டு அவரருகில் வந்தார்கள்.—எ-று. (அகூக)

எண்ணரும் பெருமைத் தொண்டர் யாவரு மகிழ்ச்சி யெய்திப்
புண்ணியப் பிள்ளை யாரைப் புகழ்ந்துடன் போற்றிப் போத
மண்ணெலா முய்ய வந்த வள்ளலார் தம்மைக் கண்டு
கண்ணினாற் பயன்கொண் டார்கள் கன்னிநாட் டவர்க ளெல்லாம்.

(இ-ள்.) அளவிடுதற்கரிய பெருமையினை யுடைய திருத்தொண்டர்களனைவரும் மகிழ்ச்சியடைந்து புண்ணியசொரூபராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரைப் புகழ்ந்து பின்னே துதித்துவர, உலகமனைத்தும் அருள்பெற்றுய்யும் பொருட்டு அவதரித்தருளிய அவ்வருள்வள்ளலாரைத தரிசித்துப் பாண்டிநாட்டிலுள்ள சனங்களனைவரும் கண்ணைப்பெற்றதனா லடையவேண்டிய பயனை யடைந்தார்கள்.—எ-று. (அகூஉ)

ஆலவா யண்ணல் கோயி லங்கண்முன் றோன்றக் கண்டு
பாலறா வாயர் மிக்க பண்பினாற் றொழுது சென்று
மாலுநான் முகனும போற்ற மன்னினார் கோயில் வாயிற்
சீலமா தவத்தோர் முன்பு சிவிகைநின் றிழிந்து புக்கார்.

(இ-ள்.) அங்குத் திருவாலவாயி லெழுந்தருளும் ஸ்ரீசுந்தரேசரது திருக்கோயிலானது தோன்றப் பார்த்துத் திருஞானசம்பந்தப்பிள்ளையார் மிக்க அன்போடு வணங்கிச்சென்று, திருமால் பிரமனென்னு மிருவருந் துதிக்க வீற்றிருந்தருளும் அவ்வெம்பெருமானது கோயிற்றிருவாயிலில் நல்லொழுக்கமமைந்த மிக்க தவத்தினையுடைய அடியார்களுக்கு முன்னே முத்துச்சிவிகையினின்று மிறங்கிச் சென்றருளினார்.—எ-று. (அகூங)

தென்னவன் றானு மெங்கள் செம்பியன் மகளார் தாமும்
நன்னெறி யமைச்ச னாரும் ஞானசம் பந்தர் செய்ய
பொன்னடிக் கமலம் போற்றி யுடன்புகப் புனிதர் கோயி
றன்னைமுன் வலங்கொண் டுள்ளாற் சண்பையர் தலைவர் புக்கார்.

(இ-ள்.) பாண்டியராசனும், சோழராச புத்திரியாகிய மங்கையர்க்கரசியாரும், நல்லொழுக்கத்தையுடைய குலச்சிறைநாயனாரும், திருஞானசம்பந்தப்பிள்ளையாரது சிவந்த பொன்போலுந் திருவடித்தாமரைகளைத் துதித்துப் பின்னேவர, சீகாழித்தலைவராகிய பிள்ளையார் ஸ்ரீசுந்தரேசரது திருக்கோயிலை முன்னே பிரதக்ஷணஞ்செய்து உள்ளேபுகுந்தருளினார்.—எ-று. (அகூச)

கைகளுக் தலைமீ தேறக் கண்ணிலா னந்த வெள்ள
மெய்யெலாம் பொழிய வேத முதல்வனைப் பணிந்து போற்றி
யையனே யடிய னேனை யஞ்சலென் றருள வல்ல
மெய்யனே யென்று வீட லாலவாய் விளம்ப லுற்றார்.

(இ-ள்.) தமது திருக்கரங்கள் சிரசின்மேற்குவியக் கண்களினின்று சொரியு மானந்தவெள்ளமானது திருமேனிமுழுவதும் பொழிய, வேதமுதல்வராகிய ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமானை வணங்கித் துதித்து, எனது ஐயனே! சிறியேனை அஞ்சாதிருவென்று அருள்செய்யவல்ல மெய்ப்பொருளாயுள்ளவரே! என்று கூறி, "வீடலாலவாய்" என்னு முதலையுடைய திருப்பதிகம் பாடுவாராயினர்.—எ-று.

---

திருவாலவாய் - திருவிராகம் - பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

வீடலாலவாயிலாய்விழுமியார்கணின்கழல்
பாடலாலவாயிலாய்பரவநின்றபண்பனே
காடலாலவாயிலாய்கபாலிநீள்கடிம்மதிற்
கூடலாலவாயிலாய்குலாயதென்னகொள்கையே.

போயநீர்வளங்கொளும்பொருபுனற்புகலியான்
பாயகேள்விஞானசம்பந்தனல்லபண்பினு
லாயசொல்லின்மாலைகொண்டாலவாயிலண்ணலைத்
தீயதீரவெண்ணுவார்கள்சிந்தையார்வர்தேவரோ.

திருச்சிற்றம்பலம்.

---

ஒன்றுவே றுணர்வு மில்லே னொழிவற நிறைந்த கோல
மன்றினுள் மறைக ளேத்த மானுட ருய்ய வேண்டி
நின்றுநீ யாடல் செய்கை நினைப்பதே நியம மாகு
மென்றுபூம் புகலி மன்ன ரின்றமிழ்ப் பதிகம் பாட.

(இ-ள்.) தேவரீரையன்றி வேறோருணர்ச்சியு மில்லேன், எவ்விடத்தும் நீக்கமின்றி நிறைந்த திருக்கோலமானது வெள்ளியம்பலத்தில் நான்கு வேதங்களுந் துதிக்க மனிதர்க ளீடேறவேண்டித் தேவரீர் நின்று (கால்மாறித்) திருநடனஞ் செய்தருளுதலைச் சிந்திப்பதே எனக்கு நியமமாகுமென்று திருஞானசம்பந்தப்பிள்ளையார் இனிய தமிழ்த் திருப்பதிகம் பாடியருள.—எ-று

இதுமுத லிரண்டுபாட்டுங் குளகம். (௮௬௬)

தென்னவன் பணிந்து நின்று திருவால வாயின் மேவு
மன்னனே யமணர் தங்கண் மாய்கையான் மயங்கி யானு
முன்னையா னறிந்தி லேனை யுறுபிணி தீர்த்தாட் கொள்ள
வின்னருட் பிள்ளை யாரைத் தந்தனை யிறைவ வென்றான்.

(இ-ள்.) பாண்டியராசன் வணங்கி நின்று திருவாலவாயில் வீற்றிருந்தருளும் தலைவரே! அடியேன் சமணர்களுடைய வஞ்சனையால் மயங்கித் தேவரீரைச்

சிறிது மறியாதிருந்த வென்னையடைந்த சுரநோயைநீக்கி யடிமைகொள்ளும்பொருட்டு இனிய திருவருளையுடைய திருஞானசம்பந்தப் பிள்ளையாரைத் தந்தருளினீர் ; எமது ஆண்டவரோ! (இதற்கு அடியேன் என்ன கைம்மாறு செய்வேன்) என்று துதித்தான்.—எ-று. (அ௬எ)

சீருடைப் பிள்ளை யாருஞ் சிறப்புடை யடியா ரோடுங்
காரினிற் பொலிந்த கண்டத் திறைவர்தாள் வணங்கிக் காத
லாரருள் பெற்றுப் போற்றி யங்குநின் றரிது நீங்கி
யேரியன் மடத்தி லுள்ளா லினிதெழுந் தருளிப் புக்கார்.

(இ-ள்.) திருவருட் சிறப்பினையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் சிறப்புப்பொருந்திய அடியார்களோடும் மேகம்போல் விளங்குங் கண்டத்தையுடைய ஸ்ரீசொக்கலிங்கப்பெருமானது திருவடிகளை வணங்கி விருப்பமிக்க திருவருள் பெற்றுத் துதித்து, அவ்விடத்தினின்றும் அரிதாகநீங்கி அழகிய திருமடத்தினுள் இனிதாக எழுந்து சென்றருளினார்.—எ-று. (அ௬அ)

நீடுசீர்த் தென்னர் கோனு நேரியன் பாவை யாரு
மாடுசென் றிறைஞ்சி நோக்கி மாளிகை தன்னிற் போகக்
கூடிய மகிழ்ச்சி பொங்கக் கும்பிடும் விருப்பி னாலே
நாடியங் கிருந்து தங்க ணாதனைப் பாட லுற்றார்.

(இ-ள்.) மிக்க சிறப்பினையுடைய பாண்டியராசனும், சோழராச புத்திரியாகிய மங்கையர்க்கரசியாரும், (திருஞானசம்பந்தப்பிள்ளையார்) பக்கத்திற் சென்று வணங்கித் தரிசித்து விடைபெற்றுக்கொண்டு தமது திருமாளிகைக்குச் செல்ல, பிள்ளையார், பொருந்திய மகிழ்ச்சி யதிகரிக்க ஸ்ரீ சுந்தரேசரை வணங்கும் விருப்பத்தால் அத்தலத்தில் வசித்திருந்து தங்கள் நாயகராகிய சிவபெருமானைத் திருப்பதிகம் பாடுவாராயினார்.—எ-று.

நேரியன் - நேரியென்னுமலையையுடைய சோழன். (அ௬௯)

திருவிய மகத்தி னுள்ளுந் திருநீல கண்டப் பாணர்க்
கருளிய திறமும் போற்றி யவரொடு மளவ ளாவித்
தெருளுடைத் தொண்டர் சூழ்ந்த திருத்தொண்டி னுண்மை நோக்கி
யிருள்கெட மண்ணில் வந்தா ரினிதமாந் திருந்தா ரன்றே.

(இ-ள்.) திருஇயமகத் திருப்பதிகத் துள்ளும் திருநீலகண்டப் பெரும்பாணநாயனாருக்குப் (பொற்பலகை) ஈந்தருளிய திறத்தையுஞ் சிறப்பித்துத்துதித்து, அப்பெரும்பாணரோடு கலந்துவார்த்தையாடி, மெய்யுணர்ச்சியையுடைய அடியார்கள் சூழ்ந்திருக்கின்ற திருத்தொண்டின் உண்மையை விசாரித்து, இவ்வுலகத்தில் அஞ்ஞான விருள்கெடும்படி (ஞானசூரியன்போல்) அவதரித்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் இனிமையோடு வசித்தருளினார்.—எ-று. (அ௭0)

---

*திருவாலவாய் - பண் - திருஇயமகம்.

திருச்சிற்றம்பலம்.

**ஆலநீழலுகந்ததிருக்கையேயானபாடலுகந்ததிருக்கையே**
**பாலினேர்மொழியாளொருபங்கனேபாதமோதலர்சேர்புரபங்கனே**

கோலநீறணிமேதகுபூதனேகோதிலார்மனமேவியபூதனே
யாலநஞ்சமுதுண்டகளத்தனேயாலவாயுறையண்டர்களத்தனே.

நக்கமேகுவர்நாடுமோரூருமேநாதன்மேனியின்மாசுணமூருமே
தக்கபூமனைச்சுற்றக்கருளொடேதாரமுய்த்ததுபாணர்க்கருளொடே [யே
மிக்கதென்னவன்றேவிக்கணியையேமெல்லநல்கியதொண்டர்க்கணியை
யக்கிறாமுதுணைகலனோடுமேயாலவாயரனாருமையோடுமே.

ஈனஞானிகடம்மொடுவிரகனேயேறுபல்பொருண்முத்தமிழ்விரகனே
யானகாழியுள்ஞானசம்பந்தனேயாலவாயினின்மேயசம்பந்தனே
யானவானவர்வாயினுளத்தனேயன்பரானவர்வாயினுளத்தனே
நானுரைத்தனசெந்தமிழ்பத்துமேவல்லவர்க்கிவைநற்றமிழ்பத்துமே.

திருச்சிற்றம்பலம்.

---

பூழியன் மதுரை யுள்ளார் புறத்துளா ரமணர் சேரும்
பாழியு மருகர் மேவும் பள்ளியு மான வெல்லாங்
கீழுறப் பறித்துப் போக்கிக் களரொளித் தூய்மை செய்தே
வாழியப் பதிக ளெல்லா மங்கலம் பொலியச் செய்தார்.

(இ-ள்.) பாண்டியராசனது மதுராபுரியி லுள்ளவர்களும், அதன் புறத்தூரிலுள்ளவர்களும், சமணமுனிவர்கள் வசிக்குமிடங்களையும் அருகக்கடவுளது ஆலயங்களுமான எல்லாவற்றையும் அஸ்திவாரத்தோடு பறித்து எறிந்து, மிகக ஒளிபெருகப் பரிசுத்தஞ்செய்து, சிவஞானப்பெரு வாழ்வுநிறைந்த அந்நாடுகளை யெல்லாம் சைவமங்கலம் பொலியச் செய்தார்கள்.—எ-று. (அஎக)

மீனவன் றேவி யாருங் குலச்சிறை யாரு மிக்க
ஞானசம் பந்தர் பாத நாடொறும் பணிந்து போற்ற
வானசண் பையர்கோ னாரு மாலவா யமர்ந்தார் பாத
மூனமர்ந் துருக வேத்தி யுளங்களித் துறையு நாளில்.

(இ-ள்.) பாண்டிமா தேவியாரும் குலச்சிறை நாயனாரும் சிறந்த திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவடிகளை நாடோறும் வணங்கித் துதிக்க, புகழ்மிகுந்த அப்பிள்ளையாரும் திருவாலவாயி லெழுந்தருளிய ஸ்ரீ சுந்தரேசரது திருவடிகளைத் திருமேனி நெக்குவிட் டுருகும்படித் துதித்துத் திருவுள்ளங்களித்து அங்கு வசிக்கு நாள்களில்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (அஎஉ)

## வேறு.

செய்தவத்தாற் சிவபாத விருதயர்தாம் பெற்றெடுத்த
வைதிகசூ ளாமணியை மாதவத்தோர் பெருவாழ்வை
மைதிகழுந் திருமிடற்றா ரருள்பெற்ற வான்பொன்னை
யெய்தியபூம் புகலியிலே யிருந்தாண் மிகநினைந்தார்.

(இ-ள்.) சிவபாதவிருதயர் தாம் அருமையாகச் செய்த தவங்காரணமாகப் பெற்றெடுத்த வைதிக சைவசிரோன்மணியா யுள்ளவரும்,* மகத்தாகிய தவத்தினையுடைய அடியார்களுக்குப் பெருவாழ்வு போல்பவரும், கருநிறம் விளங்குந் திரு

மிடற்றினையுடைய சிவபெருமானது திருவருள் ஞானம்பெற்ற பெரும்பொரு ளா யுள்ளவருமாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரை அவர் அவதரித்த சீகாழித் திருப்பதியில் எழுந்தருளியிருந்த நாள்களை மிகுதியாக நினைந்தார்.—எ-று. ()

ஆனபுகழ்த் திருநாவுக் கரசர்பா லவஞ்செய்த
மானமிலா வமணருடன் வாதுசெய்து வெல்வதற்கு
மீனவன்ற னுடெய்ய வெண்ணீறு பெருக்குதற்கும்
போனவர்பாற் புகுந்தபடி யறிவனெனப் புறப்படுவார்.

(இ-ள்.) மிக்க புகழையுடைய திருநாவுக்கரசுசுவாமிகளிடத்தில் தீங்கைச் செய்த வெட்கமில்லாத சமணர்களோடு வாதுசெய்து அவர்களை வெல்வதற்கும், பாண்டிநாட்டிலுள்ளவர்கள் திருவருள்பெற்றுய்யத் திருவெண்ணீற்றைப் பரவச் செய்வதற்குஞ் சென்றருளிய பிள்ளையாரிடத்தில் நிகழ்ந்த சங்கதியை யறிவேனெ ன்று (சீகாழியினின்றும்) புறப்படுவாராயினர்.—எ-று. (அஎச)

துடியிடையா டன்னேடுந் தோணியில்வீற் றிருந்தபிரா
னடிவணங்கி யலாசணைபை யதனின்றும வழிக்கொண்டு
படியின்மிசை மிக்குளவாம் பரன்கோயில் பணிந்தேத்தி
வடிநெடுவேன் மீனவன்றன் வளநாடு வந்தணைந்தார்.

(இ-ள்.) பெரியநாயகியம்மையாரோடுந் திருத் தோணியில் வீற்றிருந் தரு ளும் தோணியப்பரது திருவடிகளை வணங்கிப் பரந்தசீகாழியினின்றும் புறப்பட் டுச் சோழநாட்டில் அதிகரித்திருக்கும் சிவாலயங்களை வணங்கித் துதித்து, வடித்த நீண்ட வேற்படையையேந்திய பாண்டியராசனது வளப்பம்பொருந்திய நாட்டை யடைந்தார்.—எ-று. (அஎரு)

மாமறையோர் வளம்பதிக ளிடைத்தங்கி வழிச்செல்வார்
தேமருவு நறும்பைந்தார்த் தென்னவன்றன் றிருமதுரை
தாமணைந்து திருவால வாயமர்ந்த தனிநாதன்
பூமருவு சேவடிக்கீழ்ப் புக்கார்வத் தொடும்பணிந்தார்.

(இ-ள்.) வளம்பொருந்திய ஊர்கள்தோறுந் தங்கி வழிச்செல்வாராகிய சிவ பாதவிருதயர் தேன்பொருந்திய பசிய வேப்பமாலை யணிந்த பாண்டியராசனது மதுராபுரியை யடைந்து திருவாலவாயி லெழுந்தருளிய ஒப்பற்ற ஸ்ரீ சுந்தரேசரது தாமரை மலர்போலுஞ் சிவந்த திருவடியின்கீழே விருப்பத்தோடும் வணங்கினர்.

அங்கணரைப் பணிந்துபோந் தருகணைந்தார் தமைவினவ
விங்கெம்மைக் கண்விடுத்த காழியா ரிளவேறு
தங்குமிடந் திருநீற்றுத் தொண்டர்குழாஞ் சாருமிடஞ்
செங்கமலத் திருமடமற் றிதுவென்றே தெரிந்துரைத்தார்.

(இ-ள்.) ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமானை வணங்கிப் புறத்தில்வந்து தமக்கு அருகிலுள்ள அடியார்களை நோக்கிப் பிள்ளையாரெழுந்தருளியிருக்குந் திருமடத்தை வினவ, (அவர்கள்) இங்கு ஞானக்கண்ணிழந்த எங்களை அக்கண்ணைத்திறந்த சீகா ழியிலுள்ளார்க்கு இளஞ்சிங்கம் போல்பவர் எழுந்தருளியிருக்கு மிடமும், விபூதி யணிந்த அடியார் கூட்டங்கள் வசிக்கு மிடமும், செந்தாமரைமலரில் வசிக்கும் இலட்சுமிக்கிடமுமான திருமடம் இதுவேயென்று குறித்துத் தெரிவித்தார்கள்.

செப்புதலு மதுகேட்டுத் திருமடத்தைச் சென்றெய்த
வப்பரொழுந் தருளினு ரெனக்கண்டோ ரடிவணங்கி
யொப்பில்புகழ்ப் பிள்ளையார் தமக்கோகை யுரைசெய்ய
வெப்பொழுது வந்தருளிற் றென்றெதிரே யெழுந்தருள.

(இ-ள்.) அருகில் வந்தவர்கள் சொல்ல, அதனைச் சிவபாதவிருதயர்கேட்டுத் திருமடத்தைச்சென்று சேரவும், தந்தையா ரெழுந்தருளினுரென்று அவரைப் பார்த்த அடியார்கள் திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவடிகளைவணங்கி ஒப்பற்ற புகழையுடைய பிள்ளையாருக்கு உவகை மொழிகூற, எப்பொழுது வந்தருளியதென்று வினவி யெதிர்கொண்டு சென்றருள.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (அஎஅ)

சிவபாத விருதயர்தா முன்செழுது சென்றணையத்
தவமான நெறியணையுந் தாதையா ரெதிர்தொழுவா
ரவர்சார்வு கண்டருளித் திருத்தோணி யமர்ந்தருளிப்
பவபாச மறுத்தவர்தம் பாதங்க ணினைவுற்றூர்.

(இ-ள்.) சிவபாதவிருதயர் தாம்முன்னே வணங்கிச் சென்றுசேர, தவநெறியேயொழுகுந் தந்தையாரை யெதிர்தொழுது செல்லும் பிள்ளையார், அவர் சீகாழியிலிருந்து வருஞ் சார்பைப் பார்த்தருளித் திருத்தோணியி லெழுந்தருளிப் பிறவிக்கேதுவாகிய பாசங்களை யறுத்தாட்கொள்ளுந் தோணியப்பரது திருவடிகளைச் சிந்தித்தருளினூர்.—எ-று. (அஎகூ)

இருந்தவத்தோ ரவர்முன்னே யிணைமலர்க்கை குவித்தருளி
யருந்தவத்தீ ரெனையறியாப் பருவத்தே யெடுத்தாண்ட
பெருந்தகையெம் பெருமாட்டி யுடனிருந்த தேயென்று
பொருந்துபுகழ்ப் புகலியின்மேற் றிருப்பதிகம் போற்றிசைத்தார்.

(இ-ள்.) பெரிய தவத்தினையுடைய சிவபாதவிருதயருக்கு முன்னே (பிள்ளையார்) தாமரை மலர்போன்ற இரண்டு திருக்கரங்களையுங் குவித்து, அரிய தவத்தினையுடைய தந்தையீர்! அறியாத இளம்பருவத்தில் என்னைத் தடுத்தடிமை கொண்டருளிய ஸ்ரீ தோணியப்பர் எமது பெரிய நாயகியாரோடு மெழுந்தருளியிருந்ததோவென்று வினவி, புகழ்பொருந்திய சீகாழியின்மேல் திருப்பதிகம் பாடியருளினூர்.—எ-று. (அஅ0)

மண்ணினல்ல வென்றெடுத்து மனத்தெழுந்த பெருமகிழ்ச்சி
யுண்ணிறைந்த காதலினூற் கண்ணருவி பாய்ந்தொழுக
வண்ணலார் தமைவினவித் திருப்பதிக மருள்செய்தார்
தண்ணறும்பூஞ் செங்கமலத் தாரணிந்த தமிழ்விரகர்.

(இ-ள்.) "மண்ணினல்ல" என்று தொடங்கி மனத்தினின்றெழுந்த பெருமகிழ்ச்சியோடு தமதுள்ளத்தில் நிறைந்த விருப்பத்தினூல் கண்ணினின்றும் ஆனந்தக்கண்ணீர் சொரிந்தொழுகத் தமது தந்தையாரை வினவி, குளிர்ந்த நறுமணங் கமழுஞ் செந்தாமரை மலர்மாலையை யணிந்த திருநெறித் தமிழ்த்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருப்பதிகம் பாடியருளினூர்.—எ-று. (அஅக)

திருக்கழுமலம் - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

மண்ணினல்லவண்ணம்வாழலாம்வைகலு
மெண்ணினல்லகதிக்கியாதுமோர்குறைவிலை
கண்ணினல்லதுறுங்கழுமலவளநகர்ப்
பெண்ணினல்லாளொடும்பெருந்தகையிருந்ததே.

கருந்தடங்தேன்மல்குகழுமலவளநகர்ப்
பெருந்தடங்கொங்கையோடிருந்தவெம்பிரான்றனை
யருந்தமிழ்ஞானசம்பந்தனசெந்தமிழ்
விரும்புவாரவர்கள்போய்விண்ணுலகாள்வரே.

திருச்சிற்றம்பலம்.

---

திருப்பதிகத் திருக்கடைக்காப் புச்சாத்திச் சிறப்பின்மிகும்
விருப்பினு லவாதமக்கு விருந்தளித்து மேவுநா
ளருப்புறுமெய்க் காதலபுரி யடியவாக டமமோடும்
பொருப்புறுகைச் சிலையார்சேர் பிறபதியுந் தொழப்போவார்.

(இ-ள்.) திருப்பதிகத்தில் திருக்கடைக்காப்புச் சாத்தியருளிச் சிறப்புமிக்க விருப்பத்தோடு அச்சிவபாத விருதயருககு விருந்துசெய்து அங்கு எழுந்தருளியிருக்கு நாள்களில் மெய்யன்பு தோன்றுதற்கிடமாகிய திருத்தொண்டர்களோடும் மேருமலையாகிய வில்லையேந்திய திருக்கரத்தையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் மற்றத் திருப்பதிகளையும் வணங்கச் செல்வாராயினர்.—எ-று. (௮௮௨)

ஆலின்கீழ் நால்வர்க்கன் றறமுரைத்த வங்கணனை
நூலின்கட் பொருள்பாடி நூலறிவார்க் கீந்தானைக்
காலம்பெற் றினிதிறைஞ்சிக் கைதொழுது புறம்போந்தார்
சீலங்கொ டென்னவனுந் தேவியரு முடன்போத.

(இ-ள்.) பூர்வதத்தில் கல்லாலின்கீழ் தக்ஷிணாமூர்த்தியாக வெழுந்தருளிச் சனகர்முதலிய நானகு முனிவர்களுக்கும் வேதாகமப்பொருளை உணர்த்தியருளிய அருட்கண்ணரும், தமிழ்நூலில அகப்பொரு ளிலக்கணத்தை யருளிச்செய்து சங்கப்புலவர்களுக்குக் கொடுத்தருளிய வருமாகிய ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமானை வணங்குதற்குரிய காலத்திற்சென்று இனிமையாக வணங்கிக் கைகூப்பி நல்லொழுக்கத்தையுடைய பாண்டியராசனும் பாண்டிமாதேவியாரும் தமக்குப்பின்னே வரப்புறத்திற் சென்றருளினா.—எ-று.

ஆலின்கீழ் நால்வாக்கன றறமுரைத்தமையாவது; முன்பு ஒருகாலத்தில் சனகர்-சனந்தனர்-சனாதனர்-சனற்குமாரரென்னு நான்கு முனிவர்களுஞ் சிவபெருமானருளிச்செய்த வேதாகமங்களை யோதியுணர்ந்து அவற்றி னுண்மைப்பொருள் விளங்காமல் மயங்கித் திருக்கயிலையையடைந்து சிவபெருமானைப் பணிந்து,எமதாண்டவரே! அடியேங்கட்கு வேதாகமத்தி னுண்மைப்பொருளை யுணர்த்தியருளவேண்டுமென்றிரந்து நிற்பச், சிவபெருமான் அவர்கள் வேண்டுகோட்கிரங்கி மகிழ் கூர்ந்தழைத்துச் சென்று திருவரு ளுருவமாகிய கல்லால விருக்ஷத்தின்கீழ்த் தக்ஷிணா

மூர்த்தமாக வெழுந்தருளி, அம்முனிவர்கள் மகிழ்ந்து கேட்டுணரும்பொருட்டு அவ் வேதாகமத்தின் மெய்ப்பொருளை உபதேசித்தருளினு ரென்பதாம்.

' நூலின்கட் பொருள்பாடி நூலறிவார்க் கீந்தமையாவது—அகப்பொருளிலக்கண மின்மைகருதிப் பாண்டியராசனுஞ் சங்கப்புலவருந் துன்பெய்த, அத் துன்ப நீங்கும்பொருட்டு ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமான் " அன்பி னைந்திணைக் களவெனப்படுவ - தந்தணர றுமறை மனறலெட்டினுட் - கந்தருவ வழக்க மெனமனுர் புலவர் " என்பது முதலாக அறுபது சூத்திரத்தினுல் அகப்பொரு ளிலக்கணஞ் செய்து அருள்புரிந்தமையை ; இதனை,—

" அக்காலத்துப் பாண்டியனாடு பன்னிருயாண்டு வற்கடஞ்சென்றது. செல்லவே, பசிகடுகுதலும் அரசன் சிட்டரையெல்லாங் கூவி, " வம்மின், யான் உங்களைப் புரந்தரகில்லேன ; என்தேயம் பெரிதும் வருந்துகின்றது; நீயிர் நுமக் கறிந்தவாறு புக்கு, நாடு நாடாயினஞான்று என்னை யுள்ளிவம்மின" என்றான். என, அரசனை விடுத்து எல்லாரும் போயினபினறைக் கணக்கின்றிப் பன்னீரியாண்டு கழிந்தது. கழிந்த பினனர், நாடுமலிய மழைபெய்தது. பெய்தபின், அரசன் இனி நாடு நாடாயிற்றாகலின் நூல் வல்லாரைக் கொணர்கவென்று எல்லாப் பக்கமும் போக்க, எழுத்ததிகாரமுஞ் சொல்லதிகாரமும யாப்பதிகாரமும் வல்லாரைத் தலைப்பட்டுக்கொணர்ந்து, பொருளதிகாரம் வலலாரை எங்குந் தலைப்பட்டிலேமென்று வந்தார். வர, அரசனும் புடைபடைக்கவன்று, "என்னை ? எழுத்துஞ் சொல்லும் யாப்பும் ஆராய்வது பொருளதிகாரத்தின பொருட்டன்றே ! பொருளதிகாரம் பெறேமேயெனின, இவை பெற்றும் பெற்றிலேம " எனச் சொல்லா நிற்ப ; மதுரை ஆலவாயின் அழனிறக்கடவுள் சிந்திப்பான் : " என்னை பாவம் ! அரசற்குக் கவற்சி பெரிதாயிற்று. அது தானும் ஞானத்திடையதாகலான் யாம் அதனைத் தீர்க்கற்பாலம்" என்று, இவவறுபது சூத்திரத்தையுஞ் செய்து, மூன்று செப்பிதழகத் தெழுதிப் பீடததின கீழிட்டான.

இட்டபிற்றைஞான்று, தேவர்குலம் வழிபடுவோன் தேவர் கோட்டத்தை எங்குந் துடைத்து, நீர் தெளித்துப் பூவிட்டுப் பீடத்தின்கீழ் என்று மலகிடான் அன்று தெய்வத் தவக்குறிப்பினான் அல கிடுவெனைறு உள்ளங்குளிர அலகிட்டான். இட்டாற்கு அலகினோடும் இதழ்போந்தன. போதரக் கொண்டுபோந்து நோக்கினாற்கு வாய்ப்புடைத்தாயிற்றோர் பொருளதிகாரமாய்க் காட்டிற்று. காட்டப்பிராமணன் சிந்திப்பான் ;அரசன்பொருளதிகாரம் இன்மையிற் கவல்கின்றானென்பது கேட்டுச் செல்லாநின்ற துணாந்து, நம்பெருமான் அருளிச் செய்தானாகும் என்று தன் அகம்புகுதாதே கோயிற்றலைக்கடைச்சென்று நின்று கடைகாப்பார்க்குணர்த்தக் கடை காப்பார் அரசற்குணர்த்த, அரசன புகுதுக வென்று பிராமணனைக் கூவச்சென்று புக்குக்காட்ட, ஏற்றுக்கொண்டுநோக்கிப், " பொருளதிகாரம், இது நம்பெருமான் நமதிடுக்கண கண்டு அருளிச்செய்தா னாகற்பாலது" என்று, அத்திசை நோக்கித் தொழுதுகொண்டு நின்று, சங்கத்தாரைக் கூவுவித்து, "நம்பெருமான் நமது இடுக்கண் கண்டு அருளிச்செய்த பொருளதிகாரம், இதனைக் கொண்டுபோய்ப் பொருள் காண்மின்" என, அவர்கள் அதனைக்கொண்டுபோந்து கனமாப்பலகை ஏறியிருந்தாராய்வுழி, எல்லாருந் தாந்தாம் உரைாத்த வுரையே நல்லதென்று சிலகாளெல்லாஞ் சென்றன."—என்றிவ்வாறு நக்கீரதேவர் அவ்வகப் பொருளிலக்கணத்திற்குக் கூறியருளிய உரையிற்சேட்டுத்தா னுணர்க. (அ-அங

### வேறு.

தேனிலவு பொழின்மதுரைப் புறத்துப் போந்த தென்னவனார் தேவியா ரமைச்சர் சிந்தை, யூனெகிழும் படியழிந்தங் கொழுகு கண்ணீர் பாய்ந்திழிய வுணர்வின்றி வீழக் கண்டே, யானுமைப் பிரியாத வண்ண மிந்நாட் டிறைவர்பதி யெனைப்பலவும் பணிவீரென்று, ஞானமுணர் வாரருள வவரும் போத நம்பர்திருப் பரங்குன்றை நண்ணி னாரே.

(இ-ள்.) தேன்பொருந்திய சோலைசூழ்ந்த மதுராமாநகரத்தின் புறத்தில் வந்த பாண்டியராசனும் பாண்டிமாதேவியாரும் குலச்சிறை நாயனருமாகிய இம்மூவரும் உடல் நெக்குருகும்படி மனஞ்சோர்ந்து, சொரிகின்ற ஆனந்தக்கண்ணீர் பாய்ந்தொழுக அறிவுமயங்கிப் பரவசமாய் வீழ்தலைப்பார்த்து யான் உங்களைப் பிரியாதவண்ணம் நீங்கள் இந்நாட்டிலுள்ள சிவபெருமா னெழுந்தருளிய திருப்பதிகள் பலவற்றையும் வணங்குவீர்களென்று சிவஞானத்தை யுணர்ந்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் அருளிச்செய்ய, அவர்களும் (அதற்கிசைந்து) உடன்செல்லத் தாம் பரங்கிரிநாதரது திருப்பரங்குன்றத்தை யடைந்தருளினார்.—எ-று. (௮௮௯)

ஆறணிந்தார் தமைவணங்கி யங்குப் போற்றி யணியாப்ப னூரணைந்து பணிந்து பாடி, நீறணிந்த செல்வர்பதி பிறவுஞ் சேர்ந்து நிலவுதிருப் பதிகங்க ணிகழப் பாடிச், சேறணிந்த வயற்பழனக் கழனி சூழ்ந்த சிரபுரத்து வந்தருளுஞ் செல்வர் செங்க, ணேறணிந்த வெல்கொடியார் திருப்புத்தூரை யினிதிறைஞ்சிச் சிலநாளங் கிருந்தா ரன்றே.

(இ-ள்.) அவ்விடத்தில் கங்காநதியை யணிந்த சிவபெருமானை வணங்கித் துதித்து அழகிய திருவாப்பனூரை யடைந்து வணங்கித் திருப்பதிகம் பாடியருளி, திருவெண்ணீற்றினை யணிந்த அருட்செல்வராகிய சிவபெருமான் எழுந்தருளிய மற்றத் திருப்பதிகளையு மடைந்து விளங்குகின்ற திருப்பதிகங்களைப் பொருந்தப் பாடியருளி, சேறுபொருந்திய வயலினது பக்கவிடங்களும் விளைநிலங்களுஞ்சூழ்ந்த சீகாழிப்பதியி லவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிவந்த கண்ணையுடைய இடபத்தை வெற்றிக்கொடியாக வுயர்த்திய சிவபெருமான் எழுந்தருளியதிருப்புத்தூரை இனிமையோடு வணங்கிச் சிலநாள்கள் அத்திருப்பதியில் வசித்தருளினார்.—எ-று. (௮௯௰)

புற்றூர்தம் புரங்கண்மலைச் சிலையாற் செற்ற பரமனார் திருப்புத்தூர் பணிந்து போந்து, புற்றுரும் பணிபூண்ட புனித னார்தம் பூவணத்தைப் புக்கிறைஞ்சிப் புகழ்ந்து பாடிக், கற்றூர்க டொழுதேத்துங் கானப் பேருங் கைதொழுது தமிழ்பாடிச் சுழியல் போற்றிக், குற்றாலங் குறும்பலாக் கும்பிட் டேத்திக் கூற்றுதைத்தார் நெல்வேலி குறுகி னாரே.

(இ-ள்.) பகைவராகிய அசுரர்களுடைய முப்புரங்களையும் மேருமலையாகிய வில்லைக்கொண்டு எரித்தருளிய சிவபெருமான் எழுந்தருளுந் திருப்புத்தூரை வணங்கிச்சென்று, சர்ப்பத்தை ஆபரணமாகப் பூண்ட சிவபெருமானது திருப்பூவணத்தை யடைந்து வணங்கித் துதித்துத் திருப்பதிகம் பாடியருளி (கலைஞானங்களைக்) கற்றுணர்ந்த புலவர்கள் வணங்கித் துதிக்கும் திருக்கானப் பேரையுங் கைகூப்பி வணங்கித்தமிழ்த் திருப்பதிகம் பாடியருளி, திருச்சுழியல் என்னுந் திருப்பதியை வணங்கித் துதித்து, திருக்குற்றாலத்தையுந் திருக்குறும்பலாவையும் வணங்கித் துதி

த்து, இயமனை யுதைத்தருளிய ஸ்ரீ காலிகாடிசுரர் எழுந்தருளிய திருநெல்வேலி யென்னுந் திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று (அஅகூ)

புண்ணியனார் நெல்வேலி பணிந்து போற்றிப் புரிசடையார் திருப் பதிகள் பிறவுஞ் சென்று, நண்ணியினி தமர்ந்தங்கு நயந்து பாடி நற்றொ ண்ட ருடனாளும் போற்றிச் செல்வார், விண்ணவரைச் செற்றுகந்தா னி லங்கை செற்ற மிக்கபெரும் பாதகத்தை நீக்க வேண்டித், திண்ணியபொ ற் சிலைத்தடக்கை யிராமன் செய்த திருவிரா மேச்சரத்தைச் சென்று சேர்ந்தார்.

(இ-ள்.) புண்ணியப்பொருளாயுள்ள சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திரு நெல்வேலி யென்னுந் திருப்பதியை வணங்கித் துதித்து, முறுக்காகிய சடைமுடி யையுடைய சிவபெருமா னெழுந்தருளும் மற்றத் திருப்பதிகளையுஞ் சென்றுசேர் ந்து இனிமையாக அங்கு எழுந்தருளி விரும்பித் திருப்பதிகங்கள் பாடியருளி, நல்ல திருத்தொண்டர்களோடு நாள்தோறும் வணங்கிச்செல்லுந் திருஞானசம்ப ந்தப்பிள்ளையார் தேவர்களை வருத்தி (அதனால்) மகிழ்வுற்றிருந்த இராவணனோடு இலங்காபுரியை யழித்த மிக்க மகாபாதத்தை யொழிக்க விரும்பி, வலிதங்கிய அழ கிய வில்லைப்பிடித்த நீண்ட கைகளையுடைய ஸ்ரீ ராமர் பூசைசெய்து ஸ்தாபி த்ததிருவிராமேச்சர மென்னுந் திருப்பதியைச் சென்றடைந்தருளினார்.—எ-று.()

செங்கண்மால் வழிபட்ட கோயி னண்ணித் திருமுன்பு தாழ்ந்தெ ழுந்து தென்ன னோடு, மங்கையர்க்கு நாயகியார் தாமு மெய்ம்மை மந்திரி யா ருஞ்சூழ மணிநீள் வாயிற், பொங்கியெழும் விருப்பினு லுடனே புக் குப் புடைவலங்கொண் டுள்ளணைவார் போற்றி செய்து, பங்கயச்செங் கைகுவித்துப் பணிந்து நின்று பாடினார் மன்னவனும் பரவி யேத்த.

(இ-ள்.) செந்தாமரை மலர்போலுஞ் சிவந்த கண்களையுடைய ஸ்ரீ ராமர் பூசித்து மகாபாதகந் தீரப்பெற்ற திருக்கோயிலை யடைந்து சந்நிதியில் வணங்கியெ ழுந்து, பாண்டியராசனோடு மங்கையர்க் கரசியாரும், மெய்ம்மைபொருந்திய குலச் சிறைநாயனாருந் தம்மைச்சூழ, பலவகை இரத்தினங்க ளழுத்திய நீண்ட திருவா யிலில் அதிகரித்தெழுகின்ற விருப்பத்தினால் உடனேபுகுந்தருளிப் பக்கத்திற் பிர தக்ஷணஞ்செய்து உள்ளேசென்று துதித்துத் தாமரைமலர்போன்ற சிவந்த திருக் கரங்களைக் குவித்து வணங்கி நின்று, அந்தப்பாண்டியராசனும் வணங்கித் துதிக்கத் திருப்பதிகம் பாடியருளினார்.—எ-று. (அஅஅ)

சேதுவின்கட் செங்கண்மால் பூசை செய்த சிவபெருமான் றனைப் பாடிப் பணிந்து போந்து, காதலுட னங்கரி லினிது மேவிக் கண்ணுத லான் றிருத்தொண்ட ரானார்க் கெல்லாங், கோதில்புகழ்ப் பாண்டிமா தேவி யார்மெய்க் குலச்சிறையார் குறைவறுத்துப் போற்றிச் செல்ல, நாதர்தமை நாடோறும் வணங்கி யேத்தி நளிர்வேலைக் கரையினயந் திரு ந்தா ரன்றே.

(இ-ள்.) திருவிரா மேச்சரமென்னுந் திருப்பதியில் ஸ்ரீ ராமர் பூசைசெய்த ஸ்ரீ ராமநாதரைத் திருப்பதிகம்பாடி வணங்கிப் புறத்திற்சென்று விருப்பத்தோடு அத்திருப்பதியில் வசித்தருளிச் சிவனடியார்களுக்கெல்லாம் குற்றமற்ற புகழை யுடைய மங்கையர்க் கரசியாரும் மெய்யன்பினையுடைய குலச்சிறைநாயனாரும்

(உண்டி முதலிய) குறைகளை யொழித்து உபசரித்துச்செல்ல, ஸ்ரீ ராமநாதரை நாள்தோறும் வணங்கித் துதித்துக் குளிர்ந்த கடற்கரையிலுள்ள அத்திருப்பதியில் விருப்புற்று எழுந்தருளி யிருந்தார்.—எ-று.

சேது என்பது திருவிராமேச்சரத்தினது திருப்பெயரி னென்று. (அ௯௯)

அங்கரி லமர்ந்தங்க ணினிது மேவி யாழிபுடை சூழ்ந்தொலிக்கு மீழந் தன்னின், மன்னுதிருக் கோணமலை மகிழ்ந்த செங்கண் மழவிடை யார் தமைப்போற்றி வணங்கிப் பாடிச், சென்னிமதி புனைமாட மாதோட் டத்திற் றிருக்கேதீச் சரத்தண்ணல் செய்ய பாத, முன்னிமிகப் பணிந்தேத்தி யன்ப ரோடு முலவாத கிழிபெற்றா ருவகை யுற்றார்.

(இ-ள்.) அத்திருப்பதியில் விரும்பி இனிதாக வசித்தருளி, கடல்புடை சூழ்ந்தொலிக்கின்ற ஈழதேசத்தில் பொருந்திய திருக்கோணமாமலை யென்னுந் திருப்பதியில் மகிழ்ந்தெழுந்தருளிய சிவந்த கண்ணையுடைய இடபத்தை வாகனமாகக் கொண்டருளும் ஸ்ரீ கோணேசரை வணங்கித்துதித்துத் திருபபதிகம் பாடியருளி, சந்திரன் தழுவுஞ் சிகரத்தினையுடைய மாளிகைகள் நிறைந்த மாதோட்டமென்னுந் திருப்பதியில் திருக்கேதீச்சரமென்னும் ஆலயத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீகேதீச்சரரது சிவந்த திருவடிகளைச் சிந்தித்து மிகவும் வணங்கித்துதித்து, உலவாக்கிழிபெற்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார் அடியார் திருக்கூட்டத்தோடும் மகிழ்கூர்ந்தருளினார்.—எ-று.

திருக்கோணமாமலையென்பது இக்காலத்துத் திருக்கணாமலை யென்று வழங்குகின்றது. (அ௯0)

அப்பதியைத் தொழுதுவட திசைமேற் செல்வா ரங்கையன றரித்தபிரா னமருங் கோயில், புக்கிறைஞ்சிப் பலபதியுந் தொழுது போற்றிப் புணரிபொரு தலைகரைவா யொழியப் போந்தே, செப்பரிய புகழ்த்திருவா டானை சேர்ந்து செந்தமிழ்மா லைகள் சாத்திச் சிவனார் மன்னு, மொப்பரிய புனவாயில் போற்றச் செய்து வணங்கினா ருலகுய்ய ஞான முண்டார்.

(இ-ள்.) உலகத்தார் கடைத்தேறும்பொருட்டுச் சிவஞானப்பா லுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அத்திருக்கேதீச்சரத்தைத் (திருவிராமேச்சரத்திலிருந்து) வணங்கி வடதிசைக்கெழுந் தருளுகின்றவராய், அழகிய திருக்கரத்தில் மழுவேந்திய ஸ்ரீ ராமநாதர் வீற்றிருந்தருளுந் திருக்கோயிலுட் சென்று வணங்கி அவ்விடத்தினின்றும் பல திருப்பதிகளையும் வணங்கித் துதித்து, அலைகள் கரையை மோதுகின்ற கடற்கரை நீங்கப் புறத்திற்சென்று சொல்லுதற்கரிய புகழையுடைய திருவாடானை யென்னுந் திருப்பதியை யடைந்து செந்தமிழ்த் திருப்பதிகம் பாடியருளி, பழம்பதிநாயகரெழுந்தருளிய ஒப்பற்ற திருப்புனவாயிலென்னுந் திருப்பதியைத் துதித்து வணங்கினார்.—எ-று. (அ௯௧)

பதிநிலவு பாண்டிநா டதனின் முக்கட் பரமனார் மகிழ்விடங்கள் பலவும் போற்றி, விதிநிலவு வேதநூ னெறியே யாக்கி வெண்ணீற்றின் சார்வினால் மிக்கு யர்ந்த, கதியருளிக் காழிநகர் வாழ வந்தார் கன்னி தலமன் றிருத்தொண்டர் பலருஞ் சூழ, மதிநிலவு குலவேந்தன் போற்றிச் செல்ல மந்திரியார் பதிமணமேற் குடியில் வந்தார்.

(இ-ள்.) சீகாழிப்பதியி லுள்ளவர்கள் வாழும்படி அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் பல திருப்பதிகள் சிறந்து விளங்குகின்ற பாண்டியநாட்டில் மூன்று கண்களையுடைய சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளும் பல க்ஷேத்திரங்களையுந் துதித்து, அந்நாடு முழுமையும் நல்ல விதிகளோடு கூடி விளங்கும் வேதசாஸ்திர நெறியினையே பரவச்செய்து, திருவெண்ணீற்றின் சார்பினால் அதிகரித்துயர்ந்த முத்திநெறியை யருளிச்செய்து, சிவனடியார்கள் பலருஞ் சூழ்ந்து வர, சந்திரகுலத்தி லவதரித்த பாண்டியனார் துதித்து உடன், செல்ல, மந்திரியாராகிய குலச்சிறை நாயனார் அவதரித்த திருப்பதியாகிய மணமேற்குடிஎன்னுந் திருப்பதிக்கு எழுந்தருளினார்.—எ று. (அகூஉ)

அந்நகரி லினிதமர்வா ரருகு சூழ்ந்த பதிகளினீ டங்கணர்தங் கோயி றொழுந்து, மன்னுதிருத் தொண்டருடன் மீண்டு சேர்ந்து மன்னவனு மங்கையருக் கரசி யாருங், கொன்னவில்வேற் குலச்சிறையார் தாமுங் கூடிக் குரைகழல்கள் பணிந்துருறை கொண்டு போற்றச், சென்னிவளர் மதியணிந்தார் பாதம் போற்றிச் சிரபுரத்துச் செல்வரினி திருந்த நாளில்.

(இ-ள்.) அத்திருப்பதியி லினிதாக எழுந்தருளும் பிள்ளையார் பக்கங்களிற் சூழ்ந்த திருப்பதிகளில் சிறந்துவிளங்கும் சிவபெருமானது திருக்கோயில்களை வணங்கி, நிலைபெற்ற திருத்தொண்டர்களோடு மீளவும் அத்திருப்பதியை யடைந்து பாண்டியராசனும் மங்கையர்க்கரசியாரும் அச்சத்தைத் தருகின்ற வேற்படையைத் தரித்த குலச்சிறைநாயனாருஞ் சேர்ந்து, (பிள்ளையாரது) சப்திக்கின்ற வீரக்கழலை யணிந்த திருவடிகளை வணங்கிக் குறைகூறித் துதிக்க, திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிரசில் கலைகள் வளரும் இளம்பிறையை யணிந்த சிவபெருமானது திருவடிகளைத் துதித்து இனிதாக எழுந்தருளியிருந்த நாள்களில்.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (அகூரு)

பொங்குபுனற் காவிரிநா டதனின் மீண்டு போதுதற்குத் திருவுள்ளமாகப் பெற்று, மங்கையருக் கரசியார் தாமுந் தென்னர் மன்னவனு மந்திரியார் தாமுங் கூட, வங்கவர்தந் திருப்பாதம் பிரிய லாற்றா துடன் போக வொருப்படுமவ் வளவு நோக்கி, யிங்குநான் மொழிந்ததனுக் கிசைந்தீ ராகி லீசர்சிவ நெறிபோற்றி யிருப்பீ ரென்று.

(இ-ள்.) நீர் பெருகுகின்ற காவிரிநதி சூழ்ந்த சோழநாட்டிற்குத் திரும்பியெழுந்தருளுதற்குத் திருவுள்ளங்கொண்டு மங்கையர்க்கரசியாரும் பாண்டியர் பெருமானும், குலச்சிறை நாயனாரும் ஒருசேர அத்திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவடிகளைப் பிரிந்திருக்கத் தரியாமல் அவருடன் செல்ல ஒருப்பட்டிருக்கும் அச்சமயத்தைப் பார்த்தருளி, இங்கு யான் கூறுவதற்கு உடன்படுவீரானால் சிவபெருமானது சைவநெறியைப் பாதுகாத்திருக்கக் கடவீரென்று கூறியருளி. ()

சாலமிகத் தளர்வாரைத் தளரா வண்ணந் தகுவனமற் றவர்க்கருளிச் செய்த பின்பு, மேலவர்தம் பணிமறுக்க வவரு மஞ்சி மீள்வதனுக் கிசைந்துதிரு வடியில் வீழ்ந்து, ஞாலமுய்ய வந்தருளும் பிள்ளை யாரைப் பிரியாத வன்பினொடுந் தொழுது நின்று, ராலவிட முண்டவரை யடிகள் போற்ற வந்நாட்டை யகன்றுமீண் டணையச் செல்வார்.

(இ-ள்.) (பிரிவாற்ருமையால்) மிகுதியாக மனந்தளர்கின்ற அம்மூவரை யுந் தளராதபடி அவர்களுக்குத் தகுந்த இன்மொழிகளை யருளிச்செய்தபின்பு, அவர்களும் சிறந்த திருஞானசம்பந்தப்பிள்ளையாரது கட்டளையை மறுத்தற்கு அஞ்சித் தங்கள் தேசத்திற்குத் திரும்பிச் செல்வதற்கு மனமிசைந்து அவரது திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, உலகத்தார் அருள்பெற்றும்படி அவதரித்தருளிய பிள்ளையாரைப் பிரிதற்கரிய அன்போடும் வணங்கி நின்ருர்கள்; (பிள்ளையார்) அப்பாண்டி நாட்டினின்று நீங்கி ஆலாகல விடத்தை யுண்டருளிய சிவபெருமானது திருவடிகளைத் துதிக்கச் சோழநாட்டை யணையும்படிச் செல்வாராயினர்.—எ-று.

பொன்னிவளந் தருநாடு புக்குமிக்க பொருவில்சீர்த் திருத்தொண்டர் குழாத்தி னேடும், பன்னகப்பூ ணணிந்தவர்தங் கோயி ருேறும் பத்தருடன் பதியுள்ளோர் போற்றச் சென்று, கன்னிமதிற் றிருக்களரும் போற்றிக் கண்டங் கறையணிந்தார் பாதாளீச் சரமும்பாடி, முன்னணைந்தபதி பிறவும் பணிந்துபோற்றி முள்ளிவாய்க் கரையணைந்தார் முந்நூன் மார்பர்.

(இ-ள்.) காவிரிநதி பல வளங்களையுந் தருகின்றசோழநாட்டை யடைந்து மேன்மைபொருந்திய ஒப்பற்ற சிறப்பினையுடைய அடியார் திருக்கூட்டத்தோடு சர்ப்பத்தை யாபரணமாகவணிந்த சிவபெருமா னெழுந்தருளிய திருக்கோயில்கள் தோறும் அங்குள்ள அடியார்களோடு ஊரிலுள்ளவர்களும் எதிர்கொண்டு துதிக்கச் சென்றருளி, அழியாத மதிலையுடைய திருக்களரென்னுந் திருப்பதியையுந் துதித்து வணங்கி; கண்டத்தில் விடத்தை யணிந்த சிவபெருமானது திருப்பாதாளீச்சரமென்னுந் திருப்பதியையும் வணங்கித் திருப்பதிகம் பாடியருளி, தமக்கு முன்னே காணப்பட்ட மற்றத் திருப்பதிகளையும் வணங்கித் துதித்து, முப்புரி நூலையணிந்த திருமார்பினையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையார் முள்ளிவாய்க்கரையை யடைந்தருளினர்.—எ-று. (௮௧௬)

மலைவளர்சந் தனமகிலுந் தேக்குமுந்தி மலர்ப்பிறங்கல் வண்டிரைப்பச் சுமந்துபொங்கி, யலைபெருகி யாளியங்கா வண்ண மாறு பெருகுதலா லத்துறையி லணையு மோடம், நிலைபுரியு மோடக்கோ னிலையி லாமை நீர்வாழ்நர் கரையின்க ணிறுத்திப் போகக், கலைபயிலுங் கவுணியர்கோ னதனைக் கண்டக் கரையின்க ணெழுந்தருளி நின்ற காலை.

(இ-ள்.) மலைகளில் வளர்கின்ற சந்தனமரங்களையும் அகில் மரங்களையுந் தேக்கமரங்களையும் (அலைக்கரங்களால்) தள்ளிக்கொண்டு, வண்டுகள்சப்திக்க மலர்க்கூட்டங்களைத் தன்மேல் தாங்கிக்கொண்டு பொங்கி, அலைகளை வீசி ஆள்கள் போக்குவரவுசெய்யாதபடி (காவிரியின்கிளையாகிய குடமுருட்டியென்னும்) நதிபெருகுதலால், அந்நதித் துறையிலிருக்கும் ஓடங்களைநிலைக்கச்செய்யும்ஓடக்கோல்கள் (நீர்ப்பெருக்கினல்) நிலையாமையால் ஓடக்காரர்கள் அவ்வோடங்களைக் கரையில் நிறுத்தி விட்டுப்போக, அதனை வேதாகம முதலிய சகல சாஸ்திரங்களையு மோதாதுணர்ந்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் பார்த்தருளி, அந்நதிக்கரையி லெழுந்தருளி நின்றபொழுது.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (௮௧௭)

தேவர்பிரா னமர்ந்ததிருக் கொள்ளம் பூதூ ரெதிர்ந்தானமத் திருவுள்ளம் பணியச் சென்று, மேவுதலா லோடங்கள் விடுவா ரின்றி யொழிந்

திட்வு மிக்கதோர் விளைவாற் சண்பைக், காவலனு ரோடத்தின் கட்ட் விழ்த்துக் கண்ணுதலான் றிருத்தொண்டர் தம்மை யேற்றி, நாவலமே கோலாக வதன்மே னின்று நம்பர்தமைக் கொட்டமென நவின்று பாட.

(இ-ள்.) தேவர்கள் நாயகராகிய சிவபெருமானெழுந்தருளிய திருக்கொள்ளம்பூதூரென்னும் க்ஷேத்திரமானது எதிரில்தோன்ற அதனை வணங்கவேண்டுமென்று தமது திருவுள்ளத்தில் ஆசைபொருந்துதலால், ஓடங்களை விடுகின்றவர் அங்கொருவருமில்லாதொழியவும் திருஞானசம்பந்தப்பிள்ளையார் மிக்க விளைவினால் ஓடத்தின் கட்டுகளை யவிழ்த்துச் சிவனடியார்களை யவ்வோடத்திலேற்றித் தமது நாவின்றிறமே ஓடக்கோலாக அதன்மே லெழுந்தருளிச் சிவபெருமானைக் "கொட்டம்" என்று முதலெடுத்துத் திருப்பதிகம் பாடியருள.—எ-று. (அ௬அ)

உம்பருய்ய நஞ்சுண்டா ரருளா லோடஞ் செலச்செல்ல வுந்துதலா லூடு சென்று, செம்பொனேர் சடையார்தங் கொள்ளம் பூதூர் தனைச் சேர வக்கரையிற் சேர்ந்த பின்பு, நம்பரவர் தமைவணங்கி ஞான முண்ட பிள்ளையார் நற்றொண்ட ருடனி ழிந்து, வம்பலரு நறுங்கொன்றை நய ந்தார் கோயில் வாயிலின்முன் மகிழ்ச்சியொடு வந்து சார்ந்தார்.

(இ-ள்) தேவர்க ளுய்யும்பொருட்டு விஷத்தை யுண்டருளிய சிவபெருமான் றிருவருளினால் ஓடம், அக்கரை செல்லும்படி ஆற்றுநீர் இடங்கொடுத்துத் தள்ளுதலினால் அதன் நடுவே சென்று, சிவந்த பொன்போலுஞ் சடைமுடியை யுடைய சிவபெருமா னெழுந் தருளிய திருக்கொள்ளம்பூதூரை யுடையும்படி ஓடம் அக்கரையில்சேர்ந்த பின்பு, திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிவபெருமானை வணங்கி நல்லஅடியார்களோடும் அவ்வோடத்தினின்று மிறங்கியருளி, நறுமணங் கமழுங் கொன்றைமலர்மாலையை யணிந்த சிவபெருமானது திருக்கோயிற் றிருவாயிலின் முன்பு மகிழ்வோடும் வந்து சேர்ந்தருளினர்.—எ-று. (அ௬௯)

---

## திருக்கொள்ளம்பூதூர்-ஈரடிமேல்வைப்பு-பண்-காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

கொட்டமேகமழுங்கொள்ளம்பூதூர்
நட்டமாடியநம்பனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௧)

கோட்டகக்கழனிக்கொள்ளம்பூதூர்
நாட்டகத்துறைநம்பனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௨)

குலையினார்தெங்குசூழ்கொள்ளம்பூதூர்
விலையிலாட்கொண்டவிகிர்தனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௩)

குவளைகண்மலருங்கொள்ளம்பூதூர்த்
தவளநீறணிதலைவனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௪)

கொன்றைபொன்சொரியுங்கொள்ளம்பூதூர்
நின்றபுன்சடைநிமலனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௫)

ஓடம்வந்தணையுங்கொள்ளம்பூதூ
ராடல்பேணியவடிகளையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௬)

ஆறுவந்தணையுங்கொள்ளம்பூதூ
ரேறுதாங்கியவிறைவனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௭)

குரக்கினம்பயிலுங்கொள்ளம்பூதூ
ரரக்கனைச்செற்றவாதியையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௮)

பருவராலுகளுங்கொள்ளம்பூதூ
ரிருவர்காணபரியான்கழலுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௯)

நீரகக்கழனிக்கொள்ளம்பூதூர்த்
தேரமண்செற்றசெல்வனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௧௦)

கொன்றைசேர்சடையான்கொள்ளம்பூதூர்
நன்றுகாழியுண்ஞானசம்பந்த
னின்றுசொன்மாலைகொண்டேத்தவல்லார்போ
யென்றும்வானவரோடிருப்பாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - வில்வவன்நாதர்; தேவியார் - சுந்தரநாயகியம்மை.

---

நீணிலைக்கோ புரமதனை யிறைஞ்சிப் புக்கு நிகரிலாத் தொண்டருட னெருங்கச் சென்று, வாணிலவு கோயிலினை வலங்கொண் டெய்தி மதிச் சடையார் திருமுன்பு வணங்கி நின்று, தானுவே யாற்றின்க ணோடமு ய்க்குந் தன்மையா லருடந்த தலைவா னாகப், பூணிறுய் களிற்றுரிவை போர்த்த முக்கட் புனிதனே யெனப்பணிந்து போற்றி செய்தார்.

(இ-ள்.) உயர்ந்த நிலைகளையுடைய திருக்கோபுரத்தை வணங்கி யுள்ளே புகுந்து ஒப்பற்ற அடியார்களோடு நெருங்கச்சென்று ஒளிபொருந்திய திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்து, சந்திரசடாதரராகிய சிவபெருமான் சந்நிதியில் வணங்கி நின்று, ஓர்காலத்துஞ் சலியாத நிலைமையையுடைய பெருமானே! ஆற்றில் ஓடத்தை நடத்துவிக்குந் தன்மையால் திருவருளைத்தந்த முதல்வரே! சர்ப்பாபரணத்தை யணிந்த அருளாளரே! (கயாசுரனென்னும்) யானையின் றோலையுரித்து ஆடையாகப் போர்த்தருளிய மூன்று கண்களையுடைய பரிசுத்தரே! என்று வணங்கித் துதித்தருளினர்—எ-று. (௬௦௦)

போற்றிசைத்துப் புறம்போந்தங் குறையு நாளிற் பூழியன்முன் புன் சமயத் தமணர் தம்மோ, டேற்றபெரு வாதின்க ணெரியின் வேவாப் பதிகமுடை யிறையவரை யிறைஞ்ச வேண்டி, யாற்றவுமங் கருள்பெற்றுப் போந்து முன்ன மணைந்தபதி களுமிறைஞ்சி யன்பர் சூழ, நாற்றிசையும் பரவுதிரு நள்ளா றெய்தி நாடுடைநா யகர்கோயி லணணி னாரே.

(இ-ள்.) அவ்வாறு துதித்துப் புறத்திற்சென்று அத்திருப்பதியிலெழுந்தருளியிருக்கும் நாள்களில், பாண்டியராசனுக்கு முன்பு புல்லிய சமயத்தை யுடைய சமணர்களோடு எதிர்த்த பெரியவாதில் (அக்கினியிலிட்டபோது) வேகாத திருப்பதிகத்தையுடைய (திருநள்ளாற்றி லெழுந்தருளிய) சிவபெருமானை வணங்க விருப்பங்கொண்டு அங்கு வில்வவனேசரது திருவருளை மிகுதியாகப்பெற்று அங்கு நின்றுமெழுந்தருளி, முன்னே பொருந்திய திருப்பதிகளையும் வணங்கி அடியார்கள் சூழும்படி நான்கு திக்கிலுள்ளவர்களுந் துதிக்குந் திருநள்ளாற்றையடைந்து நாடுடைய நாயகரென்னுஞ் சிவபெருமானது திருக்கோயிலை யடைந்தருளினர்.—எ-று. ()

நீடுதிருத் தொண்டர்புடை சூழ வங்க ணித்திலயா னத்திடைநின் றிழிந்து சென்று, பீடுடைய திருவாயில் பணிந்து புக்குப் பிறையணிந்த சென்னியார் மன்னுங் கோயின், மாடுவலங் கொண்டுள்ளான் மகிழ்ந்து புக்கு மலர்க்கரங்கள் குவித்திறைஞ்சி வள்ள லாரைப், பாடகமெல் லடியெடுத்துப் பாடி நின்று பரவினர் கண்ணருவி பரந்து பாய.

(இ-ள்.) மிகுந்த திருத்தொண்டர்கள் அருகில் சூழ்ந்துவர அங்கு முத்துச் சிவிகையினின்று மிறங்கிச்சென்று பெருமைபொருந்திய திருவாயிலைப்பணிந்து உள்ளே புகுந்து இளம்பிறையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானெழுந்தருளிய திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்து மகிழ்ந்து உள்ளே சென்று, தாமரைமலர்போன்ற திருக்கரங்களைச் சிரமேற் குவித்து வணங்கிச் சிவபெருமானைப் "பாடகமெல்லடி" என்று முதலெடுத்துத் திருப்பதிகம்பாடிநின்று கண்களினின்றும் ஆனந்த பாஷ்பம் பரவியொழுகத் துதித்தருளினர்.—எ-று. (௬௦௨)

**திருநள்ளாறுந் திருவாலவாயும் - பண் - நட்டபாடை.**

திருச்சிற்றம்பலம்.

பாடகமெல்லடிப்பாவையோடுபடுபிணக்காட்டிடம்பற்றிநின்று
நாடகமாடுநள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொல்லாய்
சூடகமுன்கைமடந்தைமார்கடுணைவரொடுந்தொழுதேத்திவாழ்த்த
வாடகமாடநெருங்குகூடலாலவாயின்கணமர்ந்தவாறே.

அன்புடையானையரனைக்கூடலாலவாய்மேவியதென்கொலென்று
நன்பொனைநாதனைநள்ளாற்றானைநயம்பெறப்போற்றிநலங்குலாவு
பொன்புடைசூழ்தருமாடக்காழிப்பூசுரன்ஞானசம்பந்தன்சொன்ன
வின்புடைப்பாடல்கள்பத்தும்வல்லாரிமையவரேத்தவிருப்பர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

---

தென்னவர்கோன் முன்னமணர் செய்த வாதிற் றீயின்க ணிடுமேடு பச்சை யாக்கி, யென்னுள்ளத் துணையாகி யால வாயி லமர்ந்திருந்த வா றென்கொ லெந்தா யென்று, பன்னுதமிழ்த் தொடைசாத்திப் பரவிப் போந்து பண்பினிய தொண்டரு ளங்கு வைகி, மன்னுபுகழ்ப் பதிபிற வும் வணங்கச் சண்பை வள்ளலார் நள்ளாறு வணங்கிச் செல்வார்.

(இ-ள்.) எமது தந்தையே! பாண்டியராசனுக்கு முன்னே சமணர்கள் செய்த வாதில் நெருப்பிலிட்ட திருவேடு வேவாமல் பச்சென்றிருக்கச்செய்து, என் னுயிர்த்துணையாய்த் திருவாலவாயிலெழுந்தருளியிருந்த வண்ணம் யாது? என்று தமிழ்த் திருப்பதிகம்பாடி யருளித் துதித்துப் புறத்திற் சென்று, நற்குணங்களை யுடைய திருத்தொண்டர்களோடு அத்திருப்பதியி லெழுந்தருளித் திருஞானசம்பந்தப்பிள்ளையார் நிலைபெற்ற புகழையுடைய மற்றைத் திருப்பதிகளையும் வணங்கும்பொருட்டுத் திருநள்ளாற்றை வணங்கிச் செல்வாராயினர்.—எ-று. (௩௦௩)

சீர்நிலவு திருத்தெளிச்சே ரியினைச் சேர்ந்து சிவபெருமான் றனைப் பரவிச் செல்லும் போது, சார்வறியாச் சாக்கியர்தம் போதி மங்கை சார்தலுமற் றதுவறிந்த சைவ ரெல்லா, மார்கலியின் கிளர்ச்சியெனச் சங்கு தாரை யளவிறந்த பல்லியங்க ணமுழக்கி யார்த்துப், பார்குலவு தனிக் காளஞ் சின்ன மெல்லாம் பரசமய கோளரிவந் தானென் றூத.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய திருத்தெளிச்சேரி யென்னுந் திருப்பதியை யடைந்து அங்குப்பார்வதீசனைவணங்கிச்செல்லும்பொழுது, நற்சார்பினையுணராத பௌத்தர்கள் வாழும் போதிமங்கையென்னு மூரானது சமீபிக்கவும், அதனையுணர்ந்த சைவர்களெல்லாரும் சமுத்திர முழக்கம்போலச் சங்குகளையும் தாரைகளையும் அளவில்லாத பல வாத்தியங்களையு முழக்கி யாரவாரித்து உலகத்தில் விளங்கும் ஒப்பற்ற காளம் சின்னம் முதலிய எல்லா வாத்தியங்களையும் பரசமயகோளரி யெழுந்தருளினொன்று ஊத.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௩௦௪)

புல்லறிவிற் சாக்கியர்க ளறிந்தார் கூடிப் புகலியர்தம் புரவலனார் புகுந்து தங்க, ளெல்லையினி லெழுந்தருளும்பொழுதுதொண்ட ரெடுத்த

வார்ப்,பொலியொலு மெதிர்முன் சென்று, மல்கியெழுந் திருச்சின்ன வொ லிக ளாலு மனங்கொண்ட பொறாமையினால் மருண்டு தங்கள், கல்வியி னின் மேம்பட்ட புத்த நந்தி முதலான தேரர்க்குங் கனன்று சொன்னார்.

(இ-ள்.) சிற்றறிவினையுடைய புத்தர்கள் அதனை யுணர்ந்து ஒன்றாகக் கூடி, சொல்லித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் வந்து தங்கள் எல்லையில் எழு ந்தருளும்பொழுது அடியார்கள் அரகரவென்றெடுத்த ஆரவாரத்தினாலும், எதிரே சென்று நிறைந்தெழுகின்ற திருச்சின்ன வொலிகளாலும் மனதிற்கொண்ட பொ றாமையினால் மயங்கித் தங்கள் பிடகநூலுணர்ச்சியிற் சிறந்த புத்தநந்தி முதலிய பௌத்தர்களுக்குங் கோபித்துச் சொன்னார்கள்.—எ-று. (கூ0௫)

மற்றவர்கள் வெவ்வுரையும் பிள்ளை யார்முன் வருசின்னப் பெரு கொலியு மன்னுந் தொண்டர், பொற்புடைய வார்ப்பொலியுஞ் செவியி னூடு புடைத்தநா ராசமெனப் புக்க போது, செற்றமிகு முள்ளத்துப் புத்த நந்தி செயிர்த்தெழுந்து தேரர்குழாஞ் சூழச் சென்று, வெற்றிபுனை சின்னங்கள் வாதி லெம்மை வென்றனரோ பிடிப்பதென வெகுண்டு சொ ன்னான்.

(இ-ள்.) புத்தர்கள் சொல்லிய கடுஞ்சொல்லும், பிள்ளையாருக்கு முன்னே ஊதிவருகின்ற திருச்சின்னங்களின் பேரோசையும், நிலைபெற்ற அடியார்கள் அர கரவென்று ஆரவாரிக்குஞ் சிறந்த ஓசையும் காதில் (காய்ச்சி) அடித்த நாராசம் போல்ச்சென்றபொழுது, கோபமிகுகின்ற மனத்தினையுடைய புத்தநந்தியானவன் கோபித்தெழுந்து புத்தர் கூட்டங்கள் சூழச்சென்று, நீங்கள் எம்மை வாதில் வெ ன்றபின்னல்லவோ? வெற்றிபொருந்திய சின்னங்களைப் பிடித்துச்செல்ல வேண் டுவது என்று கோபித்துச் சொல்லினான்.—எ-று. (கூ0௬)

புத்தரினம் புடைசூழப் புத்த நந்தி பொருவில்ஞா னப்புனிதர் திரு முன் பூது, மெய்த்தவிறற் சின்னங்கள் விலக்குங் காலை வெருண்டெழுந்த திருத்தொண்டர் வெறுத்து நோக்கி, யித்தகைய செயற்கிவரைத் தடிதல் செய்யா திதுபொறுக்கிற் றங்கணிலை யேற்பவொன்று, முத்துநிரைச் சிவி கையின்மேன் மணியை வந்து முறைபணிந்து புகுந்தபடி மொழிந்து நி ன்றார்.

(இ ள்.) புத்தர் கூட்டங்கள் தன்பக்கங்களிற் சூழும்படி புத்தநந்தி யென் பவன் ஒப்பற்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருமுன்னே ஊதிவருகின்ற மெய் ம்மையான வெற்றிபொருந்திய திருச்சின்னங்களைத் தடுத்தபொழுது அவனைக் கோபித்தெழுந்த அடியார்கள் வெறுத்துப்பார்த்து, இத்தன்மையான கொடுஞ் செய்கைக்கு இவர்களைக் கொல்லாமல் இதனைப் பொறுத்தால் தங்கள் நிலைமை யை மேற்கொள்வார்களென்று முத்துச்சிவிகையின்மே லெழுந்தருளிவருந் திரு ஞானசம்பந்தப்பிள்ளையாரை யடைந்து முறைமையாக வணங்கி (புத்தநந்தி முதலி யோர் வந்து) தடுத்த செய்கையை விண்ணப்பஞ்செய்து நின்றார்கள்.—எ-று.

மெய்த்த விறற்சின்னம் - மெய்ம்மையான புகழைக்கூறும் வெற்றிச்சின் னம்; தங்கணிலை யேற்றலாவது - முன்னர் மதுரைப்பதியி லிருந்த சமணர்கள் அடியார்களுக்குத் தீங்கு விளைக்கக்கருதித் தீக்கொளுவுதல் முதலிய துர்க்கருமங்க ளைச்செய்தமைபோல இவர்களும் அடியார்களுக்குத் தீங்கு விளைக்கக் கருதுவார்க ளென்பதாம். மணி - உவமையாகுபெயர். (கூ0௭)

வருமிடத்தி லழகிதா நமக்கு வாதின் மற்றிவர்தம் பொருணிலைமை மறுத் வண்ணம், பொருமிடத்தி லறிகின்றோம் புத்த நந்தி பொய்ம்மேற் கோளெனப்புகலி வேந்தர் கூற, வருமறைசொற் றிருப்பதிக மெழுது மன்ப ராளுடைய பிள்ளையார் திருவாக் காலே, யுருமிடித்து விழப்புத்த னுத்த மாங்க முருண்டுவீழ் கெனப்பொரு வுரைமுன் விட்டார்.

(இ-ள்.) நாம் வருமிடத்தில் இது அழகாகவிருந்தது; புத்தநந்தி கூறும் பொய் மேற்கோளாகிய இப்பௌத்தர்களதுபொருளின் நிலைமையானது மறுக்கப் படாதிருத்தலை வாது செய்யுமிடத்தி லறிவோமென்று திருஞானசம்பந்தப்பிள்ளையார் கூறியருள, அரிய தமிழ்வேதமாகிய திருப்பதிகங்களை எழுதும் அடியாராகிய சம்பந்தசரணாலயர் திருஞானசம்பந்தப்பிள்ளையாரருளிச்செய்த தேவாரத்திரு வாக்காலே இடியிடித்துவிழ இப் புத்தநந்தியினுடைய தலை யுருண்டுவிழக்கடவதென்று மனஞ்சகியாமல் கோபவாக்கை முன் விட்டருளினார்.—எ-று.

புத்தநந்தி பொய்மேற்கோளாகிய இவர்தம் பொருணிலைமை எனக்கூட்டுக. பதிகமெழுது மன்பர்-சம்பந்தசரணாலயர்; இவர் திருஞானசம்பந்தப்பிள்ளையாருடைய நல்லம்மான். (௯௦அ)

ஏறுயர்த்தார் சைவநெறி யாணை யுய்க்க வெதிர்விலக்கு மிடையூற் றை யெறிந்து நீக்கு, மாறில்வலி மந்திரமா மசனி போல வாய்மையுரைத் திருத்தொண்டர் வாக்கி னாலே, வேறுமொழிப் போரேற்பான் வந்த புத்தன் மேனியையுந் தலையினையும் வெவ்வே றாகக், கூறுபட நூறியிடப் புத்தர் கூட்டங் குலைந்தோடி விழுந்துவெருக் கொண்ட தன்றே.

(இ-ள்.) இடபக்கொடியை யுயர்த்திய சிவபெருமானது சைவசமயத்தினாணையை யுலகமெங்கும் நடத்த அதற்கு எதிராக வந்தடையு மிடையூறுகளை வேரறக்களைந்து ஒழிக்கும் ஒப்பற்ற வலிய மந்திரமாகிய இடியைப்போல உண்மையுரையாகிய (தேவாரத்தோடுகூடிய) சம்பந்த சரணாலயர் திருவாக்கினால், தர்க்க மொழியால் வாதுப்போர் செய்யவந்த புத்தநந்தியினதுடம்பையுந் தலையையுந் தனித்தனிக் கூறாகும்படிச் சிதைக்க (அதனால் அவனுடன் வந்த) புத்தர் கூட்டம் நிலைகுலைந்தோடி விழுந்து அச்சங்கொண்டது.—எ-று. (௯௦௯)

மற்றவர்க ணிலைமையையும் புத்த நந்தி வாக்கின்போ ரேற்றவன் றன் றலையு மெய்யு, மற்றுவிழ வத்திரவாக் கதனா லன்ப ரறுத்ததுவுங் கண்டவர னடியா ரெல்லாம், வெற்றிதரும் பிள்ளையார் தமக்குச் சென்று விண்ணப்பஞ் செயவெதிர்ந்த விலக்கு நீங்க, வுற்றவிதி யதுவேயா மர வென் றெல்லா மோதுமென வவ்வொலிவா னுற்ற தன்றே.

(இ-ள்.) அவ்வாறு அச்சமுற்றோடிய பௌத்தர்களது நிலைமையையும், வாதுப்போர் செய்யவந்த புத்தநந்தியினுடைய தலையும் உடலுஞ் சிதறிவிழும்படி (பிள்ளையார் அருளிச்செய்த பஞ்சாக்ஷரத்திருப்பதிகத்துப் பத்தாவது திருப்பாசுரத்தில்) "அத்திரமாவன வஞ்செழுத்துமே" என்னுந் திருவாக்கால் சம்பந்தசரணாலயர் அறுத்ததையும் பார்த்த சிவனடியார்களெல்லாம் வெற்றிபொருந்திய திருஞானசம்பந்தப்பிள்ளையாரிடத்திற் சென்று விண்ணப்பஞ் செய்துகொள்ள, பிள்ளையார் அவன் நம்மிடத்தி லெதிர்த்தலாலாய குற்றம் நீங்கும்படி பொருந்திய விதி அதுவேயாகும்; நீங்களனைவரும் அரகரவென்று ஆரவாரியுங்களென்று

கூறியருள, (அவ்வாறு கூறும் அர்கரவென்னும்) அவ்வோசை விண்ணுலகளவுஞ் சென்றது.—எ-று. (கூகO)

திருச்சிற்றம்பலம்.

புத்தர்சமண்கழுக்கையர் பொய்கொளாச்
சித்தத்தவர்கடெளிந்துதேறின
வித்தகநீறணிவார்வினைப்பகைக்
கத்திரமாவனவஞ்செழுத்துமே.

திருச்சிற்றம்பலம்.

அஞ்சியகன் றோடியவப் புத்த ரெல்லா மதிசயித்து மீண்டுமுடனணைந்துகூடி, வஞ்சனையோ விதுதான்மற றவர்தஞ் சைவ வாய்மையோ வெனமருண்டு மனத்திற் கொள்வா, ரெஞ்சலின்மந் திரவாத மன்றி யெம்மோ டெதிர்ந்துபொருட் பேசுவதற் கிசைவ தென்று, தஞ்செயலின் மிக்குள்ள சாரி புத்தன் றன்னையே முன்கொண்டு பின்னுஞ் சார்ந்தார்.

(இ-ள்.) (அங்கு நின்றும்) பயந்தோடிய அப்புத்தர்க ளெல்லாரும் ஆச்சயமடைந்து மீளவும் ஒருங்குவந்து கூடி, புத்தநந்தி இறந்தது வஞ்சனையோ! அல்லது, அவர்கள் அனுசரித்தொழுகும் சைவசமயத்தின் உண்மையோ! என்று மயங்கித் தங்கள் மனத்தில்நினைத்துக் குறைவில்லாத மந்திரவாதமில்லாமல் எம்முடனெதிர்த்துப் பொருளின் நிலைமையைக்குறித்து வாதுபேசுவதற்கு வாருங்களென்று தங்கள் சமயக்கொள்கையிற் சிறந்த சாரிபுத்த னென்பவனை முன்னே கொண்டு பின்னும் வந்து சேர்ந்தார்கள்.—எ-று. (கூகக)

அத்தன்மை கேட்டருளிச் சண்பை வந்த வடலேறு திருவுள்ளத் தழகி தென்று, மெத்தமகிழ்ச் சியினோடும் விரைந்து சென்று வெண்டரளச் சிவிகையினின் றிழிந்து வேறோர், சத்திரமண் டபத்தின்மிசை யேறி நீடு சைவருட னெழுந்தருளி யிருந்து சாரும், புத்தர்களை யழைக்கவெனத் திருமுன் னின்றார் புகலிகா வலரேவல் போற்றிச் சென்றார்.

(இ-ள்.) சீகாழிப்பதியி லவதரித்தருளிய வலிய ஆண் சிங்கம்போன்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார் அவர்கள் சொல்லிய தன்மையைக் கேட்டுத் தமது திருவுள்ளத்தில் இது நன்றென்று கருதி மிக்கமகிழ்ச்சியுடன் விரைந்துசென்று வெள்ளிய முத்துச் சிவிகையினின்று மிறங்கி, அங்குள்ள வேறொரு சத்திரமண்டபத்தின் மேலேறிச் சிறந்த அடியார் திருக்கூட்டத்தோடு மெழுந்தருளியிருந்து (அங்குள்ள அடியார்களைப்பார்த்து) வாது செய்யவந்த புத்தர்களை இங்கு அழையுங்களென்றுகூறியருள, தமது திருமுன்னின்ற அடியார்கள் திருஞானசம்பந்தப் பிள்ளையாரது பணிவிடையைச் சிரமேற்கொண்டு சென்றார்கள்.—எ-று. (கூகஉ)

சென்றவர்க டேரர்குழா மணைந்து நீங்கள் செப்பிவரும் பொருணிலைமை தெரிக்க வெங்கள், வென்றிமழ விளங்களிறு சண்பையாளி வேத பாரகன்மும்மைத் தமிழின்வேந்த, னன்றுமகிழ்ந் தழைக்கின்றா னீண்ட

நீரு நண்ணுமெனக் கூறுதலு நன்மை சாராத், தன்றகைமைப் புத்தருடன் சாரி புத்தன் சத்திரமண் டபமுன்பு சார வந்தான்.

(இ ள்.) (திருஞானசம்பந்தப்பிள்ளையாரது கட்டளையை மேற்கொண்டு) சென்ற அடியார்கள் பௌத்தர் கூட்டத்தை யடைந்து, நீங்கள் சொல்லிவருகின்ற பொருணிலைமையைக்குறித்து வாதுசெய்ய, எங்கள்வெற்றிபொருந்தியஇளங்களிறு போல்பவரும், சீகாழித்தலைவரும், வேதபாரகரும், (இயலிசை நாடகமென்னும்) முத்தமிழ்த் தலைவருமாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் (உமது வருகையை) நன்றாக மகிழ்கூர்ந்து அழைக்கின்றா ராதலால், நீங்களெல்லாரும் நெருங்க வாருங்களென்று கூறவும், சாரிபுத்த னென்பவன் நன்மையடையாத அற்பத்தன்மையையுடைய பௌத்தர்களோடு சத்திரமண்டபத்தின் முன்புவந்தான்.—எ-று.

இளங்களிறு = யானைக்கன்று ; மழவிளம் என்பது மீமிசைச்சொல். வேதபாரகர் = வேதங்களில் முடிந்த பொருளின் கரையை யடைந்தவர். (௩௩௩)

அங்கணைந்து மண்டபத்துப் புத்த ரோடும் பிள்ளையா ரருகணைய நின்ற போதி, லெங்குநிகழ் திருச்சின்னந் தடுத்த புத்த னிருஞ்சிரத்தைப் பொடியாக்கு மெதிரி லன்பர், பொங்குபுகழ்ப் புகலிகா வலர்தம் பாதம் போற்றியரு ளாற்சாரி புத்தன் றன்னை, யுங்கடலை வனும்பொருளு முரைக்க வென்ன வுற்றவா தினைமேற்கொண் டுரைசெய் கின்றான்.

(இ-ள்.) சாரிபுத்தன் அம்மண்டபத்தில் வந்து சேர்ந்து பௌத்தர்களோடு பிள்ளையாருக்குச் சமீபத்தில்நின்றபொழுது, எங்கும் விளங்கியொலிக்கின்ற திருச்சின்னவோசையைத் தடுத்த புத்தநந்தியினது பெரிய தலையைச் சிதறச்செய்த ஒப்பற்ற சம்பந்தசரணாலயர் மிக்க புகழையுடைய சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவடிகளைத் துதித்து, அவரது திருவருளினால் சாரிபுத்தனைப்பார்த்து உங்கள் கடவுளையும், (நீங்கள் கூறும் பஞ்சகந்த முதலிய) பொருளின்நிலைமையையும் சொல்லுமென்று கூற, அவன் தான் செய்யவந்த வாதத்தை மேற்கொண்டு சொல்லுகின்றான்—எ-று. (௩௩௪)

கற்பங்க ளனைத்தினிலும் பிறந்து வீந்து கதிமாறுங் கணபங்க வியல்பு தன்னிற், பொற்புடைய தானமே தவமே தன்மை புரிந்தநிலை யோகமே பொருந்தச் செய்ய, வுற்பவிக்கு மொழிவின்றி யுரைத்த ஞானத் தொழியாத பேரின்ப முத்தி பெற்றான், பற்பலரும் பிழைத்துய்ய வறமுன் சொன்ன பான்மையான் யாங்கடொழும் பரம னென்றான்.

(இ-ள்) கற்பங்கள் தோறும் (பிறர்க்குறுதி செய்யும் பொருட்டுப்) பிறந்து இறந்து அக்கதியினின்று மாறி முத்தியையடையும் கணபங்கவியல்பு கூறும் புத்தமதத்தில் (ஆதிபுத்தன்) அழகியதானம்-தவம் பண்புமிக்க யோகம் இவைகளைத் தான் பொருந்தச்செய்ய, அதனால்தோன்றுகின்ற நீங்காநிலைமையாற்கூறிய ஞானத்தால் கெடாதபேரின்பத்தைக்கொடுக்குங் கந்தவீட்டையடைந்தான்; (அவனே) தேவர் முதலிய பலரும் (பிறவித்துன்பத்தினின்று நீங்கிப்) பிழைத்துய்யும் பொருட்டு அறத்தை முன்னே சொல்லிய அருளுடையோன், யாங்கள்வணங்குங் கடவுளென்று கூறினான்—எ-று.

பௌத்தக்கடவுள் உயிர்க் குறுதிசெய்யும்பொருட்டுக் கற்பங்க டோறும் யோனிவழிப் பிறந்திறப்ப னென்பதனை,

" அறந்திகழ் பிடக நன்னூ லோதியன் புடைய னாகிப்
பிறக்குபல் யோனி தோறும் பிறந்துயிர்க் குறுதி செய்து
மறந்தரு கோற லாதி நால்வகை யொழித்து மேன்மை
சிறந்துள போதி நீழற் சேர்வனெம் மிறைவ னாவான் " எனவரும் திருவாதவூரர் புராணத்தானுமுணர்க.

பௌத்தக்கடவுள் கற்பங்கடோறும் பிறந்து வீந்து உயிர்க்குறுதியைத் தரத்தக்க அறத்தைக் கூறினனென்றுரைப்பின், அவன்பிறக்குந்தோறும் மாதாவுதரத்தைக்கீறிப்பிறத்தலானும், அத்தகைய பிறப்புக்களில் புலி முதலியனவாகப் பிறக்குங்கால் பிறவுயிர்களைக் கொன்றுதின்று உடலை வளர்த்தமையானும்,உயிர்களினது மயக்கத்தை யொழிக்கவந்தவன் தானே யம்மயக்கத்திற் பொருந்துதல் கூடாமையானும்,அவ்வாறுபிறப்பது கன்மங்காரணமாகவேயன்றித் தனதிச்சையினாலன்றாகலானும் அது பொருந்தாது ; அவன் அறநூல் கூறினனென்பதுங் கூடாததாம். மாதாவுதரத்தைப் பிளந்துவருவது யோனியைப் பரிசிக்கலாகாதென்றும், யோனிசாதக மழிவென்றுங் கருதி, அவள் வயிற்றைக் கீறிப்பிறத்தல் பௌத்த சமயக்கொள்கை.

" அலகிறந்த யோனிகளிற் புகுந்ததெல்லா மறத்தையளித் திடவென்னி லவற்றி னெல்லா - நிலவுவது கன்மத்தா லாகு மன்றி நினைந்ததோ ரிச்சையினா னிகழ்ந்தா னாகி -உலகுதனி லுள்ளோர்க்கு மதுவே யாகு மொருத்திவயிற் றினி லிருந்தங் குதரங் கீறித் - தலமதில்வந் தானென்னிற் றாயைக் கொன்றான் றருமத்தை யின்றெனக்குச் சாற்றி டேலே.

" அரியினொடு நரியுழுவை யாதியாக வானபோ தறந்திரிந்து கோறலாதி, பரிவினொடுஞ் செய்தனனு மில்லையாகிற் பசிதனக்குத் தின்பதவன் பழுதையோதான்- கருதிலவன் பரதுக்க துக்கனாகிற் கணவனிழந் தோர்கட்குங் கண்ணிகுத்தித் - திரியுமவர் துயரினுக்கு மிரங்கு வோன்றன் செயலறத்துக் கழகிதாஞ் செப்புங் காலே " எனவருஞ் சிவஞான சித்தியாரானும்,

" ஆதலா லறநூ லென்ப துனக்கிலை யுயிர்கட் காகப்
பேதமாம் யோனி தோறும் பிறந்தன னிறைவ னென்றாய்
தீதுசே ரொருவர்மாலை தீர்க்கவந் தவர்க டாமும்
போதமால் கொள்ளி னம்மால் போவதங் குள்ள தாமோ"—எனவருந் திருவாதவூரர் புராணத்தானு முணர்க. (௯௧௫)

என்றுரைத்த சாரிபுத்த னெதிர்வந் தேற்ற விருந்தவத்துப் பெருந் தன்மை யன்பர் தாமு, நன்றுமது தலைவன்றான் பெற்றா னென்று நாட்டுகின்ற முத்திதான் யாவ தென்றார், நின்றவுரு வேதனையே குறிப்புச் செய்கை நேர்நின்ற ஞானமென நிகழ்ந்த வைந்து, மொன்றியகந் தத்தழிவே முத்தி யென்ன வுரைசெய்தான் பிடகத்தி னுணர்வு மிக்கான்.

(இ-ள்.) இவ்வாறு கூறிய சாரிபுத்தனோடு எதிர்வந்து வாதுசெய்யக்குறித்த மிக்க தவத்தினையுடைய பெருந்தன்மை பொருந்திய சம்பந்தசரணாலயரும் (அவனைப்பார்த்து) நீ கூறியது நன்றாயிருந்தது; உமது கடவுள் முத்திபெற்றானென்று நீ நாட்டுகின்ற முத்தியினியல்பு யாதென்றுவினாவினார்; (அதற்குப்) பிடக

நூலுணர்ச்சியிற்சிறந்த சாரிபுத்தனெனவன் நிலைபெற்ற உருவம்-வேதனை-குறிப்பு-பாவனை - விஞ்ஞானம் என்று கூறும் ஐந்துஞ் சேர்ந்தகந்தங்களின் அழிவே முத்தியென்று கூறினன்—எ-று.

உருவமுதலியபஞ்சகந்தங்களுள், உருவகந்தமாவது—பிருதிவி-அப்பு - தேயு-வாயு என்னும் பூதவுரு நான்கும், வலி - கந்தம் - இரதம்-வன்னமென்னும் உபாதானவுரு நான்குமாகிய எட்டுமாம்; வேதனாகந்தமாவது—குசலாவேதனை-அகுசலாவேதனை - குசலாகுசலவேதனை ஆகிய மூன்றுமாம்; இவற்றுள், குசலாவேதனை = சுகவறிவு, அகுசலாவேதனை = துக்கவறிவு, குசலாகுசலவேதனை = சுகதுக்கவறிவு; குறிப்புக்கந்தமாவது—சோத்திரம் - துவக்கு - சக்ஷு - சிங்குவை-ஆக்கிராணம் - மன மென்னு மாறுமாம்; பாவனாகந்தமாவது—தீக்குணம் பத்தும், நற்குணம் பத்துமாகிய இருபதுமாம்; இவற்றுள் தீக்குணம் பத்தாவன—பொய்கூறல் - கோட்சொல்லல் - கடுஞ்சொல்கூறல் - பயனில சொல்லல் என வாக்கின் தீக்குண நான்கும், கொலை - களவு - வீண்செய்கை - எனக் காயத்தின் தீக்குணம் மூன்றும், கொலைநினைக்கை - காமப்பற்று - ஆசை யென மனத்தின் தீக்குணம் மூன்றுமாகிய தீக்குணம் பத்துமாம்; நற்குணம் பத்தாவன—மெய்யுரை - நல்வார்த்தை - இனியனகூறல் - பயன்படு சொல் என வாக்கின் நற்குணம் நான்கும், பள்ளிவலம்வரல் - தவம்புரிதல் - தானஞ் செய்தல் எனக் காயத்தின் நற்குணம் மூன்றும், அருணினைவு - ஆசையறுத்தல் - தவப்பற்று என மனதின் நற்குணம் மூன்றுமாகிய நற்குணம் பத்துங் கூடிய இருபதுமாம்; விஞ்ஞானகந்தமாவது—சத்தம் - ஸ்பரிசம் - ரூபம் - ரசம் - கந்தம் - சித்தம் என்னு மாறுமாம்; இதனை, "ஓங்குருவம் வேதனை யுளக்குறிப்புப் பாவனைமெய் — தாங்குணர்வென் றைந்தாங்கந் தம்" "உருவமுடல் பூத வுபாதாய மென்னு - மிருவிதத்தி னோது மெழுமென்" வேதனையின் பதுன் பிவற்றின் விரவலுமென் - றோதவொரு மூன்றுமென் றோர்" "பொறிவிதமோ ரைந்தும் பொறியைப் பொருந்தி - யறியுமன முங்குறிப்பென் றோய்" "வாக்குமன மாக்கையிவை பாவனையென் றேமதியா - யாக்குமிவை தாமறம்பா வம்" "இந்நால் விதத்தினுமெய்ந் தையமற வெண்ணுமனம் - விஞ்ஞான மென்றே விளம்பு" "இந்தவித மைந்துஞ்சந் தானத் தெழுந்தழிகை - பந்தமென வேகீதான் பார்" என வரும் பரமத திமிர பானுவானும், "தீவினையென்ப தியாதென வினவி - லாய்தொடி நல்லா யாங்கது கேளாய் - கொலையே களவே காமத் தீவழக் - குலையா வுடம்பிற் றோன் றுவ மூன்றும் - பொய்யே குறளை கடுஞ்சொற் பயனில் - சொல்லெனச் சொல்லிற் றோன்றுவ நான்கும் - வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சி - யுள்ளந் தன்னி லுருப்பன மூன்றும் - பத்து வகையெனப் பயன்றெரி புலவ - ரித்திறம் படாஅர் படர்குவ ராகில்-விலங்கும் பேயு நரகரு மாகிக் -கலங்கிய வுள்ளக் கவலையிற் றோன்றுவர் - நல்வினை யென்ப தியாதென வினவிற் - சொல்லிய பத்தின் றொகுதியி னீங்கிச் - சீலந் தாங்கித் தானந் தலைநின்று-மேலென வகுத்த வொருமூன் றிறத்துத்-தேவரு மக்களும் பிரமரு மாகி" என வரும் மணிமேகலையானும், "எட்டிவை யுருவ மூன்று வேதனை யாறு ஞான - மொட்டிய குறிப்போ ராறு செய்கையு மிருப தாகக் - கட்டிய பஞ்ச கந்தங் கணத்தினிற் பங்க மாகுந், தெட்டொரற் பத்துமூன் றுஞ் சுகதநூற் றுணிவு தானே."—என வரும்பௌத்தநூற் செய்யுளானு முணர்க.

இப் பஞ்சகந்தங்களுங் கெட்டழிதலே முத்தியின்ப மென்பதனை,

"ஓங்கிய வுருவ மோடும் வேதனை குறிப்பி னோடுந்
தாங்குபா வனைவிஞ் ஞானந் தாமிவை யைந்துங் கூடிப்
பாங்கினுற் சந்தானத்திற் கெடுவது பந்த துக்க
மாங்கவை பொன்றக் கேடா யழிவது முத்தி யின்பம்."—எனவருஞ்

சிவஞானசித்தியாரானும்,

"மேவிய கருவிற் சேரு முருவம்வே தனைகு றிப்புப்
பாவனை யுடன்விஞ் ஞானம் பஞ்சகந் தங்கள் கூடி
யோவில்பல் லுணர்வுண் டாகி யொழிவது பிறவித் துன்ப
மாவது பொன்றக் கேடா யழிவது முத்தி யென்றான்."—என வருந் திரு

வாதவூரர்புராணத்தானு முணர்க. (௩௧௬)

ஆங்கவன்றா னுரைத்த மொழி கேட்ட வன்ப ரதனையனு வாதஞ்
செய் தவனை நோக்கித், தாங்கியஞா னத்துடனுங் கந்த மைந்துந் தாம்வீந்
து கெட்டனவேற் றலைவன் றானு, மீங்குளனென் றவனுக்கு விடய மாக
யாவையுமு னியற்றுதற்கு விகார மேசெய், தோங்குவடி வமைத்துவிழ
வெடுக்கும் பூசை கொள்வாரா ருரைக்கவென வுரைக்க லுற்றான்.

(இ-ள்.) அந்தச் சாரிபுத்தன் சொல்லியவார்த்தையைக் கேட்ட சம்பந்த சரணாலயர் அவன் கூறியதைத் தாம் அனுவதித்து அவனைப்பார்த்து, பொருந்திய ஞானத்தோடுகூடிய ஐந்து கந்தங்களும் (உங்கள் கடவுளுக்கு) ஒருங்கேயழிந்து கெட்டனவாயின், அக்கடவுளும் இவ்வுலகத்தி லிருக்கின்றானென்று அவனறியும் படி (பூசை நைவேத்தியங்கள் முதலிய) எல்லா உபசாரங்களையும் அவன் முன் செய்தற்கு மனோவிகாரமான பாவனை செய்து பெரிய உருவத்தை யமைத்து விழாக் கொண்டாடும் பூசனையையேற்றுக்கொள்பவர் யாவரென்று வினாவ, அச் சாரிபுத்தன் சொல்லத்தொடங்கினான்.—எ-று.

அனுவாதமாவது.—முன்னர்க் கூறிய பொருளை யெடுத்து விவகரித்தற் பொருட்டு அதனைப்பின்னுங் கூறுவது. பஞ்சகந்தங்களுங் கெட்டு முத்திபெற்றவனுக்கு உடம்புங் கருவியு மின்மையால் அவனுக்கு உருவ மமைத்துச் செய்யும் பூசை முதலியவை கூடாமையால் "விகாரமே செய்தோங்கு வடிவமைத்து விழவெடுக்கும் பூசைகொள்வாரார்" என்று கூறினார். (௩௧௭)

கந்தமாம் வினையுடம்பு நீங்கி யெங்கோன் கலந்துளன்முத் தியிலெ
ன்றா னென்னக் காணு, மிந்திரியங் கண்முதலாங் கரணந் தானு மில்லை
யே லவனுணர்ச்சி யில்லை யென்றார், முந்தையறி விலனுகி யுறங்கி னானை
நிந்தித்து மொழிந்துடன்மீ தாடி னார்க்கு, வந்தவினைப் பயன்போல வழி
பட் டார்க்கும் வருமன்றோ நன்மையென மறுத்துச் சொன்னான்.

(இ-ள்.) பஞ்சகந்தங்களாலாகிய வினையுடம்பு அழிந்து எமது முதல்வன் முத்தியில் சேர்ந்திருக்கின்றான் என்று கூற, (அதற்கு அவர், முத்தியிற் சேர்ந்த உமது கடவுளுக்கு) விடயங்களை யுணருங் கருவியாகிய கண் முதலிய கரணங்களு மில்லாதொழியில் அவனுக்கு உணர்ச்சியில்லை யென்று மறுத்தருளினர்; முற்பட்ட விஞ்ஞானமானது கெட்டு (ஆலயவிஞ்ஞான மடைந்து) உறங்குகின்றவனை நிந்தித்துக்கூறி அவனுடம்பின்மீது மிதித்தாடினவொருவனுக்கு அதனால் வந்த

தீவினைப் பயன்போல (கந்தமைந்துங் கெட்டு முத்தியடைந்தநமது தலைவனை) வழிபட்டவர்க்கும் நல்வினைப்பயன்வருமென்று அதனை மறுத்து (உத்தரம்) கூறினான்.—எ-று. (௩௧௮)

சொன்னவுரை கேட்டருளி யன்பர் தாமுந் தொடர்ந்தவழி பாடு பல கொள்கின் றானுக், கன்னவற்றி னுடன்பாடு மெதிர்வு மில்லை யான போ தவன்பெறுத லில்லை யென்றார், முன்னவற்றி னுடன்பாடுமெதிர்வு மின்றி முறுகுதுயி லுற்றானை முனிந்து கொன்றால், வின்னுயிர்போய்க் கொலையாகி முடிந்த தன்றோ விப்படியா லெம்மிறைவற் கெய்து மென்றான்.

(இ-ள்.) சம்பந்தசரணாலயரும் சாரிபுத்தன் சொல்லிய வார்த்தையைக் கேட்டருளி, நீங்கள் செய்யும் பல வழிபாடுகளையும் ஏற்றுக்கொள்ளும் உமது கடவுளுக்கு (அவைகளை யுணர்தற்குரிய கருவிக ளின்மையால்) அவ் வழிபாட்டில் விருப்பும் வெறுப்பு மில்லையாம்; அவ்வாறானபொழுது, அவன் அப்பூசையை யேற்றுக்கொள்ளுத லில்லையென்று மறுத்துக் கூறினார்; அதற்கு அவன் தம்முன் புள்ள விடயங்களில் விருப்பும் வெறுப்புமின்றி மிக்க துயிலுற்றவனை ஒருவன் கோபித்துக் கொன்றால், (கொல்லப்பட்டவனுக்கு) இனிய உயிர்நீங்கி, கொன்றவனுக்குக் கொலைப்பாவமாகி முடிந்ததுபோல இவ்வாறாக எமது கடவுளுக்கு (இவ் வழிபாடுகள்) அடையுமென்று கூறினான்.—எ-று.

பஞ்சகந்தங்களு மறக்கெடுதலே முத்தியென்றுகூறின், அப்பஞ்சகந்தங்களுங் கெட்டழியின் முத்திபெற்றாரில்லையாமாகலின், பௌத்தக்கடவுள் முத்திபெறுதற்குக்கூடாதா மென்பதுதோன்ற 'அவன் பெறுத லில்லையென்றார்' என்று கூறினார். இதனை,

"ஐந்துகந்தஞ் சந்தானத் தழிதல்பந்த துக்க மறக்கெடுகை முத்தியின்ப மென்றறைந்தாய் கந்த, மைந்துமழிந் தான்முத்தி யணைபவர்யா ரென்ன வணைபவர்வே றில்லையென்று யார்க்குமுத்தி யின்ப - மைந்தினுணர் வினுக் கென்னி லழியாத வுணர்வுண் டாகவே யவ்விடத்து முருவாதி கந்த - மைந்துமுள வாமதவும் பந்த மாகி யரந்தைதரு முத்தியின்ப மறிந்திலகா ணியே" எனவருஞ் சிவஞான சித்தியாராலும்,

"அழிந்திடி லைந்து கந்த முத்தியென் றுரைத்தா யைந்து
மழிந்திடின் முத்தி பெற்றா ராரென வினவும் போதி
லழிந்திடு மைந்தி னுண்டா முணர்வென வுரைக்கி லைந்து
மழிந்தன விலையா முத்தி யாவது மில்லை யென்றார்."—எனவருந் திருவாதவூரர்புராணத்தானு முணர்க. (௩௧௯)

இப்படியாலெய்துமென விசைத்து நீயிங் கெடுத்துக்காட் டியதுயிலு மியல்பி னான்போன், மெய்ப்படிய கரணங்க ளுயிர்தா மிங்கு வேண்டுதி யா னும்மிறைவற் கான போது,செப்பியவக் கந்தத்தின் விளைவின் றாகித் திரிவில்லா முத்தியிற்சென் றிலனுமாகு, மப்படியக் கந்தத்து ளறிவுங் கெட்டா லம்முத்தி யுடனின்ப மணையா தென்றார்.

(இ-ள்.) இவ்வாறு வருமென்று கூறி, நீ இங்கு எடுத்துக்காட்டிய (உடன்பாடு மெதிர்வுமின்றித்) துயில்பவனைபோல, மெய்ம்மைபொருந்திய இந்திரியங்க

ளைய் மூயிலையும் இங்கு (உமது கடவுளுக்கு) விரும்புகின்றாய் ; அவைகள் உமது கடவுளுக்கு வரும்போது, நீ முற்கூறிய பஞ்சகந்தங்களுங் கெட்டு அழிவில்லாத முத்தியில் செல்லாதவனு மாயினான் ; அவ்வாறு அப் பஞ்சகந்தத்துள் உணர்வுங் கெட்டால், அம்முத்தியோடு பேரின்பத்தையுமடையாது என்று மறுத்தருளினார்.

அவ்வுரைகேட் டெதிர்மாற்ற மறைவ தின்றி யணைந்துளனம் முத் தியெனு மதுவும் பாழாங், கவ்வையினின் றவனையெதிர் நோக்கி ஞானக் கடலமுத மனையவர்தங் காத லன்பர், பொய்வகையே முத்தியினிற் போனான் முன்பே பொருளெல்லா முணர்ந்துரைத்துப் போனா னென்றாய், எவ்வகையா லவனெல்லா முணர்ந்த தீது மில்லதுரைப் பாயெனினு மேற்போ மென்றார்.

(இ-ள்.) (சாரிபுத்தன் சம்பந்தசரணாலயர் கூறிய) அவ்வார்த்தைக் கேட்டு அதற்கு எதிருத்தரஞ் சொல்லாதிருந்தான்; தான் கூறிய முத்தியும் பாழாயினவென்று வருந்திநின்ற அச்சாரிபுத்தனை மெய்ஞ்ஞானக் கடலிற்றோன்றிய ஞானமுதத்தை யுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது அன்பராகிய சம்பந்த சரணாலயர் பொய்வழியே முத்தியிற்சென்ற நுமது கடவுள் அவன் முத்தியடைதற்கு முன்னமே எல்லாப்பொருள்களையு முழுதுணர்ந்து அறமுரைத்துப் போனானென்று கூறினாய், அக்கடவுள் எவ்வாறு முழுதொருங் குணர்ந்தது ; இதுவும் பொருந்தாத தாகும் ; அதற்கு உத்தரங்கூறுவாயெனினும் அதனை யாம் அங்கீகரிப்போமென்று கூறியருளினார்.—எ-று.

பஞ்சகந்தங்களையும் பிரிப்பில் ஆன்மாவில்லை யென்ப தவன்கொள்கையாமாகலின், 'பொய்வகையே முத்தியினிற் போனான்' என்றும், எமது கேள்விக்கு உத்தரங் கூறுதல் பொருந்தாமையின், "உரைப்பாயெனினு மேற்போம்' என்றுங்கூறினார்.

"சிலபொருளை யறிந்தவற்றின் றிறத்தே யொட்டிச்
சிந்திப்ப னெப்பொருளு மென்னிற் சென்று
பலபொருளா யொன்றுபல பேதமாகிப்
பயின்றுவரு மாதலாற் பார்க்கு மாறென்
னுலகுதனி லொருபொருளங் குணரும் போதி
னுற்றுணர்த லாராய்த றெளித லுண்டாய்
நிலவுமத னுணர்வு பன்மை முன்பி
னின்றிடா தென்பையெல்லா நினைப்ப தெங்கே."

"முத்திநிலங் கண்டறங்கண் மொழிந்தா னயின்
முதன்முழுதும் போன்றிப்பின் மொழிந்த வண்ண
மொத்திருந்தே னெய்கூட்டி யுண்டி றந்தோ
னுலகினில்வந் திதுநீதென் றுரைத்தா லொக்குஞ்
செத்ததுபின் னென்றுரைக்கிற் கதியிற் செல்லாத்
தேரனுரை நீபெருகிச் சென்றா றாகு
மத்தினள வறியாதிக் கரையோர் தம்மை
யக்கரைக்கே செல்லவிடு மாசை யாமே." என வருஞ் சிவஞான சித்தியாரானுமுணர்க. (௯௨௧)

உணர்வுபொதுச் சிறப்பென்ன விரண்டின் முன்ன துளவான மரப்
பொதுமை யுணர்த்த லேனைப், புணர்சிறப்பு மரங்களில்வைத் தின்ன
தென்ற லிப்படியால் வரம்பில்லாப் பொருள்க ளெல்லாங், கொணரும்
விற கினைக்குவைசெய் திடினும்வேறு குறைத்தவற்றைத் தனித்தனியே
யிடினும் வெந்தீத், துணர்கதுவிச் சுடவல்ல வாறு போலத் தொகுத்து
ம்விரித் துந்தெரிக்குந் தொல்லோ னென்றான்.

(இ-ள்.) (அதற்குச் சாரிபுத்தன்) பொதுவுணர்ச்சி-சிறப்புணர்ச்சி யென்று கூறு மிரண்டில், பொதுவுணர்ச்சி (தூரத்தில்) தோன்றுவனவாகிய மரங்களின் பொதுமையையுணர்தலாம்; மற்றைய சிறப்புணர்ச்சியாவது (அம்மரங்களின் அருகடைந்து) அம்மரங்களைக்குறித்து, இஃது இன்னமரம் இஃது இன்னமரம், என்று பிரித்துக் கூறுதலாம்; இவ்வாறு, அளவற்ற எல்லாப் பொருள்களையும், கொண்டுவந்த விறகைக்குவித்து நெருப்பிடினும் தனித்தனி வெட்டி வெவ்வேறாக இடினும் கொடிய தீக்கொழுந்து பற்றிச் சுடத்தக்க தன்மைபோல எமது கடவுள் தொகுத்தும் விரித்தும் பொருளியல்புகளையும் அறங்களையுங் கூறியருளுவன் என்று கூறினான்.—எ-று. (௩௨௨)

எடுத்துரைத்த புத்தனெதி ரியம்பு மன்ப ரெரியுணர்வுக் கெடுத்துக்
காட் டாகச் சொன்ன, லடுத்தவுணர் வுருவுடைய தன்று சொன்ன வன
ல்வடிவிற் றுமதுவு மறிதி நுங்கோன், றொடுத்தநிகழ் காலமே யன்றியே
னைத் தொடர்ந்தவிரு காலமுந்தொக் கறியு மாகிற், கடுத்தவெரி நிகழ்கா
லத் திட்ட தல்லாற் காணாத காலத்துக் கதுவா தென்றார்.

(இ-ள்.) இவ்வாறு எடுத்துக்கூறிய சாரிபுத்தனுக்கெதிரே சம்பந்தசரணாலயர் கூறுவார், நீ இருவகையுணர்வுக்கும் நெருப்பைத் திருட்டாந்தமாகக் கூறின், அத்திருட்டாந்தத்தை யேற்ற தாட்டாந்தமென்னு மறிவானது உருவமுடையதன்று; நீ உவமை கூறிய நெருப்பு ரூபமுடையதாம், அதனையு மறிவாயாக; நுமது கடவுள் நிகழ்காலமேயன்றி மற்ற இறந்தகாலம் எதிர்காலங்களையும் பொருந்தி யறியுமாயின், கொடிய நெருப்பு நிகழ்காலத்திலிட்ட விறகினைச் சுடுதலன்றி இறந்தகாலத்தும் எதிர்காலத்தும் கழிந்தனவும் வருவனவுமாகிய விறகினைச் சுடமாட்டாதென்று கூறியருளினார்.—எ-று. (௩௨௩)

ஆதலினா லுன்னிறைவன் பொருள்க ளெல்லா மறிந்ததுநும் முத்திபோ
லாயிற் றன்றே, யேதமா மிவ்வறிவா லுரைத்த நூலு மென்றவனுக் கேற்
குமா றருளிச் செய்ய, வாதமா றொன்றின்றித் தோற்றான் புத்தன் மற்
றவனை வென்றருளிப் புகலி மன்னர், பாததா மரைபணிந்தா ரன்பர் தங்
கள் பான்மையழி புத்தர்களும் பணிந்து வீழ்ந்தார்.

(இ-ள்.) ஆகையினால் உமது கடவுள் எல்லாப்பொருள்களையு மறிந்தது உமது முத்திபோலப் பாழாயிற்று; இவ்வகை யறிவினால் உணர்ந்துரைத்த பிடக நூலும் குற்றமுடையதாமென்று அச்சாரிபுத்தனுக்குப் பொருந்தும் வண்ணம் அருளிச்செய்ய, சாரிபுத்தன் யாதொரு வாதமுமின்றித் தோல்வி யடைந்தான்; அன்பராகிய சம்பந்த சரணாலயர் அச்சாரிபுத்தனை வென்று சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவடிகளை வணங்கினார்; தங்கள் சமயநிலை குலைந்த சாரிபுத்தன் முதலிய புத்தர்களும் (பிள்ளையாரது) திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார்கள்.—எ-று. (௩௨௪)

புந்தியினு லவருரைத்த பொருளின் றன்மை பொருளன்றும் படிய ன்பர் பொருந்தக் கூற, மந்தவுணர் வுடையவரை நோக்கிச் சைவ மல் லாது மற்றொன்று மில்லை யென்றே, யந்தமில்சீர் மறைகளா கமங்க ளே னை யகிலகலைப் பொருளுணர்ந்தா ரருளிச் செய்யச், சிந்தையினி லதுதெ ளிந்து புத்தர் சண்பைத் திருமறையோர் சேவடிக்கீழ்ச் சென்று தாழ்ந் தார்.

(இ-ள்.) புத்தர்கள் தங்கள் புத்தியினால் கருதியுரைத்த பொருளின் தன் மையைப் பொருளல்லவென்று அவர்க ளுணரும்படி சம்பந்த சரணாலயர் பொரு ந்தக் கூறியருள, முடிவில்லாத சிறப்பினையுடைய வேதாகமங்களையும் மற்றெல்லா க்கலைஞானங்களையு மோதாதுணர்ந்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் மந்தபுத்தியை யுடைய அப்பௌத்தர்களைப் பார்த்துச் சைவசமயமே யல்லது வேறு எச்சமயங்க ளும் மெய்ப்பொரு ளுடையனவல்லவென்று அருளிச்செய்ய, பௌத்தர்க ளனை வரும் அதனைத் தமது சிந்தையில் தெளிந்து திருஞானசம்பந்தப்பிள்ளையாரது சிவ ந்த திருவடிக்கீழடைந்து வணங்கினார்கள்.—எ-று. (கூ௨௫)

அன்றவர்க்குக் கவுணியர்கோன் கருணை நோக்கமணைதலினு லறிவின்மை யகன்று நீங்கி, முன்னொழுது விழுந்தெழுந்து சைவ ரானார் முகைமலர்மா ரியின்வெள்ளம் பொழிந்த தெங்கு, நின்றனவுஞ் சரிப்பனவுஞ் சைவமே யா நிலைமையவர்க் கருள்செய்து சண்பை வேந்தர், சென்றுசிவ னூர்பதி கள் பணிய வேண்டித் திருக்கடவூ ரதன்மருங்குச் சேர வந்தார்.

(இ-ள்.) அப்பொழுது அப்புத்தர்களுக்குத் திருஞானசம்பந்தப்பிள்ளை யாரது திருவருட்பார்வையானது வந்து பொருந்துதலினால் அஞ்ஞானமொழிந்து பிள்ளையார் திருமுன்னே வீழ்ந்து வணங்கி யெழுந்து சைவர்களானார்கள்; எவ்விட த்தும் அரும்பவிழ்ந்த பூமழை பொழிந்து; சீகாழித்தலைவராகிய பிள்ளையார் உலக த்திலுள்ள தாவரசங்கமங்களனைத்தும் சிவசம்பந்தமேயாமென்னு நிலைமையை அவர்களுக்கருள்செய்து சிவபெருமானெழுந்தருளுந் திருப்பதிகளைவணங்க விரு ம்பித் திருக்கடவூரென்னும் க்ஷேத்திரத்தின் சமீபத்து வந்தருளினார்—எ-று. ()

வேறு.

அங்ஙகரி லடியார்க ளெதிர்கொள்ளப் புக்கருளிக்
கொன்னவிலுங் கூற்றுதைத்தார் குரைகழல்கள் பணிந்தேத்தி
மன்னியமர்ந் துறையுநாள் வாகீச மாமுனிவ
ரெங்ஙகரி லெழுந்தருளிற் றென்றடியார் தமைவினவ.

(இ-ள்) அத்திருக்கடவூரிலுள்ள அடியார்கள் தம்மை எதிர்கொள்ளும்படி அத்திருப்பதியிற் புகுந்தருளி, அச்சத்தைத்தருகின்ற இயமனை யுதைத்தருளிய அ மூர்த்தகடேசரது சப்திக்கின்ற வீரக்கழலையணிந்த திருவடிகளை வணங்கித்துதித்து அங்குஎழுந்தருளியிருக்கும்நாள்களில், (அப்பிள்ளையார்) திருநாவுக்கரசு சுவாமிகள் எந்தத்திருப்பதியில் எழுந்தருளியிருக்கின்றாரென்று அடியார் திருக்கூட்டத்தை வினவியருள.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கூ௨எ)

அங்கவரு மடிபோற்றி யாண்டவர செழுந்தருளிப்
பொங்குபுனற் பூந்துருத்தி நகரின்கட் போற்றிசைத்துக்

தங்குதிருத் தொண்டுசெயு மகிழ்ச்சியினாற் சார்ந்தருளி
யெங்குநிகழ்ந் திடவிருந்த படியெல்லா மியம்பினார்.

(இ-ள்.) அவ்வடியார்களும் பிள்ளையாரது திருவடிகளைத்துதித்து; திருநாவுக்கரசு சுவாமிகளெழுந்தருளி மிக்க நீர்வளம்பொருந்திய திருப்பூந் துருத்தியென்னுந் திருப்பதியில் சிவபெருமானைத்துதித்துப் பொருந்திய திருத்தொண்டுசெய்யும் மகிழ்ச்சியினால் அங்குச்சேர்ந்தருளி எவ்விடத்தும் புகழ்விளங்கும்படி இருந்தவண்ணமெல்லா மெடுத்துக் கூறினார்கள்—எ-று. (௬௨௮)

அப்பரிசங் கவர்மொழிய வாண்டவர சினைக்காணு
மொப்பரிய பெருவிருப்பு மிக்கோங்க வொளிபெருகு
மைப்பொருவு மறைக்கண்டர் கழல்வணங்கி யருள்பெற்றுச்
செப்பரிய புகழ்ப்புகலிப் பிள்ளையார் செல்கின்றார்.

(இ-ள்) அடியார்கள் அவ்வாறு கூற, திருநாவுக்கரசு சுவாமிகளைக்காண வேண்டுமென்னும் ஒப்பற்ற பெருவிருப்பமானது அதிகரிக்க ஒளிமிகுந்த மேகம்போலுங்காளகண்டராகிய அமூர்த்த கடேசரது திருவடிகளைவணங்கித் திருவருள்பெற்றுச் சொல்லுதற்கரிய புகழையுடைய சீகாழியிலவதரித்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் அத்திருக்கடவூரினின்று மெழுந்தருளுவாராயினார்—எ-று. (௬௨௯)

பூவிரியுந் தடஞ்சோலைப் புடைபரப்பப் புனல்பரக்குங்
காவிரியின் றென்கரைபோய்க் கண்ணுதலார் மகிழ்ந்தவிட
மேவியினி தமர்ந்திறைஞ்சி விருப்புறுமெய்த் தொண்டரொடு
நாவரச ருழைச்சண்பை நகராசர் நண்ணுவார்.

(இ-ள்.) பூக்கள்மலர்கின்ற பெரியசோலைகளின் பக்கங்களில் நிறையும்படி நீர்பரவிய காவிரி நதியின் தென்கரைவழியாகச் சென்று சிவபெருமானெழுந்தருளிய திருப்பதிகளையடைந்து அன்புகூர்ந்து வணங்கிப் பேரன்புபொருந்திய அடியார்களோடு திருநாவுக்கரசுசுவாமிகளிடத்துச் சீகாழித் திருப்பதிக்கரசராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் செல்கின்றவராயினார்—எ-று. (௬௩௦)

அந்தணர்சூ ளாமணியார் பூந்துருத்திக் கணித்தாக
வந்தருளும் பெருவார்த்தை வாகீசர் கேட்டருளி
நந்தமையா ளுடையவரை நாமெதிர்சென் றிறைஞ்சுவது
முந்தைவினைப் பயனென்று முகமலர வகமலர்வார்.

(இ-ள்.) வேதியர் சிரோன்மணியாகிய பிள்ளையார் திருப்பூந்துருத்திக்குச் சமீபமாக எழுந்தருளுகின்ற பெருவார்த்தையைத் திருநாவுக்கரசு சுவாமிகள் கேள்விப்பட்டு, நம்மையாளாகவுடைய பிள்ளையாரை நாம் எதிர்கொண்டு வணங்குவது பூர்வத்திற்செய்த நல்வினைப் பயனென்று முகமலர்ச்சி யடைய மனமகிழ்வாராயினார்—எ-று. (௬௩௧)

எதிர்சென்று பணிவனென வெழுகின்ற பெருவிருப்பா
னதிதங்கு சடைமுடியார் நற்பதங்க டொழுதகந்தப்
பதிநின்றும் புறப்பட்டுப் பரசமயஞ் சிதைத்தவர்பா
லெதிர்கின்ற பெருந்தவத்தோர் முன்னெய்த வந்தணைந்தார்.

(இ-ள்.) எதிர்கொண்டு வணங்குவேனென்று அதிகரித்தெழுகின்ற பெரு விருப்பினால் கங்கைநதிபொருந்திய சடைமுடியையுடைய சிவபெருமானது நல்ல திருவடிகளைத் துதித்து, அந்தத் திருப்பூந்துருத்தியினின்று மெழுந்தருளிப் புறச்சமயங்களை யழித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையா ரிடத்து முதிர்ந்த பெருந் தவத்தினையுடைய திருநாவுக்காசுசுவாமிகள் அவர் திருமுன்பு வந்தடைந்தருளினார்.—எ-று. (௯௩௨)

திருச்சின்னம் பணிமாறக் கேட்டநாற் றிசையுள்ளோர்
பெருக்கின்ற வார்வத்தாற் பிள்ளையார் தமைச்சூழ்ந்த
நெருக்கினிடை யவர்காணு வகைநிலத்துப் பணிந்துள்ள
முருக்கியெழு மனம்பொங்கத் தொண்டர்குழாத் துடனணைந்தார்.

(இ-ள்.) (திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருநாமங்களைக்கூறித்) திருச்சின்ன மூதக் கேட்ட நான்குதிக்கிலுள்ளவர்களும் மிக்க மகிழ்ச்சியினால் திருஞானசம்பந்தப்பிள்ளையாரை (த் தரிசிக்கும்படி) சூழ்ந்திருக்கும் நெருக்கில் அப்பிள்ளையார் தம்மைக் காணாதவண்ணம் பூமியில் விழுந்து வணங்கி மனதையுருக்கி யெழுகின்ற அன்பானது அதிகரித்தோங்க அடியார் திருக்கூட்டத்துடன் சென்றருளினார்.—எ-று. (௯௩௩)

வந்தணைந்த வாகீசர் வண்புகலி வாழ்வேந்தர்
சந்தமணித் திருமுத்தின் சிவிகையினைத் தாங்கியே
சிந்தைகளிப் புறவந்தார் திருஞான சம்பந்தர்
புந்தியினில் வேறொன்று நிகழ்ந்திடமுன் புகல்கின்றார்.

(இ-ள்.) இவ்வாறு வந்து சேர்ந்த திருநாவுக்கரசு சுவாமிகள் சிறந்த சீகாழிப்பதியில் வாழுந்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது அழகிய முத்துச் சிவிகையைத் தாங்கிக்கொண்டு மனமகிழும்படி வந்தருளினார்; திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது திருவுள்ளத்தில் (திருநாவுக்கரசர் எங்கிருக்கின்றாரென்னும்) ஒரு ஐயமுண்டாகத் தமக்கு முன்னிற்கும் அடியார்களைப் பார்த்து வினவுவாராயினார்,—எ-று. (௯௩௪)

அப்பர்தா மெங்குற்றா ரிப்பொழுதென் றருள்செய்யச்
செப்பரிய புகழ்த்திருநா வுக்கரசர் செப்புவா
ரொப்பரிய தவஞ்செய்தே னாதலினா லும்மடிக
ளிப்பொழுது தாங்கிவரப் பெற்றுய்ந்தேன் யானென்றார்.

(இ-ள்.) இப்பொழுது அப்பர் எங்கிருக்கின்றாரென்று அடியார்களை வினவியருள, (அப்பொழுது) சொல்லுதற்கரிய புகழையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் அருளிச்செய்கின்றார். அடியேன் ஒப்பற்ற பெருந்தவத்தைச் செய்தேனாகையால், இப்பொழுது தேவரீரது திருவடிகளைத் தாங்கிவரப்பெற்றுக் கடைத்தேறினேனென்று கூறியருளினார்.—எ-று. (௯௩௫)

அவ்வார்த்தை கேட்டஞ்சி யவனியின்மே விழிந்தருளி
யிவ்வாறு செய்தருளிற் றென்னாமென் றிறைஞ்சுதலுஞ்
செவ்வாறு மொழிநாவர் திருஞான சம்பந்தர்க்
கெவ்வாறு செயத்தகுவ தென்றெதிரே யிறைஞ்சுதலும்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் கூறிய அவ்வார்த்தையை (த் திருஞானசம்பந்தப்பிள்ளையார்) கேட்டு அச்சமுற்று (முத்துச்சிவிகையினின்றும்) பூமியிலிழிந்தருளித் தேவரீர் இவ்வாறுசெய்தருளியது என்னவென்று அவரை வணங்கவும், செவ்விய திருநாவுக்கரசுசுவாமிகள் (அடியேன் இச்சிவிகையைத் தாங்குதலேயன்றி) வேறு பணி யாது செய்யத்தக்கதென்று கூறி திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு எதிரேவணங்கவும்.—எ-று. (௩௩௬)

சூழ்ந்துமிடைந் தருகணையுந் தொண்டரெல்லா மதுகண்டு
தாழ்ந்துநில முறவணங்கி யெழுந்துதலைக் கைகுவித்து
வாழ்ந்துமனைக் களிப்பினராய் மற்றிவரை வணங்கப்பெற்
றூழ்ந்தபிறப் புய்ந்தோமென் றண்டமெலா முறவார்த்தார்.

(இ-ள்.) சூழ்ந்து நெருங்கி அருகில் வருகின்ற அடியார்களெல்லாம் அதனைக்கண்டு பூமியிற்பொருந்தவிழுந்து வணங்கிச் சிரசினமேற்கைகளைக்குவித்துச் சிவானந்தப் பெருவாழ்வடைந்து மனமகிழ்ச்சியுடையவர்களாய் இத்திருநாவுக்கரசரை நாம் வணங்கப்பெற்று (அதனால்) மிக்க பிறவிதுன்பத்தினின்றுங் கடைத்தேறினேமென்று கூறி அண்டங்களெல்லா நிறையும்படி (அரகரவென்று) ஆரவாரித்தார்கள்.—எ-று. (௩௩௭)

திருஞான சம்பந்தர் திருநாவுக் கரசர்தமைப்
பெருகார்வத் தொடுமணைந்து தழீஇக் கொள்ளப பிள்ளையார்
மருவாரு மலரடிகள் வணங்கியுடன் வந்தணைந்தார்
பொருவாரும் புனற்சடையார் மகிழ்ந்ததிருப் பூந்துருத்தி.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருநாவுக்கரசுசுவாமிகளை மிக்க விருப்பத்தோடுமணைந்து தழுவிக்கொள்ள, (திருநாவுக்கரசுசுவாமிகள்) திருஞானசம்பந்தப்பிள்ளையாரது வாசனைபொருந்திய தாமரைமலர்போன்ற திருவடிகளை வணங்கி அவருடனே அலைமோதுகின்ற கங்கைநதியையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளிய திருப்பூந்துருத்தியை யடைந்தருளினார்.—எ-று. (௩௩௮)

அன்பர்குழாத் தொடுஞ்செல்வா ரானேற்றார் மகிழ்கோயின்
முன்பணித்தா கச்சென்று கோபுரத்தை முன்னிறைஞ்சித்
துன்பமிலாத் திருத்தொண்ட ருடன்றொழுது புக்கருளி
யென்புருக வலங்கொண்டு பணிந்தேத்தி யிறைஞ்சினார்.

(இ-ள்.) அடியார் திருக்கூட்டத்துட னெழுந்தருளுந் திருஞானசம்பந்தப்பிள்ளையார் இடபவாகனத்தையுடைய பொய்யிலிநாதர் மகிழ்ந் தெழுந்தருளிய திருக்கோபுரத்தை முன்னேவணங்கிச் சிறிதுந் துன்பமில்லாத திருத்தொண்டர்களுடன் தொழுது உள்ளேபுகுந்தருளி எலும்புருகும்படி பிரதக்ஷணஞ்செய்து வணங்கித் துதித்தருளினார்.—எ-று. (௩௩௯)

பொய்யிலியா ரைப்பணிந்து போற்றியே புறத்தணைவார்
செய்யசடை யார்கோயிற் றிருவாயின் முன்னாக
மைய்ப்றுசீர்த் தொண்டர்குழாம் வந்துபுடை சூழவுல
குய்யவரு வார்தங்க ளுடன்மகிழ்ந்தங் கினிதிருந்தார்.

(இ-ள்.) திருப்பூந்துருத்தியி லெழுந்தருளிய பொய்யிலிநாதனைவணங்கித் துதித்துப் புறத்தி லெழுந்தருளுந் திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிவந்த சடைமுடியையுடைய அவ்வெம்பெருமானது திருக்கோயிற்றிருவாயிலின் முன்பு குற்றமற்ற சிறப்பினையுடைய அடியார் திருக்கூட்டங்கள் தம்பக்கங்களில்வந்து சூழ, உலகத்தார் கடைத்தேறும்பொருட்டு அவதரித்தருளிய அப்பிள்ளையாருந் திருநாவுக்கரசுசுவாமிகளுந் தங்களோடு கலந்து மகிழ்கூர்ந்து அங்கு இனிதாக எழுந்தருளியிருந்தார்கள்.—எ-று. (௩௪௦)

வேறு.

வாக்கின் றனிமன்னர் வண்புகலி வேந்தர்தமைப
போக்கும் வரவும வினவப் புகுந்ததெல்லாந
தூக்கின் றமிழ்விரகர் சொல்லிறந்த ஞானமறை
தேக்குந் திருவாயாற் செப்பி யருள்செய்தார்.

(இ-ள்.) ஒப்பற்ற திருநாவுக்கரசுசுவாமிகள் வளவிய சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரை மதுரைக்கெழுந்தருளியதன்மையையும், அங்கு நின்றும் மீண்டுவந்தருளிய தன்மையையும் வினவியருள, சிறந்த முத்தமிழ்விரகராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அங்குநிகழ்ந்த செய்திகளையெல்லாம் சொல்லுதற்கரிய ஞானமயமாகிய வேதங்களைத் திருநெறித்தமிழ்வேதமாக அருளிச்செய்யுந் திருவாயினால் சொல்லியருளினார்.—எ-று. (௩௪௧)

காழியினில் வந்த கவுணியர்தம போரேற்றை
யாழிமிசைக் கன்மிதப்பின் வந்தா ரடிவணங்கி
வாழிதிருத் தொண்டென்னும் வான்பயிர்தா னோங்குதற்குச்
சூழும் பெருவேலி யானீ ரெனத்தொழுதார்.

(இ-ள்.) சமுத்திரத்தில் (சமணர்கள் கட்டியிட்ட) கற்றூணாகிய தெப்பத்தில் மிதந்துவந்து கரையேறிய திருநாவுக்கரசுசுவாமிகள் சீகாழிப்பதியி லவதரித்தருளிய கவுணியர்குலத்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவடிகளைவணங்கி (த்தேவரீர்) பேரின்பவாழ்வைத் தரத்தக்கதாகிய சிவபெருமானது திருத்தொண்டென்னும் பெரியபயிர் தழைப்பதற்குச் சூழ்ந்துள்ள பெரிய வேலியாயி னீரென்று (கைகூப்பித்) தொழுதார்.—எ-று. (௩௪௨)

பிள்ளையார் தாமுமவர் முன்றொழுது பேரன்பின்
வெள்ள மனையபுகழ் மானியார் மேன்மையையுங்
கொள்ளும் பெருமைக் குலச்சிறையார் தொண்டினையு
முள்ளபரி செல்லா மொழிந்தங் குவந்திருந்தார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் அத்திருநாவுக்கரசுசுவாமிகளை முன்னேவணங்கிப் பேரன்பின் வெள்ளம்போலும் நிறைந்த புகழையுடைய மங்கையர்க்கரசியாரது மேன்மையையும், பெருமைபொருந்திய குலச்சிறைநாயனாரது திருத்தொண்டையும் உள்ளபடியே எல்லாவற்றையுங் கூறியருளி அங்குச் சந்தோஷித்தெழுந்தருளி யிருந்தார்.—எ-று. (௩௪௩)

தென்னற் குயிரோடு நீறளித்துச் செங்கமலத்
தன்ன மனையார்க்கு மமைச்சர்க்கு மன்பருளித்
துன்னுநெறி வைதிகத்தின் றூநெறியே யாக்குதலான்
மன்னுபுகழ் வாகீசர் கேட்டு மனமகிழ்ந்தார்.

(இ-ள்.) (சுரநோயினாலிறவாமல்) பாண்டியராசனுக்கு உயிருடன் விபூதியைக்கொடுத்தருளி, செந்தாமரைமலரில் வாழும் இலக்ஷுமியையொத்த பாண்டிமாதேவியாருக்கும், மந்திரியாராகிய குலச்சிறைநாயனாருக்கும் அன்பின்தன்மையை யருளிச்செய்து, பொருந்திய முததிநெறியானது வைதிகசம்பந்தமாயுள்ள சைவநெறியேயாகச் செய்தலால், நிலைபெற்றபுகழையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள்கேட்டு மனமகிழ்ச்சியடைந்தார்.—எ-று.

வைதிகம் = வேதசம்பந்தமாயுள்ளது. (௩௪௪)

சொல்லின் பெருவேந்தர் தொண்டைவள நாடெய்தி
மலரும் புகழ்க்காஞ்சி யேகாம் பரமன்னுஞ்
செல்வர் கழல்பணிந்து சென்றதெல்லாஞ் செப்புதலும்
புல்குநூன் மார்பருமப் போய்ப்ப போற்ற மனமபுரிந்தார்.

(இ-ள்.) சிறந்ததிருநாவுக்கரசுசுவாமிகள் வளப்பம்பொருந்தியதொண்டைநாட்டையடைந்து நிறைந்த புகழையுடைய ஸ்ரீகாஞ்சிபுரத்தில் ஏகாம்பரமென்னுந் திருக்கோயிலி லெழுந்தருளிய திருவேகம்பநாதரது திருவடிகளைவணங்கி அங்குநிகழ்ந்த செய்திகளையெல்லாங் கூறியருளவும், முப்புரிநூலணிந்த திருமார்பினையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் அத்திருப்பதியிற் சென்று வணங்கத் திருவுள்ளங்கொண்டருளினார்.—எ-று. (௩௪௫)

அங்கணரைப் போற்றியெழுந் தாணட வரசமர்ந்த
பொங்கு திருமடத்திற் புக்கங் கினிதமர்ந்து
திங்கட் பகவணியுஞ் சென்னியார் சேவடிக்கீழ்த்
தங்கு மனத்தோடு தாள்பரவிச் செல்லுநாள்.

(இ-ள்.) அருட்கண்ணராகிய பொய்யிலிநாதரைத் துதித்தெழுந்து திருநாவுக்கரசுசுவாமிக ளெழுந்தருளிய சிறந்த திருமடத்திற்சென்று அங்கு மகிழ்ந்திருந்தருளி, இளம்பிறையணிந்த சடைமுடியையுடைய பொய்யிலிநாதரதுதிருவடிக்கீழ்ப்பொருந்திய திருவுள்ளத்துடன் அவரது திருவடிகளைத் துதித்துச் செல்லுநாள்களில்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௩௪௬)

வாகீச மாமுனிவர் மன்னுதிரு வாலவாய்
நாக மரைக்கசைத்த நம்பர் கழலவணங்கப்
போகும் பெருவிருப்புப் பொங்கப் புகலியின்மே
லேகும் பெருங்காதல் பிள்ளையா ரேற்றெழுவார்.

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் நிலைபெற்ற திருவாலவாயி லெழுந்தருளிய பாம்பை யரைக்கச்சாகக்கட்டிய ஸ்ரீசுந்தரேசரது திருவடிகளை வணங்கும்

பொருட்டுச்செல்லும் பெருவிருப்பமானது அதிகரிக்க,திருஞானசம்பந்தப்பிள்ளையார் தாம் சீகாழிக்குச்செல்லும் பெருவிருப்பத்தை மேற்கொண்டு செல்கின்றவராயினர்.—எ-று. (௬௬௭)

பூந்துருத்தி மேவும் புனிதர்தமைப் புக்கிறைஞ்சிப்
போந்துதிரு வாயிற் புறத்தணைந்து நாவினுக்கு
வேந்தர் திருவுள்ள மேவவிடை கொண்டருளி
யேந்தலா ரெண்ணிறந்த தொண்டருட னேகினார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருப்பூந்துருத்தியி லெழுந்தருளிய பொய்யிலிநாதனை யடைந்து வணங்கித் திருவாயிலின்புறத்திற் சென்று சேர்ந்து திருநாவுக்கரசுசுவாமிகள் திருவுள்ளத்திற்குப் பொருந்த விடைபெற்றுக் கொண்டு அளவற்ற அடியார்களுடன் எழுந்தருளினர்.—எ-று. (௬௬௮)

மாடுபுனற் பொன்னி யிழிந்து வடகரையி
னீடுதிரு நெய்த்தான மையாறு நேர்ந்திறைஞ்சிப்
பாடுதமிழ் மாலைகளுஞ் சாத்திப் பரவிப்போ
யாடல் புரிந்தார் திருப்பழனஞ் சென்றணைந்தார்.

(இ-ள்.) அருகிலுள்ள நீர்மயமாகிய காவிரிநதியிலிறங்கி அந்நதியின் வடகரையிலுள்ள சிறந்த திருநெய்த்தானத்தையுந் திருவையாற்றையுஞ் சென்று வணங்கிப் பாடுகின்ற திருநெறித்தமிழ்ப்பாமாலைகளைச் சாத்தித் துதித்துச்சென்று, திருநடனஞ்செய்தருளும் ஆப்தசகாயரெழுந்தருளிய திருப்பழனமென்னுந் திருப்பதியைச் சென்று சேர்ந்தருளினர்.—எ-று. (௬௬௯)

செங்கண் விடையார் திருப்பழனஞ் சேர்ந்திறைஞ்சிப்
பொங்கிய காதலின்முன் போற்றும் பதிபிறவுந்
தங்கிப்போய்ச் சண்பைநகர் சார்ந்தார் தனிப்பொருப்பின்
மங்கை திருமுலைப்பா லுண்டருளும் வள்ளலார்.

(இ-ள்.) பர்வத ராசபுத்திரியாகிய உமாதேவியாரது திருமுலைப் பாலமுதுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிவந்த கண்ணையுடைய இடபத்தை வாகனமாகக்கொண்டருளுஞ் சிவபெருமானது திருப்பழனமென்னுந் திருப்பதியை யடைந்து வணங்கி மிக்க விருப்பத்தோடு முன்னே துதித்த மற்றத் திருப்பதிகளிலும் வசித்துச்சென்று சீகாழித்திருப்பதியை யடைந்தருளினர்.—எ-று.

தென்னாட் டமணு சறுத்துத் திருநீறே
யந்நாடு போற்றுவித்தார் வந்தணையும் வார்த்தைகேட்
டெங்கோள் பணிவதென வேற்றெழுந்த மாமறையோர்
முன்னாக வேத முழங்க வெதிர்கொண்டார்.

(இ-ள்.) பாண்டிநாட்டிலிருந்த சமணர்களாகிய குற்றத்தையறுத்து, அந்நாட்டிலுள்ளவர்களனைவரும் விபூதிசாதனத்தைப்போற்றச்செய்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளும் வார்த்தையைக்கேள்வியுற்று (ப்பிள்ளையாரை)

எப்பொழுது வணங்குவதென்று எதிர்கொண்டெழுந்தவேதியர்கள் (திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு) முன்னே வேதங்கவொலிக்கும்படி எதிர்கொண்டார்கள்.

வேறு.

போந்த நீடுமா மறையவ ரெதிர்கொளப் புகலிகா வலருந்தஞ்
சீத முத்தணி சிவிகையின் னிழிந்தெதிர் செல்பவர் திருத்தோணி
நாதர் கோயின்முன் றோன்றிட நகைமலர்க் கரங்குவித் திறைஞ்சிப்போ
யோத நீரின்மே லோங்குகோ யிலின்மணிக் கோபுரஞ் சென்றுற்றார்.

(இ-ள்.) ஞான மிக்க சிறந்தவேதியர்க ளெதிர்கொண்டுவரத் திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் குளிர்ந்த அழகிய முத்துச்சிவிகையினின்று மிறங்கி யெதிர்செல்பவர் ஸ்ரீதோணியப்பரது திருக்கோயில் தம் முன்னேதோன்ற,ஒளிபொருந்திய தாமரைமலர்போன்ற திருக்கரங்களைக் குவித்து வணங்கிச்சென்று,பிரளய வெள்ளத்தி லழியாமல் மிதந்தோங்கிய திருக்கோயிலினது அழகியதிருக்கோபுரத்தைச்சென் றடைந்தருளினார்.—எ-று. (௩௫௨)

அங்க மாநிலத் தெட்டுற வணங்கிப்புக் கஞ்சலி முடியேறப்
பொங்குகாதலிற்புடைவலங் கொண்டுமுன்பணிந்துபோற்றெடுத்தோதித்
துங்க நீள்பெருந் தோணியாங் கோயிலை யருளினாற் றொழுதேறி
மங்கை யோடுடன் வீற்றிருந் தருளினார் மலர்க்கழல் பணிவுற்றார்.

(இ-ள்.) பெரியபூமியில் அஷ்டாங்கமாக விழுந்து வணங்கி யுள்ளே புகுந்து அஞ்சலியாகக்குவித்த திருக்கரங்கள் சிரசின்மேற்செல்ல மிக்க அன்போடும் பக்கத்திற் பிரதக்ஷணஞ்செய்து, திருமுன்னேவணங்கிப் போற்றுதல்செய்து உயர்ந்த பெரிய திருத்தோணியென்னும் ஆலயத்தைத் திருவருளினால்வணங்கி மேலேறிப் பெரியநாயகியாரோடு அங்கு வீற்றிருந்தருளுந் தோணியப்பரது தாமரைமலர் போன்ற திருவடிகளை வணங்கினார்.—எ-று. (௩௫௩)

முற்று மெய்யெலாம் புளகங்கண் முகிழ்த்தெழ முகந்துகண் களிகூரப்
பற்று முள்ளமுள் ளலைத்தெழு மானந்தம் பொழிதரப் பணிந்தேத்தி
யுற்று மைசேர்வ தெனுந்திரு வியமக முவகையா லெடுத்தோதி
வெற்றி யாகமீ னவனவை யெதிர்நதி மிசைவரு கானென்பார்.

(இ-ள்.) திருமேனி முழுவதும் புளகாங்கிதமரும்பித் தோன்றவும், திருக்கோலத்தைத் தரிசித்துக் கண்கள் களிப்படையவும், (அப்பெருமானது திருவடிகளில்) பற்றிய திருவுள்ளத்தை யுள்ளே யலைத்து அதனாலெழுகின்ற ஆனந்தவெள்ளமானது பெருகவும் வணங்கித் துதித்து "உற்றுமைசேர்வது" என்னு முதலையுடைய திருஇயமகத் திருப்பதிகத்தைத் மகிழ்ச்சியாக எடுத்துத்துதித்துப் பாண்டியராசனது சபைக்கு எதிரே ஜெயமுண்டாகும்பொருட்டு "நதியிடைமிசைவருகான்" எனத் திருக்கடைக்காப்பிற் பாடி யருளுவாராயினார்.—எ-று. (௩௫௪)

**திருக்கழுமலம் - திரு-இயமகம்.**

*திருச்சிற்றம்பலம்.*

*உற்றுமைசேர்வதுமெய்யினையேயுணர்வதுநின்னருள்மெய்யினையே*
*கற்றவர்காய்வதுகாமனையேகனல்விழிகாய்வதுகாமனையே*
*யற்றமறைப்பதுமுன்பணியேயமரர்கள்செய்வதுமுன்பணியே*
*பெற்றுமுகந்ததுகந்தனையேபிரமபுரத்தையுகந்தனையே.*

*பருமதில்மதுரைமனனவையெதிரேபதிகமதெழுதிலையவையெதிரே*
*வருநதியிடைமிசைவருகரனேவசையொடுமலர்கெடவருகரனே*
*கருதலிலிசைமுரறருமருளேகழுமலமமரிறைதருமருளே*
*மருவியதமிழ்விரகன்மொழியேவல்லவர்தம்மிடர்திடர்மொழியே.*

*திருச்சிற்றம்பலம்.*

---

*சீரின் மல்கிய திருப்பதி கத்தினிற் றிருக்கடைக் காப்பேற்றி*
*வாரின் மல்கிய வனமுலை யாளுடன் மன்னினார் தமைப்போற்றி*
*யாரு மின்னருள் பெற்றுமீண் டணைபவ ரங்கையாற் றொழுதேத்தி*
*யேரின் மல்கிய கோயின்முன் பணிந்துபோந் திறைஞ்சினர் மணிவாயில்.*

(இ-ள்.) *சிறப்பு மிகுந்த திருப்பதிகத்தில் தொடங்கிய திருக்கடைக்காப்பைவைத்து, வாரோடுபொருந்திய அழகிய திருத்தனங்களையுடைய பெரியநாயகியாரோடெழுந்தருளிய தோணியப்பரைத் துதித்து நிறைந்த திருவருளைப்பெற்று மீண்டெழுந்தருளுந் திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது அழகிய திருக்கரத்தினால் வணங்கித் துதித்து, அழகில் மிக்க திருக்கோயிலின்முன்னே வணங்கிச் சென்று அழகிய திருவாயிலைப் பணிந்தருளினார்..—எ-று.* (௩௫௫)

*தாதை யாருமங் குடன்பணிந் தணைந்திடச் சண்பையார் தனியேறு*
*மூதெ யிற்றிரு வாயிலைத் தொழுதுபோய் முகைமலர்க் குழலார்க*
*ளாத ரித்துவாழ்த் தொலியிரு மருங்கெழ வணிமறு கிடைச்சென்று*
*காத லித்தவர்க் கருள்செய்து தந்திரு மாளிகைக் கடைசார்ந்தார்.*

(இ-ள்.) *அங்குத் தந்தையாராகிய சிவபாதவிருதயரும் தோணியப்பரை வணங்கித் தம்மோடுவர, சீகாழியிலுள்ளவர்களது இளஞ்சிங்கம்போன்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார் பழைய மதில்சூழ்ந்த திருவாயிலை வணங்கிச்சென்று அரும்பாகிய மலரையணிந்த கூந்தலையுடைய பிராமணஸ்திரீகள் விரும்பி வாழ்த்துதல்செய்யும் வாழ்த்தொலிகள் இருபக்கங்களிலும் அதிகரிக்க அழகிய திருவீதியிற் சென்று தம்மை விரும்பியடைந்தவர்களுக்குத் திருவருள்செய்து தமது திருமாளிகையின் தலைவாயிலை யடைந்தருளினார்.—எ-று.* (௩௫௬)

*நறவ மார்பொழிற் புகலியி னண்ணிய திருஞான சம்பந்தர்*
*விறலி யாருட னீலகண் டப்பெரும் பாணர்க்கு மிகநல்கி*
*யுறையு ளாமவர் மாளிகைச் செலவிடுத் துள்ளணை தரும்போதி*
*லறலி னேர்குழ லார்மணி விளக்கெடுத் தெதிர்கொள வணைவுற்றார்.*

(இ-ள்.) தேன் பொருந்திய சோலைசூழ்ந்த சீகாழிப்பதியி லவதரித்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் மதங்கசூளாமணியாரோடு திருநீலகண்டயாழ்ப்பாணநாயனுருக்கு மிக்கபேரருள்செய்து அவ ரிருக்கையாகிய திருமாளிகைக்குச் செல்லும்படி விடைகொடுத்துத் தமது திருமாளிகைக் கெழுந்தருளும்பொழுது, கருமணல் போன்ற கூந்தலையுடைய பார்ப்பனமாதர்கள் மாணிக்கத் தீபமேந்தி யெதிர்கொள்ளும்படி வந்தார்கள்.—எ-று. (௩௩௭)

அங்க ணைந்தரு மறைக்குலத் தாயர்வந் தடிவணங் கிடத்தாமுந்
துங்க நீள்பெருந் தோணியிற் றுயர்தாண் மனங்கொளத் தொழுவாராய்த்
தங்கு காதலி னங்கமர்ந் தருளுநாட் டம்பிரான் கழல்போற்றிப்
பொங்கு மின்னிசைத் திருப்பதி கம்பல பாடினர் புகழ்ந்தேத்தி.

(இ-ள்.) அரிய மறையவர் குலத்தாயாராகிய பகவதியம்மையார் அங்கு வந்து (பிள்ளையாரது) திருவடிகளை வணங்க, தாமும் மிகவு முயர்ந்த திருத்தோணியி லெழுந்தருளிய திருத்தாயாராகிய பெரியநாயகியாரது திருவடிகளைத் தமதுள்ளத்திற் பொருந்தும்படி தொழுபவராய்ப், பொருந்திய விருப்பத்தோடு அத்திருமாளிகையி லெழுந்தருளியிருக்குநாள்களில் தோணியப்பரது திருவடிகளைத் துதித்து, புகழ்ந்து மிக்க இசையினை யுடைய பல திருப்பதிகங்களைப் பாடியருளினர்.—எ-று. (௩௩௮)

நீல மாவிடந் திருமிடற் றடக்கிய நிமலனை நேரெய்துங்
கால மானவை யனைத்தினும் பணிந்துடன் கலந்தவன் பர்களோடுஞ்
சால நாள்களங் குறைபவர் தையலா டழுவிடக் குழைகம்பர்
கோல மார்தரக் கும்பிடு மாசைகொண் டெழுங்குறிப் பினரானார்.

(இ-ள்.) நீலநிறம்பொருந்திய மிக்க ஆலாகல விடத்தைக் கண்டத்திற்றரித்த தோணியப்பனை நேரே தரிசித்தற் குரிய காலங்கடோறுஞ் சென்று வணங்கித் தம்முடன் சேர்ந்த அடியார்களோடும் அங்கு நெடுநாள் வசிக்குந் திருஞானசம்பந்தப்பிள்ளையார் ஸ்ரீகாமாக்ஷியம்மையார் தழுவக்குழைந்த திருவேகம்பநாதரது திருக்கோலத்தை நிரம்பத் தரிசிக்கும் விருப்ப மேற்கொண்டு செல்லுங் குறிப்பினராயினர்.—எ-று.

காலமானவை யனைத்தினும் என்றது, சிவபெருமானைத் தொழுதற்குரிய ஆறுகாலத்தையும்; இதனை, "எல்லிற்கங்குற் -பொழுதறு காலத்தென்றும் பூசனை விடாது செய்து" என்பதனு னுணர்க.

"தையலாடழுவிடக்குழைகம்பர், என்பதன்சரித்திரத்தைமுன்னர் திருக்குறிப்புத் தொண்டநாயனுர் புராணத்திற் காண்க. (௩௩௯)

தண்ட கத்திரு நாட்டினைச் சார்ந்துவந் தெம்பிரான் மகிழ்கோயில்
கண்டு போற்றிநாம் பணிவதென் றன்பருக் கருள்செய்வார் காலம்பெற்
றண்ட ருக்கறி வரும்பெருந் தோணியி லிருந்தவ ரருள்பெற்றுத்
தொண்டர் சூழ்ந்துடன் புறப்படத் தொடர்ந்தெழுந் தாதையார்க் குரைசெய்வார்.

(இ-ள்.) தொண்டைநாட்டை யடைந்து எமது திருவேகம்பநாதர் மகிழ்ந்து வீற்றிருந்தருளுந் திருவேகம்பத்தைத் தரிசித்துத் துதித்து நாம் வணங்குவோமென்று அடியார்களுக் கருள்செய்யும் பிள்ளையார் வணங்குதற்குரிய காலத்தைப்

பெற்றுத் தேவர்களுக் கறிதற்கரிய தோணியப்பரது திருவருளையடைந்து அடியார்கள் சூழ்ந்து தம்முடன் புறப்படத் தம்மைத் தொடர்ந்துவருகின்ற தந்தையாராகிய சிவபாதவிருதயருக்கு அருளிச்செய்வாராயினர்.—எ-று.

தண்டகன் என்னுமரசன் அரசாட்சிசெய்த திருநாடாகலின் "தண்டகத் திருநாடு" என்று கூறினர்.

நந்தம்பிரான் மகிழ்கோயில், என்றும் பாடம். (௧௧௦)

அப்பர் நீரினி யிங்கொழிந் தருமறை யங்கிவேட் டன்போடுந், துப்பு
நேர்சடை யார்தமைப் பரவியே தொழுதிரு மெனச்சொல்லி, மெய்ப்பெ
ருந்தொண்டர் மீள்பவர் தமக்கெலாம்விடைகொடுத்தருளிப்போ, யொப்
பி லாதவர் தமைவழி யிடைப்பணிந் துருகுமன் போடுசெல்வார்.

(இ-ள்.) அப்பரே! நீர் இனி எம்மோடு வருதலை யொழிந்து, அரிய வேதவிதிப்படி யாகங்களைச் செய்து அன்புடன் பவளம் போலுஞ் சிவந்த சடைமுடியையுடைய தோணியப்பரைத் துதித்து வணங்கி இவ்விடத்திலேயேயிருமென்று கூறி, தம்முடன் வாராமல் திரும்புகின்ற மெய்ம்மை பொருந்திய அடியார்களுக்கெல்லாம் விடைகொடுத்துச் சென்று, தாம் செல்லும் வழிகளி லெழுந்தருளிய ஒப்பற்ற சிவபெருமானை வணங்கி உருகுகின்ற அன்போடுஞ் செல்வாராயினர்.—எ-று. (௧௧௧)

செல்வ மல்கிய தில்லைமூ தூரினிற் றிருநடம் பணிந்தேத்திப்
பல்பெ ருந்தொண்ட ரெதிர்கொளப் பரமர்தந் திருத்தினை நகர்பாடி
யல்கு தொண்டர்க டம்முடன் றிருமாணி குழியினை யணைந்தேத்தி
மல்கு வார்சடை யார்திருப் பாதிரிப் புலியூரை வந்துற்றார்.

(இ-ள்.) பலவகைச் செல்வங்களு நிறைந்த பழமைபொருந்திய ஸ்ரீ சிதம்பரத்தில் (ஸ்ரீநடராசப்பெருமானது) பஞ்சகிருத்தியத் தாண்டவத்தை வணங்கித் துதித்து, சிறந்த பல திருத்தொண்டர்களெதிர்கொண்டு வணங்கச் சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருத்தினை நகரை யடைந்து திருப்பதிகம் பாடியருளி, நிறைந்த அடியார் திருக்கூட்டங்களோடு திருமாணிகுழி யென்னுந் திருப்பதியையடைந்து துதித்து, நிறைந்த நீண்ட சடைமுடியையுடைய தோன்றாத்துணையீசரெழுந்தருளிய திருப்பாதிரிப்புலியூரென்னுந் திருப்பதியை வந்தடைந்தருளினர். ()

கன்னி மாவனங் காப்பென விருந்தவர் கழலிணை பணிந்தங்கு
முன்ன மாமுடக் கான்முயற் கருள்செய்த வண்ணமு மொழிந்தேத்தி
மன்னு வார்பொழிற் றிருவடு கூரினை வந்தெய்தி வணங்கிப்போய்ப்
பின்னு வார்சடை யார்திரு வக்கரை பிள்ளையா ரணைவுற்றார்.

(இ-ள்.) கன்னிவனமே தமக்குக் காவலாக இருந்தருளிய அவ்வெம்பெருமானது இரண்டு திருவடிகளையும் வணங்கி, அங்கு முன்பு பெருமைபொருந்திய முடங்கிய காலையுடைய முயலுக்குத் திருவருள்செய்ததன்மையையும் தமது திருப்பதிகத்தி லருளிச்செய்து துதித்து, நிலைபெற்ற நீண்ட சோலைசூழ்ந்த திருவடுகூரென்னுந் திருப்பதியை வந்தடைந்து வணங்கி அங்குநின்றுஞ் சென்றருளி, பின்னலாகிய நீண்ட சடைமுடியையுடைய சிவபெருமானெழுந்தருளுந் திருவக்கரையென்னுந் திருப்பதியைத் திருஞானசம்பந்தப்பிள்ளையா ரடைந்தருளினர். ()

கன்னிமாவனம் என்பது திருப்பாதிரிப்புலியூரின் திருநாமத் தொன்று. மூடக்கான்முயல், அத்தலத்தில் சிவபெருமானைத் துதித்து முத்திப்பேறு பெற்றமையைத் தமது திருப்பதிகத்தில் விளங்கக்கூறி யருளினரென்பார் 'முன்னமா மூடக்கான்முயற்கருள் செய்தவண்ணமு மொழிந்தேத்தி' என்று கூறினர். ()

---

திருப்பாதிரிப்புலியூர் - பண் - செவ்வழி.

திருச்சிற்றம்பலம்.

முன்னநின்றம்மூடக்கான்முயற்கருள்செய்துநீள்
புன்னைநின்றுகமழ்பாதிரிப்புலியூருளான்
றன்னைநின்றுவணங்குந்தனைத்தவமில்லிகள்
பின்னைநின்றபிணியாக்கையைப்பெறுவார்களே.

அந்தணல்லாரகன்காழியுண்ஞானசம்
பந்தனல்லார்பயில்பாதிரிப்புலியூர்தனுட்
சந்தமாலைத்தமிழ்பத்திவைதரித்தார்கண்மேல்
வந்துதீயவ்வடையாமையால்வினைமாயுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - தோன்றத்துணையீசர், தேவியார் - தோகையம்பிகை.

---

வக்க ரைப்பெரு மான்றனை வணங்கியங் கமருநா ளருளாலே
செக்கர் வேணியா ரிரும்பைமா காளமுஞ் சென்றுதாழ்ந் துடன்மீண்டு
மிக்க சீர்வள ரதிகைவீ ரட்டான மேவுவார் தம்முன்பு [வுற்றார்.
தொக்க மெய்த்திருத் தொண்டர்வந் தெதிர்கொளத் தொழுதெழுந்தணை

(இ-ள்.) திருவக்கரையி லெழுந்தருளிய சிவபெருமானை வணங்கி அங்கு எழுந்தருளியிருக்கு நாள்களில் அவ் வெம்பெருமான் திருவருளினாலே சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமானது திருவிரும்பை மாகாளத்தையுஞ்சென்று வணங்கி உடனே திரும்பி, மிக்க சிறப்பு வளர்கின்ற திருவதிகைவீரட்டானத்தை யடையுந் திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு முன்னே கூட்டமாகிய மெய்யடியார்கள் வந்து எதிர்கொண்டு வணங்கத் தாமு மெதிரே வணங்கி யெழுந்து அங்கடைந்தருளினார்.—எ-று.

திருவதிகை வீரட்டம், சிவபெருமான் திரிபுரங்களை யழித்தருளிய க்ஷேத்திரமாகலின், இது அட்டவீரட்டத் தொன்று. (௩௯௪)

ஆதி தேவரங் கமர்ந்தவீ ரட்டானஞ் சென்றணை பவர்முன்னே
பூதம் பாடநின் றாடுவார் திருநடம் புலப்படும் படிகாட்ட
வேத பாரகர் பணிந்துமெய் யுணர்வுட னுருகிய விருப்போடுங்
கோதி லாவிசை குலவுகுண் டைக்குறட் பூதமென் றெடுத்தேத்தி.

(இ·ள்.) முதற்பெருங் கடவுளாகிய சிவபெருமான் எழுந்தருளிய திருவீரட்டானத்தைச் சென்றடையுந் திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு முன்னே பூதகணங்கள் பாடும்படி நின்று திருநடனஞ் செய்தருளுஞ் சிவபெருமான் தமது திருநடனத்தை அவருக்குத் தெரியும்படி காட்டியருள, வேதமாகிய கடலின் கரையை யடைந்த பிள்ளையார் வணங்கி, மெய்யுணர்ச்சியோடு திருவுள்ளமுருகிய

விருப்பத்துடன் குற்றமில்லாத இசைபொருந்திய "குண்டைக் குறட்பூதம்" என்று திருப்பதிக முதலெடுத்துத் துதித்து.—எ-று.

இதுமுத லிரண்டுபாட லுங் குளகம். (௬௬௫)

திருவதிகைவீரட்டானம் - பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

குண்டைக்குறட்பூதங்குழுமவனலேந்திக்
கெண்டைபிறழ்தெண்ணீர்கெடிலவடபக்கம்
வண்டுமருள்பாடவளர்பொன்விரிகொன்றை
விண்டதொடையலனுடுமவீரட்டானத்தே.

ஞாழலகமழ்காழிஞானசம்பந்தன்
வேழம்பொருதெண்ணீரதிகைவீரட்டானத்துஞ்
சூழுங்கழலானைச்சொன்னதமிழ்மாலை
வாழுந்துணையாகநினைவார்வினையிலரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - வீரட்டேசுரர், தேவியார் - வீரட்டானநாயகி,

பரவி யேத்திய திருப்பதி கத்திசை பாடினார் பணிந்தங்கு
விரவு மன்பொடு மகிழ்ந்தினி துறைபவர் விமலனை வணங்கிப்போ
யரவ நீர்ச்சடை யங்கணர் தாமகிழ்ந் துறைதிரு வாமாத்தூர்
சிரபு ரத்துவக் தருளிய திருமறைச் சிறுவாசென் றணைவுற்றார்.

(இ-ள்.) வணங்கித் துதித்து, திருப்பதிகத்தை இசைபொருந்தப் பாடிப்பணிந்து அங்கு நிறைந்த அன்புடன் மகிழ்ந்து இனிதாக எழுந்தருள்பவராகிய சீகாழிப்பதியி லவதரித்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் மலரகிதராகியஅவ வீரட்டேசரை வணங்கி அங்குநின்று மெழுந்தருளி, ஒலிபொருந்திய கங்காநதியை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளுந் திருவாமாத்தூ ரென்னுந் திருப்பதியைச் சென்று சேர்ந்தருளினார்.—எ-று. (௬௬௬)

சென்ற ணைந்துசிந் தையின்மகிழ் விருப்பொடு திகழ்திரு வாமாத்தூர்ப்
பொன்ற யங்குபூங் கொன்றையும் வன்னியும் புனைந்தவ ரடிபோற்றிக்
குன்ற வார்சிலை யெனுந்திருப் பதிகமெய் குலவிய விசைபாடி
நன்றுமின்புறப் பணிந்துசெல் வார்திருக் கோவலூர் நகர்சேர்ந்தார்.

(இ-ள்.) சென்றடைந்தருளி மனதில் நிறைந்த விருப்பத்தோடும் விளங்குகின்ற திருவாமாத்தூரில் பொன்போல் விளங்குங் கொன்றை மாலையையும் வன்னிமாலையையு மணிந்த சிவபெருமானது திருவடிகளைத் துதித்து "குன்றவார் சிலை" என்னு முதலையுடைய திருப்பதிகத்தைப் பொருந்திய இசையோடு பாடியருளி, நன்மையு மின்பமும் பொருந்த வணங்கிச் செல்லும் பிள்ளையார் திருக்கோவலூரென்னுந் திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று.

இருக்கோவலூர் அந்தகாசுரனைச் சங்காரஞ்செய்த க்ஷேத்திர மாதலின், இது அட்டவீரட்டத்தொன்று. (கூ௬எ)

---

**திருவாமாத்தூர் - பண் - சீகாமரம்.**

திருச்சிற்றம்பலம்.

குன்றவார்சிலைநாணராவரிவாளிகூரெரிகாற்றின்மும்மதில்
வென்றவாறெங்ஙனேவிடையேறுமவேதியனே
தென்றலார்மணிமாடமாளிகைச்சூளிகைக்கெதிர்நீண்டபெண்ணைமே
லன்றிலவந்தணையுமாமாத்தூரமமானே.

வாடல்வெண்டலைமாலையார்த்துமயங்கிருள்ளெரியேந்திமாநட
மாடல்மேயதென்னென்றுமாத்தூரமமானைக்
கோடல்நாகமரும்புமபைமபொழிற்கொச்சையாரிறைஞானசம்பந்தன்
பாடல்பத்தும்வல்லார்பரலோகஞ்சேர்வாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - **கோமாதுநாயகர்**, தேவியார் - **அழகியநாயகியம்மை.**

---

கோவ லீடிய வீரட்ட மமர்ந்தவர் குரைகழல் பணிந்தேத்தி
யாவி னைந்துகந் தாடுவா ரறையணி நல்லூரை யணைந்தேத்திப்
பாவ லர்ந்தசெந் தமிழ்கொடு பரவுவார் பரவுசீ ரடியார்கண்
மேவு மன்புறு மேன்மையாந் தன்மையை விளங்கிட வருள்செய்தார்.

(இ-ள்.) சிறந்த திருக்கோவல் வீரட்டத்திலெழுந்தருளிய சிவபெருமானது சப்திக்கின்ற வீரக்கழலை யணிந்த திருவடிகளை வணங்கித்துதித்து, பசுவினிடத்துள்ள பஞ்ச கௌவியங்களையும் விரும்பி யபிஷேகங்கொண்டருளுஞ் சிவபெருமானெழுந்தருளுந் திரு அறையணி நல்லூரென்னுந் திருப்பதியை யடைந்து துதித்துச் செந்தமிழ்த் திருப்பதிகம் பாடியருளும் பிள்ளையார் (யாவரும்) வணங்குஞ் சிறப்பினையுடைய அடியார்கள், பொருந்திய அன்பால் வரும்மேன்மைத் தன்மையை விளங்கவைத்துப் பாடியருளினார்.—எ-று.

ஆவினைந்தாவன-பால்-தயிர் - நெய் - கோமயம்-கோசலம் - என்பன, (கூ௬அ)

---

**திருஅறையணிநல்லூர் - பண் - காந்தாரம்.**

திருச்சிற்றம்பலம.

பீடினாற்பெரியார்களும்பேதைமைகெடத்தீதிலா
வீடினாலுயர்ந்தார்களும்வீடினாரிளவெண்மதி
சூடினார்மறைபாடினார்சுடலைநீறணிந்தாரழ
லாடினாரறையணிநல்லூரங்கையாற்றொழுவார்களே.

கழியுலாங்கடற்கானல்சூழ்கழுமலமமர்தொல்பதிப்
பழியிலாமறைஞானசம்பந்தனல்லதோர்பண்பினார்

மொழியினராறையணிநல்லூர்முக்கண்மூர்த்திதன்றடொழக்
கெழுவினரவர்தம்மொடுங்கேடில்வாழ்பதிபெறுவரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமியெர் - அறையணிநாதர், தேவியார் - அருள்நாயகியம்மை.

---

சீரின் மன்னிய பதிகமுன் பாடியத் திருவறை யணிநல்லூர்
வாரின் மல்கிய கொங்கையாள் பங்கர்தம் மலைமிசை வலங்கொள்வார்
பாரின் மல்கிய தொண்டர்க ளிமையவர் நாடொறும் பணிந்தேத்துங்
காரின் மல்கிய சோலையண் ணாமலை யன்பர்காட் டிடக்கண்டார்.

(இ-ள்.) சிறப்போடு பொருந்திய திருப்பதிகத்தைத் திருமுன்னே பாடியருளி அத்திருவறையணி நல்லூரென்னுந் திருப்பதியில், கச்சணிந்த தனங்களையுடைய உமாதேவிபாகரான அறையணி நாதரது திருமலையின்மேல் பிரதக்ஷணஞ்செய்யும் பிள்ளையார், உலகத்தில் நிறைந்த அடியார்களும் தேவர்களும் நாள்தோறும் வணங்கித் துதிக்கும்மேகங்கள் நிறைந்த சோலைசூழ்ந்த திருவண்ணாமலையை அடியார்கள் காட்ட அதனைத் தரிசித்தருளினார்.—எ-று. (கூசுகூ)

வேறு.

அண்ணாமலையங் கமரர்பிரான் வடிவு போன்று தோன்றுதலுங்
கண்ணாற் பருகிக் கைதொழுது கலந்து போற்றுங் காதலின
லுண்ணா முலையா ளெனும்பதிகம் பாடித் தொண்ட ருடன்போந்து
தெண்ணீர் முடியார் திருவண்ணா மலையைச் சென்று சேர்வுற்றார்.

(இ-ள்.) அத்திருவண்ணாமலையானது அங்கெழுந்தருளுந் தேவர்கள்நாயகராகிய சிவபெருமானது திருவுருவைப்போலத் தோன்றவும், தமது கண்களால் தரிசித்துக் கைகூப்பி மனங்கலந்து துதிக்கும் பெருவிருப்பினால் "உண்ணாமுலையுமையாள்" என்னு முதலையுடைய திருப்பதிகத்தைப் பாடி யருளி, அடியார்களோடு சென்று, தெளிந்த கங்கை நீரையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமா னெழுந்தருளிய திருவண்ணாமலையைச்சென்று சேர்ந்தருளினார்.—எ-று. ()

'அமர்ந்தபிரான்' என்றும் பாடம்.

---

திருவண்ணாமலை - பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

உண்ணாமுலையுமையாளொடுமுடனாகியவொருவன்
பெண்ணாகியபெருமான்மலைதிருமாமணிதிகழ
மண்ணார்ந்தனவருவித்திரண்மழலைம்முழவதிரு
மண்ணாமலைதொழுவார்வினைவழுவாவணமறுமே.

வெம்புந்தியகதிரோனொளிவிலகும்விரிசார
லம்புந்திமூவெயிலெய்தவனண்ணாமலையதனைக்

கொம்புந்துவகுயிலாலுவகுளிர்காழியுண்ஞான
சம்பந்தனதமிழ்வல்லவரடிபேணுதறவமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமியெர் - அருணசலேசர், தேவியார் - உண்ணாமுலையம்மை.

---

அங்க ணணைவார் பணிந்தெழுந்து போற்றி செய்தம் மலைமீது
தங்கு விருப்பில் வீற்றிருந்தார் தாட்டா மரைக டம்முடிமேற்
பொங்கு மார்வத் தொடும்புனைந்து புளக மலர்ந்த திருமேனி
யெங்கு மாகிக் கண்பொழியு மின்ப வருவி பெருக்கினார்.

(இ-ள்.) அத்திருப்பதியையடையும் பிள்ளையார் வணங்கி யெழுந்து துதித்து, அத்திருமலையின்மேல் வசிக்கும் விருப்பத்தோடு வீற்றிருந்தருளிய ஸ்ரீ அருணசலேசரது திருவடித்தாமரைகளைத் தமது திருமுடியின்மேல் மிக்க விருப்பத்தோடுந் தரித்துப் புளகாங்கிதங்கொண்ட தமது திருமேனி முழுதும் ஆனந்தக் கண்ணீராகிய அருவியைப் பெருக்கி யருளினார்.—எ-று. (௬௭௧)

ஆதி மூர்த்தி கழல்வணங்கி யங்க ணினிதி னமருநாட்
பூத நாத ரவர்தம்மைப் பூவார் மலராற் போற்றிசைத்துக்
காத லாலத் திருமலையிற் சிலநாள் வைகிக் கமழ்கொன்றை
வேத கீதர் திருப்பதிகள் பிறவும் பணியும் விருப்புறுவார்.

(இ-ள்.) முதற்கடவுளாகிய அண்ணாமலையாரது திருவடிகளை வணங்கி அங்கு மகிழ்வோடு எழுந்தருளியிருக்கு நாள்களில், பூதகணங்கட்கு நாதராகிய அவ்வெம்பெருமானை "பூவார் மலர்" என்று தொடங்கித் திருப்பதிகம் பாடியருளி, அத்திருமலையின்மேல் விருப்பத்தோடு சில நாள்கள் வசித்து, வாசனை வீசுகின்ற கொன்றைமாலையை யணிந்த சிவபெருமான் எழுந்தருளும் மற்றத்திருப்பதிகளையும் வணங்கும் விருப்பங் கொள்வாராயினார்.—எ-று. (௬௭௨)

---

திருவண்ணாமலை - பண் – தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

பூவார்மலர்கொண்டடியார்தொழுவார்புகழ்வார்வானோர்கண்
மூவார்புரங்களெரித்தவன்றுமூவர்க்கருள்செய்தார்
தூமாமழைநின்றதிரவெருவித்தொறுவினிரையோடு
மாமாம்பிணைவந்தணையுஞ்சாரலண்ணாமலையாரே.

அல்லாடரவமியங்குஞ்சாரலண்ணாமலையானை
நல்லார்பரவப்படுவான்காழிஞானசம்பந்தன்
சொல்லான்மலிந்தபாடலானபத்துமிவைகற்று
வல்லாரெல்லாம்வானோர்வணங்கமன்னிவாழ்வாரே.

திருச்சிற்றம்பலம்.

---

மங்கை பாகர் திருவருளால் வணங்கிப் போந்து வடதிசையிற்
செங்கண் விடையார் பதிபலவும் பணிந்து புகலிச் செம்மலார்

துங்க வரைகள் கான்பலவுங் கடந்து தொண்டைத் திருநாட்டிற்
றிங்கண் முடியா ரினிதமருந் திருவோத் தூரைச் சேர்வுற்றார்.

(இ-ள்.) சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் உமாதேவி பாகராகிய ஸ்ரீஅருணாசலேசரது திருவருளினால் அத்திருவண்ணாமலையை வணங்கி அவ்விடத்தினின்று மெழுந்தருளி வடதிசையிலுள்ள சிவந்த கண்ணையுடைய இடபத்தைவாகனமாகக்கொண்டருளுஞ் சிவபெருமான் வீற்றிருந்தருளிய பல திருப்பதிகளையும் வணங்கி, உயர்ந்த பல மலைகளையுங் கடந்து, செல்வங்கணிறைந்த தொண்டைநாட்டில் சந்திரசேகரராகிய சிவபெருமான் மகிழ்வுற்றெழுந்தருளிய திருவோத்தூரென்னுந் திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று. (௩௭௩)

தேவர் முனிவர்க் கோத்தளித்த திருவோத் தூரிற் றிருத்தொண்டர்
தாவில் சண்பைத் தமிழ்விரகர் தாமங் கணையக் களிசிறந்து
மேவுங் கதலி தோரணங்கள் விளக்கு நிரைத்து நிறைகுடமும்
பூவும் பொரியுஞ் சுண்ணமுமுன் கொண்டு போற்றி யெதிர்கொண்டார்.

(இ-ள்.) (சிவபெருமான் அந்தணர்வடிவங்கொண்டு) தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் வேதத்தை யோதுவித்தருளிய திருவோத்தூரிலிருக்கும் அடியார்கள், குற்றமற்ற சீகாழிப்பதியிலவதரித்த திருநெறித் தமிழ்த்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அங்கு எழுந்தருளுதலால் மகிழ்ச்சி யடைந்து, சிறப்புப்பொருந்திய வாழைகளையும், தோரணங்களையும் மணிவிளக்குகளையும், வரிசையாகவைத்து, பூரணகும்பங்களையும், பூவையும், பொரியையும், பொற்சுண்ணங்களையும் முன்னே தாங்கிக்கொண்டு துதித்து எதிர் கொண்டார்கள்.—எ-று.

தேவர் முனிவர்க்கோத்தளித்த சரித்திரமாவது,—பூர்வத்தில் சோமுகாசுரனென்னுமசுரனொருவன் வேதங்களை யபகரித்துக்கொண்டு பாதலத்திற் சென்று பதுங்கியிருந்தனன்; அதனால் பிரமன் முதலிய தேவர்களும் முனிவர்களும் வைகுந்த மடைந்து திருமாலை வணங்கித் தங்குறை யிரந்துவேண்ட, அவர் சிவபெருமானைப் பூசித்துச் சக்கராயுதத்தைப் பெற்றுப் பாதலத்திற் சென்று, அவ்வசுரனை யழித்து, முன்போல வேதங்களைக் கொணர்ந்தளிப்ப, அவர்கள் அதனைப்பெற்றுத் திருவோத்தூரை யடைந்து ஸ்ரீவேதபுரீசரைப் பூசித்துத் திருவடிகளில் வணங்கி நின்று எம்பெருமானே! அடியேங்கள் தூய்மையாகிய வேதத்தை நீங்கிப் பலவருடங்கழிந்தோம்; அதனால், சீலத்தை யொழிந்தோம்; வேத பாராயணத்தை யிழந்தோம்; நன்னெறியை மறந்தோம்; இது நன்று, இது தீது என்று இன்னந்தெளிந்திலோம்; ஆதலால், தேவரீரே எங்கட்கு ஆசாரிய மூர்த்திகளா யெழுந்தருளி, அவ்வேதத்தை யோதுவித்து, எங்களறிவை நிலைப்படுத்தி யாட்கொண்டருள வேண்டுமென்று வேண்டிக்கொள்ளவும், அதனை யுணர்ந்த சிவபெருமான் அவர்களது வேண்டுகோட் கிரங்கி யவ்வாறே யருளத் திருவுள்ளமுற்று, ஓர் அந்தணராக அருட்படிவங்கொண்டு அங்குள்ள ஓர் மண்டபத்தில் தர்ப்பாசனத்தி லெழுந்தருளித் திருமால் முதலிய தேவர்கள் அருகிலிருக்கவும், தேவர்களும் முனிவர்களும் பக்கத்திற் சூழவும், விநாயகரும் சுப்பிரமணியரும் சமீபத்தி லமர்ந்திருப்பவும், கந்தருவர் கிம்புருடர் சித்தர் வித்தியாதரர் இயக்கர் அஷ்டதிக்குப் பாலகர் அஷ்டவசுக்கள் சந்திர சூரியர்கள்முதலிய யாவரும் தம்மைச்சூழ்ந்திருக்கவும், சிவபெருமான் அவரவர்களை இருக்கத்தக்க இடத்திலிருக்கக் கட்டளையிட்டு அவ்வேத

த்தை நான்காகப்பகுத்து அவர்களனைவரும் நன்குணரும்பொருட்டு, ஆதியந்தங்களில் பிரணவம் பொருந்தும்படி யோதுவித்து, பிறகு சாதனஞ் செய்யத்தக்க மந்திரங்களையும், ஆகமங்களையும் மற்றப் பொருள்களையும் உபதேசித்தருள, அதனால், திருமால் முதலிய தேவர்களும் முனிவர்களும் தங்கள் மனத்திலுள்ள வருத்த நீங்கி மெய்ஞ்ஞானமுற்றுத் தெளிவடைந்தனர். பின்னர் வேதியர் திருவுருவங்கொண்டு வந்த சிவபெருமான அங்குள்ள சிவலிங்கத்தினிடத்தில் மறைந்தருளினார்; அதனை யுணர்ந்த யாவரும் அவ்வெம்பெருமானது திருவருளைப் புகழ்ந்து கொண்டாடினார்கள், என்பதாம். இக்காரணத்தினால், இத்தலம் திருவோத்தூர் என்னுந் திருப்பெயர் பெற்றது. ஓத்து=வேதம். (௬௭௪)

சண்பை வேந்தர் தண்டரளச் சிவிகை நின்று மிழிந்தருளி
நண்பின் மிக்க சீரடியார் சூழ நம்பர் கோபுரஞ்சூழ்
விண்பின் னாக முன்னோங்கும் வியன்பொற் புரிசை வலங்கொண்டு
பண்பு நீடப் பணிந்தெழுந்து பரமர் கோயி லுள்ளடைந்தார்.

(இ-ள்.) சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தபிள்ளையார் குளிர்ந்த முத்துச் சிவிகையினின்று மிறங்கியருளித்தம்மிடத்து நேசமிகுந்த சிறந்த அடியார்கள் அருகிற்சூழ்ந்துவர, சிவபெருமானது திருக்கோபுரத்தைச்சூழ்ந்த மேகமண்டலமும் பின்னிடும்படி முன்னெழுந்தோங்கிய பெரிய பொன்மயமாகிய திருமதிலைப்பிரதக்ஷணஞ்செய்து அன்புமிகுந்து வணங்கி யெழுந்து சிவபெருமானது திருக்கோயிலினுள்ளடைந்தருளினார்.—எ-று. (௬௭௫)

வாரணத்தி னுரிபோர்த்த மைந்த ருமையாண் மணவாள
ராரணத்தி னுட்பொருளாய் நின்றார் தம்மு னணைந்திறைஞ்சி
நாரணற்கும் பிரமற்கு நண்ணற் கரிய கழல்போற்றுங்
காரணத்தின் வருமின்பக் கண்ணீர் பொழியக் கைதொழுதார்.

(இ-ள்.) (கயாசுரனென்னும்) யானையினது தோலைப்போர்த்தருளிய வலியாளரும், உமையவள் நாயகரும், வேதத்தினுட்பொருளாய் நிறைவருமாகிய சிவபெருமான திருமுன்னே யடைந்து வணங்கி, திருமால் பிரமனென்னு மிருவராலு மடைதற்கரிய திருவடிகளைத் துதிக்குங்காரணத்தினால் வருகின்ற ஆனந்தக் கண்ணீர் பொழியும்படிக் கை கூப்பி வணங்கினர்—எ-று. (௬௭௬)

தொழுது விழுந்து பணிந்தெழுந்து சொன்மா லைகளாற் றுதிசெய்து
முழுது மாளு ரருள்பெற்றுப் போந்து தங்கி முதல்வர்தமைப்
பொழுது தோறும் புக்கிறைஞ்சிப் போற்றி செய்தங் கமர்வார்மு
னழுது வணங்கி யொருதொண்ட ரமணர் திறத்தொன் றறிவிப்பார்.

(இ-ள்.) கை கூப்பிப் பூமியில் விழுந்து வணங்கி யெழுந்து திருப்பதிகங்களாற் றுதித்து, சராசரங்களாகிய எல்லாந் தாமே யாகிய சிவபெருமானது திருவருளைப் பெற்றுப் புறத்திற் சென்று (அங்குள்ள திருமடத்தில்) வசித்தருளி, முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமானைக் காலங்கள் தோறுஞ் சென்று வணங்கித் துதித்து, அங்கு எழுந்தருளியிருக்குந் திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு முன்னே ஒரு சிவனடியார் அழுது அவரது திருவடிகளில் வணங்கிச் சமணர்களால் தமக்கு நேர்ந்த ஒரு செயலை அறிவிப்பாராயினர்.—எ-று. (௬௭௭)

அங்கை யனலேற் றவர்க்கடியே னுக்கும் பனைக ளானவெலா
மங்கு ளுறநீண் டாண்பனையாய்க் காயா வாகக் கண்டமணா
ரிங்கு நீரிட் டாக்குவன காய்த்தற் கடைவுண் டோவென்று
பொங்கு நகைசெய் திழித்துரைத்தா ரருள வேணடு மெனப்புகல.

(இ-ள்.) அழகிய திருக்கரத்தில் மழுப்படையையேந்திய சிவபெருமானுக்கு அடியேனுகிய யானவைத்துவளர்த்த பனைமரங்களெல்லாம்மேகமண்டலமளவு முயர்ந்து ஆண்பனைகளாய்க் காயாதிருக்க அதனைச்சமணர்கள் கண்டு, இங்கே நீர் வைத்து வளர்த்த ஆண்பனைகள் காய்த்ததற்கு ஒருபாயமுண்டோவென்று மிக்க அவமதிப்பாகச் சிரித்து இழிவு செய்து பேசினுர்கள்; அவ்விழிவு தீர அருள் செய்யவேண்டுமென்று வேண்டிக்கொள்ள.—எ-று. (௬௭௮)

இது முதல் மூன்று பாடலுங் குளகம்.

பரம னர்தக் திருத்தொண்டர் பணபு நோக்கிப பரிவெய்தி
விரவு காத லொடுமேவிரைந்து விமலர் கோயில் புக்கருளி
யரவு மதியும் பகைதீர வணிந்தார் தம்மை யடிவணங்கி
யிரவு போற்றித் திருப்பதிக மிசையிற் பெருக வெடுத்தருளி.

(இ-ள்.) (அவ்வாறு கூறி வேண்டிக்கொண்ட) சிவனடியாரது ஆராமைக் குணத்தைப் பார்த்து அவர்மேலிரக்கங்கொண்டு மிக்க பெருவிருப்போடும் விரைந்து சென்று சிவபெருமானது திருக்கோயிலுட் புகுந்தருளி, பாமபையுஞ் சந்திரனையும் பகை நீங்கும் படி யணிந்தருளிய சிவபெருமானது திருவடிகளை வணங்கி இரவின்கண் துதித்துப் ("பூததோர்ந்தாயன") எனனுமுதலையுடைய திருப்பதிகத்தை இசையினுற் பெருகும்படி யெடுத்துப்பாடி யருளி.—எ-று. (௬௭௯)

விரும்பு மேன்மைத் திருக்கடைக்காப் பதனில் விமல ரருளாலே
குரும்பை யாண்ப னையீனு மென்னும வாய்மை குலவுதலா
னெருங்கு மேற்றுப் பனையெல்லா நிறைநத குலைக ளாய்க்குரும்பை
யரும்பு பெண்ணை யாகியிடக் கண்டோ ரெலா மதிசயித்தார்.

(இ-ள்.) (யாவரும்) விரும்புகின்ற மேனமையையுடைய திருக்கடைக்காப்பில் சிவபெருமானது திருவருளினுல் "குருமபை யாண்பனையீனும்" எனனும வாய்மை விளங்குதலால் நெருங்கிய ஆண்பனைகளெல்லாம் நிறைந்த குலைகளையுடையனவாய்க்குரும்பைகளை யரும்புகினற பெண்பனையாக, அதனைக் கண்ட யாவரும அதிசய மடைந்தார்கள்.—எ-று! (௬௮௦)

---

திருவோத்தூர்-பண் - பழந்தக்கராகம்.

ஆண்பனை பெண்பனையான திருப்பதிகம்.

திருச்சிற்றம்பலம்.

பூத்தேர்ந்தாயனகொண்டுநின்பொன்னடி
யேத்தா தாரில்லையெண் ணுங்கா
லோத் தூர்மேயவொளிமழுவாளங்கைக்
கூத்தீரும்மகுணங்களே. (௧)

இடையீர்போகாவிளமுலையாளையோர்
புடையீரேபுள்ளிமானுரி

யுடையீரேயும்மையேத்துதுமோத்தூர்ச்
சடையீரேயுமதாளே. (௨)

உள்வேர்போலநொடிமையினார்திறங்
கொள்வீரல்குலோர்கோவண
மொள்வாழைக்கனிதேன்சொரியோத்தூர்க்
கள்வீரேயுமகாதலே. (௩)

தோட்டிரோதுத்தியைந்தலைநாகத்தை
யாட்டிரேயடியார்வினை
யோட்டிரேயும்மையேத்துதுமோத்தூர்
நாட்டிரேயருணல்குமே. (௪)

குழையார்காதீர்கொடுமழுவாட்படை
யுழையாள்வீர்திருவோத்தூர்
பிழையாவண்ணங்கள்பாடிநின்றாடுவா
ரழையாமேயருணல்குமே. (௫)

மிக்கார்வந்துவிரும்பிப்பலியிடத்
தக்கார்தம்மடியீர்களென்
றக்காதாருளரோதிருவோத்தூர்
நக்கீரேயருணல்குமே. (௬)

தாதார்கொன்றைதயங்குமுடியுடை
நாதாவென்றுநலம்புகழ்ந்
தோதாதாருளரோதிருவோத்தூ
ராதீரேயருணல்குமே. (௭)

என்றானிம்மலையென்றவரக்கனை
வென்றார்போலும்விறலினா
லொன்றார்மும்மதிளெய்தவனோத்தூ
ரொன்றார்மேல்வினையேகுமே (௮)

நன்றாநான்மறையானொடுமாலுமாய்ச்
சென்றார்போலுந்திசையெலா
மொன்றாயொள்ளெரியாய்மிகவோத்தூர்
நின்றீரேயுமைநேடியே. (௯)

காரமண்கலிங்கத்துவராடையர்
தேரர்சொல்லவைதேறன்மி
னோரம்பாலெயிலெய்தவனோத்தூர்ச்
சீரவன்கழல்சேர்மினே (௧௦)

குரும்பையாண்பனையீன்குலையோத்தூ
ரரும்புகொன்றையடிகளைப்
பெரும்புகலியுண்ஞானசம்பந்தன்சொல்
விரும்புவார்வினைவீடே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமியெர் – வேதநாதேசர், தேவியார் - இளமுலைநாயகியம்மை.

சீரின் மன்னூர் திருக்கடைக்காப் பேற்றிச் சிவனு ரருள்பெற்றுப்
பாரி னீடு மப்பனை முன் காய்த்துப பழுக்கும் பண்பிறு
னொரு மன்பர் தங்கருத்து நேரே முடித்துக் கொடுத்தருளி
யாரு முவகைத் திருததொண்டர் போறற வங்க ணினிதமர்ந்தார்.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய திருக்கடைக்காப்பில் வைக்கப்பெற்று, அத னால் சிவபெருமான் திருவருளை யடைந்து, உலகத்தில் வளர்ந்த அவ்வாண்பனை கள் முன்னே பெண்பனைகளாய்க் காய்த்துப் பழுக்குந் தன்மையினால், தம்மைக் குறைகூறியிரந்த அடியாரது மனக்கருத்தைத் தடையின்றி முடித்துக்கொடுத்த ருளி, நிறைந்த மகிழ்ச்சியையுடைய அடியார்கள் துதிக்கும்படி அத்திருப்பதியில் இனிதாக எழுந்தருளி யிருந்தார்.—எ-று.

'பாரினீடுமாண்பனை' என்றும் பாடம். (கூ௮௧)

தென்னாட் டமணு சறுத்தார்தஞ் செய்கை கண்டு திகைத்தமண
ரந்நாட் டதனை விட்டகல்வா சிலாதங் கையிற் குண்டிகைக
ளென்னு வனமற் றிவையென்று தகர்ப்பா ரிறைவ னேறுயர்த்த
பொன்னார் மேனிப புரிசடையா னன்றே யென்று போற்றினார்.

(இ-ள்.) பாண்டிநாட்டிலுள்ள சமணர்களாகிய குற்றத்தை யறுத்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது செய்கையைக்கண்டு சமணர்கள் திகைத்து அத்திருவோத்தூரை விட்டு நீங்குவாராயினார்; சிலர் தங்கள்கையிலுள்ள கமண்ட லங்களை (எடுத்து) இவை யாது பயன் செய்யப்பண என்று உடைப்பவர்களாய், முதற்கடவுளாயுள்ளவர் இடபக்கொடியையுயர்த்திய பொன்போலும் திருமேனி யையும், முறுக்காகிய சடைமுடியையு முடைய சிவபெருமா னன்றேயென்று அவ்வெம்பெருமானைத் துதித்தார்கள்.—எ-று. (கூ௮௨)

பிள்ளை யார்தந் திருவாக்கிற் பிறந்த வாலத் தாலமுமுன்
புள்ள பாசம் விட்டகல வொழியாப பிறவி தனையொழித்துக்
கொள்ளு நீர்மைக் காலங்கள் கழித்துச் சிவமே கூடினவால்
வள்ள லார்மற் றவரருளின வாய்மை கூறின் வரமபென்னாம.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவாக்கி லமைந்துப்பாடப்ப ட்டதனால் அப்பனைகளும முன்புள்ள (ஆணவாதி) பாசங்கள் தம்மைவிட்டு நீங்க, தம்மை நீங்காதிருந்த பிறவியையொழித்து, தாம் உலகத்தில் பொருந்திப் பிராரத் துவம் புசிக்கும் காலத்தைக் கழித்து, பின்பு சிவத்தையடைந்தன. (அதனால்) அருள்வள்ளலாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவருட் பெருமையை யெடுத்துச் சொல்லப்புகின் அதற்களவு எவவாறாம்—எ-று. (கூ௮௩)

அங்க ணமரர் பெருமானைப் பணிந்து போந்தா டரவினுடன்
பொங்கு கங்கை முடிக்கணிந்தார் மகிழும் பதிகள் பலபோற்றி
மங்கை பாக ரமர்ந்தருளும் வயன்மா கறலை வழுத்திப்போய்க்
கொங்கு மலர்நீர்க் குரங்கணின்முட் டத்தைச் சென்று குறுகினார்.

(இ-ள்.) அத்திருப்பதியிலெழுந்தருளிய தேவர்கள் நாயகராகிய வேதநா தேசரை வணங்கிச்சென்று, படம் விரித்தாடுகின்ற பாம்புடன் பொங்குகின்ற கங்கை நதியைச் சடைமுடியிலணிந்த சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளும் பல திருப்பதிகளைத் துதித்து, உமாதேவியை வாமபாகத்திலுடைய கலகங்காத்தவர

தேசரெழுந்தருளிய வயல் சூழ்ந்த திருமாகறலென்னுந் திருப்பதியைத் துதித்துச் சென்று, வாசனை பொருந்திய மலர்களையுடைய நீர்சூழ்ந்த திருக்குரங்கணின் முட்டமென்னுந் திருப்பதியைச் சென்று சேர்ந்தருளினார்.—எ-று. (கஅச)

ஆதி முதலவர் குரங்கணின்முட் டத்தை யணைந்து பணிந்தேத்தி
நீதி வாழுந் திருத்தொண்டர் போற்றுங்கிரிலை சணைபையினில
வேத மோடு சைவநெறி விளங்க வந்த கவுணியனா
மாதோர் பாகர் தாமன்னு மதில்சூழ் காஞ்சி மருங்கணைந்தார்.

(இ-ள்.) வேதங்களுடன் சைவ சமயம் விளங்கும்படி ஒப்பற்ற சீகாழிப்பதியிலவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் முதற்பெருங்கடவுளாகிய வாலீசரெழுந்தருளிய திருக்குரங்கணின் முட்டமென்னுந் திருப்பதியையடைந்து வணங்கித் துதித்து, நல்ல நீதியோடு வாழ்கின்ற திருத்தொண்டர்கள் தம்மைச்சூழ்ந்து துதிக்க, பார்வதிபாகராகிய ஸ்ரீஏகாம்பரநாதரெழுந்தருளிய மதில்சூழ்ந்த ஸ்ரீகாஞ்சிபுரத்தின் சமீபத்திலடைந்தருளினர்.—எ-று. (கஅரு)

வேறு.

நீடுகாஞ்சி வாணரு நிலாவு மெய்ம்மை யன்பரு
மாடுசண்பை வள்ளலார் வந்தணைந்த வோகையாற்
கூடுகின்ற வின்பமோ குலாவுவீதி சோலினார்
காடுகொண்ட பூகமவா ழைகாமர்தோர ணங்களால்.

(இ-ள்.) பெருமைபொருந்திய ஸ்ரீகாஞ்சிபுரத்தில் வாழ்பவர்களும் விளங்குகின்ற மெய்ம்மை பொருந்திய சிவனடியார்களும், சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அத்திருப்பதியின் சமீபத்தில் வந்தடைந்தருளிய மகிழ்ச்சியினால், தங்களிடத்துண்டாகியசந்தோஷத்தைப்போல, காடாக நிறைந்த கமுகு - வாழை - அழகிய தோரண முதலியவைகளால் விளங்குகின்ற திருவீதியை அலங்கரித்தார்கள்.—எ-று. (கஅசு)

கொடிநிரைத்த வீதியிற் கோலவேதி கைப்புறங்
கடிகொள்மாலை மொய்த்தபந்தர் கந்தநீர்த் தசும்புடன்
மடிவில்பொன் விளக்கெடுத்து மாதரார்மைந்தர் மல்குவார்
படிவிளங்கு மன்பரும் பரந்தபணியி லீண்டுவார்.

(இ-ள்.) கொடிகளை வரிசையாக நிறுத்திய திருவீதியிலுள்ள அழகிய வேதிகையின் புறத்தில், மணம்பொருந்திய பூமாலைகள் கட்டிய பந்தலினிடத்து ஸ்திரீகளும், புருஷர்களும் வாசனை பொருந்திய நீர் நிறைந்த பூரணகும்பங்களுடன் கெடுதலில்லாத பொன்மயமாகிய விளக்குகளை யேந்திக்கொண்டு நிறைந்திருப்பார்கள், பூமியில் விளங்குகின்ற அடியார்களும் நிறைந்த பேரன்போடு நெருங்குவார்கள்.—எ-று. (கஅஎ)

கோதைமாத ராடலுங் குலாவுதொண்டர் பாடலும்
வேதகீத நாதமும் மிக்கெழுந்து விம்மவே
காதனீடு காஞ்சிவாணர் கம்பலைத்தெ ழுந்துபோய்
சூதெயிற் புறம்புசென றணைந்துமுன் வணங்கினார்.

(இ-ள்.) பூமாலையை யணிந்த தேவதாசிகள் செய்யும் நடனமும், விளங்குகின்ற சிவனடியார்களது பாடலும், வேதங்களையோதுதலாலுண்டாகிய பேரோ

சையும் அதிகரித்தெழுந்து எங்கும் பரவ, விருப்பமிகுந்த ஸ்ரீகாஞ்சிபுரத்தில் வாழ்வின்றவர்கள் (அரகரவென்று) ஆரவாரித்தெழுந்து சென்று, பழைமை பொருந்திய திருமதிலின் புறத்து வந்தடைந்து பிள்ளையார் திருமுன் வணங்கினார்கள்.—எ-று.

சண்பையாளு மன்பர்முன்பு தொண்டர்வந்து சார்தலும்
பண்புநீடி யானமுன் பிழிந்திறைஞ்சு பான்மைகண்
டெண்பெருக்கு மிக்கதொண்ட ரஞ்சலித் தெழுந்தசொன்
மண்பரக்க வீழ்ந்தெழுந்து வானமுட்ட வார்த்தனர்.

(இ-ள்.) சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு முன்னே அடியார்கள் வந்து சேரவும், அப்பிள்ளையார் குளிர்ச்சி மிகுந்த முத்துச்சிவிகையினின்று மிறங்கித்தம்மை வணங்குதலைக்கண்டு, அளவில்லாத சிறந்த அடியார்கள் அஞ்சலி கூப்பித்தொழுது அரகரவென்றெடுத்தவோசையானது உலகத்திற் பரவ, வீழ்ந்து வணங்கி யெழுந்து, ஆகாயத்தை முட்டும்படி ஆரவாரித்தார்கள்.—எ-று. (௩௮௯)

சேணுயர்ந்த வாயினீடு சீர்கொள்சண்பை மன்னனார்
வாணிலாவு நீற்றணி விளக்கிட மனத்தினுற்
பூணுமன்பர் தமமுடன் புகுந்திடப் புறத்துளோர்
காணுமாசை யிற்குவித்த கைந்நிரை யெடுத்தனர்.

(இ-ள்) நெடுந்தூரமுயர்ந்த வாயில்கள் மிக்க சிறந்த சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் ஒளிவிளங்கும் விபூதியி னழகைப் பிரகாசப்படுத்த, மனத்திற்பொருந்திய மெய் யன்பினையுடைய அடியார்களோடு (அக்காஞ்சிநகரத்தினுள்ளே) சென்றருள, அந்நகர்ப்புறத்திலுள்ள சனங்கள் பிள்ளையாரைத் தரிசிக்கவேண்டுமென்னும் ஆசையினால் குவித்த கைகளை வரிசையாக எடுத்தார்கள்.—எ-று. (௩௯௦)

வியனெடுந் தெருவினூடு மிக்கதொண்ட ரார்பெழக்
கயனெடுங்கண் மாதருங் காதனீடு மாந்தரும்
புயல்பொழிந்த தாமெனப் பூவினோடு பொற்சுண
மியலுமாறு வாழ்த்தெடுத் திருமருங்கும் வீசினார்.

(இ-ள்.) மிக்க விசாலமுடைய திருவீதியினிடத்து மேன்மைபொருந்திய அடியார்கள் செய்யும் (அரகரவென்னும்) ஆரவாரமானது அதிகரிக்க, கயல்மீன் போலும் நீண்ட கண்களையுடைய மாதரும் விருப்பமிகுந்த புருஷர்களும் மழை பொழிந்தாற்போல மலர்களையும் பொற்சுண்ணங்களையும் பிள்ளையாருக்கு ஏற்ற முறைமைப்படி வாழ்த்தொலி கூறி இரண்டுபக்கங்களிலும் வீசினார்கள்.—எ-று. ()

இன்னவண்ண மியாவரு மின்பமெய்த வெய்துவார்
பின்னுவார் சடைமுடிப் பிரான்மகிழ்ந்த கோயில்கண்
முன்னுறப் பணிந்துபோய் மொய்வரைத் திருமகண்
மன்னுபூசனைமகிழ்ந்த மன்னர்கோயின் முன்னினார்.

(இ-ள்.) இவ்வாறு அக்காஞ்சிநகரத்திலுள்ள யாவரும் மகிழ்வடையும்படி யெழுந்தருளுகின்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார், பின்னலாகிய நீண்ட சடை

முடியையுடைய சிவபெருமான மகிழ்ந்தெழுந்தருளும் (அவ்வீதியின் பக்கங்களிலு ள்ள) ஆலயங்களை முன்னே வணங்கிச்சென்று, நெருங்கிய சிகரங்களையுடைய பர் வத ராசபுத்திரியாகிய பார்வதி தேவியார் செய்த பூசையை மகிழ்ந்தேற்றருளிய ஸ்ரீஏகாம்பரநாதரது திருக்கோயிலையடைந்தருளினார்.எ—று. (௬௬௨)

கம்பவாணர் கோயில்வாயில கண்டுகை குவித்தெடுத
தும்பரோங்கு கோபுரததின முன்னிறைஞ்சி யுள்ளணை
தம்பொன்மாளி கைப்புறததி லன்பரோடு சூழவந
திமபர்ஞால முய்யவநத பிள்ளையா ரிறைஞ்சுவார்.

(இ-ள்.) ஸ்ரீ ஏகாம்பரநாதரது திருக்கோயிலின திருவாயிலைககண்டு திரு க்கரங்களைச் சிரசினமேற குவிததெடுதது ஆகாயமளவாக உயாநத திருககோபுர த்தின் முன்னே வணஙகி உளளே செனறு, அழகிய பொனமயமாகிய திருமாளி கையின் பக்கத்தில் அடியாாகளோடு பிரதக்ஷணமாக வநது, இநநிலவுலக முய்யும் படி அவதரிததருளிய திருஞானசமபநதபிளளையாா வணஙகுவாராயினா.-எ-று.

வேறு.

செம்பொன்மலைக் கொடிதழுவக் குழைந்தருளுந திருமேனிக்
கம்பனாவந தெதிர்வணங்குங் கவுணியாதங் காவலனார்
பம்புதுளிக் கண்ணருவி பாய்ந்துமயிாப புளகமவாத
தம்பெருகு மனக்காத றள்ளநில மிசைத்தாழ்நதாா.

(இ-ள்.) சிவநத இமயபாவத ராச புததிரியாகிய காமாடசியம்மையாா தழு வுதலால் (முலைததழும்பும் வளைததழும்பும பெறறுக) குழைநத திருமேனியையு டைய திருவேகமபநாதனை யடைந்து எதிரே வணஙகுங கவுணியா குலததலை வராகிய திருஞானசம்பந்தப்பிளளையாா அதிகரிததுத துளிக்கும் ஆனநதக்கண் ணீராகிய அருவியானது திருமேனியிற் பாய்தலால மயிாப்புளக முண்டாகததம து திருவுள்ளததிலுணடாகிய பெருவிருப்பமானது பரவசபபடுததப பூமியில வீழ் ந்து வணஙகினா.—எ-று. (௬௬௪)

பலமுறையும பணிநதெழுநது பஙகயசசெங் கைகுவிழ்பப
மலருமுக மளிதததிரு மணிவாயான மறையானென்
றுலகுய்ய வெடுத்தருளி யுருகியவன பெனபுருக்க
நிலவுமிசை முதறறுள நிரயபியநா மையினிகழ.

(இ-ள்.) பலதரம் சாஷ்டாஙகமாக வணஙகி யெழுநது, தாமனாமலாபோ ன்ற சிவந்த திருக்கரஙகள சிரசினமேறகுவிய, மலாநத திருமுகத்திற்றோன்றிய அழகிய திருவாக்கினால "மறையான" எனறு உலகததாருய்யும்படி முதலெடுதத ருளி, மனமுருகுகினற பேரன்பானது எலும்பையுருகசசெய்ய, விளங்குகின்ற சப் தசுரங்களோடு முதன்மை பொருநதிய தாளமும நிறைந்த இயல்போடு பொருநது ம்படி,—எ-று.

இது முதலிரண்டு பாடலுங்குளகம். (௬௬௫)

**திருவேகம்பம் - பண் - இந்தளம்.**

திருச்சிற்றம்பலம்.

மறையானை மாசிலாப்புன்சடைமல்குவெண்
பிறையானைப்பெண்ணொடாணாகியபெம்மானை
யிறையானையேர்கொள்கச்சித்திருவேகம்பத்
துறைவானையல்லதுள்காதெனதுள்ளமே.

அந்தண்பூங்கச்சியேகம்பனையம்மானைக்
கந்தம்பூங்காழியூரன்கலிக்கோவையாற்
சந்தமேபாடவல்லதமிழ்ஞானசம்
பந்தன்சொற்பாடியாடக்கெடும்பாவமே.

திருச்சிற்றம்பலம்.

**சுவாமிபெயர்-ஸ்ரீ ஏகாம்பரநாதர்; தேவியார் - காமாட்சியம்மையார்.**

---

பாடினார் பணிவுற்றார் பரிவுறுமா னந்தக்கூத்
தாடினா ரகங்குழைந்தா ரஞ்சலிதஞ் சென்னியின்மேற்
சூடினார் மெய்ம்முகிழ்த்தார் சூகரமு மன்னமுமாய்த்
தேடினா ரிருவர்க்குந் தெரிவரியார் திருமகனார்.

(இ-ள்.) பன்றியாகவும் அன்னமாகவும் உருவங்கொண்டு திருவடியையுந் திருமுடியையுந் தேடிய திருமால் பிரமனென்னு மிருவர்க்குங் காணுதற்கரிய ஸ்ரீ சிவபெருமானது திருக்குமாரராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருப்பதிகம் பாடினார்; நமஸ்காரஞ் செய்தார்; அன்பு பொருந்திய ஆனந்தக்கூத்தாடினார்; திருவுள்ளங் குழைந்தார்; திருக்கரங்களை யஞ்சலியாகக் குவித்துத் தமது சிரசின்மேற் சூடினார்; திருமேனியிற் புளகமுற்றருளினார்.—எ-று. (கூகூகூ)

மருவியவே ழிசைபொழிய மனம்பொழியும் பேரன்பாற்
பெருகியகண் மழைபொழியப் பெரும்புகலிப் பெருந்தகையா
ருருகியவன் புள்ளலைப்ப வுமைதழுவக் குழைந்தவனைப்
பருகியமெய் யுணர்வினொடும் பரவியே புறத்தணைந்தார்.

(இ-ள்.) பெரிய சீகாழியிலவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் பொருந்திய ஏழிசைகளும் அதிகரிக்க மனத்தினின்றுந் தோன்றிய பேரன்பினால் பெருகிய ஆனந்தக் கண்ணீர் சொரிய, மனமுருகுதற்குக் காரணமாகிய அன்பானது தமதுள்ளத்தை யலையச்செய்ய, ஸ்ரீ காமாட்சியம்மையார் தழுவக்குழைந்தருளிய ஸ்ரீ ஏகாம்பரநாதனைத் தியானிக்கின்ற மெய்யுணர்ச்சியோடும் துதித்துப் புறத்து வந்தருளினார்.—எ-று. (கூகூஎ)

புறத்தணைந்த தொண்டருடன் போந்தமைந்த திருமடத்திற்
பெறற்கரும்பே றுலகுய்யப் பெற்றருளும் பிள்ளையார்
மறப்பரிய காதலுடன் வந்தெய்தி மகிழ்ந்துறைவா
ரறப்பெருஞ்செல வக்காமக் கோட்டமணைந் திறைஞ்சினார்.

(இ-ள்.) யாவரும் பெறுதற்கரிய சிவஞானத்தை யுலகத்தாருய்யும்படி பெற்றருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் தம்முடன் ஆலயத்தின் புறத்தில் வந்த அடியார்களோடு எழுந்தருளி அங்குள்ள திருமடத்தில் மறத்தற்கரிய பெருவிருப்போடு வந்து சேர்ந்து மகிழ்ந்து வசித்தருள்பவராய்ப் பின்பு, (முப்பத்திரண்டு)

தருமங்களையும் வளர்த்தருளிய மிக்க செல்வத்தையுடைய (ஸ்ரீகாமாட்சியம்மையாரெழுந்தருளிய) திருக்காமக்கோட்டமென்னுந் திருக்கோயிலை யடைந்து வணங்கியருளினார்.—எ-று (௩௩௮)

திருவேகாம் பரத்தமர்ந்த செழுஞ்சுடரைச் சேவடியி
லொருபொழுதுந் தப்பாதே யுள்ளுருகிப் பணிகின்றார்
மருவுதிரு வியமகமும் வளரிருக்குக் குறண்மற்றும்
பெருகுமிசைத் திருப்பதிகத் தொடைபுனைந்தார் பிள்ளையார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவேகாம்பரமென்னுந் திருக்கோயிலி லெழுந்தருளிய செழுமைபொருந்திய சோதிசொரூபராகிய ஸ்ரீ ஏகாம்பரநாதனைச் சிவந்த திருவடிகளில் ஒரு காலமுந்தவறாமல் மனமுருகி வணங்குகின்றவராய், மேன்மை பொருந்திய திருஇயமகமும் இசைவளர்கின்ற திருவிருக்குக் குறளும் இவையல்லாத பிறவுமாகிய இசைபெருகுகின்ற திருப்பதிகமாலைகளைப் பாடியருளினார்.—எ-று. (௩௩௯)

---

### திருவேகம்பம் - பண் - திருஇயமகம்.

திருச்சிற்றம்பலம்.

பாயுமால்விடைமேலொருபாகனேபாவைதன்னுருமேலொருபாகனே
தூயவானவர்வேதத்துவனியேசோதிமாலெரிவேதத்துவனியே
யாயுநன்பொருணுண்பொருளாதியேயாலநீழலரும்பொருளாதியே
காயவன்மதன்பட்டதுகம்பமேகண்ணுதற்பரமற்கிடங்கம்பமே.

இதன்பொருள்.

பாயுமால் விடைமே லொருபகனே, இதன்கருத்து, வானளவுந் தத்தப்பட்ட பெரிய ரிஷபத்தின்மேலேறிச் செலுத்துகைக்கு ஒப்பில்லாத பாகனுயுள்ளவனே; பாவைதன் உருமேல் ஒருபாகனே, இ து. பரமேஸ்வரியினுடைய திருமேனியினை உனது திருவடிவின் ஒருபாதியிலே வைத்தவனே; தூயவானவர் வேதத்துவனியே, இ - து. நின்மலரான வானவரது துதியாகிய வேதங்களினுடைய நாதசொரூபமா யிருக்கின்றவனே; சோதிமால் எரிவு ஏது அத்துவனியே, இ - து. பிரகாசத்தை யுடைத்தாய் மிகுதிப்பட்டு அச்சத்தியினுடைய பிரகாசம் எப்படியிருக்கும் அப்படித்தான வழியாயுள்ளவனே; ஆயுநன்பொருள் நுண்பொருளாதியே, இ - து. மனபோதத்தா லுணரப்பட்ட அத்தங்களுக்கெல்லாங் கிட்டுதற் கரிதாகிய சூனியமாயுள்ள மூலவத்துவாயிருப்பவனே; ஆலநீழலரும் பொருளாதியே, இ - து. கீழ்ச்சொன்ன பொருளை வடவிருக்ஷத்தின்கீழ் எழுந்தருளியிருந்து ஆத்மபோதத்தால் உணர்தற்கரிய பொருளென வுணர்த்தியப்பொருளைத் தெருட்சிபடஆயாகின்றனையே; காயவன் மதன்பட்டது கம்பமே, இ - து. உனது நெற்றிவிழியாலே தகனஞ்செய்ய, யாவராலுஞ் செயிதற்கரிய காமன் பட்டவாறு அங்கமெடாத நடுக்கமே; கண்ணுதற் பரமற்கிடங் கம்பமே, இ-து. இவ்வாறு காமன்வடிவழியநுதற் கண்விழித்த கருணையாளனாகிய சிவனுக்கிடமே தென்னில் திருவேகம்ப மென்னுந் திருப்பதியே என்க.

சுந்தமார்பொழில்சூழ்தருகம்பமேகாதல்செய்பவர்தீர்த்திடுகம்பமே
புந்திசெய்துவிரும்பிப்புகலியேபூசுரன்றன்விரும்பிப்புகலியே

யந்தமிழ்பொருளாயினகொண்டுமேயண்ணனின் பொருளாயினகொண்டு
பந்தனின்னியல்பாடியபத்துமேபாடவல்லவராயினபத்துமே. [மே

இதன்பொருள்.

கந்தம் ஆர்பொழில் சூழ்தரு கம்பமே, இ-து. மணம்பொருந்திய சோலை சூழ்ந்த திருவேகம்பத்தை ; காதல் செய்பவர் தீர்த்திடுகம்பமே, இ-து. இடைவிடாமற் காதலித்து நினைப்பவரது சென்மநடுக்கத்தை யொழிக்கபட்டவனே; புந்தி செய்து விரும்பிப்புகலியே பூசுரன்றன் விரும்பிப்புகலியே, இ-து. இத்தன்மை காதலித்தாரது சென்மநடுக்கத்தை யொழிப்பையென்பதை யானுமுணர்ந்து கனகமாடங்கள் சூழப்பட்ட புகலியென்கின்ற பதியின்கண் வாழ்கின்ற இந்த மறையோனாகிய யான் அத்தன்மை கருணையாளனாகிய தன்னை யானுங் காதலித்துரைத்த தமிழ்மாலையை ; அந்தமில் பொருளாயின கொண்டுமே, இ-து. முடிவில்லாத அத்தங்களில் எனக்குத்தோன்றின மதியாதியைக்கொண்டு; அண்ணனின் பொருளாயின கொண்டுமே பந்தனில் னியல்பாடிய பத்துமே, இ-து. காத்தாவாகிய நினது சிவானந்தரது அறிவினுள்ளே தோன்றப்பட்ட சிவானந்தம் ஏகமாகிய விசேடத்தையுடைய நின்னை இரண்டறத்தழுவப்பட்ட ஞானசம்பந்தனுனவன் இனிய தமிழாகப்பாடிய இம்மாலை பத்துமே; பாடவல்லவ ராயினபத்துமே, இ-து. இம்மாலையைக்கொண்டு நின்னைப்பாடுவோர்க்கு ஆகுவதே தென்னில் அழகாகிய பத்தி ஞானவைராக்கியங்கள் என்க.

திருச்சிற்றம்பலம்.

---

திருவிருக்குக்குறள் - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

கருவார்கச்சித் - திருவேகம்பத்
தொருவாவென்ன - மருவாவினையே.

கொச்சைவேந்தன் - கச்சிக்கம்பன்
மெச்சுஞ்சொல்லை - நச்சும்புகழே.

திருச்சிற்றம்பலம்.

---

நீடுதிருப் பொழிற்காஞ்சி நெறிக்காரைக் காடிறைஞ்சி
சூடுமதிக் கண்ணியார் துணைமலர்ச்சே வடிபாடி
யாடுமல ரினிதமரு மனேகதங்கா வதம்பரவி
மாடுதிருத் தானங்கள் பணிந்தேத்தி வைகுநாள்.

(இ-ள்.) உயர்ந்த சோலைசூழ்ந்த ஸ்ரீ காஞ்சி நகரத்திலுள்ள திருநெறிக்காரைக்காட்டை வணங்கி, இளம்பிறையைக் கொன்டைமாலையாகத் தரித்த காரைத் திருநாதரது இரண்டு தாமரைமலர்போன்ற திருவடிகளைத் துதித்து, திருநடனஞ் செய்தருளுஞ் சிவபெருமானெழுந்தருளிய கச்சியநேகதங்காவத மென்னுந் திருப்பதியைத் துதித்து அக்காஞ்சிபுரத்தினருகிலுள்ள மற்றத்திருப்பதிகளையும் வணங்கித் துதித்து அங்கெழுந்தருளியிருக்கும் நாள்களில்.—இ-று.

இதுமுதலிரண்டு பாட்டுங் குளகம். (௧000)

எண்டிசையும் போற்றிசைக்குந் திருப்பதிமற் றதன்புறத்துத்
தொண்டருட னினிதேத்தித் தொலைவிட முண்டிருண்ட
கண்டர்மகிழ் மேற்றளியு முதலான கலந்தேத்தி
மண்டுபெருங் காதலினால் வணங்கிமீண் டணைந்திருந்தார்.

(இ-ள்.) எட்டுத்திக்கிலுள்ளவர்களும் போற்றுதல் செய்யும் அக்காஞ்சிபுரத்தின் அருகிலுள்ள ஸ்தலங்களில் அடியார் திருக்கூட்டத்தோடு இனிமையாகத் துதித்து, முன்னாளில் ஆலாகலவிடத்தை யுண்டு அதனால் இருண்ட கண்டத்தையுடைய சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளிய திருமேற்றளி (திருவோணகாந்தன்றளி) முதலிய பல திருப்பதிகளை யடைந்து துதித்து, நெருங்கிய பெருவிருப்பினால் வணங்கி மீண்டு முன்போலத் திருமடத்தை யடைந்து எழுந்தருளி யிருந்தார்.—எ-று.

எமது அருள்வள்ளலாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருமேற்றளி யென்னுந் திருப்பதியை யடைந்தபொழுது அங்குத் தவஞ்செய்திருந்த விஷ்ணுவுக்குச் சிவசாரூப மளித்தருளின தொன்று காஞ்சிமான்மியத்திற் கூறுகின்றது; அதன் வரலாறு,—பூர்வத்தில் திருமால் சிவபெருமானது சாரூபபதவியை யடையவிரும்பித் திருமேற்றளி யென்னுந் திருப்பதியை யடைந்து, ஐம்புலன்களையு மடக்கி அருள்வழி நின்று, காமம்-குரோதம்-லோபம்-மோகம்-மதம் மாற்சரிய மென்னு மாறு பகையையு மகற்றி, விபூதி ருத்திராக்ஷந் தரித்து, உருத்திர மந்திரத்தைச் செபித்துச் சிவபெருமானைச் சிந்தித்து அருந்தவஞ் செய்யும்பொழுது, சிவபெருமான் திருவருள் சுரந்து இடபவாகனத்தின்மே லெழுந்தருளி அம்மாயனை யடைந்து, எமது அன்பரிற் சிறந்த திருமாலே! நீ யாது கருதித் தவஞ்செய்கின்றனை? வேண்டுவதைக் கேளென்று திருவாய்மலர்ந்தருளவும், திருமால் பேரானந்த மடைந்து திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, எமது ஆண்டவனே! அடியேன் தேவரீர் திருவருளால் சகல பாக்கியங்களையு மடைந்திருக்கின்றேன்; ஆயினும் இப்பொழுது அடியேனுக்கு உமது சாரூபபதவியைத் தந்தருளவேண்டுமென்று வேண்டுதலும், சிவபெருமான் அவ் விண்டுவுக்கு அருள் சுரந்து கமலக்கண்ணனே! இருபத்தெட்டாங் கலியுகத்தில் வைவச்சுதமனுவந்தரம் வரும்; அப்பொழுது சீகாழிப்பதியிலே கவுணியகோத்திரத்தில் திருவவதாரஞ்செய்யும் திருஞானசம்பந்தனென்னும் எமது அடியவன் இங்கு வந்து எமது உருவமாகிய சாரூபபதவியை யுனக்குக் கொடுப்பான், அதுவரையிலும் நீ இத்தலத்திலே தவஞ்செய்திருவென்று கூறியருளி அந்தர்த்தானமாயினர்; அதனை யுணர்ந்த திருமால் மனவருத்தநீங்கி, அத்தலத்திலேயே அருந்தவஞ்செய்திருந்து, சிவபெருமானது கட்டளைப்படியே திருமேற்றளியைச் சேவிக்கவந்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையா ரருளிச்செய்த தேவாரத் திருப்பதிகத்தினால், சிவபெருமான் றிருவுருவ மாகிய சாரூபபதவியை யடைந்தனன், என்பதாம்.—இதனை.

காஞ்சிப்புராணம்.

"உந்தி பூத்தவ னளப்பரு முவகையுட் டிளைத்துச்
சந்த மாமல ரடிமிசை வீழ்ந்துதாழ்ந் தெழுந்தா
னெந்தை நீதர முழுவதும் பெற்றனே னிக்கா
னந்த வென்றனைக் களித்தரு ளையநின் னுருவம்.

என்ற வாய்மொழி திருச்செவி யேறலு மெங்கோ
னென்று கூறுத லுற்றன னுவணமீ துயர்த்தோய்
நன்று தேர்வைவச் சுதமனு வந்தர னனுகு
மன்று நாலிரண் டிற்றுடை யிருபதாங் கலியில்.

காழி மாநகர்க் கவுணியர் குலத்தொரு காளை
யேழி சைத்தமிழ் ஞானசம் பந்தனெம் மடியான்
யாழ நீபெற வெம்முரு விங்குவந் தளிப்பா
னூழி யோயது காறுமிவ் வனைப்பினி லமர்ந்து.

ஈட்ட ருந்தவ மியற்றிகென் றருளிநீங் குதலுங்
கோட்ட மின்றிமா லம்முறை வதிந்துபூங் கொன்றைத்
தோட்ட லங்கலாற் றொழப்புகு முத்தமிழ் விரகர்
பாட்ட லங்கலாற் பரஞ்சுடர்த் திருவுருப் பெற்றான்.'' — என்று வரு

வனவற்றா லுணர்க. (௧௦௦௧)

அப்பதியில் விருப்பினொடு மங்கணரைப் பணிந்தமர்வார்
செப்பரிய புகழ்ப்பாலித் திருநதியின் றென்கரைபோய்
மைப்பொலியுங் கண்டர்திரு மாற்பேறு மகிழ்ந்திறைஞ்சி
முப்புரஞ்செற் றவர்தம்மை மொழிமாலை சாத்தினார்.

(இ-ள்.) அக்காஞ்சிபுரத்தில் விருப்பத்தோடும் அருட்கண்ணராகிய ஸ்ரீ ஏகாம்பரநாதரை வணங்கி அங்கெழுந்தருளியிருக்குந் திருஞானசம்பந்தப்பிள்ளையார், சொல்லுதற்கரிய புகழையுடைய பாலிநதியின் தென்கரைவழியே சென்று, காளகண்டராகிய மால்வணங்கீசரெழுந்தருளிய திருமாற்பேறு என்னுந் திருப்பதியை மகிழ்ந்து வணங்கித் திரிபுரதகனராகிய அவ்வெம்பெருமானைத் திருப்பதிக மாலைகளால் துதித்தருளினார் —எ-று. (௧௦௦௨)

திருமாற்பே றுடையவர்தந் திருவருள்பெற் றெழுந்தருளிக்
கருமாலுங் கருமாவாய்க் காண்பரிய கழலுன்னி
வருமாற்றன் மழவிடையார் திருவல்லம் வணங்கித்தம்
பெருமாற்குத் திருப்பதிகப் பெரும்பிணைய லணிவித்தார்.

(இ-ள்.) திருமாற்பேற்றி லெழுந்தருளும் மால்வணங்கீசரது திருவருளைப்பெற்று அங்கு நின்று மெழுந்தருளிக் கருநிறத்தையுடைய திருமாலும் பன்றிவடிவமெடுத்துக்காணுதற்கரிய திருவடிகளைச் சுமந்துவருகின்ற வல்லமை பொருந்திய மழவிடையையுடைய வல்லநாதரெழுந்தருளிய திருவல்லமென்னுந் திருப்பதியை வணங்கித் தமது முதல்வராகிய அவ்வெம்பெருமானுக்குத் திருப்பதிகமாகிய பெரியபாமாலையைச் சாத்தியருளினார்.—எ-று. (௧௦௦௩)

அங்குள்ள பிறபதியி லரிக்கரியார் கழல்வணங்கிப்
பொங்குபுனற் பால்யாற்றின் புடையில்வட பாலிறைவ
ரெங்குமுறை பதிபணிவா ரிலம்பையங்கோட் டூரிறைஞ்சி
செங்கண்விடை யுகைத்தவரைத் திருப்பதிகம் பாடினார்.

(இ-ள்.) அப்பக்கங்களிலுள்ள மற்றத்திருப்பதிகளிலெழுந்தருளிய விஷ்ணுவினால் காணுதற்கரிய சிவபெருமானது திருவடிகளைவணங்கி, பொங்குகின்ற நீ

நிறைந்த பாலிநதியின் வடபக்கத்தில் சிவபெருமா னெழுந்தருளிய திருப்பதி யெங்கும் வணங்குங் கருத்துடையவராய்த் திருஇலம்பையங் கோட்டூரென்னுந்திருப்பதியை வணங்கிச் சிவந்த கண்ணையுடைய இடபத்தைவாகனமாகக்கொண்டருளிய ஸ்ரீசந்திரசேகரரைத் திருப்பதிகத்தால் பாடியருளினார்.—எ-று. (௪00௪)

திருத்தொண்டர் பலர்சூழத் திருவிற்கோ லமும்பணிந்து
பொருட்பதிகத் தொடைமாலை புரமெரித்த படிபாடி
யருட்புகலி யாண்டகையார் தக்கோல மணைந்தருளி
விருப்பினொடுந் திருவூறல் மேவினார் தமைப்பணிந்தார்.

(இ-ள்.) திருவருள் நிறைந்த சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் பலதிருத்தொண்டர்கள் சூழும்படிதிருவிற்கோலமெனனுந் திருப்பதியை வணங்கிப் பொருளமைந்த திருப்பதிகமாலையைத் திரிபுரமெரித்த தன்மையை யமைத்துப் பாடியருளி, பின் தக்கோலத்தையடைந்து விருப்பத்தோடும் திருவூறலி லெழுந்தருளிய உமாபதிசனை வணங்கி யருளினார்.—எ-று.

திருவிற்கோலம் என்பது, கூவம். தக்கோலம் எனபது, திருவூறலென்னுந் திருப்பதிக்கு ஒரு பெயர். (௪00௫)

---

திருவிற்கோலம் - பண் – காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

உருவினாருமையொடுமொன்றிநின்றதோர்
திருவினான்வளர்சடைத்திங்கள்கங்கையான்
வெருவிவானவர்தொழவெகுண்டுநோக்கிய
செருவினானுறைவிடந்திருவிற்கோலமே.

கோடல்வெண்பிறையனைக்கூகமேவிய
சேடனைச்செழுமதிற்றிருவிற்கோலத்தை
நாடவல்லனற்றமிழ்ஞானசம்பந்தன்
பாடல்வல்லார்களுக்கிலலைபாவமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - திரிபுராந்தகேசுவரர், தேவியார் - புராந்தகியம்மை.

---

தொழுதுபல முறையேற்றிச் சுரர்குருவுக் கிளையமுனி
வழுவிறவம் புரிந்தேத்த மன்னினார் தமைமலர்ந்த
பழுதில்செழுந் தமிழ்மாலைப் பதிகவிசை புனைந்தருளி
முழுதுமளித் தவரருளாற் போந்தனாமுத் தமிழ்விரகர்.

(இ-ள்.) முத்தமிழ்த்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் வணங்கிப்பலமுறை துதித்துத்தேவகுருவாகிய பிரகஸ்பதி பகவானுக்குத் தம்பியாகிய சம்வர்த்த முனிவர் குற்றமற்ற தவஞ்செய்துதுதிக்கும்படி வீற்றிருந்தருளிய உமாபதிசனை விளங்குகின்ற பழுதில்லாத செந்தமிழ்த் திருப்பதிகமாலையால் இசையோடு சாத்தியருளி, சராசரங்களாகிய எல்லாப்பொருள்களையுமளித்தருளிய அவ்வெம்பெருமானது திருவருளினால் அங்குநின்றும் எழுந்தருளினார்.—எ-று.

பிரகஸ்பதிபகவானுக் கிளையவராகிய சம்வர்த்தமுனிவர் அங்குத் தவஞ் செய்து பூசித்துச் சிவபெருமானது திருவருளைப்பெற்றுப் புலப்பகையை வென்று வேண்டிய வரங்களுடன் முத்திப்பேறும் பெற்றருளினமையின், 'சார்குருவுக்கிளையமுனி - வழுவிறவம் புரிந்தேத்த மன்னினார்' என்று கூறினார். (௧௦௦௭)

குன்றநெடுஞ் சிலையாளர் குலவியபல் பதிபிறவும்
நின்றவிருப புடனிறைஞ்சி நீடுதிருத் தொண்டருடன்
பொன்றயங்கு மணிமாடப் பூந்தராய்ப் புரவலனார்
சென்றணைந்தார் பழையனூர்த் திருவாலங் காட்டருகு.

(இ-ள்) பொன்மயமாக விளங்குகின்ற அழகிய மாடங்களையுடைய சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் மேருமலையாகிய நீண்டவில்லையுடைய சிவபெருமான வீற்றிருந்தருளும் பல திருப்பதிகள் பிறவற்றையும் பொருந்திய விருப்பத்தோடு வணங்கிச் சிறந்த அடியார் திருக்கூட்டங்களோடு பழையனூரிலுள்ள திருவாலங்காடென்னுந் திருப்பதியினருகில் சென்றடைந்தருளினார்.

வேறு.

இம்மையிலே புவியுள்ளோர் யாருங் காண வேழுலகும் போற்றிசைப்ப வெம்மை யாளு, மம்மைதிருத் தலையாலே நடந்து போற்று மம்மையப்பர் திருவாலங் காடா மென்று, தம்மையுடை யவரூர்தா மிதிக்க வஞ்சிச் சண்பைவருஞ் சிகாமணியார் சாரச் சென்று, செம்மைநெறி வழுவாத பதியின் மாடோர் செழும்பதியி லன்றிரவு பள்ளி சேர்ந்தார்.

(இ-ள்.) இப்பிறப்பிலே பூமியிலுள்ளோர் யாவருங் கண்ணுற்காணவும், ஏழுலகத்திலுள்ளவர்களுந் துதிசெய்யவும், எம்மை யடிமையாகக்கொண்டருளிய காரைக்காலம்மையார் திருத்தலையாலே நடந்து துதிக்கும் அம்மையப்பராகிய சிவபெருமானெழுந்தருளிய திருவாலங்காடு இதுவாமென்று சீகாழிலவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் தம்மை யடிமையாகவுடைய அவ்வெம்பெருமானது பழைமை பொருந்திய திருப்பதியைத்தமது திருவடிகளால் மிதிப்பதற்கு அச்சங்கொண்டு அத்திருப்பதியின் சமீபத்திற்சென்று, நன்னெறியினின்றும் வழுவாத (மெய்யன்பர்கள் வாழுகின்ற) அத்திருப்பதியி னருகிலுள்ள ஓர் செழுமை பொருந்திய ஊரில் அன்றிரவு பள்ளி கொண்டருளினார்.—எ-று.

சிவபெருமான் பெத்தாத்மாக்களை முத்தியிற் சேர்த்தற்பொருட்டு அம்மையப்பராய் எழுந்தருளித் திருவருள் புரியும் பேருளாளரென்பார், 'அம்மையப்பர் திருவாலங்காடு, என்று கூறினார். "தாயுந்தந்தையுமானோய் சிரகிரித் தாயுமான தயாபர மூர்த்தியே" என்றார் பெரியாரும். (௧௦௦௮)

மாலையிடை யாமத்துப் பள்ளி கொள்ளு மறையவனார் தம்முன்பு கனவி லேவந், தாலவனத் தமர்ந்தருளு மப்பா நம்மை யயர்த்தனையோ பாடுதற்கென் றருளிச் செய்ய, ஞாலமிரு ணீங்கவரும் புகலி வேந்தர் கள்ளிருள்யா மத்தினிடைத் தொழுது ணர்ந்து, வேலைவிட முண்டவர் தங் கருணை போற்றி மெய்யுருகித் திருப்பதிகம் விளம்ப லுற்றார்.

(இ-ள்) திருவாலங்காட்டில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமான் மாலைக்காலத்தோடு கூடிய நடுயாமத்தில் பள்ளிகொண்டருளுந் திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு முன்னே கனவிலெழுந்தருளி நம்மைப்பாடுதற்கு மறந்தனையோவென்

று அருளிச்செய்ய, உலகத்திலுள்ளவர்கள் அஞ்ஞானமாகிய இருளின்று நீங்கும்படி அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் மிக்கவிருள்பொருந்திய க[illegible] ராத்திரியில் துயிலுணர்ந்து வணங்கிச் சமுத்திரத்திற்றோன்றிய ஆலாகலவிடத்தையுண்டருளிய அச்சிவபெருமானது திருவருளைத் துதித்து அன்பால் திருமேனி குழைந்து திருப்பதிகம் பாடத்தொடங்கினார்.—எ-று.

வேலைவிடமுண்டார்தங் கருணை யென்றது,—தாம் காரைக்காலம்மையார் தலையால் நடந்துசென்ற திருப்பதியைக் காலால்மிதித்தற் கஞ்சி ஊர்க்கு வெளிப்புறத்தில் தங்கி நிற்கவும், சிவபெருமான் தரிசனங் கொடுத்துப் பாடச்செய்த பெருங்கருணைத்திறத்தை. (௪00௧)

துஞ்சவரு வாரொன்றே யெடுத்த வோசைச் சுருதிமுறை வழுவா மற் றொடுத்த பாட, லெஞ்சலிலா வகைமுறையே பழைய னூரா ரியம்புமொழி காத்தகதை சிறப்பித் தேத்தி, யஞ்சனமா கரியுரித்தா ரருளா மென்றே யருளும்வகை திருக்கடைக்காப் பமையச் சாற்றிப், பஞ்சுரமாம் பழயதிறங் கிழமை கொள்ளப் பாடினார் பாரொலா முய்ய வந்தார்.

(இ-ள்.) "துஞ்சவருவார்" என்று முதலெடுத்தவோசையோடு சுருதியின் முறைவழுவாமல்தொடுத்த திருப்பதிகப்பாடலில், குறைவில்லாத வண்ணம் பழையனூர் வேளாளர்கள் வணிகனுக்குக்கூறிய உறுதி மொழியைத் தவறாமற்காத்த சரித்திரத்தைச் சிறப்பித்துத் துதித்து, கருமை நிறம்பொருந்திய பெரிய (கயாசுரனென்னும்) யானையை யுரித்தருளிய சிவபெருமானது திருவருளா மென்று அவர் தமக்குச் சொப்பனநிகழ்த்திப் பாடச்செய்த வகையையுந் திருக்கடைக்காப்பில்பொருந்தப் பாடியருளி, பண்ணமைந்த திருப்பதிகவிசையாலாகியபழமை பொருந்திய பயனை உரிமையாகப்பொருந்த உலகத்தாரெல்லாரும் உய்யும்வண்ணமவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் பாடியருளினார்.—எ-று.

பழையனூராரியம்பு மொழிகாத்த கதையை, முன்னர்த் திருக்குறிப்புத்தொண்டநாயனார் புராணத்திற் கூறியுள்ளமையின் ஆண்டுக் கண்டுணர்க. (௪0௪0).

---

### திருவாலங்காடு - பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

துஞ்சவருவாருந்தொழுவிப்பாரும்வழுவிப்போய்
நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப்பாரும் முனைநட்பாய்
வஞ்சப்படுத்தொருத்திவாணாள்கொள்ளும்வகைகேட்
டஞ்சும்பழையனூராலங்காட்டெம்மடிகளே.

போழம்பல பேசிப் போதுசாத்தித் திரிவாரும்
வேழம்வருமளவும்வெயிலேதுற்றித்திரிவாருங்
கேழல்வினைபோகக்கேட்பிப்பாருங்கேடிலா
வாழ்வர்பழையனூராலங்காட்டெம்மடிகளே.

சாந்தங்கமழ்மருகிற்சண்பைஞானசம்பந்த
னாந்தண்பழையனூராலங்காட்டெம்மடிகளை

வேந்தனருளாலேவிரித்தபாடலிவைவல்லார்
சேர்ந்தவிடமெல்லாந்தீர்த்தமாகச்சேர்வாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - ஊர்த்ததாண்டவேசுரர், தேவியார் - வண்டார்குழலியம்மை.

---

நீடுமிசைத் திருப்பதிகம் பாடிப் போற்றி நெடுங்கங்கு லிருணீங்கி நிகழ்ந்த காலை, மாடுதிருத் தொண்டர்குழா மணைந்த போது மாலையினிற் றிருவால வனத்து மன்னி, யாடுமவ ரருள்செய்த படியை யெல்லா மருளிச்செய் தகமலரப் பாடி யேத்திச், சேடர்பயி றிருப்பதியைத் தொழு து போந்து திருப்பாசூ ரதன்மருங்குச் செல்ல லுற்றார்.

(இ-ள்.) மிக்க இசைபொருந்திய திருப்பதிகம் பாடித்துதித்து, நீண்ட நடுயாம விருள்நீங்கி விடிந்தகாலத்தில் திருத்தொண்டர் திருக்கூட்டங்க ளருகில் எதிர்கொள்ள அணைந்தபொழுது,இராப்பொழுது திருவாலங்காட்டி லமர்ந்து திருநடனஞ் செய்தருளும் ஊர்த்ததாண்டவேசர் அருளிச்செய்த வகைகளை யெல்லாம் அவ்வடியார்களுக்குக் கூறியருளி மனமகிழப் பாடித்துதித்து, பெரியோர்கள் வசித்தற்கிடமாகிய அத்திருப்பதியை வணங்கி அவ்விடத்தி னின்று மெழுந்தருளித் திருப்பாசூரென்னுந் திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று. (௧0௧௧)

திருஞானசம்பந்தப்பிள்ளையார் தம்மை யெதிர்கொள்ளவந்த அடியார்களுக்கு ஊர்த்ததாண்டவேசர் சொப்பனத்தி லெழுந்தருளித் தரிசனங்கொடுத்து எம்மைப் பாட மறந்தனையோ வென்றருளினமையை அவர்களுக் கருளிச்செய்து திருப்பதிகம் பாடித் துதித்து, அப்பதியிற் செல்லாது வணங்கிப்போந்தனரென்க.

திருப்பாசூ ரணைந்தருளி யங்கு மற்றச் செழும்பதியோ ரெதிர்கொள்ளச் சென்று புக்குப், பொருப்பரையன் மடப்பாவை யிடப்பாகத்துப் புராதனர்வே யிடங்கொண்ட புனிதர் கோயில், விருப்பினுடன் வலங்கொண்டு புக்குத் தாழ்ந்து வீழ்ந்தெழுந்து மேனியெலா முகிழ்ப்ப நின்றே, யருட்கருணைத் திருவாள னுமஞ் சிந்தை யிடையாரென் றிசைப் பதிக மருளிச் செய்தார்.

(இ-ள்.) திருப்பாசூரென்னுந் திருப்பதியை யடைந்தருளி, அவ்விடத்தில் அந்தச் செழுமைபொருந்திய திருப்பதியி லுள்ளவர்கள் எதிர்கொள்ளும்படி சென்றுசேர்ந்து பர்வதராஜபுத்திரியாகிய உமாதேவியாரை இடப்பாகத்திலுடைய புராதனராகிய மூங்கிலிடங் கொண்டருளிய சிவபெருமானது திருக்கோயிலை விருப்பத்தோடு பிரதக்ஷணஞ் செய்து உள்ளே புகுந்தருளி பூமியில் விழுந்து வணங்கியெழுந்து திருமேனி முழுவதும் மயிர்ப்புளகங்கொள்ள நின்றருளித் திருவருட் பெருஞ்செல்வராகிய ஸ்ரீ பாசூர் நாதரது திருப்புகழை "சிந்தையிடையார்" என்று முதலெடுத்துத் திருப்பதிகம் பாடியருளினார்.—எ-று. (௧0௧௨)

---

திருப்பாசூர் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

சிந்தையிடையார்தலையின்மிசையார்செஞ்சொலார்
வந்துமாலைவைகும்போழ்தென்மனத்துள்ளார்

மைந்தர்மணாளரென்னமகிழ்வாரூர்போலும்
பைந்தண்மாதவிச்சோலைசூழ்ந்தபாசூரே.

ஞானமுணர்வான்காழிஞானசம்பந்தன்
தேனும்வண்டுமின்னிசைபாடுந்திருப்பாசூர்க்
கானமுறைவார்கழல்சேர்பாடலிவைவல்லா
ரூனமிலராயும்பர்வானத்திருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - பாசூர்நாதர், தேவியார் - பசுபதி நாயகியம்மை.

---

மன்னுதிருப் பதிகவிசை பாடிப் போற்றி வணங்கிப்போந் தப்பதியில் வைகி மாடு, பிஞ்ஞகர்தம் வெண்பாக்க முதலா யுள்ள பிறபதிகள் பணிந்தணைவார் பெருகு மன்பான்,முன்னிறைந்த திருவாய்மஞ் சனநீரா ட்டு முதல்வேடர் கண்ணப்ப நாய னாரை, யுன்னியொளிர் காளத்தி மலைவ ணங்க வுற்றபெரு வேட்கையுட னுவந்து சென்றார்.

(இ-ள்.) நிலைபெற்ற திருப்பதிகத்தை இசைபொருந்தப் பாடித் துதித்து வணங்கிப் புறத்திற்சென்று, அத்திருப்பதியிலெழுந்தருளி, அதனருகிலுள்ள சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருவெண்பாக்க முதலிய மற்றத் திருப்பதிகளையும் வணங்கி யெழுந்தருளுந் திருஞானசம்பந்தப்பிள்ளையார் மிக்கஅன்பினால், முன்பு, திருவாயில் நிறைந்த திருமஞ்சனநீரை ஸ்ரீ காளத்தி நாதருக்கு அபிஷேகஞ் செய்தருளிய முதன்மைபொருந்திய வேடர்குலத்தி லவதரித்த கண்ணப்பநாயனாரைச் சிந்தித்து விளங்குகின்ற திருக்காளத்திமலையைத் தாம் வணங்க, பொருந்திய பெருவிருப்பத்தோடு மகிழ்ந்து சென்றருளினார்.—எ-று.

திருவெண்பாக்கம் என்பது, இக்காலத்துத் திருவிளம்பூதூர் என்று வழங்குகின்றது. (௧௦௪௩)

மிக்கபெருங் காதலுடன் றொண்டர் சூழ மென்புனனாட் டினையகன்று வெற்புங் கானுந், தொக்கபெரு வன்புலக்கா னடைந்து போகிச் சூலகபா லக்கரத்துச் சுடரு மேனி, முக்கண்முதற் றலைவனிட மாகி யுள்ள முகினெருங்கு காரிகரை முன்னர்ச் சென்று, புக்கிறைஞ்சிப் போற்றிசைத்தப் பதியில் வைகிப் பூதியரோ டுடன்மகிழ்ந்தார் புகலி வேந்தர்.

(இ-ள்.) சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அதிகரித்த பெருவிருப்பத்தோடு அடியார்கள் சூழ்ந்துவர, மேன்மைபொருந்திய நீர்வளமிக்க பாலிவடகரைநாட்டை யகன்று, மலைகளுங் காடுகளுநெருங்கிய பெரிய குறிஞ்சி நிலக்காட்டை யடைந்துசென்று, சூலத்தையும் கபாலத்தையுமணிந்த திருக்கரத்தையும், எரிபோல் விளங்குகின்ற திருமேனியையும், மூன்று கண்களையுமுடைய முதற் கடவு ளாகிய சிவபெருமானுக்கு இடமாகவுள்ள மேகங்கள் நெருங்கிய திருக்காரிகரை யென்னுந் திருப்பதியை யடைந்து திருக்கோயிலுட் புகுந்து (சிவபெருமானை)வணங்கித் துதித்து, அத்திருப்பதியில் வசித்தருளி விபூதியை யணிந்த அடியார்களோடு மகிழ்ந்தருளினார்.—எ-று.

காரிகரை யென்னுந் திருப்பதிக்குத் தனியே தேவாரப்பதிகமின்மையால், இது வைப்புத்தலங்களி லொன்று. (௧௦௧௪)

இறைவர்திருக் காரியகரை யிறைஞ்சி யப்பா லெண்ணில்பெரு வரைகளிரு மருங்கு மெங்கும், நிறையருவி நிரைபலவாய் மணியும் பொன்னும் நிறைதுவலை புடைசிதறி நிகழ்ப வாகி, யறைகழல்வா னவர்க்கிறைவன் குலிச வேற்றூ லற்றசிறை பெற்றவன்மே லெழுவ தற்குச், சிறகடித்துப் பறக்கமுயன் றுயர்ந்த போலுஞ் சிலைநிலத்தி லெழுந்தருளிச் செல்லா நின்றார்.

(இ-ள்) சிவபெருமான் வீற்றிருந்தருளிய திருக்காரிகரை யென்னுந்திருப்பதியை வணங்கி, அதற்கப்பால், அளவில்லாத பெரிய மலைகள் வழியி னிருபக்கங்களெங்கும் நிறைந்த அருவியாற்றின் வரிசைகள், பல வுடைத்தாய், மணிகளும் பொன்னும் நிறைந்த நீர்த்திவலைகளை யருகிற்சிந்திப் பெருகுதலுடைத்தாய், சப்திக்கின்ற வீரக்கழலையணிந்த தேவர்களுக் கிறைவனாகிய இந்திரன் தனது வச்சிராயுதத்தினால் அறுக்கப்பட்டு நீங்கிய சிறகைத் (தாம்) பெற்று, அவ்விந்திரன்மேல் போர்செய்ய வெழுதற்குச் சிறகுகளை யடித்துப்பறக்க முயற்சி செய்தாற்போலுமுள்ள குறிஞ்சிநிலத்தி லெழுந்தருளிச் செல்கின்றவராயினர்.—எ-று.

'அறைகழல் வானவர்க்கிறைவன் குலிசவேற்றூ லற்றசிறை' என்றது, பூர்வத்தில் மலைகள் சிறகுகளைப்பெற்றுப் பறந்துசென்று தேசங்களின்மீதிறங்கி அங்குள்ள உயிர்களையழிக்க, அதனையுணர்ந்த இந்திரன் தனது வச்சிராயுதத்தால் அம்மலைகளின் சிறகுகளை யறுத்து வீழ்த்தினன். அதனை இமயமலையின் புத்திரனாகிய மைநாகபர்வதமுணர்ந்து கடலின் வீழ்ந்தழிந்தது. இந்திரன் அது நீங்கலாகிய மற்ற மலைகளின் சிறகுகளைச் சேதித்து உலகத்திற்குள்ள துன்பத்தை யொழித்து வரைச்சிற கறிந்தோன் என்னும் பெயரைப்பெற்றனன்.

மலைகளி னிருபக்கங்களிலும் பல அலைகள் நிறைந்து திவலைகள் சிதறிவீழ்தல், அவ்விந்திரனால் அறுக்கப்பட்ட சிறையைப் பெற்று அவன்மேற் போர்செய்ய வெழுங் காட்சிபோன் றிருந்தனவென்பார் 'அவன்மே லெழுவதற்குச் சிறகடித்துப் பறக்கமுயன் றுயர்ந்தபோலும்' என்று கூறினார். (௧௦௧௫)

மாதவர்க ணெருங்குகுழாம் பரந்து செல்ல மணிமுத்தின் பரிச்சின்னம் வரம்பின் றாகப், பூதிநிறை கடலணைவ தென்னச் சண்பைப் புரவலனா ரெழுந்தருளும் பொழுது சின்னத், தீதிலொலி பலமுறையும் பொங்கி யெங்குந் திருஞான சம்பந்தன் வந்தா னென்று, நாதநிறை செவியினவாய் மாக்க ளெல்லா நலமருவு நினைவொன்றாய் மருங்கு நண்ண.

(இ-ள்.) அடியார்களது நெருங்கிய திருக்கூட்டங்கள் பரவிச் செல்லவும், அழகிய முத்துச்சின்னங்கள் அளவின்றி நெருங்கவும், விபூதியால் நிறைந்தவோர் சமுத்திரம் வந்தாற்போலச் சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளியபொழுது திருச்சின்னங்களின் குற்றமற்ற ஒலியானது பலதரமு மதிகரித்து எவ்விடங்களிலும் திருஞானசம்பந்தப்பிள்ளையா ரெழுந்தருளினாரென்று (தெரிவிக்கும்படி யூதுகின்ற) நாதத்தால் நிறைந்த காதை யுடையனவாய் மிருகங்களெல்லாம் நன்மைமிக்க தங்க ளெண்ணங்க ளொன்றுபட்டு அருகிற் சூழ—எ-று.

பரிச்சின்னமாவன—சங்கு, சாமரை, குடை, கொடி முதலியனவாம். பரித்தல்=தாங்குதல்.

திருஞானசம்பந்தன் வந்தானென் றொலிக்குந் திருச்சின்னங்களி னொலியைக் கேட்ட அஃறிணைப்பொருள்களாகிய விலங்குகளும் நன்மைமிக்கு மனவொருமைப்பட்டு அருகிலுற்றனவெனவே, உயர்திணைப்பொருள்களாகிய மக்கள் தேவர் முதலியோரும் விரும்பிச் சூழவந்தன ரென்பது சொல்லாமே யமையும்.

இதுமுதலிரண்டுபாடலுங்குளகம். (௩௦௪௬)

கானவர்தங் குலமுலகு போற்றவந்த கண்ணப்பர் திருப்பாதச் செருப்புத்தோய, மானவரிச் சிலைவேட்டை யாடுங் கானும் வானமறை நிலைபெரிய மாமுந் தூறு, மேனையிமை யோர்தாமு மிறைஞ்சி யேத்தி யெய்தவரும் பெருமையவா மெண்ணி லாத, தானமுமற் றவைகடந்து திருக்கா ளத்தி சாரவெழுந் தருளினார் சண்பை வேந்தர்.

(இ-ள்.) சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் வேடர்குலத்தில் உலகத்தா ரனைவருந் துதிக்கும்படி அவதரித்தருளிய கண்ணப்பநாயனார் தமது திருவடிகளி லணிந்த செருப்புத்தோயும்படி வலிமைபொருந்திய வரிந்துகட்டிய வில்வேட்டை யாடுகின்ற காடும், ஆகாயத்தை மறைக்கத்தக்க உயர்ந்த பெரிய மரங்களும், புதர்களும், தேவர்களும் வணங்கித் துதித்து அடைதற்கரிய பெருமையை யுடைய எண்ணிறந்தவிடங்களுமாகிய அவ்விடங்களை நீங்கித் திருக்காளத்திமலையைப் பொருந்த வெழுந்தருளினார்.—எ-று.

திருக்காளத்தித் திருவெல்லையில் தெய்வீகம்பொருந்திய பல விசேடதானங்க ளுண்டென்பதும், அவை மாலயன் முதலிய தேவர்களாலும் அடைதற்கரியனவென்பதுந்தோன்ற, 'ஏனையிமை யோர்தாமு மிறைஞ்சி யேத்தி யெய்தவரும் பெருமையவா மெண்ணி லாத தானமும்' என்று கூறினார். (௩௦௪௭)

அம்பொன்மலைக் கொடிமுலைப் பால்குழைத்த ஞானத் தமுதுண்ட பிள்ளையா ரணைந்தா ரென்று, செம்பொன்மலை வில்லியார் திருக்காளத்தி சேர்ந்த திருத் தொண்டர்குழா மடைய வீண்டிப், பம்புசடைத் திருமுனிவர் கபாலக் கையர் பலவேடச் சைவர்குல வேடர்மற்று, மும்பர்தவம் புரிவாரப் பதியி லுள்ளோ ருடன்விரும்பி யெதிர்கொள்ள வுழைச்சென் றுற்றார்.

(இ-ள்.) அழகிய இமயபர்வதராசபுத்திரியாகிய உமாதேவியார் திருமுலைப்பாலோடு குழைத்த சிவஞானமாகிய அமுதத்தை யுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளினாரென்று, சிவந்த பொன்மயமாகிய மேருவை வில்லாகவுடைய ஸ்ரீகாளத்திநாத ரெழுந்தருளிய திருக்காளத்தி யென்னுந் திருப்பதியில் வாழும் அடியார் திருக்கூட்டங்கள் ஒருங்குகூடி, நெருங்கிய சடைமுடியை யுடைய சைவமுனிவர்களும், கபாலத்தை யேந்திய கையையுடைய காபாலிகளும், பலவாகிய மாவிரதவேடம் - வைரவவேடம் பூண்ட சைவர்களும், வேடர்குலத்தி லுயர்ந்தவர்களும், அவர்க ளன்றி, அம்மலையின்மேல் தவஞ்செய்கின்றவர்களும் அத் திருப்பதியி லுள்ளாருடன் விரும்பி யெதிர்கொள்ளும்படியாக அத் திருப்பதியினுள்ளே சென்றருளினார்.—எ-று.

தொண்டர்குழாம் ஈண்டி திருமுனிவர், கபாலக்கையர், பலவேடச்சைவர், வேடர், தவம்புரிவார், அப்பதியினுள்ளோராகிய இவருடன் விரும்பி யெதிர்கொள்ளப் பிள்ளையார் சென்றுரெனக் கூட்டுக. (௧0௧அ)

திசையனைத்து நீற்றினொளி தழைப்ப மண்மேற் சிவலோக மணைந்ததெனச் சென்றபோது, மிசைவிளங்கு மணிமுத்தின் சிவிகை நின்றும் வேதபா ரகரிழிந்து வணங்கி மிக்க, வசைவில்பெருந் தொண்டர்குழாந் தொழுது போற்றி யரவெனுமோ சையிலண்ட நிறைப்ப வன்பா, லிசைவிளங்குந் தமிழ்விரகர் திருக்கா ளத்தித் திருமலையிம் மலைகளில்யா தென்று கெட்டார்.

(இ-ள்.) திக்குகளி லெல்லாம் விபூதியி னொளிதழைக்க உலகத்தில் சிவலோகமடைந்தது போல அத்திருப்பதியி லுள்ளவர்க ளெழுந்தருளும்பொழுது, மேலே விளங்குகின்ற அழகிய முத்துச்சிவிகையினின்றும், வேதத்தின் கரையையடைந்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் இறங்கி வணங்கி, கெடாத பெருமை பொருந்திய அடியார் திருக்கூட்டங்கள் வணங்கித் துதித்து அரகரவென்னு மோசையினால் விண்ணுலகத்தை நிறைக்க, அன்பினால் புகழ்விளங்குகின்ற திருநெறித் தமிழ்த்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் (அவ்வடியார்களை) இந்த மலைகளில் திருக்காளத்தித் திருமலை யாதென்று வினவியருளினார்.—எ-று.

திருத்தொண்டர்கள் தாங்க ளணிந்திருக்குந் திருவெண்ணீற்றின் வெள்ளொலி திக்குகள்தோறும் பரவத் திருஞானசம்பந்தப்பிள்ளையாரை எதிர்கொள்ளுங் காட்சியானது சிவபெருமானெழுந்தருளியிருக்கும் வெள்ளியங்கிரி திரண்டு வருதல்போன் றிருந்ததென்க. (௧0௧௯)

வந்தணைந்த மாதவத்தோர் வணங்கித் தாழ்ந்து மறைவாழ்வே சைவசிகா மணியே தோன்று, மிந்தமலை காளத்தி தம்மி லிகலிவழி பாடுசெய விறைவர்மேவு, மந்தமில்சீர்க் காளத்தி மலையாமென்ன வவனிமேற் பணிந்தெழுந்தஞ் சலிமேற் கொண்டு, சிந்தைகளி மகிழ்ச்சிவரத் திருவி ராகம் வானவர்க டானவரென் றெடுத்துச் செல்வார்.

(இ-ள்.) பிள்ளையாரை யெதிர்கொள்ளும்படி வந்தடைந்த மகத்தாகிய தவத்தையுடைய அடியார்கள் தாழ்ந்து வணங்கி, வேதங்களின் வாழ்வா யுள்ளவரே! சைவசமயத்திற்கு ஓர் சிரோரத்தினம் போன்றவரே! (இதோ நமக்குமுன்னே) தோன்றுகின்ற இந்த மலையானது பாம்புடன் யானையும் தங்களுக்குள்ளே பகைமைகொண்டு பூசை செய்யும்படி காளத்திநாத ரெழுந்தருளிய அளவற்ற சிறப்பினையுடைய திருக்காளத்தி மலையா மென்று கூற, உடனே பூமியின்மேல் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தெழுந்து திருக்கரங்களை அஞ்சலி கூப்பிச் சிரசின்மேல் வைத்துத் திருவுள்ளத்தில் களிப்புடன் மகிழ்ச்சி யுண்டாகத் திருவிராகத் திருப்பதிகத்தை "வானவர்க டானவர்கள்" என்று முதலெடுத்துப் பாடிக்கொண்டுசெல்வாராயினார்.—எ-று.

'காளனொ டத்திதம்மி லிகலிவழி பாடுசெய்ய' என்பதன் சரித்திரம்:— திரேதாயுகத்தின் முடிவிலே காளனென்னு மொரு பாம்பு தென்கயிலாயப்பெருமானை மாணிக்கங்களைக் கொண்டு திருமுடிமேல் சாத்தி அருச்சித்துவர, துவாபரயுகத்தின் முதலிலே, ஒரு யானையும் அன்போடு பொன்முகலிநதியில் முழுகித்

துதிக்கையினுல் திருமஞ்சன முகந்துவந்து, அப்பாம்பினு லணியப்பட்ட மணிக ளைக் கீழேதள்ளியபிஷேகஞ்செய்து, வில்வமுதலியபத்திரபுஷ்பங்களைத்திருமுடியி ற்சூட்டிச்சென்றது. மறுநாள்காலையில் பாம்புவந்து திருமுடியின்மேல்வில்வத்தை க்கண்டு வருந்தி, அந்தோ! எம்பெருமானது திருமுடியினமேல் யானிட்ட மாணி க்கங்களைச் சிதறி, இவ்விலைக்குப்பையை ஏற்றினுர் யாரோ வென்று இரங்கிப் பூ சித்துச்சென்றது. பின்னர் யானைவந்து அம்மணிகளைக்கண்டு யான்சூட்டிய தளிர் களையகற்றி, இக்கற்களையிட்டார் யாரோ வென்றுகலங்கி, அவற்றை யகற்றி, முன் போலப் பூசித்துச் சென்றது. அடுத்தநாள் காலையில் பாம்புவந்து அப்பத்திரபுஷ் பங்களைக் கண்டு வருந்தி, இம்மணிகளைச் சிதறினேர் என்பகைஞரோயாம். அவனைக் காணின் உடனே கடித்துக் கொல்வேன். இவவாறு செய்தது, எம தாண்டவருக் குச் சம்மதமோ? நாளை யெல்லாங் காண்பேனென்று பூசித்துச்செல்ல, பின்பு யா னை யடைந்துஅம்மணிகளைக்கண்டு, தனது துதிக்கையைப் பூமியில்மோதி விழுந்து புலம்பி, எம்பெருமானே! இது தேவரீருக்குத் திருவுள்ளமோ? இக்கற்களை எவ் வாறுபொறுத்தீர். தேவரீரும் பகைவர்பக்ஷமாயிருந்தால், எனக்குத் துணையாவார் யாவர். பகைவனையுங்காணேன். நாளையெவ்விதத்திலும் அவர்களைக்கொல்வேன்; அல்லது,சாவேனென்று உறுதிசெய்து கடவுளைப்பூசித்துச்சென்றது. பாம்பும் மறு நாள்காலையில் சிவபெருமானை யடைந்து திருமுடியில் சூட்டியிருக்கும் பூங்கொத் தில் உடலைச்சுருக்கி யொளித்திருந்தது. யானையும் காலையில்வந்துபார்த்துத் தான் சூட்டிய பத்திர புஷ்பங்கள் அவ்வாறே யிருக்கக்கண்டு களித்து, நதியில் முழுகித் திருமஞ்சன முகந்துவந்து, சிவபெருமான் திருமுடியில் முன்சூட்டிய பத்திர புஷ் பங்களைத் துதிக்கையால் தள்ள, அவற்றுள் மறைந்திருந்த பாம்பு அத்துதிக்கைப் புழைவழியே மத்தகத்திற் சென்று சூடைய, யானை சகிக்காமல் இடிபோல் முழங் கி, நீரைமுகந்து வீசிவீசிச்சோர்ந்து வருந்தி, இனி, என்னுடையபகையையுங் கொ ன்று நானும் இறப்பேனென்று, துதிக்கையை முடக்கிப் பூமியதிரும்படி பின் பெ யர்ந்து பாய்ந்து தலைபிளந்துவீழ்ந்திறந்தது. அதனுல் பாம்பும் உடல்நொறுங்கியது. அப்போது சிவபெருமான்உமாதேவியாரோடு ரிஷபவாகனத்தின்மேற் காட்சிகொ டுத்து, அவ்விரண்டிற்கும் சாரூபபதவியளித்தனர். எனபதாம். சீ-சிலந்தி, காளம்- பாம்பு, அத்தி-யானை, இம்மூன்றும் பூசித்துப் பேறுபெற்றமையால், அத்தலத்தி ற்குச் சீகாளத்தி யென்னும் பெயருண்டாகியது எனவறிக. (௧௦௨௦)

"பாயலை நெடுநீர் வேணிப் பண்ணவன் கயிலா யக்குச்
சீயொடு காள மத்தி யெனும்பெயர்ச் சிலந்தி பாம்பு
பாயிருங் களிறிம் மூன்றும் பரகதி பெற்ற வாற்ரு
லாயது சீகா ளத்தி யெனும்பெய ரன்று தொட்டே."—எனவருஞ் சீகாள த்திப்புராணத்தா னுணர்க.

---

## திருக்காளத்தி - திருவிராகம் - பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

வானவர்கடானவர்கள்வாதைபடவந்ததொருமாகடல்விடந்
தானமுதுசெய்தருள்புரிந்தசிவன்மேவுமலைதன்னைவினவி
லேனமினமானினொடுகிள்ளைதினைகொள்ளவெழிலார்கவணினுற்
கானவர்தமாமகளிர்கனகமணியிலகுகாளத்திமலையே.

வேயனையதோளுமையோர்பாகமதுவாகவிடையேறிசடைமேற்
றூயமதிசூடிசுடுகாடினடமாடிமலைதன்னைவினவில்
வாய்கலசமாகவழிபாடுசெய்யும்வேடன்மலராகுநயனங்
காய்கணையினாலிடந்தீசனடிகூடுகாளத்திமலையே.

காடதிடமாகநடமாடுசிவன்மேவுகாளத்திமலையை
மாடமொடுமாளிகைகணீடுவளர்கொச்சைவயமன்னுதலைவ
னாடுபலநீடுபுகழ்ஞானசமபந்தனுரைநல்லதமிழின்
பாடலொடுபாடுமிசைவல்லவர்கணல்லர்பரலோகமெளிதே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - ஸ்ரீகாளத்திநாதர்; தேவியார் - ஞானப்பூங்கோதையம்மை.

---

திருந்தியவின் னிசைவகுப்புத் திருக்கண் ணப்பர் திருத்தொண்டு சிறப்பித்துத் திகழப்பாடிப், பொருந்துபெருந் தவர்கூட்டம் போற்ற வந்து பொன்முகலிக் கரையணைந்து தொழுது போகி, யருந்தவர்க ளெம்மருங்கு மிடைந்து செல்ல வாளுடைய பிள்ளையா ரயன்மா றேடு, மருந்து வெளி யேயிருந்த திருக்கா ளத்தி மலையடிவா ரஞ்சார வந்து தாழ்ந்தார.

(இ ள்.) திருந்த மாகிய இனிய இசையோடு கூடிய திருப்பதிகத்தை ஸ்ரீ கண்ணப்பநாயனாரது திருத்தொண்டைச் சிறப்பித்து விளங்கப் பாடியருளி, தம்மைச் சூழ்ந்துள்ள மிக்க தவத்தினையுடைய அடியார் திருக்கூட்டங்கள் துதிக்க வெழுந்தருளிப் பொன்முகலி யாற்றினது கரையை யடைந்து வணங்கி அங்கு நின்று மெழுந்தருளி, அரியதவத்தினையுடைய அடியார்கள் எந்தப்பக்கங்களிலும் நெருங்கிவர, திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருமாலும் பிரமனும் அடியையும் முடியையுந் தேடும்படி நின்றருளிய சிவபெருமானாகிய ஓர் மருந்து வெளிப்பட்டெழுந்தருளியிருந்த திருக்காளத்தித்திருமலையினது அடிவாரத்தைப் பொருந்த வெழுந்தருளிச் சாஷ்டாங்கமாக வணங்கியருளினார்.—எ-று.

ஆன்மாக்களுடைய பிறவிப்பிணியை நீக்குதலின், 'அயன்மா றேடு மருந்து' என்று கூறினார். (௧௦௨௧)

தாழ்ந்தெழுந்து திருமலையைத் தொழுது கொண்டே தடஞ்சிலா தலசோபா னத்தா லேறி,வாழ்ந்திமையோர் குழாநெருங்கு மணிநீள் வாயின் மருங்கிறைஞ்சி யுட்புகுந்து வளர்பொற் கோயில், சூழ்ந்துவலங் கொண்டிறைவர் திருமுன் பெய்தித் தொழுததலை மேற்கொண்ட செங்கை போற்றி, வீழ்ந்தெழுவார் கும்பிட்ட பயன்காண் பார்போன் மெய்வேடர் பெருமானைக் கண்டு வீழ்ந்தார்.

(இ-ள்.) பூமியில் நமஸ்கரித் தெழுந்து திருக்காளத்தித் திருமலையைக் கைகூப்பி வணங்கிக்கொண்டே பெரிய கற்பாறை யாகிய சோபானத்தின்வழியே அம்மலையின்மீதேறி, தேவர்கூட்டங்கள் சிவானந்தப்பெருவாழ்வடைந்து நெருங்கிய அழகிய நீண்ட திருவாயிலினருகில் வணங்கி உள்ளே யெழுந்தருளி, உயர்ந்த பொன்மயமாகிய திருக்கோயிலைச் சூழ்ந்து வலமாகவந்து, ஸ்ரீகாளத்திநாதரது திருமுன்பு சென்று, அஞ்சலியாகச் சிரசின்மேற் குவித்த திருக்கரங்களோடுதுதித்து, பூமியில் விழுந்து வணங்கி யெழுகின்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார் தாம் சிவ

பெருமானை வணங்கிய வோர் பெரும்பயனைக் காண்பவனைப்போல உண்மையாகிய அன்பினையுடைய கண்ணப்பநாயனாரை அங்குத் தரிசித்துப் (பரவசராய்ப்) பூமியில் வீழ்ந்தருளினார்.—எ-று. (௧0௨௨)

உள்ளத்திற் றெளிகின்ற வன்பின் மெய்ம்மை யுருவினையு மவ்வன்பி னுள்ளே மன்னும், வெள்ளச்செஞ் சடைக்கற்றை நெற்றிச் செங்கண் விமலரையு முடன்கண்ட விருப்பும் பொங்கிப், பள்ளத்தி லிழிபுனல்போற் பரந்து செல்லப் பைம்பொன்மலை வல்லிபரிந் தளித்த செம்பொன், வள்ளத்தில் ஞானவா ரமுதமுண்டார் மகிழ்ந்தெழுந்து பலமுறையும் வணங்கு கின்றார்.

(இ-ள்.) அடியார்களது திருவுள்ளத்தில் தெளிவாக விளங்குகின்ற (மெய்யன்பனைத்தும் ஒருங்குதிரண்டாற்போன்ற ஸ்ரீகண்ணப்பநாயனாரது) மெய்ப்பத்திவடிவையும், அவ்வன்பினிடத்துக்கலந்து நிற்கும் கங்கைநதி பொருந்திய சிவந்த சடைமுடியையும் நெற்றிக்கண்ணையு முடைய ஸ்ரீ காளத்திநாதரையும் ஓரிடத்துத் தரிசித்த விருப்பமு மதிகரித்துப் பள்ளத்தில் விழுகின்ற நீர்போலப் பரவிப் பெருக, பசிய பொன்மயமாகிய பர்வதராஜபுத்திரியாகிய உமாதேவியார் விரும்பிக்கொடுத்தருளிய சிவந்த பொற்கிண்ணத்தில் சிவஞானமாகிய அரிய அமுதத்தை யுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் (பரவச நீங்கி) மகிழ்வுற் றெழுந்து பலதரம் வணங்குகின்றவ ராயினார்.—எ-று.

எத்தகைய சிறப்பினராயினும், அன்பின்றிச் செய்யின், சிவத்தை யடைதல் கூடாமையின், 'உள்ளத்திற் றெளிகின்ற வன்பு' என்றும், அவ்வன்பே திருவுருவமாக வுள்ளவர் எமது கண்ணப்பநாயனாரென்பார், 'அன்பின் மெய்ம்மை யுருவினை' என்றும், "அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலா - ரன்பே சிவமாவ தாருமறிகிலா - ரன்பே சிவமாவ தாரு மறிந்தபி - னன்பே சிவமா யமர்ந்திருப்பாரே" என்னுந் திருமந்திரப்படிஅவ்வன்பில் சிவபெருமான் கலந்து நிற்பரென்பார், 'அவ் வன்பினுள்ளே மன்னும்-வெள்ளச்செஞ்சடைக்கற்றை நெற்றிச் செங்கண் விமலரை' என்றும், அவ்வன்பையும் சிவத்தையும் பிரித்துக் காணுதலின்றி ஒருங்கு காண்டலே பெரும்பயனென்பார், 'உடன்கண்ட விருப்பும் பொங்கி' என்றுங் கூறினார். (௧0௨௩)

பங்கயக்கண் ணருவிநீர் பாயநின்று பரவுமிசைத் திருப்பதிகம் பாடியாடித், தங்குபெருங் களிகாதல் தகைந்து தட்பத் தம்பெருமான் கழல்போற்றுந் தன்மைநீட, வங்கரிதிற் புறம்போந்தங் கயன்மால் போற்ற வரியார்தந் திருமலைக்கீ ழணைந்திறைஞ்சிப், பொங்குதிருத் தொண்டர்மடங் காட்டவங்குப் புக்கருளி யினிதமர்ந்தார் புகலி வேந்தர்.

(இ-ள்.) தாமரைமலர்போன்ற திருக்கண்களினின்றும் ஆனந்தபாஷ்பமாகிய அருவிநீர் பெருக நின்று, பரவிய இசையினையுடைய திருப்பதிகம்பாடி ஆனந்தக் கூத்தாடித் திருவுள்ளத்தில் பொருந்திய களிப்புடன் பெருவிருப்பமானது தம்மை வலிந்து தடுக்க, தமது பெருமானாகிய ஸ்ரீ காளத்திநாதரது திருவடிகளைத் துதித்தலா லுண்டாகிய ஆனந்த மதிகரிக்க, அவ்வாலயத்தினின்றும் ஆராமையோடு புறத்திற் சென்று, அங்குத் திருமால் பிரமனென்னு மிருவரும் (அடியையு முடியையுந்) தேடித் துதித்தற்கரிய ஸ்ரீகாளத்திநாதரது திருமலையின்கீழ் அடைந்து வணங்கி, சிறந்த திருத்தொண்டர்கள் தாம் வசித்தற்குரிய திருமடத்தை

க்காட்ட, அத்திருமடத்தி னுட்புகுந்தருளிச் சீகாழித்தலைவராகிய திருஞானசம்ப ந்தப்பிள்ளையார் இனிமையோடு எழுந்தருளியிருந்தார்.—எ-று. (௯0௨௪)

யாவர்களு மறிவரிய விறைவன் றன்னை யேழுலகு முடையானை யெண்ணிலாத, தேவர்கடம் பெருமானைத் திருக்கா ளத்தி மலையின்மிசை வீற்றிருந்த செய்ய தேனைப், பூவலரும் பொழில்புடைசூழ் சண்பை யா ளும் புரவலனார் காலங்க டோறும் புக்குப், பாவலர்கொண் டடிபோற்றிப் பருகி யார்ந்து பண்பினிய திருப்பதியிற் பயிலுநாளில்.

(இ-ள்.) பூக்கள் மலர்கின்ற சோலைகள் சூழ்ந்த சீகாழித்தலைவராகிய திரு ஞானசம்பந்தப்பிள்ளையார், யாவர்களும் அறிதற்கரிய முதல்வரும், ஏழுலகங்க ளையுந் தமக்கு அடிமையாக வுள்ள அருளாளரும், அளவில்லாத தேவர்களுக் கெல்லாந் தலைவரா யுள்ளவரும், திருக்காளத்தித் திருமலையின்மேல் வீற்றிருந்தரு ளுஞ் சிவந்தகோற்றேன்போல்பவருமாகிய ஸ்ரீகாளத்திநாதனைத் தரிசித்தற் குரிய காலங்கள்தோறுஞ் சென்று தேவாரமாகிய மலர்களைக்கொண்டு திருவடிகளைத் து தித்து, சிவானந்தமாகியதேனைப்பருகி (அதனால்) நிறைவுற்று, இனிமை பொருந்தி ய அத் திருக்காளத்தித்திருப்பதியி லெழுந்தருளியிருக்கும் நாள்களில்.—எ-று.

"உணர்ந்தார்க் குணர்வரியோன் றில்லைச்சிற் றம்பலத் தொருவன்" என் னும் தமிழ் வேதப்படி, தன்னை யுணர்ந்தவர்களும் சிவமயமேயாகக் கலந்துநிற்ற லால், வேறுபிரித்துணர்தற் கருமையாலும், பாசவசத்தர்களாகிய திருமால்முதலி யயாவரும்அகங்காரமேலீட்டா லறிதற்கருமையாலும், 'யாவர்களு மறிவரியவிறை வன்றன்னை' என்றும், அத்தகையவிறைவன் சர்வலோகங்களையும் அநாதியே தன துடைமைப்பொருளாக வுடையவனாகலின், 'ஏழுலகுமுடையானை' என்றும், எண்ணில்கோடி யண்டங்கடோறு முள்ள தேவசமூகங்களனைத்திற்குந் தானொ ருவனே முதற்பெருங் கடவுளாக வீற்றிருந்து பேரருள் புரிபவனாகலின், 'எண் ணிலாத தேவர்கடம் பெருமானை" என்றும், அப்பெரியோனே ஆன்மாக்களின் பாசமோசனத்தின்பொருட்டு மலைமிசைக்கொழுந்தாய் வீற்றிருந்தருளித் தன்னை யடைந்தோருள்ளத் தமுதூறிச் சிவாநந்த மிக்கோங்கச் செய்தலின், 'திருக்கா ளத்திமலையின்மிசை வீற்றிருந்த செய்யதேனை' என்றுங் கூறினார்.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (௯0௨௫)

அங்கண்வட திசைமேலுங் குடக்கின் மேலு மருந்தமிழின் வழக்க ங்கு நிகழா தாகத், திங்கள்புனை முடியார்தந் தானந் தோறுஞ் சென்றுத மிழிசைபாடுஞ் செய்கை போல, மங்கையுடன் வானவர்கள் போற்றி சைப்ப வீற்றிருந்தார் வடகயிலை வணங்கிப்பாடிச், செங்கமல மலர்வாவித் திருக்கே தாரந் தொழுதுதிருப் பதிகவிசை திருந்தப் பாடி.

(இ-ள்.) அத்திருக்காளத்தியின் வடக்குத்திக்கிலும் மேற்குத்திக்கிலுமுள்ள தேசங்களில் அரிய தமிழ்வழக்கு வழங்காதிருக்க, சந்திரனை யணிந்த சடைமுடி யையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளிய திருப்பதிகள்தோறு மெழுந்தருளித் திருப்பதிகம் பாடியருளுந்தன்மைபோல, தேவர்கள் துதிக்க உமாதேவியாரோடு வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானது திருக்கயிலாயத்தை வணங்கித் திருப்பதிகம்

பாடி, செந்தாமரைமலர்கள் நிறைந்த தடாகங்கள்சூழ்ந்த திருக்கேதாரத்தை வணங்கி, இசைபொருந்த திருப்பதிகம் பாடியருளி.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கூ0௨கூ)

கூற்றுதைத்தார் மகிழ்ந்தகோ கரணம்பாடிக் குலவுதிருப் பருப்பதத்தின் கொள்கை பாடி, யேற்றின்மிசை வருவாரிந் திரன்றனீல பருப்பதமும் பாடிமகிழ்ந் திறைவர் தானம், போற்றியசொன் மலர்மாலை பிறவும் பாடிப் புகலியர்தம் பெருந்தகையார் புனித மாகு, நீற்றினணி கோலத்துத் தொண்டர் சூழ நெடிதுமகிழ்ந் தப்பதியி னிலவுகின்றார்.

(இ-ள்.) சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் (மார்க்கண்டேயர்பொருட்டு) இயமனை யுதைத்தருளிய மகாபலேசுர ரெழுந்தருளிய திருக்கோகரணத்தைப் பாடியருளி, விளங்குகின்ற ஸ்ரீசைலத்தின் சிறப்பைப் பாடியருளி, இடபவாகனத்தின்மே லெழுந்தருளும் ஸ்ரீநீலாசலேசரது திருஇந்திரநீல பருப்பதத்தையும் பாடி மகிழ்வுற்று, சிவபெருமானெழுந்தருளிய மற்றத் திருப்பதிகளையும் போற்றுகின்ற சொன்மலர்களாலாகிய திருப்பதிகமாலைகளாற் பாடியருளி, பரிசுத்தமாகிய விபூதியை யணிந்த அழகிய திருக்கோலத்தையுடைய அடியார்கள் சூழும்படி மிகவு மகிழ்ந்து அத்திருக்காளத்தித் திருப்பதியி லெழுந்தருளியிருந்தார்.—எ-று. (கூ0௨௭)

தென்றிசையிற் கயிலையெனுந் திருக்கா ளத்தி போற்றியினி தமர்கின்றார் திரைசூழ் வேலை, யொன்றுதிரு வொற்றியூ ருறைவார் தம்மை யிறைஞ்சுவது திருவுள்ளத் துன்னி யங்க, ணின்றமிழின் விரகருள் பெற்று மீள்வா ரெந்தையா ரிணையடியென் மனத்த வென்று, பொன்றரளங் கொழித்திழிபொன் முகலி கூடப் புனைந்ததிருப் பதிகவிசை போற்றிப் போந்தார்.

(இ-ள்.) இனிய தமிழ்த்தலைவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் தென்கயிலாச மென்று (சாஸ்திரங்களிற் புகழ்ந்து) கூறுகின்ற திருக்காளத்தித் திருப்பதியைத் துதித்து, இனிமையாக எழுந்தருளி யிருக்கின்றவர், அலைகள் சூழ்ந்த சமுத்திரக்கரையி லுள்ள திருவொற்றியூரென்னுந் திருப்பதியி லெழுந்தருளும் ஸ்ரீபடம்பக்கநாதரை வணங்குங்கருத்தைத் தமது திருவுள்ளத்திற்கருதி, அத்திருக்காளத்தியி னின்றும் (ஸ்ரீ காளத்தீசரது) திருவருளைப்பெற்று, அங்கு நின்று மெழுந்தருள்பவராய் " எந்தையாரிணையடி யென்மனத்துள்ளவே " என்று ஈற்றிலமைத்து, பொற்பொடிகளையும், முத்துக்களையும் (திரைக்கரங்களாற்) கொழித்துப் பெருகுகின்ற பொன்முகலிநதியையுஞ் சிறப்பித்தமைத்த ("சந்தமாரகில்" என்னு முதலையுடைய) திருப்பதிகத்தை இசைபொருந்தப் பாடித்துதித்து, அவ்விடத்தினின்று மெழுந்தருளினார்—எ-று.

தென்றிசையிற் கயிலை என்பதன் வரலாறு:— வசிட்ட முனிவர், விசுவாமித்திரமுனிவரது வஞ்சனையா லிறந்த சத்திமுனிவர் முதலிய தமது நூறு புத்திரர்களால் தாமடைந்த துன்பம் நீங்குதற்பொருட்டு, ஸ்ரீ கயாரணியத்தை யடைந்து, உணவாதிகளை யொழித்துப் பஞ்சேந்திரியங்களை யடக்கிச் சித்தத்தைச் சிவபெருமான் றிருவடியிற்பதித்து அருந்தவம்புரிய, சிவபெருமானும் அத்தவத்திற் கிரங்கி அம்முனிவரர்க்கு அருள்புரியத் திருவுள்ளங்கொண்டு,ஐந்தலையரவ வுருவத்தோடு

சிவலிங்கரூபமாய் மேற்குத்திருமுகமாகத் தரிசனந்தந்தளிக்க, முனிவரர் வீழ்ந்து வணங்கியெழுந்து பலவாறுதுதித்து நின்றனர். சிவபெருமான் முனிவரை நோக்கி, முனிவனே! "உனக்கு வேண்டிய வரங்கேள்" என்றருள, முனிவரர், எம்பெருமானே! தேவரீர் இத்தலத்திலேயே என்றுமெழுந்தருளி ஆன்மாக்களுக்கு இஷ்டசித்திகளையளிக்கவும், அடியேனுக்கு மெய்ஞ்ஞானோபதேசஞ்செய்தருளவும் வேண்டுமென்ன, பெருமான் அவ்வாறேயருள்புரிந்து, கல்லாலவிருக்ஷத்தடியிலே தக்ஷிணாமூர்த்தமாய் வீற்றிருந்து மெய்ஞ்ஞானோபதேசஞ் செய்ய, முனிவரர் தெளிந்து பேரின்புற்றனர். சிவபெருமான் அவ்வாறெழுந்தருளியிருத்தலால், உமாதேவியாரும் அவ்வெம்பெருமானது பிரிவாற்றாது, விநாயகர்-ஸ்கந்தர்-வீரபத்திரர்- வைரவர்-ஐயனார்- நந்திதேவர்-சிவகணங்கள் முதலியோர் தம்மைப் பின்றொடர்ந்துவர, அத்தலத்தையடைந்து, ஞானப்பூங்கோதையம்மையாரென்னுந் திருநாமத்தோடு தங்கியிருந்தனர். அதைக்கண்ட ஸ்ரீகயிலைமலையானது மேருமலையோடு தானும் அங்கு அடைந்து, தனக்குவடக்கே அம்மேருமலை தங்கும்படி தான் சந்நிதியின் கீழ்த்திசையில் தங்கியது. அக்காரணத்தால், அன்றுமுதல் அத் தலம் தென்கயிலை யென்னுந் திருநாமமுடையதாய் விளங்குகின்றது. எனவறிக. (கoஉ அ)

---

திருக்காளத்தி - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

சந்தமாரகிலொடுசாதிதேக்கம்மர
முந்துமாமுகலியின்கரையினிலுமையொடு
மந்தமார்பொழில்வளர்மல்குவண்காளத்தி
யெந்தையாரிணையடியென்மனத்துள்ளவே.

அட்டமாசித்திகளணைதருகாளத்தி
வட்டவார்சடையனைவயலணிகாழியான்
சிட்டநான்மறைவலஞானசம்பந்தன்சொ
லிட்டமாப்பாடுவார்க்கில்லையாம்பாவமே.

திருச்சிற்றம்பலம்.

---

மன்னுபுகழ்த் திருத்தொண்டர் குழாத்தினொடு மறைவாழ வந்தவர்தா மலையுங் கானு, முன்னணைந்த பதிபிறவுங் கடந்து போந்து முதல்வனா ருறைபதிகள் பலவும்போற்றிப், பன்மணிகள் பொன்வரன்றி யகிலுஞ் சந்தும் பொருதலைக்கும் பாலிவட கரையி னீடு, சென்னிமதி யணிவார்தந் திருவேற் காடு சென்றணைந்தார் திருஞான முண்ட செல்வர்.

(இ-ள்.) நிலைபெற்ற புகழையுடைய திருத்தொண்டர் திருக்கூட்டத்தோடு வேதங்களும் வாழும்படி அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் மலைகளையுங் காடுகளையும் முன்னேபொருந்திய மற்றவூர்களையுங் கடந்துசென்று, முதற்கடவுளாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளையும் (வணங்கித்) துதித்து, பல இரத்தினங்களையும் பொற்பொடிகளையும் வாரிக்கொண்டு, அகில்மரங்களையுஞ் சந்தனமரங்களையுங் கரையில்மோதி யலைக்கின்ற பாலியாற்றின் வடகரை

யிற்பொருந்திய சந்திரசேகரராகிய ஸ்ரீவேற்காட்டீசரெழுந்தருளிய திருவேற்காடென்னுந் திருப்பதியைச் சென்றடைந்தருளினார்; சிறந்த சிவஞானப்பாலமுதுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார்—எ-று.

திருஞானமுண்ட செல்வர் சென்றணைந்தார் எனக் கூட்டுக. (௧௦௨௯)

திருவேற்கா டமர்ந்தசெழுஞ் சுடர்பொற் கோயில் சென்றணைந்து பணிந்துதிருப் பதிகம் பாடி, வருவேற்று மனத்தவுணர் புரங்கள் செற்றார் வலிதாயம் வந்தெய்தி வணங்கிப் போற்றி, யுருவேற்றா ரமர்ந்துறையு மோத வேலை யொற்றியூர் கைதொழச்சென் றுற்றபோது, பெருவேட்கை தருவாழ்வு பெற்ற தொண்டர் பெரும்பதியோ ரெதிர்கொள்ளப் பேணி வந்தார்.

(இ-ள்.) திருவேற்காடு என்னுந் திருப்பதியிலெழுந்தருளிய செழியசோதி சொரூபராகிய ஸ்ரீவேற்காடீசரது பொன்மயமாகிய திருக்கோயிலை வந்தடைந்து அவ்வெம்பெருமானை வணங்கித் திருப்பதிகம் பாடியருளி, மாறுகொண்டுவந்த வஞ்சகமனத்தினையுடைய அசுரர்களது முப்புரங்களை யெரித்தருளிய ஸ்ரீவலிதாயநாதர் வீற்றிருந்தருளும் திருவலிதாயமென்னுந் திருப்பதியை வந்துசேர்ந்து வணங்கித் (திருப்பதிகம்பாடித்) துதித்து, அழகிய இடபவாகனத்தையுடைய ஸ்ரீபடம்பக்கநாதர் எழுந்தருளுகின்ற குளிர்ந்த கடற்கரையிலுள்ள திருவொற்றியூரை வணங்கும்படிச் சென்றடைந்தபொழுது, மிக்க நேசத்தாலுண்டாகிய சிவானந்தப்பெருவாழ்வைப்பெற்ற அடியார்களும், பெரிய அத்திருப்பதியில் வாழ்பவர்களும் (பிள்ளையாரை) எதிர்கொள்ளும்படி விருப்பமுற்றுவந்தார்கள்—எ-று.

வலிதாயம் என்பது, இக்காலத்துப் பாடி என வழங்குகின்றது. (௧௦௩௦)

மிக்கதிருத் தொண்டர்தொழு தணையத் தாமுந் தொழுதிழிந்து விடையவனென் றெடுத்துப் பாடி, மைக்குலவு கண்டத்தார் மகிழ்ந்த கோயின் மன்னுதிருக் கோபுரத்து வந்து தாழ்ந்து, தக்கதிருக் கடைக்காப்புச் சாற்றித் தேவர் தம்பெருமான் றிருவாயி லூடு சென்று, புக்கருளி வலங்கொண்டு புனிதர் முன்பு போற்றெடுத்துப் படியின்மேற் பொருந்த வீழ்ந்தார்.

(இ-ள்.) சிறந்த திருத்தொண்டர்கள் பிள்ளையாரை எதிர்கொண்டு வணங்கிவர, தாமும் அவர்களை வணங்கி முத்துச்சிவிகையினின்று மிறங்கி, "விடையவன்" என்று திருப்பதிகமுதலெடுத்துப்பாடியருளிக் காளகண்டராகிய ஸ்ரீபடம்பக்கநாதரெழுந்தருளிய திருக்கோயிலினுள்ள திருக்கோபுரத்தின்கண் வந்து வணங்கிச் சிறந்த திருக்கடைக்காப்புப் பாடியருளித் தேவர்கள் நாயகராகிய அவ்வெம்பெருமானது திருக்கோயிற்றிருவாயிலின்வழியே சென்று உள்ளே புகுந்து பிரதக்ஷணஞ் செய்து, பரிசுத்தராகிய அவ்வெம்பெருமான் திருமுன்பு துதித்துப் பூமியில் பொருந்தும்படி சாஷ்டாங்கமாக வணங்கியருளினார்—எ-று. (௧௦௩௧)

---

### திருவொற்றியூர் - பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

**விடையவன்விண்ணுமண்ணுந்தொழநின்றவன்வெண்மழுவாட்**
**படையவன்பாய்புலித்தோலுடைகோவணம்பல்கரந்தைச்**

சடையவன்சாமவேதன்சசிதங்கியசங்கவெண்டோ
டுடையவன்றூனமில்லியுறையுமிடமொற்றியூரே.

ஒண்பிறைமல்குசென்னியிறைவன்றுறையொற்றியூரைச்
சண்பையர்தந்தலைவன்றமிழ்ஞானசம்பந்தன்சொன்ன
பண்புனைபாடல்பத்தும்பரவிப்பணிந்தேத்தவல்லார்
விண்புனைமேலுலகமவிருப்பெய்துவர்வீடெளிதே.

சுவாமிபெயர் - **மாணிக்கத்தியாகர்**; தேவியார் - **வடிவுடையம்மை.**

படம்பக்கநாதர் எனவும், பலகைநாதர் எனவும், அத்தலபுராணத்திற் கூறு கின்றது.

---

பொற்றிரள்கள் போற்புரிந்த சடையார் தம்பாற் பொங்கியெழுங் காதன்மிகப் பொழிந்து விம்மிப், பற்றியெழு மயிர்ப்புளக மெங்கு மாகிப் பரந்திழியுங் கண்ணருவி பாய நின்று, சொற்றிகழுந் திருப்பதிகம் பாடி யேத்தித் தொழுதுபுறத் தணைந்தருளித் தொண்ட ரோடு மொற்றிநகர் காதலித்தங் கினிதுறைந்தா ருலகுய்ய வுலவாத ஞான முண்டார்.

(இ-ள்.) பொற்கம்பிகளின் திரட்சிபோன்ற முறுக்காகிய சடைமுடியையுடைய சிவபெருமானிடத்தில் அதிகரித்தெழுகின்ற பெருவிருப்பமானது மிகுதியாகப் பெருகி, பொருந்தி யெழுகின்ற மயிர்ப்புளகம் திருமேனி முழுவதும் பரவிச் சொரிகின்ற ஆனந்தக்கண்ணீர்பாயும்படிநின்று, நல்லசொற்கள் விளங்குகின்ற திருப்பதிகம் பாடித்துதித்துவணங்கி, அடியார் திருக்கூட்டத்தோடும் புறத்திற்சென்றருளி, உலகத்தார் கடைத்தேறும்பொருட்டுக் கெடாத சிவஞானப்பாலுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவொற்றியூரைவிரும்பி அங்கு இனிமையோடு மெழுந்தருளியிருந்தார்—எ-று. (௧௦௩௨)

### வேறு.

இன்ன தன்மையிற் பிள்ளையா ரிருந்தன ரிப்பாற்
பன்னு தொலபுகழ்த் திருமயி லாபுரிப் பதியின்
மன்னு சீர்ப்பெரு வணிகர்தந் தோன்றலார் திறந்து
முன்ன மெய்திய தொன்றினை நிகழ்ந்தவா மொழிவாம்.

(இ-ள்.) இவ்வாறு திருஞானசம்பந்தப்பிள்ளையா ரெழுந்தருளியிருந்தனர்; இதன்மேல், யாவரும் சிறப்பித்துச் சொல்லுகின்ற பழமையாகிய புகழையுடைய திருமயிலாபுரியென்னுந் திருப்பதியில் நிலைபெற்ற சிறப்பினையுடைய பெரியவைசியர் குலத்தலைவராகிய சிவநேசசெட்டியாரிடத்து முன்னம் நடந்த ஒரு சரித்திரத்தை நடந்தவண்ணம் ஈண்டுக் கூறுகின்றோம்—எ-று.

இச்செய்யுள் புராணிகர் கூற்று. (௧௦௩௩)

அருநி தித்திறம் பெருக்குதற் கருங்கலம் பலவும்
பொருக டற்செலப் போக்கியப் பொருட்குவை நிரப்ப
வருமரக்கல மனைப்படப் பணைக்கலா நிரைக்கு
மிருநி திப்பெருஞ் செல்வத்தி னெல்லையில் வளத்தார்.

(இ-ள்.) அருமையாகிய பொன்மணிமுதலிய பொருட்பகுதிகளை விருத்திசெய்வதற்கு அரிய பல மரக்கலங்களையும் அலைவீசுகின்ற சமுத்திரத்திற் செல்லும்

படி விட்டு, அதனால் விருத்தியாகிய திரவியத்தினது குவையல்கள் நிரம்பும்படி, தீவாந்தரங்களினின்றும் வருகின்ற மரக்கலப்பொருள்கள் தமது மனையிற் சேரும் படி பெரிய கடற்கரையில் வரிசையாக வைக்கப்படுகின்ற சங்கநிதி பதுமநிதிக்கொப்பான பெருஞ்செல்வத்தினாலுண்டாகிய அளவில்லாத பொருள்வளப்பமுடையவர்—எ-று.

மரக்கலங்கள் கரைநிரைக்குஞ் செல்வத்தின் வளத்தாரெனக் கூட்டுக. ()

தம்மை யுள்ளவா றறிந்தபின் சங்கரற் கடிமை
மெய்ம்மை யேசெயும் விருப்பினின் மிக்கதோ ரன்பாற்
பொய்ம்மை நீக்கிமெய்ப் பொருளிது வெனக்கொளு முள்ளச்
செம்மை யேபுரி மனத்தினர் சிவநேச ரென்பார்.

(இ-ள்.) தமது உயிரியல்பை உள்ளபடியே (தாம்பசுவென்றும், அநாதியே மலசம்பந்த முடையதென்றும், செயலற்றதென்றும், பசுபதியாகிய சிவபெருமானுக்குடைமைப்பொருளென்றும்) உணர்ந்தபின்பு, சிவபெருமானுக்கு அடிமைத்திறத்தை மெய்ம்மையாகச் செய்யும் விருப்போடு மிகுந்த பேரன்பினால், (உலககாரியங்களாகிய)பொய்ம்மையையொழித்து,முத்தியடைதற்குரிய மெய்ப்பொருள் சிவபெருமானை வணங்குதலே யென்று கருதியிருக்கின்ற செம்மையாகிய மனத்தினையுடையவர்; (அவர்யாரெனின்) சிவநேசசெட்டியாரென்பவர்.—எ-று.

பொய்ம்மைநீக்கி மெய்ப்பொருளிதுவெனக் கொளும் என்பதற்கு, பொய்ச் சமயநெறியை யொழித்துச் சைவநெறியாகிய இதுவே மெய்ப்பொருளென்று மேற்கொண்டொழுகும் என்றுரைப்பினும் பொருந்தும். (௧0௩௫)

கற்றை வார்சடை முடியினா ரடியவர் கலப்பி
னுற்ற செய்கையி லொழிவின்றி யுருகிய மனமும்
பற்றி லாநெறிப் பரசம யங்களைப் பாற்றுஞ்
செற்ற மேவிய சீலமு முடையராய்த் திகழ்வார்.

(இ-ள்.) கூட்டமாகிய நீண்ட சடைமுடியையுடைய சிவபெருமானது அடியார்கள் சேர்க்கையினால் பொருந்திய பணிவிடைகளில் குறைவின்றி உருகிய மனமும், தமக்கென்று ஒரு உறுதியில்லாத மார்க்கமாகிய சமணமுதலிய புறச்சமயங்களைக் கெடுக்கின்ற வீரம்பொருந்திய நல்லொழுக்கத்தையு முடையவராய் விளங்குகின்றவர்—எ-று. (௧0௩௬)

ஆன நாள்செல வருமறைக் கவுணியர் பெருமான்
ஞான போனக நுகர்ந்ததும் நானில முய்ய
வேனை வெஞ்சமண் சாக்கிய மிழித்தழித் ததுவு
மூன மில்புக ழடியர்பாற் கேட்டுவந் துளராய்.

(இ-ள்.) அவ்வாறு அன்புசெய்து வருகின்ற நாள்கள் பலசெல்ல, அரிய வேதங்களை யுணர்ந்த கவுணியர் குலத் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் (உமாதேவியார்கொடுத்தருளிய) சிவஞானப்பாலமுதுண்டருளிய சங்கதியையும், பெரிய உலகத்தார் கடைத்தேறும்பொருட்டுக் கொடிய சமணரையும், புத்தரையும் இழிவுசெய்து அழித்த தன்மையையும், குற்றமற்ற புகழையுடைய அடியார்களிடத்துக் கேள்வியுற்று மனமகிழ்ச்சியடைந்தவராய்—எ-று.

'கேட்வேந்துள்ளார்' என்றும் பாடம். நானிலம்=நான்குவகையாகப்பிரிந்துள்ள நிலம், எனினு மாம்.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௧௦௩௭)

செல்வ மல்கிய சிரபுரத் தலைவர்சே வடிக்கீ
ழெல்லை யில்லதோர் காதலி னிடையறு வுணர்வா
லல்லு நண்பக லும்புரிந் தவரருட் டிறமே
சொல்ல வுஞ்செயல் கேட்கவுந் தொழிலின ரானார்.

(இ-ள்.) பலவகைச்செல்வங்கள் நிறைந்த சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது சிவந்த திருவடியில் அளவில்லாத பெருவிருப்போடு நீங்காத பேருணர்ச்சியினால், இரவும் பகலும் அவரது திருவருளின் திறத்தையே விரும்பி வாயாற்சொல்லவும், அவரது செயல்களைக் (கண்டோர் சொல்லக்) காதாற்கேட்கவுமாகிய தொழிலுடையவராயினார்—எ-று. (௧௦௩௮)

நிகழு மாங்கவர் நிதிப்பெருங் கிழவனின் மேலாய்த்
திகழு நீடிய திருவினிற் சிறந்துள ராகிப்
புகழு மேன்மையி னுலகினிற் பொலிந்துளா ரெனினு
மகவி லாமையின் மகிழ்மனை வாழ்க்கையின் மருண்டு.

(இ-ள்.) இவ்வாறு ஒழுகும் அச்சிவநேசசெட்டியார், செல்வத்தில் குபேரனைப்பார்க்கிலும் அதிகப்பட்டு விளங்குகின்ற மிக்கசெல்வத்தால் சிறந்தவராய், யாவரும் புகழும் மேன்மையோடு உலகத்தில் சிறந்திருந்தா ராயினும், புத்திரனில்லாமையினால் தாம் விரும்பிய இல்வாழ்க்கை நிலையில் மனமயங்கி—எ-று.

மகப்பேறில்லார்க்கு மற்றைப்பேறிருந்துஞ் சிறிதும் பயனின்றென்பதும், அஃதொன்றே இல்லறத்திற் கின்றியமையாப் பெரும்பேறென்பதுங் கருதித் துன்புற்று மயங்கினாரென்பார், 'மகவிலாமையின் மகிழ்மனை வாழ்க்கையின்மருண்டு' என்று கூறினார். இதனை,

"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற.

எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்" —எனவருந் திருக்குறளானும்,

"எத்திரு வுடைய ரேனு மின்கனி மழலைச் செவ்வாய்ப்
புத்திர னிலாதோ ரொன்றும் பொறியில ராயவற்றான்
மெய்த்தவம் புரிந்து மைந்தர்ப் பெறுவதே விழைவர் யாரு
மூய்த்தநன் மகவு மோரோழ் பான்மையா யுரைப்பர் மேலோர்."—என
வருங் காசிகாண்டத்தானு முணர்க.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௧௦௩௯)

அரிய நீர்மையி லருந்தவம் புரிந்தர னடியார்க்
குரிய வர்ச்சனை யுலப்பில செய்தவந் நலத்தால்
கரிய வார்குழன் மனைவியார் வயிறெனுங் கமலத்
துரிய பூமக ளனையவொரு பெண்கொடியுதித்தாள்.

(இ-ள்.) செய்தற்கரிய நன்னிலைமையினால் அருமையாகிய தவத்தைச்செய்து சிவனடியார்களுக்கு உரிய பூசனைகள் பலவற்றைச் செய்துவந்த அந்தப் புண்ணியபலத்தினால், கருமையாகிய கூந்தலையுடைய அவர் மனைவியாரது கர்ப்பமென்றுகூறும் தாமரைமலரினிடத்துத் திருமகளென்று சொல்லும்படி ஒரு சற்புத்திரியார் பிறந்தனர்.—எ-று. (௧௦௪௦)

நல்ல நாள்பெற வோரையி னலமிக வுதிப்பப்
பல்பெ ருங்கிளை யுடன்பெரு வணிகர்பார் முழுது
மெல்லை யிற்றன முகந்துகொண் டியாவரு முவப்ப
மல்ல லாவண மறுகிடைப் பொழிந்துள மகிழ்ந்தார்.

(இ-ள்.) சுபதினம்வர, இலக்கினத்தில் நன்மை மிகும்படி, அப்புத்திரியார் அவதரிக்கவும், பலசுற்றத்தாரோடு பெருமைபொருந்திய சிவநேசசெட்டியார் அளவற்ற திரவியங்களை வாரிக்கொண்டு, உலகமுழுவதும் யாவரும் மகிழும்படி வளப்பமிக்க ஆவணவீதியி லிறைத்து மனமகிழ்ச்சி யடைந்தார்—எ-று.

ஆவண மறுகு=கடை வீதி. பெருவணிகர் பார்முழுதும் யாவருமுவப்பத் தனமுகந்துகொண்டு மறுகிடைப்பொழிந்து உளமகிழ்ந்தாரெனக்கூட்டுக. (௧௦௪௧)

ஆறு சூடிய முடியினா ரடியவர்க் கன்பா
லீறி லாதபூ சனைகள்யா வையுமிகச் செய்து
மாறி லாமறை யவர்க்குவேண் டினவெலா மளித்துப்
பேறு மற்றிது வெனும்படி பெருங்களி சிறந்தார்.

(இ-ள்.) கங்கைநதியைத்தரித்த சடைமுடியையுடைய சிவபெருமானடியார்களுக்கு அன்போடு எண்ணிறந்த பல வழிபாடுகளையும் மிகுதியாகச் செய்து, (நன்னெறியினின்றும்) நீங்காத வேதியர்களுக்கு வேண்டும் பொருள்களனைத்துங் குறைவறக் கொடுத்து இதுவே பெரும்பேறென்று சொல்லும்படி மிக்க களிப்புற்றிருந்தார்—எ-று. (௧௦௪௨)

சூத நல்வினை மங்கலத் தொழின்முறை தொடங்கி
வேத நீதியில் விதியுளி வழாவகை விரித்த
சாத கத்தொடு சடங்குக டசதினஞ் செல்லக்
காதன் மேவிய சிறப்பினிற் கடிவிழா வயர்ந்தார்.

(இ-ள்.) பிரசவகாலத்திற் செய்கின்ற நற்கருமங்களை மங்கலகரமாக முறைப்படி தொடங்கி, வேதத்திற்கூறு முறைமையில் தவறாமல் விரித்துச் சொல்லப்பட்ட சாதகன்மத்தோடு கூடிய சடங்குகளைப் பத்துத்தினமளவும் விரும்பத்தக்க சிறப்போடு மங்கலவிழாவாகச் செய்தார்—எ-று.

'சாதகத்தொடு சடங்குகடசதினஞ்செல்ல, என்றது, குழந்தை பிறந்தவுடனே செய்யுஞ் செபதான வோமங்களேயன்றிச் சாதகன்ம முதலியனவும், ஆறாம்நாளிற் செய்யும் விக்கினசாந்தியும், ஒன்பதாநாளிற் செய்யும் பலியும், பத்தாநாளிற் செய்யும் அன்னதான முதலியனவுமாம். (௧௦௪௩)

யாவ ரும்பெரு மகிழ்ச்சியா லின்புறப் பயந்த
பாவை நல்லுறுப் பணிகிளர் பண்பெலா நோக்கிப்
பூவி னாளென வருதலிற் பூம்பாவை யென்றே
மேவு நாமமும் விளம்பினர் புவியின்மேல் விளங்க.

(இ-ள்.) யாவரும் மிக்க மனமகிழ்ச்சியினு லின்ப மடையும்படி தான் பெற்ற அப்புத்திரியாரது அழகு விளங்குகின்ற நல்ல அவயவங்களி னிலக்கணங்களையெல்லாம் பார்த்து, இலக்குமியைப்போல (அழகிற்சிறந்து) பிறத்தலினுல், (அது காரணமாகப்) பூம்பாவையாரென்று உலகத்தில் விளங்கும்படி பொருந்திய பெயரையுமிட்டார்—எ-று. (௧௦௪௪)

திங்க டோறுமுன் செய்யுமத் திருவளர் சிறப்பின்
மங்க லம்புரி நல்வினை மாட்சியிற் பெருக
வங்கண் மாநக ரமைத்திட வாண்டெதி ரணைந்து
தங்கு பேரொளிச் சீறடி தளர்நடை பயில.

(இ-ள்.) அழகிய இடமகன்ற பெரிய திருமயிலைப் பதியில் மாதந்தோறும் முற்பட்டுச்செய்கின்ற செல்வமிக்க சிறப்பினையுடைய மங்கலத்தை விளக்கும் நற்கருமங்கள் மாட்சிமையோடு மிகும்படி செய்விக்க, ஒரு வருடத்தில் (தாய் தந்தையர்களுக்கு) எதிரிலடைந்து மிக்க ஒளி பொருந்திய சிறிய பாதங்கள் தளர்ந்த நடையையடையும்படி—எ-று.

'திங்கடோறு முன்செய்யுமத் திருவளர் சிறப்பின் மங்கலம்புரி நல்வினை,' என்றது, குழந்தைபிறந்த ஒருவருஷம் வரையில் மாதந்தோறும்வருஞ் சன்மதினத்தில் செய்யும் இரட்சாபந்தனமும், முதல்மாதத்திற் செய்யுந் தொட்டிலேற்றும், மூன்றுமாதத்திற் செய்யுஞ் சூரியதரிசனமும், ஐந்தாமாதத்திற் செய்யும் உபநிஷ்கிரமணமும், ஏழாமாதத்திற் செய்யும் அன்னப்பிராசனமும் முதலியனவாம்.

இதுமுதல் ஐந்துபாடலுங் குளகம். (௧௦௪௫)

தளரு மின்னினங் குரமெனத் தமனியக் கொடியின்
வளரி ளந்தளிர்க் கிளையென மணிகிள ரொளியி
னளவி லஞ்சுடர்க் கொழுந்தென வணைவுறும் பருவத்
திளவ னப்பிணை யனையவர்க் கேழியாண் டெய்த

(இ-ள்.) தளர்கின்ற மின்னற்கொடியின் அங்குரம்போலவும், பொற்கொடியில் வளர்கின்ற இளந்தளிர்கள்பொருந்திய கிளைபோலவும், மாணிக்கத்தினின்றுமெழுந்த செவ்வொளியானது மிகுந்த அழகிய சுடர்க்கொழுந்துபோலவும், வளர்கின்ற மகப்பருவத்தையுடைய இளமைபொருந்திய அழகிய பெண்மான் கன்றையொத்த அப்புத்திரியாருக்கு ஏழுவருடஞ் செல்ல—எ-று.

அங்குரம்=முளை, வனப்பிணை என்பதற்கு, வனத்திலுள்ள பிணை, எனினும் பொருந்தும். (௧௦௪௬)

அழகின் முன்னிளம் பதமென வணிவிளக் கென்ன
விழவு கொண்டெழும் பேதைய ருடன்விளை யாட்டிற்
கழலொ டம்மனை கந்துக மென்றுமற் றினைய
மழலை மென்கிளிக் குலமென மனையிடை யாடி

(இ-ள்.) அழகினது முதன்மையாகிய ஓரிளம்பதமென்றுசொல்லவும், அழகிய மணிவிளக்கென்றுசொல்லவும், விழாக்கொண்டு வருஞ் சிறுபெண்களோடு விளையாடும்பொழுது, கழற்காயோடு அம்மனையும், பந்தும், என்று கூறுகின்ற இவை போல்வனவற்றை மழலை வார்த்தைகளைப் பேசுகின்ற மிருதுவாகிய கிளிக்கூட்டம்போலத் தமது வீட்டில் விளையாடி—எ-று. (௧௦௪௭)

பொற்றொ டிச்சிறு மகளிரா யத்தொடும் புணர்ந்து
சிற்றின் முற்றவு மிழைத்துட னடுந்தொழிற் சிறுசோ
றுற்ற வுண்டிகள் பயின்றொளி மணியூச லாடி
மற்று மின்புறு வண்டலாட் டயர்வுடன் வளர.

(இ-ள்.) பொன் வளையலை யணிந்த சிறுபெண்கள் கூட்டத்தோடு கலந்து மணற்சிறுவீடு முழுவதுங்கட்டி, அவர்களோடு சமைக்குந் தொழிலாலாகிய மணற் சிறுசோறுடன் பொருந்திய நால்வகையுண்டிகளையும் பழகி, ஒளிபொருந்திய இரத்தினவூஞ்சலில் விளையாடி, பின்னும் இன்பம்பொருந்திய பலவகை விளையாடல் புரிதலோடு வளரும்பொழுது—எ-று. (௧௦௪௮)

தந்தை யாருமத் தளிரிளங் கொம்பனு டகைமை
யிந்த வைகத் தின்மையா லின்புறு களிப்பு
வந்த சிந்தையின் மகிழ்ந்துமற் றிவண்மணம் பெறுவா
னந்த மில்லென தருநிதிக் குரியனென் றறைந்தார்.

(இ-ள்.) தந்தையாராகிய சிவநேசசெட்டியாரும், இளமைபொருந்திய பூங் கொம்புபோன்ற அந்தப் பூம்பாவையாரது நற்குண நற்செய்கைகள் இந்தவுலகத் தில் யாவரிடத்து மில்லாமையால், இன்பத்தால் களிப்படைந்த தமது மனதில் மகிழ்கூர்ந்து, இந்தப் புத்திரியைக் கலியாணஞ்செய்துகொள்ளுகிறவன் அளவில்லாத எனது அருமையாகிய பெருஞ்செல்வத்திற்கு உரிமையுடையவனாவானென்று சொன்னார்—எ-று. (௧௦௪௯)

ஆய நாள்களி லமண்பயில் பாண்டிநா டதனைத்
தூய ஞானமுண் டருளிய தோன்றலா ரணைந்து
மாய வல்லமண் கையரை வாதில்வென் றதுவு
மேய வெப்பிடர் மீனவன் மேலொழித் ததுவும்.

(இ-ள்.) அவ்வாறிருக்கும் நாள்களில் தூய்மையாகிய சிவஞானப் பாலமுதுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் சமணர்கள்வாழும் பாண்டிநாட்டை யடைந்து மாயத்தொழிலில்வல்ல அச்சமணர்களாகிய கீழ்மக்களை வாதில் வென்றதும், பொருந்திய சுரநோயைப் பாண்டியனிடத்தினின்று நீக்கியதும்—எ-று.

இதுமுதல் நான்குபாடலுங் குளகம். (௧௦௫௦)

நெருப்பி லஞ்சினார் தங்களை நீரிலோட் டியபின்
மருப்பு நீள்கழுக் கோலின்மற் றவரையேற் றியதும்
விருப்பி னூற்றிரு நீறுமீ னவற்களித் தருளிப்
பொருப்பு வில்லியார் சாதனம் போற்றுவித் ததுவும்.

(இ-ள்.) அனல்வாதத்தில் தோற்ற சமணர்களைப் புனலில் வாதுசெய்யும்படி உடன்படச்செய்தபின்பு, கொம்பினால் கூர்மையாகச்செய்யப்பட்டு நீண்டிருக்கின்ற கழுமரத்தில் அவர்களை யேற்றியதும், விருப்பத்தோடு திருவெண்ணீற்றைப் பாண்டியராசனுக்குக் கொடுத்தருளி, மேருமலையாகிய வில்லையுடைய சிவபெருமானது விபூதிருத்திராக்ஷ சாதனங்களை யாவருந் தரிசிக்கும்படிச் செய்ததும்—எ-று.

இன்ன வாறெலா மறிந்துளா ரெய்தியங் கிசைப்பச்
சொன்ன வர்க்கெலா மருநிதி தூசுட னளித்து

மன்னு பூந்தாரய் வள்ளலார் தமைத்திசை நோக்கிச்
சென்னி மேற்கரங் குவித்துவீழ்ந் தெழுந்துசெந் நின்று.

(இ-ள்.) இவ்வாறாகிய சரிதங்களனைத்தும் அறிந்தவர்கள் தம்மிடத்து வந்துசொல்ல, அச்சரிதங்களை வந்துசொன்னவர்களுக்கெல்லாம் மிகுந்தபொருள்களைப் பட்டாடையுடன் கொடுத்து, நிலைபெற்ற சீகாழித் தலைவராகிய திருஞான சம்பந்தப்பிள்ளையாரைத் திக்குநோக்கிச் சிரசின்மேல் இரண்டுகரங்களையுங் குவித்துப் பூமியில்வீழ்ந்து வணங்கியெழுந்து சேவையாகின்றார்—எ-று. (௧௦௫௨)

சுற்ற நீடிய கிளையெலாஞ் சூழ்ந்துடன் கேட்பக்
கற்ற மாந்தர்வாழ் காழிநா டுடையவர்க் கடியேன்
பெற்றெ டுத்தபூம் பாவையும் பெருகிய நிதியு
முற்று மென்னையுங் கொடுத்தனன் யானென்று மொழிந்தார்.

(இ-ள்.) சுற்றமாகிய மிக்க பந்துக்களெல்லாம் தம்மைச் சூழ்ந்துகொண்டு கேட்கும்படி, சகலசாஸ்திரங்களையுங் கற்றுணர்ந்த புலவர்கள் வாழ்கின்ற சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு அடியேன் பெற்றெடுத்த பூம்பாவையென்னும் புத்திரியையும், விளங்குகின்ற எனது செல்வத்தையும், என்னையும் யான் அவருக்குத் தத்தமாகக் கொடுத்தேனென்று மொழிவாராயினார்—எ-று.

எல்லை யில்பெருங் களிப்பினு லிப்பரி சியம்பி
முல்லை வெண்ணகை முகிழ்முலை யாருடன் முடியா
மல்கு செல்வத்தின் வளமையு மறைபவர் புகலிச்
செல்வ ரேயுடை யாரெனுஞ் சிந்தையான் மகிழ்ந்தார்.

(இ-ள்.) அளவில்லாத மிகுந்த சந்தோஷத்தினால் இவ்வாறு யாவருமறியக் கூறி, முல்லையரும்பு போலும் வெள்ளியபற்களையும், முகிழ்போன்ற ஸ்தனங்களையுமுடைய பூம்பாவையாருடன் அழியாத நிறைந்த செல்வத்தினது வளத்தையும் வேதியர்கள் வாழுகின்ற சீகாழியி லவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரே சொந்தமாக வுடையவரென்னுஞ் சிந்தையோடு மகிழ்ச்சியடைந்தார்—எ-று.
'மறைவளர்புகலி' என்றும் பாடம். (௧௦௫௪)

ஆற்று நாள்களி லணங்கனா கன்னிமா டத்தின்
பாற்ற டம்பொழின் மருங்கினிற் பனிமலர் கொய்வான்
போற்று வார்குழற் சேடிய ருடன்புறம் போந்து
கோற்றொ டித்தளிர்க் கையினான் முகைமலர் கொய்ய.

(இ-ள்.) இவ்வாறொழுகு நாட்களில் தெய்வப்பெண்ணை யொத்த அப்பூம்பாவையார் கன்னிமாடத்தின்கண்ணுள்ள பெரியசோலையின் பக்கத்திற் குளிர்ந்த மலர்களைக் கொய்யும்படி, தம்மைச்சூழ்ந்துவருகின்ற நீண்ட கூந்தலையுடைய தோழிமார்களுடன் புறத்தில் வந்து, அழகிய வளையலையணிந்த தளிர்போன்ற கரத்தினால் அரும்போடுகூடிய மலர்களைக் கொய்யும்பொழுது—எ-று. (௧௦௫௫)

இதுமுதல் மூன்று பாடலுங் குளகம்.

அன்ப ரின்புறு மார்வத்தி னளித்தபாங் கல்லாற்
பொன்பி றங்குநீப் புகலிகா வலர்க்கிது புணரா
தென்ப துட்கொண்ட பான்மையோ ரெயிற்றிளம் பணியாய்
முன்ப ணைந்தது போலவோர் முள்ளெயிற் றரவம்.

(இ-ள்.) சிவநேச செட்டியார் இன்பமிகுகின்ற விருப்பத்தினால் கொடுத்த தன்மையேயல்லாமல், பொன்மயமாக விளங்குகின்ற காவிரி நீர்சூழ்ந்த சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு (அவர் கருதியிருக்கும் எண்ணமாகிய) இது பொருந்ாதென்பதைத் தம்முட்கொண்ட ஓர்எண்ணமானது, பற்களையுடைய இளமைபொருந்திய ஒரு பாம்பாய் முன்னேவந்ததுபோல, ஒரு முட்போலும் பற்களையுடைய பாம்பானது.—எ-று. (௧௦௫௬)

மௌவன் மாதவிப் பந்தரின் மறைந்துவந் தெய்திச்
செவ்வி நாண்முகை கவர்பொழு தினின்மலர்ச் செங்கை
நவ்வி வாள்விழி நறுநுதற் செறிநெறி கூந்தற்
கொவ்வை வாயவண் முகிழ்விரல் கவர்ந்தது குறித்து.

(இ-ள்.) முல்லை மலர்களும் மல்லிகை மலர்களும் நிறைந்திருக்கும் பந்தலில் மறைந்துவந்து, அழகிய புதுமலர்களைக் கொய்யும்பொழுது, மலர்போலுஞ் சிவந்த கைகளையும், மான்போலும் ஒளிபொருந்திய விழிகளையும், நல்ல நெற்றியையும், நெருங்கி நெறித்த கூந்தலையும், கொவ்வைக் கனிபோலுஞ் வாயையுமுடைய அப்பூம்பாவையாரது முகிழ்போன்ற விரலைச்சுட்டிக் கடித்தது.—எ-று. (௧௦௫௭)

முகிழ் = மொக்கு; மலர்பறிக்கும்பொழுது விரல்கள் ஒருங்குசேர்ந்து குவிந்திருத்தலின், 'முகிழ்விரல்' என்று கூறினர்.

நாலு தந்தமு மென்புறக் கவர்ந்துநஞ் சுகுத்து
மேலெ ழும்பணம் விரித்துநின் றாடிவே றடங்க
நீல வல்விடந் தொடர்ந்தெழ நேரிழை மென்பூ
மாலை தீயிடைப் பட்டது போன்றுள மயங்கி.

(இ-ள்.) நாலு பற்களும் எலும்பைப்பொருந்தும்படிக்கடித்து விஷத்தைக் கக்கி மேலெடுத்தபடத்தை விரித்துநின்று ஆடி, பின்வேறோரிடத்தில் மறையவும் (அப்பாம்பினது) நீலநிறம்பொருந்திய கொடிய விஷமானது எலும்பைப்பற்றி மேற்கொண்டெழ, (அதனால்) நேர்மையாகிய ஆபரணங்களையணிந்த பூம்பாவையார் மிருதுவாகிய பூமாலையானது நெருப்பிற் பட்டாற்போல மனமயங்கி.—எ-று.

நாலுதந்த மாவன—காளி - காளாத்திரி - யமன் - யமதூதன் என்பன.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம்.

தரையில் வீழ்தரச் சேடியர் வெருக்கொண்டு தாங்கி
வரைசெய் மாடத்தி னுட்கொடு புகுந்திட வணிக
ருரையு முள்ளமு நிலையழிந் துறுதுயர் பெருகக்
கரையில் சுற்றமுந் தாமுமுன் கலங்கினர் கலுழ்ந்தார்.

(இ-ள்.) பூமியில் விழ, உடனே தோழிப்பெண்கள் அச்சமுற்றெடுத்து மலைபோன்றகன்னிமாடத்தினுள்ளேகொண்டு செல்ல, அதனை யுணர்ந்த சிவநேச செட்டியார் வார்த்தையும் மனமும் நிலைகலங்கித் துயரமதிக்க, அளவற்றசுற்றத்தாருந் தாமும் முன்னே கலக்கமடைந்து அழுதார்.—எ-று. (௧௦௫௮)

விடந்தொ லைத்திடும் விஞ்சையிற் பெரியரா மேலோ
ரடர்ந்த தீவிட மகற்றுதற் கணைந்துளா ரனேகர்

இடங்கொண் மந்திரந் தியானபா வகநிலை முட்டி
தொடர்ந்த செய்வினைத் தனித்தனித் தொழிலராய்ச் சூழ்வார்.

(இ-ள்.) விஷத்தை நீக்குகின்ற காருடவித்தையில் தேர்ந்தவர்களாகிய அறிஞர்கள் கொடிய விஷத்தை நீக்குதற்கு அநேகராய் வந்தவர்களும், உறுதியாகக்கொண்ட மந்திரங்களும், கருடத்தியான முதலியனவும், அவற்றின் பாவனைகளும், முட்டிநிலையுமாகிய ஒன்றோடொன்று தொடர்ந்துசெய்கின்ற விஷம்நீக்கும் வினையில் வெவ்வேறு தொழிலுடையவராய்ச் சூழ்வாராயினர்.—எ-று.

மந்திரங்களும், தியானமும், அம்மூர்த்தி பாவனையும், அதனோடு சேர்ந்த முட்டிநிலையும் ஒன்றோடொன்று சம்பந்தமுடைமையின், 'இடங்கொண் மந்திரந் தியான பாவக நிலைமுட்டி தொடர்ந்த செய்வினை' என்றும், அவை ஒவ்வொன்றும் பற்பல வகையாகப்பரவி நிற்றலின், 'தனித்தனித் தொழிலராய்ச் சூழ்வார்' என்றுங்கூறினர். முட்டிநிலையாவது,—விடவேகந் தலைக்கேறியபோது அது தணியும்பொருட்டு, அங்குஷ்ட விரலை விடுத்து நான்கு விரலையுமடக்கி, உச்சிமுதற் கடிவாயீறாகப்பரிசிப்பது; முட்டிநிலை என்பது-நிலைமுட்டி என மாறிநின்றது. ()

மருந்து மெண்ணில மாறில செய்யவும் வலிந்து
பொருந்து வல்விட மேழுவே கமுமுறை பொங்கிப்
பெருந்த டங்கண்மென் கொடியனு டலைமிசைப் பிறங்கித்
திருந்து செய்வினை யாவையுங் கடந்துதீர்ந் திலதால்.

(இ-ள்.) (மந்திரங்களேயன்றி) மருந்தும் அளவற்றவைகளை மாறுபாடில்லாமற் செய்யவும், வலியடைந்து நிற்குங் கொடிய விஷமானது ஏழுவேகமும் முறையே ஒன்றன்பின் னொன்றா யதிகரித்து,பெரிய விசாலமான கண்களையுடைய மிருதுவான பூங்கொடிபோன்ற பூம்பாவையாரது தலையில் சேர்ந்து திருத்தமான செயல்கள் யாவையுஞ் செய்தும் நீங்காதிருந்தது.—எ-று. (௧0௬௧)

ஏழு வேகமும் முறை பொங்குதலாவது — முதல்வேகத்தில் மூர்ச்சித்து வெயர்வரும்புதலும், இரண்டில் வெதுப்புதலும், மூன்றில் கண் எறிச்செருகுதலும், நான்கில் வாந்திசெய்தலும், ஐந்தில் கோழைகட்டுதலும், ஆறில் புத்திமயங்குதலும், ஏழில் தேகம் மரத்தலுமாம். இவ் வேழுவேகமுங் கடந்து, எட்டாம் வேகத்தில் உயிர் நீங்குமாதலின், அதன் முன்னுள்ள ஏழுவேகமும் ஒன்றன்பின் னொன்றாக முறையே பொங்கியதென வறிக.

ஆவி தங்குபல் குறிகளு மடைவில வாக
மேவு காருட விஞ்சைவித் தகரிது விதியென்
றோவும் வேலையி லுறுபெருஞ் சுற்றமு மலறிப்
பாவை மேல்விழுந் தழுதனர் படரொலிக் கடல்போல்.

(இ-ள்.) உயிர்தங்குதற்குரிய பலகுறிகளும் பொருந்தாதொழியவும், சிறப்புப்பொருந்திய காருடவித்தையை யுணர்ந்த மருத்துவர்கள் இது விதியேயென்று தாங்கள் செய்யும் அம்மந்திரவித்தையினின்றும் நீங்கும்பொழுது, பெரிய சுற்றத்தாரும் அப்புத்திரியின்மேல் விழுந்து மிக்க ஒலியையுடைய கடல்போலக் கதறியழுதார்கள்.—எ-று.

ஆவி தங்குபல் குறிகள்—நசியமுதலியவற்றா லுணர்தற்குரிய குறிகள். காருடவிஞ்சை வித்தகர் - கருடோகம்பாவித்துச் செய்யும் மாந்திரிகர். (௧0௬௨)

சிந்தை வெந்துய ருறுசிவ நேசருந் தெளிந்து
வந்த செய்வினை யின்மையில வையகத் துள்ளோ
ரிந்த வெவ்விட மொழிப்பவர்க் கீவனென் னுடைய
வந்த மினனிதிக் குவையெனப் பறையறை வித்தார.

(இ-ள்) மனதில் மிகக துனபமடைநதிருக்குஞ் சிவநேச செட்டியாரும் சிறிது துனபநீஙகித தாம செய்தற்குரிய செயல்கள் வேறிலலாமையால், இவவுலகத் துளளோாில இநதக்கொடிய விஷத்தை யொழிப்பவாகளுககு என னுடைய அளவிலலாத பொருட்குவைகளைக் கொடுப்பேனென றுபறையறைநது தெரிவித்தாா.—எ-று. (௧௦௬௩)

மூரசி யம்பலு மூனறுநா ளகவையின் முற்ற
வரசா பாயகுமொா ருடபட வவனிமே லுள்ள
கரையில கலவியோா யாவரு மணைந்துதங காட்சிப
புரையில செய்கையிற் றீர்நதிடா தொழிநதிடப் போனா.

(இ-ள்.) பறையறைந்து தெரிவிக்கவும், அன்று தொடஙகி மூன்றுநாள் வரையிலும அரசாகள் பக்கலிலுள்ள மருததுவர்களுட்பட உலகத்திலுள்ள அளவற்றகாருட முதலிய வித்தையில் வலலவாகள் யாவருமடைந்து, தாஙகள் விட நீங்கப்பார்க்கும் பாாவை யென்னும் குறறமறற செய்கையினால் தீராதொழியப் போனார்கள.—எ-று.

காட்சிப்புரையில் செய்கையாவது — கருடபாவகன் கண்ணாற் குறித்து நோக்குந் திருஷடியால் விஷம் நீஙகச்செய்தல். (௧௦௬௪)

சீரின் மன்னிய சிவநேசர் கண்டுள மயங்கிக்
காரின் மல்கிய சோலைசூழ் கழுமலத் தலைவர்
சாரு மவ்வள வுமமுட றழலிடை யடக்கிச்
சேர வென்பொடு சாமபலசே மிபபது தெளிவார்.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய சிவநேசசெட்டியார் அதனைப்பார்த்து மனமயங்கி, மேகங்களால் நிறைந்த சோலைசூழ்நத சீகாழிததலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் இஙகு எழுந்தருளி வருமளவும் இவவுடம்பை நெருப்பில் அடக்கி, எலும்போடு சாம்பலையும் ஒருசேரச் சேமித்து வைப்பதைத் தெளிவாராயினார்.—எ-று. (௧௦௬௫)

உடைய பிள்ளையார்க் கெனவிவ டனையுரைத் ததனு
லடைவு துன்புறு வதற்கிலை யாநமக் கெனறே
யிடரொ ழிந்தபின் னடக்கிய வெனபொடு சாம்பல்
புடைபெ ருத்தகும் பத்தினிற் புகப்பெய்து வைப்பார்.

(இ-ள்.) இப்புத்திரியை எனனை யடிமையாகவுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கெனறு யாவரு மறியச்சொன்னதனால, நமக்குத் துனபமடைதற்கு முறைமையில்லையென்று துன்பம் நீஙகினபினபு,நெருப்பினிடததுவேகச்செய்த எலும்புடன் சாம்பலை இடமகன்ற குடத்தில் இட்டுவைப்பாராயினார்.—எ-று.

புடைபெருத்த கும்பம் - தலைசிறுத்து அடியகன்ற குடம். (௧௦௬௬)

கன்னி மாடத்தின் முன்புபோற் காப்புற வமைத்துப்
பொன்னு முத்துமே லணிகலன் பூந்துகில் சூழ்ந்து

பன்னு தூவியின் பஞ்சணை விரைப்பள்ளி யதன்மேன்
மன்னு பொன்னரி மாலைக ளணிந்துவைத் தனரால்.

(இ-ள்.) கன்னிமாடத்தில் முன்புபோலத் தாதியர்கள் காவலிருக்கும்படி வைத்து, அதன்மேல் பொன்னையும்-முத்தையும்-ஆபரணங்களையும்-வஸ்திரங்களையும்-அலங்கரித்து, சிறந்த அன்னத் தூவியாலாகிய மெத்தையில் வாசனைப் பொருள்களாலமைத்த படுக்கையின்மேல் சிறப்புப்பொருந்திய பொன்னரிமாலைகளணிந்து வைத்தனர்.—எ-று. (௧0௬௭)

மாலை சாந்தொடு மஞ்சன நாடொறும் வழாமைப்
பாலி னேர்தரும் போனகம் பகல்விளக் கினைய
சாலு நன்மையிற் றருவன நாடொறுஞ் சமைத்தே
யேலு மாசெய யாவரும் வியப்பெய்து நாளில்.

(இ-ள்.) மாலை சந்தனத்தோடு திருமஞ்சனமிவைகள் நாள்தோறுங் குறையாமல், பாலால்சமைத்த உண்டியும், பகல் விளக்குமாகிய இவை போல்வனவற்றை மிக்க நன்மையினால் உரியவைகளை நாள்தோறுஞ்செய்து பொருந்தும்படிப்பூசிக்க, அங்குள்ளவர்கள் யாவரும் அதிசயமடைந்திருக்கும் நாள்களில.—எ-று. (௧0௬அ)

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம்.

சண்பை மன்னவர் திருவொற்றி யூர்நகர் சார்ந்து
பண்பு பெற்றநற் றொண்டர்க ளுடன்பணிந் திருந்த
நண்பு மிக்கநல வார்த்தையந் நற்பதி யுள்ளோர்
வண்பு கழ்ப்பெரு வணிகர்க்கு வந்துரை செய்தார்.

(இ-ள்.) சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவொற்றியூரென்னுந் திருப்பதியையடைந்து, சிவநேசமமைந்த நல்ல திருத்தொண்டர்களோடு ஸ்ரீ தியாகராசப்பெருமானை வணங்கி யெழுந்தருளியிருந்த நண்புமிகுந்த நலல வார்த்தையை அத்திருவொற்றியூரி லுள்ளவாகள் மிக்க புகழையுடைய சிறந்த சிவநேசசெட்டியாருக்கு வந்து சொன்னார்கள்.—எ-று. (௧0௬௯)

சொன்ன வர்க்கெலாந் தூசொடு காசுபொன் னளித்தே
யின்ன தன்மைய னெவொணு மகிழ்சிறந் தெய்தச்
சென்னி வாழ்மதி யார்திரு வொற்றியூ ரளவுந்
துன்னு நீணடைக காவணந் துகில்விதா னித்து.

(இ-ள்.) அவ்வாறு சொன்னவர்களுக்கெல்லாம் வஸ்திரங்களோடு மணிகளையும் பொன்னையுங் கொடுத்து, இவர் இத்தன்மையாரென்று சொல்லுதற்கரிய மகிழ்ச்சி யதிகரிக்க, திருமுடியில் சிறந்த சந்திரனையணிந்த சிவபெருமானெழுந்தருளிய திருவொற்றியூரென்னுந் திருப்பதியளவும், நெருங்கிய நீண்ட நடைப்பந்தலையும் வஸ்திரத்தாலாகிய மேற்கட்டியையுங் கட்டி.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௧0௭0)

மகர தோரணம் வண்குலைக் கமுகொடு கதலி
நிகரில் பல்கொடித் தாமங்க ளணிபெற நிரைத்து
நகர நீண்மறு கியாவையு நலம்புனை யணியாற்
புகரில் பொன்னுல கிழிந்ததா மெனப்பொலி வித்தார்.

(இ-ள்.) மகரதோரணங்களையும், வளம்பொருந்திய குலைகளையுடைய கமுகமரத்துடன் வாழைமரங்களையும், ஒப்பற்ற பல கொடிகளோடு மாலைகளையும் அழகுபெறவரிசையாக வைத்து, திருமயிலைப் பதியிலுள்ள நீண்ட வீதிகளையெல்லாம் நன்மைமிகுந்த அலங்காரத்தினால் குற்றமற்ற பொன்னுலகமானது பூமியில் வந்ததென்று சொல்லும்படி அலங்கரித்தார்.—எ-று. (௧௦௭௧)

இன்ன வாறணி செய்துபல் குறைவறுப் பேவி
முன்ன மொற்றியூர் நகரிடை முத்தமிழ் விரகர்.
பொன்ன டித்தலந் தலைமிசை புனைவனென் றெழுவா
ரந்ந கர்ப்பெருந் தொண்டரு முடன்செல வணைந்தார்.

(இ-ள்.) இவ்வாறு அலங்காரஞ்செய்து வேண்டிய பல குறைகளையும் முடிக்கும்படிப் பரிசனங்களை ஏவி, முன்னே திருவொற்றியூர் நகரிற் சென்று முத்தமிழ்த் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது பொன்போன்ற திருவடிகளைச் சிரசிற்சூடுவேனென்று எழுகின்ற அச்சிவநேசசெட்டியார் அத்திருமயிலைப் பதியிலுள்ள பெரிய திருத்தொண்டர்களும் தம்முடன் செல்லும்படி அத்திருவொற்றியூரை யடைந்தார்.—எ-று. (௧௦௭௨)

ஆய வேலையி லருமறைப் புகலியர் பிரானு
மேய வொற்றியூர் பணிபவர் வியனக ரசன்று
காயல் சூழ்கரைக் கடன்மயி லாபுரி நோக்கித்
தூய தொண்டர்தங் குழாத்தொடு மெதிர்வந்து தோன்ற.

(இ-ள்.) அக்காலத்தில் அரிய வேதங்களை யோதாதுணர்ந்த திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் பெருமைபொருந்திய திருவொற்றியூரை வணங்குகின்றவராய் இடமகன்ற அத்திருவொற்றியூரை நீங்கிக் கழிநிலஞ் சூழ்ந்த கடற்கரையிலுள்ள திருமயிலை யென்னுந் திருப்பதியை நோக்கிப் பரிசுத்தம்பொருந்திய அடியார் திருக்கூட்டத்தோடும் சிவநேசசெட்டியாருக்கு எதிரில் (முத்துச் சிவிகையில்) எழுந்தருளிவர.—எ-று. (௧௦௭௩)

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம்.

மாறில் வண்பெரு வணிகருந் தொண்டரு மலர்ந்த
நீறு சேர்தவக் குழாத்தினை நீளிடைக் கண்டே
யாறு சூடினார் திருமக னாரணைந் தாமொன்
றீறி லாததோர் மகிழ்ச்சியி னால்விழுந் திறைஞ்ச.

(இ-ள்.) மாறுபாடில்லாத வளம்பொருந்திய சிவநேசசெட்டியாரும் திருத்தொண்டர்களும் விளங்குகின்ற திருவெண்ணீறு சேர்ந்த அடியார் திருக்கூட்டங்களை நெடுந்தூரத்திற் கண்டு, கங்கைநதியைத் தரித்த சிவபெருமான் திருக்குமாரராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையா ரெழுந்தருளினாரென்று, முடிவில்லாத பெருமகிழ்ச்சியினால் பூமியில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்க.—எ-று. (௧௦௭௪)

காழி நாடருங் கதிர்மணிச் சிவிகையின் றிழிந்து
சூழி ரும்பெருந் தொண்டர்முன் றொழுதெழுந் தருளி
வாழி மாதவர் வணிகர்செய் திறஞ்சொலக் கேட்டே
யாழி சூழ்மயி லாபுரித் திருநக ரணைந்தார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் விளங்குகின்ற முத்துச்சிவிகையினின்றுங் கீழேயிறங்கித் தம்மைச் சூழ்ந்திருக்கின்ற பெருமை பொருந்திய திருத்தொண்டர்களுக்கு முன்னே வணங்கி யெழுந்தருளி, மிக்க தவசிரேஷ்டர்களாகிய அடியார்கள் சிவநேசசெட்டியார் செய்த காரியங்களைச் சொல்லக்கேட்டருளி, சமுத்திரஞ் சூழ்ந்த திருமயிலை யென்னுந் திருப்பதியை யடைந்தருளினர்.

வாழி - அசைநிலை.

அத்தி றத்துமுன் னிகழ்ந்தது திருவுளத் தமைத்துச்
சித்த மின்புறு சிவநேசர் தஞ்செயல் வாய்ப்பப்
பொய்த்த வெஞ்சமண் சாக்கியர் புறத்துறை யழிய
வைத்த வப்பெருங் கருணைநோக் கானமகிழ்ந் தருளி.

(இ-ள்.) அவ்வடியார் கூறியவாறு முன் நடந்ததைத் தமது திருவுள்ளத்திற் கருதி, மனதில் இன்பமடைந்திருக்குஞ் சிவநேசசெட்டியாரது எண்ணம் நிறைவேறவும், பொய்யாகிய தவவொழுக்கத்தையுடைய சமணர்பௌத்தர்களது புறச்சமயங்களழியவும் தமது திருவுள்ளத் தடைத்த பெருங்கருணைநோக்கத்தால மகிழ்கூர்ந்தருளி —எ-று. (௧௦௭௬)

இதுமுத லிரண்டுபாட்டுங் குளகம்

கங்கை வார்சடை யார்கபா லீச்சரத் தணைந்து
துங்க நீள்சுடர்க் கோபுரந் தொழுதுபுக் கருளி
மங்கை பங்கர்தங் கோயிலை வலங்கொண்டு வணங்கிச்
செங்கை சென்னிமேற் குவித்திடத் திருமுன்பு சேர்ந்தார்.

(இ-ள்.) கங்கைநதி பொருந்திய நீண்ட சடைமுடியையுடைய ஸ்ரீகபாலீசரெழுந்தருளிய கபாலீச்சரமென்னுந் திருக்கோயிலை யடைந்து, மிக்க ஒளி பொருந்திய திருக்கோபுரத்தை வணங்கி யுள்ளே புகுந்து, பார்வதிபாகராகிய அவ்வெம்பெருமானது திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்து வணங்கிச் சிவந்த திருக்கரங்கள் சிரசின்மேற் குவிய ஸ்ரீகபாலீசரது சந்நிதியில் வந்தருளினர்.—எ-று.

தேவ தேவனைத் திருக்கபா லீச்சரத் தமுதைப்
பாவை பாகனைப் பரிவுறு பண்பினிற் பரவி
மேவு காதலின் விரும்பிய விரைவினால் விழுந்து
நாவின் வாய்மையிற் போற்றினார் ஞானசம் பந்தர்.

(இ-ள்.) தேவர்கள் நாயகரும், திருக்கபாலீச்சரமென்னுந் திருக்கோயிலின் எழுந்தருளிய அமுதம்போல்பவரும், பார்வதிபாகருமாகிய ஸ்ரீகபாலீசரை அன்பு மிக்க நற்குணத்தோடு துதித்து, பெருவிருப்பினால் திருவுள்ளத்திற்கொண்ட விரைவினால் விழுந்து வணங்கித் தமது திருநாவினது மெய்ம்மையினால் துதித்தருளினர்; திருஞானசம்பந்தப்பிள்ளையார்.—எ-று.

ஞானசம்பந்தர் போற்றினர் எனக்கூட்டுக. (௧௦௭௮)

போற்றி மெய்யருட் டிறம்பெறு பரிவுடன் வணங்கி
நீற்றின் மேனியி னிறைமயிர்ப் புளகங்க ணெருங்கக்
கூற்ற டர்த்தவர் கோயிலின் புறம்புபோந் தருளி
யாற்று மின்னருள் வணிகர்மேற் செலவருள் செய்வார்.

(இ-ள்.) துதித்து, மெய்ம்மையாகிய திருவருளின் திறத்தை யடையும் விருப்பத்தோடு வணங்கி, திருவெண்ணீ றணிந்த திருமேனியில் நிறைந்த புளகாங்கித முண்டாக இயமனை யுதைத்தருளிய ஸ்ரீகபாலீசரது திருக்கோயிலின் புறத்திற் சென்றருளி, பொருந்திய திருவருளானது அச்சிவநேசசெட்டியாரிடத்திற்செல்ல, அருளிச்செய்வாராயினார்.—எ-று. (௧௦எ௬)

ஒருமை யுய்த்தநல் லுணர்வினீ ருலகவ ரறிய
வருமை யாற்பெறு மகளென்பு நிறைத்தவக் குடத்தைப்
பெருமை யானதந் நடம்புரி வார்பெருங் கோயிற்
றிருமதிற்புற வாயிலிற் கொணர்கென்று செப்ப.

(இ-ள்.) ஒருமைப்பட்ட நல்லறிவினை யுடையவரோ! உலகத்தாரறியும்படி நீர் அருமையாகப்பெற்ற புத்திரியினது எலும்பை நிறைத்துவைத்திருக்கும் அந்தக் குடத்தை மகாமசானத்தில் திருநடனம்புரிந்தருளும் ஸ்ரீ கபாலீசரது பெரிய திருக்கோயிலில் திருமதிலின் புறத்திலுள்ள சந்நிதிவாயிலிற் கொண்டுவருவீரென்று கூறியருள.—எ-று.

இதுமுதல் நான்குபாட்டுங் குளகம். (௧௦௮௦)

அந்த மில்பெரு மகிழ்ச்சியா லவனிமேற் பணிந்து
வந்து தந்திரு மனையினின் மேவியம் மருங்கு
கந்த வார்பொழிற் கன்னிமா டத்தினிற் புக்கு
வெந்த சாம்பலோ டென்புசேர் குடத்தைவே றெடுத்து.

(இ-ள்.) முடிவில்லாத பெருமகிழ்ச்சியினாலே பூமியில் விழுந்து வணங்கி, அவ்விடத்தினின்றுந் தமது திருமாளிகையிற் சென்று, அம் மாளிகையருகில் வாசனைபொருந்திய நீண்ட சோலைசூழ்ந்த கன்னிமாடத்திற் புகுந்து, வெந்த சாம்பலுடன் எலும்பும் சேர்ந்த குடத்தை வேறாக எடுத்து.—எ-று. (௧௦௮௧)

மூடு பன்மணிச் சிவிகையுட் பெய்துமுன் போதம்
மாடு சேடிய ரினம்புடை சூழ்ந்துவந் தணைய
வாடன் மேவினார் திருக்கபா லீச்சர மணைந்து
நீடு கோபுரத் தெதிர்மணிச் சிவிகையை நீக்கி.

(இ-ள்.) பல மணிகளாற் செய்து மூடிய சிவிகையினுள்ளே வைத்து முன்னே கொண்டுவரவும், அதனருகில் தாதியர் கூட்டம் புடைசூழ்ந்துவரவும், ஸ்ரீகபாலீசரது திருக்கபாலீச்சரத்தை யடைந்து உயர்ந்த திருக்கோபுரத்திற்கு எதிரே அவ்விரத்தினச்சிவிகையை நீக்கி யெடுத்து.—எ-று. (௧௦௮௨)

அங்க ணாளர்த மபிமுகத் தினிலடி யுறைப்பான்
மங்கை யென்புசேர் குடத்தினை வைத்துமுன் வணங்கப்
பொங்கு நீள்புனற் புகலிகா வலர்புவ னத்துத்
தங்கி வாழ்பவர்க் குறுதியா நிலைமைசா திப்பார்.

(இ-ள்.) அருட்கண்ணராகிய ஸ்ரீகபாலீசரது சந்நிதிக்கெதிரில் அடிபொருந்தும்படி பூம்பாவையாரது எலும்பு வைத்திருக்கின்ற குடத்தை வைத்துத் திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருமுன்னின்று வணங்க, அலை பொங்குகின்ற காவிரிநீர்சூழ்ந்த சீகாழித்தலைவராகிய பிள்ளையார் உலகத்தில் பொருந்தி

வாழ்கின்ற மனிதர்களுக்கு உறுதியைத்தரத்தக்கதாகிய நிலைமையைச் சாதிப்பா ராயினர்.—எ-று. (கO அரு)

மாட மோங்கிய மயிலைமா நகருளார் மற்று
நாடு வாழ்பவர் நன்றியில் சமயத்தி னுள்ளோர்
மாடு சூழ்ந்துகாண் பதற்குவந் தெய்தியே மலிய
நீடு தேவர்க ளேனையோர் விசும்பிடை நெருங்க.

(இ-ள்.) மாடங்க ளுயர்ந்த திருமயிலைமா நகரத்தி லுள்ளவர்களும், பின்னும் மற்ற நாடுகளில் வாழ்கின்றவர்களும், நன்மையற்றபுறச்சமயத்திலுள்ளவர்களும் அருகில் சூழ்ந்து காணும்படி வந்தடைந்து சூழவும், உயர்ந்த தேவர்களும் மற்றை கருட காந்தருவ சித்த வித்தியாதரர்முதலியோர்களும் ஆகாயத்தில் நெருங்கவும்—எ-று. (கO அசு)

தொண்டர் தம்பெருங் குழாம்புடை சூழ்தரத் தொல்லை
யண்டர் நாயகர் கோபுர வாயினே ரணைந்து
வண்டு வார்குழ லாளென்பு நிறைந்தமட் குடத்தைக்
கண்டு தம்பிரான் கருணையின் பெருமையே கருதி.

(இ-ள்.) சிறந்த அடியார்கூட்டங்கள் அருகிற் சூழும்படி பழமைபொருந்திய தேவர்கள் நாயகராகிய ஸ்ரீ கபாலீசரது திருக்கோபுரவாயிலின்முன்னேயடைந்து, வண்டுகள் மொய்க்கும் நீண்ட கூந்தலையுடைய பூம்பாவையாரது எலும்பு நிறைந்த மண்குடத்தைப் பார்த்தருளிச் சிவபெருமானது திருவருட் பெருமையைத் திருவுள்ளத்திற் கருதி.—எ-று. (கO அரு)

இந்த மாநிலத் திறந்துளோ ரென்பினைப் பின்னு
நந்து நன்னெறிப் படுத்திட நன்மையாந் தன்மை
யந்த வென்பொடு தொடர்ச்சியா மெனவரு ளோக்காற்
சிந்து மங்கமங் குடையபூம் பாவைபே செப்பி.

(இ-ள்.) இந்தப்பெரிய நிலவுலகத்திலே இறந்தவர்களுடைய எலும்பை உயர்ந்த நன்னெறியிற் சேர்க்க நன்மைவருந்தன்மை அந்த எலும்போடு தொடர்ச்சியாகும் என்று கிருபாநோக்கத்தினாலே சிதறிய எலும்பை அக்குடத்தின் கண்ணுடைய பூம்பாவையாரது பெயரைக்கூறி.—எ-று. (கO அசு)

மண்ணி னிறபிறந் தார்பெறும் பயன்மதி சூடு
மண்ண லாரடி யார்தமை யமுதுசெய் வித்தல்
கண்ணி னாலவர் நல்விழாப் பொலிவுகண் டார்த
லுண்மை யாமெனி னுலகர்முன் வருகென வுரைப்பார்.

(இ-ள்.) பூமியிலே மானுடப்பிறப்பு எடுத்தவர்கள் பெறுதற்குரியபயன், சந்திரனை யணிந்த சிவபெருமானது அடியார்களைத் திருவமுதுசெய்வித்தலும், கண்களினால் அவ்வெம்பெருமானது நல்ல திருவிழாப் பொலிவைத் தரிசித்து ஆனந்தமடைதலுமே யென்பது சத்தியமாயின், இவ்வுலகத்தார்முன்பு வரக்கடவாயென்று வுரைப்பாராயினர்.—எ-று.

மதிசூடு மண்ணலாரடியார்தமை யமுதுசெய்வித்தல் என்பதனை,

"தண்டரு சிந்தைத் தபோதனர் தாமகிழ்ந்
துண்டது மூன்று புவனமு முண்டது

கொண்டது மூன்று புவனமுங் கொண்டதென்
றெண்டிசை நந்தி யெடுத்திசைத் தானே.—என வருந் திருமந்திரத்தா னுணர்க. (கoஅஎ)

மன்னு வார்சடை யாரைமுன் றொழுதுமட் டிட்ட
வென்னு நற்பதி கத்தினிற் போதியோ வென்னு
மன்ன மெய்த்திரு வாக்கெனு மமுதமவ் வங்கந்
துன்ன வந்துவந் துருவமாய்த் தொக்கதக் குடத்துள்.

(இ-ள்.) நிலைபெற்ற நீண்ட சடைமுடியையுடைய ஸ்ரீகபாலீசரை முன்னே வணங்கி "மட்டிட்ட" என்னு முதலையுடைய திருப்பதிகத்தில், "போதியோ பூம்பாவாய்" என்று இறுதியில் முடித்த திருவாக்கென்னு மமுதமானது அவ்வெலும்பில் பொருந்த, அது உருவமாய்ப் பரிணமித்து அக்குடத்துட் சேர்ந்தது.—எ-று. (கoஅஅ)

ஆன தன்மையி னத்திருப் பாட்டினி னடைவே
போன வாயுவும் வடிவமும் பொலிவொடு நிரம்பி
யேனை யக்குடத் தடங்கிமுன் னிருந்தெழு வதன்முன்
ஞான போனகர் பின்சமண் பாட்டினை நவில்வார்.

(இ-ள்.) அவ்வெலும்பு உருவமாய்ப்பரிணமித்த முறைமையில், அத்திருப்பதிகப்பாட்டினடைவே. நீங்கிய பிராணவாயுவும், அவயவங்களும் அழகோடு நிரம்பப்பெற்று அக்குடத்தில் முன்னே யடங்கியிருந்து எழுவதற்கு முன்னே, திருஞானசம்பந்தப்பிள்ளையார் பின் சமணர்களைக்குறித்துப் பாடியருளுந் திருப்பாடலை யருளிச்செய்வாராயினர்.—எ-று. (கoஅகூ)

தேற்ற மில்சமண் சாக்கியத் திண்ணரிச் செய்கை
யேற்ற தன்றென வெடுத்துரைப் பாசொன்ற போது
கோற்றொ டிச்செங்கை தோற்றிடக் குடமுடைந் தெழுவாள்
போற்று தாமரைப் போதவிழ்ந் தெழுந்தனள் போன்றாள்.

(இ-ள்.) தெளிவில்லாத சமணசாக்கியர்களாகிய கீழ்மக்கள், யான்செய்யுமிச்செய்கை செய்துமுடித்தற்குரிய தன்றென்று எடுத்துக் குறைகூறுவார்களென்னுங் கருத்தால் அருளிச்செய்தபோது, அழகிய வளையலையணிந்த சிவந்த கைகள் வெளியே தோன்ற, அக்குடமுடைந்து எழுகின்ற பூம்பாவையார் யாவருந் துதிக்குந் தாமரையரும்பு மலர்ந்து எழுந்தருளிய இலக்குமியை யொத்தவராயினர்.—எ-று. (கoகூo)

எடுத்த பாட்டி னில் வடிவுபெற் றிருநான்கு திருப்பாட்
டடுத்த வம்முறைப் பன்னிரண் டாண்டள வணைந்து
தொடுத்த வெஞ்சமண் பாட்டினிற் றோன்றிடக் கண்டு
விடுத்த வேட்கையர் திருக்கடைக் காப்புமேல் விரித்தார்.

(இ-ள்.) "மட்டிட்ட" என்று தொடங்கிய திருப்பாடலில் உருவத்தைப் பெற்று, அடுத்த வேறெட்டுப்பாட்டிலே அம்முறையே பன்னிரண்டுவயதளவடைந்து, அதன்பின் பாடியருளிய கொடிய சமண்பாட்டில் வெளிப்பட்

வேரக்கண்டு, ஆசை யொழிந்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் பின் திருக்க டைக்காப்பை யருளிச்செய்தார்.—எ-று. (கOசுக)

---

திருமயிலை - பூம்பாவைத்திருப்பதிகம். பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

மட்டிட்டபுன்னையங்கானன்மடமயிலைக்
கட்டிட்டங்கொண்டான்கபாலீச்சரமமர்ந்தா
ஞெட்டிட்டபண்பினுருத்திரபல்கணத்தார்க்
கட்டிட்டல்காணுதேபோதியோபூம்பாவாய். (க)

மைப்பயந்தவொண்கண்மடநல்லார்மாமயிலைக்
கைப்பயந்தநீற்றான்கபாலீச்சரமமர்ந்தா
னைப்பசியோணவிழாவுமருந்தவர்க
டுய்ப்பனவுங்காணுதேபோதியோபூம்பாவாய். (உ)

வளைக்கைமடநல்லார்மாமயிலைவண்மறுகிற்
றுளக்கில்கபாலீச்சரத்தான்றொல்கார்த்திகைநாட்
டளத்தேந்திளமுலையார்தையலார்கொண்டாடும்
விளக்கீடுகாணுதேபோதியோபூம்பாவாய். (ந)

ஊர்திரைவேலையுலாவுமுயர்மயிலைக்
கூர்தருவேல்வல்லார்கொற்றங்கொள்சேரிதனிற்
கார்தருசோலைக்கபாலீச்சரமமர்ந்தா
ஞர்திரைநாள்காணுதேபோதியோபூம்பாவாய். (ச)

மைப்பூசுமொண்கண்மடநல்லார்மாமயிலைக்
கைப்பூசுநீற்றான்கபாலீச்சரமமர்ந்தா
னெய்ப்பூசுமொண்புழுக்கனேரிழையார்கொண்டாடுந்
தைப்பூசங்காணுதேபோதியோபூம்பாவாய். (ரு)

மடலார்ந்ததெங்கின்மயிலையார்மாசிக்
கடலாட்டுக்கண்டான்கபாலீச்சரமமர்ந்தா
னடலானேறூருமடிகளடிபரவி
நடமாடல்காணுதேபோதியோபூம்பாவாய். (சு)

மலிவிழாவீதிமடநல்லார்மாமயிலைக்
கலிவிழாக்கண்டான்கபாலீச்சரமமர்ந்தான்
பலிவிழாப்பாடல்செய்பங்குனியுத்திரநா
ளொலிவிழாக்காணுதேபோதியோபூம்பாவாய். (எ)

தண்ணுவரக்கன்றோள்சாய்த்துகந்ததாளினான்
கண்ணார்மயிலைக்கபாலீச்சரமமர்ந்தான்
பண்ணார்பதினெண்கணங்கடம்மட்டமிகாட்
கண்ணாரக்காணுதேபோதியோபூம்பாவாய். (அ)

நற்றாமரைமலர்மேனான்முகனுநாரணனு
முற்றாங்குணர்கிலாமூர்த்திதிருவடியைக்

கற்றூர்களேத்துங்கபாலீச்சரமமர்ந்தான்
பொற்றாப்புக்காணாதேபோதியோபூம்பாவாய். (௯)

உரிஞ்சாயவாழ்க்கையமணுடையைப்போர்க்கு
மிருஞ்சாக்கியாகளொடுதெதுனைப்பநாட்டிற்
கருஞ்சோலைசூழ்ந்தகபாலீச்சரமமர்ந்தான்
பெருஞ்சாந்திகாணாதேபோதியோபூம்பாவாய். (௧0)

கானமர்சோலைக்கபாலீச்சரமமர்ந்தான்
றேனமர்பூம்பாவைப்பாட்டாகச்செந்தமிழான்
ஞானசம்பந்தனலம்புகழ்ந்தபத்தும்வல்லார்
வானசம்பந்தத்தவரோடும்வாழ்வாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - ஸ்ரீகபாலீசர் ; தேவியார் - கற்பகவல்லியம்மை.

---

வேறு.

ஆங்கன மெழுந்து நின்ற வணங்கினை நோககு வாாக
வீங்கிது காணீ ரென்ன வற்புத மெய்தும் வேலைப்
பாங்குசூழ் தொண்ட ராரே ரரகர வென்னப் பார்மே
லோங்கிய வோசை யும்பர் நாடடினை யுற்ற தன்றே.

(இ-ள்.) அவ்வாறு எழுந்துநின்ற பூம்பாவையாரைக் கண்டவர்கள், இங்கே இதனைக் காண்பீராக வென்று அற்புதமடையும்பொழுது, அருகிற் சூழ்ந்த அடியார்களெல்லாம் அரகரவென்று ஆரவாரிக்க உலகில் அதிகரித்த அவ் வோசையானது விண்ணுலகத்தை யடைந்தது.—எ-று. (௧0௯௨)

தேவரு முனிவர் தாமுந் திருவருட் சிறப்பு நோக்கிப்
பூவரு விரைகொண் மாரி பொழிந்தன ரொழிந்த மண்ணோர்
யாவரு மிருந்த வண்ண மெம்பிரான் கருணை யென்றே
மேவிய கைகளுசசி மேற்குவித் திறைஞ்சி வீழ்ந்தார்.

(இ-ள்.) தேவர்களும் முனிவர்களும் திருவருட் சிறப்பைப்பார்த்து வாசனைபொருந்திய புஷ்பமழையைப்பொழிந்தார்கள். அவரல்லாத நிலவுலகத்திலுள்ளோர் யாவரும் இவ்வாறு நிகழ்ந்தது எமது சிவபெருமான் திருவருளென்று பொருந்திய கைகளைச் சிரசின்மேற் குவித்து வணங்கிப் பூமியில் பொருந்த வீழ்ந்தார்கள்.—எ-று. (௧0௯௩)

அங்கவ ளுருவங் காண்பா ரதிசய மிகவு மெய்திப்
பங்கமுற் றாரே போன்றார் பரசம யத்தி னுள்ளோ
ரெங்குள செய்கை தான்மற் றென்செய்த வாறி தென்று
சங்கையா முணர்வு கொள்ளுஞ் சமணர்தள் ளாடி வீழ்ந்தார்.

(இ-ள்.) அப் பூம்பாவையாரது திருவுருவத்தைக் காணுகின்றவராகிய புத்தர் முதலிய புறச்சமயத்துள்ளவர்கள் மிக்க அதிசயமடைந்து சேற்றிலழுந்தினவரை யொத்தார்கள். இச் செய்கை யெங்குள்ளது ; எவ்வாறு செய்யப்

ட்டதென்று சந்தேக வுணர்ச்சியடைந்த சமணர்கள் தள்ளாடிப் பூமியில் விழுந்தார்கள்.—எ-று. (௧௦௬௪)

கன்னிதன் வனப்புத் தன்னைக் கண்களான் முடியக் காணார்
முன்னுறக் கண்டார்க் கெல்லா மொய்கருங் குழலின் பார
மன்னிய வதன செந்தா மரையின்மேற் கரிய வண்டு
துன்னிய வொழுங்கு சுற்ற சூழல்போ லிருண்டு தோன்ற.

(இ-ள்.) அப்பூம்பாவையாரது அழகைத் தங்கள்கண்களால் முழுதுங் காணாமல் முற்படப் பார்த்தவர்களுக்கெல்லாம் நெருங்கிய கரிய அளகபாரமானது பொருந்திய முகமென்னுஞ் செந்தாமரைமலரின்மேல் கருமைபொருந்திய வண்டுகளின் நெருங்கிய ஒழுங்கானது வரிசையாய்ச் சூழ்ந்திருந்தாற்போலக் கருநிறமடைந்து தோன்றவும்.—எ-று. (௧௦௬௫)

பாங்கணி சுரும்பு மொய்த்த பனிமல ரளகப் பந்தி
தேங்கம ழாரஞ் சேருந் திருநுதல் விளக்கம் நோக்கிற்
பூங்கொடிக் கழகின் மாரி பொழிந்திடப் புயற்கீழிட்ட
வாங்கிய வான வில்லின் வளரொளி வனப்பு வாய்ப்ப

(இ-ள்.) அருகில் அழகிய வண்டுகள் நெருங்கிய குளிர்ந்த மலர்களைமுடித்த அளகபந்தியானது வாசனைவீசுகின்ற பூமாலையோடு சேர்ந்திருக்கும் அழகிய நெற்றியின் அழகைப பார்க்குமிடத்தில், பூங்கொம்புபோன்ற பூம்பாவையாருக்கு அழகின் மழைபொழியும்படி மேகம் தன் கீழிட்டவளைந்த இந்திரவில்லினது மிக்க ஒளியின் அழகையடையவும்.—எ-று. (௧௦௬௬)

புருவமென் கொடிகள் பண்டு புரமெரித் தவர்த நெற்றி
யொருவிழி யெரியி னீறு யருள்பெற வுளனுங் காமன்
செருவெழுந் தனுவ தொன்றுஞ் சேமவில் லொன்று மாக
விருபெருஞ் சிலைகண் முன்கொண் டெழுந்தனபோலவேற்ப.

(இ-ள்.) புருவமென்னும் மிருதுவாகிய கொடிகள், பூர்வத்தில் திரிபுரங்களை யழித்தருளிய சிவபெருமானது நெற்றியிலுள்ள ஒப்பற்ற விழியினின்றுண்டாகிய நெருப்பில் சாம்பராய், அவரது திருவருளைப் பெருங்கால்வடிவம்பெறத் தோன்றிய மன்மதன் போர்க்கெழுகின்ற வில்லொன்றும், அதற்குச் சேமமாகிய வில்லொன்றுமாக இரண்டு பெரிய விற்களை முன்னேகொண்டு எழுந்தாற்போலத் தோன்றவும்.—எ-று. (௧௦௬௭)

மண்ணிய மணியின் செய்ய வளரொளி மேனி யாடன்
கண்ணிணை வனப்புக் காணிற் காமரு வதனத் திங்கட்
டண்ணளி விரிந்த சோதி வெள்ளத்திற் றகைவி னீள
வொண்ணிறக் கரிய செய்ய கயலிரண் டொத்து லாவ.

(இ-ள்.) அலங்கரிக்கப்பெற்ற மாணிக்கம்போன்ற சிவந்த ஒளிவளர்கின்ற திருமேனியையுடைய பூம்பாவையாரது இருவிழிகளின் அழகைக் காணுமிடத்து அழகிய முகமென்னுஞ்சந்திரனது குளிர்ச்சிமிகுந்த ஒளிவெள்ளத்தில், பெருமைபொருந்திய நீண்ட ஒளிமிக்க கருமையுஞ் செம்மையுங்கலந்த இரண்டு சேற்கண்டைகளையொத் துலாவவும்.—எ-று. (௧௦௬௮)

பணிவள ரல்குற் பாவை நாசியும் பவள வாயு
நணியபே ரொளியிற் றேன்று நலத்தினை நாடு வார்க்கு
மணிநிறக் கோபங் கண்டு மற்றது வவ்வத் தாழு
மணிநிறக் காம ரூபி யனையதா மழகு காட்ட.

(இ-ள்.) சர்ப்பம்போல் வளர்ந்த நிதம்பத்தையுடைய பூம்பாவையாரது மூக்கும், பவளம்போன்ற வாயும் பொருந்திய பேரொளியினால் தோன்றுகின்ற அழகைப் பார்ப்பவர்களுக்கு மாணிக்கத்தின் நிறம்போன்ற இந்திரகோபத்தைப்பார்த்து, அதனைக் கவரும்படித் தாழ்கின்ற அழகிய நிறத்தையுடைய பச்சோந்தியை யொத்ததாகிய அழகினைக் காட்டவும்—எ-று. (௧0௬௬)

இளமயி லனைய சாய லேந்திழை குழைகொள் காது
வளமிகு வனப்பி னாலும் வடிந்ததா ளுடைமை யாலுங்
கிளரொளி மகர வேறு கெழுமிய தன்மை யாலு
மளவில்சீ ரனங்கன் வென்றிக் கொடியிரண் டனைய வாக.

(இ-ள்.) இளமைபொருந்திய மயிலை யொத்தசாயலையும்,சிறந்தஆபரணத்தையு மணிந்த பூம்பாவையாரது குண்டலத்தையணிந்த காதானது வளப்பமிக்க அழகினாலும், வடிந்த காதுத்தண்டை யுடைத்தாயிருப்பதனாலும், மிக்க ஒளியினையுடைய மகரகுண்டலமானது பொருந்திய தன்மையினாலும் அளவற்ற சிறப்பினையுமுடைய மன்மதனது இரண்டு வெற்றிக்கொடியை யொத்தனவாக விளங்கவும்—எ-று.

மன்மதனுக்குச் சிலேடையாகப் பொருள் கொள்ளுங்கால் வடிந்ததாள் என்பதற்கு, கொடிபரத்தில், வடிந்த அடி என்றும். மகரவேறு என்பதற்குச் சுறவேறு என்றும், பொருள்கொள்க. காதுத்தண்டாவது காதின்கீழ்த்தண்டு. ()

விற்பொலி தரளக் கோவை விளங்கிய கழுத்து மீது
பொற்பமை வதன மாகும் பதுமநன் னிதியம் பூப்ப
நற்பெரும் பணில மென்னு நன்னிதி போன்று தோன்றி
யற்பொலி கண்டர் தந்த வருட்கடை யாளங் காட்ட.

(இ-ள்.) ஒளிபொருந்திய முத்துமாலைவிளங்குங் கழுத்தானது, தன்மீது அழகமைந்த முகமென்னும் பதுமநிதி மலரும்படி, அதன்கீழ் பெரிய சங்கநிதிபோன்று தோன்றப்பெற்று, காளகண்டத்தையுடைய சிவபெருமான் தந்தருளிய திருவருளுக்கு ஓரடையாளத்தைக்காட்டவும்.—எ-று. (௧௧0௧)

எரியவிழ் காந்தண் மென்பூத் தலைதொடுத் திசைய வைத்துத்
திரள்பெறச் சுருக்குஞ் செச்சை மாலையோ தெரியின் வேறு
கருநெடுங் கயற்கண் மங்கை கைகளாற் காந்தி வெள்ள
மருகிழிந் தனவோ வென்னு மதிசயம் வடிவிற் றேன்ற.

(இ-ள்.) கருமைபொருந்திய நீண்ட கயல்போலுங் கண்களையுடைய பூம்பாவையாரது வடிவில், (பார்ப்பவர்களுக்குக்) கைகள் காரணமாக எரிபோல் மலர்ந்த செங்காந்தள்மலரை நுனியில்தொடுத்துப் பொருந்தவைத்து, அதன்மேல் உருட்சியாகக்கட்டிய வெட்சிப்பூமாலையோ? அதுவன்றி, வேறு ஆராயு

ங்கால், உடம்பின் காந்திவெள்ளமானது அருகில்வழிந்தனவோவென்னும் அதிசயந் தோன்றவும்.—எ-று. (கக0உ)

ஏர்கெழு மார்பிற் பொங்கு மேந்திளங் கொங்கை நாகக்
கார்கெழு விடத்தை நீக்குங் கவுணியர் தலைவர் நோக்கா
லார்திரு வருளிற் பூரித் தடங்கிய வமுத கும்பச்
சீர்கெழு முகிழைக் காட்டுஞ் செவ்வியிற் றிகழ்ந்து தோன்ற.

(இ-ள்.) அழகுமிக்க மார்பில் விளங்குகின்ற இளமைபொருந்திய ஸ்தனங்கள் பாம்பின் கரிய விஷத்தை யொழித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது அருணோக்கத்தால் பொருந்திய திருவருளினால் பூரித்து அடங்கிய அமுதகும்பங்களின் வாயிலடைத்த சிறந்த குமிழைக்காட்டுகின்ற அழகால் விளங்கித்தோன்றவும்.—எ-று. (கக0ரு)

காமவே ளென்னும் வேட னுந்தியிற் கரந்து கொங்கை
நேமியம் புட்க டம்மை யகப்பட நேரி தாய
தாமநீள் கண்ணி சேர்த்த சலாகைதூக் கியதே போலும்
வாமமே கலைசூழ் வல்லி மருங்கின்மே லுரோம வல்லி.

(இ-ள்.) அழகிய மேகலாபரணமணிந்த பூம்பாவையாரது இடையின் மேலுள்ள மயிரொழுங்கானது, மன்மதனென்னும் வேடனானவன் நாபியினுள்ளே மறைந்து கொங்கையாகிய சக்கரவாகப்புட்களை யகப்படுத்தும்பொருட்டு ஒழுங்காகிய கயிறுகளில் நீண்டகண்ணிகளைக்கோத்த ஓர் சலாகை தூக்கியதை யொத்திருக்கவும்.—எ-று. (கக0௪)

பிணியவிழ் மலர்மென் கூந்தற் பெண்ணமு தனையாள் செம்பொ
னணிவள ரல்கு றங்க ளரவுசெய் பிழையா லஞ்சி
மணிகிளர் காஞ்சி சூழ்ந்து வனப்புடை யல்கு லாகிப்
பணியுல காளுஞ் சேடன் பணம்விரித் தடைதல் காட்ட.

(இ-ள்.) கட்டவிழ்ந்த மலர்களைமுடித்த மிருதுவாகிய கூந்தலையுடைய பெண்களுள் அமுதம்போன்ற பூம்பாவையாரது சிவந்த பொன்னாபரணங்கள் விளங்குகின்ற நிதம்பமானது, பாதலத்தையரசாட்சிசெய்யும் ஆதிசேடன் தங்கள் சுற்றமாகிய பாம்பானது இப் பூம்பாவையாருக்குச்செய்த குற்றத்தால் அச்சமுற்று மணிகள்விளங்குங் காஞ்சியென்னும் ஆபரணமணிந்து அழகிய நிதம்பஉருவமாய்ப் படம்விரித்தடைந்த தோற்றத்தைக்காட்டவும்.—எ-று. ()

வருமயி லனைய சாயன் மங்கைபொற் குறங்கின் மாமை
கரியிளம் பிடிக்கை வென்று கதலிமென் றண்டு காட்டத்
தெரிவுறு மவர்க்கு மென்மைச் செழுமுழந் தாளின் செவ்வி
புரிவுறு பொற்பந் தென்னப் பொலிந்தொளி விளங்கிப் பொங்க.

(இ-ள்.) வருகின்ற மயிலையொத்த சாயலையுடைய பூம்பாவையாரது அழகிய துடையின் கிறமானது, யானையிளம்பிடியினது துதிக்கையை வென்று வாழையினது மிருதுவான இளந்தண்டையொத்து விளங்கவும், நன்காராய்ந்தவர்களுக்கு மிருதுவாகிய செழிய முழந்தாளினழகானது, கட்டிய பொற்பந்து போலப் பொலிந்து ஒளிவிளங்கி யோங்கவும்.—எ-று. (கக0சு)

பூவலர் நறுமென் கூந்தற் பொற்கொடி கணைக்கால் காம
னுவனா ழிகையே போலு மழகினின் மேன்மை யெய்த
மேவிய செம்பொற் றட்டின் வனப்பினை மீதிட் டென்று
மோவியர்க் கெழுத வொண்ணுப் பரட்டொளி யொளிவுற் ரேங்க.

(இ-ள்.) பூக்கள் அலர்ந்து நறுமணங்கமழும் மிருதுவாகிய கூந்தலையுடைய பூம்பாவையாரது கணைக்காலானது மன்மதனது அம்புக்கூட்டை யொத்த அழகால் சிறப்பினையுடையவும்; பொருந்திய செம்பொன்னலாகிய தராசுத்தட்டின் அழகைவென்று,எப்பொழுதும் சித்திரக்காரரால்லெழுதமுடியாத காற்பரடுகளி னெளியானது விளங்கித்தோன்றவும்.—எ-று. (ககOஎ)

கற்பக மீன்ற செவ்விக் காமரு பவளச் சோதிப்
பொற்றிரள் வயிரப் பத்திப் பூந்துணர் மலர்ந்த போலு
நற்பதம் பொலிவு காட்ட ஞாலமும் விசும்பு மெல்லா
மற்புத மெய்தத் தோன்றி யழகினுக் கணியாய் நின்ருள்.

(இ-ள்.) கற்பகத்தருவீன்ற அழகியபவளவண்ணத்தில் பொற்றிரளோடு வயிர வொழுங்குகளையுடைய பூங்கொத்துகள் மலர்ந்தாற்போலும் நல்லபாதங்கள் பொலிவைக்காட்டவும், மண்ணுலகும் விண்ணுலகுமாகிய எல்லாவுலகங்களும் ஆச்சரியமடையும்படி வெளிப்பட்டு அழகினுக்கு ழகாகநின்ருர். ()

எண்ணிலாண் டெய்தும் வேதாப் படைத்தவ ளெழிலின் வெள்ள
நண்ணுநான் முகத்தாற் கண்டா னவளினு நல்லா டன்பாற்
புண்ணியப் பதினு ருண்டு பேர்பெறும் புகலி வேந்தர்
கண்ணுதல் கருணை வெள்ள மாயிர முகத்தாற் கண்டார்.

(இ-ள்.) அளவற்ற வருடங்கள் நிலைபெற்றிருக்கும் பிரமனுனவன் தான் படைத்த திலோத்தமையினது அழகின் வெள்ளத்தைப் பொருந்திய நான்கு முகங்களாற் பார்த்தான்; அத்திலோத்தமையினுஞ் சிறந்த இப்பூம்பாவையாரிடத்துப் புண்ணியவடிவமாய்ப் பதினுறுவயதுடையவொன்று பேர்பெற்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிவபெருமானது திருவருள் வெள்ளத்தை அநேகமுகத்தாற் பார்த்தருளினர்.—எ-று. (கOகக)

வேறு.

இன்னணம் விளங்கிய வேர்கொள் சாயலா
டன்னைமுன் கண்ணுறக் கண்ட தாதையார்
பொன்னணி மாளிகைப் புகலி வேந்தர்தாள்
சென்னியிற் பொருந்தமுன் சென்று வீழ்ந்தனர்.

(இ-ள்.) இவ்வாறு பேரழகோடு விளங்குகின்ற அழகிய சாயலையுடைய அப்பூம்பாவையாரைத் தன்கண்ணுக்கு முன்னே பார்த்த சிவநேசசெட்டியார் பொன்மயமான அழகிய மாளிகைகளையுடைய சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவடிகள் தமதுசிரசிற் பொருந்தும்படி முன்னே சென்று பூமியில் விழுந்து வணங்கினர்.—எ-று. (கககO)

அணங்கினு மேம்படு மன்ன மன்னவள்
பணம்புரி யரவரைப் பரமர் முன்பணிந்
திணங்கிய முகின்மதிற் சண்பை யேந்தலை
வணங்கியே நின்றனள் மண்ணு ளோர்தொழ.

(இ-ள்.) தெய்வப்பெண்களினுஞ் சிறந்த அன்னத்தையொத்த அப்பூம்பாவையார் படத்தையுடைய பாம்பை அரைக்கச்சாகவணிந்தஸ்ரீகபாலீசரைத் திருமுன்னின்று வணங்கி, மேகங்கள் பொருந்திய மதில்சூழ்ந்த சீகாழித்தலைவராகிய பிள்ளையாரை உலகத்தார்தொழும்படி வணங்கிநின்றார்.—எ-று. (௧௧௧௧)

சீர்கெழு சிவநேசர் தம்மை முன்னமே
கார்கெழு சோலைசூழ் காழி மன்னவ
ரோர்கெழு சிறப்பினும் மகளை கொண்டினிப
பார்கெழு மனையினிற் படர்மி னென்றலும்.

(இ-ள்.) சிறப்புமிக்க சிவநேசசெட்டியாரை (ப்பார்த்து,) முன்னே, மேகங்கள் தவழுஞ் சோலைசூழ்ந்த சீகாழித்தலைவராகிய திருஞானசமபந்தப்பிள்ளையார் அழகுமிக்க சிறப்பினையுடைய உமது புத்திரியை யழைத்துக்கொண்டு இனி உலகத்திற்சிறந்த உமது வீட்டிற்குச் செல்லுமென்று கூறியருளவும்.—எ-று.

பெருகிய வருள்பெறும் வணிகர் பிள்ளையார்
மருவுதா மரையடி வணங்கிப் போற்றிநின்
றருமையா லடியனேன் பெற்ற பாவையைத்
திருமணம் புணர்ந்தருள் செய்யு மென்றலும்.

(இ-ள்.) மிக்க திருவருளைப்பெற்ற சிவநேசசெட்டியார் திருஞானசம்பந்தப்பிள்ளையாரது தாமரைமலர்போன்ற திருவடிகளைவணங்கித் துதித்துநின்று, அடியேன் அருமையாகப்பெற்ற இப் புத்திரியைத் தேவரீர் திருக்கலியாணஞ் செய்து அருள்செய்யவேண்டுமென்று பிரார்த்திக்கவும்.—எ-று. (௧௧௧௨)

மற்றவர் தமக்குவண் புகலி வாணர்நீர்
பெற்றபெண் விடத்தினால் வீந்த பின்னையான்
கற்றைவார் சடையவர் கருணை கண்டுரை
யுற்பவிப் பித்தலா லுரைத காதென.

(இ-ள்.) அச் சிவநேசசெட்டியாருக்கு, சிறந்த சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் நீர் பெற்ற இந்தப் புத்திரி விஷத்தா லிறந்தபின்பு, யான் கூட்டமாகிய நீண்ட சடைமுடியையுடைய ஸ்ரீ கபாலீசரது திருவருளின் பெருமையை யாவரு மறியும்படிக் குடத்தில நின்றும் உதிப்பித்தலால, நீர் கூறும் அவ்வுரை தகாதென்று தடுத்தருளவும்.—எ-று. (௧௧௧௪)

வணிகருஞ் சுற்றமு மயங்கிப் பிள்ளையா
ரணிமல ரடியிலவீழ்ந் தரற்ற வாங்கவர்
தணிவிலீள் பெருந்துயர் தணிய வேதநூற்
றுணிவினை யருள்செய்தார் தூய வாய்மையார்.

(இ-ள்.) சிவநேசசெட்டியாரும் அவர் சுற்றத்தாரும் அவ் வார்த்தையைக் கேட்டு மனமயக்கங்கொண்டு, திருஞானசம்பந்தப்பிள்ளையாரது அழகிய தாமரைமலர்போன்ற திருவடிகளில் வீழ்ந்து புலம்பவும், குற்றமற்ற மெய்ம்மையையுடைய பிள்ளையார் அவர்களது அடங்காத பெரிய துயரந் தணியும்படி வேதநூலின் சம்மதத்தை அவர்களுக்கு அருளிச்செய்தார்.—எ-று. (௧௧௧௫)

தெள்ளுநீ தியின்முறை கேட்ட சீர்க்கிளை
வெள்ளமும் வணிகரும் வேட்கை நீத்திடப்

பள்ளநீர்ச் செலவெனப் பரமர் கோயிலி
னுள்ளெழுந் தருளினு ருடைய பிள்ளையார்.

(இ-ள்.) தெளிவாகிய நீதியின் முறைமையைப் பிள்ளையாரால் கேள்விப்பட்ட சிறந்த உறவினர்கூட்டமும், சிவநேசசெட்டியாரும் (பூம்பாவையாரைத் திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்குத் திருமணஞ்செய்யக் கருதியிருந்த) விருப்பம் நீங்க, பள்ளத்திற்பாயும் நீரின்வேகம்போல, ஸ்ரீகபாலீசரது திருக்கோயிலினுள் திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளினார்.—எ-று. (௧௧௧௬)

பான்மையால் வணிகரும பாவை தன்மண
மேனையோர்க் கிசைகிலே னென்று கொண்டுபோய்
வானுயர் கன்னிமா டத்து வைததனா
தேனமர் கோதையுஞ சிவததை மேவினள்.

(இ-ள்.) (பிள்ளையார் அவ்வாறு தடுத்துவிட்ட) முறைமையினால், சிவநேசசெட்டியாரும் பூம்பாவையாரது விவாகத்தை வேறொருவருக்குச்செய்ய உடன்படேனென்று (அவ்வம்மையாரை) அழைத்துக்கொண்டுபோய், விண்ணுலகளவுயர்ந்த கன்னிமாடத்தில் வைத்தார்; தேன் பொருந்திய மலர்மாலையணிந்த அப் பூம்பாவையாரும் (பின்பு) சிவபெருமானையடைந்தார்.—எ-று. ()

வேறு.

தேவாபிரா னமாந்தருளுந திருககபா லீசசரத்து
மேவியஞா னத்தலைவா விரிஞசன்முத லெவ்வுயிர்க்குங
காவலனா பெருங்கருணை கைதநத படிபோற்றி
பாவலர்செந் தமிழ்பாடிப பன்முறையும பணிந்தெழுவார்.

(இ-ள்.) ஸ்ரீ சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக் கபாலீச்சரமென்னுந்திருக்கோயிலில் எழுந்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் பிரமன் முதலிய எல்லா வுயிர்களுக்கு முதல்வராகிய ஸ்ரீகபாலீசரது பெருங்கருணையானது உபகரித்தமுறைமையைத்துதித்து, செந்தமிழ்த்திருப்பதிகம் பாடியருளிப் பலதரமும் வணங்கி யெழுவாராயினார்.—எ-று. (௧௧௧௮)

தொழுதுபுறமபோநதருளித தொண்டாகுழாமபுடைசூழப்
பழுதிலபுகழத திருமயிலை பதியிலமாந் தருளுநாண்
முழுதுலகுந் தருமிறைவா முதறமுனமப லவிறைஞ்ச
வழுதுலகை வாழவித்தா ரபபதியின் மருஙககலவார்.

(இ-ள்.) வணங்கித் திருக்கோயிலின் புறத்தே யெழுந்தருளி அடியார் திருக்கூட்டங்கள் பக்கங்களிற் சூழும்படிக் குற்றமற்ற திருமயிலை யென்னுந் திருப்பதியி லெழுந்தருளியிருக்கு நாள்களில், சர்வலோகங்களையும் படைத்தருளிய சிவபெருமா னெழுந்தருளும் முதன்மைபொருந்திய பல திருப்பதிகளை வணங்கும்பொருட்டு (அம்மே யப்பா வென்றுகூறி) அழுது, உலகத்தை வாழச்செய்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அத்திருமயிலைத் திருப்பதியினின்றும் புறத்தே நீங்குவாராயினார்.—எ-று. (௧௧௧௯)

திருத்தொண்ட ரங்குள்ளாரா விடைகொளளச சிவநேசர்
வருத்தமகன் றிடமதுர மொழியருளி விடைகொடுத்து

நிருத்தருறை பிறபதிகள் வணங்கிப்போய் நிறைகாத
லருத்தியொடுந் திருவான்மி யூர்பணிய வணைவுற்றார்.

(இ-ள்.) அங்குள்ள திருத்தொண்டர்கள் விடைபெற்றுக்கொள்ளவும், சிவநேசசெட்டியார் கொண்ட வருத்தம் நீங்க (அவர்க்கு) இனிய வார்த்தை யருளிச் செய்து விடைகொடுத்தருளி, தாண்டவமூர்த்தியாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் மற்றத் திருப்பதிகளை வணங்கிச் சென்று, நிறைந்த பெருவிருப்பத்தோடும் திருவான்மியூரை வணங்க எழுந்தருளினார்.—எ-று. (கக௨0)

திருவான்மி யூர்மன்னுந் திருத்தொண்டர் சிறப்பெதிர
வருவார்மங் கலவணிகண் மறுகுநிரைத் தெதிர்கொள்ள
வருகாக விழிந்தருளி யவர்வணங்கத் தொழுதன்பு
தருவார்தங் கோயின்மணித் தடநெடுங்கோபுரஞ்சார்ந்தார்.

(இ-ள்.) திருவான்மியூரில்வாழும் அடியார்கள் சிறப்போடு எதிர்கொள்ளும்படி வருபவர்களாய் மங்கல அணிகளைவீதியில் வரிசையாக அலங்கரித்து எதிர்கொண்டுவர, அத்திருப்பதியி னருகில் முத்துச்சிவிகையினின்று மிழிந்தருளி, அவ்வடியார்கள் தம்மைவணங்கத் தாமு மெதிர்தொழுது, பேரன்பைக் கொடுத் தருளுஞ் சிவபெருமானது திருக்கோயிலின் அழகிய விசாலமாகிய நீண்டதிருக்கோபுரத்தை யடைந்தருளினார்.—எ-று. (கக௨க)

மிக்குயர்ந்த கோபுரத்தை வணங்கிவியன் றிருமுன்றில்
புக்கருளிக் கோயிலினைப் புடைவலங்கொண் டுள்ளணைந்து
கொக்கிறகு மதிக்கொழுந்துங் குளிர்புனலு மொளிர்கின்ற
செக்கர்நிகர் சடைமுடியார் சேவடியின் கீழ்த்தாழ்ந்தார்.

(இ-ள்.) மிகுதியாக வுயர்ந்த திருக்கோபுரத்தை வணங்கி,விசாலமாகிய திருமுற்றத்தை யடைந்தருளித் திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்து உள்ளே புகுந்து, கொக்கிறகும், பிறைச்சந்திரனும், குளிர்ந்த கங்கைநதியும் விளங்குகின்ற சிவந்தசடைமுடியையுடைய சிவபெருமானது திருவடியில் வணங்கி யருளினார்.—எ-று. (கக௨௨)

தாழ்ந்துபல முறைபணிந்து தம்பிரான் முன்னின்று
வாழ்ந்துகளி வரப்பிறவி மருந்தான பெருந்தகையைச்
சூழ்ந்தவிசைத் திருப்பதிகச் சொன்மாலை விளைவுளையால்
வீழ்ந்தபெருங் காதலுடன் சாத்திமிக வின்புற்றார்.

(இ-ள்.) பலதரம் பூமியில்விழுந்து வணங்கி,அவ்வெம்பெருமானது சந்நிதியில் நின்று சிவாநந்தப் பெருவாழ்வடைந்து மகிழ்ச்சியுண்டாகப் பிறவிக்கு மருந்தாயுள்ள ஸ்ரீமருந்தீசரை இசைபொருந்திய திருப்பதிகமென்னும் பாமாலையை விளைவுளையினால் மிக்க பெருவிருப்பத்தோடும் அருளிச்செய்து பேரின்பமுற்றருளினார்.—எ-று. (கக௨௩)

---

திருவான்மியூர் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

கரையுலாங்கடலிற்பொலிசங்கம்வெளிப்பிவன்
றிரையுலாங்கழிமீனுகளுந்திருவான்மியூ

ருரையுலாம்பொருளாயுலகாளுடையீர்சொலீர்
வரையுலாமடமாதுடனாகியமாண்பதே.

மாதொர்கூறுடைநற்றவனைத்திருவான்மியூ
ராதியெம்பெருமானருள்செய்யவினாவுரை
போதியென்றெழுகாழியுள்ஞானசம்பந்தன்சொல்
நீதியானினைவார்நெடுவானுலகாள்வரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - **மருந்தீசர்**, தேவியார் - **திரிபுரசுந்தரியம்மை.**

---

பரவிவரு மானந்த நிறைந்ததுளி கண்பனிப்ப
விரவுமயிர்ப் புளகங்கண் மிசைவிளங்கப் புறத்தணைவுற்
றரவநெடுந் திரைவேலை யணிவான்மி யூரதனுட்
சிரபுரத்துப் புரவலனார் சிலநாளங் கினிதமர்ந்தார்.

(இ-ள்.) பரவிவருகின்ற நிறைந்த ஆனந்தக்கண்ணீர் கண்களினின்றுஞ் சிந்த, நெருங்கிய மயிர்ப்புளகங்கள் திருமேனியில் விளங்கப் புறத்திற் சென்றருளி, ஒலிபொருந்திய நீண்டஅலைகளையுடைய கடற்கரையிலுள்ள திருவான்மியூரென்னுந் திருப்பதியினிடத்துத் திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிலநாள்கள் இனிமையோடு எழுந்தருளியிருந்தார்.—எ-று. (ககஉச)

அங்கணமர் வாருலகா ளுடையாரை யருந்தமிழின்
பொங்குமிசைப் பதிகங்கள் பலபோற்றிப் போந்தருளிக்
கங்கையணி மணிமுடியார் பதிபலவுங் கலந்திறைஞ்சிச்
செங்கண்விடைக்கொடியார்தமிடைச்சுரத்தைச் சேர்வுற்றார்.

(இ-ள்.) அங்கு எழுந்தருளியிருக்குந் திருஞான சம்பந்தப்பிள்ளையார் சர்வ லோகங்களையுந் தமக்கடிமையாகவுடைய ஸ்ரீ மருந்தீசரை அரிய தமிழினாலாகிய மிக்க இசையினையுடைய பலதிருப்பதிகங்களால் துதித்து, அங்குநின்றுமெழுந்தருளி, கங்கைநதியை யணிந்த அழகிய திருமுடியையுடைய சிவபெருமானெழுந்தருளிய பல திருப்பதிகளை யடைந்து வணங்கி, சிவந்த கண்களையுடைய இடபக்கொடியை யுயர்த்திய சிவபெருமானது திருவிடைச்சுரமென்னுந் திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று. (ககஉரு)

சென்னியிள மதியணிந்தார் மருவுதிரு விடைச்சுரத்து
மன்னுதிருத் தொண்டர்குழா மெதிர்கொள்ள வந்தருளி
நன்னெடுங்கோ புரமிறைஞ்சி யுட்புகுந்து நற்கோயி
றன்னைவலங் கொண்டணைந்தார் தம்பிரான் றிருமுன்பு.

(இ-ள்.) சிரசில் இளம்பிறையையணிந்த சிவபெருமானெழுந்தருளிய அத்திருவிடைச்சுரத்தில்வாழும் அடியார் திருக்கூட்டங்கள் எதிர்கொள்ளும்படி அங்குச் சென்றருளி, நல்ல உயர்ந்த திருக்கோபுரத்தை வணங்கி யுள்ளேபுகுந்து அழகிய திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்து, சிவபெருமான் சந்நிதியில் அடைந்தருளினார்.—எ-று. (ககஉசு)

கண்டபொழு தேகலந்த காதலாற் கைதலைமேற்
கொண்டுதல முறவிழுந்து குலவுபெரு மகிழ்ச்சியுடன்

மண்டியபே ரன்புருகி மயிர்முகிழ்ப்ப வணங்கியெழுந்
தண்டர்பிரான் றிருமேனி வண்ணங்கண் டதிசயித்தார்.

(இ-ள்.) சிவபெருமானைத் தரிசித்தபொழுதே உண்டாகி அன்பினால் கைகளைச் சிரமேற் குவித்துப் பூமியிற் பொருந்த விழுந்து வணங்கி மிக்கபெரு மகிழ்ச்சியோடும்நெருங்கிய பேரன்பினால் மனமுருகி உரோமாஞ்சிதமுண்டாக நமஸ்கரித் தெழுந்து, தேவர்கள் நாயகராகிய அவ்வெம்பெருமானது திருமே னியின் நிறத்தைக் கண்டு அதிசயமடைந்தருளினார்—எ-று. (ககஉஎ)

இருந்தவிடைச் சுரமேவு மிவர்வண்ண மென்னேயென்
றருந்தமிழின் றிருப்பதிகத் தலர்மாலை கொடுபரவித்
திருந்துமனங் கரைந்துருகத் திருக்கடைக்காப் புச்சாத்திப்
பெருந்தனிவாழ் வினைப்பெற்றார் பேருலகின் பேறானார்.

(இ-ள்.) திருவிடைச்சுரத்தி லெழுந்தருளிய இவ் வெம்பெருமான் இருந்தவண்ணம் என்னவென்று அரிய தமிழ்த்திருப்பதிகமாலையால் துதித்து, திருத்தமாகிய மனங்கரைந்துருகும்படித் திருக்கடைக்காப்பைச் சாத்தியருளி, பெரிய உலகத்திற்குப் பெரும்பேறு யவதரித்தருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையார்ஒப்பற்ற சிவாநந்தப்பெருவாழ் வடைந்தருளினார்.—எ-று. (ககஉஅ)

---

திருவிடைச்சுரம் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

வரிவளரவிரொளியரவரைதாழவார்சடைமுடிமிசைவளர்மதி சூடிக், கரிவளர்தருகழற்கால்வலனேந்திக் கனலெரியாடுவர்காடரங்காக, விரிவளர்தருபொழிலிளமயிலால வெண்ணிறத்தருவிகடிண்ணெனவீழ, மெரிவளரினமணிபுனமணிச்சார லிடைச்சுரமேவிய விவர்வணமென்னே.

மடைச்சுரமறிவனவாளையுங்கயலு மருவியவயறனில்வரும்புனற்காழிச், சடைச்சுரத்துறைவதோர்பிறையுடையண்ணல் சரிதைகள்பரவிநின்றுருகுசம்பந்தன், புடைச்சுரத்தருவரைப்பூக்கமழ்சாரற் புணர்மடநடையவர்புடையிடையார்ந்த, விடைச்சுரமேத்திய விசையொடுபாட லிவைசொலவல்லவர்பிணியிலர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - **இடைச்சுரநாதர்**, தேவியார் - **இமயமடக்கோடியம்மை**.

---

நிறைந்தார்வ வேட்கையினா னின்றிறைஞ்சிப் புறம்போந்தங்
குறைந்தருளிப் பணிகின்றா ருமைபாக ரருள்பெற்றுச்
சிறந்ததிருத் தொண்டருட னெழுந்தருளிச் செந்துருத்தி
யறைந்தளிகள் பயில்சாரற் றிருக்கழுக்குன் றினையணைந்தார்.

(இ-ள்.) நிறைந்த பெருங்காதலால் திருமுன்னின்று வணங்கிப் புறத்திற் சென்று அத்திருப்பதியில் வசித்தருளி (நாள்தோறும்) பணிகின்ற பிள்ளையார் பார்வதிபாகராகிய ஸ்ரீ இடைச்சுரநாதரது திருவருளைப்பெற்றுச் சிறந்த திருத்தொண்டர்களோடு மெழுந்தருளி,வண்டுகள் செந்துருத்தி யென்னும் பண்

லைப் பாடி வசிக்கின்ற மலைச்சாரலையுடைய திருக்கழுக்குன்ற மென்னுந் திருப்பதியை யடைந்தருளினார்—எ-று. (௧௧௨௯)

சென்றணையும் பொழுதின்கட் டிருத்தொண்ட ரெதிர்கொள்ளப்
பொன்றிகழு மணிச்சிவிகை யிழிந்தருளி யுடன்போந்து
மன்றல்விரி நறுஞ்சோலைத் திருமலையை வலங்கொண்டு
மின்றயங்குஞ் சடையானை விருப்பினுடன் பணிகின்றார்.

(இ-ள்.) அத் திருப்பதியைச் சென்று சேரும்பொழுது அங்குள்ள திருத்தொண்டர்கள் எதிர்கொண்டுவர, பொன்மயமாக விளங்குகின்ற அழகியமுத்துச்சிவிகையினின்று மிறங்கியருளி அவர்களுடன் சென்று, வாசனை பொருந்திய நல்ல சோலை சூழ்ந்த அத் திருமலையைப் பிரதக்ஷணஞ்செய்து, மின்போல் விளங்குஞ் சடைமுடியையுடைய ஸ்ரீவேதகிரீசனை விருப்பத்துடன் வணங்குகின்றாராயினார்.—எ-று. (௧௧௩௦)

திருக்கழுக்குன் றத்தமர்ந்த செங்கனகத் தனிக்குன்றைப்
பெருக்கவளர் காதலினாற் பணிந்தெழுந்து பேராத
கருத்தினுடன் காதல்செயுங் கோயில்கழுக் குன்றென்று
திருப்பதிகம் புனைந்தருளிச் சிந்தைநிறை மகிழ்வுற்றார்.

(இ-ள்.) திருக்கழுக்குன்றத்தி லெழுந்தருளிய சிவந்த பொன்மலைபோன்ற ஸ்ரீவேதகிரீசனை மிக்க ஆசையினால் வணங்கி யெழுந்து, நீங்காத திருவுள்ளத்தோடும், "காதல்செய் கோயில் கழுக்குன்றே" என்று ஈற்றி லமைத்துத் திருப்பதிகம் பாடியருளித் தமது திருவுள்ளத்தில் மிக்கமகிழ்ச்சியடைந்தருளினார்—எ-று. (௧௧௩௧)

---

திருக்கழுக்குன்றம்-பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

தோடுடையானொருகாதிற்றூயகுழைதாழ
வேடுடையான்றலைகலனாகவிரந்துண்ணு
நாடுடையானள்ளிருளேமநடமாடுங்
காடுடையான்காதல்செய்கோயில்கழுக்குன்றே.

கண்ணுதலான்காதல்செய்கோயில்கழுக்குன்றை
நண்ணியசீர்ஞானசம்பந்தன்றமிழ்மாலை
பண்ணியல்பாற்பாடியபத்துமிவைவல்லார்
புண்ணியராய்விண்ணவரோடும்புகுவாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வேதகிரீசர்; தேவியார்-பெண்ணினல்லாளம்மை.

---

இன்புற்றங் கமர்ந்தருளி யீறில்பெருந் தொண்டருடன்
மின்பெற்ற வேணியினா ரருள்பெற்றுப் போந்தருளி
யென்புற்ற வணிமார்ப ரெல்லையிலா வாட்சிபுரிந்
தன்புற்று மகிழ்ந்ததிரு வச்சிறுபாக் கத்தணைந்தார்.

(இ-ள்.) பேரின்பமடைந்து அத்திருப்பதியி லெழுந்தருளி, அளவற்ற பெரிய திருத்தொண்டர்களோடும், மின்போல் விளங்குகின்ற சடைமுடியை

யுடைய ஸ்ரீ வேதகிரீசரது திருவருளைப்பெற்று அங்குநின்று மெழுந்தருளி எலும்புமாலையை யணிந்த அழகியதிருமார்பினையுடைய சிவபெருமான் அளவில்லாத ஆட்சிபெற்று அன்புற்று மகிழ்ந்தெழுந்தருளிய திருஅச்சிறுபாக்கமென்னுந் திருப்பதியை யடைந்தருளினார்—எ-று. (௧௧௩௨)

ஆதிமுதல் வரைவணங்கி யாட்சிகொண்டா ரெனமொழியுங்
கோதிறிருப் பதிகவிசை குலாவியபா டலிற்போற்றி
மாதவத்து முனிவருடன் வணங்கிமகிழ்ந் தின்புற்றுத்
தீதகற்றுஞ் செய்கையினார் சிலநாளங் கமர்ந்தருளி.

(இ-ள்.) முதற்பெருங் கடவுளாகிய அவ் வெம்பெருமானை வணங்கி, "ஆட்சிகொண்டார்" என்று இறுதியிலமைத்துக்கூறியருளுங் குற்றமற்றதிருப்பதிகத்தில் இசை பொருந்திய செய்யுட்களால் துதித்து, மிக்க தவத்தினையுடைய அடியார்களோடு நாள்தோறும் வணங்கி மகிழ்ந்து இன்பமடைந்து, குற்றத்தை யொழிக்கும் நற்செய்கையையுடைய திருஞானசம்பந்தப் பிள்ளையார் சிலநாள்கள் அங்கு வசித்தருளி—எ-று. (௧௧௩௩)

---

**திருஅச்சிறுபாக்கம்-பண்-குறிஞ்சி.**

திருச்சிற்றம்பலம்.

பொன்றிரண்டன்னபுரிசடைபுரளப் பொருகடற்பவளமொடழனிறம்புரையக், குன்றிரண்டன்னதோளுடைக்கலங் குலாயவெண்ணூலொடு கொழும்பொடியணிவர், மின்றிரண்டன்னநுண்ணிடையரிவைமெல்லியலாளையோர்பாகமாப்பேணி, யன்றிரண்டுருவமாயவெம்மடிகளச்சிறுபாக்கமதாட்சிகொண்டாரே.

மைச்செறிகுவளைதவளைவாய்நிறையமதுமலர்ப் பொய்கையிற் புதுமலர்கிழியப், பச்சுறவெறிவயல்வெறிகமழ்காழிப் பதியவரதிபதிகவுணியர்பெருமான், கைச்சிறுமறியவன்கழலலாற்பேணுக் கருத்துடைஞானசம்பந்தனறமிழ்கொண், டச்சிறுபாக்கத்தடிகளையேத்துமன்புடையடியவரருவினையிலரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-**பாக்கபுரேசர்**; தேவியார்-**அதிசுந்தரமின்னாளம்மை.**

---

ஏறணிந்த வெல்கொடியா ரினிதமர்ந்த பதிபிறவு
நீறணிந்த தொண்டருட னெதிர்கொள்ள நேர்ந்திறைஞ்சி
வேறுபல நதிகானங் கடந்தருளி விரிசடையி
லாறணிந்தார் மகிழ்ந்ததிரு வரசிலியை வந்தடைந்தார்.

(இ-ள்.) இடபத்தை யெழுதிய வெற்றிக்கொடியையுடைய சிவபெருமான் இனிமையாகவெழுந்தருளியமற்றத்திருப்பதிகளையும் விபூதியையணிந்த திருத்தொண்டர்களோடுந் தம்மை யெதிர்கொண்டுவரச் சென்று வணங்கி, பலவேறுநதிகளையுங் காடுகளையுங் கடந்து,விரிந்தசடையில் கங்கைநதியையணிந்த சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளிய திருஅரசிலியென்னுந் திருப்பதியை வந்தடைந்தருளினார்—எ-று. (௧௧௩௪)

அரசிலியை யமர்ந்தருளு மங்கணரை யசைப்பணிந்து
பரசியெழு திருப்புறவார் பனங்காட்டூர் முதலாய
விரைசெய்மலர்க் கொன்றையினார் மேவுபதி பலவணங்கித்
திரைசெய்நெடுங் கடலுடுத்த திருத்தில்லை நகரணைந்தார்.

(இ-ள்.) திருஅரசிலியென்னும் திருப்பதியில்வீற்றிருந்தருளும் அழகிய காருண்ணியமூர்த்தியாகிய சிவபெருமானைவணங்கி, (அடியார்கள்) துதித்தெழுகின்ற திருப்புறவார்பனங்காட்டூர்முதலிய வாசனை பொருந்திய கொன்றைமலர்மாலையை யணிந்த சிவபெருமான் எழுந்தருளியபலதிருப்பதிகளை வணங்கி அலைவீசுகின்ற நீண்டகடல்சூழ்ந்த ஸ்ரீசிதம்பரமென்னும் திருப்பதியை யடைந்தருளினார்—எ-று. (௧௧௩௫)

எல்லையின்ஞா னத்தலைவ ரெழுந்தருள வெதிர்கொள்வார்
தில்லையில்வா ழந்தணர்மெய்த் திருத்தொண்டர் சிறப்பினொடு
மல்கியெதிர் பணிந்திறைஞ்ச மணிமுத்தின் சிவிகையிழிந்
தல்குபெருங் காதலுட னஞ்சலிகொண் டணைகின்றார்.

(இ-ள்.) அளவில்லாத சிவஞானத் தலைவராகியபிள்ளையார் அங்கெழுந்தருளும்பொழுது அவரை யெதிர்கொள்ளும்படி தில்லைவாழந்தணர்களும், மெய்ம்மைபொருந்திய திருத்தொண்டர்களும் சிறப்புடன் நெருங்கி எதிரில்தாழ்ந்து வணங்க, அழகியமுத்துச்சிவிகையினின்றும் கீழிறங்கியருளிப்பொருந்திய பெருவிருப்பத்தோடும்வணங்கி அவர்களுடன் வருவாராயினார்—எ-று (௧௧௩௬)

திருவெல்லை யினைப்பணிந்து சென்றணைவார் சேண்விசும்பை
மருவிவிளங் கொளிதழைக்கும் வடதிசைவா யிலைவணங்கி
யுருகுபெருங் காதலுட னுட்புகுந்து மறையினொலி
பெருகிவளர் மணிமாடப் பெருந்திருவீ தியையணைந்தார்.

(இ-ள்.) திருவெல்லையை வணங்கி வருகின்ற பிள்ளையார் உயர்ந்தவிண்ணுலகையடைந்து விளங்குகின்ற ஒளிமிகுந்தவடதிசைத்திருக்கோபுரவாயிலை வணங்கி, மனமுருகுகின்ற பெருவிருப்புடன் உள்ளேபுகுந்து வேதங்களினோசைமிகுத்து வளர்கின்ற அழகிய மாடவீதியை யடைந்தருளினார்.—எ-று. ()

நலமலியுந் திருவீதி பணிந்தெழுந்து நற்றவர்தங்
குலநிறைந்த திருவாயில் குவித்தமலர்ச் செங்கையொடு
தலமுறமுன் றாழ்ந்தெய்தித் தமனியமா ளிகைமருங்கு
வலமுறவந் தோங்கியபே ரம்பலத்தை வணங்கினார்.

(இ-ள்.) நன்மைமிகுந்த திருவீதியை வணங்கி யெழுந்து நல்லஅடியார் கூட்டங்கள் நிறைந்திருக்குந் திருவாயிலில் சிரசில்குவித்த தாமரைமலர்போன்ற சிவந்த திருக்கரங்களுடன் பூமியிற்பொருந்த வணங்கிச்சென்று கனகசபையின் அருகில்பிரதக்ஷணஞ்செய்து உயர்ந்த பேரம்பலத்தை வணங்கியருளினார்—எ-று. (௧௧௩௮)

வணங்கிமிக மனமகிழ்ந்து மாலயனுந் தொழும்பூத
கணங்கண்மிடை திருவாயில் பணிந்தெழுந்து கண்களிப்ப
வணங்குதனி கண்டருள வம்பலத்தே யாடுகின்ற
குணங்கடந்த தனிக்கூத்தர் பெருங்கூத்துக் கும்பிடுவார்.

(இ-ள்.) பேரம்பலத்தை வணங்கி மனமகிழ்வடைந்து, பிரமவிஷ்ணுக்களுந் தொழத்தக்க பூதகணங்கள் நெருங்கிய திருவணுக்கன் திருவாயிலை வணங்கி யெழுந்து, சிவகாமியம்மையார் தனிமையாகக் கண்களிக்கத் தரிசிக்கும்படித் திருவம்பலத்தில் ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளுங் குணநிதராகிய ஸ்ரீ நடராசப்பெருமானது பெரிய திருக்கூத்தைத் தரிசிப்பாராயினர்—எ-று. ()

தொண்டர்மனம் பிரியாத திருப்படியைத் தொழுதிறைஞ்சி
மண்டுபெருங் காதலினா னேக்கிமுக மலர்ந்தெழுவா
ரண்டமெலா நிறைந்தெழுந்த வானந்தத் துள்ளலைந்து
கண்டபே ரின்பத்தின் கரையில்லா நிலையணைந்தார்.

(இ-ள்.) அடியார்களது திருவுள்ளத்தினின்று நீங்காத ஸ்ரீ பஞ்சாக்ஷரத் திருப்படியை வணங்கி, நெருங்கிய பெருவிருப்பத்துடன் ஸ்ரீ நடராசப்பெருமானைத் தரிசித்து முகமலர்ச்சியடைந்து எழுகின்ற பிள்ளையார் சர்வாண்டங்களிலும் வியாபித்தெழுந்த சிவாநந்தவெள்ளத்தில் அலைந்து தரிசித்த பேரின்பத்தினது அளவுகடந்த நிலைமையை யடைந்தருளினர்.—எ-று. (சுகசு0)

அந்நிலைமை யடைந்துதிளைத் தாங்கெய்தாக் காலத்தின்
மன்னுதிரு வம்பலத்தை வலங்கொண்டு போந்தருளிப்
பொன்னணிமா ளிகைவீதிப் புறத்தணைந்து போதுதொறு
மின்னிசைவண் டமிழ்பாடிக் கும்பிட்டங் கினிதமர்ந்தார்.

(இ-ள்.) அத்தகைய பேரின்ப நிலைமையை யடைந்து அதில்முழுகி அங்கு நின்று நீங்கும்பொழுது, நிலைபெற்ற கனகசபையைப் பிரதக்ஷணஞ்செய்து புறத்திற்சென்று, பொன்மயமாகிய அழகிய மாளிகைகளையுடைய திருவீதியில் வசித்தருளி, காலங்கள்தோறும் இனிய இசைபொருந்திய வளவிய தமிழ்ப் பதிகம்பாடி வணங்கி, அங்கு இனிதாக எழுந்தருளியிருந்தார்.—எ-று.(சுகசுக)

திருந்தியசீர்த் தாதையார் சிவபாத விருதயரும்
பொருந்துதிரு வளர்புகலிப் பூசுரரு மாதவரும்
பெருந்திருமா லயன்போற்றும் பெரும்பற்றப் புலியூரி
லிருந்தமிழா கரரணைந்தா ரெனக்கேட்டு வந்தணைந்தார்.

(இ-ள்.) திருத்தமாகிய சிறப்பினையுடைய தந்தையாராகிய சிவபாத விருதயரும், மிக்க செல்வங்கள் நிறைந்த சீகாழியில்வாழும் வேதியர்களும், தவசிரேஷ்டர்களும், பெருமைபொருந்திய திருமாலும் பிரமனுந்துதிக்கும் ஸ்ரீ சிதம்பரத்தில் திருஞானசம்பந்தப் பிள்ளையா ரெழுந்தருளினரென்று கேள்வியுற்று அங்கு வந்து சேர்ந்தார்கள்.—எ-று. (சுகசுஉ)

ஆங்கவரைக் கண்டுசிறப் பளித்தருளி யவரோடுந்
தாங்கரிய காதலினாற் றம்பெருமான் கழல்வணங்க
வோங்குதிருத் தில்லைவா ழந்தணரு முடனாகத்
தேங்கமழ்கொன் றைச்சடையார் திருச்சிற்றம் பலம்பணிந் [தார்.

(இ-ள்.) (பிள்ளையார்) அவர்களைப்பார்த்துச் சிறந்த உபசாரவார்த்தைகள் கூறி, அவர்களுடன் தாங்குதற்கரிய பெருவிருப்பினால் ஸ்ரீ நடராசப்பெருமானது திருவடிகளை வணங்கும்படி, சிறந்த தில்லைவாழந்தணர்களுந் தம்முடன்செல்ல, தேன்மணங் கமழும் கொன்றைமாலையணிந்த சடைமுடியையுடைய அவ்வெம்பெருமானது திருச்சிற்றம்பலத்தைவணங்கியருளினர்.—எ-று.

தென்புகலி யந்தணருந் தில்லைவா ழந்தணர்மு
னன்புநெறி பெருகுவித்த வாண்டகையா ரடிபோற்றிப்
பொன்புரிசெஞ் சடைக்கூத்த ரருள்பெற்றுப் போந்தருளி
யின்புறுதோ ணியினமர்ந்தார் தமைவணங்க வெழுந்தருள.

(இ-ள்.) அழகிய சீகாழியினின்று வந்தவேதியர்களும் தில்லைவாழந்தணர்களுக்குமுன்னே அன்பின்வழியை விருத்திசெய்த பிள்ளையாரது திருவடிகளைத் துதித்து, பொன்போலும் முறுக்காகிய சடைமுடியையுடைய ஸ்ரீநடராசப்பெருமானது திருவருளைப்பெற்றுப்புறத்திற்சென்றருளி, இன்பம்பொருந்திய திருத்தோணியிலெழுந்தருளும் ஸ்ரீதோணியப்பரைவணங்கும்படி யெழுந்தருள.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௧௧௩௪)

நற்றவர்தங் குழாத்தோடு நம்பர்திரு நடஞ்செய்யும்
பொற்பதியின் றிருவெல்லை பணிந்தெழுந்து புறம்போந்து
பெற்றமுயர்த் தவரமர்ந்த பிறபதியும் புக்கிறைஞ்சிக்
கற்றவர்கள் பரவுதிருக் கழுமலமே சென்றடைவார்.

(இ-ள்.) நல்லதவத்தினையுடைய அடியார்கூட்டங்களோடும் சிவபெருமான் திருநடனஞ்செய்தருளும் அழகிய ஸ்ரீ சிதம்பரத்தின் திருவெல்லையை வணங்கியெழுந்துபுறத்திற்சென்று, இடபத்தைக்கொடியாகவுயர்த்தியசிவபெருமானெழுந்தருளிய மற்றத் திருப்பதிகளையும்அடைந்து வணங்கிச் சகலசாஸ்திரங்களையு முணர்ந்த புலவர்கள் துதிக்கின்ற சீகாழிப்பதியைச்சென்று சேர்வாராயினர்.—எ-று. (௧௧௩௫)

பல்பதிகள் கடந்தருளிப் பன்னிரண்டு பேர்படைத்த
தொல்லைவளப் பூந்தராய் தூரத்தே தோன்றுதலு
மல்குதிரு மணிமுத்தின் சிவிகையிழிந் தெதிர்வணங்கிச்
செல்வமிகு பதியதன்மேற் றிருப்பதிக மருள்செய்வார்.

(இ-ள்,) பல திருப்பதிகளைக் கடந்தருளி, பன்னிரண்டு திருப்பெயரைப்பெற்ற பழமையாகிய வளம்நிறைந்த சீகாழிப்பதியானது தூரத்ில்தோன்றவும் அழகிய முத்துச்சிவிகையினின்று மிறங்கி யெதிரேவணங்கிச் செல்வங்கள் நிறைந்த அச்சீகாழித் திருப்பதியின்மேல் திருப்பதிகமருளிச் செய்வாராயினர்.—எ-று. (௧௧௩௬)

மன்னுமிசை மொழிவண்டார் குழலரிவை யென்றெடுத்து
மின்னுசுடர் மாளிகைவிண் டாங்குவபோல் வேணுபுர
மென்னுநிறை சொன்மாலை யெடுத்தியம்பி யெழுந்தருளிப்
புன்னைமணங் கமழ்புறவப் புறம்பணையில் வந்தணைந்தார்.

(இ-ள்.) நிலைபெற்ற இசைபொருந்தியமொழியினையுடைய "வண்டார் குழலரிவை" என்று தொடங்கி, ஒளிவிளங்குகின்ற திருமாளிகைகள் "விண்டாங்குவபோலும் மிகுவேணுபுரமதுவே" என்னு மிறுதியையுடைய திருப்பதிகத்தைப்பாடிச் சென்றருளிப் புன்னைமலர்கள் வாசனைகமழுஞ் சீகாழியின் புறத்திலுள்ள வயற்பக்கங்களில் வந்து சேர்ந்தருளினர்.—எ-று. (௧௧௩௭)

திருவேணுபுரம் - பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

வண்டார்குழலரிவையொடும்பிரியாவகைபாகம்
பெண்டானமிகவானான்பிறைச்சென்னிப்பெருமானூர்
தண்டாமரைமலராளுறைதவளந்நெடுமாடம்
விண்டாங்குவபோலும்மிகுவேணுபுரமதுவே.

வேதத்தொலியானும்மிகுவேணுபுரந்தன்னைப்
பாதத்தினின்மனம்வைத்தெழுபந்தன்றனபாட
லேதத்தினையில்லாவிவைபத்தும்மிசைவல்லார்
கேதத்தினையில்லார்சிவகெதியைப்பெறுவாரே.

திருச்சிற்றம்பலம்.

---

வாழிவளர் புறம்பணையின் மருங்கணைந்து வரிவண்டு
சூழுமலர் நறுந்தீப தூபங்க ளுடன்றொழுது
காழிநகர் சேர்மினெனக் கடைமுடிந்த திருப்பதிக
மேழிசையி னுடன்பாடி யெயின்மூதூ ருட்புகுந்தார்.

(இ-ள்.) செழித்து வளர்கின்ற வயலிடங்களின் அருகிலடைந்து, வரி பொருந்திய வண்டுகள்சூழும் மலர்களைக்கொண்டு நல்ல தீபதூபங்களோடும் வணங்கி "காழிநகர்சேர்மின்" என்று கடையில்முடிந்த திருப்பதிகத்தைச் சப்தசுரங்களும் பொருந்தப் பாடியருளி, மதில்சூழ்ந்த பழைய சீகாழிப்பதியி னுள்ளே புகுந்தருளினார்.—எ-று. (௧௧௪௮)

---

சீகாழி - திருவிராகம் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

நம்பொருண்மக்களென்றுநச்சியிச்சைசெய்துநீ
ரம்பரமடைந்துசாலவல்லலுய்ப்பதன்முன
மும்பர்நாதனுத்தமனொளிம்மிகுத்தசெஞ்சடை
நம்பன்மேவுநன்னகர்நலங்கொள்காழிசேர்மினே.

தக்கனார்தலையரிந்தசங்கரன்றனதரை
யக்கினோடரவசைத்தவந்திவண்ணர்காழியை
யொக்கஞானசம்பந்தனுரைத்தபாடல்வல்லவர்
மிக்கவின்பமெய்திவீற்றிருந்துவாழ்தன்மெய்ம்மையே.

திருச்சிற்றம்பலம்.

---

சேணுயர்ந்த திருத்தோணி வீற்றிருந்த சிவபெருமான்
றாணினைந்த வாதரவின் றலைப்பாடு தனையுன்னி
நீணிலைக்கோ புரமணைந்து நேரிறைஞ்சிப் புக்கருளி
வாணிலவு பெருங்கோயில் வலங்கொண்டு முன்பணிந்தார்.

(இ-ள்.) விண்ணுலகளவு முயர்ந்த திருத்தோணியென்னு மாலயத்தில் வீற்றிருந்தருளிய சிவபெருமானது திருவடிகளை நினைந்த விருப்பத்தின் மேன் மையைக் கருதி,உயர்ந்த நிலைகளையுடைய திருக்கோபுரத்தையடைந்து எதிரே

வணங்கி யுள்ளேபுகுந்தருளி, ஒளிவிளங்குகின்றபெரிய திருக்கோயிலைப் பிரத க்ஷணஞ்செய்து திருமுன்னே வணங்கினார்.—எ-று. (௧௧௪௯)

முன்னிறைஞ்சித் திருவருளின் முழுநோக்கம் பெற்றேறிப்
பொன்னிமயப் பாவையுடன் புணர்ந்திருந்த புராதனரைச்
சென்னிமிசைக் குவித்தகரங் கொடுவிழுந்து திளைத்தெழுந்து
மன்னுபெரு வாழ்வெய்தி மனங்களிப்ப வணங்குவார்.

(இ-ள்.) திருமுன்னேவணங்கித் திருவருளின் பூரணநோக்கத்தைப்பெ ற்று, பார்வதிதேவியாரோடு மெழுந்தருளியதோணியப்பரைச்சிரமேற்குவித்த திருக்கரங்களைக்கொண்டு பூமியில்விழுந்து வணங்கிப் பேராநந்தத்தழுந்தி யெ ழுந்து, நிலைபெற்ற சிவாநந்தப் பெருவாழ்வடைந்து மனமகிழும்படி வணங்கு வாராயினார்.—எ-று. (௧௧௫0)

பரவுதிருப் பதிகங்கள் பலவுமிசை யினிற்பாடி
விரவியகண் ணருவிநீர் வெள்ளத்திற் குளித்தருளி
யரவணிந்தா ரருள்பெருகப் புறம்பெய்தி யன்பருடன்
சிரபுரத்துப் பெருந்தகையார் தந்திருமா ளிகைசேர்ந்தார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் துதிக்கின்ற பல திருப்பதிகங் களைப் பாடியருளி,நெருங்கிய ஆனந்தக்கண்ணீராகிய வெள்ளத்தில் முழுகி சர் ப்பாபரணராகிய தோணியப்பரது திருவருள்பெருகும்படிப் புறத்தேவந்து அடியார்களுடன் தமது திருமாளிகையை யடைந்தருளினார்.—எ-று. (௧௧௫௧)

மாளிகையி னுள்ளணைந்து மறையவர்கட் கருள்புரிந்து
தாள்பணியும் பெருங்கிளைக்குத் தகுதியினாற் றலையளிசெய்
தாளுடைய தம்பெருமா னடியவர்க ளுடனமர்ந்து
நீளவரும் பேரின்ப மிகப்பெருக நிகழுநாள்.

(இ-ள்.) திருமாளிகையி னுள்ளேயடைந்து,வேதியர்களுக்குவிடைகொ டுத்தருளித் தமது திருவடிகளை வணங்கும் மிக்க சுற்றத்தாருக்கு முறைமைப்ப டி யுபசாரஞ்செய்து, தம்மையடிமையாகவுடைய சிவபெருமானடியார்களுட ன் சேர்ந்து, மிக்க பேரின்பமதிகரிக்கஎழுந்தருளியிருக்கும்நாள்களில்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௧௧௫௨)

காழி நாடுடையபிரான் கழல்வணங்கி மகிழ்வெய்த
வாழியினு மிகப்பெருகு மாசையுடன் றிருமுருகர்
வாழிதிரு நீலநக்கர் முதற்றொண்டர் மற்றெனையோர்
சூழுநெடுஞ் சுற்றமுடன் றோணிபுரந் தொழுதணைந்தார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவடிகளைவணங்கி மகிழ் கூரும்படி, கடலினும் மிகப்பெருகுகின்ற ஆசையோடு திருமுருநாயனார் திரு நீலநக்கநாயனார் முதலிய அடியார்களும்,அவரல்லாத மற்றையர்களும்,தம்மைச் சூழ்ந்த பெருஞ்சுற்றத்தாருடன் சீகாழியை வணங்கி யடைந்தார்கள்.—எ-று.

வந்தவரை யெதிர்கொண்டு மனமகிழ்ந்து சண்பையர்கோ
னந்தமில்சீ ரடியார்க ளவரோடு மினிதமர்ந்து
சுந்தரவா ரணங்கினுடன் றோணியில்வீற் றிருந்தாரைச்
செந்தமிழின் பந்தத்தாற் றிருப்பதிகம் பலபாடி.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் அவ்வாறுவந்த அடியார்களை யெதிர்கொண்டு மனமகிழ்ச்சியடைந்து, அளவற்ற சிறப்பினையுடைய அவ்வடியார்களோடும் இனிதாக அமர்ந்து,அழகியபெரியநாயகியாரோடு திருத்தோணியில் வீற்றிருந்தருளிய தோணியப்பரைச் செந்தமிழ்த்தொடையால் பலதிருப்பதிகங்கள் பாடியருளி.—எ-று. (ககருச)

பெருமகிழ்ச்சி யுடன்செல்லப் பெருந்தவத்தாற் பெற்றவரு
மருவுபெருந் கிளையான மறையவரு முடன்கூடித்
திருவளர்ஞா னத்தலைவர் திருமணஞ்செய் தருளுதற்குப்
பருவமிது வென்றெண்ணி யறிவிக்கும் பாங்கணைந்தார்.

(இ-ள்.) மிக்க மகிழ்ச்சியோடு சிலகாலஞ் செல்ல, பெரிய தவத்தினாற் பெற்ற சிவபாத விருதயரும், பொருந்திய பெரிய சுற்றத்தாராகிய வேதியர்களும் ஒருங்குசேர்ந்து, பிள்ளையார் திருக்கலியாணமகோற்சவஞ் செய்தருளுதற்குரிய காலம் இதுவென்று கருதித் தெரிவிக்குங் குணமுடையவராயடைந்தார்கள்—எ-று. (ககருரு)

நாட்டுமறை முறையொழுக்க ஞானபோ னகருக்குங்
கூட்டுவது மனங்கொள்வார் கோதின்மறை நெறிச்சடங்கு
காட்டவரும் வேள்விபல புரிவதற்கோர் கன்னிதனை
வேட்டருள வேண்டுமென விண்ணப்பஞ் செய்தார்கள்.

(இ-ள்.) வேதத்திற் கூறிய விதியொழுக்கமாகிய திருமணத்தைத் திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்குஞ் செய்விப்பதை மனதிற் கொண்ட அவ்வேதியர்கள் குற்றமற்ற வேத விதிப்படிச் செய்யுஞ் சடங்குகளைக் காட்ட வருகின்ற பல வேள்விகளைச் செய்வதற்கு ஒரு கன்னிகையைத் திருமணஞ் செய்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தார்கள்—எ-று. (ககருசா)

மற்றவர்த மொழிகேட்டு மாதவத்தின்கொழுந்தனையார்
சுற்றமுறு பெரும்பாசத் தொடர்ச்சிவிடு நிலைமையராய்ப்
பெற்றமுயர்த் தவரருண்முன் பெற்றதினு லிசையாது
முற்றியதா யினுங்கூடா தென்றவர்முன் மொழிந்தருள.

(இ-ள்.) மகத்தாகிய தவக்கொழுந்து போன்ற பிள்ளையார் அவர்கள் வார்த்தையைக் கேட்டருளிச் சுற்றத்தாரால வருகின்ற பெரிய பாசத் தொடக்கை யொழிக்குங் கருத்துடையவராய், இடபக்கொடியையுயர்த்திய தோணியப்பரது திருவருளை முன்னே பெற்றதனால் அது பொருந்தாது; (அன்றி) முடியுமாயினும், அஃது எமக்குப் பொருந்தாதென்று அவர்களுக்கு முன்னே கூறியருள—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (ககருஎ)

அருமறையோ ரவர்பின்னும் கைதொழுதங் கறிவிப்பா
ரிருநிலத்து மறைவழக்க மெடுத்தீர்நீ ராதலினால்
வருமுறையா லறுதொழிலின் வைதிகமா நெறியொழுகுந்
திருமணஞ்செய் தருளுதற்குத் திருவுள்ளஞ் செய்யுமென.

(இ-ள்.) அரிய வேதியர்கள் பின்னும் வணங்கியறிவிப்பார்கள், தேவரீர் பெரிய உலகத்தில் வேதவொழுக்கத்தை நிலைப்படுத்தினீர்; ஆதலால், வருகின்ற முறைமைப்படி ஆறுதொழிலோடுகூடிய வைதிக நெறியி லொழுகுதற்கு

ரிய திருமணஞ் செய்தருளுதற்குத் திருவுள்ளங் கொண்டருளவேண்டுமென்று கூற—எ-று.

அறுதொழிலாவன.—ஓதல் - ஓதுவித்தல் - வேட்டல் - வேட்பித்தல் - ஈதல்- ஏற்றல் என்பன. (ககரு௪)

மறைவாழ வந்தணார்தம வாய்மையொழுக் கம்பெருகுந்
துறைவாழச் சுற்றத்தார் தமக்கருளி யுடன்படலும்
பிறைவாழுந் திருமுடியிற் பெரும்புனலோ டரவணிந்த
கறைவாழுங் கண்டத்தார் தமைத்தொழுது மனங்களித்தார்.

(இ ள்.) வேதமார்க்கம் வாழவும், வேதியர்களது மெய்ம்மையாகிய நல்லொழுக்கமிக்க நிலைகள் வாழவும், தமது சுற்றத்தாருக்கு (அவ்வாறே செய்மினென்று) அருள்செய்து பிள்ளையார் உடன்படவும், இளம்பிறை வாழுந் திருமுடியில் பெரிய கங்கைநதியோடு பாம்பையுமணிந்த காளகண்டராகிய தோணியப்பரை வணங்கி மனமகிழ்ச்சி யடைந்தருளினர்—எ-று. (ககரு௫)

திருஞான சம்பந்தர் திருவுள்ளஞ் செய்ததற்குத்
தருவாய்மை மறையவருந் தாதையருந் தாங்கரிய
பெருவாழ்வு பெற்றாராய்ப் பிஞ்ஞகன்ற னருளென்றே
யுருகாநின் றின்பமுறு முளமகிழ்ச்சி யெய்துவார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவுள்ளமிசைந்ததற்கு மெய்ம்மைபொருந்திய வேதியர்களும் சிவபாதவிருதயரும் தாங்குதற்கரிய பெரிய வாழ்வைப் பெற்றவர்களாய், இது சிவபெருமான்றிருவருளென்று மன முருகி நின்று,இன்பமிக்க தமதுள்ளத்தில மகிழ்ச்சியடைவாராயினார்—எ-று. (ககசு௦)

ஏதமில்சீர் மறையவரி லேற்றகுலத் தோடிசைவால்
நாதர்திருப் பெருமணத்து நம்பாண்டார் நம்பிபெறுங்
காதலியைக் காழிநா டுடையபிரான் கைப்பிடிக்கப்
போதுமவர் பெருந்தன்மை யெனப்பொருந்த வெண்ணினார்.

(இ-ள்.) குற்றமற்ற சிறப்பினையுடைய வேதியர்களில் விவாகஞ் செய்தற்குரிய கோத்திரத்தோடு பொருத்த முடைமையால, சிவபெருமானதுதிருப்பெருமணமென்னுந் திருப்பதியிலுள்ள நம்பாண்டார் நம்பியெனபவர் பெற்ற புத்திரியைத் திருஞானசம்பந்தப் பிள்ளையார் பாணிக்கிரகணஞ்செய்யஅவர் பெருந்தன்மையானது அமையுமென்று தீர்க்க யோசித்தார்கள்—எ-று. ()

திருஞான சம்பந்தர் சீர்பெருக மணம்புணரும்
பெருவாழ்வு திருத்தொண்டர் மறையவர்கண் மிகப்பேணி
வருவாரும் பெருஞ்சுற்ற மகிழ்சிறப்ப மகட்பேசத்
தருவார்தண் பணைநல்லூர் சாரின்றார் தாதையார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிறப்புமிகும்படித் திருமணஞ் செய்யும் பெரிய வாழ்வினை திருத் தொண்டர்களும் வேதியர்களும் (கேள்வியுற்று) மிக விரும்பிவருகின்றவர்களும், பெரிய சுற்றத்தாரும் மகிழ்ச்சிமிகும்படி, சிவபாதவிருதயர்பெண்பேசுதற்கு விருக்ஷங்கள் நிறைந்த குளிர்ந்த வயல் சூழ்ந்த அத்திருப்பெருமணநல்லூரை யடைவாராயினார்—எ-று. (ககசு௨)

மிக்கதிருத் தொண்டர்களும் வேதியரு முடனேகத்
திக்குநிகழ் திருநல்லூர்ப் பெருமணத்தைச் சென்றெய்தி

தக்கபுகழ் நம்பாண்டார் நம்பிதா மதுகேட்டுச்
செக்கர்முடிச் சடையார்தந் திருப்பாதந் தொழுதெழுவார்.

(இ-ள்.) சிறந்த திருத்தொண்டர்களும், வேதியர்களும் தம்முடன் வரும்படி திசைகடோறும் விளங்குகின்ற திருநல்லூர்ப் பெருமணமென்னுந் திருப்பதியைச்சென்றுசேர, தகுந்தகீர்த்தியையுடைய நம்பாண்டார் நம்பி அதனைக் கேள்வியுற்று, செவ்வானம்போலுஞ் சடைமுடியை யுடைய சிவபெருமானது திருவடிகளை வணங்கி, அவரை யெதிர்கொள்ள எழுகின்றவராயினர்—எ-று.

ஒப்பரிய பேருவகை யோங்கியெழு முள்ளத்தா
லப்புநிறை குடம்விளக்கு மறுகெல்லா மணிபெருக்கிச்
செப்பரிய வார்வமிகு பெருஞ்சுற்றத்தொடுஞ்சென்றே [டார்.
யெப்பொருளு மெய்தினே னெனத்தொழுதங் கெதிர்கொண்

(இ-ள்.) ஒப்பற்ற பெருமகிழ்ச்சியானது அதிகரித்தெழுகின்ற திருவுள்ளத்தோடு பூரணகும்பங்களையும், திருவிளக்குகளையும் வீதிகளிலெல்லாம் அழகுபெறவைத்து, சொல்லுதற்கரிய விருப்பமிகுந்த பெரிய சுற்றத்தாருடன் சென்று, (இம்மைமறுமைக்குரிய) எல்லாப்பொருள்களையும் யான் அடைந்தேனென்று கூறி வணங்கி அங்கே எதிர்கொண்டார்—எ-று. (கககச)

எதிர்கொண்டு மணிமாடத் தினிலெய்தி யின்பமுறு
மதுரமொழி பலமொழிந்து வரன்முறையாற் சிறப்பளிப்பச்
சதுர்முகனின் மேலாய சண்பைவரு மறையவரு
முதிருணர்வின் மாதவரு மணைந்ததிற மொழிகின்றார்.

(இ-ள்.) அவ்வாறு எதிர்கொண்டழைத்துத்தமது அழகியதிருமாளிகையிலடைந்து, மதுரமாகிய பலவார்த்தைகளைக் கூறிக் கிரமப்படிப் பல சிறப்புகளைச்செய்ய, பிரமனிலுஞ் சிறந்தவராகிய சிவபாதவிருதயர் முதலிய வேதியர்களும், பேருணர்ச்சியையுடையஅடியார்களும் தாங்கள்வந்த திறத்தைக் கூறுவாரானார்கள்—எ-று. (கககரு)

ஞானபோ னகருக்கு நற்றவத்தி னொழுக்கத்தா
லூனமில்சீ லத்தும்பான் மகட்பேச வந்ததென
வானபே றந்தணர்பா லருளுடைமை யாமென்று
வானளவு நிறைந்தபெரு மனமகிழ்ச்சி யொடுமொழிவார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு நல்ல தவவொழுக்கத்தில் குற்றமற்ற சீலத்தையுடைய உம்மிடத்தில் பெண்பேசவந்ததென்றுகூற, நீவிர் இங்கு வந்த பேறானது, இவ்வேதியர்களிடத்து வைத்த பெருங் கருணையாமென்று, மிகவுமுயர்ந்தசிறந்த மனமகிழ்வோடுங்கூறுவாராயினர்—எ-று. (கககசு)

உம்முடைய பெருந்தவத்தா லுலகனைத்து மீன்றளித்த
வம்மைதிரு முலைப்பாலிற் குழைத்தவா ரமுதுண்டார்க்
கெம்முடைய குலக்கொழுந்தை யாமுய்யத் தருகின்றோம்
வம்மினென வுரைசெய்து மனமகிழ்ந்து செலவிடுத்தார்.

(இ-ள்.) உமது பெருந்தவத்தினால் சர்வலோகங்களையும் பெற்றருளிய உமாதேவியாரது திருமுலைப்பாலோடு குழைத்த அரிய ஞானமுதத்தை யுண்டருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்கு எமது குலக்கொழுந்துபோன்ற புத்திரியை யாங்களுய்யும்பொருட்டுத் திருமணஞ்செய்து தருகின்றோம்;

வாருங்களென்று கூறி, மனமகிழ்ந்து (அவர்களைச் சீகாழிக்குச்) செல்லும்படி யனுப்பினார்—எ-று. (கககூஎ)

பேருவகை யாலிசைவு பெற்றவர்தா மீண்டணைந்து
காருலவு மலர்ச்சோலைக் கழுமலத்தை வந்தெய்திச்
சீருடைய பிள்ளையார்க் கவர்சேர்ந்த படிசெப்பிப்
பார்குலவுந் திருமணத்தின் பான்மையினைத் தொடங்குவார்.

(இ-ள்.) மிக்க மகிழ்ச்சியோடு நம்பாண்டார் நம்பியினது உடன்பாட்டைப்பெற்ற சிவபாதவிருதயர் மீண்டு சென்று, மேகங்கள் தவழும் மலர்கள் நிறைந்த சோலைசூழ்ந்த சீகாழியை யடைந்து சிறந்த திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்கு நம்பாண்டார்நம்பி உடன்பட்டமையைக் கூறி, உலகத்தில் விளங்குந் திருக்கல்யாணத்தின் முறைமையைத் தொடங்குவாராயினார்—எ-று. ()

திருமணஞ்செய் கலியாணத் திருநாளுந் திகழ்சிறப்பின்
மருவியவோ ரையுங்கணித மங்கலநூ லவர்வகுப்பப்
பெருகுமண நாளோலை பெருஞ்சிறப்பி னுடன்போக்கி
யருள்புரிந்த நன்னாளி லணிமுளைப்பா லிகைவிதைத்தார்.

(இ-ள்.) திருக்கல்யாணஞ் செய்தற்குரிய திருநாளும், மிக்க சிறப்போடுகூடிய இலக்கினமும் சோதிட சாஸ்திரிகள் நியமிக்க, சிறந்த திருமணத்திற்குரிய முகூர்த்த ஓலையை மிகுந்த சிறப்புடன் அனுப்பி, நியமித்தநல்லமுகூர்த்தத்தில் அழகிய முளைப்பாலிகைகளை விதைத்தார்—எ-று. (கககூகூ)

செல்வமலி திருப்புகலிச் செழுந்திருவீ திகளெல்லா
மல்குநிறை குடம்விளக்கு மகரதோ ரணநிரைத்தே
யெல்லையிலா வொளிமுத்து மாலைகளெங் கணுநாற்றி
யல்குபெருந் திருவோங்க வணிசிறக்க வலங்கரித்தார்.

(இ-ள்.) பலவகைச் செல்வங்கள் நிறைந்த சீகாழிப்பதியின் செழிய திருவீதிகளெல்லாம் நெருங்கிய பூரணகும்பங்களையும், திருவிளக்குகளையும், மகரதோரணங்களையும் வரிசையாக வமைத்து, அளவற்ற ஒளிபொருந்திய முத்துமாலைகளை எவ்விடத்தும் தொங்கவிட்டு,நிறைந்த பேரழகு மிகும்படி அணிசிறந்தோங்க அலங்காரஞ் செய்தார்—எ-று. (ககஎ0)

அருந்தவத்தோ ரந்தணர்க ளயலுள்ளோர் தாமுய்யப்
பொருந்துதிரு நாளோலை பொருவிறந்தார் கொண்டணையத்
திருந்துபுகழ் நம்பாண்டார் நம்பிசிறப் பெதிர்கொண்டு [வார்.
வருந்தவத்தான் மகட்கொடுப்பார் வதுவைவினை தொடங்கு

(இ-ள்.) அரிய தவத்தினையுடைய அடியார்களும், வேதியர்களும், அயலிடங்களி லுள்ளவர்களும் உய்யும்படி, பொருந்திய முகூர்த்த ஓலையை அளவற்ற வேதியர்கள் கொண்டுவர, திருந்திய புகழையுடைய நம்பாண்டார் நம்பியென்பவர் சிறப்போடு அத்திருமுகத்தை யெதிர்கொண்டு பெற்று, முன் செய்ய வந்த தவங் காரணமாகத் தமது புத்திரியை விவாகஞ் செய்துகொடுப்பாராய்த் திருக்கல்யாணத் தொழிலைத் தொடங்குவாராயினார்—எ-று. (ககஎக)

மன்னுபெருஞ் சுற்றத்தா ரெல்லாரும் வந்தீண்டி
நன்னிலைமைத் திருநாளுக் கெழுநாளா நன்னாளிற்

பன்மணிமங் கலமுரசம் பல்லியங்க ணிறைந்தார்ப்பப்
பொன்மணிப்பா லிகைமீது புனிதமுளை பூரித்தார்.

(இ-ள்.) நிலைபெற்ற பெரிய சுற்றத்தாரனைவரும் வந்து கூடி, நல்ல நிலைமையோடு கூடிய திருக்கல்யாண தினத்திற்கு ஏழுநாள்முன்னே, நல்ல நாளில் பல மணிகளழுத்தியமங்கலமுரசும் பல வாத்தியங்களும் நிறைந்துஆரவாரிக்க, பொன்னாலாகியஅழகிய பாலிகைக் கிண்ணத்தின்மேல் சுத்தமான முளைகளை நிறைத்தார்—எ-று. பாலிகை - ஆகுபெயர். (ககஎஉ)

சேணுயரு மாடங்க டிருப்பெருகு மண்டபங்க
ணீணிலைய மாளிகைக ணிகரிலணி பெறவிளக்கிக்
காணவருகை வினைவண்ணங் கவினொங்கும் படியெழுதி
வாணிலவு மணிக்கடைக்கண் மங்கலக்கோ லமபுனைந்து.

(இ-ள்.) விண்ணுலகளவுமுயர்ந்த மாடங்களையும், அழகுமிக்க மண்டபங்களையும், உயர்ந்த நிலைகளையுடைய மாளிகைகளையும் மிக்க அழகுண்டாகவமைத்து, காணத்தக்க கைத்தொழிலாகிய சித்திரங்களை அழகு விளங்கும்படியெழுதி, ஒளிவிளங்குகின்ற மணிகளழுத்திய தலைவாயிலில மங்கலகரமாகிய கோலங்களிட்டு.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (ககஎங)

நீடுநிலைத் தோரணங்க ணீன்மறுகு தொறுநிரைத்து
மாடுயரு கொடிமாலை மணிமாலை யிடைபோக்கிச
சேடுயரும வேதிகைகள் செழுஞ்சாந்து கொடுநீவிப
பீடுகெழு மணிமுத்தின் பெருமபந்தா பலபுனைந்தார்.

(இ-ள்.) உயர்ந்த நிலைத்தோரணங்களை நீண்ட வீதிகள்தோறும் வரிசையாக நிறுத்திப் பக்கங்களிலுயர்ந்த கொடிவரிசைகளையும் இரத்தினமாலைகளையும் இடையிடையே கட்டி, மிகவுயர்ந்த திண்ணைகளைச் செழிய கலவைச்சாந்திட்டு மெழுகிப் பெருமைபொருந்திய அழகிய பெரிய பல முத்துப்பந்தலை அலங்கரித்தார்.—எ-று. (ககஎச)

மன்றலவினைத் திருமுளைநா ளொடங்கிவரு நாளெல்லா
முன்றிறொறும வீதிதொறு முகநெடுவா யிலகடொறு
நின்றொளிரு மணிவிளக்கு நிறைவாசப்பொற்குடங்க
டுன்றுசுடர்த் தாமங்க டூபங்க டுதைவித்தார.

(இ-ள்.) திருமணஞ்செய்தற்குப் பாலிகையில் முளையிட்ட நாள் தொடங்கி வருகின்ற நாள்களெல்லாம் முற்றங்கள்தோறும், வீதிகள்தோறும், நீண்ட தலைவாயில்கள்தோறும் நிலைத்து விளங்குகின்ற தூண்டாவிளக்குகளையும், நீர் நிறைந்த வாசனைபொருந்திய பொற்குடங்களையும், ஒளிபொருந்திய பொன்னரிமாலைகளையும், தூபங்களையும் நெருங்கவைத்தார்.—எ-று. (ககஎரு)

எங்கணுமெய்த் திருத்தொண்டர் மறையவர்க ளேனையோர்
மங்கலநீண் மணவினைநாள் கேட்டுமிக மகிழ்வெய்திப்
பொங்குதிருப் புகலிதனி லுடோறும் புகுந்தீண்டி
யங்கணணைந் தவர்க்கெல்லாம் பெருஞ்சிறப்பு மிகவளித்தார்.

(இ-ள்.) எவ்விடங்களிலும் மெய்ம்மைபொருந்திய திருத்தொண்டர்களும், வேதியர்களும், அவரல்லாத மற்றவர்களும் சுப மிக்க திருக்கல்யாண

நாளைக் கேள்வியுற்று மிக மகிழ்ச்சியடைந்து, சிறந்த சீகாழித்திருப்பதியில் நாள்தோறும் வந்து கூடி, அத்திருநல்லூருக்கு வந்தவர்களுக்கெல்லாம் பெரிய சிறப்பினை மிகுதியுஞ்செய்தார்.—எ-று. (கக௭௬)

மங்கலதூ ரியநாத மறுகுதொறு நின்றியம்பப்
பொங்கியநான் மறையோசை கடலோசை மிகப்பொலியத்
தங்குநறுங் குறையகிலின் றழைத்தசெழும் புகையினுடன்
செங்கனலா குதிப்புகையுந் தெய்வவிரை மணம்பெருக.

(இ-ள்.) மங்கலவாத்தியங்களி னொலியானது வீதிகள்தோறும் நிலைபெற்று ஒலிக்கவும், அதிகரித்த நான்குவேதங்களி னோசையானது கடலோசையினும் மிகுதியாக விளங்கவும், நறுமணம்பொருந்திய அகிற்றுண்டுகளினாலுண்டாகிய செழிய புகையோடு சிவந்த அக்கினியிற்செய்யும் ஆகுதியினாலாகிய புகையும் தெய்வத்தன்மைபொருந்திய வாசனைவீசவும்.—எ-று.

இதுமுதல் ஐந்துபாடலுங் குளகம். (கக௭௭)

எண்டிசையி லுள்ளோரு மீண்டுவளத் தொடுநெருங்கப்
பண்டநிறை சாலைகளும் பலவேறு விதம்பயில
மண்டுபெரு நிதிக்குவைகண் மலைப்பிறங்க லெனமலிய
வுண்டிவினைப் பெருந்துழனி யோவாத வொலியோங்க.

(இ-ள்.) எட்டுத்திக்கிலுள்ளவர்களும் இங்குப் பலவளத்தோடும் நெருங்குதலால், பல பண்டங்களும் நிறைந்த மாளிகைகளும் பற்பலவிதங்களாகப் பொருந்தவும், நெருங்கிய (பொன்மணிமுதலிய) பெரியநிதிக்குவியல்கள் மலைகள்போல விளங்கவும், உணவுகொள்ளும் பேரோசையானது நீங்காத ஒலியாயோங்கவும்.—எ-று.

போசனஞ்செய்யும்போது பேசாது உண்ணவேண்டுமென்பது நூன்முறையாதலின், ஈண்டு உண்டாகிய ஒலி அமுதுபடைப்போரால் வேண்டுகோள் முதலியவற்றா லுண்டாகிய ஒலியெனக் கொள்க. (கக௭௮)

மாமறைநூல் விதிச்சடங்கில் வகுத்தமுறை நெறிமரபின்
றாமணநல் லுபகரணஞ் சமைப்பவர்தந் தொழிறுவன்றத்
தாமரையோ னனையபெருந் தவமறையோர் தாமெடுத்த
பூமருவு பொற்கலசப் புண்ணியநீர் பொலிவெய்த.

(இ-ள்.) மகத்தாகிய வேதத்தில்விதித்த கலியாணச்சடங்கில் வகுத்த விதிமுறையே நல்லமணத்தோடுகூடிய உபகரணங்களை யமைப்பவர்களது தொழில் நெருங்கவும், பிரமனையொத்த பெரியதவத்தினையுடையவேதியர்கள் தங்கள்கையில்தாங்கிய மலர்களோடுசேர்ந்த பொற்கலசங்களில்நிறைத்த புண்ணியதீர்த்தமானது விளக்கமடையவும்.—எ-று. (கக௭௯)

குங்குமத்தின் செழுஞ்சேற்றின் கூட்டமைப்போ ரினங்குழுமப்
பொங்குவிரைப் புதுக்கலவைப் புகையெடுப்போர்தொகைவிரவத்
துங்கநறுங் கர்ப்பூரச் சுண்ணமிடிப் போர்நெருங்க
வெங்குமலர்ப் பிணைபுனைவோ ரீட்டங்கண் மிகப்பெருக.

(இ-ள்.) செழிய குங்குமக்குழம்பின் கூட்டைஇழைப்பவர்களது கூட்டங்கள் நெருங்கவும், வாசனைவீசுகின்ற புதிய கலவைப்பொருள்களாலாகிய புகையை யெடுக்கின்றவர்களது கூட்டங்கள்நெருங்கவும், உயர்ந்தநறுமணங்கம

ழும் கர்ப்பூரச் சுண்ணமிடிப்பவர்கள் நெருங்கவும், மலர்மாலைகளைத் தொடுப்பவர்களது கூட்டங்கள் எங்கும் மிகுதியாகப் பெருகவும்.—எ-று. (ககஅ0)

இனையபல வேறுதொழி லெம்மருங்கு நிறைத்தியற்று
மனைவளரு மறுகெல்லா மணவணிசெய் மறைமூதூர்
நினைவரிய பெருவளங்க ணெருங்குதலா னிதிக்கோமான்
றனையிறைவர் தாமேவச் சமைத்ததுபோ லமைந்துளதால்.

(இ-ள்.) இத்தகைய பல வேறுவகைத்தொழில்களை எவ்விடங்களிலும் வரிசையாகச் செய்யும் மாளிகைகள் நிறைந்த வீதிகளெல்லாம் திருமணத்தின் அழகைக்காட்டுகின்ற வேதியர்கள் வாழும் பழைய திருநல்லூரில் நினைத்தற்கரியமிக்கவளத்தோடு நெருங்கியிருத்தலால், சிவபெருமான் குபேரனையனுப்ப, அவன் அவ்வளங்களை யமைத்ததுபோன் றிருந்தது.—எ-று. (ககஅக)

வேறு.

மாறி லாநிறை வளந்தரு புகலியின் மணமீக்
கூறு நாளின்முன் னாளினில் வேதியர் குழாமு
நீறு சேர்திருத் தொண்டரு நிகரிலா தவருக்
காறு சூடினா ரருட்டிருக் காப்புநா ணணிவார்.

(இ-ள்.) மாறுதலில்லாத நிறைந்த வளம்பொருந்திய சீகாழிப்பதியில் திருமணத்தை மேற்கொள்ளுந் திருநாளின் முதல்நாளில் வேதியர் கூட்டங்களும், விபூதியணிந்த திருத்தொண்டர்களும், ஒப்பற்ற திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்குக் கங்கைநதியையணிந்த சிவபெருமானது திருவருள் வடிவமான காப்புநாணை (த்திருமணத்தின்பொருட்டுக்)கட்டுவாராயினர்.—எ-று. (ககஅஉ)

வேத வாய்மையின் விதியுளி வினையினால் விளங்க
வோத நீருல கியன்முறை யொழுக்கமும் பெருகக்
காத லினிடிருத் தொண்டர்கண் மறையவர் கவினார்
மாதர் மைந்தர்பொற் காப்புநா ணகர்வலஞ் செய்தார்.

(இ-ள்.) வேதத்திற்கூறும் விதிகள் இச்செயலால் விளங்கவும், சமுத்திரஞ்சூழ்ந்த உலகநடையின் முறைமையான ஒழுக்கங்களும் விருத்தியடையவும், அன்புமிகுந்த திருத்தொண்டர்களும் வேதியர்களும், அழகுபொருந்திய மாதர்களும், புருடர்களுமாகிய இவர்கள் பொன்னாலாகிய காப்புநாணை நகர் வலஞ் செய்வித்தார்கள்.—எ-று. (ககஅங)

நகர்வ லஞ்செய்து புகுந்தபி னவமணி யணிந்த
புகரில் சித்திர விதானமண் டபத்தினிற் பொலியப்
பகரும் வைதிக விதிச்சமா வர்த்தனப் பான்மை
திகழ முற்றிய செம்மலார் திருமுன்பு சேர்ந்தார்.

(இ-ள்.) நகரத்தை வலஞ்செய்து (திருமாளிகையிற்) புகுந்தபின்பு, நவரத்தினங்களா லலங்கரித்த குற்றமற்ற அழகிய மேற்கட்டிகட்டிய மண்டபத்தில் பொலிவெய்த, சொல்லுகின்ற வைதிகவிதியாகிய சமாவர்த்தனக்கிரியையை விதிப்படிமுடித்த திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருமுன்னே (வேதியர்கள் யாவரும்) ஒருங்குசேர்ந்தார்கள்.—எ-று.

சமாவர்த்தனமாவது:—வேதாத்தியயனஞ்செய்து முடித்துப்பிரமசரிய விரதம் நிறைவேற்றிப் பிள்ளைவீட்டிற்கு வரும்பொழுது செய்யுஞ்சடங்கு. ()

செம்பொ னின்புரி கலத்தினிற் செங்கெல்வெண் பரப்பின்
வம்ப ணிந்தநீண் மாலைசூழ் மருங்குற வமைத்த
வம்பொன் வாசநீர்ப் பொற்குட மரசிலை தருப்பை
பம்பு நீள்சுடர் மணிவிளக் கொளிர்தரும் பரப்பில்.

(இ-ள்.) சிவந்த பொற்பாத்திரத்தில் வெள்ளிய சம்பா நெற்பரப்பின் மேல் வாசனைபொருந்திய நீண்ட மாலைகள்சூழ்ந்த (மண்டபத்தின்) அருகில் பொருந்தவைத்த அழகிய பொன்னாற்செய்த வாசனைபொருந்திய நீர் நிறைந்த பூரணகும்பங்களும், அரசிலையுந் தருப்பையும் பரவிய ஒளிமிக்க இரத்தினத் தீபங்கள் விளங்குகின்றஇடத்தில்.—எ-று.

இதுமுதல் நான்குபாடலுங் குளகம். (ககஅரு)

நாத மங்கல முழக்கொடு நற்றவ முனிவர்
வேத கீதமும் விம்மிட விரைகமழ் வாசப்
போது சாந்தணி பூந்துகில் புனைந்தபுண் ணியம்போன்
மீது பூஞ்சய னத்திருந் தவாமுன்பு மேவி.

(இ-ள்.) மங்கலவாத்திய முழக்கத்தோடு நல்லதவத்தையுடைய வேதியர்கள்செய்யும் வேதங்களினிசையுமதிகரிக்க,வாசனைவீசுகின்ற புஷ்பங்களும், சந்தனமும்,ஆபரணமும்,சிறந்த பட்டாடையும்அணிந்த புண்ணியவடிவம்போலப் புஷ்பசயனத்தின்மேல் எழுந்தருளியிருந்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருமுன்பு (அவ்வேதியர்கள்) அடைந்து.—எ-று. (ககஅசு)

ஆர்வ மிக்கெழு மன்பினுன் மலரய னனைய
சீர்ம றைத்தொழிற் சடங்குசெய் திருந்துநூன் முனிவர்
பார்வ ழிப்பட வருமிரு வினைகளின் பந்தச
சார்பொ ழிப்பவர் திருக்கையிற் காப்புநாண் சாத்த.

(இ-ள்.) விருப்பமிகுத் தெழுகின்ற அன்போடு வேதவொழுக்கமான சடங்குகளைச் செய்கின்ற திருத்தமாகிய பூணூலையணிந்த பிரமனையொத்த சிறந்த வேதியர்கள், உலகத்திற் பிறக்கவருகின்ற நல்வினை தீவினைகளின் பந்தமாகிய சார்பைநீக்கி யருளுந் திருஞானசம்பந்தப் பிள்ளையாரது திருக்கரத்தில் காப்புநாணையணிய.—எ-று. (ககஅஎ)

கண்ட மாந்தர்கள் கடிமணங் காணவந் தணைவார்
கொண்ட வல்வினைப் பரப்பவிழ் கொள்கைய வான
தொண்டர் சிந்தையும் வதனமு மலர்ந்தன சுருதி
மண்டு மாமறைக் குலமெழுந் தார்த்தன மகிழ்ந்தே.

(இ-ள்.) அதனைத் தரிசித்தமனிதர்களும், புதிய திருமணத்தைத் தரிசிக்க வந்தவர்களும், தம்மைப்பற்றிய தீவினைப்பகுதிகள் நீங்குங் கொள்கையையுடைய அடியார்களுமாகிய இவர்களதுமனமும் முகமும்மலர்ந்தன;வேதங்களையுணர்ந்தவேதியர்கூட்டமும் மகிழ்ச்சியடைந்தெழுந்து ஆரவாரித்தன.—எ-று.

நிரந்த கங்குலி னிதிமழை விதிமுறை யெவர்க்கும்
புரந்த ஞானசம் பந்தர்தாம் புன்னெறிச் சமய
வரந்தை வல்லிரு ளகலவந் தவதரித் தாற்போற்
புரந்த பேரிரு ளிரிந்துவந் தெழுந்தனன் பகலோன்.

(இ-ள்.) (உலகத்திற்) பரந்த சமணர்களாகிய இருளினிடத்து அருட் செல்வமாகிய மழையை வேதவிதிப்படி யாவர்க்குஞ் சுரந்தளித்தருளிய திரு ஞானசம்பந்தப் பிள்ளையார் அற்ப மார்க்கமாகிய புறச்சமயங்களென்னுந் துன் பத்தை விளைக்குங் கொடிய இருள் நீங்க, வந்து திருவவதாரஞ் செய்தாற்போ லப் பரவிய பெரிய இருளை யொழித்துச் சூரியனுதயமானுன்-எ-று. (கக அகூ)

அஞ்சி றைசுரும் பறைபொழிற் சண்பையாண் டகையார்
தஞ்சி வத்திரு மணஞ்செயத் தவஞ்செய்நா ளென்று
மஞ்ச னத்தொழில் புரிந்தென மாசிருள் கழுவிச்
செஞ்சு டர்க்கதிர்ப் பேரணி யணிந்தன திசைகள்.

(இ ள்.) அழகிய சிறகினையுடையவண்டுகள் சப்திக்குஞ் சோலைசூழ்ந்த சீகாழித்தலைவராகிய பிள்ளையாரது மங்கலகரமான திருமணஞ் செய்தற்குத் தவத்தைச் செய்தநாளிதுவென்று,தானும் திருமஞ்சனமாகிய தொழிலைச் செய்தாற்போலக் குற்றம் பொருந்திய இருளைக்கழுவிச் சிவந்த ஒளிபொருந்திய சூரியகிரணமென்னும் பெரியஆபரணத்தைத் திக்குகளணிந்தன.—எ-று. ()

பரம்பு தம்வயி னெங்கணு முள்ளபல வளங்க
ணிரம்ப முன்கொணர்ந் தெண்டிசை யவர்நெருங் குதலாற்
றரங்க டந்தவர் தந்திருக் கல்யா ணத்தின்
வரம்பி றன்பயன் காட்டுவ தொத்தது வையம்.

(இ-ள்.) பரவிய தம்மிடத்துள்ள பலவளங்களையும் நிரம்ப முன்னே கொண்டுவந்து எட்டுத்திக்கிலுள்ளவர்களும் நெருங்குதலினால்,ஒப்பற்றவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரது திருமணத்தில் அளவற்ற தனது வளங்களை இந்நிலவுலகமானது காட்டுவதை யொத்திருந்தது.—எ-று. (ககசுக)

நங்கள் வாழ்வென வருந்திரு ஞானசம் பந்தர்
மங்க லத்திரு மணவெழுச சியின்முழக் கென்னத்
துங்க வெண்டிரைச சுரிவளை யார்பபொடு சூழ்ந்து
பொஙகு பேரொலி முழக்குட னெழுந்தது புணரி.

(இ ள்.) நமது பெருவாழ்வென்று சொல்லும்படி யெழுந்தருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரது மங்கலகரமான திருக்கல்யாணத்தி லுண்டாகும் வாத்திய வொலிபோல, உயர்ந்த வெள்ளிய அலையினிடத்துள்ள சுரிந்த சங்குகளினாரவாரத்தோடு கரையிற் சூழ்ந்து பொங்குகின்ற பேரொலியாகிய முழக்கத்துடன் சமுத்திரமெழுந்தது.—எ-று. (ககசுஉ)

அளக்க ரேழுமொன் றுமெனும பெருமையெவ் வுலகும்
விளக்கு மாமண விழாவுடன் விரைந்துசெல வனபோற
றுளக்கில் வேதிய ராகுதி தொடங்கிடா முன்னம
வளர்க்கும் வேதியில வலஞ்சுழித் தெழுந்தது வன்னி.

(இ-ள்.) சப்தசமுத்திரங்களும்ஒன்றுசேர்ந்தாற்போலும் பெருமையை எவ்வுலகத்திலும் விளங்கச்செய்யும் சிறந்த திருக்கல்யாண விழாவுடன் தாமும் விரைந்து செல்லக்கருதினபோல, அசைவில்லாத வேதியர்கள் ஆகுதிகளைத் தொடங்குதற்கு முன்னே, தம்மைவளர்க்கும் யாககுண்டத்தில் ஓமாக்கினியானது வலமாகச்சுழித்தெழுந்தது.—எ-று. (ககசுங)

சந்த மென்மலர்த் தாதணி நீறுமெய் தரித்துக
கந்த மேவுவண் டொழுங்கெனுங் கண்டிகை பூண்டு
சிந்தை தூயவன் பர்களுடன் திருமணம் போத
மந்த சாரியின் மணங்கொணர்ந் தெழுந்தது மருதது.

(இ-ள்.) அழகிய மிருதுவாகிய பூந்தாதென்னும் அணியத்தக்க விபூதியை உடம்பிற்பூசி, கூட்டமாகவருகின்ற வண்டினொழுங்கென்னும உருத்திராக்ஷத்தைப் பூண்டு,மனதில்தூய்மை பொருந்திய அடியார்களுடன் திருமணத்திற்குச் செல்ல மந்தகதியோடு வாசனையை வகித்துக்கொண்டு தென்றற்காற்றுவீசியது.—எ-று. (ககசுசு)

எண்டி சைத்தலத் தியாவரும புகலிவந் தெய்தி
மண்டு மத்திரு மணவெழுச சியினணி வாய்ப்பக
கொண்ட வெண்ணிறக குருஉசசுடர்க் கொண்டல்களென்ன
வெண்டு கிறகொடி நிரைததது போன்றது விசுமபு.

(இ-ள்.) எட்டுத்திக்கி லுள்ளவர்களும் சீகாழியை வந்துசேர்ந்து, நெருங்கிய அத்திருமண வெழுச்சியில் அழகுபொருந்தப் பிடித்த வெண்ணிறம் பொருந்திய ஒளியினையுடைய மேகங்களென்னும் வெள்ளிய கொடியாடைகளை ஆகாயம் வரிசையாக வைத்தாற்போன்றிருந்தது.—எ-று. (ககசுரு)

ஏல விந்நலம் யாவைவு மெழுசசிமுன் காட்டுங்
காலை செய்வினை முற்றிய கவுணியா பெருமான்
மூல மாகிய தோணிமேன் முதல்வனை வணங்கிச
சீல மார்திரு வருளினன் மணத்தினமேற செலவார.

(இ-ள்.) பொருந்தும்படி இத்தகைய நலங்களனைத்தையுந் திருமணவெழுச்சியின் முன்னே காட்டுகின்ற அவ்வுதயகாலத்தில்,நித்தியகன்மங்களைச் செய்து முடித்த திருஞானசமபந்தப்பிள்ளையார் எப்பொருட்குங் காரணராகிய தோணியப்பனை வணங்கி,சிறந்த திருவருளின் வழித்தாய்த்திருமணத்திற்கெழுந்தருளுவாராயினர்.—எ-று. (ககசுசு)

காழி மாநகர் வேதியர் குழாத்தொடுங கலந்து
சூழு மன்பாக ளேனையோா துதைந்துமுன் செல்ல
வாழி மாமறை முழங்கிட வளம்பதி வணங்கி
நீழல வெண்சுடா நிததிலச சிவிகைமேற்கொண்டாா.

(இ-ள்.) சிறந்த சீகாழிப்பதியில்வாழும்வேதியர் கூட்டத்தோடுங் கலந்து சூழ்ந்த அடியார்களும், மற்றவர்களும்நெருங்கி முன்னேசெல்ல, மகத்தாகிய வேதங்களொலிக்க வளப்பம்பொருந்திய சீகாழிப்பதியை வணங்கி,மிக்க வெள்ளிய ஒளிபொருந்திய முத்துச்சிவிகையின்மே லெழுந்தருளினர்.-எ-று.

யான வாகன மேறுவார் யாருமேற கொள்ளக்
கான மாகிய தொங்கல்பிச சங்குடை கவரி
மேனெ ருங்கிட விசும்பினு நிலத்தினு மெழுந்த
வான துந்துபி முழககுடன் மஙகல வியங்கள்.

(இ-ள்.) சிவிகைகளிலும் வாகனங்களிலு மேறுகின்றவர்கள் யாவரும் அவ்வவ்வாகனங்களி லேறிவரவும், திரளாகிய மாலைகளும், மயிற்பீலிகளும், கு

டைகளும்,சாமரைகளும் மேலேநெருங்கவும்,தேவதுந்துபியின்முழக்கத்தோடு மங்கலவாத்தியங்கள் ஆகாயத்திலும் நிலவுலகத்திலும் முறைமையேயொலித்தன.

வேறு.

சங்கொடு தாரை சின்னந் தனிப்பெருங் காளந் தாளம்
வங்கிய மேனை மற்று மலர்துளைக் கருவி யெல்லாம்
பொங்கிய வொலியி னோங்கிப் பூசுரர் வேத நாத
மெங்கணு மெழுந்து மல்கத் திருமண மெழுந்ததன்றே.

(இ-ள்.) சங்குகளும், தாரையும், திருச்சின்னமும், ஒப்பற்ற பெரிய எக்காளமும், தாளமும், புள்ளாங்குழலும் இவையல்லாத வேறுதுளைக்கருவிகளுமாகிய எல்லாவாத்தியங்களும் மிக்கஒலியோடு அதிகரிக்கவும், வேதியர்கள் செய்யும் வேதநாதங்கள் எவ்விடத்திலுந்தோன்றி நிறையவும், திருக்கல்யாண மகோற்சவமெழுந்தது.—எ-று. (ககககூ)

கோதையர் குழல்சூழ் வண்டின் குழாத்தொலி யொருபாற்
வேதியர் வேதவாய்மை மிகுமொலி யொருபான் மிக்க[கோல
வேதமில் விபஞ்சி வீணை யாழொலி யொருபா லேத்து
நாதமங் கலங்கள்கீத நயப்பொலி யொருபா லாக.

(இ-ள்.) மாதர்களது கூந்தலிற் சூழ்ந்த வண்டின்கூட்டங்களினோசை யொருபக்கத்திலும், அழகிய வேதியர்கள்செய்யும் உண்மையாகிய வேதவாக்கியங்களின் மிகுந்தவோசையொருபக்கத்திலும்,சிறந்த குற்றமற்றவீணையும் யாழுமாகிய இவைகளினொலி யொருபக்கத்திலும்,துதிக்கின்ற இசைபொருந்திய மங்கலவாழ்த்துக்களும், சங்கீதங்களின் ஒலியும்ஒருபக்கத்திலுமாக.—எ-று. ()

விபஞ்சிவீணை - இருபெயரொட்டு. இதுமுதல் ஐந்துபாடலுங் குளகம்.

விண்ணினை விழுங்க மிக்க வெண்டுகிற் பதாகை வெள்ளங்
கண்வெறி படைப்ப மிக்க கதிர்விரி கவரிக் கான
மண்ணிய மணிப்பூ ணோடு மரிசன மலிந்த பொற்பி
னெண்ணிலா வண்ணத் தூசின் பொதிப்பரப் பெங்கு நண்ண.

(இ-ள்.) வெள்ளிய துகிற்கொடிகளின் கூட்டங்கள் ஆகாயத்தைமூடவும், மிகுந்தசாமரைக்கூட்டங்கள் கண்களை வெறிக்கச்செய்யவும்,அலங்கரிக்கத்தக்க இரத்தினாபரணங்களினோடு மிக்கமஞ்சள்பூசிய அழகிய அளவற்ற பட்டாடைகளின் பொதிக்கூட்டங்கள் எங்கும் பொருந்தவும்.—எ-று. (கஉ0க)

சிகையோடு மான்றோ ருங்குங் கிடையுமா சானுஞ்செல்வார்
புகைவிடும் வேள்விச் செந்தீ யில்லுடன் கொண்டு போவார்
தகைவிலா விருப்பின் மிக்க பதிகங்கள் விளம்பிச் சார்வார்
வகையறு பகையுஞ் செற்ற மாதவ ரியல்பின் மல்க.

(இ-ள்.) மயிரும் மான்றோலும் பூணூலுடன் சேர்த்தணிந்த வேதமோதுஞ் சிறுவர்களும் அவற்றையோதுவிக்குமாசானுமாகச்செல்பவர்களும்,புகைவிடுகின்ற யாகாக்கினிகளை மனைவிமார்களுடனெடுத்துக்கொண்டு செல்பவர்களும், அடங்காதவிருப்பத்தின் மிக்க தேவாரத் திருப்பதிகங்களை யோதிச்செல்பவர்களும், அறுவகைப்பகையையு மொழித்த சிறந்த முனிவர்களும்இயல்போடு நெருங்கவும்.—எ-று.

அறுபகை:—காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம். ()

அறுவகை விளங்குஞ் சைவத் தளவிலா விரதஞ் சாரு
நெறிவழி நின்ற வேட நீடிய தவத்தி னுள்ளோர்
மறுவறு மனத்தி லன்பின் வழியினால் வந்த யோகக்
குறிநிலை பெற்ற தொண்டர் குழாங்குழா மாகி யேக.

(இ-ள்.) ஆறுவகையாக விளங்குகின்ற சைவத்தில் அளவில்லாத விரதத்தைச்சார்ந்த நல்லொழுக்கத்தில்நின்ற சைவவேடமிருந்த தவமுனிவர்களும், குற்றமற்ற மனதில் அன்புகாரணமாகவந்த யோகக்குறி நிலைக்கப்பெற்ற அடியார்களும் கூட்டங்கூட்டமாய்ச் செல்லவும்.—எ-று.

அறுவகைச்சைவமாவன.—சைவம், பாசுபதம், மகாவிரதம், காளாமுகம்,வாமம், வைரவம் என்பன. (கஉ0௩)

விஞ்சைய ரியக்கர் சித்தர்கின்னரர் மிடைந்த தேவ
ரஞ்சன நாட்ட விட்டத் தரம்பைய ருடனா யுள்ளோர்
தஞ்சுடர் விமான மேறித் தழைத்தவா தரவி னோடு
மஞ்சுறை விசும்பின் மீது மணவணி காணச் சென்றார்.

(இ-ள்.) வித்தியாதரரும், இயக்கரும், சித்தரும், கின்னரரும், நெருங்கிய தேவர்களும் மையிட்டகண்களையுடைய கூட்டமாகிய தெய்வப்பெண்களுடன் கூடினவர்களாய்த் தங்கள்தங்கள் ஒளிபொருந்திய விமானங்களிலேறிக்கொண்டு, மிக்க விருப்பத்தோடு மேகங்கள் தவழும் ஆகாயத்தினிடத்துத் திருமணப்பொலிவைத் தரிசிக்கவந்தார்கள்.—எ-று. (கஉ0௪)

மற்றவர் மிடைந்து செல்லு மங்கல வனப்பின் காட்சி
முற்றவித் தலத்தி னுள்ளோர் மொய்த்துடன் படரும் போதி
லற்புத நிகழ்ச்சி யெய்த வணைதலான் மணமேற் செல்லும் [ல
பொற்பமை மணத்தின் சாயை போன்றுமுன் பொலியச் செல.

(இ-ள்.) அத்தேவர்கள் நெருங்கிச்செல்கின்ற மங்கலகரமான அழகின் காட்சியானது, இவ்வுலகத்துள்ளோ ரனைவரும் நெருங்கித் திருமணத்துடன் செல்லும்பொழுது அற்புதமுண்டாக விருத்தலால், திருமணத்தில்நின்று மேற்செல்கின்ற அழகிய அத்திருமணத்தினது சாயையையொத்து முன்னே விளங்கச்செல்லவும்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கஉ0௫)

தவவர சாள வுய்க்குந் தனிக்குடை நிழற்றச சாரும்
பவமறுத் தாள வல்லார் பாதமுள் ளத்துக் கொண்டு
புவனங்கள் வாழ வந்த பூந்தராய் வேந்தர் போந்து [ந்தார்.
சிவனமர்ந் துறையு நல்லூர்த் திருப்பெரு மணத்தைச் சேர்

(இ-ள்.) தவமாகிய அரசாட்சிசெய்யும்பொருட்டுப் பிடித்த ஒப்பற்ற முத்துக்குடைநிழலைச் செய்யும்படி, தம்மையடைந்த சனனமரணங்களையொழித்து அடிமைகொள்ளவல்ல சிவபெருமானது திருவடிகளை மனதிற்சிந்தித்து, சர்வலோகங்களும் வாழும்படி யவதரித்த திருஞானசம்பந்தப்பிள்ளையாரெழுந்தருளி, சிவபெருமான் வீற்றிருந்தருளிய திருநல்லூர்ப் பெருமணமென்னுந் திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று. (கஉ0௬)

பெருமணக் கோயி லுள்ளார் மங்கலம் பெருகு மாற்றால்
வருமணத் திறத்தின் முன்னர் வழியெதிர் கொள்ளச் சென்று
திருமணம் புணரவெய்துஞ் சிரபுரச் செம்ம லார்தா
மிருண்மணந் திலங்கு கண்டத் திறைவர்தங் கோயில் புக்கார்.

(இ-ள்.) திருநல்லூர்ப் பெருமணத் திருக்கோயிலிலுள்ள அடியார்கள் மங்கலமிகும்படி வருகின்ற திருமணவெழுச்சியின் முன்பு வழியிலெதிர்கொள்ளும்படி திருக்கலியாணஞ்செய்ய எழுந்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் சென்றருளி, இருண்டு விளங்குகின்ற கண்டத்தையுடைய சிவபெருமானது திருக்கோயிலையடைந் தருளினர்.—எ-று. (கஉ0எ)

நாதனைப் பணிந்து போற்றி நற்பொருட் பதிகம் பாடிக்
காதன்மெய் யருண்முன் பெற்றுக் கவுணியர் தலைவர் போந்து
வேதியர் வதுவைக் கோலம் புனைந்திட வேண்டு மென்னப்
பூதநா யகர்தங் கோயிற் புறத்தொரு மடத்திற் புக்கார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிவபெருமானை வணங்கித் துதித்து நல்லபொருளமைந்த திருப்பதிகம்பாடி யருளி, விருப்ப மிக்க மெய்ம்மையாகிய திருவருளை முன்புபெற்று, புறத்திற்சென்றருளி, வேதியர்கள் திருமணக்கோலத்தை யணியவேண்டுமென்று கூற, சிவபெருமானது திருக்கோயிலின்புறத்திலுள்ள ஒரு திருமடத்திற் புகுந்தருளினர்.—எ-று. (கஉ0அ)

பொற்குட நிறைத்த வாசப் புனிதமஞ் சனநீ ராட்டி
விற்பொலி வெண்பட் டாடை மேதக விளங்கச் சாத்தி
நற்றிரு வுத்த ரீய நறுந்துகில் சாத்தி நானப்
பற்பல கலவைச் சாந்தம் பான்மையி னணிந்த பின்னர்.

(இ-ள்.) பொற்குடங்களில் நிறைத்த வாசனைபொருந்திய பரிசுத்தமாகிய திருமஞ்சனநீரினால் முழுக்காட்டி, ஒளிவிளங்குகின்ற வெள்ளிய பட்டுவஸ்திரத்தை அழகுபொருந்தத்திருவரையில் தரித்து,நல்ல திருவுத்தரீயமென்னும் பட்டாடையைத் தோளின்மேற்சாத்தி, கஸ்தூரிசேர்ந்த பலகலவைச்சந்தனத்தை முறைமையோடு பூசியபின்பு.—எ-று.

இதுமுதல் ஏழுபாடலுங் குளகம். (கஉ0கூ)

திருவடி மலர்மேற் பூத்த செழுந்தகைச் சோதி யென்ன
மருவிய தரளக் கோவை மணிச்சரி யணையச் சாத்தி
விரிசுடர்ப் பட்டின் மீது விளங்கு பொற் சரட்டிற் கோத்த
பெருகொளி முத்தின் ருமம் பிறங்கிய தொங்கல் சாத்தி.

(இ-ள்.) திருவடித்தாமரைகளிற் பூத்த செழிய விளக்க மிக்க சோதியைப்போலப் பொருந்திய முத்துக்கோவைகளையுடைய அழகிய காற்சரியைப் பொருந்த அணிந்து,மிக்க ஒளிபொருந்திய திருவடிப்பரட்டின்மேல் விளங்குகின்ற பொற்சரட்டிற்கோத்த பேரொளிபொருந்திய முத்துவடத்தில் விளங்குகின்ற குச்சங்களையணிந்து.—எ-று. (கஉகம)

தண்சுடர்ப் பரிய முத்துத் தமனிய நாணிற் கோத்த
கண்கவர் கோவைப் பத்திக் கதிர்க்கடி சூத்தி ரத்தை
வெண்சுடர்த் தரள மாலை விரிசுடர்க் கொடுக்கின் மீது
வண்டிரு வரையி னீடு வனப்பொளி வளரச் சாத்தி.

(இ-ள்.) (பார்ப்பவரது)கண்ணைக் கவரத்தக்க குளிர்ந்த ஒளிபொருந்திய பெருமுத்துக்களைப் பொற்கயிற்றிற்கோத்த கோவைப்பத்தியையுடைய விளங்குகின்ற அரைஞாணை வெள்ளொளி பொருந்திய முத்து வரிசைகள் விரிந்தபிரகாசிக்கின்ற பின்கச்சத்தின்மேல் அழகிய திருவரையில் மிக்க அழகோடு ஒளிவிளங்கத் தரித்து.—எ-று. (கஉகக)

ஒளிர்கதிர்த் தரளக் கோவை யுதரபந் தனத்தின் மீது
தளிரொளி துளும்பு முத்தின் சன்னவீ ரத்தைச் சாத்திக்
குளிர்நில வெறிக்கு முத்தின் பூணநூற் கோவை சாத்தி
நளிர்கதிர் முத்து மாலை நகுசுட ராரஞ் சாத்தி.

(இ-ள்.) ஒளிவிளங்குகின்ற முத்துவடங்களாலாகிய உதரபந்தனத்தின் மேல் மிக்க ஒளிததும்புகின்ற சன்னவீரமென்னு முத்தாபரணத்தையணிந்து, குளிர்ந்த ஒளிவீசுகின்ற முத்துக்களாலாகிய பூணூல்வடத்தை யணிந்து, குளிர்ந்த ஒளியையுடைய முத்துமாலையாகிய ஆரத்தையணிந்து.—எ-று. (கஉகஉ)

வாள்விடு வயிரக் கட்டு மணிவிர லாழி சாத்தித்
தாளுறு தடக்கை முத்தின் றண்டையுஞ் சரியுஞ் சாத்தி
நீளொளி முழங்கைப் பொட்டு நிரைசுடர் வடமுஞ் சாத்தித்
தோள்வளைத் தரளப் பைம்பூண் சுந்தரத் தோண்மேற் சாத்தி.

(இ-ள்.) ஒளிவீசுகின்ற வயிரமணிகளாற்கட்டிய அழகிய விரல் மோதிரங்களை யணிந்து, முழந்தாள்வரையில் நீண்ட திருக்கரத்தில் முத்துத்தண்டையையுங் கைச்சரியையு மணிந்து, மிக்க ஒளிபொருந்திய முழங்கைப் பொட்டோடு வரிசையான மணிவடங்களையுமணிந்து, வாகுவலயத்தையும் முத்தாபரணத்தையும் அழகிய திருத்தோளின்மேலணிந்து.—எ-று. (கஉகங)

திருக்கழுத் தாரந் தெய்வக் கண்டிகை மாலை சேரப்
பருத்தமுத் தொழுங்கு கோத்த படரொளி வடமுஞ் சாத்திப்
பெருக்கிய வனப்பின் செவ்வி பிறங்கிய திருவார் காதில்
வருக்கவெண் டரளக்கொத்தின் வடிக்குழை விளங்கச் சாத்தி.

(இ-ள்.) திருக்கழுத்தில் பதக்கத்தையும் தெய்வத்தன்மைபொருந்திய முத்துக்கண்டிகைமாலையோடு பொருந்தும்படிப் பருத்த முத்துக்களை வரிசையாகக்கோத்த ஒளிபொருந்திய முத்துவடத்தையுமணிந்து, மிக்க அழகுவிளங்குந் திருக்காதில் கூட்டமாகிய வெள்ளியமுத்துக் கொத்தாலமைந்த வடிந்த மகரகுண்டலத்தை விளங்கும்படித் தரித்து.—எ-று. (கஉகச)

நீற்றொளி தழைத்துப் பொங்கி நிறைதிரு நெற்றி மீது
மேற்பட விரிந்த சோதி வெண்சுட ரெழுந்த தென்னப்
பாற்படு முத்தின் பாரப் பனிச்சுடர்த் திரளை சாத்தி
யேற்பவைத்தணிந்தமுத்தி னெழில்வளர்மகுடஞ் சேர்த்தார்.

(இ-ள்.) விபூதியினொளி தழைத்து நிறைந்த திருநெற்றியின்மேல் பேரொளிபரந்த வெள்ளிய சுடரொழுந்ததுபோல,அந்நெற்றியினிடத்துச்சேர்ந்த முத்துக்களாலாகிய குளிர்ந்த ஒளிபொருந்திய திலதத்தையணிந்து, பொருந்த வைத்தமைத்த முத்தாலாகிய அழகுவிளங்கும் கிரீடத்தை யணிந்தார்கள். ()

இவ்வகை நம்மை யாளு மேர்வளர் தெய்வக் கோலங்
கைவினை மறையோர் செய்யக் கடிகொள்செங் கமலத் தாதின்

செவ்விநீ டாம மார்பர் திருவுடை யாள மாலை
யெவ்வுல கோரு மேத்தத் தொழுதுதா மெடுத்துப் பூண்டார்.

(இ-ள்.) இவ்வாறு நம்மை யாட்கொள்ளும் அழகிய தெய்வத்தன்மை பொருந்திய திருமணக்கோலத்தைக் கைத்தொழிலிற் சிறந்த வேதியர்கள் செய்யவும்,வாசனைபொருந்திய செந்தாமரைப்பூவாலாகிய மாலையையணிந்த திருமார்பினையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையார் ருத்திராக்ஷ கண்டிகையை எவ்வுலகத்தாருந் துதிக்க, வணங்கித் தாமே எடுத்தணிந்தருளினார்.—எ-று. ()

அழகினுக் கணியாம் வெண்ணீ றஞ்செழுத் தோதிச் சாத்திப்
பழகிய வன்பர் சூழப் படரொளி மறுகி லெய்தி
மழவிடை மேலோர் தம்மை மனங்கொள வணங்கி வந்து
முழவொலி யெடுப்ப முத்தின் சிவிகைமேற் கொண்ட போது.

(இ-ள்.) அழகுக்கழகாய் விளங்கும் விபூதியை ஸ்ரீபஞ்சாக்ஷரமோதியணிந்து, தம்முடன் பழகிய அடியார்கள் சூழும்படி பரந்த ஒளியையுடைய திருவீதியிலெழுந்தருளி,இடபவாகனத்தின்மீ தெழுந்தருளுஞ் சிவபெருமானை மனதிற்பொருந்த வணங்கி மீண்டெழுந்தருளி, மங்கலவாத்தியங்களொலிக்க முத்துச்சிவிகையி லெழுந்தருளும்பொழுது.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கஉகஎ)

எழுந்தன சங்க நாத மியம்பின வியங்க ளெங்கும்
பொழிந்தன விசும்பில் விண்ணோர் கற்பகப் புதுப்பூ மாரி
தொழுந்தகை முனிவர் தொண்டர் சுருதியின் வாழ்த்துப் பொங்கி
வழிந்தன திசைகண் மீது மலர்ந்தன வுலக மெல்லாம்.

(இ-ள்.) சங்கத்தொனியெழுந்தன, எங்கும் மங்கலவாத்தியங்களொலித்தன ; ஆகாயத்தில் தேவர்கள் தூவும் புதிய கற்பகப்பூமழை பொழிந்தன; வணங்கத்தக்க பெருமைபொருந்திய முனிவர்களும், அடியார்களும் ஓதுகின்ற வேதங்களின் வாழ்த்தொலிகள் திக்குகளிற்பொங்கி வழிந்தன ; சர்வலோகங்களும் மகிழ்ச்சியடைந்தன.—எ-று. (கஉகஅ)

படர்பெருந் தொங்கல் பிச்சம் பைங்கதிர்ப் பீலிப் பந்த
ரடர்புனை செம்பொற் பாண்டி லணிதுகிற் சதுக்க மல்கக்
கடலின்மீ தெழுந்து நிற்குங் கதிர்நிறை மதியம் போல
வடநிரை யணிந்த முத்தின் மணிக்குடை நிழற்ற வந்தார்.

(இ-ள்.) படர்ந்த பெரியபீலிக் குஞ்சங்களும்,வெண்குடைகளும், பசிய ஒளிபொருந்திய மயிற்றோகைப் பந்தல்களும், அலங்கரிக்கப்பட்ட செம்பொற்றகட்டாலாகிய வட்டங்களையுடைய அழகிய வஸ்திரவிதானங்களும் நெருங்க, சமுத்திரத்தினிடத்து உதித்து நிற்கின்ற சோடசகலைகள் நிறைந்த பூரணச்சந்திரன்போல முத்துவடங்களின் வரிசைகளால் அலங்கரித்த முத்துக்குடை நிழற்றும்படி யெழுந்தருளினார்.—எ-று. (கஉகக)

சீரணி தெருவி னூடு திருமணஞ் செல்ல முத்தி
னேரணி காளஞ் சின்ன மிலங்கொளித் தாரை யெல்லாம்
பேரொலி பெருக முன்னே பிடித்தன மறைக ளோதி
தாரணி யுய்ய ஞான சம்பந்தர் வந்தா ரென்று.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய திருவீதியில் திருமணக்கோலங்கொண்டு செல்ல, அழகிய முத்துக்காளமும், சின்னமும், விளங்குமொளியையுடைய தாரையுமாகிய அனைத்தும், வேதங்களோடு உலகத்தா ருய்யும்பொருட்டுத் திருஞானசம்பந்தப்பிள்ளையா ரெழுந்தருளினரென்று மிக்க ஒலிபெருக முன்னே யூதப்பட்டன.—எ-று. (கஉஉ0)

மண்ணினுக் கிடுக்கண் டீர வந்தவர் திருநா மங்க
ளெண்ணில பலவு மேத்திச சின்னங்க ளெழுந்த போதவ்
வண்ணலார் வதுவை செய்ய வலங்கரித் தணையப் பெற்ற
புண்ணிய மறையோர் மாட மங்கலம் பொலிந்து பொங்க.

(இ-ள்.) உலகத்தார்க்குத்துன்பநீங்கும்படி யவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது பல திருநாமங்களையுந்துதித்து முத்துச்சின்னங்களொலிக்கும்பொழுது, அப்பிள்ளையார் திருமணஞ்செய்யும்பொருட்டு மணக்கோலங்கொண் டெழுந்தருளப்பெற்ற புண்ணியத்தையுடைய நம்பாண்டார் நம்பியினது திருமாளிகையானது மங்கலகரமிகுத்துப் பொலிவடைய.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (கஉஉக)

முற்றுமெய்ஞ் ஞானம பெற்ற மூர்த்தியா செங்கை பற்ற
நற்பெருந் தவத்தி னீரமை நலமபடைத் தெழுந்த தெய்வக
கற்பகப பூங்கொம பன்னார் தம்மையுங காப்புச சேர்த்துப
பொற்புறு சடங்கு முன்னாரப் புரிவுடன் செய்த வேலை.

(இ-ள்.) முதிர்ந்த சிவஞானத்தையடைந்தபிள்ளையார் பாணிக்கிரகணஞ்செயயும்படி நல்லபெருந்தவததையடைந்து பிறந்ததெய்வத்தன்மைபொருந்திய கற்பகத்தின் பூங்கொம்புபோன்ற அப்புத்திரியாரையுங் காப்புக்கட்டி, அழகிய கலியாணச்சடங்குகளை முன்னே விருப்பத்துடன் செய்தபொழுது.

பாணிக்கிரகணம் = கைப்பற்றல். (கஉஉஉ)

செம்பொன்செய் வாசிச சூட்டுத்திருமணிப்புனைபூண்செல்வப்
பைம்பொனின் மாலை வேய்ந்த பவளமென்கொடியொப்பாரை
நம்பன்ற னருளே வாழ்த்தி நலலெழில விளங்கச்சூட்டி
யம்பொன்செய் திப மென்ன வழகலங் கரித்து வைத்தார்.

(இ-ள்.) செம்பொன்னாற்செய்த சிறந்த நுதல்ணிமாலையையும், அழகிய மணிகளழுத்திய ஆபரணங்களையும், செல்வ மிக்க பசிய பொன்னரிமாலையையுந்தரித்த மெல்லிய பவளக்கொடிபோன்ற அப்புத்திரியாரைச் சிவபெருமானது திருவருளைக்கொண்டு வாழ்த்தி, நல்ல அழகுவிளங்க ஆபரணங்களைச் சூட்டி அழகியபொன்னாற்செய்ததீபம்போல அழகினுக்கு அலங்காரஞ்செய்து வைத்தார்கள்.—எ-று. (கஉஉங)

மாமறை மைந்த ரெல்லா மணத்தெதிர் சென்று மன்னுந்
தூமலர்ச் செம்பொற் சுண்ணந் தொகுநவ மணியும் வீசத்
தாமரை மலரோன் போல்வா ரரசிலைதருப்பை தோய்ந்த
காமர்பொற் கலச நன்னீ ரிருக்குடன் கலந்து வீச.

(இ-ள்.) சிறந்த பிராமணச்சிறுவர்க ளனைவரும் திருமணத்தை யெதிர்கொண்டு சென்று, தூய்மைபொருந்திய மலரோடு செம்பொற் சுண்ணத்தை

யும் கூட்டமான நவரத்தினங்களையுந் தூவ, பிரமனையொத்த வேதியர்கள் அரசிலையுந் தருப்பையுஞ்சேர்ந்த அழகிய பொற்கலசத்திலுள்ள நீரை வேதமந்திரத்துடன் கலந்துவீசவும்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கஉஉச)

விண்ணவர் மலரின் மாரி விசும்பொளி தழைப்ப வீச
மண்ணக நிறைந்த கந்த மந்தமா ருதமும் வீசக்
கண்ணொளி விளக்க மிக்கார் காமர்தோ ரணங்க ளூடு
புண்ணிய விளைவு போலவார் பூமபந்தர் முன்பு சார்ந்தார்.

(இ-ள்.) தேவர்கள் கற்பகமலர்மாரியை ஆகாயம் ஒளிதழைக்கும்படி சொரியவும், உலகத்தில் நிறைந்த மணம்பொருந்திய சிறு தென்றற்காற்றுவீசவும், கண்களுக்கு விளக்கமாக நிறைந்த அழகிய தோரணங்களினூடுவே புண்ணியப் பயன்போன்றபிள்ளையார் பூம்பந்தரின் முன்படைந்தருளினார்.—எ-று.

பொன்னணி சங்கின் வெள்ளம் பொலிவுடன் முழங்கி யார்ப்ப
மன்னிய தரளப் பத்தி வளர்மணிச சிவிகை நின்றும்
பன்மலர் நறும்பொற் சுண்ணம் பரந்தபா வாடை மீது
முன்னிழிந் தருளி வந்தார் மூவுல குய்ய வந்தார்.

(இ-ள்.) பொன்னாலலங்கரித்த சங்கவாத்தியங்கள் பொலிவோடு முழங்கி யாரவாரிக்க, பொருந்திய முத்துவரிசைகள் நிறைந்த அழகிய முத்துச்சிவிகையினின்றும் மூன்றுலகத்தாரு முய்யும்படி அவதரித்தருளிய பிள்ளையார் பலமலர்களும் நல்ல பொற்சுண்ணமும்பரப்பிய பாவாடையின்மேல் முன்னே இறங்கிவந்தருளினார்.—எ-று. (கஉஉசு)

மறைக்குல மனையின் வாழ்க்கை மங்கல மகளி ரெல்லா
நிறைத்தநீர்ப் பொற்கு டங்க ணிரைமணி விளக்குத் தூப
நறைக்குல மலர்சூழ் மாலை நறுஞ்சுடர் முளைபபொற பாண்டி
லுறைப்பொலி கலவை யேந்தி யுடனெதி ரேற்றுநின்றார்.

(இ-ள்.) வேதியர்குலத்தில் இல்வாழ்க்கையையுடைய மங்கலகரமான மாதர்களெல்லாம் நீர் நிறைத்த பொற்குடங்களையும், வரிசையாகிய அழகிய விளக்குகளையும், தூபங்களையும், தேன்பொருந்திய மலர்மாலைகளையும், நல்ல ஒளிபொருந்திய முளைப்பாலிகைகளையும், இழைத்த கலவைச்சாந்தையுமேந்திக்கொண்டு பிள்ளையார்வரவை எதிர்கொண்டு நின்றார்கள்.—எ-று. (கஉஉஎ)

ஆங்குமுன் னிட்ட செம்பொ னணிமணிப் பீடந் தன்னி
லோங்கிய ஞான வெள்ள முண்ணிறைந் தெழுவ தென்னத்
தாஙகிய முத்தின் பைம்பூண் டண்ணிலா வெறிப்ப வேறிப்
பாங்கொளி பரப்பி நின்றார் பரசம யங்கள் வீழ்த்தார்.

(இ-ள்.) அங்குப் பிள்ளையார் திருமுன்னே இட்ட அழகிய செம்பொற்பீடத்தில் உயர்ந்த சிவஞானமென்னும் வெள்ளமானது உள்ளத்து நிறைந்து வழிந்தாற்போல, புறச்சமயங்களையழித்த பிள்ளையார் திருமேனியில் தரித்த பசிய முத்தாபரணங்கள் குளிர்ந்த நிலவைவீச அப்பீடத்திலெழுந்தருளிப் பக்கத்தி லொளியைப் பரப்பிநின்றருளினார்.—எ-று. (கஉஉஅ)

எதிர்வர வேற்ற சாய லிளமயி லனைய மாதர்
மதுரமங் கலமுன் னுரை வாழ்த்தொலி யெடுப்ப வந்து

கதிர்மணிக் கரக வாசக் கமழ்புன லொழுக்கிக் காதல்
விதிமுறை வலங்கொண் டெய்தி மேவுநல் வினைகள் செய்தார்.

(இ-ள்.) பிள்ளையாரது வருகையை எதிர்கொண்டு நின்ற இளமயில் போன்ற பார்ப்பன மாதர்கள் இனியமங்கலத்தை முன்னிட்ட வாழ்த்தொலி யுண்டாக வந்து, ஒளிபொருந்திய அழகிய கமண்டலத்திலுள்ள மணம்பொருந்திய நீரைவிட்டு, சிறந்த விதிப்படி வலமாகவந்து பொருந்திய மங்கலவினைகளைச் செய்தார்கள்.—எ-று. (கஉஉகூ)

மங்கலம் பொலிய வேந்தி மாதரார் முன்பு செல்லக்
கங்கையின் கொழுந்து செம்பொ னிமவரை கலந்த தென்ன
வங்கவர் செம்பொன் மாடத் தாதிபூ மியினுட் புக்கா
ரெங்களை வாழ முன்னா ளேடுவை கையினி விட்டார்.

(இ-ள்.) அட்டமங்கலங்களும் பொலியும்படி ஏந்திக்கொண்டு பார்ப்பனமாதர்கள் முன்னேசெல்ல, கங்கைநதியின் கொழுந்தானது செம்பொன்மயமாகிய இமயமலையிற் சேர்ந்தாற்போல, யாங்கள் வாழும்பொருட்டு முன்னாளில் திருப்பாசுரமெழுதிய திருவேட்டை வைகைநதியில்விட்டருளியபிள்ளையார், நம்பாண்டார் நம்பியினது செம்பொன்மயமாகிய திருமாளிகையில் விவாகபூமியுள் புகுந்தருளினார்.—எ-று. (கஉங0)

அகினறுந் தூபம் விம்மி யணிகிளர் மணியால் வேய்ந்த
துகில்புனை விதான நீழற் றூமலர்த் தவிசின் மீது
நகிலணி முத்த மாலை நகைமுக மடவார் வாழ்த்த
விகலில்சீர் மறையோர் சூழ வினிதினங் கிருந்த வேலை.

(இ-ள்.) அகிற்கட்டைகளினது நறுமணங்கமழுந் தூபமதிகரித்து அழகிய இரத்தினங்களாலலங்கரித்த வஸ்திரவிதானத்தின்கீழ்த் தூய்மையாகிய பூந்தவிசின்மேல், ஸ்தனங்களிலணிந்த முத்துமாலைகளையும் ஒளிபொருந்திய முகத்தையுமுடையமாதர்கள் வாழ்த்தொலிகூற, சிறந்தவேதியர்கள் சூழும்படி இனிமையோடு அங்கெழுந்தருளி யிருக்கும்பொழுது.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கஉஙக)

திருமகட் கொடுக்கப் பெற்ற செழுமறை முனிவர் தாமு
மருமையான் முன்செய் மெய்ம்மை யருந்தவ மனைவி யாரும்
பெருமகிழ்ச் சியினாற் பாதம் விளக்குவார் பிள்ளை யார்மு
னுரிமையால் வெண்பாற் றூநீ ருடனெடுத் தேந்தி வந்தார்.

(இ-ள்.) அழகிய புத்திரியைக் கொடுக்கும்படி தவஞ்செய்த செழிய வேதங்களை யுணர்ந்த நம்பாண்டார்நம்பியும், அருமையாகப் பூர்வத்திற்செய்த மெய்த் தவத்தையுடைய அவர் மனைவியாரும் மிக்க மகிழ்ச்சியினால் திருவடிகளை விளக்குங் கருத்துடையவராய்ப் பிள்ளையார் திருமுன்னே உரிமையுடன் வெள்ளிய பாலைத் தூய நீருடனெடுத்து ஏந்திக்கொண்டுவந்தார்கள்.—எ-று.()

வந்துமுன் னெய்தித் தாமுன் செய்தமா தவத்தி னன்மை
நந்துநம் பாண்டார் நம்பி ஞானபோ னகர்பொற் பாதங்
கந்தவார் குழலி னார்பொற் கரகநீ ரெடுத்து வார்ப்பப்
புந்தியா னினைதி யானம் புரிசடை யானென் றுன்னி.

(இ-ள்.) அவ்வாறுவந்து பிள்ளையார் திருமுன்னடைந்து தாம் முன்பு செய்த பெருந்தவத்தின் நன்மையானது விளங்குகின்ற நம்பாண்டார்நம்பி யென்பவர் திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவடிகளை மணம்பொருந்திய நீண்ட கூந்தலையுடைய மனைவியார் கலசத்திலிருக்கும் நீரையெடுத்துவார்க்க, மனத்தினால் நினைக்குந்தியானப்பொருள் சிவபெருமானென்றுகருதி.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கஉ௲௲)

விருப்பினால் விளக்கி மிக்க புனிதநீர் தலைமேற் கொண்டு
பொருப்புறு மாடத் துள்ளும் புறத்துளுந் தெளித்த பின்ன
ருருப்பொலி யுதரத் துள்ளும் பூரித்தா ருவகை பொங்கி
யருப்புறு கிளைஞர் மேலுந் தெளித்தன ரார்வத் தோடும்.

(இ-ள்.) விருப்பத்தோடு திருவடிகளைவிளக்கி மிக்க புனிதமாகிய பாத தீர்த்தத்தைச் சிரசில் தெளித்துக்கொண்டு, மலைபோன்ற திருமாளிகையினுள் ளும் புறம்புந் தெளித்தபின்பு அழகிய வயிற்றினுள்ளுங் கொண்டார்; மகிழ்ச்சி மிகுந்துத் தோன்றிய சுற்றத்தார் மேலும் அன்புடன் தெளித்தார்.—எ-று. ()

பெருகொளி ஞான முண்ட பிள்ளையார மலர்க்கை தன்னின்
மருவுமங் கலநீர் வாசக் கரகமுன் னேந்தி வார்ப்பார்
தருமுறைக் கோத்தி ரத்தின் றங்குலஞ் செப்பி யென்ற
னருநிதிப் பாவை யாரைப பிள்ளையாரக் களித்தே னென்றார்.

(இ-ள்.) சிறந்த ஞானமுதத்தை யுண்டருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரது தாமரைமலர்போன்ற திருக்கரத்தில் மங்கலம்பொருந்தியநீரைக் கரகத்தில் திருமுன் தாங்கி வார்க்கும் நம்பாண்டார்நம்பியென்பவர் தமதுகோ த்திரத்தைமுறைப்படியேகூறி, எனது அரும்பேறாகியபுத்திரியாரைப் பிள்ளை யாருக்குக் கொடுத்தேனென்றுகூறினார்.—எ-று. (கஉ௲ரு)

நற்றவக் கன்னி யார்கை ஞானசம் பந்தர் செங்கை
பற்றுதற் குரிய பண்பிற் பழுதினற் பொழுது நண்ணப
பெற்றவ ருடன் பிறந்தார் பெருமணப் பிணையனாரைச்
சுற்றமுன் சூழ்ந்து போற்றக் கொண்டுமுன் றுன்னி னார்கள்.

(இ-ள்.) நல்ல தவத்தையுடைய அக்கன்னிகையாரது திருக்கரத்தைத் திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது திருக்கரத்தால் பிடித்தற்குரிய பண்பினா ல் குற்றமற்ற நல்ல முகூர்த்தம்வர, பெற்ற தாய்தந்தையரும் உடன்பிறந்தவ ர்களும் திருமணக்கோலங்கொண்ட அக்கன்னிகையாரைச் சுற்றத்தார் சூழ்ந்து வாழ்த்தும்படி யழைத்துக்கொண்டு முன்னேவந்தார்கள்.—எ-று. (கஉ௲சு)

ஏகமாஞ் சிவமெய்ஞ் ஞான மிசைந்தவர் வலப்பா லெய்தி
நாகமார் பணப்பே ரல்கு னற்றவக் கொழுந்த னாரை
மாகமார் சோதி மல்க மன்னிவீற் றிருந்த வெள்ளை
மேகமோ டியைந்த மின்னுக் கொடியென விளங்க வைத்தார்.

(இ-ள்.) ஒன்றாகிய சிவஞானத்தைப்பெற்ற பிள்ளையாரது வலப்பக்க மடைந்து, நல்ல தவக்கொழுந்துபோன்ற அக்கன்னிகையாரை விண்ணுலகத்து நிறைந்த ஒளிவிளங்கும்படி பொருந்தியிருந்த வெண்மேகத்துடன் கூடிய மின்னற்கொடிபோல விளங்கவைத்தார்கள்.—எ-று. (கஉ௲எ)

புனிதமெய்க் கோல நீடு புகலியர் வேந்தர் தம்மைக்
குனிசிலைப் புருவ மென்பூங் கொம்பனா ருடனேகூட
நனிமிகக் கண்ட போதி னல்லமங் கலங்கள கூறி
மனிதருந் தேவ ராஞர் கண்ணிமை யாது வாழ்த்தி.

(இ-ள்.) பரிசுத்தமாகிய திருமேனிப் பொலிவுவிளங்குந் திருஞானசம்பந்தப்பிள்ளையாரை வளைந்த விற்போலும் புருவத்தையுடைய பூங்கொம்புபோன்ற அம்மணமகளுடனேகூடத் தரிசித்தபொழுது, நல்ல மங்கலவார்த்தைகூறிக்கண்ணிமையாமல வாழ்த்தி மனிதர்களுந் தேவரையொத்தார்கள்.—எ-று.

இயல்பாகவே கண்ணிமைத்தலையுடைய மனிதர்கள் பிள்ளையாரது திருக்கலியாணப் பொலிவைநோக்கி இமைகொட்டா திருத்தலின், மனிதருந் தேவராஞர், என்றுகூறிஞர். (௧௨௩௮)

பத்தியிற் குயிற்றும பைமபொற் பவளக்காற் பந்தா நாப்பண்
சித்திர விதானத் தின்கீழ்ச செழுந்திரு நீல நக்கா
முத்தமிழ் விரகா முன்பு முதன்மறை முறையி ேைடு
மெய்த்தகம பெருமான் பாத மேவுமுள ளததாற செய்ய.

(இ-ள்.) வரிசையாக இழைத்த பசும்பொன்னாலாகிய பவளக்காற் பந்தலினடுவில் அழகிய விதானத்தின்கீழே சிறந்ததிருநீலநக்கநாயஞர் பிள்ளையாரது திருமுன்னே முதன்மையாகிய வேதத்திற் கூறுஞ் சடங்குகளை முறைமைப்படியே மெய்ப்பொருளாகிய ஸ்ரீ சிவபெருமானது திருவடிகளிற் பதிந்த திருவுள்ளத்தோடு செய்ய—எ-று.

இதுமுதல் ஐந்துபாடலுங் குளகம். (௧௨௩௯)

மறையொலி பொங்கி யோங்க மஙகல வாழ்த்து மல்க
நிறைவளைச செங்கை பறற நேரிழை யவாமு னந்தப்
பொறையணி முந்நூன்மாாபா புகரில வெண் பொரிகையட்டி
யிறைவரை யேத்தும வேலை யெரிவலங கொள்ள வேண்டி.

(இ-ள்.) வேதங்களினேசை யதிகரித்தோங்கவும், மங்கலவாழ்த்துக்கள் நிறையவும், நிறைந்த வளையலையணிந்த அப்பிராட்டியாரது திருக்கரத்தைப் பிடிக்க, அவ்வம்மையாருக்குமுன்னே முப்புரிநூலையணிந்த மார்பினையுடைய திருநீலநக்கநாயஞர் குற்றமற்ற பொரியைத் தீயிற் பெய்து சிவபெருமானைத் துதிக்கும்பொழுது, ஓமாக்கினியை வலம்வர விரும்பி—எ-று. (௧௨௪௦)

அருப்புமென் முலையி ஞாக மணிமலாக் கைப்பி டித்தங்
கொருப்படு முடைய பிளளை யாாதிரு வுள்ளந் தனனில்
விருப்புறு மஙகி யாவா விடையுயாந் தவரே யென்று
திருப்பெரு மணத்தைமேவுஞ் சிந்தையிறறெளிந்துசெல்வார்.

(இ-ள்.) அரும்புபோன்ற மெல்லிய ஸ்தனங்களையுடைய அவ்வம்மையாரது அழகிய மலர்க்கரத்தைப்பிடித்துத் தீயை வலம்வருகின்ற பிள்ளையாரது திருவுள்ளத்தில், (யாவரும்) விரும்பத்தக்க அக்கினிமூர்த்தியா யுள்ளவர் ஸ்ரீ சிவபெருமானே யென்று கருதி, திருப்பெருமணமென்னும் ஆலயத்தையடையுந் திருவுள்ளத்தோடு தெளிந்து செல்கின்றவராய்—எ-று. (௧௨௪௧)

மந்திர முறையா லுய்த்த வெரிவல மாக மாதர்
தந்திருக் கையைப் பற்றுந் தாமரைச் செங்கை யாள
ரிந்தவில லொழுக்கம் வந்து சூழ்ந்ததே யிவடன் னோடு
மந்தமில சிவன்றாள் சேரவ னென்னுமா தரவு பொங்க.

(இ-ள்.) மந்திரவிதிப்படி வளர்த்த அக்கினியை வலம்வரும்பொழுது, அவ்வம்மையாரது திருக்கரத்தைப் பிடிக்குந் தாமரைமலர்போன்ற திருக்கரத்தையுடைய பிள்ளையார் இந்த இல்வாழ்க்கையானது எம்மை வந்தடைந்தது; ஆதலால், இந்தப் பத்தினியோடு முடிவில்லாத சிவபெருமான் திருவடியை யடைவேனென்று ஆசை யதிகரிக்க—எ-று. (கஉசஉ)

மலர்பெருங் கிளையுந் தொண்டர் கூட்டமு மல்கிச் சூழ
வலகின் மெய்ஞ் ஞானத்தெல்லை யடைவுறுங் குறிப்பா லங்க
ணுலகினெம் மருங்கு நீங்க வுடனணைந் தருள வேண்டிக்
குலமணம் புரிவித் தாதந் கோயிலை நோக்கி வந்தார்.

(இ-ள்.) பரவிய சுற்றத்தாரும் அடியார் திருக்கூட்டமும் நெருங்கிச் சூழும்படி, அளவில்லாத சிவஞானத்தின் வரம்பை யடையுங் குறிப்பினால், உலகங்களில் எவ்வுலகமுந் தம்மை நீங்கச் சிவபெருமானுடன் கலந்தருளக் கருதிச் சிறந்த திருமணத்தைச் செய்வித்த அவ்வெம்பெருமானது திருக்கோயிலை நோக்கி வந்தருளினார்—எ-று.

புண்ணிய வசத்தராய்த் துகரணபுவனபோகங்களைப்பெற்று வேறோருலகத்து இன்பந்துய்த்தலும், சலோகமாதிய பதமுத்திகளைப் பெறறின்புறுதலுமாகிய வனைத்தும நீங்கவெனபார், உலகினெம் மருங்கு நீங்க, என்று கூறினார். அங்கணுலகம் = அழகிய இடமகன்ற உலகம் (கஉசங)

சிவனமர்ந் தருளுஞ் செல்வத் திருப்பெருமணந் துளெய்தித்
தவநெறி வளர்க்க வந்தார் தம்பெருஞ் சார்பு நோக்கிப்
பவமற வென்னை முன்னா ளாண்டவப் பண்பு கூட
நவமலர்ப் பாதங் கூட்டு மெனனுநல லுணர்வு நலக.

(இ-ள்.) சிவபெருமா னெழுந்தருளிய செல்வம் பொருந்திய திருப்பெருமணமென்னும் ஆலயத்தையடைந்து, தவநெறியைவளர்க்கும்படி யவதரித்தருளிய பிள்ளையார் முத்தியிற் கலத்தற்குக் காரணமான திருவருட் சார்பைக்குறித்து, பிறவி நீங்க என்னை முன்னாளில் அடிமைகொண்ட திருவருளுக்கிசைய, புதியதாமரைமலர் போன்ற திருவடியை யடைவிக்கு மென்னும் நலவுணர்ச்சியானது திருவுள்ளத் துதிக்க—எ-று.

இதுமுதல் நான்குபாட்டுங் குளகம். (கஉசச)

காதன்மெய்ப்பதிகங்கல்லூர்ப்பெருமணமெடுத்துக்கண்டோர
தீதுறு பிறவிப் பாசந் தீர்த்தலசெம பொருளாக் கொண்டு
நாதனே நல்லூர் மேவும் பெருமண நம்ப னேயுன்
பாதமெய்ந் நீழல் சேரும் பருவமீ தென்று பாட.

(இ-ள்.) விருப்ப மிக்க மெய்ம்மையாகிய திருப்பதிகத்தை "கல்லூர்ப்பெருமணம்" என்று முதலில் தொடங்கி, தம்மைத் திருமணத்திற் தரிசித்த



திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் சோதியிற்புகுந்தது

களது தீமைபொருந்திய பிறவிக்குக்காரணமாகிய மலமாயா கன்மங்களை யொழித்தலையே செவ்விய பொருளாகக்கொண்டு,நாதனே! திருநல்லூரிலுள்ள பெருப்பெருமணமென்னுந் திருக்கோயிலி லெழுந்தருளிய கர்த்தனே! தேவரீரது திருவடிநீழலை யடையும் பருவம் இதுவென்று பாடியருள.—எ-று. ()

---

திருநல்லூர்ப் பெருமணம் - பண் - அந்தாளிக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

கல்லூர்ப்பெருமணம்வேண்டாகழுமலம்
பல்லூர்ப்பெருமணம்பாட்டுமெய்யாய்த்தில
சொல்லூர்ப்பெருமணஞ்சூடலரோதொண்டர்
நல்லூர்ப்பெருமணமேயநம்பானே. (௧)

தருமணலோதஞ்சேர்தண்கடனித்திலம்
பருமணலாக்கொண்டுபாவைநல்லார்கள்
வருமணங்கூட்டிமணஞ்செயுநல்லூர்ப்
பெருமணத்தான்பெண்ணோர்பாகங்கொண்டானே. (௨)

அன்புறுசிந்தையராகியடியவர்
நன்புறுநல்லூர்ப்பெருமணமேவிநின்
றின்புறுமெந்தையிணையடியேத்துவார்
துன்புறுவாரல்லர்தொண்டுசெய்வாரே. (௩)

வல்லியந்தோலுடையார்ப்பதுபோர்ப்பது
கொல்லியல்வேழத்துரிவிரிகோவண
நல்லியலார்தொழுநல்லூர்ப்பெருமணம்
புல்கியவாழ்க்கையெம்புண்ணியனார்க்கே. (௪)

ஏறுகந்தீரிடுகாட்டெரியாடிவெண்
ணீறுகந்தீர்நிரையார்விரிதேன்கொன்றை
நாறுகந்தீர்திருநல்லூர்ப்பெருமணம்
வேறுகந்தீருமைகூறுகந்தீரே. (௫)

சிட்டப்பட்டார்க்கெளியான்செங்கண்வேட்டுவப்
பட்டங்கட்டுஞ்சென்னியான்பதியாவது
நட்டக்கொட்டாட்டறாநல்லூர்ப்பெருமணத்
திட்டப்பட்டாலொத்திராலெம்பிரானீரே. (௬)

மேகத்தகண்டனெண்டோளன்வெண்ணீற்றுமை
பாகத்தன்பாய்புலித்தோலொடுபந்தித்த
நாகத்தனல்லூர்ப்பெருமணத்தானல்ல
போகத்தன்யோகத்தையேபுரிந்தானே. (௭)

தக்கிருந்தீரன்றுதாளாலரக்கனை
யுக்கிருந்தொல்கவுயர்வரைக்கீழிட்டு
நக்கிருந்தீரின்றுநல்லூர்ப்பெருமணம்
புக்கிருந்தீரெமைப்போக்கருளீரே. (௮)

ஏதுந்தண்டாமரையானு மியலவுண்ட
மாலுந்தம்மாண்பறிகின்றிலர்மாமறை
நாலுந்தம்பாட்டென்பர்நல்லூர்ப்பெருமணம்
போலுந்தங்கோயில்புரிசடையார்க்கே. (௯)

ஆதரமணொடுசாக்கியர்தாஞ்சொல்லும்
பேதைமைகேட்டுப்பிணக்குறுவீர்வம்மி
னாதனைநல்லூர்ப்பெருமணமேவிய
வேதனதாடொழவீடெளிதாமே. (௧0)

நறும்பொழிற்காழியுண்ஞானசம்பந்தன்
பெறுபதநல்லூர்ப்பெருமணத்தானை
யுறும்பொருளாற்சொன்னவொண்டமிழ்வல்லார்க
கறும்பழிபாவமவலமிலாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - சிவலோகத்தியாகர்; தேவியார் - உமையம்மை.

---

தேவர்க டேவர் தாமுந் திருவருள் புரிந்து நீயும்
பூவையன் னாளு மிங்குன் புண்ணிய மணத்தின் வந்தார்
யாவரு மெம்பாற் சோதி யிதனுள்வந் தெய்து மென்று
மூவுல கொளியால விம்ம முழுச்சுடர்த் தாணு வாகி.

(இ-ள்.) தேவதேவராகிய சிவபெருமானுந் திருவருள்புரிந்து, நீயும், நாகணவாய்ப்பறவைபோன்ற மொழியினையுடைய உனது பத்தினியும், இங்கே உனது புண்ணியரூபமாகிய திருமணத்திற்குவந்தவர்கள் யாவரும் எம்மிடத்துத் தோன்றும் இந்தச் சோதியினுள்ளே வந்து எம்மையடையுங்களென்று மூன்றுலகமுந் தன்னொளியினால் விளங்க, நிறைந்த சோதிலிங்கத் திருவுருவங் கொண்டு—எ-று.

எம்பால் சோதி என்பதற்கு, சிவலிங்கப் பெருமானிடத்தி னின்றுந் தோன்றியசோதி, எனக்கொள்க. (௧௨௬௬)

கோயிலுடபடமேலோங்குங் கொள்கையாற்பெருகுஞ்சோதி
வாயிலே வகுத்துக் காட்ட மன்னுசீர்ப் புகலி மன்னர்
பாயின வொளியா னீடு பரஞ்சுடர்த் தொழுது போற்றி
மாயிரு ஞால முய்ய வழியினை யருளிச செய்வார்.

(இ-ள்.) திருக்கோயில் தன்னுள்ளடங்க மேலோங்குந்தன்மையால் மிக்க சோதிலிங்கமானது ஒரு திருவாயிலை வகுத்துக்காட்ட, நிலைபெற்றசிறப்பினையுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையார், பரந்த ஒளிப்பிழம்பாக நீண்ட அச்சிவபரஞ்சுடரை வணங்கித் துதித்து, பெரிய உலகத்தாருய்யும்பொருட்டு அதனையடையும் நெறியை யருளிச் செய்வாராயினர்.—எ-று. (௧௨௬௭)

ஞானமெய்ந்நெறிதான் யார்க்கும் நமச்சிவாயச்சொலாமென்
றானசீர் நமச்சி வாயத் திருப்பதி கத்தை யங்கண்
வானமு நிலனுங் கேட்க வருள்செய் திம் மணத்தில் வந்தோ
ரீனமாம் பிறவி தீர யாவரும் புகுக வென்ன.

(இ-ள்.) யாவருக்கும் சிவஞானத்தைக்கொடுக்கும் உண்மைநெறியா
ம், நமச்சிவாய என்னு மந்திரமாமென்று, சிறந்த நமச்சிவாயத்திருப்பதிகத்
, அங்கே, விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாருங் கேட்கும்படி யருளிச்
ய்து, இத்திருமணங்காண வந்தவர்கள் யாவரும்,குற்றம்பொருந்தியஉங்கள்
—டவிநீங்கும்படி இந்தச் சோதியினுள்ளே பிரவேசியுங்களென்று அருளிச்
செய்ய.—எ-று. இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கஉசுஅ)

---

நமச்சிவாயத் திருப்பதிகம் - பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

காதலாகிககசிந்துகண்ணீர்மல்கி
யோதுவாாதமைநன்னெறிக்குய்பபது
வேதநான்கினுமெய்ப்பொருளாவது
நாதனுமநமசசிவாயவே. (க)

நம்புவார்நமர்நாமநவிற்றினுல
வமபுநாண்மலர்வார்மதுவொபபது
செம்பொனாதிலதமமுலகுககெலா
நமபனுமநமசசிவாயவே. (உ)

நெக்குளார்வமிகப்பெருகிந்நினைந்
தக்குமாலைகொடங்கையிலெண்ணுவாா
தக்கவானவராத்தகுவிப்பது
நக்கனுமநமசசிவாயவே. (ங)

இயமன்றூதருமஞ்சுவரின்சொலா
னயம்வந்தோதவல்லார்தமைநண்ணினு
னியமந்தானினைவார்க்கினியானெற்றி
நயனனுமநமசசிவாயவே. (சு)

கொல்வாரேனுங்குணம்பலநன்மைக
ளிலலாரேனுமியமபுவராயிடி
லெல்லாத்தீங்கையுநீக்குவரென்பரா
னலலார்நாமநமச்சிவாயவே. (ரு)

மந்தரம்மன்னபாவங்கண்மேவிய
பந்தனையவர்தாமும்பகர்வரேற்
சிந்தும்வல்வினைசெல்வமுமல்குமா
னந்திநாமநமச்சிவாயவே. (சு)

நரகமேழபுகநாடினராயினு
முரைசெய்வாயினராயினுருத்திரர்
விரவியேபுகுவித்திடுமென்பரால்
வரதனுமநமச்சிவாயவே. (எ)

இலங்கைமன்னனெடுத்தவடுக்கன்மேற
றலங்கொள்கால்விரல்சங்கரனூன்றலு

மலங்கவாய்மொழிசெய்தவனுய்வகை
நலங்கொளுமநமச்சிவாயவே. (அ)

போதன்போதனகண்ணனுமண்ணறன்
பாதந்தான்முடிநேடியபண்பரா
யாதுங்காண்பரிதாகியலந்தவ
ரோதுநாமநமச்சிவாயவே. (௯)

கஞ்சிமண்டையர்கையினுண்கையர்கள்
வெஞ்சொன்மிண்டர்விரவிலரொன்பரால்
விஞ்சையண்டர்கள்வேண்டவமுதுசெய்
நஞ்சுண்கண்டனமசிவாயவே. (௧0)

நந்திநாமநமச்சிவாயவெனுஞ்
சந்தையாற்றமிழ்ஞானசம்பந்தன்சொற்
சிந்தையான்மகிழ்ந்தேத்தவல்லாரெல்லாம
பந்தபாசமறுக்கவல்லார்களே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

வருமுறைப் பிறவி வெள்ளம் வரம்புகா ணாதை ழுந்தி
யுருவெனுந் துயரக் கூட்டி னுணர்வின்றி மயங்கு வார்க
டிருமணத் துடன்சே வித்து முன்செலுஞ் சிறப்பி னாலே
மருவிய பிறவி நீங்க மன்னுசோ தியினுட்புக்கார்.

(இ-ள்.) முறைமையாகவருகின்ற பிறவிக்கடலின் கரையைக்காணாது அழுந்தி உடம்பென்னுந் துன்பமாகிய கூட்டினுள் அறிவின்றி மயங்குகின்றவர்கள் பிள்ளையாருடைய திருமணத்தைச் சேவைசெய்து அவர்திருமுன்வரப் பெற்றசிறப்பினால், பொருந்திய பிறவிநோய் நீங்க, நிலைபெற்ற அச்சோதியினுள்ளே புகுந்தார்கள்.—எ-று. (௧௨௪௬)

வேறு.

சீர்பெருகு நீலநக்கர் திருமுருகர் முதற்றொண்ட
ரேர்கெழுவு சிவபாத விருதயர்நம் பாண்டார்சீ
ரார்திருமெய்ப் பெரும்பாணர் மற்றெனையோ ரணைந்துளோர்
பார்நிலவு கிளைசூழப பன்னிகளோ டுடன் புக்கார்.

(இ-ள்.) சிறந்த திருநீலநக்கநாயனார், திருமுருகநாயனார்முதலிய திருத்தொண்டர்களும் அழகுமிக்க சிவபாதவிருதயரும், நம்பாண்டார்நம்பியும், புகழ்நிறைந்த திருநீலகண்டப் பெரும்பாணநாயனாரும், திருமணங்காணவந்த மற்றவர்களும் உலகில் விளங்குகின்ற சுற்றத்தார்சூழும்படி தமது பத்தினிமார்களுடன் அச்சோதியினுள்ளே புகுந்தார்கள்.—எ-று. (௧௨௫0)

அணிமுத்தின் சிவிகைமுத லணிதாங்கிச சென்றார்கள்
மணிமுத்த மாலைபுனை மடவார்மங் கலம்பெருகும்
பணிமுற்று மெடுத்தார்கள் பரிசனங்கள் வினைப்பாசந்
துணிவித்த வுணர்வினராய்த் தொழுதுடன்புக் கொடுங்கினார்.

(இ-ள்.) அழகிய முத்துச்சிவிகைமுதலிய விருதுகளைத்தாங்கிச்சென்ற வர்களும், முத்துமாலையணிந்த மாதர்களும், மங்கலமிருந்த நீராஞ்சனமுதலிய பணிகளையெடுத்தவர்களும், பரிசனங்களும், தீவினையைவிளைக்கும் ஆணவமல த்தைக்கெடுத்த பேரறிவினையுடையவர்களாய் வணங்கி யொருங்குகூடி அச் சோதியினுள்ளே புகுந்து ஒடுங்கினார்கள்.—எ-று. (கஉருக)

ஆறுவகைச் சமயத்தி லருந்தவரு மடியவருங்
கூறுமறை முனிவர்களுங் கும்பிடவந் தணைந்தாரும்
வேறுதிரு வருளினால் வீடுபெற வந்தாரு
மீறில்பெருஞ் சோதியினு ளெல்லாரும் புக்க தற்பின்.

(இ-ள்.) ஆறுவகை உட்சமயத்திலொழுகும் அரியதவமுனிவர்களும், அடியவர்களும், வேதங்களையோதும் வைதிகசைவர்களும், திருமணத்தைத்தரி சிக்க வந்தவர்களும், இவர்கட்கு வேறாகிய திருவருள்வசத்தினால் முத்திபெற வந்த சித்தாந்தசைவர்களும் ஆகிய யாவரும், முடிவில்லாத அப்பெருஞ்சோதி யினுள்ளே புகுந்த பின்பு.—எ-று.

இதுமுதலிரண்டுபாடலுங் குளகம். (கஉருஉ)

காதலியைக் கைப்பற்றிக் கொண்டுவலஞ் செய்தருளித்
தீதகற்ற வந்தருளுந் திருஞான சம்பந்தர்
நாதனெழில் வளர்சோதி நண்ணியத னுட்புகுவார்
போதநிலை முடிந்தவழிப் புக்கொன்றி யுடனானார்.

(இ-ள்.) யாவருடைய குற்றங்களையும் நீக்கும்படி யவதரித் தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது பத்தினியாரைக்கைப்பற்றிக்கொண்டு, அதனைப் பிரதக்ஷணஞ்செய்து, அழகுவளர்கின்ற அச்சோதிலிங்கத்தை யடை ந்து, அதனுள்ளே புகுகின்றவராய், அத் திருமணங்காணவந்தவர் யாவரும் அடைந்தபின்பு, தாமும் புகுந்து சிவத்துடன் இரண்டறக்கலந்தருளினார். ()

பிள்ளையா ரெழுந்தருளிப் புக்கதற்பின் பெருங்கூத்தர்
கொள்ளநீ டியசோதிக் குறிநிலையவ் வழிகரப்ப
வள்ளலார் தம்பழைய மணக்கோயி லேயன்றுதலுந்
தெள்ளுநீ ருலகத்துப் பேறில்லார் திகைத்தார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளி அச்சோதியினுள் ளே புகுந்தபின்பு, சிவபெருமான்கொண்டருளியநீண்ட சோதிலிங்கத்தின்நிலை மை அங்கே மறைந்துவிட, உடனே சிவபெருமானது பழைய திருநல்லூர்ப் பெருமணமென்னுந் திருக்கோயில்தோன்றவும், தெளிவாகிய கடல்சூழ்ந்த உல கத்திலே அத்தகைய சிவப்பேறடையப்பெறாதவர்கள் எல்லாரும் மனமயக் கங்கொண்டார்கள்.—எ-று. (கஉருச)

கண்ணுதலார் திருமேனி யுடன்கூடக் கவுணியனார்
நண்ணியது தூரத்தே கண்டுநனு கப்பெறா
விண்ணவரு முனிவர்களும் விரிஞ்சனே முதலானா
ரெண்ணிலவ ரேசறவு தீரவெடுத் தேத்தினார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிவபெருமானது திருமேனியு டன் கலந்தருளியதைத் தூரத்தேகண்டு அதனையடையப்பெறாத தேவர்களும்,

முனிவர்களும், பிரமன்முதலிய அளவில்லாத பெருந்தேவர்களும் அதனைச்சிந் தித்துத்தங்கள் மனக்கவலைநீங்கப் (பிள்ளையாரது பெருமையை)எடுத்து ஸ்தோ த்திரஞ் செய்தார்கள்.—எ-று. (கஉ௫௫)

அருந்தமிழா கரர்சரிதை யடியேனுக் கவர்பாதந்
தரும்பரிசா லறிந்தபடி துதிசெய்தேன் ஞரணிமேற் [டால்
பெருங்கொடையுந் திண்ணனவும் பேருணர்வுந் திருத்தொண்
வருந்தகைமைக் கலிக்காம னார்செய்கை வழுத்துவேன்.

(இ-ள்.) பெருமைபொருந்திய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திவ்ய சரித்திரத்தை அடியேனுக்கு அவரது திருவடிதந்தருளிய திருவருள்விளக்கத் தால், யான் அறிந்தவாறு துதிசெய்தேன்; இனி நிலவுலகத்தில் பெருங்கொ டையும், உறுதியானபத்தியும், பேருணர்ச்சியுமாகிய அனைத்தும் திருத்தொண் டுசெய்ததனால் வரப்பெற்ற பெருமையினை யுடைய ஏயர்கோன் கலிக்காம நாயனாரது திருத்தொண்டின் சிறப்பைத் துதிக்கின்றேன்.—எ-று. (கஉ௫சு)

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

இவ்வெமது ஆளுடையபிள்ளையார் புராணத்தி லமைந்துள்ள அற்புத சரித்திரங்களேயன்றி, நங்காழிநாதர் திருநனிபள்ளியிற் சென்றபோது அங் குப் பாலைநிலத்தை நெய்தனிலமாகப் பாடி யருளினவொன்றும், திருப்பூந்துரு த்தியிற் சென்றபோது சிவபெருமான் இவரை முத்துச்சிவிகையிலிருந்த கோ லமாகவே கண்டு மகிழவேண்டி, இவர் அச்சிவிகையினின்று மிறங்குவதன் முன்னர்,திருநந்திதேவரை விலக்கிக் கண்டு மகிழ்ந்தனவொன்றும், திருநெல்வே லிக்குச் சென்றபொழுது அங்குத் தவங்கிடந்த அகத்தியமுனிவருக்கு ஞா னேபதேசஞ்செய்து சமணரைவென்று சைவஸ்தாபனஞ் செய்தருளினவொன் றும், திட்டைப்பதியில் ஸ்ரீ அப்பர்சுவாமிகளுக் கபராதமிழைத்த வைணவர்க ளதுகோயிலை வெள்ளங்கொண்டு செல்லத் திருப்பதிகம்பாடி யருளினவொன் றும், திருவோத்தூரிற் சென்றபோது அங்குத் தமைபுரிந்திருந்த சமணரைவெ ன்று கழுவேற்றிப் பராசரமுனிவரது சாபத்தினால் வேலமரமாய்க்கிடந்த இர ண்டசுரர்களுக்குச் சாபவிமோசனஞ் செய்தருளினவொன்றும், ஸ்ரீகாஞ்சிப்பதி யிற் சென்றபோது தம்மைநோக்கித் தவஞ்செய்திருந்த விஷ்ணுமூர்த்திக்குச் சிவசாரூபமளித்தன வொன்றும் அவ்வத்தலபுராணங்களிற் கூறப்பட்டுள்ளன. இவைகட்குத் தனித் திருப்பதிகமின்மையால், ஸ்ரீ சேக்கிழார்பெருமான் தா மருளிய இப்புராணத்திற் கூறாது விடுத்தனர். கற்றுவல்லோர் இவ்வற்புதங் களை அவ்வத்தலபுராணங்களிற் கண்டு மகிழ்வாராக.

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தப் பெருமான் திருவடிவாழ்க.

---

சிவமயம்.

## திருச்சிற்றம்பலம்.

# ஏயர்கோன்கலிக்காமநாயனார் புராணம்.

நீடு வண்புகழ்ச் சோழர்நீர் நாட்டிடை நிலவு
மாடு பொன்கொழி காவிரி வடகரைக் கீழ்பா
லாடு பூங்கொடி மாடநீ டியவணி நகர்தான்
பீடு தங்கிய திருப்பெரு மங்கலப் பெயர்த்தால்.

(இ-ள்.) வளப்பமிக்க புகழையுடைய நீர்வளம்பொருந்திய சோழநாட்டில் விளங்குகின்ற இருபக்கங்களிலும் பொற்பொடிகளைக்கொழிக்கின்ற காவிரிநதியின்வடகரைக்குக் கிழக்குத்திக்கில், பொலிவினையுடைய பல கொடிகளாடுகின்ற மாளிகைகளுயர்ந்த அழகியநகரமானது பெருமைபொருந்திய திருப்பெருமங்கலமென்னும் பெயரையுடையது.—எ-று. (௧)

இஞ்சி சூழ்வன வெந்திரப் பந்திசூழ் ஞாயின்
மஞ்சு சூழ்வன வரையென வுயர்மணி மாட
நஞ்சு சூழ்வன நயனியர் நளினமெல் லடிச்செம்
பஞ்சு சூழ்வன காளையர் குஞ்சியின் பரப்பு.

(இ-ள்.) எந்திரவரிசைகள் சூழ்ந்த மதிலுறுப்புகள் மதிலைச்சூழ்ந்திருக்கின்றன; மலைபோலுயர்ந்த அழகியமாளிகைகளில் மேகங்கள் சூழ்ந்திருக்கின்றன; விடஞ் சூழ்ந்திருக்கப்பெற்ற கண்களையுடைய மாதர்களது தாமரைமலர்போன்ற மிருதுவாகிய பாதங்களிலூட்டிய செம்பஞ்சுக் குழம்பானது இளம்பருவத்தையுடைய புருஷர்களதுகுடுமிகளில் சூழ்ந்திருக்கின்றன.—எ-று. (௨)

விழவு றாதன விளங்கொளி மணிநெடு வீதி
முழவு றாதன மொய்குழ லியர்நட வரங்க
மழவு றாதன மங்கலம் பொலிமணி முன்றி
லுழவு றாதநல் வளத்தன வோங்கிருங் குடிகள்.

(இ-ள்.) ஒளிவிளங்குகின்ற அழகிய நெடுந்தெருக்கள் திருவிழாக்களை நீங்காதிருக்கும்; நெருங்கியகூந்தலையுடைய கணிகைமாதர்கள் நடிக்கும் நாடகசாலைகள் மத்தளவோசையை நீங்காதிருக்கும்; மங்கலகரம்நிறைந்த அழகிய முற்றங்கள் குழந்தைகளைநீங்காதிருக்கும்; செழித்திருக்கின்ற பெருங்குடிகள் உழவுத்தொழில் நீங்காத வளத்தையுடையனவாயிருக்கும்.—எ-று.

மழவு - பண்பாகுபெயராய்க் குழந்தைகளை யுணர்த்திற்று. (௩)

நீரி னிற்பொலி சடைமுடி நெற்றிநாட் டத்துக்
காரி னிற்றிகழ் கண்டர்தங் காதலோர் குழுமிப்
பாரின் மிக்கதோர் பெருமையாற் பரமர்தாள் பரவுஞ்
சீரின் மிக்கது சிவபுரி யெனத்தகுஞ் சிறப்பால்.

(இ-ள்.) கங்கைநீரினால் விளங்குகின்ற சடைமுடியையும், நெற்றிக்கண்ணையும், மேகம்போலவிளங்குங் கண்டத்தையுமுடைய சிவபெருமானடியார்கள் நெருங்கி, உலகத்திற்சிறந்த பெருமையினால் சிவபெருமானது திருவடிகளைவணங்குஞ் சீரினாலும், இதுவே சிவபுரியென்றுசொல்லத்தக்க சிறப்பினாலும் மேம்பட்டுள்ளது.—எ-று. (ச)

இன்ன வாழ்பதி யதனிடை யேயர்கோக் குடிதான்
மன்னி நீடிய வளவர்சே னாபதிக் குடியாந்
தொன்மை மேவிய நிகழ்ச்சியா னிறைவது தூய
பொன்னி நாட்டுவே ளாண்மையி லுயர்ந்தபொற் பினதால்.

(இ-ள்.) இத்தன்மையாகிய வாழ்வினையுடைய அத் திருப்பெருமங்கலமென்னுந் திருப்பதியில் சிறந்த ஏயர்குடியானது, நிலைபெற்றுயர்ந்த சோழர்களது சேனாபதியாதற்குரிய குடியென்னும் பழமையாகிய வழக்கத்தால் விளங்குவது; அது, தூய்மையாகிய சோழநாட்டில் வேளாண்மைத் தொழிலா லுயர்ந்த பொலிவினையுடையது.—எ-று. (ரு)

அங்கண் மிக்கவக் குடியினி லவதரித் துள்ளார்
கங்கை வாழ்முடி யார்தொண்டர் கலிக்காம ரென்பார்
தங்க ளாயக ரடிபணி வாரடிச் சார்ந்து
பொங்கு காதலி னவர்பணி போற்றுதல் புரிந்தார்.

(இ-ள்.) அத்திருப்பதியில் உயர்ந்த அவ்வேயர்குடியினில் திருவவதாரஞ்செய்தவர், (அவர் யாரெனில்), கங்கைநதிவாழ்கின்ற சடைமுடியையுடைய சிவபெருமான் அடியவராகிய கலிக்காமநாயனா ரென்பவர்; அவர், தங்கள் முதல்வராகிய சிவபெருமான் திருவடிகளைவணங்கும் அடியார்களது திருவடிகளில் வணங்கியடைந்து மிக்க விருப்பத்தோடும் அவ்வடியார்களிடம் பணிவிடைகளை விரும்பிச் செய்தொழுகினார்.—எ-று. (சு)

புதிய நாண்மதிச் சடைமுடி யார்திருப் புன்கூர்க்
கதிக மாயின திருப்பணி யநேகமுஞ் செய்து
நிதிய மாவன நீறுகந் தார்கழ லென்று
துதியி னாற்பர வித்தொழு தின்புறு கின்றார்.

(இ-ள்.) இளம்பிறையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானெழுந்தருளிய திருப்புன்கூரென்னுந் திருப்பதிக்கு மிகுதியாகிய அநேகந்திருப்பணிகளைச் செய்து, நமக்குப் பெருஞ்செல்வமாயுள்ளன விபூதியை விரும்பியணிந்த சிவபெருமான் திருவடிகளேயென்று ஸ்தோத்திரங்களினால் துதித்து வணங்கிப் பேரின்புற்றிருக்கின்றவர்.—எ-று. (எ)

நாவ லூர்மன்னர் நாதனைத் தூதுவிட் டதனுக்
கியாவ ரிச்செயல் புரிந்தன ரென்றவ ரிழிப்பத்
தேவர் தம்பிரா னவர்திறந் திருத்திய வதற்கு
மேவ வந்தவச் செயலினை விளம்புவா னுற்றேன்.

(இ-ள்.) திருநாவலூரராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் தியாகராசப்பெருமானை (ப்பரவைநாச்சியார் திருமாளிகைக்கு இருமுறை) தூதனுப்பியதை

க்குறித்து,யாவர்இத்தகாதகாரியத்தைச்செய்தனரென்று அவரைக்குறைவாகக் கூற, தேவர்கள் நாயகராகிய சிவபெருமான் அந்நாயனாரது கொள்கையைத் திருத்தும்பொருட்டு அதற்கிசையவந்த சரித்திரத்தை (யான்) சொல்லத்தொடங்கினேன்.—எ-று.

யான் என்னுந் தோன்றாஎழுவாய் வருவித்துரைக்கப்பட்டது. (அ)

வே று.

திருத்தொண்டத் தொகையருளித் திருநாவ லூராளி
கருத்தொன்று காதலினாற் கனகமதிற் றிருவாரூ
ரொருத்தர்கழன் முப்பொழுது முருகியவன் பொடுபணிந்து
பெருத்தெழுமெய் யன்பினாற் பிரியாதங் குறையுநாள்.

(இ-ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் திருத்தொண்டத் தொகையை யருளிச்செய்து, தமது திருவுள்ளத்திற் பொருந்திய பெருவிருப்பினால், பொன்மயமாகிய மதில்சூழ்ந்த திருவாரூரில் வீற்றிருந்தருளிய ஸ்ரீ தியாகராசப் பெருமானது திருவடிகளை முக்காலத்தும் மனமுருகுகின்ற அன்போடும் வணங்கி, அதிகரித்தெழுகின்ற மெய்யன்போடு நீங்காமல் அத்திருவாரூரில் வசிக்கும் நாள்களில்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கூ)

தாளாண்மை யுழவுதொழிற் றன்மைவளந் தலைசிறந்த
வேளாளர் குண்டையூர்க் கிழவரெனு மேதக்கோர்
வாளார்வெண் மதியணிந்தார் மறையவனாய் வழக்கினில்வென்
றாளாகக் கொண்டவர்தா ளடைந்தன்பா லொழுகுவார்.

(இ-ள்.) முயற்சிபொருந்திய உழவுத்தொழிலாலுண்டாகிய வளப்பங்கள் மிகுதியாகச் சிறந்த வேளாளமரபினராகிய குண்டையூர்க்கிழார் என்னும் பெரியவர் ஒளிபொருந்திய வெள்ளியசந்திரனையணிந்த சிவபெருமான் விருத்தவேதியத் திருவுருவங்கொண்டு வந்து வழக்கினால்வென்று தடுத்தடிமை கொள்ளப்பெற்ற ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளது திருவடிகளை யடைந்து அன்போடொழுகிவருவாராயினார்.—எ-று. (௧௦)

செந்நெல்லும் பொன்னன்ன செழும்பருப்புந் தீங்கரும்பி
னின்னல்ல வமுதுமுத லெண்ணில்பெரும் பலவளங்கண்
மன்னியசீர் வன்றொண்டர்க் கமுதாக வழுவாமற்
பன்னெடுநாள் பரவையார் மாளிகைக்குப் படிசமைத்தார்.

(இ-ள்.) சம்பாநெல்லும்,பொன்னையொத்த செழுமை தங்கியபருப்பும் மதுரமாகிய கரும்பினது நல்லபாகுமுதலாக அளவற்ற மிக்கவளப்பமாகிய பொருள்களை நிலைபெற்ற சிறப்பினையுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளுக்குத் திருவமுதாகும்படி தவறாமல் அநேகநாள் பரவைநாச்சியாரது திருமாளிகைக்குப்படித்தரம் நடத்திவந்தார்.—எ-று. (௧௧)

ஆனசெய லன்பின்வரு மார்வத்தான் மகிழ்ந்தாற்ற
வானமுறை வழங்காமன் மாநிலத்து வளஞ்சுருங்கப்
போனகநெற் படிநிரம்ப வெடுப்பதற்குப் போதாமை
மானமழி கொள்கையினான் மனமயங்கி வருந்துவார்.

(இ-ள்.) அவ்வாறாகிய திருத்தொண்டினை அன்புகாரணமாக வுதிக்கும் விருப்பத்தினால் மனமகிழ்ந்து செய்துவரும்பொழுது, மேகமானது மழைத்துளிகளைப்பெய்யாமல் பெரிய உலகத்தில் வளங் குறைந்துவர, (அதனால்,) திருவமுதிற்குரிய நென்முதலிய படித்தரங்களை நிரம்ப நடத்துவதற்குக் கூடாமையாகிய பெருமைகெடும்படி நேர்ந்ததன்மையினால் (அக்குண்டையூர்க்கிழார்) மனமயக்கங்கொண்டு வருந்துவராயினார்.—எ-று.

உறை=நீர்த்துளி. 'வான முறை வழங்காமல்' என்றதற்கு மேகங்கள் காலக்கிரமப்படி மழை பெய்யாமல், எனினுமாம். (௧௨)

வன்றொண்டர் திருவாரூர் மாளிகைக்கு நெல்லெடுக்க
வின்றுகுறை யாகின்ற தென்செய்கே னெனநினைந்து
துன்றுபெருங் கவலையினாற் றுயரெய்தி யுண்ணாதே
யன்றிரவு துயில்கொள்ள வங்கணர்வந் தருள்புரிவார்.

(இ-ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் வசிக்குந் திருவாரூர்த் திருமாளிகைக்கு நெற்படியனுப்புவதற்கு இன்றுகுறைநேர்ந்தது; இதற்குயான் யாது செய்வேனென்று நினைத்துப் பொருந்திய பெருங்கவலையினால் மனவருத்த மடைந்து உணவுகொள்ளாமல், அன்றிரவு நித்திரைசெய்ய, சிவபெருமான் அவர் கனவில் எழுந்தருளி அருளிச்செய்கின்றார்.—எ-று. (௧௩)

ஆரூரன் றனக்குன்பா னெற்றந்தோ மென்றருளி
நீருஞ் சடைமுடியார் நிதிக்கோமான் றனையேவப்
பேரூர்மற் றதனெல்லை யடங்கவுநென் மலைப்பிறங்கல்
காரூரு நெடுவிசும்புங் கரக்கநிறைந் தோங்கியதால்.

(இ-ள்.) நம்பியாரூரன் பொருட்டு உன்னிடத்து நெல்லைத்தந்தோமென்று அருளிச்செய்து, கங்கைநீர்தவழுஞ் சடைமுடியையுடைய சிவபெருமான் குபேரனை நெற்கொடுக்கும்படியனுப்ப, (அக்குபேரனால்) பெரிய அக்குண்டையூரின்எல்லைமுழுதும் நெல்மலைகள் விளங்கும்படி மேகங்கள்தவழும் நெடிய ஆகாயமும் மறையநிறைந்து ஓங்கியது.—எ-று.

மலைப்பிறங்கல்=இருபெயரொட்டு. (௧௪)

அவ்விரவு புலர்காலை யுணர்ந்தெழுவா ரதுகண்டே
யெவ்வுலகி னென்மலைதா னிதுவென்றே யதிசயித்துச
செவ்வியபொன் மலைவளைத்தார் திருவருளின் செயல்போற்றிக்
கொவ்வைவாய்ப் பரவையார் கொழுநனையே தொழுதெழுவார்.

(இ-ள்.) அன்றிரவு விடியும்பொழுது நித்திரை நீங்கியெழுகின்ற குண்டையூர்க்கிழார் அதனைப்பார்த்து, இது எவ்வுலகத்திலுள்ள நென்மலையென்று அதிசயித்து, சிவந்தபொன்மயமாகிய மேருமலையை வில்லாகவளைத்த சிவபெருமானது திருவருட்செயலைத்துதித்து, கொவ்வைக்கனிபோலுஞ் சிவந்தவாயையுடைய பரவைநாச்சியாரது நாயகராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளையே வணங்கி யெழுகின்றவராய்.—எ-று.

இதுமுத லிரண்டுபாட்டொருங் குளகம். (௧௫)

வேறு.

நாவலூர் மன்ன ரார்க்கு நாயனா ரளித்த நெல்லிங்
கியாவரா லெடுக்க லாகு மிச்செய லவர்க்குச் சொல்லப்

பேரவன்யா னென்று போந்தார் புகுந்தவா றருளிச் செய்து
தேவர்தம் பெருமா னேவ நம்பியு மெதிரே சென்றார்.

(இ-ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள்பொருட்டுச் சிவபெருமான் கொடுத்தருளிய நென்மலைகளை இங்குயாவராலும் எடுக்கமுடியாது; ஆகையால், இச்செய்தியை அவர்க்குத்தெரிவிக்க யான்போவேனென்று சென்றார்; தேவர்கள் நாயகராகிய சிவபெருமான் குண்டையூர்க்கிழார்க்கு நென்மலை கொடுத்த தன்மையை யருளிச்செய்து அனுப்ப, ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளும் அவரெதிரேவந்தருளினார்.—எ-று. (௧௬)

குண்டையூர்க் கிழவர் தாமு மெதிர்கொண்டு கோதில் வாய்மைத்
தொண்டனார் பாதந் தன்னிற் றொழுதுவீழ்ந் தெழுந்து நின்று
பண்டெலா மடியேன் செய்த பணியெனக் கின்றுமுட்ட
வண்டர்தம் பிரானார் தாமே நென்மலை யளித்தா ரென்று.

(இ-ள்.) குண்டையூர்க்கிழாரும் அவரைஎதிர்கொண்டு குற்றமற்றமெய்த்தொண்டராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளது திருவடிகளில் சாஷ்டாங்கமாக வணங்கியெழுந்துநின்று, முன்னெல்லாம் அடியேன் செய்ததிருப்பணி இன்று குறைபட, (அதுநீங்கும்பொருட்டுச்) சிவபெருமானே நென்மலையைக் கொடுத்தருளினாரென்று கூறி.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௧௭)

மன்னிதரா லெடுக்கு மெல்லைத் தன்றுநென் மலையினேக்க
மினியெனாற் செய்ய லாகும் பணியன்றி தென்னக் கேட்டுப்
பனிமதி முடியா ரன்றே பரிந்துமக் களித்தார் நெல்லென்
றினியன மொழிந்து தாமுங் குண்டையூ ரெய்தவிந்தார்.

(இ-ள்.) நென்மலையினதுயர்ச்சியானது மனிதர்களால் எடுக்கும் அளவினதன்று; இதையெடுத்துத்தேவரீரது திருமாளிகைக்கு அனுப்புந்திருபணி அடியேனால் செய்யத்தக்கதல்லவென்று சொல்ல, அதனை ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் கேட்டு, குளிர்ந்த இளம்பிறையணிந்த திருமுடியையுடைய சிவபெருமானேவிரும்பி உமக்கு நென்மலையளித்தாரென்று இனியமொழிகளைக்கூறி, தாமும் குண்டையூர்க்கெழுந்தருளினார்.—எ-று. (௧௮)

விண்ணினை யளக்கு நெல்லின் வெற்பினை நம்பி நோக்கி
யண்ணலைத் தொழுது போற்றி யதிசய மிகவு மெய்தி
யெண்ணில்சீர்ப் பரவை யில்லத் திந்நெல்லை யெடுக்க வாளுந்
தண்ணில வணிந்தார் தாமே தரிலன்றி யொண்ணா தென்று.

(இ-ள்.) விண்ணுலகத்தையளக்கத்தக்க நென்மலையை நம்பியாரூரர்பார்த்தருளிச் சிவபெருமானைவணங்கித் துதித்து மிகவும் அதிசயமுற்று, அளவற்ற சிறப்பினையுடைய பரவைநாச்சியாரது மாளிகைக்கு இந்நெல்லை யெடுத்துச் சேர்ப்பதற்கு ஆளினையும் குளிர்ந்த சந்திரனை யணிந்த அவ்வெம்பெருமானே கொடுத்தாலன்றி எடுத்தனுப்பமுடியாதென்று.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (௧௯)

**வேறு.**

ஆளிடவேண் டிக்கொள்வா ரருகுதிருப் பதியான
கோளிலியிற் றம்பெருமான் கோயிலினை வந்தெய்தி
வாளனகண் மடவாள் வருந்தாமே யெனும்பதிக
மூளவருங் காதலுடன் முன்றொழுது பாடுதலும்.

(இ-ள்.) ஆள்கொடுக்கும்படி சிவபெருமானை வேண்டிக் கொள்ளுங் கருத்துடையவராய், அவ்வூர்க்கருகிலுள்ள திருப்பதியாகிய திருக்கோளிலியிற் றமது ஆண்டவராகிய சிவபெருமானது திருக்கோயிலையடைந்து, "வாளனகண்மடவாள்வருந்தாமே" என்னுஞ் சொற்றொடரையுடைய திருப்பதிகத்தை மிக்க பெருவிருப்போடும் திருமுன்வணங்கிப் பாடியருளவும்.—எ-று. (௨௰)

---

**திருக்கோளிலி - பண் - நட்டராகம்.**

*திருச்சிற்றம்பலம்.*

நீளநினைந்தடியே னுமைநித்தலுங்கைதொழுவேன்
வாளனகண்மடவாளவள்வாடிவருந்தாமே
கோளிலியெம்பெருமான்குண்டையூர்ச்சிலநெல்லுப்பெற்றே
னாளிலையெம்பெருமானவையட்டித்தரப்பணியே. (க)

வண்டமருங்குழலாளுமைநங்கையோர்பங்குடையாய்
விண்டவர்தம்புரமூன்றெரிசெய்தவெம்வேதியனே
தெண்டிரைநீர்வயல்சூழ்திருக்கோளிலியெம்பெருமா
னண்டமதாயவனேயவையட்டித்தரப்பணியே. (உ)

பாதியோர்பெண்ணைவைத்தாய்படருஞ்சடைக்கங்கைவைத்தாய்
மாதர்நல்லார்வருத்தமதுநீயுமறிதியன்றே
கோதில்பொழில்புடைசூழ்குண்டையூர்ச்சிலநெல்லுப்பெற்றே
னாதியேயற்புதனேயவையட்டித்தரப்பணியே. (௩)

சொல்லுவதென்னுனைநான்றெண்டைவாயுமைநங்கையைநீ
புல்கியிடத்ில்வைத்தாய்க்கொருபூசல்செய்தாருளரோ
கொல்லைவளம்புறவிற்குண்டையூர்ச்சிலநெல்லுப்பெற்றே
னல்லல்களைந்தடியேற்கவையட்டித்தரப்பணியே. (௪)

முல்லைமுறுவலுமையொருபங்குடைமுக்கணனே
பல்லயர்வெண்டலையிற்பலிகொண்டுழல்பாசுபதா
கொல்லைவளம்புறவிற்றிருக்கோளிலியெம்பெருமா
னல்லல்களைந்தடியேற்கவையட்டித்தரப்பணியே. (௫)

குரவமருங்குழலாளுமைநங்கையோர்பங்குடையாய்
பரவைபசிவருத்தமதுநீயுமறிதியன்றே
குரவமரும்பொழில்சூழ்குண்டையூர்ச்சிலநெல்லுப்பெற்றே
னரவமசைத்தவனேயவையட்டித்தரப்பணியே. (௬)

எம்பெருமானுனையேநினைந்தேத்துவனெப்பொழுதும்
வம்பமருங்குழலாளொருபாகமமர்ந்தவனே
செம்பொனின்மாளிகைசூழ்திருக்கோளிலியெம்பெருமா
னன்பதுவாயடியேற்கவையட்டித்தரப்பணியே. (எ)

அரக்கன்முடிகரங்களடர்த்திட்டவெம்மாதிபிரான்
பரக்குமரவல்குலாள்பரவையவள்வாடுகின்றாள்
குரக்கினங்கள்குதிகொள்குண்டையூர்ச்சிலநெல்லுப்பெற்றே
னிரக்கமதாயடியேற்கவையிட்டுத்தரப்பணியே. (அ)

பண்டையமால்பிரமன்பறந்துமிடந்துமயர்ந்துங்
கண்டிலராயவர்கள்கழல்காண்பரிதாயபிரான்
தெண்டிரைநீர்வயல்சூழ்திருக்கோளிலியெம்பெருமா
னண்டமதாயவனேயவையட்டித்தரப்பணியே. (கூ)

கொல்லைவளம்புறவிற்றிருக்கோளிலிமேயவனை
நல்லவர்தாம்பரவுந்திருநாவலவூரனவ
னெல்லிடவாட்கள்வேண்டிநினைந்தேத்தியபத்தும்வல்லா
ரல்லல்களைந்துலகினண்டவானுலகாள்பவரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - **கோளிலிநாதர்,** தேவியார் - **வண்டமர்பூங்குழலம்மை.**

---

பகற்பொழுது கழிந்ததற்பின் பரவைமனை யளவன்றி
மிகப்பெருகு நெல்லுலகில் விளங்கியவா ரூர்நிறையப்
புகப்பெய்து தருவனநம் பூதங்க ளெனவிசும்பி
னிகர்ப்பரிய தொருவாக்கு நிகழ்ந்ததுநின் மலனருளால்.

(இ-ள்.) இன்று பகற்காலங்கழிந்தபின் இராத்திரிக்கு பரவைநாச்சியார து மாளிகையளவேயல்லாமல் அதிகமாகப்பெருகிய நெற்குவியலை உலகத்தில் சிறந்து விளங்குகின்ற திருவாரூரடங்க நிரம்பும்படி நமது பூதங்கள் சேர்த்துக்கொடுப்பனவென்று, சிவபெருமான் திருவருளினால் ஒப்பற்ற ஒரு அசரீரிவாக்கு ஆகாயத்தினின்று மெழுந்தது.—எ-று. (உக)

தம்பிரா னருள்போற்றித் தரையின்மிசை விழுந்தெழுந்தே
யும்பரா லுணர்வரிய திருப்பாதந் தொழுதேத்திச்
செம்பொனேர் சடையாரைப் பிறபதியுந் தொழுதுபோய்
நம்பரா ரூரணைந்தார் நாவலூர் நாவலனார்.

(இ-ள்.) (அதைக்கேட்ட) திருநாவலூரராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் சிவபெருமானது திருவருளைத் துதித்துப் பூமியில் சாஷ்டாங்கமாக வணங்கியெழுந்து, தேவர்களா லறிதற்கரிய திருவடிகளைவணங்கித் துதித்து, செம்பொன்போன்ற சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமானை மற்றத் திருப்பதிகளிலும் வணங்கிச் சென்று, ஸ்ரீ தியாகராசப்பெருமான் வீற்றிருந்தருளுந் திருவாரூரை யடைந்தருளினார்.—எ-று. (உஉ)

பூங்கோயின் மகிழ்ந்தருளும் புராதனனைப் புக்கிறைஞ்சி
நீங்காத பெருமகிழ்ச்சி யுடனேத்திப் புறம்போந்து
பாங்கானோர் புடைசூழ்ந்து போற்றிசைக்கப் பரவையா
ரோங்குதிரு மாளிகையி னுள்ளணைந்தா ராரூரர்.

(இ-ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள், பூங்கோயிலென்னும் ஆலயத்தில் மகிழ்ந்தெழுந்தருளிய ஸ்ரீ தியாகராசப்பெருமானை யடைந்துவணங்கி, நீங்காத மிக்க மகிழ்வோடுந் துதித்துப் புறத்திற்சென்று பரிசனங்கள் பக்கங்களிற் சூழ்ந்து துதிக்கப் பரவைநாச்சியாரது உயர்ந்ததிருமாளிகையினுள்ளே யெழுந்தருளினார்.—எ-று. (உரு)

கோவைவாய்ப் பரவையார் தாமகிழும் படிகூறி
மேவியவர் தம்மோடு மிகவின்புற் றிருந்ததற்பின்
சேவின்மே லுமையோடும் வருவார்தந் திருவருளி
னேவலினா லவ்விரவு பூதங்கண் மிக்கெழுந்து.

(இ-ள்.) கொவ்வைக்கனிபோலுஞ் சிவந்த வாயையுடைய பரவைநாச்சியார் மகிழும்படிநிகழ்ந்த செய்தியைக்கூறி, அப்பரவைநாச்சியாரோடு மிகவும் இன்புற்றிருந்த பின்பு, இடபத்தின்மேல் உமாதேவியாரோடு எழுந்தருளிவரும் ஸ்ரீ சிவபெருமானது திருவருளின் ஏவலினால் அன்றிரவு சிவபூதங்கள் அதிகரித்தெழுந்து.—எ-று.

இதுமுதல் இரண்டுபாடலுங் குளகம். (உச)

குண்டையூர் நென்மலையைக் குறட்பூதப் படைகவர்ந்து
வண்டுலாங் குழற்பரவை மாளிகைய நிறைவித்தே
யண்டர்பிரான் றிருவாரூ ரடங்கவுநென் மலையாக்கிக்
கண்டவரற் புதமெய்துங் காட்சிபெற வமைத்தனவால்.

(இ-ள்.) குண்டையூரிலுள்ள நெல்மலையைக் குறளுருவமான பூதகணங்கள் வாரிக்கொண்டு வண்டுகள்மொய்க்குங் கூந்தலையுடைய பரவைநாச்சியாரது திருமாளிகையை நிறைவித்து, சிவபெருமானது திருவாரூர் முழுவதும் நென்மலையாகக் குவித்துப் பார்ப்பவர்கள் ஆச்சரியமடையத்தக்க தோற்றமுண்டாகச் செய்தன.—எ-று. (உரு)

அவ்விரவு புலர்காலை யாரூரில் வாழ்வார்கண்
டெவ்வுலகில் விளைந்தனநென் மலையிவையென் றதிசயித்து
நவ்விமதர்த் திருநோக்கி னங்கைபுகழ்ப் பரவையார்க்
கிவ்வுலகு வாழவரு நம்பியளித் தனவென்பார்.

(இ-ள்.) அன்றிரவு விடியும்பொழுது திருவாரூரில் வாழ்பவர்கள் (அதனைக்கண்டு) இந்நென்மலைகள் எந்தத்தேசத்தில் விளைந்தனவென்று அதிசயித்து, இவை மான்போலும் மதர்த்த கண்களையுடைய சிறந்தபுகழமைந்த பரவைநாச்சியாருக்கு இவ்வுலகத்தார் ஆனந்தப்பெருவாழ்வடையும்படி யவதரித்தருளிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் கொடுத்தனவென்று சொல்வார்கள்.

நீக்கரிய நெற்குன்று தனைநோக்கி நெறிபலவும்
போக்கரிதா யிடக்கண்டு நீண்டுநெக்கும் நிலப்பாகுவார்

பாக்கியத்தின் றிருவடிவாம் பரவையார்க் கிந்நெல்லுப்
போக்குமிட மரிதாகு மெனப்பலவும் புகல்கின்றார்.

(இ-ள்.) எடுத்தற்கரிய நென்மலையைப்பார்த்துப் பல வழிகளிலுஞ்செல்லுதற் கரிதாயிருப்பதைக் கண்டு, மீளவுந் தமதுவீட்டிற்குப் புகுகின்றவர்கள் செல்வத்தின் திருவுருவமாகிய பரவைநாச்சியாருக்கு இந்த நெல்லைச் சேர்த்துவைக்குமிடம் அரிதாயிருக்குமென்று பலவார்த்தைகளையுஞ் சொல்கின்றார்கள்.—எ-று.

எமது அன்னையாராகிய பரவைநாச்சியாரது திருவுருவம், அருட்டிருப்படிவமாகலின் அதனைச் சிந்தித்தவர்கட்கு அஷ்டைசுவரியமும் தாமேவந்து பொருந்துமாகலினிது பாக்கியத்திருவுருவேயாமென்பார் 'பாக்கியத்தின்றிருவுருவாம் பரவையார்' என்று கூறினார். (உஎ)

வன்றொண்டர் தமக்களித்த நெற்கண்டு மகிழ்சிறப்பா
ரின்றுங்கண் மனையெல்லைக் குட்படுநெற் குன்றெல்லாம்
பொன்றங்கு மாளிகையிற் புகப்பெய்து கொள்கவென
வென்றிமுர சறைவித்தார் மிக்கபுகழ்ப் பரவையார்.

(இ-ள்.) சிறந்த புகழையுடைய பரவைநாச்சியார், தமக்கு ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் கொடுத்தருளிய நென்மலையைப்பார்த்து, மகிழ்ச்சியதிகரித்தவராய், இப்பொழுது உங்களுங்கள் வீட்டினெல்லைக் குட்பட்ட நென்மலைகளனைத்தையும் அழகமைந்த உங்கள் திருமாளிகையில் அடையும்படிசேர்த்துக் கொள்ளுங்களென்று வெற்றிபொருந்திய முரசறைவித்தார்.—எ-று.

'பொன்றங்குமாளிகை' என்பதற்கு இலக்ஷுமிவிலாசம் பொருந்திய மாளிகை எனினுமாம். (உஅ)

அணியாரூர் மறுகதனி லாளியங்கப் பறையறைந்த
பணியாலே மனைநிறைத்துப் பாங்கெங்கு நெற்கூடு
கணியாமற் கட்டிநகர் களிகூரப் பரவையார்
மணியாரம் புனைமார்பின் வன்றொண்டர் தமைப்பணிந்தார்.

(இ-ள்.) அழகிய திருவாரூர்த்திருவீதியில் மனிதர்கள் சஞ்சரிக்கும்படி பறையறைந்து தெரிவித்த கட்டளையினால் தங்கள்தங்கள் மாளிகைகளை நிறைத்து, அம்மாளிகைகளின் பக்கங்களெங்கும் நெற்கூடுகளை அளவிடாமற்கட்டி, அந்நகரத்தார் மகிழ்ச்சியடையவும், பரவைநாச்சியார் இரத்தினஆரத்தையணிந்த திருமார்பினையுடைய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளை வணங்கினார்.—எ-று. ()

நம்பியா ரூரர்திரு வாரூரி னயந்துறைநாட்
செம்பொற்புற் றிடங்கொண்டு வீற்றிருந்த செழுந்தேனைத்
தம்பெரிய விருப்பினொடுந் தாழ்ந்துணர்வி னார்பருகி
யிம்பருட னும்பர்களு மதிசயிப்ப வேத்தினார்.

(இ-ள்.) நம்பியாரூரராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் திருவாரூர்த்திருப்பதியில் விரும்பிவசித்தருளும் நாள்களில், சிவந்தபொன்மயமாகிய புற்றினையிடமாகக்கொண்டுவீற்றிருந்தருளிய செழியதேன்போல்பவராகிய ஸ்ரீவன்மீகநாதரைத் தமதுபெருவிருப்பத்தோடும் வணங்கிப்பேருணர்ச்சியாலுண்டு, மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் அதிசயிக்கும்படி துதித்தார்.—எ-று. ()

குலவுபுகழ்க் கோட்புலியார் குறையிரந்து தம்பதிக்க
ணலகில்புக ழாரூர ரெழுந்தருள வடிவணங்கி
நிலவியவன் றொண்டரஃ திசைந்ததற்பி னேரிறைஞ்சிப்
பலர்புகழும் பண்ணினார் மீண்டுந்தம் பதியணைந்தார்.

(இ-ள்.) புகழ்விளங்குகின்ற கோட்புலிநாயனார் தமதுகுறைகளைக்கூறி, தமதூருக்கு அளவில்லாத புகழையுடைய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் எழுந்தருளும்படி அவரது திருவடிகளைவணங்கி, அவ்வாறே சிறந்த ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் அதற்கு திருவுள்ளமிசைந்தபின்பு, எதிரேவணங்கிப் பலரும் புகழத்தக்க நற்குணங்களையுடைய அக்கோட்புலிநாயனார் திரும்பவுந் தமது ஊராகிய திருநாட்டியத்தான்குடி யென்னுந் திருப்பதியையடைந்தார்.-எ-று.

சிவனடியார்க் கமுதுபடைத்தற் பொருட்டுக் கட்டிவைத்த நெற்கூட்டையழித்த தாய் தந்தை மனைவி முதலியரை யழித்ததன்றி, அந் நெல்லமுதைச் சமைத்துண்டாளது பாலுண்டுவளர்ந்த குழந்தையையும் வாளால்வெட்டி யெறிந்தமையின், 'குலவுபுகழ்க்கோட்புலியார்' என்று கூறினார். (௩௧)

வேறு.

தேவ ரொதுங்கத் திருத்தொண்டர் மிடையுஞ்செல்வத்திருவாரூர்
காவல் கொண்டு தனியாளுங் கடவுட் பெருமான் கழல்வணங்கி
நாவ லூர ரருள்பெற்று நம்பர் பதிகள் பிறகண்ணிப்
பாவை பாகர் தமைப்பணிந்து பாடும் விருப்பிற் சென்றணைவார்.

(இ-ள்.) தேவர்கள் ஒதுங்கும்படி அடியார்கள் நெருங்கியிருக்கும் செல்வத்தையுடைய திருவாரூரைக்காத்தலை மேற்கொண்டு தனிமையாக அரசாட்செய்யும் ஸ்ரீதியாகராசப்பெருமானது திருவடிகளை வணங்கித் திருவருள் பெற்று, சிவபெருமான் வீற்றிருந்தருளிய மற்றத்திருப்பதிகளையடைந்து பார்வதிபாகராகிய அவ்வெம்பெருமானை வணங்கித் திருப்பதிகம்பாடும் விருப்பத்தோடு செல்கின்றவராயினார்.—எ-று.

திருமால் பிரமன்முதலிய தேவர்கள் சிவபோத நீங்காத பெத்தான்மாக்களாகலின் அவர்க ளொதுங்குதலும், மெய்யடியார்கள் பசுகாரணங்கெட்டுச் சிவகரணமுற்றவ ராகலின், அவர்கள் மிடைதலுஞ் சிவாக்கினையாகலான், 'தேவரொதுங்கத் திருத்தொண்டர் மிடையுஞ் செல்வத்திருவாரூர்' என்று கூறினார்.

"மாலயன்சதமகன்பெருந்தேவர்மற்றுமுள்ளவர்கண்முற்றுநெருங்கிச்
சீலமாமுனிவர்சென்றுமுன்றுன்னித்திருப்பிரம்பினடிகொண்டுதிளைத்துக்
காலநேர்படுதல்பார்த்தயனிற்பக்காதலன்பர்கணநாதர்புகும்பொற்
கோலநீடுதிருவாயிலிறைஞ்சிக்குவித்தசெங்கைதலைமேற்கொடுபுக்கார்."

எனத் தடுத்தாட்கொண்டபுராணத்துக் கூறியவாற்றானுமுணர்க. (௩௨)

மாலு மயனு முணர்வரியார் மகிழும் பதிகள் பலவணங்கி
ஞால நிகழ்கோட் புலியார்தந் நாட்டி யத்தான் குடிநண்ணக் [க்
வேலும் வகையா லலங்கரித்தங் கவருமெதிர்கொண் டினி திறைஞ்சி
கோல மணிமா ளிகையின்க ணார்வம் பெருகக் கொடுபுக்கார்.

(இ-ள்.) திருமால் பிரமனென்னு மிருவராலு மறிதற்கரிய சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளிய பலதிருப்பதிகளை வணங்கி, உலகத்திற்விளங்குகின்ற

கோட்புலிநாயனாரது திருநாட்டியத்தான்குடி யென்னுந் திருப்பதியை யடைய, அக் கோட்புலியாரும் அவ்வூரைப்பொருந்தியவண்ணம் அலங்கரித்து இனிமையோடு ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளை எதிர்கொண்டு வணங்கித்தமது அழகிய திருமாளிகையில் விருப்பமிகும்படி அழைத்துக்கொண்டு சென்றார்.—எ-று.()

தூய மணிப்பொற் றவிசிலெழுந் தருளி யிருக்கத் தூநீராற் [லான்
சேய மலர்ச்சே வடிவிளக்கித் தெளித்துக் கொண்ட செழும்புன
மேய சுடர்மா ளிகையெங்கும் விளங்க வீசி யுளங்களிப்ப
வேய சிறப்பி லர்ச்சனைக ளெல்லா மியல்பின் முறைபுரிவார்.

(இ-ள்.) தூய்மையாகிய மாணிக்கங்களழுத்திய பொற்பீடத்தின்மேல் ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் எழுந்தருளியிருக்கப் பரிசுத்தம்பொருந்திய நீரைக்கொண்டு, அவரது செந்தாமரைமலர்போன்ற திருவடிகளை அலம்பிச் சிரசில் தெளித்துக்கொண்ட அந்த நீரினால் ஒளிபொருந்திய தமது திருமாளிகை முழுவதும் விளங்கத் தெளித்து, மனமகிழும்படி பொருந்திய சிறப்போடு பூசைகளனைத்தும் முறைமைப்படி செய்வாராயினார்.—எ-று

நம்பியாரூரரது திருவடிகளை விளக்கக் கொணர்ந்த நீர் சிறந்தபுண்ணிய தீர்த்தமே யென்பார், 'தூநீர்' என்று கூறினார். (௩௬)

பூந்தண் பனிநீர் கொடுசமைத்த பொருவில் விரைச்சந் தனக்கலவை
வாய்ந்த வகிலி னறுஞ்சாந்து வாச நிறைமான் மதச்சேறுந்
தோய்ந்த புகைநா வியினறுநெய் தூய பசுங்கர்ப் பூரமுத
லேய்ந்த வடைக்கா யமுதினைய வெண்ணின் மணிப்பா சனத்தேந்தி.

(இ-ள்.) குளிர்ந்த பனிநீரால் அமைத்த ஒப்பற்ற வாசனைவீசுங் கலவைச் சந்தனமும், நன்மை மிக்க அகிற்சந்தனமும், வாசனைநிறைந்த கஸ்தூரிக்குழம்பும், புகைதோய்ந்த நறிய நாவிநெய்யும், தூய்மையாகிய பச்சைக்கர்ப்பூரமும் முதலாகப் பொருந்திய தாம்பூலமும் இவைமுதலிய பொருள்களை அளவற்ற இரத்தினத்தட்டுகளி லெடுத்துக்கொண்டு.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௩௭)

வேறுவேறு திருப்பள்ளித் தாமப் பணிகண் மிகவெடுத்து
மாறி லாத மணித்திருவா பரண வருக்கம் பலதாங்கி
யீறில் விதத்துப் பரிவட்ட மூழி னிரைத்தே யெதிரிறைஞ்சி
யாறு புனைந்தா ரடித்தொண்ட ரளவில் பூசை கொளவளித்தார்.

(இ-ள்.) வெவ்வேறு திருப்பள்ளித்தாமத்திற்குரிய பொருள்களை மிகுதியாக எடுத்துக்கொண்டு, (அதனுடன்)ஒப்பற்ற பல இரத்தினாபரணங்களையெடுத்துக்கொண்டு, அளவற்றவகைப் பரிவட்டங்களை வரிசையாகவைத்து எதிரேவணங்கிக் கங்கைநதியையணிந்த சிவபெருமானடியவராகிய கோட்புலிநாயனார் அளவில்லாதபூசையை (ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள்) ஏற்றுக்கொள்ளும்படி செய்தார்.—எ-று.

'ஆறுபுனைந்தாரடித்தொண்டர்' என்பதற்கு, ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் எனப் பொருள்கூறினுமாம். (௩௮)

செங்கோ லரச னருளுரிமைச் சேனாபதியாங் கோட்புலியார்
நங்கோ மானை நாவலூர் நகரார் வேந்தை நண்பினாற்

றங்கோ மனையிற் றிருவமுது செய்வித் திறைஞ்சித் தலைசிறந்த
பொங்கோதம்போற்பெருங்காதல் புரிந்தார் பின்னும்போற்றுவார்.

(இ-ள்.) செங்கோலையுடைய சோழராசனது அரசுரிமைக்குரிய சேனா பதியாகிய கோட்புலிநாயனார், நமது தலைவரும் திருநாவலூரர்க் கிறைவருமாகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளை நண்புடன் சிறந்த தமது திருமாளிகையில் திருவமுதுசெய்வித்து வணங்கி, மிகச் சிறந்தகடல்போலப் பேரன்புபொருந் தியவராய்ப் பின்னுந் துதிப்பாராயினார்.—எ-று. (௯௭)

ஆரா விருப்பின் மற்றவர்தா மருமை யான்முன் பெற்றெடுத்த
தேனார் கோதைச் சிங்கடியார் தமையு மவர்பின் றிருவுயிர்த்த[டர்
மானார் நோக்கின் வனப்பகையார் தமையுங்கொணர்ந்துவன்றொண்
தூநாண் மலர்த்தாள் பணிவித்துத் தாமுந்தொழுது சொல்லுவார்.

(இ-ள்.) நீங்காத அன்பினால் அக்கோட்புலிநாயனார் தாம் முன்பு அருமையாகப் பெற்றெடுத்த தேன்பொருந்திய மலர்மாலையையணிந்த சிங்கடியாரென்னும் புத்திரியாரையும்,மான்போன்ற பார்வையினையுடைய வனப்பகையாரென்னும் புத்திரியாரையும் அழைத்து, ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளது தூய்மையாகிய புதிய தாமரைமலர்போன்ற திருவடிகளைவணங்கச்செய்து,தாமும்வணங்கிச் சொல்லுகின்றார்.—எ-று.

'கருவுயிர்த்த' என்றும் பாடம். (௯௮)

அடியேன் பெற்ற மக்களிவ ரடிமை யாகக் கொண்டருளிக்
கடிசேர் மலர்த்தா டொழுதுய்யக் கருணை யளிக்க வேண்டுமெனத்
தொடிசேர் தளிர்க்கை யிவரெனக்குத் தூயமக்க ளெனக்கொண்டப்
படியே மகண்மை யாக்கொண்டார் பரவை யார்தங் கொழுநனார்.

(இ-ள்.) அடியேன்பெற்ற இப்புத்திரிகளைத் தேவரீர் அடிமைகொண்டருளி, வாசனைபொருந்திய தாமரைமலர்போன்ற திருவடிகளை வணங்கி யுய்யும்படி கிருபைசெய்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க, (அதற்குப்) பரவை நாச்சியார் மணவாளராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் வளையலையணிந்த மாந்தளிர்போலுங் கையையுடைய இச்சிறுமியர்கள் எனக்குத் தூயபுத்திரிகளென்று கருதி, அவ்வாறே புத்திரிகளாகக்கொண் டருளினார்.—எ-று. (௯௯)

கோதை சூழ்ந்த குழலாரைக் குறங்கின் வைத்துக் கொண்டிருந்து
காத லிறைந்த புதல்வியராங் கருத்துட் கசிவா லணைத்துச்சி
மீது கண்ணீர் விழமோந்து வேண்டு வனவுங் கொடுத்தருளி
நாதர் கோயில் சென்றடைந்தார் நம்பி தம்பி ரானாரூரர்.

(இ-ள்.) தம்பிரான்றோழராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் மலர்மாலை சூழ்ந்த கூந்தலையுடைய அப்பெண்களைத் துடையின்மேல் வைத்துக்கொண்டிருந்து, விருப்ப மிக்க புத்திரிகளாகக்கொண்டகருத்தி னுள்ளன்பினால் அணைத்துக்கண்ணீர்சிந்த உச்சிமோந்து,அவர்கள்விரும்பிய பொருள்களைக் கையிற்கொடுத்து, சிவபெருமானது திருக்கோயிலை யடைந்தருளினார்.—எ-று. (௱)

வென்றி வெள்ளே றுயர்த்தருளும் விமலர் திருக்கோ புரமிறைஞ்சி
யொன்று முள்ளத் தொடுமன்பா லுச்சிக் குவித்த கரத்தோடுஞ்
சென்று புக்குப் பணிந்துதிருப் பதிகம் பூணா ணென்றெடுத்துக்
கொன்றை முடியா ரருளுரிமை சிறப்பித் தார்கோட் புலியாரை.

(இ-ள்.) வெற்றிபொருந்திய வெள்ளிய இடபக்கொடியை யுயர்த்திய சிவபெருமானது திருக்கோபுரத்தை வணங்கி அன்புபொருந்திய திருவுள்ளத்தோடுஞ் சிரசிற்குவித்த திருக்கரத்தோடுஞ் சென்று உள்ளேபுகுந்து வணங்கி, "பூணாண்" என்னு முதலையுடைய திருப்பதிகத்தைத்தொடங்கிக் கொன்றைமாலையையணிந்த திருமுடியையுடைய சிவபெருமானது திருவருட்பெருமையையும், கோட்புலிநாயனாரையும் சிறப்பித்துப் பாடியருளினார்.—எ-று. (௯௧)

சிறப்பித் தருளுந் திருக்கடைக்காப் பதனி னிடைச்சிங் கடியாரைப்
பிறப்பித் தெடுத்த பிதாவாகத் தம்மை நினைந்த பெற்றியினால்
மறப்பில் வகைச்சிங் கடியப்ப னென்றே தம்மை வைத்தருளி
நிறப்பொற்புடைய விசைபாடி நிறைந்தவருள்பெற் றிறைஞ்சுவார்.

(இ-ள்.) அவ்வாறு சிறப்பித்துப் பாடியருளிய திருக்கடைக்காப்பில், சிங்கடியாரென்னும் புத்திரியைப்பெற்றெடுத்த பிதாவாகத் தம்மை நினைந்த முறைமையினால், மறவாத வண்ணம் "சிங்கடியப்பன்" என்று தம்மையமைத்து,இனிய இசைபொருந்திய திருப்பதிகம்பாடியருளிச் சிறந்த திருவருளைப் பெற்று வணங்குவாராயினார்.—எ-று.

திருநாவலூரராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் தாம் அப்புத்திரிகளிருவரையும் மகண்மையாகக்கொண்ட முறைமை ஓர்காலத்துமாறாதிருக்கத் திருவுள்ளங்கொண்டு, தமது திருப்பதிகத்திற் பொருந்தவைத்துப் பாடுதலின், 'மறப்பில்வகை' என்று கூறினார். (௯௨)

### திருநாட்டியத்தான்குடி - பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

பூணாணவதோரரவங்கண்டஞ்சேன்புறங்காட்டாடல்கண்டிகழேன்
பேணீராகிலும்பெருமையையுணர்வேன்பிறவேனாகிலுமறவேன்
காணீராகிலுங்காண்பனென்மனத்தாற்கருதீராகிலுங்கருதி
நாணேனும்மடிபாடுதலொழியேனாட்டியத்தான்குடிநம்பீ.

கூடாமன்னரைக்கூட்டத்துவென்றகொடிறன்கோட்புலிசென்னி
நாடார்தொல்புகழ்நாட்டியத்தான்குடிநம்பியைநாளுமறவாச்
சேடார்பூங்குழற்சிங்கடியப்பன்றிருவாரூரனுரைத்த
பாடீராகிலும்பாடுமின்றொண்டீர்பாடநும்பாவம்பற்றறுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - ரத்தினகிரிநாதர் ; தேவியார் - மலர்மங்கையம்மை.

---

அங்கு நின்று மெழுந்தருளி யளவி லன்பி னுண்மகிழச்
செங்க ணுதலார் மேவுதிரு வலிவ லத்தைச் சேர்ந்திறைஞ்சி
மங்கை பாகர் தமைப்பதிகம் வலிவ லத்துக் கண்டேனென்
றெங்கு நிகழ்ந்ததமிழ்மாலை யெடுத்துத் தொடுத்த விசைபுனைவார்.

(இ-ள்.) அத்திருநாட்டியத்தான் குடியென்னுந்திருப்பதியினின்றுமெழுந்தருளி, அளவற்றபேரன்பினால் திருவுள்ள மகிழச் சிவந்தநெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் எழுந்தருளிய திருவலிவலமென்னுந் திருப்பதியை

யடைந்துவணங்கி,பார்வதிபாகராகிய அவ்வெம்பெருமானை, "வலிவலந்தனில் வந்துகண்டேன்" என்னும் இறுதியையுடைய திருப்பதிகத் தமிழ்மாலையை யெடுத்து இசைபொருந்தப்பாடினாராயினர்.—எ-று. (௩௧)

நன்று மகிழுஞ் சம்பந்தர் நாவுக் கரசர் பாட்டுவந்தி
ரொன்றுசிறப்பித் திறைஞ்சிமகிழ்ந் தேத்தி யருள்பெற் றெழுந்தருளி
மன்றி னிடையே நடம்புரிவார் மருவு பெருமைத் திருவாரூர்
சென்றுகுறுகிப் பூங்கோயிற் பெருமான் செம்பொற் கழல்பணிந்து.

(இ-ள்.) மிக்கமகிழ்வினையுடைய திருஞானசம்பந்தப் பிள்ளையாரும் திருநாவுக்கரசுசுவாமிகளுமாகிய இவர்களது திருப்பாடலை மகிழ்ந்தருளினீரென்று சிறப்பித்து வணங்கிமகிழ்ந்து துதித்துத் திருவருள்பெற்று,நடனமூர்த்தியாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளிய பெருமைபொருந்திய திருவாரூரைச்சென்று சேர்ந்து,திருப்பூங்கோயிலிலெழுந்தருளிய ஸ்ரீ தியாகராசப்பெருமானது செம்பொன்மயமாகிய திருவடிகளைவணங்கி.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௩௨)

---

## திருவலிவலம் பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

ஊனங்கத்துயிர்ப்பாயுயிர்க்கெல்லாமோங்காரத்துருவாகிநின்றானை
வானங்கத்தவர்க்குமளப்பரியவள்ளலையடியார்கடம்முள்ளத்
தேனங்கத்தமுதாகியுள்ளூறுந்தேசனைத்தினைத்தற்கினியானை
மானங்கைத்தலத்தேந்தவல்லானைவலிவலந்தனில்வந்துகண்டேனே

நல்லிசைஞானசம்பந்தனுநாவிற்கரைசரும்பாடியநற்றமிழ்மாலை
சொல்லியவேசொல்லியேத்துகப்பானைத்தொண்டனேனறியாமையறிந்து
கல்லியன்மனத்தைக்கசிவித்துக்கழலடிகாட்டியென்களைகளையறுக்கும்
வல்லியல்வானவர்வணங்கநின்றானைவலிவலந்தனில்வந்துகண்டேனே

கலிவலங்கெடவாரழலோம்புங்கற்றநான்மறைமுற்றனலோம்பும்
வலிவலந்தனில்வந்துகண்டேனெனமன்னுநாவலாரூரன்வன்றொண்ட
னொலிகொளின்னிசைச்செந்தமிழ்பத்துமுள்ளத்தாலுகந்தேத்தவல்லார்போய்
மெலிவில்வானுலகத்தவரேத்தவிரும்பிவிண்ணுலகெய்துவர்தாமே

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - மனத்துணைநாதர் - தேவியார் - மாழையங்கண்ணியம்மை.

இறைஞ்சிப் போந்து பரவையார் திருமா ளிகையி லெழுந்தருளி
நிறைந்த விருப்பின் மேவுநா ளீடு செல்வத் திருவாரூர்ப்
புறம்புநணிய கோயில்களும் பணிந்து போற்றிப் புற்றிடமா
யுறைந்த பெருமான் கழல்பிரியா தோவா வின்ப முற்றிருந்தார்.

(இ-ள்.) வணங்கிச்சென்று பரவைநாச்சியாரது திருமாளிகையி லெழுந்தருளி நிறைந்த விருப்பத்தோடும் வாழும்நாள்களில், மிக்க செல்வத்தையுடைய திருவாரூரின் புறத்திலுள்ள திருக்கோயில்களையும் வணங்கித்துதித்து, புற்றையிடமாகக்கொண் டெழுந்தருளிய ஸ்ரீ வன்மீகநாதரது திருவடிகளைப் பிரியாமல் கெடாத பேரின்பமடைந்திருந் தருளினார்.—எ-று. (௩௩)

செறிபுன் சடையார் திருவாரூர்த் திருப்பங் குனியுத் திரத்திருநாள்
குறுக வரலும் பரவையார் கொடைக்கு விழாவிற் குறைவறுக்க
நிறையும் பொன்கொண் டணைவதற்கு நினைந்து நம்பி திருப்புகலூ
ரிறைவர் பாதம் பணியவெழுந் தருளிச் சென்றங் கெய்தினார்.

(இ-ள்.) நெருக்கமாகிய புல்லிய சடைமுடியையுடைய சிவபெருமானது திருவாரூரில் பங்குனியுத்திரத் திருநாள் சமீபிக்கவும், அத்திருவிழாவில் பரவைநாச்சியார்செய்யுந் தருமங்களுக்குப் பொருளில்லாமையால் நேர்ந்த குற்றைவநீக்க,மிகுந்த பொன்னைக்கொண்டு வருவதற்கு நினைந்து, ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் திருப்புகலூரி லெழுந்தருளியசிவபெருமான் திருவடிகளை வணங்க எழுந்தருளி அத்திருப்புகலூரையடைந்தருளினார்.—எ-று. (௫௬)

சென்று விரும்பித் திருப்புகலூர்த் தேவர் பெருமான் கோயின்மணி
முன்றில் பணிந்துவலங்கொண்டு முதல்வர் முன்புவீழ்ந்திறைஞ்சித்
தொன்று மரபி னடித்தொண்டு தோய்ந்த வன்பிற் றுதித்தெழுந்து
நின்று பதிக விசைபாடி நினைந்த கருத்து நிகழ்விப்பார்.

(இ-ள்.) திருப்புகலூரையடைந்து, விரும்பி அத்திருப்புகலூரி லெழுந்தருளிய சிவபெருமானதுதிருக்கோயிலின் திருமுற்றத்தை வணங்கிப்பிரதக்ஷணஞ்செய்து, சிவபெருமான் திருமுன்பு சாஷ்டாங்கமாக வணங்கிப் பழைய முறைமைப்படியே திருவடித்தொண்டமைந்த அன்பினால் துதித்து எழுந்து நின்று இசையமைந்த திருப்பதிகம்பாடியருளித் தாம்நினைந்த கருத்தைக் குறிப்பாலுணர்த்துவாராயினார்.—எ-று.

ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் இந்நிலவுலகத்துத் திருவவதாரஞ்செய்தற்கு முன்னரும் திருக்கயிலாயத்து ஆலாலசுந்தரரென்னுந் திருப்பெயரோடு சிவபெருமானுக்குப் புட்பத் திருத்தொண்டு செய்துவந்தவரோ யாமென்பார், 'தொன்றுமரபினடித் தொண்டுதோய்ந்தவன்பில்' என்று கூறினார். (௫௭)

சிறிது பொழுது கும்பிட்டுச் சிந்தை முன்ன மங்கொழிய
வறிது புறம்போந் தருளியயன் மடத்தி லணைவார் வன்றொண்ட
ரறிவு கூர்ந்த வன்பருட னணிமுன் றிலிலே யிருக்கிருப்ப
மறிவண் கையா ரருளேயோ மலர்க்கண் டுயில்வந் தெய்தியதால்.

(இ-ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் கொஞ்சநேரம் நின்று வணங்கித் தமது சிந்தையானது முற்பட்டு அவ்வெம்பெருமானிடத்திலயித்துநிற்க, தாம்தனியே புறத்திற்சென்றருளி அருகிலுள்ள திருமடத்திற்குச் செல்கின்றவர், பேரறிவினையுடைய அடியார்களோடு அழகியதிருமுற்றத்தின் ஒருபக்கத்திலிருக்க, (அப்பொழுது) மானேந்தியதிருக்கரத்தையுடையசிவபெருமானது திருவருள்தானோ! அவர்க்குத் தாமரைமலர்போன்ற திருக்கண்களில் நித்திரை வந்தடைந்தது.—எ-று. (௫௮)

துயில்வந் தெய்தத் தம்பிரான் றோழ ரங்குத் திருப்பணிக்குப்
பயிலுஞ் சுடுமட் பலகைபல கொணர்வித் துயரம் பண்ணித்தே
யிலுஞ் சுரும்பார் மலர்ச்சிகழி முடிமே லணியா வுத்தரிய
வெயிலுக் கியவெண் பட்டதன்மேல் விரித்துப் பள்ளி மேவினார்.

(இ-ள்.) அவ்வாறு நித்திரைவரவும், ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் அங்குத் திருப்பணிசெய்தற்காக வைத்திருக்கும் சுட்ட பல செங்கற் பலகைகளைத்

தருவித்து உயரமாக அடுக்கி, உத்தரியமாகிய ஒளிவீசுகின்ற வெண்பட்டை அ தன்மேல் விரித்து, தேனுண்ணுகின்ற வண்டுகள் நிறைந்த மலர்மாலை யணிந்த திருமுடியை அக்கல்லடுக்கின்மேல்வைத்துப் பள்ளிகொண்டருளினார்.—எ-று.

சுற்று மிருந்த தொண்டர்களுந் துயிலு மளவிற் றுணைமலர்க்கண்
பற்றுந் துயினீங் கிடப்பள்ளி யுணர்ந்தார் பரவை கேள்வனார்
வெற்றி விடையா ரருளாலே வேமண் கல்லே விரிசுடர்ச்செம்
பொற்றிண் கல்லா யிடக்கண்டு புகலூ ரிறைவ ரருள்போற்றி.

(இ-ள்.) நாற்புறத்துஞ் சூழ்ந்திருந்த அடியார்களும் நித்திரை செய்யும் பொழுது, ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் தமது தாமரைமலர்போன்ற கண்ணைப் பந்தித்திருந்த நித்திரை நீங்கத் துயிலெழுந்தார்; அவர், வெற்றி பொருந்திய இடபவாகனத்தையுடைய சிவபெருமானது திருவருளினால் சுட்ட அச்செங்கற்பலகைகளே ஒளிவீசுகின்ற மாற்றுயர்ந்த செம்பொன்கல்லாகவிளங்கக் கண்டு ஸ்ரீவர்த்தமானேசரது திருவருளைத் துதித்து.—எ-று. (௫௦)

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம்.

தொண்ட ருணரமகிழ்ந்தெழுந்து துணைக்கைக்கமலமுகைதலைமேற்
கொண்டு கோயி லுட்புக்குக் குறிப்பி லடங்காப் பேரன்பு
மண்டு காத லுறவணங்கி வாய்த்த மதுர மொழிமாலை
பண்டங் கிசையிற் றம்மையே புகழ்ந்தென் றெடுத்துப் பாடினார்.

(இ-ள்.) அடியார்களுந் துயில்நீங்க மகிழ்வுற்றெழுந்து தாமரை யரும்பு போன்ற இரண்டு திருக்கரங்களையுஞ் சிரசின்மேற் குவித்துத் திருக்கோயிலுட் புகுந்து குறிப்பிலடங்காத பேரன்பு நிறைந்த விருப்புடன் வணங்கிச் சிறந்த மதுரமாகிய சொற்களமைந்த திருப்பதிகமாலையைப் இசையோடு, "தம்மையேபுகழ்ந்து" என்றுமுதலெடுத்துப்பாடியருளினார்.—எ-று. (௫௧)

---

## திருப்புகலூர் - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

தம்மையேபுகழ்ந்திச்சைபேசினுஞ்சார்வினுந்தொண்டர் தருகிலாப்
பொய்ம்மையாளரைப்பாடாதேயெந்தைபுகலூர்பாடுமின்புலவீர்கா
ளிம்மையேதருஞ்சோறுங்கூறையுமேத்தலாமிடர்கெடலுமா
மம்மையேசிவலோகமாள்வதற்கியாதுமையுறவில்லையே. (௧)

மிடுக்கிலாதானைவீமனேவிறல்விசயனேவில்லுக்கிவனென்றுங்
கொடுக்கிலாதானைப்பாரியேயென்றுகூறினுங்கொடுப்பாரிலை
பொடிக்கொள்மேனியெம்புண்ணியன்புகலூரைப்பாடுமின்புலவீர்கா
ளடுக்குமேலமருலகமாள்வதற்கியாதுமையுறவில்லையே. (௨)

காணியேற்பெரிதுடையனேகற்றுநல்லனேசுற்றநன்கிளை
பேணியேவிருந்தோம்புமேயென்றுபேசினுங்கொடுப்பாரிலை
பூணிபூண்டுழல்புட்சிலம்புந்தண்புகலூர்பாடுமின்புலவீர்கா
ளாணியாயமருலகமாள்வதற்கியாதுமையுறவில்லையே. (௩)

நரைகள்போந்துமெய்தளர்ந்துமூத்துடனடுங்கிநிற்குமிக்கிழவனை
வரைகள்போற்றிரடோளனேயென்றுவாழ்த்தினுங்கொடுப்பாரிலை
புரைவெள்ளேறுடைப்புண்ணியன்புகலூரைப்பாடுமின்புலவீர்கா
ளரையனுயமருலகமாள்வதற்கியாதுமையுறவில்லையே. (ச)

வஞ்சநெஞ்சனைமாசழக்கனைப்பாவியைவழக்கில்லியைப்
பஞ்சதுட்டனைச்சாதுவேயென்றுபாடினுங்கொடுப்பாரிலை
பொன்செய்செஞ்சடைப்புண்ணியன்புகலூரைப்பாடுமின்புலவீர்காள்
நெஞ்சில்நோயறுத்துஞ்சுபோவதற்கியாதுமையுறவில்லையே. (ரு)

நலமிலாதானைநல்லனேயென்றுநரைத்தமாந்தனையிளையனேயென்று
குலமிலாதானைக்குலவனேயென்றுகூறினுங்கொடுப்பாரிலை
புலமெலாம்வெறிகமழும்பூம்புகலூரைப்பாடுமின்புலவீர்கா
ளலமராதமருலகமாள்வதற்கியாதுமையுறவில்லையே. (சா)

நோயனைத்தடந்தோளனேயென்றுநொய்யமாந்தரைவிழுமிய
தாயன்றேபுலவோர்க்கெலாமென்றுசாற்றினுங்கொடுப்பாரிலை
போயுழன்றுகண்குழியாதேயெந்தைபுகலூர்பாடுமின்புலவீர்கா
ளாயமின்றிப்போயண்டமாள்வதற்கியாதுமையுறவில்லையே. (எ)

எள்விழுந்திடம்பார்க்குமாகிலும்மீக்குமீகிலனாகிலும்
வள்ளலேயெங்கள்மைந்தனேயென்றுவாழ்த்தினுங்கொடுப்பாரிலை
புள்ளுலாஞ்சென்றுசேரும்பூம்புகலூரைப்பாடுமின்புலவீர்கா
ளள்ளற்பட்டழுந்தாதுபோவதற்கியாதுமையுறவில்லையே. (அ)

கற்றிலாதானைக்கற்றுநல்லனேகாமதேனுவையொக்குமே
முற்றிலாதானைமுற்றனேயென்றுமொழியினுங்கொடுப்பாரிலை
பொத்திலாந்தைகள்பாட்டறாப்புகலூரைப்பாடுமின்புலவீர்கா
ளத்தனாயமருலகமாள்வதற்கியாதுமையுறவில்லையே. (கூ)

தையலாருக்கோர்காமனேசாலநலவழகுடையையனே
கையுலாவியவேலனேயென்றுகழறினுங்கொடுப்பாரிலை
பொய்கைவாவியின்மேதிபாய்புகலூரைப்பாடுமின்புலவீர்கா
ளையனாயமருலகமாள்வதற்கியாதுமையுறவில்லையே. (க0)

செறுவினிற்செழுங்கமலமோங்குதென்புகலூர்மேவியசெல்வனை
நறவம்பூம்பொழினாவலூரன்வனப்பகையப்பன்சடையன்றன்
சிறுவன்வன்றொண்டனூரன்பாடியபாடல்பத்திவைவல்லவ
ரறவனாரடிச்சென்றுசேர்வதற்கியாதுமையுறவில்லையே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - **அக்கினியீசுவரர்**; தேவியார் - **கருந்தார்குழலம்மை.**

---

பதிகம் பாடித் திருக்கடைக்காப் பணிந்து பரவிப் புறம்போந்தே
யெதிரி லின்ப மிம்மையே தருவா ரருள்பெற் றெழுந்தருளி
நிதியின் குவையு முடன்கொண்டு நிறையு நதியுங் குறைமதியும்
பொதியுஞ் சடையார் திருப்பனையூர் புகுவார் புரிநூன்மணிமார்பர்.

(இ-ள்.) திருப்பதிகம்பாடித் திருக்கடைக்காப்பையு மணிந்து துதித்துப் புறத்திற்சென்று, ஒப்பற்ற பேரின்பத்தை இம்மையிலேயே கொடுத்தருளுஞ் சிவபெருமானது திருவருளைப்பெற்று, அங்குநின்றுமெழுந்தருளிப்பொற்குவைகளையுந் தம்முடனெடுத்துக்கொண்டு, நிறைந்தகங்கைநதியும் இளம்பிறையும்பொருந்திய சடைமுடியையுடைய சிவபெருமானது திருப்பனையூரை முப்புரிநூலையணிந்த திருமார்பினையுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் அடைவாராயினார்.—எ-று. (௫௨)

செய்யசடையார்திருப்பனையூர்ப்புறத்துத் திருக்கூத்தொடுங்காட்சி
யெய்த வருள வெதிர்சென் றங்கெழுந்தவிருப்பால்விழுந்திறைஞ்சி
யையர் தம்மை யரங்கிலாட வல்லா ரவரோ யழகியரென்
றுய்ய வுலகு பெறும்பதிகம் பாடி யருள்பெற் றுடன்போந்தார்.

(இ-ள்.) சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமான் திருப்பனையூர்த் திருப்பதியில் திருக்கூத்தோடுங் காட்சிகொடுத்தருள, எதிரேசென்றுஅங்குண்டாகிய பெருவிருப்பினால் சாஷ்டாங்கமாக வணங்கிச்சிவபெருமான் சிற்சபையில் "ஆடுமாறுவல்லாரவரோயழகியர்" என்று இறுதியிலமைத்துஉலகத்தாருய்தற்கேதுவாகிய திருப்பதிகத்தை யருளிச்செய்து திருவருள்பெற்று அடியார்களுடன் புறத்திற்சென்றருளினார்.—எ-று. (௫௩)

---

### திருப்பனையூர்-பண்-சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

மாடமாளிகைகோபுரத்தொடுமண்டபம்வளரும்வளர்பொழிற்
பாடல்வண்டறையும்பழனத்திருப்பனையூர்
தோடுபெய்தொருகாதினிற்குழைதூங்கத்தொண்டர்களெள்ளிப்பாடநின்
றுடுமாறுவல்லாரவரோயழகியரே.

வஞ்சிநுண்ணிடைமங்கைபங்கினர்மாதவர்வளரும்வளர்பொழிற்
பஞ்சின்மெல்லடியார்பயிலுந்திருப்பனையூர்
வஞ்சியும்வளர்நாவலூரன்வனப்பகையப்பன்வன்றொண்டன்
செஞ்சொற்கேட்டுகப்பாரவரோயழகியரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சவுந்தரேசர், தேவியார்-பெரியநாயகியம்மை

---

வளமல் கியசீர்த் திருப்பனையூர் வாழ்வா ரேத்த வெழுந்தருளி
யளவில் செம்பொ னிட்டிகைக ளாண்மே னெருங்கி யணியாரூர்
தளவ முறுவற் பரவையார் தம்மா ளிகையிற் புகத்தாமு
முளமன் னியதம் பெருமானார் தம்மை வணங்கி யுவந்தணைந்தார்.

(இ-ள்.) வளப்பமிக்கசிறந்த திருப்பனையூரில்வாழும் அடியார்கள் துதிக்க அங்குநின்று மெழுந்தருளி, அளவற்றசெம்பொற்கற்கள் ஆள்களின்மேல் எடுக்கப்பட்டு அழகியதிருவாரூரில் முல்லையரும்புபோன்ற பற்களையுடைய பரவைநாச்சியாரது திருமாளிகையிற்செல்ல, தாமும் தமது திருவுள்ளத்தில் வீற்றிருந்தருளும் ஸ்ரீ தியாகராஜப்பெருமானைவணங்கி மனமகிழ்ந்து பரவைநாச்சியாரது திருமாளிகைக்கு வந்தருளினார்.—எ-று. (௫௪)

வந்து பரவைப் பிராட்டியார் மகிழ வைகி மருவுநா
ளந்த ணூரூர் மருங்கணிய கோயில் பலவு மணைந்திறைஞ்சிச் .
சிந்தை மகிழ விருப்பினொடுந் தெய்வப் பெருமா டிருவாரூர்
முந்தி வணங்கி யினிதிருந்தார் முனைப்பா டியர்தங் காவலனூர்.

(இ-ள்.) திருமுனைப்பாடி நாட்டிலுள்ளவர்கள் தலைவராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் பரவைநாச்சியார் திருமாளிகைக்குவந்து அவ்வம்மையார் மனமகிழும்படி வசிக்குநாள்களில் அழகிய திருவாரூரினருகிலுள்ள பலதிருக்கோயில்களையு மடைந்து வணங்கி, மனமகிழப் பெருவிருப்போடும் தெய்வநாயகராகிய ஸ்ரீதியாகராஜப்பெருமானது திருவாரூரையடைந்து வணங்கி இனிமையோடு மெழுந்தருளியிருந்தார்.—எ-று. (ருரு)

பலநா ளமர்வார் பரமர்திரு வருளா லங்கு நின்றும்போய்ச்
சிலைமா மேரு வீரனூர் திருநன் னிலத்துச் சென்றெய்தி
வலமா வந்து கோயிலினுள் வணங்கி மகிழ்ந்து பாடினூர்
தலமார் கின்ற தண்ணியல்வெம் மையினு னென்னுந் தமிழ்மாலை.

(இ-ள்.) அத்திருப்பதியில் பலநாள்கள் வசித்தருளும் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் சிவபெருமான்திருவருளினுல் அத்திருப்பதியினின்று நீங்கி,மேருமலையைவில்லாகவுடைய சிவபெருமானது திருநன்னில மென்னுந் திருப்பதியையடைந்து பிரதக்ஷணஞ்செய்து திருக்கோயிலினுள்ளே சுவாமிதரிசனஞ்செய்து மனமகிழ்ந்து உலகத்திற்சிறந்த "தண்ணியல் வெம்மையினுன்" என்னு முதலையுடைய திருப்பதிகம்பாடியருளினூர்.—எ-று. (ருசு)

---

## திருநன்னிலத்துப்பெருங்கோயில்-பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

தண்ணியல்வெம்மையினுன்றலையிற்கடைதோறும்பலி
பண்ணியன்மென்மொழியாரிடக்கொண்டுழல்பண்டரங்கன்
புண்ணியநான்மறையோர்முறையாலடிபோற்றிசைப்ப
நண்ணியநன்னிலத்துப்பெருங்கோயினயந்தவனே.

கோடுயர்வெங்களிற்றுத்திகழ்கோச்செங்கணூன்செய்கோயி
னூடியநன்னிலத்துப்பெருங்கோயினயந்தவனைச்
சேடியல்சிங்கிதந்தைசடையன்றிருவாரூரன்
பாடியபத்தும்வல்லார்புகுவார்பரலோகத்துள்ளே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பிரகேசுவரர்; தேவியார்-பிரகேசுவரி.

---

பாடி யங்கு வைகியபின் பரமர் வீழி மிழலையினி
னீடு மறையோன் மேம்பட்ட வந்த ணாளர் நிறைந்தீண்டி
நாடு மகிழ வவ்வளவு நடைக்கா வணம்பா வாடையுடன்
மாடு கதலி பூகநிரை மல்க மணித்தோ ரணநிரைத்து.

(இ-ள்.) திருப்பதிகம்பாடி அங்குஎழுந்தருளியபின்பு, சிவபெருமானது திருவீழிமிழலையென்னுந் திருப்பதியிலுள்ள உயர்ந்தவேதவொழுக்கத்திற்

சிறந்த வேதியர்கள் சேர்ந்துவந்து உலகத்தார் மகிழும்படி அவ்வூரெல்லையிலும் நடைப்பந்தல் பாவாடையோடு பக்கங்களில் வாழைகமுகுகளின் வரிசைகள் நெருங்க அழகிய மகரதோரணங்களை வரிசையாக நாட்டி.—எ-று.

இதுமுத விரண்டுபாடலுங் குளகம். (ருஎ)

வந்து நம்பி தம்மையெதிர் கொண்டு புக்கார் மற்றவருஞ்
சிந்தை மலர்ந்து திருவீழி மிழலை யிறைஞ்சிச் சேண்விசும்பின்
முந்தை யிழிந்த மொய்யொளிசேர் கோயி றன்னை முன்வணங்கிப்
பந்த மறுக்குந் தம்பெருமான் பாதம்பரவிப் பணிகின்றார்.

(இ-ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளை எதிர்கொண்டுவந்து அழைத்துச் சென்றார்கள்; அச்சுந்தரமூர்த்திகளும் திருவுள்ளமகிழ்ந்து, திருவீழிமிழலைத் திருப்பதியை வணங்கி, முன்பு உயர்ந்தவிண்ணுலகினின்று மிழிந்த விமானக் கோயிலை முன்னேவணங்கி (உள்ளேபுகுந்து) ஆன்மாக்களுடைய பாசபந்தங்களையறுத்தருளுந் தமதுசிவபெருமானுடைய திருவடிகளைத் துதித்து வணங்குவாராயினர்.—எ-று. (ரு௮)

படங்கொ ளரவிற் றுயில்வோனும் பதுமத் தோனும் பரவரிய
விடங்கன் விண்ணோர் பெருமானை விரவும் புளக முடன்பரவி
யடங்கல் வீழி கொண்டிருந்தீ ரடியே னுக்கு மருளுமெனத்
தடங்கொள் செஞ்சொற் றமிழ்மாலை சாத்தி யங்குச் சாருநாள்.

(இ-ள்.) படம்பொருந்திய சேஷசயனத்திற் பள்ளிகொள்ளுந் திருமாலும், தாமரைமலரில் வசிக்கும் பிரமனுந் துதித்தற்கரிய விடங்கரும், தேவர்கள்நாயகருமாகிய சிவபெருமானைக்கலந்த புளகாங்கிதத்தோடுந் துதித்து "அடங்கல் வீழிகொண்டீரடியேற்கு மருளுதிரோ" என்னு மிறுதியையுடைய சிறந்த தமிழ்ச்சொற்களாலாகிய திருப்பதிகம்பாடி அங்குவசிக்குநாள்களில்.—எ-று

விடங்கர்=உளிபடாத திருமேனியை யுடையவர்; அதாவது சுயம்புமூர்த்தி யென்றபடி. டங்கம்=உளி. (ருகூ)

---

**திருவீழிமிழலை-பண்-சீகாமரம்.**

திருச்சிற்றம்பலம்.

விடங்கொண்மாமிடற்றிர்வெள்ளைச்சுருளொன்றிட்டுவிட்டகாதினீரொன்று
திடங்கொள்சிந்தையினார்கலிகாக்குந்திருமிழலை
மடங்கல்பூண்டவிமானமுமண்மிசைவந்திழிச்சியவானநாட்டையு
மடங்கல்வீழிகொண்டீரடியேற்குமருளுதிரோ.

வேதவேதியர்வேதநீதியரோதுவார்விரிநீர்மிழலையு
ளாதிவீழிகொண்டீரடியேற்குமருளுகென்று
நாதகீதம்வண்டோதுவார்பொழினாவலூரன்வன்றொண்டனற்றமிழ்
பாதமோதவல்லார்பரனோடுங்கூடுவரோ.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-**வீழியழகர்**; தேவியார்-**சுந்தரகுசாம்பிகையம்மை.**

---

வாசி யறிந்து காசளிக்க வல்ல மிழலை வாணர்பாற்
றேசு மிக்க திருவருண்முன் பெற்றுத் திருவாஞ் சியத்தடிகள்
பாச மறுத்தாட் கொள்ளுந்தாள் பணிந்து பொருவ னாரென்னு
மாசில் பதிகம் பாடியமர்ந் தரிசிற் கரைப்புத் தூரணைந்தார்.

(இ-ள்.) வாசியுடைத்தாதலையுணர்ந்து திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்குப் பொற்காசு அருளவல்லவராகிய வீழியழகரிடத்து ஒளிமிகுந்த திருவருளைமுன்னேபெற்று, (ஆன்மாக்களின்) பாசபந்தங்களை யறுத்தடிமை கொண்டருளுந் திருவாஞ்சியத்திலெழுந்தருளிய சிவபெருமானது திருவடிகளைவணங்கி, "பொருவனார்" என்னுமுதலையுடைய குற்றமற்றதிருப்பதிகம்பாடி வசித்தருளி, அரிசில் நதிக்கரையிலுள்ள திருப்புத்தூரை யடைந்தருளினார்.—எ-று.

வாசியறிந்து காசளித்த காரணத்தை,

"ஈசர்மிழலையிறைவர்பாலிமயப்பாவைதிருமுலைப்பா
றேசமுய்யவுண்டவர்தாந்திருமாமகனாராதலினாற்
காசுவாசியுடன்பெற்றார்கைத்தொண்டாகுமடிமையினால்
வாசியில்லாக்காசுபடிபெற்றுவந்தார்வாகீசர்." என்னுந் திருநாவுக்கரசுசுவாமிகள் புராணத்தா னுணர்க. (௬௦)

---

திருவாஞ்சியம்-பண்-பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பொருவனார்புரிநூலர்புணர்முலையுமையவளோடு
மருவனார்மருவார்பால்வருவதுமில்லைநம்மடிக
டிருவனார்பணிந்தேத்துந்திருவாஞ்சியத்துறையு
மொருவனாரடியாரையூழ்வினைநலியவொட்டாரே.

செந்நெலங்கழனித்திகழ்திருவாஞ்சியத்துறையு
மின்னலங்கலஞ்சடையெம்மிறைவனதறைகழல்பரவும்
பொன்னலங்கலநன்மாடப்பொழிலணிநாவலாரூரன்
பன்னலங்கலநன்மாலைபாடுமின்பத்தருளீரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்- சுகவாஞ்சிநாதர்; தேவியார்- வாழவந்தநாயகியம்மை.

---

செழுநீர் நறையூர் நிலவுதிருச் சித்தீச் சரமும் பணிந்தேத்தி
விழுநீர் மையினிற்பெருந்தொண்டர் விருப்பினோடு மெதிர்கொள்ள
மழுவோ டிளமான் கரதலத்தி லுடையார் திருப்புத் தூர்வணங்கித்
தொழுநீர் மையினிற் றுதித்தேத்தித் தொண்டர்சூழ வுறையுநாள்.

(இ-ள்.) செழித்த நீர்வளம்பொருந்திய திருநறையூரில்விளங்குந் திருச்சித்தீச்சரமென்னுந் திருப்பதியையும் வணங்கித்துதித்து, மிக்க மெய்யன்பினையுடைய பெரிய திருத்தொண்டர்கள் விருப்பத்துட னெதிர்கொள்ள, மழுவையும் மான்கன்றையுந் திருக்கரத்திலேந்திய சிவபெருமானது திருப்புத்தூரைவணங்கி முறைப்படிதுதித்து அடியார்கள்சூழும்படி அங்குவசித்தருளுநாள்களில்.—எ-று. (௬௧)

புனித ஞர்முன்புகழ்த்துணையார்க் கருளுந்திறமும் போற்றிசைத்து
முனிவர் போற்ற வெழுந்தருளி மூரி வெள்ளக் கங்கையினிற்
பனிவெண் டிங்க ளணிசடையார் பதிகள் பலவும் பணிந்துபோந்
தினிய நினைவி லெய்தினு ரிறைவர் திருவா வடுதுறையில்.

(இ-ள்.) மலரகிதராகிய சிவபெருமான் முன்னுளில் புகழ்த்துணைநாயனுருக்குப் படிக்காசுகொடுத்தருளிய பேரருட்டிறத்தைத் திருப்பதிகத்திலமைத்துத்துதித்து அடியார்கள் துதிக்க அவ்விடத்தினின்று மெழுந்தருளி, வலிய வெள்ளநீராகிய கங்கைநதியில்குளிர்ந்த வெண்பிறையைத்தரித்தசடைமுடியையுடைய சிவபெருமானது பல திருப்பதிகளையும் வணங்கிச் சென்று, அவ்வெம்பெருமானெழுந்தருளிய திருவாவடுதுறையென்னுந் திருப்பதியில் இனிமையாகிய நினைவோடுஞ் சென்றருளினுர்.—எ-று.

புகழ்த்துணைநாயனுருக்குச் சிவபெருமான் பொற்காசுகொடுத்தருளிய சரிதத்தை அவர் புராணத்துக் கூறுதலின், ஆண்டுக் கண்டுணர்க. (சுஉ)

---

**திருஅரிசிற்கரைப்புத்தூர்-பண்-இந்தளம்.**

திருச்சிற்றம்பலம்.

மலைக்குமகளஞ்சமதகரியையுரித்திரொரித்திர்வருமுப்புரங்கள் [யீர்
சிலைக்குங்கொலைச்சேவுகந்தேற்றெழிநீர்சில்பலிக்கில்கடோறுஞ்செலவொழி
கலைக்கொம்புங்கரிமருப்புமிடறிக்கலவம்மயிற்பீலியுங்காரகிலு
மலைக்கும்புனல்சேரரிசிற்றென்கரையழகார்திருப்புத்தூரழகனீரே

அகத்தடிமைசெய்யுமந்தணன்முனரிசிற்புனல்கொண்டுவந்தாட்டுகின்முன்
மிகத்தளர்வெய்திக்குடத்தையுநும்முடிமேல்விழுத்திட்டுநடுங்குதலும்
வகுத்தவனுக்குநித்தற்படியும்வருமென்றொருகாசினைநின்றநன்றிப்
புகழ்த்துணைகைபுகச்செய்துகந்திர்பொழிலார்திருப்புத்தூர்ப்புனிதனீரே.

காரூர்மழைபெய்துபொழியருவிக்கழைமோடலிலுந்திட்டிருகரையும்
போரூர்புனல்சேரரிசிற்றென்கரைப்பொழிலார்திருப்புத்தூர்ப்புனிதர்தம்மை
யாரூரனருந்தமிழைந்திஞ்ஞொடைந்தழகாலுரைப்பார்களுங்கேட்பவருஞ்
சீரூர்தருதேவர்கணங்களொடுமிணங்கிச்சிவலோகமடைய்துவரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-**படிக்காசுவைத்தநாதர்**; தேவியார்-**அழகம்மை.**

---

விளங்கும் திருவா வடுதுறையின் மேயார்கோயில் புடைவலங்கொண், டுளங்கொண் டுருகு மன்பினுட னுள்புக் கிறைஞ்சி யேத்துவார், வளங்கொள் பதிக மறையவனென் றெடுத்து வளவன்செங்கணுன், றளங்கொள் பிறப்புஞ் சிறப்பித்துத் தமிழ்ச்சொன் மாலை சாத்தினுர்.

(இ-ள்.) சிறப்புற்று விளங்குந் திருவாவடுதுறையில் எழுந்தருளிய சிவபெருமானது திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்து, அவ்வெம்பெருமானைத் தமதுள்ளத்தில் தியானித்து உருகுகின்ற பேரன்போடும் உள்ளேசென்று வணங்கித் துதிக்கின்ற ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் வளப்பமிக்க திருப்

பதிகத்தை "மறையவன்" என்று முதல்தொடங்கி,கோச்செங்கட்சோழநாயனாரது சிறந்த அவதார மான்மியத்தையுஞ் சிறப்பித்துத் தமிழ்ச்சொற்களாலாகிய திருப்பதிகமாலையை யணிந்தருளினார்.—எ-று. (சூ௩)

திருவாவடுதுறை-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

மறையவனொருமாணிவந்தடைய
வாரமாயவனாருயிர்நிறுத்தக்
கறைகொள்வேலுடைக்காலனைக்காலாற்
கடந்தகாரணங்கண்டுகண்டடியே
னிறைவனெம்பெருமானென்றெப்போது
மேத்தியேத்திநின்றஞ்சலிசெய்து
னறைகொள்சேவடிக்கன்பொடுமடைந்தே
னாவடுதுறையாதியம்மானே.

தெருண்டவாயிடைநூல்கொண்டுசிலந்தி
சித்திரப்பந்தர்சிக்கெனவியற்றச்
சுருண்டசெஞ்சடையாயதுதன்னைச்
சோழனாக்கியதொடர்ச்சிகண்டடியேன்
புரண்டுவீழ்ந்துநின்பொன்மலர்ப்பாதம்
போற்றிபோற்றியென்றன்பொடுபுலம்பி
யருண்டென்மேல்வினைக்கஞ்சிவந்தடைந்தே
னாவடுதுறையாதியம்மானே.

ஒக்கமுப்புரமோங்கெரிதூவ
வுன்னைமுன்னியமூவர்நின்சரணம்
புக்குமற்றவர்பொன்னுலகாளப்
புகழிலருளிந்தமையறிந்து
மிக்கநின்கழலேதொழுதரற்றி
வேதியாவாதிமூர்த்திநின்னரையி
லக்கணிந்தவெம்மானையடைந்தே
னாவடுதுறையாதியம்மானே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-ஸ்ரீமாசிலாமணியீசுரர்; தேவியார்-ஒப்பிலாமுலையம்மை.

சாத்தி யங்கு வைகுநாட டயங்கு மன்ப ருடன்கூடப்
போத்து மிறைஞ்சி யருள்பெற்றுப் பெண்ணோர் பாகத்தண்ணலார்
தீர்த்தப் பொன்னித் தென்கரைமேற் றிகழும் பதிகள் பலபணிந்து
மூர்த்தி யார்தம் மிடைமருதை யடைந்தார் முனைப்பா டித்தலைவர்.

(இ-ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் திருப்பதிகமாலையைச் சாத்தி அங்கு வசித்தருளும்நாள்களில் விளங்குகின்ற அடியார்களோடுகூட மீண்டும் (ஆலயத்திற்சென்று) வணங்கி அவ்வெம்பெருமானது திருவருளைப்பெற்று, தீர்த்தமாகிய காவிரிநதியின் தென்கரையில் பார்வதிபாகராகிய சிவபெருமான்எழு

ந்தருளிய பல் திருப்பதிகளை வணங்கி, சிவபெருமானெழுந்தருளிய திருவிடைமருதூரை யடைந்தருளினார்.—எ-று.

சப்தநதிதீர்த்தங்களில் காவிரிநதியு மொன்றாகலின், 'தீர்த்தப்பொன்னி' என்று கூறினார். (௬௪)

மன்னுமருதி னமர்ந்தவரை வணங்கி மதுரச் சொன்மலர்கள்
பன்னிப் புனைந்து பணிந்தேத்திப் பரவிப்போந்து தொண்டருட
னந்நற் பதியி னிருந்தகல்வா ரரனார் திருநா கேச்சரத்தை
முன்னிப் புக்கு வலங்கொண்டு முதல்வர்திருத்தாள்வணங்குவார்.

(இ-ள்.) நிலைபெற்ற திருவிடைமருதூரிலெழுந்தருளியசிவபெருமானை வணங்கி மதுரம்பொருந்திய சொற்களாகிய மலர்களைத்தொடுத்துப் பாமாலை சூட்டி வணங்கித் துதித்துப் புறத்திற்சென்று, அடியார்களுடன் நன்மைபொருந்திய அத்திருப்பதியினின்று நீங்குகின்றவராய், சிவபெருமானது திருநாகேச்சரமென்னுந் திருப்பதியை விருப்பி யடைந்து திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்து சிவபெருமானது திருவடிகளைவணங்குவாராயினார்.—எ-று.(௬௫)

பெருகும் பதிகம் பிறையணிவா ணுதலாள் பாடிப் பெயர்ந்துநிறை
திருவின் மலியுஞ் சிவபுரத்துத் தேவர் பெருமான் கழல்வணங்கி
யுருகுஞ் சிந்தை யுடன்போந்தே யுமையோர் பாகர் தாமகிழ்ந்து
மருவும் பதிகள் பிறபணிந்து கலைய நல்லூர் மருங்கணைந்தார்.

(இ-ள்.) சிறப்புமிகுந்த திருப்பதிகத்தை "பிறையணிவாணுதலாள்" என்று தொடங்கிப் பாடியருளி அங்குநின்று நீங்கி, நிறைந்த செல்வத்தான் மிக்க சிவபுரத்தின்கண் வீற்றிருந்தருளுந் தேவர்கள் நாயகராகிய சிவபெருமானது திருவடிகளை வணங்கி, உருகுகின்ற திருவுள்ளத்தோடும் அங்குநின்றுமெழுந்தருளி,பார்வதிபாகராகிய சிவபெருமான் மகிழ்ந்து வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளை வணங்கித் திருக்கலையநல்லூரென்னுந் திருப்பதியினருகடைந்தருளினார்.—எ-று. (௬௬)

---

### திருநாகேச்சரம்-பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

பிறையணிவா ணுதலாளுமையாளவள்பேழ்கணிக்க
நிறையணிநெஞ்ச னுங்கநிலமால்விடமுண்டதென்னே
குறையணிகொல்லைமுல்லையளைந்துகுளிர்மாதவிமேற்
சிறையணிவண்டுகள்சேர்திருநாகேச்சரத்தானே.

கொங்கணைவண்டரற்றக்குயிலும்மயிலும்பயிலுந்
தெங்கணைபூம்பொழில்சூழ்திருநாகேச்சரத்தானை
வங்கமலிகடல்சூழ்வயனாவலவூரன்சொன்ன
பங்கமில்பாடல்வல்லாரவர்தம்வினைபற்றறுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சண்பகாரணியேசுரர்; தேவியார்-குன்றமுலைநாயகி.

செம்மை மறையோர் திருக்கலைய நல்லூ ரிறைவர் சேவடிக்கீழ்
மும்மை வணக்கம் பெறவிறைஞ்சி முன்பு பரவித் தொழுதெழுவார்
கொம்மை மருவு குரும்பைமுலை யுமையா ளென்னுந் திருப்பதிக
மெய்ம்மைப் புராணம் பலவுமிகச் சிறப்பித் திசையின் விளம்பினார்.

(இ-ள்.) நல்லொழுக்கத்தையுடைய வேதியர்கள்வாழும் திருக்கலைய நல்லூரி லெழுந்தருளியசிவபெருமானது திருவடிகளில் திரிகரணங்களும் ஒருமைப்படவணங்கித் திருமுன்னின்று துதித்து, சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தெழுகின்ற ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் "குரும்பைமுலை மலர்க்குழலி" என்னு முதலையுடைய திருப்பதிகத்தை மெய்ம்மையாகிய புராணங்களிற்கூறும் பல சரித்திரங்களையும் மிகச் சிறப்பித்து இசைபொருந்தப்பாடியருளினார்.—எ-று.

திரிகரணமாவன:—மனம்-வாக்கு காயம் என்பன ; அவை அறிவைத் தம்வசப்படுத்திச்செல்லாது, அடக்கிச்செலுத்துதல்.

நம்பியாரூரர் தமது திருப்பதிகத்தில் மெய்ம்மைப்புராணம் பலவுமிகச் சிறப்பித்தருளினமையை, முதற்றிருப்பாடலில் சிவபெருமான் பார்வதியார்செய்ததவங்கண்டருள்கூர்ந்து திருமணம்புரிந்த சரித்திரமும், இரண்டாந்திருப்பாடலில் சலந்தராசுரனுடலைத்தடிந்த சக்கரத்தைச் சங்கபாணி தனதுகண்ணைப் பறித்தருச்சிக்கத் தந்தருளினமையும், காலனைவதைத்தமையும், இந்திரன்வலியைக்கெடுத்தமையுமாகிய சரித்திரங்களும், மூன்றாந்திருப்பாடலில் சண்டேசுரநாயனார் சிவப்பிரதிட்டைசெய்து பூசித்துப் பேறுபெற்ற சரித்திரமும், நான்காந்திருப்பாடலில் உமாதேவியார் திருக்கண்புதைப்ப நெற்றிவிழியைத்திறந்தருள்புரிந்த சரித்திரமும், ஐந்தாந்திருப்பாடலில் மாலயன்முதலியோரது வேண்டுகோட் கிரங்கிப் பெருமான் திரிபுரமெரித்தருளிய சரித்திரமும், ஆறாந்திருப்பாடலில் தக்ஷயாக சங்காரசரித்திரமும், ஏழாந்திருப்பாடலில் வெள்ளியங்கிரியையெடுத்த இராவணனது தோள்களைமுறித்த சரித்திரமும், எட்டாந்திருப்பாடலில் பிரமவிஷ்ணுக்களடிமுடிதேடினமையும், சந்திரனைத் திருமுடியணிந்தமையும், பாற்கடலிற்றோன்றிய ஆலாகலவிஷத்தையுண்டருளினமையுமாகிய சரித்திரங்களும், ஒன்பதாந்திருப்பாடலில் அசுராதியரை யழித்தற்பொருட்டுக் குமாரக்கடவுளைத் தந்தருளினமையும், காமதகனஞ்செய்தமையுமாகிய சரித்திரங்களும், பத்தாந்திருப்பாடலில், பிரமன் சிவார்ச்சனைசெய்த சரித்திரமும், பதினொராந் திருப்பாடலாகிய திருக்கடைக்காப்பில் பிரமசிரச்சேதஞ் செய்தருளிய சரித்திரமும் ஆகிய இவற்றை விளங்கவருளிச் செய்தமையுணர்க. (கஎ)

---

திருக்கலயநல்லூர்-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

குரும்பைமுலைமலர்க்குழலிகொண்டதவங்கண்டு
குறிப்பினொடுஞ்சென்றவள்றன்குணத்தினைநன்கறிந்து
விரும்புவரங்கொடுத்தவளைவேட்டருளிச்செய்த
விண்ணவர்கோன்கண்ணுதலோன்மேவியவூர்வினவி

லரும்பருகேசுரும்பருவவறுபதம்பண்பாட
வணிமயில்களடமாடுமணிபொழில்சூழயலின்
கரும்பருகேகருங்குவளைகண்வளருங்கழனிக்
கமலங்கண்முகமலருங்கலயநல்லூர்காணே.

தண்புனலும்வெண்மதியுந்தாங்கியசெஞ்சடையன்
றாமரையோன்றலைகலனாக்காமரமுன்பாடி
யுண்பலிகொண்டுழல்பரமனுறையுமூர்நிறைநீ
ரொழுகுபுனலரிசிலின்றென்கலயநல்லூரதனை
நண்புடையநஞ்சடையனிசைஞானிசிறுவ
னாவலர்கோனாரூரனுவினையந்துணைசெய்
பண்பயிலும்பத்துமிவைபத்திசெய்துநித்தம்
பாடவல்லாரல்லலொடுபாவமிலர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-அமுதகலைநாதர்; தேவியார் - அமுதவல்லியம்மை.

---

அங்கு நின்று திருக்குடமூக் கணைந்து பணிந்து பாடிப்போய்
மங்கை பாகர் வலஞ்சுழியை மருவிப் பெருகு மன்புருகத்
தங்கு காத லுடன்வணங்கித் தமிழாற் பரசி யரசினுக்குத்
திங்கண் முடியா ரடியளித்த திருநல் லூரைச் சென்றணைந்தார்.

(இ-ள்.) அத்திருக்கலைய நல்லூரினின்றுநீங்கி,ஸ்ரீகும்பகோணமென்னுந் திருப்பதியையடைந்து வணங்கித் திருப்பதிகம் பாடிச்சென்று, பார்வதிபாகராகிய சிவபெருமான் எழுந்தருளிய திருவலஞ்சுழியையடைந்து மிக்க அன்பினால் மனமுருக, பொருந்திய விருப்பத்துடன் வணங்கித் தமிழ்த் திருப்பதிகம் பாடித்துதித்து, சந்திரசேகரராகிய சிவபெருமான் திருநாவுக்கரசுசுவாமிகளுக்குத் திருவடிதீக்ஷைசெய்தருளிய திருநல்லூரென்னுந் திருப்பதியைச் சென்றுசேர்ந்தருளினார்.—எ-று.

திருநாவுக்கரசுசுவாமிகளுக்குத் திருவடிதீக்ஷை செய்தமையை அவர் புராணத்து விளங்கக் கூறுதலின், ஆண்டுக் காண்க. (௬௨)

நல்லூ ரிறைவர் கழல்போற்றி நவின்று நிலவு நம்பர்பதி
யெல்லா மிறைஞ்சி யேத்திப்போற் றிசையாற் பரவுந் தம்முடைய
சொல்லூதியமாவணிந்தவர்தஞ் சோற்றுத்துறையின் மருங்கெய்தி
யல்லூர்கண்டர் கோயிலினு ளடைந்து வலங்கொண் டடிபணிவார்.

(இ-ள்.) திருநல்லூரில் எழுந்தருளும் சிவபெருமானது திருவடிகளைத் துதித்து அதற்கிடையிலும் சிவபெருமானெழுந்தருளிய பல திருப்பதிகளையும் வணங்கிச்சென்று, இசையோடுபாடித் துதிக்கின்ற தமது திருப்பதிகத்தைப் பொருளாகவணிந்த சிவபெருமானது திருச்சோற்றுத்துறையி னருகிற் சென்று,காளகண்டராகிய அவ்வெம்பெருமானது திருக்கோயிலி னுள்ளடைந்து பிரதக்ஷணஞ்செய்து அவரது திருவடிகளை வணங்குவாராயினார்.—எ-று. ()

அழனீ ரொழுகி யனையவெனு மஞ்சொற் பதிக மெடுத்தருளிக்
கழனீ டியவன் பிணிற்போற்றுங் காதல் கூரப் பரவியபின்
கெழுநீர் மையினி லருள்பெற்றுப் போந்து பரவை யார்கேள்வர்
முழுநீ றணிவா ரமர்ந்தபதி பலவும் பணிந்து முன்னுவார்.

(இ - ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் "அழனீரொழுகினைய" என்னுமு தலையுடைய அழகிய சொற்களமைந்த திருப்பதிகம்பாடியருளி, மிக்க அன்போடு திருவடிகளைத் துதிசெய்யும் பெருவிருப்ப மதிகரிக்கத் துதித்தபின்பு, பொருந்தியமுறைமைப்படியே திருவருள்பெற்று அங்குநின்று மெழுந்தருளி, திருமேனி முழுவதுந் திருவெண்ணீறணிந்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளையும் வணங்கிச்செல்வாராயினார்.—எ - று. (எ0)

---

திருச்சோற்றுத்துறை - பண் - கவுசிகம்.

திருச்சிற்றம்பலம்.

அழனீரொழுகியனையசடையு
முழையீருரியுமுடையானிடமாங்
கழைநீர்முத்துங்கனகக்குவையுஞ்
சுழனீர்ப்பொன்னிச்சோற்றுத்துறையே.

கற்றார்தருநீர்ச்சோற்றுத்துறையுண்
முற்றாமதிசேர்முதல்வன்பாதத்
தற்றாரடியாரடிநாயூரன்
சொற்றானிவைகற்றார்துன்பிலரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-தொலையாச்செல்வர்; தேவியார்-ஒப்பிலாம்பிகையம்மை.

---

தேவர் பெருமான் கண்டியூர் பணிந்து திருவை யாறதனை
மேவி வணங்கிப் பூந்துருத்தி விமலர் பாதந் தொழுதிறைஞ்சிச்
சேவில் வருவார் திருவாலம் பொழிலிற் சேர்ந்து தாழ்ந்திரவு
மேவு சயனத் தமர்ந்தருளிப் பள்ளிகொள்ளக் கனவின்கண்.

(இ - ள்.) தேவர்கள் நாயகராகிய சிவபெருமானது திருக்கண்டியூரை வணங்கி, திருவையாற்றை யடைந்து வணங்கி, திருப்பூந் துருத்தியி லெழுந்தருளிய சிவபெருமானது திருவடிகளை வணங்கித் துதித்து, இடபவாகனத்தின் மேல் வருகின்ற அவ்வெம்பெருமானெழுந்தருளிய திருவாலம்பொழில் என்னுந் திருப்பதியையடைந்து வணங்கி, அன்றிரவுபொருந்திய சயனத்திலெழுந்தருளி நித்திரைகொள்ளும்பொழுது அவர்சொப்பனத்தில்.—எ - று.

கண்டியூரென்பது, பிரமசிரச்சேதஞ்செய்த க்ஷேத்திரமாகலின், இது அட்டவீரட்டத்தொன்று.

இதுமுதலிரண்டுபாடலுங் குளகம். (எக)

மழபா டியினில் வருவதற்கு நினைக்க மறந்தா யோவென்று
குழகா கியதங் கோலமெதிர் காட்டி யருளக் குறித்துணர்ந்து

நிழலார் சோலைக் கரைப்பொன்னி வடபா லேறிநெடுமாட
வழகார் வீதி மழபாடி யணைந்தார் நம்பி யாரூரர்.

(இ-ள்.) திருமழபாடியில் வருவதற்கு நினைக்க நீ மறந்தனையோ வென்று, இளமை பொருந்திய தமது திருக்கோலத்தைக் காட்டியருள, ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் அதைத் தரிசித்துணர்ந்து, நிழல்பொருந்திய சோலைகளையுடைய காவிரிநதியின் வடகரையிலேறி உயர்ந்த மாளிகைகள் அழகோடு நிறைந்தவீதிகளையுடைய திருமழபாடியென்னுந் திருப்பதியை யடைந்தருளினார்.

அணைந்து திருக்கோ புரமிறைஞ்சி யன்பர் சூழ வுடன்புகுந்து
பணங்கொ ளரவ மணிந்தார்முன் பணிந்து வீழ்ந்து பரங்கருணைக்
குணங்கொ ளருளின் றிறம்போற்றிக் கொண்டபுளகத் துடனுருகிப்
புணர்ந்த விசையாற் றிருப்பதிகம் பொன்னார்மேனி யென்றெடுத்து

(இ-ள்.) அங்குச்சேர்ந்து திருக்கோபுரத்தைவணங்கி அடியார்கள் தம்மைச்சூழ்ந்துவர உள்ளேபுகுந்து, படம்பொருந்திய பாம்பை யாபரணமாகவணிந்த சிவபெருமான் திருமுன்னே வீழ்ந்துவணங்கி, பெருங்கருணையோடுகூடிய திருவருட்டிறத்தைத்துதித்து, திருமேனியிற்கொண்ட புளகாங்கிதத்துடன்மனமுருகி, பொருந்தியஇசையோடு திருப்பதிகத்தைப் "பொன்னார்மேனி" என்று முதலெடுத்து.—எ-று.

இதுமுதலிரண்டுபாடலுங் குளகம். (எக)

அன்னே யுன்னை யல்லா லினியா ரைநினைக்கே னெனவேத்தித்
தன்னே ரில்லாப் பதிகமலர் சாத்தித் தொழுது புறம்பணைந்து
மன்னும் பதியிற் சிலநாள்கள் வைகித் தொண்ட ருடன்மகிழ்ந்து
பொன்னிக் கரையி னிருமருங்கும் பணிந்து மேல்பாற் போதுவார்.

(இ-ள்.) "அன்னேயுன்னையல்லாலினியாரைநினைக்கேனே" என்று இறுதியிலமைத்துத் துதித்து, தனக்குவேறொப்பில்லாத திருப்பதிகமலர்மாலையைச் சாத்தித் துதித்துப்புறத்திற்சென்று, நிலைபெற்ற அத்திருப்பதியில் சிலநாள்கள் வசித்து, அடியார்களுடன் மகிழ்ந்து காவிரிநதிக்கரையி னிருபுறத்திலுமுள்ள திருப்பதிகளை வணங்கி மேற்றிசையிற்செல்லுங்கருத்துடையவராயினார்.—எ-று. (எஉ)

## திருமழபாடி-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

பொன்னார்மேனியனேபுலித்தோலையரைக்கசைத்து
மின்னார்செஞ்சடைமேல்மிளிர்கொன்றையணிந்தவனே
மன்னேமாமணியேமழபாடியுள்மாணிக்கமே
யன்னேயுன்னையல்லாலினியாரைநினைக்கேனே. (க)

கீளார்கோவணமுந்திருநீறுமெய்பூசியுன்றன்
றாளேவந்தடைந்தேன்றலைவாவெனையேன்றுகொணீ
வாளார்கண்ணிபங்காமழபாடியுள்மாணிக்கமே
கேளாநின்னையல்லாலினியாரைநினைக்கேனே. (உ)

எம்மானெம்மனையென்றெனக்கெட்டனைச்சார்வாகா
ரிம்மாயப்பிறவிபிறந்தேயிறந்தெய்த்தொழிந்தேன்
மைம்மாம்பூம்பொழில்சூழ்மழபாடியுள்மாணிக்கமே
யெம்மானின்னையல்லாலினியாரைநினைக்கேனே. (௩.)

பண்டேநின்னடியேனடியாரடியார்கட்கெல்லாந்
தொண்டேபூண்டொழிந்தேன்றொடராமைத்துரிசறுத்தேன்
வண்டார்பூம்பொழில்சூழ்மழபாடியுள்மாணிக்கமே
யண்டாநின்னையல்லாலினியாரைநினைக்கேனே. (௪)

கண்ணாயேழுலகுங்கருத்தாயருத்தமுமாய்ப்
பண்ணாரின்றமிழாய்ப்பரமாயபரஞ்சுடரே
மண்ணார்பூம்பொழில்சூழ்மழபாடியுள்மாணிக்கமே
யண்ணாநின்னையல்லாலினியாரைநினைக்கேனே. (௫)

நாளார்வந்தணுகிநலியாமுனநின்றனக்கே
யாளாவந்தடைந்தேனடியேனையுமேன்றுகொளாய்
மாளாநாளருளுமழபாடியுள்மாணிக்கமே
யாளாநுன்னையல்லாலினியாரைநினைக்கேனே. (௬)

சந்தாருங்குழையாய்சடைமேற்பிறைதாங்கிநல்ல
வெந்தார்வெண்பொடியாய்விடையேறியவித்தகனே
மைந்தார்சோலைகள்சூழ்மழபாடியுள்மாணிக்கமே
யெந்தாய்நின்னையல்லாலினியாரைநினைக்கேனே. (௭)

வெய்யவிரிசுடரோன்மிகுதேவர்கணங்களெல்லாஞ்
செய்யமலர்களிடமிகுசெம்மையுணின்றவனே
மையார்பூம்பொழில்சூழ்மழபாடியுள்மாணிக்கமே
யையாநின்னையல்லாலினியாரைநினைக்கேனே. (௮)

நெறியேநின்மலனேநெடுமாலயன்போற்றிசெய்யுங்
குறியேநீர்மையனேகொடியேரிடையாள்தலைவா
மறிசேரங்கையனேமழபாடியுள்மாணிக்கமே
யறிவேநின்னையல்லாலினியாரைநினைக்கேனே. (௯)

ஏரார்முப்புரமுமெரியச்சிலைதொட்டவனை
வாரார்கொங்கையுடன்மழபாடியுள்மேயவனைச்
சீரார்நாவலர்கோனாரூரனுரைத்ததமிழ்
பாரோரேத்தவல்லார்பரலோகத்திருப்பாரே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வச்சிரத்தம்பநாயகர், தேவியார்-அழகம்மை.

செய்ய சடையார் திருவானைக் காவி லணைந்து திருத்தொண்ட
ரெய்த முன்வந் தெதிர்கொள்ள விறைஞ்சிக் கோயி லுட்புகுந்தே
யையர் கமலச் சேவடிக்கீ ழார்வம் பெருக வீழ்ந்தெழுந்து
மெய்யு முகிழ்ப்பக் கண்பொழிநீர் வெள்ளம் பரப்ப விம்முவார்.

(இ-ள்.) சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தரு ளிய திருவானைக்கா என்னுந் திருப்பதியிற் சென்று, அங்குள்ள திருத்தொண் டர்கள் பொருந்த முன்னேவந்தெதிர்கொள்ள வணங்கி, அவர்களுடன் திருக் கோயிலுட்புகுந்து, சிவபெருமானது தாமரைமலர்போன்ற திருவடிகளில் அ ன்பு மிக வீழ்ந்து வணங்கி யெழுந்து, திருமேனி மயிர்க்கூச்செறிய,கண்களி னின்றும் பொழிகின்ற ஆனந்தபாஷ்பமாகிய வெள்ளம் பரவும்படி விம்முவா ராயினார்.—எ-று. (எரு)

மறைக ளாய நான்குமென மலர்ந்த செஞ்சொற் றமிழ்ப்பதிக
நிறையுங் காத லுடனெடுத்து நிலவு மன்பர் தமைநோக்கி
யிறையும் பணிவா ரெம்மையுமா ளுடையா ரென்றென் றேத்துவா
ருறையூர்ச் சோழன் மணியாரஞ் சாத்துந் திறத்தை யுணர்ந்தருளி.

(இ-ள்.) "மறைகளாயின நான்கும்" என்று முதலில்தொடங்கிய செ வ்விய சொற்களமைந்த தமிழ்த்திருப்பதிகத்தை மிக்கவிருப்பத்துடனெடுத்து, விளங்குகின்ற அடியார் திருக்கூட்டத்தைப்பார்த்து இறைப்பொழுதேனும் (இப்பெருமானை) வணங்குகின்றவர் "எம்மையுமாளுடையார்" என்று செய் யுளின் இறுதிகடோறும் வைத்துத் துதிப்பவராய், உறையூர்ச்சோழமகாராஜ னது முத்து ஆரத்தைச் சிவபெருமான் அணிந்தருளிய முறைமையைத் தம து திருவுள்ளத்திற்கொண்டருளி.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (எசு)

வளவர் பெருமான் றிருவாரஞ் சாத்திக்கொண்டு வரும்பொன்னிக்
கிளருந் திரைநீர் மூழ்குதலும் வழுவிப்போகக் கேதமுற
வளவி றிருமஞ் சனக்குடத்து ளதுபுக் காட்ட வணிந்தருளித்
தளரு மவனுக் கருள்புரிந்த தன்மை சிறக்கச் சாற்றினார்.

(இ-ள்.) உறையூர்ச்சோழராசன் மணியாரத்தைத் தரித்துக்கொண்டு பெருகிவருகின்ற காவிரிநதியின் விளங்கும் அலைகளையுடைய நீரில் ஸ்நானஞ் செய்யவும், அம்மணியாரம் நீரில் நழுகிவிட, அதனால் அவன் துன்பமடைய, அவ்வாரம், சிறந்ததிருமஞ்சனமெடுக்குந் திருக்குடத்துள் புகுந்து,சிவபெருமா னுக்கு அபிஷேகஞ்செய்யும்பொழுது அதனை அவ்வெம்பெருமா னணிந்தருளி, மனம்வருந்துகின்ற அவ்வுறையூர்ச் சோழனுக்குத் திருவருள்செய்ததன்மையை அத்திருப்பதிகத்தில் விளங்கப் பாடியருளினார்.—எ-று.

சோழனது முத்துமாலையைச் சிவபெருமான் அணிந்த வரலாறு,— உறையூரி லரசுபுரிந்துவந்த சோழராசன் காவிரிதீர்த்தத்து நீராடத் தா னுந் தன் மனைவியுமாகச் செல்லுங்கால், அவள் கழுத்தி லணிந்திருந்த முத்து மாலை யொளிவீசுதலைக்கண்டு,இதனைச் சிவபெருமானுக்குத் தரிப்போமென்று நினைத்துக் காவிரிநதியையடைந்து நீராடிக் கரைசேர்ந்தபொழுது, அம்முத்து மாலை அலைநீரால் நழுவி நீரில்வீழ்ந்து போனதையுணர்ந்து வருந்திச் சிவபெ ருமானைச் சிந்தித்து, எமது ஆண்டவரோ ! அம்முத்துமாலையைத் தேவரீருக்குத் தரித்தற் கெண்ணியிருந்தேன் ; எனது அறியாமையால் அதனை நீரில்வீழ்த்தொ ழிந்தேன் ; அதுவோ இவ்வுலகத்தை விலைமதிக்கத்தக்கது; அடியேன் அதைப் போக்கடித்த குற்றத்தினின் றுநீக்கி யாண்டருள்வீராயின்,தேவரீரது இடப்பா

கத்திலுள்ள ஸ்ரீஅகிலாண்டேசுவரியாருக்குத் தரித்துக்கொள்கவென்று குறை யிரந்து ஸ்ரீசம்புகேசுரரது திருக்கோயிலை யடைந்து சிவபெருமானைத்தொழுது நின்றான். அதற்குமுன்னமே அவ்வெம்பெருமானுக்குத் திருமஞ்சனமாட்டப் பரிசனங்கள் காவிரிநதியில் நீர்மொள்ளும்பொழுது, அத் திருமஞ்சனக்குடத் துள் அம்முத்துமாலைபுகுந்து அருச்சகர்வாங்கிச் சுவாமிக்கு அபிஷேகஞ்செய் யும்பொழுது, அது சிவபெருமான் திருமுடியில் விளங்கியது; அதனை அரசன் கண்டு விம்மிதமுற்று வணங்கித் தமதூருக்குச்சென்றனன் என்பதாம்.

திருவானைக்காப்புராணம்.

"அன்னவாறுநீர்க்குடத்தினுளடுத்தமாலை
மன்னுதார்முடிவிழுதலும்பூசைசெய்மறையோன்
றுன்னுமோகையன்சுடரணியெவற்றினுமேலான்
மின்னவாங்கணிந்திருந்தமைகண்டனன்வேந்தன்
சம்புமூலத்தின்வீற்றிருந்தருளியதலைவ
வெம்பிரானினதருளெனக்கிருந்தவாறென்னே
வம்புநீணதிக்கெடுத்தமாலைநின்முடிமே
லும்பராருநன்றதிசயமுறவணிந்தனையே." என்பதனாலுணர்க. (எஎ)

---

திருவானைக்கா - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

மறைகளாயினநான்குமற்றுளபொருள்களுமெல்லாந்
துறையுந்தோத்திரத்திறையுந்தொன்மையுநன்மையுமாய
வறையும்பூம்புனலானைக்காவுடையாதியைநாளு
மிறைவனென்றடிசேர்வாரெம்மையுமாளுடையாரே.

தாரமாகியபொன்னித்தண்டுறையாடிவிழுத்து
நீரினின்றடிபோற்றிநின்மலாகொள்ளெனவாங்கே
யாரங்கொண்டவெம்மானைக்காவுடையாதியைநாளு
மீரமுள்ளவர்நாளுமெம்மையுமாளுடையாரே.

ஆழியாற்கருளானைக்காவுடையாதிபொன்னடியி
னீழலேசரணாகநின்றருள்கூரநினைந்து
வாழவல்லவன்றொண்டன்வண்டமிழ்மாலைவல்லார்போ
யேழுமாபிறப்பற்றுவெம்மையுமாளுடையாரே.

திருச்சிற்றம்பலம்.

---

சாற்றி யங்குத் தங்குநாட் டயங்கும் பவளத் திருமேனி
நீற்றர் கோயி லெம்மருங்குஞ் சென்று தாழ்ந்து நிறைவிருப்பாற்
போற்றி யங்கு நின்றும்போய்ப் பொருவி லன்பர் மருவியதொண்
டாற்றும் பெருமைத் திருப்பாச்சி லாச்சி ராமஞ் சென்றடைந்தார்.

(இ-ள்.) (உறையூர்ச் சோழனுக்கருள்புரிந்த தன்மையைச்) சிறப்பித்து ப்பாடி யருளி, அங்குவசித்தருளும் நாள்களில்,விளங்குகின்ற பவளம்போன்ற சிவந்த திருமேனியில் திருவெண்ணீற்றையணிந்த சிவபெருமான்வீற்றிருந்த

ருளும் (திருவானைக்காவினருகிலுள்ள) திருக்கோயில்களெங்குஞ்சென்று வண
ங்கி, மிகுந்த விருப்பத்தினால் துதித்து அங்குநின்றுமெழுந்தருளி, ஒப்பற்ற
அடியார்கள் சிறந்த திருத்தொண்டைச் செய்தொழுகும் பெருமையினையுடை
ய திருப்பாச்சிலாச்சிராமம் என்னுந் திருப்பதியைச் சேர்ந்தருளினார்.—எ-று.

சென்று திருக்கோ புரமிறைஞ்சித் தேவர் மலிந்த திருந்துமணி
முன்றில் வலங்கொண் டுள்ளணைந்து முதல்வர் முன்பு வீழ்ந்திறை
நன்று பெருகும் பொருட்காதலையப்புப் பெருக நாதரெதிர் [ஞ்சி
நின்றும் பரவி நினைந்தபொரு ளருளா தொழிய நேர்நின்று.

(இ-ள்.) அங்குச்சென்று திருக்கோபுரத்தை வணங்கி, தேவர்கள்நெரு
ங்கியிருக்கும் திருத்தமாகிய அழகிய திருமுற்றத்தைப் பிரதக்ஷணஞ்செய்து
உள்ளேபுகுந்து சிவபெருமான் திருமுன்னேவிழுந்து வணங்கி, நன்மைமிக்க
பொருள்வேண்டுமென்னும் ஆசையதிகரிக்க அவ்வெம்பெருமான் திருமுன்னி
ன்று துதித்து, தாம் விரும்பிய பொருளைச் சிவபெருமான் கொடுத்தருளா
திருக்கஅவரது சந்நிதியில் நின்று.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (எகூ)

அன்பு நீங்கா வச்சமுட னடுத்த திருத்தோ ழமைப்பணியாற்
பொன்பெ றாத திருவுள்ளம் புழுங்க வழுங்கிப் புறம்பொருபால்
முன்பு நின்ற திருத்தொண்டர் முகப்பேமுறைப்பா டுடையார்போ
லென்பு கரைந்து பிரானார்மற் றிலையோவென்ன வெடுக்கின்றார்.

(இ-ள்.) தமதுள்ளத்தில் அன்புநீங்காத அச்சத்துடனே, தமக்கடுத்த
தோழமையோடுகூடிய திருத்தொண்டினால், தாமகருதிய பொன்னைப்பெறாத
திருவுள்ளமானது புழுங்க, அதனால் வருந்தி, புறத்தில் ஒருபக்கத்தில் நிற்கும்
திருத்தொண்டர் முன்னிலையில் முறையிடுபவர்போல, என்புநெக்குருகித் த
மது திருப்பதிகத்தில் "இவரலாதில்லையோபிரானார்" என்று சற்றிலமைத்
துப் பாடுவாராயினார்.—எ-று.

எல்லாத்திருப்பதிகளிலும் வீற்றிருந்தருளும் சிவபெருமான் ஒருவரே
யாயினும், மூர்த்திபேதங்கருதி வேறுதலுடைமையின் 'பிரானார்மற்றிலையோ'
என்று கூறினார். (அ0)

## வேறு.

நித்தமுநீங்கா நிலைமையினீங்கி நிலத்திடைப் புலங்கொழும் பிற
ப்பா, லுய்த்தகா ரணத்தை யுணர்ந்துநொந் தடிமை யொருமை
யா மெழுமையு முணர்த்தி,யெத்தனையருளா தொழியினும் பிரானா
ரிவரலலா தில்லையோவென்பார், வைத்தனன் றனக்கே தலையுமென்
னாவு மெனவழுத் தினார்வழித் தொண்டர்.

(இ-ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் (தாம் திருக்கயிலாயத்தில்ஆலால
சுந்தரரென்னுந் திருப்பெயரோடு அணுக்கத்தொண்டராய்) எப்பொழுதும்
சிவபெருமானை நீங்காதிருக்கும் நிலைமையினின்று நீங்கி (கமலினி-அநிந்திதை
யென்னு மாதர்களை விரும்பிய காரணமாக) இந்நிலவுலகத்தில் ஐம்புலவுணர்ச்
சியோடுகூடிய மானுடப்பிறப்பில் செலுத்திய காரணத்தையுணர்ந்து வருந்தி,
அடிமையி னொருமைப்பாட்டை அத்திருப்பதிகத்தில் "ஒருமையேயலல்லே

ணெழுமையுமடியே னடியவர்க்கடியனு மானேன்" என்று அமைத்து, எவ்வளவும் திருவருள்செய்யாது விடினும், "இவரலாதில்லையோபிரானார்" என்று இறுதியில் முடிக்கின்றவராய், "வைத்தனன்றனக்கே தலையுமென்னாவும்" என்று முதலெடுத்துத் திருப்பதிகம்பாடி யருளினார்.—எ-று. (சுக)

---

**திருப்பாச்சிலாச்சிராமம் - பண் - தக்கராகம்.**

திருச்சிற்றம்பலம்.

வைத்தனன்றனக்கேதலையுமென்னாவு
நெஞ்சமும்வஞ்சமொன்றின்றி
யுய்த்தனன்றனக்கேதிருவடிக்கடிமை
யுரைத்தக்காலுவமனேயொக்கும்
பைத்தபாம்பார்த்தோர்கோவணத்தோடு
பாச்சிலாச்சிராமத்தெம்பரமர்
பித்தரேயொத்தோர்நச்சிலராகி
லிவரலாதில்லையோபிரானார்.

ஒருமையேயல்லேனெழுமையுமடியே
னடியவர்க்கடியனுமானே
னுரிமையாலுரியேனுள்ளமுமுருகு
மொண்மலர்ச்சேவடிகாட்டா
யருமையாம்புகழார்க்கருள்செய்யும்பாச்சி
லாச்சிராமத்தெம்மடிகள்
பெருமைகள்பேசிச்சிறுமைகள்செய்யி
லிவரலாதில்லையோபிரானார்.

ஏசினவல்லவிகழ்ந்தனவல்ல
வெம்பெருமானென்றெப்போதும்
பாயினபுகழான்பாச்சிலாச்சிராமத்
தடிகளையடிதொழப்பன்னாள்
வாயினாற்கூறிமனத்தினானினைவான்
வளவயனாவலாரூரன்
பேசினபேச்சைப்பொறுத்திலராகி
லிவரலாதில்லையோபிரானார்.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - மாற்றறிவரதர்; தேவியார் - பாலசுந்தரியம்மை.

---

இவ்வகை பரவித் திருக்கடைக் காப்பு மேசின வல்லவென் றிசைப்ப, மெய்வகை விரும்பு தம்பெருமானார் விழுநிதிக் குவையளித்தருள, மைவளர்கண்டர் கருணையே பரவி வணங்கியப் பதியிடைவைகி, யெவ்வகை மருங்கு மிறைவர்தம் பதிக ளிறைஞ்சியங் கிருக்தனர்சிலநாள்.

(இ-ள்.) இவ்வாறுதுதித்துத் திருக்கடைக்காப்பையும், "ஏசினவல்ல" என்று பாடியருள, மெய்ப்பத்தியை விரும்புந் தமது ஆண்டவராகிய சிவபெரு

மான் சிறந்த பொற்குவையைக் கொடுத்தருள, (ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள்) கருநிறம்வளர்கின்ற கண்டத்தையுடைய அவ்வெம்பெருமானது பெருங்கருணைத்திறத்தைத் துதித்து வணங்கி அத்திருப்பதியில் வசித்து, அதனருகிலெங்குமுள்ள சிவபெருமான் றிருப்பதிகளை யடைந்து வணங்கிச் சிலநாள்கள் அத்திருப்பாச்சிலாச்சிராமத் திருப்பதியில் எழுந்தருளியிருந்தார்.—எ-று. (அஉ)

அப்பதிநீங்கி யருளினாற் போகி யாவினஞ் சாடுவார்நீடு, மெய்ப்பெயர்ப்பதியு மிருமருங்கிறைஞ்சி யிறைவர்பைஞ் ஞீலியை யெய்திப், பைப்பணி யணிவார் கோபுரமிறைஞ்சிப் பாங்கமர் புடைவலங்கொண்டு, துப்புறழ் வேணியார்கழ றொழுவார் தோன்றுகங்காளரைக்கண்டார். •

(இ-ள்.) அத் திருப்பதியினின்று நீங்கிச் சிவபெருமான் றிருவருளினாற் சென்று, பசுவினிடத்துண்டாகிய பஞ்சகௌவியங்களையு மபிடேகங்கொண்டருளுஞ் சிவபெருமான் வீற்றிருந்தருளும் இருபக்கங்களிலுமுள்ள எல்லாத் திருப்பதிகளையும் வணங்கி, சிவபெருமானது திருப்பைஞ்ஞீலி யென்னூர் திருப்பதியையடைந்து, படத்தையுடைய சர்ப்பாபரணத்தையணிந்த அவ்வெம்பெருமானது திருக்கோபுரத்தை வணங்கி அருகிலுள்ள திருமாளிகையைப் பிரதக்ஷணஞ்செய்து, பவளம்போலுஞ் சிவந்த சடைமுடியையுடைய அப்பெருமானது திருவடிகளை வணங்குகின்ற நம்பியாரூரர் அங்கு வீற்றிருந்தருளும் பிக்ஷாடனமூர்த்தியைத்தரிசித்தருளினார்.—எ-று. (அஙு)

கண்டவர்கண்கள் காதனீர்வெள்ளம் பொழிதரக் கைகுவித்திறைஞ்சி, வண்டறை குழலார் மனங்கவர்பலிக்கு வருந்திரு வடிவு கண்டவர்கள், கொண்டதோர் மயலால் வினவுகூற்றாகக் குலவுசொற் காருலாவியவென், றண்டர்நா யகரைப் பரவியா ரணிய விடங்கரா மருந் தமிழ்புனைந்தார்.

(இ-ள்.) அவ்வாறு தரிசித்த ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் தமது கண்களினின்றும் ஆனந்தக்கண்ணீராகிய வெள்ளஞ் சிந்தத் திருக்கரங்களைக் குவித்து வணங்கி, வண்டுகள் சப்திக்குங் கூந்தலையுடைய தாருகாவனத்து ரிஷிபத்தினிகளது மனதைக் கவர்கின்ற பிக்ஷாடனத் திருவுருவத்தைத் தரிசித்து, அந்த ரிஷிபத்தினிகள் அடைந்த மயக்கத்தினால் வினவும் உரையாக, விளங்குகின்ற நல்லசொற்களால் "காருலாவிய" என்று முதலெடுத்துத் தேவர்கள் நாயகராகிய சிவபெருமானைத் துதித்து "ஆரணீயவிடங்கர்"என்னும் இறுதியையுடைய திருப்பதிகத்தைப் பாடியருளினார்.—எ-று.

'வண்டறைகுழலார் மனங்கவர்பலிக்கு வருந் திருவடிவு'. என்றதன் வரலாறு,—தாருகாவனத்து முனிவர்கள்யாகமேமுத்தியைத்தருவதென்று கருதிச் சிவபெருமானைச் சிறிதுமதியாது தருக்குற்றிருப்ப, அதனைப் பெருமானுணர்ந்து, திருமால் பெண்ணுருவெடுத்து அத்தாருகாவனமுனிவர்பாற்சென்று அவர்கள் தவநிலையை யழிக்கக் கட்டளையிட்டுத் தாம் பிக்ஷாடனத்திருவுருவங்கொண்டு அம்முனிவர்களது பத்தினிமாரிடத்திற்சென்று, அவர்களது கற்புநிலை குலையும்படி நடித்தருள, அம்முனிமாதர்கள் அத்திருக்கோலத்தைக் கண்டு காமங்கொண்டு மயங்கிச் சிவபெருமானைப் பின்றொடர்ந்து பற்பல விரகமொழிகளைக் கூற, அவ்வெம்பெருமான் அநேகதிருவுருவங்கொண்டு அவர்கள்

கற்பழியச்செய்தனர் ; இதுநிற்க, பெண்ணுருவெடுத்துச் சென்ற திருமால் அம்முனிவர்களை யடைந்து மையல்மூட்டி அவர்களது தவநிலையை யழித்துச் சிவபெருமானிடத்து வந்துசேர, முனிவர்கள் பின்றொடர்ந்துவந்து, தம்மாதர்கள் கற்பழிந்தமையை யுணர்ந்து கோபித்து, இக்கற்பழித்தவனைக் கொல்வோமென்று அபிசாரவேள்விசெய்யவும் அதில்தோன்றிய புலி - மழு - மான்-பாம்புகள் - பூதங்கள்- வெண்டலை - உடுக்கை - முயலகன் இவைகளை நோக்கிச் சிவபெருமானைக் கொல்லும்படி விடுக்கவும், பெருமான் புலியைத் தோலுரித் தணிந்தும், பூதங்களைச் சேனைகளாயிருக்கக் கட்டளையிட்டும்,முயலகனையோர் திருவடியின் மிதித்தும் மற்றவைகளைத் தமது திருமேனியிலணிந்துந் தாண்டவம் புரிந்தருளினர் ; அதனையுணர்ந்த முனிவர்கள் வெள்கி வருந்திச் சிவபெருமானைச் சரணடைந்து வணங்கவும், பெருமான் அவர்கட்குத் திருவருள் புரிந்து திருக்கயிலைக் கெழுந்தருளினர் என்பதாம். (அச)

---

திருப்பைஞ்ஞீலி பண்-கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

காருலாவியநஞ்சையுண்டிருள்கண்டவெண்டலையோடுகொண்
டூரெலாந்திரிந்தென்செய்வீர்பலியோரிடத்திலேகொள்ளுநீர்
பாரெலாம்பணிந்தும்மையேபரவிப்பணியும்பைஞ்ஞீலியி
ராரமாவதுநாகமோசொலுமாரணீயவிடங்கரே.

அன்னஞ்சேர்வயல்சூழ்பைஞ்ஞீலியிலாரணீயவிடங்கரை
மின்னுநுண்ணிடைமங்கைமார்பலர்வேண்டிக்காதன்மொழிந்தசொன்
மன்னுதொல்புகழ்நாவலூரன்வன்றொண்டன்வாய்மொழிப்பாடல்பத்
துன்னியின்னிசைபாடுவாருமைகேள்வன்சேவடிசேர்வரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - மெய்ஞ்ஞானநீலகண்டேசுவரர்;
தேவியார்-விசாலாட்சியம்மை.

---

பரவியப் பதிகத் திருக்கடைக் காப்புச் சாத்திமுன் பணிந்தருள் பெற்றுக்,கரவிலன் பர்கடங் கூட்டமுந் தொழுது கலந்தினி திருந்துபோந் தருளி, விரவிய வீங்கோய் மலைமுதலாக விமலர்தம்பதிபல வணங்கிக், குரவலர் சோலை யணிதிருப் பாண்டிக் கொடுமுடி யணைந்தனர் கொங்கில்.

(இ-ள்.) திருப்பதிகம்பாடித் துதித்து அத்திருப்பதிகத் திறுதியில் திருக்கடைக்காப்பைச் சாத்தியருளித் திருமுன்னேவணங்கித் திருவருள்பெற்று, மெய்யடியார்களது திருக்கூட்டத்தையும் வணங்கி அவர்களுடன் கூடி, இனிமையோடு வசித்து அங்குநின்று மெழுந்தருளி, சிறந்த திருவீங்கோய்மலைமுதலாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளை வணங்கி, கொங்கு தேசத்திலுள்ள குராவிருக்ஷங்கள் மலர்கின்ற சோலைசூழ்ந்த திருப்பாண்டிக் கொடுமுடியென்னுந் திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று. (அரு)

கொங்கினிற் பொன்னித் தென்கரைக் கறையூர்க் கொடுமுடிக் கோயின்முன் குறுகிச, சங்கவெண் குழையாருழைவலஞ் செய்து சார்ந்தடி யன்பினிற் றழ்ந்து, பொங்கிய வேட்கை பெருகிடத் தொழுது புனிதாபொன் மேனியைநோக்கி, யிங்கிவர் தம்மை ம றக்கவொண் ணுதென் றெழுந்தமெய்க் குறிப்பினி லெடுப்ப.

(இ-ள்.) கொங்குநாட்டில் காவிரிநதியின் தென்கரையிலுள்ள கறையூரில் திருப்பாண்டிக்கொடுமுடியென்னுந்திருக்கோயிலின்முன்னடைந்து,வெள்ளிய சங்கக்குழையை யணிந்த சிவபெருமானது திருக்கோயிலைப்பிரதக்ஷணஞ் செய்து சந்நிதியை யடைந்து அவ்வெம்பெருமானது திருவடிகளை அன்போடு வணங்கி, பெருவிருப்பானது அதிகரிக்கத் தொழுது, சிவபெருமானது திருமேனியைத் தரிசித்து,இவ்வெம்பெருமானை மறக்கவொண்ணுதென்று தமது திருவுள்ளத்தினினறு மெழுந்த மெய்ம்மையாகிய குறிப்பினுல் திருப்பதிகம்பாடத் தொடங்க.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (அசு)

அண்ணலா ரடிகண் மறக்கினு நாம வஞ்செழுத் தறியவெப பொழுது, மெண்ணிய நாவே யின்சுவை பெருக விடையறு தியம புமென் றிதனைத், திண்ணிய வுணர்விற் கொளபவர் மற்றுப பற்றி லே னெனசசெழுந் தமிழா, னண்ணிய வன்பிற பிணிபபுற நவின் றா நமசிவா யத்திருப் பதிகம்.

(இ-ள்.) சிவபெருமானது திருவடிகளை நான் மறந்தாலும், அவர்திருநாமமாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை யாவரும் அறியும்படி எப்பொழுதும் துதிக்கின்ற எனது நாவே இனிய மதுரமுண்டாக இடைவிடாமல் கூறுமென்று இக்கருத்தைக் கலங்காத தமது திருவுள்ளத்திற் கொண்டருளிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் "மற்றுப்பற்றெனக்கின்றி" என்னு முதலையுடைய செந்தமிழ்த்தொடையினுல் தமதுள்ளத்திற்பொருந்திய பேரன்பிற் பொருந்தும்படி நமச்சிவாயத் திருப்பதிகத்தைப் பாடி யருளினுர்.—எ று. (அஎ)

---

## திருப்பாண்டிக்கொடுமுடி - பண் - பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

மற்றுப்பற்றெனக்கின்றிநின்றிருப்பாதமேமனம்பாவித்தேன்
பெறறலும்பிறந்தேனினிப்பிறவாததன்மைவநதெய்தினேன்
கறறவர்தொழுதேத்துஞ்சீர்க்கறையூரிற்பாண்டிக்கொடுமுடி
நற்றவாவுனைநான்மறக்கினுஞ்சொலுநாநமசிவாயவே. (க)

இடடனும்மடியேத்துவாரிகழ்ந்திட்டநாள்மறந்திட்டநாள்
கெடடநாளிவையென்றலாற்கருதேன்கிளர்புனற்காவிரி
வடடவாசிகைகொண்டடிதொழுதேத்துபாண்டிக்கொடுமுடி
நடடவாவுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (உ)

ஓவுநாளுணர்வழியுநாளுயிர்போகுநாளுயர்பாடைமேற்
காவுநாளிவையென்றலாற்கருதேன்கிளர்புனற்காவிரிப்
பாவுதண்புனல்வந்திழிபரஞ்சோதிபாண்டிக்கொடுமுடி
நாவலாவுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (ங)

எல்லையில்புகழெம்பிரானெந்தைதம்பிரானென்பொன்மாமணி
கல்லையுந்திவளம்பொழிந்திழிகாவிரியதன்வாய்க்கரை
நல்லவர்தொழுதேத்துஞ்சீர்க்கறையூரிற்பாண்டிக்கொடுமுடி
வல்லவாவுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (ச)

அஞ்சினார்க்கரணாதியென்றடியேனுநான்மிகவஞ்சினே
னஞ்சலென்றடித்தொண்டனேற்கருணல்கினாய்க்கழிகின்றதென்
பஞ்சின்மெல்லடிப்பாவைமார்குடைந்தாடுபாண்டிக்கொடுமுடி
நஞ்சணிகண்டநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (ரு)

ஏடுவானிளந்திங்கள்சூடினையென்பின்கொல்புலித்தோலின்மே
லாடுபாம்பதரைக்கசைத்தவழகனேயந்தண்காவிரிப்
பாடுதண்புனல்வந்திழிபரஞ்சோதிபாண்டிக்கொடுமுடிச்
சேடனேயுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (சா)

விரும்பிநின்மலர்ப்பாதமேநினைந்தேன்வினைகளும்விண்டன
னெருங்கிவண்பொழில்சூழ்ந்தெழில்பெறநின்றகாவிரிக்கோட்டிடைக்
குரும்பைமென்முலைக்கோதைமார்குடைந்தாடுபாண்டிக்கொடுமுடி
விரும்பனேயுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (எ)

செம்பொனேர்சடையாய்திரிபுரந்தீயெழச்சிலைகோலினாய்
வம்புலாங்குழலாளைப்பாகமமர்ந்துகாவிரிக்கோட்டிடைக்
கொம்பின்மேற்குயில்கூவமாமயிலாடுபாண்டிக்கொடுமுடி
நம்பனேயுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (அ)

சாரணன்றந்தையெம்பிரானெந்தைதம்பிரானென்பொன்மாமணியென்று
பேரொணாயிரகோடிதேவர்பிதற்றிநின்றுபிரிகிலார்
நாரணன்பிரமன்றொழுங்கறையூரிற்பாண்டிக்கொடுமுடிக்
காரணாவுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (கூ)

கோணியபிறைசூடியைக்கறையூரிற்பாண்டிக்கொடுமுடி
பேணியபெருமானைப்பிஞ்ஞகப்பித்தனைப்பிறப்பில்லியைப்
பாணுலாவரிவண்டறைகொன்றைத்தாரனைப்படப்பாம்பரை
நாணனைத்தொண்டனூரன்சொல்லிவைசொல்லுவார்க்கில்லைதுன்பமே. (கo)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-**கொடுமுடிநாதர்**-தேவியார்-**பண்மொழியாளம்மை.**

---

**உ**லகெலா முய்ய வுறுதியாம் பதிக முரைத்துமெய் யுணர்வரு வொருமை, நிலவிய சிந்தை யுடன்றிரு வருளா னீங்குவார் பாங்குறூற் பதிகள், பலவுமுன் பணிந்து பரமர்தாள் போற்றிப் போந்து தண்புனிமலர்ப் படப்பை, குலவுமக் கொங்கிற் காஞ்சிவாய்ப் பேரூர்குறுகினார் முறுகுமா தரவால்.

இ-ள்.) சர்வலோகங்களுந் திருவருள்பெற் றுய்யும்பொருட்டு உறுதி யைத் தரத்தக்க திருப்பதிகத்தையருளிச் செய்து, மெய்யுணர்ச்சிநீங்காத ஒருமைப்பாடு விளங்குந் திருவுள்ளத்துடன் சிவபெருமான் திருவருளினால் அங்கு நின்று நீங்கும் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் அருகிலுள்ள நன்மைபொருந்திய பல திருப்பதிகளையும் முன்னே வணங்கி, அங்குள்ள சிவபெருமான் திருவடிகளைத் துதித்துச் சென்று, குளிர்ந்த மலர்ச்சோலைசூழ்ந்த அக்கொங்குநாட்டில் காஞ்சிநதிக்கரையிலிருக்கும் திருப்பேரூரென்னுந் திருப்பதியை மிக்க பேரன்போடும் அடைந்தருளினார்.—எ-று. (அஅ)

அத்திருப் பதியை யணைந்துமுன் றம்மை யாண்டவர் கோயிலுட் புகுந்து, மெய்த்தவர் சூழ வலங்கொண்டு திருமுன் மேவுவார் தம்மெதிர் விளங்க, நித்தனார் தில்லை மன்றுணின் றாட னீடிய கோலநேர் காட்டக், கைத்தலங் குவித்துக் கண்களா னந்தக் கலுழிநீர் பொழிதரக் கண்டார்.

(இ-ள்.) அத்திருப்பேரூரையடைந்து முன்னாளில் தம்மைத்தடுத்தடிமைகொண்டருளிய சிவபெருமானது திருக்கோயிலினுள்ளேபுகுந்து, மெய்யடியார்கள் புடைசூழத் திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்து திருமுன்சென்றருளும் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளுக் கெதிரில் விளங்கும்படி, சிவபெருமான் ஸ்ரீ சிதம்பரத்தில் கனகசபையில் நின்று திருநடனஞ்செய்தருளுந் திருக்கோலத்தைநேரே காட்டியருள, அவர் திருக்கரங்களைக்குவித்துக் கண்களில் ஆனந்த பாஷ்பம் பொழியும்படி தரிசித்தருளினார்.—எ-று. (அக)

காண்டலுந் தொழுது வீழ்ந்துட னெழுந்து கரையிலன் பென்பினை யுருக்கப், பூண்டவைம் புலனிற் புலப்படா வின்பம் புணர்ந்துமெய் யுணர்வினிற் பொங்கத், தாண்டவம் புரியுந் தம்பிரா னாரைத் தலைப்படக் கிடைத்தபின் சைவ, வாண்டகை யாருக் கடுத்தவந் நிலைமை விளைவையா ரளவறிந் துரைப்பார்.

(இ-ள்.) அவ்வாறு தரிசித்தவளவில் சாஷ்டாங்கமாகவணங்கியெழுந்து அளவற்ற பேரன்பானது என்புருகச்செய்ய, பொருந்திய ஐம்புலன்களால் அறியப்படாத பேரின்பமானது கலந்து மெய்யுணர்ச்சியி லதிகரிக்க, ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளும் சிவபெருமானைத் தரிசிக்கப் பெற்றபின்பு, சைவாசாரியாகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளுக்குண்டான அப்பேரானந்த விளைவை யாவர் அளவிட்டுச் சொல்லவல்லவர்கள்.—எ-று.

பொறிபுலன்களா லுணரப்படு மின்பம் அநித்தியமாகலான், அவற்றாற் சிறிதும் பயனின்மையின், 'பூண்டவைம்புலனிற் புலப்படாவின்பம்' என்று கூறினார். (கூ0)

அந்நிலை நிகழ்ந்த வாரருள் பெற்ற வன்பனா ரின்பவெள் ளத்து, மன்னிய பாடன் மகிழ்ந்துடன் பரவி வளம்பதி யதனிடை மருவிப், பொன்மணி மன்று ளெடுத்தசே வடியார் புரிநடங் கும்பிடப் பெற்றாற், லென்னினிப் புறம்போ யெய்துவ தென்று மீண்டெழுந் தருளுதற் கெழுவார்.

(இ-ள்.) அவ்வாறு பேரானந்தம் விளைதற்கேதுவாகிய திருவருளைப்பெற்ற ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் பேரின்பவெள்ளத்திலும் பொருந்திய திருப்ப

திகத்தை மகிழ்வுற்று உடனே துதித்து, வளப்பம்பொருந்திய அத்திருப்பே ரூரில் வசித்து, அழகிய கனகசபையில் தூக்கிய திருவடியையுடைய ஸ்ரீநடரா சப்பெருமான் செய்தருளுந்திருநடனத்தைத் தரிசிக்கப்பெற்றால், இனி, புறத் திற் சென்று அடையத்தக்கபயன் யாது என்று, அங்கு நின்றும் ஸ்ரீசிதம்பரத் திற் சென்றருளுதற்குப் புறப்படுவாராயினர்.—எ-று. (சுக)

ஆயிடைநீங்கி யருளினாற் செல்வா ரருவரைச் சுரங்களும் பிற
வும், பாயுநீர் நதியும் பலபல கடந்து பரமர்தம் பதிபல பணிந்து,
மேயவண் டமிழால் விருப்பொடும் பரவி வெஞ்சமாக் கூடலும் ப
ணிந்து, சேயிடை கழியப் போந்துவந் தடைந்தார் தென்றிசைக்
கற்குடி மலையில்.

(இ-ள்.) சிவபெருமான் றிருவருளினால் அத்திருப்பதியினின்று நீங்கிச் செல்லும் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் அரிய மலைக்காடுகளும், மற்றக்காடுகளும், நீர்பாயும் நதிகளுமாகியபலவற்றையுங் கடந்து, சிவபெருமான்வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளை வணங்கிப் பொருந்திய தமிழ்த்திருப்பதிகத்தால் விருப்பத் துடன் துதித்து, திருவெஞ்சமாக்கூடலென்னுந் திருப்பதியையும் வணங்கி நெடுந்தூரம் நீங்கிச்சென்று, தென்றிசையிலுள்ள திருக்கற்குடி மலையில் வந்து சேர்ந்தருளினார்.—எ-று. (சுஉ)

வேறு.

வீடு தருமிக் கற்குடியில் விழுமி யாரைப் பணிந்திறைஞ்சி
நீடு விருப்பிற் றிருப்பதிக நிறைந்த சிந்தை யுடன்பாடிப்
பாடும் விருப்பிற் றொண்டருடன் பதிகள் பலவு மணைந்திறைஞ்சித்
தேடு மிருவர் காண்பரியார் திருவாறை மேற்றளி சென்றணைந்தார்.

(இ-ள்.) (தரிசித்தவர்களுக்கு) மோக்ஷத்தைத் தருகின்ற இத் திருக்கற் குடி மலையில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானைச் சாஷ்டாங்கமாக வணங்கி, மிக்க விருப்பத்தோடு திருப்பதிகத்தை நிறைந்த திருவுள்ளத்துடன் பாடிய ருளி, தாம் திருப்பதிகம் பாடும் விருப்பத்தினால் அடியார்களோடு பல திருப்ப திகளையுமடைந்து வணங்கி, (பன்றியாகவு மன்னமாகவு முருவமெடுத்து திருவ டியையுந் திருமுடியையுந்) தேடிய (திருமால் பிரமனென்னும்) இருவர்க்குங் காணுதற்கரிய சிவபெருமானது திருவாறைமேற்றளி யென்னுந் திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று. (சுங)

செம்பொன் மேருச் சிலைவளைத்த சிவனா ராறை மேற்றளியி
னம்பர் பாதம் பணிந்திறைஞ்சி நாளு மகிழ்வார்க் கருள்கூட
வும்பர் போற்றுந் தானங்கள் பலவும் பணிந்து போந்தணைவா
ரிம்பர் வாழ வின்னம்பர் நகரைச் சேர வெய்தினார்.

(இ-ள்.) சிவந்த பொன்மயமாகிய மேருவை வில்லாக வளைத்தருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருவாறைமேற்றளியில் அவ் வெம்பெருமா னது திருவடிகளை வணங்கி நாள்தோறு மகிழ்கூர்ந்திருக்கு மவர்க்குத் திருவருள் கைகூட, அதனால், தேவர்களும் போற்றுகின்ற பல திருப்பதிகளையும் வணங் கிச் செல்கின்ற ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் இவ்வுலகத்தார் வாழும்படி திருவி ன்னம்பரென்னுந் திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று. (சுச)

ஏரின் மருவு மின்னம்பர் மகிழ்ந்த வீசர் கழல்வணங்கி
யாரு மன்பிற் பணிந்தேத்தி யாரா வருளா லங்கமர்வார்
போரின் மலியுங் கரியுரித்தார் மருவும் புறம்ப யம்போற்றிச்
சேரு முள்ள மிக்கெழமெய்ப் பதிகம் பாடிச் செல்கின்றார்.

(இ-ள்.) அழகோடுவிளங்குகின்ற திருவின்னம்பரை விரும்பியெழுந்தரு ளுஞ் சிவபெருமானது திருவடிகளை வணங்கிப் பொருந்திய அன்போடு பணி ந்து துதித்து நீங்காத திருவருளினால் அங்கெழுந்தருளிய நம்பியாரூரர், போர் செய்தலிற் சிறந்த கயாசுரனென்னும் யானையை யுரித்தருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருப்புறம்பயமென்னுந் திருப்பதியைத் துதித்துப் பொருந் திய திருவுள்ளமானது அதிகரித்தெழ மெய்ம்மைபொருந்திய திருப்பதிகம் பாடிச் செல்வாராயினார்.—எ-று. (கூரு)

வேறு.

அங்க மோதியோ ராறை மேற்றளி யென்றெ டுத்தமர் காதலிற்
பொங்கு மின்றமி ழால்வி ரும்பு புறம்ப யந்தொழப் போதுமென்
றெங்கு மன்னிய வின்னி சைப்பதி கம்பு னைந்துட னெய்தினார்
திங்கள் சூடிய செல்வர் மேவு திருப்பு றம்பயஞ் சேரவே.

(இ-ள்.) "அங்கமோதியோராறைமேற்றளி" என்று முதலெடுத்துப் பொருந்திய அன்பினால் விளங்கும் இனிய தமிழினால் யாவரும் விரும்புகின்ற "புறம்பயந்தொழப்போதும்" என்று இறுதியிலமைத்து, எங்கும் விளங்குகி ன்ற இனிய இசைபொருந்திய திருப்பதிகம்பாடியருளி, அடியார்களுடன் சந் திரசேகரராகிய சிவபெருமானெழுந்தருளுந் திருப்புறம்பயமென்னுந் திருப்ப தியைச் சாரவந்தருளினார்.—எ-று. (கூசா)

---

திருப்புறம்பயம் - பண் கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

அங்கமோதியோராறைமேற்றளிநின்றுபோந்துவந்தின்னம்பர்
தங்கினோமையுமின்னதென்றிலரீசனாரெழுநெஞ்சமே
கங்குலேமங்கள்கொண்டுதேவர்களேத்திவானவர்தாந்தொழும்
பொங்குமால்விடையேறிசெல்வப்புறம்பயந்தொழப்போதுமே.

துஞ்சியும்பிறந்துஞ்சிறந்துந்துயக்கறாதமயக்கிவை
யஞ்சியூரன்திருப்புறம்பயத்தப்பனைத்தமிழ்ச்சீரினால்
நெஞ்சினாலேபுறம்பயந்தொழுதுய்துமென்றுநினைத்தன
வஞ்சியாதுரைசெய்யவல்லவர்வல்லர்வானுலகாளவே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சாட்சிவரதேசுவரர்; தேவியார் - கரும்பன்னசொல்லம்மை.

---

அப்ப திக்க ணமர்ந்த தொண்டரு மன்று வெண்ணெய்நல் லூரினி
லொப்ப ருந்தனி வேதி யன்பழ வோலை காட்டிநின் றுண்டவ
ரிப்ப திக்கண்வந் தெய்த வென்னதவங்க ளென்றெதிர் கொள்ளவே
முப்பு ரங்க ளெரித்த சேவகர் கோயில் வாயிலின் முன்னினார்.

(இ-ள்.) அத்திருப்புறம்பயமென்னுந்திருப்பதியில்வாழ்கின்ற அடியார்களும், அந்நாளில் திருவெண்ணெய்நல்லூரில் ஒப்பற்ற (சிவபெருமானாகிய) விருத்தவேதியர் பழைய முறியோலையைக்காட்டி (திருமணத்தைத்தடுத்து) நின்று அடிமைகொள்ளப் பெற்றவராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் இத்திருப்பதியிலெழுந்தருளுதற்கு யாங்களென்ன தவத்தைச் செய்தோமென்று அவரை யெதிர்கொண்டுவர, தாமும் திரிபுரதகனராகிய சிவபெருமானது திருக்கோயிற் றிருவாயிலின்முன்பு வந்தருளினார்.—எ-று. (கூஎ)

நீடு கோபுர முன்பி றைஞ்சி நிலாவு தொண்டரொ டுள்ளணைந்
தாடன் மேவிய வண்ண லாரடி போற்றி யஞ்சலி கோலிநின்
றேடு லாமலர் தூவி யெட்டினொ டைந்து மாகுமு றுப்பினாற்
பீடு நீடுநி லத்தின் மேற்பெரு கப்ப ணிந்து வணங்கினார்.

(இ-ள்.) உயர்ந்த திருக்கோபுரத்தை முன்னேவணங்கி விளங்குகின்ற அடியார்களோடு உள்ளேசென்று,நிருத்தமூர்த்தியாகிய சிவபெருமானது திருவடிகளைத்துதித்து அஞ்சலியஸ்தராய் நின்று இதழலர்ந்த மலர்களைக்கொண்டருச்சித்து அஷ்டாங்க பஞ்சாங்கமாகப் பூமியில் மிகுதியாகப்பணிந்து தொழுதார்.—எ-று. (கூஅ)

அங்கு நீடருள் பெற்று ளார்வ மிகப்பொ ழிந்தெழு மன்பினாற்
பொங்கு நாண்மலர்ப் பாத முன்பணிந் தேத்தி மீண்டுபு றத்தணை
தெங்கு மாகிநி றைந்து நின்றவர் தாம கிழ்ந்தவி டங்களிற்
றங்கு கோலமி றைஞ்சு வாரருட் டாவி லன்பரொ டெய்தினார்.

(இ-ள்.) அங்குச் சிவபெருமான் றிருவருளைப்பெற்றுத்தமதுள்ளத்துப் பெருவிருப்பானது அதிகரித்தெழுகின்ற பேரன்பினால், சிறந்த புதிய தாமரை மலர்போன்ற திருவடிகளை முன்னேவணங்கித் துதித்து, மீண்டு புறத்திற்சென்று எங்கும் வியாபித்து நின்ற சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளுந் திருப்பதிகளில்பொருந்திய திருக்கோலத்தைவணங்க விரும்பினவராய்த்திருவருணிறைந்த அடியார்களோடும் அடைந்தருளினார்.—எ-று. (கூகூ)

வேறு.

வம்புநீ டலங்கன் மார்பின் வன்றொண்டர் வன்னி கொன்றை
தும்பைவெள் ளெடம்பு திங்க டேநீ ரணிந்த சென்னித்
தம்பிரா னமர்ந்த தானம் பலபல சார்ந்து தாழ்ந்து
கொம்பனா ராட னீடு கூடலை யாற்றூர் சார.

(இ-ள்.) மணம் வீசுகின்ற மலர்மாலையைத்தரித்த திருமார்பினையுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள், வன்னிப்பத்திரமுங் கொன்றை மலருந் தும்பை

மலரும் வெள்ளிய அடம்பமலரும் இளம்பிறையும் தூய்மையாகிய கங்கை நதியுமாகிய இவைகளையணிந்த திருமுடியையுடைய சிவபெருமானெழுந்தருளிய பற்பல திருப்பதிகளை யடைந்து வணங்கி, பூங்கொம்பு போன்ற மாதர்கள் நடனஞ் செய்கின்ற திருக்கூடலையாற்றூரையடைய.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கoo)

செப்பரும் பதியிற் சேரார் திருமுது குன்றை நோக்கி
யொப்பரும் புகழார் செல்லு மொருவழி யுமையா ளோடு
மெய்ப்பரம் பொருளா யுள்ளார் வேதிய ராகி நின்றார்
முப்புரி நூலுந் தாங்கி நம்பியா ரூரர் முன்பு.

(இ-ள்.) ஒப்பற்ற புகழையுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் சொல்லுதற்கரிய அத்திருக்கூடலையாற்றூரிற் சேராமல் ஸ்ரீவிருத்தாசலமென்னுந் திருப்பதியைக் கருதிப் போகின்ற மார்க்கத்தில், உண்மைப்பொருளாகிய சிவபெருமான் உமாதேவியாரோடு ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளுக்குமுன்னே பூணூலையணிந்து பிராமணத் திருவுருவங் கொண்டு நின்றருளினர்.—எ-று. (கoக)

நின்றவர் தம்மை நோக்கி நெகிழ்ந்தசிந் தையராய்த் தாழ்வா
ரின்றியா முதுகுன் றெய்த வழியெமக் கியம்பு மென்னக்
குன்றவில் லாளி யாருங் கூடலை யாற்றூ ரேறச்
சென்றதிவ் வழிதா னென்று செல்வழித் துணையாய்ச் செல்ல.

(இ-ள்.) அவ்வாறு நின்ற சிவபெருமானாகிய வேதியனைப்பார்த்து உருகிய மனமுடையவராய் வணங்கும் நம்பியாரூரர் யாம் இன்று விருத்தாசலத்திற்குச் செல்ல எமக்கு மார்க்கத்தைச் சொல்லுமென்று கேட்க, மேரு மலையை வில்லாக வுடைய சிவபெருமானாகிய வேதியரும் இம்மார்க்கம் திருக்கூடலையாற்றூரையடையச்சென்றதென்று அவர்க்கு வழித்துணையாகச் செல்ல—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கo௨)

கண்டவர் கைகள் கூப்பித் தொழுதுபின் றொடர்வார்க் காணா
வண்டலர் கொன்றை யாரை வடிவுடை மழுவென் றேத்தி
யண்டர்தம் பெருமான் போந்த வதிசய மறியே னென்று
கொண்டெழு விருப்பி னோடுங் கூடலை யாற்றூர் புக்கார்.

(இ-ள்.) அவரைப் பார்த்த ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் தமது திருக்கரங்களைக் கூப்பித் தொழுது, தமக்கு வழித்துணையாகச் செல்லுஞ் சிவபெருமானாகிய வேதியனைக் காணாமல், வண்டுகள் சப்திக்கின்ற கொன்றைமாலையையணிந்த சிவபெருமானை "வடிவுடைமழு" என்று திருப்பதிகமுதலெடுத்துத் துதித்துத் தேவர்கள் நாயகராகிய சிவபெருமான் "போந்தவதிசயமறியேன்" என்று இறுதியிலமைத்துத் தமதுள்ளத்திற் குறித்தெழுகின்ற பெருவிருப்போடுந் திருக்கூடலையாற்றூரை யடைந்தருளினர்.—எ-று. (கoங)

திருக்கூடலையாற்றூர் - பண் - புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

வடிவுடைமழுவேந்திமதகரியுரிபோர்த்துப்
பொடியணிதிருமேனிப்புரிகுழலுமையோடுங்
கொடியணிநெடுமாடக்கூடலையாற்றூரி
லடிகளிவ்வழிபோந்தவதிசயமறியேனே.

கூடலையாற்றூரிற்கொடியிடையவளோடு
மாடலுகந்தானையதிசயமிதுவென்று
நாடியவின்றமிழால்நாவலவூரன்சொற்
பாடல்கள்பத்தும்வல்லார்தம்வினைபற்றறுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - நெறிகாட்டுநாதர் ; தேவியார் - புரிகுழலாளம்மை.

---

கூடலை யாற்றூர் மேவுங் கொன்றைவார் சடையி னார்தம்
பீடுயர் கோயில் புக்குப் பெருகிய வார்வம் பொங்க
வாடகப் பொதுவி லாடு மறைகழல் வணங்கிப்போற்றி
நீருடள் பெற்றுப் போந்து திருமுது குன்றி னேர்ந்தார்.

(இ-ள்.) திருக்கூடலையாற்றூரில் வீற்றிருந்தருளுங் கொன்றை மாலையையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானதுபெருமைமிக்க திருக்கோயிலையடைந்து மிகுந்த பேரன்பு அதிகரிக்க, கனகசபையில் ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளிய சப்திக்கின்ற வீரக்கழலையணிந்த திருவடியை வணங்கித் துதித்து மிக்க திருவருள்பெற்று அங்கு நின்றுஞ் சென்று, ஸ்ரீவிருத்தாசலத்தையடைந்தருளினர்.—எ-று. (௧0௪)

தடநிலைக் கோபு ரத்தைத் தாழ்ந்துமுன் னிறைஞ்சிக் கோயில்
புடைவலங் கொண்டு புக்குப் போற்றினர் தொழுது வீழ்ந்து
நடநவில் வாளை நஞ்சி யிடையெனுஞ் செஞ்சொன் மாலைத்
தொடைநிகழ் பதிகம் பாடித் தொழுதுகை சுமந்து நின்று.

(இ-ள்.) விசாலமாகிய உயர்ந்த நிலைகளையுடைய திருக்கோபுரத்தைச் சாஷ்டாங்கமாகவணங்கி முன்னின்று தொழுது திருக்கோயிலைப்பிரதக்ஷணஞ் செய்து உள்ளேபுகுந்து துதித்து விழுந்து வணங்கி, தாண்டவமூர்த்தியாகிய ஸ்ரீபழமலைநாதரை "நஞ்சியிடை" என்னு முதலையுடையசெவ்விய சொற்களாலாகிய திருப்பதிகமாலையைப்பாடித் தொழுது, தமது திருக்கரங்களை அஞ்சலியாகக் கூப்பிநின்று.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (௧0௫)

---

### திருமுதுகுன்றம்-பண்-கொல்லிக்கௌவாணம்.

திருச்சிற்றம்பலம்.

நஞ்சியிடையின்றுநாளையென்றும்மைநச்சுவார்
துஞ்சியிட்டாற்பின்னைச்செய்வதென்னடிகேள்சொலீர்
பஞ்சியிடப்புட்டில்கீறுமோபணியீரருள்
முஞ்சியிடைச்சங்கமார்க்குஞ்சீர்முதுகுன்றரே.
முத்திமுத்தாறுவலஞ்செயும்முதுகுன்றரைப்
பித்தனொப்பானடித்தொண்டனூரன்பிதற்றிவை
தத்துவஞானிகளாகினார்தடுமாற்றிலா
ரெத்தவத்தோர்களுமேத்துவார்க்கிடரில்லையே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - ஸ்ரீபழமலைநாதர் ; தேவியார் - பெரியநாயகியம்மை.

---

நாதரபாற் பொருடாம் வேண்டி நண்ணிய வண்ண மெல்லாங்
கோதறு மனத்துட் கொண்ட குறிப்பொடும் பரவும்போது
தாதவிழ் கொன்றை வேய்ந்தார் தாவருள் பெறுவார் சைவ
வேதியா தலைவர் மீண்டு மெய்யில்வெண் பொடியும பாட.

(இ-ள்.) ஆதிசைவ வேதியர்குலத்தலைவராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமி கள் சிவபெருமானிடத்துப் பொருளைவிரும்பித் தாம்வந்த வரலாறனைத்துங் குற்றமற்ற திருவுள்ளத்திற்கொண்ட குறிப்பினால் துதிக்கும்பொழுது, மகரந் தங்கள் சிந்துகின்ற கொன்றைமலர்மாலையை யணிந்த சிவபெருமான் அப்பொருள்கொடுத்தற் கேதுவாகிய திருவருளைப் பெறுகின்றவராய், மீண்டும் "மெய்யைமுற்றப்பொடிபூசி" என்னு முதலையுடைய திருப்பதிகத்தையும் பாடியருள.—எ-று. (௧௦௬)

---

### நம்பியென்றதிருப்பதிகம் பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

மெய்யைமுற்றப்பொடிபூசியோர்நம்பி
வேதநான்கும்விரித்தோதியோர்நம்பி
கையிலோர்வெண்மழுவேந்தியோர்நம்பி
கண்ணும்மூன்றுடையாரொருநம்பி
செய்யநம்பிசிறுசெஞ்சடைநம்பி
திரிபுரந்தீயெழச்செற்றதோர்வில்லா
லெய்தநம்பியெனையாளுடைநம்பி
யெழுபிறப்புமெங்கணம்பிகண்டாயே.

காத்திநம்பிகசியாதவர்தம்மைக்கசிந்த வர்க்கிம்மையோடம்மையி லின்பம், பெருக்குநம்பிபெருக்கக்கருத்தா.

திருச்சிற்றம்பலம.

---

* இத்திருப்பாடலின் மற்றவை சிதலமாயின.

பனிமதிச் சடையார் தாமும் பன்னிரண் டாயி ரம்பொன்
னனியருள் கொடுக்கு மாற்ற னல்கிட வுடைய நம்பி
தனிவரு மகிழ்ச்சி பொங்கத் தாழ்ந்தெழுந் தருகு சென்று
கனிவிட மிடற்றி னார்முன் பின்னொன்று கழற லுற்றார்.

(இ-ள்.) குளிர்ந்தசந்திரனையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானும் பன்னிரண்டாயிரம்பொன்னை மிக்கதிருவருளோடு கொடுத்தருளவும், நம்மையடிமையாகவுடைய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் ஒப்பற்றமகிழ்ச்சி யதிகரிக்கவணங்கியெழுந்து, சிவபெருமானருகிற்சென்று கொடுமைமுதிர்ந்த விடத்தையணிந்த கண்டத்தையுடைய அவ்வெம்பெருமான் திருமுன்னின்று பின்னொன்று சொல்லத்தொடங்குகின்றார்.—எ-று.

'கனிவிடம்' என்பதற்கு, களங்கனிபோன்ற கரியவிடம் எனப் பொருள்கூறினும் பொருந்தும். (கoஎ)

அருளுமிக் கனக மெல்லா மடியனேற் காரூ ருள்ளோர்
மருளுற வியப்ப வங்கே வரப்பெற வேண்டு மென்னத்
தெருளுற வெழுந்த வாக்காற் செழுமணி முத்தாற் றிட்டிப்
பொருளினை முழுது மாரூர்க் குளத்திற்போய்க் கொள்கவென்றார்.

(இ-ள்.) தேவரீர் கொடுத்தருளிய இப் பொன் முழுவதையும் அடியேனுக்காகத், திருவாரூரி லுள்ளவர்கள் மயங்கவும், வியப்படையவும் அங்கு வரும்படி செய்தருளவேண்டுமென்று வேண்டவும்,(அப்பொழுது சிவபெருமான்) யாவருமுணரும்படி யெழுந்த அசரீரி வாக்கினால் (இப் பொன்னைச்) செழிய மணிமுத்தாநதியிலிட்டு முழுவதுந் திருவாரூர்த் திருக்குளத்திற்சென்று நீபெற்றுக்கொள்கவென்று அருளிச் செய்தார்.—எ-று. (கoஅ)

என்றுதம் பிரானார் நல்கு மின்னருள் பெற்ற பின்னர்
வன்றொண்டர் மச்சம் வெட்டிக் கைக்கொண்டு மணிமுத் தாற்றிற்
பொன்றிர ளெடுத்து நீருட் புகவிட்டுப் போது கின்றா
ரன்றெனை வலிந்தாட் கொண்ட வருளிதி லறிவே னென்று.

(இ-ள்.) இவ்வாறு சிவபெருமா னருளிய இனிய திருவருளைப் பெற்ற பின்பு, ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் மச்சம்வெட்டி யெடுத்துக்கொண்டு அப்பொற்குவைகளை யெடுத்து மணிமுத்தாநதிநீருட் புகும்படி விட்டு, அந்நாளில் என்னைத் தடுத்தடிமைகொண்டருளிய திருவருட்பெருமையை இதனாலறியக்கடவேனென்று செல்வாராயினார்.—எ-று.

மச்சமாவது, நாம் நதியிலிட்ட பொன் மாற்றுக் குறையாமல் சரியாயிருக்கின்றனவோ இல்லையோவென்று ஒத்திட்டுப் பார்ப்பதற்குக் கொஞ்சம் அதில் வெட்டி யெடுத்துக்கொள்வது. (கoகூ)

மேவிய காதற் றொண்டு விரவுமெய் விருத்தி பெற்றா
ராவியின் விருத்தி யான வந்தணர் புலியூர் மன்றிற்
காவியங் கண்டர் கூத்துக் கண்டுகும் பிடுவ னென்று
வாவிசூழ் தில்லை மூதூர் வழிக்கொள்வான் வணங்கிப் போந்தார்.

(இ-ள்.) அன்போடுகூடிய திருத்தொண்டு செய்யும் மெய்ம்மையாகிய சித்தவிருத்தியைப் பெற்ற ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள், அவிப்பாகங் கொடுப்

பதில் விருத்திபெற்றவர்களாயுள்ள வேதியர்கள் வாழ்கின்ற ஸ்ரீசிதம்பரத்திலு ள்ள கனகசபையில் காளகண்டராகிய ஸ்ரீநடராசப்பெருமான் செய்தருளும் ஆனந்தத் தாண்டவத்தைத் தரிசித்து வணங்குவேனென்று, தடாகங்கள் சூழ் ந்த பழமையாகிய அச்சிதம்பரத்தை யடையும்படி திருமுதுகுன்றைவணங்கிச் சென்றருளினார்.—எ-று.

அவி யென்பது, ஆவிஎன நீட்டல் விகாரம் பெற்றது. அவி=தேவர்க ளுண்ணத்தரு முணவு. (௧௧௦)

மாடுள பதிகள் சென்று வணங்கிப் போய் மங்கை பாகர்
நீடிய கடம்பூர் போற்றி நிறைந்தவா னந்தக் கூத்து
ராடிய தில்லை மூதூ ரணைந்தணி வாயில் புக்குச்
சேடுயர் மாட மன்னுஞ் செழுந்திரு வீதி சார்ந்தார்.

(இ-ள்.) பக்கங்களிலுள்ள திருப்பதிகளையடைந்து வணங்கிச்சென்று, பார்வதி பாகராகிய சிவபெருமான் சிறந்து வீற்றிருந்தருளிய திருக்கடம்பூரை வணங்கி, எங்கும் நிறைந்த ஆனந்தத் தாண்டவமூர்த்தியாகிய சிவபெருமான் திருநடனஞ் செய்தருளும் பழமைபொருந்திய தில்லைப்பதியை யடைந்து அழ கிய புறத்திருவாயிலிற்புகுந்து, மிகவுமுயர்ந்த மாளிகைகள் பொருந்திய சிற ந்த திருவீதியை யடைந்தருளினார்.—எ-று. (௧௧௧)

பொற்றிரு வீதி தாழ்ந்து புண்ணிய விளைவா யோங்கு
நற்றிரு வாயி னண்ணி நலமலி யலங்கன் மார்பர்
மற்றதன் முன்பு மண்மேல் வணங்கியுட் புகுந்து பைம்பொற்
சுற்றுமா ளிகைசூழ் வந்து தொழுதுகை தலைமேற் கொள்வார்.

(இ-ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் அழகிய திருவீதியைவணங்கி, சிவ புண்ணியத்தின் விளைவுபோன்றுயர்ந்த நல்ல திருக்கோயிற்றிருவாயிலையடைந் து அத்திருவாயிலின்முன்னே பூமியில்சாஷ்டாங்கமாகவணங்கியுள்ளேபுகுந்து, பசும்பொன்மயமாகச்சூழ்ந்ததிருமாளிகையைப்பிரதக்ஷணஞ்செய்து வணங்கிக் கைகளைச் சிரத்திற்குவித்து அஞ்சலிசெய்வாராயினார்.—எ-று. (௧௧௨)

ஆடிய திருமுன் பான வம்பொனின் கோபு ரத்தி
னூடுபுக் கிறைஞ்சி யோங்கு மொளிவளர் கனக மன்றி
னாடகச் செய்ய தாளை நண்ணுற வுண்ணி றைந்து
நீடுமா னந்த வெள்ளக் கண்கணீர் நிரந்து பாய.

(இ-ள்.) ஸ்ரீநடராசப்பெருமான் திருநடனஞ்செய்தருளுந் திருமுன் னேயிருக்கும் அழகிய பொன்மயமாகிய திருக்கோபுரத்தினுள்ளே புகுந்து வ ணங்கி, மிக்க வொளிவீசுகின்ற கனகசபையில் ஆனந்தத்தாண்டவஞ்செய்தரு ளுஞ் சிவந்த திருவடிகளை யடையும்பொழுது, தம்முள்ளே நிறைந்து பெருகு கின்ற பேரின்ப வெள்ளமாகிய ஆனந்தக்கண்ணீர் திருமேனியிற்பரவிப்பாயும் படி.—எ-று.

இதுமுதல் நான்குபாட்டுங் குளகம். (௧௧௩)

பரவுவாய் குளறிக் காதல் படிதிருப் படியைத் தாழ்ந்து
விரவுமெய் யங்க மைந்து மெட்டினும் வணங்கி வேட்கை

யரானுறு திருக்கூத் துள்ள மார்தரப் பெருகி நெஞ்சிற்
கரவிலா தவரைக் கண்ட நிறைவுதங் கருத்திற் கொள்ள.

(இ-ள்.) துதிக்கின்ற வாய்குளறி விருப்பம்பொருந்திய திருப்படியை வணங்கிப் பொருந்திய பஞ்சாங்க அஷ்டாங்கமாக வணங்கி, விருப்பமிக்க திருநடனத்தைத் திருவுள்ளநிரம்பப் பருகி,தமதுள்ளத்தில் வெளிப்பட்டு நிற்கும் அவ்வெம்பெருமானைத் தரிசித்த பேரானந்த நிறைவானது தமதுள்ளத்திற் பொருந்த.—எ-று. (ககச)

மடித்தாடு மடிமைக்க ணென்றெடுத்து மன்னுயிர்கட் கருளு மாற்ற, லடுத்தாற்று நன்னெறிக்க ணின்றாலும் வழுவினர்க ளனை யா வண்ணந், தடுப்பானைப் பேரூரிற் கண்டநிலை சிறப்பித்துத் த னிக்கூத் தென்று, நடிப்பானை நாமனமே பெற்றவா றெனுங்களிப் பா னயந்து பாடி.

(இ-ள்.) "மடித்தாடுமடிமைக்கள்" என்று தொடங்கி, நிலைபெற்ற ஆன்மகோடிகளுக்கு அருளும் முறைமைப்படி, சேர்ந்து நல்லொழுக்கத்தி னின்றாலும் ஒரு சிறிது வழுவினர்கள் அப்பயனையடையாத வண்ணமாகத் தடுப்பவனைத் தாம் திருப்பேரூரொன்னுந் திருப்பதியில்தரிசித்த நிலைமையை அத்திருப்பதிகத்தில் சிறப்பித்து, ஒப்பற்ற திருக்கூத்தை அனவரதமுஞ் செய்தருளும் எம்பெருமானை நாம் மனமேபெற்ற வண்ணமென்றுகருதுங் களிப்பினால் விரும்பிப்பாடியருளி.—எ-று.

திருப் பேரூரிற்கண்ட நிலையாவது—ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் திருப்பேரூர்த்திருப்பதிக் கெழுந்தருளியபொழுது,அங்குச்சிவபெருமான் ஸ்ரீசிதம்பரத்திற் றிருச்சிற்றம்பலத்தில் திருநடனஞ்செய்தருளுந் திருக்கோலத்தைத் தரிசிப்பிக்கத் தரிசித்தருளினமையை. (ககரு)

---

கோயில் பண்-வியாளக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

மடித்தாடுமடிமைக்கணன்றியேமனனேநீவாழுநாளுந்
தடுத்தாட்டித்தருமனார்தமர்செக்கிலிடும்போதுதடுத்தாட்கொள்வான்
கடுத்தாடுங்கரதலத்திற்றமருகமுமெரியகலுங்கரியபாம்பும்
பிடித்தாடிபுலியூர்ச்சிற்றம்பலத்தெம்பெருமானைப்பெற்றாமன்றே.

பாரூருமரவல்குலுமைநங்கையவள்பங்கன்பைங்கணேற்ற
னூரரன்றருமனார்தமர்செக்கிலிடும்போதுதடுத்தாட்கொள்வா
னூரான்றம்பிரானூரன்மிகொங்கிலணிகாஞ்சிவாய்ப்
பேரூரர்பெருமானைப்புலியூர்ச்சிற்றம்பலத்தேபெற்றாமன்றே.

திருச்சிற்றம்பலம்.

---

மீளாத வருள்பெற்றுப் புறம்போந்து திருவீதி மேவித் தாழ்ந்தே
யாளான வன்றொண்ட ரந்தணர்க டாம்போற்ற வமர்ந்து வைகி
மாளாத பேரன்பாற் பொற்பதியை வணங்கிப்போய் மறலி வீழத்
தாளாண்மை கொண்டவர்தங் கருப்பறிய லூர்வணங்கிச் சென்று
[சார்ந்தார்.

(இ-ள்.) அன்பராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் நீங்காததிருவருளைப் பெற்று, புறத்திற்சென்று திருவீதியை யடைந்து வணங்கி, வேதியர்கள் தம்மைத் துதிக்க அங்குவிரும்பி வசித்தருளி, கெடாத பேரன்பினால் அழகிய அத்திருப்பதியை வணங்கிச் சென்று, இயமன் விழும்படி தமது திருவடியாலுதைத்தருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கருப்பறியலூரென்னுந் திருப்பதியை வணங்கிச் சென்றடைந்தருளினார்.—எ-று. (௧௧௬)

வேறு.

கூற்றுதைத்தார் திருக்கொகுடிக் கோயி னண்ணிக் கோபுரத்தைத் தொழுதுபுகுந் தன்பர் சூழ, வேற்றபெருங் காதலினா லிறைஞ்சி யேத்தி யெல்லையிலாப் பெருமகிழ்ச்சி மனத்திலெய்தப், போற்றிசைத்துப் புறத்தணைந்தப் பதியின்வைகிப் புனிதரவர் தமைநினையு மின்பங் கூறிச், சாற்றியமெய்த் திருப்பதிகஞ் சிம்மாந் தென்னுந் தமிழ்மாலை புனைந்தங்குச் சாரு நாளில்.

(இ-ள்.) இயமனையுதைத்தருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளுந்திருக்கொகுடிக்கோயிலென்னும் ஆலயத்தை யடைந்து திருக்கோபுரத்தை வணங்கி அடியார்கள் சூழ்ந்துவர உள்ளேபுகுந்து, பொருந்திய பேரன்போடு வணங்கித்துதித்து, அளவற்ற பெருங்களிப்பானது மனதிற் பொருந்தத் துதித்து, புறத்திற் சென்று அத்திருப்பதியில்வசித்து, சிவபெருமானைத் தியானித்தலாலுண்டாகிய பேரின்பத்தைக் கூறிப் பாடியருளிய மெய்ம்மையான திருப்பதிகமாகிய "சிம்மாந்து" என்னு முதலையுடைய தமிழ்ப்பாமாலையைப் பாடியருளி அங்கு வீற்றிருந்தருளும் நாள்களில்.—எ-று.

திருக்கொகுடிக் கோயிலென்பது - திருக்கருப்பறியலூர் என்னுந்திருப்பதியில் சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக்கோயிலின்பெயர்.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௧௧௭)

---

திருக்கருப்பறியலூர்-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

சிம்மாந்துசிம்புளித்துச்சிந்தையினில்வைத்துகந்துதிறம்பாவண்ணங்
கைம்மாவினுரிவைபோர்த்துமைவெருவக்கண்டானைக்கருப்பறியலூர்க்
கொய்ம்மாவின்மலர்ச்சோலைக்குயில்பாடமயிலாடுங்கொகுடிக்கோயி
லெம்மானைமனத்தினினைந்தபோதவர்நமக்கினியவாறே.

கலைமலிந்ததென்புலவர்கற்றோர்தம்மிடர்தீர்க்குங்கருப்பறியலூர்க்
குலைமலிந்தகோட்டெங்குமட்டொழுகும்பூஞ்சோலைக்கொகுடிக்கோயி
லிலைமலிந்தமழுவானைமனத்தினலன்புசெய்தின்பமெய்தி
மலைமலிதோளாரூரன்வனப்பகையப்பனுரைத்தவண்டமிழ்களே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வீரட்டேசர்; தேவியார்-இளங்கோம்பம்மை.

---

கண்ணுதலார் விரும்புகருப் பறியலூரைக் கைதொழுது நீங்கிப்போய்க் கயல்கள் பாயு, மண்ணிவளம் படிக்கரையை நண்ணியங்கு மாதொருபா கத்தவர்தாள் வணங்கிப்போற்றி,யெண்ணில்புகழ்ப் பதிகமுமுன் னவனென் றேத்தி யேகுவார வாழ்கொளிபுத் தூரெய் தாது, புண்ணியனார் போமபொழுது நினைந்து மீண்டு புகுகின்றார் தலைக்கலனென் றெடுத்துப்போற்றி.

(இ-ள்.) புண்ணியசொரூபராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள், சிவபெமானெழுந்தருளிய திருக்கருப்பறியலூரை வணங்கி, அவ்விடத்தினின்று நீங்கிச் சென்று, கயல்மீன்கள் பாய்கின்ற வளவிய திருப்பழமண்ணிப்படிக்கரையையடைந்து அங்குச் சிவபெருமான் திருவடிகளை வணங்கித் துதித்து, அளவற்றபுகழையுடைய திருப்பதிகத்தையும் "முன்னவன்"என்று முதலெடுத்துத் துதித்து அங்கு நின்றுஞ் செல்கின்றவர்,திருவாழ்கொளிபுத்தூ ரென்னுந் திருப்பதியையடையாது செல்லும்பொழுது, பின் அதை நினைந்து, "தலைக்கலன்" என்று முதலெடுத்துத் திருப்பதிகம் பாடித்துதித்து, அதனைத் திரும்பப்புகுகின்றவராயினார்—எ-று. (௧௧அ)

---

திருப்பழமண்ணிப்படிக்கரை-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

முன்னவனெங்கள்பிரான்முதல்காண்பரிதாயபிரான்
சென்னியிலெங்கள்பிரானதிருநீலமிடற்றெம்பிரான்
மன்னியவெங்கள்பிரான்மறைநான்குங்கல்லாலிழற்கீழ்ப்
பன்னியவெங்கள்பிரான்பழமண்ணிப்படிக்கரையே.

பல்லுயிர்வாழுந்தெண்ணீர்ப்பழமண்ணிப்படிக்கரையை
யல்லியந்தாமரைத்தாராரூரனுரைத்ததமிழ்
சொல்லுதல்கேட்டல்வல்லாரவர்க்குந்தமக்குங்கிளைக்கு
மெல்லியுநண்பகலும்மிடர்கூருதலில்லையன்றே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-நீலகண்டேசர்; தேவியார்-வடிக்கண்முகாம்பிகையம்மை.

---

திருவாழ்கொளிபுத்தூர் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

தலைக்கலன்றலைமேற்றரித்தானைத்
தன்னையென்னைநினைக்கத்தருவானைக்
கொலைக்கையானையுரிபோர்த்துகந்தானைக்
கூற்றுதைத்தகுளைசேர்கழலானை
யலைத்தசெங்கண்விடையேறவல்லானை
யானையாலடியேனடிநாயேன்
மலைத்தசெந்நெல்வயல்வாழ்கொளிபுத்தூர்
மாணிக்கத்தைமறந்தென்னினைக்கேனே.

வளங்கிளாபொழில்வாழ்கொளிபுத்தூர்
மாணிக்கத்தைமறந்தென்னினைக்கேனென்
றுளங்குளிர்தமிழூரன்வன்றொண்டன்
சடையன்காதலன்வனப்பகையப்ப
னலங்கிளர்வயனாவலர்வேந்த
னங்கைசிங்கடிதந்தைபயந்த
பலங்கிளாதமிழ்பாடவல்லார்மேற்
பறையுமாஞ்செய்தபாவங்கடாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-மாணிக்கவண்ணர்-தேவியார்-வண்டமர்பூங்குழல்நாயகி.

---

திருப்பதிகம் பாடியே சென்றங் கெய்தித் தேவர்பெரு மானார் தங் கோயில் வாயி, லுருப்பொலியு மயிர்ப்புளகம் விரவத்தாழ்ந் தே யுள்ளணைந்து பணிந்தேத்தி யுருகு மன்பாற,பொருப்பரையன் மடப்பாவை யிடப்பா லானைப் போற்றிசைத்துப் புறம்போந்து தங் கிப் பூமென், கருப்புவயல் வாழ்கொளிபுத் தூரை நீங்கிக் கானாட்டு முள்ளூரைக் கலந்த போது.

(இ-ள்.) திருப்பதிகம் பாடியருளி அங்குச்சென்று சேர்ந்து,தேவர்கள் நாயகராகிய சிவபெருமானது திருக்கோயிற் றிருவாயிலில், திருமேனியில் விள ங்குகின்ற மயிர்ப் புளகமடைய வணங்கி யுள்ளே சென்று பணிந்து துதித்து, மனமுருகுகின்ற பேரன்பினால் பர்வதராச புத்திரியாகிய உமாதேவியாரை இடப்பாகத்திலுடைய சிவபெருமானைத் துதித்துப் புறத்திற் சென்று அங்கு வீற்றிருந்து, பொலிவு தங்கிய மிருதுவாகிய கரும்புவயல்கள் சூழ்ந்த திருவாழ் கொளிபுத்தூரை விட்டு நீங்கித் திருக்கானாட்டுமுள்ளூர் என்னுந் திருப்பதியை யடைந்தபொழுது.—எ-று.

இதுமுத லிரண்டோடலுங் குளகம். (கக௬)

கானாட்டு முள்ளூரைச சாரும்போது கண்ணுதலா ரெதிர்கா ட்சி கொடுப்பக் கண்டு, தூநாண்மென் மலர்க்கொன்றைச் சடை யார் செய்ய துணைப்பாத மலர்கண்டு தொழுதே னென்று,வானாருந் திருப்பதிகம் வள்வா யென்னும் வண்டமிழின் றொடைமாலை மலரச்

சாத்தித், தேனாரு மலர்ச்சோலை மருங்கு சூழ்ந்த திருவெதிர்கொள் பாடியினை யெய்தச் செல்வார்.

(இ-ள்.) திருக்கானாட்டுமுள்ளூரை யடையும்பொழுது, சிவபெருமான் தம்மெதிரே காட்சிகொடுத்தருளத் தரிசித்து, தூய்மையாகிய புதிய மெல்லிய கொன்றைமலரை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானது செந்தாமரை மலர்போன்ற இரண்டு திருவடிகளைத் தரிசித்துத் தொழுதேனென்று சிறந்த திருப்பதிகமாகிய "வள்வாய்" என்னு முதலையுடைய வளவிய தமிழ்மாலையை விளங்கத்தரித்து, தேன்பொருந்திய மலர்கள் நிறைந்த சோலைகள் பக்கங்களிற் சூழ்ந்த திருஎதிர்கொள்பாடி என்னூர் திருப்பதியை யடையச்செல்வாராயினார்.—எ-று. (௩௨௦)

---

திருக்கானாட்டுமுள்ளூர் - பண் - கொல்லிக்கௌவாணம்.

திருச்சிற்றம்பலம்.

வள்வாயமதிமிளிரும்வளர்சடையினானை
மறையவனைவாய்மொழியைவானவர்தங்கோனைப்
புள்வாயைக்கீண்டுலகம்விழுங்கியுமிழ்ந்தானை
பொன்னிறத்தின்முப்புரிநூனான்முகத்தினானை
முள்வாயமடற்றாழைமுடத்தாழையீன்று
மொட்டலர்ந்துவிரைநாறுமுருகுவிரிபொழில்சூழ்
கள்வாயகருங்குவளைகண்வளருக்கழனிக்
கானாட்டுமுள்ளூரிற்கண்டுதொழுதேனே.

திரையினார்கடல்சூழ்ந்ததென்னிலங்கைக்கோனைச்
சென்றவனைச்செஞ்சடைமேல்வெண்மதியினானை
நுரையினார்கரைதழுவுகொள்ளிடத்தின்கரைமேற்
கானாட்டுமுள்ளூரிற்கண்டுகழற்றொழுது
உரையினார்மதயானைநாவலாரூர
னுரிமையாலுரைசெய்தவொண்டமிழ்கள்வல்லார்
வரையினார்வகைஞாலமாண்டவர்க்குந்தாம்போய்
வானவர்க்குந்தலைவராய்நிற்பரவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் பதஞ்சலியீசுரர்; தேவியார் - கானார்குழலம்மை.

---

எத்திசையுந் தொழுதேத்த மத்த யானை யெடுத்தெதிர்கொள் பாடியினை யடைவோமென்னுஞ், சித்தநிலைத் திருப்பதிகம் பாடி வந்து செல்வமிகு செழுங்கோயி லிறைஞ்சி நண்ணி, யத்தர்தமை யடிவணங்கி யங்கு வைகி யருள்பெற்றுத் திருவேள்விக்குடியி லெய்தி, முத்திதரும் பெருமானைத் துருத்திகூட மூப்பதிலை யெனும்பதிக மொழிந்து வாழ்ந்தார்.

(இ-ள்.) எத்திசையி லுள்ளவர்களும் வணங்கித்துதிக்க, "மத்தயானை" என்று முதலெடுத்து, "எதிர்கொள்பாடியென்பதடைவோம்" என்று மிறு

தியையுடைய மனவுறுதியைத் தரத்தக்கதாகிய திருப்பதிகத்தையருளிச்செய்துவந்து, செல்வங்கள் நிறைந்த திருக்கோயிலைவணங்கி யுள்ளேபுகுந்து சிவபெருமான் திருவடிகளைவணங்கி யங்குத்தங்கித் திருவருள்பெற்று, திருவேள்விக் குடியென்னுந் திருப்பதியிற்சென்று, அடியார்களுக்குப் பரமுத்தியைத்தந்தருளுஞ் சிவபெருமானைத் திருத்துருத்தியோடு கூட வமைத்து "மூப்பதுமில்லை" என்னு.முதலையுடைய திருப்பதிகத்தைப் பாடியருளி, அங்கு வசித்தருளினார்.—எ-று. (௧௨௧)

திருஎதிர்கோள்பாடி - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

மத்தயானையேறிமன்னர்சூழவருவீர்காள்
செத்தபோதெலாருமில்லைச்சிந்தையுள்வைம்மின்கள்
வைத்தவுள்ளமாற்றவேண்டாவம்மின்மனத்தீரோ
யத்தர்கோயிலெதிர்கொள்பாடியென்பதடைவோமே.

முத்துநீற்றுப்பவளமேனிச்செஞ்சடையானுறையும்
பத்தர்பந்தத்தெதிர்கொள்பாடிப்பரமனையேபணியச்
சித்தம்வைத்ததொண்டர்தொண்டன்சடையனவன்சிறுவன்
பத்தனூரன்பாடல்வல்லார்பாதம்பணிவாரோ.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - அயிராவதேசர்; தேவியார் - வாசமலர்க்குழல்நாயகி.

மூப்பதுமில்லை - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

மூப்பதுமில்லைபிறப்பதுமில்லையிறப்பதில்லைச்
சேர்ப்பதுகாட்டகத்தூரினுமாகச்சிந்திக்கிலல்லாற்
காப்பதுவேள்விக்குடிதண்டுருத்தியெங்கோனரைமே
லார்ப்பதுநாகமறிந்தோமேல்நாமிவர்க்காட்படோமே.

கூடலர்மன்னன்குலநாவலூர்க்கோனலத்தமிழைப்
பாடவல்லபரமனடியார்க்கடிமைவழுவா
நாடவல்லதொண்டனாரூரனாட்படுமாறுசொல்லிப்
பாடவல்லார்பரலோகத்திருப்பதுபண்டமன்றே.

திருச்சிற்றம்பலம்.

வேறு.

காட்டுநல் வேள்விக் கோலங் கருத்துற வணங்கிக் காத
லூட்டிய வுள்ளத் தோடு நம்பியா ரூரர் போற்றி
யீட்டிய தவத்தோர் சூழ வங்குநின் றேகி யன்பு
பூட்டியாட் கொண்டார் மன்னுந் தானங்க ளிறைஞ்சிப் போந்து.

(இ-ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் தமக்குச் சிவபெருமான்தரிசனங் கொடுத்தருளிய திருவேள்விக்குடியி லெழுந்தருளிய திருக்கோலத்தைக் கரு

த்திற்பொருந்த வணங்கிப் பேரன்புபொருந்திய திருவுள்ளத்தோடுந் துதித்து, அருமையாகச் செய்த தவத்தினையுடைய அடியார்கள் தம்மைச் சூழ்ந்துவர அத்திருப்பதியினின்றுநீங்கி, தமக்கு அன்பைவிளைவித்துத் தடுத்தடிமைகொண்டருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளையும் வணங்கிச் சென்றருளி.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கஉஉ)

வேறு.

எஞ்சாத பேரன்பிற் றிருத்தொண்ட ருடனெய்தி
நஞ்சாருங் கறைமிடற்று ரிடம்பலவு நயந்தேத்தி
மஞ்சாரும் பொழிலுடுத்த மலர்த்தடங்கள் புடைசூழுஞ்
செஞ்சாலி வயன்மருதத் திருவாரூர் சென்றடைந்தார்.

(இ-ள்.) விஷம்பொருந்திய கண்டத்தையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளையும் நிறைந்த பேரன்பினையுடைய அடியார்களோடுஞ்சென்று விரும்பித் துதித்து, மேகங்கள் தவழுஞ் சோலைகளையுடைய தாமரைத்தடாகங்கள் பக்கங்களிற்சூழ்ந்த செந்நெற்பயிர்களையுடையவயல்கள் நெருங்கிய மருதநிலமாகிய திருவாரூரைச் சென்று சேர்ந்தருளினார்.—எ-று. ()

செல்வமலி திருவாரூர்த் தேவரொடு முனிவர்களு
மல்குதிருக் கோபுரத்து வந்திறைஞ்சி யுள்புக்கங்
கெல்லையிலாக் காதன்மிக வெடுத்தமலர்க் கைகுவித்துப்
பல்குதிருத் தொண்டருடன் பரமர்திரு முன்னணைந்தார்.

(இ-ள்.) பலவகைச் செல்வங்கள் நிறைந்த திருவாரூரில், தேவர்களும் முனிவர்களும் நெருங்கிய திருக்கோபுரத்தை யடைந்து வணங்கி யுள்ளேபுகுந்து, அங்கே அளவில்லாத பேரன்பு அதிகரிக்கச்சிரசின்மேலெடுத்த திருக்கரங்களைக் குவித்து, நெருங்கிய திருத்தொண்டர்களோடுஞ் சிவபெருமான் திருமுன்னே யடைந்தருளினார்.—எ-று. (கஉச)

மூவாத முதலாகி நடுவாகி முடியாத
சேவாருங் கொடியாரைத் திருமூலட் டானத்து
ளோவாத பெருங்காத லுடனிறைஞ்சிப் புறம்போந்து
தாவாத புகழ்ப்பரவை யார்திருமா ளிகைசார்ந்தார்.

(இ-ள்.) கெடாத முதல்வராகியும், எப்பொருட்கும் அந்தரியாமியாகியும், முடிவற்றபரம்பொருளாகியுமுள்ள இடபக்கொடியையுடைய சிவபெருமானைத் திருமூலட்டானத்தில் நீங்காத பேரன்போடும் வணங்கிப் புறத்திற் சென்று, அழியாத புகழையுடைய பரவைநாச்சியாரது திருமாளிகையை யடைந்தருளினார்.—எ-று. (கஉரு)

பொங்குபெரு விருப்பினொடு புரிகுழலார் பலர்போற்றப்
பங்கயக்கட் செங்கனிவாய்ப் பரவையா ரடிவணங்கி
யெங்களையு நினைந்தருளிற் றெனவியம்ப வினிதளித்து
மங்கைநல்லா ரவரோடு மகிழ்ந்துறைந்து வைகுநாள்.

(இ-ள்.) மிக்க பெருவிருப்போடும் பின்னிய கூந்தலையுடைய பலமாதர்கள் துதிக்க, தாமரைமலர்போன்ற கண்ணையும், சிவந்த கொவ்வைக்கனி

போன்ற வாயையுமுடைய பரவைநாச்சியார் அவரது திருவடிகளில்வணங்கி எங்களையும் (இத்தனைநாள் சென்று) நினைந்தருளிய தென்னென்று கூற, அவ்வம்மையாருக்கு) இனியவார்த்தைகளைக்கூறி, அப்பரவைநாச்சியாரோடு மகிழ்வுடன் வீற்றிருந்தருளும் நாள்களில்.—எ-று.

இதுமுதல் நான்குபாடலுங் குளகம். (கஉசு)

நாயனூர் முதுகுன்றர் நமக்களித்த நன்னிதியந்
தூயமணி முத்தாற்றிற் புகவிட்டேந் துணைவரவர்
கோயிலின்மா ளிகைமேல்பாற் குளத்திலவ ரருளாலே
போயெடுத்துக் கொடுபோதப் போதுவா யெனப்புகல.

(இ-ள்.) முதல்வராகிய முதுகுன்றநாதர் நமக்குக்கொடுத்தருளிய சிறந்தபொருளைத் தூய்மையாகிய மணிமுத்தாநதியில் புகவிட்டேம்; அப்பொருளை அவ்வெம்பெருமானது திருக்கோயிற்றிருமாளிகைக்குமேற்றிசையிலுள்ள கமலாலயத்தீர்த்தத்தில் அவரது திருவருளினால்போய் எடுத்துக்கொண்டுவர, எம்முடன்வருவாயாகவென்று கூறியருள.—எ-று. (கஉஎ)

என்னவதி சயமிதுதா னென்சொன்ன வாறென்று
மின்னிடையார் சிறுமுறுவ லுடன்விளம்ப மெய்யுணர்ந்தார்
நன்னுதலா யென்னுடைய நாதனரு ளாற்குளத்திற்
பொன்னடைய வெடுத்துனக்குத் தருவதுபொய் யாதென்று.

(இ-ள்.) மின்னல்போலும் இடையினையுடையபரவைநாச்சியார் இது என்ன அதிசயம்; தேவரீர் இவ்வாறு கூறியருளியது யாதென்று புன் சிரிப்போடுங்கூற, அதனுண்மையையுணர்ந்த ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள், அவளைப்பார்த்து நல்ல நெற்றியை யுடையாளே! எமது சிவபெருமான் திருவருளினால் இத்திருக்குளத்தில் பொன்முழுவதுமெடுத்து உனக்குக்கொடுப்பது தவறாதென்று கூறி யருளி.—எ-று. (கஉஅ)

ஆங்கவரு முடன்போத வளவிறந்த விருப்பினுடன்
பூங்கோயி லுண்மகிழ்ந்த புனிதர்கழல் புக்கிறைஞ்சி
யோங்குதிரு மாளிகையை வலம்வந்தங் குடன்மேலைப்
பாங்குதிருக் குளத்தணைந்தார் பரவையார் தனித்துணைவர்.

(இ-ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் அப்பரவைநாச்சியாருந்தம்முடன் வர, அளவற்ற பெருவிருப்போடும், பூங்கோயிலினுள் வீற்றிருந்தருளும் ஸ்ரீ தியாகராசப்பெருமானது திருவடிகளை யடைந்து வணங்கி, உயர்ந்த திருமாளிகையைப் பிரதக்ஷணஞ்செய்து, உடனே மேற்பாலுள்ள திருக்குளத்தருகிற் சென்றருளினார்.—எ-று. (கஉகூ)

மற்றதனின் வடகீழ்பாற் கரைமீது வந்தருளி
முற்றிழையார் தமைநிறுத்தி முனைப்பாடித் திருநாடர்
கற்றைவார் சடையானைக் கைதொழுது குளத்திலிழந்
தற்றைநா ளிட்டெடுப்பார் போலங்குத் தடவுதலும்.

(இ-ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் அத்திருக்குளத்தின் வடகிழக்குத் திசையில் வந்தருளி, பரவைநாச்சியாரைக் கரையில்நிறுத்தி, கற்றையாகிய

நீண்ட சடைமுடியையுடைய சிவபெருமானைக் கைகூப்பிவணங்கி அத்திருக் குளத்திலிறங்கி அந்நாளில்போட்டு எடுப்பவர்போல அங்குத்தடவவும்.

இதுமுத லாறுபாடலுங் குளகம். (கூ௦)

நீற்றழகர் பாட்டுவந்து திருவிளையாட் டினினின்று
மாற்றுறுசெம் பொன்குளத்து வருவியா தொழிந்தருள
வாற்றினிலிட் டுக்குளத்திற் றேடுவீ ரருளிதுவோ
சாற்றுமெனக் கோற்றொடியார் மொழிந்தருளத் தனித்தொண்டர்.

(இ-ள்.) திருநீற்றழகராகிய சிவபெருமான் (ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளது) திருப்பாடலை விரும்பி, திருவிளையாடற்காரணமாக மாற்றுயர்ந்த பசும் பொன்னைத் திருக்குளத்தில் வருவியாதிருக்க, (அதனையுணர்ந்த) அழகியவளை யலணிந்த பரவைநாச்சியார் ஆற்றிலிட்டுக் குளத்தில் தேடுகின்றவரோ! திருவருளிதுதானோ? கூறுமென்றுரைக்க, (அதைக்கேட்ட) ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள்.—எ-று.

நீற்றழகர் - ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளது, எனினுமாம். (கூக)

முன்செய்த வருள்வழியே முருகலர்பூங் குழற்பரவை
தன்செய்ய வாயினகை சாராமே தாருமென
மின்செய்த நூன்மார்பின் வேதியர்தா முதுகுன்றிற்
பொன்செய்த மேனியினீ ரெனப்பதிகம் போற்றிசைத்து.

(இ-ள்.) முன்பு (மணிமுத்தாநதியிலிட்டுத் திருவாரூர்த் திருக்குளத்திற்கொள்கவென்று அசரீரியாகக்) கூறியருளிய திருவருளின்படியே, வாசனை வீசுகின்ற மலர்களையணிந்த கூந்தலையுடைய பரவையாரது சிவந்தவாயில் நகைப்பு உண்டாகாமல் அப்பொன்னைக் கொடுத்தருளுமென்று, மின்னலைப் போல் விளங்கும் பூணூலையணிந்த திருமார்பினையுடைய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள், திருமுதுகுன்றத்தில் வீற்றிருந்தருளும் "பொன்செய்தமேனியினீர்" என்று திருப்பதிக முதலெடுத்துத் துதித்து.—எ-று. (கூ௨)

முட்டவிமை யோரறிய முதுகுன்றிற் றந்தபொருள்
சட்டநான் பெறுதொழிந்த தளர்விற்ற கையறவா
மிட்டளத்தை யிவளெதிரே கெடுத்தருளு மெனுந்திருப்பாட்
டெட்டளவும் பொன்காட்டா தொழிந்தருள வேத்துவார்.

(இ-ள்.) எல்லாத்தேவர்களுமறியத் திருமுதுகுன்றத்தில் அடியேனுக்குக் கொடுத்தருளிய பொருள் முழுவதும் நான் அடையாதொழிந்ததளர்ச்சியினால் வருந்துந் துன்பத்தை இப்பரவையாருக்கு முன்னே நீக்கி யருளுமென்னுங்கருத்தை யுடைய எட்டுத்திருப்பாடல்கள் பாடும்வரையிலும் பொன்குளத்திற் காட்டாது ஒழிய, பின்னுந் துதிப்பாராய்.—எ-று. (கூ௩)

ஏத்தாதே யிருந்தறியே னெனுந்திருப்பாட் டெவ்வுலகுங்
காத்தாடு மம்பலத்துக் கண்ணுளனுங் கண்ணுதலைக்
கூத்தாதந் தருளாயிக் கோமளத்தின் முன்னென்று
நீத்தாருந் தொடர்வரிய நெறிநின்றார் பரவுதலும்.

(இ-ள்.) "ஏத்தாதிருந்தறியேன்" என்னு முதலையுடைய ஒன்பதாந் திருப்பாடலை, சர்வலோகங்களையுங் காத்துப் பஞ்சகிருத்தியத் திருத்தாண்ட

வஞ்செய்தருளுங் கனகசபையில் வாழும் நெற்றிக்கண்ணராகிய சிவபெருமானை, இப்பரவையாருக்கு முன்னே, "கூத்தாதந்தருளாய்" என்றுஇறுதியிலமைத்து எவ்வகைப்பற்றுமற்ற மெய்ஞ்ஞானிகளு மடைதற்கரிய திருவருணெறியில் நின்ற ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் துதிக்கவும்.—எ-று.

கோமளம் - பண்பாகுபெயர். (கஙச)

---

திருமுதுகுன்றம் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

பொன்செய்தமேனியினீர்புலித்தோலையரைக்கசைத்தீர்
முன்செய்தமூவெயிலுமெரித்தீர்முதுகுன்றமர்ந்தீர்
மின்செய்தநுண்ணிடையாள்பரவையிவள்தன்முகப்பே
யென்செய்தவாறடிகேளடியேனிட்டளங்கெடவே. (க)

உம்பரும்வானவருமுடனேநிற்கவேயெனக்குச்
செம்பொனைத்தந்தருளித்திகழும்முதுகுன்றமர்ந்தீர்
வம்பமருங்குழலாள்பரவையிவள்வாடுகின்றா
ளெம்பெருமானருளீரடியேனிட்டளங்கெடவே. (உ)

பத்தாபத்தர்களுக்கருள்செய்யும்பரம்பரனே
முத்தாமுக்கணனேமுதுகுன்றமமர்ந்தவனே
மைத்தாருந்தடங்கண்பரவையிவள்வாடாமே
யத்தாதந்தருளாயடியேனிட்டளங்கெடவே. (௩)

மங்கையோர்கூறமர்ந்தீர்மறைநான்கும்விரித்துகந்தீர்
திங்கள்சடைக்கணிந்தீர்திகழும்முதுகுன்றமர்ந்தீர்
கொங்கைநல்லாள்பரவைகுணங்கொண்டிருந்தாள்முகப்பே
யங்கணனேயருளாயடியேனிட்டளங்கெடவே. (௪)

மையாரும்மிடற்றாய்மருவார்புரமூன்றெரித்த
செய்யார்மேனியனேதிகழும்முதுகுன்றமர்ந்தாய்
பையாருமரவேரல்குலாளிவள்வாடுகின்றா
ளையாதந்தருளாயடியேனிட்டளங்கெடவே. (௫)

நெடியானான்முகனுமிரவியொடுமிந்திரனு
முடியால்வந்திறைஞ்சமுதுகுன்றமமர்ந்தவனே
படியாரும்மியலாள்பரவையிவள்தன்முகப்பே
யடிகேள்தந்தருளாயடியேனிட்டளங்கெடவே. (௬)

கொந்தணவும்பொழில்சூழ்குளிர்மாமதில்மாளிகைமேல்
வந்தணவும்மதிசேர்சடைமாமுதுகுன்றுடையாய்
பந்தணவும்விரலாள்பரவையிவள்தன்முகப்பே
யந்தணனேயருளாயடியேனிட்டளங்கெடவே. (எ)

பரசாருங்கரவாபதினெண்கணமுஞ்சூழ
முரசார்வந்ததிரமுதுகுன்றமமர்ந்தவனே
விரைசேருங்குழலாள்பரவையிவள்தன்முகப்பே
யரசேதந்தருளாயடியேனிட்டளங்கெடவே. (அ)

ஏத்தாதிருந்தறியேனிமையோர்தனிநாயகனே
மூத்தாயுலகுக்கெல்லாமுதுகுன்றமமர்ந்தவனே
பூத்தாருங்குழலாள்பரவையிவள்தன்முகப்பே
கூத்தாதந்தருளாய்கொடியேனிட்டளங்கெடவே. (௯)

பிறையாருஞ்சடையெம்பெருமானருளாயென்று
முறையாலவந்தமரர்வணங்குமமுதுகுன்றா தம்மை
மறையாரதங்குரிசில்வயலநாவலாரூரன்சொனன
விறையார்பாடல்வலலார்கமெளிதாஞ்சிவலோகமதே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

கொந்தவிழபூங கொன்றைமுடிக் கூத்தனா திருவருளால
வந்தெழுபொன் றிரளெடுதது வருமுறையாற் கரையேற்ற
வந்தரத்து மலாமாரி பொழிந்திழிந்த தவனியுளோ
ரிந்தவதி சயமென்னே யாாபெறுவா ரெனத்தொழுதார்.

(இ-ள்.) கொத்தாகமலர்ந்த கொன்றைமலர்மாலையையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானது திருவருளினால், மணிமுத்தாநதியி னின்றும் வந்து கமலாலயத்தீர்த்தததி லெழுந்த பொற்குவையை யெடுத்து வருகினற முறைமைப்படியே கரையிலசேர்க்க, விண்ணுலகததில தேவர்களால் புஷ்ப வருஷம் பொழியப்பட்டுப் பூமியில சொரிந்தது ; நிலவுலகத்திலுள்ளவர்கள் இது என்னஅதிசயம், இத்தனமையானபேற்றை யாவா பெறுவாரென்று வணங்கினூர்கள்.—எ-று. (௧௩௫)

ஞாலமவியப் பெயதவரு நறகனக மிடையெடுத்து
மூலமெனக கொடுபோந்த வாணியின்முன் னுரைபபிகக
நீலமிடற றவரருளா லுரைதாழப பின்னுநெடு
மாலயனுக் கரியநறல வழுத்தினூ வன்றெண்டா.

(இ-ள்.) உலகததார் வியப்படையும்படி தோன்றிய நல்ல பொற்குவைகளைக் கமலாலயததிருக்குளத்திலெடுத்து, மாற்றுக்குமூலமாகத் தாம் மச்சமெடுத்துவந்த ஆணியோடு உரைத்துப்பாாக்க, காளகண்டராகிய சிவபெருமானது திருவருளினூல் மாற்றுக்குறையவும், ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் பின்னும் திருமால்பிரமனென்னு மிருவராலு மறிதற்கரிய அவ்வெம்பெருமானது திருவடிகளை வணங்கினூர்.—எ-று.

ஆணியாவது - பொனமாற்று ஒத்திட்டுப்பார்க்கும் பொருட்டுத் தாம் மச்சமாக வெட்டியெடுத்துவந்த உரையாணி. (௧௩௬)

மீட்டுமவர் பரவுதலு மெயயன்ப ரன்பிலவரும
பாட்டுவந்து கூத்துவந்தா படுவாசி முடிவெய்து
மோட்டறுசெம் பொன்னெகக வொருமாவுங் குறையாமற
காட்டுதலு மகிழ்ந்தெடுத்துக் கொண்டுகரை யேறினூர்.

(இ-ள்.) அவர்மீளவுந் துதிக்கவும், மெய்யன்பராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளது அன்புகாரணமாக வருகின்ற திருப்பாடலை விரும்பி யானந்தத் தாண்டவமாடியருளுஞ் சிவபெருமான் அதிலுள்ள வாசி நீங்கிய மாற்றுயர்ந்த செம்பொன்முழுவதும் ஒரு மா அளவுபொன்னுங் குறையாமல் காட்டவும், மகிழ்ந்து எடுத்துக்கொண்டு கரையிலேறினார்.—எ-று.

சிவபெருமான் கொடுத்தருளிய அப்பொன்னே உயர்ந்த மாற்றுள்ளதாகலின், 'வாசிமுடிவெய்தும் ஓட்டறுசெம்பொன்' என்று கூறினார். ஒரு மா என்பது - ஒன்றின் இருபதிலொருபங்கு கொண்ட அளவு. (௧௩௭)

கரையேறிப் பரவையா ருடன்கனக மானதெலா
நிரையாளிற் சுமையேற்றி நெடுநிலைமா ளிகைபோக்கித்
திரையேறும் புனற்சடிலத் திருமூலட் டானத்தார்
விரையேறு மலர்ப்பாதந் தொழுதணைந்தார் வீதியினில்.

(இ-ள்.) திருக்குளக்கரையிலேறிப் பரவைநாச்சியாரோடு பொற்குவைகளனைத்தையும் வரிசையாகச் சுமையாள்களின்மேலெடுப்பித்து, உயர்ந்த நிலைகளையுடைய பரவைநாச்சியாரது திருமாளிகைக்கு அனுப்பி, அலைகள்பொருந்திய கங்கைநதியைத்தரித்த சடைமுடியையுடைய திருமூலட்டானத் தெழுந்தருளுஞ் சிவபெருமானது வாசனைபொருந்திய தாமரைமலர்போன்ற சிவந்த திருவடிகளைவணங்கித் திருவீதியில் வந்தருளினார்.—எ-று.

'நிரையேயாளிற் சுமத்தி' என்றும் பாடம். (௧௩௮)

வந்துதிரு மாளிகையி னுட்புகுந்து மங்கலவாழ்த்
தந்தமிலா வகையேத்து மளவிறந்தா ரொலிசிறப்பச்
சிந்தைநிறை மகிழ்ச்சியுடன் சேயிழையா ருடனமர்ந்தார்
கந்தமலி மலர்ச்சோலை நாவலர்தங் காவலனார்.

(இ-ள்.) திருவீதியில்வந்தருளித் திருமாளிகையி னுள்ளேபுகுந்து, மங்கலவாழ்த்துக்களை அளவற்ற வகை யெடுத்துக்கூறும் எண்ணிறந்த பரிசனங்களினொலி சிறப்படையத் திருவுள்ளத்தில்நிறைந்த மகிழ்ச்சியோடும் வாசனை கமழும் மலர்ச்சோலைசூழ்ந்த திருநாவலூரர் தலைவராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் பரவைநாச்சியாரோடும் வீற்றிருந்தருளினார்.—எ-று. (௧௩௯)

அணியாரூர் மணிப்புற்றி னமர்ந்தருளும் பரம்பொருளைப்
பணிவாரங் கொருநாளிற் பாராட்டுந் திருப்பதிகந்
தணியாத வானந்தந் தலைசிறப்பத் தொண்டருடன்
றுணிவாயபொருள்வினவித் தொழுதாடிப் பாடுவார்.

(இ-ள்.) அழகிய திருவாரூரில் மணிப்புற்றினிடத்து வீற்றிருந்தருளும் ஸ்ரீவன்மீகநாதனை வணங்குகின்றவர் அங்கொருதினத்தில் யாவருஞ் சிறப்பித்துக் கூறுந் திருப்பதிகத்தை நீங்காத பேரானந்தமதிகரிக்க, அடியார் திருக்கூட்டத்துடன் துணிவாகிய மெய்ப்பொருளை வினவி வணங்கி, ஆனந்தக்கூத்தாடிப் பாடுவாராயினார்.—எ-று. (௧௪0)

பண்ணிறையும் வகைபாறு தாங்கியென வெடுத்தருளி
புண்ணிறையு மனக்களிப்பா லுறுபுளக மயிர்முகிழ்ப்பக்

கண்ணிறையும் புனலபொழியக கரையிகந்த வானந்த
மெண்ணிறைநத படிதோனற வேததிமகிழந் தின்புற்றார்.

(இ-ள்.) இசைநிறையும் வகை "பாறுதாங்கிய" என்று முதலெடுத்துத் தமது திருவுள்ளததில நிறைநத களிப்பினேடும் பொருந்திய புளகத்தினல மயிர்க்கூச்செறியவும, திருக்கண்களினின்று மானந்தபாஷபஞ் சொரியவும, அளவுகடந்த பேரானநதமானது திருவுள்ளததிலநிறைந்து தோன்றவுந் துதிதது மகிழ்ந்து இனபுற்றருளினா.—எ-று. (கசுக)

---

திருவாரூர் நமக்கடிகளாகிய வடிகள் - பண் - கொல்லி.

திருசசிறறமபலம.

பாறுதாஙகியகாடரோபடுதலையரோமலைபபாவையோா
கூறுதாஙகியகுழகரோகுழைககாதரோகுறுஙகோட்டிள
வேறுதாஙகியகொடியரோசுடுபொடியரோவிலஙகுமபிறை
யாறுதாஙகியசடையரோநமககடிகளாகியவடிகளே.

படிசெயநீர்மையிறபததாகாளபணிநதேததினேன்பணியீரருள்
வடிவிலானதிருநாவலூரனவனபபகையபபனவனறொணடன
செடியனாகிலுநதீயனாகிலுநதமமையேமனஞ்சிநதிககு
மடியனூரனையாளவரோநமககடிகளாகியவடிகளே.

திருசசிற்றம்பலம்.

---

இன்புறறங கமாநாளி லீறிலரு மறைபரவும
வனபுறறி னரவணிநத மனனவனா ருளபெறறே
யனபுறற காதலுட னளவிறநத பிறபதியும [வாா.
பொனபுறகென றிடவொளிருஞ சடையாரைத தொழுபபோ

(இ-ள்.) அததிருவாரூரில பேரினபமடைந்து வசிததருளும நாள்களில் அழிவிலலாத அரிய வேதஙகளால துதிக்கப்பெறற சாப்பாபரணராகிய சிவபெருமானது திருவருளைபபெறறு, அனபுபொருநதிய பெருவிருபபோடு அளவிறந்த பிறதிருப்பதிகளிலும பொனனேடு கலநத கபிலநிறமபோல விளஙகுகினற சடைமுடியை யுடைய சிவபெருமானை வணஙகும பொருட்டுச் செலவாராயினா.—எ-று.

வன்புற்றினரவு=வலிய புற்றினகண்ணுள்ள பாம்பு, சிவபெருமானணிந்தருளிய பாம்புகள் தாருகாவனதது முனிவாகளசெய்த யாகததினின்றுந் தோன்றி வந்தனவாயிருக்க, 'வனபுறறினரவு' என்று கூறியது, பாமபுகளின பொதுவியல்புநோக்கி யெனவறிக. (கசுஉ)

பரிசனமு முடனபோதப பாங்கமைந்த பதிகடொறுங்
கரியுரிவை புனைநதாாதங கழறொழுது மகிழநதேத்தித்
துரிசறுநற் பெருநதொண்டா களளாறு தொழுவதறகுப்
புரிவுறுமெயததிருத்தொண்டரொதிாகொளளபபுககணைந்தார்.

(இ-ள்.) பரிசனங்களுந் தம்முடன்வர அருகிலுள்ள திருப்பதிகள்தோறும் யானையின் தோலையுரித்துப் போர்த்தருளிய சிவபெருமானது திருவடிகளை வணங்கி மகிழ்ந்து துதித்து, குற்றமற்ற நல்ல திருத்தொண்டராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் திருநள்ளாறு என்னுந் திருப்பதியை வணங்குவதற்கு, அன்புமிக்க அங்குள்ள மெய்த்தொண்டர்கள் தம்மை யெதிர்கொள்ளும்படி சேர்ந்தருளினார்.—எ-று. (கசுக)

விண்டடவு கோபுரத்தைப் பணிந்துகர மேற்குவித்துக்
கொண்டுபுகுந் தண்ணலார் கோயிலினை வலஞ்செய்து
மண்டியபே ரன்பினொடு மன்னுதிரு நள்ளாறர்
புண்டரிகச் சேவடிக்கீழ்ப் பொருந்தநில மிசைப்பணிந்தார்.

(இ-ள்.) விண்ணுலகை யளாவிய திருக்கோபுரத்தை வணங்கித் திருக்கரங்களைச் சிரமேற் குவித்துக்கொண்டு உள்ளேபுகுந்து சிவபெருமானது திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்து மிக்க பேரன்போடும் நிலைபெற்ற ஸ்ரீ தர்ப்பாரணியேசுரரது தாமரைமலர்போன்ற திருவடியில் பொருந்தும்படி பூமியில் சாஷ்டாங்கமாக வணங்கியருளினார்.—எ-று. (கசுஉ)

அங்கணரைப் பணிந்தேத்தி யருளினாற் றொழுதுபோய்
மங்குலணி மணிமாடத் திருக்கடவூர் வந்தெய்தித்
திங்கள்வளர் முடியார்தந் திருமயா னமும்பணிந்து
பொங்குமிசைப் பதிகமரு வார்கொன்றை யெனப்போற்றி.

(இ-ள்.) சிவபெருமானை வணங்கித்துதித்துத் திருவருளினால் வணங்கிப்புறத்திற் சென்று, மேகங்கள் தவழும் அழகிய மாளிகைகளையுடைய திருக்கடவூரை வந்துசேர்ந்து இளம்பிறை வளருஞ் சடைமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக்கடவூர் மயானத்தையும் வணங்கி, இசைமிக்க திருப்பதிகத்தை "மருவார்கொன்றை" என்று முதலெடுத்துத்துதித்து.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கசுஙு)

---

**திருக்கடவூர்மயானம்- பண்-பழம்பஞ்சுரம்.**

திருச்சிற்றம்பலம்.

மருவார்கொன்றைமதிசூடிமாணிக்கத்தின்மலைபோல
வருவார்விடைமேல்மாதோடுமகிழ்ந்துபூதப்படைசூழத்
திருமால்பிரமனிந்திரற்குந்தேவர்நாகர்தானவர்க்கும்
பெருமான்கடவூர்மயானத்துப்பெரியபெருமானடிகளே.

மாடமல்குகடவூரின்மறையோரேத்துமயானத்துப்
பீடைதீரவடியாருக்கருளும்பெருமானடிகள்சீர்
நாடிநாவலாரூரனம்பிசொன்னநற்றமிழ்கள்
பாடுமடியார்கேட்பார்மேற்பாவமானபறையுமே.

திருச்சிற்றம்பலம்.

**சுவாமிபெயர் - பிரமபுரீசுவரர் ; தேவியார் - மலர்க்குழல்மின்னம்மை.**

---

திருவீரட் டானத்துத் தேவர்பிரான் சினக்கூற்றின்
பொருவீரந் தொலைத்தகழல் பணிந்து பொடியார்மேனி
மருவீரத் தமிழ்மாலை புனைந்தேத்தி மலைவளைத்த
பெருவீரர் வலம்புரத்துப் பெருகார்வத் தொடுஞ்சென்றார்.

(இ-ள்.) கோபித்துவந்த இயமனுடைய பொருகின்ற வீரத்தைக் கெடுத்தருளிய திருக்கடவூர்வீரட்டத்து வீற்றிருந்தருளுந் தேவர்கள் நாயகராகிய சிவபெருமானது திருவடிகளைவணங்கி "பொடியார்மேனி" என்னுமுதலையுடைய குளிர்ச்சிபொருந்திய தமிழ்த்திருப்பதிகம் பாடித்துதித்து, மேருமலையை வில்லாக வளைத்த பெரிய வீரராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருவலம்புரமென்னுந் திருப்பதியில் மிக்க விருப்பத்தோடுஞ் சென்று சேர்ந்தருளினார்.—எ-று. (௧௬௬)

திருக்கடவூர் வீரட்ட மென்பது சிவபெருமான் இயமனை யுதைத்தருளிய தலமாகலின், இது அட்டவீரட்டத்தொன்று.

---

**திருக்கடவூர் வீரட்டம்-பண்-நட்டராகம்.**

திருச்சிற்றம்பலம்.

பொடியார்மேனியனேபுரிநூலொருபால்பொருந்த
வடியார்மூவிலைவேல்வளரங்கையினங்கையொடுங்
கடியார்கொன்றையனேகடவூர்தனுள்வீரட்டத்தெம்
மடிகேளென்னமுதேயெனக்கார்துணைநீயலதே.

காராரும்பொழில்சூழ்கடவூர்த்திருவீரட்டத்து
ளேராரும்மிறையைத்துணையாவெழில்நாவலர்கோ
னூரன்னடியானடித்தொண்டனுரைத்ததமிழ்
பாரோரேத்தவல்லார்பரலோகத்திருப்பாரோ.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - **அமிர்தகடேசுவரர்** ; தேவியார்- **அபிராமியம்மை.**

---

வரையோடு நிகர்புரிசை வலம்புரத்தார் கழல்வணங்கி
யுரையோசைப் பதிகமெனக் கினியோதிப் போய்ச்சங்க
நிரையோடு துமித்தூப மணித்தீப நித்திலப்பூத்
திரையோதங் கொண்டிறைஞ்சுந் திருச்சாய்க்கா டெய்தினார்.

(இ-ள்.) மலையையொத்த மதில்சூழ்ந்த திருவலம்புரத்தி லெழுந்தருளிய சிவபெருமானது திருவடிகளை வணங்கி, சொல்லும் இசையும் நிறைந்த திருப்பதிகத்தை "எனக்கினி" என முதலெடுத்துத் துதித்து, அவ்விடத்தினின்றுநீங்கி, சங்கவரிசைகளோடு நீர்த்துளிகளாகிய தூபத்தையும் நவமணிகளாகிய தீபத்தையும் முத்துகளாகிய மலர்களையும் அலைப்பெருக்குகள் கரையிற்கொணர்ந்து வணங்குகின்ற திருச்சாய்க்காடென்னுந் திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று. (௧௬௭)

---

**திருவலம்புரம் - பண் - காந்தாரம்.**

திருச்சிற்றம்பலம்.

எனக்கினித்தினைத்தனைப்புகலிடமறிந்தேன்
பனைக்கனிப்பழம்படுபரவையின்கரைமே
லெனக்கினியவன்றமர்க்கினியவனெழுமையு
மனக்கினியவன்றனதிடம்வலம்புரமே.

வருங்கலமும்பலபேணுதல்கருங்கட
லிருங்குலப்பிறப்பர்தமிடம்வலம்புரத்தினை
யருங்குலத்தருந்தமிழூரன்வன்றொண்டன்சொல்
பெருங்குலத்தவரொடுபிதற்றுதல்பெருமையே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - வலம்புரநாதர்; தேவியார் - வடுவகிர்க்கண்ணம்மை.

---

தேவர்பெரு மான்றன்னைத் திருச்சாய்க்காட் டினிற்பணிந்து
பாவலர்செந் தமிழ்மாலைத் திருப்பதிகம் பாடிப்போய்
மேவலர்தம் புரமெரித்தார் வெண்காடு பணிந்தேத்தி
நாவலர்கா வலரடைந்தார் நனிபள்ளித் திருநகரில்.

(இ-ள்.) தேவர்கள்நாயகராகிய சிவபெருமானைத் திருச்சாய்க்காட்டில் வணங்கிச் செய்யுளமைந்த செந்தமிழ்த்திருப்பதிகம் பாடிச்சென்று, பகைவர்களது திரிபுரத்தை யெரித்த சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருவெண்காட்டைவணங்கித்துதித்து, திருநனிபள்ளி யென்னுந் திருப்பதியில் ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் சென்றடைந்தருளினார்.—எ-று. (௧௬௪)

நனிபள்ளி யமர்ந்தபிரான் கழல்வணங்கி நற்றமிழின்
புனிதநறுந் தொடைபுனைந்து திருச்செம்பொன் பள்ளிமுதற்
பனிமதிசேர் சடையார்தம் பதிபலவும் பணிந்துபோய்த்
தனிவிடைமேல் வருவார்தந் திருநின்றி யூர்சார்ந்தார்.

(இ-ள்.) திருநனிபள்ளியில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானது திருவடிகளை வணங்கி, நல்ல தூய்மையாகிய தமிழ்த்திருப்பதிகம்பாடியருளி, குளிர்ந்த சந்திரனை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருச்செம்பொன்பள்ளி முதலாகிய பலதிருப்பதிகளையும் வணங்கிச் சென்று, ஒப்பற்ற இடபவாகனத்தி லெழுந்தருளுஞ் சிவபெருமானது திருநின்றியூரை யடைந்தருளினார்.—எ-று. (௧௬௫)

நின்றியூர் மேயானை நேயத்தாற் புக்கிறைஞ்சி
யொன்றியவன் புள்ளுருகப் பாடுவா ருடையவர
சென்றுமுல கிடர்நீங்கப் பாடியவே ழெழுநூறு
மன்றுசிறப் பித்தஞ்சொற் றிருப்பதிக மருள்செய்தார்.

(இ-ள்.) திருநின்றியூரில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானை அன்போடு அடைந்து வணங்கி, பொருந்திய பேரன்புடன் திருவுள்ளமுருகப் பாடுகின்றவராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள், ஆளுடையவரசாகிய திருநாவுக்கரசுசுவாமிகள் உலகத்தா ரெப்பொழுதுந் துன்பத்தினின்று நீங்கும்பொருட்டுப் பாடிய

ருளிய நாலாயிரத்துத்தொளாயிரந் திருப்பதிகங்களையும் அன்று சிறப்பித்து அழகிய சொற்களமைந்த திருப்பதிகத்தைப் பாடியருளினர்.—எ-று.

திருமுறைகண்ட புராணத்தில் திருநாவுக்கரசுசுவாமிகள் பாடிய திருப்பதிகங்கள் நாற்பத்தொன்பதினாயிர மென்றிருக்க ஈண்டு நாலாயிரத்துத் தொளாயிரமென் றிருப்பதென்னெனின், அது திருப்பாடற்றொகையும், இது திருப்பதிகத் தொகையுமா மெனக்கொள்க. (கரு0)

---

திருநின்றியூர் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

திருவும்வண்மையுந்திண்டிறலரசுஞ்
சிலந்தியார்செய்தசெய்பணிகண்டு
மருவுகோச்செங்கணான்றனக்களித்த
வார்த்தைகேட்டுநின்மலரடிமடைந்தேன்
பெருகுபொன்னிவந்துந்துபன்மணியைப்
பிள்ளைப்பல்கணம்பண்ணையுணண்ணித்
தெருவுந்தெற்றியுமுற்றமும்பற்றித்
திரட்டுந்தென்றிருநின்றியூரானே.

அணிகொளாடையம்பூணணிமாலை
யமுதுசெய்தமுதம்பெறுசண்டி
யிணைகொளேழெழுநூறிரும்பனுவ
லீன்றவன்றிருநாவினுக்கரையன்
கணைகொள்கண்ணப்பனென்றிவர்பெற்ற
காதலின்னருளாதரித்தடைந்தேன்
றிணைகொள்செந்தமிழ்பைங்கிளிதெரியுஞ்
செல்வத்தென்றிருநின்றியூரானே.

கோடுநான்குடைக்குஞ்சரங்குலுங்க
நலங்கொள்பாதநின்றேத்தியபொழுதே
பீடுவிண்மிசைப்பெருமையும்பெற்ற
பெற்றிகேட்டுநின்பொற்கழலடைந்தேன்
பேடைமஞ்ஞையும்பிணைகளின்கன்றும்
பிள்ளைக்கிள்ளையுமெனப்பிறைநுதலார்
நீடுமாடங்கண்மாளிகைதோறு
நிலாவுதென்றிருநின்றியூரானே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - இலட்சுமீவரதர்; தேவியார் - உலகநாயகியம்மை.

---

அப்பதியி லன்பருட னமர்ந்தகல்வா ரகலிடத்திற்
செப்பரிய புகழ்நீடூர் பணியாது செல்பொழுதி
லொப்பரிய வுணர்வினா னினைந்தருளித் தொழுதுறுவார்
மெய்ப்பொருள்வண் டமிழ்மாலை விளம்பியே மீண்டணைந்தார்.

(இ-ள்.) அத்திருநின்றியூரில் அடியார் திருக்கூட்டத்துடன் வசித்தருளி அங்குநின்றும் நீங்குகின்றவர்,உலகத்திற் சொல்லுதற்கரிய புகழையுடைய திருநீடூரென்னுந்திருப்பதியை வணங்காமற்செல்லும்பொழுது, ஒப்பற்ற தமதுணர்வினால் நினைந்து வணங்குகின்றவராய் மெய்ப்பொரு ளமைந்த வளவியதமிழ்ப்பதிகத்தைப் பாடிக்கொண்டு திரும்பி வந்தருளினார்.—எ-று. (௧௫௧)

மடலாரும் புனனீடூர் மருவினர்தாள் வணங்காது
விடலாமே யெனுங்காதல் விருப்புறுமத் திருப்பதிக
மடலார்சூ லப்படையார் தமைப்பாடி யடிவணங்கி
யுடலாரு மயிர்ப்புளக மிகப்பணிந்தங் குறைகின்றார்.

(இ-ள்.) மலரிதழ்கள் நிறைந்த நீர்வளம்பொருந்திய திருநீடூரில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானது திருவடிகளை "பணியாவிடலாமே" என்னு மிறுதியையுடைய விருப்பமிக்க திருப்பதிகத்தை வலிமைதங்கிய சூலப்படையையுடைய சிவபெருமானைக்குறித்துப் பாடித் திருவடிகளில் வணங்கித் திருமேனியில் மயிர்க்கூச்செறியும்படி பணிந்து அத்திருநீடூரில் வசிப்பாராயினார்—எ-று.

---

திருநீடூர் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

ஊர்வதோர்விடையொன்றுடையானையொண்ணுதற்றனிக்கண்ணுதலானைக்
காரதார்கறைமாமிடற்றானைக்கருதலார்புரமூன்றெரித்தானை
நீரில்வாளைவரால்குதிகொள்ளுநிறைபுனற்றுழனிச்செல்வநீடூர்ப்
பாருளார்பரவித்தொழநின்றபரமனைப்பணியாவிடலாமே.

பேரோராயிரமும்முடையானைப்பேசினாற்பெரிதும்மினியானை
நீரூர்வார்சடைநின்மலன்றன்னைநீடூர்நின்றுகந்திட்டபிரானை
யாரூரன்னடிகாண்பதற்கன்பாயாதரித்தழைத்திட்டவிம்மாலை
பாரூரும்பரவித்தொழவல்லார்பத்தராய்முத்திதாம்பெறுவாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - சோமநாதேசுவரர் ; தேவியார் - வேயுறுதோளியம்மை.

---

அங்கணினி தமர்ந்தருளாற் றிருப்புன்கூ ரணைந்திறைஞ்சிக்
கொங்கலரு மலர்ச்சோலைத் திருக்கோலக் காவணையக்
கங்கைசடைக் கரந்தவர்தா மெதிர்காட்சி கொடுத்தருளப்
பொங்குவிருப் பாற்றொழுது திருப்பதிகம் போற்றிசைப்பார்.

(இ-ள்.) அத்திருப்பதியில் இனிமையோடு வசித்து, திருவருளினால் திருப்புன்கூரை யடைந்து வணங்கி, வாசனை வீசுகின்ற மலர்களையுடைய சோலைசூழ்ந்த திருக்கோலக்காவென்னுந் திருப்பதியையடையவும்,அங்குக் கங்கைநதியைச் சடைமுடியில் மறைத்தருளிய சிவபெருமான் அவர்க்கெதிரே கா

கொடுத்தருள, மிக்க விருப்பத்துடன் வணங்கித் திருப்பதிகம் பாடுவாரா யினார்.—எ-று. (கருஉ)

திருஞான சம்பந்தர் திருக்கைக ளாலொத்திப்
பெருகார்வத் துடன்பாடப் பிஞ்ஞகனார் கண்டிரங்கி
யருளாலே திருத்தாள மளித்தபடி சிறப்பித்துப்
பொருண்மாலைத் திருப்பதிகம் பாடியே போற்றிசைத்தார்.

(இ-ள்) திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமதுதிருக்கரங்களால் தாளம் ஒத்தறுத்து மிக்க அன்புடன் பாடியருளச் சிவபெருமா னதனைக்கண்டு திருவுள்ளமிரங்கித் தமது திருவருளினால் பொற்றாளங் கொடுத்தருளிய தன்மையைச்சிறப்பித்து, சிறந்தபொருளமைந்த திருப்பதிக மாலையைப் பாடித் துதித்தருளினார்.—எ-று. (கருங)

---

**திருக்கோலக்கா - பண் - தக்கேசி.**

திருச்சிற்றம்பலம்.

புற்றில்வாளரவார்த்தபிரானைப்
பூதநாதனைப்பாதமேதொழுவார்
பற்றுவான்றுணையெனக்கெளிவந்த
பாவநாசனைமேவரியானை
முற்றலார்திரிபுரமொருமூன்றும்
பொன்றவென்றிமால்வரையரியம்பாக்
கொற்றவில்லங்கையேந்தியகோனைக்
கோலக்காவினிற்கண்டுகொண்டேனே.

நாளுமின்னிசையாற்றமிழ்பரப்பு
ஞானசம்பந்தனுக்குலகவர்முன்
றாளமீந்தவன்பாடலுக்கிரங்குந்
தன்மையாளனையென்மனக்கருத்தை
யாளும்பூதங்கள்பாடநின்றாடு
மங்கணன்றனையெண்கணமிறைஞ்சுங்
கோளிலிப்பெருங்கோயிலுளானைக்
கோலக்காவினிற்கண்டுகொண்டேனே.

கோடரம்பயில்சடையுடைக்கரும்பைக்
கோலக்காவுளெம்மானைமெய்ம்மானைப்
பாடரங்குடியடியவர்விரும்பப்
பயிலுநாவலாரூரன்வன்றொண்ட
னாடிரங்கிமுன்னறியுமந்நெறியா
னவின்றபத்திவைவிளம்பியமாந்தர்
காடரங்கெனநடநவின்றான்பாற்
கதியுமெய்துவர்பதியவர்க்கதுவே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - சத்தபுரீசுவரர்; தேவியார் - ஓசைகொடுத்தநாயகி

---

மூவாத முழுமுதலார் முதற்கோலக் காவகன்று
தாவாத புகழ்ச்சண்பை வலங்கொண்டு தாழ்ந்திறைஞ்சி
நாவார்முத் தமிழ்விரகர் நற்பதங்கள் பரவிப்போய்
மேவார்தம் புரஞ்செற்றார் குருகாவூர் மேவுவார்.

(இ-ள்.) கெடாத முழுமுதற்பொருளாயுள்ள சிவபெருமான் வீற்றிருந்தருளுஞ் சிறந்த திருக்கோலக்காவென்னுந் திருப்பதியினின்றுநீங்கி, அழியாத புகழையுடைய சீகாழிப்பதியைப் பிரதக்ஷணஞ்செய்து வீழ்ந்து வணங்கி, முத்தமிழ்விரகராகிய திருஞானசம்பந்தப்பெருமானது சிறந்ததிருவடிகளை வணங்கிச் சென்று, பகைவர்களாகிய அசுரர்களது திரிபுரத்தை யெரித்தருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக்குருகாவூரென்னுந் திருப்பதியை யடைவாராயினார்.—எ-று. (௫௫)

உண்ணீரின் வேட்கையுட னுறுபசியான் மிகவருந்திப்
பண்ணீர்மை மொழிப்பரவை யார்கொழுநர் வரும்பாங்கர்க்
கண்ணீடு திருநுதலார் காதலவர் கருத்தறிந்து
தண்ணீரும் பொதிசோறுங் கொண்டுவழிச் சார்கின்றார்.

(இ-ள்.) நீருண்ணும் விருப்பத்துடன் பொருந்திய பசியினால் மிகவருத்தமுற்று, யாழினிசைபோலும் மொழியினையுடைய பரவைநாச்சியார் மணவாளராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் வரும்பொழுது, நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் அவரது கருத்தை யுணர்ந்து தண்ணீருங் கட்டுசோறு மெடுத்துக்கொண்டு அவர் வரும்வழியி லிருப்பாராயினார்.—எ-று. (௫௬)

வேனிலுறு வெயில்வெம்மை தணிப்பதற்கு விரைகுளிர்மென்
பானன்மலர்த் தடம்போலும் பந்தரொரு பாலமைத்தே
யானமறை வேதியரா யருள்வேடங் கொண்டிருந்தார்
மானமருந் திருக்கரத்தார் வன்றொண்டர் தமைப்பார்த்து.

(இ-ள்.) மானையேந்திய திருக்கரத்தினையுடைய சிவபெருமான் வேனிற்காலத்துண்டாகிய வெயிலின்வெப்பத்தைத் தணிப்பதற்கு வாசனைபொருந்திய குளிர்ந்த மிருதுவாகிய செங்கழுநீர்மலர்கள் நிறைந்த தடாகத்தைப் போலத் தண்ணீர்ப்பந்தலை ஒருபுறத்தில் அமைத்து, ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளை எதிர்பார்த்துக்கொண்டு, சிறந்த வேதங்களையுணர்ந்த வேதியராக அருள்வடிவங்கொண் டெழுந்தருளியிருந்தார்.—எ-று. (௫௭)

குருகாவூ ரமர்ந்தருளுங் குழகர்வழி பார்த்திருப்பத்
திருவாரூர்த் தம்பிரான் றோழர்திருத் தொண்டருடன்
வருவாரப் பந்தரிடைப் புகுந்துதிரு மறையவர்பாற்
பெருகார்வஞ் செலவிருந்தார் சிவாயநம வெனப்பேசி.

(இ-ள்.) திருக்குருகாவூரில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமான் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் வரும் வழியை யெதிர்பார்த்துக்கொண்டிருக்க, திருவாரூரிலெழுந்தருளிய தம்பிரான்றோழராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் அடியார் திருக்கூட்டத்துடன் வருகின்றவராய் அத் தண்ணீர்ப்பந்தலிற் புகுந்து (சிவபெருமானாகிய) அவ்வேதியரிடத்து மிக்க அன்புசெல்லும்படி, சிவாயநம, என்றுகூறி எழுந்தருளியிருந்தார்.—எ-று. (௫௮)

ஆலநிழற் கீழிருந்தா ரவர்தம்மை யெதிர்நோக்கிச்
சாலமிகப் பசித்தீரிப் பொதிசோறு தருகின்றேன்
காலமினித் தாழாமே கைக்கொண்டிங் கினிதருந்தி
யேலநறுங் குளிர்தண்ணீர் குடித்திளைப்புத் தீருமென.

(இ ள்.) (சனகாதிமுனிவர்களுக்கு ஞானோபதேசஞ் செய்யும்பொருட்டுத் தக்ஷிணாமூர்த்தியாகக்) கல்லால விருக்ஷத்தின் கீழெழுந்தருளிய சிவபெருமானாகிய வேதியர் அந்நம்பியாரூரரை யெதிரேபார்த்தருளி, நீர் இப்போது மிகப் பசித்திருக்கின்றீர்; யான் இக் கட்டுசோற்றை உமக்குக் கொடுக்கின்றேன்; இனிக் காலதாமசஞ் செய்யாமல பெற்று இங்கு இனிமையோடு அமுதுசெய்து வாசனை கலந்த குளிர்ந்த தண்ணீரையுண்டு இளைப்பு நீங்குமென்று கூறியருள.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (கருகூ)

வன்றொண்ட ரதுகேட்டு மறைமுனிவா தரும்பொதிசோ
றின்றுநமக் கெதிர்விலக்க லாகாதென் றிசைந்தருளிப்
பொன்றயங்கு நூன்மார்பா தரும்பொதிசோ றதுவாங்கிச்
சென்றதிருத் தொண்டருடன் றிருவமுது செய்தருளி.

(இ-ள்) அவ்வார்த்தையை ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் கேட்டு, வேதங்களை யுணர்ந்த இவ்வேதியர் நமக்குக் கொடுக்குங் கட்டுசோற்றை இப்பொழுது தடுக்கலாகாதென்று இசைந்து, பொன்மயமாக விளங்கும் பூணூலையணிந்த திருமார்பினையுடைய வேதியர் கொடுத்தருளிய கட்டமுதை வாங்கிக்கொண்டு தம்முடன்வந்த அடியார்களுடன் திருவமுதுசெய்து —எ-று. ()

எண்ணிறந்த பரிசனங்க ளெல்லாரு மினிதருந்தப்
பண்ணியபின் றம்மருங்கு பசித்தணைந்தா ருண்டருந்த
வுண்ணிறைந்த வாரமுதா யொருகாலு முலவாதே
புண்ணியனார் தாமளித்த பொதிசோறு பொலிந்ததால்.

(இ ள்.) அளவற்ற பரிசனங்களும் இனிமையோடு திருவமுது செய்யப் பண்ணுவித்தபின்பு, அங்குப் பசித்துவந்தவர்களும் உண்ணும்படி, தம்முள்ளே நிறைந்த அரிய அமுதம்போல் எடுத்துண்ணுந்தோறுங் குறையாமல், சிவபெருமான் கொடுத்தருளிய அக்கட்டுசோறு வளர்ந்தது.—எ-று. (கசுக)

சங்கரனா திருவருள்போற் றண்ணீரின் சுவையார்ந்து
பொங்கிவரு மாதரவா லவர்நாமம் புகழ்ந்தேத்தி
யங்கயர்வாற் பள்ளியமர்ந் தருகணைந்தார் களுந்துயிலக்
கங்கைசடைக் கரந்தாரப் பந்தரொடுந் தாங்கரந்தார்.

(இ ள்.) சிவபெருமான் திருவருளைப்போலக் குளிர்ந்திருக்கின்ற இனிய சுவைபொருந்திய தண்ணீரையுண்டு, அதிகரித்தெழுகின்ற பேரன்பினால் அவ்வெம்பெருமான் திருநாமங்களைப் புகழ்ந்து துதித்து, அவ்விடத்து உண்ட விளைப்பினால் துயில்கொண்டு, தம்மருகிலுள்ள பரிசனங்களும் நித்திரை கொள்ளவும், கங்காநதியை மறைத்து வேதியர்வடிவங் கொண்டெழுந்தருளிவந்த சிவபெருமான் அத்தண்ணீர்ப்பந்தலோடும் மறைந்தருளினார்.—எ-று.

சிவபெருமான் றிருவருள் மிகக்குளிர்ந்து சிவாநந்தபோகத்தை விளைத்துச் சுகந்தருதல்போலத் தண்ணீரும் மிகக்குளிர்ந்து பேராநந்தத்தை விளைத்தலின், 'சங்கரனார் திருவருள்போற் றண்ணீரின் சுவையார்ந்து' என்று கூறினார்.

"மாசில் வீணையு மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
யீச னெந்தை யிணையடி நீழலே" எனவருந் திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரத்தானுமுணர்க. (௧௬௨)

சித்தநிலை திரியாத திருநாவ லூர்மன்ன
ரத்தகுதி யினிற்பள்ளி புணர்ந்தவரைக் காணாமை
யித்தனையா மாற்ற மறிந்திலே னெனவெடுத்து
மெய்த்தகைய திருப்பதிகம் விளம்பியே சென்றடைந்தார்.

(இ-ள்.) தமது திருவுள்ள நிலைமை வேறுபடாத ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் அப்பொழுது நித்திரையினின்று நீங்கி, (தண்ணீர்ப்பந்தலுடன்) அவ்வேதியரைக் காணாமல் "இத்தனையா மாற்றமறிந்திலேன்" என்று முதலெடுத்து மெய்ம்மைபொருந்திய திருப்பதிகம்பாடிச் சென்றருளினார்.—எ-று. (௧௬௩)

---

திருக்குருகாவூர் -பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

இத்தனையாமாற்றமறிந்திலேனெம்பெருமான்
பித்தரையென்றும்மைப்பேசுவார்பிறரொல்லா
முத்தினைமணிதன்னைமாணிக்கமுளைத்தெழுந்த
வித்தனேகுருகாவூர்வெள்ளடைநீயன்றே.

வளங்கனிபொழின்மல்குவயலணிந்தழகாய
விளங்கொளிகுருகாவூர்வெள்ளடையுறைவானை
யிளங்கிளையாரூரன்வனப்பகையவளப்ப
னுளங்குளிர்தமிழ்மாலைபத்தர்கட்குரையாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமியார்-திருமேனிவெள்ளடைநாதர் தேவியார்-காவியங்கண்ணியம்மை.

---

குருகாவூ ரமர்ந்தருளுங் குழகனார் கோயிலினுக்
கருகார்பொற் கோபுரத்தை யணைந்திறைஞ்சி யுள்புக்கு
வருகாதல் கூரவலங் கொண்டுதிரு முன்வணங்கிப்
பருகாவின் னமுதத்தைக் கண்களாற் பருகினார்.

(இ-ள்.) திருக்குருகாவூரிலெழுந்தருளிய சிவபெருமானது திருக்கோயிலுக் கருகிலுள்ள அழகிய திருக்கோபுரத்தை யடைந்து வணங்கி யுள்ளேபுகுந்து,பெருகிவருகின்ற அன்பானது அதிகரிக்கப் பிரதக்ஷிணஞ்செய்து, திருமுன்னேவணங்கி, உண்ணுதற்கரிய இனிய அமுதம்போலப்பவராகிய சிவபெருமானைக் கண்களால் தரிசித்தருளினார்.—எ-று.

தேவர்களீ ருண்ணப்படு மமுதம்போலாகாமையின், 'பருகாவின்னமுதம்' என்று கூறினார். (௧௬௪)

கண்ணார்ந்த வின்னமுதைக் கையாரத் தொழுதிறைஞ்சிப்
பண்ணார்ந்த திருப்பதிகம் பாடியே பணிந்தேத்தி
யுண்ணாடும் பெருங்காத லுடையவர்தாம் புறத்தெய்தி
நண்ணார்வத் தொண்டருட னங்கினிது நயந்திருந்தார்.

(இ-ள்.) தமதுள்ளத்தில் தியானிக்கின்ற பேரன்பினையுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் நெற்றிக்கண்ணையுடைய இனிய அமுதம்போன்ற சிவபெருமானைக் கைகூப்பி வணங்கிப் பண்ணமைந்த திருப்பதிகம் பாடிப் பணிந்து துதித்துப் புறத்திற்சென்று, அன்புபொருந்திய அடியார்களோடும் அத்திருக்குருகாவூரில் இனிதாக வீற்றிருந்தருளினார்.—எ-று.

'கண்ணார்ந்த வின்னமுதை' என்பதற்கு, கண்ணுக்குப்புலப்பட்ட இனிய அமுதம்போல்பவனை, எனினுமாம். (௧௬௫)

அந்நாளிற் றம்பெருமா னருள்கூடப் பணிந்தகன்று
மின்னார்செஞ் சடைமுடியார் விரும்புமிடம் பலவணங்கிக்
கன்னாடு மெயில்புடைசூழ் கழிப்பாலை தொழுதேத்தித்
தென்னாவ லூரமன்னர் திருத்தில்லை வந்தடைந்தார்.

(இ-ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் அந்நாள்களில் சிவபெருமானது திருவருள் கைகூட வணங்கி, அத்திருப்பதியினின்று நீங்கி, மின்னலைப்போல் விளங்குஞ் சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமான் விரும்பி வீற்றிருந்தருளிய பல திருப்பதிகளைவணங்கி, மலைபோலுயர்ந்த மதில்கள் பக்கங்களிற்சூழ்ந்த திருக்கழிப்பாலைத் திருப்பதியை வணங்கித்துதித்து, ஸ்ரீ சிதம்பரத்தை வந்தடைந்தருளினார்.—எ-று. (௧௬௬)

சீர்வளருந் திருத்தில்லைத் திருவீதி பணிந்துபுகுந்
தேர்வளர்பொற் றிருமன்று ளெடுத்தசே வடியிறைஞ்சிப்
பார்வளர மறைவளர்க்கும் பதியதனிற் பணிந்துறைவார்
போர்வளர்மே ருச்சிலையார் திருத்தினைமா நகர்புகுந்தார்.

(இ-ள்.) சிறப்புவளர்கின்ற ஸ்ரீ சிதம்பரத்தின் திருவீதியை வணங்கிச்சென்று அழகு மிக்க சிறந்த கனகசபையில் தூக்கி நடித்தருளிய குஞ்சிதபாதத்தை வணங்கி, உலகத்தார் க்ஷேமமடையும் வண்ணம் வைதிகமார்க்கத்தை விருத்திசெய்யும் அத்திருப்பதியில் வசித்தருளும் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள், போர்செய்தற்குரிய மேருவாகிய வில்லையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருத்தினைநகரை யடைந்தருளினார்.—எ-று. (௧௬௭)

திருத்தினைமா நகர்மேவுஞ் சிவக்கொழுந்தைப்பணிந்துபோய்
நிருத்தனா ரமர்ந்தருளு நிறைபதிகள் பலவணங்கிப்
பொருத்தமிகுந் திருத்தொண்டர் போற்றுதிரு நாவலூர்
கருத்திலவரு மாதரவாற் கைதொழச்சென் றெய்தினார்.

(இ-ள்.) திருத்தினை நகரத்தில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானை வணங்கி, அங்குநின்றுநீங்கி, தாண்டவமூர்த்தியாகிய சிவபெருமான் எழுந்தருளிய சிறந்த பல திருப்பதிகளை வணங்கி, அன்பினொருமைப்பாடு மிகுந்த திருத்தொ

ண்டர்கள் சதாகாலமும் போற்றுகின்ற திருநாவலூரென்னுந் திருப்பதியைத் தமதுள்ளத்தினின்று மெழுந்த அன்பினால் வணங்குதற்குச் சென்றுசேர்ந்தருளினார்.—எ-று. (கசுஅ)

திருநாவ லூர்மன்னர் சேர்கின்றா ரெனக்கேட்டுப்
பெருநாமப் பதியோருந் தொண்டர்களும் பெருவாழ்வு
வருநாளென் றலங்கரித்து வந்தெதிர்கொண் டுள்ளணையச்
செருநாகத் துரிபுனைந்தார் செழுங்கோயி லுள்ளணைந்தார்.

(இ-ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் வருகின்றாரென்று கேள்வியுற்று, மிக்க புகழையுடைய அத்திருப்பதியி லுள்ளவர்களும் அடியார்களும் நமக்குச் சிவாநந்தப் பெருவாழ்வு வருதற்குரிய காலமிதுவேயென்று அந்நகரை யலங்கரித்து எதிர்கொண்டுவந்து அழைத்துச்செல்ல, அவர் போர்செய்கின்ற (கயாசுரனென்னும்) யானையின் தோலையுரித்துப் போர்த்தருளிய சிவபெருமானது சிறந்த திருக்கோயிலினுள்ளே சென்றருளினார்.—எ-று. (கசுகூ)

மேவியவத் தொண்டர்குழா மிடைந்தரவென் றெழுமோசை
மூவுலகும் போயொலிப்ப முதல்வனார் முன்பெய்தி
யாவியினு மடைவுடையா ரடிக்கமலத் தருள்போற்றிக்
கோவலனான் முகனெடுத்துப் பாடியே கும்பிட்டார்.

(இ-ள்.) தம்மைச் சூழ்ந்துவருகின்ற அவ்வடியார் கூட்டங்கள் நெருங்கி அரகரவென்று கூறுகின்ற பேரோசையானது மூன்றுலகத்துஞ் சென்றொலிக்கச் சிவபெருமான் திருமுன்னேயடைந்து, உயிரினுஞ் சிறந்த துணைவராயுள்ள அவ்வெம்பெருமானது திருவடித் தாமரையின் திருவருளைப்போற்றி "கோவலனான்முகன்" என்று முதலெடுத்துத் திருப்பதிகம் பாடி வணங்கியருளினார்.

---

திருநாவலூர்-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

கோவலனான்முகன்வானவர்கோனுங்குற்றேவல்செய்ய
மேவலர்முப்புரந்தீயெழுவித்தவர்ஓரம்பினா
லேவலனார்வெண்ணெய்நல்லூரில்வைத்தெம்மையாளுங்கொண்ட
நாவலனார்க்கிடமாவதுநந்திருநாவலூரே.

நாதனுக்கூர்நமக்கூர்நரசிங்கமுனையரைய
னாதரித்தீசனுக்காட்செய்யுமூரணிநாவலூரென்
றோதநற்றக்கவன்றொண்டனாரூரனுரைத்ததமிழ்
காதலித்துங்கற்றுங்கேட்பவர்தம்வினைகட்டறுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - திருநாவலீசுவரர் ; தேவியார். சுந்தரவல்லியம்மை.

---

நலம்பெருகு மப்பதியி னடியவன் பொடுநயந்து
குலம்பெருகுந் திருத்தொண்டர் குழாத்தோடு மினிதமர்ந்து
சலம்பெருகுஞ் சடைமுடியார் தாள்வணங்கி யருள்பெற்றுப்
பொலம்புரிநூன் மணிமார்பர் பிறபதியுந் தொழப்போவார்.

(இ-ள்.) பொன்போல் விளங்கும் பூணூலையணிந்த திருமார்பினையுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் நன்மைமிக்க அத்திருப்பதியில் பொருந்திய அன்போடும் விரும்பிச் சிறந்த அடியார் திருக்கூட்டத்துடன் இனிதாகவசித்தருளி, கங்கைநதி பெருகுஞ் சடைமுடியையுடைய சிவபெருமானது திருவடியை வணங்கித் திருவருள்பெற்று, மற்றத் திருப்பதிகளையும் வணங்குதற்குச் செல்வாராயினார்.—எ-று. (கஎக)

தண்டகமாந் திருநாட்டுத் தனிவிடையார் மகிழ்விடங்க
டொண்டரெதிர் கொண்டணையத் தொழுதுபோய்த் தூயநதி
வண்டறைபூம் புறவுமலை வளமருதம் பலகடந்தே
யெண்டிசையோர் பரவுதிருக் கழுக்குன்றை யெய்தினார்.

(இ-ள்.) திருத்தொண்டை நாட்டில் ஒப்பற்ற இடபவாகனத்தையுடைய சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளும் பல திருப்பதிகளை அடியார்கள் எதிர்கொண்டுவர வணங்கிச்சென்று, பரிசுத்தம்பொருந்திய பல நதிகளும், வண்டுகள் சப்திக்கின்ற மலர்களையுடைய முல்லைநிலமும், குறிஞ்சிநிலமும், வளப்பமிக்க மருதநிலமுமாகிய பல விடங்களைக்கடந்து, எட்டுத்திக்கி லுள்ளவர்களுந் துதிக்கின்ற திருக்கழுக்குன்றத்தை யடைந்தருளினார்.—எ-று.

தண்டகனென்னு மரசர்பெருமான் ஸ்ரீ காஞ்சிப்பதியை இராஜதானியாகக்கொண்டு அரசுபுரிந்த திருநகராகலான்,தொண்டைநாட்டைத் 'தண்டகமாந்திருநாடு' என்று கூறினார்; இதனை,

"கண்ணுதற்பரனுந்தண்டுழாய்மௌலிக்கடவுளுங்கமலமேலயனும்
விண்ணவர்க்கிறையுங்கொற்றமாலினியுமேலைநாட்பிறந்ததொன்மனுவுந்
தண்ணளிபுரிதுண்டீரனுநள்ளார்சமர்த்தொழில்கடந்ததண்டகனு
மண்ணலங்கரிகால்வளவனும்பிறருமரசுசெய்தளித்ததந்நகரம்." என

வருங் கந்தபுராணத்தானுணர்க. (கஎஉ)

தேனார்ந்த மலர்ச்சோலைத் திருக்கழுக்குன் றடித்தடியா
ரானாத விருப்பினொடு மெதிர்கொள்ள வடைந்தருளித்
தூநாள்வெண் மதியணிந்த சுடர்க்கொழுந்தைத் தொழுதிறைஞ்சிப்
பாநாடு மின்னிசையிற் றிருப்பதிகம் பாடினார்.

(இ-ள்.) தேன்நிறைந்த மலர்களையுடைய சோலைசூழ்ந்த திருக்கழுக்குன்றத்தில் வாழுந் திருத்தொண்டர்கள் நீங்காத பெருவிருப்போடு மெதிர்கொண்டுவர அங்குச்சென்றருளி, தூய்மையாகிய புதிய வெண்பிறையை யணிந்த சிவபெருமானை வணங்கிச் செய்யுட்கமைந்த இனிய இசையோடு திருப்பதிகம் பாடியருளினார்.—எ-று. (கஎஙு)

பாடியவப் பதியின்க ணினிதமர்ந்து பணிந்துபோய்
நாடியநல் லுணர்வினொடுந் திருக்கச்சூர் தனைநண்ணி
யாடகமா மதில்புடைசூ ழாலக்கோ யிலினமுதைக்
கூடியமெய் யன்புருகக் கும்பிட்டுப் புறத்தணைந்தார்.

(இ-ள்.) திருப்பதிகம் பாடிய அத்திருக்கழுக்குன்றத்தில் இனிதாக வசித்து வணங்கி,அங்குநின் றுஞ் சென்று, விரும்புகின்ற நல்லுணர்ச்சியோடுந் திருக்கச்சூரென்னுந் திருப்பதியை யடைந்து பொன்னாலாகிய மதில்கள் அரு

இல் சூழ்ந்த ஆலக்கோயிலில் எழுந்தருளிய சிவபெருமானைப் பொருந்திய மெய்யன்பினால் மனமுருக வணங்கிப் புறத்திற் சென்றருளினார்.—எ-று.

ஆலக்கோயிலென்பது, திருக்கச்சூரில் சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக்கோயிலின் பெயர். (௧௭௪)

அணைந்தருளு மவ்வேலை யமுதுசெயும் பொழுதாகக்
கொணர்ந்தமுது சமைத்தளிக்கும் பரிசனமுங் குறுகாமைத்
தணந்தபசி வருத்தத்தாற் றம்பிரான் றிருவாயிற்
புணர்ந்தமதிற் புறத்திருந்தார் முனைப்பாடிப் புரவலனார்.

(இ-ள்.) அவ்வாறு புறத்திற் சென்றபொழுது, போசனஞ்செய்யும் உச்சிவேளையாக திருவமுது சமைத்துக்கொண்டுவந்து படைக்கும் பரிசனங்களும் வராமையின் மிக்க பசிவருத்தத்தினால் ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக்கோயிற் றிருவாயிலினிடத்துள்ள திருமதிலின்ருகில் இருந்தருளினார்.—எ-று. (௧௭௫)

வன்றொண்டர் பசிதீர்க்க மலையின்மேன் மருந்தானார்
மின்றங்கு வெண்டலையோ டொழிந்தொருவெற் றோடேந்தி
யன்றங்கு வாழ்வாரோ ரந்தணராய்ப் புறப்பட்டுச்
சென்றன்பர் முகநோக்கி யருள்கூரச் செப்புவார்.

(இ-ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிக ளடைந்த பசிநோயைத் தணிப்பதற்கு மலைமருந்தாயுள்ள சிவபெருமான் அன்று மின்போல்விளங்கும் பிரம கபாலத்தை யொழித்து ஒரு வேற்றோட்டைத் தாங்கி,அந்நகரில்வாழும் ஒருவேதியர்போலத் திருவுருவங்கொண்டு வெளிப்பட்டுவந்து, அவரது திருமுகத்தைப்பார்த்து, அவர்மேல் திருவருளதிகரிக்கச் சொல்வாராயினார்.—எ-று.

வேற்றோடு=வெறுமையாகிய வோடு ; பிட்சாபாத்திரமென்னும் பொருட்டு. (௧௭௬)

மெய்ப்பசியான் மிகவருந்தி யிளைத்திருந்தீர் வேட்கைவிட
விப்போழுதே சோறிரந்திங் கியானுமக்குக் கொணர்கின்றே
னப்புறநீ ரகலாதே சிறிதுபொழு தமருமெனச்
செப்பியவர் திருக்கச்சூர் மனைதோறுஞ் சென்றிரப்பார்.

(இ-ள்.) உமது உடம்பிற்குண்டாகிய பசியினால் மிகவும் வருந்தி இளைத்திருக்கின்றீர் ; இப்பசி வேட்கைநீங்க, யான் இப்பொழுது சோறு இரந்து, இங்கு உமக்குக் கொண்டுவருகின்றேன் ; கொஞ்சநேரம் நீர் அப்பால் செல்லாமல் இங்கிருமென்று கூறி, அவ்வேதியர் திருக்கச்சூரிலுள்ள வீடுகள் தோறுஞ் சென்று யாசிப்பாராயினார்.—எ-று. (௧௭௭)

வெண்டிருநீற் றணிதிகழ விளங்குநூ லொளிதுளங்கக்
கண்டவர்கண் மனமுருகக் கடும்பகற்போ திடும்பலிக்குப்
புண்டரிகக் கழல்புவிமேற் பொருந்தமனை தொறும்புக்குக்
கொண்டுதாம் விரும்பியாட் கொண்டவர்முன் கொடுவந்தார்.

(இ-ள்.) திருவெண்ணீற்றி னழகு விளங்கவும், மார்பில் விளங்குகின்ற பூணூலி னொளிபிரகாசிக்கவும், பார்த்தவர்களது மனமுருகவும், மத்தியான

வேதியர் விடுகின்ற பிச்சைக்குத் தமது தாமரைமலர்போன்ற திருவடிகள் பூமியிற்பொருந்த வீடுகள்தோறுஞ்சென்று பிச்சையெடுத்து, தாம் விருப்பமுற்றுத் தடுத்தடிமை கொண்டருளிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு முன்னே கொண்டுவந்தருளினர்.—எ-று. (கஎ௬)

இரந்துதாங் கொடுவந்த வின்னடிசி லுங்கறியு
மரந்தைதரும் பசிதீர வருந்துவீ ரெனவளிப்பப்
பெருந்தகையார் மறைவர்தம் பேரருளின் றிறம்பேணி
நிரந்தபெருங் காதலினா லெதிர்தொழுது வாங்கினர்.

(இ-ள்.) (வீடுகள் தோறும்) தாம் யாசித்துக்கொண்டுவந்த இனிய திருவமுதையும், பதார்த்தத்தையும் துன்பந்தருகின்ற பசிநோய் நீங்க உண்ணுவீரென்று கொடுத்தருள, ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் (சிவபெருமானாகிய) வேதியரது மிக்க திருவருட்டிறத்தை விரும்பிப்பொருந்திய பெருவிருப்பினால் நேரே வணங்கி வாங்கியருளினர்.—எ-று. (கஎ௯)

வாங்கியவத் திருவமுது வன்றொண்டர் மருங்கணைந்த
வோங்குதவத் தொண்டருட னுண்டருளி யுவந்திருப்ப
வாங்கருகு நின்றார்போ லவர்தம்மை யறியாமே
நீங்கினா ரெப்பொருளும் நீங்காத நிலைமையினார்.

(இ-ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் தாம் வேதியரிடத்தினின்றும் வாங்கிய அத்திருவமுதைத் தம்மருகிற்சூழ்ந்துள்ள சிறந்ததவத்தினையுடைய அடியார்களோடும் உண்டு மகிழ்ந்திருக்க, சராசரங்களாகிய எல்லாப்பொருள்களிலும் நீங்காதுநிறைந்த தன்மையையுடைய சிவபெருமானாகிய வேதியர் அங்கு அருகில்நின்றவர்போலக் காணப்பட்டு,அவர்தம்மையறியாத வண்ணம் மறைந்தருளினர்.—எ-று.

அருள்வள்ளலாகிய சிவபெருமான் சராசரங்களாகிய இருவகைப்பிரபஞ்சங்களிலும் விறகிற்றீபோலவும்,பாலினெய்போலவும் உயிர்க்குயிராய்க் கலந்து நிற்கும் பேரருட்படிவினரென்பார், 'எப்பொருளுநீங்காத நிலைமையினார்' என்று கூறினர். இதனை,

"விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போன்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவுக் கோனட் டுணர்வுக் கயிற்றினான்
முறுக வாங்கிக் கடையமு னிற்பனே." என்னுந் தேவாரத்தாலு முணர்க. (௧௮0)

திருநாவ லூராளி சிவயோகி யார்நீங்க
வருநாம மறையவனா ரிறையவனா ரெனமதித்தே
பெருநாதச் சிலம்பணிசே வடிவருந்தப் பெரும்பகற்க
ணுருநாடி யெழுந்தருளிற் றென்பொருட்டா மெனவுருகி.

(இ-ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் சிவயோகிபோல வந்தருளிய வேதியர்மறைந்தருளவும், இங்குவந்தருளிய சிறந்தவேதியர் சிவபெருமானேயென்று திருவுள்ளத்திற்கருதி, பேரொலியையுடைய வேதமாகிய திருச் சிலம்பையணிந்த திருவடிகள்வருந்தும்படி மத்தியானவேளையில் வேதியராகத்திரு

வுருவங்கொண் டெழுந்தருளியது அடியேன் பொருட்டாகுமென்று திருவுள்ளமுருகி.—எ-று.

இதுமுதலிரண்டுபாடலுங் குளகம். (கஅக)

வேறு.

முதுவா யோரி யென்றெடுத்து முதல்வ ஞர்தம் பெருங்கருணை
யதுவா மிதுவென் றதிசயம்வந் தெய்தக் கண்ணீர் மழையருவிப்
புதுவார் புனலின் மயிர்ப்புளகம் புதையப் பதிகம்போற்றிசைத்து
மதுவா ரிதழி முடியானைப் பாடி மகிழ்ந்து வணங்கினார்.

(இ-ள்.) "முதுவாயோரி" என்றுமுதல்தொடங்கி, வேதியர்போல வெழுந்தருளியது சிவபெருமானது பெருங்கருணைத் திறமாகுமென்று வியப்புண்டாக, ஆனந்தக்கண்ணீராகிய மழையாலுண்டாகும் புதிய அருவிநீரில் மயிர்ப்புளகமானது மறையத் திருப்பதிகம்பாடியருளி, தேனொழுகுகின்ற கொன்றைமலர்மாலையையணிந்த திருமுடியையுடைய சிவபெருமானைத் துதித்து மனமகிழ்ந்து வணங்கி யருளினார்.—எ-று. (கஅ௨)

---

திருக்கச்சூராலக்கோயில் - பண்-கொல்லிக்கௌவாணம்.

திருச்சிற்றம்பலம்.

முதுவாயோரிகதறமுதுகாட்டெரிகொண்டாடல்முயல்வானே
மதுவார்கொன்றைப்புதுவீசூடுமலையான்மகடன்மணவாளா
கதுவாய்த்தலையிற்பலிநீகொள்ளக்கண்டாலடியார்கவலாரோ
யதுவேயாமாறிதுவோகச்சூராலக்கோயிலம்மானே. (க)

கச்சேரரவொன்றரையிலசைத்துக் கழலுஞ்சிலம்புங்கலிக்கப்பலிக்
கென்றுச்சம்போதாவூரூர்திரியக்கண்டாலடியாருருகாரோ
யிச்சையறியோமெங்கள்பெருமானேயேழ்பிறப்புமெனையாள்வா
யச்சமில்லாக்கச்சூர்வடபாலாலக்கோயிலம்மானே. (௨)

சாலக்கோயிலுளநின்கோயிலவையென்றலைமேற்கொண்டாடி
மாலைத்தீர்ந்தேன்வினையுந்துறந்தேன்வானோரறியாநெறியானே
கோலக்கோயில்குறையாக்கோயில்குளிர்பூங்கச்சூர்வடபாலை
யாலக்கோயில்கல்லால்நிழற்கீழறங்களுரைத்தவம்மானே. (௩)

விடையுங்கொடியுஞ்சடையுமுடையாய்மின்னேருருவத்தொளியானே
கடையும்புடைசூழ்மணிமண்டபமுங்கன்னிமாடங்கலந்தெங்கும்
புடையும்பொழிலும்புனலுந்தழுவிப்பூமேற்றிருமாமகள்புல்கி
யடையுங்கழனிப்பழனக்கச்சூராலக்கோயிலம்மானே. (௪)

மேலைவிதியேவினையின்பயனேவிரவார்புரமூன்றெரிசெய்தாய்
காலையெழுந்துதொழுவார்தங்கள்கவலைகளைவாய்கறைக்கண்டா
மாலைமதியேமலைமேல்மருந்தேமறவேனடியேன்வயல்சூழ்ந்த
வாலைக்கழனிப்பழனக்கச்சூராலக்கோயிலம்மானே. (௫)

பிறவாயிறவாய்பேணாய்மூவாய்பெற்றமேறிப்பேய்சூழ்தல்
துறவாய்மறவாய்சுடுகாடென்றுமிடமாக்கொண்டுநடமாடி
யொறுவாய்த்தலையிற்பலிகொள்ளக்கண்டாலடியாரருகாரோ
வறவேயொழியாய்கச்சூர்வடபாலாலக்கோயிலம்மானே. (சு)

பொய்யேயுன்னைப்புகழ்வார்புகழ்ந்தாலதுவும்பொருளாக்கொள்வானே
மெய்யேயெங்கள்பெருமானுன்னைநினைவாரவரைநினைகண்டாய்
மையார்தடங்கண்மடந்தைபங்காமதியஞ்சடைவைத்த
வையாசெய்யாய்வெளியாய்கச்சூராலக்கோயிலம்மானே. (எ)

ஊனைப்பெருக்கியுன்னைநினையாதொழிந்தேன்செடியேனுணர்வில்லேன்
கானக்கொன்றைகமழமலருங்கடிநாறுடையாய்கச்சூராய்
மானைப்புரையுமடமென்னோக்கிமடவாளஞ்சமறைத்திட்ட
ஆனைத்தோலாய்ஞானக்கண்ணாயாலக்கோயிலம்மானே. (அ)

காதல்செய்துகளித்துப்பிதற்றிக்கடிமாமலரிட்டுனையேத்தி
யாதல்செய்யுமடியாரிருக்கவையங்கொள்ளவழகிதே
போதக்கண்டேனுன்னைமறவேனுமையாள்கணவாவெனையாள்வா
யாதற்பழனக்கழனிக்கச்சூராலக்கோயிலம்மானே. (கூ)

அன்னமன்னும்வயல்சூழ்கச்சூராலக்கோயிலம்மானை
யுன்னமுன்னுமனத்தாரூரனாரூரன்பேர்முடிவைத்த
மன்னுபுலவன்வயனாவலர்கோன்செஞ்சொனாவன்வன்றொண்டன்
பன்னுதமிழ்நூல்மாலைவல்லாரவரென்தலைமேற்பயில்வாரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-விருந்திட்டநாதர்-தேவியார்-கன்னியுமையம்மை.

---

வந்தித் திறைவ ரருளாற்போய் மங்கைபாகர் மகிழ்ந்த விட, முந்தித் தொண்ட ரெதிர்கொள்ளப் புக்கு முக்கட் பெருமானைச், சிந்தித் திடவந் தருள்செய்கழல் பணிந்து செஞ்சொற் றொடைபு னைந்தே, யந்திச் செக்கர்ப் பெருகொளியா ரமருங் காஞ்சி மருங்க ணைந்தார்.

(இ-ள்.) சிவபெருமானைத் துதித்து அவரது திருவருளினால் அவ்விடத்தி னின்றுநீங்கி, பார்வதிபாகராகிய சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளிய பல திருப்பதிகளையும் அடியார்கள் முற்பட்டு எதிர்கொண்டழைக்கச் சென்று, மூன்று கண்களையுடைய சிவபெருமானை (அடியார்கள்) தியானிக்க வந்து அருள்செய்கின்ற திருவடிகளில் வணங்கி, செவ்விய சொற்களமைந்த திருப்பதிகம் பாடியருளி, மாலைக்காலத் துண்டாகுஞ் செவ்வானம்போலும் பேரொளியையுடைய திருவேகம்பநாதர் வீற்றிருந்தருளும் ஸ்ரீ காஞ்சிபுரத்தின் அருகில் அடைந்தருளினார்.—எ-று. (கஅ௩)

அன்று வெண்ணெய் நல்லூரி லரியு மயனுந் தொடர்வரிய, வென்றிமழுவெள் விடை யுயர்த்தார் வேத முதல்வ ராய்வந்து,நின் றசபைமுன் வழக்குரைத்து நேரே தொடர்ந்தாட் கொண்டவர் தா,மின்றிங் கெய்தப் பெற்றேமென் றெயில்சூழ் காஞ்சி நகர்வாழ் வார்,

(இ-ள்.) (பன்றியாகவும் அன்னமாகவு முருவெடுத்துத் திருவடியையுந் திருமுடியையுந் தேடிச்சென்ற) திருமால்பிரமனென்னு மிருவராலு மடைதற்கரிய வெற்றிபொருந்திய இளமையாகிய வெள்ளிய இடபக்கொடியை யுயர்த்திய சிவபெருமான், அந்நாளில் திருவெண்ணெய்நல்லூரில் விருத்தவேதியத் திருவுருவங் கொண்டெழுந்தருளி, சபையாருக்கு முன்னின்று வல்வழக்குரைத்து நேரே தடுத்தடிமை கொள்ளப் பெற்றவராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் இப்பொழுது, இங்கு எழுந்தருளப் பெற்றோமென்று, மதில்சூழ்ந்த அக்காஞ்சிபுரத்தில் வாழ்கின்றவர்கள்.—எ-று.

இதுமுத லிரண்டுபாட்டலுங் குளகம். (கஅஎ)

மல்கு மகிழ்ச்சி மிகப்பெருக மறுகு மணித்தோ ரணநாட்டி
யல்கு தீப நிறைகுடங்க ளகிலின் தூபங் கொடியெடுத்துச்
செல்வ மனைக ளலங்கரித்துத் தெற்றி யாடன் முழவதிரப்
பல்கு தொண்ட ருடன்கூடிப் பதியின் புறம்போ யெதிர்கொண்டார்

(இ-ள்.) நிறைந்த மகிழ்ச்சியதிகரிக்க, திருவீதிகளில் அழகிய மகர தோரணங்களை நாட்டி, நிலைபெற்ற தீபங்களும், பூரணகும்பங்களும், அகிற்றூபங்களும், கொடிகளுமாகிய இவைகளை யெடுத்துக்கொண்டு, செல்வங்கள் நிறைந்த வீடுகளை யலங்கரித்து, நாற்சந்திகளில் மாதர்கள் நடிக்கும் முழவமொலிக்க, நிறைந்த அடியார்களுடன் கலந்து, அக்காஞ்சிநகரத்தின் புறத்திற்சென்று ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளை யெதிர்கொண்டார்கள்.—எ-று. (கஅகூ)

ஆண்டநம்பி யெதிர்கொண்ட வடியார் வணங்க வெதிர்வணங்கி
நீண்ட மதிட்கோ புரங்கடந்து நிரைமா ளிகைவீ தியிற்போந்து
பூண்ட காதல் வாழ்த்தினுடன் பூரிமங்க லதூ ரியமொலிப்ப
வீண்டு தொண்டர் பெருகுதிரு வேகாம்பரஞ் சென்றெய்தினார்.

(இ-ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் தம்மை யெதிர்கொண்டு வந்த அடியார்கள் வணங்கத் தாமும் எதிரே வணங்கி, நீண்ட மதிலையுடைய திருக்கோபுரத்தைக்கடந்து, வரிசையாகிய மாடவீதியிற் சென்று, விருப்பமிக்க மங்கலவாழ்த்துக்களுடன் சிறந்த மங்கலவாத்தியங்க ளொலிக்க, நெருங்கிய அடியார்கள் அதிகரித்திருக்கின்ற திருவேகாம்பரமென்னுந் திருக்கோயிலைச் சென்றடைந்தருளினார்.—எ-று.

திருவேகாம்பரமென்பது, ஸ்ரீகாஞ்சிபுரத்தில் சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக்கோயிலின் பெயர். (கஅ௰)

ஆழி நெடுமா லயன்முதலா மமரர் நெருங்கு கோபுரமுன்
பூழி யுறமண் மிசைமேனி பொருந்த வணங்கிப் புகுந்தருளிச்
சூழு மணிமா ளிகைபலவுந் தொழுது வணங்கி வலங்கொண்டு
வாழி மணிப்பொற் கோயிலினுள் வந்தா ரனுக்க வன்றொண்டர்.

(இ-ள்.) சக்கரத்தையுடைய திருமால் பிரமன் முதலாகிய தேவர்கள் நெருங்கிய திருக்கோபுரத்திற்குமுன்னே திருமேனியிற் புழுதியுண்டாகப் பூமியிற்பொருந்த வணங்கி யுள்ளேபுகுந்து,சூழ்ந்துள்ள அழகிய பல திருமாளிகைப் பத்தியை வணங்கிப் பிரதக்ஷணஞ்செய்து, அணுக்கத்தொண்டராகிய ஸ்ரீ சுந்

தரமூர்த்திசுவாமிகள் மணிகளழுத்திய பொன்மயமாகிய திருக்கோயிலினுள் ளே வந்தருளினார்.—எ-று. (௧௦௭)

கைகள் கூப்பி முன்னணைவார் கம்பை யாறு பெருகிவர
வையா தமக்கு மிகவஞ்சி யாரத் தழுவிக் கொண்டிருந்த
மையு லாவுங் கருநெடுங்கண் மலையா ளென்றும் வழிபடுஞ்
செய்ய கமலச் சேவடிக்கீழ்த் திருந்துங் காத லுடன்வீழ்ந்தார்.

(இ-ள்.) கைகளைக் கூப்பித் திருமுன்னே செல்கின்றவர், கம்பாநதிபெருக்கெடுத்துவர அதனால் சிவபெருமானுக்கு இடையூறுண்டாகுமென்று மிகவும் பயந்து, (முலைத்தழும்பும் வளைத்தழும்பும்) பொருந்தத் தழுவிக்கொண்டிருந்த மைதீட்டிய கரிய நெடிய திருக்கண்களையுடைய ஸ்ரீகாமாட்சியம்மையார் எப்பொழுதும் பூசிக்கின்ற செந்தாமரை மலர்போன்ற திருவடிகளில் சிறந்த பேரன்போடும் விழுந்து வணங்கியருளினார்.—எ-று.

ஸ்ரீ காமாட்சியம்மையார் சிவபெருமானைப் பூசித்த வரலாற்றை, முன் திருக்குறிப்புத் தொண்டநாயனார் புராணத்துட் காண்க. (௧௦௮)

வீழ்ந்து போற்றிப் பரவசமாய் விம்மி யெழுந்து மெய்யன்பால்
வாழ்ந்த சிந்தை யுடன்பாடி மாறா விருப்பிற் புறம்போந்து
சூழ்ந்த தொண்ட ருடன்மருவு நாளிற் றொல்லைக் கச்சிநகர்த்
தாழ்ந்த சடையா ராலயங்கள் பலவுஞ் சார்ந்து வணங்குவார்.

(இ-ள்.) வணங்கித் துதித்துப் பரவசமுற்று விம்மியெழுந்து மெய்யன்பினால் சிவானந்தப்பெருவாழ் வடைந்துள்ள திருவுள்ளத்தோடு திருப்பதிகம் பாடி நீங்காத பேரன்புடன் புறத்திற்சென்று, தம்மைச் சூழ்ந்துள்ள அடியார்களோடுங் கலந்து வசித்தருளும் நாள்களில், பழமையாகிய அக்காஞ்சிநகரத்தி லுள்ள தாழ்ந்த சடைமுடியையுடைய சிவபெருமானது திருக்கோயில்கள் பலவற்றையும் அடைந்து வணங்குவாராயினார்.—எ-று.

விம்முதல்=தரிசனத்தாலுண்டாகும் ஓர் பேரானந்த விளைவு. (௧௦௯)

சீரார் காஞ்சி மன்னுதிருக் காமக் கோட்டஞ் சென்றிறைஞ்சி
நீரார் சடையா ரமர்ந்தருளு நீடு திருமேற் றளிமேவி
யாரா வன்பிற் பணிந்தேத்தி யளவி லுந்தா வொண்சுடராம்
பாரார் பெருமைத் திருப்பதிகம் பாடி மகிழ்ந்து பரவினார்.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய ஸ்ரீ காஞ்சிபுரத்திலிருக்கின்ற திருக்காமக்கோட்டமென்னும் ஆலயத்தையடைந்து வணங்கி, கங்கைநதி தங்கிய சடைமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளுஞ் சிறந்த திருமேற்றளியை யடைந்து நீங்காத பேரன்போடு வணங்கித் துதித்து அளவில்லாத "நுந்தாவொண்சுடர்" என்னு முதலையுடைய உலகத்தில் நிறைந்த பெருமைதங்கிய திருப்பதிகம் பாடி மகிழ்ந்து துதித்தார்.—எ-று.

திருக்காமக்கோட்டம் என்பது, ஸ்ரீ காமாட்சியம்மையார் வீற்றிருந்தருளும் ஆலயத்தின் பெயர். அது சத்திபீடங்கள் அறுபத்து நான்கனுள் ஒன்று. (௧௧௦)

---

திருமேற்றளி - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

நொந்தாவொண்சுடரே நுனையேநினைந்திருந்தேன்
வந்தாய்போயறியாய்மனமேபுகுந்துநின்ற
சிந்தாயெந்தைபிரான்திருமேற்றளியுறையு
மெந்தாயுன்னையல்லாலினியேத்தமாட்டேன்.

பாரூர்பல்லவனூர்மதிற்காஞ்சிமாநகர்வாய்ச்
சீரூரும்புறவிற்றிருமேற்றளிச்சிவனை
யாரூரன்னடியானடித்தொண்டனாரூரன்சொன்ன
சீரூர்பாடல்வல்லார்சிவலோகஞ்சேர்வாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - திருமேற்றளிநாதர்.

---

ஓணகாந்தன் றளிமேவு மொருவர் தம்மை யுரிமையுடன்
பேணி யமைந்த தோழமையாற் பெருகு மடிமைத் திறம்பேசிக்
காண மோடு பொன்வேண்டி நெய்யும் பாலுங் கலைவிளங்கும்
யாணர்ப் பதிக மெடுத்தேத்தி யெண்ணி னிதிபெற் றினிதிருந்தார்.

(இ-ள்.) திருவோணகாந்தன்றளியில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானைத் தமக்குரிமையாக விரும்பியடைந்த தோழமையினால், சிறந்த தமது அடிமைத் திறத்தைக்கூறி, பொற்காசோடு பொன்னையும் விரும்பி, "நெய்யும் பாலும்" என்னு முதலையுடைய கல்வி விளங்குகின்ற அழகிய திருப்பதிகம் பாடித்துதித்து அளவற்ற திரவியத்தைப்பெற்று, அங்கு இனிதாக வசித்தருளினர். — எ-று.

'கலைவிளங்கும்' என்பதற்கு, ஒளிவிளங்கும் எனப்பொருள்கூறினும் பொருந்தும். (௧௬௧)

---

திருவோணகாந்தன்றளி - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

நெய்யும்பாலுந்தயிருங்கொண்டுநித்தல்பூசனைசெய்யலுற்றார்
கையிலொன்றுங்காணமில்லைகழலடிதொழுதுய்யினல்லா
லைவர்கொண்டிங்காட்டவாடியாழ்குழிப்பட்டழுந்துவேனுக்
குய்யுமாறொன்றருளிச்செய்யீரோணகாந்தன்றளியுளீரே.

ஓவணமேலெருதொன்றேறுமோணகாந்தன்றளியுளார்தா
மாவணஞ்செய்தாரூருங்கொண்டவளைதுகிலொடுபட்டுவீக்கிக்
கோவணமேற்கொண்டவேடங்கோவையாகவாரூரன்சொன்ன
பாவணத்தமிழ்பத்தும்வல்லார்பறையுந்தாஞ்செய்தபாவந்தானே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - ஓணகாந்தேசுவரர்.

---

அங்க ணமர்வா ரனேகதங்கா பதத்தை யெய்தி யுள்ளணைந்து
செங்கண் விடையார் தமைப்பணிந்து தேனெய் புரிந்தென் றெடுத்
தங்கு மிடமா மெனப்பாடித் தாழ்ந்து பிறவுந் தானங்கள் [தமிழ்
பொங்கு காத லுடன்போற்றிப் புரிந்தப் பதியிற் பொருந்துநாள்.

(இ-ள்.) அத்திருப்பதியில் வசித்தருளும் ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் அநேகதங்காபதத்தை யடைந்து உள்ளே சென்று, சிவந்த கண்ணையுடைய இடபத்தை வாகனமாகக்கொண்டருளிய சிவபெருமானைவணங்கி "தேனெய் புரிந்து" என்று முதலெடுத்த தமிழ்ப்பதிகத்தை அவர்தங்குமிடமிது வென்று பாடி வணங்கி, மற்றத்திருப்பதிகளையும் அதிகரித்த பெருவிருப்போடுந் துதித்து விரும்பி அத்திருப்பதியில் வசித்தருளும் நாள்களில்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கஙo)

திருக்கச்சியநேகதங்காபதம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

தேனெய்புரிந்துழல்செஞ்சடையெம்பெருமானதிடந்திகழைங்கணையக்
கோனையெரித்தெரியாடியிடங்குலவானதிடங்குறையாமறையா
மானையிடத்ததோர்கையனிடம்மதமாறுபடப்பொழியும்மலைபோ
லானையுரித்தபிரானதிடங்கலிக்கச்சியனேகதங்காபதமே.

வீடுபெறப்பலவூழிகணின்றுநினைக்குமிடம்வினைதீருமிடம்
பீடுபெறப்பெரியோர்திடங்கொண்டுமேவினர்தங்களைக்காக்குமிடம்
பாடுமிடத்தடியான்புகலூரனுரைத்தவிம்மாலைகள்பத்தும்வல்லார்
கூடுமிடஞ்சிவலோகனிடங்கலிக்கச்சியனேகதங்காபதமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - காவதேசுவரர்.

பாட லிசையும் பணியினாற் பாவை தழுவக் குழைகம்ப
ராடன் மருவுஞ் சேவடிகள் பரவிப் பிரியா தமர்கின்றார்
நீட மூதூர்ப் புறத்திறைவர் நிலவும்பதிக டொழவிருப்பான்
மாட நெருங்கு வன்பார்த்தான் பனங்காட்டூரில் வந்தடைந்தார்.

(இ-ள்.) தாம்திருப்பதிகம் பாடுதற்கிசைந்த திருத்தொண்டினால், ஸ்ரீ காமாட்சியம்மையார் தழுவத் திருமேனிகுழைந்தருளிய திருவேகம்பநாதரது திருநடனஞ் செய்தருளுஞ் சிவந்த திருவடிகளைத் துதித்து,நீங்காமல் அங்கு வசித்தருளுகின்றவர், பழமையாகிய சிறந்த அத்திருப்பதியின் புறத்தில் சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளை வணங்கும்பொருட்டு, விருப்பத்தோடு மாளிகைகள் நெருங்கிய திருவன்பார்த்தான் பனங்காட்டூர் என்னுந் திருப்பதியில் வந்தடைந்தருளினார்.—எ-று. (கஙக)

செல்வ மல்கு திருப்பனங்காட் டூரிற் செம்பொற் செழுஞ்சடையை
யல்ல லறுக்கு மருமருந்தை வணங்கி யன்பு பொழிகண்ணீர்
மல்க நின்று விடையின்மேல் வருவா ரெனும்வண் டமிழ்ப்பதிக
நல்ல விசையி னுடன்பாடிப் போந்து பிறவு நண்ணுவார்.

(இ-ள்.) செல்வங்கள் நிறைந்த திருவன்பார்த்தான்பனங்காட்டூரில் வீற்றிருந்தருளுஞ் செழிய பொற்சுடர் போன்றவரும், (அடியார்களது) பிறவிநோயை நீக்கியருளும் அருமருந்துபோல்பவருமாகிய சிவபெருமானை வணங்கி அன்பினால்பொழிகின்ற ஆனந்தக்கண்ணீரானது திருமேனியில்விளங்கத் திருமுன்னின்று, "விடையின்மேல் வருவான்" என்னு முதலையுடைய வளவிய தமிழ்த் திருப்பதிகத்தை நல்ல இசைபொருந்தப் பாடிச்சென்று, மற்றத் திருப்பதிகளையு மடைவாராயினர்.—எ-று. (௧௬௪)

---

**திருவன்பார்த்தான்பனங்காட்டூர் - பண் - சீகாமரம்.**

திருச்சிற்றம்பலம்.

விடையின்மேல்வருவானைவேதத்தின்பொருளானை
யடையிலன்புடையானையாவர்க்குமறிவொண்ணா
மடையில்வாளைகள்பாயும்வன்பார்த்தான்பனங்காட்டூர்ச்
சடையிற்கங்கைதரித்தானைச்சாராதார்சாரென்னே.

பாரூரும்பனங்காட்டூர்ப்பவளத்தின்படியானைச்
சீரூருந்திருவாரூர்ச்சிவன்பேர்சென்னியில்வைத்த
வாரூரனடித்தொண்டனடியன்சொலடிநாய்ச்சொ
லூரூரனுரைசெய்வாருயர்வானத்துயர்வாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - **பனங்காட்டீசர்**; தேவியார். **அமுதவல்லியம்மை.**

---

மன்னு திருமாற் பேறணைந்து வணங்கிப் பரவித் திருவல்லந்
தன்னு ளெய்தி யிறைஞ்சிப்போய்ச் சாருமேல்பாற் சடைக்கற்றைப்
பின்னன் முடியா ரிடம்பலவும் பேணிவணங்கிப் பெருந்தொண்டர்
சென்னி முகிறோய் தருங்குவட்டுத் திருக்காளத்திமலை சேர்ந்தார்.

(இ-ள்.) நிலைபெற்ற திருமாற்பேறென்னூர் திருப்பதியை யடைந்து வணங்கித் துதித்து, திருவல்லமென்னுந் திருப்பதியை யடைந்து வணங்கி, அங்கு நின்றுஞ் சென்று, மேற்றிசையிற் பொருந்திய பின்னலாகிய சடைமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளையும் விரும்பி வணங்கி, உச்சியில் மேகங்கள் தவழும் பெரிய சிகரங்களையுடைய திருக்காளத்தித் திருமலையை ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் அடைந்தருளினர்.—எ-று. ()

தடுக்க லாகாப் பெருங்காதற் றலைநின் றருளுங் கண்ணப்ப
ரிடுக்கண் களைந்தாட் கொண்டருளு மிறைவர் மகிழ்ந்த காளத்தி
யடுக்கல் சேர வணைந்துபணிந் தருளா லேறி யன்பாறு
மடுப்பத் திருமுன் சென்றெய்தி மலைமேன் மருந்தை வணங்கினர்.

(இ-ள்.) தடுக்கப்படாத பேரன்பின் வழியே நின்றருளிய ஸ்ரீகண்ணப்பசுவாமிகளது மனவருத்தத்தை நீக்கி யாண்டருளிய சிவபெருமான்மகிழ்ந்தெழுந்தருளுந் திருக்காளத்தித் திருமலையைச் சேரவடைந்து வணங்கி, அவ்வெம்பெருமான் திருவருளினால் மலைமீதேறி, அன்புவெள்ளமானது தேங்கத் திருமுன்னடைந்து மலைமருந்தாயுள்ள சிவபெருமானை வணங்கியருளினர்.

வணங்கி யுள்ளங் களிகூர மகிழ்ந்து போற்றி மதுரவிசை
யணங்கு செண்டா டெனும்பதிகம் பாடி யன்பாற் கண்ணப்பர்
மணங்கொள் மலர்ச்சே வடிபணிந்து வாழ்ந்து போந்து மன்னுபதி
யிணங்கு தொண்ட ருடன்கெழுமி யின்புற் றிருக்கு மந்நாளில்.

(இ-ள்.) வணங்கித் தமது திருவுள்ளமானது களிகூரும்படி மகிழ்ந்து துதித்து மதுரமாகிய இசையோடுதெய்வீகமமைந்த "செண்டாடு" என்னுமுதலையுடைய திருப்பதிகத்தைப்பாடி, பேரன்போடு ஸ்ரீ கண்ணப்பசுவாமிகளது வாசனை வீசுகின்ற தாமரை மலர்போன்ற திருவடிகளை வணங்கிச் சிவாநந்தப் பெரு வாழ்வடைந்து அங்கு நின்றுங் கீழிறங்கி, நிலைபெற்ற அத்திருக்காளத்தியிலுள்ள திருத்தொண்டர்களுடன்கலந்து மகிழ்வுற்றிருக்கும் நாளில்.—எ-று.

---

திருக்காளத்தி - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

செண்டாடும்விடையாய்சிவனேயென்செழுஞ்சுடரே
வண்டாருங்குழலாளுமைபாகமகிழ்ந்தவனே
கண்டார்காதலிக்குங்கணநாதனெங்காளத்தியா
யண்டாவுன்னையல்லாலறிந்தேத்தமாட்டேனே.

காருரும்பொழில்சூழ்கணநாதனெங்காளத்தியு
ளாராவின்னமுதையணிநாவலாரூரன்சொன்ன
சீரூர்செந்தமிழ்கள்செப்புவார்வினையாயினபோய்ப்
பேராவின்னுலகம்பெறுவார்பிழைப்பொன்றிலரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமியார்-ஸ்ரீகாளத்திநாதர்; தேவியார் - ஞானப்பூங்கோதையம்மை.

---

வடமா திரத்துப் பருப்பதமுந் திருக்கே தார மலைமுதலா
விடமா வரனார் தாமுவந்த வெல்லா மிங்கே யிருந்திறைஞ்சி
நடமா டியசே வடியாரை நண்ணி னார்போ லுண்ணிறைந்து
திடமாங் கருத்திற் றிருப்பதிகம் பாடிக் காதல் சிறந்திருந்தார்.

(இ-ள்.) வடதிசையிலுள்ள ஸ்ரீ சைலம் திருக்கேதாரத் திருமலை முதலாகச் சிவபெருமான் திருப்பதியாக மகிழ்ந்து வீற்றிருந்தருளும் எல்லாத் திருப்பதிகளையும் இத்திருக்காளத்தியிலேயே யிருந்து வணங்கி, திருநடனஞ்செய்யுந்திருவடியையுடைய அத்தலங்களி லெழுந்தருளிய மூர்த்திகளையடைந்து வணங்கினவரைப்போலத் திருவுள்ளங்களித்து, உறுதியாகிய எண்ணத்துடன் திருப்பதிகம் பாடியருளி மகிழ்வுற்றிருந்தார்.—எ-று. (கசுஅ)

அங்குச் சிலநாள் வைகியபின் னருளாற் போந்து பொருவிடையார்
தங்கு மிடங்க ளனைப்பலவுஞ் சார்ந்து தாழ்ந்து தமிழ்பாடிப்
பொங்கு புணரிக் கரைமருங்கு புவியுட் சிவலோ கம்போலத்
திங்கண் முடியா ரமர்ந்ததிரு வொற்றி யூரைச் சென்றடைந்தார்.

(இ-ள்.) அத்திருக்காளத்தித் திருப்பதியில் சில நாள்கள் வசித்திருந்த பின்பு, திருவருளினால் சென்று, போர்செய்யும் இடபவாகனத்தையுடைய சிவ

பெருமான் வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளையுமடைந்து வணங்கித் திருப்பதிகம் பாடியருளி, அலைகள் பெருகுகின்ற கடற்கரையினருகில், இந்நிலவுலகத்தில் சிவலோகம்போலச் சந்திரசேகரராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளிய திருவொற்றியூரென்னுந் திருப்பதியைச் சென்று சேர்ந்தருளினார்.—எ-று. ()

அண்ண ரொடர்ந்தா வணங்காட்டி யாண்ட நம்பி யெழுந்தருள
வெண்ணில் பெருமை யாதிபுரி யிறைவ ரடியா ரெதிர்கொள்வார்
வண்ண வீதி வாயிறொறும் வாழை கமுகு தோரணங்கள்
சுண்ண நிறைபொற் குடந்தூப தீபமெடுத்துத் தொழவெழுங்கால்.

(இ-ள்.) சிவபெருமான் முறியோலை காட்டித் தொடர்ந்து தடுத்தடிமை கொள்ளப்பெற்ற ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் எழுந்தருளிவர, அளவற்ற பெருமையையுடைய திருவொற்றியூரில் வாழும் சிவனடியார்கள் அவரை யெதிர்கொள்ளும்படி அழகிய திருவீதித் திருவாயில்கள் தோறும் வாழைமரங்கள் - கமுக மரங்கள் - மகரதோரணங்க ளிவைகளைநாட்டி, பொற்சுண்ணங்களையும், பூரணகும்பங்களையும், தூபதீபங்களையுமெடுத்து எதிர்கொள்ளவரும் பொழுது.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௨௦௦)

வரமங் கலநல் லியமுழங்க வாச மாலை யணியரங்கிற்
புரமங் கையர்க ணடமாடப் பொழியும் வெள்ளப் பூமாரி
யரமங் கையரு மமரர்களும் வீச வன்பருடன் புகுந்தார்
பிரமன் றலையிற் பலியுவந்த பிரானார் விரும்பு பெருந்தொண்டர்.

(இ-ள்.) சிறந்த மங்கலவாத்தியங்கள் முழங்கவும், வாசனைபொருந்திய மாலைகள்நாட்டிய அழகியநடனசாலைகளில் அந்நகரத்துள்ள கணிகைமாதர்கள் நடிக்கவும்,தேனைமிகுதியாகச்சிந்துகின்ற கற்பகமலர்மாரியை அரம்பாஸ்திரிகளும் தேவர்களுமிறைக்கவும், பிரமகபாலத்தில் (தாருகவனமாதர்பால்) பிச்சையேற்றருளிய சிவபெருமான்விரும்பி அடிமைகொண்டருளிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் திருத்தொண்டர் திருக்கூட்டத்துடன் புகுந்தருளினார்.—எ-று. ()

ஒற்றி யூரி னுமையோடுங் கூட நின்ற ருயர்தவத்தின்
பற்று மிக்க திருத்தொண்டர் பரந்த கடல்போல் வந்தீண்டிச்
சுற்று மணைந்து துதிசெய்யத் தொழுது தம்பி ரானன்பர்
கொற்ற மழவே றுடையவர்தங் கோயில் வாயி லெய்தினார்.

(இ-ள்.) திருவொற்றியூரில் பார்ப்பதி சமேதராக வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானது உயர்ந்த தவப்பற்றினையுடைய அடியார்கள் பரந்த பாற்கடல்போல வந்து கூடிச் சூழ்ந்து துதிக்க, ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் வெற்றிபொருந்திய இளைய இடபவாகனத்தையுடைய சிவபெருமானது திருக்கோயிற் றிருவாயிலை யடைந்தருளினார்.—எ-று. (௨௦௨)

வானை யளக்குங் கோபுரத்தை மகிழ்ந்து பணிந்து புகுந்தவளர், கூன விளவெண் பிறைச்சடையார் கோயில் வலங்கொண் டெதிர்குறுகி, யூனு முயிருங் கரைந்துருக வுச்சி குவித்த செங்கையுட, னான காத லுடன்வீழ்ந்தா ராரா வன்பி னாரூரர்.

(இ-ள்.) ஆகாயத்தை யளாவிய திருக்கோபுரத்தை விரும்பி வணங்கியுள்ளேபுகுந்து, கலைகள் வளர்கின்ற வளைந்த வெண்பிறையை யணிந்த சடை

முடியையுடைய சிவபெருமானது திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்து, திருமுன்சென்று, உடலு முயிருங் கரைந்துருகும்படி சிரமேற்குவித்த திருக்கரங்களுடன் பொருந்திய பெருவிருப்போடும் நீங்காத அன்பினையுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் பூமியில் வீழ்ந்து வணங்கினார்.—எ-று. (உ0௫)

ஏட்டு வரியி லொற்றியூர் நீங்க லென்னு மெழுத்தறியு
நாட்ட மலருந் திருநுதலார் நறும்பொற் கமலச் சேவடியிற்
கூட்டு முணர்வுங் கொண்டெழுந்து கோதி லமுத விசைகூடப்
பாட்டும் பாடிப் பரவியெனும் பதிக மெடுத்துப் பாடினார்.

(இ-ள்.) (மாந்தாதாவென்னு மரசன் எழுதுவித்த ஏட்டுவரியில் திருவொற்றியூர் நீங்கலென்று, வரிசைகளிற்றெழுதிய, எழுத்தறியும் பெருமானென்னும் நெற்றிக்கண்ணராகிய சிவபெருமானது நல்ல பொற்றாமரை மலர்போன்ற திருவடிகளில் பொருந்திய பேருணர்ச்சி பெற்றெழுந்து, குற்றமற்ற அமுதமயமான இசைபொருந்த "பாட்டும் பாடிப்பரவி" என்னு முதலையுடைய திருப்பதிகந் தொடங்கிப் பாடியருளினார்.—எ-று.

ஏட்டுவரியி லொற்றியூர் நீங்கலென்னு மெழுத்தறியு-நாட்டமலருந் திருநுதலார், என்பதன் சரித்திரத்தை முன்னர் திருக்குறிப்புத்தொண்டநாயனார் புராணவுரையின் விளங்கக் கூறினமையின் ஆண்டுக் கண்டுணர்க. (உ0௬)

---

**திருவொற்றியூர் - பண் - குறிஞ்சி.**

திருச்சிற்றம்பலம்.

பாட்டும்பாடிப்பரவித்திரிவா
ரீட்டும்வினைகடீர்ப்பான்கோயில்
காட்டுங்கலமுந்திமிலுங்கரைக்கே
யோட்டுந்திரைவாயொற்றியூரே.

ஒற்றியூருமரவும்பிறையும்
பற்றியூரும்பவளச்சடையா
ரொற்றியூர்மேலூரனுரைத்த
கற்றுப்பாடக்கழியும்வினையே.

திருச்சிற்றம்பலம்

**சுவாமிபெயர்-ஸ்ரீமாணிக்கத்தியாகர் ; தேவியார்-வடிவுடையம்மை.**

---

பாடி யறிவு பரவசமாம் பரிவு பற்றப் புறம்போந்து
நீடு விருப்பிற் பெருங்காத னிறைந்த வன்பர் பலர்போற்றத்
தேடு மயனுந் திருமாலு மறிதற் கரிய திருப்பாதங்
கூடுங் காலங் களிலணைந்து பரவிக் கும்பிட் டினிதிருந்தார்.

(இ-ள்.) திருப்பதிகம் பாடித் தம்மறிவு ஆனந்த பரவசமாகிய பேரன்பைப் பொருந்தப் புறத்திற்சென்று, மிக்க விருப்போடும் மெய்யன்புநிறைந்த பல அடியார்கள் துதிக்கத் (திருமுடியையுந்திருவடியையும்) தேடிய பிரமவிஷ்ணுக்களா லறிதற்கரிய சிவபெருமான் திருவடிகளைத் தரிசித்தற்குரிய காலங்களிலடைந்து துதித்து வணங்கி, அங்கு இனிதாக வீற்றிருந்தருளினார். ()

இந்த நிலைமை யாரிவரிங் கிருந்தார் முன்பே யிவர்க்காக
வந்தண் கயிலை மலைநீங்கி யருளாற்போந்த வநிந்திதையார்
வந்து புவிமே லவதரித்து வளர்ந்து பின்பு வன்றொண்டர்
சந்த விரைசூழ் புயஞ்சேர்ந்த பரிசு தெரியச் சாற்றுவாம்.

(இ-ள்.) இத்தன்மையாகிய நிலைமையை யுடையவராய் இச்சுந்தரமூர்த்திசுவாமிகள் இத்திருப்பதியில்வீற்றிருந்தருளினர்; இதற்கு முன்னமே இவருக்காக அழகிய குளிர்ந்த திருக்கயிலைமலையினின்று நீங்கிச் சிவபெருமான் றிருவருளினால் சென்ற அநிந்திதையார் உலகத்தில் வந்து அவதரித்து வளர்ந்து, பின்பு ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளது சந்தனக்குழம்பின் வாசனைபொருந்திய திருப்புயத்தை யணைந்த முறைமையையும் விளங்கச் சொல்லுவோம்.—எ-று.

நாலாங் குலத்திற் பெருகுநல முடையார் வாழும் ஞாயிற்றின்
மேலாங் கொள்கை வேளாண்மை மிக்க திருஞா யிறுகிழவர்
பாலா தரவு தருமகளா ராகிப் பார்மே லவதரித்தா
ராலா லஞ்சேர் கறைமிடற்று ரருளான் முன்னை யநிந்திதையார்.

(இ-ள்.) முன் சொல்லப்பட்ட அநிந்திதையார், ஆலாகல விஷம்பொருந்திய கரிய கண்டத்தையுடைய சிவபெருமான் திருவருளினால் சூத்திரகுலத்திலே மிக்க நன்மையையுடைய வேளாளர்கள் வாழ்கின்ற ஞாயிறு என்னும் ஊரில் சிறந்த கொள்கையையுடைய வேளாண்மைத் தொழிலில் மிக்க பெருஞ்செல்வத்தையுடைய ஞாயிறுகிழார் என்பவரிடத்து விருப்பந்தருகின்ற புத்திரியாராக இந்நிலவுலகத்தில் அவதரித்தனர்.—எ-று. (௨௦௭)

மலையான் மடந்தை மலர்ப்பாத மறவா வன்பால் வந்தநெறி
தலையா முணர்வு வந்தணையத் தாமே யறிந்த சங்கிலியா
ரலையார் வேற்கட் சிறுமகளி ராயத் தோடும் விளையாட்டு
நிலையா யினவப் பருவங்க டோறு நிகழ நிரம்புவார்.

(இ-ள்.) பார்வதியாரது தாமரைமலர்போன்ற திருவடிகளை மறவாத அன்பினால் தாம் அவதரித்த முறைமைப்படி மெய்யுணர்ச்சி யுண்டாகத் தாமே யனைத்து முணர்ந்த சங்கிலிநாச்சியார், சுழல்கின்ற வேல்போலுங் கண்களையுடைய சிறுபெண்கள் கூட்டத்தோடு விளையாடும் நிலைமையையுடைய அவ்வப் பருவங்கடோறும் நடக்கப் பருவம் நிரம்புவாராயினர்.—எ-று.

அநாதிமல முத்தராகிய சிவபெருமானது பிரதிபிம்பப் பெருந்திருவுருவினராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் அவ்வெம்பெருமான் கட்டளைப்படியே, சடையநாயனரு மிசைஞானியாருஞ் செய்த தவங்காரணமாக அவர்களிடத்து அயோநிஜராகக் குழந்தைத் திருவுருவங்கொண்டெழுந்தருளினமைக்கேற்ப; பார்வதியாரது பிரதிபிம்பத் திருவுருவினராகிய கமலினி - அநிந்திதை யாரென்னு மிருவருள் கமலினியார் திருவாரூரில் உருத்திரகணிகையர் குலத்தில் அயோநிஜராகப் பரவையாரென்னுந் திருநாமங்கொண் டவதரித்தனரென்பதை முன்னர் விளங்கக் கூறினும். அதுபோலவே, அநிந்திதையாரும், ஞாயிறு கிழார்செய்த தவங்காரணமாகப் பூர்வவுணர்ச்சியோடுஞ் சங்கிலியாரென்னுந் திருப்பெயரோடு அயோநிஜராக அவதரித்து அந்த ஞாயிறுகிழார் கொண்டிருந்த பிள்ளைகலி தீர்த்தருளிய பெருந்திருவினராகலான், முன்பு உமாதே

வியாரது திருவடியைமறவாது திருத்தொண்டு செய்திருந்த முன்னுணர்ச்சிவந் தெய்திய தெனவறிக. ஸ்ரீ சுந்தரமூர்த்திகளும், கமலினி அநிந்திதை யாருமாகிய விவர்கள், சிவசத்திகளின் பிரதிபிம்பத் திருவுருவின ரென்பதனை,

திருநாவலூர்ப் புராணம்.

"ஒருதின மாடியிற்றன் னொளிகெழு விம்ப நோக்கிச்
சுருதியோர் நான்குங் காணாத் தூயவெம் பெருமா னிங்கு
வருதியென் றுளமகிழ்ந்து மலர்முடி யசைக்க முன்னந்
திருவருள் பெற்று வாழுஞ் சிவகணங் களிற்பி றக்க.
கந்த மாமல ரோனுள காலமுஞ்
சிந்தை செய்துஞ் சிருட்டிக் கமைவுறா
வந்த முற்றுந் திரண்டொரு வாகியே
சுந்த ரன்னெனத் தோன்றின னண்ணன்முன்"

"பம்ப ரம்போற் பருப்பத மத்தகங்
கும்ப மென்னக் குவிந்த குயத்துணை
யம்பி கைவிளங் காடியிற் றன்னுரு
விம்பந் தன்னை விழிகொண் டழைத்தனள்.
கருணை கூரிரு கண்க ளழைக்கவே
இரும டக்கொடி யின்னெழிற் றுங்கிவர்
திருவி மாசல மீன்ற மனோகரி
மரும லர்ப்பத மேவி வணங்கினர்."

"மும்மலம தகற்றியடி முன்னுமவ ருக்கே
யமலமெனு முத்தியரு ளத்தனிட மேவும்
விமலையிரு தாடொழுத மெல்லியர்த நாமங்
கமலினி யநிந்திதை யெனக்கழறி னரால்." —என்று வருவன வற்றானுணர்க. (உ0அ)

சீர்கொண் மரபில் வருஞ்செயலே யன்றித் தெய்வ நிகழ்தன்மை
பாரி லெவரு மதிசயிக்கும் பண்பில் வளரும் பைந்தொடியார்
வாரு மணிய வணியவாம் வளர்மென் முலைக ளிடைவருந்தச்
சாரும் பதத்திற் றந்தையார் தங்கண் மனைவி யார்க்குரைப்பார்.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய அவ்வேளாளர்மரபிற்குரிய வொழுக்கமேயல்லாமல், விளங்குகின்ற தெய்வத்தன்மையும் உலகத்தில் யாவரும் அதிசயிக்குமுறைமையோடு வளர்கின்ற சங்கிலிநாச்சியார், (உத்தரீயமேயன்றி) கச்சுமணியும்படி அழகுடையனவாக வளர்கின்ற மெல்லிய ஸ்தனங்கள் இடையை வருத்த நேர்ந்த மங்கைப்பருவத்தில் தந்தையாகிய ஞாயிறுகிழார் தமது மனைவியாருக்கு உரைப்பாராயினர்.—எ-று.

'வாரும்,' என்றுகூறிய எதிரதுதழீஇய எச்சவும்மையினால், உத்தரீயம்வருவித் துரைக்கப்பட்டது. (உ0க)

வடிவுங் குணமு நம்முடைய மகட்கு மண்ணு ளோர்க்கிசையும்
படிவ மன்றி மேற்பட்ட பரிசாம் பான்மை யறிகிலோங்

கடிசேர் மணமு மினிநிகழுங் கால மென்னக் கற்புவளர்
கொடியே யனைய மனைவியா ரேற்கு மாற்ருற் கொடுமென்ருர்.

(இ-ள்.) நம்முடைய புத்திரிக்கு அழகும் அதற்கேற்ற நற்குணங்களும் உலகத்தார்க்குரிய முறைமையன்றி அதிகரித்திருக்குந் தன்மையை நாம் அறியோம்; கலியாணமும் இனிசெய்தற்குரிய காலமென்று கூற, கற்புவளர்கின்ற பூங்கொடியையொத்த மனைவியார் நமக்கிசைந்த குலமுறைமைப்படியே (இப் புத்திரியைக்) கலியாணஞ் செய்துகொடுமென்று கூறினர்.—எ-று. (௨௧௦)

தாய ரோடுந் தந்தையார் பேசக் கேட்ட சங்கிலியா
ரோபு மாற்ற மன்றிதுவெம் பெருமா னீசன் றிருவருளே
மேய வொருவர்க் குரியதியான் வேறென் விளையு மெனவெருவுற்
ருய வுணர்வு மயங்கிமிக வயர்ந்தே யவனிமேல் விழுந்தார்.

(இ-ள்.) தாய் தந்தையர்கள் இவ்வாறு பேசக்கேட்ட சங்கிலி நாச்சியார் இவர்கள் பேசிக்கொள்ளும் வார்த்தை எமக்குப் பொருத்தமுடையதன்று; எமது ஆண்டவராகிய சிவபெருமான் திருவருளைப்பெற்ற ஒருவர்க்கு யான் உரியவளாயிருக்க, இவர்கள் வார்த்தையால் வேறுயாது விளையுமோவென்று அஞ்சிப்பொருந்திய அறிவுமயங்கி மிகச்சோர்ந்து பூமியில் விழுந்தார்.—எ-று.

உரியது - இணைவழுவமைதி. (௨௧௧)

பாங்கு நின்ற தந்தையார் தாயார் பதைத்துப் பரிந்தெடுத்தே
யேங்கு முள்ளத் தினராகி யிவளுக் கென்னே வுற்றதெனத்
தாங்கிச் சீத விரைப்பனிநீர் தெளித்துத் தைவந் ததுநீங்க
வாங்கு சிலைநன் னுதலாளை வந்த துனக்கிங் கென்னென்ருர்.

(இ-ள்.) அவரருகில் நின்ற தந்தையாருந் தாயாரும் மனம்பதைத்து வருந்தியெடுத்து அச்சமுற்ற மனமுடையவர்களாய் இப்புதல்விக்கு யாது நேர்ந்ததோவென்று அணைத்துக்குளிர்ந்த மணம்பொருந்திய பனிநீரைத் தெளித்துத் தடவி, அம்மயக்க நீங்க, வளைந்த வில்போன்ற புருவத்தையுடைய சங்கிலி நாச்சியாரைப் பார்த்து, உனக்கு இங்கு என்ன நேர்ந்ததென்று வினவினர்கள்.

'வாங்கு நுசுப்பின் மகளாரை' என்றும் பாடபேதம். (௨௧௨)

என்று தம்மை யீன்றெடுத்தார் வினவ மறைவிட் டியம்புவா
ரின்றென் றிறத்து நீர்மொழிந்த விதுவென் பரிசுக் கிசையாது மேற்
வென்றி விடையா ரருள்செய்தா ரொருவர்க்குரியே னியானினி
சென்று திருவொற் றியூரணைந்து சிவனு ரருளிற் செல்வனென.

(இ-ள்.) இவ்வாறு தம்மைப்பெற்ற தாய் தந்தையர்கள்வினவ, தங்கருத்தை மறையாமற் சொல்லுகின்ருர், நீங்கள் இன்று என் விஷயத்தைக்குறித்துப் பேசிய வார்த்தை என் தன்மைக்குப் பொருந்தாது; வெற்றிபொருந்திய இடபவாகனத்தையுடைய சிவபெருமான் கணவனுகத் திருவருள்செய்த ஒருவருக்கு யான் உரியவள்; ஆதலால், இனிமேல், யான்சென்று திருவொற்றியூரை யடைந்து சிவபெருமான் திருவருள்வழியே செல்வேனென்று கூற.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௨௧௩)

அந்த மாற்றங் கேட்டவர்தா மயர்வும் பயமு மதிசயமும்
வந்த வுள்ளத் தினராகி மற்ற மாற்ற மறைத்தொழுகப்

பந்த நீடு மிவர்குலத்து நிகரா மொருவன் பரிசறியான்
சிந்தை விரும்பி மகட்பேச விடுத்தான் சிலருஞ் சென்றிசைத்தார்.

(இ-ள்.) அந்த வார்த்தையைக்கேட்ட தாய் தந்தையர்கள் சோர்வும், அச்சமும், அதிசயமும் அடைந்த மனமுடையவர்களாய் அவ்வார்த்தையைப் பிறரறியாமல் மறைத்தொழுகும்பொழுது, சம்பந்த மிக்க இவர்கள் குலத்திற்கு ஒத்தகுடிப் பிறப்பினையுடைய ஒருவன் இத்தன்மையறியாதவனாய் (க்கலியாணஞ்செய்ய) மனம்விரும்பிப் பெண் பேசும்படி யனுப்பினான் ; அப்படி அனுப்பப்பட்டவர்கள் சிலர் அவரிடத்தில் வந்து சொன்னார்கள்.—எ-று.

இப்புத்திரியின்செய்கை இவ்வாறாயிற்றென்று அயர்வும், இவர் கருத்திற்கு விரோதஞ்செய்தல் கூடாதென்று பயமும், இவ்விளமையிலேயே இத்தகைய தெய்வீகமமையப் பெற்றனளென்று அதிசயமு மடைந்தனரென்க. ()

தாதை யாரு மதுகேட்டுத் தன்மை விளம்பத் தகாமையினா
லேத மெய்தா வகைமொழிந்து போக்க வவராங் கெய்தாமுன்
றீதங் கிழைத்தே யிறந்தான்போற் செல்ல விடுத்தா னுடன்சென்
மாத ராரைப் பெற்றார்மற் றதனைக் கேட்டு மனமருண்டார். [றான்

(இ-ள்.) தந்தையாரும் அவ்வார்த்தையைக்கேட்டு (அவ்வம்மையாரது) தன்மையைச் சொல்லக்கூடாமையால், அவர்கள் வருத்தமடையா வண்ணம் இன்மொழிகூறியனுப்ப, அவர்கள் அவ்வூரையடைதற்குமுன்னமே அங்கு ஒரு தீங்குசெய்து இறந்தவன்போலப் பெண் கேட்டனுப்பினவன் உடனேயிறந்தான் ; சங்கிலி நாச்சியாரைப் பெற்ற தாய் தந்தையர்கள் அதனைக் கேள்வியுற்று மனமயங்கினார்கள்.—எ-று. (உகரு)

தைய லார்சங் கிலியார்தந் திறத்துப் பேசத் தகாவார்த்தை
யுய்ய வேண்டு நினைவுடையா ருரையா ரென்றங் குலகறியச்
செய்த விதிபோ லதுநிகழச் சிறந்தார்க் குள்ள படிசெப்பி
நையு முள்ளத் துடனஞ்சி நங்கை செயலே யுடன்படுவார்.

(இ-ள்.) சங்கிலி நாச்சியார் விஷயத்தில் பேசத்தகாத வார்த்தையைப் பிழைக்கவேண்டுமென்னு மெண்ணமுடையவர்கள் பேசார்களென்று உலகத்தாரறியும்படி செய்தமுறைமையைப்போல,அப்பெண் கேட்டவ னிறக்கவும், சிறந்த பந்துக்களுக்கு (அப்புத்திரியாரது தெய்வீகத்தை) உள்ளபடிசொல்லி, வருந்திய மனமுடன் அச்சமுற்று, அச்சங்கிலிநாச்சியாரது திருவுள்ளச் செயலின்படியே யுடன்படுவோராயினார்.—எ-று.

'செய்யவிதுபோல்' என்றும் பாடபேதம். (உகசு)

அணங்கே யாகு மிவள்செய்கை யறிந்தோர் பேச வஞ்சுவரால்
வணங்கு மீசர் திறமன்றி வார்த்தை யறியாண் மற்றென்று
குணங்க ளிவையா மினியிவடான் குறித்த படியே யொற்றிநகர்ப்
பணங்கொ ளரவச் சடையார்தம் பாற்கொண் டணைவோ மெனப்
[பகர்வார்.]

(இ-ள்.) இச்சங்கிலி நாச்சியாரது செய்கை தெய்வத்தன்மையே யாகும் ; அதனை யறிந்தவர்கள் இவரிடத்தில் பேசுதற்கும் அஞ்சுவார்கள் ; தாம் வணங்குகின்ற சிவபெருமானது புகழைப்பேசுவதன்றிவேறொரு வார்த்தையும்

அறியார்; இவர் குணங்களித்தன்மையாம்; இனி இவர் கருதியபடியே திருவொற்றியூரிலுள்ள படம்பொருந்திய பாம்பையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானிடத்து அழைத்துக்கொண்டு செல்வோமென்று சொல்வாராயினர்.

பண்ணார் மொழிச்சங் கிலியாரை நோக்கிப்பயந்தாரொடுங்கிளைஞர்
தெண்ணீர் முடியார் திருவொற்றி யூரிற் சேர்ந்து செல்கதியுங்
கண்ணார் நுதலார் திருவருளா லாகக் கன்னி மாடத்துத்
தண்ணார் தடஞ்சூ ழந்நகரிற் றங்கிப் புரிவீர் தவமென்று.

(இ-ள்.) தாய் தந்தையரும் பந்துக்களும் பண்ணமைந்த மொழியினையுடைய சங்கிலிநாச்சியாரைப்பார்த்து, தெளிந்த கங்கைநீரை யணிந்த திருமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருவொற்றியூரை யடைந்து முத்திப்பயனையும் நெற்றிக்கண்ணராகிய அவ்வெம்பெருமானது திருவருளால் பெறும்படி குளிர்ந்த தடாகங்கள் சூழ்ந்த அந்நகரத்தில் கன்னிமாடத்தில் தங்கித் தவஞ்செய்வீராக வென்றுகூறி.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (உகஅ)

பெற்ற தாதை சுற்றத்தார் பிறைசேர் முடியார் விதியாலே,
மற்றுச் செயலொன் றறியாது மங்கை யார்சங் கிலியார்தாஞ்,சொ
ற்ற வண்ணஞ் செயத்துணிந்து துதைந்த செல்வத் தொடும்புரங்
கள்,செற்ற சிலையார் திருவொற்றி யூரிற்கொண்டுசென்றடைந்தார்.

(இ-ள்.) பெற்ற தந்தையாரும் உறவினர்களும் சிவபெருமான் கட்டளைப்படி வேறொரு செயலுமறியாமல் சங்கிலிநாச்சியார் சொன்னவண்ணமே செய்யத்துணிந்து, நிறைந்த சம்பத்துடன் திரிபுரங்களை யழித்த மேருவாகிய வில்லையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருவொற்றியூருக்கு அழைத்துக்கொண்டுபோய்ச் சேர்ந்தார்கள்.—எ-று. (உகக)

சென்னி வளர்வெண் பிறையணிந்த சிவனார் கோயி லுட்புகுந்து
துன்னுஞ் சுற்றத் தொடும்பணிந்து தொல்லைப் பதியோரிசைவினாற்
கன்னி மாட மருங்கமைத்துக் கடிசேர் முறைமைக் காப்பியற்றி
மன்னுஞ் செல்வந் தகவகுத்துத் தந்தை யார்வந் தடிவணங்கி.

(இ-ள்.) கலைவளர்கின்ற வெண்பிறையைத் திருமுடியிலணிந்த சிவபெருமானது திருக்கோயிலி னுள்ளேபுகுந்து நெருங்கிய சுற்றத்தாருடன் வணங்கி, பழமையாகிய அவ்வூரிலுள்ளவர்களது உடன்பாட்டினால் திருக்கோயிலுக்கு அருகில் ஒரு கன்னிமாடமமைத்துக் காக்கவேண்டிய முறைமைப்படி மதில்முதலியவை யமைத்து நிலைபெற்ற பெருஞ்செல்வத்தைத் தகுதியாக நியமித்துத் தந்தையார் வந்து அவ்வம்மையாரது திருவடிகளில் வணங்கி.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (உஉ0)

யாங்க ளுமக்குப் பணிசெய்ய வீசற் கேற்ற பணிவிரும்பி
யோங்கு கன்னி மாடத்தி லுறைகின் றீரொன் றுரைக்கின்றார்
தாங்கற் கரிய கண்கணீர்த் தாரை யொழுகத் தரியாதே
யேங்கு சுற்றத் தொடுமிறைஞ்சிப் போனா ரெயில்சூழ் தம்பதியில்.

(இ-ள்.) நாங்கள் உமக்குப் பணிவிடைசெய்ய நீர் சிவபெருமானுக்கேற்ற திருத்தொண்டை விரும்பி உயர்ந்த கன்னிமாடத்தில் வசிப்பீராகவென்று

சொல்பவராய் (ப்பிரிவாற்றாமையால்) தாங்குதற்கரிய கண்களினின்றும் நீரா னது தாரை தாரையா யொழுக, மனந்தரியாமல் வருந்துகின்ற உறவினருடன் வணங்கி மதில்சூழ்ந்த தமது ஞாயிறுஎன்னு மூருக்குச் சென்றனர்.—எ-று. ()

காதல் புரிந்து தவம்புரியுங் கன்னி யாரங் கமர்கின்றார்
பூத நாதர் கோயிலினிற் காலந் தோறும் புக்கிறைஞ்சி
நீதி முறைமை வழுவாது தமக்கு நேர்ந்த பணிசெய்யச்
சீத மலர்ப்பூ மண்டபத்துத் திரைசூ ழொருபாற் சென்றிருந்து.

(இ-ள்.) விருப்புற்றுத் தவஞ்செய்கின்ற சங்கிலிநாச்சியார் அங்கு வசி த்திருந்து சிவபெருமான் றிருக்கோயிலில் காலந்தோறுஞ் சென்று வணங்கித் தாஞ் செய்யுமுறைமை தவறாமல் தமக்கிசைந்த திருப்பணிசெய்தற்குக் குளிர் ந்த மலர்களையுடைய மாலைகட்டுந் திருமண்டபத்தில் திரைசூழ்ந்த ஒருபுறத்தி ற்போயிருந்து.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (௨௨௨)

பண்டு கயிலைத் திருமலையிற் செய்யும் பணியின் பான்மைமனங்
கொண்ட வுணர்வு தலைநிற்பக் குலவு மலர்மென் கொடியனையார்
வண்டு மருவுந் திருமலர்மென் மாலை காலங் களுக்கேற்ப
வண்டர் பெருமான் முடிச்சாத்த வமைத்து வணங்கி யமருநாள்.

(இ-ள்.) முன்னாளில் ஸ்ரீ கயிலாசகிரியில் தாம்செய்த திருத்தொண்டின் தன்மையைத் திருவுள்ளத்திற் கருதிய பேருணர்ச்சியானது முற்பட்டு நிற்க, விளங்குகின்ற மெல்லியபூங்கொடிபோன்ற சங்கிலிநாச்சியார் வண்டுகள் பொ ருந்திய சிறந்த மலர்களாலாகிய மிருதுவாகிய மாலையைக் காலங்களுக்கிசையச் சிவபெருமான் றிருமுடிக்கணியத் தொடுத்துக்கொடுத்து வணங்கி வசித்திருக் கும் நாள்களில்.—எ-று. (௨.௨.௩)

அந்தி வண்ணத் தொருவர்திரு வருளால் வந்த வாரூரர்
கந்த மாலைச் சங்கிலியார் தம்மைக் காதன் மணம்புணர
வந்த பருவ மாதலால் வகுத்த தன்மை வழுவாத
முந்தை விதியால் வந்தொருநாண் முதல்வர் கோயி லுட்புகுந்தார்.

(இ-ள்.) செவ்வானம்போலும் நிறத்தையுடைய சிவபெருமானது திரு வருளால் அங்கெழுந்தருளிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் மணங்கமழும் மலர் மாலையையணிந்தசங்கிலிநாச்சியாரைவிருப்பந்தருகின்ற திருமணஞ்செய்தற்கு ரிய பருவமாதலால் (அந்நாளில், திருக்கயிலையில் சிவபெருமான்) கட்டளையிட் டதன்மை தவறாத ஊழ்முறைமையினால்,ஒருநாள் சிவபெருமான் வீற்றிருந்தரு ளுந் திருக்கோயிலினுள் வந்து புகுந்தருளினார்.—எ-று. (௨௨௪)

அண்டர் பெருமா னந்தணரா யாண்ட நம்பி யங்கணரைப்
பண்டை முறைமை யாற்பணிந்து பாடிப் பரவிப் புறம்போந்து
தொண்டு செய்வார் திருத்தொழில்கள் கண்டு தொழுது செல்கின்
புண்ட ரீகத் தடங்கார்பூந் திருமண் டபத்தி னுட்புகுந்தார். [றார்

(இ-ள்.) சிவபெருமான் வேதியர் திருவுருவங்கொண்டு தடுத்தாட் கொ ள்ளப்பெற்ற ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் அவ் வெம்பெருமானைப் பழைய

முறைமைப்படி வணங்கித் திருப்பதிகம் பாடித்துதித்து,புறத்திற்சென்று,அடிமைசெய்யும் அடியார்களது திருத்தொண்டுகளைப் பார்த்து வணங்கிச் செல்கின்றவர், தாமரைத் தடாகத்தை யொத்த பூமாலை மண்டபத்தினுள் ளெழுந்தருளினார்.—எ-று. (௨௨௫)

அன்பு நாரா வஞ்செழுத்து நெஞ்சு தொடுக்க வலர் தொடுத்தே
யென்புள் ளுருகு மடியாரைத் தொழுது நீங்கி வேறிடத்து
முன்பு போலத் திரைநீக்கி முதலவர் சாத்தும் பணிகொடுத்து
மின்போன் மறையுஞ் சங்கிலியார் தமமை விதியாற் கண்ணுற்றார்.

(இ-ள்.) எலும்பு முள்ளுருகத்தக்க பேரன்பினையுடைய அடியார்களை வணங்கிச்சென்று, அம்மண்டபத்தின் வேறோரிடத்து அன்பேநாராக ஸ்ரீ பஞ்சாக்ஷரமாகியமலரைமனமானது தொடுக்கத் திருக்கரத்தினால் மலர்களைத் தொடுத்து வழக்கம்போலத்திரையை யொதுக்கிச் சிவபெருமான் தரித்துக்கொள்ளுந் திருமாலையைக்கொடுத்து மின்னல்போலத் திரைக்குள் மறைந்த சங்கிலிநாச்சியாரை ஊழ்முறைப்படியே பார்த்தருளினார்.—எ-று. (௨௨௬)

கோவா முத்துஞ் சுரும்பேறாக் கொழுமென் முகையு மனையாரைச்
சேவார் கொடியார் திருத்தொண்டர் கண்ட போது சிந்தைநிறை
காவா தவர்பாற் போய்வீழத் தம்பா றகாம னார்துரந்த
பூவா ளிகள்வந் துறவீழத் தரியார் புறமே போந்துரைப்பார்.

(இ-ள்.) கோக்கப்படாத முத்தையும் வண்டுகள் மொய்க்காத செழியமிருதுவாகிய அரும்பையுமொத்த சங்கிலிநாச்சியாரை இடபக்கொடியையுடைய சிவபெருமானது திருத்தொண்டராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் பார்த்தபொழுது, தம்மனநிலையைக் காவாமல்,அவ்வம்மையாரிடத்துச்சென்று விழவும், தம்மிடத்து மன்மதன் பிரயோகித்த புஷ்பபாணங்கள் வந்துவிழவும் மனந்தரியாமல் அம்மண்டபத்தின் புறத்தில்வந்து சொல்வாராயினார்.—எ-று.

இன்ன பரிசென் றறிவரிதா லீங்கோர் மருங்கு திரைக்குள்ளாற்
பொன்னு மணியு மலர்ந்த வொளி யமுதி லளாவிப் புதியமதி [வா
தன்னு ணீர்மை யாற்குழைத்துச் சமைத்த மின்னுக் கொடிபோல
வென்னை யுள்ளந் திரிவித்தாள் யார்கொ லென்றங் கியம்புதலும்.

(இ-ள்.) இது இன்னவிதமென்று என்னாலறிதற்கருமையா யிருக்கின்றது; இம்மண்டபத்தின் ஒரு பக்கத்தில் கட்டிய திரையினுள்ளே, பொன்னினிடத்தும் மணியினிடத்துங் கலந்திருக்கு மொளியை அமுதோடுகலந்து புதிய சந்திரனிடத்துள்ள குளிர்ச்சியோடு குழைத்துச் சமைத்த ஒரு மின்னற்கொடியைப் போல்பவள் என் மனம் வேறுபடச்செய்தாள்; அத்தன்மையையுடைய இவள் யார் என்று அங்குக்கேட்கவும்.—எ-று.

பொன்-மணி இவற்றினிடத்துள்ள ஒளியை அமுதினொளியோடு கலந்ததனாலுண்டாகிய ஒரு திவ்வியவொளியில் சந்திரனிடத்துள்ள தண்மையைக்கலந்து மின்னற்கொடிபோ லமைக்கப்பெற்ற திருவுருவினளென்க.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௨௨௮)

அருகு நின்றார் விளம்புவா ரவர்தா நங்கை சங்கிலியார்
பெருகு தவத்தா லீசர்பணி பேணுங் கன்னி யாரென்ன

விருவ ராலிப் பிறவியையெம் பெருமா னருளா லெய்துவித்தார்
மருவும் பரவை யொருத்தியிவண் மற்றை யவளா மெனமருண்டார்.

(இ-ள்.) சமீபத்தில் நிற்கும் அடியார்கள் சொல்லுகின்றார்கள், அவர் சங்கிலிநாச்சியார்; மிக்க தவத்தினால் சிவபெருமானுக்குரிய திருத்தொண்டை விரும்பிச் செய்யுங் கன்னிகையா ரென்றுகூற, (அப்பொழுது ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள்) எமது சிவபெருமான் தமது திருவருளால் இம்மானுடப்பிறவியைக் (கமலினி அநிந்திதை யென்னும்) இரண்டுமாதர்கள் பொருட்டு அடைவித்தார்; அவ்விருவரில், திருவாரூரில் அவதரித்த பரவையார் ஒருத்தி; இவள் மற்றொருத்தியாமென்று கருதி மனமயங்கினார்.—எ-று. (உஉசு)

மின்னார் சடையார் தமக்காளாம் விதியால் வாழு மெனைவருத்தித்
தன்னா ரருளால் வரும்பேறு தவத்தா லணையா வகைதடுத்தே
யென்னா ருயிரு மெழினமலருங் கூடப் பிணைக்கு மிவடன்னைப்
பொன்னா ரிதழி முடியார்பாற் பெறுவே னென்று போய்ப்புக்கார்.

(இ-ள்.) மின்போல் விளங்குஞ் சடைமுடியையுடைய சிவபெருமானுக்கு அடிமையாகும் முறைமையால் வாழ்கின்ற என்னை வருத்தி, அவ்வெம்பெருமானது திருவருளினால் அடைதற்குரிய பேற்றை நான் தவத்தினாலடையாவண்ணந் தடுத்து, எனது அருமையாகிய உயிரையும் அழகாகிய மனதையுஞ் சேர்த்துக்கட்டுகின்ற இப்பெண்ணை, பொன்போல் விளங்குங் கொன்றைமலர் மாலையையணிந்த திருமுடியையுடைய சிவபெருமானிடத்துப் பெறுவேனென்று திருக்கோயிலிற்சென்று புகுந்தருளினார்.—எ-று. (௩௰)

மலர்மே லயனு நெடுமாலும் வானு நிலனுங் கிளைத்தறியா
நிலவு மலருந் திருமுடியு நீடுங் கழலு முடையானை
யுலக மெல்லாந் தாமுடையா ராயு மொற்றி யூரமர்ந்த
விலகு சோதிப் பரம்பொருளை யிறைஞ்சி முன்னின் றேத்துவார்.

(இ-ள்.) தாமரைமலரின்கண்வாழும் பிரமனும் விஷ்ணுவும் (அன்னமாகவும், பன்றியாகவு முருவங்கொண்டு) விண்ணுலகையும் மண்ணுலகையுங் கீண்டுஅறியாத சந்திரனையணிந்த திருமுடியையும் நீண்ட திருவடியையுமுடையபெருமானை, சர்வலோகங்களையுந் தமக்குடைமைப் பொருளாயுள்ளவராக விருந்துந் திருவொற்றியூரில் வீற்றிருந்தருளிய விளங்குகின்ற சோதிவடிவாகிய ஸ்ரீ படம்பக்கநாதனை வணங்கித் திருமுன்னின்று துதிப்பாராயினர்.—எ-று.

ஒற்றியூர் - ஒற்றியாகவைக்கப்படுமூர், என்பது குறிப்பு. ஒற்றி = குதவை.

"ஆரம்பாம்பு வாழ்வதாரூ ரொற்றியூரே லும்மதன்று" என்னுந்தமிழ் வேதத்தானு முணர்க. (௩க)

மங்கை யொருபான் மகிழ்ந்ததுவு மன்றி மணிநீண் முடியின்கட்
கங்கை தன்னைக் கரந்தருளுங் காத லுடையீ ரடியேனுக்
கிங்கு நுமக்குத் திருமாலை தொடுத்தெனுள்ளத் தொடையவிழ்த்த
திங்கள் வதனச் சங்கிலியைத் தந்தென் வருத்தந் தீருமென.

(இ-ள்) உமாதேவியாரை வாமபாகத்தில் விரும்பி வைத்தருளியதுமல்லாமல், அழகிய நீண்ட சடைமுடியில் கங்கை மங்கையையும் மறைத்து வைத்

திருவிளக்கிட்ட புண்ணியத்தினால் அளகாபுரிக்கரசனுகப்பிறந்து, முன்னுணர்ச்சியால் காசியையடைந்து சிவபெருமானைக்குறித்துத் தவஞ்செய்ய, சிவபெருமான் பார்வதிசமேதரா யெழுந்தருளி, அன்பனே ! நீ வேண்டியவரத்தைக் கேளென்ன,அவன் எம்பெருமானே ! தேவரீரது திருவடிகளைத் தரிசிப்பதற்கு என்கண்கள் கூசுகின்றன; அவ்வாறு கூசாவண்ணம் வரமருளென்றுவேண்ட, பெருமானவ்வண்ணங் கொடுத்தருளவும், அவன் சிவபெருமானிடப்பாகத்துள்ள உமாதேவியாரை, இவ்வம்மையார் சிவபெருமானை நீங்காதிருக்க, என்னதவத்தைச் செய்தனரோவென்று கருதிப்பார்க்கவும், ஒருகண்மறைய, பார்வதியார் பெருமானைப் பார்த்து இவ்வஞ்சகன் யாரென்ன,சிவபெருமான் பார்வதியே ! அவனுன்மேன்மையை மதித்தனனன்றி வேறில்லையாதலால் அவனுக்கு விழியருளென்ன,பிராட்டியார் அவ்வாறளிக்க, அது பொற்கண்ணானது; கண்பெற்ற அவ்வளகேசன் சிவபெருமானையும் உமாதேவியாரையும் வணங்கச் சிவபெருமான் அவனைத்தழுவி, நீ இன்றுதொடங்கி யெனக்குத் தோழனாகுகவென்று வரங்கொடுத்து, நீ பூசித்தசிவலிங்கம் உன்பெயரால் விளங்கக்கடவ தென்றனர் ; பார்வதியார் அன்பனே ! நீ அளகாதிபதியாய் குபேரனென்னும் பெயரோடுவாழ்குகவென்று ஆசிர்வதித்து மறைந்தருளினர்;என்பதாம்.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (உ௩௪)

உம்ப ருய்ய வுலகுய்ய வோல வேலை விடமுண்ட
தம்பி ரானர் வன்றொண்டர் தம்பாலெய்திச் சங்கிலியை
யிம்ப ருலகில் யாவருக்கு மெய்த வொண்ணு விருந்தவத்துக்
கொம்பையுனக்குத் தருகின்றோங் கொண்ட கவலை யொழிகென்ன.

(இ-ள்.) விஷ்ணுப் பிரமேந்திராதி தேவர்கள்பிழைக்கவும், உலகத்திலுள்ள ஆன்மகோடிகள் பிழைக்கவும், ஒலிபொருந்திய சமுத்திரத்திற்றோன்றிய ஆலாகலவிஷத்தையுண்டருளிய சிவபெருமான் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளிடத்து எழுந்தருளி, இவ்வுலகத்துள்ள யாவராலு மடைதற்கரிய பெருந்தவத்தையுடைய பூங்கொம்புபோன்ற சங்கிலியாரை உனக்குக்கொடுக்கின்றோம் ; ஆதலால்,நீ அடைந்திருக்கின்ற மனவருத்தைத் யொழிப்பாயாகவென்று கூறியருள.—எ-று. (உ௩௫)

அன்று வெண்ணெய் நல்லூரில் வலிய வாண்டு கொண்டருளி
யொன்று மறியா நாயேனுக் குறுதி யளித்தீ ருயிர்காக்க
வின்று மிவளை மணம்புணர்க்க வேன்று நின்றீ ரெனப்போற்றி [ர்.
மன்றன் மலர்ச்சேவடியிணைக்கீழ்வணங்கிமகிழ்ந்தார் வன்றொண்ட

(இ-ள்.) அந்நாளில் திருவெண்ணெய்நல்லூரில் வலியவந்து தடுத்தடிமைகொண்டருளி, ஒரு சிறிதுமறியாத எளியேனுக்கு உயிர்க்குறுதி தந்தருளினீர் ; இன்றும் எனதுயிரைக் காக்கும்பொருட்டு இச்சங்கிலியாரை மணஞ்செய்விக்க உடன்பட்டு நின்றருளினீர்; (இனி அடியேனுக்கு யாதுகுறை) என்று துதித்து,ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் (சிவபெருமானது) மணம்பொருந்திய தாமரைமலர்போன்ற இரண்டு திருவடிகளினும் விழுந்து வணங்கி மகிழ்வடைந்தருளினார்.—எ-று. (உ௩௬)

ஆண்டு கொண்ட வந்தணனா ரவருக் கருளிக் கருணையினா
னீண்ட கங்குல் யாமத்து நீங்கி வானி னிறைமதியந்
தீண்டு கன்னி மாடத்துச் சென்று திகழ்சங் கிலியாராந்
தூண்டு சோதி விளக்கனையார் தம்பாற் கனவிற் றோன்றினார்.

(இ-ள்) (அந்நாளில்) தடுத்தாட்கொண்டருளிய வேதியராகிய சிவபெருமான் ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு அவ்வாறருளிச்செய்து, திருவருளினால், மிக்க அர்த்தராத்திரியில் அவ்விடத்தி னின்றுநீங்கி, ஆகாயத்திலுள்ள பூரணசந்திரனைத் தொடுகின்ற உயர்ந்த கன்னிமாடத்தை யடைந்து, தூண்டப்பட்டசோதியையுடைய தீபம்போன்றவராகிய சங்கிலிநாச்சியாரது சொப்பனத்தில் எழுந்தருளினார்.—எ-று. (உ௩எ)

தோற்றும் பொழுதிற் சங்கிலியார் தொழுது விழுந்து பரவசமா
யாற்ற வன்பு பொங்கியெழுந் தடியே னுய்ய வெழுந்தருளும்
பேற்றுக் கெனையான் செய்வதெனப் பெரிய கருணை பொழிந்தனைய
நீற்றுக் கோல வேதியரு நேர்நின் றருளிச் செய்கின்றார்.

(இ-ள்.) சொப்பனத்தி லெழுந்தருளியபொழுது சங்கிலிநாச்சியார் சாஷ்டாங்கமாக வணங்கிப் பரவசமுற்றுப் பேரன்பு அதிகரித்தெழுந்து, அடியே னுய்யும்படி தேவரீரெழுந்தருளிய பெருமைக்கு யான் யாதுசெய்வேனென்று கூற, மிக்க கிருபாவெள்ளம் பொழிந்ததுபோலுந் திருவெண்ணீற்றுத் திருக்கோலத்தையுடைய சிவபெருமான் அவ்வம்மையார்க்கெதிரில் நின்று அருளிச்செய்கின்றார்.—எ-று. (உ௩அ)

சாருந் தவத்துச் சங்கிலிகேள் சால வென்பா லன்புடையான்
மேரு வரையின் மேம்பட்ட தவத்தான் வெண்ணெய் நல்லூரி
லியாரு மறிய யானாள வுரியா னுன்னை யெனையிரந்தான்
வார்கொண் முலையாய் நீயவனை மணத்தா லணைவாய் மகிழ்ந்தென்றார்.

(இ-ள்.) பொருந்திய தவத்தினையுடைய சங்கிலியே! கேட்பாயாக; எம்மிடத்தில் மிக்க பேரன்புடையவன்; மேருமலையினைப் பார்க்கிலும் மிக்க தவத்தினையுடையவன்; யாவரு மறியத் திருவெண்ணெய் நல்லூரில் யாம் தடுத்தடிமைகொள்ளப் பெற்றவன்; அவன் உன்னைத் தனக்குக் கலியாணஞ் செய்துகொடுக்கும்படி எம்மை வேண்டிக்கொண்டான்; கச்சணிந்த ஸ்தனங்களையுடைய சங்கிலியே! நீ அவ்வன்பனைக் கலியாணஞ்செய்து மகிழ்ந்து வாழ்வாயாகவென்று கூறியருளினார்.—எ-று. (உ௩௯)

ஆதி தேவர் முன்னின்றங் கருளிச் செய்த பொழுதின்கண்
மாத ரார்சங் கிலியாரு மாலு மயனு மறிவரிய
சீத மலர்த்தா மரையடிக்கீழ்ச் சேர்ந்து வீழ்ந்து செங்நின்று
வேத முதல்வர் முன்னடுக்க மெய்தித் தொழுது விளம்புவார்.

(இ-ள்.) சிவபெருமான் அங்குச் சொப்பனத்தி லெழுந்தருளி யருளிச்செய்தபொழுது, சங்கிலிநாச்சியாரும் திருமால்பிரமனென்னு மிருவராலு மறிதற்கரிய குளிர்ந்த தாமரை மலர்போன்ற திருவடிகளில் அடைந்து வீழ்ந்துவணங்கி எழுந்து நின்று, சிவபெருமான் திருமுன்னே நடுக்கமுற்று வணங்கிக் கூறுவாராயினார்.—எ-று. (உ௪0)

எம்பிரானே நீரருளிச் செய்தார்க் குரியேன் யானிமையோர்
தம்பி ரானே யருட்லைமேற் கொண்டேன் நக்க விதிமணத்தா
னம்பி யாரூ ரருக்கென்னை நல்கி யருளும் பொழுதிமயக்
கொம்பி னுகந் கொண்டீர்க்குக் கூறுந் திறமொன் றுளதென்பார்.

(இ-ள்.) எமது ஆண்டவரோ! தேவரீர் மணஞ்செய்யும்படி அருளிச்செய்தவர்க்கு யான் உரியவளாயினேன்; தேவர்கள் பெருமானே! உமது கட்டளையைச் சிரமேற்கொண்டேன்; நம்பியாரூரருக்கு என்னை வேதவிதிப்படி கலியாணஞ் செய்துகொடுக்கும்பொழுது, பார்வதிபாகராகிய தேவரீருக்கு அடியேன் விண்ணப்பஞ் செய்துகொள்வது ஒன்றிருக்கின்றது என்று கூறுவராயினார்.—எ-று (௨௪௧)

பின்னும் பின்னன் முடியார்முன் பெருக நாணித் தொழுதுமைப்
மன்னுந் திருவா ரூரின்க ணவர்தா மிகவு மகிழ்ந்துறைவ [பார்
தென்னுந் தன்மை யறிந்தருளு மெம்பி ராட்டி திருமுலைதோய்
மின்னும் புரிநூன் மணிமார்பீ ரொன்றூர் குன்று விளக்கனையார்.

(இ-ள்.) மீண்டும் ஒளிகுன்றுதவிளக்கினையொத்த சங்கிலிநாச்சியார், பின்னலாகிய சடைமுடியையுடையசிவபெருமான் திருமுன்னே மிக்கநாணங்கொண்டு வணங்கிக் கூறுவார்; எமது தாயாகிய பார்வதியாரது திருமுலைதோய்ந்த முப்புரிநூல்விளங்குந் திருமார்பினையுடைய பெருமானே! அவர்நிலைபெற்ற திருவாரூரில் மிக்க மகிழ்வுற்று வசித்தருள்வது என்னுந் தன்மையைத் தேவரீர் சிந்தித்தருளும் என்று கூறினார்.—எ-று.

கற்புடையமாதர்கள் கணவனைப்பிரிந்தவழி துன்புறுதலியற்கை. ஆகவே, அவர் திருவாரூரிற் பரவையாரிடத்து விருப்புள்ளவராகலின், என்னையிங்குக் கலியாணஞ்செய்து தனிவிட்டுச் செல்வராயின் யாதுசெய்வேன்; இது, உமாதேவியாரைத் தழுவிய திருமார்பினையுடைய தேவரீருக்கேயினிது விளங்குமென்பார், 'எம்பிராட்டி திருமுலைதோய் - மின்னும்புரிநூன்மணிமார்பீர்' என்று கூறினார். (௨௪௨)

வேறு.

மற்றவர்தம் முரைகொண்டு வன்றொண்டர் நிலைமையினை
யொற்றிநக ரமர்ந்தபிரா னுணர்ந்தருளி யுரைசெய்வார்
பொற்றொடியா யுனையிகந்து போகாமைக் கொருசபத
மற்றமுறு நிலைமையினு லவன்செய்வா னெனவருளி.

(இ-ள்.) திருவொற்றியூரில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமான் சங்கிலிநாச்சியார் கூறிய வார்த்தையைக் கேட்டருளி, ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளது எண்ணத்தை யறிந்து அவ்வம்மையாரைப் பார்த்து கூறுவார்; சங்கிலியாரே! அவன் உன்னை விட்டுப்பிரியாதிருப்பதற்கு ஒரு சத்தியம் அச்சம்பொருந்திய நிலைமையோடு செய்துகொடுப்பானென்று கூறியருளி.—எ-று.

பொற்றொடி = அன்மொழித்தொகை.

இதுமுதல் மூன்றுபாட்டுங் குளகம். (௨௪௩)

வேயனைய தோளியார் பானின்று மீண்டருளித்
தூயமன மகிழ்ந்திருந்த தோழனார் பாலணைந்து
நீயவளை மணம்புணரு நிலையுரைத்தோ மதற்கவள்பா
லாய தொரு குறையுன்னா லமைப்பதுள தென்றருள.

(இ-ள்.) மூங்கில்போலும் அழகிய தோள்களையுடைய சங்கிலிநாச்சியாரிடத்தினின்று மீண்டு, தூய்மையாகிய திருவுள்ள மகிழ்வுற்றிருந்த ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளிடத்து வந்தருளி, நீ அந்தச்சங்கிலியாரைக் கலியாணஞ் செய்துகொள்ளுந்தன்மையை அவளிடத்துக்கூறினோம் ; அதற்காக, அச்சங்கிலியாரிடத்தில் உன்னால் செய்துகொடுக்க வேண்டுவதாகிய ஒரு குறையிருக்கின்றது என்று கூறியருள.—எ-று.

முடிவிலாற்றலையுடைய சிவபெருமானே நம்பொருட்டுத் தூதுசென்றனராகலான், நமது கருத்து முற்றுப்பெறுதற்கருமையன்றென்று மனமகிழ்வு கொண்டிருந்தன ரென்பார், ' தூயமனமகிழ்ந்திருந்த தோழனார்' என்றும், சிவபெருமான் சங்கிலியாரிடத்துத் தூதுசென்று அவள்மனம்பொருந்தக் கூறிச் சம்மதிக்கச் செய்தோமென்று கூறினாரென்பார், 'நீயவளை மணம்புணரு நிலையுரைத்தோம்' என்றும், ஆயினும் அவள் மனத்திலுள்ள ஒருகுறையை நீ நிறைவேற்றினாலன்றி, அதுமுடிவுபெறுதல் அரிதென்பார், 'ஆய தொருகுறை யுன்னாலமைப்பதுளது' என்றுங் கூறினார். குறை=அவசியமாகச் செய்யவேண்டிய பொருள். (உசுச)

வன்றொண்டர் மனங்களித்து வணங்கியடி யேன்செய்ய
நின்றகுறை யாதென்ன நீயவளை மணம்புணர்தற்
கொன்றியுட னேநிகழ வொருசபத மவண்முன்பு
சென்றுகிடைத் திவ்விரவே செய்கவென வருள்செய்தார்.

(இ-ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் திருவுள்ளமகிழ்ந்து வணங்கி, அடியேன் செய்யவேண்டியதாக இருந்த குறை யாதென்று கேட்க, சிவபெருமான் நீ அச்சங்கிலியைக் கலியாணஞ் செய்வதற்குச் சம்மதித்துப்பின் அவளைப்பிரியாதிருக்க ஒரு சத்தியத்தை அவள் முன்னே சென்றடைந்து இவ்விராப்பொழுதே செய்வாயாக வென்றருளிச்செய்தார்.—எ-று.

கற்புடைமாதர்கள் தங் கணவனைவிட்டுப் பிரிந்தால்துன்புறுவர். ஆகவே, நம்பியாரூர் திருவாரூரிற் பரவையை மணந்துள்ளவர், ஓர்காலவரென்னை விட்டுப்பிரியின் யாது செய்வேனெனவருந்திப் பிரியாமையைக் கருதினளாகலான், அவளுக்குறுதிசெய்துகொடுவென்பார், 'ஒன்றியுடனே நிகழ வொருசபத மவண்முன்பு சென்று கிடைத்திவ்விரவேசெய்க ' என்று கூறினார். (உசுரு)

என்செய்தா லிதுமுடியு மதுசெய்வன் யானிதற்கு
மின்செய்த புரிசடையீ ரருள்பெறுதல் வேண்டுமென
முன்செய்த முறுவலுடன் முதல்வரவர் முகநோக்கி
யுன்செய்கை தனக்கினியென் வேண்டுவதென் றுரைத்தருள.

(இ-ள்.) யாது செய்தால் இக்கலியாண முடியுமோ, அதனை அடியேன் செய்வேன்; மின்போல் விளங்கும் முறுக்காகிய சடைமுடியையுடைய எமதாண்டவரே ! இதற்குத் தேவரீரது திருவருள் பெறவேண்டுமென்று கூற, சிவ

பெருமான் அவர்முன்னே கொண்ட புன்சிரிப்போடும் அவரது திருமுகத்தைப் பார்த்து, நீ சபதஞ்செய்து கொடுப்பதற்கு இனி ஆகவேண்டியது யாதென்று கூறியருள.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (உசுசு)

வம்பணிமென் முலையவட்கு மனங்கொடுத்த வன்றொண்டர்
நம்பரிவர் பிறபதியும் நயந்தகோ லஞ்சென்று
கும்பிடவே கடவேனுக் கிதுவிலக்கா மெனக்குறிப்பாற்
றம்பெருமான் றிருமுன்பு தாம்வேண்டுங் குறையிரப்பார்.

(இ-ள்.) கச்சணிந்த ஸ்தனங்களையுடைய சங்கிலி நாச்சியாருக்கு தமதுள்ளத்தைப்பறிகொடுத்த ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் இச்சிவபெருமான் வீற்றிருந்தருளும் பிறதிருப்பதிகளிலும் எழுந்தருளிய திருக்கோலத்தைச்சென்றுவணங்குங் கடைமையுடையேனாகிய எனக்கு இதுதடையாயிருக்குமென்று குறிப்பினால், தமது சிவபெருமான் திருமுன்னே தாம் விரும்பிய குறைகூறி வேண்டுவோராயினார்.எ-று. (உசுஎ)

சங்கரர்தாள் பணிந்திருந்து தமிழ்வேந்தர் மொழிகின்றார்
மங்கையவ டனைப்பிரியா வகைசபதஞ் செய்வதனுக்
கங்கவளோ டியான்வந்தா லப்பொழுது கோயில்விடத்
தங்குமிடந் திருமகிழ்க்கீழ்க் கொளவேண்டு மெனத்தாழ்ந்தார்.

(இ-ள்.) திருநெறித் தமிழ்த்தலைவராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் சிவபெருமானது திருவடிகளை வணங்கிக்கூறுகின்றார், அச்சங்கிலியாரை விட்டுப்பிரியாதிருக்கும்வண்ணம் சபதஞ்செய்துகொடுப்பதற்கு யான் அவளுடன் திருக்கோயிலுக்கு வந்தால், அப்பொழுது, திருக்கோயிலினின்றுநீங்கித் தேவரீர் எழுந்தருளுமிடம் அழகிய மகிழவிருக்ஷத்தின் கீழாகக் கொண்டருளவேண்டுமென்று கூறி வணங்கியருளினார்.—எ-று.

சபதஞ்செய்து கொடுத்தால், ஓர்கால் பிரிவுநேரின், அவ்வசத்தியத்தினால் தீங்குண்டாமாகலின், தேவரீர் திருக்கோயிலினின்று நீங்கி மகிழின்கீழெழுந்தருளவேண்டுமென வேண்டினரென்க. (உசுஅ)

தம்பிரான் றோழரவர் தாம்வேண்டிக் கொண்டருள
வெம்பர்நா யகருமதற் குடன்பாடு செய்வாராய்
நம்பிநீ சொன்னபடி நாஞ்செய்து மென்றருள
வெம்பிரா னேயரிய தினியெனக்கெ னெனவேத்தி.

(இ-ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் தாம் இவ்வாறு வேண்டிக்கொள்ள, தேவர்கள் நாயகராகிய சிவபெருமானும் அவரது வேண்டுகோளுக்கிசைந்தவராய், நம்பியாரூரனே! நீ சொல்லியபடியே நாம் மகிழவிருக்ஷத்தின் கீழிருக்கின்றோமென்று அருளிச்செய்ய, அந்நம்பியாரூரர் எமது பெருமானே! இனி அடியேனுக்கு அரிய பொருள் யாதிருக்கின்றதென்று துதித்து.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (உசுகூ)

அஞ்சலிசென் னியின்மன்ன வருள்பெற்றுப் புறம்போதச்
செஞ்சடையா ரவர்மாட்டுத் திருவிளையாட் டினைமகிழ்ந்தோ

வஞ்சியிடைச் சங்கிலியார் வழியடிமைப் பெருமையோ
துஞ்சிருண்மீ ளவுமணைந்தா ரவர்க்குறுதி சொல்லுவார்.

(இ-ள்.) அஞ்சலியாகக்குவித்த திருக்கரங்கள் சிரசிற்பொருந்தத் திருவருள்பெற்றுப் புறத்திற்செல்லவும், சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமான் அச்சுந்தரமூர்த்திசுவாமிகளிடத்தில் ஓர்திருவிளையாடலைக் கருதியோ? அல்லது, பூங்கொடிபோலும் சிற்றிடையையுடைய சங்கிலிநாச்சியார் வழியடிமைசெய்யும் மேன்மையோ? அச்சங்கிலிநாச்சியாருக்கு உறுதி சொல்லவேண்டி அந்தராத்திரியில் மீளவும் வந்தருளினர்.—எ-று.

ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளது வேண்டுகோளுக்கு உடன்பட்டவர்போல நடித்து, சங்கிலிநாச்சியாரிடத்து உறுதிகூற வணைந்தமை, அச்சுந்தரமூர்த்திசுவாமிகளிடத்துச்செய்தருளுந் திருவிளையாடலோ? அன்றி,சங்கிலியாரது பரம்பரைத்தொண்டின் மேன்மையோ வென்பார், 'அவர் மாட்டுத் திருவிளையாட்டினை மகிழ்ந்தோ- வஞ்சியிடைச் சங்கிலியார் வழியடிமைப் பெருமையோ' என்று கூறினர். (ருருo)

சங்கிலியார் தம்மருங்கு முன்புபோற் சார்ந்தருளி
நங்கையுனக் காரூர னயந்துரூ றுறக்கடவ
னங்குநமக் கெதிர்செய்யு மதற்குநீ யிசையாதே
கொங்கலர்பூ மகிழின்கீழ்க் கொள்கவெனக் குறித்தருள.

(இ-ள்.) சங்கிலிநாச்சியாரிடத்து முன்போல வெழுந்தருளி, பெண்ணே! உனக்குச் சுந்தரன்விரும்பிச் சத்தியஞ்செய்துகொடுக்கக்கடவன்! அவன் திருக்கோயிலில் நமக்கு முன்னின்றுசெய்யுஞ் சத்தியத்திற்கு நீ உடன்படாமல், வாசனைவீசுகின்ற மலர்களையுடைய மகிழ விருட்சத்தின் கீழ்ச்செய்யும்படி செய்துகொள்வாயாகவென்று குறிப்பித்தருள.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (ருருக)

மற்றவருங் கைகுவித்து மாலயனுக் கறிவரியீ
ரற்றமெனக் கருள்புரிந்த வதனிலடி யேனுகப்
பெற்றதியா னெனக்கண்கள் பெருந்தாரை பொழிந்திழிய
வெற்றிமழ விடையார்தஞ் சேவடிக்கீழ் வீழ்ந்தெழுந்தார்.

(இ-ள்.) சங்கிலிநாச்சியாருங் கைகூப்பி வணங்கி, பிரமவிஷ்ணுக்களாலறிதற்கரிய பெருமானே! தேவரீர் இரகசியத்தை எனக்கு உரைத்தருளினமையால் யான் உமக்கு அடிமையாகப் பெற்றேன், என்று கண்களில் ஆனந்தபாஷ்பந் தாரைதாரையா யொழுக, வெற்றிபொருந்திய அழகிய இடபவாகனத்தையுடைய சிவபெருமான் திருவடிகளில் வணங்கியெழுந்தார்.—எ-று.

எம்பெருமானே! ஒன்றுக்கும் பற்றாத சிறியேன்பொருட்டுத் தேவரீரெழுந்தருளி யுண்மையுரைத் தருளினீர்; ஆதலான், யானும் உமதடியாரிற் சேர்க்கப்பட்டவளாயினே னென்பார், 'அற்றமெனக் கருள்புரிந்த வதனிலடியேனுக,' என்று கூறினர். (ருருஉ)

தையலார் தமக்கருளிச் சடாமகுட ரெழுந்தருள
வெய்தியபோ ததிசயத்தா லுணர்ந்தெழுந்த விரவின்கட்

செய்யசடை யாரருளின் றிறநினைந்தே கண்டுயிலா
மையமுட னருகுதுயில் சேடியரை யணைந்தெழுப்பி.

(இ-ள்.) சடைமுடியையுடைய சிவபெருமான் இவ்வாறு சங்கிலிநாச்சியாருக்குக் கூறி யெழுந்தருளவும், சொப்பனங் கண்டபொழுது ஆச்சரியத்தினால் விழித்தெழுந்து, அந்தராத்திரியில் சிவபெருமானது திருவருட்டிறத்தைச் சிந்தித்து, நித்திரைகொள்ளாதவராய்ச்சந்தேகத்துடன் தம்மருகில் நித்திரைசெய்கின்ற தோழியர்களை யடைந்து எழுப்பி.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (உருரு)

நீங்குதுயிற் பாங்கியர்க்கு நீங்கலெழுத் தறியுமவர்
தாங்கனவி லெழுந்தருளித் தமக்கருளிச் செய்ததெல்லாம்
பாங்கறிய மொழியவவர் பயத்தினுட னதிசயமுந்
தாங்குமகிழ்ச் சியுமெய்தச் சங்கிலியார் தமைப்பணிந்தார்.

(இ-ள்.) நித்திரைநீங்கிய தோழியர்களைப்பார்த்து, திருவொற்றியூர் நீங்கலென்று வரியோலையெழுதியசிவபெருமான் சொப்பனத்திலெழுந்தருளித் தமக்கு அருளிச்செய்தவை யனைத்தும் நன்றாயறியும்படிகூற, அத்தோழியர்கள் பயமும், ஆச்சரியமும், பொருந்திய மகிழ்வுமுண்டாகச் சங்கிலிநாச்சியாரை வணங்கினார்கள்.—எ-று.

சிவபெருமான் சொப்பனத்தெழுந்தருளிக் கூறியருளிய திருவருட்செயலை நோக்கி அச்சமும், அவரது பெருங்கருணையை நோக்கி அதிசயமும், அவ்வெம்பெருமான் றிருவருள்பெற்றவராகிய இவ்வம்மையாருக்கு ஏவற்றொழில் செய்யப் பெற்றோமேயென்று மகிழ்ச்சியு மடைந்தனரென்க. (உருசு)

சேயிழையார் திருப்பள்ளி யெழுச்சிக்கு மலர்தொடுக்குந்
தூயபணிப் பொழுதாகத் தொழில்புரிவா ருடன்போதக்
கோயிலின்முன் காலமது வாகவே குறித்தணைந்தா
ராயசப தஞ்செய்ய வரவுபார்த் தாரூரர்.

(இ-ள்.) சிறந்த ஆபரணங்களையணிந்த சங்கிலிநாச்சியார், சிவபெருமானது திருப்பள்ளியெழுச்சிக்கு மலர்மாலை தொடுக்குந் திருத்தொண்டிற்குரிய விடியற்காலம் வரவும், தாம் அத்தொண்டுசெய்யுந் தோழியர்களுடன் திருக்கோயிலுக்கு வந்தருள, ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் சத்தியஞ் செய்துகொடுப்பதற்கு அதுவே காலமாக நிச்சயித்து சங்கிலிநாச்சியாரது வருகையை எதிர்பார்த்துக்கொண்டு திருக்கோயிலின் முன்னடைந்தருளினார்.—எ-று.

ஆயசபதம்=சிவபெருமானால் சொல்லியருளிய சபதம். (உருஎ)

நின்றவரங் கெதிர்வந்த நேரிழையார் தம்மருங்கு
சென்றணைந்து தம்பெருமான் றிருவருளின் றிறங்கூற
மின்றயங்கு நுண்ணிடையார் விதியுடன்பட் டெதிர்விளம்பா
தொன்றியநா ணொடுமடவா ருடனொதுங்கி யுட்புகுந்தார்.

(இ-ள்.) அவ்வாறு எதிர்பார்த்துநின்ற ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் அங்குத் தமக்கு எதிரில்வந்த சங்கிலிநாச்சியாருக்கருகில்சென்று சேர்ந்து, தமதாண்டவராகிய சிவபெருமானது திருவருட்டிறத்தைக் கூறியருள, மின்னல்போல் விளங்கும் சிறிய இடையினையுடைய சங்கிலிநாச்சியார் சிவபெருமானது கட்ட

ளைக்கு உடன்பட்டு எதிரில் ஒன்றுங் கூருதவராய், பொருந்தியநாணத்தோடுந் தோழியர்களுடன் ஒதுங்கித் திருக்கோயிலி னுள்ளே புகுந்தருளினார்.—எ-று.

விதியுடன்பா டெதிர்விளம்பார், என்றும் பாடம். (உருசு)

அங்கவர்தம் பின்சென்ற வாரூர ராயிழையீ
ரிங்குநான் பிரியாமை யுமக்கிசையும் படியியம்பத்
திங்கண்முடி யார்திருமுன் போதுவீ ரெனச்செப்பச்
சங்கிலியார் கனவுரைப்பக் கேட்டதா தியர்மொழிவார்.

(இ-ள்.) அந்தச் சங்கிலிநாச்சியாருக்குப் பின் தொடர்ந்துசென்ற ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் திருத்தமாகிய ஆபரணங்களையணிந்த பெண்களே! நான் இங்கு உம்மைப் பிரியாதிருப்பதற்குச் சம்மதிக்கும்படி சத்தியஞ் செய்துகொடுக்க, சந்திரசேகரராகிய சிவபெருமான் திருமுன்னே வாருங்களென்று கூறியருள, (அப்பொழுது) சங்கிலிநாச்சியார் தாம் கண்ட சொப்பனத்தைச் சொல்லக்கேட்ட தோழியர்கள் அவருக்குச் சொல்லுவார்கள்.—எ-று.

ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் சங்கிலிநாச்சியாரைத் தனியே விளித்து விடைபெறக் கூடாமையான், பொதுப்படத் தோழியரையு முடன்கூட்டி, 'ஆயிழையீர்' என்று கூறியருளினார். (உருஎ)

எம்பெருமா னிதற்காக வெழுந்தருளி யிமையவர்க
டம்பெருமான் றிருமுன்பு சாற்றுவது தகாதென்ன
நம்பெருமான் வன்றொண்டர் நாதர்செய லறியாதே
கொம்பனையீர் யான்செய்வ தெங்கென்று கூறுதலும்.

(இ-ள்.) எமது பெருமானே! தேவரீர் இச்சபதத்திற்காக எழுந்தருளி, தேவர்கள் நாயகராகிய சிவபெருமான் சந்நிதியில் நின்றுசொல்வது தகாதென்று கூறவும், நமது தலைவராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் சிவபெருமானது திருவருட்செயலை யுணராமல், பெண்களே! ஆனால் யான் எங்கு சபதஞ்செய்து கொடுப்பதென்று கேட்டருளவும்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம் . (உருஅ)

மாதரவர் மகிழ்க்கீழே யமையுமென மனமருள்வா
ரீதலரா கிலுமாகு மிவர்சொன்ன படிமறுக்கி
லாதலினா லுடன்படவே யமையுமெனத் துணிந்தாகிற்
போதுவீ ரெனமகிழ்க்கீ ழவர்போதப் போயணைந்தார்.

(இ-ள்.) தோழியர்கள் மகிழவிருக்ஷத்தின்கீழே சபதஞ் செய்துகொடுத்தால் போதுமென்றுகூற, அதற்கு மனமயக்கங்கொண்ட ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் இவர்கள் சொன்னபடி மகிழின்கீழ் சத்தியஞ் செய்யத்தடுத்தால், இது பழிமொழியானாலு மாகும்; ஆகையால், இதற்கு உடன்படுதலே தக்கதென்று துணிந்து, ஆனால் எம்முடன் வாருங்களென்று கூறி, மகிழவிருக்ஷத்தின்கீழ் அவர்கள் செல்லத் தாமுஞ் சென்றடைந்தருளினார்.—எ-று.

நாம் சிவபெருமானை மகிழின்கீழிருக்க வேண்டினோம்; இவர்களோ? மகிழின்கீழ்ச் சபதஞ்செய்தாற் போதுமென்கிறார்கள், நாமிதற்குத் தடைசெய்வோமாகில், அதனால் பழிமொழியுண்டாவதோடு, ஒருகால் திருமணந் தடைபடவுந்

கூடுமாகலான், உடன்படலே தக்கதென்று அவர்களை யழைத்து மகிழின்கீழ்ச் சென்றனரென்க. (௨௫௯)

தாவாத பெருந்தவத்துச் சங்கிலியா ருங்காண
மூவாத திருமகிழை முக்காலும் வலம்வந்து
மேவாதிங் கியானகலே னெனநின்று விளம்பினார்
பூவார்தண் புனற்பொய்கை முனைப்பாடிப் புரவலனார்.

(இ-ள்.) மலர்கள் நிறைந்த குளிர்ந்த நீரையுடைய தடாகங்கள் சூழ்ந்த திருமுனைப்பாடி நாட்டுத்தலைவராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் கெடாத பெருந்தவத்தினையுடைய சங்கிலிநாச்சியாரும் (தோழியர்களும்) பார்க்கும்படி, அழிவில்லாத அழகிய மகிழ்விருக்ஷத்தை மூன்றுதரம் பிரதக்ஷணஞ்செய்து, அதின் முன்னின்று, யான் இங்குஇராமல் வேறெங்கும் நீங்கிச் செல்லேனென்று கூறியருளினார்.—எ-று.

சிவபெருமான் திருக்கோயில்கொண் டெழுந்தருளிய காலந்தொட்டு அழியாது நிலைபெற்றிருத்தலின், 'மூவாத திருமகிழ்' என்று கூறினார். (௨௬௦)

மேவியசீ ராரூரர் மெய்ச்சபத வினைமுடிப்பக்
காவியினேர் கண்ணாருங் கண்டுமிக மனங்கலங்கிப்
பாவியே னிதுகண்டேன் நம்பிரான் பணியாலென்
றாவிசோர்ந் தழிவாரங் கொருமருங்கு மறைந்தயர்ந்தார்.

(இ-ள்.) நிலைபெற்ற சிறப்பினையுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் (சங்கிலிநாச்சியாருக்கு உம்மைப் பிரியேனென்று) உண்மையாகச் சத்தியஞ் செய்து முடிக்க, நீலோற்பல மலர்போன்ற கரிய கண்களையுடைய சங்கிலிநாச்சியாரும் அதனைப்பார்த்து மிகவும் மனக்கலக்கமடைந்து சிவபெருமான் சொப்பனத்திற் கூறியருளிய கட்டளையினால் பாவியாகிய யான் இப்பொய்ச்சத்தியத்தைப் பார்த்தேனென்று உயிர்சோர்ந்து வருந்துகின்றவர், அங்கு ஒருபுறத்தில் மறைந்து துக்கிப்பாராயினார்.—எ-று.

சங்கிலியிற்கூறும் பொய்ச்சத்தியத்தைக் காணுதல் பெரும்பாவமாகலின், அதனைக் காணுதற்கும் சிவபெருமானது கட்டளையிருந்ததென்பார், 'பாவியேனிது கண்டேன் நம்பிரான்பணியால்' என்று கூறினார். (௨௬௧)

திருநாவ லூராளி தம்முடைய செயன்முற்றிப்
பொருநாகத் துரிபுனைந்தார் கோயிலினுட் புகுந்திறைஞ்சி
யருணாளுந் தரவிருந்தீர் செய்தவா றழகிதெனப்
பெருநாம மெடுத்தேத்திப் பெருமகிழ்ச்சி யுடன்போந்தார்.

(இ-ள்.) திருநாவலூராராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் தாம் செய்யவேண்டிய சத்தியத்தைச் செய்துமுடித்து, போர்செய்யும் (கயாசுரனென்னும்) யானையின் தோலைப் போர்த்தருளிய சிவபெருமானது திருக்கோயிலினுள்ளே சென்று வணங்கி, அடியேனுக்கு எந்நாளும் திருவருள் தந்தருளும்பொருட்டு எழுந்தருளிய எம்பெருமானே! தேவரீர் செய்தருளியவகை அழகாயிருக்கின்றதென்று அவரது சிறந்ததிருநாமங்களைப் புகழ்ந்து துதித்து மிக்க மகிழ்ச்சியுடன் சென்றருளினார்.—எ-று.

எம்பெருமானே! அடியேனைப் புறக்கணித்துச் சங்கிலிபாற்சார்ந்து எனக்கிவ்வாறலக்கண் கண்டருளினீர், இது தேவரீரது திருவருளுக்கு மிகநன்றா யிருக்கின்றதென்பார், 'செய்தவாறழகிது' என்று கூறினார். (உசஉ)

வார்புனையும் வனமுலையார் வன்றொண்டர் போனதற்பின்
றார்புனையு மண்டபத்துத் தம்முடைய பணிசெய்து
கார்புனையு மணிகண்டர் செயல்கருத்திற் கொண்டிறைஞ்சி
யேர்புனையுங் கன்னிமா டம்புகுந்தா ரிருள்புலர.

(இ-ள்.) கச்சணிந்த அழகிய ஸ்தனங்களையுடைய சங்கிலிநாச்சியார், ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் சென்றபின்பு மாலைகட்டுந் திருமண்டபத்தில் தாம்செய்யுந் திருத்தொண்டைச்செய்து காளகண்டராகிய சிவபெருமானது திருவருளைத் திருவுள்ளத்திற் கருதிவணங்கி அழகுபொருந்திய கன்னிமாடத்தில் விடியற்காலத்தில் சென்றருளினார்.—எ-று. (உசங)

அன்றிரவே யாதிபுரி யொற்றிகொண்டா ராட்கொண்ட
பொன்றிகழ்பூண் வன்றொண்டர் புரிந்தவினை முடித்தருள
நின்றபுகழ்த் திருவொற்றி யூர்நிலவு தொண்டர்க்கு
மன்றல்வினை செய்வதற்கு மனங்கொள்ள வுணர்த்துவார்.

(இ-ள்.) அன்றிரவிலேயே ஆதிபுரியை ஒற்றியூராகக் கொண்டருளிய சிவபெருமான் விளங்குகின்ற பொன்னாபரணங்களையணிந்த ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் விரும்பிய திருக்கலியாணச்செயலை முடித்தருளும்பொருட்டு, நிலைபெற்ற புகழையுடைய திருவொற்றியூரில் வசிக்குந் திருத்தொண்டர்களுக்கு (அச்சுந்தரமூர்த்திசுவாமிகளது) மணவினையைச் செய்துமுடிப்பதற்கு அவர்கள் கருத்திற் கொள்ளும்படி உணர்த்துவாராயினார்.—எ-று. (உசச)

நம்பியா ரூரனுக்கு நங்கைசங் கிலிதன்னை
யிம்பர்ஞா லத்திடைநம் மேவலினான் மணவினைசெய்
தும்பர்வா ழுலகறிய வளிப்பீரென் றுணர்த்துதலுந்
தம்பிரான் றிருத்தொண்ட ரருடலைமேற் கொண்டெழுவார்.

(இ-ள்.) நமது சுந்தரனுக்குச் சங்கிலிநாச்சியாரை இவ்வுலகத்தில், நமது ஏவலினால் மணம்புரிவித்துத் தேவருலகமறியும்படி கொடுப்பீர்களாக வென்று அவர்களுக்குச் சொப்பனஞ் சாதித்தருளவும், அதனையுணர்ந்த சிவனடியார்கள் யாவரும் சிவபெருமான் றிருவருளைச் சிரமேற்கொண்டு நித்திரையினின்றுநீங்கி யெழுவராயினார்.—எ-று.

"உம்பர்வாழுலகறிய" என்றது, மந்திரபூர்வமாகத் தேவர்களை முற்படுத்தி அக்கினிசாக்ஷியாகப் பாணிக்கிரகணஞ் செய்துமுடிப்பதாம். (உசரு)

மண்ணிறைந்த பெருஞ்செல்வத் திருவொற்றி யூர்மன்னு
மெண்ணிறைந்த திருத்தொண்ட ரெழிற்பதியோ ருடனீண்டி
யுண்ணிறைந்த மகிழ்ச்சியுட னும்பர்பூ மழைபொழியக்
கண்ணிறைந்த பெருஞ்சிறப்பிற் கல்யாணஞ் செய்தளித்தார்.

(இ-ள்.) உலகத்தில்நிறைந்த பெருஞ்செல்வத்தையுடைய திருவொற்றியூரில் வாழும் அளவற்ற திருத்தொண்டர்கள் மதில்சூழ்ந்த அத்திருப்பதியிலுள்ளவர்களுடன்சேர்ந்து, மனத்தில்நிறைந்த பெருமகிழ்ச்சியோடு தேவர்கள் புஷ்ப

மாரி பொழியக் கண்களுக்கமைந்த மிக்க மேன்மையாகத் திருக்கலியாணஞ் செய்துகொடுத்தார்கள்.—எ-று. (உசுசு)

பண்டுநிகழ் பான்மையினாற் பசுபதிதன் னருளாலே
வண்டமர்பூங் குழலாளை மணம்புணர்ந்த வன்றொண்டர்
புண்டரிகத் தவள்வனப்பைப் புறங்கண்ட நூலத்தைக்
கண்டுகேட் டுண்டுயிர்த்துற் றமர்ந்திருந்தார் காதலினால்.

(இ-ள்.) முன்னாளில் சிவபெருமான் திருக்கயிலையில் கட்டளையிட்டருளியமுறைமைப்படியே அவ்வெம்பெருமானது திருவருளினால், வண்டுகள் மொய்க்கும் மலர்மாலையையணிந்த கூந்தலையுடைய சங்கிலிநாச்சியாரைத் திருக்கலியாணஞ்செய்துகொண்ட ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள், திருமகளது அழகைத்தோற்கச்செய்த பேரழகினையுடைய சங்கிலிநாச்சியாரை விருப்பத்துடன் கண்டும், கேட்டும், உண்டும், உயிர்த்தும், கலந்தும் அனுபவித்திருந்தார்.—எ-று.

கண்ணால்காண்டலும், செவியால்கேட்டலும், நாவால்உண்டலும், மூக்கால் உயிர்த்தலும், மெய்யால்கலத்தலுமாகிய ஐம்புலவுணர்ச்சிகளையும் ஒருங்கே இவ்வம்மையார்பாற் செலுத்தி யின்பந்துய்த்திருந்தன ரென்பார். 'கண்டுகேட்டுண்டுயிர்த்துற் றமர்ந்திருந்தார் காதலினால்' என்று கூறினார். "கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றறியுமைம்புலனு - மொண்டொடிகண்ணேயுள" என்னுந் திருக்குறளானு முணர்க. (உசுஎ)

யாழின்மொழி யெழின்முறுவ லிருகுழைமேற் கடைபிறழு
மாழைவிழி வனமுலையார் மணியல்குற் றுறைபடிந்து
வீழுமவர்க் கிடைதோன்றி மிகும்புலவி புணர்ச்சிக்க
ணூழியா மொருகணந்தா னவ்வூழி யொருகணமாம்.

(இ-ள்.) யாழிசைபோலும் வார்த்தையையும், அழகியபற்களையும், இருசெவிகளின்மேலுங் கடைபிறழ்ந்துசெல்லும் மாவடுபோன்ற கண்களையும், அழகியஸ்தனங்களையுமுடைய சங்கிலிநாச்சியாரது சிறந்த காமவின்பத்தில் முழுகி, அதிலழுந்துகின்ற ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு இடையேதோன்றி மிகுகின்ற புலவியினும், புணர்ச்சியினும், முறையே ஒருகணம் ஊழியாகவும், அவ்வூழிஒருகணமாவுமிருக்கும்.—எ-று.

புலவியில், இருவரும் பிரிந்திருக்கையால், கணமோரூழியாகவும், புணர்ச்சியில் இருவருமின்பங்கலந்துதுய்த்தலாற் காலநீட்சியை விரும்பலின் ஊழியொருகணமாகவுந் தோன்றினவென்க. (உசுஅ)

இந்நிலையிற் பேரின்ப மினிதமர்வா ரிறையுறையு
மன்னுபுக ழொற்றியூ ரதனின்மகிழ் சிறப்பினாற்
சென்னிமதி புனைவார்தந் திருப்பாதந் தொழுதிருந்தார்
முன்னியகா லங்கள்பல முறைமையினா லவந்தகல.

(இ-ள்.) இவ்வாறுமிய முறைமையோடு மிக்கஇன்பத்தை இனிதாகவிரும்பிவாழும் ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள். சிவபெருமான் வீற்றிருந்தருளும் நிலைபெற்ற புகழையுடைய திருவொற்றியூரில் மிக்கமனமகிழ்வோடும், திருமுடியில் இளம்பிறையணிந்த சிவபெருமானது திருவடிகளைவணங்கி நினைக்கத்தக்கபலநாள்கள் முறைமைப்படி நீங்கவசித்தருளினார்.—எ-று.

காமவின்பம், அஞ்ஞானிகட்குச் சிற்றின்பமாகவும்,மெய்ஞ்ஞானிகட்குப் பேரின்பமாகவும் விளைவதாகலின், 'பேரின்பமினி தமர்வார்' என்றுகூறினார்.()

பொங்குதமிழ்ப் பொதியமலைப் பிறந்துபூஞ் சந்தனத்தின்
கொங்கணைந்து குளிர்சாரல் விடைவளர்ந்த கொழுந்தென்ற
லங்கணையத் திருவாரூ ரணிவீதி யழகரவர்
மங்கலநாள் வசந்தமெதிர் கொண்டருளும் வகைநினைந்தார்.

(இ-ள்.) சிறந்ததமிழையுடைய பொதியமலையில்தோன்றி, பொலிவினையுடைய சந்தனவிருக்ஷத்தின் வாசனையோடு கலந்து, குளிர்ந்தமலைச்சாரலில் வளர்ந்த செழியசிறுதென்றற்காற்றானது அங்குவர,திருவாரூரிலெழுந்தருளிய ஸ்ரீ தியாகராசப்பெருமான் சுபகரமாகிய திருவிழாக்காலத்தில் வசந்தோற்சவங்கொண்டருளுந் திறத்னைதநினைந்தருளினார்.—எ-று.

திருவாரூர்த்திருப்பதியில் வீற்றிருந்தருளும் ஸ்ரீ தியாகராசப்பெருமான் சிறுதென்றல்வீசப் பவனிவருதலாகிய வசந்தோற்சவத்தைத் திருவுள்ளத்திற் கருதினரென்க. (உஎ0)

வெண்மதியின் கொழுந்தணிந்த வீதிவிடங் கப்பெருமா
னொண்ணுதலார் புடைபரந்த வோலக்க மதனிடையே
பண்மருவு மொழிப்பரவை யாராட லாடனைக்
கண்ணுறமுன் கண்டுகேட் டார்போலக் கருதினார்.

(இ-ள்.) வெண்மையாகிய இளமபிறையைத்தரித்தருளிய ஸ்ரீ தியாகராசப்பெருமான்,ஒளிபொருந்திய நெற்றியையுடைய மாதர்கள்புடைசூழும்படியெழுந்தருளி வருகின்ற திருவோலக்கத்தில் இசைபொருந்தியமொழிகளையுடைய பரநாச்சியார்செய்யும் பாடலையும் ஆடலையும் தமது கண்ணுக்கெதிரில் கண்டு, காதினால்கேட்டவரைப்போல மனதில் நினைந்தருளினார்.—எ-று.

ஓலக்கமாவது, ஸ்ரீதியாகராசப்பெருமான், பார்வதி-கணேசர்-சுப்பிரமணியர்-சண்டேசுரர் சமேதராய்த் திருநந்திதேவர் முதலிய சிவகணங்களும், அடியார் திருக்கூட்டங்களும் புடைசூழும்படி வீற்றிருந்தருளுந் திருக்கோலம். (உஎக)

பூங்கோயி லமர்ந்தாரைப் புற்றிடங்கொண் டிருந்தாரை
நீங்காத காதலினா னினைந்தாரை நினைவாரைப்
பாங்காகத் தாமுன்பு பணியவரும் பயனுணர்வா
ரீங்குநான் மறந்தேனென் றேசறவா ன் மிகவழிவார்.

(இ-ள்.) பூங்கோயிலில் வீற்றிருந்தருள்பவரும்,புற்றையிடமாகக்கொண்டெழுந்தருளியவரும், நீங்காதபேரன்பினால் தமமைத்தியானிக்கும் அடியார்களை நினைந்து திருவருள்புரிபவருமாகிய ஸ்ரீதியாகராசப்பெருமானை முறைமைப்படி தாம் முன்புவணங்க அதனால் வருகின்ற திருவருட்பயனைச் சிந்தித்தருளும் ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் (அவ்வெம்பெருமானை) இங்கு நான் மறந்துவிட்டேனென்று துன்பத்தினால் மிகவும் வருந்துவாராயினார்.—எ-று.

பசுகரணங் கெட்டுச் சிவகரணமுற்றுத் தம்மை யிடைவிடாது சிந்திக்கும் சிவஞானிகளைத் தாமும் சிந்தித்துப் பேரருள்புரிபவரென்பார், 'நினைந்தாரை நினைவாரை' என்று கூறினார். இதனை.—

"ஓவாதே யுள்குவா ருள்ளிருக்கு முள்ளானைச்
சேயானைச் சேவகனைத் தென்னன் பெருந்துறையின்
மேயானை வேதியனை மாதிருக்கும் பாதியனை
நாயான நந்தம்மை யாட்கொண்ட நாயகனைத்
தாயான தத்துவனைத் தானே யுலகேழு
மாயானை யாள்வானைப் பாடுதுங்கா ணம்மானாய்" என வருந் திருவா
சகத் திருமுறையா லுணர்க. (௨௭௨)

மின்னொளிர்செஞ் சடையானை வேதமுத லானானை
மன்னுபுகழ்த் திருவாரூர் மகிழ்ந்தானை மிகநினைந்து
பன்னியசொற் பத்திமையு மடிமையையுங் கைவிடுவா
னென்னுமிசைத் திருப்பதிக மெடுத்தியம்பி யிரங்கினார்.

(இ-ள்.) மின்போலுமொளிவீசுகின்ற சிவந்தசடைமுடியையுடையவரும், வேதமுதல்வரும், நிலைபெற்றபுகழையுடைய திருவாரூரைவிரும்பியெழுந்தருளியவருமாகிய ஸ்ரீ தியாகராசப்பெருமானை மிகவுஞ் சிந்தித்து, சிறந்த சொற்களால் "பத்திமையுமடிமையையுங் கைவிடுவான்" என்னு முதலையுடைய திருப்பதிகமெடுத்துப் பாடியருளி மனமிரங்கினார்.—எ-று. (௨௭௩)

---

திருவாரூர் - பண் - பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

பத்திமையுமடிமையையுங்கைவிடுவான்பாவியேன்
பொத்தினநோயதுவிதனைப்பொருளறிந்தேபோய்த்தொழுவேன்
முத்தினைமாமணிதன்னைவயிரத்தைமூர்க்கனே
னெத்தனைநாள்பிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே.

பேரூருமதகரியினுரியானைப்பெரியவர்தஞ்
சீரூருந்திருவாரூர்ச்சிவனடியேதிறம்விரும்பி
யாரூரனடித்தொண்டனடியன்சொலகவிடத்தி
லூரூரனிவைவல்லாருலகவர்க்குமேலாரே.

திருச்சிற்றம்பலம்.

---

பின்னொருநா டிருவாரூர் தனைப்பெருக நினைந்தருளி
யுன்னவினி யார்கோயில் புகுந்திறைஞ்சி யொற்றிநகர்
தன்னையக லப்புக்கார் தாஞ்செய்த சபதத்தான்
முன்னடிக டோன்றாது கண்மறைய மூர்ச்சித்தார்.

(இ-ள்.) பின்பு ஒருதினம் திருவாரூர்த்திருப்பதியை மிகவுந்திருவுள்ளத்திற் சிந்தித்தருளி, நினைத்தற் கினியராகிய சிவபெருமானது திருக்கோயிலையடைந்து வணங்கித் திருவொற்றியூர்த் திருவெல்லையை நீங்கச்சென்ற ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள், முன்பு சங்கிலிநாச்சியாருக்குச்செய்து கொடுத்த சத்தியத்தினால், தாம் முன்னெடுத்து வைத்த அடிகள்தெரியாமல் கண்கள்மறைய, அதனால் மூர்ச்சையடைந்தருளினார்.—எ-று.

தம்மைச்சிந்திக்குமெய்யடியார்களது திருவுள்ளத்திற் றேன்போற் கசிந்தூறிப் பேரின்பத்தை விளைத்துப்பிறவிப்பிணியை நீக்கியருள்பவரென்பார், உன்னவினியார்,என்றுகூறியருளினர். "கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற்போலச்-சிறந்தடியார் சிந்தனையுட் டேனூறி நின்று - பிறந்த பிறப்பறுக்கு மெங்கள் பெருமான்" என்னுந் திருவாசகத்தானுணர்க. (உஎச)

செய்வதனை யறியாது திகைத்தருளி நெடிதுயிர்ப்பார்
மைவிரவு கண்ணார்பாற் சூளுறவு மறுத்ததனா
லிவ்வினைவந் தெய்தியதா மெனநினைந்தெம் பெருமானை
யெய்தியவித் துயர்நீங்கப் பாடுவே னெனநினைந்து.

(இ-ள்.) தாம்செய்யும் வகை இன்னதென்றறியாமல் திகைப்புற்றுப் பெருமூச்சுவிடுகின்றவராய், மைபூசிய கண்களையுடைய சங்கிலியாரிடத்துச் செய்துகொடுத்தசத்தியத்தை மறுத்துவிட்டதனால் இத்தீங்குவந்து சம்பவித்ததென்று சிந்தித்து, என்னையடைந்த இத்துன்பம்நீங்கும்படி எமது ஆண்டவராகிய ஸ்ரீ படம்பக்கநாதரைத் திருப்பதிகம்பாடுவேனென்று திருவுள்ளத்திற்கருதி.—எ-று.

'வெவ்வியவித்துயர்நீங்க' என்றும் பாடம்.

இதுமுதலிரண்டுபாடலுங் குளகம். (உஎரு)

வேறு.

அழுக்கு மெய்கொ டுன் றிருந்தசொற் பதிக மாதி நீள்புரி
யண்ணலை யோதி, வழுத்து நெஞ்சொடு தாழ்ந்துநின் றுரைப்பார்
மாதொர் பாகனார் மலர்ப்பத முன்னி, யிழுக்கு நீக்கிட வேண்டுமெ
ன் றிரங்தே யெய்து வெந்துயர்க் கையற வினுக்கும்,பழிக்கும் வெள்
கிநல் லிசைகொடு பரவிப் பணிந்து சாலவும் பலபல நினைவார்.

(இ-ள்.) "அழுக்குமெய்கொடு" என்று முதலெடுத்த இனிய சொற்களமைந்த திருப்பதிகத்தினால், சிறந்த திருவொற்றியூரில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானைப் பாடித்துதிக்குந் திருவுள்ளத்தோடு வணங்கி நின்று தங்குறையைக் கூறுகின்ற ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள், பார்வதிபாகராகிய சிவபெருமானது தாமரைமலர்போன்ற திருவடிகளைச் சிந்தித்து, எனது வருத்தத்தை நீக்கியருளவேண்டுமென்று இரங்கி, தாமடைந்திருக்கின்ற ஒழுக்கமின்மையாகிய துன்பத்திற்கும், பழிமொழிக்கும் வெட்கி, சிவபெருமானது சிறந்த புகழைத்துதித்து வணங்கி மிகவும் பல பலவாகச் சிந்திப்பாராயினர்.—எ-று.

சங்கிலியாரென்னும் பெண்ணின் காரணமாக நேர்ந்த துன்பத்தை யொழிக்கவல்லவர், பெண்ணாகிய உமாதேவியாரை யிடப்பாகத்திலுடைய பெருமானே யாகலான், 'மாதொர்பாகனார் மலர்ப்பத முன்னி - யிழுக்கு நீக்கிடவேண்டுமென்றிரங்தே' என்றும், அத்துன்பம் ஒழுக்கமின்மையாகிய அசத்தியத்தினால் விளைந்ததாகலான், 'எய்து வெந்துயர்க்கையறவினுக்கும்' என்றும், இவன் அசத்தியஞ்செய்தன னெனப்பலரும் பழிக்க நேருமாகலின், 'பழிக்கும்' என்றும், அவ்வொழுக்கமின்மைக்கும் பழிக்கும் உடம்பெடுத்துத் திரிவது மானக்கேடாகலின், 'வெள்கி' என்றும், அதனை நீக்கும்வகை சிறிதுந் தோன்றாமையின், 'பலபல நினைவார்' என்றுங் கூறினர். (உஎசு)

### திருவொற்றியூர் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

அழுக்குமெய்கொடுன்றிருவடியடைந்தேனதுவுநான்படப்பாலதொன்றானாற்
பிழுக்கைவாரியும்பால்கொள்வரடிகேள்பிழைப்பனாகிலுந்திருவடிப்பிழையேன்
வழுக்கிவீழினுந்திருப்பெயரல்லால்மற்றுநானறியேன்மறுமாற்றம்
ஒழுக்கவென்கணுக்கொருமருந்துரையாயொற்றியூரெனுமூருறைவானே

ஓதம்வந்துலவுங்கரைதன்மேலொற்றியூருறைசெல்வனைநாளும்
ஞாலந்தான்பரவப்படுகின்றநான்மறையங்கமோதியநாவன்
சீலந்தான்பெரிதும்மிகவல்லசிறுவன்வன்றொண்டனூரனுரைத்த
பாடல்பத்திவைவல்லவர்தாம்போய்ப்பரகதிதிண்ணநண்ணுவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

---

அங்கு நாதர்செய் யருளது வாக வங்கை கூப்பியா ரூர்தொழ
நினைந்தே, பொங்கு காதன்மீ ளாநிலை மையினாற் போது வார்வழி
காட்டமுன் போந்து, திங்கள் வேணியார் திருமுல்லை வாயில் சென்
றிறைஞ்சிநீ டியதிருப் பதிகஞ், சங்கி லிக்காக வென்கணை மறைத்தீ
ரென்று சாற்றிய தன்மையிற் பாடி.

(இ-ள்.) அவ்விடத்துச் சிவபெருமான் செய்தருளிய திருவருள் அவ்வாறிருக்க, திருவாரூரை அழகிய திருக்கரங்களைக்குவித்து வணங்கக் கருதி, பெருவிருப்பானது நீங்காத தன்மையினால் தம்முடன் வருகின்ற அடியார்கள் முன்னேவழிகாட்டச் சென்று, சந்திரனையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் வடதிருமுல்லைவாயிலென்னுந் திருப்பதியை யடைந்து வணங்கிச் சிறந்த திருப்பதிகத்தை "சங்கிலிக்காவென்கண் கொண்ட பண்ப" என்று அமைத்ததன்மையாகப் பாடியருளி.—எ-று.

நம்பியாரூரர் சிவபெருமானைத் தொழுததனால் ஒரு பயனுமெய்தப் பெறாமையின், 'அங்கு நாதர்செய்யருளதுவாக' என்று கூறினார்.

இதுமுதலிரண்டு பாடலுங் குளகம். (௨௭௭)

---

### வடதிருமுல்லைவாயில் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

திருவுமெய்ப்பொருளுஞ்செல்வமுமெனக்குன்சீருடைக்கழல்களென்றெண்ணி
யொருவரைமதியாதுறாமைகள்செய்துமூடியுமுறைப்பனாய்த்திரிவேன்
முருகமர்சோலைசூழ்திருமுல்லைவாயிலாய்வாயினாலுன்னைப்
பரவிடுமடியேன்படுதுயர்களையாய்பாசுபதாபரஞ்சுடரே.

விண்பணிந்தேத்தும்வேதியர்மாதர்வெருவிடவேழமொன்றுரித்தாய்
செண்பகச்சோலைசூழ்திருமுல்லைவாயிலாய்தேவர்தம்மரசே
தண்பொழிலொற்றிமாநகருடையாய்சங்கிலிக்காவென்கண்கொண்ட
பண்பநின்னடியேன்படுதுயர்களையாய்பாசுபதாபரஞ்சுடரே.

விரைதருமலர்மேலயனெடுமாலும்வெருவிடநீண்டவெம்மானைத்
திரைதருபுனல்சூழ்திருமுல்லைவாயிற்செல்வனைநாவலாரூர
னுரைதருமாலையோரஞ்சினோடைஞ்சுமுள்குளிர்ந்தேத்தவல்லார்க
ணரைதிரைமூப்புநடலையுமின்றிநண்ணுவர்விண்ணவர்க்கரசே.

திருச்சிற்றம்பலம்.

**சுவாமிபெயர் - மாசிலாமணியீசுவரர்**; தேவியார். **கோடியிடையம்மை.**

தொண்டை மானுக்கன் றருள்கொடுத் தருளுந் தொல்லைவ
ண்புகழ் முல்லைநா யகனைக், கொண்ட வெந்துயர் களைகெனப் பர
விக் குறித்த காதலி னெறிக்கொள வருவார், வண்டு லாமலர்ச் சோலை
கள் சூழ்ந்து மாட மாளிகை நீடுவெண் பாக்கங், கண்ட தொண்டர்க
ளெதிர்கொள வணைந்து காயுநாகத்தார் கோயிலை யடைந்தார்.

(இ-ள்.) தொண்டைமான் சக்கரவர்த்திக்குத் திருவருள்செய்தருளிய பழமையாகிய வளவிய புகழையுடைய திருமுல்லைவாயிலில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானை, தாமடைந்த வெவ்விய துன்பத்தைநீக்கி யருளுமென்று துதித்துப் பொருந்திய பேரன்போடுவழிக்கொண்டு செல்கின்றவர், வண்டுகள்மொய்க்கின்ற சோலைகள் சூழப்பெற்று, மேல்மாடங்களும் மாளிகைகளும் உயர்ந்திருக்கின்ற திருவெண்பாக்கமென்னுந் திருப்பதியை, தமது வருகையைக் கண்ட திருத்தொண்டர்கள் எதிர்கொண்டு வர அங்குச் சேர்ந்து, விஷச்சுவாலையையுடைய சர்ப்பாபரணத்தையணிந்த சிவபெருமானது திருக்கோயிலை யடைந்தருளினார்.—எ-று.

தொண்டைமானுக்கன் றருள்கொடுத்தருளுந் தொல்லைவண்புகழ்முல்லைநாயகர், என்பதன்வரலாறு—ஸ்ரீகாஞ்சீபுரத்தில் நீதிகோடாது செங்கோல்செலுத்திய தொண்டைமான் சக்கரவர்த்தியென்னு மரசர்பெருமான் பெரியோர்களால் க்ஷேத்திரமான்மியங்களைக் கேள்வியுற்று, அவற்றைத்தரிசிக்க விரும்பி, அரசாட்சியை அமைச்சரிடத்து ஒப்புவித்து, சதுரங்கசேனைகளும் புடைசூழச்சென்று, பலக்ஷேத்திரங்களைத் தரிசித்து இயன்றதிருப்பணி செய்துவரும் நாள்களில், திருமுல்லைவாயிலானது ஜீர்ணதிசையடைந்து முல்லைக்கொடிகளால் மூடப்பட்டிருக்க, அதனையுணராமல் அவ்வழியாகவரும் பொழுது, சூரியாஸ்தமனமாகவும், அரசர்பெருமான் அன்றிரவு அங்குச் சேனைகளுடன் தங்கியிருந்தனர்; இரவு பதினைந்துநாழிகைக்குமேல் ஒரு மணியோசை கேட்க, சக்கரவர்த்தியார் திடுக்கிட்டுத்தெளிந்து, இங்கு அருகிலுள்ள சிவாலயத்தில் அர்த்தஜாம பூசை நடக்கிறதுபோலுமென்று சிவத்தியானஞ்செய்து வணங்கியிருந்தனர். பின்பு, விடிந்தவுடன் மந்திரிகளைநோக்கி யறிவித்து அதனை விசாரிக்கும்படி கட்டளையிட, அவ்வாறே அவர்கள் விசாரிக்குங்கால் அங்குள்ளவர்கள் மந்திரிகளைப்பார்த்து, இங்குச்சிவாலயமில்லை; வேறு தேவாலயமுங்கிடையாது. ஆனால், இவ்வனத்திற்குச்சமீபத்திலுள்ள புழற்கோட்டமென்னுங் கிராமத்தில் சகலதுர்க்குணங்களும் பொருந்திய வாணன் ஓணன் என்னுமிரண்டு குறும்பரசர்கள் பகைவர்களைவென்று கொண்டுவந்த வெண்கலக்கபாடம்-பவளத்தூண்-எருக்கந்தூண் முதலியவற்றா லலங்கரிக்கப்பட்ட ஒரு கோட்டையில் கொடுங்

கோல்செலுத்தி வாழ்கின்றார்கள் ; யாங்களும் அவர்களால் துன்புற்றுக் காலங் கழிக்கின்றோமென்றுகூற, அதுகேட்ட மந்திரிகள் இன்றிரவுகேட்ட மணியோசை அக்கதவின் மணியோசையே யென்று கருதி அரசருக்குணர்த்த, அவரும் அக் கோட்டையைக் காண விரும்பிச், சதுரங்கசேனைகளும் புடைசூழ யானைமீதேறிச் சென்றனர்.

அதனை அவ்விருவரும் செய்குன்றிகளிலேறிப் பார்த்துக் கடுங்கோபங் கொண்டு, தாங்களடைந்துள்ள வயிரவக்கடவுளுபாசனைபலத்தினால் போர்செய்ய வெதிர்ந்தனர் ; அரசர்பெருமான் பலவகைச் சாந்தமொழிகூறியுங் கேளாததால் தாமும் எதிர்ந்து போர்செய்யத் தொடங்கவும், அக்குறும்பரசர்களின் சேனைகள்தோற்று முதுகிட்டோடின. இதனையவர்களறிந்து மறைந்து, கோட்டைக்குட்சென்று, வயிரவர் சந்நிதியையடைந்து வயிரவமந்திரத்தையுச்சரிக்க, அவ்வைரவக்கடவுள் ஒரு பூதத்தைப் படைத்துனையனுப்பினர், அதன் சகாயத்தினால் பின்னுமெதிர்ந்து போர் செய்தார்கள் ; அப்பூதமானது சக்கரவர்த்தியாரது சேனைகளை வாரியுண்டொழித்தது ; இதனை அரசன்பெருமானுணர்ந்து அஞ்சி,எஞ்சிய சேனைகளுடன் தாமேறியயானையை முல்லைக்காட்டின்வழியே விரைவாகச் செலுத்த, அங்குச் சிவபெருமான் தாம் மறைந்துள்ள முல்லைக்கொடியால் அவ்வியானைக்காலைத்தடுத்தருளினர். அதனையுணர்ந்த அரசர் யானைமேலிருந்தபடியே வாளையுருவி அக்கொடியை வெட்டினர்; அவ்வெட்டு, சிவபெருமான் றிருமுடியிற்படுதலால் உதிரம்பெருக,அரசர்நடுங்கி இறங்கிச் சோதித்துப்பார்த்தபொழுது, சிவலிங்கப்பெருமான்றிருமுடியில் வெட்டுண்டுஉதிரம்பெருகக்கண்டு பயந்து, பலவாறு துக்கித்து,தமதுயிரை நீக்கிக்கொள்ளவாளைக்கழுத்திற்பூட்டினர். உடனே சிவபெருமான் பிரத்தியக்ஷமாய்,அன்பனே ! நீ சிறிதும்அஞ்சேல்! நாம் வெட்டுப்படினும் மாசுஅடையேம், என்றும் மாசிலாமணியே, என்று கூறியருளித் தடுத்தருளினர். பெருமான் விரையவெழுந்தருளல்கண்டு, பின்றொடர்ந்தவர்களாய், வலப்புறத்தில் பார்வதியும், இடப்புறத்தில் திருநந்தி தேவருமாகக் காட்சிதந்தருளவே தேவர்கள் புஷ்பவருஷம் பொழிந்தார்கள். பின்பு சிவபெருமான் சக்கரவர்த்தியைப்பார்த்து நீ நமது நந்தியைத் துணைபெற்றுப் பகைவரைவென்று நமக்குத் திருப்பணி செய்யென்று கட்டளையிட்டுமறைந்தருளினர். அரசர்பெருமான் அவ்வாறே யானையேறிச்சென்று பகைவர்கோட்டையை முற்றுகைசெய்ய, திருநந்திதேவர் அங்கிருந்தபடியே திரும்பி ஹுங்காரசப்தத்தினால் அச்சேனைகளையும் பூதத்தையு மழித்தனர் பின் அரசர் அதிசுலபமாக அவ்விருவரையுங் கொன்று, கோட்டையையழித்து; க்கொண்டுவந்த பொருள்களில் வெள்ளெருக்குத்தூண் மிக அரும்பொருளாக விருந்தமைபற்றி, அத்தூணை அந்தராளமண்டபத்திலமைத்துச் சிவபெருமானுக்குத்திருக்கோயில் முதலிய பலதிருப்பணிகளையுங் குறைவறச்செய்து, சுவாமிக்கு ஸ்ரீமாசிலாமணி ஈசுவரரென்றும், அம்மையாருக்குக் கொடியிடைநாயகியாரென்றுந் திருநாமமிட்டுக் கும்பாபிஷேகஞ்செய்து சிலநாள்கள் வசித்திருந்து பின்தமது நகரஞ்சென்று செங்கோல்செலுத்திச் சிவபதமடைந்தனர், என்பதாம். (௨௭௮)

அணைந்த தொண்டர்க ளுடன்வல மாக வங்க ணாயகர் கோயின்முன் னெய்திக், குணங்க ளேத்தியே பரவியஞ் சலியாற் குவித்த

கைதலை மேற்கொண்டு நின்று, வணங்கி நீர்மகிழ் கோயிலு ளீரோ யென்ற வன்றொண்டர்க் கூன்றுகோ லருளி, யிணங்கி லாமொழி யாலுமேழ் போகி ரென்றி யம்பின ரேதிலார் போல.

(இ-ள்.) தம்முடன்வந்த திருத்தொண்டர்களுடன் பிரதக்ஷணஞ் செய்து சிவபெருமானது திருக்கோயிலின்முன் னடைந்து அவ்வெம்பெருமானுடைய அருட்குணங்களைத் துதித்து அஞ்சலியாகக்குவித்த திருக்கரங்களைச் சிரமேல்வைத்துத் திருமுன்னின்று வணங்கித் தேவரீர் மகிழ்வோடு திருக்கோயிலுள் எழுந்தருளியிருக்கின்றீரோ, என்று இரங்கிக்கூறி யருளிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குச் சிவபெருமான் ஒரு ஊன்றுகோலைக் கொடுத்தருளி, கடுமையாகிய வன்மொழியினால் அயலார்போல "யாமுமேளம் போகீர்" என்று கூறியருளினார்.—எ-று.

நம்பியாரூரர் சிவபெருமானைச் சிந்தித்து எமதாண்டவரே! தேவரீர் திருக்கோயிலுள்ளிருப்பின் எனது துன்பத்தைப்பார்த்துத் திருவருள்செய்யா தொழியீர் ; ஆதலால், நீரிங்கில்லீர்போலுமென்பார் 'நீர்மகிழ்கோயிலுளீரோ' என்றும், அவ்வாறிரக்கங்கொண்டு வேண்டியவர்க்குதவியாக ஊன்றுகோலைக் கொடுத்து இவருடன் பேசுதல் தகுதியன்றென்று கடுமொழியோடு வேறுபடுத்துக் கூறினரென்பார், 'வன்றொண்டர்க் கூன்றுகோலருளி - யிணங்கிலாமொழியாலுமேம் போகீரென்றியம்பின ரேதிலார்போல' என்றுங் கூறினார். சிவபெருமானது அருட்குணங்கள் எண்வகையாதல்பற்றி, குணங்கள் எனப்பன்மையாகக்கூறினார் ; அவை தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை என்பன.

காஞ்சிப்புராணம்.

"முடிவிலாற்றலைதன்வயத்தினைமுற்றுணர்ச்சியைபேருண்
மடிவிலாட்சியை தூயமேனியைமற்றியற்கையுணர்ச்சியை
படியிலாவியல்பாகநீங்கியபாசநோயைவரம்பிலின்
புடையையுன்னடியேங்களென்றுமுணக்கடைக்கலமையனே." என்பதனானுணர்க. (உஎகூ)

வேறு.

பிழையுளன பொறுத்திடுவ ரென்றெடுத்துப் பெண்பாகம்
விழைவடிவிற் பெருமானை வெண்பாக்க மகிழ்ந்தானை
யிழையெனமா சுணமணிந்த விறையானைப் பாடினார்
மழைதவழு நெடும்புரிசை நாவலூர் மன்னவனார்.

(இ-ள்.) மேகங்கள் தவழும் உயர்ந்த மதில்சூழ்ந்த திருநாவலூரர் தலைவராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள், "பிழையுளனபொறுத்திடுவர்" என்று முதலெடுத்து, பார்வதியை வாமபாகத்தில் விரும்பிக்கொண்டருளிய திருவுருவத்தை யுடையவரும், திருவெண்பாக்கமென்னுந் திருப்பதியில் மகிழ்ந்தெழுந்தருளியவரும், பாம்பை ஆபரணமாகவணிந்தவருமாகிய சிவபெருமானைத் திருப்பதிகம் பாடியருளினார்.—எ-று. (உஅ0)

## திருவெண்பாக்கம் - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

பிழையுளனபொறுத்திடுவரென்றடியேன்பிழைத்தக்கால்
பழியதனைப்பாராதேபடலமென்கண்மறைப்பித்தாய்
குழைவிரவுவடிகாதாகோயிலுளாயேயென்ன
வுழையுடையானுள்ளிருந்துளோம்போகீரென்றானே. (க)

இடையறியேன்றலையறியேனெம்பெருமான்சரணமென்பே
னடையுடையனம்மடியாரென்றவற்றைப்பாராதே
விடையுடையான்விடநாகன்வெண்ணீற்றன்புலியின்றோ
லுடையுடையானெனையுடையானுளோம்போகீரென்றானே. (உ)

செய்வினையொன்றறியாதேன்றிருவடியேசரணென்று
பொய்யடியேன்பிழைத்திடினும்பொறுத்திடநீவேண்டாவோ
பையரவாவிங்கிருந்தாயோவென்னப்பரிந்தென்னை
யுய்யவருள்செய்யவல்லானுளோம்போகீரென்றானே. (௩)

கம்பமருங்கரியுரியன்கறைமிடற்றன்காபாலி
செம்பவளத்திருவுருவன்சேயிழையோடுடனாகி
நம்பியிங்கேயிருந்தீரோவென்றுநான்கேட்டலுமே
யும்பர்தனித்துணையெனக்குளோம்போகீரென்றானே. (௪)

பொன்னிலங்குநறுங்கொன்றைபுரிசடைமேற்பொலிந்திலங்க
மின்னிலங்குநுண்ணிடையாள்பாகமாவெருதேறித்
துன்னியிருபாலடியார்தொழுதேத்தவடியேனு
முன்னதமாய்க்கேட்டலுமேயுளோம்போகீரென்றானே. (௫)

கண்ணுதலாற்காமனையுங்காய்ந்ததிறற்கங்கைமலர்
தெண்ணிலவுசெஞ்சடைமேற்றிமலர்ந்தகொன்றையினன்
கண்மணியைமறைப்பித்தாயிங்கிருந்தாயோவென்ன
வொண்ணுதலிபெருமானாருளோம்போகீரென்றானே. (௬)

பார்நிலவுமறையோரும்பத்தர்களும்பணிசெய்யத்
தார்நிலவுநறுங்கொன்றைச்சடையனார்தாங்கரிய
கார்நிலவுமணிமிடற்றீரிங்கிருந்தீரோவென்ன
ஆரரவமரைக்கசைத்தானுளோம்போகீரென்றானே. (௭)

வாரிடங்கொள்வனமுலையாடன்னோடுமயானத்துப்
பாரிடங்கள்பலசூழப்பயின்றாடும்பரமேட்டி
காரிடங்கொள்கண்டத்தன்கருதுமிடந்திருவொற்றி
யூரிடங்கொண்டிருந்தபிரானுளோம்போகீரென்றானே. (௮)

பொன்னவிலுங்கொன்றையினாய்போய்மகிழ்க்கீழிருவென்று
சொன்னவெனைக்காணாமேசூளுறவுமகிழ்க்கீழே
யென்னவல்லபெருமானேயிங்கிருந்தாயோவென்ன
வொன்னலரைக்கண்டாற்போலுளோம்போகீரென்றானே. (௯)

மான்றிகழுஞ்சங்கிலியைத்தந்துவருபயன்களெல்லாந்
தோன்றவருள்செய்தளித்தாயென்றுரைக்கவுலகமெல்லா
மீன்றவனேவெண்கோயிலிங்கிருந்தாயோவென்ன
வூன்றுவதோர்கோலருளியுளோம்போகீயென்றானே. (கo)

ஏராரும்பொழிவிலவுவெண்பாக்கமிடங்கொண்ட
காராருமிடற்றானைக்காதலித்திட்டன்பினொடுஞ்
சீராருந்திருவாரூர்ச்சிவன்பேர்சென்னியில்வைத்த
வாரூரன்றமிழ்வல்லார்க்கடையாவல்வினைதானே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வெண்பாக்கநாதர் ; தேவியார்-கனிவாய்மொழியம்மை.

---

முன்னின்று முறைப்பாடு போன்மொழிந்த மொழிமாலைப்
பன்னுமிசைத் திருப்பதிகம் பாடியபின் பற்றாய
வென்னுடைய பிரானருளிங் கித்தனைகொ லாமென்று
மன்னுபெருந் தொண்டருடன் வணங்கியே வழிக்கொள்வார்.

(இ-ள்.) திருமுன்னின்று முறையிடுவதுபோலக் கூறியருளிய சொன் மாலையாகிய புகழப்பட்ட இனிய இசைபொருந்திய திருப்பதிகம்பாடியருளியபின்பு, உயிர்த்துணையாயுள்ள எமது சிவபெருமானுடைய திருவருள் இவ்வளவோவென்று கூறி, நிலைபெற்ற சிறந்த திருத்தொண்டர்களோடும் வணங்கி அவ்விடத்தினின்றுஞ் செல்வாராயினார்.—எ-று.

கண்மறைந்து பரதவிக்கு மெனக்கு அக்கண்தெரியத் திருவருள்புரிவதொன்று வேண்டின், "கண்ணைக்கெடுத்ததெய்வங் கோலைக்கொடுத்தது" என்பதுபோல, ஊன்றுகோலைக் கொடுத்து ஒதுக்கியருளினர் ; இதுதான்போலு மவ்வெம்பெருமானுக்கு மெனக்குமுள்ள சம்பந்தமென்று வணங்கிச் சென்றனரென்பார், 'பற்றாய வென்னுடைய பிரானருளிங்கித்தனைகொலாம்' என்று கூறினர். (உஅக)

அங்கணர்தம் பதியதனை யகன்றுபோ யன்பருடன்
பங்கயப்பூந் தடம்பணைசூழ் பழையனூ ருழையெய்தித்
தங்குவா ரம்மைதிருத் தலையாலே வலங்கொள்ளுந்
திங்கண்முடி யாராடுந் திருவாலங் காட்டினயல்.

(இ-ள்.) சிவபெருமான் வீற்றிருந்தருளும் அத்திருவெண்பாக்கத்தினின்று நீங்கி, தாமரைத்தடாகங்களும் வயல்களுஞ் சூழ்ந்த பழையனூரில் அடியார்களுடன் அடைந்து, காரைக்காலம்மையார் தமது தலையினால் பிரதக்ஷணஞ்செய்தருளிய சந்திரசேகரராகிய சிவபெருமான் திருநடனஞ்செய்தருளுந் திருவாலங்காட்டினருகில் தங்குவாராயினார்.—எ-று. (உஅஉ)

முன்னின்று தொழுதேத்தி முத்தாவென் றெடுத்தருளிப்
பன்னுமிசைத் திருப்பதிகம் பாடிமகிழ்ந் தேத்துவா
ரங்கின்று வணங்கிப்போய்த் திருவூற லமர்ந்திறைஞ்சிக்
கன்னிமதின் மணிமாடக் காஞ்சிமா நகரணைந்தார்.

(இ-ள்.) எதிரில்நின்று வணங்கித் துதித்து, "மூத்தா" என்று முதலெடுத்து, இசைபொருந்திய திருப்பதிகம் பாடியருளி மகிழ்வுற்றுத் துதிக்கின்றவராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் அங்குநின்றும் வணங்கிச்சென்று, தக்கோலமென்னும் திருப்பதியை யடைந்து வணங்கி, அழியாத மதில்சூழ்ந்த அழகிய மாளிகைகளை யுடைய ஸ்ரீ காஞ்சிபுரமென்னும் திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று. (உ௮௩)

திருவாலங்காடு - பண் - பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

முத்தாமுத்திதரவல்லமுகிழ்மென்முலையாளுமைபங்கா
சித்தாசித்தித்திறங்காட்டுஞ்சிவனேதேவர்சிங்கமே
பத்தாபத்தர்பலர்போற்றும்பரமாபழையனூர்மேய
வத்தாவாலங்காடாவுன்னடியார்க்கடியேனாவேனே.

பத்தர்சித்தர்பலரேத்தும்பரமன்பழையனூர்மேய
வத்தனாலங்காடன்றனடிமைத்திறமேயன்பாகிச்
சித்தர்சித்தம்வைத்தபுகழ்ச்சிறுவனூரனொண்டமிழ்கள்
பத்தும்பாடியாடுவார்பரமனடிபோய்ப்பணிவாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - ஊர்த்ததாண்டவேசுவரர்.

தேவியார் - வண்டார்குழலியம்மை.

தேனிலவு பொழிற்கச்சித் திருக்காமக் கோட்டத்தி
னூனில்வள ருயிர்க்கெல்லா மொழியாத கருணையினா
லானதிரு வறம்புரக்கு மம்மைதிருக் கோயிலின்முன்
வானில்வளர் திருவாயில் வணங்கினார் வன்றொண்டர்.

(இ-ள்.) தேன்பொருந்திய மலர்களையுடைய சோலைசூழ்ந்த ஸ்ரீ காஞ்சிபுரத்திலுள்ள திருக்காமக் கோட்டமென்னும் ஆலயத்தில், உடம்போடுகூடிச் சீவித்திருக்கின்ற எல்லா வுயிர்களுக்கும் நீங்காத பெருங்கருணையினால், இன்பந்தருவதாகிய முப்பத்திரண்டு தருமங்களைச் செய்து காத்தருளிய ஸ்ரீ காமாட்சியம்மையாரது திருக்கோயிலின் முன்னுள்ள விண்ணுலகை யளாவிய திருவாயிலை ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் வணங்கியருளினார்.—எ-று. (உ௮௪)

தொழுதுவிழுந் தெழுந்தருளாற் றுதித்துப்போய்த் தொல்லுலக
முழுதுமளித் தழித்தாக்கு முதல்வர்திரு வேகம்பம்
பழுதிலடி யார்முன்பு புகப்புக்குப் பணிகின்று
ரிழுதையேன் றிருமுன்பே யென்மொழிவே னென்றிறைஞ்சி.

(இ-ள்.) பூமியில் சாஷ்டாங்கமாக வணங்கியெழுந்து திருவருளினால் துதித்துச்சென்று, பழமையாகிய எல்லாவுலகங்களையும் படைத்துக்காத்து அழிக்கின்ற சிவபெருமானது திருவேகாம்பரமென்னுந் திருக்கோயிலைக் குற்றமற்றஅடியார்கள் முன்னே செல்ல அடைந்து வணங்குகின்றவர், பொய்யுநிறைந்த அடியேன் தேவரீரது சந்நிதியில் யாது சொல்வேனென்று வணங்கி.—எ-று.

இழுதையேன்—அறிவில்லேன் எனினுமாம். சிவபெருமானொருவரே அயனாகத் திருவுருக்கொண்டு படைத்தும், அரியாகத் திருவுருக்கொண்டு காத்தும், அரனாகத் திருவுருக்கொண்டழித்தும் முத்தொழில் புரிந்து அம்மூவர்க்குந் தலைவரா யெழுந்தருளி யுள்ளவரென்பார், 'முழுதுமளித் தழித்தாக்கு முதல்வர்' என்று கூறினார்,

திருவிளையாடற்புராணம்.

" மலரயனாகிமூன்றுவையமும்படைத்துமாலா
யலைவறநிறுத்திமுக்கணாதியாயழித்தம்மூவர்
தலைவனாய்ப்பரமாகாசசரீரியாய்முதலீறின்றித்
தொலைவருஞ்சோதியாமிச்சுந்தரவிலிங்கந்தன்னில் "

என்பதனானுணர்க. இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௨௮௫)

விண்ணாள்வா ரமுதுண்ண மிக்கபெரு விடமுண்ட
கண்ணாளா கச்சியே கம்பனே கடையானே
னெண்ணாத பிழைபொறுத்தின் றியான்காண வெழிற்பவள
வண்ணாகண் ணளித்தருளா யெனவீழ்ந்து வணங்கினார்.

(இ-ள்.) விண்ணுலகத்தில் வாழுந் தேவர்களனைவரும் அமுதுண்ணச் செய்து (அவர்களைக் கொல்லவெழுந்த) மிகக்கொடிய ஆலாகலவிஷத்தை யுண்டருளிய அருட்கண்ணரே! ஸ்ரீ காஞ்சிப்பதியி லெழுந்தருளிய திருவேகம்பநாதரே! அழகிய பவளம்போலுஞ் சிவந்த திருமேனியையுடைய பெருமானே! கடையேனாகிய சிறியேன் நினையாமற்செய்த குற்றத்தைப் பொறுத்து, இன்று அடியேன் தேவரீரைத் தரிசிக்கும்பொருட்டுக் கண்கொடுத்தருள்வீராகவென்று நிலமுறவிழுந்து வணங்கினார்.—எ-று.

தமது நலத்தைக் கருதாது பிறர் நலத்தைக் கருதி விடத்தையுண்டு தேவர்களுக்கு அமுதத்தைக் கொடுத்தருளினமைபோல, எளியேன் செய்த குற்றங்களைப் பொறுத்துக் கண் கொடுத்தருளவேண்டு மென்பார், 'விண்ணாள்வாரமுதுண்ண மிக்க பெருவிட முண்ட கண்ணாளா' என்றும், 'எண்ணாத பிழைபொறுத்து' என்றும்; 'கண்ணளித்தருளாய்' என்றுங் கூறினார். (௨௮௬)

பங்கயச்செங் கைத்தளிராற் பனிமலர்கொண் டருச்சித்துச்
செங்கயற்கண் மலைவல்லி பணிந்தசே வடிநினைந்து
பொங்கியவன் பொடுபரவிப் போற்றியவா ரூரருக்கு
மங்கைதழு வக்குழைந்தார் மறைந்தவிடக் கண்கொடுத்தார்.

(இ-ள்.) கயல்மீன்போலுஞ் சிவந்த திருக்கண்களையுடைய ஸ்ரீ காமாட்சியம்மையார் தாமரைமலர்போன்ற சிவந்த திருக்கரங்களினால் குளிர்ந்த மலர்களைக் கொண்டு அருச்சனைசெய்து வணங்கிய திருவடிகளைச் சிந்தித்து, மிக்க பேரன்புடன் துதித்துப் போற்றிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு, அவ்வெம்பெருமாட்டியார் தழுவக்குழைந்த திருமேனியையுடைய திருவேகம்பநாதர் மறைந்திருந்த இடக்கண் விளங்கச் செய்தருளினார்.—எ-று. (௨௮௭)

ஞாலந்தா னிடந்தவனு நளிர்விசும்பு கடந்தவனு
மூலந்தா னறிவரியார் கண்ணளித்து முலைச்சுவட்டுக்
கோலந்தான் காட்டுதலுங் குறுகிவிழுந் தெழுந்துகளித்
தாலந்தா னுகந்தவனென் றெடுத்தாடிப் பாடினார்.

(இ-ள்.) (பன்றியுருவங்கொண்டு) பூமியைக் கிண்டுசென்ற விஷ்ணுவினுலும், (அன்னவுருவங்கொண்டு) குளிர்ந்த விண்ணுலகைக் கடந்துசென்ற பிரமனுலும் திருவடியையுந் திருமுடியையுங் காண்பதற்கரியவராகிய சிவபெருமான் இடக்கண் கொடுத்தருளி, மூலைத்தழும்பும் (வளைத்தழும்பும்) அணிந்த தமது திருக்கோலத்தைக் காட்டியருளவும், சமீபித்து நிலமுற நமஸ்கரித்தெழுந்து களிப்புற்று, "ஆலந்தானுகந்தமுதுசெய்தான்" என்று முதலெடுத்துத் திருப்பதிகம் பாடி ஆநந்தக்கூத்தாடியருளினர்.—எ-று. (௩௰௮)

---

திருவேகம்பம் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

ஆலந்தானுகந்தமுதுசெய்தானை யாதியையமரர்தொழுதேத்துஞ், சீலந்தான்பெரிதும்முடையானைச் சிந்திப்பாரவர்சிந்தையுளானை, யேலவார்குழலாளுமைநங்கை யென்றுமேத்திவழிபடப்பெற்ற, காலகாலனைக்கம்பனெம்மானைக் காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (௧)

உற்றவர்க்குதவும்பெருமானை யூர்வதொன்றுடையானும்பர்கோனைப், பற்றினார்க்கென்றும்பற்றவன்றன்னைப் பாவிப்பார்மனம்பாவிக்கொண்டானை, யற்றமில்புகழாளுமைநங்கை யாதரித்துவழிபடப்பெற்ற, கற்றைவார்சடைக்கம்பனெம்மானைக் காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (௨)

திரியும்முப்புரந்தீப்பிழம்பாகச் செங்கண்மால்விடைமேற்றிகழ்வானைக், கரியினுரிபோர்த்துகந்தானைக் காமனைக்கனலாவிழித்தானை, வரிகொள்வெள்வளையாளுமைநங்கை மருவியேத்திவழிபடப்பெற்ற, பெரியகம்பனையெங்களபிரானைக் காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (௩)

குண்டலந்திகழ்காதுடையானைக் கூற்றுதைத்தகொடுந்தொழிலானை, வண்டலம்புமலர்க்கொன்றையினானை வாளராமதிசேர்சடையானைக், கெண்டையந்தடங்கண்ணுமைநங்கை கெழுமியேத்திவழிபடப்பெற்ற, கண்டநஞ்சுடைக்கம்பனெம்மானைக் காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (௪)

வெல்லும்வெண்மழுவொன்றுடையானை வேலைநஞ்சுண்டவித்தகன்றன்னை, யல்லல்தீர்த்தருள்செய்யவல்லானை யருமறையவையங்கம்வல்லானை, யெல்லையில்புகழாளுமைநங்கை யென்றுமேத்திவழிபடப்பெற்ற, நல்லகம்பனையெங்கள்பிரானைக் காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (௫)

திங்கள்தங்கியசடையுடையானைத்தேவதேவனைச்செழுங்கடல்வளருஞ், சங்கவெண்குழைக்காதுடையானைச் சாமவேதம்பெரிதுகப்பானை, மங்கைநங்கைமலைமகள்கண்டு மருவியேத்திவழிபடப்பெற்ற, கங்கையாளனைக்கம்பனெம்மானைக் காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (௬)

விண்ணவர்தொழுதேத்தநின்றானை வேதந்தான்விரித்தோதவல்லானை, நண்ணினார்க்கென்றுநல்லவன்றன்னை நாளுநாமுகக்கின்றபிரானை, யெண்ணில்தொல்புகழாளுமைநங்கை யென்றுமேத்திவழிபடப்பெற்ற, கண்ணுமூன்றுடைக்கம்பனெம்மானைக் காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (எ)

சிந்தித்தென்றுநினைந்தெழுவார்கள் சிந்தையிற்றிகழுஞ்சிவன்றன்னைப், பந்தித்தவினைப்பற்றறுப்பானைப் பாலொடானைஞ்சுமாட்டுகந்தானை, யந்தமில்புகழாளுமைநங்கை யாதரித்துவழிபடப்பெற்ற, கந்தவார்சடைக்கம்பனெம்மானைக் காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (அ)

வரங்கள்பெற்றுழல்வாளரக்கர்தம் வாலியபுரமூன்றெரித்தானை, நிரம்பியதக்கன்றன்பெருவேள்வி நிரந்தரஞ்செய்தநிற்கண்டகனைப், பரந்ததொல்புகழாளுமைநங்கை பரவியேத்திவழிபடப்பெற்ற, கரங்களெட்டுடைக்கம்பனெம்மானைக் காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (௯)

எள்கலின்றியிமையவர்கோனை யீசனைவழிபாடுசெய்வாள்போ, லுள்ளத்துள்கியுகந்துமைநங்கை வழிபடச்சென்றுநின்றவாகண்டு, வெள்ளங்காட்டிவெருட்டிடவஞ்சி வெருவியோடித்தழுவிவெளிப்பட்ட, கள்ளக்கம்பனையெங்கள்பிரானைக் காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (௧0)

பெற்றமேறுகந்தேறவல்லானைப் பெரியவெம்பெருமானென்றெப்போதுங், கற்றவர்பரவப்படுவானைக் காணக்கண்ணடியேன்பெற்றதென்று, கொற்றவன்கம்பன்கூத்தனெம்மானைக் குளிர்பொழிற்றிருநாவலாரூர, னற்றமிழிவையீரைந்தும்வல்லார் நன்னெறியுலகெய்துவர்தாமே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - ஸ்ரீ ஏகாம்பரநாதர்; தேவியார் - ஸ்ரீ காமாக்ஷியம்மை.

---

பாடிமிகப் பரவசமாய்ப் பணிவார்க்குப் பாவையுட
னீடியகோ லங்காட்ட நிறைந்தவிருப் புடனிறைஞ்சிச்
சூடியவஞ் சலியினராய்த் தொழுதுபுறம் போந்தன்பு
கூடியமெய்த் தொண்டருடன் கும்பிட்டங் கினிதமர்வார்.

(இ-ள்.) திருப்பதிகம்பாடியருளிப் பரவசப்பட்டு வணங்கும் ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு முன்னே (சிவபெருமான்) உமாதேவியாருடன் சிறந்து வீற்றிருந்தருளுந் திருக்கோலத்தைக் காட்டியருள, அவர் தமதுள்ளத்தில் நிறைந்த பேரன்புடன் வணங்கி, சிரசிற்குவித்த அஞ்சலியஸ்தராய்ப் பணிந்து, புறத்திற்சென்று அன்புபொருந்திய மெய்யடியார்களோடும் வணங்கி அங்கு இனிமையோடு எழுந்தருளியிருந்தார்.—எ-று. (௨௮௯)

மாமலையாண் முலைச்சுவடும் வளைத்தழும்பு மணிந்தமதிப்
பூமலிவார் சடையாரைப் போற்றியரு ளதுவாகத்

தேமலர்வார் பொழிற்காஞ்சித் திருநகரங் கடந்தகல்வார்
பாமலர்மா லைப்பதிகந் திருவாரூர் மேற்பரவி.

(இ-ள்.) பெரிய பர்வதராஜபுத்திரியாகிய ஸ்ரீகாமாட்சியம்மையாரது மூலைத்தழும்பும் வளைத்தழும்புமணிந்தருளிய இளம்பிறையுங் கொன்றைமலர்மாலையுந்தரித்த சடைமுடியையுடைய சிவபெருமானைத் துதித்துத் திருவருளவ்வாறிருக்க, தேன்பொருந்திய மலர்களையுடைய உயர்ந்த சோலைசூழ்ந்த ஸ்ரீ காஞ்சிபுரத்தை நீங்கிச் செல்கின்றவர், செய்யுட்களாகிய மலர்களால் தொடுக்கப்பட்ட திருப்பதிகமாலையைத் திருவாரூர்த் திருப்பதியின்மேற் பாடித் துதித்து.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (உ௬௦)

அந்தியுநண் பகலுமென வெடுத்தார்வத் துடனசைவா
லெந்தைபிரான் றிருவாரூ ரென்றுகொலெய் துவதென்று
சந்தவிசை பாடிப்போய்த் தாங்கரிய வாதரவு
வந்தணைய வன்பருடன் மகிழ்ந்துவழிக் கொள்கின்றார்.

(இ-ள்.) "அந்தியு நண்பகலும்" என்று முதலெடுத்துப் பேரன்புடன் மனநெகிழ்ச்சியினால் "தென்றிருவாரூர்புக் கெந்தை பிரானாரை யென்று கொலெய்துவதே" என்று இறுதியிலமைத்து இசையமைந்த திருப்பதிகம் பாடிச் சென்று, தாங்குதற்கரிய பெருவிருப்புவந்துகூட, திருத்தொண்டர்களுடன் மகிழ்வுற்றுச் செல்வாராயினார். — எ-று.

திருவாரூரைப் பிரிந்து நெடுநாளாயினமையான், அதனைத் தரிசிக்கவேண்டுமென்னும் பெருவிருப்பானது முற்பட்டெழுந்தமை கருதி, 'எந்தை பிரான் றிருவாரூரென்றுகொலெய்துவது' என்று கூறினார். (உ௬௧)

திருவாரூர் - பண் - புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

அந்தியுநண்பகலுமஞ்சுபதஞ்சொல்லி
முந்தியெழும்பழையவல்வினைமூடாமுன்
சிந்தைபராமரியாத்தென்றிருவாரூர்புக்
கெந்தைபிரானாரையென்றுகொலெய்துவதே.

மின்னெடுஞ்செஞ்சடையான்மேவியவாரூரை
நன்னெடுங்காதன்மையாளுவலர்கோனூரன்
பன்னெடுஞ்சொன்மலர்கொண்டிட்டனபத்தும்வல்லார்
பொன்னுடைவிண்ணுலகம்நண்ணுவர்புண்ணியரே.

திருச்சிற்றம்பலம்.

மன்னுதிருப் பதிகடொறும் வன்னியொடுங் கூவிளமுஞ்
சென்னிமிசை வைத்துவந்தார் கோயிலின்முன் சென்றிறைஞ்சிப்
பன்னுதமிழ்த் தொடைசாத்திப் பரவியே போந்தணைந்தா
ரன்னமலி வயற்றடங்கள் சூழ்ந்ததிரு வாமாத்தூர்.

(இ-ள்.) நிலைபெற்ற திருப்பதிகள் தோறும் வன்னிப்பத்திரத்தையும் வில்வப்பத்திரத்தையுந் திருமுடியிலணிந்து மகிழ்ந்தெழுந்தருளிய சிவபெருமா

னது திருக்கோயில்களின் முன்சென்று வணங்கி, புகழ்ந்து சொல்லப்பட்ட தமிழ்த்திருப்பதிகம் பாடித்துதித்து அன்னங்கள் நிறைந்த வயல்களுந் தடாகங்களுஞ் சூழ்ந்த திருவாமாத்தூரென்னுந் திருப்பதியைச் சென்றடைந்தருளினர்.

அங்கணரை யாமாத்தூ ரழகர்தமை யடிவணங்கித்
தங்குமிசைத் திருப்பதிகம் பாடிப்போய்த் தாரணிக்கு
மங்கலமாம் பெருந்தொண்டை வளநாடு கடந்தணைந்தார்
செங்கண்வள வன்பிறந்த சீர்நாடு நீர்நாடு.

(இ-ள்.) அருட்கண்ணரும், திருவாமாத்தூரி லெழுந்தருளிய அழகருமாகிய சிவபெருமானைத் திருவடிகளில் வணங்கி இசையமைந்த திருப்பதிகம் பாடிச்சென்று, உலகத்தில் மங்கலகரமாக விளங்குகின்ற சிறந்த தொண்டைவளநாட்டை நீங்கி, கோச்செங்கட்சோழநாயனர் அவதரித்த சிறப்பு மிக்க சோழநாட்டை யடைந்தருளினர்.—எ-று.

'தாரணிக்கு மங்கலமாம்' என்பதற்கு, பூமிதேவியாகிய பெண்ணுக்குத் திருமங்கிலியம்போல விளங்கும், எனப்பொருள்கூறினும் பொருந்தும். (உகூரு)

அந்நாட்டின் மருங்குதிரு வரத்துறையைச் சென்றெய்தி
மின்னுரும் படைமழுவார் விரைமலர்த்தாள் பணிந்தெழுந்து
சொன்மாலை மலர்கல்வா யகிலென்னுந் தொடைசாத்தி
மன்னுர்வத் திருத்தொண்ட ருடன்மகிழ்ந்து வைகினர்.

(இ-ள்.) அச்சோழ நாட்டினருகிலுள்ள திருநெல்வாயிலரத்துறை யென்னுந் திருப்பதியைச் சென்றடைந்து, மின்போல் விளங்கும் மழுப்படையையுடைய சிவபெருமானது மணம்பொருந்திய தாமரை மலர்போன்ற திருவடிகளைச் சாஷ்டாங்கமாக வணங்கி யெழுந்து, இனிய சொற்களாகிய மலர்களால் தொடுக்கப்பட்ட பாமாலையாகிய "கல்வாயகில்" என்னு முதலையுடைய திருப்பதிகத்தை யணிந்து, நிலைபெற்ற அன்பினையுடைய திருத்தொண்டர்களுடன் களிப்புற்று அங்கு வசித்தருளினர்.—எ-று. (உகூசா)

---

திருநெல்வாயில் அரத்துறை - பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்.

கல்வாயகிலுங்கதிர்மாமணியுங்
கலந்துந்திவருந்நிவவின்கரைமேல்
நெல்வாயிலரத்துறைநீடுறையு
நிலவெண்மதிசூடியநின்மலனே,
நல்வாயில்செய்தார்நடந்தாருடுத்தார்
நரைத்தாரிறந்தாரென்றுநானிலத்திற்
சொல்வாய்கழிகின்றதறிந்தடியேன்
தொடர்ந்தேனுய்யப்போவதோர்சூழ்ல்சொல்லே.

நீரூருநெடுவயல்சூழ்புறவி
னெல்வாயிலரத்துறைநின்மலனை
தேரூர்நெடுவீதிநன்மாடமலி
தென்னாவலர்கோனடித்தொண்டனணி
யாரூரனுரைத்தனநற்றமிழின்
மிகுமாலையோர்பத்திவைகற்றுவல்லார்
காரூர்களிவண்டறையானைமன்ன
ரவராகியோர்விண்முழுதாள்பவரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-அரத்துறைநாதர் ; தேவியார்-ஆனந்தநாயகியம்மை

---

பரமர்திரு வரத்துறையைப் பணிந்துபோய்ப் பலபதிகள்
விரவிமழ விடையுயர்த்தார் விரைமலர்த்தா டொழுதேத்தி
யுரவுநீர்த் தடம்பொன்னி யடைந்தன்ப ருடனாடி
யரவணிந்தா ரமர்ந்ததிரு வாவடுதண் டுறையணைந்தார்.

(இ-ள்.) சிவபெருமான் வீற்றிருந்தருளூந் திருநெல்வாயிலரத்துறையை வணங்கிச்சென்று பல திருப்பதிகளையடைந்து, இளமைபொருந்திய இடபத்தைக் கொடியாகவுயர்த்திய சிவபெருமானது நறுமணங் கமழூந் தாமரைமலர் போன்ற திருவடிகளை வணங்கித் துதித்து, மிக்க நீரையுடைய பெரிய காவிரிநதியையடைந்து அடியார்களுடன் ஸ்நானஞ்செய்து, பாம்பை யாபரணமாக வணிந்த சிவபெருமா னெழுந்தருளிய திருவாவடுதுறை யென்னுந் திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று.

காவிரிநதி சப்தநதி தீர்த்தங்களு ளொன்றென்பார், 'உரவுநீர்த்தடம் பொன்னி' என்று கூறினார், (உகூ)

அங்கணைவார் தமையடியா ரெதிர்கொள்ளப் புக்கருளிப்
பொங்குதிருக் கோயிலினைப் புடைவலங்கொண் டுள்ளணைந்து
கங்கைவாழ் சடையாயோர் கண்ணிலே னெனக்கவல்வா
ரிங்கெனக்கா ருறவென்னுந் திருப்பதிக மெடுத்திசைத்தார்.

(இ-ள்.) அத்திருப்பதியில் அடைகின்ற ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளை அங்குள்ள திருத்தொண்டர்கள் எதிர்கொண்டழைத்து வரச்சென்று, சிறந்த திருக்கோயிலை அருகில் வலமாகவந்து உள்ளேபுகுந்து, ஒரு கண்ணிலாதிருக்கின்றேனென்று வருந்துகின்றவராய், "கங்கைவாழ் சடையாய்" என்று முதல் தொடங்கி, "ஆரெனக் குறவமரர்களேறே" என்னு மிறுதியையுடைய திருப்பதிகத்தைப் பாடியருளினார்.—எ-று.

உயிர்க்குற்ற துணையாவார் தேவரீரையன்றி வேறின் றென்பார், 'இங் காருறவு' என்று கூறினார். (உகக)

திருவாவடுதுறை - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

கங்கைவாழ்சடையாய்கணநாதாகாலகாலனைகாமனுக்கனலே
பொங்குமாகடல்விடமிடற்றானேபூதநாதனேபுண்ணியாபுனிதா
செங்கண்மால்விடையாய்தெளிதேனேதீர்த்தனேதிருவாவடுதுறையு
ளங்கணாவெனையஞ்சலென்றருளாயாரெனக்குறவமரர்களேறே.

வெண்டலைபிறைகொன்றையுமரவும்வேரிமத்தமும்விரவிமுன்முடித்த
விண்டைமாமலர்ச்செஞ்சடையானையீசனைத்திருவாவடுதுறையு
ளண்டவாணனைச்சிங்கடியப்பனணுக்கவன்றொண்டனூர்வத்தாலுரைத்த
தண்டமிழ்மலர்பத்தும்வல்லார்கள்சாதலும்பிறப்புமறுப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-**ஸ்ரீ மாசிலாமணியீசுவரர்** ; தேவியார் - **ஒப்பிலாமுலையம்மை.**

---

திருப்பதிகங் கொடுபரவிப் பணிந்துதிரு வருளாற்போய்
விருப்பினொடுந் திருத்துருத்தி தனைமேவி விமலர்கழ
லருத்தியினாற் புக்கிறைஞ்சி யடியேன்மே லுற்றபிணி
வருத்தமெனை யொழித்தருள வேண்டுமென வணங்குவார்.

(இ-ள்.) திருப்பதிகம் பாடித்துதித்து வணங்கிச் சிவபெருமான் றிருவருளினால் அங்கு நின்றும் நீங்கி, பெருவிருப்போடுந் திருத்துருத்தியென்னுந் திருப்பதியையடைந்து, சிவபெருமானது திருவடிகளை அன்புடன் சென்றுவணங்கி அடியேன்மேலடைந்த நோய் வருத்தத்தினின்றும் என்னை நீக்கி யாண்டருள வேண்டுமென்று வணங்குவாராயினார்.—எ-று. (௨௯௭)

பரவியே பணிந்தவர்க்குப் பரமர்திரு வருள்புரிவார்
விரவியவிப் பிணியடையத் தவிர்ப்பதற்கு வேறாக
வரமலர்வண் டறைதீர்த்த வடகுளத்துக் குளியென்னக்
கரவிறிருத் தொண்டர்தாங் கைதொழுது புறப்பட்டார்.

(இ-ள்.) துதித்து வணங்கிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளுக்குச் சிவபெருமான் பெருங்கருணை புரிகின்றவராய், உன்னை யடைந்த இந்நோய் முழுவதும் நீங்கும்படி செய்வதற்கு, சிறந்த மலர்களில் வண்டுகள் சப்திக்கின்ற வடபாலுள்ளதீர்த்தத்தில் மூழ்குவாயென்று திருவாய்மலர்ந்தருள, மெய்த்தொண்டராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் தமது திருக்கரங்களைக்கூப்பி வணங்கிச் சென்றருளினார்.—எ-று. (௨௯௮)

மிக்கபுனற் றீர்த்தத்தின் முன்னணைந்து வேதமெலாந்
தொக்கவடி வாயிருந்த துருத்தியார் தமைத்தொழுது
புக்கதனின் மூழ்குதலும் புதியபிணி யதுநீங்கி
யக்கணமே மணியொளிசேர் திருமேனி யாயினார்.

(இ-ள்.) மிக்க நீரையுடைய அவ்வடபாற்றீர்த்தத்தின் எதிரிலடைந்து, வேதத்திற்கூறும் முடிபுகளனைத்துமமைந்த திருவுருவமாக வெழுந்தருளிய

திருத்துருத்திநாதரை வணங்கிச்சென்று அத்தீர்த்தத்தில் முழுகவும், புதிதாக வந்தடைந்த அந்நோயொழிந்து, அப்பொழுதே மாணிக்கத்தி னொளிபோல் விளங்குகின்ற திருமேனியை யுடையவராயினார்.—எ-று. (௨௯௯)

கண்டவர்க ளதிசயிப்பக் கரையேறி யுடைபுனைந்து
மண்டுபெருங் காதலினாற் கோயிலினை வந்தடைந்து
தொண்டரெதிர் மின்னுமா மேகமென்னுஞ் சொற்பதிக
மெண்டிசையு மறிந்துய்ய வேழிசையா லெடுத்திசைத்தார்.

(இ-ள்.) பார்த்தவர்கள் அதிசயமுறும்படி கரையிலேறி வஸ்திரமணிந்து மிக்க பேரன்பினால் திருக்கோயிலை வந்தடைந்து, அடியார்களுக்கெதிரில் "மின்னுமா மேகம்" என்னு முதலையுடைய நல்ல சொற்களமைந்த திருப்பதிகத்தை எட்டுத் திக்கிலுள்ளவர்களும் அறிந்துய்யும்பொருட்டு, சப்தசுரங்களும் பொருந்தப் பாடியருளினார்.—எ-று. (௩௦௦)

---

### திருத்துருத்தியுந் திருவேள்விக்குடியும் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

மின்னுமாமேகங்கள் பொழிந்திழிந்தருவி வெடில்படக்கரையொடுந் திரைகொணர்ந்தெற்று,மன்னமாங்காவிரி யகன்கரையுறைவா ரடியிணைதொழுதெழுமன்பராமடியார், சொன்னவாறறிவார்துருத்தியார்வேள்விக் குடியுளாரடிகளைச்செடியனேனாயே, னென்னைநான்மறக்குமாறெம்பெருமானை யென்னுடம்படுபிணியிடர்கெடுத்தானை. (௧)

கூடுமாருள்ளனகூடியுங்கோத்துங் கொய்புனலேனலோடைவனஞ்சிதறி, மாடுமாகோங்கமேமருதமேபொருது மலையெனக்குலைகளைமறிக்குமாறுந்தி, யோடுமாகாவிரித்துருத்தியார்வேள்விக்குடியுளாரடிகளைச்செடியனேனாயேன், பாடுமாறறிகிலேனெம்பெருமானைப்பழவினையுள்ளனபற்றறுத்தானை. (௨)

கொல்லுமாலியானையின்கொம்பொடுவெம்பார் கொழுங்கனிச்செழும்பயன்கொண்டுகூட்டெய்திப், புல்கியுந்தாழ்ந்தும்போந்துதவஞ்செய்யும்போகரும்யோகரும்புலரிவாய்மூழ்கச்,செல்லுமாகாவிரித்துருத்தியார்வேள்விக்குடியுளாரடிகளைச்செடியனேனாயேன், சொல்லுமாறறிகிலேனெம்பெருமானைத்தொடர்ந்தடுங்கடும்பிணித்தொடர்வறுத்தானை. (௩)

பொறியுமாசந்தனத்துண்டமோடகிலும் பொழிந்திழிந்தருவிகள்புன்புலங்கவரக், கறியுமாமிளகொடுகதலியுமுந்திக் கடலுறவிளைப்பதேகருதித்தன்னைபோ,யெறியுமாகாவிரித்துருத்தியார்வேள்விக்குடியுளாரடிகளைச்செடியனேனாயே, னறியுமாறறிகிலே னெம்பெருமானையருவினையுள்ளனவாசறுத்தானை. (௪)

பொழிந்திழிமும்மதக்களிற்றினமருப்பும் பொன்மலர்வேங்கையினன்மலருந்தி, யிழிந்திழிந்தருவிகள்கடும்புனலீண்டியெண்டிசையோர்களுமாடவந்திங்கே, சுழிந்திழிகாவிரித்துருத்தியார்வேள்விக்

குடியுளாரடிகளைச் செடியனேனாயே, ஞெழிந்திலேன் பித்றுமா றெம்பெருமானையுற்றனோயிற்றைறையேயுறவொழித்தானை. (ரு)

புகழுமா சந்தனத்துண்டமோ டகிலும் பொன்மணிவரன்றியு நன்மலருந்தி, யகழுமாவருங்கரைவளம்படப்பெருகி யாடுவார்பா வந்தீர்த்தஞ்சனமலம்பித், திகழுமாகாவிரித்துருத்தியார்வேள்விக் குடியுளாரடிகளைச்செடியனேனாயே, னிகழுமாறறிகிலே னெம்பெ ருமானை யிழித்தநோயிம்மையேயொழிக்கவல்லானை. (சா)

வரையின்மாங்கனியொடுவாழையின்கனியும் வருடியும்வணக் கியுமராமரம்பொருது, கரையுமாகருங்கடல்காண்பதேகருத்தாய்க் காம்பிலிசுமந்தொளிர்நித்திலங்கைபோய்,விரையுமாகாவிரித்துருத் தியார்வேள்விக்குடியுளாரடிகளைச்செடியனேனாயே, னுரையுமாற றிகிலேனெம்பெருமானையுலகறிபழவினையறவொழித்தானை. (எ)

ஊருமாதேசமேமனமுகந்துள்ளிப் புள்ளினம்பலபடிந்தொண் கரையுகளக், காருமாகருங்கடல்காண்பதேகருத்தாய்க்கவரிமாமயிர் சுமந்தொண்பளிங்கிடறித், தேருமாகாவிரித்துருத்தியார்வேள்விக் குடியுளாரடிகளைச்செடியனேனாயே, னுருமாறறிகிலேனெம்பெரு மானையம்மைநோயிம்மையேயாசறுத்தானை. (அ)

புலங்களைவளம்படப் போக்கறப்பெருகிப் பொன்களே சுமந் தெங்கும்பூசல்செய்தார்ப்ப, விலங்குமாமுத்திறேடினமணியிடறி யிருகரைப்பெருமரம்பீழ்ந்துகொண்டெற்றிக், கலங்குமாகாவிரித் துருத்தியார்வேள்விக்குடியுளாரடிகளைச்செடியனேனாயேன்,விலங் குமாறறிகிலே னெம்பெருமானை மேலைநோயிம்மையே வீடுவித் தானை. (கூ)

மங்கையோர்கூறுகந்தேறுகந்தேறி மாற்றலர்திரிபுர நீறெழச் செற்ற, வங்கையான்கழலடியன்றிமற்றறியா னடியவர்க்கடியவன் றொழுவனாரூரன், கங்கையார்காவிரித்துருத்தியார்வேள்விக் குடியு ளாரடிகளைச்சேர்த்தியபாடற், றங்கையாற்றொழுதுதங்நாவின்மேற் கொள்வார் தவநெறிச்சென்றமருலகமாள்வாரே. (கய)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-எதீசுவரர்; தேவியார்-மிருதுமுகிழாம்பிகையம்மை.

---

பண்ணிறைந்த தமிழ்பாடிப் பரமர்திரு வருண்மறவா
ரொண்ணிறைந்த தொண்டருடன் பணிந்தங்க ணுறைந்தேகி
யுண்ணிறைந்த பதிபிறவு முடையவர்தாள் வணங்கிப்போய்க்
கண்ணிறைந்த திருவாரூர் முன்றோன்றக் காண்கின்றார்.

(இ-ள்.) இசையமைந்த தமிழ்த்திருப்பதிகம் பாடியருளிச் சிவபெருமா னது திருவருட்டிறத்தை மறவாதவராய், புகழ்நிறைந்த திருத்தொண்டர்க ளோடும் வணங்கி வசித்து அவ்விடத்தினின்றும் நீங்கித் தமதுள்ளத்திற் பெரு குகின்ற மற்றத் திருப்பதிகளையுமடைந்து சிவபெருமானது திருவடிகளை வணங்

கிச்சென்று, கண்களுக்கு அழகாக நிறைந்து விளங்குகின்ற திருவாரூர்த் திருப் பதியானது முன்னே தோன்ற அதனைத் தரிசிக்கின்றவராயினார்.—எ-று. (௩0௪)

அன்றுதிரு நோக்கொன்று லாரக்கண் டின்புறுா
நின்றுநில மிசைவீழ்ந்து நெடிதுயிர்த்து நேரிறைஞ்சி
வன்றொண்டர் திருவாரூர் மயங்குமா லையிற்புகுந்து
துன்றுசடைத் தூவாயர் தமைமுன்னந் தொழவணைந்தார்.

(இ-ள்.) அப்பொழுது ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் தமது ஒரு பார்வையினால் பொருந்தத் தரிசித்து இன்பமடையாதவராய் நின்று பூமியில் விழுந்து வணங்கிப் பெருமூச்சுவிட்டு எதிரில் வணங்கி, அத்திருவாரூர்த் திருப்பதியை மயங்கத்தக்க மாலைக்காலத்திற் புகுந்து, நெருங்கிய சடைமுடியையுடைய சிவபெருமானை முன்னே வணங்கும்படி சென்றருளினார்.—எ-று.

இன்புறுா, என்பது முற்றெச்சம். மயங்குமாலை யென்பது ஒருவர்முக மொருவருக்குத் தெரியாமல் மயங்கத்தக்க மாலைக்காலமென்க. வேதசிவாகமங் களை யருளிச்செய்த திருவாயினையுடைய பெருமானென்பார், 'தூவாயர்' என்று கூறினார். (௩0௫)

பொங்குதிருத் தொண்டருட னுள்ளணைந்து புக்கிறைஞ்சித்
துங்கவிசைத் திருப்பதிகந் தூவாயா வென்றெடுத்தே
யிங்கெமது துயர்களைந்து கண்காணக் காட்டாயென்
றங்கணர்த முன்னின்று பாடியருந் தமிழ்புனைந்தார்.

(இ-ள்.) மிக்க திருத்தொண்டர்களோடுந் திருக்கோயிலி னுள்ளேபுகுந்துவணங்கி, சிறந்த இசையமைந்த திருப்பதிகத்தை "தூவாயா" என்று தொடங்கி, இங்கு எமது துன்பத்தை யொழித்துத் தேவரீரை தரிசிக்கக் கண்கொடுத்தருள்வீராகவென்று சிவபெருமான் திருமுன்னின்று அரிய தமிழ்மாலை பாடியருளினார்.—எ-று. (௩0௬)

---

திருவாரூர்ப்பரவையுண்மண்டளி - பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

தூவாயாதொண்டுசெய்வார்படுதுக்கங்கள்
காவாயேகண்டுகொண்டாரைவர்க்காகியும்
நாவாயாலுன்னையேநல்லனசொல்லுவேற்
காவாவென்பரவையுண்மண்டளியம்மானே.

கரந்தையும்வன்னியுமத்தமுங்கூவிளமும்
பரந்தசீர்ப்பரவையுண்மண்டளியம்மானை
நிரம்பியவூரனுரைத்தனபத்திவை
விரும்புவார்மேலையார்மேலையார்மேலாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - மண்டலேசுவரர்; தேவியார் - பஞ்சினுமெல்லடியம்மை.

---

ஆறணியுஞ் சடையாரைத் தொழுதுபுறம் போந்தங்கண்
வேறிருந்து திருத்தொண்டர் விரவுவா ருடன்கூடி
யேறுயர்த்தார் திருமூலட் டானத்து ளிடைதெரிந்து
மாறிறிரு வத்தயா மத்திறைஞ்ச வந்தணைந்தார்.

(இ-ள்.) கங்கைநதியையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானை வணங்கிப் புறத்திற் சென்று அங்குத் தனித்திருந்து, தம்முடன்வந்த அடியார்களுடன்கலந்து, இடபக்கொடியையுயர்த்திய சிவபெருமானது திருமூலஸ்தானத்துள் காலமறிந்து, மாறுபாடில்லாத அர்த்தசாமத்தில் வணங்கும்படி வந்தடைந்தருளினார்.—எ-று.

மிக்க நடுராத்திரியென்பார், 'மாறிறிருவத்தயாமம்' என்று கூறினார். ()

ஆதிதிரு வன்பரெதி ரணையவவர் முகநோக்கிக்
கோதிலிசை யாற்குருகு பாயவெனக் கோத்தெடுத்தே
யேதிலார் போல்வினவி யேசறவாற் றிருப்பதிகக்
காதல்புரி கைக்கிளையாற் பாடியே கலந்தணைவார்.

(இ-ள்.) சிவபெருமானது மெய்யடியார்கள் தம்முன்னே வர, அவர்களது திருமுகத்தைப் பார்த்தருளி, இனிய இசையோடு "குருகுபாய" என்று முதலில் தொடுத்து, அயலார்போல வினவி, மனவருத்தத்தினால் திருப்பதிகத்தை விருப்பமிகுகின்றகைக்கிளையினால்பாடி யருளிச் செல்வாராயினார்.—எ-று.

கைக்கிளை, என்பதில், கை=சிறுமை; கிளை=உறவு; ஆகவே, சிறுமையுறவென்பது கைக்கிளையென்று பெயராயிற்று. அஃதென்னையெனின், ஒருதலைக்காமமென்னப்பட்டுத் தலைமகன் கூற்றாயாவது, தலைமகள்கூற்றாயாவது நிகழ்தல்; அவற்றுள் இக்கைக்கிளைத்துறை தலைமகள்கூற்று; "கைக்கிளையுடையதொருதலைக்காமம்" என்னும் அகப்பொருள் விளக்கத்தானுணர்க.

'ஆதிதிருவன்பர்' என்பதற்கு, தமக்குப் பழையகூட்டுறவாகவுள்ள மெய்யடியார்கள், எனினுமாம். (கூ0ரு)

---

திருவாரூர் - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

குருகுபாயக்கொழுங்கரும்புகணெரிந்தசா
றருகுபாயும்வயலந்தணாரூரரைப்
பருகுமாறும்பணிந்தேத்துமாறுந்நினைந்
துருகுமாறும்மிவையுணர்த்தவல்லார்களே.

நித்தமாகநினைந்துள்ளமேத்தித்தொழு
மத்தனம்பொற்கழலடிகளாரூரரைச்
சித்தம்வைத்தபுகழ்ச்சிங்கடியப்பன்மெய்ப்
பத்தனூரன்சொன்னபாடுமின்பத்தரே.

திருச்சிற்றம்பலம்.

---

சீர்பெருகுந் திருத்தேவா சிரியன்முன் சென்றிறைஞ்சிக்
கார்விரவு கோபுரத்தைக் கைதொழுதே யுட்புகுந்து
தார்பெருகு பூங்கோயி றனைவணங்கிச் சார்ந்தனைவா
ரார்வமிகு பெருங்காத லாலவனி மேல்வீழ்ந்தார்.

(இ-ள்.) சிறப்புமிக்க தேவாசிரிய மண்டபத்தின் முன்சென்று வணங்கி, மேகங்கள் தவழுந் திருக்கோபுரத்தைக் கைகூப்பிவணங்கி உள்ளே புகுந்து, பூமாலையணிந்துள்ள கமலாலயத்தை வணங்கி யடைகின்றவராய், விருப்பமிக்க பேரன்பினால் நிலமுறவிழுந்து வணங்கினார்.—எ-று. (கூ0சு)

வீழ்ந்தெழுந்து கைதொழுது முன்னின்று விம்மியே
வாழ்ந்தமலர்க் கண்ணொன்று லாரமன் மனமழிவா
ராழ்ந்ததுயர்க் கடலிடைநின் றடியேனை யெடுத்தருளித்
தாழ்ந்தகருத் தினைநிரப்பிக் கண்டாரு மெனத்தாழ்ந்தார்.

(இ-ள்.) சாஷ்டாங்கமாக வணங்கியெழுந்து கைகூப்பித் தொழுது விம்மித் தரிசனத்தால் ஆனந்தமடைந்த ஒரு திருக்கண்ணினால் தரிசிக்க நிரம்பாமல் மனம்வருந்துகின்ற ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள், ஆழ்ந்த துன்பமாகிய கடலினின்றும் அடியேனைக் கரையேற்றியருளி, சோர்ந்திருக்கின்ற எனது கருத்தைப் பூர்த்திசெய்து கண்ணைக் கொடுத்தருளுமென்று வணங்கினார்—எ-று.

சங்கிலியாரிடத்துப் பொய்ச்சபதங் கூறியதனாற் கண்மறைந்து மீளாத் துயருறுகின்றேனாகலின் அத்துன்பத்தைத்தவிர்த்தருளென்பார், 'ஆழ்ந்ததுயர்க்கடலிடைநின் றடியேனை யெடுத்தருளி' என்றும், அக்கண் தெரியாமையால் மனஞ்சோர் வுறுகின்ற தென்பார், 'தாழ்ந்த கருத்து' என்றும், அதனைத் தவிர்த்துக் கண்ணளித்தருளால் தேவரீர் கடைமையே யென்பார் 'நிரப்பிக்கண்டாரும்' என்றுங் கூறினார். (கூ0எ)

திருநாவ லூர்மன்னர் திருவாரூர் வீற்றிருந்த
பெருமானைத் திருமூலட் டானஞ்சேர் பிஞ்ஞகனைப்
பருகாவின் னமுதத்தைக் கண்களாற் பருகுதற்கு
மருவார்வத் துடன்மற்றைக் கண்டாரீ ரெனவணங்கி,

(இ-ள்.) திருநாவலூரராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் திருவாரூரில் வீற்றிருந்தருளும் ஆண்டவரும், திருமூலஸ்தானத்தி லெழுந்தருளி சடாதரரும், உண்ணுதற்கரிய இனிய அமுதம்போல்பவருமாகிய சிவபெருமானைத்தமது திருக்கண்களால் தரிசிப்பதற்கு நிலைபெற்ற பேரன்போடும் வலக்கண்ணைத தந்தருளுமென்று வணங்கி.—எ-று.

பிஞ்ஞகன்=பின்னலாகிய சடைமுடியை யுடையவன்; மற்றைக்கண் என்பது, வலக்கண்.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கூ0அ)

வேறு.

மீளா வடிமை யெனவெடுத்து மிக்க தேவர் குலமெல்லா
மாளா மேநஞ் சுண்டருளி மன்னி யிருந்த பெருமானைத்
தாளா தரிக்கு மெய்யடியார் தமக்கா மிடர்நீர் தரியீரென்
றுளாந் திருத்தோ முமைத்திறத்தா லஞ்சொற் பதிகம் பாடினார்.

(இ-ள்.) "மீளாவடிமை" என்று முதலெடுத்து, சிறந்த தேவர்கூட்டங்களனைத்து மிறவாதிருக்கும்பொருட்டு (ச்சமுத்திரத்திற்றோன்றிய) ஆலாகலவிஷத்தையுண்டு (இறவாமல்) நிலைபெற்றோங்கிய சிவபெருமானை, திருவடிகளில் அன்புசெலுத்துகின்ற மெய்யடியார்களுக்கு நேர்ந்த துன்பத்தைத் தேவரீர் பொறுத்திருக்கமாட்டீரென்று, தாமடிமைப்பட்டிருக்கும நட்புத்தன்மையினால் அழகிய சொற்களமைந்த திருப்பதிகம்பாடியருளினார்.—எ-று.

பெருமானைத் தாளாதரிக்கு மெய்யடியார், என்பதற்கு, சிவபெருமானை முயற்சித்து அன்புசெய்யு மெய்யடியார்கள், என்று பொருள்கூறினுமாம்.

---

### திருவாரூர் - பண் - செந்துருத்தி.

திருச்சிற்றம்பலம்.

மீளாவடிமையுமக்கேயாளாய்ப்பிறரைவேண்டாதே
மூளாத்தீப்போலுள்ளேகனன்றுமுகத்தான்மிகவாடி
யாளாயிருக்குமடியார்தங்களல்லல்சொன்னக்கால்
வாளாங்கிருப்பீர்திருவாரூரீர்வாழ்ந்துபோதீரே. (௧)

விற்றுக்கொள்வீரொற்றியல்லேன்விரும்பியாட்பட்டேன்
குற்றமொன்றுஞ்செய்ததில்லைக்கொத்தையாக்கினீ
ரெற்றுக்கடிகேளென்கண்கொண்டீர்நீரேபழிபட்டீர்
மற்றைக்கண்டான்றாராதொழிந்தால்வாழ்ந்துபோதீரே. (௨)

அன்றின்முட்டாதடையுஞ்சோலையாரூரகத்தீரே
கன்றுமுட்டியுண்ணச்சுரந்தகாலியவைபோல
வென்றுமுட்டாப்பாடுமடியார்தங்கண்காணாது
குன்றின்முட்டிக்குழியில்விழுந்தால்வாழ்ந்துபோதீரே. (௩)

துருத்தியுறைவீர்பழனப்பதியாய்சோற்றுத்துறையாள்வீ
ரிருக்கைதிருவாரூரேயுடையீர்மனமேயெனவேண்டா
அருத்தியுடையவடியார்தங்களல்லல்சொன்னக்கால்
வருத்திவைத்துமறுமைப்பணித்தால்வாழ்ந்துபோதீரே. (௪)

செந்தண்பவளந்திகழுஞ்சோலையிதுவோதிருவாரூ
ரெந்தமடிகேளிதுவேயாமாறுமக்காட்பட்டோர்க்குச்
சந்தம்பலவும்பாடுமடியார்தங்கண்காணாது
வந்தெம்பெருமான்முறையோவென்றால்வாழ்ந்துபோதீரே. (௫)

தினைத்தாளன்னசெங்கானாரைசேருந்திருவாரூர்ப்
புனைத்தார்கொன்றைப்பொன்போன்மாலைப்புரிபுன்சடையீரே
தனத்தாலின்றித்தாந்தாமெலிந்துதங்கண்காணாது
மனத்தால்வாடியடியாரிருந்தால்வாழ்ந்துபோதீரே. (௬)

ஆயம்பேடையடையுஞ்சோலையாரூரகத்தீரே
யேயெம்பெருமானிதுவேயாமாறுமக்காட்பட்டோர்க்கு
மாயங்காட்டிப்பிறவிகாட்டிமறவாமனங்காட்டிக்
காயங்காட்டிக்கண்ணீர்கொண்டால்வாழ்ந்துபோதீரே. (௭)

கழிவாய்க்கடலாய்க்கலனாய்நிலனாய்க்கலந்தசொல்லாகி
யிழியாக்குலத்திற்பிறந்தோமும்மையிகழாதேத்துவோம்
பழிதானாவதறியீரடிகேள்பாடும்பத்தரோம்
வழிதான்காணாதலமந்திருந்தால்வாழ்ந்துபோதிரே. (௮)

பேயோடேனும்பிரிவொன்றின்னாதென்பர்பிறரெல்லாங்
காய்தான்வேண்டிற்கனிதானன்றோகருதிக்கொண்டக்கா
னாய்தான்போலநடுவேதிரிந்துமுமக்காட்பட்டோர்க்கு
வாய்தான்றிறவீர்திருவாரூரீர்வாழ்ந்துபோதிரே. (௯)

செருந்திசெம்பொன்மலருஞ்சோலையிதுவோதிருவாரூர்
பொருந்தித்திருமூலத்தானம்மேயிடமாக்கொண்டீரே
யிருந்துநின்றுங்கிடந்துமும்மையிகழாதேத்துவோம்
வருந்திவந்துமுமக்கொன்றுரைத்தால்வாழ்ந்துபோதிரே. (௧௦)

காரூர்கண்டத்தெண்டோண்முக்கண்கலைகள்பலவாகி
யாரூர்த்திருமூலத்தானத்தேயடிப்பேராரூரன்
பாரூரறியவென்கண்கொண்டீர்நீரேபழிபட்டீர்
வாரூர்முலையாள்பாகங்கொண்டீர்வாழ்ந்துபோதிரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

பூத முதல்வர் புற்றிடங்கொண் டிருந்த புனிதர் வன்றொண்டர்
காதல் புரிவே தனைக்கிரங்கிக் கருணைத் திருநோக் களித்தருளிச்
சீத மலர்க்கண் கொடுத்தருளச் செவ்வே விழித்து முகமலர்ந்து
பாத மலர்கண் மேற்பணிந்து வீழ்ந்தா ருள்ளம் பரவசமாய்.

(இ-ள்.) பூதகணத்தலைவரும், புற்றையிடமாகக்கொண் டெழுந்தருளியவருமாகிய ஸ்ரீவன்மீகநாதர், ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் அன்போடுவருந்துகின்ற துன்பத்திற் கிரக்கங்கொண்டு கருணாகடாக்ஷஞ் செய்தருளிக் குளிர்ந்ததாமரைமலர்போன்ற வலக்கண்கொடுத்தருளவும், நன்றாக விழித்துப்பார்த்து முகமலர்ச்சியடைந்து திருவுள்ளம் பரவசமுற்று, அவ்வெம்பெருமானது திருவடிகளில் விழுந்து வணங்கினார்.—எ-று.

பூதமுதல்வர் என்பதற்கு, ஆன்மநாயகர், எனப்பொருள் கூறினுமாம்.()

விழுந்து மெழுந்தும் பன்முறையான் மேவிப் பணிந்து மிகப்ப
ரவி, யெழுந்த களிப்பி னாலாடிப் பாடி யின்ப வெள்ளத்தி, லழு
ந்தி யிரண்டு கண்ணாலு மம்பொற் புற்றி னிடையெழுந்த,செழுந்த
ண் பவளச் சிவக்கொழுந்தி னருளைப் பருகித் திளைக்கின்றார்.

(இ-ள்.) பலதரமாக நிலமுறவிழுந்து வணங்கியும், எழுந்தும், அடைந்து வணங்கி மிகுதியாகத் துதித்து, தமதுள்ளத்தெழுந்த மகிழ்ச்சியினால் ஆனந்தக்கூத்தாடி (அவ்வெம்பெருமானது திருப்புகழைப்) பாடிப் பேரின்பவெள்ளத்தில் முழுகி, தமது இரண்டுதிருக்கண்களினாலும் அழகிய பொன்மயமாகிய புற்றினிடத்து எழுந்தருளிய செழுமையாகிய குளிர்ந்த பவளம்போலுஞ் (சிவ

ந்த திருமேனியையுடைய) சிவபெருமானது திருவருளாகிய அமுதத்தை யுண்டு(பேரின்பக்கடலில்) மூழ்குகின்றவராயினார்.—எ-று. (ருகக)

கால நிரம்பத் தொழுதேத்திக் கனக மணிமா ளிகைக்கோயின்
ஞால முய்ய வருநம்பி நலங்கொள் விருப்பால் வலங்கொண்டு
மாலு மயனு முறையிருக்கும் வாயில் கழியப் புறம்போந்து
சீல முடைய வன்பருடன் றேவா சிரியன் மருங்கணைந்தார்.

(இ-ள்.) உலகத்தார்கடைத்தேறும்பொருட்டு அவதரித்தருளிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் அர்த்தயாமகாலமுழுதும் வணங்கித்துதித்து, பொன்மயமாகிய அழகியதிருமாளிகைகள்சூழ்ந்த திருக்கோயிலை நன்மைமிக்க பெருவிருப்போடு பிரதக்ஷணஞ்செய்து, திருமால் பிரமனென்னுமிருவரும் முறையே தங்கியிருக்கின்ற திருவாயிலைநீங்கிப் புறத்திற்சென்று நல்லொழுக்கமுடைய அடியார்களோடுந் தேவாசிரிய மண்டபத்தின் அருகில் அடைந்தருளினார்.—எ-று.

அரி பிரமேந்திராதி தேவர்கள் பெருமானைச் சேவிக்கும்பொருட்டுக் காலம்பார்த்து முறையேயிருக்குந் திருவாயிலென்பார், 'மாலுமயனு முறையிருக்கும் வாயில்' என்று கூறினார். (ருகஉ)

நங்கை பரவை யார்தம்மை நம்பி பிரிந்து போனதற்பின்
றங்கு மணிமா ளிகையின்கட் டனிமை கூரத் தளர்வார்க்குக்
கங்குல் பகலாய்ப் பகல்கங்கு லாகிக் கழியா நாளெல்லாம்
பொங்கு காதன் மீதூரப் புலர்வார் சிலநாள் போனதற்பின்.

(இ-ள்.) பரவைநாச்சியாரை ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் விட்டு நீங்கினபின்பு, அழகுபொருந்திய தமது திருமாளிகையில் தனித்திருக்கத்தளர்கின்றவராகிய அவ்வம்மையாருக்கு இரவு பகலாகவும், பகல் இரவாகவும் நேர்ந்து, நாள்களனைத்தையுங் கழித்துப் பெருவிருப்பானது அதிகரிக்க, அதனால் வாட்டமுற்றிருக்கின்ற அப்பரவைநாச்சியார் சிலகாலஞ்சென்றபின்பு.—எ-று.

ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் தம்மைவிட்டுப் பிரிந்துபோனபின்பு பரவைநாச்சியார் பிரிவாற்றாதவராய்ப் பொழுது போவதும் வருவதுந் தெரியாமல், மனத்துயர்கொண்டு இரவில் நித்திரையற்றும், பகலிற் சோர்வுற்றுங் காலங்கழித்தனரென்பார், 'கங்குல்பகலாய்ப் பகல்கங்குலாகிக்கழியா நாளெல்லாம்' என்று கூறினார். (ருகங)

செம்மை நெறிசேர் திருநாவ லூரா ரொற்றி யூர்சேர்ந்து
கொம்மை முலையார் சங்கிலியார் தம்மைக் குலவு மணம்புணர்ந்த
மெய்ம்மை வார்த்தை தாமவர்பால் விட்டார் வந்து கட்டுரைப்பத்
தம்மை யறியா வெகுளியினாற் றறியா நெஞ்சி னொடுந்தளர்வார்.

(இ-ள்.) நல்லொழுக்கமாகிய மார்க்கத்திற் செல்கின்ற ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் திருவொற்றியூரை யடைந்து, குவிந்த ஸ்தனங்களையுடைய சங்கிலிநாச்சியாரை விளங்குகின்ற திருக்கலியாணஞ் செய்துகொண்ட உண்மை வார்த்தையை அவரிடத்தில் அனுப்பப்பட்டவர்கள் வந்துசொல்ல, (அதனால்) தம்மை யறியாமல் வந்த பெருங்கோபத்தினால் சகிக்கமுடியாத திருவுள்ளத்தோடும் வருந்துவாராயினார்.—எ-று.

நம்மைப்பிரியாது உடலுயிர்போற் கலந்திருந்தவர் க்ஷேத்திரயாத்திரை செய்துவருவதாகக் கூறிச்சென்று, நேர்விரோதமாக வேறொரு மாதைக் கலியாணஞ்செய்து அவள்பால் விருப்புற்றிருக்கின்றனரென்னுஞ் செய்தியைக் கேட்டலும் மனந்தளர்ந்து அடங்காப் பெருங்கோப முற்றனரென்பார், 'தம்மை யறியா வெகுளியினாற் றரியா நெஞ்சினொடுந் தளர்வார்' என்று கூறினர். (௩௧௪)

மென்பூஞ் சயனத் திடைத்துயிலு மேவார் விழித்து மினிதமரார், பொன்பூந் தவிசின் மிசையினிரார் நில்லார் செல்லார் புறம் பொழியார், மன்பூ வாளி மழைகழியார் மறவார் நினையா ரென்செய்வா,ரொன்பூ டுருக்கும் புலவியோ பிரிவோ விரண்டி னிடைப்பட்டார்.

(இ-ள்.) மிருதுவாகிய புஷ்பசயனத்திலும் நித்திரைகொள்ளார் ; இனிமையாக விழித்தும் இரார் ; பொன்னாலாகிய அழகிய ஆசனத்தின் மேலுமிரார் ; (பூமியிலும்) நில்லார் ; நடவார் ; வேறிடத்திற் செல்லார் , (மன்மதனது) நிலைபெற்ற புஷ்பபாணமாகிய மழையினின்று நீங்கார் ; (அச்சுந்தரமூர்த்திசுவாமிகளை) மறக்கவுமாட்டார் ; நினைத்தலுஞ் செய்யார் ; வேறு யாது செய்வார்; எலும்பை யுள்ளுருகச்செய்யும் ஊடலோ ? (அல்லது) பிரிவோ ? இவ்விரண்டிலும் அகப்பட்டு வருந்துவாராயினர்.—எ-று.

விரகவேதனையால் வருந்தியிருப்பவர்களுக்கு, உறக்கம் விழிப்பு முதலிய வனைத்துமொருபடித்தா யிராமல் கலக்கமுற்றுச் சோர்ந்திருப்பது சுபாவமாகலின், இவ்வாறு கூறினர். (௩௧௫)

ஆனகவலைக் கையறவா லழியு நாளி லாரூரர்
கூன விளவெண் பிறைக்கண்ணி முடியார் கோயின் முன்குறுகப்
பானல் விழியார் மாளிகையிற் பண்டு செல்லும் பரிசினாற்
போன பெருமைப் பரிசனங்கள் புகுதப் பெறுது புறநின்றார்.

(இ-ள்.) மனக் கிலேசத்தினாலுண்டாகிய செயலின்மையினால் வருந்தியிருக்கும் நாள்களில், ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் வளைந்த இளமையாகிய வெண் பிறையையணிந்த திருமுடியையுடைய சிவபெருமானது திருக்கோயிலின் முன்னேயடைய,கருங்குவளைமலர்போலுங் கண்களையுடைய பரவைநாச்சியாரது திருமாளிகையில் முன்பு செல்லும் முறைமைப்படி சென்ற மேன்மைமிக்க பரிசனங்களாகிய அடியார்கள் உள்ளே செல்லப்பெறாமல் வெளியில் தடைபட்டு நின்றார்கள்.—எ-று.

கண்ணி = மாலை. (௩௧௬)

நின்ற நிலைமை யவர்கள்சிலர் நிலவு திருவா ரூரரெதிர்
சென்று மொழிவார் திருவொற்றி யூரி னிகழ்ந்த செய்கையெலா
மொன்று மொழியா வகையறிந்தங் குள்ளார் தள்ள மாளிகையி
லின்று புறமுஞ் சென்றெய்தப் பெற்றி லோமென் றிறைஞ்சினர்.

(இ-ள்.) அவ்வாறு தடைபட்டுநின்ற அடியார்களில் சிலர், விளங்குகின்ற ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு எதிரில்சென்று சொல்வார்கள் ; தேவரீர் திருவொற்றியூரில் சங்கிலிநாச்சியாரைக் கலியாணஞ் செய்துகொண்ட சங்கதி

களைத்தும் சிறிதும் விடாமலுணர்ந்து அங்குள்ளவர்கள் தள்ளிவிட, திருமாளிகையின் புறத்துஞ் சென்றடையப் பெற்றிலோமென்று கூறிவணங்கினார்கள்.

மற்ற மாற்றங் கேட்டழிந்த மனத்த ராகி வன்றொண்ட
ருற்ற விதனுக்கினியென்னோ செயலென் றுணர்வா ருலகியல்பு
கற்ற மாந்தர் சிலர்தம்மைக் காதற்பரவை யார்கொண்ட
செற்ற நிலைமை யறிந்தவர்க்குத் தீர்வுசொல்லச் செலவிட்டார்.

(இ-ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் அவ்வார்த்தையைக்கேட்டு மனநிலையழிந்தவராய், நேர்ந்த இதற்கு இனியாது செய்வதென்று ஆலோசித்து, தாம்விருப்பமுற்றிருக்கும் பரவைநாச்சியார் அடைந்துள்ள கோபத்தன்மையை யறிந்து அவ்வம்மையாருக்குச் சமாதானஞ்சொல்லும்படி உலகியல்பையுணர்ந்த சில பெரியோர்களை அனுப்பியருளினார்.—எ-று. (ருகஅ)

நம்பி யருளாற் சென்றவரு நங்கை பரவை யார்தமது
பைம்பொன் மணிமா ளிகையணைந்து பண்பு புரியும் பாங்கினால்
வெம்பு புலவிக் கடலழுந்து மின்னே ரிடையாண் முன்னெய்தி
யெம்பி ராட்டிக் கிதுதகுமோ வென்று பலவு மெடுத்துரைப்பார்.

(இ-ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளது திருவருளை மேற்கொண்டு சென்ற அம்முதியோர்களும் பரவைநாச்சியாரது பசும்பொன்மயமாகிய அழகிய திருமாளிகையையடைந்து இனிய மொழிகளைக் கூறுந்தன்மையினால், கலங்குகின்ற ஊடற்கடலில் மூழ்கியிருக்கின்ற மின்போலும் இடையினையுடைய பரவைநாச்சியாருக் கெதிரிலடைந்து, எமது பெருமாட்டியாகிய உமக்கு இது தக்கதோ வென்று பல நியாயங்களையும் எடுத்துக் கூறுவாராயினார்.—எ-று. (ருகக)

பேத நிலைமை நீதியினாற் பின்னும் பலவுஞ் சொன்னவர்முன்
மாத ரவரு மறுத்துமனங் கொண்ட செற்ற மாற்றாரா
யேத மருவு மவர்திறத்தி னிந்த மாற்ற மியம்பிலுயிர்
போத லொழியா தெனவுரைத்தா ரவரு மஞ்சிப் புறம்போந்தார்.

(இ-ள்.) (அவ்வம்மையாரது ஊடற் கருத்தை) வேறுபடுத்தும் நீதிமொழிகளால் பின்னும் பல வார்த்தைகளை யெடுத்துரைத்த அம் முதியோர்களுக்கு முன்னே, பரவைநாச்சியார் தடுத்துத் தமதுள்ளத்திற் கொண்ட கோபத்தைத் தணிக்காதவராய், குற்றம் பொருந்திய அவர் விஷயத்தில் (நீங்கள்) இத்தகைய வார்த்தைகளைச் சொல்வீராயின், எனது உயிர் போய்விடுமென்று கூறியருளினார்; (அதனைக்கேட்ட) அவர்களும் பயந்து வெளியில் வந்தார்கள்.—எ-று.

என்னை விட்டுப் பிரிந்து திருவொற்றியூரிற் சங்கிலித்தொடக்குண்டு பிரியேனென்று சபதஞ் செய்து கொடுத்துக் கலியாணஞ் செய்துகொண்ட பெருங்குற்ற முடையவரென்பார், ஏதமருவுமவர், என்றும், அத்தகைய துர்நடத்தையை யுடையவர் பின்னு மிங்குவரும் விஷயத்தைக் குறித்துப் பேசுவீர்களாயின், யான் பிராணத்தியாகஞ் செய்துகொள்ளுவேனென்பார், "அவர் திறத்தி னிந்தமாற்ற மியம்பி லுயிர் போத லொழியாது, என்றுங் கூறினார். மாதரவர்-என்பதில் அவர் பகுதிப்பொருள் விகுதி. (ருஉ0)

போந்து புகுந்த படியெல்லாம் பூந்தண் பழன முனைப்பாடி
வேந்தர் தமக்கு விளம்புதலும் வெருவுற் றயர்வார் துயர்வேலை

நீந்தும் புணையாந் துணைகாணார் நிகழ்ந்த சிந்தா குலநெஞ்சிற்
காந்த வழிந்து தோய்ந்தெழார் கங்கு லிடையா மக்கடலுள்.

(இ-ள்.) அவர்கள் வந்து நடந்த சங்கதியனைத்தும் பொலிவினையுடைய குளிர்ந்த வயல்சூழ்ந்த திருமுனைப்பாடி நாட்டுத் தலைவராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளிடத்துக் கூறுதலும், (அவர்) அச்சமுற்றுச் சோர்ந்து, துன்பமாகிய கடலை நீந்துகின்ற தெப்பமாகிய துணையைக் காணாமல் தோன்றிய மனவருத்த மானது தமதுள்ளத்திற் சுட, (அதனால்) மன நிலை தளர்ந்து, இரவு அர்த்தசாம மாகிய கடலில் முழுகி மேலெழாராயினார்.—எ-று.

ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் அளவிட்டுரைக்க வொண்ணாப்பெருந்துய ருற்றனரென்பார், 'துயர்வேலை' என்றும், அத்துயரந் தணியும்பொருட்டுக் கற் றுணர்ந்த முதியோர்களைப் பரவையார்பால் இன்மொழி கூற வனுப்பியும் அத னால் சிறிதும் பயன்பெறேமாயினேம், இனி யாது செய்வதென்று வருந்தின ரென்பார், 'நீந்தும் புணையாந் துணைகாணார் நிகழ்ந்த சிந்தாகுல நெஞ்சிற் கா ந்தவழிந்து' என்றுங் கூறினார்.

சிந்தை+ஆகுலம்=சிந்தாகுலம். (௩௨௧)

அருகு சூழ்ந்தார் துயின்றுதிரு வத்த யாமம் பலிமடங்கிப்
பெருகு புவனஞ் சலிப்பின்றிப் பேயு முறங்கும் பிறங்கிருள்வாய்
முருகு விரியு மலர்க்கொன்றை முடிமே லரவு மிளமதியுஞ்
செருகு மொருவர் தோழர்தனி வருந்தி யிருந்து சிந்திப்பார்.

(இ-ள்.) தம்மருகில் சூழ்ந்துள்ள அடியார்கள் நித்திரை கொண்டு, (சிவ பெருமானுக்குச் செய்யும்) அர்த்தசாமபூசைமுடிந்து, மிக்க உலகமானது அசை வற்று, பேய்களுந் தூங்குகின்ற மிக்க இருட்காலத்தில் வாசனைவீசுகின்ற கொ ன்றைமலர்மாலையை யணிந்த திருமுடியின்மேல் பாம்பையும் இளம்பிறையையு மணிந்த சிவபெருமானது திருத்தோழராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் தனி யே வருத்தமுற்றிருந்து சிந்திப்பாராயினார்.—எ-று.

சராசரங்களனைத்து மோய்ந்தொடுங்குதற்குரிய நடுராத்திரியென்பார், "பெருகு புவனஞ் சலிப்பின்றிப் பேயு முறங்கும் பிறங்கிருள்" என்று கூறினார். இக்கருத்துப்பற்றியே,

"அரவக லல்கு லார்பா லாசைநீத் தவர்க்கே வீடு
தருவமென் றளவில் வேதஞ் சாற்றிய தலைவன் றன்னைப்
பரவைதன் புலவி தீர்ப்பான் கழறுகண் படுத்தும் பாறு
ளிரவினிற் றூது கொண்டோ னிணையடி முடிமேல் வைப்பாம்"—

என்று கூறினார் பரஞ்சோதி முனிவரும். (௩௨௨)

முன்னை வினையா லிவ்வினைக்கு மூல மானாள் பாலணைய
வென்னை யுடையாய் நினைந்தருளா யிந்த யாமத் தெழுந்தருளி
யன்ன மனையாள் புலவியினை யகற்றி லுய்ய லாமன்றிப்
பின்னை யில்லை செயலென்று பெருமா னடிக டமைநினைந்தார்.

(இ-ள்.) என்னை யடிமையாகவுடைய பெருமானே! பூர்வகர்மத்தினால் இவ்வினைக்குக் காரணமாகநின்ற பரவையாரிடத்துச் செல்ல, தேவரீர் திருவுள ளங்கொண்டருள்வீராக, நீர் இந்த அர்த்தசாமத்தெழுந்தருளி அன்னம்போலும்

நடையினையுடைய பரவையாரது ஊடலைத் தணித்தால் பிழைக்கலாம்; அன்றி, இனி வேறு செயலில்லையென்று சிவபெருமானது திருவடிகளைச் சிந்தித்தார்.

அடியா ரிடுக்கண் டரியாதா ராண்டு கொண்ட தோழர்குறை,
முடியா திருக்க வல்லரோ முற்று மளித்தாள் பொற்பளிக்கைத்,
தொடியார் தழும்பு முலைச்சுவடு முடையார் தொண்டர் தாங்கா
ணும், படியா லணைந்தார் நெடியோனுங் காணு வடிகள் படிதோய.

(இ-ள்.) தமது அடியவர்களுக்கு நேர்ந்த துன்பத்தைச் சிறிதுந் தரியாதவராகிய சிவபெருமான் தாம் தடுத்தடிமைகொண்டருளிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளது துன்பத்தை நீக்காதிருப்பரோ? சர்வலோகங்களையு மீன்றருளிய ஸ்ரீகாமாட்சியம்மையாரது அழகிய தளிர்போலுந் திருக்கரத்தி லணிந்த வளைத் தழும்பும், முலைத்தழும்பு மணிந்தவராகிய அவ்வெம்பெருமான் விஷ்ணுவினாலுங் காணப்படாத திருவடிகள் பூமியிற் பொருந்த ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் தரிசிக்கும்படி எழுந்தருளினார்.—எ-று.

நெடியோனும், என்னும் உயர்வு சிறப்பும்மையால், மற்றப் பிரமேந்திராதி தேவர்களையுங் கொள்க. (௩௨௪)

தம்பி ரானா ரெழுந்தருளத் தாங்கற் கரிய மகிழ்ச்சியினாற்
கம்பி யாகின் றவயவங்கள் கலந்த புளக மயிர்முகிழ்ப்ப
நம்பி யாரு நருமெதிரே நளின மலர்க்கை தலைக்குவிய
வம்பி காவல் லவர்செய்ய வடித்தா மரையின் கீழ்வீழ்ந்தார்.

(இ-ள்.) சிவபெருமான் எழுந்தருள, ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளும் தாங்குதற்கரிய பேரானந்தத்தினால் திருமேனி ஸ்தம்பித்து அவயவங்களி லரும்பிய புளகத்தினால் மயிர்க்கூச்செறியத் திருமுன்னே தாமரைமலர்போன்ற திருக்கரங்களைச் சிரமேற் குவித்து, பார்வதிபாகராகிய அவ்வெம்பெருமானது சிவந்த திருவடித்தாமரைகளில் வீழ்ந்து வணங்கினார்.—எ-று.

பரவைநாச்சியாரடைந்த ஊடல் காரணமாக வருந்தும் ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு முன்னே சிவபெருமா னெழுந்தருளவும், அவரைத் தரிசித்து இனி நங் குறைதீர்ந்தோமென்று மகிழ்கூர்ந்து வணங்கின ரென்க.

குவிய என்பது காரணப்பொருட்டாய் இறந்தகாலங் காட்டிய பிறவினைவினையெச்சம். (௩௨௫)

விழுந்து பரவி மிக்கபெரு விருப்பி னோடு மெதிர்போற்றி
யெழுந்த நண்பர் தமைநோக்கி யென்னீ யுற்ற தென்றருளத்
தொழுந்தங் குறையை விளம்புவார் யானே தொடங்குந் துரிசிடை
ப்பட், டழுந்து மென்னை யின்னமெடுத் தாள வேண்டு முமகென்று.

(இ-ள்.) விழுந்து வணங்கி மிக்க பெருமகிழ்ச்சியோடும் எதிரில் துதித்து எழுந்தருளிய திருத்தோழராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளைப் பார்த்தருளி, (அன்பனே!) நீ அடைந்தகுறை யாதென்று வினவியருள, வணங்குகின்ற தமது குறையைக் கூறுகின்றவராய், யானே செய்யத்தொடங்கிய குற்றத்தில் (வலிய) அகப்பட்டமுழ்கியிருக்கின்ற சிறியேனைத் தேவரீருக்கு அடிமையாகும் வண்ணம் இன்னமெடுத்து ஆண்டருளவேண்டுமென்று கூறியருளி.—எ-று.

இதுமுதல் நான்குபாடலுங் குளகம். (௩௨௬)

அடியே னங்குத் திருவொற்றியூரி னீரே யருள்செய்ய,வடிவே
லொண்கட் சங்கிலியை மணஞ்செய் தணைந்த திறமெல்லாங், கொடி
யே ரிடையாள் பரவைதா னறிந்து தன்பால் யான்குறுகின், முடிவே
னென்று துணிந்திருந்தா ளென்ஞன் செய்வ தெனமொழிந்து.

(இ-ள்.) அடியேன் திருவொற்றியூரில் தேவரீர் திருவருள்புரிய, வடித்த வேல்போலும் ஒளியமைந்த கண்களையுடைய சங்கிலியாரை மணம்புரிந்து சேர்ந்த சங்கதியனைத்தும் பூங்கொடிபோலும் அழகிய இடையையுடைய பரவையார் தெரிந்து, யான் தன்னிடத்தில் வந்தால் தான் இறந்துவிடுவேனென்று துணிவுகொண்டிருக்கின்ருள்; (இதற்கு) யான் யாதுசெய்வேனென்று கூறி.—எ-று.

அடியேன் திருவொற்றியூரில் சங்கிலியை மணம்புரிந்ததும் உமது. திருவருட்செயலேயாக; அதற்கு மாறுகொண்டு பரவை ஊடலுற்றிருப்பதால் அவ்வூடலையுந் தேவரீரே யொழித்தருளவேண்டுமென்பார், 'நீரே யருள்செய்ய-வடிவே லொண்கட் சங்கிலியை மணஞ்செய் தணைந்த திறம்' என்று கூறினர்.

நாய னீரே நானுமக்கிங் கடியே னுகி னீரெனக்குத்
தாயி னல்ல தோழருமாந் தம்பி ரானு ரேயாகி
லாய வறிவு மிழந்தழிவே னயர்வு நோக்கி யவ்வளவும்
போயிவ் விரவே பரவையுறு புலவி தீர்த்துத் தாருமென.

(இ-ள்.) எமதுஆண்டவரே யான் உமக்கு அடியவனுகவும், நீர் எனக்குத் தாயினுஞ் சிறந்த தோழராகவும், முதற்பெருங் கடவுளாகவும் இருப்பது உண்மையானல், முன்னுணர்வையு மிழந்து வருந்துகின்ற எனது துன்பத்தை நோக்கி, அவை யனைத்தையும் தேவரீர் இவ்விராப்பொழுதே சென்று (கூறி) பரவையார் கொண்டிருக்கும்ஊடலைத் தணித்துக் கிருபைசெய்தருளுமென்றுபிரார்த்திக்க.—எ-று. (௩௨௪)

அன்பு வேண்டுந் தம்பெருமா னடியார் வேண்டிற் றேவேண்டி
முன்பு நின்று விண்ணப்பஞ் செய்த நம்பி முகநோக்கித்
துன்ப மொழிநீ யாமுனக்கோர் தூத னுகி யிப்பொழுதே
பொன்செய்மணிப் பூண் பரவைபாற் போகின் ருேமென் றருள்செய்தார்.

(இ-ள்.) அன்பையே விரும்பி யேற்றருளுஞ் சிவபெருமான் தமது அடியவர் வேண்டியதையே செய்ய விருப்புற்று, தமது திருமுன்னே நின்று விண்ணப்பஞ்செய்துகொண்ட ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளது திருமுகத்தைப் பார்த்தருளி, நீ வருத்த நீங்கக்கடவாய்; யாம் உனக்கு ஒரு தூதுவனுகி, பொன்னுல் செய்யப்பட்ட இரத்தினுபரணத்தை யணிந்த பரவையாரிடத்து இப்பொழுதே செல்கின்ருேமென்று அருளிச்செய்தார்.—எ-று. (௩௨௧)

எல்லை யில்லாக் களிப்பினு லிறைவர் தாளில் வீழ்ந்தெழுந்து
வல்ல பரிசெல் லாந்துதித்து வாழ்ந்து நின்ற வன்ருெண்டர் [ல்ல
முல்லை முகைவெண் ணகைப்பரவை முகில்சேர் மாடத் திடைச்செ
நில்லா தீண்ட வெழுந்தருளி நீக்கும் புலவி யெனத்தொழுதார்.

(இ-ள்.) (அதைக் கேட்டு) அளவற்ற பெருமகிழ்ச்சியோடுஞ் சிவபெருமான் திருவடிகளில் நமஸ்கரித் தெழுந்து, அவ்வெம்பெருமானது பராக்கிரமங்

கனைத்துதித்துச் சிவாநந்தப்பெருவாழ்வடைந்துநின்ற ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள், (எப்பெருமானே!) முல்லையரும்புபோலும் வெள்ளிய தந்தபந்தியையுடைய பரவையாரது மேகங்கள் தவழுந் திருமாளிகையிற் செல்வதற்கு ஈண்டு நில்லாது எழுந்தருளி இவள் கொண்ட ஊடலைத் தணித்தருளவேண்டுமென்று வணங்கினர்.—எ-று. (௩௩௦)

அண்டர் வாழக் கருணையினா லால கால மமுதாக
வுண்ட நீலக் கோலமிடற் றொருவ ரிருவர்க் கறிவரியார்
வண்டு வாழு மலர்க்கூந்தற் பரவை யார்மா ளிகைநோக்கித்
தொண்ட னார்தந் துயர்நீக்கத் தூத ராரா யெழுந்தருள.

(இ-ள்.) தேவர்களுயிர்வாழும்படி திருவருளினால் ஆலாகலவிஷத்தை யமுதாக வுண்டருளிய அழகிய காளகண்டத்தை யுடையவரும், திருமால்பிரமனென்னு மிருவராலுங் காண்பதற்கரியவருமாகிய சிவபெருமான் வண்டுகள் மொய்க்கு மலர்மாலையணிந்த கூந்தலையுடைய பரவைநாச்சியாரது திருமாளிகையை நோக்கித் தம தன்பராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளது வருத்தத்தை யொழிக்கும்பொருட்டுத் தூதுவராக வெழுந்தருள.—எ-று.

இதுமுதல் ஆறுபாடலுங் குளகம். (௩௩௧)

தேவா சிரியன் முறையிருக்குந் தேவ ரெல்லாஞ் சேவித்துப்
போவார் தம்மில் வேண்டுவார் போத வொழிந்தார் புறத்தொழிய
வோவா வணுக்கச் சேவகத்தி லுள்ளோர் பூத கணநாதர்
மூவா முனிவர் யோகிகளின் முதலா னார்கண் முன்போக.

(இ-ள்.) தேவாசிரிய மண்டபத்தில் முறையே வசிக்கின்ற தேவர்களனைவருந் தொழுது பின்றொடர்ந்து செல்பவர்களில் விரும்பினவர்கள் பின்செல்லவும், மற்றவர்கள் புறத்தில் தங்கவும், நீங்காத அணுக்கத்தொண்டிலுள்ளவர்களும், பூதகணத்தலைவர்களும், கெடாத தவமுனிவர்களும், சிவயோகிகள் முதலானவர்களும் முன்னே செல்லவும்.—எ-று.

'தேவாசிரியன் முறையிருக்குந் தேவர்' என்பதனை:—

"பூவார் திசைமுக னிந்திரன் பூமிசை
மாவா ழகலத்து மான்முதல் வானவ
ரோவா தெவரு நிறைந்துறைந் துள்ளது
தேவா சிரிய னெனுந்திருக் காவணம்."—என்று முன்னர்த் திருக்கூட்டச்சிறப்பி லருளிச்செய்தமையா லுணர்க. (௩௩௨)

அருகு பெரிய தேவருட னணைந்து வருமவ் விருடிகளு
மருவு நண்பி னிதிக்கோனு முதலா யுள்ளோர் மகிழ்ந்தேத்தத்
தெருவும் விசும்பு நிறைந்துவிரைச் செழும்பூ மாரி பொழிந்தலையப்
பொருவி லன்பர் விடுந்தூதர் புனித வீதி யினிற்போத.

(இ-ள்.) சமீபத்தில் சிறந்த தேவர்களுடன் சேர்ந்து வருகின்ற இருடிகளும், பொருந்திய நண்பினையுடைய குபேரன் முதலானவர்களும் மகிழ்ந்து துதிக்கவும், வீதிகளும் ஆகாயமும் நிறைந்து வாசனைபொருந்திய செழிய கற்பக மலர்மாரி பொழிந்து வீசவும், ஒப்பற்ற மெய்யன்பராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவா

மிகளா லனுப்பப்பட்ட தூதுவராகிய சிவபெருமான் பரிசுத்தம்பொருந்திய திருவீதியில் சென்றருள.—எ-று. (௩௩௩)

மாலு மயனுங் காணாதார் மலர்த்தாள் பூண்டு வந்திறைஞ்சுங்
கால மிதுவென் றங்கவரை யழைத்தா லென்னக் கடல்விளைத்த
ஆல மிருண்ட கண்டத்தா ரடித்தா மரைமேற் சிலம்பொலிப்ப
நீல மலர்க்கட் பரவையார் திருமா ளிகையை நேர்நோக்கி.

(இ-ள்.) திருமால் பிரம னென்னு மிருவராலு மறிதற்கரிய சிவபெருமானது திருவடிகளை வந்தடைந்து வணங்குஞ் சமய மிதுவே யென்று அவ்விருவரையு மழைப்பதுபோலச் சமுத்திரத்திற் றோன்றிய ஆலாகலவிஷமானது இருண்டிருக்கப்பெற்ற கண்டத்தையுடைய சிவபெருமானது திருவடித்தாமரைகளின்மேல் திருச்சிலம்புகள் சப்திக்க, கருங்குவளைமலர்போலுங் கண்களையுடைய பரவைநாச்சியாரது திருமாளிகையை நேரே குறித்து.—எ-று.

முன்பு பன்றியாகவு மன்னமாகவு முருவங்கொண்டு திருவடியையுந் திருமுடியையுந் தேடிய திருமால் பிரமனென்னு மிருவரையுங் குறித்துத் திருவடியை யீண்டு எளிதிற் றரிசிக்கவாருங்களென்று விளித்தல்போலத் திருச்சிலம் பொலித்தன வென்க. (௩௩௪)

இறைவர் விரைவி னெழுந்தருள வெய்து மவர்கள் பின்றொடர
அறைகொ டிரைநீர் தொடர்சடையி லரவு தொடர வரியவிளம்
பிறைகொ ளருகு நறையிதழிப் பிணையல் சுரும்பு தொடரவுடன்
மறைக டொடர வன்றொண்டர் மனமுந் தொடர வரும்பொழுது.

(இ-ள்.) சிவபெருமான் விரைவோ டெழுந்தருளும்பொழுது தம்முடன் வருபவர்கள் பின்றொடரவும், சப்திக்கின்ற அலைபொருந்திய கங்கைநீர் தங்கிய சடைமுடியில் பாம்புகள் தொடரவும், அரிய இளம்பிறையி னருகிலுள்ள தேன்பொருந்திய கொன்றைமாலையில் வண்டுகள் தொடரவும், வேதங்கள் தொடரவும், ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளது திருவுள்ளமானது பின் தொடரவும் வந்தருளும்பொழுது.—எ-று. (௩௩௫)

பெருவா ரியினு மிகமுழங்கிப் பிறங்கு மதகுஞ் சரமுரித்து
மருவு முரிவை புனைந்தவர்தம் மருங்கு சூழ்வார் நெருங்குதலாற்
றிருவீ தியினி லெழுந்தருள்வார் திகழுஞ் செல்வத் திருவாரூ
ரொருவீ தியிலே சிவலோக முழுதுங் காண வுளதாமால்.

(இ-ள்.) பெரிய சமுத்திரத்தைப் பார்க்கிலும் மிகுதியாக முழங்கிவிளங்குகின்ற (கயாசுர னென்னும்) மதயானையை யுரித்துப் பொருந்திய தோலை ஆடையாக வணிந்தருளிய சிவபெருமானருகில் சூழ்ந்துவருபவர்கள் ஒருவரோடொருவர் நெருங்கியிருத்தலால், ஸ்ரீ வீதிவிடங்கப்பெருமா னெழுந்தருளிய செல்வங்க ணிறைந்த திருவாரூர்த் திருப்பதியானது தனது ஒருதிருவீதியில் சிவலோகமுழுவதுங் காணும்படி விளங்கியிருந்தது.—எ-று. (௩௩௬)

ஞால முய்ய வெழுந்தருளு நம்பி தூதர் பரவையார்
கோல மணிமா ளிகைவாயில் குறுகு வார்முன் கூடத்தம்
பாலங் கணைந்தார் புறநிற்பப் பண்டே தம்மை யர்ச்சிக்குஞ்
சீல முடையமறை முனிவ ராகித் தனியே சென்றணைந்தார்.

(இ-ள்.) உலகத்தார் கடைத்தேறும் பொருட்டு அவதரித்தருளிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளது தூதுவராகிய சிவபெருமான் பரவைநாச்சியாரது அழகிய மணிகளழுத்திய திருமாளிகைத்திருவாயிலையடைகின்றவராய் முன்னே செல்லவும், தம் மருகில் சூழ்ந்துவந்த சிவகணங்கள் புறத்தில் நிற்க, பழமையாகத் தம்மைப் பூசிக்கின்ற நல்லொழுக்கமமைந்த ஆதிசைவ வேதியராகத் திருவுருவங் கொண்டு தனித்துச்சென்றருளினர்.—எ-று. (௩௩௭)

சென்று மணிவா யிற்கதவஞ் செறிய வடைத்த வதன்முன்பு
நின்று பாவாய் திறவாயென் றழைப்ப நெறிமென் குழலாரு
மொன்றுந் துயிலா துணர்ந்தயர்வா ருடைய பெருமான் பூசனைசெய்
துன்றும் புரிநூன் மணிமார்பர் போலு மழைத்தா ரெனத்துணிந்து.

(இ-ள்.) இவ்வாறு சென்று, அழகிய திருவாயிற்கதவைப் பொருந்த அடைத்திருக்கின்ற அதற்குமுன்னே நின்றருளி, பரவையே! கதவைத் திறப்பாயென் றழைத்தருள, சிறிதும் நித்திரையின்றி விழித்திருக்கின்ற நெறிப்பாகிய மெல்லிய கூந்தலையுடைய சங்கிலிநாச்சியாரும் இப்பொழுது நம்மை யழைத்தவர் நம்மை யடிமையாகவுடைய சிவபெருமானுக்குப் பூசனை செய்கின்ற முப்புரிநூலை யணிந்த திருமார்பினையுடைய அருச்சகர்போலு மென்று துணிவுற்று.—எ-று.

இதுமுதல் இரண்டுபாடலுங் குளகம். (௩௩௮)

பாதி மதிவாழ் சடையாரைப் பயில்பூ சனையின் பணிபுரிவார்
பாதி யிரவி லிங்கணைந்த தென்னோ வென்று பயமெய்திப்
பாதி யுமையா டிருவடிவிற் பரம ராவ தறியாதே
பாதி மதிவா ணுதலாரும் பதைத்து வந்து கடைதிறந்தார்.

(இ-ள்.) இளம்பிறையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானுக்கு விளங்குகின்ற பூசைத்தொண்டு செய்கின்ற அருச்சகர் இந் நடுராத்திரியில் இங்கு வந்தது யாது காரணமோவென்று அச்சமுற்று, உமாதேவியாரை வாமபாகத்திற் கொண்ட திருவுருவினையுடைய சிவபெருமானென்ப தறியாமல் அர்த்தசந்திரன்போலு மொளிபொருந்திய நெற்றியினையுடைய பரவைநாச்சியாரும் மனம் பதைத்துவந்து கதவைத் திறந்தருளினர்.—எ-று. (௩௩௯)

மன்னு முரிமை வன்றொண்டர் வாயிற் றூதர் வாயிலிடை
முன்னின் றாரைக் கண்டிறைஞ்சி முழுது முறங்கும் பொழுதின்க
ணென்னை யாளும் பெருமானிங் கெய்தி யருளி னதென்ன
மின்னு மணிநூ லணிமார்பீ ரெய்த வேண்டிற் றென்னென்றார்.

(இ-ள்.) நிலைபெற்ற அன்பினுரிமையையுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளிடத்தினின்றும் வந்த தூதுவராய், திருவாயிலின் முன்னே நின்றருளிய சிவபெருமானைத் தரிசித்து வணங்கி, முழுவதுந் துயில்கின்ற இந்நடுராத்திரியில் என்னை யடிமைகொண்டருளுஞ் சிவபெருமானே இங் கெழுந்தருளினர்போலு மென்று, விளங்குகின்ற அழகிய பூணூலையணிந்த மார்பினையுடையவேதியரே! (தேவரீர் இந்நேரத்தில்) இங்கு வரவேண்டிய காரணம் யாதென் றுவினவினர்.

### வேறு.

கங்கைநீர் கரந்த வேணி கரந்தவ ரருளிச் செய்வார்
நங்கைநீ மறுத்துச் செய்யி னான்வந்த துரைப்ப தென்ன
வங்கயல் விழியி னாரு மதனைநீ ரருளிச் செய்தா
லிங்கெனக் கிசைவு மாகி லிசையலா மென்று சொல்லி.

(இ-ள்.) கங்கைநீரை யொளித்த சடைமுடியை மறைத்து வேதியராக வெழுந்தருளிய சிவபெருமா னருளிச்செய்கின்றார் ; பெண்ணே ! நீ மறுக்காமல் செய்ய உடன்படுவதானால் நான் வந்த காரணத்தைச் சொல்லக்கூடுமென் றருளிச்செய்ய, அழகிய கெண்டைமீன்போலும் விழியினையுடைய பரவைநாச்சியாரும் நீர் அதனைக் கூறியருளின், இங்கு எனக்கது செய்யக்கூடுமானால் சம்மதிக்கலாமென்று கூறி.—எ-று.

வேதியரே ! நீர் கூறுவது என்னால் செய்துமுடிக்கக்கூடாததும், கூடுமாயினும் மனம் பொருந்தக்கூடாததுமாயிருப்பின் யாதுசெய்வது ; ஆகலின், அதனைத் தேவரீர் முன்னே யுரைப்பின், அது கூடுமானாற் செய்யவும், கூடாதாயின் நீக்கவும் வேண்டுவதாகலின் அதனை முன்னர் தெரிந்தபின்னரே எமதிசைவு பொருந்துமென்பார், அதனை நீரருளிச்செய்தா - லிங்கெனக் கிசையுமாகி லிசையலா மென்று சொல்லி " என்று கூறினார். (௩௪௧)

என்னினைந் தணைந்த தென்பா லின்னதென் றருளிச் செய்தாற்
பின்னைய தியலு மாகி லாமெனப் பிரானார் தாமு
மின்னிடை மடவாய் நம்பி வரவிங்கு வேண்டுமென்ன
நன்னுத லாருஞ் சால நன்றுநம் பெருமை யென்பார்.

(இ-ள்.) என்னிடத்தில் யாது கருதி வந்தருளியதோ, அதனை இன்னதென்று அருளிச்செய்தால் பின்பு அது கூடுமானால் செய்வோமென்றுகூற, (வேதியராகிய) சிவபெருமானும் மின்போலு மிடையினை யுடைய பரவையே ! இங்கு நம்பியாரூரர் வருதல் வேண்டுமென்று கூறியருள, பரவை நாச்சியாரும் நமது பெருமை மிகநன்றாயிருக்கின்றதென்று கூறுபவராயினர்.—எ-று. (௩௪௨)

பங்குனித் திருநா ளுக்குப் பண்டுபோல் வருவாராகி
யிங்கெனைப் பிரிந்து போகி யொற்றியூ ரொய்தி யங்கே
சங்கிலித் தொடக்குண் டாருக் கிங்கொரு சார்வுண் டோநீர்
கங்குலின் வந்து சொன்ன காரிய மழகி தென்றார்.

(இ-ள்.) பங்குனி யுத்திரத் திருவிழாவிற்கு முன்பு போல வருகின்றவராய், இவ்விடத்தில் என்னைவிட்டு நீங்கிச்சென்று திருவொற்றியூரையடைந்து, அங்குச் சங்கிலி யென்பவளோடு சம்பந்தப்பட்டிருந்தவருக்கு, பின் இங்கே யொரு சார்பிருக்கின்றதோ ? தேவரீர் இந்நடுராத்திரியில் வந்து சொன்ன காரியம் மிகவும் அழகாயிருக்கின்றதென்று கூறியருளினார்.—எ-று.

சங்கிலியினால் கட்டப்பட்டவர் என்னுஞ் சிலேடைப்பொருள் தொனிக்க, "சங்கிலித்தொடக்குண்டாருக்கு" என்று கூறினார். அங்குச் சங்கிலியை மணம்புரிந்திருந்தவர் பின் இங்குவரவேண்டியகாரியம் சிறிதுமில்லையென்பார், இங்கொரு சார்வுண்டோ " என்றும், நீர் இந் நடுராத்திரியிற் கருதிவந்த காரி

யம் பயனற்றதென்பார், "நீர் கங்குலின் வந்து சொன்ன காரியம் அழகிது" என்றுங் கூறினார். (ருஅரு)

நாதரு மதனைக் கேட்டு நங்கைநீ நம்பி செய்த
வேதங்கண் மனத்துக் கொள்ளா தெய்திய வெகுளி நீங்கி
நோதக வொழிதற் கன்றோ நுன்னையான் வேண்டிக் கொண்ட
தாதலின் மறுத்தல் செய்ய வடாதென வருளிச் செய்தார்.

(இ-ள்.) சிவபெருமானும் அவ்வார்த்தையைக் கேட்டு, பெண்ணே! நீ நம்பியாரூரர் செய்த குற்றங்களை மனதில் வையாமல், அடைந்திருக்கின்ற கோபத்தினின்று நீங்கித் துன்பமொழிதற்கன்றோ? யான் உன்னை வேண்டிக் கொண்டது; ஆதலால் எனது வேண்டுகோளைத் தடுப்பது உனக்குத் தகாதென்று அருளிச்செய்தனர்.—எ-று.

நம்பியாரூரர் உன்னோடிசைந்துவாழ்ந்திருந்தகாலத்து அவர் காரணமாக உன்னை வேண்டினோரொருவருமில்லை; அவர் செய்த குற்றங் காரணமாகவே யன்றோ? யாம் வேண்ட நேர்ந்தது; நீ இசையாயாயின் எமது வேண்டுகோளால் என்ன பயனாயிற்று; ஆகலின், அவர் செய்த குற்றத்தை மன்னித்து அவர் வருதற்கிசையவேண்டுமென்பார், 'ஆதலின் மறுத்தல் செய்ய வடாதென வருளிச்செய்தார்' என்று கூறினார். (ருஅசு)

அருமறை முனிவ ரான வையரைத் தையலார்தாங்
கருமமீ தாக நீரிக் கடைத்தலை வருகை மற்றும்
பெருமைக்குத் தகுவ தன்றா லொற்றியூ ருறுதி பெற்றார்
வருவதற் கிசையே னீரும் போமென மறுத்துச் சொன்னார்.

(இ-ள்.) அரிய வேதியத் திருவுருவங்கொண் டெழுந்தருளிய சிவபெருமானைப் பரவைநாச்சியார் பார்த்து, நீர் இக்காரியத்தை மேற்கொண்டு இத்தலைவாசலில் வருவது உமது மேன்மைக்குத் தகுதியன்று. திருவொற்றியூரோ தமக்கு ஸ்திரமாகப்பெற்ற நம்பியாரூரர் இங்கு வருவதற்குச் சம்மதியேன்; நீரும் போவீராக வென்று மறுத்துக்கூறியருளினார்.—எ-று.

நீர் சிவபெருமானை யருச்சிக்குஞ் சிவவேதியராயிருந்தும், பெருங்குற்றத்தினராகிய நம்பியாரூரர் பொருட்டு இத்தகைய வார்த்தைகளைக் கூறிவருதலடாதென்பார், 'உம் பெருமைக்குத் தகுவதன்று' என்று கூறினார். (ருஅஎ)

நம்பர்தா மதனைக் கேட்டு நகையுமுட் கொண்டு மெய்ம்மைத்
தம்பரி சறியக் காட்டார் தனிப்பெருந் தோழ னார்தம்
வெம்புறு வேட்கை காணுந் திருவிளை யாட்டின் மேவி
வம்பலர் குழலி னார்தா மறுத்ததே கொண்டு மீண்டார்.

(இ-ள்.) சிவபெருமான் அவ்வார்த்தையைக் கேட்டுத் தமதுள்ளத்தில் புன்சிரிப்படைந்து, உண்மையாகிய தமது திருவுருவத்தை அவ்வம்மையாரறியும்படி காட்டாமல், ஒப்பற்ற பெரிய திருத்தோழராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளது கலங்கியிருக்கும் விருப்பத்தைக் காணவேண்டிய திருவிளையாட்டினால், நறுமணங் கமழுங் கூந்தலையுடைய பரவைநாச்சியார் தடுத்துவிட்டதையே உறுதியாகக்கொண்டு திரும்பினார்.—எ-று.

சிவபெருமான் தமது உண்மைத் திருவுருவத்தைக் காட்டின் பரவை யார் இசைவாராகலின், 'தம்பரி சறியக் காட்டார்' என்றும், அவ்வாறு காட் டி யிசையச்செய்யின் நம்பியாரூரரது வேட்கை காணுந் திருவிளையாட் டமை யாவாகலின், 'தோழனார்தம் வெம்புறு வேட்கை காணுந் திருவிளை யாட்டின் மேவி' என்றும், அவ் வம்மையார் மறுத்ததையே ஒருறுதியாகக்கொண் டடை ந்தனராகலின், 'மறுத்ததே கொண்டு மீண்டார்' என்றுங் கூறினர். (நூசுசு)

தூதனைப் போக விட்டு வரவுபார்த் திருந்த தொண்டர்
நாதனை யறிவி லாதே னன்னுதல் புலவி நீக்கப்
போதரத் தொழுதே னென்று புலம்புவார் பரவை யாளைக்
காதலி னிசைவு கொண்டு வருவதே கருத்துட் கொள்வார்.

(இ-ள்.) தூதுவனைப் பரவைநாச்சியாரிடத்தனுப்பி அவரது வருகையை எதிர்பார்த்திருந்த ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் அறிவில்லாதவனாகிய யான் பரவையாரது ஊடலைத் தீர்க்கும்பொருட்டுச் சிவபெருமானைத் தூதுசெல்லும் படி வணங்கி விடுத்தேனென்று அழுவார்; பரவையாளை விருப்பத்தோடும் சம்மதிக்கச் செய்துவருவதையே தமதுள்ளத்திற் சிந்திப்பார்.—எ-று.

சர்வலோக வந்திதராகிய சிவபெருமானை அறிவிலியாகிய சிறியேன் ஒரு பெண்பால் தூதனுப்பியது மிகக் கொடுமையென்று வருந்துவ ரென்பார் 'நாதனை யறிவி லாதே னன்னுதல் புலவி நீக்கப் - போதரத் தொழுதே னென்று புலம்புவார்' என்றும், எவ்வாறாயினும் நமது காரியம் சித்தியாவதே நன் றென்று கருதியிருந்தன ரென்பார், 'பரவையாளைக் காதலி னிசைவு கொண்டு வருவதே கருத்துட் கொள்வார்' என்றுங் கூறினர். (நூசுஎ)

போயவண் மனையி னண்ணும் புண்ணிய ரென்செய் தாரோ
நாயனார் தம்மைக் கண்டா ளன்னுதன் மறுக்கு மோதா
னயவென் னயர்வு தன்னை யறிந்தெழுந் தருளி னார்தாஞ்
சேயிழை துனிதீர்த் தன்றி மீள்வது செய்யா ரென்று.

(இ-ள்.) தூது சென்று அப்பரவையார் திருமாளிகையையடைந்த சிவ பெருமான் யாது செய்தனரோ? சிவபெருமானைப் பார்த்தால் பரவைநாச்சி யார் தடை சொல்வாளோ? யானடைந்திருக்குந் துன்பத்தை யறிந்து தூதாக வெழுந்தருளிய சிவபெருமான் பரவையாரது மனவருத்தத்தை நீக்கி யன்றித் திரும்பாரென்று சிந்தித்து,—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (நூசுஅ)

வழியெதிர் கொள்ளச் செல்வர் வரவுகா ணாது மீள்வ
ரழிவுற மயங்கி நிற்ப ரசைவுட னிருப்பர் நெற்றி
விழியவர் தாழ்த்தா ரென்று மீளவு மெழுவர் மாரன்
பொழிமலர் மாரி வீழ வொதுங்குவார் புன்க ணுற்றார்.

(இ-ள்.) வழியை யெதிர்கொள்ளும்படி செல்லுவார்; அவரது வருகை யைக் காணாமல் திரும்புவார்; மனமழிய மயக்கங்கொண்டு நிற்பார்; தேக மசைவுற்றிருப்பார்; நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் இன்னம் வரவி ல்லையென்று திரும்பவும் எழுவார்; மன்மதன் பிரயோகிக்கும் புஷ்பபாணமா கிய மழை பொழிய ஒதுங்கி நிற்பார்; இவ்வாறு மனவருத்தமடைந்தனர்.

பரவையார் தம்பா னம்பி தூதராம் பாங்கிற் போன
வரவணி சடையார் மீண்டே யறியுமா றணையும் போதி
லிரவுதான் பகலாய்த் தோன்ற வெதிரொழுந் தணையை விட்ட
வுரவுநீர் வெள்ளம் போல வோங்கிய களிப்பிற் சென்றார்.

(இ-ள்.) பரவைநாச்சியாரிடத்தில் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்காகத் தூதுவராகச் சென்றருளிய பாம்பையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமான் அவரறியும்படி யெதிரில் வரும்பொழுது, அவ்விரவு பகலாகத் தோன்ற அவ்வெம்பெருமானுக் கெதிரிலெழுந்து, அணைகடந்து செல்லும் வலிய நீர்ப்பிரவாகம்போல மிக்க மகிழ்வோடுஞ் சென்றருளினார்.—எ-று.

பெருமான் தூதுசென்று, பரவையார் கொண்ட புலவியை நீக்கி நமது காரியம் சித்திக்கச்செய்து வந்தருளினரென்று மகிழ்ந்து அவ்விரவு தோன்றாமல் சென்றன ரென்பார், 'அணையைவிட்ட வுரவுநீர் வெள்ளம்போல வோங்கிய களிப்பிற் சென்றார்' என்று கூறினார். (ருஅ௰)

சென்றுதம் பிரானைத் தாழ்ந்து திருமுக முறுவல் செய்ய
வொன்றிய விளையாட் டோரா ருறுதிசெய் தணைந்தா ரென்றே
யன்றுநீ ராண்டு கொண்ட வதனுக்குத் தகவே செய்தீ
ரின்றிவள் வெகுளி யெல்லாந் தீர்த்தெழுந் தருளி யென்றார்.

(இ-ள்.) தமது திருமுகத்தில் மகிழ்வுண்டாகச் சென்று சிவபெருமானை வணங்கி, அவர் செய்யுந் திருவிளையாட்டை யுணராமல், (தமது காரியத்தை) ஸ்திரப்படுத்தி வந்தனரென்று கருதித் தேவரீரெழுந்தருளி, இன்று பரவையார் கொண்ட கோபங்க ளனைத்துந் தணித்து, அந்நாளில் என்னைத் தடுத்தடிமைகொண்டருளிய தன்மைக்குத் தகுதியாகவே செய்தருளினீரென்று கூறினார்.—எ-று. (ருஅக)

அம்மொழி விளம்பு நம்பிக் கையர்தா மருளிச் செய்வார்
நம்மைநீ சொல்ல நாம்போய்ப் பரவைதன் னில்ல நண்ணிக்
கொம்மைவெம் முலையி னாட்குன் றிறமெலாங் கூறக் கொள்ளாள்
வெம்மைதான் சொல்லி நாமே வேண்டவு மறுத்தா ளென்றார்.

(இ-ள்.) அவ்வார்த்தையைக் கூறிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குச் சிவபெருமா னருளிச்செய்கின்றார்; நீ நம்மைத் தூது செல்லும்படி சொல்ல, நாம் சென்று பரவையாரது திருமாளிகையையடைந்து, குவிவாகிய வெவ்விய ஸ்தனங்களையுடைய அப்பெண்ணுக்கு உன் வருத்தங்க ளனைத்தும் எடுத்துரைத்து நாமே வேண்டிக்கொள்ளவும் ஏற்றுக்கொள்ளாமல் கடுமொழி கூறித் தடுத்தனளென்று கூறியருளினார்.—எ-று.

வேறொருவர் சென்று கூறித் தடைபடாமல் நாமே நேரிற் சென்று கூறியும் உனது காரியம் முடியாதாயிற்று; ஆகலின், அதனைச் சிந்திப்பதிற் பயனில்லை என்னுங் கருத்துத் தோன்றக் கூறின ரென்பார் 'நாமே வேண்டவு மறுத்தாள்' என்று கூறினார். (ருஅஉ)

அண்ணலா ரருளிச் செய்யக் கேட்டவா ரூரர் தாமுந்
துண்ணென நடுக்கமுற்றே தொழுதுநீ ரருளிச் செய்த

வண்ணமு மடியா ளான பரவையோ மறுப்பா ளுங்க
ளெண்ணலா ரடிமைக் கென்ப தின்றறி வித்தீ ரென்று.

(இ-ள்.) சிவபெருமான் அவ்வாறு அருளிச்செய்ய, அதனைக் கேட்ட ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளும் திடுக்கென்று நடுக்கங்கொண்டு வணங்கி, தேவரீ ரருளிச்செய்த வகைகளை அடியவளாகிய பரவையோ? தடுப்பவள்; நாங்கள் உமக்கடிமையாதற்குத் தகாதவர்களென்பதை இன்று தெரிவித்தருளினீரெ ன்றுகூறி,—எ-று.

இதுமுத லிரண்டுபாட்டொருங் குளகம். (கூருகூ)

வானவ ருய்ய வேண்டி மறிகட னஞ்சை யுண்டீர்
தானவர் புரங்கள் செற்று மூவரைத் தவிர்த்தாட் கொண்டீர்
நான்மறைச் சிறுவர்க் காகக் காலனைக் காய்ந்து கட்டீர்
யான்மிகை யுமக்கின் றானே லென்செய்வீர் போதா தென்றார்.

(இ-ள்.) தேவர்களுயிர்பெற்று வாழும்பொருட்டு (அலைகள்) மடங்குகின்ற கடலிற்றோன்றிய விஷத்தையுண்டருளினீர்; அசுரர்களது முப்புரங்களெரியச்செய்து (அப்புரத்திற்குத் தலைவர்களாகிய தாரகாக்ஷன் - கமலாக்ஷன் - வித்துன்மாலியென்னும்) மூவர்களையும் நீக்கி யடிமைகொண்டருளினீர்; பிராமணச்சிறுவராகிய மார்க்கண்டேயர்பொருட்டு இயமனையுதைத்து, அவரையடிமைகொண்டருளினீர்; யான் தேவரீருக்கு அத்தகைய அன்பு சிறிது மின்றிக் குற்றமுடையேனாயிருப்பின் தேவரீர் திரும்பிவராமல் வேறு யாது செய்வீர்; என்று கூறியருளினார்.—எ-று.

தேவர்களுய்ய விடத்தையுண்டு அவர்கட் கமிர்தத்தைக் கொடுத்தும், திரிபுரத்தையழித்து அப்புரத் தலைவர்களாகிய மூவரி லிருவர் திருவாயிற் காவலாளராகவும் ஒருவர் குடமுழா முழக்கவு மருள்புரிந்தும், மார்க்கண்ட முனிவரைப் பிடிக்கவந்த இயமனையுதைத்து அவருக் கென்றுஞ் சிரஞ்சீவியாயிருக்கத் திருவருள் புரிந்தும், ஆண்டருளியது அவர்களது மெய்யன்பு கருதியேயாம். அடியேன், அத்தகைய அன்புசிறிதுமில்லேனென்பதுகுறித்தே எனது துன்பத்தை நீக்காதொழிந்தீர்; இஃது என் குறையேயன்றி வேறின்றென்பார், "யான் மிகையுமக் கின்றானே லென்செய்வீர் போதாது" என்று கூறினார். "மூவரைத் தவிர்த்தாட்கொண்டீர்' என்பதனை,

"மூவெயில்செற்றஞான்றுய்ந்தமூவரிலிருவர்நின்றிருக்கோயிலின்வாய்தல்
காவலாளரென்றேவியபின்னையொருவனீகரிகாடரங்காக
மானைநோக்கியோர்மாநடமகிழமணிமுழாமுழக்கவருள்செய்த
தேவதேவநின்றிருவடியடைந்தேன்செழும்பொழிற்றிருப்புன்கூருளானே"
என்னுந் தேவாரத்தா லுணர்க. (கூருச)

ஆவதே செய்தி ரின்றெ னடிமைநீர் வேண்டா விட்டாற்
பாவியேன் றன்னை யன்று வலியவாட் கொண்ட பற்றென்
னோவுமென் னழிவுங் கண்டீர் நுடங்கிடை யவள்பா லின்று
மேவுதல் செய்யீ ராகில் விடுமுயி ரென்று வீழ்ந்தார்.

(இ-ள்.) எனதன்பிற்குத் தக்கவாறே செய்தருளினீர் ; இன்று எனதடிமையைத் தேவரீர் ஏற்றுக்கொள்ளாவிடின், கொடியேனாகிய என்னை அந்நாளில் தடுத்தடிமைகொண்டருளிய கருணை யாது? எனது வருத்தத்தையுங் கேட்டையும் பார்த்திருக்கின்ற எம்பெருமானே! துவளுகின்ற இடையினையுடைய பரவையாரிடத்தில், இப்பொழுது மறுபடியுந் தூது சென்று அவள் ஊடலைத் தணியீராயின், எனது பிராணன் போய்விடுமென்று வருந்திப் பூமியில் விழுந்தார்.—எ-று. (ருஙரு)

தம்பிரா னதனைக் கண்டு தரியாது தளர்ந்து வீழ்ந்த
நம்பியை யருளா னோக்கி நாமின்ன மவள்பாற் போயுங்
கொம்பனை யிப்போ தேநீ குறுகுமா கூறு கின்றோம்
வெம்புறு துயர்நீங் கென்றார் வினையெல்லாம் விளைக்க வல்லார்.

(இ-ள்.) சிவபெருமா னதனையுணர்ந்து, மனந்தரியாமல் சோர்ந்து விழுந்த ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளைக் கருணையோடு பார்த்தருளி, நாம் இன்னம் பரவையாரிடத்துச் சென்று, பூங்கொம்புபோன்ற அந்தப் பெண்ணை இப்பொழுதே நீ யடையும்படி சொல்லுகின்றோம் ; ஆதலால் நீ வருந்துகின்ற துன்பத்தினின்று நீங்குவாயாகவென்று கூறியருளினார் ; எல்லாச்செயல்களையுந் தோற்றுவிக்க வல்லவராகிய சிவபெருமான்.—எ-று.

பரவைநாச்சியார் ஊடல்கொண்டதும் அது காரணமாக ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் வருந்துவது மாகிய அனைத்துந் சிவன்செயலே யென்பார், 'வினையெலாம் விளைக்க வல்லார்' என்று கூறினார்.

விளைக்கவல்லார் துயர்நீங்கென்றார், எனக் கூட்டுக. (ருஙசு)

மயங்கிய நண்பருய்ய வாக்கெனு மதுர வாய்மை
நயங்கிள ரமுத நல்க நாவலூர் மன்னர் தாமு
மியங்கிய கலக்க நீங்கி யும்மடித் தொழும்ப னேனைப்
பயங்கெடுத் திவ்வா றன்றோ பணிகொள்வ தென்று போற்ற.

(இ-ள்.) மனநிலை கலங்கிய தமது தோழராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளுய்யும்படி தமது திருவாக்கென்னு மதுரமாகிய மெய்ம்மை பொருந்திய நன்மை மிக்க அமுதத்தைத் தந்தருள, ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளும் வருந்துகின்ற மனக்கலக்க மொழிந்து, உமது திருவடித்தொண்டனாகிய என்னை அச்சத்தினின்று நீக்கி, இத்தன்மையாகவல்லவோ? அடிமைகொள்வதென்று துதிக்க.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (ருஙஎ)

அன்பர்மேற் கருணை கூர வாண்டவர் மீண்டுஞ் செல்லப்
பின்புசென் றிறைஞ்சி நம்பி பேதுற லோடு மீண்டார்
முன்புடன் போதா தாரு முறைமையிற் சேவித் தேகப்
பொன்புரி சடையார் மாதர் புனிதமா ளிகையிற் சென்றார்.

(இ-ள்.) மெய்யன்பராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளிடத்துத் திருவருள் சுரந்து சிவபெருமான் மீண்டுந் தூது செல்ல, அந்நம்பியாரூரர் அவர் பின்னே சென்று வணங்கி மனக்கலக்கத்துடன் திரும்பினார் ; முன்பு தம்முடன் வராதிருந்த தேவர்கள் முதலியோரும் வரிசையாக வணங்கிப் பின்செல்ல,

பொன்போல் விளங்கும் முறுக்காகிய சடைமுடியையுடைய சிவபெருமான் பரவைநாச்சியாரது தூய்மையாகிய திருமாளிகையிற் சென்றருளினர்.—எ-று.

மதிநுதற் பரவை யார்தா மறையவர் போன பின்பு
முதிர்மறை முனியாய் வந்தா ராளுடை முதல்வ ராகு
மதிசயம் பலவுந் தோன்ற வறிவுற்றே யஞ்சிக் கெட்டே
னெதிர்மொழி யெம்பி ரான்முன் னென்செய மறுத்தே னென்பார்.

(இ-ள்.) பிறைச்சந்திரன்போன்ற நெற்றியையுடைய பரவைநாச்சியார் தூதுவராகவந்த வேதியர் சென்றபின்பு பல அதிசயங்களுண்டாக, அதனால், விருத்த வேதியராக வந்தவர் நம்மை யடிமைகொண்டருளிய சிவபெருமானுகு மென்று தெளிந்து அச்சங்கொண்டு,ஐயோ! கெட்டேன் ; எமது சிவபெருமான் முன்னே யாதுசெய்ய, அவரருளிச்செய்ததை எதிர்வார்த்தை கூறித் தடுத்தே னென்று வருந்துவாராயினர்.—எ-று. (௩௫௯)

கண்டுயி லெய்தா வெய்ய கையற வெய்தி யீங்கின்
றண்டர்தம பிரானர் தோழர்க் காகவர்ச் சிப்பார் கோலங்
கொண்டணைந் தவனை யானுட கொண்டிலேன் பாவி யேனென்
ஞெண்சுடர் வாயி லேபாரா துழையரோ டழியும் போதில்.

(இ-ள்.) நித்திரைகொள்ளாமல் கொடிய வருத்தமுற்று, இங்கு இப்பொழுது தேவர்கள் நாயகராகிய சிவபெருமான் தமது திருத்தோழராகிய நம்பியாரூரர் பொருட்டு அருச்சகர்போலத் திருவுருவங்கொண்டெழுந்தருளிய அவ்வெம்பெருமானைப் பாவியாகியயான் சிறிதும் மனதிற்சிந்திக்கவில்லையென்று கருதி,ஒளிவிளங்குகின்றதிருவாயிலைப்பார்த்து அருகிலுள்ள தோழியர்களுடன் வருந்தும்பொழுது.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௩௬௦)

வெறியுறு கொன்றை வேணி விமலருந் தாமாந் தன்மை
யறிவுறு கோலத் தோடு மளவிலபல பூத நாதர்
செறிவுறு தேவர் யோக முனிவர்கள் சூழ்ந்து செல்ல
மறுவிலசீர்ப் பரவை யாரதம் மாளிகை புகுந்தா வந்து.

(இ ள்.) வாசனைபொருந்திய கொன்றைமாலையை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானும் தம்மை யுணரத்தக்க திருவுருவத்தோடும் அளவற்ற பல பூதகணத்தலைவர்களும், நெருங்கிய தேவர்களும், சிவயோகத்தையுடைய முனிவர்களும் அருகில் சூழ்ந்துவர, குற்றமற்ற சிறப்பினையுடைய பரவைநாச்சியாரது திருமாளிகையைவந் தடைந்தருளினர்.—எ-று. (௩௬௧)

பாரிடத் தலைவர் முன்னும் பல்கண நாதர் தேவர்
நேர்வுறு முனிவா சித்த ரியக்கர்க ணிறைத லாலே
பேரரு ளாள ரெய்தப் பெற்றமா ளிகைதான் றெண்பாற்
சீர்வளர் கயிலை வெள்ளித் திருமலை போன்ற தன்றே.

(இ-ள்.) பூதகணத்தலைவர் முதலாகிய பல கணநாதர்களும், தேவர்களும், நல்லொழுக்கமமைந்த முனிவர்களும், சித்தர்களும்,இயக்கர்களும் நிறைந்திருத்தலால், சிறந்த அருள்வள்ளலாகிய சிவபெருமான் தூதாகவெழுந்தருளப்

பெற்ற பரவைநாச்சியாருடைய திருமாளிகையானது சிறப்புவளர்கின்றதென் றிசைத் திருக்கயிலைபோன்று விளங்கியது.—எ-று.

வடதிசைக்கண் ணுள்ளதாகிய ஸ்ரீமஹாகயிலாசத்தில் சிவபெருமானை ச்சேவிக்கும்பொருட்டு, அரிபிரமேந்திராதி தேவர்களும், பல சிவகணநாதர்களும், முனிவரர் சித்தர் வித்தியாதரர் முதலியோர்களுஞ் சூழ்ந்திருத்தல்போலச் சிவபெருமான் பரவைநாச்சியாரது திருமாளிகையிற் றூதுவராகச்சென்றபொழுது அத்தேவசமூகங்களனைத்தும் நெருங்கிச் சூழ்தலால் அத் திருமாளிகையும், இஃது தென்றிசைக்கண்ணுள்ளதாய ஓர் கயிலாசம்போன்று விளங்கியதென்க. (௩௯௨)

ஐயரங் கணைந்த போதி லகிலலோ கத்துள் ளாரு
மெய்தியே செறிந்து சூழ வெதிர்கொண்ட பரவை யார்தா
மெய்யுறு நடுக்கத் தோடு மிக்கெழு மகிழ்ச்சி பொங்கச்
செய்யதா ளிணைமுன் சேர விரைவினிற் சென்று வீழ்ந்தார்.

(இ-ள்.) சர்வலோகத்திலுள்ளவர்களு மடைந்து நெருங்கிச் சூழும்படி சிவபெருமான் அங்கெழுந்தருளியபொழுது எதிர்கொண்டு சென்ற பரவைநாச்சியார் தமது திருமேனியிலுண்டாகிய நடுக்கத்துடன் மிகுத்தெழுகின்ற மகிழ்ச்சி யதிகரிக்க விரைவோடு சென்று சிவந்த இரண்டு திருவடிகளில் விழுந்து வணங்கினார்.—எ-று.

சிவபெருமானருளிய மொழியைத் தடுத்தோமென்று நடுக்கமும், நம்மையு மொரு பொருட்படுத்தி யிவ்வாறெழுந்தருளினரோ வென்று பெருமகிழ்வுங்கொண்டன ரென வறிக. (௩௯௩)

அரியயற் கரியார் தாமு மாயிழை யாளை நோக்கி
யுரிமையா லூரனேவ மீளவு முன்பால் வந்தோ
முருகலர் குழலா யின்ன முன்புபோன் மறுத்தே நின்பாற்
பிரிவுற வருந்து கின்றான் வரப்பெற வேண்டு மென்றார்.

* (இ-ள்.) திருமால் பிரமனென்னு மிருவராலுங் காணப்படாதவராகிய சிவபெருமான் பரவைநாச்சியாரைப் பார்த்தருளி, நறுமணங்கமழுங் கூந்தலையுடைய பரவையே! நம்பியாரூரனனுப்ப மீண்டும் உன்னிடத்து வந்தோம்; அன்பினுரிமையினால் இன்னம் முன்போலத் தடைசொல்லாமல், பிரிவினால் வருந்துகின்ற அந்தச் சுந்தரன் உன்னிடத்தில் வரும்படி சம்மதிக்கவேண்டுமென்று கூறி யருளினார்.—எ-று.

உரிமையால் என்பதற்கு, நமக்குத் தோழராயிருக்கும் சம்பந்தத்தினால், என்று பொருள் கூறினும் பொருந்தும். (௩௯௪)

பெருந்தடங் கண்ணி னாரும் பிரான்முன்பு மிகவு மஞ்சி
வருந்திய வுள்ளத் தோடு மலர்க்கரங் குழன்மேற் கொண்டே
யருந்திரு மறையோ ராகி யணைந்தீர்முன் னடியேன் செய்த
விருந்தவப் பயனோ மென்ன வெய்திய நீரோ வென்பார்.

(இ-ள்.) மிக்க விசாலமாகிய கண்களையுடைய பரவைநாச்சியாரும் சிவபெருமான் திருமுன்னே மிக்க அச்சமுற்று, வருந்துகின்ற திருவுள்ளத்துடன்

தாமரைமலர்போன்ற திருக்கரங்களைக் குவித்துக் கூந்தலின்மேல்வைத்து, அடியேன் செய்த பெரிய தவப்பயன்போல வெழுந்தருளிய தேவரீரோ? முன்பு அரிய வேதியர்போலத் திருவுருவங்கொண் டெழுந்தருளிவந்தவொன்று கூறுவாராயினார்.—எ-று. (௫௬௫)

துளிவளர் கண்ணீர் வாரத் தொழுதுவிண் ணப்பஞ் செய்வா
ரொளிவளர் செய்ய பாதம் வருந்தவோ ரிரவு மாறு
தளிவரு மன்பர்க்காக வங்கொடிங் குழல்வீ ராகி
யெளிவரு வீரு மானா லென்செய்கே னிசையா தென்றார்.

(இ-ள்.) துளிக்கின்ற கண்ணீர் பெருக வணங்கி விண்ணப்பஞ் செய்கின்றார்; (எம்பெருமானே! தேவரீர்) ஒளிவிளங்குகின்ற சிவந்த திருவடிகள் வருந்தும்வண்ணம் ஓரிரவுமுழுவது நீங்காமல், அன்பினையுடைய நம்பியாரூரர் பொருட்டு அங்குமிங்கும் திரிபவராய் எளிதாகத் தூதுவருபவருமானால் சம்மதியாமல் யாதுசெய்வேனென்றுகூறினார்.—எ-று.

நம்பியாரூர் செய்த கொடுமையைக்குறித்து நீக்கவேண்டுவ தாயினும் அவர்பொருட்டுத் தேவரீர் ஓரிரவு முழுவதும் திருவடிவருந்தத் தூதுநடந்து, ஒன்றுக்கும் பற்றாத என்னை யொருபொருட்படுத்தி இவ்வாறு கூறியருள்வீராயின், அடியேன் சம்மதியாமல் யாது செய்வேனென்றன ளென்க. (௫௬௬)

நங்கைநின் றன்மைக் கேற்கு நன்மையே மொழிந்தா யென்று
மங்கையோர் பாகம் வைத்த வள்ளலார் விரைந்து போகத்
திங்கள்வா ணுதலி னாருஞ் சென்றுபின் னிறைஞ்சி மீண்டா
ரெங்களை யாளு நம்பி தூதர்மீண் டேகு கின்றார்.

(இ-ள்.) பெண்ணே! உனது பெருந்தன்மைக்கேற்ற நன்மொழியையே கூறினை என்றருளிச்செய்து, உமாதேவியாரை வாமபாகத்தில் வைத்தருளிய சிவபெருமான் விரைந்து சென்றருள, அர்த்தசந்திரன்போலும் நெற்றியையுடைய பரவைநாச்சியாரும் பின்சென்று வணங்கித் திரும்பினார்; எம்மை யடிமைகொண்டருளிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளது தூதுவராகிய சிவபெருமான் அவ்வம்மையாரது சம்மதம்பெற்றுத் திரும்பிச் செல்வாராயினார்.—எ-று. ()

வேறு.

ஆதியு மீறு மாலய னாடற் கருளாதார்
தூதினி லேகித் தொண்டரை யாளுந் தொழில்கண்டே
வீதியி லாடிப் பாடி மகிழ்ந்தே மிடைகின்றார்
பூதியி னீடும் பல்கண நாதர் புகழ்வீரர்.

(இ-ள்.) திருவடியையுந் திருமுடியையுந் திருமால்பிரமனென்னு மிருவருங் காண்பதற்கரியவராகிய சிவபெருமான் தூதுசென்று ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளை யாண்டருளிய செய்கையைப்பார்த்து, விபூதியினாற் சிறந்துவிளங்கும் பலசிவகணத்தலைவர்களாகிய புகழையுடைய வீரர்கள் திருவீதியில் ஆனந்தக்கூத்தாடியுந் திருப்புகழைப் பாடியும் நெருங்குகின்றவராயினார்.—எ-று. ()

அன்னவர் முன்னும் பின்னுமருங்கு மணைவெய்த
மின்னிடை யார்பா லன்பனை யுய்க்கும் விரைவோடுஞ்

சென்னியி னீடுங் கங்கை ததும்பத் திருவாரூர்
மன்னவ னாரம் மறையவ னார்பால் வந்துற்றார்.

(இ-ள்.) அச் சிவகணநாதர்கள் தமக்கு முன்னும் பின்னும் அருகிலுஞ் சூழ்ந்துவர, மின்போலு மிடையினையுடைய பரவைநாச்சியாரிடத்து ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளை யனுப்பவேண்டுமென்னும் விரைவுடன் திருமுடியி லணிந்த கங்கைநீர் ததும்பும்படி திருவாரூரி லெழுந்தருளிய சிவபெருமான் அச் சுந்தரமூர்த்திசுவாமிகளிடத்து வந்தடைந்தருளினர்.—எ-று. (௩௬௯)

அன்பரு மென்பா லாவி யளிக்கும் படிபோனா
ரென்செய்து மீள்வா ரின்னமு மென்றே யிடர்கூரப்
பொன்புரி முந்நூன் மார்பினர் செல்லப் பொலிவீதி
முன்புற நேருங் கண்ணிணை தானு முகிழாரால்.

(இ-ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளும் என்னிடத்து உயிர்தரிக்கும்படி சென்றருளிய சிவபெருமான் இன்னம் யாதுசெய்து திரும்புவரோ வென்று துன்பமிகும்படி பொன்போல் விளங்கும் பூணூலையணிந்த திருமார்பினையுடைய சிவபெருமான் தூதுசென்றகாரணமாக விளங்குகின்ற திருவீதியை முன்னே பொருந்தப்பார்க்கின்ற இரண்டு கண்களையும் மூடாராயினர்.—எ-று,

'ஆவியளிக்கும்படிபோனார்' என்பதற்கு, எனது உயிர்போன்ற பரவையாரை ஊடல் தணித்துத்தரும்பொருட்டுச் சென்ற சிவபெருமான், எனப்பொருள்கூறினுமாம். (௩௭௦)

அந்நிலை மைக்கண் மன்மதன் வாளிக் கழிவார்தம்
மன்னுயிர் நல்குந் தம்பெரு மானார் வந்தெய்த
முன்னெதிர் சென்றே மூவுல குஞ்சென் றடையுந்தாள்
சென்னியில் வைத்தென் சொல்லுவ ரென்றே தெளியாதார்.

(இ-ள்.) அவ்வாறாகிய நிலைமையில் மன்மதன் விடுகின்ற புஷ்ப பாணத்தினால் வருந்துகின்ற ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளது நிலைபெற்ற உயிரைத் தரும்படி தூதுசென்ற தமது சிவபெருமான் வந்தடைய, மூவுலகத்திலுள்ளவர்களும் அடைக்கலமாக வந்தடையுந் திருவடிகளைமுற்பட்டுச் சென்று தமது சிரசிற் சூடி (அவர் தூதுசென்ற காரியத்தைக் குறித்து) யாது சொல்வரோ வென்று தெளியாதவராயினர்.—எ-று. (௩௭௧)

எம்பெரு மானீ ரென்னுயிர் காவா திடர்செய்யுங்
கொம்பனை யாள்பா லென்கொடு வந்தீர் குறையென்னத்
தம்பெரு மானுந் தாழ்குழல் செற்றந் தணிவித்தோம்
நம்பியி னிப்போய் மற்றவ டன்பா னணுகென்ன.

(இ-ள்.) எமது ஆண்டவரே! தேவரீர் எனதுயிரைக் காவாமல் துன்பத்தைச் செய்கின்ற பரவையாரிடத்தினின்றும் யாது குறைகொண்டு வந்தீரென்று வினவ, சிவபெருமானும் நம்பியாரூரனே! நாம் தாழ்ந்த கூந்தலையுடைய பரவையார் கொண்டிருந்த கோபத்தைத் தணிவித்தோம்; இனி நீசென்று அப்பரவையாரிடத்து அடைகவென்று கூறியருள.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௩௭௨)

நந்தி பிரானார் வந்தருள் செய்ய நலமெய்துஞ்
சிந்தையு ளார்வங் கூர்களி யெய்தித் திகழ்கின்றார்
பந்தமும் வீடு நீரருள் செய்யும் படிசெய்தீ
ரெந்தை பிரானே யென்னினி யென்பா லிடரென்றார்.

(இ-ள்.) சிவபெருமான் வந்தருளி யிவ்வா றருளிச்செய்ய, நன்மை பொருந்திய தமது திருவுள்ளத்தில் விருப்ப மிக்க மகிழ்ச்சி யடைந்து விளங்குகின்றவராய், எமதாண்டவரே! போகத்தையும் மோக்ஷத்தையுந்தேவரீரே கொடுத்தருளும்வகைக்கேற்பச் செய்தருளினீர்; இனி என்னிடத்தில் யாது துன்பமுளதென்று கூறிவணங்கினார்.—எ-று. (கஎங)

என்றடி வீழு நண்பர்த மன்புக் கெளிவந்தார்
சென்றணை நீயச் சேயிழை பாலென் றருள்செய்து
வென்றுயர் சேமேல் வீதி விடங்கப் பெருமாடம்
பொன்றிகழ் வாயிற் கோயில் புகுந்தார் புவிவாழ்.

(இ-ள்.) என்று கூறித் திருவடிகளில் விழுந்து வணங்கிய திருத்தோழராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளது பேரன்பினுக்குச் சுலபமாக வெழுந்தருளிய சிவபெருமான், (சுந்தரா!) நீ அப்பரவையாரிடத்துச்சென்று சேரக்கடவையென்று திருவருள் புரிந்து, வெற்றிபெற்றுயர்ந்த இடபவாகனத்தின்மேலெழுந்தருளும் ஸ்ரீ தியாகராசப்பெருமான் உலகத்தார் சிவாநந்தப் பெருவாழ்வடையும்பொருட்டுப் பொன்மயமாக விளங்குந் திருவாயிலையுடைய தமது திருக்கோயிலுக்கெழுந்தருளினார்.—எ-று. (கஎச)

வேறு.

தம்பிரா னார்பின் சென்று தாழ்ந்தெழுந் தருளான் மீள்வா
ரெம்பிரான் வல்ல வாறென் றெய்திய மகிழ்ச்சி யோடும்
வம்பலர் குழலார் செம்பொன் மாளிகை வாயி னோக்கி
நம்பியா ரூரர் காத னயந்தெழுந் தருளும் போது.

(இ-ள்.) (அவ்வாறெழுந்தருளிய) சிவபெருமான் பின்னேசென்றுநமஸ்கரித்தெழுந்து திருவருளினால் திரும்புகின்றவராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் இஃது எமதாண்டவரது திருவருட்டிறமென்று பொருந்தியபெருங்களிப்பினோடும் வாசனைவீசுகின்றகூந்தலையுடைய பரவைநாச்சியாரது செம்பொன்மயமாகிய திருமாளிகைத் திருவாயிலை நோக்கி விருப்பங்கொண்டு சென்றருளும பொழுது.—எ-று.

இதுமுதல் ஐந்துபாடலுங் குளகம். (கஎரு)

முன்றுயி லுணர்ந்து சூழ்ந்த பரிசன மருங்கு மொய்ப்ப
மின்றிகழ் பொலம்பூ மாரி விண்ணவர் பொழிந்து வாழ்த்த
மன்றல்செய் மதுர சீத சீகரங் கொண்டு மந்தத்
தென்றலு மெதிர்கொண் டெய்துஞ் சேவக முன்பு காட்ட.

(இ-ள்.) முன்னே நித்திரை நீங்கி யெழுந்து சூழ்ந்த பரிசனங்கள் அருகில் நெருங்கவும், மின்போல் விளங்குகின்ற அழகிய புஷ்பவருஷத்தைத் தேவர்கள் பொழிந்து துதிக்கவும், நறுமணங்கமழும் மதுரமாகிய குளிர்ந்த சுவரி

யைக்கொண்டு சிறு தென்றற்காற்று மெதிர்கொண்டு வருகின்ற வீரத்தன்மை யை முன்னே காட்டவும்.—எ-று.

சீகரம் = துளியெனினுமாம். (௱௭௬)

மாலைதண் கலவைச் சேறு மான்மதச சாந்து பொங்கும்
கோலநற் பசுங்கர்ப் பூரங் குங்கும முதலா யுள்ள
சாலுமெய்க் கலங்கள் கூடச் சாத்தும்பூ ணுடை வர்க்கம்
பாலன பிறவு மேந்தும் பரிசன முன்பு செல்ல.

(இ-ள்.) பூமாலையும், குளிர்ந்த கலவைச்சந்தனமும், கஸ்தூரிச்சாந்தும், அழகு மிக்க நறிய பச்சைக்கர்ப்பூரமும், குங்குமச்சாந்தும் முதலாயுள்ளவை களையும், மிக்கதிருமேனிக் கணியு மாபரணங்களுடன், அணிகின்ற வஸ்திரவர்க் கங்களும் முதலிய பகுப்பினையுடைய மற்றப் பொருள்களையுந் தாங்கிவருகின்ற பரிசனங்கள் முன்னேபோகவும்:—எ-று. (௱௭௭)

இவ்வகை யிவர்வந் தெய்த வெய்திய விருப்பி னோடு
மைவளர் நெடுங்கண் ணாரு மாளிகை யடைய மன்னுஞ்
செய்வினை யலங்கா ரத்துச் சிறப்பணி பலவுஞ் செய்து
நெய்வளர் விளக்குத் தூப நிறைகுட நிரைத்துப் பின்னும்.

(இ-ள்.) இத்தகைய சிறப்பினோடும் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் வந்த டையவும், மை தீட்டிய நீண்ட கண்களையுடைய பரவைநாச்சியாரும் பொருந் திய பெருவிருப்போடுந் தமது திருமாளிகை முழுதும் செய்தொழிலால் அழ கினையுடைய பல சிறப்புகளையுஞ் செய்து, நெய்விளக்குகளையுந் தூபங்களையும் பூரணகும்பங்களையும் வரிசையாக வைத்துப் பின்னும்.—எ-று. (௱௭௮)

பூமலி நறும்பொற் றாமம் புனைமணிக் கோவை நாற்றிக்
காமர்பொற் சுண்ணம் வீசிக் கமழ்நறுஞ் சாந்து நீவித்
தூமலர் வீதி சூழ்ந்த தோகையர் வாழ்த்தத் தாமு
மாமணி வாயின் முன்பு வந்தெதி ரேற்று நின்றார்.

(இ-ள்.) பொலிவினையுடைய சிறந்த பொன்னரிமாலைகளையும், அலங் கரித்த இரத்தின ஆரங்களையுந் தொங்கக்கட்டி, அழகிய பொற்சுண்ணந்தெளி ந்து, நறுமணங்கமழுங் கலவைச்சாந்தினால் மெழுகி, தூய்மைமிக்க திருவீதி யைச்சூழ்ந்த மாதர்கள் துதிக்க, தாமும் சிறந்த மணிகளழுத்திய திருவாயிலின் முன்புவந்து (ஸ்ரீ. சுந்தரமூர்த்திசுவாமிகளது வருகையை) எதிர்பார்த்து நின்ற னர்.—எ-று. (௱௭௯)

வண்டலாங் குழலார் முன்பு வன்றொண்டர் வந்து கூடக்
கண்டபோ துள்ளங் காதல் வெள்ளத்தின் கரைகா ணாது
கொண்டநா ணச்சங் கூர வணங்கவக் குரிசி லாருந்
தண்டளிர்ச் செங்கை பற்றிக் கொண்டுமா ளிகையுட் சார்ந் [தார்.

(இ-ள்.) வண்டுகள் மொய்க்கின்ற கூந்தலையுடைய பரவைநாச்சியாரு க்கு முன்னே ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் வந்தடைய, அவரைப் பார்த்தபொ ழுது தமதுள்ளமானது ஆசையாகிய வெள்ளத்தின் கரையைக் காணாமல் தா மடைந்த நாணமும் அச்சமு மிகும்படி வணங்க, ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளும்

(பரவைநாச்சியாரது) குளிர்ந்த தளிர்போன்ற சிவந்த திருக்கரத்தைப் பிடித்துக்கொண்டு திருமாளிகையினுள்ளே யடைந்தருளினார்.—எ-று. (௩௮௦)

இருவருந் தம்பி ரானார் தாமிடை யாடிச் செய்த
திருவருட் கருணை வெள்ளத் திறத்தினைப் போற்றிச் சிந்தை
மருவிய வின்ப வெள்ளத் தழுந்திய புணர்ச்சி வாய்ப்ப
வொருவரு ளொருவர் மேவு நிலைமையி லுயிரொன் றானார்.

(இ-ள்.) அவர்களிருவரும் சிவபெருமான் இடையில் தூது நடந்து செய்தருளிய திருவருட் பெருங்கருணைத் திறத்தைத்துதித்து, தமதுள்ளத்தமைந்த இன்பவெள்ளத்தில் முழுகிய புணர்ச்சியானது பொருந்த ஒருவரோடொருவர் கலந்திருக்குந் தன்மையினால் உயிரொன்றாயிருந்தார்கள்.—எ-று. (௩௮௧)

ஆரணக் கமலக் கோயின் மேவிப்புற் றிடங்கொண் டாண்ட
நீரணி வேணி யாரை நிரந்தரம் பணிந்து போற்றிப்
பாரணி விளக்குஞ் செஞ்சொற் பதிகமா லைகளுஞ் சாத்தித்
தாரணி மணிப்பூண் மார்பர் தாமகிழ்ந் திருந்த நாளில்.

(இ-ள்.) வேதவடிவமாகிய கமலாலயத்தை யடைந்து, புற்றை யிடமாகக்கொண்டு தம்மை யடிமைகொண்டருளிய கங்கைநீரையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானைத் தினந்தோறும் வணங்கித்துதித்து, உலகத்திலுள்ள ஆன்மாக்களை இனிது தெளிவிக்கின்ற செவ்விய சொற்களமைந்த திருப்பதிகம்பாடி யணிந்தருளி, இரத்தினாபரணங்களை மாலையாகவணிந்த திருமார்பினையுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் மகிழ்வுற்று அங்கு வசித்தருளும் நாள்களில்.—எ-று.

இதுமுதல் இரண்டுபாடலுங் குளகம். (௩௮௨)

நம்பியா ரூரர் நெஞ்சி னடுக்கமொன் றின்றி நின்று
தம்பிரா னாரைத் தூது தையல்பால் விட்டா ரென்னு
மிம்பரின் மிக்க வார்த்தை யேயர்கோ னார்தாங் கேட்டு
வெம்பினா ரதிச யித்தார் வெருவினார் விளம்ப லுற்றார்

(இ-ள்) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் தமதுள்ளத்தில் சிறிதும்அச்சமின்றி நின்று, சிவபெருமானைப் பரவைநாச்சியாரிடத்துத் தூதனுப்பினாரென்று கூறும் உலகத்தில் அதிகரித்து வழங்கும் வார்த்தையை ஏயர்கோன்கலிக்காமநாயனார் கேள்வியுற்றுக் கோபித்து அதிசயித்து நடுங்கிச் சொல்வாராயினார்.—எ-று.

சிவபெருமானைத் தூதுவிட்டனரோயென்று கோபமும், அவர் தூதுசெல்லத்தக்க பெருந்தன்மையைப் பெற்றனரோ யென்றதிசயமும், ஆயினும் இது மிகக்கொடுமையினுங் கொடுமையே யென்றச்சமு மடைந்தனரென்க. (௩௮௩)

நாயனை யடியா னேவுங் காரிய நன்று சால
வேயுமென் றிதனைச் செய்வான் றொண்டனா மென்னே பாவம்
பேயனேன் பொறுக்கவொண்ணாப் பிழையினைச் செவியாற் கேட்ப
தாயின பின்னு மாயா திருந்ததென் னுயிரென்பார்.

(இ-ள்.) சிவபெருமானை அடியான் தூதுவிட்டகாரியம் மிகவும் நன்று; இது மிகத்தகுமென்று சிந்தித்து,இக்காரியத்தைச் செய்தவனும் ஒரு தொண்ட

னும், இதுஎன்னபாவம்; பொறுக்கமுடியாத பெருங்குற்றத்தைப் பேயேனாகிய யான் காதினால் கேட்கப் பெற்றபின்னும் என்னுயிர் நீங்காதிருக்கின்றதென்று கூறுவார்.—எ-று.

எசமானை ஒரு அடிமைவேலைசெய்பவன் தனக்கு ஏவற் பணிசெய்யும் பொருட்டு அனுப்பினனென்னும் பொருள் தொனிக்க, 'நாயனை யடியானேவுங் காரிய நன்று' என்று கூறினார். (௩௱௬௪)

காரிகை தன்பாற் செல்லுங் காதலா லொருவ னேவப்
பாரிடை நடந்து செய்ய பாததா மரைக ணோவத்
தேரணி வீதி யூடு செல்வது வருவ தாகி
யோரிர வெல்லாந் தூதுக் குழல்வரா மொருவ ரென்று.

(இ-ள்.) பெண்ணிடத்துப் போகவேண்டுமென்னும் ஆசையினால் ஒருவனனுப்ப, ஒப்புயர்வில்லாச் சிவபெருமான் சிவந்த திருவடித்தாமரைகள் வருந்தப் பூமியில் நடந்து அழகிய தேரோடுந் திருவீதியில் போவதும் வருவதுமாய்த் தூதுக்காக ஓரிரவு முழுதும் உழன்றனராம் என்று.—எ-று.

இதுமுதல் ஐந்துபாடலுங் குளகம். (௩௱௬௫)

நம்பர்தா மடிமை யற்று ராகியே நண்ணி னாரோ
லும்பரார் கோனு மாலு மயனுநே ருணர வொண்ணா
வெம்பிரா னிசைந்தா லேவப் பெறுவதே யிதனுக்குள்ளங்
கம்பியா தவனை யான்முன் காணுநா ளெந்நா ளென்று.

(இ-ள்.) தேவர்கள் தலைவனாகிய இந்திரனும் திருமாலும் பிரமனும் நேரிலுணரவொண்ணாத எமது முதல்வராகிய சிவபெருமான் அடிமைத்தன்மையராகித் தூதுசெல்ல விசைந்தால் அவரை யேவுதல்தகுதியோ? இதற்கு மனநடுங்காத துஷ்டனை யான் எதிரில் பார்க்குநாள் எந்நாளோ? என்று கூறி.

'நம்பர்த மடியா ராற்று ராகியே நண்ணி னாராய்' என்றும் பாடம்.

அரிவைகா ரணத்தி னாலே யாளுடைப் பரமர் தம்மை
யிரவினிற் றூது போக வேவியங் கிருந்தான் றன்னை
வரவெதிர் காண்பே னாகில் வருவதென் னாங்கொ லென்று
விரவிய செற்றம் பற்றி விள்ளுமுள் ளத்த ராகி.

(இ-ள்.) ஒரு பெண் அடைந்த ஊடல்காரணமாக நம்மை யடிமையாகவுடைய சிவபெருமானை இரவினில் தூதுசெல்ல விடுத்து அங்கிருந்த துரோகியை வர எதிரோ காண்பேனாயின் யாது சம்பவிக்குமோவென்று, இருந்த கோபங்கொண்டு வேறுபட்ட திருவுள்ளமுடையவராகி.—எ-று. (௩௱௬௭)

ஈறிலாப் புகழி னோங்கு மேயர்கோ னார்தா மெண்ணப்
பேறிது பெற்றோர் கேட்டுப் பிழையுடன் படுவா ராகி
வேறினி யிதற்குத் தீர்வு வேண்டுவார் விரிபூங் கொன்றை
யாறிடு சடைய னாருக் கதனைவிண் ணப்பஞ் செய்து.

(இ-ள்.) முடிவில்லாத புகழோடும் விளங்குகின்ற ஏயர்கோன்கலிக்காமநாயனார் இவ்வாறெண்ணத்தக்க பேற்றைப் பெற்றவராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் அதனைக் கேள்வியுற்று, (தாம் தூதனுப்பிய) குற்றத்திற்கு உடன்

பட்டவராய், இனி இதற்குப் பரிகாரம் வேண்டுகின்றவர், அலர்ந்த கொன்றை மலர்மாலையையுங் கங்கைநதியையுந் தரித்த சடைமுடியையுடைய சிவபெருமானுக்கு அதனை விண்ணப்பஞ்செய்து.—எ-று.

'விரிபூங்கொன்றை' என்பதற்கு, வாசனைவிரிந்த பூங்கொன்றை, எனினுமாம். (௩௮௮)

நாடொறும் பணிந்து போற்ற நாதரு மதனை நோக்கி
நீடிய தொண்டர் தம்மு ளிருவரு மேவு நீர்மை
கூடுதல் புரிவா ரேயர் குரிசிலார் தம்பான் மேனி
வாடுறு சூலை தன்னை யருளினார் வருந்து மாற்றால்.

(இ-ள்.) தினந்தோறும் வணங்கித்துதிக்க, சிவபெருமான் அதனைக்கேட்டு, சிறந்த திருத்தொண்டர்களிருவருங் கலந்திருக்குந் தன்மையால் கூட்டியருள்பவராய், ஏயர்கோன்கலிக்காமநாயனாரிடத்துத் திருமேனி வாடத்தக்க சூலைநோயை அவர் வருந்தும் வண்ணம் ஏவியருளினார்.—எ-று. (௩௮௯)

ஏதமில் பெருமைச் செய்கை யேயர்தம் பெருமான் பக்க
லாதியா ரேவுஞ் சூலை யனல்செய்வேல் குடைவ தென்ன
வேதனை மேன்மேற் செய்ய மிகவதற் குடைந்து வீழ்ந்து
பூதநா யகர்தம் பொற்றாள் பற்றியே போற்று கின்றார்.

(இ-ள்.) குற்றமற்ற பெருஞ்செய்கையையுடைய ஏயர்கோன்கலிக்காமநாயனாரிடத்துச் சிவபெருமானு லேவப்பட்ட சூலைநோயானது நெருப்பில் காய்ச்சிய வேலானது குடைவதுபோல மேலுமேலுந் துன்பத்தைச்செய்ய, அதனால் மிகவும் வருந்திவிழுந்து சிவபெருமானது அழகிய திருவடிகளைச் சிந்தித்துத் துதிக்கின்றவராயினார்.—எ-று. (௩௯0)

சிந்தையால் வாக்கா லன்பர் திருந்தடி போற்றி செய்ய
வெந்தமை யாளு மேயர் காவலர் தம்பா லீசர்
வந்துனை வருத்துஞ் சூலை வன்றொண்டன் றீர்க்கி லன்றி
முந்துற வொழியா தென்று மொழிந்தருள் செய்யக் கேட்டு.

(இ-ள்.) மெய்யன்பராகிய ஏயர்கோன்கலிக்காமநாயனார் மனத்தினாலும் வாக்கினாலும் (கடவுளுடைய)செவ்விய திருவடிகளைத் துதிக்க, சிவபெருமான் எம்மை யடிமைகொண்டருளிய அவ் வேயர்கோன்கலிக்காமநாயனா ரிடத்தில் எழுந்தருளி, உன்னைவருத்துகின்ற இச்சூலை நோயானது சுந்தரன் றீர்த்தாலன்றி முற்பட்டு நீங்காதென்று அருளிச்செய்ய அதனைக் கேட்டு.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௩௯0)

எம்பிரா னெந்தை தந்தை தந்தையெங் கூட்ட மெல்லாம்
தம்பிரா னீரே யென்று வழிவழி சார்ந்து வாழு
மிம்பரின் மிக்க வாழ்க்கை யென்னைநின் றீருஞ் சூலை
வம்பென வாண்டு கொண்டா னொருவனோ தீர்ப்பான் வந்து.

(இ-ள்.) எம்பெருமானே! என் தந்தையும் என்றந்தைக்குத் தந்தையும் அவன் றந்தையு முதலாகவுள்ள எங்கள் சந்ததியனைத்துந் தேவரீரே மெய்க்கடவுளென்று பரம்பரையாக அடிமைப்பட்டு வாழ்கின்ற இவ்வுலகத்தில் சிறந்த

குடியிற்பிறந்த அடியேனை இன்றுவருத்துகின்ற சூலைநோயைப் புதிதாகஅடிமை கொள்ளப்பட்ட ஒருவனோ? வந்து தீர்க்கின்றவன்.—எ-று.

'வம்பென வடிமைகொண்டான்' என்பதற்கு, வல்வழக்கிட்டு அடிமை கொள்ளப்பட்டவன் எனினுமாம். (ருகூஉ)

மற்றவன் றீர்க்கிற்றீரா தொழிந்தெனை வருத்த னன்றாற்
பெற்றமே லுயர்த்தீர் செய்யும் பெருமையை யறிந்தார் யாரே
யுற்றவன் றொண்டர்க் கேயா முறுதியே செய்தீ ரென்னக்
கற்றைவார் சடையார் தாமு மவர்முன்பு கரந்தா ரன்றே.

(இ-ள்.) அச் சுந்தரன் தீர்த்தலினுந் தீராதொழிந்து, அது என்னை வருத்துவது நல்லது; இடபத்தைக் கொடியாக வுயர்த்திய எம்பெருமானே! தேவரீர் செய்யும் பெருமையை அறியவல்லவர்கள் யாவர்; உமக்கடிமைப்பட்ட அந் நம்பியாரூரனுக்கு ஆகும் உறுதியையே செய்யுமென்று கூற, கற்றையாகிய நீண்ட சடைமுடியையுடைய சிவபெருமானும் அந்நாயனாருக்கு எதிரில் மறைந்தருளினார்.—எ-று (ருகூ௩)

வன்றொண்டர் தம்பாற் சென்று வள்ளலா ரருளிச் செய்வா
ரின்றுநம் மேவ லாலே யேயர்கோ னுற்ற சூலை
சென்றுநீ தீர்ப்பா யாகென் றருள்செயச் சிந்தை யோடு
நன்றுமெய் மகிழ்ந்து போற்றி வணங்கினா் நாவ லூரர்.

(இ-ள்.) அருள்வள்ளலாகிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளிடத்துச் சென்று அருளிச்செய்வார், இன்று நமது ஏவுதலினாலே ஏயர்கோன் கலிக்காமனடைந்திருக்குஞ் சூலைநோயை நீபோய்த் தீர்க்கக்கடவையென் றருளிச் செய்ய, ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் தமது திருவுள்ளத்தோடு திருமேனியும் பூரித்துத் துதித்து வணங்கியருளினார்.—எ-று. (ருகூ௪)

அண்ணலா ரருளிச் செய்து நீங்கவா ரூரர் தாமும்
விண்ணவர் தம்பி ரானா ரேவலால் விரைந்து செல்வார்
கண்ணிய மனத்தின் மேவுங் காதலாற் கலிக்கா மர்க்குத்
திண்ணிய சூலை தீர்க்க வருந்திறஞ் செப்பி விட்டார்.

(இ-ள்.) இவ்வாறு சிவபெருமானருளிச் செய்து மறைந்தருள, ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளும் தேவர்கள் நாயகராகிய அவ்வெம்பெருமானது ஏவுதலினாலே விரைந்து செல்கின்றவர், சிந்திக்கின்ற தமது திருவுள்ளத்தில் பொருந்திய பெருவிருப்பினால் ஏயர்கோன்கலிக்காமநாயனாருக்கு வலிய சூலைநோய் தீர்க்கும்படி தாம்வருஞ் சமாசாரத்தைச் சொல்லியனுப்பினார்.—எ-று.(ருகூரு)

நாதர்தம் மருளா னண்ணுஞ் சூலையு மவர்பாற் கேட்ட
கேதமும் வருத்த மீண்டும் வன்றொண்டர் வரவு கேட்டுத்
தூதனா யெம்பி ரானை யேவினான் சூலை தீர்க்கு
மேதமிங் கெய்த வெய்தில் யான்செய்வ தென்னா மென்பார்.

(இ-ள்.) சிவபெருமானது திருவருளினால் வந்தடைந்த சூலைநோயும், ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளிடத்தில் கேள்வியுற்ற (தூதுவிடுத்தலாகிய) குற்றமும் தம்மைவருத்த, பின்னும் அச்சுந்தரமூர்த்தி சுவாமிகளது வருகையைக் கேள்வியுற்று, எமது சிவபெருமானைத் தூதாக அனுப்பினவன் சூலைநோய்தீர்க்

குங் குற்றமானது இங்குண்டாக வருவானாயின், யான் யாதுசெய்வதென்றுசிந்திப்பவராய்.—எ-று.

என்பார் - என்பது முற்றெச்சம். அவர்பாற் கேட்ட கேதம் - என்பதற்கு, அச்சிவபெருமானிடத்தில் சுந்தரன்வந்தால் தீரும் என்று சொல்லக் கேட்ட குற்றம், எனினுமாம்.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௫௬௬)

மற்றவ னிங்கு வந்து தீர்ப்பதன் முன்னேன் மாயப்
பற்றினின் றென்னை நீங்காப் பாதகச் சூலை தன்னை
யுற்றவிவ் வயிற்றி னோடுங் கிழிப்பனென் றுடைவா டன்னாற்
செற்றிட வுயிரி னோடுஞ் சூலையுந் தீர்ந்த தன்றே.

(இ-ள்.) அவன் இங்குவந்து சூலைநோயைத் தீர்ப்பதற்கு முன்னே, நானிறக்கும்படி தொடர்ந்து நின்று என்னைவிட்டு நீங்காத பாதகமாகிய சூலைநோயை, அடைந்த இவ்வயிற்றினோடுங் கிழித்துத் தீர்ப்பேனென்று உடைவாளினாலே வயிற்றைக்கிழிக்க, உயிரோடு சூலைநோயும் நீங்கியது.—எ-று. (௫௬௭)

கருதரும் பெருமை நீர்மைக் கலிக்காமர் தேவி யாரும்
பொருவருங் கணவ ரோடு போவது புரியுங் காலை
மருவவிங் கணைந்தார் நம்பி யென்றுமுன் வந்தார் கூற
வொருவரு மழுதல் செய்யா தொழிகவென் றுரைத்துப் பின்னர்.

(இ-ள்,) நினைத்தற்கரிய பெருங்கற்புத் தன்மையையுடைய அவ்வேயர்கோன் கலிக்காமநாயனாரது மனைவியாரும் ஒப்பற்ற தமதுகணவனாரோடு இறக்கப் புகுந்தபொழுது, ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் இங்கு வந்தருளினாரென்று முன்னேவந்தவர்கள் சொல்ல, (அந்நாயனாரது மனைவியார்) ஒருவரும் அழாதிருங்களென்று சொல்லிப்பின்பு.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௫௬௮)

கணவர்தஞ் செய்கை தன்னைக் கரந்துகா வலரை நம்பி
யணைவுறும் பொழுது சால வலங்கரித் தெதிர்போ மென்னப்
புணர்நிலை வாயிற் றீபம் பூரண கும்பம் வைத்துத்
துணர்மலர் மாலை தூக்கித் தொழுதெதிர் கொள்ளச் சென்றார்.

(இ-ள்.) கணவனாரது செய்கையை மறைத்துத் தமது சுற்றத்தாரை (நோக்கி,) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் இங்கெழுந்தருளும் பொழுது மிகவுமலங்கரித்து அவரை எதிர்கொள்ளுங்களென்று கூற, உயர்ந்த நிலைகளையுடைய திருவாயிலில் திருவிளக்குகளும் பூரணகும்பங்களும் வைத்து, கொத்தாகியமலர் மாலைகளை வரிசையாகக்கட்டி அவரை வணங்கி யெதிர்கொள்ளும்படி சென்றார்கள்.—எ-று. (௫௬௯)

செம்மைசேர் சிந்தை மாந்தர் செலவெதிர் கொண்டு போற்ற
நம்மையா ளுடைய நம்பி நகைமுக மவர்க்கு நல்கி
மெய்ம்மையாம் விருப்பி னோடு மேவியுட் புகுந்து மிக்க
மொய்ம்மலர்த் தவிசின் மீது முகமலர்ந் திருந்த போது.

(இ-ள்.) நற்குணமமைந்த மனத்தினையுடைய உறவினர்கள் அவரை எதிர்கொண்டு சென்று துதிக்க, நம்மை யடிமையாகவுடைய ஸ்ரீசுந்தரமூர்த்தி

சுவாமிகள் அவர்களுக்கு மகிழ்முகங் காட்டியருளி உண்மையாகிய பெருவிருப் போடுஞ் சென்று திருமாளிகையினுள்ளே புகுந்து, சிறந்த மலர்கள் நிறைந்த புஷ்பாசனத்தில் முகமலர்ச்சியுட னெழுந்தருளியிருந்த பொழுது.—எ-று. ()

பான்மையர்ச் சனைக ளெல்லாம் பண்பினில் வழாமை யேய்ந்த
நான்மறை தொடர்ந்த வாய்மை நம்பியா ரூரர் கொண்டிங்
கியான்மிக வருந்து கின்றே னேயர்கோ னார்தா முற்ற
ஊனவெஞ் சூலை நீக்கி யுடனிருப் பதனுக் கென்றார்.

(இ-ள்.) சிறப்புமிக்க அருச்சனைகளனைத்தும் முறைப்படி தவறாமல் பொருந்திய நான்கு வேதங்களிலுஞ் சொல்லப்பட்ட உண்மைகளைத் தேவாரத் திருப்பதிகங்களாகப் பாடியருளும் ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் ஏற்றுக்கொண்டு, இங்கு ஏயர்கோன் கலிக்காமநாயனாரடைந்திருக்கும் ஊனமாகிய கொடிய சூலை நோயை நீக்கி அவருட னிருப்பதற்கு யான் மிகவும் வருந்தி விரும்புகின் றேனென்று கூறியருளினார்.—எ-று. (௫0௧)

மாதர்த மேவ லாலே மனைத்தொழின் மாக்கண் மற்றிங்
கேதமொன் றில்லை யுள்ளே பள்ளிகொள் கின்றா ரென்னத்
தீதனை யில்லை யேனு மென்மனந் தெருளா தின்ன
மாதலா லவரைக் காண வேண்டுமென் றருளிச் செய்தார்.

(இ-ள்.) அப்பொழுது, நாயனாருடைய மனைவியாரது ஏவலினால் திரு மாளிகையில் வேலைசெய்பவர்கள் (சுவாமீ! அவருக்கு) இங்கு ஒருதீங்குமில்லை, உள்ளே பள்ளிகொள்கின்றார் என்று விண்ணப்பஞ்செய்ய, அவருக்கு ஒரு தீங் குமில்லையாயினும் இன்னம் என்மனந் தெளியவில்லை யாதலால், அவரை நான் காணவேண்டுமென்று கூறியருளினார்.—எ-று. (௫0௨)

வன்றொண்டர் பின்னுங் கூற மற்றவர் தம்மைக் காட்டத்
துன்றிய குருதி சோரத் தொடர்குடர் சொரிந்துள் ளாவி
பொன்றியே கிடந்தார் தம்மைக் கண்டபின் புகுந்த வாறு
நன்றென மொழிந்து நானு நண்ணுவே னிவர்முன் னென்பார்.

(இ-ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் பின்னுங் கூறியருள, அவர்கள் அதைக்கேட்டு ஏயர்கோன் கலிக்காமநாயனாரைக் காட்ட, திருமேனியிற் பொ ருந்திய உதிரமொழுகும்படி, தொடர்ந்த குடல் சரிந்து உயிர் நீங்கிக் கிடக் கின்றவரைப் பார்த்தபின்பு, நடந்தவகை நன்றென்று கூறி, நானுமிவருக்கு முன்னே இறப்பேனென்று கூறுவாராயினார்.—எ-று. (௫0௩)

கோளுறு மனத்த ராகிக் குற்றுடை வாளைப் பற்ற
வாளுடைத் தம்பி ரானா ரருளினா லவரு முய்ந்து
கேளிரோ யாகிக் கெட்டே னெனவிரைந் தெழுந்து கையில்
வாளினைப் பிடித்துக் கொள்ள வன்றொண்டர் வணங்கி வீழ்ந்தார்.

(இ-ள்.) திடசித்தமுடையவராய் உடைவாளைக் கையிலெடுக்க, நம்மை யடிமைகொண்டருளிய சிவபெருமான் திருவருளினால் அவ் வேயர்கோன் கலி க்காமநாயனார் உயிர்பெற்று நண்புடையவராய், ஐயோ! கெட்டேன் என்று விரைந்தெழுந்து அவர் கையிலுள்ள உடைவாளைப் பிடித்துக்கொள்ள, ஸ்ரீ சுந் தரமூர்த்திசுவாமிகள் அவரைச் சாஷ்டாங்கமாகவிழுந்து வணங்கினார்.—எ-று.

மற்றவர் வணங்கி வீழ வாளினை மாற்றி யேயர்
கொற்றவ ளுரு நம்பி குரைகழல் பணிந்து வீழ்ந்தா
ரற்றைநா ணிகழ்ந்த விந்த வதிசயங் கண்டு வானோர்
பொற்றட மலரின் மாரி பொழிந்தனர் புவனம் போற்ற.

(இ-ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் வீழ்ந்து வணங்க, உடைவாளையகற்றி ஏயர்கோன் கலிக்காமநாயனாரும் ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளது சப்திக்கின்ற வீரக்கழலை யணிந்த திருவடியை விழுந்து நமஸ்கரித்தார்; அக்காலத்தில் நடந்த இந்த அற்புதத்தைப் பார்த்து உலகத்தார் துதிக்கத் தேவர்கள் பொன்மயமாகிய பெரிய கற்பக மலர்மாரி பொழிந்தார்கள்.—எ-று. (௬௦௫)

இருவரு மெழுந்து புல்லி யிடைவிடா நண்பி னாலே
பொருவரு மகிழ்ச்சி பொங்கத் திருப்புன்கூர்ப் புனிதர் பாத
மருவினர் போற்றி நின்று வன்றொண்டர் தம்பி ரானா
ரருளினை நினைந்தே யந்த ணாளனென் றெடுத்துப் பாடி.

(இ-ள்.) பின்பு இருவரும் எழுந்து ஒருவரோடொருவர் தழுவி, நீங்காத தோழமையினால் ஒப்பற்ற பெருமகிழ்ச்சி யதிகரிக்கத் திருப்புன்கூரில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானது திருவடிகளை யடைந்து துதித்துநின்று, ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் அவ்வெம்பெருமானது திருவருளைச் சிந்தித்து "அந்தணாளன்" என்று முதலெடுத்துத் திருப்பதிகம் பாடியருளி.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௬௦௬)

திருப்புன்கூர் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

அந்தணாளனுன்னடைக்கலம்புகுதவவனைக்காப்பதுகாரணமாக, வந்தகாலன்றனாருயிரதனைவவ்வினாய்க்குன்றன்வண்மைகண்டடியேன், எந்தைநீயெனை நமன்றமர்நலியிலிவன்மற்றென்னடியானென விலக்குஞ், சிந்தையால்வந்துன்றிருவடியடைந்தேன்செழும்பொழிற்றிருப்புன்கூருளானே.

கம்பமாகளிற்றின்னுரியானைக் காமற்காய்ந்ததோர்கண்ணுதலானைச், செம்பொனேயொக்குந்திருவுருவானைச்செழும்பொழிற்றிருப்புன்கூருளானை, யும்பரானையுமையவள்கோனையூரன்வன்றொண்டனுள்ளத்தாலுகந், தன்பினாற்சொன்னவருந்தமிழைந்தொடைந்து ம்வல்லவரருவினையிலரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - சிவலோகநாதர்; தேவியார் - சோக்கநாயகியம்மை.

சிலபகல் கழிந்த பின்பு திருமுனைப் பாடி நாடர்
மலர்புகழ் திருவா ரூரின் மகிழ்ந்துடன் வந்த வேயர்
குலமுதற் றலைவ னாருங் கூடவே குளிர்பூங் கோயி
னிலவினார் தம்மைக் கும்பிட் டுறைந்தனர் நிறைந்[illegible]வன்பால்.

(இ-ள்.) அங்குச் சிலநாள்கள் சென்றபின்பு, ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் பரந்த புகழையுடைய திருவாரூர்த்திருப்பதியில், மகிழ்வுற்றுத் தம்முடன்வந்த

ஏயர்கோன் கலிக்காம நாயனாருடன் குளிர்ந்த ஸ்ரீ கமலாலயமென்னுந் திருக்கோயிலில் வீற்றிருந்தருளும் ஸ்ரீ தியாகராசப் பெருமானை வணங்கி மிக்க அன்போடும் வசித்தருளினார்.—எ-று.

'நிறைந்தநண்பால்' என்று பாடபேதம். (கூ0எ)

அங்கினி தமர்ந்து நம்பி யருளினான் மீண்டு போந்து
பொங்கிய திருவின் மிக்க தம்பதி புகுந்து பொற்பிற்
றங்குநா ளேயர் கோனார் நமக்கேற்ற தொண்டு செய்தே
செங்கண்மால் விடையார் பாதஞ் சேர்ந்தனர் சிறப்பி னோடும்.

(இ-ள்.) ஏயர்கோன் கலிக்காமநாயனார் அங்குச் சிலநாள் சுவாமிதரிசனஞ் செய்துகொண்டிருந்து, ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளது திருவருளினால் அவ்விடத்தினின்று நீங்கிச் சென்று, சிறந்த செல்வத்தின் மிக்க தமது திருப்பெருமங்கல மென்னுந் திருப்பதியை யடைந்து மேன்மையோடு வாழு நாள்களில், அவர் தமக்கிசைந்த திருத்தொண்டுகளைச் செய்து, சிவந்த கண்களையுடைய விஷ்ணுவாகிய இடபவாகனத் தெழுந்தருளுஞ் சிவபெருமானது திருவடிகளை மிக்க சிறப்போடும் அடைந்தருளினார்.—எ-று. (கூ0அ)

நள்ளிரு ளுய ளாைத் தூதுவிட் டவர்க்கே நண்பாம்
வள்ளலா ரேயர் கோனார் மலரடி வணங்கிப் புக்கே
னுள்ளுணர் வானஞான முதலிய வொருநான் குண்மை
தெள்ளுதீந் தமிழாற் கூறுந் திருமூலர் பெருமை செப்ப.

(இ-ள்.) நடுராத்திரியில் சிவபெருமானை (ப் பரவைநாச்சியாரிடத்துத்) தூதாக அனுப்பிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளுக்கே யுரிய நண்பராகிய ஏயர்கோன் கலிக்காம நாயனாரது தாமரைமலர்போன்ற திருவடிகளை நமஸ்கரித்து, உள்ளத்தி லுணர்தற்குரிய மெய்ஞ்ஞானபாத முதலிய ஒப்பற்ற நான்குபாதங்களின் உண்மைகளைத் தெளிவாகிய இனிய தமிழ்மொழியினால் அருளிச்செய்த திருமூலநாயனாரது மேன்மையைச் சொல்லத்தொடங்கினேன்.—எ-று.

ஞானமுதலிய வொருநான்காவன:—ஞானம், யோகம், கிரியை, சரியை என்பன; இவற்றைச் சன்மார்க்கம், சகமார்க்கம், சற்புத்திரமார்க்கம் தாதமார்க்கம் எனவும் நூல்கள்கூறும், இவற்றுள் சரியையால் சாலோகமும், கிரியையால் சாமீபமும், யோகத்தால் சாரூபமும், ஞானத்தால் சாயுச்சியமும் பிராப்தமாம்; சாலோகம் - சிவலோகத்திருத்தலும், சாமீபம் - சிவபெருமான் சமீபத்திருத்தலும், சாரூபம்- சிவரூபமுற்றிருத்தலும், சாயுச்சியம்-சிவபெருமான்திருவடியிலிரண்டறக்கலத்தலுமாம்; சாலோக சாமீப சாரூபங்கள் மூன்றும் பதமுத்தியென்றும், சாயுச்சியம் முத்திமுடிவென்றுங் கூறுவர்; இதனைச் சிவஞானசித்தியார். "சன்மார்க்கஞ் சகமார்க்கஞ் சற்புத்திரமார்க்கந் தாதமார்க்கமென்றுஞ் சங்கரனையடையு, நன்மார்க்க நாலிவைதா ஞானயோக நற்கிரியை சரியையென்று நவிற்றுவதுஞ் செய்வர், சன்மார்க்கமுத்திகள் சாலோக்கிய சாமீப்பிய சாரூப்பிய சாயுச்சியமென்று சதுர்விதமா, முன்மார்க்க ஞானத்தா லெய்துமுத்தி முடிவென்பர் மூன்றினுக்கு முத்திபதமென்பர்" என்பதனா லுணர்க.

**ஏயர்கோன் கலிக்காமநாயனார் புராணம்-முற்றிற்று.**

திருச்சிற்றம்பலம்.

---

திருவிருத்தம் - கசுகூரு.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருமூலநாயனார் புராணம்.

அந்தியிளம் பிறைக்கண்ணி யண்ணலார் கயிலையினின்
முந்தைதிகழ் கோயிலுக்கு முதற்பெருநா யகமாகி
யிந்திரன்மா லயன்முதலா மிமையவர்க்கு நெறியருளு
நந்திதிரு வருள்பெற்ற நான்மறையோ கிகளொருவர்.

(இ-ள்.) மாலைக்காலத்தில் தோன்றுகின்ற இளம்பிறையாகிய மாலையை யணிந்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் ஸ்ரீமகாகயிலாசத்தில் முற்பட்டுவிளங்குகின்ற திருக்கோயிலுக்கு முதன்மை பொருந்திய சிறந்த தலைவராய், இந்திரன் - திருமால் - பிரமன் முதலிய தேவர்களுக்கு மார்க்கத்தைத் தெரிவித்தருளுகின்ற திருநந்திதேவரது திருவருளைப்பெற்ற நான்குவேதங்களையுமுணர்ந்த சிவயோகிகளுள் ஒருவர்.—எ-று.

நெறியருளுதலாவது,—அவரவர்கள் சுவாமிதெரிசனஞ் செய்யச் செல்லும் மார்க்கத்தை யுணர்த்தி, அவ்வாறு போகும்படி கட்டளையிடுதல். (க)

மற்றவர்தா மணிமாதி வருஞ்சித்தி பெற்றுடையார்
கொற்றவனார் திருக்கயிலை மலைநின்றுங் குறுமுனிபா
லுற்றதொரு கேண்மையினு லுடனசிலநா ளுறைவதற்கு
நற்றமிழின் பொதியமலை நண்ணுதற்கு வழிக்கொண்டார்.

(இ-ள்.) அச்சிவயோகியார் அணிமா முதலாகச் சொல்லப்பட்டு வருகின்ற அட்டமாசித்திகளையும் பெற்றுள்ளவர்; அவர், சிவபெருமான் வீற்றிருந்தருளிய ஸ்ரீ கயிலாசகிரியினின்றும் அகஸ்தியமுனிவரிடத்திற்பொருந்திய நண்பினாலே அவருடன் சிலகாலம் வசிப்பதற்கு நல்ல தமிழினையுடைய பொதியமலையை யடையும்பொருட்டுப் புறப்பட்டருளினார்.—எ-று.

அணிமாதிவருஞ் சித்தியாவன:—அணிமா - மகிமா - இலகிமா - கரிமா - பிராத்தி - பிராகாமியம் - ஈசத்துவம் - வசித்துவம் என்பன;—இவற்றை,

திருவிளையாடற் புராணம்.

“ அணிமாமகிமாவிலகிமாவரியகரிமாப்பிராத்திமலப்
பிணிமாசுடையோர்க்கடையரியபிராகாமியமீசத்துவமெய்
துணிமாயோகர்க்கெளியவசித்துவமென்றெட்டாமிவையுளக்கண்
மணிமாசறுத்தோர்விளையாட்டின்வகையாமவற்றின்மரபுரைப்பாம்”

என்பதனு லுணர்க. (உ)

புன்னுதிருக் கேதாரம் வழிபட்டு மாமுனிவர்
பன்னுபுகழ்ப் பசுபதிநே பாளத்தைப் பணிந்தேத்தித்

துன்னுசடைச் சங்கரனா ரேற்றதூ நீர்க்கங்கை
யன்னமலி யகன்றுறைநீ ரருங்கரையின் மருங்கணைந்தார்.

(இ-ள்.) சிறந்த அச்சிவயோகியார் நிலைபெற்ற திருக்கேதாரத் திருமலையை வணங்கி, துதிக்கத்தக்க புகழையுடைய பசுபதி நேபாளத்தை வணங்கித் துதித்து, சிவபெருமான் தமது சடைமுடியில் தரித்தருளிய தூய்மையாகிய நீரையுடைய கங்கைநதியின் அன்னங்கள் நெருங்கிய அகன்ற நீர்த்துறைகள் பொருந்திய அரிய கரையினரு கடைந்தருளினார்.—எ-று. (௩)

கங்கைநீர்த் துறையாடிக் கருத்துறைநீள் கடலேற்று
மங்கணர்தா மகிழ்ந்தருளு மவிமுத்தம் பணிந்தேத்தி
மங்குல்வளர் வரைவிந்த மன்னுபருப் பதமிறைஞ்சித்
திங்களணி சடையர்திருக் காளத்தி மலைசேர்ந்தார்.

(இ-ள்.) பெரிய கங்கைநதித் துறையில் முழுகி, சனனமாகிய துறையினையுடைய நீண்ட கடலினின்றுங் கரையேற்றுகின்ற சிவபெருமான் விருப்புற்றெழுந்தருளிய ஸ்ரீகாசிக்ஷேத்திரத்தை வணங்கித் துதித்து, மேகங்கள் தவழும் மூங்கில்களையுடைய விந்தமலைக் கருகிலுள்ள ஸ்ரீசைலத்தை வணங்கி, சந்திரசேகரராகிய சிவபெருமானது திருக்காளத்தித் திருமலையை யடைந்தருளினார்.

அவிமுத்தம் - என்பதில், முத்தம் - விடுகை; விமுத்தம் - மிகவும் விடுகை; அவிமுத்தம் - மிகவும் விடவேண்டிய காலத்தும் விடாமை என்பது பொருள். அதாவது, முன்னொருகாலத்தில் விசுவநாதர் திவோதாசனென்னு மரசன் காரணமாகக் காசியைவிட்டு நீங்கும்படி நேர்ந்தகாலத்தும் அருவுருவாக வீற்றிருந்தருளினமையின், ஸ்ரீ காசிக்ஷேத்திரத்திற்கு அவிமுத்தம் என்னும் பெயருண்டாயிற்று. இதனை:—

காசிகண்டம்.

“அன்றுதொட்டோங்குமந்தரவரையுமுத்திமால்வரையெனவமர்ந்த
தின்றளிர்கவற்றுமேந்தெழின்மேனியேழையோர்பாகனுங்காசி
யொன்றிநீங்குறமலியாவருமுணராதிலிங்கமொன்றமைத்தவனுறலாற்
பொன்றவழ்குடுமிப்புரிசைசூழ்காசிக்கவிமுத்தமெனப்பெயர்புனைந்தார்.”
என்று வருதலா னுணர்க. (௪)

நீடுதிருக் காளத்தி நிலவுதா ணுவை வணங்கி
யாடுதிரு வரங்கான வாலவனந் தொழுதேத்தித்
தேடுமிரு வர்க்கரியார் திருவேகாம் பரம்பணிந்து
மாடுயர்மா மதிற்காஞ்சி வளநகருள் வைகினார்.

(இ-ள்.) சிறந்த திருக்காளத்தில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானை வணங்கி, அவ்வெம்பெருமான் ஊர்த்ததாண்டவஞ் செய்தருளும் இரத்தினசபையாக வுள்ள திருவாலங்காட்டை வணங்கித் துதித்து, (திருவடியையுந் திருமுடியையுந்) தேடிய திருமால் பிரமனென்னு மிருவராலுங் காணுதற் கரியவராகிய ஸ்ரீஏகாம்பரநாதர் வீற்றிருந்தருளும் திருவேகாம்பரமென்னுந் திருக்கோயிலை வணங்கி, பக்கங்களிலுயர்ந்த பெரிய மதில்சூழ்ந்த வளப்பமிக்க காஞ்சிநகரத்தில் வசித்தருளினார்.—எ-று.

சிவபெருமான் திருநடனஞ் செய்தருளும் பஞ்சசபைகளில் திருவாலங் காடு மொன்றாகலான், 'ஆடுதிருவரங்கான வாலவனம்' என்று கூறினர். (ரு)

நற்பதியங் கமர்யோக முனிவர்களை நயந்துபோய்க்
கற்புரிசைத் திருவதிகை கலந்திறைஞ்சிக் கறைக்கண்ட
ரற்புதக்கூத் தாடுகின்ற வம்பலஞ்சூழ் திருவீதிப்
பொற்பதியாம் பெரும்பற்றப் புலியூரில் வந்தணைந்தார்.

(இ-ள்.) சிறந்த திருப்பதியாகிய அக்காஞ்சிபுரத்தில் வசிக்கின்ற சிவ யோகிகளை நட்புற்றுச் சென்று, கருங்கற்களாலாகிய மதில்சூழ்ந்த திருவதிகைத் திருப்பதியை யடைந்து வணங்கி, காளகண்டராகிய சிவபெருமான் ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளுங் கனகசபையைச் சூழ்ந்த திருவீதியினையுடைய அழ கிய திருப்பதியாகிய ஸ்ரீ சிதம்பரத்தில் வந்தடைந்தருளினர்.—எ-று. (சு)

எவ்வுலகு முய்யவெடுத் தருளியசே வடியாரைச்
செவ்வியவன் புறவணங்கிச் சிந்தைகளி வரத்திளைத்து
வவ்வியமெய் யுணர்வின்கண் வருமானந் தக்கூத்தை
யவ்வியல்பிற் கும்பிட்டங் காராமை யமர்ந்திருந்தார்.

(இ-ள்.) எவ்வுலகத்திலுள்ளவர்களுங் கடைத்தேறும்பொருட்டுத் தூ க்கி நடித்தருளிய திருவடியையுடைய ஸ்ரீ நடராசப்பெருமானை மெய்யன்பு பொருந்த வணங்கித் திருவுள்ளத்தில் மகிழ்வுண்டாகச் சிவாநந்தவெள்ளத்தில் முழுகி, பொருந்திய மெய்யுணர்ச்சியில் தோன்றுகின்ற ஆனந்தத் தாண்டவத் தை அம்மெய்யுணர்ச்சிவாயிலாகத் தரிசித்து வணங்கி ஆராமையால் அங்கு வசி த்தருளினர்.—எ-று. (எ)

தடநிலைமா ளிகைப்புலியூர் தன்னிலுறைந் திறைஞ்சிப்போ
யடல்விடையின் மேல்வருவா ரமுதுசெய வஞ்சாதே
விடமளித்த தெனக்கருதி மேதினிக்கு வளநிறைத்தே
கடல்வயிறு நிறையாத காவிரியின் கரையணைந்தார்.

(இ-ள்.) உயர்ந்த மேனிலைகளையுடைய திருமாளிகைகள் சூழ்ந்த ஸ்ரீசித ம்பரத்தில் வசித்து அங்கு வணங்கிச் சென்று, வலிய இடபவாகனத்தின் மேல் வருகின்ற சிவபெருமான் அமுதுசெய்யும்படி சிறிதுமஞ்சாமல் ஆலாகலவிஷத் தைக் கொடுத்ததென்று கருதிப் பூமிக்குப் பல வளங்களை நிறைத்துக் கடலின் வயிறு நிறையப் பெறாத காவிரிநதியின் கரையை யடைந்தருளினர்.—எ-று.

காவிரிநீர்ப் பெருந்தீர்த்தங் கலந்தாடிக் கடந்தேறி
யாவினருங் கன்றுறையு மாவடுதண் டுறையணைந்து
சேவில்வரும் பசுபதியார் செழுங்கோயில் வலம்வந்து
மேவுபெருங் காதலினாற் பணிந்தங்கு விருப்புறுவார்.

(இ-ள்.) காவிரி நீராகிய பெரிய தீர்த்தத்தை யடைந்து முழுகிக் கடந்து சென்று, பசுவினது அரிய கன்றானது வசிக்கின்ற திருவாவடுதுறை யென்னுந் திருப்பதியை யடைந்து, இடபவாகனத்தில் எழுந்தருளுகின்ற சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ் செய்து பொருந்திய பேரன் போடு வணங்கி அங்கு விருப்புற்று வசித்தருளுவாராயினர்.—எ-று.

'திகழ்கோயில்' என்றும் பாடபேதம். (அ)

அந்நிலைமைத் தானத்தை யகலாத தொருகருத்து
முன்னியெழுங் குறிப்பினான் மூளுமா தரவெய்தப்
பின்னுமகன் றேகுவார் பேணவருங் கோக்குலங்கள்
பொன்னிநதிக் கரைப்புறவிற் புலம்புவன வெதிர்கண்டார்.

(இ-ள்.) அத்தகைய நிலைமையினையுடைய திருப்பதியைவிட்டு நீங்காத ஒரு கருத்தானது சிந்தித்தெழுகின்ற குறிப்பினால் அதிகரிக்கின்ற பேரன்பு பொருந்தப் பின்னும் அத்தலத்தை யகன்று செல்கின்றவர் (யாவரும்) விரும் பத்தக்க பசுக்கூட்டங்கள் காவிரிநதிக்கரையி லுள்ள வனத்தில் அழுதலைத் தம க்கு எதிரில் பார்த்தருளினார்.—எ-று. (கo)

அந்தணர்தஞ் சாத்தனூ ராமேய்ப்பார் குடித்தோன்றி
முந்தைமுறை நிரைமேய்ப்பான் மூலனெனும் பெயருடையோன்
வந்துதனி மேய்க்கின்றான் வினைமாள வாழ்நாளை
வெந்தொழில்வன் கூற்றுண்ண விடிநிலத் திடைவீழ்ந்தான்.

(இ-ள்.) வேதியர்கள் வாழுஞ் சாத்தனூரில் இடையர் குலத்திற் பிற ந்து, பழைய முறைமைப்படி தனியே வந்து அப்பசுநிரைகளை மேய்க்கின்றவ னாகிய மூலனென்னும் பெயருடையவன்; அவனது வாழ்வினை கெட, ஆயுள் நாளைக் கொடுந்தொழிலையுடைய யமனானவ னுண்ணுதலால் பூமியில் விழுந்து இறந்தான்.—எ-று.

மூலனும், அவன் றந்தை பாட்டன் முதலியோர்களும் பாரம்பரியமாகப் பசுநிரை மேய்த்தலையே தங் குலத் தொழிலர்கப் பெற்றுள்ளவர்களென்பார், ‘முந்தைமுறை நிரைமேய்ப்பான்’ என்று கூறினார். கூற்று சொல்லால் அஃறி ணையும், பொருளா லுயர்திணையுமாக வுள்ளது. (கக)

மற்றவன்ற னுடம்பினையக் கோக்குலங்கள் வந்தணைந்து
சுற்றிமிகக் கதறுவன சுழல்வனமோப் பனவாக
நற்றவயோ கியர்காணு நம்பரரு ளாலேயா
வுற்றதுய ரிவைநீங்க வொழிப்பனென வுணர்கின்றார்.

(இ-ள்.) அப் பசுக்கூட்டங்கள் அவ்விடையனுடைய சரீரத்தைவந்த டைந்து சூழ்ந்து மிகக்கதறுவனவும், சூழ்வனவும், மோப்பனவுமாக இருக்க, அதனை நல்ல தவத்தினையுடைய சிவயோகியார் பார்த்தருளிச் சிவபெருமானது திருவருளினாலே இப்பசுக்களடைந்த துன்பநீங்கும்படி யொழிப்பேனென்று ஆலோசிப்பாராயினார்.—எ-று. (கஉ)

இவனுயிர்பெற் றெழிலன்றி யாக்களிடர் நீங்காவென்
றவனுடலிற் றம்முயிரை யடைவிக்க வருள்புரியுந்
தவமுனிவர் தம்முடம்புக் கரண்செய்து தாமுயன்ற
பவனவழி யவனுடலிற் றம்முயிரைப் பாய்த்தினார்.

(இ-ள்.) இவ்விடையனுயிர் பெற்றெழுந்தாலல்லாமல் பசுக்கள் துன்ப நீங்காவென்று, அவனுடலில் தமதுயிரைச் செலுத்தும்படி திருவுள்ளங்கொண் டருளிய சிவயோகியார் தமது திருமேனிக்குக் காவல்செய்து, தாம் முயன்று

செய்த பிராணதார வாயுமார்க்கமாகத் தமது உயிரை அவனுடைய சரீரத்திற் பிரவேசிக்கச் செய்தருளினர்.—எ-று. (கங)

பாய்த்தியபின் திருமூல ராயெழலும் பசுக்களெலா
நாத்தழும்ப நக்கிமோந் தணைந்துகளைப் பொடுநயந்து
வாய்த்தெழுந்த களிப்பினால் வாலெடுத்துத் துள்ளிப்பி
னீத்ததுய ரினவாகி நிரந்துபோய் மேய்ந்தனவால.

(இ-ள்.) அவ்வாறு பிரவேசிக்கச் செய்தபின்பு திருமூலராய் எழுதலும் பசுக்களெல்லாம் நாத்தழும்பேறும்படி நக்கி மோந்தணைந்து களைப்புடன் விரும்பி, அதிகரித்தெழுந்த மகிழ்ச்சியினால் வாலைச்சுழற்றித் துள்ளிப் பின்பு துன்ப மொழிந்தனவாகி வரிசையாகப் பரவிச்சென்று மேய்ந்தன.—எ-று. (கச)

ஆவினிரை மகிழ்வுறக்கண் டளிகூர்ந்த வருளினராய்
மேவியவை மேய்விடத்துப் பின்சென்று மேய்ந்தவைதாங்
காவிரிமுன் றுறைத்தண்ணீர் கலந்துண்டு கரையேறப்
பூவிரிதண் புறவினிழ லினிதாகப் புறங்காத்தார்.

(இ-ள்.) பசுநிரைகள் களிப்படையப்பார்த்து அன்புமிக்க பேரருளினையுடையவராய் அப்பசுக்கள்சென்று மேயுமிடங்களில் பின்னே சென்று, மேய்ந்தவைகள் காவிரிநதியின் முன்னுள்ள துறைகளில் நன்னீரையடைந்துண்டு கரையில் ஏற, பூக்களலர்ந்த குளிர்ந்த வனத்தினிழலில் நன்றாகப் புறத்தினின்று காத்தருளினர்.—எ-று.

பசுக்கள் புண்ணியசரீரமுடையனவும், சகல தேவர்களுக்கும், சகல தீர்த்தங்களுக்கும் வாசஸ்தானமாயுள்ளனவும், சிவபெருமானுக்குப் பஞ்சகௌவியங்களைத் தருவனவும், மூவகைத்தாய விபூதிகளும் விளைதற் காதாரமாக வுள்ளனவு மாகலின், அவை உயிர்பெற்றெழுந்து மகிழ்வுற்று மேய்தலைக்கண்டு தாமும் அன்புமிக்க பேரருள்கூர்ந்தனரெனபார், 'ஆவினிரை மகிழ்வுறக்கண் டளிகூர்ந்த வருளினராய்' என்று கூறினர். (கரு)

வெய்யசுடர்க் கதிரவனு மேல்பாலை மலையணையச்
சைவநெறி மெய்யுணர்ந்தோ ரானினங்கள் டாமேமுன்
பையநடப் பனகன்றை நினைந்துபடர் வனவாகி
வையநிகழ் சாத்தனூர் வந்தெய்தப் பின்போனார்.

(இ-ள்.) வெவ்விய கிரணங்களையுடைய சூரியனும் மேற்றிசையிலுள்ள அஸ்தகிரியிற் செல்ல, சைவசமய நெறியினுண்மையை யுணர்ந்த சிவயோகியார் அப்பசுக்கூட்டங்கள்தாமே முற்பட்டுப் பைய நடப்பனவும், தத்தங்கன்றுகளை நினைந்து செல்வனவுமாய் உலகத்தில் விளங்குகின்ற சாத்தனூரை வந்தடைய, அவற்றின்பின் சென்றருளினர்.—எ-று.

திருநந்திதேவரது சந்தானபரம்பரையில்வந்த ஆசாரியமூர்த்திகளென்பார், 'சைவநெறி மெய்யுணர்ந்தோர்' என்று கூறினர். (கசா)

போனவர்தாம் பசுக்களெலா மனைதோறும் புகுகின்றார்
மானமுடை மனையாளும் வைகியபின் றாழ்த்தானென்

னைபயத் துடன்சென்றே யவர்நின்ற வழிகண்டா
ளீனமிவர்க் கடுத்ததென மெய்தீண்ட வதற்கிசையார்.

(இ-ள்.) அவ்வாறுசென்ற சிவயோகியார் பசுக்களனைத்தும் வீடுகேட்டோ றும்போகத் தாம் வெளியில்நின்றார், பெருமைபொருந்திய (மூலனுடைய) மனைவியும் அவர் நின்றபின்பு (நாயகர் இன்றைக்குவர) மிகத்தாழ்த்தாரென்று பயங்கொண்டு சென்று அவர் நின்றவிடத்தைக் கண்டடைந்து இருவருக்கு யாதோ மனக்குறை நேர்ந்ததுபோலுமென்று அவரது திருமேனியைத்தீண்ட, சிவயோகியார் அதற்கு இசையாராயினார்.—எ-று. (௧௭)

அங்கவளு மக்களுட னருஞ்சுற்ற மிலலாதா
டங்கிவெரு வுறமயங்கி யென்செய்தீ ரெனத்தளர
விங்குனக்கென் னுடனணைவொன் றில்லையென வெதிர்மறுத்துப்
பொங்குதவத் தோராங்கோர் பொதுமடத்தி னுட்புகுந்தார்.

(இ-ள்.) அவளும் பிள்ளைகளுடன் அரிய உறவினரு மில்லாதவள்; ஆதலால், முன்னின்று அச்சங்கொண்டுமயங்கி யாதுசெய்தீரென்று தளர்ச்சியடைய, மிக்க தவத்தினையுடைய அச்சிவயோகியார் இங்கு என்னுடன் உனக்கு யாதொரு சம்பந்தமு மில்லையென்று எதிரில் மறுத்து, ஒரு பொதுமடத்தினுள்ளே சென்றருளினார்.—எ-று.

தங்குதல்=சோர்ந்து நிற்றல்; பொதுமடம் என்பது, வழிப்போக்கர்களும் தவத்தர் முதலியோர்களுந் தங்கி வசித்தற்பொருட்டுக் கட்டிவைத்துள்ள சத்திரம். (௧௮)

இல்லாள னியல்புவே றானமைகண் டிரவெலலாஞ்
சொல்லாட திருந்தவர்பா லணையாது துயிலாதாள்
பலலார்முன் பிறைநா ளிவர்க்கடுத்த பரிசுரைப்ப
நலலார்க ளவர்திறத்து நாடியே நயந்துரைப்பார்.

(இ-ள்.) தன்கணவனுடைய இயற்கைக்குணம் வேறுபட்டதைக்கண்டு அவ்விரவு முழுதும் ஒருவரோடும் வார்த்தை சொல்லாதிருந்து, அவரிடத்து அணையாமல நித்திரை கொள்ளாதவளாய், மறுநாள் பல விவேகிகளுக்கு முன்னே இவருக்குண்டாகிய தன்மையைத் தெரிவிக்க, அவர்கள் அவரது தன்மையை ஆராய்ந்துணர்ந்து விரும்பிக்கூறுவார்கள்.—எ-று.

'வேறானமையாவது, லௌகிகவிவகாரத்திற் சென்றிருந்த மூலனுடைய சுபாவ குணங்களொழிந்து சிவயோகிகள் செய்கையாய் விளங்கிநிற்றல்; 'சொல்லாட திருந்தவர்பாலணை யாது துயிலாதாள்' என்பதற்கு, ஒரு வார்த்தையும் பேசாதிருந்த சிவயோகியாரிடத்து அடையாமல் நித்திரை கொள்ளாதிருந்த மூலன்மனைவி, எனப் பொருள் கூறினுமாம். (௧௯)

பித்துற்ற மயலன்று பிறிதொருசார் வுளதன்று
சித்தவிகற் பங்களைந்து தெளிந்தசிவ யோகத்தில்
வைத்தகருத் தினராகி வரம்பில்பெரு மையிலிருந்தா
ரித்தகைமை யளப்பரிதால் யாராலு மெனவுரைப்பார்.

(இ-ள்.) பயித்தியத்தினாலுண்டாகிய மயக்கமன்று; வேறொரு சார்புள்ளதுமன்று; மன விகற்பங்களைக் களைந்து தெளிவுற்ற சிவயோகத்தில் செலுத்திய கருத்தினையுடையவராய் அளவு கடந்த பெருமையோடு மிருக்கின்றார்; இத்தன்மையை எவர்களாலும் அளவிட்டுரைப்பது அருமையாகுமென்று சொல்வார்கள்.—எ-று.

விகற்பம்=வேறுபாடு; அவை யான் எனது என்னும் இருவகைப்பற்றுகளும், காம முதலிய குற்றங்களுமாம். 'சித்தவிகற்பங் களைந்து தெளிந்த சிவயோகம் என்பதனை,

திருவாதவூரர் புராணம்.

"முக்குணம்புலனைந்துட னடக்கி மூல வாயுவை யெழுப்பிரு வழியைச், சிக்கெனும்படி யடைத்தொரு வழியைத் திறந்து தாண்டவச் சிலம்பொலி யுடன்போய்த், தக்க வஞ்செழுத் தோரெழுத் துருவாந் தன்மை கண்டரு டரும் பெரு வெளிக்கே, புக்க மூந்தினா ரமுதுருப் பெறுவார் புவியில் வேட்டுவ னொடுத்தமென் புழுப்போல்"—என்பதனாலுணர்க. (உ௦)

பற்றறுத்த வுபதேசப் பரமர்பதம் பெற்றார்போன்
முற்றுமுணர்ந் தனராகு முன்னைநிலை மையிலுங்கள்
சுற்றவியல் பினுக்கெய்தா ரென்றுரைப்பத் துயரெய்தி
மற்றவளு மையலுற மருங்குள்ளார் கொண்டகன்றார்.

(இ-ள்.) இவர் இருவகைப்பற்றையு மறுத்த சிவஞானோபதேசத்தினால் சிவபெருமானது திருவடியைப் பெற்றவரைப்போல முற்றுமுணர்ந்தவ ராவர்; பழைய நிலைமைப்படி உங்கள் சுற்றவியல்புக்குப் பொருந்தார் என்று சொல்ல, அதுகேட்டு அவள் துயரங்கொண்டு மயங்க, அருகிலுள்ளவர்கள் அவளை யழைத்துக்கொண்டு சென்றார்கள்.—எ-று.

முற்று முணர்தல்=எல்லாவற்றையும் ஒருவருணர்த்த வுணராமல் தாமே யுணர்தல். (உ௧)

இந்தநிலை மையிலிருந்தா ரெழுந்திருந்தாங் கானிரைகள்
வந்தநெறி யேசென்று வைத்தகாப் பினிலுய்த்த
முந்தையுடற் பொறைகாணார் முழுதுணர்ந்த மெய்ஞ்ஞானச்
சிந்தையினில் வந்தசெய லாராய்ந்து தெளிகின்றார்.

(இ-ள்.) இவ்வாறாகிய சிவயோக நிலைமையிலிருந்த திருமூலநாயனார் அவ்விடத்தினின்றுமெழுந்து, (முன்னாள்) பசுநிரைகள் வந்த வழியேசென்று, தாம் காவல்செய்து வைத்த முன்னைய சரீரத்தைக் காணாதவராய் எல்லாமுணர்ந்த மெய்ஞ்ஞானத்தையுடைய தமது திருவுள்ளத்தில் நிகழ்ந்த செயலை ஆராய்ந்து தெளிகின்றவராயினார்.—எ-று. (உஉ)

தண்ணிலவார் சடையார்தாந் தந்தவா கமப்பொருளை
மண்ணின்மிசைத் திருமூலர் வாக்கினாற் றமிழ்வகுப்பக்
கண்ணியவத் திருவருளா லவ்வுடலைக் கரப்பிக்க
வெண்ணிறைந்த வுணர்வுடையா ரீசரரு ளெனவுணர்ந்தார்.

(இ-ள்.) குளிர்ச்சிபொருந்திய இளம்பிறையையணிந்த சடைமுடியை யுடைய சிவபெருமான் (தமது திருமுகத்தினின்றும்) தோற்றுவித்தருளிய சைவாகமங்களின் உண்மைப்பொருளை உலகத்தில் திருமூலரது வாக்கினால் தமிழ் மொழியில் ஒரு நூல் செய்விக்கும்பொருட்டுத் திருவுள்ளங் கொண்டருளிய அப்பெருங் கருணையினால் அச்சரீரத்தை மறைத்தருள, சிவசிந்தனை நிறைந்த பேருணர்ச்சியையுடைய திருமூலநாயனார் இது சிவபெருமானது திருவருளாகுமென்று உணர்ந்தருளினார்.—எ-று.

சதாசிவமூர்த்தியினுடைய ஐந்து திருமுகங்களுள் சத்தியோசாத முகத்தினின்றும், காமிகம் - யோகசம்- சிந்தியம் - காரணம் - அசிதம் என்னும் ஐந்து ஆகமங்களும், வாமதேவ முகத்தினின்றும் தீப்தம் - சூக்குமம்-சகச்சிரம் - அஞ்சுமான் - சுப்பிரபேதம் என்னும் ஐந்தாகமங்களும், அகோரமுகத்தினின்றும் விசயம்-நிச்சுவாசம் - சுவாயம்புவம் - ஆக்கினேயம்-வீரம் என்னும் ஐந்தாகமங்களும், தற்புருட முகத்தினின்றும் இரௌரவம் - மகுடம் - விமலம் - சந்திரஞானம் - முகவிம்பம் என்னும் ஐந்தாகமங்களும், ஈசானமுகத்தினின்றும் புரோற்கீதம் - இலளிதம் - சித்தம் - சந்தானம் - சருவோக்தம் - பாரமேச்சுவரம் - கிரணம் - வாதுளம் என்னும் எட்டாகமங்களும், கௌசிகர்,காசிபர்,பாரத்துவாசர், கௌதமர், அகத்தியரென்னும் ஐந்து இருடிகள் பொருட்டு முறையே தோன்றினமையின் 'தண்ணிலவார் சடையார்தாந் தந்தவாகமப் பொருள்' என்று கூறினார்.

சிவபெருமானுக்குக் காமிகம் திருவடிகளும், யோகசம் கணைக்கால்களும், சிந்தியம் திருவடிவிரல்களும், காரணம் கெண்டைக்கால்களும், அசிதம் முழந்தாள்களும், தீப்தம் தொடைகளும், சூக்குமம் குய்யத்தானமும், சகச்சிரம் கடித்தானமும், அஞ்சுமான் முதுகும்,சுப்பிரபேதம் கொப்பூழும்,விசயம் உதரமும், நிச்சுவாசம் நாசியும், சுவாயம்புவம் முலைகளும், ஆக்கினேயம் கண்களும், வீரம் கழுத்தும், இரௌரவம் செவிகளும், மகுடம் திருமுடியும், விமலம் கைகளும், சந்திரஞானம் மார்பும், முகவிம்பம் திருமுகமும், புரோற்கீதம் திருநாக்கும், இலளிதம் கபோலங்களும், சித்தம் திருநெற்றியும், சந்தானம் குண்டலமும், சருவோத்தம் உபவீதமும், பாரமேசுவரம் ஆரமும், கிரணம் இரத்தினாபரணங்களும், வாதுளம் திருப்பரிவட்டமும், காலோத்தரம் மேற்பூச்சும்,மற்றை உபாகமங்கள் பரிமளத்திரவியங்களும் புஷ்பங்களும், சைவசித்தாந்தம் நைவேத்தியமுமாம். (உஙு)

சுற்றியவக் குலத்துள்ளார் தொடர்ந்தார்க்குத் தொடர்வின்மை
முற்றவே மொழிந்தருள வவர்மீண்டு போனதற்பின்
பெற்றமீ துயர்த்தவர்தாள் சிந்தித்துப் பெருகார்வச்
செற்றமுதல் கடிந்தவர்தா மாவடுதண் டுறைசேர்ந்தார்.

(இ-ள்.) பந்துக்களாகச் சூழ்ந்த அவ்விடைக்குலத்திலுள்ளவர்களாய்த் தம்மைத் தொடர்ந்து வந்தவர்களுக்கு யாதொரு சம்பந்தமில்லாமையைக் கண்டிப்பாகக் கூறியருள, அவர்கள் திரும்பிப் போனபின்பு, இடபத்தைக் கொடியாக மேலுயர்த்திய சிவபெருமானது திருவடிகளைச் சிந்தித்து, அதிகரிக்கின்ற பாசபந்தங்களை யறவே யொழித்தருளிய திருமூலநாயனார் திருவாவடுதுறை யென்னுந் திருப்பதியையடைந்தருளினார்.—எ-று. (உ௪)

ஆவடுதண் டுறையணைந்தங் கரும்பொருளை யுறவணங்கி
மேவுவார் புறக்குடபால் மிக்குயர்ந்த வரசின்கீழ்த்
தேவிருக்கை யமர்ந்தருளிச் சிவயோகத் தலைநின்று
பூவலரு மிதயத்துப் பொருளோடும் புணர்ந்திருந்தார்.

(இ-ள்.) திருவாவடுதுறையை யடைந்து அங்கெழுந்தருளிய மெய்ப் பொருளாகிய சிவபெருமானைத் திருவுள்ளத்திற் பொருந்த வணங்கிச் செல்கின் றவர் புறத்தில் மேற்குப் பக்கத்திலே மிகஉயர்ந்திருக்கின்ற அரசமரத்தின்கீழ்த் தெய்வீகமாகிய இருக்கையமர்ந்து சிவயோகநிலையில்நின்று,தமது இதயதாமரை யில் வீற்றிருந்தருளும் (சிவபரம்பொருளாகிய) மெய்ப் பொருளுடன் கலந் திருந்தருளினார்.—எ-று.

சிவஞானச்செல்வர்களாகிய மெய்யடியார்கள் சிவபெருமானைப் பூசிக்கு மிடத்துத் தாங்கள் வீற்றிருந்தருளும் ஆதனம் மந்திரசம்ஸ்காரத்தோடு கூடிய தாகலின், 'தேவிருக்கை யமர்ந்தருளி' என்று கூறினார். (௨௫)

ஊனுடம்பிற் பிறவிவிடந் தீர்ந்துலகத் தோருய்ய
ஞானமுத னான்குமலர் நற்றிருமந் திரமாலை
பான்மைமுறை யோராண்டுக் கொன்றாகப் பரம்பொருளா
மேனவெயி றணிந்தாரை யொன்றவன்றா னெனவெடுத்து.

(இ-ள்,) ஊனுடம்பினால் வருகின்ற சனனமென்னும் விஷத்தினின்று நீங்கி, உலகத்தாருய்யும்பொருட்டு, ஞானம்-யோகம்-கிரியை-சரியை யென்னும் நான்கு பாதங்களும் இனிது விளங்குகின்ற சிறந்த திருமந்திரமாலையைத் தகு ந்த முறைமைப்படி ஒருவருஷத்திற்கு ஒரு திருப்பாடலாகப், பரம்பொருளா கிய பன்றிக் கொம்பையணிந்த சிவபெருமானை "ஒன்றவன்றானே" என்று முதலெடுத்து.—எ-று.

காமிகாதிவாதுளாந்த மீறாகிய இருபத்தெட்டுச் சிவாகமங்களும் ஞா னம் - யோகம் - கிரியை - சரியையென நான்குபாதங்களாக வகுக்கப்பட்டுள் ளமையின், அவற்றின் சாரமாகிய திருமந்திரமாலையையும் அவ்வாறே நான்கு பாதமாக வகுத்துச் செய்தருளின ரென்க.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௨௬)

திருமந்திரமாலை

திருச்சிற்றம்பலம்.

ஒன்றவன்றானேயிரண்டவனின்னரு
ணின்றனன்மூன்றினுணான்குணர்ந்தானைந்து
வென்றனனாறுவிரிந்தனனேழும்பர்
சென்றனன்றானிருந்தானுணர்ந்தெட்டே.

நீருநிலனும்விசும்பங்கிமாருத
கூருமுடம்புறுசோதியுமங்குளன்
பேரும்பாரபரன்பிஞ்ஞகனெம்மிறை
யூருஞ்சகலனுலப்பிலிதானே.

திருச்சிற்றம்பலம்.

முன்னியவப் பொருண்மாலைத் தமிழ்மூவா யிரஞ்சாத்தி
மன்னியமூ வாயிரத்தாண் டிப்புவிமேன் மகிழ்ந்திருந்து
சென்னிமதி யணிந்தார்தந் திருவருளாற் றிருக்கயிலை
தன்னிலணைந் தொருகாலும் பிரியாமைத் தாளடைந்தார்.

(இ-ள்.) சிந்திக்கத்தக்க மெய்ப்பொருளமைந்த அத்திருமந்திரமாலையாகிய மூவாயிரந் திருப்பாடல்களைப் பாடியருளி, நிலைபெற்ற மூவாயிரம் வருஷம் இவ்வுலகத்தில் விரும்பிச் சிவயோகஞ் சாதித்தருளிப், பின்பு திருமுடியில் இளம்பிறையையணிந்த சிவபெருமானது திருவருளினால் ஸ்ரீ மகாகயிலாசத்தை யடைந்து எக்காலத்தும் நீங்காவண்ணம் அவ்வெம்பெருமான் றிருவடியை யடைந்தருளினார்.—எ-று. (௨௭)

நலஞ்சிறந்த ஞானயோ கக்கிரியா சரியையிவை
மலர்ந்தமொழித் திருமூல தேவர்மலர்க் கழல்வணங்கி
யலர்ந்தபுகழ்த் திருவாரூ ரமணர்கலக் கங்கண்ட
தலங்குலவு விறற்றண்டி யடிகடிறஞ் சாற்றுவாம்.

(இ-ள்.) நன்மைமிக்க ஞானம், யோகம், கிரியை, சரியை யாகிய இவை முழுதும் அருளிச்செய்த திருமொழியையுடைய திருமூலநாயனாரது தாமரை மலர்போன்ற திருவடிகளை வணங்கி, பரவிய புகழையுடைய திருவாரூரிலிருந்த சமணர்கள் மனங்கலங்கி வருந்தும்படி பார்த்தருளிய, உலகத்தில் விளங்குகின்ற திருவருட்டிறத்தையுடைய தண்டியடிகணாயனாரது திருத்தொண்டின் முறைமையைச் சொல்லத்தொடங்குவாம்.—எ-று. (௨௮)

திருமூலநாயனார் புராணம் முற்றியது.

திருச்சிற்றம்பலம்.

ஆக திருவிருத்தம் - கசுசுஅ.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தண்டியடிகணாயனார் புராணம்.

தண்டி யடிக டிருவாரூர்ப் பிறக்கும்பெருமைத் தவமுடையா
ரண்ட வாணர் மறைபாட வாடுஞ் செம்பொற் கழன்மனத்துக்
கொண்ட கருத்தி னகநோக்குங் குறிப்பே யன்றிப் புறநோக்குங்
கண்ட வுணர்வு துறந்தார்போற் பிறந்த பொழுதே கண்காணார்.

(இ-ள்.) தண்டியடிகணாயனார் திருவாரூரின்கண் அவதரிக்கும் பெருந்தவத்தினையுடையவர்; வேதங்கள் கோஷிக்கும்படி சிவபெருமான் திருநடனஞ் செய்தருளுஞ் செம்பொன்னாலாகிய வீரக்கழலையணிந்த திருவடிகளைத் திருவுள்ளத்திற்கொண்டகருத்தினால் அகக்கண்ணினால் தரிசிக்குங் குறிப்பேயன்றி முகக்கண்ணினால் நோக்கும் உணர்வு ஒழிந்தவர்போலப் பிறந்த பொழுதே கண்ணில்லாதவர்.—எ-று.

திருவாரூர்த் திருப்பதியிற் பிறக்கும் எல்லாவுயிர்களும் சிவசொரூபமுடையனவே யென்பது சாஸ்திர சம்மதமாகலின், 'திருவாரூர்ப் பிறக்கும் பெருமைத் தவமுடையார்' என்று கூறினார். (க)

காணுங் கண்ணாற் காண்பதுமெய்த் தொண்டே யான கருத்துடையார், பேணுஞ் செல்வத் திருவாரூர்ப் பெருமா னடிக டிருவடிக்கே, பூணு மன்பி னாற்பரவிப் போற்று நிலைமை புரிந்தமரர், சேணு மறிய வரியதிருத் தொண்டிற் செறியச் சிறந்துள்ளார்.

(இ-ள்.) காணுதற்குரிய அகக்கண்ணினால் தரிசித்தலே மெய்ம்மையான திருத்தொண்டாகவெண்ணுங் கருத்துடையவர்; யாவரும் விரும்பத்தக்க செல்வங்கணிறைந்த திருவாரூரில் வீற்றிருந்தருளும் ஸ்ரீவீதிவிடங்கப்பெருமானது திருவடிகளையே பொருந்திய பேரன்பினால் வணங்கித் துதிக்கும் நிலைமையையடைந்து, தேவர்கள் வாழும் விண்ணுலகுமறியும்படி அருமையாகிய திருத்தொண்டில் மிகவுஞ் சிறந்துள்ளவர்.—எ-று. (உ)

பூவார் சடிலத் திருமுடியார் மகிழ்ந்த தெய்வப் பூங்கோயிற்
றேவா சிரியன் முன்னிறைஞ்சி வலஞ்செய் வாராய்ச் செம்மைபுரி
நாவா லின்ப முறுங்காத லமச்சி வாய நற்பதமே
யோவா வன்பி லெடுத்தோதி யொருநாள் போல வருநாளில்.

(இ-ள்.) கொன்றைமலரையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளும் தெய்வத்தன்மைபொருந்திய கமலாலயத்திலுள்ள தேவாசிரிய மண்டபத்தை முன்னே வணங்கி வலஞ்செய்கின்றவராய், நன்மைமிக்க தமது நாவினால் பேரின்பம்பொருந்திய விருப்பினையுடைய "நமச்சிவாய" என்னுஞ் சிறந்த மந்திரத்தினையே கெடாத அன்பினால் பலமுறை ஜபித்து ஒரு தினம்போலவே நடந்துவரும் நாள்களில்.—எ-று.

இதுமுத லிரண்டொடனுங் குளகம். (ங)

செங்கண் விடையார் திருக்கோயிற் குடபாற்றீர்த்தக் குளத்தின்பா
லெங்கு மமணர் பாழிகளா யிடத்தாற் குறைபா டெய்துதலா [ங்
லங்கந் நிலைமை தனைத்தண்டி யடிக ளறிந்தே யாதரவா
லிங்கு நானிக் குளம்பெருகக் கல்ல வேண்டு மென்றெழுந்தார்.

(இ-ள்.) சிவந்த கண்களையுடைய இடபத்தை வாகனமாகக் கொண்டருளிய ஸ்ரீ தியாகராசப்பெருமானது திருக்கோயிலுக்கு மேற்றிசையிலுள்ள திருக்குளத்தினருகெங்கும் சமணர்மடங்களாய் இடத்தினால் குறைவடைந்திருந்தமையால், தண்டியடிகணாயனார் அதனை யறிந்து பெருவிருப்போடும் நான் இங்கு இத்திருக்குளம் பெருகும்படி கல்லவேண்டுமென்று எழுந்தருளினார். ()

குழிவா யதனிற் குறிநட்டுக் கட்டுங் கயிறு குளக்குலையி
னிழிவாய்ப் புறத்து நடுதறியோ டிசையக் கட்டி யிடைதடவி
வழியால் வந்து மண்கல்லி யெடுத்து மறித்துந் தடவிப்போ
யொழியா முயற்சி யாலுய்த்தா ரோது மெழுத்தஞ் சடனுய்ப்பார்.

(இ-ள்.) குளத்தினுள்ளே ஒரு தறிநட்டு அதில் கட்டிய கயிற்றைத் திருக்குளக்கரையி னிறங்குமிடத்து நட்ட தறியோடு இசையக்கட்டி, அக்கயிற்றை இடையில் தடவிக்கொண்டு அதன்வழியே வந்து மண்ணைவெட்டி யெடுத்து மீண்டுந் தடவிச்சென்று விடாமுயற்சியோடு கரையில் போட்டார்; திருவைந்தெழுத்தையும் இடைவிடாமல் ஜெபித்துக்கொண்டிருக்குந் தண்டியடிகணாயனார்.—எ-று.

'குளக்கரையின்' என்றும் பாடபேதம். (ரு)

எழுத்தஞ்சட னுய்ப்பார் ஒழியா முயற்சியாலுய்த்தார், எனக்கூட்டுக.

நண்ணி நாளு நற்றொண்டர் நயந்த விருப்பான் மிகப்பெருகி
யண்ண றீர்த்தக் குளங்கல்லக் கண்ட வமணர் பொறாராகி
யெண்ணித் தண்டி யடிகள்பா லெய்தி முன்னின் றியம்புவார்
மண்ணைக்கல்லிற் பிராணிபடும் வருத்தவேண்டா வென்றுரைத்தார்.

(இ-ள்.) நல்ல தண்டியடிகணாயனார் நாடோறு மடைந்து மிகுந்த விருப்பத்துடன் மகிழ்கூர்ந்து சிவபெருமானது தீர்த்தத் திருக்குளத்தைக் கல்லக்கண்ட சமணர்கள் மனம்பொறாமல் (அதற்குத்தடைசெய்யக்) கருதி, தண்டியடிகணாயனாரிடத்து வந்து முன்னே நின்று சொல்வார்கள், (தண்டியே!) நீ மண்ணைக் கல்லினால் பிராணிகள் இறந்துபோம்; (ஆதலால்) அவைகளை வருத்த வேண்டாமென்றுகூறினார்கள்.—எ-று.

அண்ணறீர்த்தக்குளம்-என்பதற்கு, பெருமை மிக்க கமலாலய தீர்த்தத் திருக்குளம் எனப் பொருள்கூறினுமாம். (சு)

மாசு சேர்ந்த முடையுடலார் மாற்றங் கேட்டு மறுமாற்றந்
தேசு பெருகுந் திருத்தொண்டர் செப்பு கின்றார் திருவிலிகாள்
பூசு நீறு சாந்தமெனப் புனைந்த பிரானுக் கானபணி
யாசி லாநல் லறமாவ தறிய வருமோ வுமக்கென்றார்.

(இ-ள்.) அழுக்கடைந்த முடைநாற்றத்தையுடைய சமணர்கள் கூறிய வார்த்தையைத் திவ்யதேஜசு விளங்குந் தண்டியடிகணாயனார் கேட்டு, அதற்கு

மறுமொழி கூறுகின்றார். அருட்செல்வமற்ற அறிவீனர்களே! பூசுகின்ற திரு வெண்ணீற்றைச்சாந்துபோல அணிந்தருளிய சிவபெருமானுக்குச் செய்யுந் திருப்பணியானது குற்றமற்றபுண்ணியமென்பது உங்களுக்குத் தெரியுமோவென்று கூறியருளினர்.—எ-று.

சிவபெருமானது மெய்யடியார்கள் செய்யுங் காரியங்களனைத்தும் அவ்வெம்பெருமானுக்குரியமெய்த்தொண்டாகவே யமைதலின் அவர்கள்செய்யும் பாவங்களும் புண்ணியமாகவே யமைந்து நற்பயன்றருதலின்,'பூசுநீறு சாந்தமெனப் புனைந்த பிரானுக்கான பணி- யாகிலா நலலறமாவதறிய வருமோவுமக்கு' என்றுகூறினர்;

சிவஞானசித்தியார்.

"அரனடிக்கன்பர்செய்யும் பாவமுமறமதாகும்
பரனடிக்கன்பிலாதார்புண்ணியமபாவமாகும்
வரமுடைத்தக்கன்செய்த மாவேள்வித்தீமையாகி
நரரினிற்பாலன்செய்த பாதகநன்மையாய்த்தே.''என்பதனுனுணர்க.

அந்த மில்லா வறிவுடையா ருரைப்பக் கேட்ட வறிவில்லார்
சிந்தித் திந்த வறங்கேளாய் செவியு மிழந்தா யோவென்ன
மந்த வுணர்வும் விழிக்குருடுங் கேளாச செவியு மற்றுமக்கே
யிந்த வுலகத் துள்ளனவென் றன்பர் பின்னு மியம்புவார்.

(இ-ள்.) கெடாத பேரறிவினையுடைய தண்டியடிகணாயனர் இவ்வாறு சொல்லக்கேட்ட அறிவீனர்களாகிய சமணர்கள் (கூறுவார்கள், ஏ தண்டியே!) யாஞ்சொன்ன இந்தத் தருமமுறைமையைக் கேட்டாயில்லை; (நீ கண்ணே யன்றிக்) காதினையு மிழந்தனையோ வென்று கூற, (அதற்கு நாயனர்) மந்தபுத்தியும் கண்குருடும் செவிட்டுக்காதும இவ்வுலகத்தில் உங்களுக்கே யுள்ளனவென்று கூறிப்பின்னுங் கூறுவாராயினர்—எ-று. (அ)

வில்லா லெயின்மூன் றெரித்தபிரான் விரையார் கமலச் சேவடிக, ளல்லால் வேறு காணேன்யா னதுநீ ரறிதற் காரொன்பார், நிலலா நிலையீ ருணர்வின்றி நுங்கண் குருடா யென்கணுல, கெலலாங் காண்பான் யான்கண்டா லென்செய வீரென் றெடுத்துரைத தார்.

(இ-ள்.) (மேருவாகிய) வில்லைக்கொண்டு திரிபுரங்களை யெரித்தருளிய சிவபெருமானது நறுமணங்கமழுந் தாமரைமலர்போன்ற திருவடிகளையன்றி வேறொன்றையும் யானறியேன்; அதனையறிதற்கு நீங்கள் யாரொன்பவராய், நனிலையில் நில்லாத நிலைமையையுடைய சமணர்களே! உங்களுக்குப் (பிறபொருள்களையுணரும்) உணர்வற்று உங்கள் கண்கள் குருடாகவும், என்னுடைய கண்கள் உலகமெல்லாங்காணவும் யானடைந்தால் (அதற்கு) நீங்கள் யாதுசெய்வீர்களென்று எடுத்துக்கூறியருளினர்.—எ-று. (சு)

அருக ரதுகேட் டுன்றெய்வத் தருளாற் கண்ணீ பெற்றாயேற்
பெருகு ரிவ்வூ ரினிறுங்கள் பின்னை யிருக்கி லோமென்று
கருகு முருட்டுக் கைகளாற் கொட்டை வாங்கிக் கருத்தின்வழித்
தருகைக் கயிறுந் தறியுமுடன் பறித்தார் தங்க டலைபறித்தார்.

(இ-ள்.) சமணர்கள் அதனைக்கேட்டு, உன் தெய்வத்தினது இருபையி னால் அதனை நீ பெறுவாயானால், பின்பு சிறந்த இத்திருவாரூரில் யாங்கள் இருக்கமாட்டோம் என்று கூறி, கருகிய அவர்களது முருடாகிய கைகளினால் மண்வெட்டியைப் பிடுங்கி, எண்ணத்தின் வழியே (திருத்தொண்டு செய்தற்கு) உதவியாகக்கட்டிய கயிற்றையும் குறித்தறிகளையும் தங்கள்தலைமயினைப் பறித்தசமணர்கள்பிடுங்கி யெறிந்தார்கள்.—எ-று. (கo)

வெய்ய தொழிலார் செய்கையின்மேல் வெகுண்ட தண்டி யடிகடா
மைகொள் கண்டர் பூங்கோயின் மணிவா யிலின்முன் வந்திறைஞ்சி
யைய னேயின் றமணர்கடா மென்னை யவமா னஞ்செய்ய
நைவ தானே னிதுதீர நல்கு மடியேற் கெனவீழ்ந்தார்.

(இ-ள்.) கொடுந்தொழிலையுடைய சமணர்கள்செய்த தீயசெய்கையினால் கோபங்கொண்டருளிய தண்டியடிகணாயனார் காளகண்டராகிய சிவபெருமானது ஸ்ரீ கமலாலயத்தின் அழகிய திருவாயிலின்முன் வந்துவணங்கி, எம்பெருமானே! சமணர்கள் இன்று என்னை யவமானஞ்செய்தமையால் அடியேன் மிக வருந்துகின்றேன்; இவ்வருத்த நீங்கும்படி, எனக்குத் திருவருள் புரியவேண்டுமென்றுவீழ்ந்து நமஸ்கரித்தார்.—எ-று. (கக)

பழுது தீர்ப்பார் திருத்தொண்டர் பரவி விண்ணப் பஞ்செய்து
தொழுது போந்து மடம்புகுந்து தூய பணிசெய் யப்பெறா
தழுது கங்கு லவர்துயிலக் கனவி லகில லோகங்கண்
முழுது மளித்த முதல்வனார் முன்னின் றருளிச் செய்கின்றார்.

(இ-ள்.) (மெய்யடியார்களது மும்மலங்களாகிய) குற்றங்களை நீக்கியருளுஞ் சிவபெருமானது திருத்தொண்டராகிய தண்டியடிகணாயனார் துதித்து விண்ணப்பஞ்செய்து வணங்கிச் சென்று தமது திருமடத்தை யடைந்து தூய்மையாகிய திருப்பணிசெய்யப் பெறாமல் அழுது, அன்றிரவு நித்திரைசெய்ய, சர்வலோகங்களையு மளித்தருளிய சிவபெருமான் அவரது சொப்பனத்தில் தோன்றி அருளிச்செய்கின்றார்.—எ-று. (கஉ)

நெஞ்சின் மருவுங் கவலையினை யொழிநீ நின்கண் விழித்தந்த
வஞ்ச வமணர் தங்கண்கண் மறையு மாறு காண்கின்றா
யஞ்ச வேண்டா வென்றருளி யவர்பா னீங்கி யவ்விரவே
துஞ்சு மிருளி னரசன்பாற் றோன்றிக் கனவி லருள்புரிவார்.

(இ-ள்.) அன்பனே! நீ மனதிற்கொண்ட வருத்தத்தை யொழிக்கக்கடவை; (நாளைக்கு) உன் கண் விழித்து, அந்த வஞ்சகராகிய சமணர்களது கண்கள் மறையும்வகையைக் காணப்போகிறாய், நீசிறிதுமஞ்சவேண்டாமென்று அருளிச்செய்து, அவரிடத்தினின்று நீங்கி, அன்றிரவே மிக்க இருளில் சோழராஜனுடைய சொப்பனத்தில் தோன்றி அருளிச்செய்வாராயினார்.—எ-று.

'காண்கின்றாமஞ்சவேண்டா' எனப் பாடமாயின், நாம் செய்கின்றோம் நீ சிறிதுமஞ்சாதே எனப் பொருள்கொள்க. (கங)

தண்டி நமக்குக் குளங்கல்லக் கண்ட வமணர் தரியாராய்
மிண்டு செய்து பணிவிலக்க வெகுண்டா னவன்பா னீமேவிக்

கொண்டகுறிப்பாலவன்கருத்தை முடிப்பாயென்றுகொளவருளித்
தொண்ட ரிடுக்க ணீங்கவெழுந் தருளி னாரத் தொழிலுவப்பார்.

(இ-ள்.) தண்டியென்பவன் நமக்குத் திருக்குளங்கல்ல, அதைக் கண்ட சமணர்கள் மனம்பொறுமல் அதற்குவிக்கினஞ்செய்து அத்திருப்பணியைத்தடுக்க அதனால், கோபித்து மனம்வருந்தியிருக்கின்றான்; நீ அவனிடத்திற்சென்று அவன்கொண்ட குறிப்பின்படி அவனுடைய எண்ணத்தை முடிக்கக்கடவாயென்று (அவ்வரசன்) ஏற்றுக்கொள்ளும்படி கட்டளையிட்டு, தண்டியடிகளுடையது துன்ப நீங்கும்படி அவரது திருத்தொண்டை விரும்பிய சிவபெருமான் மறைந்தருளினார்.—எ-று. (௧௪)

வேந்த னதுகண் டப்பொழுதே விழித்து மெய்யின் மயிர்முகிழ்ப்பப், பூந்தண் கொன்றை வேய்ந்தவரைப் போற்றிப் புலரத் தொண்டர்பாற், சார்ந்து புகுந்த படிவிளம்பத் தம்பி ரானா ரருளினைந்தே, யேய்ந்த மன்னன் கேட்பவிது புகுந்த வண்ண மியம்புவார்.

(இ-ள்.) சோழராசன் அச்சொப்பனங் கண்டு உடனே விழித்துத் தனதுடம்பில் மயிர்க்கூச்செறிய, பொலிவினையுடைய குளிர்ந்த கொன்றைமலர் மாலையையணிந்த சிவபெருமானைத்துதித்து, பொழுதுவிடியத் தண்டியடிகளுடைய ரிடத்து வந்து தான் கண்ட சொப்பனத்தையுரைக்க, அவர் சிவபெருமான் திருவருளைச் சிந்தித்து, அங்கு வந்த சோழராசன் கேட்கும்படி, இது நடந்த வகையைக் கூறுவாராயினார்.—எ-று. (௧௫)

மன்ன கேளியான் மழவிடையார் மகிழுந் தீர்த்தக் குளங்கல்லத், துன்னு மமண ரங்கணைந்தி தருமன் றென்று பலசொல்லிப், பின்னுங் கயிறு தடவு தற்கியான் பிணித்த தறிக ளவைவாங்கி, யென்னை வலிசெய் தியான்கல்லுங் கொட்டைப் பறித்தா ரென்றியம்பி.

(இ-ள்.) மகாராஜாவே! கேட்பாயாக; யான் இளமைபொருந்திய இடபவாகனத்தையுடைய சிவபெருமான் மகிழ்வுகொண்டருளுந் தீர்த்தத் திருக்குளத்தைக் கல்லும்பொழுது, கொடுமைபொருந்திய சமணர்கள் அங்குவந்து இது தருமமல்லவென்று பலகொடுஞ்சொற்களைக்கூறி யான் தடவிச்செல்வதற்குப் பின்னிய கயிற்றைக்கட்டிய குறித்தறிகளைப் பிடுங்கி என்னை வலிசெய்து, யான் மண்கல்லுகின்ற மண்வெட்டியை பிடுங்கிக்கொண்டார்களென்று கூறியருளி.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௧௬)

அந்த னான வுனக்கறிவு மில்லை யென்று ரியானதனைக்
கெந்தம் பெருமா னருளாலியான் விழிக்கி லென்செய் வீரென்ன
விந்த வூரி லிருக்கிலோ மென்றே யொட்டி னாரிதுமேல்
வந்த வாறு கண்டிந்த வழக்கை முடிப்ப தெனமொழிந்தார்.

(இ-ள்.) குருடனான உனக்குச் (செவி)யுணர்ச்சியு மில்லையோவென்றார்கள்; அதற்கு யான் எமது சிவபெருமானது திருவருளினால் யான் விழிக்கப்பெற்றால் நீங்கள் யாது செய்வீர்களென்று கேட்க, (அதற்கு அவர்கள் நீ அவ்

றுபெற்றால்) நாங்கள் இந்த ஊரி லிரோமென்று உடன்பட்டார்கள்; இது, ந்தசங்கதியாகும்; இனி நிகழ்வதைக்கண்டு இந்த வழக்கைத்தீர்த்தல்வே டுமென்று கூறியருளினார்.—எ-று. (கஎ)

அருகர் தம்மை யரசனுமங் கழைத்துக் கேட்க வதற்கிசைந்தார்
மருவுந்தொண்டர் முன்போக மன்னன்பின்போய் மலர்வாவி
யருகு நின்று விறற்றண்டி யடிக டம்மை முகநோக்கிப்
பெருகுந்தவத்தீர்கண்ணருளாற்பெறுமாகாட்டு மெனப்பெரியோர்.

(இ-ள்.) (அப்பொழுது) சோழராசன் சமணர்களை அங்கு அழைத்துக் கேட்க, அவர்கள் அதற்கு உடன்பட்டார்கள்; சிவஞானம்பொருந்திய திருத் தொண்டராகிய தண்டியடிகணாயனார் முன்னேசெல்ல, சோழராசன் பின்சென்று, மலர்களையுடைய அத்திருக்குளக்கரையில் நின்று, அன்பி னுறுதியை யுடைய அத்தண்டியடிகணாயனரது திருமுகத்தைப்பார்த்து, மிக்க தவமுனிவரே! சிவபெருமான் திருவருளினால் நீர்கண் பெறும் வகையினைக் காட்டுமென்று கூற, (அப்பொழுது) அந்நாயனார்—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கஅ)

ஏய்ந்த வடிமை சிவனுக்கியா னென்னி லின்றென் கண்பெற்று
வேந்த னெதிரே திருவாரூர் விரவுஞ் சமணர் கண்ணிழப்பா
ராய்ந்த பொருளுஞ் சிவபதமே யாவதென்றே யஞ்செழுத்தை
வாய்ந்த தொண்ட ரெடுத்தோதி மணிநீர் வாவி மூழ்கினார்.

(இ-ள்.) சிவபெருமானுக்கு யான் மெய்யடிமையென்பது சத்தியமானால், சோழராஜனெதிரில் இன்று என் கண் தெரியப்பெற்று, திருவாரூரில் நிறைந்திருக்குஞ் சமணர்கள் கண்ணிழப்பார்கள்; (வேதங்களில்) ஆராய்ந்து சொல்லும் மெய்ப்பொருளுஞ் சிவபதமேயாவதென்று சிறந்த தண்டியடிகணாயனார் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை யுச்சரித்துக்கொண்டு அழகிய நீரையுடைய அத்திருக்குளத்தில் முழுகியருளினார்.—எ-று. (கக)

தொழுது புனன்மே லெழுந்தொண்டர் தூய மலர்க்கண் பெற்றெழுந்தார், பொழுது தெரியா வகையமரர் பொழிந்தார் செழுந் தண் பூமாரி, யிழுதை யமணர் விழித்தேகண் ணிழந்து தடுமாறக் கண்டு, பழுது செய்த வமண்கெட்ட தென்று மன்னன் பகர் கின்றான்.

(இ-ள்.) சிவபெருமானைவணங்கி நீரில்முழுகி மேலெழுகின்றவர் தூய்மையாகிய தாமரைமலர்போன்ற திருக்கண்பெற் றெழுந்தருளினார்; தேவர்கள் பொழுது தெரியாவண்ணம் செழுமையாகிய குளிர்ந்த கற்பக மலர்மாரி பொழிந்தார்கள்; அறிவீனர்களாகிய சமணர்கள் விழித்துக் கண்ணிழந்து தடுமாறக் கண்டு, குற்றம் புரிந்த சமணசமய மழிந்ததென்று சோழராஜன் தன் சேவலாளரைப் பார்த்துக் கூறுவானாயினன்.—எ-று. (உ0)

தண்டி யடிக டம்முடனே யொட்டிக் கெட்ட சமண்குண்ட
ரண்டர் போற்றுந் திருவாரூர் நின்று மகன்று போய்க்கழியக்
கண்ட வமணர் தமையெங்குங் காணா வண்ணந் துரக்கவென
மண்டி வயவர் சாடுதலுங் கண்கள் காணார் மனங்கலங்கி.

(இ ள்.) தண்டியடிகளுடைனருடனே உடன்பாடுசெய்து கெட்டழிந்தவர்க்களாகிய சமணர்கள், தேவர்களால் துதிக்கப்பெற்ற திருவாரூரினின்று நீங்கியொழிய அச்சமணர்களை யெங்குங் காணுதவிதமாகத் துரத்துங்களென்று கட்டளையிட, உடனே தன்னேவல்வீரர்கள் அவர்களை நெருங்கி அடித்துத்துரத்தவும் அவர்கள் கண்தெரியாதவர்களாய் மனக்கலக்கங்கொண்டு.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (உக)

குழியில் விழுவார் நிலைதளர்வார் கோலு மில்லை யெனவுரைப்பார்
வழியீ தென்று துறடைவார் மாண்டோ மென்பார் மதிகெட்டு
ரழியும் பொருளை வட்டித்திங் கழிந்தோ மென்பா ரரசனுக்குப்
பழியீ தாமோ வென்றுரைப்பார் பாய்க ளிழப்பார் பறிதலையர்.

(இ-ள்.) மயிர்பறித்த தலையினையுடைய *சமணர்கள், குழியிலே விழுவார்கள்; மனநிலை தளர்வார்கள்; ஊன்றுகோலு மில்லையே யென்று கூறுவார்கள்; இது வழியென்று கருதித் தூறையடைவார்கள்; இறந்தோமென்பார்கள்; அறிவீனர்களே! நிலையற்ற பொய்ப்பொருளை மெய்ப்பொருளாக வுறுதிகூறி, அதனால், அழிந்தோமென்பார்கள்; இது, சோழராசனுக்குப் பழியாகுமோவென்று கூறுவார்கள்; பாயுடைகளை யிழப்பார்கள்.—எ-று.

தூறு=புதர். (உஉ)

பீலி தடவிக் காணாது பெயர்வார் நின்று பேதுறுவார்
காலி னோடு கைமுறியக் கன்மே லிடறி வீழ்வார்கள்
சால நெருங்கி யெதிரெதிரே தம்மிற் றாமே முட்டிடுவார்
மாலு மனமு மழிந்தோடி வழிக ளறியார் மயங்குவார்.

(இ-ள்.) மயிற்பீலிகளைத்தடவிக்காணாமல் திரும்புவார்கள்; நின்று மதிமயங்குவார்கள்; காலுங்கையு முறியும்படி கற்களின்மேல் இடறிவிழுவார்கள்; ஒருவரை யொருவர் மிகநெருங்கி எதிருக்கெதிரே தங்கட்குத்தாங்களே முட்டிக்கொள்ளுவார்கள், மயங்குகின்ற மனமழிந்தோடி வழிதெரியாமல் மயங்குவார்கள்.—எ-று. (உங)

அன்ன வண்ண மாரூரி லமணர் கலக்கங் கண்டவர்தாஞ்
சொன்ன வண்ண மேயவரை யோடத் தொடர்ந்து துரந்ததற்பின்
பன்னும் பாழி பள்ளிகளும் பறித்துக் குளஞ்சூழ் கரைபடுத்து
மன்ன வனும் மனமகிழ்ந்து வந்து தொண்ட ரடிபணிந்தான்.

(இ ள்.) அவ்விதமாகத் திருவாரூரிலே சமணர்கள் மனங் கலங்கக்கண்டு, அவர்கள் உடன்பட்டுக்கூறியவண்ணமே அவர்களை ஓடும்படி பின்றொடர்ந்து துரத்திய பின்பு, சோழராசன் சொல்லப்பட்ட சமணமடங்களையும் அவர்களுடைய கோயில்களையுங் கல்லியெறிந்து, திருக்குளத்தைச் சூழ்ந்த கரையைக் கட்டுவித்துப் பின்பு மனமகிழ் வுற்று வந்து தண்டியடிகளுடையனாரது திருவடிகளை வணங்கினான்.—எ-று. (உச)

மன்னன் வணங்கிப் போயினபின் மாலு மயனு மறியாத, பொன்னங் கழல்கள் போற்றிசைத்துப் புரிந்தபணியுங் குறைமுடித்தே, யுன்னு மனத்தா லஞ்செழுத்து மோதி வழுவா தொழுகியே, மின்னுஞ் சடையா ரடிநீழன் மிக்க சிறப்பின் மேவினார்.

(இ-ள்.) சோழராசன் வணங்கிச் சென்றபின்பு, (தண்டியடிகணாயனார்) திருமால் பிரமனென்னு மிருவராலு மறியப்படாத பொன்னாலாகிய அழகிய வீரக்கழலையணிந்த திருவடிகளைத் துதித்துத் தாம் செய்துவந்த திருத்தொண்டின் குறையைப் பூர்த்திசெய்து, தியானிக்கின்ற தமது திருவுள்ளத்திலே ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைச் செபித்து, நன்னெறியில் தவறாதொழுகி, விளங்குகின்ற சடைமுடியையுடைய சிவபெருமானது திருவடிநிழலை மிக்க சிறப்போடும் அடைந்தருளினார்.—எ-று. (௨௫)

கண்ணின் மணிகளவையின்றிக் கயிறு பிடித்துக் குளந்தொட்ட, வெண்ணில் பெருமைத் திருத்தொண்டர் பாத மிறைஞ்சி யிடர்நீங்கி, விண்ணில் வாழ்வார் தாம்வேண்டப் புரங்கள் வெகுண்டார் வேற்காட்டு, நண்ணி லாவும் புகழ்த்தொண்டர் மூர்க்கர் செய்கை யுரைக்கின்றாம்.

(இ-ள்.) கண்ணிற் கருமணிகளில்லாமல் கயிற்றைக் குறியாகப் பிடித்துச்சென்று திருக்குளத்தைத் தோண்டிய அளவற்ற புகழையுடைய தண்டியடிகணாயனாரது திருவடிகளை வணங்கிப் பிறவித்துன்பத்தினின்று நீங்கி, அரி பிரமேந்திராதி தேவர்கள் வேண்டுதலால் திரிபுரங்களை யழித்தருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருவேற்காடு என்னுந் திருப்பதியிலுள்ள விளங்குகின்ற புகழையுடைய திருத்தொண்டராகிய மூர்க்கநாயனாரது திருத்தொண்டின் தன்மையைச் சொல்லத் தொடங்குகின்றோம்.—எ-று. (௨௬)

தண்டியடிகணாயனார் புராணம் - முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆக திருவிருத்தம் - ௯௪௪௬.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்

# மூர்க்க நாயனார் புராணம்.

மன்னிப் பெருகும் பெருந்தொண்டை வளநா டதனில் வயல்பரப்பு, நன்னித் திலவெண் டிரைப்பாலி நதியின் வடபால் நலங்கொள்பதி, யன்னப் பெடைகள் புடைவாவி யலர்புக் காட வரங்கினிடை, மின்னுக் கொடிக டுகிற்கொடிகள் விழவிற் காடு வேற்காடு.

(இ-ள்.) நிலைபெற்றோங்கிய சிறந்த தொண்டைவளநாட்டிலே வயல்பரப்புகளில் நல்ல முத்துக்களைக் கொழிக்கின்ற வெள்ளிய அலைகளையுடைய பாலிநதியின் வடதிசையிலுள்ள நன்மைமிக்க திருப்பதியாவது, அருகிலுள்ள தடாகங்களில் பூத்த தாமரைமலர்களில் அன்னப்பேடைகளாடவும், நாடகசாலைகளில் மின்னற்கொடி போன்ற மாதர்களுங் கொடிச்சீலைகளும் விழவின்பொருட்டு ஆடுகின்ற திருவேற்காடு என்னுமூராகும்.—எ-று.

'குடைவாவி' என்றும் பாடம். (க)

செம்பொற் புரிசைத் திருவேற்கா டமர்ந்த செய்ய சடைக்கற்றை
நம்பர்க் கும்பர்க் கமுதளித்து நஞ்சை யமுது செய்தவருக்
கிம்பர்த் தலத்தில் வழியடிமை யென்றுங் குன்றா வியல்பில்வருந்
தம்பற் றுடைய நிலைவேளாண் குலத்திற் றலைமை சார்ந்துள்ளார்.

(இ-ள்.) செம்பொன்மயமாகிய மதில் சூழ்ந்த திருவேற்காட்டில் வீற்றிருந்தருளுங் கற்றையாகிய சிவந்த சடைமுடியை யுடையவரும், தேவர்களுக்கு அமுதத்தைக் கொடுத்து, (அத்தேவர்களைக் கொல்லவெழுந்த) விஷத்தைத் திருவமுது செய்தருளியவருமாகிய சிவபெருமானுக்கு இவ்வுலகத்தில் வழியடிமை செய்வதில் என்றுங் குறையாத முறைமைப்படிவந்த அன்பினுறுதியை யுடைய நிலைமையாகிய வேளாளர் குலத்திலே தலைமைபெற்றுள்ளவர்.—எ-று.

வழியடிமையாவது-பரம்பரையாகச் செய்துவரும் அடிமைத்திறம். (உ)

கோதின் மரபிற் பிறந்து வளர்ந் தறிவு கொண்ட நாடொடங்கி
யாதி முதல்வர் திருநீற்றி னடைவே பொருளென் றறிந்தரனார்
காத லடியார்க் கமுதாக்கி யமுது செய்யக் கண்டுண்ணும்
நீதி முறைமை வழுவாத நியதி பூண்ட நிலைமையார்.

(இ-ள்.) குற்றமற்ற நல்ல மரபிற் பிறந்து வளர்ந்து அறிவு தோன்றிய நாள் தொடங்கி, முதற்பெருங் கடவுளாகிய சிவபெருமானது திருவெண்ணீற்றுச் சார்பே மெய்ப்பொருளென் றுணர்ந்து, சிவபெருமா னடியார்களுக்குத் திருவமுது சமைத்து, அவர்கள் முன்னே திருவமுது செய்யப் பார்த்துப் பின் தாம் அமுதுசெய்கின்ற முறைமை தவறாத விரதத்தை மேற்கொண்டொழுகுந் தன்மையினையுடையவர்.—எ-று. (ங)

.சு னெய்கன்னல் சுவையின் கறிக ளவையமைத்து
-யார் தமைப்போற்றி விருப்பா லமுது செய்வித்தே
.-ாருளு மவாவேண்டும படியா லுதவி யன்புமிக
வேயு மாறு நாடோறு மினைய பணிசெய் தின்புற்றார்.

(இ-ள்.) தூய்மையாகிய திருவமுது - நெய் - சருக்கரை - சுவையினையுடைய பதார்த்தவகை முதலியவைகளை யமைத்து, அடைந்த சிவனடியார்களை வணங்கித் துதித்து, பெருவிருப்புடனே திருவமுது செய்வித்து, தம்மிடத்துள்ள பொருள்களையும் அவர்கள் விரும்பியவண்ணங் கொடுத்து, மிக அன்பு பொருந்த நாடோறும் இத்தகைய திருப்பணிசெய்து மகிழ்வுற்றிருந்தார்.

இன்ன செயலி னொழுகுநா ளடியார் மிகவு மெழுந்தருள
முன்ன முடைமை யானபொருண் முழுது மாள வடிமையுடன்
மன்னு காணி யானநில முதலா யுள்ள திறமவிற்றே
யன்ன மளித்து மேன்மேலு மார்வ மனத்த ராயினார்.

(இ-ள்.) இத்தன்மையாகிய திருத்தொண்டில் ஒழுகும் நாள்களில், சிவனடியார்கள் மிகுதியாக வருதலால், முன்பு தம்மிடத்துள்ள திரவியங்களெல்லாஞ் செலவாகிவிட, அடிமைகளையும், பொருந்திய காணியாகவுள்ள நிலங்களையும் மற்றுமுள்ள எல்லாப் பொருள்களையும் விற்று அடியார்களுக்குத் திருவமுதுபடைத்து மேலுமேலும் நீங்காத திருவுள்ளமுடையவராயினார்.—எ-று. (ரு)

அங்க ணவ்வூர் தமக்கொருபற் றாயா நயாட கழகாக
வெங்குங் காணு வகைதோன்ற விளம்பா டெய்தி யிருந்தயர்வார்
தங்கும் வகைமற் றுமுன்பு கற்ற தன்மை நற்சூதாற்
பொங்கு பொருளாக் கவுமங்குப் பொருவா ரின்மையினிற்போவார்.

(இ-ள்.) அடியார்களுக்குத் திருவமுதாகும்படி அவ்வூரிலெங்குந் தமக்கொருபற்றுங் காணாமையால் வறுமையடைந்து சோர்ந்திருக்கின்றவர், பொருந்திய முறைமையினால் தாம் முன்பு கற்றுள்ள நல்ல சூதினால் மிக்க பொருள் சம்பாதிக்கவும் அவ்வூரில் சூதாடுவோரில்லாமையால், அவ்விடத்தினின்றுஞ் செல்வாராயினார்.—எ-று. (சா)

பெற்ற மேறிப் பலிக்குவரும் பெருமா னமரும் தானங்க
ளுற்ற வன்பாற் சென்றெய்தி யுருகு முள்ளத் தொடும்பணிந்து
கற்ற சூதா னியதியாங் கடனு முடித்தே கருதார்ஊர்
செற்ற சிலையார் திருக்குடந்தை யடைந்தார் வந்து சிலநாளில்.

(இ-ள்.) இடபத்தின்மேலேறிப் பிச்சைக்குவந்தருளுஞ் சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருப்பதிகடோறும் பொருந்திய அன்போடு சென்றடைந்து, உருகுகின்ற திருவுள்ளத்துடனே வணங்கி, தாம் பயின்றுள்ள சூதாடலினால் நியதியாகச் செய்துவருகின்ற மகேசுரபூசையை முடித்து, பகைவர்களது திரிபுரங்களை யழித்தருளிய மேருமலையாகிய வில்லையுடைய சிவபெருமானெழுந்தருளிய ஸ்ரீ கும்பகோணமென்னுந் திருப்பதியைச் சிலநாளில் வந்தடைந்தருளினார்.—எ-று. (எ)

வேறு.

இருளாரு மணிகண்ட ரடியார்க்கின் னமுதளிக்கப்
பொருளாய மெய்துதற்குப் புகழ்க்குடந்தை யம்பலத்தே
யுருளாயச் சூதாடி யுறுபொருள்வென் றனநம்ப
ரருளாக வேகொண்டங் கமுதுசெய்வித் தின்புறுவார்.

(இ-ள்.) காளகண்டராகிய சிவபெருமானது மெய்யடியார்களுக்கு இனிய திருவமுது செய்விக்கப் பொருளை இலாபமாக வடைதற்குப் புகழையுடைய ஸ்ரீ கும்பகோணத்தின் வெளியிடங்களிலே, உருள்கின்ற பாய்ச்சிகையினாலாகிய சூது ஆடிக் கெலித்த பொருள்களைச் சிவபெருமானது திருவருளாகக்கொண்டு திருவமுதுசெய்வித்து மகிழ்ந்தருளுவார்.—எ-று. (அ)

முற்சூது தான்றோற்று முதற்பணைய மவர்கொள்ளப்
பிற்சூது பலமுறையும் வென்று பெரும் பொருளாக்கிச்
சொற்சூதான் மறுத்தாரைச் சுரிகையுரு விக்குத்தி
நற்சூதர் மூர்க்கரெனும் பெயர் பெற்றார் நானிலத்தில்.

(இ-ள்.) முதலிற் கட்டியபந்தயத்தை அவர்கள் கெலித்துக் கொள்ளும்படி முதற்சூதாட்டத்திலே தாம் தோற்று, பின் ஆட்டங்களிலே பல முறையுங் கெலித்துப் பொருள் சேகரித்து, சூதுவார்த்தையினால் மறுத்துப் பேசினவர்களை உடைவாளை யுருவிக் குத்தி உலகத்தில் நல்ல சூதர் மூர்க்கர் என்னும் பெயர்களைப் பெற்றருளினார்.—எ-று. (௯)

சூதினில்வென் றெய்துபொரு டுரிசற்ற நல்லுணர்விற்
றீதகல வமுதாக்கு வார்கொள்ளத் தாந்தீண்டார்
காதலுட னடியார்க ளமுதுசெயக் கடைப்பந்தி
யேதமிலா வகைதாமு மமுதுசெய்தங் கிருக்குநாள்.

(இ-ள்.) சூதாட்டத்தில் கெலித்துப்பெற்ற பொருளைக் குற்றமற்ற நல்லுணர்ச்சியோடும் தாம் தீண்டாமல், குற்றம் நீங்கத் திருவமுது சமைப்பவர்கள் கொள்ளச்செய்து, சிவனடியார்கள் பெருவிருப்போடு திருவமுது செய்ய, பின் கடைப்பந்தியிலே குற்றமில்லாவண்ணந் தாமும் அமுதுசெய்து அங்கு வாழும் நாள்களில்.—எ-று.

இதுமுத லிரண்டுபாட்டுங் குளகம். (௧௦)

நாதன்ற னடியார்க்கு நல்லடிசி னாடோறு
மாதரவி னாலமுது செய்வித்த வருளாலே
யேதங்கள் போயகல விவ்வுலகை விட்டதற்பின்
பூதங்க ளிசைபாட வாடுவார் புரம்புக்கார்.

(இ-ள்.) சிவபெருமானது அடியார்களுக்குச் சிறந்த போஜனவகைகளை நாடோறும் பேரன்புடன் அமுது செய்வித்து, அவ்வெம்பெருமானது திருவருளினால் குற்றங்கள் விட்டு நீங்க, இம்மண்ணுலகவாழ்க்கையை யொழித்த பின்பு, பூதகணங்க ளிசைபாடத் திருநடனஞ் செய்தருளுஞ் சிவபெருமான் வீற்றிருந்தருளிய ஸ்ரீமகாகயிலாசத்தை யடைந்தருளினார்.—எ-று. (௧௧)

டமைவென்று சூதினால் வந்தபொரு
ங் கறைக்கண்ட ரடியவர்க டமக்காக்கும்
..........ம் சூதாடு மூர்க்கர்கழல் நாம்வணங்கிச்
சொல்லார்சீர்ச் சோமாசி மாறர்திறஞ் சொல்லுவாம்.

(இ-ள்.) சூதில் வல்லவர்களை ஆட்டத்தில் கெலித்து, அதனால் வந்த பொருளைக் காளகண்டராகிய சிவபெருமானது மெய்யடியார்களுக்குத் திருவமுது சமைத்தூட்டிய மேலோராகிய நல்ல சூதாடுகின்ற மூர்க்கநாயனாரது திருவடிகளை வணங்கி, புகழமைந்த சிறப்பினையுடைய சோமாசிமாறநாயனாரது திருத்தொண்டின் வகையைச் சொல்லுகின்றோம்.—எ-று.

சூதாட்டத்தில் வல்லவர்களேயன்றித் தேகபலத்திலுஞ் சிறந்த பலபேர்களையும், சூதாட்டத்தினாலுஞ் சுரிகையினாற் குத்துதலினாலும் வெல்லும் விறலாளரென்பார், பொதுப்பட 'வல்லார்கடமைவென்று' என்றும், அவ்வாறு சூதாடுவோராயிருப்பினும், நற்குணநற்பத்திகளிற் சிறந்த மேலோரென்பார் 'நல்லார் நற்சூதாடு மூர்க்கர்' என்றுங் கூறினார்.

'சூதரா மூர்க்கர் கழல்' என்றும் பாடபேதம். (கஉ)

மூர்க்கநாயனார் புராணம் முற்றியது.

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம் - கஎகூக.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சோமாசிமாறநாயனார் புராணம்.

சூதம் பயிலும் பொழிலம்பரிற் றூயவாய்மை
வேதம் பயிலு மறையாளர் குலத்தின்மேலோ
ரேதம் புரியு மெயில்செற்றவர்க் கன்பர்வந்தாற்
பாதம் பணிந்தா ரமுதூட்டுநற் பண்பின்மிக்கார்.

(இ-ள்.) மாவிருக்ஷங்கள் பொருந்திய சோலைசூழ்ந்த திருவம்பரென்னுந் திருப்பதியில் தூய்மையாகிய மெய்ம்மையையுடைய வேதங்களை யோதும் பிராமணகுலத்திற் சிறந்துள்ளவர்; (உலகத்திற்கு) துன்பஞ்செய்துவந்த திரிபுரங்களை யழித்தருளிய சிவபெருமானுக்குரிய மெய்யன்பர்கள் வந்தால் அவர்களது திருவடிகளை வணங்கி அரிய திருவமு தூட்டுகின்ற நற்குணத்தில் மேம்பட்டுள்ளவர் (சோமாசிமாறநாயனாரென்னும் பெரியோர்).—எ-று. (க)

யாழின் மொழியா டனிப்பாகனைப் போற்றும்யாக
மூழின் முறைமை வழுவா துலகங்களான
வேழு முவப்பப் புரிந்தின்புறச் செய்தபேற்றால்
வாழுந் திறமீசர் மலர்க்கழல் வாழ்த்தலென்பார்

(இ-ள்.) யாழினிசைபோலும் இனிய மொழியினையுடைய உமாதேவியாரை வாமபாகத்திலுடைய சிவபெருமானைத் துதித்துச்செய்யும் வேள்விகளைப் பழையமுறைமைதவறாமல் ஏழுலகத்தாரும் மகிழ்வுறும்படி யியற்றி இன்பமுறச்செய்த தன்மையினால், சிவபெருமானுடைய தாமரைமலர்போன்ற திருவடிகளைத் துதித்தலே பேரின்ப வாழ்வடையுந் திறமென்று கருதி யொழுகின்றவர்.

எத்தன் மையரா யினுமீச னுக்கன்ப ரென்று
லத்தன் மையர்தா நமையாள்பவ ரென்றுகொள்வார்
சித்தந் தெளியச் சிவனஞ்செழுத் தோதுவாய்மை
நித்த நியம மெனப்போற்று நெறியினின்றார்.

(இ-ள்.) (குலங்குணம் முதலியவற்றால்) எவ்வளவு உயர்வு தாழ்வுகளையுடையவர்களாயினும் சிவபெருமானுக்கன்பர்களாயிருந்தால், அவர்களே நம்மை யடிமை கொள்பவர்களென்று சிந்திக்கும் பேரறிவினையுடையவர்; மனநிலை தெளியும்படி சிவபெருமானது திருவைந்தெழுத்தைச் செபிக்கும் மெய்ம்மையே நித்திய நியமமென்று விரும்பிச் செய்கின்ற நல்லொழுக்கத்தில் நின்றவர்.

சீருந் திருவும் பொலியுந்திரு வாரூரெய்தி
யாரந் திகழ்மார்பி னனுக்கவன் றொண்டர்க்கன்பாற்



சோமாசிமாறநாயனார்.

நம பெருநண்பு சிறபப வடைந்துதங்கிப்
நம் விசுமபும பணியுமபதம பறறியுள்ளாா.

(இ-ள்) மேன்மையும் பலவகைச்செலவங்களும் நிறைந்த திருவாரூரை யடைந்து, இரத்தின மாலைகள் விளங்குகின்ற திருமார்பினையுடைய அணுக்கத் தொண்டராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு அன்போடு பொருந்திய மிக்க நண்பு சிறக்கும்படி யடைந்து மண்ணுலகததாரும் விண்ணுலகத்தாரும வ ண ங்குகின்ற அவரது திருவடிகளையடைந்து பத்தி செய்துள்ளவா.—எ று.

பொழியுந் திருவாரூா, எனறும் பாடபேதம். (ச)

நன்றும் புலனைந் துடனைறு தொருதகுறறம
வென்றிங் கிதுநன் னெறியேரும விளககமெனறே
வன்றொண்டா பாதந தொழுதொன்று சிறபபுவாயப்ப
வென்றுந் நிலவுஞ் சிவலோகத்தி லின்பமுற்றுரா.

(இ ள்.) பொருந்திய ஐம்புலன்களையும், தொடுக்கப்பட்ட அறுவகைக் குற்றங்களையும் வென்று, இதுவே நன்மார்க்கமடையும் விளக்கமென்று கருதி, ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளது திருவடிகளைத் தொழுது அதனாலுண்டாகிய சிற ப்புப்பொருந்த, எப்பொழுதும் விளங்குகின்ற சிவலோகத்தில பேரின்பமுற் றடைந்தருளினாா.—எ-று.

புலனைந்தாவன - சுவை-ஒளி-ஊறு ஓசை நாற்றம். ஆறுகுற்றமாவன- காமம்-குரோதம் உலோபம்-மோகம் மதம மாற்சரியம் எனபன. (ரு)

வேறு.

பணையுந் தடமும புடைசூழ் மொற்றி யூரிற் பாகநதோா
துணையுந் தாமும பிரியாதாா தோழா நம்பி ராரைை [துவிக்க
யிணையுங் கொங்கைச சங்கிலியா ரெழிலமெனறு பணைததோ ளெய்
வணையு மொருவா சரணமே யரண மாக வடைநதோமே.

(இ-ள்.) வயல்களுந் தடாகங்களும் பக்கங்களில் சூழ்ந்துள்ள திருவொ ற்றியூரில் இடப்பாகத்திலுள்ள உமாதேவியாருந் தாமும் பிரியாதவராகிய சிவ பெருமான், தம்பிரான் தோழராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளை நெருங்கிய ஸ்தனங்களையுடைய சங்கிலிநாச்சியாரது அழகிய மிருதுவாகிய மூங்கில போ ன்ற தோள்களைத் தழுவுமபடி (தூதுசென்று) கூட்டுவிக்க, அது காரணமாகச் சென்று அச்சங்கிலி நாச்சியாரைத் திருமணம் புரிந்தருளிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளது திருவடிகளையே எமக்குத் துணையாக வடைந்தோம்.—எ-று. (சு)

சோமாசிமாறநாயனார் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம் கஎகஎ.

வம்பறாவரிவண்டுச் சருக்கம்

முற்றுப்பெற்றது.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஏழாவது,

வார்கொண்ட வனமுலையாள் சருக்கம்.

# சாக்கியநாயனார் புராணம்.

அறுசமயத் தலைவராய் நின்றவருக் கன்பராய்
மறுசமயச சாக்கியர்தம் வடிவினால் வருந்தொண்ட
ருறுதிவரச் சிவலிங்கங் கண்டுவந்து கலலெறிந்து
மறுவில்சரண் பெற்றதிற மறிந்தபடி வழுத்துவாம்.

இ-ள்.) அறுவகைச் சமயங்களுக்கு முதல்வரா யெழுந்தருளுஞ் சிவபெருமானுக்குரிய மெய்யன்பராய், புறச்சமயமாகிய பௌத்த வடிவத்தினால் வந்த திருத்தொண்டராகிய சாக்கியநாயனாரென்பவர் தமக்கு அன்பி னுறுதிவரும் படி சிவலிங்கப்பெருமானைத் தரிசித்து மகிழ்ந்து கல்லால் எறிந்து, (அவ்வெம்பெருமானது) குற்றமற்ற திருவடிகளை யடைந்த தன்மையை எமக்குத் தெரிந்தவாறு சொல்லத் தொடங்குவாம்.—எ-று.

புறப்புறம் - புறம் - அகப்புறம் - அகம் என்று கூறும் நால்வகைச் சமய பேதங்களுள், முத்திபேத மொன்று தவிர மூர்த்திபேதமற்றவர்களாகிய அகச் சமயத்தார் நீங்க, மற்றப்புறப்புறம் - புறம் - அகப்புறம் என்னும் மூவகைச் சமயத்தார்களுந் தாந்தாம் வஸ்துநிச்சயங் கூறி வழிபடும் மெய்க்கடவுளாகச் சிவபெருமா னொருவரே நின்றருள் புரிவரென்பார், 'அறுசமயத்தலைவராய்' என்று கூறினார்.

புறப்புறச்சமயத்தார் அறுவருள், உலோகாயதன் - பதி, பசு, பாசம் என்பன இலவாம், மகளிரிடத்துண்டாம் இன்பமொன்றுமே பொருளென்று கூறுவன். புத்தரிற் சௌத்திராந்திகன் - உருவம், ஞானம், வேதனை, குறிப்பு, வாசனை என்னும் பஞ்சகந்தங்களும் தொடர்ச்சியா யழிவது பந்தமென்றும், அவை முற்றும் ஒழிதலே முத்தியென்றுங் கூறுவன். யோகாசாரன் - சௌத்திராந்திகனிற் சிறிது வேறுபட்டு, அறிவு அரூபமென்றும், பிரபஞ்சம் பொய் யென்றுங் கூறுவன். மாத்மிகன் - அறிவும், அறியப்படுபொருளுஞ் சூனியமென்றும், அதனாலே பிரபஞ்சந் தோன்றுமென்றுங் கூறுவன். வைபாடிகன் - மஞ்சளுஞ் சுண்ணாம்புங் கூடியவிடத்துச் சிவப்புத் தோன்றுமாறுபோல, இந்திரியங்கள் கூடியவிடத்துப் பிரபஞ்சந் தோன்றுமென்று கூறுவன். ஆருகதன் - ஞானவர்ணீயம் முதலிய எண்குணத்தையும், பசித்தல் முதலிய பதினெண்குணத்தையும், அரசிகம் முதலிய ஆறுகுணத்தையும் விடுத்து முன்னைக்கன்மம் புசித்துத்தொலைந்தவிடமே முத்தியின்பமென்று கூறுவன்.

ரி, புறச்சமயத்தா ரறுவருள், தார்க்கிகன்-வித்தியாகற்பனை, தோ
'ருத்தி, சனனம், துக்கமென்பவைகளைத் தனித்தனி நீக்கிச் செல்ல,
ின்ற துக்கமொழியுமென்றும், இதுவே முத்தியென்றுங் கூறுவன்.
**மீமாஞ்சகன்** - வேதம் அநாதியென்றும் ஈசனை வேண்டாது கன்மமே பலனைக் கொடுக்குமென்றுங் கூறுவன். **மாயாவாதி** - சுத்தமாகிய பரப்பிரமம் மாயோபாதியினாலே வாதிக்கப்பட்டுச் சரீரத்தினுள்ளே சீவான்மாவாக நிற்குமென்றும், சீவான்மாவும் விவேகஞான மடைந்து மாயாவத்தை கடந்து பரமான்மாவோடு காடாகாசமும் மகாகாசமும்போல் அபேதமாய்விடுமென்றுங் கூறுவன். **சாங்கியன்** - புமானாகிய சுத்தபுருடன் அறியாமையுற்றபோது, பிரபஞ்சமெல்லாந் தானே விரிந்து நிற்பனென்றும், விவேகஞானம் எய்தியபோது, அவையனைத்தும் பிரகிருதிக்கேயன்றித் தனக்கில்லையென்றுங் கூறுவன். **யோகி**-நின்மலசத்துவ பரிணாமரூபமாகிய சித்தவிருத்திகளை உன்முகமாகத்திருப்பி, அவைகளை அவற்றின் முதற்காரணத்திலே ஒடுக்குதலே முத்தியென்று கூறுவன். **பாஞ்சராத்திரி** - ஸ்ரீ நாராயணர் தன்னை வழிப்பட்டவர்களுடைய பாசபந்தத்தையொழித்து அவர்களை விரசாநதியிலே மூழ்குவித்துச் சுத்தர்களாக்கி, வைகுண்டத்திலே சாரூபத்தைக் கொடுத்தருளுவரென்று கூறுவன்.

மேல், அகப்புறச்சமயத்தா ரறுவருள், **சைவன்** - சிவபெருமான் தாண்டவபூஷணமூர்த்தியா யருளுவரென்றும், **பாசுபதன்** விபூதியுஞ் சடைமுடியுந் தரித்த மூர்த்தியா யருளுவரென்றும், **மகாவிரதன்** - என்புமாலை தரித்தமூர்த்தியா யருளுவரென்றும், **காளாமுகன்** - படிகமும் புத்திரதீபமணியுந் தரித்தமூர்த்தியாயருளுவரென்றும், **வாமன்** - அக்கினியும் உபவீதமுந் தரித்தமூர்த்தியா யருளுவரென்றும், **பைரவன்** - தமருகமுஞ் சிலம்புந் தரித்த மூர்த்தியா யருளுவரென்றுங் கூறுவர்.

"அறுவகைச் சமயத் தோர்க்கு மவ்வவர் பொருளாய் வேறாங்
குறியது வுடைத்தாய் வேதா கமங்களின் குறியி றந்தங்
கறிவினி லருளான் மன்னி யம்மையோ டப்ப னாகிச்
செறிவொழி யாது நின்ற சிவனடி சென்னி வைப்பாம்." எனவருஞ்
'சிவஞானசித்தியாரா னுணர்க. (௧)

தாளாளர் திருச்சங்க மங்கையினிற் றகவுடைய
வேளாளர் குலத்துதித்தார் மிக்கபொரு டெரிந்துணர்ந்து
கேளாகிப் பல்லுயிர்க்கு மருளுடைய ராய்க்கெழுமி
நீளாது பிறந்திறக்கு நிலையொழிவே லெனநிற்பார்.

(இ-ள்.) நன்முயற்சியையுடைய மேலோர்கள் வாழ்கின்ற திருச்சங்கமங்கை யென்னு மூரிலே வேளாளர் குலத்தி லவதரித்தவர்; சிறந்த மெய்ப்பொருளை யாராய்ந்துணர்ந்து நட்பினராய்ப் பல வுயிர்களிடத்தும் பேரருளுடையவராய் விளங்கி, சனனமரண துக்கங்களாகிய நிலையானது அதிகரித்துவராமல், அத்துக்கத்தினின்று நீங்குவேனென்று (அதனையறியுமார்க்கத்தில்) நிற்பாராயினார்.—எ-று. (௨)

அந்நாளி லெயிற்காஞ்சி யணிநகரஞ் சென்றடைந்து
நன்ஞான மடைவதற்குப் பலவழியு நாடுவார்

முன்னாகச் சாக்கியர்தா மொழியறத்தின் வழிச்சார்ந்து
மன்னாத பிறப்பறுக்குந் தத்துவத்தின் வழியுணர்வார்.

(இ-ள்.) அந்நாளிலே மதில் சூழ்ந்த அழகிய ஸ்ரீ காஞ்சிபு— யடைந்து, மெய்ஞ்ஞானமடைவதற்குப் பலவழிகளையும் விசாரிக்கின்றவராய், முதலில் பௌத்தர்கள் கூறுகின்றதருமமார்க்கத்தின் வழியைச் சார்ந்து, நிலை பெறாத பிறப்பினை யொழிக்கின்ற தத்துவநெறியை யுணர்வாராயினார்.—எ-று.

அந்நிலைமைச் சாக்கியர்த மருங்கலைநா லோதியது
தன்னிலையும் புறச்சமயச் சார்வுகளும் பொருளல்ல
வென்னுமது தெளிந்தீச ரருள்கூட வீறில்சிவ
நன்னெறியே பொருளாவ தெனவுணர்வு நாட்டுவார்.

(இ-ள்.) அப் பௌத்த சமயத்தில் பிரவேசித்து அவர்களது சமயநூல்களை யோதி, அப் பௌத்தசமயத்தி னியல்பும் மற்றப் புறச்சமயச் சார்புகளும் மெய்ப்பொரு ளல்லவென்று தெளிந்து, பின் சிவபெருமானது திருவருள் கூடுதலால், கெடாத சற்சமயமாகிய சைவநெறியே மெய்ப்பொருளாவதென்று கருதி, தம் மறிவை அவ்விஷயத்தில் செலுத்துவாராயினார்.—எ-று.

சிவநன்னெறியே பொருளாவது என்பதனை,

"அறுசமயத்திற்கடந்தசைவத்தினன்றிவீடிலதெனத்தெளிந்து
பிறரறியாதுதொன்மைபோலிருந்துநின்சகன்மீதுகன்மலரா
லெறிதருதேரரன்பர்தங்கலிங்கமெறிலிகணைத்தனுஞ்சிரத்தை
முறைபுரிசிலைமேன்மோதினோர்முதலோர்முத்திபெற்றுடையதம்மூதூர்."
எனவருங் கந்தபுராணத்தா னுணர்க. (௪)

செய்வினையுஞ் செய்வானு மதன்பயனுஞ் சேர்ப்பானு
மெய்வகையா னான்காகும் விதித்தபொரு ளெனக்கொண்டே
யிவ்வியல்பு சைவநெறி யல்லவற்றுக் கில்லையென
உய்வகையாற் பொருள்சிவனென் றருளாலே யுணர்ந்தறிந்தார்.

(இ-ள்.) செய்யப்படும் புண்ணியபாவங்களாகிய கர்மங்களும், அக்கர்மங்களைச் செய்யும் ஆன்மாக்களும், அக்கர்மங்களால் விளையும் சுக துக்கங்களாகிய பலன்களும், அப் பலன்களை யறிந்தூட்டுகின்ற சர்வஞ்ஞனாகிய பதியும் என்று வேதாகமங்களில் விதிக்கப்பட்ட பொருள்கள் நான்காகுமெனக் கருதி, இவ் வியல்பு சைவசமயமல்லாத வேறு புறச்சமயங்களுக்குக் கிடையாவென்றும், அருள்பெற்றுய்யு முறைமையினால் மெய்ப்பொருளா யுள்ளவர் சிவபெருமானே யென்றும், அவ் வெம்பெருமானது திருவருளினாலே யுணர்ந்தருளினார்.—எ-று. (௫)

எந்நிலையி னின்றாலு மெக்கோலங் கொண்டாலு
மன்னியசீர்ச் சங்கரன்றாண் மறவாமை பொருளென்றே
துன்னியவே டந்தன்னைத் துறவாதே தூயசிவந்
தன்னைமிகு மன்பினான் மறவாமை தலைநிற்பார்.

(இ-ள்.) எந்த நிலைமையில் நின்றாலும், எந்த வேடங்கொண் டிருந்தாலும், நிலைபெற்ற சிறப்பினையுடைய சிவபெருமானது திருவடிகளை இடைவி

...த்திருத்தலே மெய்ப்பொருளென்று கருதி, தாமடைந்த அந்தப் ...வடத்தை யொழிக்காமல், மலரகிதராகிய சிவபெருமானை மிக்க ...னல் மறவா திருத்தலேயே தலைமையான விரதமாகக்கொண்டு அந்நெறியே நிற்பாராயினர்.—எ-று. (௬)

வேறு.

எல்லா முடைய வீசனே யிறைவ னென்ன வறியாதார்
பொல்லா வேடச் சாக்கியரோ யாகிப் புல்ல ராகுவா
ரல்லார் கண்டர் தமக்கிந்த வகில மெல்லா மாளென்ன
வல்லா ரிவரவ் வேடத்தை மாற்றா தன்பின் வழிநிற்பார்.

(இ-ள்.) எல்லாப் பொருள்களையுந் தமக்குரிமையாகவுள்ள சிவபெருமானே முதற்பெருங்கடவுளென்றுணராதவர்கள் கொடிய வேடத்தையுடைய பௌத்தர்களாய் அறிவீனர்க ளாவார்கள்; (அதுநிற்க) காளகண்டராகிய சிவபெருமானுக்குச் சர்வ லோகங்களும் அடிமைப்பொரு ளென்று கூற வல்லவராகிய இச்சாக்கியநாயனர் அப் பௌத்தவேடத்தை யொழிக்காமல் மெய்யன்பின்வழியே நிற்பாராயினர்.—எ-று.

சர்வலோகங்களுஞ் சிவபெருமானுக் குடைமைப்பொருளாகவும் அடிமைப்பொருளாகவு மிருத்தல்பற்றி, 'எல்லாமுடைய வீசன்' என்று கூறினர்; "எல்லாமு னடிமையே யெல்லாமு னுடைமையே யெல்லாமு னுடைய செயலே"—என்றார் தாயுமானவரும். (எ)

வேறு.

காணாத வருவினுக்கு முருவினுக்குங் காரணமாய்
நீணாக மணிந்தார்க்கு நிகழ்குறியாஞ் சிவலிங்க
நாணாது நேடியமா லன்முகனுங் காணநடுச்
சேணாருந் தழற்பிழம்பாய்த் தோன்றியது தெளிந்தாராய்.

(இ-ள்.) காணப்படாத அருவம் உருவ மென்னு மிரண்டிற்குங் காரணமாய், பெரியபாம்பை யாபரணமாகவணிந்தருளிய சிவபெருமானைத் தரிசிப்பதற்கு விளங்குகின்ற அறிகுறியாகவுள்ள சிவலிங்கமானது நாணடையாமல் திருவடியையுந் திருமுடியையுந் தேடிய திருமால் பிரமனென்னு மிருவருங் காணும்படி, நடுவில் உயர்ந்த அக்கினிப்பிழம்பாகத் தோன்றியதைத் தெளிந்தவராய்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (அ)

நாடோறுஞ் சிவலிங்கங் கண்டுண்ணு மதுநயந்து
மாடோர்வெள் ளிடை மன்னுஞ் சிவலிங்கங் கண்டுமன
நீடோடு களியுவகை நிலைமைவரச் செயலறியார்
பாடோர்கற் கண்டதனைப் பதைப்போடு மெடுத்தெறிந்தார்.

(இ-ள்.) தினந்தோறுஞ் சிவலிங்கப்பெருமானைத் தரிசித்துப் போசனஞ்செய்யும் நியதியை மேற்கொண்டு, சமீபத்தில் ஓர் வெள்ளிடையிலிருக்கின்ற சிவலிங்கத்தைத் தரிசித்துத் திருவுள்ளப்பெருக்குடன் பேரானந்தக் களிப்புண்டாகத் தாம் செய்யுஞ் செயலிதுவென்றுணராமல், அருகிலிருந்த

ஒரு செங்கல்லைப்பார்த்து, மனப்பதைப்புடன் எடுத்து அச்சிவலிங்கத்தி லெறிந்தருளினார்.—எ-று.

அகநிறைந்த பேருவகை யடங்காத வாதரவான்
மகவுமகிழ்ந் துரைப்பார்கள் வன்மைபுரி செயலினு
லிகழ்வனவே செய்தாலு மிளம்புதல்வர்க் கின்பமே
நிகழுமது போலதற்கு நீள்சடையோர் தாமகிழ்ந்தார்.

(இ-ள்.) மனத்தில் நிறைந்த பெருமகிழ்ச்சியானது அடங்காத பெரு விருப்பினால் (தாய்தந்தையர்கள் தங்கள் குழந்தைகள் செய்யும்) வன்செய்கையினால் இழிவானவைகளைச் செய்தாலும் தங்கள் குழந்தையை மகிழ்ந்து கூறுவார்கள்; அதனால் அவ்விளங்குழந்தைகளுக்கு இன்பமே தோன்றும்; அத்தன்மைபோல, நீண்ட சடைமுடியையுடைய சிவபெருமான் (அச் சாக்கியநாயனாரது செய்கைக்குத்) திருவுள்ள மகிழ்ந்தருளினார்.—எ-று. (௧௦)

அன்றுபோய்ப் பிற்றைநா ளந்நியதிக் கணையுங்காற்
கொன்றைமுடி யார்மேற்றாங் கல்லெறிந்த குறிப்பதனை
நின்றுணர்வா ரெனக்கப்போ திதுநிகழ்ந்த தவரருளே
யென்றதுவே தொண்டாக வென்றுமது செயநினைந்தார்.

(இ-ள்.) அன்றுகழிந்து மறுநாள் அக்கல்லெறியுந் திருத்தொண்டைக் குறித்துச் செல்லும்பொழுது, கொன்றைமலர்மாலையை யணிந்த சிவலிங்கப் பெருமான்மேல், தாம்கல்லெறிந்தகுறிப்பை நின்று ஆலோசித்தவராய், நேற்று எனக்கு இவ்வெண்ணம் நிகழ்ந்தது சிவபெருமான் திருவருளே யென்று கருதி, அதனையே திருத்தொண்டாகத் துணிந்து எப்பொழுதும் அக் கல்லெறிதலையே செய்யும்படி எண்ணங்கொண்டருளினார்.—எ-று. (௧௧)

தொடங்கியநா ளருளியவத் தொழிலொழியா வழிதொடருங்
கடன்புரிவா ரதுகண்டு கல்லெறிவார் துவராடைப்
படம்புனைவே டந்தவிரார் பசுபதியார் தஞ்செயலே
யடங்கலுமென் பதுதெளிந்தா ராதலினான் மாதவர்தாம்.

(இ-ள்.) மிக்க தவத்தினையுடைய சாக்கியநாயனார் (தாம் அன்புசெய்யத்) தொடங்கிய நாளில் (சிவபெருமானது திருவருள்) உணர்த்திய அத்திருத்தொண்டை விடாமல் தொடர்ந்துவருகின்ற அக் கடமையைச் செய்பவராய்ச் சிவலிங்கப்பெருமானைக் கண்டு கல்லா லெறிகின்றவர் துவர் ஆடையைத் தரிக்கும் பௌத்த வேடத்தை நீங்காதவராய், அனைத்தும் சிவபெருமானது திருவருட்செயலே யென்பதைத் தெளிந்தனர்; ஆதலால்.—எ-று. (௧௨)

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம்.

இந்நியதி பரிவோடும் வழுவாம லிவர்செய்ய
முன்னுதிருத் தொண்டாகி முடிந்தபடி தான்மொழியிற்
றுன்னியமெய் யன்புடனே யெழுந்தவினை தூயவர்க்கு
மன்னுமிரு பூசனையே யாமன்பு வழக்கினால்.

(இ-ள்.) இக் கல்லெறியும் நியதியை அன்புடன் தவறாமல்இந்நாயனார் செய்துவர, அது யாவரும் சிந்திக்கத்தக்க மெய்த்தொண்டாகி முற்றுப்பெற்ற

யைக் கூறுமிடத்து, பொருந்திய மெய்யன்புடனே செய்யத்தொடங் கலறிதலாகிய) திருத்தொண்டானது, மெய்யன்பின் நெறிமுறைமை , மலரகிதராகிய சிவபெருமானுக்கு நிலைபெற்ற சிறந்த அருச்சனையாக முடிந்தது.—எ-று. (கந)

கல்லாலே யெறிந்ததுவு மன்பான படிகானில்
வில்வேடர் செருப்படியுந் திருமுடியின் மேவிற்றால்
நல்லார்மற் றவர்செய்கை யன்பாலே நயந்ததனை
யல்லாதார் கல்லென்பா ரரனார்க்கஃ தலராமால்.

(இ-ள்.) (அந் நாயனார்) கல்லினாலெறிந்ததுவும் மெய்யன்பானதன்மை யைப்போல, வனத்தில் வசித்திருந்த வில்லைப் பிடித்த வேடர்குலத்தினராகிய ஸ்ரீகண்ணப்பநாயனாரது செருப்படியும் சிவபெருமானுடைய திருமுடியில் பொருந்தியது; நல்ல திருத்தொண்டராகிய அச் சாக்கியநாயனார் அன்பினால் விரும்பிச்செய்தலாகிய (கல்லெறியுந்) திருத்தொண்டினை, திருத்தொண்டர்க ளல்லாத கீழ்மக்கள் கல்லென்று கூறுவார்; அது, சிவபெருமானுக்குச் சிறந்த மலராகும்.—எ-று.

"நல்லார்மற் றவர்செய்கை யன்பாலே நயந்ததனை" என்பதற்கு, நன் னெறியி லொழுகு மெய்யடியார்களால், அச்சாக்கியநாயனாரது திருத்தொண் டினை அன்பினால் விரும்பி யேற்றுக்கொண்ட அதனை, என்று பொருள்கூறினு மாம். (கச)

அங்கொருநா ளருளாலே யயர்த்துண்ணப் புகுகின்றா
ரெங்கள்பிரான் றனையெறியா தயர்த்தேன்யா னெனவெழுந்து
பொங்கியதோர் காதலுடன் மிகவிரைந்து புறப்பட்டு
வெங்கரியி னுரிபுனைந்தார் திருமுன்பு மேவினார்.

(இ-ள்.) அவ்வாறு திருத்தொண்டு செய்துவருநாள்களில் ஒருநாள் சிவ பெருமான் திருவருளினால் மறந்து போசனஞ்செய்யத் தொடங்குகின்ற அந்நா யனார், யான் இன்று எமது சிவபெருமானைக் கல்லாலெறியாமல் மறந்துவிட் டேனென்று எழுந்து, அதிகரித்தபேரன்புடன் மிகவும் விரைந்து புறப்பட்டுக் (கயாசுரனென்னுங்) கொடிய யானையினது தோலை யாடையாக வணிந்தருளிய சிவலிங்கப்பெருமானது திருமுன்பு அடைந்தருளினார்.—எ-று. (கரு)

கொண்டதொரு கல்லெடுத்துக் குறிகூடும் வகையெறிய
வுண்டிவினை யொழித்தஞ்சி யோடிவரும் வேட்கையொடுங்
கண்டருளுங் கண்ணுதலார் கருணைபொழி திருநோக்காற்
றிருண்டெதிர் நெடுவிசும்பிற் றுணைவியோடுந் தோன்றுவார்.

(இ-ள்.) போசனஞ்செய்தலையொழித்து அஞ்சியோடிவருகின்ற பெரு விருப்போடும் தாம் கருதிய ஒரு கல்லை யெடுத்துக் குறிபொருந்தும்படி சிவலி ங்கத்தின்மேலெறிய, கருணைபொழிகின்ற திருநோக்கத்தினால் அதனைக் கண்ட ருளிய சிவபெருமான் அச் சாக்கியநாயனாருக் கெதிரே உயர்ந்த ஆகாயத்தில் உமாதேவியாரோடும் எழுந்தருளுவாராயினார்.—எ-று. (கசு)

மழவிடைமே லெழுந்தருளி வந்ததொரு செயலாலே
கழலடைந்த திருத்தொண்டர் கண்டுகரங் குவித்திறைஞ்சி
விழவருளேக் களித்தருளி மிக்கசிவ லோகத்திற்
பழவடிமைப் பாங்கருளிப் பரமரெழுந் தருளினர்.

(இ-ள்.) இளமைபொருந்திய இடபவாகனத்தின்மே லெழுந்தருளித் தரிசனங்கொடுத்தருளிய திருவருட்செயலினால், திருவடியையடைந்த சாக்கிய நாயனர் கண்டு திருக்கரங்களைக் குவித்து வீழ்ந்து வணங்க, அவருக்குக் கிருபா நோக்கம் பாலித்துச் சிறந்த சிவலோகத்தில் பழமையாகிய அடிமைப்பாங்கை யருளிச்செய்து சிவபெருமானெழுந்தருளினர்.—எ-று. (கஎ)

வேறு.

ஆதியார் தம்மை நாளுங் கல்லெறிந் தணுகப் பெற்ற
கோதில்சீர்த் தொண்டர் கொண்ட குறிப்பினை யவாகரு நல்குஞ
சோதியா ரறித லன்றித் துணிவதென் னவர்தாள் சூடித
தீதினை நீக்க லுற்றேன் சிறப்புலி யாரைச செபபி.

(இ-ள்.) சிவலிங்கப்பெருமானை நாடோறுங் கல்லாலெறிந்து சிவபத மடையப்பெற்ற குற்றமற்ற சிறப்பினையுடைய சாக்கியநாயனர் தமது திருவுள் ளத்திற் கொண்டருளிய குறிப்பை அந்நாயனருக்குத் திருவருள் புரிந்தருளிய சிவபெருமா னறிவதன்றி, வேறு துணிந்து சொல்லப்படுவது யாது? அத்த கைய சாக்கியநாயனரது திருவடிகளைச் சிரமேற்கொண்டு, (இனி) சிறப்புலி நாயனரது திருத்தொண்டின் பெருமையை யுரைத்து எனது தீவினையை யொழிக்கத்தொடங்கினேன்.—எ-று. (கஅ)

சாக்கியநாயனர் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

ஆக திருவிருத்தம் - கஎ௫௩.



சிறப்புலிநாயனார்

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புலிநாயனார் புராணம்.



பொன்னிநதி நாட்டினிடு பொற்பதி புவனத் து
ரின்மையா லிரந்து சென்றார்க் கில்லையென் னா(
தன்மையா ரென்று நன்மை சார்ந்தவே தியரைச்
மன்னனா ரருளிச் செய்த மறைத்திரு வாக்கூ ராக்கூர்.

(இ-ள்.) காவிரிநதி நீரானது (பல வளங்களைத் தருகின்ற) சோழநாட்டில் சிறந்து விளங்கும் அழகிய திருப்பதியானது, உலகத்துள்ளவர்களில், 'வறுமையினால் யாசித்துச் சென்றவர்களுக்கு இல்லை யென்னாமல் கொடுக்கின்ற தன்மையையுடையவர்கள்' என்று, நல்லொழுக்கத்தையுடைய வேதியர்களைச் (சிறப்பித்துச்) சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் பாடியருளிய திருநெறித் தமிழ்வேதமாகிய தேவாரப்பதிகமென்னும் அருட்செல்வ நிறைந்த ஊராகும் திருவாக்கூர் என்னுந் திருப்பதி.—எ-று.

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் 'இன்மையாலிரந்து சென்றார்க்கில்லையென்னாதே யீயுந்-தன்மையார்' என்று, தமது தேவாரப்பதிகத்தில் திருவாக்கூர் வேதியர்களைச் சிறப்பித்துப் பாடியருளினமையை :—

"நன்மையரா நாரணனு நான்முகனுங் காண்பரிய
தொன்மையான் றோற்றங்கே டில்லாதான் றொல்கோயி
லின்மையாற் சென்றிரந்தார்க் கில்லையென்னா தீந்துவக்குந்
தன்மையா ராக்கூரிற் றான்றோன்றி மாடமே"—என்பதனானுணர்க.

தூமலர்ச் சோலை தோறுஞ் சுடர்தொடு மாடந் தோறு
மாமழை முழக்கந் தாழ மறையொலி முழக்க மோங்கும்
பூமலி மறுகி லிட்ட புகையகிற் றூபந் தாழ
வோமநல் வேள்விச் சாலை யாகுதித் தூப மோங்கும்.

(இ-ள்.) தூய்மையாகிய மலர்களையுடைய சோலைகளிலும், சந்திரசூரிய மண்டலத்தை யளாவிய மாடங்களிலும் சிறந்த மேகமுழக்கந் தாழும்படி வேதாத்தியயனஞ் செய்யுமுழக்கங்க ளதிகரித்தோங்கும்; அழகு நிறைந்த வீதிகளில் இட்ட அகிற்புகை தாழும்படி ஓமஞ்செய்யும் சிறந்த யாகசாலையில் ஆகுதி செய்தலா லுண்டாகும் புகை யதிகரித்தோங்கும்.—எ-று.

தூமலர்ச் சோலைதோறுஞ் சுடர்தொடும் என்றும், 'மாடந்தோறு மாமழை முழக்கந்தாழ மறையொலி முழக்கமோங்கும்' என்றும் பிரித்து, மலர்ச்

சோலைகளில் இருசுடர்களுந் தங்கு மெனவும், மாடங்களில் மேகமும் மறைமுழக்க மோங்குமெனவும் பொருள்கூறினும் பொருந்தும்.

ஆலைசூழ் பூக வேலி யத்திரு வாக்கூர் தன்னில்
ஞாலமார் புகழின் மிக்கார் நான்மறைக் குலத்தி னுள்ளார்
நீலமார் கண்டத் தெண்டோ ளிருத்தர்தந் திருத்தொண் டேற்ற
சீலராய்ச் சாலு மீகைத் திறத்தினிற் சிறந்த நீரார்.

(இ-ள்.) கரும்பாலைகள் சூழ்ந்த கமுகம் வேலியினையுடைய அத்திருவாக்கூரென்னுந் திருப்பதியில் உலகத்தில் நிறைந்த பெரும்புகழில் மிக்கவரும், நான்கு வேதங்களையு முணர்ந்த வேதியர் குலத்தி லவதரித்தவரும்; கருநிறம் விளங்குங் கண்டத்தையும் எட்டுத் திருத்தோள்களையுமுடைய சிவபெருமானுக்குரிய திருத்தொண்டை விரும்பிச் செய்கின்ற நல்லொழுக்க முடையவருமாய் மிக்க கொடைத்திறத்திற் சிறந்த பெருங்குணத்தை யுடைய சிறப்புலி நாயனாரென்பவ ரொருவரிருந்தார்.—எ-று. (௧)

ஆளுமங் கணருக் கன்ப ரணைந்தபோ தடியிற் றாழ்ந்து
மூளுமா தரவு பொங்க முன்புநின் றினிய கூறி
நாளுநல் லமுத மூட்டி நயந்தன வெல்லா நல்கி
நீளுமின் பத்துட் டங்கி நிதிமழை மாரி போன்றார்.

(இ-ள்.) (அவர்) நம்மை யடிமைகொண் டருளுஞ் சிவபெருமானுக்குரிய மெய்யடியார்கள் எழுந்தருளியபொழுது அவர்களது திருவடிகளில் வணங்கி மிக்கபெருவிருப்ப மதிகரிக்க, முன்னின்று இன்மொழிகள் கூறி, நாடோறும் நல்ல திருவமுதுண்பித்து, அவர்கள் விரும்பியவனைத்துங்கொடுத்து மிக்க பேரின்பமுற்று (அதனால்) நவநிதிகளையும் பொழியும் மேகவருஷம் போன்று வாழ்ந்தனர்.—எ-று. (௨)

அஞ்செழுத் தோதி யங்கி வேட்டுநல் வேள்வி யெல்லா
நஞ்சணி கண்டர் பாத நண்ணிடச் செய்து ஞாலத்
தெஞ்சலி லடியார்க் கென்று மிடையறு வன்பால் வள்ளற்
றஞ்செயல் வாய்ப்ப வீசர் தாணிழற் றங்கி னாரே.

(இ-ள்.) ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தைச் செபித்து அக்கினிகாரியத்தை விரும்பிச் சிறந்த வேள்விப்பயன்க ளனைத்துங் காளகண்டராகிய சிவபெருமானது திருவடிகளைப் பொருந்தச் செய்து, உலகத்திலுள்ள குறைவற்ற மெய்யடியார்களிடத்தில் என்றும் நீங்காத பேரன்பினால் வள்ளற்றன்மையையுடைய தமது கொடைத்தொழிலானது பொருந்தச்செய்து சிவபெருமானது திருவடிநிழலை யடைந்தனர்.—எ-று.

'வள்ளற்றஞ் செயல்வாய்ப்ப' என்பதற்கு, அருள்வள்ளலாகிய சிவபெருமானது திருவருட்செயல் வாய்ப்ப, எனினுமாம். (௩)

அறத்தினின் மிக்க மேன்மை யந்தண ராக்கூர் தன்னின்
மறைப்பெரு வள்ள லார்வண் சிறப்புலி யார்தாள் வாழ்த்திச்
சிறப்புடைத் திருச்செங் காட்டங் குடியினிற் செம்மை வாய்த்த
விறற்சிறுத் தொண்டர் செய்த திறத்தினை விளம்ப லுற்றேன்.

ள்.) (மெய்யடியார்களுக்குத்) தருமஞ்செய்தலில் சிறந்த மேன்மை
ı வேதியர்கள் வாழுந் திருவாக்கூரில் வேதங்களையுணர்ந்த பெரு வள்ளலாகிய சிறப்புலிநாயனாரது திருவடிகளைத் துதித்து, பலவகைச் சிறப் பினையுடைய திருச்செங்காட்டங்குடி யென்னுந் திருப்பதியில் திருவருள் வாய்க்கப்பெற்று வாழ்ந்தருளிய திருவருட்டிறத்தையுடைய சிறுத்தொண்டநாய னார்செய்த திருத்தொண்டின் தன்மையினைச் சொல்லத்தொடங்கினேன்.

முதலெழுவள்ளல் - இடையெழுவள்ளல் - கடையெழுவள்ள லென் னும் மூவெழுவள்ளல்போல, இச் சிறப்புலிநாயனார் வேண்டினார் வேண்டிய வண்ணம் விரும்பிக் கொடுத்தருளும் வள்ளற்றன்மையை யுடையவராலின், இவரும் அவர்களுள் சேர்த் தெண்ணத்தக்கவரேயாமென்பார், 'மறைப்பெரு வள்ளலார் வண் சிறப்புலியார்' என்று கூறினார்.

மூவெழுவள்ளலாவா ரிவரொன்பதனை:—

சூடாமணிநிகண்டு.

"மிக்கசெம் பியனே காரி விராடனே நிருதிதானுந்
தக்கதுந் துமாரி தானுஞ் சகரனு நளனுந் தாமுன்
னக்குரன் சந்தி மானே டந்திமான் சிசுபா லன்னே
வக்கிரன் கன்னன் சந்த னிடைவள்ளல் வகுத்த வாறே.

பாரியா யெழிலி நள்ளி பசுந்தொடை மலையன் பேக
னோரியே கடையி லுற்றோ ருறுபொரு டண்டா தீந்தும்
வாரியி விரந்தோர்க் கிட்டும் வளர்புகழ் துதிக்க வீந்தும்
பேரியல் வைய மெண்ணப் பெற்றனர் முப்பா லாகும்" — என வரு வனவற்றா னுணர்க.

'திருத்தொழில் விளம்பலுற்றேன்' என்றும் பாடபேதம். (சு)

சிறப்புலிநாயனார் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

ஆ திருவிருத்தம் - ௩௭சு௧.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிறுத்தொண்டநாயனார் புராணம்.

உருநாட்டுஞ் செயல்காம னொழியவிழி பொழிசெந்தீ
வருநாட்டத் திருநுதலார் மகிழ்ந்தருளும் பதிவயலிற்
கருநாட்டக் கடைசியர்தங் களிகாட்டுங் காவேரித்
திருநாட்டு வளங்காட்டுஞ் செங்காட்டங் குடியாகும்.

(இ-ள்.) தனது உருவத்தை நாட்டிக் காமப்போர் செய்யவந்தமன்மதனெரியும்படி திருக்கண்பொழிந்த சிவந்த அக்கினியானது தோன்றிய நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளுந் திருப்பதியாவது, வயல்களில் நாற்றுமுடிகளை நடுகின்ற உழத்தியர்கள் தங்கள் களிப்பைக் (குரவையாட்டு முதலியவற்றால்) காட்டுகின்ற காவிரிநதிசூழ்ந்த சோழநாட்டில் பல வளங்களையுங் காட்டுகின்ற திருச்செங்காட்டங்குடியாகும்.—எ-று.

அரிபிரமேந்திராதி தேவர்களினேவுதலால் சிவபெருமான்மீது புட்பபாணத்தை விடுத்துக் காமப்போர் செய்யவந்த மன்மதன் தனதுருவத்துடனே போர்செய்ய வந்தனனென்பார், 'உருநாட்டுஞ்செயல்காமன்' என்றும், அவனையொருபொருட்படுத்தித் தாமழிக்காமல் தமது நுதல்விழியைத் திறந்தமாத்திரத்தேதானே யெரிந்தழிந்தனனென்பார், 'ஒழியவிழி பொழிசெந்தீ வருநாட்டத் திருநுதலார்' என்றும், நெல்விதைகள் விதைக்கப்பட்டு முளைத்தலன்றி, நாறுகளாகப் பிடுங்கி நடுதலுந் தங்குலத் தொழிலென்பார், 'கருநாட்டக் கடைசியர்' என்றும், அந்நாறுகள் குறைவற்று விளைந்தோங்கலின் குரவையாட்டு முதலியவற்றால்நீங்காப் பெருங்களிகூர்ந்திருப்பரென்பார், 'களிகாட்டும்' என்றும், அத்தகைய விளைவிற்குங் களிப்பிற்குங் காவிரிநீர்ப்பெருக்கே காரணமென்பார், 'காவேரித்திருநாட்டு' என்றும், அந்நாட்டில் எவ்வகைவளங்களுக்கு முதாரணமாக வெடுத்துரைக்கப்படுவது இந்நகரமே யென்பார், 'வளங்காட்டுஞ் செங்காட்டங் குடியாகும்' என்றுங் கூறினார்.

'உருநாட்டுஞ் செயல்காமன்' என்பதற்கு, ஆன்மாக்களுக்குத் தனுவுண்டாதற் கேதுவாகிய காமத்தை யூட்டுஞ் செயலையுடைய காமன், என்றாயினும், விரகவேதனையைத் தருஞ் செயலையுடைய காமன் என்றாயினும் பொருள்கூறுதலுமாம். 'கருநாட்டக் கடைசியர்' என்பதற்கு, கரியவிழியினையுடைய கடைசியர், எனப் பொருள்கூறினும் பொருந்தும். (௧)

நிலவியவத் திருப்பதியி னெடுஞ்சடையார் நீற்றடைவா
லுலகின்வள ருயிர்க்கெல்லா முயர்காவற் றொழில்பூண்டு

48



திருவெண்காட்டுநங்கை-சிறுத்தொண்டநாயனார்-சீராளர்-

மலர்புகழ்மா மாத்திரர்தங் குலம்பெருக வந்துள்ளார்
பலர்புகழுந் திருநாமம் பரஞ்சோதி யாரென்பார்.

(இ-ள்.) விளங்குகின்ற அத் திருச்செங்காட்டங் குடியென்னுந் திருப்பதியில் நீண்ட சடைமுடியையுடைய சிவபெருமானது திருவெண்ணீற்றுச் சார்பினால், உலகத்தில் ஜீவிக்கின்ற எல்லாவுயிர்களுக்கும் உயர்ந்த காவற்றொழிலைமேற்கொண்டு,பரவிய புகழையுடைய மாமாத்திரர் குலஞ் சிறந்தோங்கும்படி அவதரித்தவர்; பலரும் புகழத்தக்க பரஞ்சோதியாரென்னுந் திருநாமமுடையவர்.—எ-று. (உ)

ஆயுள்வே தக்கலையு மலகில்வட நூற்கலையுந்
தூயபடைக் கலத்தொழிலுந் துறைநிரம்பப் பயின்றுள்ளார்
பாயுமத குஞ்சரமும் பரியுமுகைக் கும்பண்பு
மேயதொழில் விஞ்சையினு மேதினியின் மேலானார்.

(இ-ள்.) ஆயுள்வேதங்களும், அளவற்ற வடமொழி நூலாகிய வேதாகமங்களும், தூய்மையாகிய தனுர்வேதங்களுமாகிய அவ்வத்துறைகளில் நிரம்பப் பழகியுள்ளவர்; பாய்கின்ற மதத்தினையுடைய யானையேற்றமும், குதிரையேற்றமுமாகிய வித்தையிலும் உலகத்தில் சிறந்துள்ளவர்.—எ-று. (ங)

உள்ளநிறை கலைத்துறைக ளொழிவின்றிப் பயின்றவற்றாற்
றெள்ளிவடித் தறிந்தபொருள் சிவன்கழலிற் செறிவென்றே
கொள்ளுமுணர் வினின்முன்னே கூற்றுதைத்த கழற்கன்பு
பள்ளமடை யாயென்றும் பயின்றுவரும் பண்புடையார்.

(இ-ள்.) உள்ளத்தில் நிறைந்த பலவகைக்கலைஞானங்களை இடைவிடாமற் கற்றுணர்ந்து அக்கலைஞானங்களால் தெளிந்து தேர்ந்தபொருளாவது சிவபெருமானுடைய திருவடிகளிற் பொருந்துதலேயென்று, கருதிய பேருணர்ச்சியோடும், முற்காலத்து (மார்க்கண்டேயர் பொருட்டு) இயமனை யுதைத்தருளிய சிவபெருமான் திருவடிகளில் பேரன்பானது பள்ளத்திற்செல்லும் நீர்மடைபோலச் செய்துவருகின்ற பெருங்குணத்தை யுடையவர்.—எ-று. (ச)

ஈசனடி யார்க்கென்று மியல்பான பணிசெய்தே
யாசில்புகழ் மன்னவன்பா லணுக்கரா யவற்காகப்
பூசன்முனைக் களிறுகைத்துப் போய்வென்று பொருமரசர்
தேசங்கள் பலகொண்டு தேர்வேந்தன் பாற்சிறந்தார்.

(இ-ள்.) சிவபெருமா னடியார்களுக்கு எக்காலத்துந்தகுதியான திருத்தொண்டுகளைச் செய்து, குற்றமற்ற புகழையுடைய சோழராசனிடத்தில் அணுக்கராகி,அவ்வரசனுக்காகப் போர்முனையில் யானையைச் செலுத்திச்சென்று ஜெயித்து, எதிர்த்துப் போர்செய்த அரசர்களுடைய பல தேசங்களைக் கைப்பற்றி, தேரையுடைய சோழராசனிடத்தில் சிறப்புற்றிருந்தனர்,—எ-று. (ரு)

மன்னவர்க்குத் தண்டுபோய் வடபுலத்து வாதாவித்
தொன்னகரந் துகளாகத் துளைநெடுங்கை வரையுகைத்துப்
பன்மணியு நிதிக்குவையும் பகட்டினமும் பரித்தொகையு
மின்னனவெண் ணிலகவர்ந்தே யிகலரசன் முன்கொணர்ந்தார்.

(இ-ள்.) சோழராசன்பொருட்டுப் படையெடுத்துச் சென்று வடதேசத்திலே வாதாவியென்னும் பழையநகர மழியும்படி துளைபொருந்திய நீண்ட துதிக்கையினையுடைய யானையேறிச் செலுத்தி, பலவகை இரத்தினங்களும் நிதிக்குவைகளும், யானைக்கூட்டங்களும், குதிரைக்கூட்டங்களும் இவைபோன்றனவாகிய அளவற்ற பொருள்களையுங் கவர்ந்து வலிபொருந்திய சோழராசன் முன்னே கொண்டுவந்தார்.—எ-று. (௬)

கதிர்முடிமன் னனுமிவர்தங் களிற்றுரிமை யாண்மையினை
யதிசயித்துப் புகழ்ந்துரைப்ப,வறிந்தவமைச் சர்களுரைப்பார்
மதியணிந்தார் திருத்தொண்டு வாய்த்தவலி யுடைமையினு
லெதிரிவருக்,கிவ்வுலகி லில்லையென வெடுத்துரைத்தார்.

(இ-ள்.) ஒளிவிளங்குகின்ற மணிமுடியையுடைய சோழராசனும் இவரது யானையேற்றத்தின் வல்லமையை யதிசயித்துப் புகழ்ந்துபேச, அதனையறிந்த மந்திரிகள் (அரசனை நோக்கிக்) கூறுவார்கள் ; சந்திரனையணிந்த திருமுடியையுடைய சிவபெருமானது திருத்தொண்டு வாய்க்கப்பெற்ற வலிமையினல், இந்நிலவுலகத்தில் இவருக்கெதிர் ஒருவருமில்லையென்று சிறப்பித்துக் கூறினார்கள்.—எ-று. (எ)

தம்பெருமான் றிருத்தொண்ட ரெனக்கேட்ட தார்வேந்த,
னும்பர்பிரா னடியாரை யுணராதே கெட்டொழிந்தேன்,
வெம்புகொடும் போர்முனையில் விட்டிருந்தே னெனவெருவுற்
றெம்பெருமா னிதுபொறுக்க வேண்டுமென விறைஞ்சினன்.

(இ-ள்.) இவர் சிவபெருமானது திருத்தொண்டரென்று (மந்திரிகள்) சொல்லக்கேட்ட மாலையையணிந்த சோழமகாராசன் தேவர்கள் நாயகராகிய சிவபெருமானது மெய்யடியவராகிய இவரை யான் சிறிதுமறியாமல், ஐயோ - கெட்டேன் ; அஞ்சத்தக்க கொடிய போர்முனையில் விட்டிருந்தேனென்று அஞ்சி, (அப்பரஞ்சோதியாரை நோக்கி) சுவாமீ ! இக்குற்றத்தை மன்னித்தருள வேண்டுமென்று வணங்கினன்.—எ-று. (அ)

இறைஞ்சுதலு,முன்னிறைஞ்சி,யென்னுரிமைத் தொழிற்கடுத்த
திறம்புரிவே,னதற்கென்றே தீங்கென்ன,வாங்கவர்க்கு
நிறைந்தநிதிக் குவைகளுட னீடுவிருத் திகளளித்தே,
யறம்புரிசெங் கோலரச,னஞ்சலிசெய் துரைக்கின்றான்.

(இ-ள்.) சோழராசன் தம்மை வணங்கவும், பரஞ்சோதியார் அவனை முன்னே வணங்கி, நான் எனது உரிமைத்தொழிலுக் கடுத்த காரியத்தைச் செய்வேன் ; அதனல் தீங்கு என்னவென்று கூற, அதற்கு, தருமத்தைச் செய்கின்ற செங்கோன்மையையுடைய சோழராசன் அப் பரஞ்சோதியாருக்கு நிறைந்த பொருட்குவைகளையும் மிக்க விருத்திகளையுங் கொடுத்து வணங்கிக் கூறுகின்றான்.—எ-று.

விருத்தியாவது - நிலபலமுதலியமானியவகைகள். (௯)

உம்முடைய நிலைமையினை யறியாமை கொண்டுய்த்தீ,
ரெம்முடைய மனக்கருத்துக் கினிதாக விசைந்துமது
மெய்ம்மைபுரி செயல்விளங்க,வேண்டியவா றேசரித்துச்,
செம்மைநெறித் திருத்தொண்டு செய்யுமென விடைகொடுத்தான்.

(இ-ள்.) (தேவரீர் இதுவரையில்) உம்முடைய அன்பின் நிலைமையை யான் அறியாவண்ணம் மறைத்து நடத்திக்கொண்டு வந்தீர்; இனி என் மனக் கருத்துக்கு இனிமையாக இசைந்து,உமது மெய்ம்மையைச் செய்கின்ற திருத் தொண்டின் செயலானது விளங்க நீர்விரும்பிய வண்ணம் வசித்து, நன்னெறி யாகிய திருத்தொண்டைச் செய்வீராகவென்று விடைகொடுத்தான்.—எ-று.

மன்னவனை விடைகொண்டு, தம்பதியின் வந்தடைந்து,
பன்னுபுகழ்ப் பரஞ்சோதி யார்தாமும், பனிமதிவாழ்
சென்னியரைக் கணபதீச் சரத்திறைஞ்சித், திருத்தொண்டு
முன்னைநிலை மையில்வழுவா முறையன்பிற் செய்கின்றார்.

(இ-ள்.) துதிக்கத்தக்க புகழையுடைய பரஞ்சோதியாரும், சோழராச னை விடைபெற்றுக்கொண்டு தமது திருப்பதியில்வந்து சேர்ந்து, கணபதீச்ச ரத்தி லெழுந்தருளிய குளிர்ந்த இளம்பிறைவாழ்கின்ற திருமுடியையுடைய சிவபெருமானை வணங்கி, தாம்செய்யுந் திருத்தொண்டுகளை முன்னைய நிலைமை யில் சிறிதுந் தவறாமல் முறைமைப்படி பேரன்போடுஞ் செய்கின்றவ ராயினார்.

வேதகா ரணரடியார் வேண்டியமெய்ப் பணிசெய்யத்
தீதில்குடிப் பிறந்ததிரு வெண்காட்டு நங்கையெனுங்
காதன்மனைக் கிழத்தியார் கருத்தொன்ற வரும்பெருமை,
நீதிமனை யறம்புரியு நீர்மையினை நிலைநிற்பார்.

(இ-ள்.) வேதகாரணராகிய சிவபெருமானடியார்கள் விரும்பிய மெய்ம் மையாகிய திருத்தொண்டுகளைச் செய்ய, குற்றமற்ற நற்குடியிற்பிறந்த திருவெ ண்காட்டுநங்கையென்னும் விருப்பமிக்க மனைவியார் தமதுகருத்துக்கு இசைய வருகின்ற பெருமையையுடைய இல்லறத்தை நடத்துந் தன்மையில் நிலையாக நிற்பாராயினார்.—எ-று.

நீர்மையினை என்பது உருபுமயக்கம். (கஉ)

நறையிதழித் திருமுடியா ரடியாரை, நாடோறு
முறைமையினிற் றிருவமுது முன்னூட்டிப், பின்னுண்ணு
நிறையுடைய பெருவிருப்பா னியதியா கக்கொள்ளுந்
துறைவழுவா வகையொழுகுந் தூயதொழிற் றலைநின்றார்.

(இ-ள்.) தேன்பொருந்திய கொன்றைமலர்மாலையை யணிந்த திருமுடி யையுடைய சிவபெருமானடியார்களைத் தினந்தோறும் முறைமைப்படி முன் னே திருவமுதுண்பித்துப் பின்பு தாம் உணவுகொள்ளுதலாகிய நிறைந்த பெரு விருப்பினால், அதனையே நியதியாகக்கொண்டு செய்கின்ற முறைமை வழுவா வண்ணம் ஒழுகுகின்ற நல்ல திருத்தொண்டில் முதன்மையாக நின்றனர்.

தூயதிரு வமுது,கனி,கன்னலறு சுவைக்கறி,நெய்,
பாயதயிர் பாலினிய பண்ணியமுண் ணீரமுத
மேயபடி யாலமுது செய்விக்க,விசைந்தடியார்
மாயிருஞா லம்போற்ற வருமிவர்பான், மனமகிழ்ந்தார்.

(இ-ள்.) தூய்மையாகிய திருவமுதும், கனிவர்க்கங்களும், சருக்கரை யும், அறுசுவைக்கறிகளும், நறுநெய்யும், நல்லதயிரும், பாலும், இனிய பலகார ங்களும் உண்ணுகின்ற நீரமுதமும் பொருந்திய வகையினால் திருவமுதுசெய்வி

க்க, பெரிய நிலவுலகமானது துதிக்கும்படி அவதரித்தருளிய இப்பரஞ்சோதியாரிடத்து அடியார்கள் மிகுதியாக வடைந்து மனமகிழ்ந்தார்கள்.—எ-று(கச)

சீதமதி யரவினுடன் செஞ்சடைமேற் செறிவித்த,
நாதனடி யார்தம்மை நயப்பாட்டு வழிபட்டான்,
மேதகையா ரவர்முன்பு மிகசசிறிய ராயடைந்தா
ராதலினாற் சிறுத்தொண்ட ரொனநிகழ்ந்தா ரவனியின்மேல்.

(இ-ள்.) குளிர்ந்த சந்திரனைப் பாம்புடனே (பகையின்றிச்) சிவந்த சடைமுடியில் தரித்தருளிய சிவபெருமானது அடியார்களை விரும்பச் செய்கின்ற வழிபாட்டினால், மேன்மையாகிய பெருங்குணத்தையுடைய பரஞ்சோதியார் அவ்வடியார்களுக்கு முன்னே மிகச் சிறியராய் ஒழுங்குகின்றமையால், இவ்வுலகத்தில் சிறுத்தொண்டரென்னுந் திருநாமம் விளங்கப் பெற்றனர். ()

கண்ணுதலார் கணபதீச சரத்தினைகட் கருத்தமர,
வுண்ணிறையன் பினிறபணிசெய் தொழுகுவார, வழுவின்றி
யெண்ணில்பெருஞ் சீரடியா, ரிடைவிடா தமுதுசெய.
நண்ணியபே ருவகையுட,னயநதுறையு நாளின்கண்.

(இ-ள்.) நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானது கணபதீச்சர மென்னும் ஆலயத்தில் தமது கருத்துப்பொருந்த திருவுள்ளத்தில் நிறைந்த பேரன்பினால் திருப்பணிசெய் தொழுகுகின்றவர், தவறாமல் அளவற்ற பெருஞ்சிறப்பினையுடைய மெய்யடியார்கள் இடைவிடாமல் திருவமுதுசெய் தருளுதலால், பொருந்திய பெருமகிழ்ச்சியோடும் விரும்பி வாழும்நாள்களில்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கரு)

நீராருஞ சடைமுடியா ரருளினா,னிறைதவத்துப்
பேராள ரவாதமக்குப்,பெருகுதிரு மனையறத்தின்
வேராகி விளங்குதிரு வெண்காட்டு நங்கைபாற்,
சீராள தேவரொனுந் திருமைந்த ரவதரித்தார.

(இ-ள்.) கங்கைநதிதங்கிய சடைமுடியை யுடைய சிவபெருமானது திருவருளினால் நிறைந்த தவத்தினையுடைய அச் சிறுத்தொண்டநாயனாருக்கு, பெருகுகின்ற இல்லறவொழுக்கத்தின் வேர்போல விளஙகுகின்ற திருவெண்காட்டு நங்கையாரென்னும் மனைவியாரிடத்திலே சீராளதேவரென்னுந் திருப்பெயரையுடைய ஒரு சற்புத்திரா அவதரிததனர்.—எ-று. (கஎ)

அருமையினிற் றனிப்புதலவா பிறநதபொழு தலஙகரித்த,
பெருமையினிற் கிளைகளிபபப் பெறறகரிய மணிபெறறு,
வருமகிழசசி தாதையாா மனத்தடஙகா வகைவளரத,
திருமலிநெய் யாடலவிழாச செஙகாடடங குடியெடுப்ப.

(இ-ள்.) அருமையோடு ஒப்பற்ற சற்புத்திரர் அவதரித்தபொழுது (அந்நகரை) அலங்கரித்த பெருமையோடு உறவினர் களிப்படையவும்; பெறுதற்கரிய மாணிக்கம்போன்ற அப்புதல்வரைப்பெற்று,அதனால் வருகின்ற பெருமகிழ்ச்சியானது தந்தையாராகிய சிறுத்தொண்டநாயனாரது திருவுள்ளத்தி லடங்காவண்ணம் வளரவும், அழகு மிக்க நெய்யாட்டுவிழாவைத் திருச்செங்காட்டங் குடியிலுள்ளவர்கள் கொண்டாடவும்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கஅ)

மங்கலநல் லியமுழக்க, மறைமுழக்கம் வானளப்ப,
வங்கணர்தஞ் சீரடியார்க் களவிறந்த நிதியளித்துத்,
தங்கண்மர பினிலுரிமைச சடங்குதச தினத்தினிலும்
பொங்குபெரு மகிழ்ச்சியுடன் புரிந்துகாப் பணிபுனைந்தார்.

(இ-ள்.) மங்கலகர்மாகிய நல்ல வாத்திய முழக்கமும், வேதகோஷங்களின் முழக்கமும் விண்ணுலகத்தையளாவவும், சிவபெருமானது மெய்யடியார்களுக்கு அளவற்ற பொருள்களைத் தானங்கொடுத்து, தங்கள் குலமரபுக்குரிய சடங்குகளைப் பத்துத்தினங்களிலும் மிக்க பெருமகிழ்வோடுஞ் செய்து காப்புநாணணிந்தார்.—எ-று. (கசு)

ஆர்வநிறை பெருஞ்சுற்ற மகமலர வளித்தவர்தாம்
பார்பெருகு மகிழ்சசியுடன் பருவமுறைப் பாராட்டுச்,
சீர்பெருகச செய்யவளர் திருமகனார் சீரடியிற்,
றார்வளர்கிங் கிணியசையத் தளர்நடையின் பதஞ்சார்ந்தார்.

(இ-ள்.) விருப்பமிக்க பெரிய சுற்றத்தார்கள் மனமகிழும்படி, புத்திரரைப்பெற்ற சிறுத்தொண்டநாயனார் உலகத்தில் பெருகிய களிப்போடு அவ்வப் பருவங்கடோறும் முறைப்படிசெய்யுஞ் சிறப்புக்களை மேன்மையோடு செய்து வர, அதனால், (குறைவின்றி) வளர்ந்து வருகின்ற அந்தச் சற்புத்திரர் தமது சிறந்த கால்களில் ஒழுங்காகக் கோத்த கிங்கிணிச்சதங்கை யசையத் தளர் நடைப்பருவமடைந் தருளினார்.—எ-று. (உ0)

சுருளுமயிர் நுதற்சுட்டி துணைக்காதின் மணிக்குதம்பை
மருவுதிருக் கண்டநாண் மார்பினிலைம் படை,கையிற்
பொருவில்வயி ரச்சரிகள், பொன்னரைஞாண். புனைசதங்கை,
தெருவிலொளி விளங்கவளர் திருவிளையாட் டினிலமர்ந்தார்.

(இ-ள்.) சுருண்ட முன்மயிரில் கோக்கப்பட்ட நெற்றிச்சுட்டியும், இரண்டு திருக்காதுகளில் மணிக்குதம்பைகளும், பொருந்திய திருக்கழுத்தில் கண்டசரமும், திருமார்பில் ஐம்படையும், கைகளில் ஒப்பற்ற வயிரக்கடகமும், (இடையில்) பொன்னலாகிய அரைஞாணும் (கால்களில்) அழகிய சிறுசதங்கையும் வீதியில் ஒளிவிளங்கும்படி திருவிளையாடல் செய்தருளினார்.—எ-று.

குதம்பை யென்பது, காதில் தொங்கும்படி யணியு மொருவகையாபரணம்; அது, முருகுபோல்வது. ஐம்படையாவது.—குழந்தைகளைத் துர்த்தேவதையினா லுண்டாகுந் தீங்கினின்றுங் காத்தற்பொருட்டுக் காவற்கடவுளாகிய விஷ்ணுமூர்த்தியின் சங்குசக்கர கதாகட்க கோதண்டமென்னும் பஞ்சாயுதங்களின் வடிவாகச் செய்து குழந்தைகளின் மார்பிற் கோத்தணியும் ஒருவகையாபரணம். சரி=கைவளை. (உக)

வந்துவளர் மூவாண்டின், மயிர்வினைமங் கலஞ்செய்து,
தந்தையா ரும்பயந்த தாயாருந் தனிச்சிறுவர்
சிந்தைமலர் சொற்றெளிவிற் செழுங்கலைகள் பயிலத்தம்
பந்தமற வந்தவரைப் பள்ளியினி லிருத்தினார்.

(இ-ள்.) இவ்வாறு விளையாடி வளர்ந்து வருகின்ற மூன்றாம்பருவத்தில் சவுளகன்மஞ் செய்வித்து, சிறுத்தொண்டநாயனாரும் பெற்றதாயாகிய திருவெண்காட்டு நங்கையாரும் ஒப்பற்ற தமது புத்திரர் சிந்தைமலரத்தக்க சொற்க

ளின் தெளிவினல் செழிய வேதமுதலிய கலைகளைக் கற்கும்படி, தமது பாசபந் தங்க ளொழியும்பொருட்டு அவதரித்தருளிய சீராளதேவனைப் பள்ளியில்விட்டு வித்தியாரம்பஞ் செய்வித்தார்கள்.—எ-று.

குடுமிவைத்து மயிர் வாங்குதலாகிய சவுளமும், வித்தியாரம்பஞ் செய்தலாகிய காண்டோபக் கிரமணமுஞ் செய்தனரெனவே, அவையுட்பட்ட சோடசகருமங்களையும் அவ்வம்முறையே செய்துவந்தனரென்பது சொல்லாமே யமைந்தது ; அவற்றை :—

" பூணிருதுசங்கமநங்கருப்பாதாநம்புஞ்சுவனஞ்சீமந்தஞ்சாதகன்மம்
பேணுமுத்தாபனநாமகரணமன்னப்பிராசனமேபிரவாசம்பிண்டவிர்த்தி
காணலுறுஞ்சவுளமுபநயநங்காண்டோபக்கிரகமணங்காண்டமோசனஞ்சீர்
மாணுசமாவர்த்தனமேவிவாகமின்னவகுத்தபதினறுமெனமதிக்கமன்றே "
—எனவருந் திருவானைக்காப் புராணத்தானுணர்க. (உஉ)

அந்நாளிற், சண்பைநக ராண்டகையா ரெழுந்தருள,
முன்னாக வெதிர்கொண்டு கொடுபுகுந்து முந்நூல்சேர்
பொன்மார்பிற் சிறுத்தொண்டர், புகலிகா வலனார்த
நன்னாமச் சேவடிகள் போற்றிசைத்து, நலஞ்சிறந்தார்.

(இ-ள்.) அந்நாளிலே சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் (அத்திருச் செங்காட்டங்குடிக்கு) எழுந்தருள, பூணூலையணிந்த அழகிய திருமார்பினையுடைய சிறுத்தொண்டநாயனார் முன்னே எதிர்சென்று அவரை யழைத்துக்கொண்டுவந்து, அத்திருஞானசம்பந்தப்பிள்ளையாரது நல்ல புகழமைந்த திருவடிகளைத் துதித்து நன்மை சிறந்திருந்தனர்.—எ-று.

நலஞ்சிறத்தலாவது—சிவகுமாரராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் நமது கிருகத்திற்கு வந்தருளத்தக்க பெரும்பாக்கியத்தைப் பெற்றோமே யென்னும் பேராநந்தமடைந்து அவருக்கு வேண்டிய உபகரணங்களை உபசரித்துதவுதல். (உங)

சண்பையர்தம் பெருமானுந், தாங்கரிய பெருங்காதற்
பண்புடைய சிறுத்தொண்ட ருடன்பயின்று, மற்றவரை
மண்பரவுந் திருப்பதிகத் தினில்வைத்துச் சிறப்பித்து,
நண்பருளி, யெழுந்தருளத் தாமினிது நயப்புற்றார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளும் தாங்குதற்கரிய பேரன்பினையுடைய சிறுத்தொண்டநாயனாருடன் சிலநாள் பழகி, அந்நாயனாரை உலகத்தார் துதிக்கின்ற தமது திருப்பதிகத்தில் சிறப்பித்துப் பாடியருளி நட்புக்கூறி யெழுந்தருள, தாமும் இனிமையாக விருப்பமுற்றருளினர்.—எ-று.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தமது திருப்பதிகத்தில் சிறுத்தொண்டநாயனாரைச் சிறப்பித்துப் பாடி யருளினமையை:—

" பைங்கோட்டு மலர்ப்புன்னைப் பறவைகாள் பயப்பூரச்
சங்காட்டந் தவிர்த்தென்னைத் தவிராநோய் தந்தானே
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டன் பணிசெய்ய
வெண்காட்டு ளனலேந்தி விளையாடும் பெருமானே." — என்றித்

தொடக்கத்தனவாகிய திருப்பதிகமுழுவதினுஞ் சிறுத்தொண்ட நாயனாரைச் சிறப்பித்தருளினமை காண்க. (௨௪)

இத்தன்மை நிகழுநா ளிவர்திருத்தொண் டிருங்கயிலை
யத்தர்திரு வடியிணைக்கீழ்ச் சென்றணைய வவருடைய
மெய்த்தன்மை யன்புநுகர்ந் தருளுதற்கு விடையவர்தாஞ்
சித்தமகிழ் வயிரவராய்த் திருமலைநின் றணைகின்றார்.

(இ-ள்.) இவ்வாறு நிகழும் நாள்களில் இச்சிறுத்தொண்ட நாயனாரது திருத்தொண்டானது ஸ்ரீ மகாகயிலாசத்தில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானது திருவடிகளில் சென்றடைய, அந்நாயனாரது மெய்யன்பாகிய அமுதத்தையுண்டருளும் பொருட்டுச் சிவபெருமான் திருவுள்ளமகிழ்ந்த வைரவத்துக்குரிய திருவேடங்கொண்டு திருக்கயிலாசத்தினின்று நீங்கித் திருச்செங்காட்டங்குடியை யடைவாராயினார்.—எ-று.

வைரவமாவது-உட்சமயங்களாறினு ளொன்று ; அவை, சைவம், பாசுபதம், மகாவிரதம், காளாமுகம், வாமம், வைரவம் என்பன. (௨௫)

மடல்கொண்ட மலரிதழி நெடுஞ்சடையை வனப்பெய்தக்
கடன்மண்டி முகந்தெழுந்த காளமே கச்சுருள்போற்
றொடர்பங்கி சுருண்டிருண்டு தூறிநெறித் தசைந்துசெறி
படர்துஞ்சின் கருங்குஞ்சி கொந்தளமா கப்பரப்பி.

(இ-ள்.) இதழமைந்த கொன்றைமலரையணிந்த நீண்ட சடையை அழகுபொருந்தும்படி கடலையடைந்து நீரைப் பருகி யெழுந்த கரியமேகச் சுருள்போலத்தொடர்ந்த புறமயிரானது சுருண்டு இருண்டு சிலிர்த்துநெறித்து அசைவுற்று நெருங்கிய கெடாத கருமயிரைக் குழற்சியாகப் பரப்பி.—எ-று.

இதுமுதல் பத்துப்பாடலுங் குளகம். (௨௬)

அஞ்சனமஞ் சனஞ்செய்த தனையவணி கிளர்பம்மைப்
மஞ்சினிடை யிடையெழுந்த வானமீன் பரப்பென்னப்
புஞ்சநிரை வண்டுதேன் சுரும்புபுடை படர்ந்தார்ப்பத்
துஞ்சினுனித் தனிப்பரப்புந் தும்பைநறு மலர்தோன்ற.

(இ-ள்.) மேகத்தின் இடையிடையே தோன்றிய நக்ஷத்திரக் கூட்டங்களைப்போல, இருளுக்கிருளூட்டிய தொத்த அழகிய மயிர்க்குழற்சியில் கூட்டமாகவும் வரிசையாகவும் வருகின்ற கருவண்டுகளுந் தேன்வண்டுகளும் பொறிவண்டுகளும் அருகில்படர்ந் தொலிக்கும்படி, கெடாத நுனியில் தனிமையாக ஒளிபரப்புகின்ற நறுமணங்கமழுந் தும்பைமலர்விளங்கவும்.—எ-று.

மேகத்திற்கிடையில் நக்ஷத்திரங்கள் தோன்றுவதுபோல், கரிய மயிர்க்குழற்சிக் கிடையில் தும்பைமலர் தோன்றவெனக்கூட்டுக. புஞ்சநிரைவண்டு தேன் சுரும்பு புடைபடர்ந்தார்ப்ப என்பது, தும்பைமலருக்கு அடை ; வண்டுகள் கூட்டமாகவும் வரிசையாகவும் வருதல்பற்றி, புஞ்சநிரைவண்டு' என்று கூறினார். வண்டு தேன் சுரும்பு என்பன வண்டின்சாதிபேதங்கள். 'துஞ்சினுனி' என்பதற்கு, பஞ்சின் நுனிபோன்ற மயிரின் நுனி, எனப் பொருள் கூறினும் பொருந்தும் ; அது மென்மையுங் கூர்மையு நோக்கி யென்க. (௨௭)

அருகுதிரு முடிச்செருகு மந்தியிளம் பிறைதன்னைப்,
பெருகுசிறு மதியாக்கிப் பெயர்த்துச்சாத் தியதென்ன,
விரிசுடர்ச்செம் பவளவொளி வெயில்விரிக்கும் விளங்குசுடர்த்
திருநுதன்மேற் றிருநீற்றுத் தனிப்பொட்டுத் திகழ்ந்திலங்க.

(இ-ள்.) திருமுடியினருகில் தரித்த மாலைக்காலத்திற் றோன்றும் இளம் பிறையை ஒளிபெருகுகின்ற சிறிய பூரணசந்திரனாகச்சமைத்துப் பெயர்த்துத் தரித்ததுபோல, விரிந்த சுடரையுடைய செம்பவளத்தி னொளிபோலும் பிரகாசத்தை வீசுகின்ற ஒளிவிளங்குந் திருநெற்றியில் ஒப்பற்ற திருவெண்ணீற்றுத் திலதம் விளங்கவும்.—எ-று.

'விளங்கு சுடர்த்திருநுதல்' என்பதற்கு, விளங்குகின்ற அக்கினிக் (கண்) பொருந்திய அழகிய நெற்றி, எனினுமாம். (உஅ)

வெவ்வருக்கன் மண்டலமும், விளங்குமதி மண்டலமு,
மவ்வனற்செய் மண்டலமு, முடனணைந்த தெனவழகை
வவ்வுதிருக் காதின்மணிக் குழைச்சங்கு வளைத்ததனுட்
செவ்வரத்த மலர்செறித்த திருத்தோடு புடைசிறக்க.

(இ-ள்.) வெவ்விய கிரணங்களையுடைய சூரிய மண்டலமும், விளங்குகின்ற (குளிர்ந்த) சந்திர மண்டலமும், உஷ்ணத்தைச்செய்கின்ற அக்கினி மண்டலமும் ஒருங்கு சேர்ந்துவந்தாற்போல, அழகைக் கிரகிக்கின்ற திருக்காதின்கண் இரத்தினக்குழையில் சங்கைவளைத்து, அதனுள்ளே செங்கழுநீர் மலரைச் செருகப்பெற்றுள்ள அழகிய காதணிகள் பக்கங்களில் விளங்கவும்.—எ-று.

மணிக்குழை அருக்கன் மண்டலம் போன்றும், சங்கு மதிமண்டலம் போன்றும், செவ்வரத்தமலர் அனற்செய் மண்டலம்போன்று மமையப்பெற்ற திருத்தோடு சிறக்கவென்க. செவ்வரத்தமலர்- செங்குவளை மலருமாம். (உகூ)

களங்கொள்விட மறைத்தருளக், கடலமுதக் குமிழிநிரைத்
துளங்கொளிவெண் டிரட்கோவைத் தூயவட மணிந்ததென,
வுளங்கொள்பவர் கரைந்துடலு முயிருமுரு கப்பெருக
விளங்குதிருக் கழுத்தினிடை வெண்பளிங்கின் வடந்திகழ.

(இ-ள்.) கண்டத்திலணிந்த விடத்தை மறைந்தருளும்பொருட்டுக் கடலிற்றோன்றிய அமுதமாகிய குமிழிகளின் வரிசையையுடைய ஒளிவிளங்குகின்ற வெள்ளிய திரட்சியாகிய சிறந்த கோவைவடத்தை யணிந்தாற்போல, தம்மைச் சிந்திக்கின்ற மெய்யடியார்களது உடலுமுயிருங் கரைந்துருகும்படி, சிறந்து விளங்குகின்ற அழகிய கழுத்தில் வெள்ளிய பளிங்குக்கற்களாலாகிய மாலை விளங்கவும்.—எ-று. (௩0)

செம்பரிதி கடற்குளித்த செக்கரொளி யினையந்தி
பம்புமிருள் செறிபொழுது படர்ந்தணைந்து சூழ்வதெனத்,
தம்பழைய கரியுரிவை கொண்டுசமைத், ததுசாத்து
மம்பவளத் திருமேனிக் கஞ்சுகத்தி னணிவிளங்க.

(இ-ள்.) சிவந்த கிரணங்களையுடைய சூரியன் மேற்றிசைக்கடலில் அஸ்தமித்தபோதுண்டாகிய செவ்வானத்தினொளியை மிக்க இருள்நிறைந்த மாலைப்பொழுதானது பரவிச் சூழ்வதுபோல, அழகிய பவளம்போலுந் திருமே

ணியில் தமது பழைமையாகிய யானைத்தோலைக்கொண்டு வேறாகச்சமைத்து அத்தனைச் சாத்திய மேற்போர்வையின் அழகு விளங்கவும்.—எ-று.

செவ்வானத்தொளியை இருள்நிறைந்த மாலைப்பொழுது சூழ்வதுபோல பவளத்திருமேனியில் கஞ்சுகத்தின் அணிவிளங்க என்க. கஞ்சுகம்=சட்டை. 'செம்பரிதிகடலளித்த' என்றும் பாடம். (௬௧)

மிக்கெழுமன் பர்களன்பு திருமேனி விளைந்ததென
வக்குமணி யாற்சன்ன வீரமுமா ரமும்வடமுங்.
கைக்கணிகொள் வளைச்சரியு,மரைக்கடிசூத் திரச்சரியுங்,
தக்கதிருக் காற்சரியுஞ் சாத்தியவொண் சுடர்திளைங்க.

(இ-ள்.) சிறந்தெழுகின்ற மெய்யடியார்களது பேரன்பானது தமது திருமேனியிற் றோன்றியதுபோல, சங்குமணிகளாற் கோக்கப்பட்ட சன்னவீரமும், முத்துமாலையும், தாவடமும், திருக்கரங்களில் அழகிய கடகமும், இடையில் அரைஞாணும், சிறந்த திருவடிச்சரியுந் தரித்த ஒள்ளிய சுடரானது விளங்கவும்.—எ-று.

அன்பர்களன்பு திருமேனி விளைந்ததென ஒண்சுடர்தயங்க வெனக்கூட்டுக. சன்னவீரம்-வெற்றிமாலை: தாவடம்=உருத்திரமணிமாலை. தாவடம் என்பாலது வடம் என முதற்குறையாயிற்று. (௬௨)

பொருவிறிருத் தொண்டர்க்குப் புவிமேல்வந் தருள்புரியும்,
பெருகருளின் றிறங்கண்டு பிரானருளே பேணுவீர்
வருமன்பின் வழிநிற்பீ ரெனமறைபூண் டறைவனபோற்
றிருவடிமேற் றிருச்சிலம்பு திசைமுழுதுஞ் செலவொலிப்ப.

(இ-ள்.) மிகுதியாக வருகின்ற அன்பின்வழியே யொழுகுகின்றவர்களே! ஒப்பற்ற சிறுத்தொண்டநாயனாருக்கு நிலவுலகத்திலெழுந்தருளித் திருவருள் புரிகின்ற திருவருட்டிறத்தை யுணர்ந்து, அவ்வெம்பெருமானது திருவருளையே விரும்பக்கடவீர்களென்று வேதங்கள்பொருந்தி யுரைப்பனபோல, திருவடிகளிலணிந்த திருச்சிலம்புகள் (எட்டுத்) திக்குகளிலுஞ்செல்லும்படி யொலிக்கவும்.

அயன்கபா லந்தரித்த விடத்திருக்கை யாலணைத்த
வியங்கொளிமூ விலைச்சூல,மணித்திருத்தோண் மிசைப்பொலியத்,
தயங்குசுடர் வலத்திருக்கைத்,தமருகத்தி னொலிதழைப்பப்,
பயன்றவத்தாற் பெறும்புவியும் பாததா மரைசூட.

(இ-ள்.) பிரமகபாலத்தை யேந்திய இடத் திருக்கரத்தினால் அணைத்த ஒளி விளங்குகின்ற மூவிலைச் சூலமானது அழகிய திருத்தோளில் விளங்கவும், மழுவானது விளங்குகின்ற வலத்திருக்கரத்தில் தமருகத்தின் ஒலி தழைக்கவும், நற்பயனைத் தவத்தினாற் பெற்ற பூமியும் திருவடித்தாமரைகளைத் தன்மேல் தரித்துக்கொள்ளவும்.—எ-று.

மூவிலைச்சூலம்=அச்சவடிவாகிய முத்தலைச்சூலம். தமருகம்=உடுக்கை.

அருள்பொழியுந் திருமுகத்தி னணிமுறுவ,னிலவெறிப்ப,
மருள்பொழிமும் மலஞ்சிதைக்கும்,வடிச்சூலம் வெயிலெறிப்பப்,
பொருள்பொழியும் பெருகன்பு தழைத்தோங்கிப்,புவியேத்தத்.
தெருள்பொழிவண் டமிழ்நாட்டுச் செங்காட்டங் குடிசேர்ந்தார்.

(இ-ள்.) திருவருள் பொழிகின்ற திருமுகத்தி னின்றுந் தோன்றிய அழகிய புன்சிரிப்பான து நிலவொளியை வீசவும், மயக்கத்தைத் தரும் மும்மலங்களைக் கெடுக்கின்ற வடித்த முத்தலைச் சூலமானது ஒளி வீசவும், மெய்ஞ்ஞானத்தைத் தருகின்ற பேரன்பு மிகுத்தோங்கி நிலவுலகத்தார் துதிக்கவும், நல்லுணர்வைத் தருகின்ற வளவிய தமிழ்வளம் பொருந்திய சோழநாட்டிலுள்ள திருச்செங்காட்டங்குடி யென்னுந் திருப்பதியை யடைந்தருளினர்.

மும்மலமாவன - ஆணவம், கன்மம், மாயை என்பன. (௰௫)

தண்டாத தொருவேட்கைப் பசியுடையார் தமைப்போலக்
கண்டாரைச், சிறுத்தொண்டர் மனைவினவிக் கடிதணைந்து,
தொண்டானூர்க் கெந்நாளுஞ் சோறளிக்குந் திருத்தொண்டர்,
வண்டார்பூந் தாராரிம் மனைக்குள்ளா ரோவென்ன.

(இ-ள்.) நீங்காத பசிவிருப்ப முடையவரைப்போல, தா மெதிரில்கண்டவர்களைச் சிறுத்தொண்டநாயனாரது திருமாளிகையை வினவி விரைந்துவந்தருளி, எப்பொழுதும் அடியார்களுக்குத் திருவமுதுபடைக்குந் திருத்தொண்டராகிய வண்டுகள் மொய்க்கின்ற பூமாலையையணிந்த சிறுத்தொண்டநாயனார் இவ் வீட்டி லிருக்கின்றனரோ வென்று வினவ.—எ-று.

'வண்டாருந் தாரினர்' எனவும் பாடபேதம்.

இதுமுதல் நான்கு பாடலுங் குளகம். (௰௬)

வந்தணைந்து வினவுவார், மாதவரோ யாமென்று,
சந்தனமாந் தையலார் முன்வந்து, தாள்வணங்கி.
யந்தமில்சீ ரடியாரைத் தேடியவர் புறத்தணைந்தா
ரெந்தமையா ளுடையவரோ, யகத்துளெழுந் தருளுமென.

(இ-ள்.) இங்கு வந்து கேட்கின்றவர் மகத்தாகிய தவமுனிவரோ யாகுமென்று சிந்தித்துச் சந்தனநங்கை யென்னுந் தாதியார் முன்னேவந்து திருவடிகளை வணங்கி, சுவாமீ! அவர் முடிவற்ற சிறப்பினையுடைய சிவனடியார்களைத் தேடிக்கொண்டு புறத்திற் சென்றனர்; எம்மை யடிமையாகவுடைய தவமுனிவரோ! தேவரீர் இவ்வீட்டினுள்ளே யெழுந்தருளி யிருப்பீராக வென்று வேண்ட.—எ-று. (௰௭)

மடவரலை முகநோக்கி, மாதரார் தாமிருந்த
விடவகையிற் றனிபுகுதோ மென்றருள வதுகேட்டு.
விடவகல்வார் போலிருந்தா ரெனவெருவி விரைந்துமனைக்
கடனுடைய திருவெண்காட் டம்மைதடைத் தலையெய்தி.

(இ-ள்.) (அதற்கு வைரவர்) சந்தனநங்கையாரது முகத்தைப் பார்த்து, பெண்கள் இருக்குமிடத்தில் நாம் தனியே வரோம் என்று கூறியருள, அதனைக் கேட்டு, இவர் போய்விடுவார்போ லிருக்கின்ருரென்று பயந்து, இல்லறமுறைமைக்குரிய (நாயனார்மனைவியாராகிய) திருவெண்காட்டுநங்கையார் விரைந்து தலைக்கடையில்வந்து.—எ-று. (௰௮)

அம்பலவ ரடியாரை யமுதுசெய்விப் பாரிற்றைக்
கெம்பெருமான் யாவரையுங் கண்டிலர்தே டிப்போனார்

புதிதாக
வெம்பெருமா னெழுந்தருளி வருந்திருவே டங்கண்டாற்,
றம்பெரிய பேறென்றே மிகமகிழ்வ,ரினித்தாழார்.

(இ-ள்.) சுவாமீ! எனது நாயகர் எப்பொழுதும் சிவனடியார்களைத் திருவமுது செய்விப்பவர்; இன்றைக்கு ஒருவரையுங் காணாமல் தேடிச்சென்றார்; புதிதாகத் தேவரீர் எழுந்தருளிய திருவேடத்தைக் கண்டால், தமது பெரும்பேறென்று கருதி மிகவும் மகிழ்ச்சியடைவார்; இனிக் காலதாமசஞ் செய்யார்.—எ-று. (௨௯)

இப்பொழுதே வந்தணைவ)ரெழுந்தருளி யிருமென்ன,
வொப்பின்மனை யறம்புரப்பீ!ருத்தரா பதியுள்ளோஞ்,
செப்பருஞ்சீர்ச் சிறுத்தொண்டர் தமைக்காணச் சேர்ந்தனம்யா,
மெம்பரிசு மவரொழிய விங்கிரோ,மென்றருளி.

(இ-ள்.) இப்பொழுதே வந்துவிடுவார்; தேவரீர் இவ்விடத்திலேயே எழுந்தருளியிருமென்று கூற, (அதற்கு வைரவர்) ஒப்பற்ற இல்லறத்தைக் குறைவற நடத்துகின்ற அம்மையாரே! நாம் வடதேசத்தி லுள்ளோம், சொல்லுதற்கரிய சிறப்பினையுடைய சிறுத்தொண்டநாயனாரைக் காணும்படி இங்கு வந்தோம்; எவ்வாறாயினும் அவர் இல்லாதபோது நாம் இங்குஇரோம் என்று கூறியருளி.—எ-று.

இதுமுத லிரண்டுபாட்டுங் குளகம். (௩0)

கண்ணுதலிற் காட்டாதார் கணபதீச் சரத்தின்கண்.
வண்ணமல ராத்தியின்கீ ழிருக்கின்றோ,மற்றவர்தா
நண்ணினா,லுமிருந்த பரிசுரைப்பீ,ரொன்றருளி
யண்ணலார் திருவாத்தி யணைந்தருளி,யமர்ந்திருந்தார்.

(இ-ள்.) நெற்றிக்கண்ணை மறைத்துவந்த சிவபெருமானாகிய வைரவர், நாம் கணபதீச்சரத்திலுள்ள அழகிய மலர்கள் நிறைந்த திருவாத்திவிருக்ஷத்தின்கீழிருக்கின்றோம்; அவர் இங்குவந்தால் நாம் இருக்குந் தன்மையை அவருக்குத் தெரிவியுங்களென்று கூறியருளிச் சிவபெருமான் திருவாத்திமரத்தை யடைந்து அதன்கீ ழெழுந்தருளியிருந்தார்.—எ-று. (௩௧)

வேறு.

நீரார் சடையா னடியாரை நேடி,யெங்குங் காணாது.
சீரார் தவத்துச் சிறுத்தொண்டர் மீண்டுஞ் செல்வ மனையெய்தி.
யாரா வின்ப மனைவியார்க் கியம்பி,யழிவெய் திட,வவரும்
பாரா தரிக்குந் திருவேடத் தொருவர் வந்த படிபகர்ந்தார்.

(இ-ள்.) சிறப்புமிக்க தவத்தினையுடைய சிறுத்தொண்டநாயனார், கங்கைநதி தங்கிய சடைமுடியை யுடைய சிவபெருமானது அடியார்களைத் தேடி எங்குங் காணாமல், திரும்பவுஞ் செல்வமிக்க தமது திருமாளிகைக்கு வந்து நீங்காத இன்பம் பொருந்திய மனைவியாருக்குச் சொல்லி மனம் வருந்த, அவ்வம்மையாரும், உலகத்தாரால் விரும்பத்தக்க (வைரவத்) திருவேடத்தையுடைய ஒரு தவமுனிவர் வந்தருளிய தன்மையைக் கூறினார்.—எ-று. (௩௨)

அடியே னுய்ந்தே,னெங்குற்றா,ருரையா யென்ன.வவர்மொழிவார்
வடிசேர் சூல கபாலத்தர்,வடதே சத்தோ,மென்றார்,வண்

முடிசேர் கரத்துப் பயிரவர்,யாஞ சொல்ல,விங்கு மிராதேபோய்க்
கடிசேர் திருவாத் தியின்னிழற்கீ,ழிருந்தார் கணப தீச்சரத்து.

(இ-ள்.) (அதைக்கேட்ட நாயனார்) அடியேன் கடைத்தேறினேன்; அவர் எங்குச் சென்றனர் சொல்லென்று கேட்க, அவ்வம்மையார் கூறுவார்; அவர் வடித்த சூலத்தையுங் கபாலத்தையு முடையவர்; உடுக்கை பொருந்திய திருக்கரத்தினை யுடைய வைரவ வேடங் கொண்டவர். யாம் வடதேசத்தோமென்று கூறினார்; நாங்கள் இங்கு இருக்கும்படி சொல்ல, இராமல்சென்று, கணபதீச்சரத்தில் மணம்பொருந்திய திருவாத்தி விருக்ஷத்தின்கீ ழிருக்கின்றார்.—எ-று.

இது முதல் மூன்றுபாடலுங் குளகம். (௬௩)

என்று மனைவி யாரியம்ப,வெழுந்த விருப்பால் விரைந்தெய்திச்,
சென்று கண்டு,திருப்பாதம் பணிந்து நின்றார் சிறுத்தொண்டர்,
நின்ற தொண்டர் தமைநோக்கி,நீரோ பெரிய சிறுத்தொண்ட
ரென்ன,திருவாயமலர்ந்தருள,விறைவர் தம்மைத்தொழுதுரைப்பார்.

(இ-ள்.) என்று மனைவியார் கூற, அதுகேட்ட சிறுத்தொண்டநாயனார் தம துள்ளத்தெழுந்த பெருவிருப்பினால் விரைந்து சென்று (வைரவரைத்) தரிசித்துத்திருவடிகளை வணங்கிநின்றனர்; அவ்வாறு நின்ற நாயனாரைப் பார்த்தருளி, பெரிய சிறுத்தொண்டர் நீரோ? என்று வினவியருள, (நாயனார்) சிவபெருமானாகிய வைரவரை வணங்கிக் கூறுகின்றார்.—எ-று. (௬௪)

பூதி யணிசா தனத்தவர்முன் போற்றப் போதே னாயிடினு
நாத னடியார் கருணையினா,லருளிச் செய்வா ரொன்று
கோதி லன்பர் தமையமுது செய்விப் பதற்குக், குலப்பதியிற்
காத லாலே தேடியுமுன் காணேன்,றவத்தா லுமைக்கண்டேன்.

(இ-ள்.) விபூதி முதலிய சிவசாதனத்தை யணிந்த மெய்யடியார்களுக்கு முன்னே துதிக்கத்தக்க யோக்கியதை யில்லேன், ஆயினும், சிவபெருமானது அடியார்கள் தங்கள் கருணைமே லீட்டினால் அடியேன் சிறுத்தொண்டனென்று அருளிச்செய்வார்கள்; (அது நிற்க,) குற்றமற்ற சிவனடியார்களைத் திருவமுது செய்விப்பதற்கு, சிறந்த இத்திருப்பதியில் விருப்பத்தோடு தேடியும் எதிரில் ஒருவரையுங் கண்டிலேன்; முன்செய்த தவத்தின்பலத்தினால் இங்குத் தேவரீரைத் தரிசித்தேன்.—எ-று. (௬௫)

அடியேன் மனையி லெழுந்தருளி யமுது செய்ய வேண்டுமென,
நெடியோ னறியா வடியார்தா,மிகழுந் தவத்தீ,ருமைக்காணும்
படியால் வந்தோ,முத்தரா பதியோ,மெம்மைப் பரிந்தூட்ட
முடியா துமக்குச்,செய்கையரி,தொண்ணா,தென்று மொழிந்தருள.

(இ-ள்.) தேவரீர் அடியேன் வீட்டிற்கு எழுந்தருளித் திருவமுதுசெய்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, விஷ்ணுவினாலறியப்படாத திருவடியையுடைய சிவபெருமானாகிய வைரவர் விளங்குகின்ற தவத்தினையுடைய சிறுத்தொண்டரே? நாம் வடதேசத்திலுள்ளோம், இங்கு உம்மைக்காணும்படி வந்தோம்; எமக்கு விரும்பி அமுதுசெய்விப்பதற்கு உம்மால் முடியாது; அவ்வாறுசெய்வித்தல் அரியது; மிகக்கஷ்டமென்று கூறியருள.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௬௬)

என்ணு தடியேன் மொழியேனி ரமுது செய்யு மியல்பதனைக்
கண்ணார் வேட நிறைதவத்தி ரருளிச் செய்யுங் கடிதமைக்கத்,
தண்ணு ரிதழி முடியார்த மடியார் தலைப்பட் டாற்றேட
வொண்ணு தனவு முளவாகு மருமை யில்லை,யெனவுரைத்தார்.

(இ-ள்.) அடியேன் எண்ணுமல் ஒன்றுங் கூறேன் ; கண்ணுக்கமைந்த வைரவ வேடநிறைந்த தவமுனிவரே! தேவரீர் திருவமுது செய்தருளுமியல்பைக் கூறியருளும், குளிர்ந்த கொன்றைமலர் மாலையையணிந்த சிவபெருமானது அடியார்கள்விளைந்து அமைப்பதற்குத் தொடங்கினுல் தேடுதற்கு அரியனவும் எளியனவாம் ; அருமையில்லையென்று கூறினர்.—எ-று. (சஎ)

அரிய தில்லை யெனக்கேட்ட பொழுதி,னழகு பொழிகின்ற
பெரிய பயிர வக்கோலப் பெருமா னருளிச் செய்வாரியாம்
பரியுந் தொண்டர்,மூவிருது கழித்தாற் பசுவீழ்த் திடவுண்ப,
துரிய நாளு மதற்கின்று,வூட்ட வரிதா முமக்கென்றார்.

(இ-ள்.) அரியதுஒன்றுமில்லையென்றுகூறக்கேட்டபொழுது, அழகைச் சொரிகின்ற பெரிய வைரவத் திருவுருவங் கொண்டெழுந்தருளிய சிவபெருமான் அருளிச்செய்வார் ; விரும்பி யுபசரிக்கின்ற சிறுத்தொண்டரே! யாம் ஆறு மாதங்கழித்தால் பசுவைக்கொன்று உண்பது; அதற்கு உரியநாளும் இந்நாளேயாம் ; அப்படி உண்பிக்க உமக்கு அரிதாகுமென்று கூறியருளினர்.—எ-று.

இருது - இரண்டுமாதங் கொண்டகாலம். 'பிரானு ரருளிச்செய்வார்' என்றும், 'முடியாதுமக்கென்றார்' என்றும் பாடபேதம். (சஅ)

சால நன்று,மும்நிரையு முடையேன்,றாழ்விங் கெனக்கில்லை,
யால முண்டா ரன்பருமக் கமுதாம் பசுத்தா னின்னதென
வேல வருளிச் செயப்பெற்றால்,யான்போ யமுது கடிதமைத்துக்
காலந் தப்பா மேவருவே னென்று மொழிந்து கைதொழுதார்.

(இ-ள்.) (அதற்குச் சிறுத்தொண்டநாயனார்) மிகநன்று; அடியேன் மூவகைப் பசுமந்தைகளையு முடையேன், எனக்குக்குறைவில்லை; விடத்தையுண்டருளிய சிவபெருமானுக்குரிய அன்பரே! உமக்குத் திருவமுதாகும் பசு இன்னது என்று அருளிச்செய்வீராயின், யான்போய்ச் சீக்கிரத்தில் பாகம் பண்ணுவித்துக் காலந்தப்பாமல் வருவேனென்றுகூறிக் கைகூப்பி வணங்கினர்.—எ-று.

மும்நிரையாவன, பசு - எருமை-ஆடு என்பன. இதனை—"ஆர்கலி முனைஇய கொடுங்கோற் கோவல - ரேறுடை யினநிரை வேறுபுலம் பரப்பி" என வரும் நெடுநல்வாடைக்கு நச்சினர்க்கினியர் கூறிய உரைவிசேடத்தா னுணர்க. (சகூ)

பண்பு மிக்க சிறுத்தொண்டர் பரிவு கண்டு,பயிரவரு
நண்பு மிக்கீர்,நாமுண்ணப் படுக்கும் பசுவு நரப்பசுவா,
முண்ப தஞ்சு பிராயத்தி லுறுப்பின் மறுவின் றேலின்னம்
புண்செய்நோவில்வேலெறிந்தாற்போலும்புகல்வதொன்றென்றார்.

(இ-ள்.) நற்குண மிக்க சிறுத்தொண்டநாயனரது அன்பை வைரவர் பார்த்து நண்பு மிக்க அன்பரே! நாம் உண்ணுதற்குக் கொல்லும் பசு நரப்பசுவாம்; அது ஐந்து பிராயத்ததாயும் அவயவப்பழு இல்லாததாயு மிருந்தால்

உண்பதாகும்; ரோயைச் செய்கின்ற புண்ணில் வேலெறிந்தாற்போலச் சொல்லவேண்டுவது இன்னம் ஒன்றுளதென்று கூறியருளினர்.—எ-று.

புண்செய் நோவில் என்பது, நோ செய்புண்ணில் என்று விகுதிபிரித்துக் கூட்டப்பட்டது. (௫0)

யாது மரிய தில்லையினி யீண்ட வருளிச் செய்யுமென,
நாதன் ருனு மொருகுடிக்கு நல்ல சிறுவ னொருமகனைத்,
தாதை யரியத், தாய்பிடிக்கும் பொழுதிற், றம்மின் மனமுவந்தே
யேத மின்றி யமைத்தகறி, யாமிட் டுண்ப தெனமொழிந்தார்.

(இ-ள்.) (அதற்குச் சிறுத்தொண்டநாயனர்) அரியது யாதுமில்லை; இனி இப்பொழுதே அருளிச்செய்யுமென்று கூற, சிவபெருமானும் ஒருகுடிக்கு நல்ல சிறுவனாகிய ஒரு மகனைத் தாய்பிடிக்கத் தந்தை யரியும்பொழுது தங்களுக்குள் மனமகிழ்ந்து சிறிதுங் குற்றமின்றிச் சமைக்கப்பட்ட கறியினையே யாம் வைத்துப் புசிப்பது என்று கூறியருளினர்.—எ-று.

தாதை யரியத் தாய் பிடிக்கும்பொழுது என்பது, தாய் பிடிக்கத் தாதை யறியும்பொழுது, என்று மாற்றி யுரைக்கப்பட்டது. (௫௧)

அதுவு முனிவர் மொழிந்தருளக் கேட்ட தொண்ட, ரடியேனுக்
கிதுவு மரிதன், றெம்பெருமா னமுதுசெய்யப் பெறிலென்று
கதுமென் விரைவி லவரிசையப் பெற்றுக், களிப்பாற் காதலொடு
மதுமென் கமல மலர்ப்பாதம் பணிந்து, மனையில் வந்தணைந்தார்.

(இ-ள்.) அதனையும் சிவபெருமானாகிய வைரவர் கூறியருளக்கேட்ட சிறுத்தொண்டநாயனர், எம்பெருமானே! தேவரீர் திருவமுது செய்யப்பெற்றால், அடியேனுக்கு இதுவும் அருமையல்லவென்று கூறி மிக்கவிரைவில் அவர் சம்மதம்பெற்று மனக்களிப்போடு தேன்பொருந்திய மெல்லிய தாமரைமலர் போன்ற திருவடிகளை அன்புடன் வணங்கி, தமது திருமாளிகைக்குவந்து சேர்ந்தார்.—எ-று. (௫௨)

அன்பின் மிக்க பெருங்கற்பி னணங்கு திருவெண் காட்டம்மை
முன்பு வந்து, சிறுத்தொண்டர் வரவு நோக்கி முன்னின்றே,
யின்பம் பெருக மலர்ந்தமுகங் கண்டு, பாத மிசையிறைஞ்சிப்.
பின்பு கணவர் முகநோக்கிப், பெருகுந் தவத்தோர் செயல்வினவ.

(இ-ள்.) அன்பிற்சிறந்த பெரிய கற்பினையுடைய தெய்வப்பெண்ணை யொத்த (மனைவியாகிய) திருவெண்காட்டம்மையார் முன்பு வந்து சிறுத்தொண்டநாயனரது வருகையை எதிர்நோக்கி முன்னே நின்று, இன்பமிகும்படி மலர்ந்த திருமுகத்தைப்பார்த்து, அவரது திருவடிகளில் வணங்கி, பின்பு தங் கணவனரது திருமுகத்தைப் பார்த்து மிக்க தவத்தினையுடைய வைரவரது செய்கையை வினவ.—எ-று. (௫௩)

வள்ள லாரு மனையாரை நோக்கி, வந்த மாதவர்தா
முள்ள மகிழ வமுதுசெய்ய விசைந்தார். குடிக்கோர் சிறுவனுமாய்க்
கொள்ளும் பிராய மைந்துளனா, யுறுப்பிற் குறைபா டின்றித்தாய்
பிள்ளை பிடிக்க, வுவந்துபிதா வரிந்து, சமைக்கப் பெறினென்றார்.

(இ-ள்.) சிறுத்தொண்டநாயனாரும் தமது மனைவியாரைப் பார்த்து, வந்த வைரவர் ஒரு குடிக்கு ஒரே சிறுவனாகி ஐந்து பிராயமுடையவனாய்ச் சிறிதும் அவயவப் பழுதில்லாமல், தாய் பிள்ளையைப் பிடிக்க, தந்தை மனமகிழ்ந்து அரிந்து சமைக்கப்பெற்றால், மனமகிழும்படி திருவமுது செய்ய உடன்பட்டனர் என்று கூறினார்.—எ-று.

சமைக்கப்பெறின் அமுதுசெய்ய விசைந்தார் என்றார், எனக்கூட்டுக.

அரிய கற்பின் மனைவியா ரவரை நோக்கி யுரைசெய்வார்,
பெரிய பயிர வத்தொண்ட ரமுது செய்யப் பெறுமதற்கிங்
குரிய வகையா லமுதமைப்போ, மொருவ னாகி, யொருகுடிக்கு
வருமச் சிறுவன் றனைப்பெறுமா றெங்ஙனென்று வணங்குதலும்.

(இ-ள்.) (அப்பொழுது) அருமையாகிய கற்பினையுடைய மனைவியார் அந்நாயனாரைப்பார்த்துக் கூறுவார்; சிறந்த வைரவவேடங்கொண்டுவந்த அடியவர் திருவமுது செய்யப் பெறுதற்கு உரிய முறைமைப்படி திருவமுது சமைப்போம்; ஆனால், ஒரு குடிக்கு ஒருவனாகப் பிறந்த சிறுவனைப் பெறுவது எவ்வாறு என்று கூறி வணங்கவும்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௫௫)

மனைவி யார்தம் முகநோக்கி, மற்றித் திறத்து மைந்தர்தமை
நினைவு நிரம்ப நிதிகொடுத்தாற் றருவா ருளரோ, நேர்நின்று
தனையன் றன்னைத் தந்தைதா யரிவா ரில்லைத், தாழாமே
யெனையிங் குய்ய நீபயந்தான் றன்னை யழைப்போ மியாமென்றார்.

(இ-ள்.) அவ்வாறு கூறிய மனைவியாரது முகத்தை நாயனார் பார்த்து; இத்தன்மையாகிய சிறுவர்களை ஆசைநிரம்பத் திரவியங்கொடுத்தால் தருபவருளரோ? (அப்படி தரினும்) எதிரில் நின்று அச்சிறுவனை அரியத்துணியுந்தந்தை தாயரோ இல்லை; ஆதலால் இனிக் காலந் தாழ்க்காமல், இங்கு யானுய்யும்படி நீ பெற்ற சீராளனை நாம் அழைப்போமென்று கூறினார்.—எ-று. (௫௬)

என்று கணவர் கூறுதலு, மதனுக் கிசைந்தெம் பிரான்றொண்ட
ரின்று தாழா தமுதுசெய்யப் பெற்றிங் கவர்த மலர்ந்தமுக
நன்று காண்ப தெனநயந்து, நம்மைக் காக்க வருமணியைச்
சென்று பள்ளி யினிற்கொண்டு வாரு மென்றார் திருவனையார்.

(இ-ள்.) இவ்வாறு நாயகராகிய திருத்தொண்டநாயனார் சொல்லவும், அதற்கு இலக்ஷ்மிபோலும் பேரழகினையுடைய திருவெண்காட்டுநங்கையார் உடன்பட்டு எமதுசிவபெருமான் திருத்தொண்டராகிய வைரவர் இன்று தாழ்க்காமல் திருவமுது செய்யப்பெற்று இங்கு அவரது சந்தோஷமுகத்தை இனிது காண்பதே தக்கதென்று விரும்பி நம்மைக் காக்கும்பொருட்டு அவதரித்தபுதல்வனைப் பள்ளிக்கூடத்துக்குச் சென்று அழைத்துக்கொண்டுவாருமென்று கூறினார்.—எ-று.

மணி யென்பது உவமையாகுபெயராய்ப் புதல்வனை யுணர்த்திற்று. ()

காதன் மனையார் தாங்கூறக், கணவ னாருங் காதலனை,
யேத மகலப் பெற்றபே றெல்லா மெய்தி னார்போல

நாதர் தமக்கங் கமுதாக்க நறுமென் குதலை மொழிப்புதல்வ
னோத வணைந்த பள்ளியினி லுடன்கொண் டெய்தக் கடிதகன்றார்.

(இ-ள்.) இவ்வாறு விருப்பமிக்க மனைவியார் கூற, நாயகராகிய சிறுத்தொண்டநாயனாரும், பிறவித்துன்ப நீங்கப் புத்திரனைப் பெற்ற பேறனைத்தும் அடைந்தவர்போல, சிவபெருமானுக்கு அமுது சமைக்கும்படி நல்லமிருதுவாகிய மழலைச்சொல்லையுடைய புத்திரராகிய சீராளதேவர் வாசிக்கச் சென்ற பள்ளிக்கூடத்தினின்றும் உடனே அழைத்துக்கொண்டுவர, விரைந்து சென்றார்.—எ-று.

ஏதமகல என்பதற்கு, குற்றநீங்க எனினுமாம். (௫௮)

பள்ளி யினிற்சென் றெய்துதலும், பாத சதங்கை மணியொலிப்பப்
பிள்ளை யோடி வந்தெதிரே தழுவ வெடுத்துப், பியலின்மேற்
கொள்ள வணைத்துக் கொண்டுமீண் டில்லம் புகுதக், குலமாதர்
வள்ள லார்த முன்சென்று, மைந்தன் றன்னை யெதிர்வாங்கி.

(இ-ள்.) (நாயனார்) பள்ளிக்கூடத்திற் சென்றடையவும், பாதசதங்கையிலுள்ள மணிகள் சப்திக்கும்படி புத்திரராகிய சீராளதேவர் எதிரே யோடி வந்து தழுவிக்கொள்ள, அவரை யெடுத்துத் தோள்மேல் வைத்தணைத்துக்கொண்டு திரும்பித் தமது திருமாளிகைக்கு வர, திருவெண்காட்டுநங்கையார் சிறுத்தொண்டநாயனாருக்கு முன்சென்று தம்புதல்வரை எதிரில்வாங்கி.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௫௯)

குஞ்சி திருத்தி, முகந்துடைத்துக், கொட்டை யரைநாண் டுகணீக்கி
மஞ்ச ளழிந்த வதற்கிரங்கி மையுங் கண்ணின் மருங்கொதுக்கிப்
பஞ்சி யஞ்சு மெல்லடியார் பரிந்து திருமஞ் சனமாட்டி
யெஞ்சலில்லாக்கோலஞ்செய்தெடுத்துக்கணவர்கைக்கொடுத்தார்.

(இ-ள்.) பஞ்சும் அஞ்சத்தக்க மிருதுவாகிய பாதங்களையுடைய திருவெண்காட்டுநங்கையார், (அப் புதல்வரது) தலைமயிரைத் திருத்தி, முகத்தைத் துடைத்து, அரைச்சலங்கை கோத்த அரைஞாணிற் படிந்த துகளை நீக்கி, கலவைச்சேறு கரைந்தழிந்ததற்கு இரக்கமுற்று, மையையுங் கண்ணினோரத்தில் ஒதுக்கித் திருத்தி, விரும்பித் திருமஞ்சனமாட்டி, குறைவில்லாத கோலஞ்செய்து எடுத்துத் தமது கணவனார் கையில் கொடுத்தார்.—எ-று.

குஞ்சி=தலைமயிர். மென்மைத்தன்மையையுடைய பஞ்சைப் பார்க்கினும் அதிக மென்மையாகிய பாதமுடையவரென்பார், 'பஞ்சி யஞ்சு மெல்லடியார்' என்று கூறினார். பஞ்சியஞ்சுதல்-நமக்கு இத்தகைய மென்மைத்தன்மையில்லையென்று வருந்துதல்; அன்றி, பஞ்சியஞ்சு மெல்லடியார் என்பதற்கு, பஞ்சு தன்மேற் படினும் பொறாமல் வருந்தத்தக்க பாதமுடையவர் எனினுமாம். (௬0)

அச்ச மெய்திக் கறியமுதா மென்னு மதனா, லரும்புதல்வ
னுச்சி மோவார், மார்பின்க ணணைத்தே முத்தந் தாமுண்ணார்.
பொச்ச மில்லாத் திருத்தொண்டர் புனிதர் தமக்குக் கறியமைக்க
மெச்சு மனத்தா லடிக்களையின் மேவார் வேறு கொண்டணைவார்.

(இ-ள்.) மெய்யன்புடைய சிறுத்தொண்டநாயனார் அச்சங்கொண்டு, இது கறியமுதா மென்னுங் கருத்தினால் அருமையாகிய புதல்வரது உச்சியை மோவார்; மார்பில் அணைத்து முத்தமுண்ணார்; சிவபெருமானாகிய வைரவருக்குக் கறியமைப்பதற்கு விரும்பிய மனதோடும் சமையல் வீட்டில் செல்லாமல் வேறிடத்திற் கொண்டு சென்றார்.—எ-று. (௬௧)

ஒன்று மனத்தா ரிருவர்களு,முலக ரறியா வொருமறைவிற்
சென்று புக்குப்,பிள்ளைதனைப் பெற்ற தாயார் செழுங்கலன்க
ணன்று கழுவிக் கொடுசெல்ல,நல்ல மகனை யெடுத்துலகை
வென்ற தாதை யார்தலையைப் பிடிக்க விரைந்து மெய்த்தாயர்.

(இ-ள்.) ஒற்றுமைப்பட்ட மனமுடைய தாய்தந்தையர்க ளிருவரும், உலகத்தவர்க ளறியாவொன்று மறைவிடத்திற் சென்றடைந்து, புதல்வனைப் பெற்ற தாயாகிய திருவெண்காட்டு நங்கையார் செறிய பாத்திரங்களைக் கழுவிக்கொண்டுவர,உலகவாசையையொழித்த தந்தையாராகிய சிறுத்தொண்டநாயனார் தமது சிறந்த புதல்வனை யெடுத்து அவருடைய தலையைப் பிடிக்க,பெற்ற தாயார் விரைந்து.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௬௨)

இனிய மதலை கிண்கிணிக்கா லிரண்டு மடியின் புடையிடுக்கிக்,
கனிவாய் மைந்தன் கையிரண்டுங் கையாற் பிடிக்கக்,காதலனு
நனிநீ டுவகை யுறுகின்றா ரென்று மகிழ்ந்து நகைசெய்யத்,
தனிமா மகனைத்,தாதையார் கருவி கொண்டு தலையரிவார்.

(இ-ள்.) இனிமையாகிய புதல்வரது சதங்கையணிந்த இரண்டு கால்களையும் தம்முடைய மடியில் இடுக்கி, கொவ்வைக்கனிபோன்ற சிவந்த வாயினையுடைய அப்புதல்வரது இரண்டு கைகளையுந் தமது கைகளினாலே பிடிக்க, அப் புதல்வரும், (தம்முடைய தாய்தந்தையர்கள்) மிக்க மகிழ்வடைகின்றனரென்று, மகிழ்ந்து நகைசெய்ய, ஒப்பற்ற சிறந்த தமது புதல்வனைத் தந்தையாராகிய சிறுத்தொண்டநாயனார் ஆயுதத்தை யெடுத்துத் தலையை யரிவாராயினர்.—எ-று.

'இனிய மழலைக் கிண்கிணிக்கால்' என்று பாடமாயின், இனிய மழலை என்பதனை, கனிவாய் மைந்தன், என்பதனுடன் கூட்டி, இனிய மழலைச்சொல்லையும் கொவ்வைக்கனிபோன்ற வாயையுமுடைய மைந்தன் எனப் பொருள் கொள்க. (௬௩)

பொருவில் பெருமைப் புத்திரன்,மெய்த் தன்மை யளித்தா னெனப்
மருவு மகிழ்ச்சி யெய்த,அவர் மனைவி யாருங்,கணவனா [பொலிந்து
ரருமை யுயிரை யெனக்களித்தா னென்று மிகவு மகமலர,
விருவர் மனமும் பேருவகை யெய்தி யரிய வினைசெய்தார்.

(இ-ள்.) ஒப்பற்ற பெருமையையுடைய தமது புதல்வன் மெய்ம்மைத் தன்மையை யளித்தானென்று பூரித்து மிக்க மகிழ்ச்சியடைய, அவரது மனைவியாராகிய திருவெண்காட்டு நங்கையாரும் தங்கணவனாரது அருமையாகிய உயிரை எனக்குக் கொடுத்தானென்று மிகவும் மனமகிழ்ச்சியடைய, இவ்வாறு

தாய்தந்தையர்களாகிய இருவரது மனமும் பெருங்களிப்படைந்து (தலையை யரிதலாகிய) அரிய செய்கையைச் செய்தார்கள்.—எ-று. (௬௪)

அறுத்த தலையி னிறைச்சி திருவமுதுக் காகா தெனக்கழித்து
மறைத்து நீக்கச், சந்தனத்தார் கையிற் கொடுத்து மற்றையுறுப்
பிறைச்சி யெல்லாங் கொத்தியறுத், தெலும்பு மூளை திறந்திட்டுக்,
கறிக்கு வேண்டும் பலகாய மமைத்துக் கூட்டிக் கடிதமைப்பார்.

(இ-ள்.) (திருவெண்காட்டுநங்கையார்) அறுத்த தலை சிறைச்சியானது திருவமுதுக்கு உதவாது என்று கழித்து, அதனைமறைத்து நீக்கும்பொருட்டுச் சந்தன நங்கையார் கையிற் கொடுத்து, மற்றைய உறுப்புக்களின் இறைச்சிகளெல்லாவற்றையும் அறுத்துக் கொத்தி எலும்புகளையும் மூளைகளையும்வெட்டித் திறந்து, கறிக்குவேண்டிய பல காயவர்க்கங்களை அமைத்துக் கூட்டி விரைவில் சமைப்பாராயினார்.—எ-று. (௬௫)

மட்டு விரியுங் குழன்மடவா, ரடுப்பி லேற்றி மனமகிழ்ந்தே
யட்ட கறியின் பதமறிந்தங் கிழிச்சி, வேறோ ரருங்கலத்துப்
பட்ட நறையாற் றாளித்துப், பலவு மற்றுங் கறிசமைத்துச்,
சட்ட விரைந்து போனகமுஞ் சமைத்துக் கணவர் தமக்குரைத்தார்.

(இ-ள்.) தேனொழுகுகின்ற (மலரையணிந்த)கூந்தலையுடைய திருவெண்காட்டுநங்கையார் மனமகிழ்ந்து அடுப்பில் வைத்துச் சமைத்த கறியின் பாகமறிந்து இறக்கி, வேறொரு சிறந்த பாத்திரத்தில், பொருந்திய மணமாகத் தாளித்து, பலவகையாகிய வெவ்வேறு கறிகளுஞ் சமைத்து, மிகவிரைந்து சோறுஞ் சமைத்துக்கொண்டு தமது கணவனாருக்குத் தெரிவித்தார்.—எ-று.

'மட்டுவிரி பூங்குழன் மடவார்' என்றும் பாடம். (௬௬)

உடைய நாத ரமுதுசெய், யுரைத்த படியே யமைத்ததற்
கடையு மின்ப முன்னையினு மார்வம் பெருகக் களிகூர,
விடையில் வருவார் தொண்டர்தாம் விரைந்து சென்று,மென்மலரின்
புடைவண் டறையு மாத்தியின்கீ ழிருந்த புனிதர் முன்சென்றார்.

(இ-ள்.) தம்மை அடிமையாகவுடைய வைரவமூர்த்தியார்அமுதுசெய்யும்படி யுரைத்த முறைமையாகவே சமைத்ததற்காகப் பொருந்திய இன்பமானது முன்னையினும் அதிகமாகப் பெருகிக் களிப்பு மிக, இடபவாகனத்தி லெழுந்தருளுஞ் சிவபெருமானது திருத்தொண்டராகிய சிறுத்தொண்டநாயனார் விரைவாகப்போய், மிருதுவாகிய மலர்களில் வண்டுகள்சப்திக்கின்ற திருவாத்திவிருக்ஷத்தின் கீழ் எழுந்தருளிய வைரவர்முன்னே யடைந்தார்.—எ-று. (௬௭)

அண்ண றிருமுன் பணிந்திறைஞ்சி, யன்பர் மொழிவா, ரடியே
ன்பா, னண்ணி நீரிங் கமுதுசெய வேண்டு மென்று நான்பரிவு, ப
ண்ணி னேனைப்,பசித்தருளத் தாழ்த்த தெனினும்,பணிசமைத்தே,
னெண்ணம் வாய்ப்ப வெழுந்தருள வேண்டு மென்,றங் கெடுத்துரை
த்தார்.

(இ-ள்.) மெய்யன்பராகிய சிறுத்தொண்டநாயனார் வைரவமூர்த்தியினது திருமுன்னே யடைந்து வணங்கிக் கூறுவார், சுவாமீ! தேவரீர் அடியே

னிடத்தி லெழுந்தருளித் திருவமுது செய்யவேண்டுமென்று நான் உபசரித்தவனாய்த் தேவரீர் பசித்தருளும்படி காலதாமசமாயிற்றெனினும் கட்டளைப்படி அமுது சமைத்தேன்; அடியேனது எண்ணம் முற்றுப் பெறும்படி (எனது வீட்டிற்கு) எழுந்தருளவேண்டுமென்று எடுத்துக் கூறினார்.—எ-று. (கூ௮)

இறையுந் தாழா தெழுந்தருளி யமுது செய்யு மென்றிறைஞ்சக், கறையுங் கண்டத் தினின்மறைத்துக், கண்ணு நுதலிற் காட்டாதார், நிறையும் பெருமைச் சிறுத்தொண்டர், போது மென்ன, நிதியிரண்டுங், குறைவ னொருவன் பெற்றுவந்தாற் போலக் கொண்டு மனைபுகுந்தார்.

(இ-ள்.) சிறிதுங் காலந் தாழ்க்காமல் எனது வீட்டிற் கெழுந்தருளி அமுதுசெய்தருளுமென்று வணங்க, விஷத்தைக் கண்டத்தில் மறைத்து நெற்றிக்கண்ணையு மறைத்து வந்தருளிய சிவபெருமானாகிய வைரவர், நிறைந்த பெருமையையுடைய சிறுத்தொண்டரே! வாரும் என்று கூறி யெழுந்தருள, (அந்நாயனார்) ஒரு தரித்திரன் இருவகை நிதிகளையும் பெற்று வருவது போல அவரை யழைத்துக்கொண்டு தமது திருமாளிகைக்கு வந்தனர்.—எ-று.

நிதி யிரண்டாவன,—சங்கநிதி பதுமநிதி யென்பன; இவை சங்கவடிவாகவும் பதுமவடிவாகவு மிருந்து வேண்டுவார் வேண்டிய பொருள்களைக் கொடுப்பவை; "சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து தரணியொடு வானாளத் தருவரேனும்" என வருந் திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரத்தானுமுணர்க. (கூகூ)

வந்து புகுந்து, திருமனையின் மனைவி யார்தா, மாதவரை,
முந்த வெதிர்சென் றடிவணங்கி, முழுது மழகு செய்தமனைச்
சந்த மலர்மா லைகள்முத்தின் றாம நாற்றித், தவிசடுத்த
கந்த மலரா சனங்காட்டிக், கமழ்நீர்க் கரக மெடுத்தேந்த.

(இ-ள்.) இவ்வாறு தமது திருமாளிகைக்கு வந்து சேர, அவரது மனைவியாராகிய திருவெண்காட்டு நங்கையார் தவமுனிவராகிய வைரவரை முன்னே எதிர்கொண்டு சென்று திருவடிகளில் வணங்கி, முழுதும் அலங்கரித்த திருமாளிகையில் அழகிய மலர்மாலைகளும் முத்துமாலைகளுந் தொங்கவிட்டுத் தவிசின்மேலிட்ட மணம் பொருந்திய மலர்ப்பீடத்தி லெழுந்தருளச்செய்து, நறுமணங் கமழும் நீரையுடைய கலசத்தை எடுத்து ஏந்த.—எ-று.

புகுந்து என்பது செயவெனெச்சத் திரிபு.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (எ0)

தூய நீராற், சிறுத்தொண்டர் சோதி யார்தங் கழல்விளக்கி,
யாய புனிதப் புனறங்க, டலைமே லாரத் தெளித்தின்ப
மேயவில்ல மெம்மருங்கும் வீசி, விரைமென் மலர்சாந்த
மேயுந் தூப தீபங்கண் முதற்பூ சனைசெய் திறைஞ்சுவார்.

(இ-ள்.) சிறுத்தொண்டநாயனார் தூய்மையாகிய அக் கலசநீரினால் சிவபெருமானாகிய வைரவரது திருவடிகளை விளக்கி, பரிசுத்தம் பொருந்திய அந்தத் தீர்த்தத்தைத் தங்கள் சிரசின்மேலே தெளித்து, இன்பமிக்க திருமாளிகை முழுதுந் தெளித்து, மணம் பொருந்திய மிருதுவாகிய மலரும், சந்தனமும், பொருந்திய தூபதீபங்களும் முதலாகிய பூசைசெய்து வணங்குவாராயினர்.

பனிவெண் டிங்கட் சடைவிரித்த பயில்பூங் குஞ்சிப் பயிரவராம்
புனிதர் தம்மைப் போனகமுங் கறியும் படைக்கும் படிபொற்பின்
வனிதை யாருங் கணவருமுன் வணங்கிக் கேட்ப,மற்றவர்தா
மினிய வன்ன முடன்கறிக ளெல்லா மொக்கப் படைக்கவென.

(இ-ள்.) குளிர்ந்த வெண்பிறை யணிந்த சடையை விளங்குகின்ற தும்பைமலரை யணிந்த மயிர் முடியாக விரித்த வைரவராகிய சிவபெருமானை அழகிய திருவெண்காட்டு நங்கையாருஞ் சிறுத்தொண்ட நாயனாரும் வணங்கி, அன்னமுங் கறியும் படைக்கும் வகை எப்படியென்று கேட்க, அவ்வைரவர், இனிய அன்னத்துடன் கறிகளை யெல்லாம் ஒருங்கே படைக்கவேண்டுமென்று கூறியருள.—எ-று.

விரித்த என்பது குஞ்சி என்பதனோடு கூட்டிப் பொருள் கூறப்பட்டது. பூங்குஞ்சி என்பதற்கு, பொலிவினையுடைய குஞ்சி, எனப் பொருள் கூறினும் பொருந்தும்.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (எஉ)

பரிசு விளங்கப்,பரிகலமுந் திருத்திப் பாவா டையிலேற்றித்
தெரியும் வண்ணஞ் செஞ்சாலிச் செழும்போ னகமுங் கறியமுதும்
வரிசை யினின்முன் படைத்தெடுத்து மன்னும் பரிக லக்கான்மேல்
விரிவெண் டுகிலின் மிசைவைக்க விமலர் பார்த்தங் கருள்செய்வார்.

(இ-ள்.) (தங்களுடைய) அன்பின் தன்மைவிளங்கப் பரிகலந்திருத்திப் பாவாடையின் மேலிட்டு, விளங்கும்படி செந்நெலரிசிச் சாதமும் கறியமுதும் முன்னே வரிசையாகப் படைத்து, பொருந்திய பரிகலப்பீடத்தின்மேல் விரித்த வெள்ளை வஸ்திரத்தின்மீது எடுத்துவைக்க வைரவர் அதனைப்பார்த்து அருளிச்செய்வார்.—எ-று.

பாவாடை=நிலத்தில் விரிக்கும் வஸ்திரம். (எந)

சொன்ன முறையிற்,படுத்தபசுத் தொடர்ந்த வுறுப்பெல் லா
ங்கொண்டு, மன்னு சுவையிற் கறியாக்கி,மாண வமைத்தீ ரோயென்
ன, வன்ன மனையார் தலையிறைச்சி யமுதுக் காகா தெனக்கழித்தோ,
மென்ன,வதுவுங் கூடநா முண்ப தென்று ரிடர்தீர்ப்பார்.

(இ-ள்.) நாம் சொன்ன முறைமைப்படியே கொன்ற பசுவினது தொடர்ந்த உறுப்புக்களனைத்து மெடுத்து, பொருந்திய சுவையோடு சமைத்து மாட்சிமையாகப் படைத்தீரோ? வென்று வினவ, அன்னம்போலு நடையினையுடைய திருவெண்காட்டுநங்கையார் தலையிறைச்சிமாத்திரம் திருவமுதுக்கு உதவாதென்று கழித்துவிட்டோமென்று கூற, இவர்களது பிறவித்துன்பத்தை யொழிக்கவந்தருளிய வைரவமூர்த்தியார் அதுவும் நாம் உண்பதுதான் என்று கூறி யருளினர்.—எ-று. (எச)

சிந்தை கலங்கிச்,சிறுத்தொண்டர் மனையா ரோடுந் திகைத்தயரச், சந்த னத்தா ரோனுந்தாதி யார்,தா மந்தத் தலையிறைச்சி, வந்த தொண்ட ரமுதுசெயும் பொழுது நினைக்க வருமென்றே, முந்த வமைத்தேன்,கறியமுதென் றெடுத்துக் கொடுக்க முகமலர்ந்தார்.

(இ-ள்.) (அதுகேட்டுச்) சிறுத்தொண்டநாயனார் தம்மனைவியாரோடும் மனங் கலங்கித் திகைத்துச் சோர்வடைய, (அப்பொழுது) சந்தனநங்கையா ரென்னுந் தாதியார் அந்தத் தலையிறைச்சியை இங்குவந்தருளிய வைரவர் திருவமுது செய்யும்பொழுது நினைக்கவேண்டி வருமென்றுகருதி, முன்னமே சமைத்துவைத்தேனென்று அதனையெடுத்துக்கொடுக்க முகமலர்ச்சியடைந்தார்கள்.

வாங்கி மகிழ்ந்து படைத்ததற்பின், வணங்குஞ் சிறுத்தொண்டரைநோக்கி, யீங்கு நமக்குத் தனியுண்ண வொண்ணா, தீச னடியாரிப், பாங்கு நின்றார் தமைக்கொணர்வீ ரென்று பரமர் பணித்தருள, வேங்கிக் கெட்டே னமுதுசெய்ய விடையூ றிதுவோ வெனநினைவார்.

(இ-ள்.) அதனைவாங்கிச் சந்தோஷித்துப் படைத்தபின்பு, சிவபெருமானாகிய வைரவர் தம்மை வணங்குகின்ற சிறுத்தொண்டநாயனாரைப் பார்த்து, இங்கு நாம் தனியே உண்ணக்கூடாது; இப்பக்கங்களிலுள்ள சிவனடியார்களை யழைத்துவாருமென்று கூறியருள, (நாயனார் அதைக்கேட்டு) ஏக்கமுற்று, ஐயோ! கெட்டேன் (இவ்வடியவர்) திருவமுதுசெய்வதற்கு இதுதான் இடையூறுபோலுமென்று சிந்திப்பாராயினார்.—எ-று. (எசு)

அகத்தின் புறத்துப் போயருளா லெங்குங் காணா, ரழிந்தணைந்து, முகத்தில் வாட்ட மிகப்பெருகப் பணிந்து, முதல்வர்க் குரைசெய்வா, ரிகத்தும் பரத்து மினியாரைக் காணேன்! யானுந் திருநீறு, சகத்தி லிடுவார் தமைக்கண்டே யிடுவே, னென்று தாழ்ந்திறைஞ்ச.

(இ-ள்.) தமது திருமாளிகையின் புறத்திலே சென்று, சிவபெருமான் திருவருளினால் அடியார்களை யெங்குங்காணாதவராய் மனம்வருந்தித் திரும்பி வந்து முகத்தில் மிக்க வாட்டமுண்டாக வைரவரைவணங்கிக் கூறுவார்; இம்மை மறுமையென்னு மிரண்டிற்கும் நன்மையைத்தரத்தக்கவர்களாகிய சிவனடியார்களைக் காணேன்; உலகத்தில் திருவெண்ணீறு அணிபவர்களைக் கண்டு அடியேனும் அணிவேனென்று தாழ்ந்துவணங்கி விண்ணப்பஞ்செய்ய.—எ-று.

ஆன்மாக்களுடைய பாசபந்தங்களை யொழித்து இகபரபோகங்களைத் தந்தருளுதற்குக் காரணபூதர்களா யுள்ளவர்கள் சிவனடியார்களே யென்பார், "இகத்தும்பரத்துமினியார்" என்று கூறினார்.

திருவிளையாடற்புராணம்.

"எனைத்துயிர்க்குமுறுதியிகபரமென்பவவைகொடுப்பானெல்லாந்தானா
யனைத்துயிர்க்குமுயிராகுமரனென்பவவனறிவார்க்கங்கம்வாக்கு
மனத்துறுமெய்ப்பத்திவழிவருமென்பவப்பத்திவழிநிற்பார்க்கு
வினைத்துயர்தீர்த்திடவெடுத்தவடிவென்பதவனடியார்வேடமன்றே."

என்பதனா லுணர்க. (எஎ)

உம்மைப் போல நீறிட்டா ருளரோ வுண்பீர் நீரென்று, செம்மைக் கற்பிற் றிருவெண்காட் டம்மை தம்மைக், கலந்திருத்தி, வெம்மை யிறைச்சி சோறிதனின் மீட்டுப், படையு மெனப்படைத்தார், தம்மை யூட்ட வேண்டியவ ருண்ணப் புகலுந், தடுத்தருளி.

(இ-ள்.) (அதற்கு வைரவர் சிறுத்தொண்ட நாயனாரைப் பார்த்து) உம்மைப்போலத் திருநீறு தரித்தவர்கள் வேறுளரோ? நீரோ உடனிருந்து உண்ணும் வீரொன்று கூறியருளி, சிறந்த கற்பினையுடைய திருவெண்காட்டு நங்கையாரை நோக்கி, வேறு பரிகலந் திருத்திச் சூடாகிய இறைச்சியையும் அன்னத்தையும் (நமக்குப் படைத்த) இதனில் எடுத்துப் படையுமென் றருளிச்செய்ய, அவரும் அப்படியே எடுத்துப் படைத்தார்; நாயனார், வைரவரை ஊட்டவேண்டித் தாம் முன்பு உண்ணத்தொடங்கவும் வைரவர் அதனைத் தடுத்தருளி.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (எஅ)

ஆறு திங்க ளொழிந்துண்போ முண்ணு மளவுந் தரியாது,
சோறு நாளு முண்பீர்முன் னுண்ப தென்னம் முடனுய்ப்ப
மாறின் மகவு பெற்றீரேன் மைந்தன் றன்னை யழையுமென,
வீறு முதலு மில்லாதார்க் கிப்போ துதவா னவனென்றார்.

(இ-ள்.) ஆறுமாதங் கழித்து ஒருமுறை உண்ணுகின்ற நாம் உண்ணும் வரையில் தரியாமல், தினந்தோறுஞ் சோறுண்ணுகின்ற நீர் முன்னே யுண்பது யாது காரணம்; நம்முடன் உண்ணும்பொருட்டுக் குற்றமற்ற புத்திரனைப் பெற்றிருப்பீராயின் அப்புதல்வனை யழையுமென்று கூறியருள, (நாயனார்) முதலும் முடிவுமில்லாத சிவபெருமானாகிய வைரவரைப்பார்த்து, அவன் இப்போது உதவானென்று கூறினார்.—எ-று.

செத்துப் பிறக்கின்ற தெய்வங்களாகிய அரிபிரமேந்திராதி தேவசமூகங்கட் கெட்டாத சிவபெருமான் ஓர் காலத்துந் தோற்றக் கேடில்லாதவரொன்பார், "ஈறு முதலு மில்லாதார்" என்று கூறினார்; "ஆதியு மந்தமு மில்லா வரும்பெருஞ் சோதி" என்றார், ஸ்ரீமந் மாணிக்கவாசக சுவாமிகளும். (எகூ)

நாமிங் குண்ப தவன்வந்தா லடி யழையு மெனநம்பர்
தாமங் கருளிச் செயத்தரியார் தலைவ ரமுது செய்தருள
யாமிங் கென்செய் தாலாகு மென்பார் விரைவுற் றெழுந்தருளாற்
பூமென் குழலார் தம்மோடும் புறம்போ யழைக்கப் புகும்பொழுது.

(இ-ள்.) அதற்கு வைரவர், அவன் வந்தால்தான் நாம் இங்கு அமுதுண்பது, ஆதலால் அவனைத் தேடி யழையுமென்று கூறியருள, நாயனார் மனந் தரியாமல், இவ் வைரவர் திருவமுது செய்தருளுதற்கு நாம் யாது செய்தால் ஆகுமென்று கருதினவராய் விரைந்தெழுந்து, திருவருளினால், மலர்களை யணிந்த மிருதுவாகிய கூந்தலையுடைய தமது மனைவியாரோடுந் திருமாளிகையின் புறத்தில் வந்து அழைக்கத்தொடங்கும்பொழுது.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (அ0)

வைய நிகழுஞ் சிறுத்தொண்டர் மைந்தா வருவா யெனவழைத்தார்
தைய லாருந் தலைவர்பணி தலைநிற் பாராய்த் தாமழைப்பார்
செய்ய மணியே சீராளா வாராய் சிவனா ரடியார்யா
முய்யும் வகையா லுடனுண்ண வழைக்கின் றாரென் றோலமிட.

(இ-ள்.) உலகத்தில் சிறந்து விளங்குகின்ற சிறுத்தொண்ட நாயனார், மைந்தனே! நீ வருவாயாக வென்று அழைத்தார்; மனைவியாரும் தமது நாயக

ருடைய பணியில் முதன்மையாகநிற்பவராய் அழைக்கின்றாய்; சிவந்த மாணிக் கம்போல்பவனே! சீராளதேவா! சிவனடியவராகிய வைரவர் நாங்களுய்யும் பொருட்டு உடனுண்ணும்படி உன்னை யழைக்கின்றார்; நீ வருவாயாக, என்று ஓலமிட் டழைக்க.—எ-று. (௮௧)

பரம ரருளாற்,பள்ளியினின் றோடி வருவான் போல்வந்த, தர
மில் வனப்பிற் றனிப்புதல்வன் றன்னை யெடுத்துத் தழுவித்தங், கர
முன் னணைத்துக் கணவனார் கையிற் கொடுப்பக் களிகூர்ந்தார், புர
மூன் றெரித்தார் திருத்தொண்ட ருண்ணப் பெற்றோ மெனும்பொ
லிவால்.

(இ-ள்.) (அப்பொழுது) சிவபெருமானது திருவருளினால் பள்ளிக்கூடத்தினின்றும் வருகின்றவர்போல ஓடிவந்த ஒப்பற்ற பேரழகினையுடைய புதல்வனைத் தாயார் எடுத்துத் தழுவித் தமதுதிருக்கரத்தினால் முன்னே யணைத்துத் தங் கணவனாரது கையில் கொடுக்க, அவர், திரிபுரதகனராகிய சிவபெருமானது அடியவராகிய வைரவர் திருவமுது செய்தருளப்பெற்றோமென்னுங் களிப்பினால் மனமகிழ்ச்சியடைந்தார்.—எ-று. (௮௨)

வந்த மகனைக் கடிதிற்கொண், டமுது செய்விப் பான்வந்தார்,
முந்த வேயப் பயிரவரா முதல்வ ரங்கண் மறைந்தருளச்.
சிந்தை கலங்கிக் காணாது திகைத்தார், வீழ்ந்தார் .தெருமந்தார்.
வெந்த விறைச்சிக் கறியமுதுங் கலத்திற் காணார் வெருவுற்றார்.

(இ-ள்.) அவ்வாறு வந்த புதல்வனை விரைந்தெடுத்துக்கொண்டு, வைரவனைத் திருவமுது செய்விக்கும்பொருட்டு உள்ளே வந்தனர்; அதற்கு முன்னமே அவ்வைரவராகிய சிவபெருமான் அங்கு மறைந்தருள, நாயனார் அவனைக் காணாமல் சிந்தை கலங்கித் திகைத்தார்; நிலமுற வீழ்ந்தார்; மனக்கலக்க முற்றார்; பரிகலத்தில் வெந்த இறைச்சிக் கறியமுதைக் காணாமல் அச்சங் கொண்டார்.—எ-று. (௮௩)

செய்ய மேனிக்,கருங்குஞ்சிச்.செழுங்கஞ் சுகத்துப், பயிரவர்.யா
மூய்ய வமுது செய்யாதே யொளித்த தெங்கே யெனத்தேடி,
மையல் கொண்டு புறத்தணைய.மறைந்த வவர்தா மலைபயந்த
தைய லோடுஞ் சரவணத்துத் தநய ரோடுந் தாமணைவார்.

(இ-ள்.) சிவந்த திருமேனியையும் கரிய தலைமயிரையும் செழிய மேற்போர்வையையுமுடைய வைரவர் நாங்களுய்யும்பொருட்டுத் திருவமுது செய்யாமல் எங்கு ஒளித்தனரோவென்று தேடி மயக்கங்கொண்டு வெளியில்வர, மறைந்தருளிய வைரவராகிய சிவபெருமான் பர்வதராஜபுத்திரியாகிய உமாதேவியாரோடும் சரவணப்பொய்கையில் அவதரித்தருளிய சுப்பிரமணியரோடும் எழுந்தருளுவாராயினார்.—எ-று. (௮௪)

தனிவெள் விடைமே னெடுவிசும்பிற் றலைவர் பூத கணநாதர்
முனிவ ரமரர் விஞ்சையர்கண் முதலா யுள்ளோர் போற்றிசைப்ப.
வினிய கறியுந் திருவமுது மமைத்தார் காண வெழுந்தருளிப் .
பனிவெண் டிங்கண் முடிதுளங்கப் பரந்த கருணை நோக்களித்தார்.

(இ-ள்.) பூதகணநாதர்கள் முனிவர்கள் அரிபிரமேந்திராதி தேவர்கள், வித்தியாதரர் முதலானவர்கள் சூழ்ந்துதுதிக்க உயர்ந்த ஆகாயத்திலே ஒப்பற்ற

வெள்ளிய இடபவாகனத்தின்மேல் இனிய கறியையுந் திருவமுதையுஞ் சமைத்த இவர்கள் தரிசிக்கும்படி யெழுந்தருளிக்குளிர்ந்த வெண்பிறையணிந்த திருமுடியசைய, பரவிய கிருபாகடாக்ஷந் தந்தருளினர்.—எ-று. (அரு)

அன்பின் வென்ற தொண்டரவர்க்,கமைத்த மனைவி யார்,மைந்தர்.
முன்பு தோன்றும் பெருவாழ்வை முழுதுங் கண்டு,பரவசமா
யென்பு மனமுங் கரைந்துருக விழுந்தா ரெழுந்தா ரேத்தினர்
பின்பு பரமர் தகுதியினாற் பெரியோ ரவருக் கருள்புரிவார்.

(இ-ள்.) மெய்யன்பினால், பாசபந்தங்களைவென்ற சிறுத்தொண்டநாயனரும்,அவருக்கு அமைத்த மனைவியாரும்,புதல்வரும் (தாதியாரும்) தங்களுக்கு முன்னே தோன்றுகின்ற சிவாநந்தப்பெருவாழ்வை முழுதுந்தரிசித்து எலும்பும் மனமுங் கரைந்துருகும்படி நிலமுறவிழுந்து வணங்கி, எழுந்து அஞ்சலியஸ்தராய் நின்று துதித்தார்கள் ; பின்பு சிவபெருமான் அன்பிற் சிறந்தவர்களாகிய அந்நால்வருக்குந் திருவருள்புரிவா ராயினர்.—எ-று. (அசு)

கொன்றை வேணி யார்தாமும்,பாகங்கொண்ட குலக்கொடியும்
வென்றி நெடுவேள் மைந்தருந்தம் விரைப்பூங் கமலச் சேவடிக்கீழ்
நின்ற தொண்டர் மனைவியார் நீடு மகனர் தாதியா.
ரொன்றும் பிரியா தேயிறைஞ்சி யிருக்க வுடன்கொண் டேகினர்.

(இ-ள்.) கொன்றைமலர் மாலையையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானும், அவரது இடப்பாகத்தில் வீற்றிருந்தருளும் உமாதேவியாரும், வெற்றிபொருந்திய நீண்டவேற்படையையேந்திய சுப்பிரமணியக்கடவுளும் தங்கள் மணம்பொருந்திய தாமரைமலர்போன்ற திருவடிகளின்கீழே முன்னேநிற்கின்ற சிறுத்தொண்டநாயனரும் மனைவியாரும், சிறந்த புதல்வரும், தாதியாருமாகிய நால்வரும் எக்காலத்தும் நீங்காமல் வணங்கிப் பேரின்பமுற் றிருக்கும் பொருட்டு உடன்கொண்டு ஸ்ரீமகாகயிலாசத்தையடைந்தார்கள்.—எ-று.(அஎ)

ஆறு முடிமே லணிந்தவருக் கடியா ரென்று கறியமுதா,
யூறி லாத தனிப்புதல்வன் றன்னை யரிந்தங் கமுதூட்டப்.
பேறு பெற்றார் சேவடிக,டலைமேற் கொண்டு,பிறவுயிர்கள்
வேறு கழறிற்,றறிவார்தம் பெருமை தொழுது விளம்புவாம்.

(இ-ள்.) கங்கைநதியைத் திருமுடியிலணிந்தருளிய சிவபெருமானுக்கு அடியவரென்று கருதி, குற்றமற்ற ஒப்பற்ற புதல்வனைக் கறியமுதாக அரிந்து பாகஞ்செய்து திருவமுதூட்டத்தக்க பேற்றைப்பெற்றவராகிய சிறுத்தொண்டநாயனரது திருவடிகளைச் சிரமேற்கொண்டு, பிறவுயிர்கள் வேறாகப் பேசினவைகளை யறியவல்லவராகிய சேரமான் பெருமாணயனரது மேன்மையைத் துதித்துச் சொல்லத்தொடங்குவோம்.—எ-று.

'அமுதூட்டப்பேறுபெற்றார்' என்பதற்கு, திருவமுதுபடைக்க, அதுகாரணமாகச் சிவபதம்பெற்றவர், என்று பொருள்கூறினும் பொருந்தும். ()

சிறுத்தொண்டநாயனர்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம் - ௩௮௪௩.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சேரமான்பெருமாணயனார் புராணம்.

மாவிற் றிருந்த பெருஞ்சிறப்பின் மன்னுந் தொன்மை மலைநாட்டுப்
பாவிற் றிருந்த பல்புகழார் பயிலு மியல்பிற் பழம்பதிதான்,
சேவிற் றிருந்தார் திருவஞ்சைக் களமு நிலவிச், சேரர்குலக்
கோவிற் றிருந்து முறைபுரியுங் குலக்கோ மூதூர் கொடுங்கோளூர்.

(இ-ள்.) இலக்ஷுமியானவள் பொருந்தி வீற்றிருக்கின்ற பெருஞ்சிறப்பினால் நிலைபெற்ற பழமையாகிய மலைநாட்டிலே, பாக்களில் சொல்லப்பட்ட பல புகழையுடைய பெரியோர்கள் வாழு மியல்பினையுடைய பழையபதியாவது (யாதெனின்), இடபவாகனத்தில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானது திருவஞ்சைக்களமென்னுந் திருக்கோயிலும் விளங்கப்பெற்று, சேரர்குல அரசர்கள் வீற்றிருந்து செங்கோல்முறை செலுத்துகின்ற சிறந்த நகரமாகியகொடுங்கோளூராகும்.—எ-று. (க)

காலை யெழும்பல் கலையினொலி, களிற்றுக் கன்று வடிக்குமொலி,
சோலை யெழுமென் சுரும்பினொலி, துரகச் செருக்காற் சுலவுமொலி,
பாலை விபஞ்சி பயிலுமொலி, பாட லாடன் முழவினொலி,
வேலை யொலியை விழுங்கியெழ, விளங்கி யோங்கும் வியப்பினதால்.

(இ-ள்) (அந்நகரம்) காலையில் வேதியர்கள் ஓதுகின்ற பல சாஸ்திரங்களினொலியும், யானைக்கன்றுகளைப் பழக்கி வசமாக்குதலாலுண்டாகு மொலியும், சோலைகளினின்று மெழுகின்ற மெல்லிய வண்டுகளினொலியும், குதிரைகளினது செருக்கினால் சூழ்ந்த ஒலியும், பாலை - விபஞ்சி முதலிய பண்களைப் பழகுதலாலுண்டாகு மொலியும், பாடல் ஆடல் செய்யுமிடங்களிலுண்டாகும் முழவினொலியு மாகிய விவைகள் சமுத்திரத்தின் பேரொலியை யடக்கி மேலெழும்படி சிறந்தோங்குகின்ற வியப்பினை யுடையது.—எ-று. (உ)

மிக்க செல்வ, மனைகடோறும் விழையுமின்பம் விளங்குவன,
பக்க நெருங்கு சாலைதொறும், பயில்சட் டறங்கள் பல்குவன,
தக்க வணிகொண் மடங்கடோறுஞ் சைவ மேன்மை சாற்றுவன,
தொக்க வளங்கொ ளிடங்கடோறு, மடங்க நிதியந் துவன்றுவன.

(இ-ள்.) செல்வங்கள் நிறைந்த வீடுகடோறும் விரும்பத்தக்க இன்பங்கள் விளங்குவன; அருகில் நெருங்கிய சாலைகடோறும் செய்கின்ற மிக்க தருமங்கள் விருத்தியடைவன; தகுந்த பேரழகினையுடைய திருமடங்கடோ

றும் சைவசமயத்தின் மேன்மைகள் சொல்லப்படுவன; வளப்பமிக்க மற்ற இடங்கடோறும் பலவகைத்திரவியங்கள் நிரம்பப் பொருந்துவனவாம்.—எ-று.

வேத நெறியின் முறைபிறழா மிக்க வொழுக்கந் தலைநின்ற
சாதி நான்கு நிலைதழைக்குந் தன்மைத் தாகித், தடமதில்சூழ்
சூத வகுள சரளநிரை துதையுஞ் சோலை வளநகர்தான்,
சேரர்கோதை யரசர் மகோதையெனக் குலவு பெயரு முடைத்துலகில்.

(இ-ள்.) வேதமார்க்கத்தின் முறைமை சிறிதுந் தவறுதலில்லாத சிறந்த ஒழுக்கத்தில் முதன்மையாக நின்ற பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரரென்னும் நால்வகைச் சாதியாரும் நிலையாகச் செழித்து வாழுந் தன்மையையுடையதாய், விசாலமாகிய மதிலைச்சூழ்ந்த மா-மகிழ் - சரளம் முதலிய மரவரிசைகள் நெருங்கிய சோலைகளையுடைய வளப்பமிக்க அக் கொடுங்கோளூரானது, சேரராசாக்கள் அரசாட்சி செய்யும் மகோதையென்னும் பெயரையும் இந் நிலவுலகத்தில்பெற்று விளங்கும்.—எ-று. (ச)

முருகு விரியு மலர்ச்சோலை, மூதூ ரதன்கண், முறைமரபி
னருகி யழியுங் கலிநீக்கி, யறங்கொள் சைவத் திறந்தழைப்பத்
திருகு சினவெங் களியானைச் சேரர், குலமு முலகுஞ்செய்
பெருகு தவத்தா, லரனருளாற் பிறந்தார் பெருமாக் கோதையார்.

(இ-ள்.) வாசனை வீசுகின்ற மலர்களையுடைய சோலை சூழ்ந்த பழமையாகிய அக் கொடுங்கோளூரிலே முறைமைப்படியே சுருங்கி யழிகின்ற கலியையொழித்து, நல்ல தருமம் பொருந்திய சைவசமயந் தழைத்தோங்கும்பொருட்டு, மாறுபாட்டையுங் கோபத்தையுமுடைய வெவ்விய மதக்களிப்புப் பொருந்திய யானைப்படையையுடைய சேரர் குலத்தினரும் உலகத்தாருஞ் செய்த பெருந்தவத்தினால் சிவபெருமான் றிருவருளினால் பெருமாக்கோதையாரென்னும் ஒரு சற்புத்திரர் அவதரித்தார்.—எ-று.

தருமதேவதை கிரேதாயுகத்தில்நான்குபாதத்தினாலும், திரேதாயுகத்தில் மூன்றுபாதத்தினாலும், துவாபரயுகத்தில் இரண்டுபாதத்தினாலும், கலியுகத்தில் ஒருபாதத்தினாலும் நடக்கின்றமையால், யுகத்திற்கு யுகந் தருமங் குறைந்துவருதல்பற்றி, 'முறைமரபின் - அருகியழியுங் கலி' என்று கூறினார். இதனை,

காஞ்சிப்புராணம்.

"இவ்விடையேற் றறக்கடவுண் முறையானே யெழிற்கிருத முதலீர் நம்மை
யெவ்வமறு நாற்பாத முப்பாத மிருபாத மொருபா தத்தாற்
கவ்வையற நடத்திடநீர் காசினியை நடாத்திடுமின் முதன்மூ விர்க்கு
மௌவியமி லம்புயத்தோ னிரவிமா லிவர்முறையே யிறைவ ராவார்" —என்பதனு னுணர்க. (ரு)

திருமா நகரந், திருவவதா ரஞ்செய் விழவின் சிறப்பினால்,
வருமா களிகூர் நெய்யாட லெடுப்ப, வான மலர்மாரி
தருமா விசும்பின் மிகநெருங்கத், தழங்கு மொலிமங் கலந்தழைப்பப்,
பெருமா நிலத்தி, லெவ்வுயிரும் பெருகு மகிழ்ச்சி பிறங்கினவால்.

(இ-ள்.) செல்வங்கள் நிறைந்த கொடுங்கோளூரிலுள்ளவர்கள், அந்தப் பெருமாக்கோதையார் திருவவதாரஞ் செய்தருளிய திருவிழாச்சிறப்பினால் களிப்புமிக்க நெய்யாட்டுவிழாவைச் செய்யத் தொடங்கவும், சிறந்த கற்பகமலர் மழையானது பெரிய ஆகாயத்தில்மிகுதியாகநெருங்க, சபதிக்கின்ற மங்கலவாத்தியவொலிகள்தழைக்க, பெரிய இந்நிலவுலகத்தில் எல்லாவுயிர்களும் மிக்க மகிழ்வோடும் விளங்கின.—எ-று. (௬)

மண்மேற் சைவ நெறிவாழ வளர்ந்து,முன்னை வழியன்பாற்,
கண்மேல் விளங்கு நெற்றியினா கழலே பேணுங் கருத்தினரா,
யுண்மே வியவன் பினராகி,யுரிமை யரசர் தொழில்புரியா,
தெண்ணீர் முடியார் திருவஞ்சைக் களத்திற் றிருத்தொண் டேபுரிவார்.

(இ-ள்.) உலகத்தில் சைவசமயநெறியானது பெருகி வாழும்பொருட்டு வளர்ந்து பூர்வசன்மத்திற்செய்த பேரன்பினால், நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானது திருவடிகளைச் சிந்திக்குங் கருத்தினையுடையவரா யிருப்பதுடன், திருவுள்ளத்திற்பொருந்திய பேரன்பினை யுடையவராய், இராசபுத்திரருக்குரிய தொழிலைச்செய்யாமல்,தெளிவாகிய கங்கைநதியையணிந்த திருமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருவஞ்சைக்களமெனனும் ஆலயத்தில் திருத்தொண்டுகளையே செய்வாராயினார்.—எ-று.

கண்மேல் விளங்கு நெற்றியினார் எனபதை நெற்றிமேல் விளங்குங் கண்ணினார் என விகுதி பிரித்துக் கூட்டுக. (எ)

உலகி னியல்பு மரசியல்பு முறுதி யல்ல வெனவுணர்வார்,
புலரி யெழுந்து,புனன்மூழ்கிப்,புனித வெண்ணீற் றினுமூழ்கி.
நிலவு திருநந் தனவனத்து நீடும்பணிகள் பலசெய்து.
மலரு முகையுங் கொணர்ந்துதிரு மாலை சாத்த மகிழ்ந்தமைத்து.

(இ-ள்.) உலகத்தி னியல்பும் அரசாட்சியினியல்பும் உறுதியல்லவென்றுணர்ந்து, பிராதக்காலத்திலெழுந்து நீரில் ஸ்நானஞ்செய்து, பரிசுத்தம் பொருந்திய திருவெண்ணீறணிந்து, விளங்குகின்ற திருநந்தனவனத்தில் சிறந்த பல திருப்பணிகளைச் செய்து, மலர்களையும் அரும்புகளையுங் கொண்டுவந்து திருமாலை சாத்தும்படி மகிழ்ந்து தொடுத்து.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (அ)

திருமஞ் சனமுங் கொணர்ந்துதிரு வலகு மிட்டுத்,திருமெழுக்கு
வருமன் புடனின் புறச்சாத்தி,மற்றுமுள்ள திருப்பணிகள்
பெருமை பிறங்கச் செய்தமைத்துப்,பேணும்விருப்பிற் றிருப்பாட்டு
மொருமை நெறியி னுணர்வுவர,வோதிப்பணிந்தே யொழுகுநாள்.

(இ-ள்.) திருமஞ்சனங் கொண்டுவந்து திருவலகிட்டு, மிகுதியாக வருகின்ற அன்புடன் இன்பம்பொருந்தத் திருமெழுக்கிட்டு, மற்றுள்ள பல திருப்பணிகளையும் பெருமை விளங்கச் செய்து மிக்க விருப்பத்தோடு திருப்பாடல்களையும் ஒருமைப்பட்ட மனதோடும் நல்லுணர்ச்சிவர வோதி வணங்கி யொழுகும்நாள்களில்.—எ-று. (௯)

நீரின் மலிந்த கடலகழி, நெடுமால் வரையின் கொடிமதில்சூழ்
சீரின் மலிந்த திருநகர மதனிற் செங்கோற் பொறையனெனுந் [த்
காரின் மலிந்த கொடைநிழன் மேற் கவிக்குங் கொற்றக் குடைநிழற்கீழ்
தாரின் மலிந்த புயத்தரசன், றரணி நீத்துத் தவஞ்சார்ந்தான்.

(இ-ள்.) நீர் நிறைந்த கடல்போன்ற அகழியும், நெடிய சக்கரவாள கிரிபோன்ற கொடிகள் கட்டிய மதிலுஞ் சூழ்ந்த சிறப்புமிக்க அக்கொடுங்கோளூரில் மேகம்போலும் நிறைந்த கொடையினையும், நிழலை மேலே கவிக்கப்பட்ட வெண்கொற்றக் குடைநிழலின் கீழிருந் தரசுசெய்யும் மாலையணிந்த புயத்தையுமுடைய செங்கோற் பொறையனென்னுஞ் சேரராஜன் உலக வாசையையொழித்துத் தவஞ் செய்யச் சென்றான்.—எ-று.

கொடை=ஈகை. கொற்றம்=வெற்றி. தாரின் மலிந்த புயத்துச் செங்கோற்பொறையனெனும்அரசன் எனக் கூட்டுக. காரின்மலிந்த எனனுந் தொடையுடைய அடிமுழுதும் அரசனுக்கு அடை. (கo)

வந்த மரபி னரசளிப்பான் வனஞ்சார் தவத்தின் மருவியபின்,
சிந்தை மதிநூன் மந்திரிகள் சிலநா ளாய்ந்து தெளிந்தநெறி,
முந்தை மரபின் முதல்வர்திருத் தொண்டு முயல்வார் முதற்றாக
விந்து முடியார் திருவஞ்சைக் களத்தி லவர்பா லெய்தினார்.

(இ ள்.) சேரர்குலத்தில் வந்த முறைமைப்படியே அரசாட்சிசெய்த வணங்கிய செங்கோற்பொறையனென்னும் அரசன் வனத்திற் சென்று செய்யுந் தவத்திற்குச் சென்றபின்பு, சாஸ்திரங்களையுணர்ந்த சிந்தையினையுடைய மதிமந்திரிகள் சிலநாள் ஆலோசித்துத் தெளிந்த முறைமையினால், பூர்வ புண்ணிய விசேஷத்தினால் சிவபெருமானது திருத்தொண்டு செய்யும் பெருமாக்கோதையார் அவ்வரசுக்கு முதன்மையான உரிமையுள்ளவரென்று கருதி, சந்திரசேகரராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருவஞ்சைக்களத்தில் அவரிடத்தில் வந்தார்கள்.—எ-று. (கக)

எய்தி யவர்த மெதிரிறைஞ்சி, யிருந்தண் சாரன் மலைநாட்டுச்
செய்தி முறைமை யாலுரிமைச் செங்கோ லரசு புரிவதற்கு
மைதீர் நெறியின் முடிசூடி யருளு மரபால் வந்ததெனப்,
பொய்தீர் வாய்மை மந்திரிகள் போற்றிப் புகன்ற பொழுதின்கண்.

(இ ள்.) குற்றமற்ற மெய்ம்மையையுடைய மந்திரிகள் திருவஞ்சைக்களத்தை யடைந்து அவருக்கு எதிரில் வணங்கி, மிகக்குளிர்ந்தசாரலையுடைய மலைநாட்டு அரசாட்சியை முறைமைப்படி உரிமையாகிய செங்கோல்செலுத்தி அரசாள்வதற்குக் குற்றமற்ற முறைமையினால் தேவரீர் மகுடந் தரித்தருளவேண்டி நாங்கள் வந்தோமென்று துதித்துச் சொன்னபொழுது.—எ-று.

வந்தது எனபது, வழுவமைதி.

இதுமுதல் மூன்று பாடலுங் குளகம். (கஉ)

இன்பம் பெருகுந் திருத்தொண்டுக் கிடையூ றாக விவர்மொழிந்தா
ரன்பு நிலைமை வழுவாமை யரசு புரக்கு மருளுண்டே,
லென்பு மரவும் புனைந்தாரை யிடைபெற் றறிவே னெனப்புக்கு,
முன்பு தொழுது விண்ணப்பஞ் செய்ய முதல்வ ரருளினால்.

(இ-ள்.) (அதுகேட்டுப் பெருமாக்கோதையார்) இவர்கள் இன்ப மிகுகின்ற திருத்தொண்டுக்கு இடையூருகச் சொன்ஞர்கள், அன்புநிலைமை சிறிதுந் தவருமல் அரசாட்சி செய்வதற்குத் திருவருள் உளதாயின், எலும்பு மாலையையும் பாம்பையு மணிந்த சிவபெருமானிடத்து விண்ணப்பஞ்செய்து அறிவேனென்று திருக்கோயிலிலுள்ளே புகுந்து திருமுன்னின்று வணங்கி விண்ணப்பஞ்செய்ய அப்பொழுது அவ் வெம்பெருமானது திருவருளிஞல்.—எ-று.

மேவு முரிமை யரசளித்தே விரும்பு காதல் வழிபாடும்
யாவும் யாருங் கழறினவு மறியு முணர்வு, மீறில்லாத்
தாவில் விறலுந், தண்டாத கொடையும், படைவா கனமுதலாங்
காவன் மன்னர்க் குரியனவு மெல்லாங் கைவந் துறப்பெற்ருர்.

(இ-ள்.) பொருந்திய அரசுரிமையைக் கொடுத்தருளி, விரும்புகின்ற அன்பின் வழிபாடும், யாவும், யாவரும், வசனித்தவைக ளனைத்தையும் அறியும் அறிவையும், முடிவில்லாத கெடாத வல்லமையையும், தடைசெய்யப்படாத பெருங்கொடையையும், காத்தலையுடைய அரசர்க்குரியனவாகிய படைவாகன முதலிய எல்லாப் பொருள்களையுங் கைவரப் பெற்றுக்கொண்டார்.—எ-று.

அஃறிணைப் பொருள்களாகிய விலங்கு பறவை முதலிய வனைத்து மடங்க, 'யாவும்' என்றும், உயர்திணைப் பொருளாகிய மக்கள் முதலியோ ரடங்க, 'யாரும்' என்றுங் கூறிஞர். (௧௪)

ஆன வருள்கொண் டஞ்சலிசெய் திறைஞ்சிப் புறம்போந், தரசளித்த,
லூன மாகுந் திருத்தொண்டிற் கெனினு, முடையா னருளாலே,
மேன்மை மகுடந் தாங்குதற்கு வேண்டு மமைச்சர்க் குடன்படவு,
யான வமைச்சர், தாம்பணிந்,தவ் வினைமேற்கொண்டு மகிழ்ந்தெழுந்தார்.

(இ-ள்.) இவ்வாருகிய இனிய திருவருளைப் பெற்று அஞ்சலி செய்து வணங்கிப் புறத்திற்சென்று, தாம்அரசாட்சிசெய்தல் திருத்தொண்டுக்குப் பழுதாமெனினும், சிவபெருமானது திருவருளிஞல், சிறந்த கிரீடந்தரித்து அரசாட்சிசெய்யும்பொருட்டு வேண்டுகின்ற மந்திரிமார்களுக்கு உடன்படவும், பெருமைபொருந்திய அம் மந்திரிகள் அவரை வணங்கி, அத்தொழிலை மேற்கொண்டு களிப்புற்றெழுந்தார்கள்.—எ-று. (௧௫)

உரிமை நாளி, லோரைநல னெய்த, மிக்க வுபகரணம்
பெருமை சிறக்க வேண்டுவன வெல்லாம் பிறங்க, மங்கலஞ்செய்
திருமை யுலகுக் கொருமைமுடி கவித்தா, ரெல்லா வுயிருமகிழ்
தருமை நிலைமை யறிந்துபுவி தாங்குங் கழறிற் றறிவார்தாம்.

(இ-ள்.) முடிதரித்தற்குரிய சுபதினத்திலே நல்ல சுபலக்கினம் வர, பெருமை மிகும்படி வேண்டுவனவாகிய உபகரணங்க ளனைத்தையும் மங்கலகரம் விளங்க வமைத்து, பெரிய இந் நிலவுலகத்தை யரசாட்சிசெய்வதற்கு ஒப்பற்ற மணிமுடி தரித்தார்கள்; பின் எல்லா வுயிர்களும் மகிழ்வடையத்தக்க அழகிய அரசாட்சிநிலைமையை யுணர்ந்து உலகத்தைப் பாதுகாக்கும் கழறிற்றறிவாராகிய அப் பெருமாக்கோதையார்.—எ-று.

'மகிழ்தருமை நிலைமை யறிந்து' என்பதற்கு, மகிழத்தக்க ஐவகைநிலைமையை யுணர்ந்து, எனப் பொருள்கூறினும் பொருந்தும்; ஐவகை நிலைமை

யாவன:—அரசனுனவன், தன்னுலும், தன்பரிசனத்தாலும், பகைவர்களாலும், கள்வராலும், பிற வுயிர்களாலும் பயமுண்டாகாமல் அறிந்து காத்தல். அவற்றுள், தன்னுல் பயமுண்டாகாமலறிந்துகாத்தலாவது,—அரசன் தன் குடிகளிடத்துக் குடியிறையை மிகுதியாக வருத்திக்கொள்ளாமல் கொள்ளுமாறு கொண்டு செங்கோல்செலுத்திப் பாதுகாத்தல்; தன் பரிசனத்தாற் பயமுண்டாகாம லறிந்து காத்தலாவது,—அமைச்சர் முதலாயினேர் அரசன் உத்தரவைப்பெற்று அதிகாரஞ் செலுத்துகின்றேமென்னுஞ் செருக்கால் குடிகளுக்கு ஒருதீங்கும் வருவிக்காமல் தன் பரிசனத்தாரும் தன்போலவே ஒழுகும்படி செய்து காத்தல்; பகைவரால் பயமுண்டாகாம லறிந்து காத்தலாவது:—பகையரசர்கள் தன் தேசத்திற்சென்று குடிகளை வருத்திக் கொள்ளையிட்டுக்கொண்டுபோகாமல் தக்க அரண்களமைத்துப் பாதுகாத்தல்; கள்வரால் பயமுண்டாகாம லறிந்து காத்தலாவது:—கள்வர்கள் கன்னமிடுதல் வழிபறித்தல் முதலிய கொடுஞ்செய்கைகளால் குடிகளுக்குத் தீங்குண்டாகாமல் தக்க வேற்பாடுகளைச் செய்து தண்ட முதலியவற்றுல் தடுத்துப் பாதுகாத்தல்; பிற வுயிர்களால் பயமுண்டாகாமலறிந்து காத்தலாவது:—புலி-கரடி முதலிய விலங்கினங்கள் நாட்டிற் சென்று குடிகளை வருத்திச்செல்லாமல் அவற்றை வேட்டையாடி யழித்துப் பாதுகாத்தல். இதனை:—

“ மாநிலங்கா வலனுவான் மன்னுயிர்காக் குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னுற்றன் பரிசனத்தா
லூனமிகு பகைத்திறத்தால் கள்வரா லுயிர்தம்மா
லானபய மைந்துந்தீர்த் தறங்காப்பா னல்லனே ” எனவரும் திருவாரூர்ச் சிறப்பா னுணர்க. (௧௬)

தம்பி ரானுர் கோயில்வலங் கொண்டு திருமுன் றாழ்ந்தெழுந்து,
கும்ப யானை மேல்கொண்டு,கொற்றக் குடையுஞ் சாமரையு
நம்பு முரிமை யவர்தாங்க,நலங்கொ ளாகர்சூழ் வலங்கொள்வார்,
மொய்ம்பி லுவரின் பொதிசுமந்தோர்வண்ணுன்முன்னேவரக்கண்டார்.

(இ-ள்.) சிவபெருமானது திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்து சந்நிதியில் நமஸ்கரித்து எழுந்து, மத்தகத்தையுடைய பட்டத்துயானைமேலேறிக்கொண்டு வெண்கொற்றக்குடையும் வெண்சாமரையும் தம்மை நம்பியிருக்கும் உரியவர்கள் பிடித்துவர, நன்மைமிக்க அந் நகரத்தைச் சூழ்ந்து வலம்வருகின்றவர், ஒரு வண்ணுன் தோளில் உவர்மண் மூட்டையைச் சுமந்துகொண்டு தமக்குஎதிரே வரப்பார்த்தார்.—எ-று. (௧௭)

மழையிற் கரைந்தங்,குவருறி,மேனி வெளுத்த வடிவினு,
லுழையிற் பொலிந்த திருக்கரத்தா ரடியார் வேட மென்றுணர்ந்தே
யிழையிற் சிறந்த,வோடை,நுதல் யானைக் கழுத்தி னின்றிழிந்து,
விழைவிற் பெருகுங் காதலினுல் விரைந்து சென்று கைதொழுதார்.

(இ-ள்.) அம்மூட்டை மழையினுல் கரைந்து உவர் ஊறப்பெற்று உடம்பு வெளுத்திருக்கின்ற வுருவத்தினுல், மான் கன்றேடு விளங்குகின்ற திருக்கரத்தையுடைய சிவபெருமான் அடியார்களது திருவேடம் போலுமென்று உணர்ந்து, ஆபரணங்களிற் சிறந்த நெற்றிப்பட்டத்தை யுடைய யானையின்பிடரி

னின்று மிறங்கி விருப்போடு அதிகரிக்கின்ற பேரன்பினால் விரைந்துபோய்க் கைகூப்பி வணங்கினார்.—எ-று. (கஅ)

சேரர் பெருமான் றொழக்கண்டு சிந்தை கலங்கி முன்வணங்கி,
யாரோன் றடியே னைக்கொண்ட,தடியே னடிவண் ணானென்னச்,
சேரர் பிரானு]மடிச்சேர னடியே]னென்று திருநீற்றின்
வார வேட நினைப்பித்தீர், வருந்தா தேகு மெனமொழிந்தார்.

(இ-ள்.) (இவ்வாறு பெருமாக்கோதையா ரொன்னும்) சேரமான் பெருமாணாயனார் வணங்க, அதனை வண்ணான்கண்டு மனங்கலங்கி முன்னே வீழ்ந்து வணங்கி அடியேனை யார் என்று கொண்டது; அடியேன் அடி வண்ணான் என்று சொல்ல, அதற்குச் சேரமான் பெருமாணாயனாரும் அடியேன் அடிச்சேரன் என்றுகூறி, தேவரீர் திருவெண்ணீறணிந்த அன்பின் திருவேடத்தை நினைப்பித்தீர்; மனம்வருந்தாமற் செல்லுமென்று கூறினார்.—எ-று. (கக)

மன்னர் பெருமான் றிருத்தொண்டு கண்டு,மதிநீ டமைச்சரெலாஞ்
சென்னி மிசையஞ் சலிசெய்து போற்றச்,சினமால் களிறேறி,
மின்னு மணிப்பூண் கொடிமாட வீதி மூதூர் வலங்கொண்டு,
பொன்னின் மணிமா ளிகைவாயில் புக்கார்,புனைமங் கலம்பொலிய.

(இ-ள்.) பேரறிவினையுடைய மந்திரிகளனைவரும் சேரமான் பெருமாணாயனாரது அடியார் பத்தியைக்கண்டு சிரசில் கைகளை யஞ்சலியாகக் குவித்துத் துதிக்க, நாயனார், கோபத்தையும் மதமயக்கத்தையு முடைய யானைமேலேறி, இரத்தினாபரணங்கள் விளங்குங் கொடிகள் கட்டிய மாடவீதியையுடைய பழைமையாகிய நகரத்தை வலம்வந்து, பொன்னினாலும் மணிகளினாலும் அமைக்கப்பட்ட திருமாளிகைத் திருவாயிலிலே பலவகை மங்கலவாத்தியங்க ளொலிக்கப் புகுந்தருளினார்.—எ-று. (உ0)

யானை மிசைநின் றிழிந்தருளி,யிலங்கு மணிமண் டபத்தின்கண்,
மேன்மை யரியா சனத்தேறி,விளங்குங் கொற்றக் குடைநிழற்றப்,
பானல் விழியார் சாமரைமுன் பணிமா றப்பன் மலர்தூவி,
மான வரசர் போற்றிட,வீற் றிருந்தார் மன்னர் பெருமானார்.

(இ-ள்.) யானையினின்றுங் கீழேயிரங்கி, விளங்குகின்ற அழகிய மண்டபத்தில் சிறப்புமிக்க இரத்தின சிங்காசனத்தில் ஏறி, விளங்குகின்ற வெண்கொற்றக்குடைநிழற்றவும், நீலோற்பல மலர்போலும் விழிகளையுடைய மாதர்கள்முன்னே வெண்சாமரைவீசவும், பெருமைமிக்க அரசர்கள் பலவகை மலர்களைத் தூவித் துதிக்கவும் சேரமான் பெருமாணாயனார் வீற்றிருந்தருளினார். ()

உலகு புரக்குங் கொடைவளவ]ருரிமைச் செழிய ருடன்கூட,
நிலவு பெருமுக் கோக்களாய்,நீதி மனுநா னெறிநடத்தி,
யலகி லரசர் திறைகொணர,வகத்தும் புறத்தும் பகையறுத்து,
மலருந் திருநீற் றொளிவளர,மறைகள் வளர,மண்ணளிப்பார்.

(இ-ள்.) உலகத்தைப் பாதுகாக்கின்ற ஈகைத்தன்மையையுடைய பாண்டியர் பெருமானும், அரசுரிமையையுடைய சோழர் பெருமானுமாகிய விருவருடன் சேர்ந்து, விளங்குகின்ற பெருமைமிக்க சேரசோழ பாண்டியரொன்னும் மூவரசர்களாய், மநுநீதி முறைமைப்படி அரசாட்சியை நடத்தி, அளவற்ற அர

சர்கள் திறைகொணர்ந்து செலுத்த அகப்பகை புறப்பகைகளை யறுத்து, விளங்குகின்ற திருவெண்ணீற்றின்ஒளி வளரவும், வைதிகமார்க்கம் வளரவும் நிலவுலகத்தை அரசாள்வாராயினர்.—எ-று.

சந்திரகுலத்தரசனாகிய பாண்டியராஜனும், சூரியகுலத்தரசனாகிய சோழராஜனும், அக்கினிகுலத்தரசராகிய இச் சேரர்பெருமானும், முச்சுடர்க்குலத்தரசர்களாய்ச் செங்கோல்முறை செலுத்தின ரென்பார், 'உலகு புரக்குங் கொடைவளவ ருரிமைச் செழிய ருடன்கூட - நிலவு பெருமுக் கோக்களாய்'என்று கூறினர். அகத்துப் பகையறுத்தல்-யான் எனது என்னும் அகங்காரமமகாரங்களை யொழித்தல்; புறத்துப்பகையறுத்தல்—வேற்றரசர்களைப் போர்செய்து வெற்றிகொள்ளுதல்; மலருந் திருநீற்றொளி வளர, என்றது சைவசமயம் விருத்தியடைய வென்க. குடைவளவர், என்றும் பாடம். (௨௨)

நீடு முரிமைப் பேரரசா னிகழும் பயனு,நிறைதவமுந்,
தேடும் பொருளும்,பெருந்துணையுந்,தில்லைத் திருச்சிற் றம்பலத்து
ளாடுங் கழலே யெனத்தெளிந்த வறிவா,லெடுத்த திருப்பாதங்
கூடு மன்பி லருச்சனைமேற் கொண்டார்,சேரர் குலப்பெருமாள்.

(இ-ள்.) மிக்க உரிமையையுடைய அரசியற்றுதலினா லுண்டாகும் பயனும், நிறைந்த தவமும் தாம் தேடியபொருளும், தமக்குரிய பெருந்துணையும் தில்லைப்பதியிலுள்ள திருச்சிற்றம்பலத்திலே ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளும் சிவபெருமானது திருவடிகளே யென்று தெளிந்த மெய்யறிவினால் தூக்கிய குஞ்சிதபாதத்தைப் பொருந்திய அன்போடு பூசனை செய்தலைச் சேரமான் பெருமானையனார் மேற்கொண்டருளினர்.—எ-று. (௨௩)

வாசத் திருமஞ் சனமுப் பளித் தாமஞ்,சாந்த,மணிததூபந்,
தேசிற் பெருகுஞ் செழுந்தீப முதலா யினவுந்,திருவமுது
மீசர்க் கேற்ற பரிசினா லருச்சித் தருள,வெந்நாளும்
பூசைக் கமர்ந்த பெருங்கூத்தர்,பொற்பார் சிலம்பி னொலியளித்தார்.

(இ-ள்.) நறுமணங் கமழுந் திருமஞ்சனம் திருப்பள்ளித் தாமம், சந்தனம், அழகிய தூபம், அழகோடு விளங்குஞ் செழிய தீபம் முதலியனவும், திருவமுதும், சிவபெருமானுக்கு ஏற்ற முறைமையினால் நாடோறும் பூசித்துவர, அப்பூசையை ஏற்றருளுதற்கமர்ந்த ஸ்ரீ நடராசப்பெருமான் அழகு மிக்க தமது திருவடிச்சிலம்பின் ஓசையைக் கேட்பித்தருளினர்.—எ-று. (௨௪)

நம்பர் தாளின் வழிபட்டா,னாளு மின்புற் றமர்கின்றா,
ரிம்ப ருலகி லிரவலர்க்கும் வறியோ ரெவர்க்கு மீகையினாற் [ருந்தி
செம்பொன் மழையா மெனப்பொழிந்து,திருந்து வென்றி யுடன்பொ
யும்பர் போற்றத்,தம்பெருமாற குரிய வேள்வி பலசெய்தார்.

(இ-ள்.) இவ்வாறு சிவபெருமானது திருவடிகளிற் செய்யும் வழிபாட்டினால் நாடோறும் பேரின்பமுற்று வாழ்கின்ற இந்நாயனர், இந்நிலவுலகத்தில் சிவனடியார்களுக்கும், தரித்திரர்களுக்கும் கொடையினால் செம்பொன்னை மழைபோலச்,சொரிந்து, திருத்தமாகிய வெற்றியோடு பொருந்தி, தேவர்கள் துதிக்கும்படி சிவபெருமானுக்குரிய பல யாகங்களைச் செய்தருளினர்.—எ-று.

இன்ன வண்ண மிவரொழுக,வெழில்கொள் பாண்டி நன்னாட்டு
மன்னு மதுரைத் திருவால வாயி லிறைவர், வருமன்பாற்
பன்னு மிசைப்பா டலிற்பரவும் பாணனார்பத் திரனார்க்கு,
நன்மை நீடு பெருஞ்செல்வ நல்க வேண்டி யருள்புரிவார்.

(இ-ள்.) இவர் இவ்வாறொழுகும் நாள்களில், அழகு மிக்க பாண்டிவள நாட்டிலே பொருந்திய மதுராபுரியில் திருவாலவாய் என்னுந்திருக்கோயிலிலெழுந்தருளிய ஸ்ரீ சோமசுந்தரக்கடவுள், உள்ளத்துதித்த பேரன்பினால் தம்மை இசைப்பாட்டினால் துதிக்கின்ற பாணபத்திரருக்கு நன்மைமிக்க பெருஞ்செல்வங் கொடுத்தருளத் திருவுள்ளங்கொண்டு அருள்செய்வாராயினார்.—எ-று.

அரனருள்வழிப்பட்ட செல்வமாகலின் 'நன்மைநீடு பெருஞ்செல்வம்,' என்றார். (உசு)

இரவு கனவி லெழுந்தருளி,யன்பா லன்பா லெப்பொழுதும்
பரவு சேரன் றனக்குனக்குப் பைம்பொற் காணம் பட்டாடை
விரவு கதிர்செய் நவமணிப்பூண் வேண்டிற் றெல்லாங் குறைவின்றித்
தரநம் மோலை தருகின்றோந்தாழா தேகி வருகென்று.

(இ-ள்.) இரவு அப்பாணபத்திரருக்குச் சொப்பனத்தி லெழுந்தருளி, உனக்குப் பொற்காணம் - பட்டாடை - ஒளிவீசுகின்ற நவரத்தினாபரணங்கள் இன்னம் வேண்டியவைக ளனைத்துங் குறைவின்றிக் கொடுக்கும்பொருட்டு, எம்மிடத்து அன்பினால் எப்பொழுதுந் துதிக்கின்ற சேரமானுக்கு ஓலையைத் தருகின்றோம், காலந் தாழ்க்காமல் போய்வருவாய் என்று அருளிச்செய்து.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (உள)

வே று.

அதிர்கழ லுதியர் வேந்தற் கருள்செய்த பெருமை யாலே,
யெதிரில்செல் வத்துக் கேற்ற விருநிதி கொடுக்க வென்று,
மதிமலி புரிசை யென்னும் வாசகம் வரைந்த வாய்மைக்,
கதிரொளி விரிந்த தோட்டுத் திருமுகங் கொடுத்தார் காண.

(இ-ள்.) சப்திக்கின்ற வீரக்கழலையணிந்த சேரமான்பெருமாணயனாருக்குத் திருவருள்புரிந்த மேன்மையினால், ஒப்பற்ற உனது செல்வத்திற்குத்தக்க பெருந்திரவியத்தைக் கொடுக்கக்கடவை யென்று, "மதிமலிபுரிசை" என்னு முதலையுடைய திருப்பாசுர மெழுதிய மெய்ம்மையாகிய பேரொளிவீசுந்திருவேடாகிய திருமுகத்தை அவர்காணும்படி கொடுத்தருளினார்.—எ-று. (உஅ)

ஸ்ரீசொக்கநாதசுவாமி யருளிச்செய்த திருமுகப் பாசுரம்.

திருச்சிற்றம்பலம்.

மதிமலிபுரிசைமாடக்கூடற்
பதிமிசைநிலவும்பாணிறவரிச்சிறை
யன்னம்பயில்பொழிலாலவாயின்
மன்னியசிவனியாமொழிதருமாற்றம்

பருவக்கொண்மூப்படியெனப்பாவலர்க்
குரிமையினுரிமையினுதவியொளிதிகழ்
குருமாமதிபுரைநிலவியகுடைக்கீழ்ச்
செருமாவுகைக்குஞ்சேரலன்காண்க
பண்பால்யாழ்பயில்பாணபத்திரன்
தன்போலென்பாலன்பன்றன்பாற்
காண்பதுகருதிப்போந்தனன்
மாண்பொருள்கொடுத்துவரவிடுப்பதுவே.

திருச்சிற்றம்பலம்.

---

சங்கப் புலவர் திருமுகந்தந் தலைமேற் கொண்டு,பத்திரனு
மங்கப் பொழுதே புறப்பட்டு,மலைநா டணையவந் தெய்தித்,
துங்கப் புரிசைக் கொடுங்கோளூர் தன்னிற் புகுந்து,துன்னுகொடி
மங்குற் றொடக்கு மாளிகைமுன் வந்து,மன்னர்க் கறிவித்தார்.

(இ-ள்.) பாணபத்திரர், (முதலிடை கடை யென்னும்) முச்சங்கத்திற்குந் தலைமைப்புலவராய் வீற்றிருந்தருளிய சிவபெருமான் கொடுத்தருளிய அத்திருமுகத்தைத் தமது சிரமேற்கொண்டு, அப்பொழுதே புறப்பட்டு மலைநாட்டை வந்தடைந்து உயர்ந்த மதிலையுடைய கொடுங்கோளூரில் சென்று, பொருந்திய கொடிகள் மேகமண்டலத்தைத் தொடுகின்ற திருமாளிகையின் முன்னே வந்து சேரமான் பெருமாணாயனாருக்குத் தெரிவித்தார்.—எ-று. (௨௯)

தாழாதேகிவருகென்ற திறைவனாணை யாகலின் 'அங்கப்பொழுதே புறப்பட்டு' என்றார்.

கேட்ட பொழுதே கைதலைமேற் கொண்டு,கிளர்ந்த பேரன்பா,
லூட்டம் பொழிநீர் வழிந்திழிய,வெழுந்து,நடுக்க மிகவெய்தி,
யோட்டத்,தம்பொன் மாளிகையின் புறத்தி லுருகுஞ்சிந்தையுடன்,
பாட்டின் றலைமைப் பாணனார் பாதம்,பலகாற் பணிகின்றார்.

(இ-ள்.) (நாயனார்) அதைக் கேட்டவுடனே சிரமேல் கைகளைக்குவித்து, அதிகப்பட்டெழுந்த பேரன்பினால் கண்களினின்று மொழுகுகின்ற ஆனந்தக்கண்ணீரானது வழிந்து ஓட, நடுக்க மிகும்படி எழுந்து ஓட்டத்துடன் அழகிய பொன்மயமாகிய திருமாளிகையின் புறத்தில்வந்து, உருகுகின்ற திருவுள்ளத்தோடும் இசைப்பாட்டில் தலைமைபெற்ற பாணபத்திரருடைய பாதங்களில் பலமுறை வணங்குகின்றவராயினார்.—எ-று. (௩0)

அடியேன் பொருளாத்,திருமுகங்கொண் டணைந்த,தென்னவவர் தாமுங்
கொடிசேர்விடையார்திருமுகங்கைக்கொடுத்துவணங்க,கொற்றவனார்
முடிமேற் கொண்டு கூத்தாடி,மொழியுங் குழறிப்,பொழி கண்ணீர்
பொடியார் மார்பிற் பரந்துவிழப்,புவிமேற் பலகால்வீழ்ந்தெழுந்தார்.

(இ-ள். (தேவரீர்) அடியேனை ஒருபொருளாக மதித்துத் திருமுகங்கொண்டுவந்தருளினீர் என்றுகூற, அப்பாணபத்திரரும் இடபக்கொடியையுடைய சிவபெருமான் கொடுத்தருளிய திருமுகத்தை அவர் கையில் கொடுத்து நமஸ்கரிக்க, சேரமான்பெருமாணாயனார் அதனைச் சிரமேற்கொண்டு கூத்தாடி, வார்த்

தை குழறி, ஒழுகுகின்ற ஆனந்தக்கண்ணீரானது விபூதியையணிந்த திருமார்பில் பரவிச் சிந்தப் பூமியில் பலமுறை வீழ்ந்து வணங்கி யெழுந்தார்.—எ-று.

பரிவிற் போற்றித் திருமுகத்தைப் பலகாற்றொழுது படியெடுக்க,
வுரிய வகையா லெடுத்தோதி யும்பர் பெருமா னருள்போற்றி,
விரிபொற் சுடர்மா ளிகைபுக்கு,மேவு முரிமைச் சுற்றமெலாம்
பெரிது விரைவிற் கொடுபோந்து,பேணு மமைச்சர்க் கருள் செய்வார்.

(இ-ள்.) அன்புடன் துதித்துத் திருமுகத்தைப் பலதரம் வணங்கி எடுக்கவேண்டிய முறைமைப்படி யெடுத்து, தேவர்கள் நாயகராகிய சிவபெருமானது திருவருளைத்துதித்து, பொன்னொளிவிரிந்த திருமாளிகையிற் புகுந்து உரிமையாகிய உறவினரனைவரையும் மிக விரைந்து, அழைத்துவந்து, விரும்பிச் சூழ்ந்திருக்கின்றமந்திரிகளைப்பார்த்துக் கூறுவாராயினர்.—எ-று. (கூஉ)

நங்கள் குலமா ளிகையிதனு,ணலத்தின் மிக்க நிதிக்குவையாய்ப்
பொங்கி நிறைந்த பலவேறு வகையிற் பொலிந்த பண்டார
மங்க னொன்று மொழியாமை யடையக் கொண்டு புறப்பட்டுத்,
தங்கும் பொதிசெய் தாளின்மேற் சமைய வேற்றிக்,கொணருமென.

(இ-ள்.) நமது சிறப்புப் பொருந்திய இத்திரு மாளிகையில் நன்மைமிக்க பொருட் குவைகளாய் அதிகப்பட்டு நிறையப்பெற்றுள்ள பல வேறு வகையாக விளங்குகின்ற பொக்கிஷத்தை அங்கு ஒன்றுந் தவறாமல் முழுது மெடுத்துக்கொண்டு புறப்பட்டுச் சுமையாகக் கட்டி ஆட்களின்மேல் பொருந்த ஏற்றிக்கொண்டு வாருங்களென்று கட்டளையிட்டருள.—எ-று.

இது முதலிரண்டு பாடலுங் குளகம். (கூக)

சேரர் பெருமா னருள்செய்யத்,திருந்து மதிநூன் மந்திரிகள்,
சாரு மணிமா ளிகையுள்ளாற் றனங்க ளெல்லா,நிறைந்தபெருஞ்
சீர்கொ ணிதிய மெண்ணிறந்த வெல்லாம்,பொதிசெய் தாளின்மேற்
பாரி னெருங்க மிசையேற்றிக் கொண்டு வந்து,பணிந்தார்கள்.

(இ-ள்.) இவ்வாறு சேரமான் பெருமாணாயனார் கட்டளையிட்டருளவும், திருத்தமாகிய சாஸ்திர வுணர்ச்சியையுடைய மந்திரிகள் அழகுபொருந்திய திருமாளிகையினுள்ளே யிருக்கின்ற தனங்களையும், நிறைந்த பெருஞ்சிறப்பினையுடைய (நவரத்தினங்கள் ஆபரணங்கள் முதலிய) அளவற்ற பொருள்களையும் சுமையாகக்கட்டிப் பூமியில்நெருங்க ஆளின்மேலேற்றிக்கொண்டுவந்து வணங்கினார்கள்.—எ-று. ஆல்-அசை. (கூச)

பரந்த நிதியின் பரப்பெலலாம்,பாண னாபத திரனாக்கு,
நிரந்த தனங்கள் வெவ்வே று நிரைத்துக் காட்டி,மற்றிவையு,
முரந்தங் கியவெங் கரி,பரிகண் முதலா,வுயிருள் ளனதனமும்,
புரந்த வரசுங்,கொள்ளுமென மொழிந்தார் பொறையர் புரவலனார்.

(இ-ள்.) சேரமான் பெருமாணாயனார் பரந்தபொருட் டொகைகளனைத்தையும் வரிசையாகவைத்து, நிறைந்த அவ்வத்தனங்களைத் தனித்தனியே பாணபத்திரருக்குக் காட்டி, இப்பொருளையும், வலிமை பொருந்திய வெவ்விய யானை குதிரை முதலாகிய உயிருள்ள பொருள்களையும் அடியேன் பாதுகாத்துவந்த அரசாட்சியையும் தேவரீர் கைக்கொள்வீராகவென்று வேண்டிக்கொண்டனர்.

௯௫௦

பாண னார்பத் திரனாரும், பைம்பொன் மௌலிச் சேரலனார்
காணக் கொடுத்த விவையெல்லாங் கண்டு மகிழ்வுற் றதிசயித்துப்,
பேண வெனக்கு வேண்டுவன வடியேன் கொள்ளப் பிஞ்ஞகனா
ராணை, யரசு மரசுறுப்புங் கைக்கொண் டருளு மெனவிறைஞ்ச.

(இ-ள்.) அப்பொழுது பாணபத்திரர் தாம் காணும்படி பசும்பொன்னா லாகிய மணிமுடியையுடைய சேரமான் பெருமனாயனார் கொடுத்தருளிய இப்பொருள்களனைத்தையுங் கண்டுமகிழ்ந்து அதிசயமடைந்து, சுவாமீ! விரும்ப அடியேன் எனக்கு வேண்டுவனவற்றை மாத்திரம் பெற்றுக்கொள்ளும்படி சிவ பெருமானது கட்டளை; ஆதலால், தேவரீர் அரசையும், அரசுறுப்புகளையுங் கைகொள்ளவேண்டுமென்று கூறிவணங்க.—எ-று.

'உனக்குப் பைம்பொற் காணம் பட்டாடை, விரவு கதிர்செய் நவமணி ப்பூண் வேண்டிற் றெல்லாங் குறைவின்றித் தர' வென்ற திறைவனாணை யாத லால் பேண வெனக்கு வேண்டுவன வடியேன் கொள்ளப் பிஞ்ஞகனா ராணை' என்றார்.

இதுமுதலிரண்டு பாடலுங் குளகம். (௬௬)

இறைவ ராணை மறுப்பதனுக் கஞ்சி யிருந்தா ரிகல்வேந்தர்,
நிறையு நிதியின் பரப்பெல்லா, நிலத்தை நெளிய வுடன்கொண்டே,
யுறையும் மதத்துக் களிறுபரி, யுள்ளிட் டனவேண் டுவகொண்டோர்
பிறைவெண்கோட்டுக்களிற் றுமேற்கொண்டுபோந்தார்பெரும்பாணர்.

(இ-ள்.) வலிமைதங்கிய சேரமான் பெருமானாயனார் சிவபெருமானது கட்டளையை மறுப்பதற்குஅஞ்சி அதற்குடன்பட்டிருந்தனர்; சிறந்த பாணபத் திரர் நிறைந்த தனங்களனைத்தையும் பூமிநெளியும்படி தம்முட னெடுத்துக்கொ ண்டு மும்மதத்தினையுடைய யானை குதிரை முதலியவற்றுள் தமக்குவேண்டுவ னவற்றையுங் கொண்டு, பிறைபோலும் வெண்மையாகிய கொம்பினையுடைய ஒருயானைமேலேறிக்கொண்டு போயினார்.—எ-று. (௬௭)

பண்பு பெருகும் பெருமாளும், பாண னார்பத் திரனார்பின்
கண்கள் பொழிந்த காதனீர் வழியக் கையாற் றொழுதணைய,
நண்பு சிறக்கு மவர்தம்மை நகரின் புறத்து விடைகொண்டு,
திண்பொற் புரிசைத் திருமதுரை புக்கார் திருந்து மிசைப்பாணர்.

(இ-ள்.) நற்குணமிக்க சேரமான் பெருமாளாயனாரும் பாணபத்திரருக் குப்பின்னே கண்களினின்றுஞ் சிந்துகின்ற ஆனந்தக்கண்ணீர்வழியக் கைக ளால் தொழுதுகொண்டு செல்ல, திருத்தமாகிய இசைப்பாட்டினையுடைய பா ணபத்திரர் நட்புமிக்கஅந்நாயனாரை நகர்ப்புறத்திலே விடைபெற்றுக்கொண்டு வலிய பொன்மயமாகியமதிலையுடைய அழகிய மதுராபுரியை யடைந்தார்.

வான வரம்பர் குலம்பெருக்கு மன்ன னாரு மறித்தேகிக்,
கூன விளவெண் பிறைக்கண்ணி முடியாரடிமை கொண்டருளும்
பான்மை யருளின் பெருமையினை நினைந்து பலகாற் பணிந்தேத்தி,
மேன்மை விளங்கு மாளிகைமண் டபத்து ளரசு வீற்றிருந்தார்.

(இ-ள்.) சேரர்குலத்தை விருத்திசெய்கின்றவராகிய சேரமான் பெரு மாளாயனாரும் திரும்பிச்சென்று வளைந்த இளைய வெண்பிறையாகிய மாலையை

யணிந்த திருமுடியையுடைய சிவபெருமான் (பாணபத்திரனை) அடிமைகொண் டருளிய திருவருட்பகுதியின் மேன்மையைச் சிந்தித்துப்பலமுறை வணங்கித் துதித்துப் பெருமைமிகுந்த திருமாளிகைமண்டபத்திலே அரசுசெய்தருளினுர்.

பிறையைக் கண்ணியாகச் சூடிஞ னிறைவ னென்பதனை 'மாதர்பிறை க்கண்ணியானை' எனவும் பெரியார் பணித்தமை காண்க. (கூகூ)

அளவில் பெருமை,பயிலயோ னிகளுங் கழறிற் றறிந்தவற்றி
னுளமன் னியமெய் யுறுதுயர மொன்று மொழியா வகையகற்றிக்,
களவு,கொலைகண் முதலான கடந்து,கழறிற் றறிவாராதாம,
வளவர் பெருமா னுடன்செழியர்மகிழுங் கலப்பில வைகுநாள்.

(இ-ள்.). அளவற்ற பெருமையோடும் எல்லாவுயிர்களுங் கழறி னவை களையறிந்து அவற்றின் உள்ளத்திற் பொருந்திய மெய்ம்மையாகிய துன்பங்கள் சிறிதுந் தங்காமலொழித்து, களவு கொலைமுதலிய தீமைகளைநீக்கிச் சோழன் பாண்டியனென்னு மிருதிறத்தரசருமமகிழத்தக்க உறவோடுவாழும் நாள்களில்.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (சo)

வானக் கங்கை நதிபொதிநத மல்கு சடையார் வழிபாட்டுத்
தூநற் சிறப்பி னர்ச்சனையாந் தொண்டு புரிவார், தமக்கொருநாட்
டேனக் கலர்ந்த கொன்றையினு,ராடற் சிலம்பி னொலிமுன்போன்
மானப் பூசை முடிவின்கட் கேளா தொழிய, மதிமயங்கி.

(இ-ள்.) ஆகாயகங்கை தங்கி விளங்குகின்ற சடைமுடியையுடைய சிவபெருமானது வழிபாட்டில் தூய்மையாகியநல்லசிறப்பினையுடைய பூசையா கிய திருத்தொண்டு செய்கின்றவராகிய சேரமான் பெருமாணுயனுருக்கு ஒரு நாள், தேன் விளங்கி மலர்ந்த கொன்றைமாலையை யணிந்த சிவபெருமானது திருச்சிலம்பின் ஓசை முன்போலச் சிவபூசையின் முடிவிலே கேளாதொழிய அதனுல் புத்திமயங்கி.—எ-று. (சக)

பூசை கடிது முடித்தடியே னென்னே பிழைத்த தெனப்பொருமி,
யாசை யுடம்பான், மற்றினிவே றடையு மின்பம் யாதென்று,
தேசின் விளங்கு முடைவாளை யுருவித் திருமார் பினினுட்ட,
வீசர் விரைந்து திருச்சிலம்பி னோசை மிகவு மிசைப்பித்தார்.

(இ-ள்.) சிவபூசையை விரைவில்முடித்து, அடியேன்யாது பிழைசெய் தேனோவென்று துயரடைந்து, விருப்புகின்ற இந்தத்தேகத்தினுல் இனியடைய த்தக்க வேறு இன்பம் யாதென்று ஒளிவிட்டு விளங்குகின்ற உடைவாளை யுரு வித் தமது திருமார்பில்நாட்ட, உடனே ஸ்ரீநடராசப்பெருமான் விரைந்து திரு ச்சிலம்போசையை மிகவுங் கேட்பித்தருளினுர்.—எ-று. (சஉ)

ஆடற் சிலம்பி னொலிகேளா,வுடைவா ளகற்றி,யங்கைமலர்
கூடத் தலைமேற் குவித்தருளிக் கொண்டு விழுந்து தொழுதெழுந்து
நீடப் பரவி மொழிகின்றுர்,நெடுமால் பிரம னருமறைமுன்
றேடற் கரியாய்,திருவருண்முன் செய்யா தொழிந்த தென்,னென்றுர்.

(இ-ள்.) திருநடனச்சிலம்போசையைக் கேட்டு உடைவாளை யொழித் துத் தாமரைமலர்போன்ற அழகிய திருக்கரங்களைச் சிரமேற் குவித்துக்கொ ண்டு நிலமுற விழுந்து நமஸ்கரித் தெழுந்து மிகவுந் துதித்துக் கூறுகின்றுர்;

திருமாலும் பிரமனும் அருமையாகிய வேதங்களும் தேடியறிதற்கரிய எம்பெருமானே! தேவரீர் இத்திருவருளை முன்புசெய்யாதொழிந்தது யாதுகாரணமென்று வினவினர்.—எ-று. (சஙு)

என்ற பொழுதி லிறைவர்தா மெதிர்நின் றருளா தெழுமொலியான்,
மன்றி னிடைநங் கூத்தாடல் வந்து வணங்கி,வன்றொண்ட
னொன்று முணர்வா னமைப்போற்றி யுரைசேர் பதிகம் பாடுதலா,
னின்று கேட்டு வரத்தாழ்த்தோ மென்றா ரவரை நினைப்பிப்பார்.

(இ-ள்.) இவ்வாறு வினவியபோது, சிவபெருமான் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளை நினைப்பிக்கும்பொருட்டு எதிரில் நின்று அருளிச்செய்யாமல் அசரீரியாக, வன்றொண்டன்வந்து கனகசபையில் நமது ஆனந்தத்தாண்டவத்தை வணங்கி, ஒருமைப்பட்ட மெய்யுணர்வினால் நம்மைத்துதித்து நல்ல சொற்களமைந்த திருப்பதிகம் பாடுதலால், அதனை நாம் நின்று கேட்டு இங்குவரத் தாழ்த்தோமென்று திருவாக்கையருளிச்செய்தார்.—எ-று. (சசு.)

தமிழ்வேதமாகலின் உரைசேர் பதிகமென்றார்.

என்னே யடியார்க் கிவரருளுங் கருணை யிருந்த வாறென்று,
பொன்னே சடையார் திருநடஞ்செய் புலியூர்ப்பொன்னம் பலமிறைஞ்சித்
தன்னே ரில்லா வன்றொண்டர் தமையுங் காண்ப னெனவிரும்பி,
நன்னீர் நாட்டுச் செலநயந்தார் நாமச் சேரர் கோமானார்.

(இ-ள்.) புகழையுடைய சேரமான் பெருமாணயனார், அடியார்களுக்கு இவ்வெம்பெருமான் திருவருள் புரியுங்கருணையிருந்தவாறு என்னே யென்று வியந்து, பொன்போலும் அழகிய சடைமுடியையுடைய சிவபெருமான் திருநடனஞ்செய்யும் திருப்புலியூரிலுள்ள கனகசபையை வணங்கி, தமக்கொருவருமொப்பில்லாத வன்றொண்டரையுந் தரிசிப்பேனென்று விருப்பங்கொண்டு, நல்ல நீர்வளம்பொருந்திய சோழநாட்டிற்குச் செல்லும்படி எண்ணங்கொண்டருளினர்.—எ-று.

புலியூர் என்பது ஸ்ரீ சிதம்பரத்தின் திருநாமங்களிலொன்று; அது புலிப்பாதராகிய வியாக்கிரபாத முனிவர் பூசித்தகாரணம்பற்றி வந்தது. பெரும்பற்றப்புலியூ ரென்னலு மமையும். (சஎ)

பொன்னார் மௌலிச் சேரலனார் போற்று மமைச்சர்க் கீதியம்பி,
நன்னாட் கொண்டு,பெரும்பயண மெழுக வென்று,நலஞ்சாற்ற,
மின்னா ரயில்வேற் குலமறவர்,வென்றி நிலவுஞ் சிலைவீர,
ரந்நாட் டுள்ளா ரனையநிரந் தணைந்தார்,வஞ்சி யகநகர்வாய்.

(இ-ள்.) பொன்னாலாகிய மணிமுடியையுடைய சேரமான் பெருமாணயனார் தம்மைப்போற்றுகின்ற மந்திரிமார்களுக்கு இதனையுரைத்து, நல்ல நாள்கொண்டு பெரும்பயண மெழுங்களென்று நன்மைபொருந்தக் கூறியருள, மின்போல் விளங்குகின்ற கூர்மையாகிய வேலையுடைய மறவர்களும், வெற்றி பொருந்திய வில்லைப்பிடித்த வீரர்களும், அந்நாட்டிலுள்ளவர்களனைவரும் வஞ்சியென்னும்பெயரையுடைய கொடுங்கோளூரில் நிறைந்து வந்தார்கள்.—

இட்ட நன்னா ளோரையினி,லிறைவர் திருவஞ் சைக்களத்து
மட்டவிரி பூங்கொன்றையினார் தம்மைவலங்கொண் டிறைஞ்சிப்போய்,

பட்ட நுதல்வெங் களியானைப் பிடர்மேற் கொண்டு, பனிமதியந்
தொட்ட கொடிமா ளிகைமூதூர் கடந்தா, ருதியர் தோன்றலார்.

(இ-ள்.) சேரமான் பெருமாணாயனார் பிரயாணத்திற்குக் குறித்த நல்ல நாளில், சுபலக்கினத்திலே பெருமானது திருவஞ்சைக்களத்தில் தேன்விரிந்த கொன்றைமலர் மாலையையணிந்த சிவபெருமானைப் பிரதக்ஷணஞ்செய்துவணங்கிப் புறத்திற்சென்று, நெற்றிப்பட்டத்தையுடைய வெவ்விய மதக்களிப் பமைந்த பட்டத்துயானையின் பிடர்மீதேறிக்கொண்டு, குளிர்ந்த சந்திரனைத்தொடுகின்ற கொடிகள் கட்டிய திருமாளிகைகள் பொருந்திய பழைமையாகிய கொடுங்கோளூரைக் கடந்தருளினார்.—எ-று. (சஎ)

யானை யணிகள் பரந்துவழி யெங்கு நிரந்து செல்லுவன,
மான மலைநாட் டினின்மலிந்த மலைக ளுடன்போ துவபோன்ற;
சேனை வீரர் புடைபரந்து செல்வா, ரங்கண் மலைசூழ்ந்த
கான மடைய வுடன்படர்வ போலுங் காட்சி மேவினதால்.

(இ-ள்) யானைப்படைகள் பரவிவழியெங்கும் நிறைந்து செல்லுதல் பெருமை பொருந்திய மலைநாட்டில் அதிகப்பட்டிருக்கின்றமலைகள் தம்முடன் வருதலையொத்திருந்தன; சேனைவீரர்கள் பக்கங்களில் பரவிச்செல்லுதல் அங்குஅம்மலைகளைச் சூழ்ந்தகாடு முழுதும் உடன் செல்லுதல் போலுங்காட்சியடைந்திருந்தது—எ-று. (சஅ)

புரவித் திரள்க ளாயோதப் பொலிவி னசைவிற் போதுவன
வரவச் சேனைக் கடற்றரங்க மடுத்து மேன்மே லடர்வனபோல்
விரவிப் படர்ந்து சென்றனவான் மிசையு மவனு மொன்றாக
நிரவிப் படர்ந்த நெடுஞ்சேனை நேமிநெளியச் சென்றனவால்.

(இ-ள்.) குதிரைக்கூட்டங்கள் சேனைப்பொலிவோடும் அசைந்துகொண்டு செல்லுதல், பாம்பின் கூட்டங்கள் அலைகளையுடைய கடலையடுத்து மேலு மேலும் நெருங்குவனபோலக் கலந்து பரவிச்சென்றன; மேடும்பள்ளமுஞ் சமமாகும்படி நிரவிச்சென்ற பெருஞ்சேனைகள் பூமி நெளியும்படி சென்றன.—எ-று. (சகூ)

அந்நாட் டெல்லை கடந்தணைய, வமைச்சர்க் கெல்லாம் விடையருளி,
மின்னார் மணிப்பூண் மன்னவனார் வேண்டு வாரை யுடன்கொண்டு,
கொன்னா ரயில்வேன் மறவர்பயில் கொங்கர் நாடு கடந்தருளிப்,
பொன்னாட் டவரு மணைந்தாடும் பொன்னி நீர்நாட் டிடைப்போவார்.

(இ-ள்.) மின்போல் விளங்கும் இரத்தினாபரணங்களை யணிந்த சேரமான் பெருமாணாயனார் அம்மலை நாட்டின் எல்லையைக்கடந்துவர, பின் மந்திரிமார்களுக்கெல்லாம் விடைகொடுத்தருளி வேண்டியவர்களை உடனழைத்துக்கொண்டு, அச்சந்தருகின்ற கூரிய வேற்படையையுடைய மறவர்கள் வாழும் கொங்கு நாட்டைக்கடந்து, பொன்னுலகவாசிகளாகிய தேவர்களும் அடைந்து மூழ்குகின்ற (புண்ணிய தீர்த்தமாகிய) காவிரிநதிசூழ்ந்த சோழநாட்டின்கண் செல்வாராயினார்.—எ-று. (ருo)

சென்ற திசையிற் சிவனடியார் சிறப்பி னோடு மெதிர்கொள்ளக்
குன்றுங் கானு முடைக்குறும்ப ரிடங்க டோறுங் குறைவறுப்பத்
துன்று முரம்புங் கானியாறுந் துறுகற் சுரமும் பலகடந்து
வென்றி விடையா ரிடம்பலவு மேவிப் பணிந்து செல்கின்றார்.

(இ-ள்.) தாம் செல்லுந்திசைகளிலுள்ள சிவனடியார்கள் சிறப்போடும் எதிர்கொள்ளவும், குன்றுகளையுங் காடுகளையு முடைய குறுநிலமன்னர்கள் அவ்வவ் விடங்கடோறும் தங்களுக்கு நேர்ந்த குறைவை யொழிக்கவும் பொருந்திய மேட்டுப்பூமிகளும், கானாறுகளும் துறுகற்களையுடைய பாலைநிலங்களுமாகிய பலவற்றையுங்கடந்து, வெற்றிபொருந்திய இடபவாகனத்தையுடைய சிவபெருமானது திருப்பதிகள் பலவற்றையுமடைந்து வணங்கிச் செல்வாராயினார்.

முடைக்குறும்பர் என்பதற்கு முடைநாற்றத்தை யுடைய குறும்பர்கள் எனினுமாம். (௩௧)

குறைவறுத்தலாவது—அரசர் பெருமானுக்கும் அவரதுசேனைகளுக்கும் படிமுதலியவைகொடுத்து உபசரித்தல்.

பொருவில் பொன்னித் திருநதியின் கரைவந் தெய்திப் புனிதநீர்
மருவு தீர்த்த மகிழ்ந்தாடி மருங்கு வடபாற் கரையேறித்
திருவிற் பொலியுந் திருப்புலியூர்ச் செம்பொன் மன்று ளாடம்போற்ற
வுருகு மனத்தி னுடன்சென்றா ரொழியா வன்பின் வழிவந்தார்.

(இ-ள்.) ஒப்பற்ற காவிரிநதிக் கரையில் வந்தடைந்து தூய்மையாகிய நீர் பொருந்திய அத்தீர்த்தத்தில் மகிழ்ந்து ஸ்நானஞ்செய்து அருகிலுள்ள வடதிசைக்கரையிலேறி பலவகைச்செல்வங்களினால் சிறந்தோங்குகின்றதிருப்புலியூரிலுள்ள கனகசபையிற் சிவபெருமான் செய்தருளும் ஆனந்தத்தாண்டவத்தை வணங்கித் துதிக்கும் பொருட்டு நீங்காத அன்பின் வழியேவந்தருளிய சேரமான் பெருமானாயனார், கசிந்துருகுகின்ற திருவுள்ளத்துடன் சென்றருளினார்.—எ-று. (௩௨.)

வந்து தில்லை மூதூரி னெல்லை வணங்கி மகிழ்ச்சியினு
லந்த ணாளர் தொண்டர்குழா மணைந்த போதி னெதிர்வணங்கிச்
சந்த விரைப்பூந் திருவீதி யிறைஞ்சித் தலைமேற் கரமுகிழ்ப்பச்
சிந்தை மகிழ வெழுநிலைக்கோ புரத்தை யணைந்தார் சேரலனார்.

(இ-ள்.) பழமையாகிய திருத்தில்லைப்பதியில் வந்து திருவெல்லையை வணங்கி தில்லைவாழந்தணர்களும் அடியார் திருக்கூட்டங்களும் மகிழ்வோடு எதிர்கொண்டபொழுது அவர்களை யெதிரேவணங்கி, நறுமணங் கமழும் மலர்களையுடைய அழகிய திருவீதியை வணங்கிச் சிரமேற் கரங்களைக்குவித்து மனமகிழும்படி எழுநிலைகளையுடைய திருக்கோபுரத்தைச் சேரமான் பெருமானாயனாரடைந்தருளினார்.—எ-று. (௩௩)

நிலவும் பெருமை யெழுநிலைக்கோ புரத்தின் முன்னர் நிலத்திறைஞ்சி
மலரும் கண்ணீர்த் துளிதும்பப் புகுந்து மணிமா ளிகைவலங்கொண்
டுலகு விளக்குந் திருப்பேரம் பலத்தை வணங்கி யுள்ளணைந்தார்
அலகி லண்ட மளித்தவர்நின் றாடுந் திருச்சிற் றம்பலமுன்.

(இ-ள்.) மேன்மைவிளங்குகின்ற எழுநிலைத் திருக்கோபுரத்தின் முன்னே பூமியில் விழுந்து வணங்கி, மலர்ந்ததிருக்கண்களி னின்றும் ஆனந்தக் கண்ணீர் ததும்பும்படி உள்ளேபுகுந்து அழகிய திருக்கோயிற் றிருமாளிகையைப் பிரதக்ஷணஞ் செய்து, உலகத்திலுள்ள ஆன்மகோடிகளைத் தெளிவிக்கின்ற திருப்பேரம்பலத்தை வணங்கி, எண்ணிறந்த அண்டகோடிகளை யளித்தருளிய ஸ்ரீ நடராசப் பெருமான் உள்ளே நின்று ஆனந்தத்தாண்டவம் புரிந்தருளுந் திருச்சிற்றம்பலத்தின் முன்னடைந்தருளினார்.—எ-று. (௫௪)

இறைவன் பஞ்சகிருத்திய நடனஞ் செய்தருளுந் திருப்பதியாதலின் 'நின்றாடுந் திருச்சிற்றம்பலமுன்' என்றார். கண்ணீரரும்பல் அன்பின்பெருக்கினிடைப்பட்டதென்க.

அளவி லின்பப் பெருங்கூத்த ராட,வெடுத்த கழல்காட்ட,
வுளமும் புலனு மொருவழிச்சென் றுருகப் போற்றி யுய்கின்றார்,
களனில் விடம்வைத் தளித்தவமு தன்றி,மன்றிற் கழல்வைத்து
வளருந் திருக்கூத் தமுதுலகுக் களித்த கருணைவழுத்தினார்.

(இ-ள்.) அளவற்ற பேரின்பவடிவினராகிய ஸ்ரீ நடராசப்பெருமான் திருநடனஞ் செய்யும்பொருட்டுத் தூக்கியருளிய குஞ்சிதபாதத்தைத் தரிசிப்பித்தருள, மனமும் ஐம்புலன்களும் ஒருமைப்படச்சென்று மனமுருகத்துதிக்கின்றவராகிய சேரமான் பெருமாணாயனார், திருமிடற்றில் விடத்தைத்தரித்துத் (தேவர்களுக்குக்) கொடுத்தருளிய அமுதமேயன்றி கனகசபையில் திருவடியைவைத்துத் திருவருள் வளருந் திருநடனமாகிய அமுதத்தை உலகத்திற்கு அளித்தருளிய திருவருட்டிறத்தைத் துதித்தருளினார்.—எ-று.

நிரதிசய வின்பத்தை யுதவும் நடனமாகலானும், அளவைக் கெய்தாமையானும் அளவிலின்பப் பெருங்கூத்த ரென்றும், குஞ்சிதபாதமாகலின் ஆடவெடுத்த கழலென்றும், தம்மையடைந்த தேவர்களது துன்பநீங்கும்பொருட்டு, விடத்தையணிந்து, அமுதளித்தனரென்பது தோன்ற, 'களனில் விடம்வைத்தளித்த வமுதன்றி' என்றும், அது சலியா நடனமாகலானும், அடைந்தாரை முதல்வன் தாங்கலானும் வளருந் திருக்கூத்தமுதென்றுங் கூறினார்.

'களனில்விடம் வைத்துலகளித்தவமுதன்' என்றும், பாடம். (௫௫)

ஆரா வாசை,யானந்தக் கடலுட் டிளைத்தே,யமர்ந்,தருளாற்
சீரார் வண்ணப் பொன்வண்ணத் திருவந் தாதி,திருப்படிக்கீழ்ப்,
பாரா தரிக்க வெடுத்தேத்திப்,பணிந்தார்,பருவ மழைபொழியுங்
காரா னிகர்க்க,வரியகொடைக் கையார் கழறிற் றறிவார்தாம்.

(இ-ள்.) கார்ப்பருவத்தில் பெருமழையைப் பொழியு மேகத்தினாலும் நிகர்த்தற்கரிய ஈகைத்தன்மை பொருந்திய திருக்கரத்தினையுடைய சேரமான் பெருமாணாயனார், நீங்காத பெருவிருப்பினையுடைய சிவானந்தப்பெருங்கடலில் மூழ்கிப்பொருந்தி ஸ்ரீ நடராசப்பெருமான் றிருவருளினால், சிறப்புமிக்க அழகிய பொன்வண்ணத் தந்தாதியைத் திருப்படிக்கீழ் நின்று உலகத்தார் விருப்புறும்படி பாடித்துதித்து வணங்கியருளினார்.—எ-று.

இறைவனே திருமுகங்கொடுப்பப் பாணபத்திரருக்குதவிய பரிசு விளங்கக் காரானிகர்க்க வரிய கொடையென்றும், அன்பின்வழிநின்று திருவந்தாதி பாடினமையான் அருளாற் சீரார்வண்ணப்பொன் வண்ணத் திருவந்தாதி திருப்படிக்கீழ்ப் பாராதரிக்க வெடுத்தேத்தி யென்றுங் கூறினர். (௬௯)

பொன்வண்ணத்தந்தாதி.

திருச்சிற்றம்பலம்.

பொன்வண்ணமெவ்வண்ணமவ்வண்ண மேனிபொலிந்திலங்கு
மின்வண்ணமெவ்வண்ணமவ்வண்ணம் வீழ்சடைவெள்ளிக்குன்றந்
தன்வண்ணமெவ்வண்ணமவ்வண்ண மால்விடைதன்னைக்கண்ட
வென்வண்ணமெவ்வண்ணமவ்வண்ண மாகியவீசனுக்கே.

மாயனன்மாமணிகண்டன்வளர்சடையாற்கடிமை
யாயினதொண்டர்துறக்கம்பெறுவது சொல்லுடைத்தே
காய்சினவானைவளருங்கனகமலையருகே
போயினகாக்கையுமன்றேபடைத்ததுபொன்வண்ணமே.

திருச்சிற்றம்பலம்.

தம்பி ரானர்க் கெதிர்நின்று தமிழ்ச்சொன் மாலை கேட்பிக்க,
வும்பர் வாழ நடமாடு மொருவ, ரதற்கு பரிசிலெனச்,
செம்பொன் மணிமன் றினிலெடுத்த செய்ய பாதத் திருச்சிலம்பி,
னிம்பர் நீடு,மெழுந்தவொலி, தாமு மெதிரே கேட்பித்தார்.

(இ-ள்.) (நாயனர்)சிவபெருமான் திருமுன்னின்று, தமிழ்ச்சொற்களாலாகிய பிரபந்தமாலையைக் கேட்பிக்க, தேவர்கள் சிவானந்தப் பெருவாழ்வடையும்பொருட்டுத் திருநடனஞ்செய்தருளும் ஸ்ரீ நடராசப்பெருமான் அதற்குப் பரிசிலாக, செம்பொன்னாலாகிய திருச்சிற்றம்பலத்திற் குஞ்சித பாதத்தினது திருச்சிலம்பினின்றும் இவ்வுலகமோங்கும்படி எழுந்த ஓசையை எதிரேதாமுங் கேட்பித்தருளினர்.—எ-று. (௭௰)

ஆடற் சிலம்பி னொலிகேட்பா, ரளவி லின்ப வானந்தங்
கூடப் பெற்ற பெரும்பேற்றின் கொள்கை வாய்ப்பக் கும்பிடுவார்,
நீடப் பணியுங் காலமெலா நின்று தொழுது புறம்போந்து,
மாடத் திருமா ளிகைவீதி வணங்கிப், புறத்து வைகினர்.

(இ-று.) திருநடனச் சிலம்போசையைக் கேட்பவராகிய சேரமான் பெருமாணயனர் அளவில்லாத பேரின்பத்தைத்தருகின்ற சிவானந்தமானது கைவரப்பெற்ற பெரும்பேற்றின் தன்மை யமையத் தொழுகின்றவராய், வணங்கவேண்டிய பூசாகாலங்கடோறுமகால நீட்டித்து நின்றுவணங்கி வெளியில்வந்து, மேல்மாடங்களையுடைய திருமாளிகைத் திருவீதியை வணங்கிப் புறத்தில் வசித்தருளினர்.—எ-று

திருவடியிற்சாத்துஞ் சிலம்புமோசையும்,பரவிந்துவும் பரநாதமுமாகலின், ஆடற்சிலம்பினொலி யென்றும், தம்மை மறந்து சிவபோதமாய் வணங்கலான், நீடப்பணியுங் காலமெலா நின்றுதொழுது என்றுங் கூறினர். (௭௧)

பரவுந் தில்லை வட்டத்துப் பயில்வார்,பைம்பொ னம்பலத்து
ளரவும் புனலுஞ் சடையாட,வாடு வார்கூத் தாராமை
விரவுங் காதன் மிக்கோங்க,வேதம் படியுந் திருப்படிக்கீ,
ழிரவும் பகலும் பணிந்தேத்தி,யின்பணு சிறக்கு மந்நாளில்.

(இ-ள்.) பரந்ததில்லைப்பதியின் எல்லையில் வசிக்கின்ற நாயனார்,கனக சபையில் பாம்பும் கங்கையும் திருச்சடையிலாடும்படி திருநடனஞ் செய்கின்றவராகிய சிவபெருமானது திருக்கூத்தை ஆராமையாய்த்தோன்றியபேரன்பு அதிகப்பட்டோங்க, வேதங்கள் வணங்குகின்ற திருக்களிற்றுப் படியின் கீழே இரவும் பகலும் வணங்கித்துதித்துப் பேரின்புற்றிருக்கின்ற நாள்களில்.—எ-று.

தரிசிக்க முத்திதரும் பதியாதலின் பரவுந் தில்லை வட்டமென்றும்,அவரசைதலா லனைத்து மசைகின்றன வென்பது தோன்றப் பைம்பொனம்பலத்துள் அரவும் புனலுஞ் சடையாட வாடுவார் கூத்தென்றுங் கூறினார். (ருகூ)

ஆடும் பெருமான் பாடல்கேட் டருளித்,தாழ்த்த படிதமக்குக்
கூடும் பரிசான் முன்பருளிச் செய்த நாவ லூர்க்கோவை
நீடும் பெருங்கா தலிற்காண,நிறைந்த நினைவு நிரம்புமா
றேடும் பாத ரருளினாற் றிருவா ரூர்மேற் செலவெழுந்தார்.

(இ-ள்.) ஸ்ரீ நடராசப்பெருமான் திருப்பாடல் கேட்டருளித் (தமக்குத் திருச்சிலம்போசை கேட்பித்தருளத்) தாழ்த்த தன்மையைப் பொருந்திய வகையினால் தமக்குமுன்ப அருளிச்செய்யப்பெற்ற திருநாவலூரராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளை மிக்க பெருவிருப்போடு தரிசிக்கும்படி நிறைந்த எண்ணமானது நிரம்பும்பொருட்டு, விஷ்ணுவினால் தேடப்பட்ட திருவடியையுடைய சிவபெருமானது திருவருளினால் திருவாரூருக்குச்செல்லும்படி யெழுந்தருள்வாராயினார்.—எ-று. (௬0)

அழற்பிழம்பாக நின்றகாலத்துத் தேடியதேயன்றித் தமது இதயதாமரையினு மெழுந்தருளப்பெற்றுடையானாகலான் மாறேடும் பாத ரென்றார்.

அறிவி னெல்லை யாயதிருத் தில்லை யெல்லை யமர்ந்திறைஞ்சிப்,
பிறிவி லாத திருவடியைப் பெருகு முள்ளத் தினிற் பெற்றுச்,
செறியு ஞான போனகர்வந் தருளும் புகலி சென்றிறைஞ்சி,
மறிசேர் கரத்தார் கோயில்பல வணங்கி,மகிழ்ந்து வழிக்கொள்வார்.

(இ-ள்.) மெய்ஞ்ஞானத்தின் றிருவெல்லையாக விளங்கும் திருத்தில்லையின் திருவெல்லையை விரும்பிவணங்கி, நீங்காததிருவடியை அன்பு பெருகுகின்ற திருவுள்ளத்திற் சிந்தித்து, திருவருள் நிறைந்த திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் அவதரித்தருளிய சீகாழித்திருப்பதியை யடைந்து வணங்கி, மான்கன்றையேந்திய திருக்கரத்தினையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல திருக்கோயில்களை வணங்கி மகிழ்வுற்றுச் செல்வாராயினார்.—எ-று.

சிதாகாசத்தை யுடைமையான் 'அறிவி னெல்லையாய திருத்தில்லை' யென்றும், பதிஞானத்தாற் றன்னை யடைந்தா ருள்ளத்தி லூன்றி நிற்பதாகலின் 'பிறிவிலாததிருவடி' யென்றும், திருநெறித்தமிழ்பாடவந்தருளிய பிள்ளையாரவ

தரித்த பெருமை தோன்றச், செறியு ஞானபோனகர் வந்தருளும் புகலி, யென்றுங் கூறினர். (கக)

வழியிற் குழியிற் செழுவயலின் மதகின் மலர்வா விகளின்மடுச்
சுழியிற் றரளந் திரைசொரியுந் துறைநீர்ப் பொன்னி கடந்தேறி
விழியிற் றிகழுந் திருநுதலார் விரும்பு மிடங்க ளிறைஞ்சிபுகக்
கழியிற் பெருவெள் ளமுங்கொள்ளாக் கழனி யாரூர் கண்ணுற்றார்.

(இ-ள்.) வழிகளிலும், பள்ளங்களிலும், செழுமையாகிய வயல்களிலும், மதகினையடுத்த தாமரைத் தடாகங்களிலும், மடுச்சுழிகளிலும் அலைகள் முத்துக்களைச் சொரிகின்ற நீர்த்துறையையுடைய காவிரிநதியைக்கடந்து சென்று, விளங்குகின்ற நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் விரும்பி வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளையும்வணங்கி, யுகாந்தத்திலுண்டாகும் பெருவெள்ளமுங்கொள்ளப்பெறாத கழனிசூழ்ந்த திருவாரூர்த் திருப்பதியை யடைந்தருளினர்.—எ-று.

மன்மதனை யெரித்தமையான் தம்மையடுத்தாருக்கு காமம் வெகுளி மயக்கங்களை யொழிப்பா ரென்பதுதோன்ற ‘விழியிற்றிகழுந் திருநுதலார்’’ என்றார்.

நம்பி தாமு முன்னாட்போய் நாகைக் காரோ ணம்பாடி,
யம்பொன் மணிப்பூ ணவமணிக ளாடை சாந்த மடற்பரிமா
பைம்பொற் சுரிகை,முதலான பெற்று மற்றும் பலபதியிற்
றம்பி ரானைப் பணிந்தேத்தித்,திருவா ரூரிற் சார்ந்திருந்தார்.

(இ-ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளும் அதற்கு முன்னளிற் சென்று திருநாகைக் காரோணமென்னுந் திருப்பதியின்கண் ஆதிபுராணருக்குத் திருப்பதிகம் பாடியருளி, பசும்பொன்னலாகிய இரத்தினாபரணங்களும், நவரத்தினங்களும், பீதாம்பரங்களும், கலவைச்சாந்தும், வல்லமைபொருந்திய குதிரைகளும், பசும்பொன்னலாகிய சுரிகையும் முதலிய பலபொருள்களைப் பெற்று, வேறுபல திருப்பதிகளிலும் சிவபெருமானை வணங்கித்துதித்துத் திருவாரூரிற் சேர்ந்திருந்தருளினர்.—எ-று.

கந்தமுத லாடையாபரணம் - பண்டாரத் தேயெனக்குப் பணித்தருள வேண்டும்’ என்றும், ‘காற்றனைய கடும்பரிமா வேறுவது வேண்டும்’ என்றும், பொறிவிரவு நற்புகர்கொள் பொற்சுரிகை மேலோர் - பொற்பூவும் பட்டிகையும் புரிந்தருள வேண்டும் - கறிவிரவு நெய்சோறு முப்போதும் வேண்டும்’ என்றும், ஒளிமுத்தம் பூணார மொண்பட்டும் பூவும், கண்மயத்த கத்தூரி கமழ்சாந்தும் வேண்டும்’ என்றும் பாடியருளினமையால், ‘அம்பொன் மணிப்பூ ணவமணிக ளாடை சாந்த மடற்பரிமா - பைம்பொற் சுரிகை முதலான பெற்று’ என்றதென்க. ‘அந்நாட்போய்’ என்றும் பாடம். (சுரு)

வந்து சேரர் பெருமானார், மன்னுந் திருவா ரூரெய்த,
வந்த ணாளர் பெருமானு மரசர் பெருமான் வரப்பெற்றுச்,
சிந்தை மகிழ வெதிர்கொண்டு சென்று|கிடைத்தார் சேரலனார்|
சந்த விரைத்தார் வன்றொண்டர் முன்பு,விருப்பி னுடன்றாழ்ந்தார்.

(இ-ள்.) அப்பொழுது சேரமான் பெருமாணாயனாரும் நிலைபெற்ற திருவாரூரை வந்துசேர, வேதியர் தலைவராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளும் அரசர் தலைவராகிய சேரமான் பெருமாணாயனார் வரப்பெற்று, மனமகிழும்படி யெதிர்கொண்டு சென்றடைந்தார்; சேரமான்பெருமாணாயனார் நறுமணங்கமழும்அழகிய மாலையையணிந்த ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருமுன்னே விருப்பத்தோடும் வீழ்ந்துவணங்கி.—எ-று. (சுசு)

முன்பு பணிந்த பெருமாளைத், தாமும் பணிந்து முகந்தெடுத்தே
யன்பு பெருகத் தழுவுவிரைந் தவரு மார்வத் தொடுதழுவ,
வின்ப வெள்ளத் திடைநின்று மேற மாட்டா, தலைவார்போ
லென்பு முருகி, யுயிரொன்றி, யுடம்பு மொன்று மெனவிசைந்தார்.

(இ-ள்.) தமது திருமுன்னே வீழ்ந்து நமஸ்கரித்த சேரமான் பெருமாணாயனாரைத் தாமும் வணங்கி விரும்பி யெடுத்துப் பேரன்பு பெருகத் தழுவ, அந்நாயனாரும் விரைந்து பேரன்புடன் தழுவ, பேரின்பமாகிய வெள்ளத்தினின்றுங் கரையேறமாட்டாமல் அலைகின்றவர்கள்போல, எலும்பு முருகி உயிர் ஒற்றுமைப்பட்டு உடம்பும் ஒன்றுகு மென்று சொல்லும்படி கலந்திருந்தார்கள்.—எ-று.

அன்புருவப் பெருந்தகையா ராதலால் அவ் விருவரையும் என்பு முருகி யுயிரொன்றி யுடம்பு மொன்று மெனவிசைத்தா ரென்று கூறினர். (சுஎ)

ஆன நிலைமை கண்டதிருத் தொண்ட ரளவின் மகிழ்வெய்த,
மானச் சேரர் பெருமானார் தாமும், வன்றொண் டருங்கலந்த
பான்மை, நண்பாற் சேரமான் றோழ ரென்று பார்பரவு
மேன்மை நாமந் திருமுனைப்பாடி வேந்தர்க் காகி விளங்கியதால்.

(இ-ள்.) இவ்வாறு தழுவிக் கலந்த நிலைமையைக் கண்ட திருத்தொண்டர்கள் அளவற்ற களிப்பு மிகும்படி பெருமை பொருந்திய சேரமான் பெருமாணாயனாரும் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளுங் கலந்த நட்பின் தன்மையினால் திருமுனைப்பாடிநாட்டுத் தலைவராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளுக்குச் சேரமான்றோழரென்று உலகத்தார் துதிக்கின்ற சிறந்த திருநாமமும் பொருந்தி விளங்கியது.—எ-று. (சுஅ)

இறைவனுக்குத் தோழராகலின் தம்பிரான் றோழரென்றதன்றிச் சேரர்பிரானுக்குந் தோழராதலிற் சேரமான் றோழ ரென்றுங் கூறப்பட்ட தென்க.

ஒருவ ரொருவ ரிற்கலந்த வுணர்வா லின்ப மொழியுரைத்து,
மருவ வினியார் பாற்செய்வ தென்னு மென்னு மகிழ்ச்சியினாற்
பருவ மழைச்செங் கைப்பற்றிக் கொண்டு, பரமர் தாள்பணியத்
தெருவு நீங்கிக் கோயிலினுட் புகுந்தார் சேர மான்றோழர்.

(இ-ள்.) ஒருவரோடொருவர் கலந்த பேருணர்ச்சியினால் இன்பந்தருகின்ற இனிய மொழிகளை யுரைத்து அடைதற்கினியவராகிய இந்நாயனாரிடத்துச் செய்வது யாது என்னும் மனமகிழ்ச்சியினால், கார்ப்பருத்தில் பெய்யும் பெருமழைபோலுங் கொடையினையுடைய அவரது சிவந்த திருக்கரங்களைப்

பிடித்துக்கொண்டு திருவீதியினின்றும் நீங்கி, சிவபெருமானது திருவடிகளை வணங்கத் திருக்கோயிலி னுள்ளே ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் புகுந்தருளினார்.—எ-று.

"நவிரொடு நூனயம் போலும் பயிரொடும்-பண்புடையாளர் தொடர்பு" ஆகலின் ஒருவ ரொருவரிற் கலந்த வுணர்வா லென்றார். (கஎ)

சென்று தேவா சிரியனைமுன் னிறைஞ்சித், திருமா ளிகைவலங்கொண்
டொன்று முள்ளத் தொடும்புகுவா, ருடைய நம்பி முன்னாக
நின்று தொழுது, கண்ணருவி வீழ நிலத்தின் மிசை வீழ்ந்தே,
யென்று மினிய தம்பெருமான் பாத மிறைஞ்சி யேத்தினார்.

(இ-ள்.) சென்று புகுந்து தேவாசிரிய மண்டபத்தை முன்னே வணங்கித் திருமாளிகையைப் பிரதக்ஷணஞ் செய்து ஒருமைப்பட்ட திருவுள்ளத்தோடு புகுகின்ற நாயனார், நம்மையடிமையாக வுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு முன்னே நின்று வணங்கி ஆனந்தக்கண்ணீர் அருவிபோலொழுகப் பூமியிற் பொருந்த சாஷ்டாங்கமாக விழுந்து (அடியார்களுக்கு) என்றும் இனியவராகிய தமது சிவபெருமானது திருவடிகளை வணங்கித் துதித்தனர்.—எ-று.

தேவர் முனிவர் வந்திறைஞ்சுந் தெய்வப் பெருமாள் கழல்வணங்கி,
மூவர் தமக்கு முதலாகு மவனைத் திருமும் மணிக்கோவை
நாவ லூரர் தம்முன்பு நன்மை விளங்கக் கேட்பித்தார்,
தாவில் பெருமைச் சேரலனார் தம்பி ரானார் தாங்கொண்டார்.

(இ-ள்.) கெடாத பெருமையையுடைய சேரமான்பெருமாணயனார் தேவர்களும் முனிவர்களும் (எந்நாளும்) வந்து வணங்குகின்ற தெய்வநாயகராகிய ஸ்ரீவன்மீகநாதரது திருவடிகளைவணங்கி, திரிமூர்த்திபரராகிய அவ்வெம்பெருமானை ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு முன்னே நன்மை மிகும்படி திருமும்மணிக்கோவை யென்னும் பிரபந்தத்தைக் கேட்பித்தார் அதனைச் சிவபெருமான் திருச்செவியேற்றருளினார்.—எ-று.

தெய்வப்பெருமா ளென்றது புற்றிடங் கொண்டாரை. பிரமன்மா லுருத்திரனென்னுமும்மைப்பெருந்தேவர்க்குந்தலைவராகலின் 'மூவர்தமக்குமுதலாகுமவர்' என்றார். மும்மணிக்கோவையாவது ஆசிரியப்பாவும், வெண்பாவும் கலித்துறையும் முறையே தொகை முப்பது பெற வடுக்கி யந்தாதித் தொடையாற் பாடுவது.

திருமும்மணிக்கோவை மூவர்தமக்கு முதலாகுமவனை கேட்பித்தார் எனக்கூட்டுக. (கக)

---

## திருவாரூர் மும்மணிக்கோவை.

### நேரிசை யாசிரியப்பா.

திருச்சிற்றம்பலம்.

விரிகடல்பருகியளறுபட்டன்ன
கருநிறமேகங்கன்முகடேறி
நுண்டுளிபொழியநோக்கியொண்டொடி
பொலங்குழைமின்னப்புருவவில்லிட்

டிலங்கெழிற்செவ்வாய்க்கோபமூர்தரக
கைத்தலமெனனுங்காந்தண்மலர
முத்திலங்கெயிறெனமுல்லையரும்பக்
குழலுஞ்சுனங்குங்கொன்றைகாட்ட
வெழிலுடைசாயலிளமயில்படைப்ப
வுணணிறைபுயிர்ப்பெனுமூதையூதரக்
கண்ணெனப்பெயரியகனமழைபொழிதலி
ஞெண்ணிறததஞ்சனக்கொழுஞ்சேறலம்பியெஞ்சா
மணியும்பொன்னுமாசறுவயிரமும
அணிகிளரகிலுமாரமுமுரிஞ்சிக்
கொங்கையென்னுங்குவட்டிடையிழிதரப்
பொங்குபுனல்காட்டியோளேகங்கை
வருவிசைதவிர்த்தவார்சடைக்கடவு
ளரிவைபாகத்தண்ணலாரூர்
எலலையிருமபலிசொரியுங்
கல்லோசென்றகாதலாமனமே

* * * * *

கலித்துறை.

தாழ்நதுகிடநதசடைமுடிசசங்கரன்ருள்பணியா
தாழ்நதுகிடநதுநைவொாகிலோபோலயாவேறகிரங்கிச
சூழ்நதுகிடநதகரை மேற்றிரையென்னுங்கையெறிநது
வீழ்நதுகிடநதலறித்துயிலாதிவ்விரிகடலே.

திருச்சிற்றம்பலம்.

---

அங்க ணருள்பெற் றெழுவாரைக் கொண்டு புறம்போந் தாரூரர்,
நங்கை பரவை யார்திருமா ளிகையி னண்ண, நன்னுதலார்
பொங்கு விளக்கு, நிறைகுடமும் பூமா லைகளும் புகையகிலு
மெங்கு மடவா ரெடுத்தேநத வணைந்து, தாமு மெதிர்கொண்டார்.

(இ-ள்.) அங்குத்திருவருள் பெற்றெழுகின்றவரா கிய சேரமான்பெருமாணயனரை ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் அழைத்துக்கொண்டு வெளியில்வந்து பரவைநாச்சியாரது திருமாளிகையையடைய, நல்லநெற்றியையுடைய அவ்வம்மையார் சிறந்த விளக்குகளையும் பூரணகும்பத்தையும் பூமாலைகளையும் அகிற் புகைகளையும் மாதர்கள் எங்கும் எடுத்து ஏந்தவந்து தாமும் அவர்களையெதிர்கொண்டனர்—எ-று.

விளக்கு நிறைகுடமுதலியன வெடுபபித்தமை அட்டமங்கலமென்பதற்கென்க. (௭௦)

சோதி மணிமா ளிகையின்கட் சுடரும், பசும்பொற் காலமளி
மீது பெருமா டமையிருத்தி, நம்பி மேவி யுடனிருப்பக்,
கோதில் குணத்துப் பரவையார்]கொழுந ரூர்க்குந் தோழற்கு,
நீதி வழுவா வொழுக்கத்து, நிறைபூ சனைகண் முறையளித்தார்.

(இ-ள்.) ஒளிபொருந்திய மணிகளழுத்திய தமது திருமாளிகையில் விளங்குகின்ற பசும்பொன்னுகிய கால்களையுடைய ஆசனத்தின்மேல் சேரமான் பெருமாளுயனுரை இருக்கச்செய்து ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளும் அவருடனெழுந்தருளியிருக்க, குற்றமற்ற பெருங்குணத்தையுடைய பரவைநாச்சியார் தமது கணவனுருக்கும் அவரது திருத்தோழராகிய சேரர்பெருமாளுக்கும் நீதி தவருத நல்லொழுக்கத்தினுல் நிறைந்த பூசனைகளை முறைமைப்படி செய்தனர். ()

தாண்டு புரவிச் சேராகுலப் பெருமா டமக்குத் திருவமுது,
தூண்டு சோதி விளக்கனையா ரமைக்கத் துணைவர் சொல்லுதலும்)
வேண்டும் பரிசு வெவ்வேறு விதத்துக் கறியும் போனகமு
மீண்டசசமைப்பித்துடன்வந்தார்க்கெல்லாமியல்பின்விருந்தமைத்தார்

(இ-ள்.) தாவிச்செல்லுங் குதிரையினையுடைய சேரமான்பெருமாளுயனுருக்கு, தூணடபபட்ட சோதியினையுடைய விளக்கினையொத்த பரவைநாச்சியார் திருவமுதுசமைக்கும்படி ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் கூறியருளவும், செய்யவேண்டிய முறைமைபபடி வெவ்வேறுவித பதார்த்தங்களும் அன்னமும் பொருந்தச்சமைப்பித்து அவருடன் வந்தவர்களனைவருககும் முறைமைப்படியேவிருந்து சமைத்தார்—எ-று. (எஉ)

அரசர்க் கமைத்த சிறப்பினுமே,லடியாாக் கேற்கும் படியாக
விரவிப் பெருகு மன்பினுடன் விருமபு மமுது சமைத்ததற்பின்,
புரசைக் களிற்றுச சேரலனுர் புடைசூழ்ந் தவரோ டமுதுசெயப்,
பரவை பிறநத திருவனைய பரவை யாாவந் தறிவித்தாா.

(இ-ள்.) சேரமான்பெருமாளுயனுருக்குத் திருவமுதுசமைப்பித்த சிறப்பினும் அதிகமாக அடியார்களுக்குப பொருந்தும்வகையாகப் பெருகிக்கலந்த பேரன்புடன் அவர்கள் விரும்பத்தக்க திருவமுதைச்சமைத்தபின்பு, கட்டுகயிறு பொருந்திய யானையையுடைய சேரமான்பெருமாளுயனுரைத் தம்மருகில் சூழ்ந்துவந்த பரிசனங்களுடன திருவமுது செய்யும்பொருட்டு, சமுத்திரத்திற் பிறந்த இலக்ஷுமிபோலும் (பேரழகினையுடைய) பரவைநாச்சியார்வந்து தெரிவித்தார்.

கடலிற் றோன்றிய செந்திருமகளை யொபபாராகலின், 'பரவை பிறந்த திருவனைய பரவை' என்ருர். (எங)

சேரர் பெருமா னெழுந்தருளி யமுது செய்யச்செய்ததவத்
தாரின் மலிபூங் குழனமடவாய் தாழா தமுது செய்வியெனப்,
பாரின் மலிசீர் வன்றொண்ட ரருளிச செய்யப்பரிகலங்க
ளேரின் விளங்கத் திருக்கரத்தி லிரண்டு படியா வேற்றுதலும.

(இ-ள்.) உலகத்தில் நிறைந்த சிறபபினையுடைய ஸ்ரீசுநதரமூர்த்திசுவாமிகள் அருமையாகச்செய்த தவத்தினையுடைய மாலையோடு விளங்குகின்ற அழகிய கூந்தலையுடைய பரவையே! சேரமான் பெருமான் எழுந்தருளித்திருவமுது செய்யும்பொருட்டுக்காலந்தாழ்க்காமல் அமுது செய்விப்பாயென்று கூறியருள, (அவ்வம்மையார்) பரிகலங்கள் அழகோடுவிளஙகத் தமது திருக்கரத்தில் இரண்டுவகையாக ஏற்றவும்.—எ-று.

இதுமுதல் இரண்டுபாடலுங் குளகம். (எச)

ஆண்ட நம்பி,பெருமாளை யுடனே யமுதுசெய்தருள
வேண்டு மென்ன,வாங்கவரும் விரைந்து வணங்கி வெருவுறலு,
நீண்ட தடக்கை பிடித்தருளி மீண்டு நேரே குறைகொள்ள,
வீண்ட வமுது செய்வதனுக் கிசைந்தார்,பொறையர்க் கிறையவனார்.

(இ-ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் சேரமான்பெருமாணாயனாரைத்தம்முடன் திருவமுது செய்தருளவேண்டுமென்று கூறியருள, அச்சேரர்பெருமானும் விரைந்து நமஸ்கரித்து அஞ்சவும், மீண்டு அவரது நீண்டதிருக்கரத்தைப் பிடித்து எதிரிற் குறைகூறி வேண்ட, சேரமான்பெருமாணாயனார் அங்கே சிறந்த திருவமுதுசெய்வதற்குத் திருவுள்ளமிசைந்தனர்—எ-று.

கொடுக்கச்சிறந்த கையாதலால், 'நீண்ட தடக்கை'யென்றார். (எ௫)

ஒக்க வமுது செய்தருள,வுயர்ந்த தவத்துப் பரவையார்,
மிக்க விருப்பி லமுதுசெய்வித் தருளி,மேவும் பரிசனங்கள்
தக்க வகையா லறுசுவையுந் தாம்வேண் டியவா றினிதருந்தத்,
தொக்க மகிழ்ச்சி களிசிறப்பத், தூய விருந்தின் கடன்முடித்தார்.

(இ-ள்.) இருவரும் சமமாகத்திருவமுதுசெய்ய, சிறந்த தவத்தினையுடைய பரவைநாச்சியார் பெருவிருப்போடுந்திருவமுது செய்வித்து, வந்திருக்கின்ற பரிசனங்களனைவரும் அறுசுவைப்பதார்த்தங்களையும் தாங்கள் விரும்பியவண்ணம் இனிது புசிக்க, (பரவைநாச்சியார்) பொருந்திய மகிழ்ச்சியானது மிகுத்தோங்கத் தூய்மையாகிய விருந்தின் கடைமையை நிறைவேற்றினார்—எ-று.

திருவேடத்தாரைச் சிவனெனவே கொள்ளுந்தன்மையராகலின் ஒக்க வமுதுசெய்தருள, என்றார். அறுசுவையாவன கார்ப்பு, துவர்ப்பு, இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, கைப்பு என்பன. (எசு)

பனிநீர் விரவு சந்தனத்தின் பசுங்கர்ப் பூர விரைக்கலவை,
வனிதையவர்கள் சமைத்தெடுப்பக்கொடுத்து,மகிழ்மான் மதச்சாந்தும்.
புனித நறும்பூ மாலைகளும் போற்றிக் கொடுத்துப்,பொற்கொடியா
ரினிய பஞ்ச வாசமுட னடைக்கா யமுது மேந்தினார்.

(இ-ள்.) பனிநீர்கலந்திழைத்த சந்தனத்தினலாகிய பச்சைக்கர்ப்பூரங்கலந்த மணம்பொருந்திய கலவைச்சாந்தைத் தோழிமார்கள் சமைத்து எடுக்க, பொற்கொடிபோலும் பரவைநாச்சியார் அதனை அவர்களுக்குக்கொடுத்து, மகிழ்த்தக்க கஸ்தூரிச்சாந்தையும், தூய்மையாகிய நறுமணங்கமழும் பூமாலைகளையுந்துதித்துக்கொடுத்து, நல்ல பஞ்சவாசத்துடன் தாம்பூலமுங் கொடுத்தனர்.

பஞ்சவாசமான, இலவங்கம், ஏலம், கர்ப்பூரம், சாதிக்காய், தக்கோலம் என்பன. (எஎ)

ஆய சிறப்பிற் பூசனைக ளளித்த வெல்லா மமர்ந்தருளித்,
தூய நீறு தங்கடிரு முடியில் வாங்கித் தொழுதணிந்து.
மேய விருப்பி னுடனிருப்பக்.கழறிற் றறிவார் மெய்த்தொண்டின்
தேய நீர்ம யடைந்தாராய் நம்பி செம்பொற் கழல்பணிந்தார்.

(இ-ள்.) இத்தகைய சிறப்போடுஞ்செய்த உபசாரங்களனைத்தையும் விரும்பியேற்று, தூய்மையாகிய திருவெண்ணீற்றைத்தொழுது வாங்கித்தங்கள்

திருமுடியிலணிந்து பொருந்தியவிருப்பத்துடனிருக்க, சேரமான்பெருமாணு யனுர் உண்மையாகிய திருத்தொண்டினது செவ்வியதன்மையைப் பெற்றவ ராய்; ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளது பசும்பொன்மயமாகிய திருவடியைவணங் கினுர்.—எ-று.

சேய என்பது, செம்மையென்னும் பண்படியாகப்பிறந்த குறிப்புப்பெய ரெச்சம். தன்னையணிந்தாரைத் தூய்மைசெய்தலின் தூய நீறென்றுர். (௭௮)

மலைநாட் டரசர் பெருமானுர் வணங்க வணங்கி யெதிர்தழுவிக்,
கலைநாட் பெருகு மதிமுகத்துப் பரவை யார்தங் கணவனுர்,
சிலைநாட் டியவெல் கொடியாரைச் சேரத் தந்தா ரெனக்கங்கை
யலைநாட் கொன்றை முடிச்சடையா ரருளே போற்றி யுடனமர்ந்தார்.

(இ-ள்.) மலைநாட்டுத்தலைவராகிய சேரமான்பெருமாணுயனுர் வணங் கவும், பூரணசந்திரன்போலும் முகத்தினையுடைய பரவைநாச்சியார் நாயகரா கிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் அவரை எதிரேவணங்கித் தழுவிக்கொண்டு, வெற்றிபொருந்திய விற்கொடியையுடைய சேரர்பெருமானை யான் அடையும் படி தந்தருளினுரென்று, அலைகளையுடைய கங்கைநதியையும் புதியகொன்றை மலர்மாலையையுமணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானது திருவருளை யேதுதித்து அவருடன்வசித்தருளினுர்.—எ-று.

கலைநாட்பெருகுமதி பூர்வபக்ஷத்துக்கலைகள வளர்ந்துநிரம்பிய மதி; அதாவது பூரணசந்திரன். சிலைநாட்டுதல். வில்லைச்சித்திரித்தல். மலைநாட்டரச ருக்குவிற் கொடியாதலாற் சிலைநாட்டியவெல்கொடியாரென்றுர் ; இனிமேருவ ரையிற்பொறித்த வெற்றிகொடி யுடையாரெனக் கோடலுமொன்று; இதனைப போந்தையங்கண்ணிவேந்துவிற் பொறித்த எனப்பிறருங் கூறுதலானுமுணர்க.

விடங்கம்-உளியாற் செய்யபபடாமை, வீதியில் உற்சவ கோலத்துடன் வரும் பெருமானுகலின் வீதி விடங்கரென்றுர். அது வீதியிலெழுந்தருளும் சுய ம்புமூர்த்தி யென்க. (௭௧)

செல்வத் திருவா ரூர்மேவுஞ் செம்பொற் புற்றி னிடமர்ந்த
வில்வெற் புடையார் கழல்வணங்கி, வீதி விடங்கப் பெருமானை
மல்லற் பவனி சேவித்து வாழ்ந்து, நாளு மனமகிழ்ந்து,
சொல்விற் தகர்தா மிருவர்களுந் தொடர்ந்த காத லுடன்சிறந்தார்.

(இ-ள்.) பலவகைச் செல்வங்கள் நிறைந்த "திருவாரூரிற்பொருந்திய செம்பொன்மயமாகிய புற்றினிடத்துவீற்றிருந்தருளும் மேருமலையாகிய வில்லை யுடைய சிவபெருமானது திருவடிகளைவணங்கி, வீதிவிடங்கராகிய ஸ்ரீ தியாக ராசப்பெருமானது சிறந்தபவனி மகோற்சவத்தைத் தொழுது சிவானந்தப்பெரு வாழ்வடைந்து திருவுள்ளமகிழ்ந்து, கல்விததலைவர்களாகிய இவர்களிருவரும் பொருந்திய பெருவிருப்புடன் சிறப்புற்றிருந்தார்கள்.—எ-று.

வித்தகர்=ஞானமுடையவர். "திருவாரூர்ப் பிறந்தார்களெல்லார்க்கு மடி யேன்" எனச்சுந்தரமூர்த்திசுவாமிகளால் அருளிச்செய்த சிறப்புநோக்கிச் செல் வத்திருவாரூ ரென்றுர். (௮௦)

இவ்வா றொழுகு நாளின்க, ணிலங்கு மணிப்பூண் வன்றொண்டர்,
மைவாழ் களத்து மஃறயவனுர் மருவு மிடங்கள் பலவணங்கச்

செய்வார்,கன்னித் தமிழ்நாட்டுத் திருமா மதுரை முதலான
மொய்வார் சடையார் மூதூர்க ளிறைஞ்ச முறைமை யானினைந்தார்.

(இ-ள்.) இவர்கள் இவ்வாறு ஒழுகும்நாள்களில், விளங்குகின்ற இரத்தினாபரணத்தையணிந்த ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள், கருநிறம்விளங்குங்கண்டத்தினையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பலதிருப்பதிகளைவணங்கும் பொருட்டு, நீண்டவயல்களையுடைய தமிழ்வளம்பொருந்திய பாண்டிநாட்டிலுள்ள சிறந்தமதுராபுரிமுதலாகிய நெருங்கி நீண்டசடைமுடியையுடைய சிவபெருமானது பழைமையாகிய திருப்பதிகளைவணங்க முறைமைப்படி சிந்தித்தருளினார்.—எ-று.

கன்னியாறு தனக்குத் தெற்கெல்லையாக வுடைமையிற் கன்னித் தமிழ்நாடெனறார். தமிழ்நாடாவது, 'சந்தனப்பொதிகைச் செந்தமிழ் முனிவனுஞ்-சவுந்தரபாண்டியனெனுந் தமிழ்நாடெனுஞ், சங்கப்பலகையுந் தழைத்தினிதோங்கு - மங்கலப்பாண்டிவள நாடென்ப' என்பதனாலறிக.

விராட்புருடனுடைய துவாதசாந்த ஸ்தலமென்பார், திருமாமதுரை என்றதென்க. முறைமையாவது,—க்ஷேத்திரங்களைத் தரிசித்துத் திருப்பதிகம் பாடவேண்டுமென்று கருதியகொள்கை. (௮௧)

சேரர் பிரானு மாரூரர் தம்மைப் பிரியாச் சிறப்பாலு,
மார்வம் பெருகத்,தமக்கன்று,மதுரை யால வாயமர்ந்த
வீர ரளித்த திருமுகத்தால்,விரும்பு மன்பின் வணங்குதற்குச்
சார வெழுந்த குறிப்பாலுந்,தாமு முடனே செலத்துணிந்தார்.

(இ-ள்.) சேரமான் பெருமாணாயனாரும், ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளை விட்டுப் பிரிதற்கரிய சிறப்பினாலும், மதுரைப்பதியில் திருவாலவா யென்னுந் திருக்கோயிலிலே வீற்றிருந்தருளும் ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமான் அன்பு பெருக தமக்கு அன்று அனுப்பியருளிய திருமுகங் காரணமாக விரும்புகின்ற பேரன்புடன் வணங்கும்பொருட்டுத் திருவுள்ளத்திற் பொருந்தி யெழுந்த குறிப்பினாலும் தாமும் அவருடன் போகும்படி துணிவுகொண்டருளினார்.—எ-று.

சேரர்பிரானும் உடனே செலத்துணிந்தார் எனக் கூட்டுக.

தமக்குத் திருமுகப்பாசுரமருளிய பெருங்கருணையைநாடிவணங்க விரும்புதலின், 'மதுரையால வாயமர்ந்த வீரரளித்த திருமுகத்தால் விரும்புமன்பின் வணங்குதற்கு' என்றார். (௮௨)

இருவர் திருவுள் ளமுமிசைந்த பொழுதி,லெழுந்து திருவாரூ
ரொருவர் திருத்தாள் புக்கிறைஞ்சி,யுடன்பாட் டருளாற் போந்தருளி,
மருவு முரிமைப் பெருஞ்சுற்றம்,வரம்பில் பணிகள்,வாகனங்கள்
பொருவில் பண்டா ரங்கொண்டு,போது வார்க ளுடன்போத.

(இ-ள்.) இருவருடைய திருவுள்ளமும் செல்லுதற்கு இசைந்தபொழுது உடனே எழுந்து திருவாரூரில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானது திருவடிகளையடைந்து வணங்கி அவ்வெம்பெருமானது உடன்பாட்டுத் திருவருளினால் வெளியில்வந்து உரிமையாகிய பெரிய பரிசனங்கள் அளவற்ற ஆபரணங்களையும் வாகனங்களையும், ஒப்பற்ற திரவியங்களையும் எடுத்துக்கொண்டு வருகின்றவர்கள் தம்முடன் வர.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௮௩)

சேவித் தணையும் பரிசனங்கள் சூழத், திருவா ரூரிறைஞ்சிக்
காவிற் பயிலும் புறம்பணையைக் கடந்து போந்து கீழ்வேளூர்
மேவிப் பரமர் கழல்வணங்கிப் போந்து வேலைக் கழிக்கானற்
பூவிற் றிகழும் பொழினாகை புகுந்து காரோ ணம்பணிந்தார்.

(இ-ள்.) தொழுதுவருகின்ற பரிசனத்தடியார்கள் சூழ்ந்து வர, திருவாரூரை வணங்கி, சோலைகளோடு விளங்கும் வயலிடங்களைக் கடந்து சென்று, திருக்கீழ்வேளூரென்னுந் திருப்பதியை யடைந்து சிவபெருமானது திருவடிகளை வணங்கி, கடற்கழியாகிய நெய்தநிலத்தூராகிய பூவோடு விளங்குகின்ற சோலைசூழ்ந்த நாகபட்டணத்தை யடைந்து திருக்காரோணமென்னுந் திருக்கோயிலை வணங்கியருளினார்.—எ-று.

'பூவிற் றிகழும் பொழினாகை' என்பதற்கு, உலகத்திற் சிறந்து விளங்கும் சோலைசூழ்ந்த நாகபட்டணம், எனினும் பொருந்தும். காரோணம் என்பது நாகபட்டணத்தில் சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக்கோயிலின் பெயர். (அ௪)

திருக்கா ரோணத் திருப்பீரோ வென்னு மன்பர் சிந்தையினை
யுருக்கார் வச்செந் தமிழ்மாலை சாத்திச், சிலநா ளுறைந்துபோய்ப்
பெருக்கா றுலவு சடைமுடியா ரிடங்கள் பலவும் பணிந்தேத்தி
யருட்கா ரணர்தந் திருமறைக்கா டணைந்தார் சேர ராரூரர்.

(இ-ள்.) அடியார்களது திருவுள்ளத்தை யுருகச்செய்கின்ற பெருவிருப்பினையுடைய "காரோணமேவியிருந்தீரோ" என்னு மிறுதியையுடைய செந்தமிழ்த் திருப்பதிகம் பாடியருளி, சிலநாள்கள் அங்கு வசித்துச்சென்று, கங்கைப் பெருக்கு உலவுகின்ற சடைமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளை வணங்கித் துதித்துத் திருவருட் செல்வராகிய சிவபெருமானது திருமறைக்காட்டை சேரமான்பெருமாணாயனாரும் ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளும் அடைந்தார்கள்.—எ-று. (அ௫)

---

**திருநாகைக்காரோணம்-பண்-கொல்லிக்கௌவாணம்.**

திருச்சிற்றம்பலம்.

பத்தூர்புக்கிரந்துண்டுபலபதிகம்பாடிப் பாவையரைக்கிறிபேசிப் படிறுடித்திரிவீர், செத்தார்தமெலும்பணிந்துசேவேறித்திரிவீர்செல்வத்தைமறைத்துவைத்தீரெனக்கொருநாளிரங்கீர், முத்தாரமிலங்குமிளிர் மணிவயிரக் கோவையவைபூணத்தந்தருளி மெய்க்கினிதாநாறுங், கத்தூரிகமழ்சாந்து பணித்தருளவேண்டுங்கடனாகைக்காரோணமேவியிருந்தீரே.

பண்மயத்த மொழிப்பரவை சங்கிலிக்குமெனக்கும் பற்றாயபெருமானேமற்றாரையுடையேன், உண்மயத்தவுமக்கடியேன்குறைதீர்க்கவேண்டுமொளிமுத்தம்பூணாரமொண்பட்டும்பூவுங், கண்மயத்தகத்தூரிகமழ்சாந்தும்வேண்டுங்கடனாகைக்காரோணமேவியிருந்தீரென், றண்மயத்தாலணிநாவலாரூரன்சொன்னவருந்தமிழ்களிவைவல்லாரமருலகாள்பவரே.

திருச்சிற்றம்பலம்.

**சுவாமிபெயர்-காயாரோகணேசுவரர்; தேவியார்-நீலாயதாக்ஷியம்மை.**

முந்நீர் வலங்கொண் மறைக்காட்டு முதல்வர் கோயில் சென்றிறைஞ்
செந்நீர் வாய்மைத் திருநாவுக் கரசும் புகலிச் சிவக்கன்று [சிச்
மந்நேர் திறக்க வடைக்கவெனப் பாடுந் திருவா யிலேயணைந்து
நன்னீர் பொழியும் விழியினராய் நாயன் மாரை நினைந்திறைஞ்சி.

(இ-ள்.) சமுத்திரஞ்சூழ்ந்த திருமறைக்காடென்னுந் திருப்பதியில் சிவ பெருமானது திருக்கோயிலேயடைந்துவணங்கி, செவ்விய உண்மைத்தன்மை யையுடைய திருநாவுக்கரசு சுவாமிகளும் திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் தங் களுக்கெதிரில் திருக்கதவம் திறக்கவும் அடைக்கவுங் கருதித்திருப்பதிகம் பா டியருளிய திருவாயிலேயடைந்து, ஆனந்த பாஷ்பஞ்சொரிகின்ற கண்ணேயுடைய வர்களாய், அவ்விரண்டு பரமாசாரியர்களையுஞ் சிந்தித்துவணங்கி—எ-று.

முந்நீர், மண்ணை ஆக்கலும், காத்தலும், அழித்தலுமாகிய மூன்று தொ ழிற்றன்மையையுடைய நீர், எனப்பண்புத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகையாய்க் கடலுக்குக்காரணக்குறியாய்வந்தபரியாயப்பெயர்; ஆற்றுநீர்-ஊற்றுநீர்-மேனீரென இவையென்பார்க்கு அறறன்று, ஆற்றுநீர் மே னீராகலானும், இவ்விரண்டுமில்வழி ஊற்றுநீரும் இன்றுமாகலானும், இவற் றைமுந்நீரென்றல் பொருந்தியதன்று. இதனை. "முந்நீரினுள் புக்குமூவாக்கட ம்பெறிந்தான்" எனவருஞ் சிலப்பதிகாரச்செய்யுளுக்கு அடியார்க்கு நல்லா ரெழுதிய உரையானுணர்க, திருஞானசம்பந்தப்பிள்ளையார் ஸ்ரீகுமாரக்கடவுளி னது அபராவதாரமென்பார் புகலிச்சிவக்கன்று" என்றுகூறினர். (௬௯)

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம்.

நிறைந்த மறைக ளர்ச்சித்த நீடு மறைகாட் டருமணியை
யிறைஞ்சி வீழ்ந்து பணிந்தெழுந்து போற்றி யாழைப் பழித்தென்னு
மறைந்த பதிகத் தமிழ்மாலை நம்பி சாத்த வருட்சேரர்
சிறந்த வந்தா தியிற்சிறப்பித் தனவே யோதித் திளைத்தெழுந்தார்.

(இ-ள்.) உண்மை நிறைந்த வேதங்கள் பூசித்த சிறந்த திருமறைக்காட் டில் வீற்றிருந்தருளும் அரியமாணிக்கம்போலுஞ் சிவபெருமானைவணங்கி நில முற வீழ்ந்து நமஸ்கரித்து எழுந்துதுதித்து "யாழைப்பழித்தன்ன" என்னுமு தலையுடைய தமிழ்த்திருப்பதிகத்தை ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் அருளிச்செய் ய, திருவருளையுடைய சேரமான் பெருமாணாயனார் சிறப்புப்பொருந்திய தமது திருவந்தாதியிற் சிறப்பித்துப் பாடியருளியவற்றையேபாடிச் சிவாநந்தத்தின் மூழ்கியிருந்தார்—எ-று.

சேரர்பெருமான் தாமருளிச்செய்த அந்தாதியின், "மறைக்காட்டிறைக் காட்டகப்பட்ட வாணுதலே" என்று கூறியருளிய இத்தொடர்தனை நோக்கிச் 'சிறந்த வந்தாதியிற் சிறப்பித்தனவேயோதி' என்றார். (௭௦)

---

திருமறைக்காடு - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

யாழைப்பழித்தன்னமொழிமங்கையொருபங்கன்
பேழைச்சடைமுடிமேற்பிறைவைத்தானிடம்பேணிற்
றாழைப்பொழிலூடேசென்றுபூழைத்தலைநுழைந்து
வாழைக்கனிகூழைக்குரங்குண்ணுமறைக்காடே.

பாரூர்பலபுடைசூழ்வளவயல்நாவலர்வேந்தன்
வாரூர்வனமுலையாளுமைபங்கன்மறைக்காட்டை
யாரூரனதமிழ்மாலைகள்பாடும்மடித்தொண்டர்
நீரூர்தருநிலனோடுயர்புகழாகுவர்தாமே.

சுவாமிபெயர் - மறைக்காட்டீசுவரர்; தேவியார் - யாழைப்பழித்தநாயகி

திருச்சிற்றம்பலம்.

---

எழுந்து பணிந்து புறத்தெய்தி யிருவர் பெருந்தொண் டருஞ்சிலநாட்
செழுந்தண் பழனப் பதியதனு ளமர்ந்து தென்பாற் றிரைக்கடனஞ்
சமுந்து மிடற்று ரகத்தியான் பள்ளி யிறைஞ்சி யவிர்மதியக்
கொழுந்து வளர்செஞ் சடைக்குழகர் கோடிக் கோயில குறுகினார்.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய அவ்விரண்டு திருத்தொண்டர்களும் வணங்கியெழுந்து வெளியில்வந்து செழுமைதங்கிய குளிர்ந்தவயல் சூழ்ந்த அத்திருமறைக்காட்டில் சிலநாள்கள் வசித்து, தென்றிசையிலுள்ள அலைகளை யுடைய சமுத்திரத்திற்றோன்றிய ஆலகாலவிடந்தங்கிய கண்டத்தினையுடைய சிவபெருமானது திருவகத்தியான் பள்ளியென்னுந் திருப்பதியைவணங்கி,விள ங்குகின்ற இளம்பிறைவளருஞ் சிவந்தசடைமுடியையுடைய சிவபெருமானது திருக்கோடிக் குழகரென்னுந் திருக்கோயிலையடைந்தார்கள்—எ-று. (அ௮)

கோடிக் குழகர் கோயிலயற் குடிக ளொன்று மபுறத்தெங்கு
நாடிக் காணா துள்புக்கு நம்பர் பாதந் தொழுதுள்ளம்
வாடிக் கடிதாய்க் கடற்காற்றென் றெடுத்து மலர்க்கண் ணீர்வாரப்
பாடிக் காடு காள்புணர்ந்த பரிசும் பதிகத் திடைவைத்தார்.

(இ-ள்.) திருக்கோடிக்குழகரென்னுந் திருக்கோயிலுக்கு அயற்புறங்க ளெங்கும் ஒருகுடிகளையுந்தேடிக்காணாமல் உள்ளேபுகுந்து சிவபெருமான்திரு வடிகளைவணங்கித் திருவுள்ளஞ்சோர்ந்து, "கடிதாய்க் கடற்காற்று" என்று முதலெடுத்து, தாமரைமலர்போன்ற திருக்கண்களில் ஆனந்தபாஷ்பஞ் சொரி யப்பாடியருளி, காடுகாள் சேர்ந்திருக்குந் தன்மையையுந் திருப்பதிகத்தினிடை யில் அமைத்தருளினார்—எ-று. (அக)

---

திருக்கோடிக்குழகர் - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

கடிதாய்க்கடற்காற்றுவந்தெற்றக்கரைமேற்
குடிதானயலேயிருந்தாற்குற்றமாமோ
கொடியேன்கண்கள்கண்டனகோடிக்குழகீர்
அடிகேளுமக்கார்துணையாகவிருந்தீர்.

மையார்தடங்கண்ணிபங்காகங்கையாளு
மெய்யாகத்திருந்தனள்வேறிடமில்லை
கையார்வளைக்காடுகாளோடுமுடனாய்க்
கொய்யார்பொழிற்கோடியேகோயில்கொண்டாயே.

பாரூர்மலிசூழ்மறைக்காடதன்றென்பா
லேரார்பொழில்சூழ்தருகோடிக்குழகை
யாரூரனுரைத்தனபத்திவைவல்லார்
சீரார்சிவலோகத்திருப்பவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-அமுதகடநாதர் : தேவியார், மையார்தடங்கணம்மை.

---

அங்கு வைகிப் பணிந்தருளாற் போவா ரகன்சோ ணாட்டரனார்
தங்கு மிடங்கள் வணங்கிப்போய்ப் பாண்டி நாடு தனைச்சார்ந்து
திங்கண் முடியார் திருப்புத்தூ ரிறைஞ்சிப் போந்து சேண்விளங்கு
மங்கு றவழு மணிமாட மதுரை மூதூர் வந்தணைந்தார்.

(இ-ள்.) அத்திருப்பதியில் வசித்து வணங்கித்திருவருளால் செல்கின்வர்கள், பெரிய சோழநாட்டில் சிவபெருமான் வீற்றிருந்தருளும் பலதிருப்பதிகளை வணங்கிச்சென்று, பாண்டிநாட்டை யடைந்து, சந்திரசேகரராகிய சிவபெருமானது திருப்புத்தூரை வணங்கிச்சென்று, ஆகாயத்தில் விளங்குகின்ற மேகங்கள் தவழும் அழகிய மாடங்களையுடைய பழைய மதுரைமாநகரத்தை வந்தடைந்தார்கள்.—எ-று. (கூ0)

வேறு.

சேரமான் றோழருடச் சேரனு ரும்பணிப்பூ
ணாரமார் பரைமதுரை யாலவா யினில்வணங்க
வாரமா வந்தணைய வழுதியார் மனக்காதல்
கூரமா நகர்கோடித் தெதிர்கொண்டு கொடுபுக்கார்.

(இ-ள்.) சேரமான்றோழராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளும் சேரமான்பெருமாணாயனாரும் சர்ப்பாபரணத்தை யணிந்த திரு மார்பினையுடைய சிவபெருமானை மதுரைத்திருவாலவாயென்னுந்திருக்கோயிலில் வணங்கும்பொருட்டுஅன்புடன் வந்தடைய, பாண்டியர் பெருமானும் மனத்தில் பெருவிருப்பமதிகப்பட, சிறந்த மதுரைமாநகரை யலங்கரித்து அவர்களை யெதிர்கொண்டழைத்துவந்தார்.—எ-று. (கூக)

தென்னவர்கோன் மகளாரைத் திருவேட்டு முன்னரே
தொன்மதுரை நகரின்க ணினிதிருந்த சோழனு
மன்னவர்க ளுடன்கூட வணையவவ ருங்கூடி
மன்னுதிரு வாலவாய் மணிக்கோயில் வந்தணைந்தார்.

(இ-ள்.) பாண்டிய ராசனுடைய புத்திரியாரைத் திருமணம் புரிந்து, முன்னமே பழைய அம்மதுராபுரியில் இனிது வசித்திருந்த சோழராசனும் அவர்களுடன் கூடச்சேர்ந்து நிலைபெற்ற திருவாலவாயென்னும் அழகியதிருக்கோயிலில் வந்தடைந்தார்கள்.—எ-று. (கூஉ)

திருவால வாயமர்ந்த செஞ்சடையார் கோயில்வலம்
வருவார்முன் வீழ்ந்திறைஞ்சி வன்றொண்டர் வழித்தொண்டு
தருவாரைப் போற்றிசைத்துத் தாழ்ந்தெழுந்து வாழ்ந்ததமிழ்ப்
பெருவாய்மை மலர்புனைந்து பெருமகிழ்ச்சி பிறங்கினார்.

(இ-ள்.) திருவாலவாயில் வீற்றிருந்தருளுஞ் சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமானது திருக்கோயிலை வலம்வருகின்றவர்களாய்த் திருமுன்னே வீழ்ந்து வணங்கி, ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் வழியடிமைத்திருத்தொண்டைத்தருகின்றவராகிய ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமானைத் துதித்து வணங்கியெழுந்து, சிவாநந்தப்பெருவாழ்வினைத் தருதாகிய மிக்க மெய்ம்மையையுடைதமிழ்த்திருப்பதிகமாலையை யணிந்து பெருங்களிப்படைந்தருளினார்.—எ-று.

தலை, இடை, கடைச்சங்களில் வழங்கிய பெருமிதந்தோன்ற வாழ்ந்த தமிழென்னார். (௬௩)

படியேறு புகழ்ச்சேரர் பெருமானும் பார்மிசைவீழ்ந்
தடியேனைப் பொருளாக வளித்ததிரு முகக்கருணை
முடிவேதென் றறிந்திலே னெனமொழிக டடுமாறக்
கடியேறு கொன்றையார் முன்பரவிக் களிகூர்ந்தார்.

(இ-ள்.) உலகத்திற் சிறந்தோங்குகின்ற புகழையுடைய சேரமான்பெருமாணாயனாரும், நிலமுற விழுந்து வணங்கி, அடியேனை ஒருபொருளாகக் கருதித் திருமுகங்கொடுத்தருளிய பெருங்கருணையின்முடிவு இன்னதென்று அறியேனென்று மொழி குழறும்படி, நறுமணங் கமழுங் கொன்றைமலர்மாலையை யணிந்த சிவபெருமான் திருமுன்னே துதித்து மகிழ்வடைந்தருளினார்.—எ-று.

புலவராற்பாடும் புகழுடம்புடையார் போலாது இறையனாராற் பாடுமிசை வுடையாராதலால், 'படியேறு புகழ்ச்சேரர் பெருமான்' என்றார். (௬௪)

செம்பியனா ருடன்செழியர் தாம்பணிந்து சேரருட
னம்பியுமுன் புறத்தணைய நண்ணியபே ருவகையா
லும்பர்பிரான் கோயிலினின் றுடன்கொடுபோ யிருவர்க்கும்
பைம்பொன்மணி மாளிகையிற் குறைவறுத்தார் பஞ்சவனார்.

(இ-ள்.) சோழராசாவும் பாண்டியராசாவும் வணங்கிச் சேரமான் பெருமாணாயனாரோடு ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளும் புறத்தில் வந்தருள, பாண்டியர் பெருமான் பொருந்திய பெருமகிழ்ச்சியினால், தேவர்கள் நாயகராகிய ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமானது திருக்கோயிலினின்றும் தம்முடனழைத்துக்கொண்டு போய், பசும்பொன்மயமாகிய அழகிய திருமாளிகையில், (ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் சேரர்பெருமான் என்னும்) இருவரையும் அமர்த்தி விருந்துமுதலியவற்றால் உபசரித்தார்.—எ-று. (௬௫)

உளமகிழக் கும்பிட்டங் குறையுநா ளுதியருடன்
கிளரொளிப்பூண் வன்றொண்டர் தாமிருந்த விடங்கெழுமி
வளவனார் மீனவனார் வளம்பெருக மற்றவரோ
டளவளா வியவிருப்பா னமர்ந்துகலந் தினிதிருந்தார்.

(இ-ள்.) திருவுள்ளமகிழும்படி சிவபெருமானை வணங்கி அங்கு வசித்தருளும் நாளில், ஒளிவிளங்குகின்ற இரத்தினாபரணத்தை யணிந்த ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் சேரமான்பெருமாணாயனாரோடு எழுந்தருளியிருந்த இடத்தைச் சோழரும் பாண்டியரும் சிறப்புடனடைந்து அவர்களுடன் அளவளாவிய பெருவிருப்பினால் கலந்து சந்தோஷித்திருந்தார்கள்.—எ-று. (௬௬)

அந்நாளின் மதுரைநகர் மருங்கரசு ரமர்பதிகள்
பொன்ஞர மணிமார்பிற் புரவலர்மூ வரும்போதச்
செந்நாவின் முனைப்பாடித் திருநாடர் சென்றிறைஞ்சிச்
சொன்மாலை களுஞ்சாத்தித் தொழத்திருப்பூ வணத்தணைந்தார்.

(இ-ள்.) அந்நாள்களில், மதுரைமாநகரத்தினருகிலுள்ள சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருப்பதிகளைப் பொன்னரிமாலைகளையும் இரத்தினமாலைகளையுமணிந்த திருமார்பினை யுடைய மூன்றரசர்களுந் தம்முடன் வர, செவ்விய திருநாவினையுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் அடைந்து வணங்கித் திருப்பதிகமாலைகளுந் தரித்து வணங்கும்பொருட்டுத் திருப்பூவண மென்னுந் திருப்பதியை யடைவாராயினர்.—எ-று.

வேதத்திற் கூறு மெய்ப்பொருள்களைத் திருநெறித் தமிழ்வேதமாகிய தேவாரப்பதிகங்களாகப் பாடியருளுந் திருநாவின ரென்பார், 'செந்நாவின் முனைப்பாடித் திருநாடர்' என்று கூறினர். (௬௭)

நீடுதிருப் பூவணத்துக் கணித்தாக நேர்செல்ல
மாடுவருந் திருத்தொண்டர் மன்னியவப் பதிகாட்டத்
தேடுமறைக் கரியாரைத் திருவுடையா ரென்றெடுத்துப்
பாடிசையிற் பூவணமீ தோவென்று பகர்ந்தணைவார்.

(இ-ள்.) சிறந்த திருப்பூவணத்திற்குச் சமீபமாக நேரே செல்ல, அருகில் வருகின்ற அடியார்கள் நிலைபெற்ற அத்திருப்பதியைக் காண்பிக்க, முறையிட்டுத் தேடிய வேதங்களுக்கு எட்டாதவராகிய சிவபெருமானை, "திருவுடையார்" என்று முதலெடுத்து, சிறந்த இசையோடு "பூவணமீதோ" என்று இறுதியிலமைத்துத் திருப்பதிகம் பாடியருளி யடைவாராயினர்.—எ-று.

வேதங்கட் கரியாரேனுந் தமிழ்க்கெளியாராகலின் திருவுடையாரென்றெடுத்துப் 'பாடிசையிற் பூவணமீதோ' என்றருளிச் செய்தார். (௬௮)

---

திருப்பூவணம்-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

திருவுடையார்திருமாலயனாலு, முருவுடையாருமையாளையோர்பாகம்
பரிவுடையாரடைவார்வினைதீர்க்கும், புரிவுடையாருறைபூவணமீதோ

சீரின்மிகப்பொலியுந்திருப்பூவண, மாரவிருப்பிடமாவுறைவானை [ரோ.
யூரனுரைத்தசொன்மாலைகள்பத்திவை, பாரிலுரைப்பவர்பாவமறுப்ப

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பூவணநாதர்; தேவியார்-மின்னும்பிகையம்மை.

---

சென்றுதிருப் பூவணத்துத் தேவர்பிரான் மகிழ்கோயின்
முன்றில்வலங் கொண்டிறைவர் முன்வீழ்ந்து பணிந்தெழுந்து
நின்றுபர விப்பாடி நேர்நீங்கி யுடன்பணிந்த
வென்றிமுடி வேந்தருடன் போந்தங்கண் மேவினர்.

(இ-ள்.) இவ்வாறுசென்று திருப்பூவணத்தில் சிவபெருமான் மகிழ்ந்து வீற்றிருந்தருளுந் திருக்கோயிற் திருமுன்றிலைப் பிரதக்ஷிணஞ்செய்து, திரு

முன்னே விழுந்து நமஸ்கரித்தெழுந்துநின்று துதித்துத் திருப்பதிகம்பாடி நேரேநீங்கித் தம்முடன்வணங்கிய வெற்றிபொருந்திய மணிமுடியையுடைய மூவேந்தர்களுடன் புறத்தில் வந்து அங்குவசித்தருளினர்.—எ-று. (கூக)

அப்பதியி லமர்ந்திறைஞ்சிச் சிலநாளி லாரூரர்
முப்பெருவேந் தர்களோடு முதன்மதுரை நகரெய்தி
மெய்ப்பரிவிற் றிருவால வாயுடையார் விரைமலர்த்தா
ளெப்பொழுதும் பணிந்தேத்தி யின்புற்றங் கமர்கின்றார்.

(இ-ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் அத்திருப்பதியில் தங்கியிருந்து சிவபெருமானைவணங்கி, சிலநாள்களில் பெரியமூவேந்தர்களோடும் தலைமை பொருந்திய மதுரைமாநகரத்தை யடைந்து, மெய்யன்போடு திருவாலவாயென்னுந் திருக்கோயிலிலெழுந்தருளிய சிவபெருமானது நறுமணங்கமழுந் தாமரை மலர்போன்ற திருவடிகளைத் தினந்தோறும் வணங்கித்துதித்துப் பேரின்பமடைந்து அங்கு வசிப்பாராயினர்.—எ-று. (க00)

செஞ்சடையார் திருவாப்ப னூர்திருவே டகமுதலா
நஞ்சணியுங் கண்டரவர் நயந்தபதி நண்ணியே
யெஞ்சலிலாக் காதலினு லினிதிறைஞ்சி மீண்டணைந்து
மஞ்சணையு மதின்மதுரை மாநகரின் மகிழ்ந்திருந்தார்.

(இ-ள்.) சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமானது திருவாப்பனூர் திருவேடகமுதலாகிய காளகண்டராகிய அவ்வெம்பெருமான் விரும்பியெழுந்தருளிய திருப்பதிகளையடைந்து குறையாத பேரன்பினுல் இனிமையாகவணங்கித் திரும்பிவந்து, மேகங்கள்தவழும் மதிலையுடைய மதுரைமாநகரத்தில் மகிழ்ந்தெழுந்தருளினுர்.—எ-று. (க0க)

பரமர்திருப் பரங்குன்றிற் சென்றுபார்த் திபரோடும்
புரமெரித்தார் கோயில்வலங் கொண்டுபுகுந் துள்ளிறைஞ்சிச்
சிரமலிமா லைச்சடையார் திருவடிக்கீ ழாட்செய்யு
மருமைநினைந் தஞ்சுதுமென் றாரூரர் பாடுவார்.

(இ-ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் மூவேந்தர்களோடும் சிவபெருமானது திருப்பரங்குன்றத்தை யடைந்து, திரிபுரதகனராகிய அவ்வெம்பெருமானது திருக்கோயிலைப்பிரதக்ஷணஞ்செய்து உள்ளே புகுந்து வணங்கி, சிரமாலையையணிந்த திருச்சடையையுடைய சிவபெருமானது திருவடிகளில் அடிமைசெய்யு மருமையைச் சிந்தித்து "அஞ்சுதும்" என்று இறுதியிலமைத்துத் திருபபதிகம்பாடுவாராயினுர்.—எ-று. (க0உ)

கோத்திட்டை யெனவெடுத்துக் கோதிற்றுப் பதிகவிசை
மூர்த்தியார் தமைவணங்கி முக்கோக்க டம்முன்பே
யேத்தியவண் டமிழ்மாலை யின்னிசைபா டிப்பரவிச்
சாத்தினுர் சங்கரனுர் தங்குதிருப் பரங்குன்றில்.

(இ-ள்.) சிவபெருமானை வணங்கி மூவரசர்களுக்கு முன்னிலையில் "கோத்திட்டை" என்று முதலெடுத்துக் குற்றமற்ற இசையமைந்ததிருப்பதிகமாகத்துதித்தருளிய வளவியதமிழ்ப் பதிகமாலையாகிய இனிய இசையினைப்பா

டித்துதித்துச் சிவபெருமான் வீற்றிருந்தனுந் திருப்பரங்குன்றில் அணிந்தருளினர்.—எ-று. (கoரு)

திருப்பரங்குன்றம்-பண்-இந்தளம்.
திருச்சிற்றம்பலம்.

கோத்திட்டையுங்கோவலுங்கோயில்கொண்டீருமைக்கொண்டுழல்கின்றதோர்கொல்லைச்சில்லைச், சேர்த்திட்டுக்குத்தித்தெருவேதிரியுஞ்சிலபூதமுநீருந்திசைதிசையன, சோத்திட்டுவிண்ணோர்பலருந்தொழநும் மரைக்கோவணத்தோடொருதோல்புடைசூழ்ந், தார்த்திட்டதும் பாம்புகைக்கொண்டதும்பாம்படிகேளுமக்காட்செயவஞ்சுதுமே.

அடிகேளுமக்காட்செயவஞ்சுதுமென் றமரர்பெருமானையாரூரனஞ்சி, முடியாலுலகாண்டமூவேந்தர்முன்னேமொழிந்தாறு மோர்நான்குமோரொன்றினையும், படியா விவை கற்றுவல்ல வடியார் பரங்குன்றமேயபரமனடிக்கே, குடியாகிவாணோர்க்குமோர்கோவுமாகிக்குலவேந்தராய்விண்முழுதாள்பவரே.

திருச்சிற்றம்பலம்.
சுவாமிபெயர்-பரங்கிரிநாதர்; தேவியார்-ஆவுடைநாயகியம்மை.

இறைவர்திருத் தொண்டுபுரி யருமையினை யிருநிலத்து
முறைபுரியு முதல்வேந்தர் மூவர்களுங் கேட்டிறைஞ்சி
மறைமுந்நூன் மணிமார்பின் வன்றொண்டர் தமைப்பணிந்தார்
நிறைதவத்தோ ரப்பாலு நிருத்தர்பதி தொழநினைந்தார்.

(இ-ள்.) இவர் சிவபெருமானது திருத்தொண்டின் தன்மையைச்செய்கின்ற அருமைப்பாட்டைப் பெரிய நிலவுலகத்தில் செங்கோல் முறைமைசெலுத்துகின்ற முதல்வேந்தர்களாகிய மூவரசர்களுங்கேட்டு அச்சமுற்று, வேதவிதிப்படிசெய்யும் முப்புரிநூலையணிந்த திருமார்பினையுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளை வணங்கினார்கள்; நிறைந்த தவத்தலைவராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் பின்னும் சிவபெருமானது திருப்பதிகளை வணங்கும்படி திருவுள்ளங்கொண்டருளினர்.—எ-று.

மறைமுந்நூன்மணிமார்பர், என்பதற்கு, வேதங்களையுணர்ந்த முப்புரிநூலணிந்த மார்பினையுடையவர் எனினுமாம். (கoச)

அந்நாட்டுத் திருப்பதிகள் பிறவுமணைந் திறைஞ்சிமலை
நன்னாட்டு வேந்தருட னம்பிதா மெழுந்தருள,
மின்னாட்டும் பன்மணிப்பூண் வேந்தரிரு வருமீள்வார்
தென்னாட்டு வேண்டுவன செய்தமைப்பார் தமைவிடுத்தார்.

(இ-ள்.) அந்தப் பாண்டிநாட்டிலுள்ள மற்றத் திருப்பதிகளையு மடைந்து வணங்கி, ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் மலைநாட்டுத்தலைவராகிய சேரமான் பெருமாணுயனரோடு மெழுந்தருள, மின்போலு மொளிவீசுகின்ற பலவகை இரத்தினுபரணங்களையணிந்த சோழராசன் பாண்டியராசனென்ற இருவரும் தங்களூருக்குத் திரும்புகின்றவராய், தென்தேசத்தில் வேண்டியவைகளைச் செய்தமைக்கத்தக்க பரிசனங்களை அங்கு அனுப்பினார்கள்.—எ-று. (கoரு)

இருபெருவேந் தருமியல்பின் மீண்டதற்பி னெழுந்தருளும்
பொருவருஞ்சீர் வன்றொண்டர் புகழ்ச்சேர ருடன்புனிதர்
மருவியதா னம்பலவும் பணிந்துபோய் மலைச்சாரற்
குருமணிகள் வெயிலெறிக்குங் குற்றாலஞ் சென்றடைந்தார்.

(இ-ள்.) பெரிய சோழராசன்பாண்டியராசனென்றிருவரும் சிறப்போடு திரும்பினபிறகு எழுந்தருளுகின்ற ஒப்பற்ற சிறப்பினையுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் புகழமைந்த சேரமான்பெருமாணாயனாரோடு சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளை வணங்கிச் சென்று,மலைச்சாரல்களில் நன்னிறத்தையுடைய இரத்தினங்கள் ஒளிவீசுகின்ற திருக்குற்றாலத்தையடைந்தார்கள்.

'பொருவருஞ்சீர்வன்றொண்டர்' என்றார், இறைவன்றானே வலியவந்தாட்கொள்ளப் பெற்றமையான். (க0சு)

குற்றாலத் திடையமர்ந்த கூத்தர்குரை கழல்வணங்கிச்
சொற்றாம மலர்புனைந்து குறும்பலாத் தொழுதிப்பான்
முற்றாவெண் மதிமுடியார் பதிபணிந்து மூவெயில்கள்
செற்றார்மன் னியசெல்வத் திருநெல்வே லியையணைந்தார்.

(இ-ள்.) திருக்குற்றாலத்தில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானது சப்திக்கின்ற (திருச்சிலம்பணிந்த) திருவடிகளை வணங்கிச் சொன்மலர்களாகிய திருப்பதிகமாலைபுனைந்துதரித்து, திருக்குறும்பலாவைவணங்கி, இப்பால், வெள்ளிய இளம்பிறையணிந்த திருமுடியையுடைய சிவபெருமானதுபலதிருப்பதிகளை வணங்கி, முப்புரங்களை யழித்தருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பலவகைச் செல்வங்கணிறைந்த திருநெல்வேலியென்னுந் திருப்பதியையடைந்தார்கள்.—எ-று. (க0எ)

நெல்வேலி நீற்றழகர் தமைப்பணிந்து பாடிநிகழ்
பல்வேறு பதிபிறவும் பணிந்தன்பால் வந்தணைந்தார்
வில்வேட ராய்வென்றி விசயனெதிர் பன்றிப்பின்
செல்வேத முதல்வரமர் திருவிரா மேச்சரத்து.

(இ-ள்.) திருநெல்வேலியில் வீற்றிருந்தருளுந் திருவெண்ணீற் றழகராகிய சிவபெருமானை வணங்கித் திருப்பதிகம்பாடி, விளங்குகின்ற வேறு பல திருபபதிகளையும் வணங்கி, வில்லையுடைய வேடுவராகத் திருவுருவங்கொண்டு வெற்றிபொருந்திய அருச்சுனனுக்கெதிரில் சென்றருளிய வேதமுதல்வராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருவிராமேச்சரமென்னுந்திருப்பதியில்வந்து சேர்ந்தார்கள்.—எ-று.

பாசுபதம் பெறும்பொருட்டு அர்ச்சுனன் றவஞ்செய்கையில் துரியோதன னேவலால் மூகனென்னுந் தானவராசன் பன்றிவடிவங்கொண்டு கொல்லமறைந்திருக்கையில் சிவபெருமான் நந்திகணத்தவர் பரிசனங்களாகவும் வேதம்நாய்க ளாகவும் வரத் தாம் வேடருருவங்கொண் டெழுந்தருளினமையால் 'வில்வேடராய் வென்றி விசய னெதிர் பன்றிப்பின்செல் வேதமுதல்வர்' என்றார். (க0அ)

மன்னுமிரா மேச்சரத்து மாமணியை முன்வணங்கிப்
பன்னுதமிழ்த் தொடைசாத்திப் பயில்கின்றார் பாம்பணிந்த

சென்னியர்மா தோட்டத்துத் திருக்கேதீச் சரஞ்சார்ந்து
சொன்மலர்மா லைகள்சாத்தித் தூரத்தே தொழுதமர்ந்தார்.

(இ-ள்.) நிலைபெற்ற திருவிராமேச்சரத்தில் வீற்றிருந்தருளுஞ் சிறந்த மாணிக்கம்போன்ற சிவபெருமானைமுன்னேவணங்கிச் சொல்லுகின்ற தமிழ்ப் பதிகமாலைசாத்தி அங்குவசித்தருளுகின்றவர், பாம்பாபரணத்தை யணிந்த சிவ பெருமான் வீற்றிருந்தருளும், (ஈழமண்டலத்திலுள்ள) மாதோட்டத்துத் திருக்கேதீச்சரத்தைச் சிந்தித்து, அவ்விராமேச்சரத்தி லிருந்துகொண்டே திருப் பதிகமாலைசாத்தி வணங்கி வசித்தருளினார்.—எ-று. (௧0௧)

திருவிரா மேச்சரத்துச் செழும்பவளச் சுடர்க்கொழுந்தைப்
பரிவினாற் றொழுதகன்று பரமர்பதி பிறபணிந்து
பெருவிமா னத்திமையோர் வணங்குபெருந் திருச்சுழியன்
மருவினார் வன்றொண்டர் மலைவேந்த ருடன்கூட.

(இ-ள்.) ஸ்ரீ சுந்தர்மூர்த்திசுவாமிகள் சேரமான் பெருமாணாயனாரோடு திருவிராமேச்சரமென்னுந் திருப்பதியில் வீற்றிருந்தருளும் செழியபவளக்கொழுந்துபோன்ற சிவபெருமானை அன்போடு வணங்கி, அவ் வெம்பெருமானது மற்றத் திருப்பதிகளையுந் தொழுது பெரியவிமானத்திலேறித் தேவர்கள் வந்து வணங்குகின்ற பெரிய திருச்சுழியலென்னுந் திருப்பதியை யடைந்தருளினார்.

திருச்சுழிய லிடங்கொண்ட செம்பொன்மலைச் சிலையானைக்
கருச்சுழியில் வீழாமைக் காப்பானைக் கடல்விடத்தின்
இருட்சுழியு மிடற்றானை யிறைஞ்சியெதி ரிதழிமலர்ப்
பருச்சுழியத் தடனானை யுயிரெனும்பா மலர்புனைந்தார்.

(இ-ள்.) திருச்சுழியலென்னுந் திருப்பதியைத் தமக்கு இடமாகக் கொண்டருளிய மேருமலையாகிய வில்லையுடையவரும், (தம்மை யடைந்த மெய்யடியார்களை) ஜனனமாகிய சுழியில் விழுந்தலையாமல் காத்தருள்பவரும், கடலிற் றோன்றிய ஆலாகலவிஷத்தின் இருளானது அடங்கியிருக்கப்பட்ட கண்டத்தினையுடையவருமாகிய சிவபெருமானைத் திருமுன்னே வணங்கி, கொன்றைமலராலாகிய பெரிய மாலையுடன், "ஊனாயுயிர்" என்னு முதலையுடையதிருப்பதிக மாலையை யணிந்தருளினார்.—எ-று.

சுழியம்=சூழ்ந்திருத்தல்; அதாவது கட்டப்பட்டது என்பது பொருள். அது இங்குத் தொழிலாகுபெயராய் மாலையை யுணர்த்திற்று. (௧௧௧)

**திருச்சுழியல் - பண் - நட்டராகம்.**

திருச்சிற்றம்பலம்.

ஊனாயுயிர்புகலாயகலிடமாய்முகில்பொழியும்
வானாயதன்மதியாய்விதிவருவானிடம்பொழிலின்
றேனாதரித்திசைவண்டினமிழற்றுந்திருச்சுழிய
னானைவிதநினைவார்தமைநலியார்நமன்றமரே.

நீரூர்தருநிமலன்றிருமலையார்க்கயலருகே
தேரூர்தருமரக்கன்சிரநெரித்தான்றிருச்சுழியல்
பேரூரெனவுறைவானடிப்பெயர்நாவலர்கோமா
னூரனதமிழ்மாலைபத்தறிவார்துயரிலரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-இணைத்திருமேனிநாதர்; தேவியார்-துணைமாலைநாயகியம்மை.

---

அங்கணரைப் பணிந்துறையு மாரூரர்க் கவ்வூரிற்
கங்குலிடைக் கனவின்கட் காளையாந் திருவடிவாற்
செங்கையினிற் பொற்செண்டுந் திருமுடியிற் சுழியமுட
னெங்குமிலாத் திருவேட மென்புருக முன்காட்டி.

(இ-ள்.) சிவபெருமானை வணங்கி அவ்வூரில் வசித்தருளும் ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு இரவில் சொப்பனத்திலே காளையாகியதிருவுருவத்தோடு அழகிய திருக்கரத்தில் பொற்செண்டும், திருமுடியில் சுழியத்துடன் எங்குமில்லாத திருவேடமானது எலும்புமுருகும்படி முன்னே தோன்றுவித்து.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (கக௨)

கானப்பேர் யாமிருப்ப தெனக்கழறிக் கங்கையெனும்
வானப்பே ராறுலவு மாமுடியார் தாமகல
ஞானப்பே ராளருணர்ந் ததிசயித்து நாகமுட
னேனப்பே ரெயிறணிந்தா ரருளிருந்த பரிசென்பார்.

(இ-ள்.) யாம் வசிப்பது திருக்கானப்பேர் என்று கூறியருளிப் பெரிய ஆகாயகங்கையானது உலவுகின்ற சடைமுடியையுடைய சிவபெருமான் மறைந்தருள, சிவஞானப்பேரருளாளராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் விழித்து அதிசயித்து, பாம்புடன் பெரிய பன்றிக்கொம்பையு மணிந்த சிவபெருமானது திருவருளிருந்த பரிசு யாதென்பவராய்.—எ-று.

என்பார்-முற்றெச்சம். (ககங)

கண்டருளும் படிகழறிற் றறிவார்க்கு மொழிந்தருளிப்
புண்டரிகப் புனற்சுழியற் புனிதர்கழல் வணங்கிப்போ
யண்டர்பிரான் றிருக்கானப் பேரணைவா ராரூரர்
தொண்டரடித் தொழலுமெனுஞ் சொற்பதிகத் தொடையெடுத் [தார்

(இ-ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் அத் திருப்பதியைத் தரிசிக்கும் பொருட்டுச் சேரமான்பெருமாணாயனாரிடத்துக் கூறியருளி, தாமரைத்தடாகங்கள் சூழ்ந்த திருச்சுழியலி லெழுந்தருளிய சிவபெருமானது திருவடிகளை வணங்கிச்சென்று, தேவர்கள் நாயகராகிய சிவபெருமானது திருக்கானப்பேரென்னுந் திருப்பதியை யடைகின்றவர், "தொண்டரடித் தொழலும்" என்னு முதலையுடைய நல்ல சொற்களமைந்த திருப்பதிகமாலையை யெடுத்துப் பாடியருளினார்.—எ-று.

திருக்கானப்பேர் என்பது, காளையார்கோயில். (ககச)

### திருக்கானப்பேர்-பண்-புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

தொண்டரடித்தொழலுஞ்சோதியிளம்பிறையுஞ் சூதனமென்முலையாள்பாகமுமாகிவரும், புண்டரிகப்பரிசாமேனியும்வானவர்கள்பூசலிடக்கடனஞ்சுண்டகருத்தமருங், கொண்டலெனத்திகழுங்கண்டமுமெண்டோளுங்கோலநறுஞ்சடைமேல்வண்ணமுங்கண்குளிரக், கண்டுதொழப்பெறுவதென்றுகொலோவடியேன் கார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே. (௧)

கூதலிடுஞ்சடையுங்கோளரவும்விரவுங் கொக்கிறகுங்குளிர்மாமத்தமுமொத்தனதா, ளோதலுணர்ந்தடியாருன்பெருமைக்குநினைந்துள்ளுருகாவிரசுமோசையைப்பாடலுநீ, யாதலுணர்ந்தவரோடன்புபெருத்தடியேனங்கையின்மாமலர்கொண்டென்கணதல்லல்கெடக்,காதலுறத்தொழுவதென்றுகொலோ வடியேன் கார்வயல்சூழ்கானப் பேருறைகாளையையே. (௨)

நானுடைமாடெனவேநன்மைதரும்பரனைநற்பதமென்றுணர்வார்சொற்பதமார்சிவனைத், தேனுடையின்னமுதைமற்றதனிற்றெளிவைத்தேவர்கணாயகனைப்பூவுயர்சென்னியனை, வானிடைமாமதியைமாசறுசோதியனைமாருதமும்மனலும்மண்டலமும்மாயக், கானிடைமாநடனென்றெய்துவதென்றுகொலோகார்வயல்சூழ்கானப் பேருறைகாளையையே. (௩)

செற்றவர்முப்புரமன்றட்டசிலைத்தொழிலார் சேவகமுந்நினைவார்பாவகமுந்நெறியுங்,குற்றமில்தன்னடியார்கூறுமிசைப்பரிசுங்கோசிகமும்மரையிற்கோவணமும்மதளு. மற்றிகழ்திண்புயமு மார்பிடைநீறுதுதைமாமலைமங்கையுமைசேர்சுவடும்புகழக், கற்றனவும்பரவிக்கைதொழலென்றுகொலோகார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே. (௪)

கொல்லைவிடைக்கழகுங்கோலநறுஞ்சடையிற் கொத்தலரும்மிதழித்தொத்துமதனருகே, முல்லைபடைத்தநகைமெல்லியலாளொருபான்மோகமிகுத்திலகுங்கூறுசெயெப்பரிசுந், தில்லைநகர்ப்பொதுவுற்றாடியசீர்நடமுந்திண்மழுவுங்கைமிசைகூரெரியும்மடியார், கல்லவடப்பரிசுங்காணுவதென்றுகொலோகார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே

பண்ணுதலைப்பயனாற்பாடலுநீடுதலும் பங்கயமாதனையார்பத்தியுமுத்தியளித், தெண்ணுதலைப்பெருமானென்றெழுவாரவர்தமேசறவுமிறையாமெந்தையையும்விரவி, நண்ணுதலைப்படுமா றெங்ஙனமென்றயலே நைகிறவென்னைமதித்துய்யும்வணம்மருளுங், கண்ணுதலைக்கனியைக்காண்பதுமென்றுகொலோ கார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே. (௬)

மாவையுரித்ததள்கொண் டங்கமணிந்தவனை வஞ்சமனத்திறையுநெஞ்சணுகாதவனை, மூவருருத்தனதாமூலமுதற்கருவைமூசிடுமால்விடையின்பாகனையாகமுறப்,பாவகமின்றிமெய்யேபற்றுமவர்க்கமுதைத்

பானறுநெய்தயிரைந்தாடபெரம்பரனை,காவலெனக்கிறைவென்றெய்துவ தென்றுகொலோகார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே. (எ)

தொண்டர்தமக்கெளியசோதியைவேதியனைத்தூயமறைப்பொருளாநீதியைவார்கடனஞ், சுண்டதனுக்கிறவாதென் றமிருந்தவனையூழி படைத்தவனேடொள்ளரியும்முணரா,வண்டனையண்டர்தமக்காகமநூன்மொழியுமாதியைமேதகுசீரோதியைவானவர்தங்,கண்டனையன்பொடுசென்றெய்துவதென் றுகொலோகார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே. (அ)

நாதனைநாதமிகுத்தோசையதானவனை ஞானவிளக்கொளியாமூனுயிரைப்பயிரை,மாதனைமேதகுதன்பத்தர்மனத்திறையும்பற்றுவிடாதவனைக்குற்றமில்கொள்கையனைத், தூதனையென்றனையாளோடழனைநாயகனைத் தாழ்மகரக்குழையுந்தோடுமணிந்ததிருக், காதனைநா யடியேனெய்துவதென் றுகொலோகார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே

கன்னலையின் னமுதைக் கார்வயல்சூழ்கானப் பேருறைகாளையையொண்சீருறைதண்டமிழா, லுன்னிமனத்தயராவுள்ளுருகிப்பரவுமொண்பொழினாவலர்கோனாகியவாரூரன், பன்னுமிசைக்கிளவிபத்திவைபாடவல்லார்பத்தர்குணத்தினராயெத்திசையுமபுகழ, மன்னியிருப்பவர்கள்வானினிழிந்திடினுமண்டலநாயகராய்வாழ்வதுநிச்சயமே. (க0)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-காளைநாதேசுவரர்; தேவியார்-பொற்கோடியம்மை.

---

காளையார் தமைக்கண்டு தொழப்பெறுவ தென்றென்று
தாளைநா ளும்பரவத் தருவார்பாற் சார்கின்று
ராளைநீ ளிடைக்காண வஞ்சியநீர் நாயயலே
வாளைபாய் நுழைப்பழன முனைப்பாடி வளநாடர்.

(இ-ள்.) ஆட்களை தூரத்தில் காணுதலால் அஞ்சிய நீர்நாய்களுக்கு அயலில் வாளைமீன்கள் பாய்கின்ற வளையினையுடைய வயல்சூழ்ந்த வளவிய திருமுனைப்பாடிநாட்டுத் தலைவராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள், "காளையார்தமைக் கண்டுதொழப்பெறுவதென்று" என்னுங் கருத்தை இறுதியிலமைத்து, எந்நாளும் வணங்குவதற்குத் திருவடிகளைத் தருகின்றவராகிய சிவபெருமானிடத்தில் அடைகின்றவராயினர்.—எ-று. (ககஙு)

மன்னுதிருக் கானப்பேர் வளம்பதியில் வந்தெய்திச்
சென்னிவளர் மதியணிந்தார் செழுங்கோயில் வலங்கொண்டு
முன்னிறைஞ்சி யுள்ளணைந்து முதல்வர்சே வடிதாழ்ந்து
பன்னுசெழுந் தமிழ்மாலை பாடினார் பரவினார்.

(இ-ள்.) நிலைபெற்ற திருக்கானப்பேரென்னும் வளப்பமிக்க திருப்பதியில் வந்தடைந்து, கலைவளர்கின்ற இளம்பிறையைத் திருமுடியிலணிந்தருளிய சிவபெருமானது செழிய திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்து முன்னேவணங்கி, உள்ளே புகுந்து சிவபெருமானது திருவடிகளைத் தொழுது, புகழப்பட்ட செழிய தமிழ்த்திருப்பதிகத்தைப் பாடித் துதித்தருளினார்.—எ-று. (ககச)

ஆராத காதலுட னப்பதியிற் பணிந்தேத்திச்
சீராருந் திருத்தொண்டர் சிலநாளங் கமர்ந்தருளிக்
காராரு மலர்ச்சோலைக் கானப்பேர் கடந்தணைந்தார்
போரானேற் றூர்கயிலைப் பொருப்பர்திருப் புனவாயில்.

(இ-ள்.) சிறப்புமிக்க திருத்தொண்டராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் நீங்காத பேரன்புடன் அத்திருப்பதியில் வணங்கித் துதித்துச் சிலநாள்கள் அங்கு வசித்தருளி, மேகங்கள் பொருந்திய மலர்களையுடைய சோலை சூழ்ந்த திருக்கானப்பேரென்னுந் திருப்பதியைக் கடந்து, போர்செய்கின்ற இடபத்தை வாகனமாக வுடையவரும், திருக்கயிலாசத் திருமலையையுடையவருமாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருப்புனவாயிலென்னுந் திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று.

மேகங்கள் இனமெனக்கருதி வந்தடைவதனாற் காராரு மலர்ச்சோலையென்றார். இனி, மேகமண்டல மளாவிய சோலையெனினுமமையும், கானப்பேர் என்றது காளையார் கோயிலை, காத்தற்றொழிலை யுடைய திருமாலையே விடையாக் கொண்டமையிற் றம்மையடைந்தாரைக் காப்பதும், தாங்கொடுப்பது கயிலையு மென்பது தோன்ற போரானேற்றூ ரென்றும், கயிலைப் பொருப்பரென்றுங் கூறினார். (கசஎ)

புனவாயிற் பதியமர்ந்த புனிதரா லயம்புக்கு
மனமார்வ முறச்சித்த நீநினையென் னொடுவென்று
வினவான தமிழ்பாடி வீழ்ந்திறைஞ்சி யப்பதியிற்
சினவானை யுரித்தணிந்தார் திருப்பாதந் தொழுதிருந்தார்.

(இ-ள்.) திருப்புனவாயிலென்னுந் திருப்பதியி லமர்ந்தருளிய சிவபெருமானது திருக்கோயிலை யடைந்து, திருவுள்ளத்தி லன்புபொருந்த "சித்தநீ நினையென்னொடு" என்று முதலெடுத்து, வினவுதலாகிய தமிழ்த்திருப்பதிகம் பாடியருளி நிலமுற விழுந்து நமஸ்கரித்து, அத்திருப்பதியில் கோபித்துவந்த (கயாசுரனென்னும்) யானையைத் தோலுரித்தணிந்தவராகிய சிவபெருமானது திருவடிகளை வணங்கி யிருந்தருளினார்.—எ-று.

தம்மை யடைந்தாருக்குப் பாச மோசனஞ் செய்தருளுவாரென்பது தோன்ற சினவானை யுரித்தணிந்தாரென்றார். (சகஅ)

---

திருப்புனவாயில்-பண்-பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

சித்தநீநினையென்னொடுசூளறும்வைகலு
மத்தயானையினீருரிபோர்த்தமணாளனூர்
பத்தர்தாம்பலர்பாடிநின்றாடும்பழம்பதி
பொத்திலாந்தைகள்பட்டாறும்புனவாயிலே.

பொடியாடுமேனியன்பொன்புனஞ்சூழ்புனவாயிலை
யடியாரடியன்னாவலவூரனுரைத்தன

மடியாதுகற்றிவையேத்தவல்லார்வினைமாய்ந்துபோய்க்
குடியாகப்பாடிநின்றாடவல்லார்க்கில்லைகுற்றமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பழம்பதிநாயகர்; தேவியார்-பரங்கருணைநாயகியம்மை.

---

திருப்புனவா யிற்பதியி லமர்ந்தசிவ னார்மகிழும்
விருப்புடைய கோயில்பல பணிந்தருளான் மேவினார்
பொருப்பினொடு கானகன்று புனற்பொன்னி நாடணைந்து
பருப்பதவார் சிலையார்தம் பாம்பணிமா நகர்தன்னில்.

(இ-ள்.) திருப்புனவாயிற் றிருப்பதியில் வீற்றிருந்தருளும் சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளிய விருப்பமிக்க பல திருக்கோயில்களை வணங்கி, (அவ்வெம்பெருமானது) திருவருளினால், மலைகளையுங் காடுகளையுங் கடந்து நீர்வளம்பொருந்திய சோழநாட்டையடைந்து, மேருமலையாகிய நீண்ட வில்லையுடைய சிவபெருமானது பாம்பணிமாநகரத்தில் வந்தடைந்தருளினார்.—எ-று.

பருப்பதவார் சிலையாரென்றது, மேருமலையை வில்லாக வுடையாரென்றது குறித்து நின்றது. எல்லா மலைகளினுஞ் சிறந்தமையால் மேருவை வாளா பருப்பதமென்றார். பூ என்றது, அவ்வினத்துட் சிறந்த தாமரைமலரைக் குறிப்பதுபோல. (கககூ)

பாதாளீச் சரமிறைஞ்சி யதன்மருங்கு பலபதியும்
வேதாதி நாதர்கழல் வணங்கிமிகு விரைவினுடன்
சூதாருந் துணைமுலையார் மணிவாய்க்குத் தோற்றிரவு
சேதாம்பல் வாய்திறக்குந் திருவாரூர் வந்தணைந்தார்.

(இ-ள்.) பாதாளீச்சரமென்னுந் திருக்கோயிலையடைந்து வணங்கி,அதன் அருகிலுள்ள பல திருப்பதிகளிலும் வேதகாரணராகிய சிவபெருமானது திருவடிகளைவணங்கி மிக்க விரைவோடும் சொக்கட்டான்காய்போலு மிரண்டுமுலைகளையுடைய மாதர்களது அழகிய வாய்க்குத்தோற்று, இராக்காலங்களில் செவ்வாம்பல் மலர்கள் வாய்திறக்கின்ற திருவாரூர்த் திருப்பதியை வந்தடைந்தருளினார். —எ-று.

பாதாளீச்சரமென்பது பாம்பணிமாநகரத்தில் சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக்கோயிலின் பெயர். மாதருலாவுங் காலத்துப் பூத்தலால் தனக்கு மிக்க நாணம் விளைத்தலின் இரவுசேதாம்பல் வாய்திறக்குமென்றார்; இரவு அம்மாதர் நித்திரைசெய்யுங்கால மாதலின். இது தற்குறிப்பேற்றம். வேதாதிநாதர் என்றது வேதங்களாற் கூறப்படுமாதிநாதரென்க, ஆதிநாத ரெனவிரித்தார் சங்கார கிருத்தியத்தின் மேற்கிருத்திய மின்மையானு மதனுளேனைய வடங்கலானு மென்க, இதனை "அந்த மாதி" என்ற சிவஞானபோதத்து முதற்சூத்திர வதிகரணத்தானறிக. (கஉ0)

திருநாவ லூர்வேந்தர் சேரர்குல வேந்தருடன்
வருவாரைத் திருவாரூர் வாழ்வார்க ளெதிர்கொள்ளத்
தருகாத லுடன்வணங்கித் தம்பெருமான் கோயிலினுட்
பெருகார்வத் தொடுவிரும்பும் பெரும்பேறு பெறப்புகுந்தார்.

(இ-ள்.) திருநாவலூரர் தலைவராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் சேரமான் பெருமாணாயனாருடன் வருகின்றவரைத்திருவாரூரில் வாழ்கின்றவர்களெதிர்கொண்டுவர, மிகுகின்ற பெருவிருப்புடன் வணங்கித் தமது சிவபெருமானுடைய திருக்கோயிலினுள்ளே பேரன்போடு விரும்புகின்ற பெரும்பேறடையும்படி புகுந்தருளினார்.—எ-று.

திருவாரூர் வாழ்வார்களென்றது திருவாரூர் பிறந்தாரோ வாழ்வெய்தினவரொன்பது தோன்றுதற் கென்க. (கஉக)

வாசமலர்க் கொன்றையார் மகிழ்கோயில் வலங்கொண்டு
நேசமுற முன்னிறைஞ்சி நெடும்பொழுதெ லாம்பரவி
யேசறவாற் றிருப்பதிக மெடுத்தேத்தி யெழுந்தருளாற்
பாசவினைத் தொடக்கறுப்பார் பயில்கோயில் பணிந்தணைவார்.

(இ-ள்.) நறுமணங்கமழுங் கொன்றைமலர் மாலையையணிந்த சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளுந் திருக்கோயிலைப்பிரதக்ஷணஞ்செய்து நெடுநேரமளவுந் துதித்து, மனவருத்தத்துடன் திருப்பதிகம் பாடிப் பரவித் திருவருளினாலெழுந்து பாசசம்பந்தமாகிய இருவினைத்தொடக்கை யறுத்தருளுஞ் சிவபெருமான்வீற்றிருந்தருளும் திருக்கோயிலைவணங்கி வருவாராயினார்.—எ-று.

தம்மை யடைந்தார்க்குப் பாசமோசனஞ் செய்வதே இறைவன் தொழிலாகலின் பாசவினைத் தொடக்கறுப்பாரென்றார். பாசமாகிய வினைத்தொடக்கறுப்பாரெனக் கொள்க. (கஉஉ)

பரவையார் மாளிகையிற் பரிசனங்கண் முன்னெய்த
விரவுபே ரலங்கார விழுச்செல்வ மிகப்பெருக
வரவெதிர்கொண் டடிவணங்க வன்றொண்டர் மலைநாட்டுப்
புரவலனா ரையுங்கொண்டு பொன்னணிமா ளிகைபுகுந்தார்.

(இ-ள்.) பரவைநாச்சியாரது திருமாளிகையில் பரிசனங்கள் முன்னேயடைய நிறைந்த பேரலங்காரமாகிய பெருஞ்செல்வமானது அதிகரித்துப் பெருக, அவரது வருகையை யெதிர்கொண்டு திருவடிகளில் வணங்க, ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் மலைநாட்டுத் தலைவராகிய சேரமான் பெருமாணாயனாரையுந் தம்முடனழைத்துக்கொண்டு பொன்மயமாகிய அழகியதிருமாளிகையையடைந்தருளினார்.—எ-று.

மலைநாட்டுப் புரவலனாரென்றது சேரமான் பெருமாளை, இதனை 'மாவீற்றிருந்த பெருஞ் சிறப்பின் மன்னும் தொன்மை மலைநாட்டுப் பாவீற்றிருந்த பல்புகழார்' என்றதனானு மறிக. (கஉ௩)

பரவியே பரவையார் பரிவுடனே பணிந்தேத்தி
விரவியபோ னகங்கறிகள் விதம்பலவா கச்சமைத்துப்
பரிகலமும் பாவாடை பகல்விளக்கு முடனமைத்துத்
திருவமுது செய்வித்தார் திருந்தியதேன் மொழியினார்.

(இ-ள்.) திருத்தமாகிய தேன்போலும் மொழியினை யுடையவராகிய பரவைநாச்சியார் விருப்போடு வணங்கித்துதித்து, சிறந்த அன்னமும், பதார்த்தவகைகளும் பலவிதவகையாகச் சமைத்து, பரிகலமும், பாவாடையும், பகல்விளக்கும் உடனேயமைத்து அவர்களைத் திருவமு துசெய்வித்தார்.—எ-று.

'உண்டி முதலியன வுதவுங்காலத்து இன்சொல் வேண்டுதலின் அம் மொழியை விசேடிப்பார், 'திருந்திய தேன்மொழியினுரென்ருர்' (கஉச)

மங்கலமாம் பூசனைகள் பரவையார் செயமகிழ்ந்து
தங்கியினி தமர்கின்ருர் தம்பிரான் கோயிலினுட்
பொங்குபெருங் காலமெலாம் புக்கிறைஞ்சிப் புறத்தணைந்து
நங்கள்பிரான் றமரவர்க ணல்விளையாட் டினைநயந்தார்.

(இ-ள்.) மங்கலகரமாகிய பூசனைகளைப் பரவைநாச்சியார் செய்ய, நமது சிவபெருமானுடைய மெய்யன்பர்களாகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளும் சேரமான்பெருமாணயனுரும், மகிழ்வுற்று இனிது வசிக்கின்றவர்களாய்க் காலங்க டோறுஞ் சிவபெருமானது திருக்கோயிலை யடைந்து வணங்கி வெளியிலே வந்து நல்ல விளையாட்டினைச் செய்ய விருப்புற்ருர்கள்.—எ-று.

அரசச் செல்வமுடையராதலின், 'நல்விளையாட்டினை நயந்தார்'என்ருர். அவையிவையெனப் பிற்செய்யுளாற் கூறுகின்றமை காண்க. (கஉரு)

நிலைச்செண்டும் பரிச்செண்டும் வீசிநித மகிழ்வெய்தி,
விலக்கரும்போர்த் தகர்ப்பாய்ச்சல் கண்டருளி,வென்றிபெற
மலைக்குநெடு முட்கணைக்கால் வாரணப்போர் மகிழ்ந்தருளி
யலைக்குமறப் பலபுள்ளி னமர்விரும்பி யமர்கின்ருர்.

(இ-ள்.) நிலைச்செண்டையும், பரிச்செண்டையும் அடித்து நாடோறு மகிழ்வடைந்து, தடுத்தற்கரிய போர்த்தொழிலையுடைய ஆட்டுப்பாய்ச்சலை விட்டுப்பார்த்தருளி, வெற்றிபெறும்படி போர்செய்கின்ற நீண்டமுள்ளுகளைக் கணைக்காலிலுடைய கோழிச்சண்டையைக்கண்டு மகிழ்ந்து, வருத்துகின்ற கொடுமையையுடைய (காடை - கவுதாரிமுதலிய) பல பறவைகளினது சண்டைகளை விரும்பி வசிக்கின்றவர்களாயினுர்கள்.—எ-று.

தகரைவிலக்கினும் அது போரையே விரும்புதலின், 'விலக்கரும் போர்த்தகர்' என்ருர். (கஉசு)

வேறு.

விரவு காதன் மீக்கூர மேவு நாள்கள் பலசெல்லக்
கரவி லீகைக் கேரளனுர் தங்கள் கடல்சூழ் மலைநாட்டுப்
பரவை யார்தங் கொழுநனுர் தம்மைப் பணிந்து கொண்டணைவா
னிரவும் பகலுந் தொழுதிரக்க விசைந்தா ரவரு மெழுந்தருள.

(இ-ள்.) கலந்த பேரன்பானது அதிகரிக்க வசித்தருளுகின்ற நாள்கள் நீங்கிச்செல்ல, உலோபத்தன்மையற்ற பெருங் கொடையினையுடை சேரமான்பெருமாணயனுர் தங்களது சமுத்திரஞ்சூழ்ந்த மலைநாட்டிற்குப் பரவைநாச்சியாரது நாயகராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளை வணங்கி யழைத்துக் கொண்டு செல்லும்பொருட்டு இரவும் பகலுமாகத் தொழுது வேண்ட, அதற்கு அச்சுவாமிகள் அவ்வாறே செல்வதற்கு உடன்பட்டருளினுர்.—எ-று.

தம்மையுடையானை யொப்ப வேண்டிய வேண்டி யாங்குதவுஞ் சிறப்பு நோக்கிக் 'கரவிலீகைக் கேரளனுர்' என்ருர். கேரளம்-மலைநாடு, தொழுதிரக்க அவருமெழுந்தருள விசைந்தாரெனக் கூட்டுக. (கஉஎ)

நங்கை பரவை யாருள்ளத் திசைவா னம்பி யெழுந்தருளத்
திங்கண் முடியார் திருவருளைப் பரவிச் சேர மான்பெருமா
ளெங்கு முள்ள வடியாருக் கேற்ற பூசை செய்தருளிப்
பொங்கு முயர்ச்சி யிருவரும்போய்ப் புக்கார் புனிதர் பூங்கோயில்.

(இ-ள்.) பரவைநாச்சியாரது திருவுள்ளத்தின் சம்மதத்தினால் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளெழுந்தருளவும், சேரமான் பெருமாணாயனார் சந்திரசேகரராகிய சிவபெருமானது திருவருளைத் துதித்து, எவ்விடத்துமுள்ள சிவனடியார்களுக்குத் தக்க பூசனை சிறப்பச்செய்து,மிக்க மேன்மை பொருந்திய அவ்விருவர்களும் சிவபெருமானது கமலாலயமென்னுந் திருக்கோயிலில் சென்று புகுந்தார்கள்.—எ-று.

அதி பாதகமுடையாரேனுந் தம்மை யடைந்தாரைக் காக்குஞ் சிறப்பு நோக்கித், திங்கண்முடியா ரென்றார். (௧௨அ)

நம்பி ரானைத் தொழுதருளாற் போந்து தொண்டர் சார்ந்தணைய
நம்பி யாரு ரருஞ்சேரர் நன்னாட் டரச ராய
பைம்பொன் மணிநீண் முடிக்கழறிற் றறிவார் தாமும் பயணமுடன்
செம்பொ னீடு மதிலாரூர் தொழுது மேல்பாற் செல்கின்றார்.

(இ-ள்.) சிவபெருமானைத் தொழுது திருவருளினால் புறத்தில் வந்து அடியார்கள் சேர்ந்துவர, ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளும் நல்ல சேரநாட்டரசராகிய பசும்பொன்னாலாகிய மணிகளிழைத்த உயர்ந்த கிரீடத்தையுடைய சேரமான்பெருமாணாயனாரும், பிரயாணத்துடன் செம்பொன்மயமாகிய மதிலையுடைய திருவாரூரை வணங்கி மேற்றிசையில் செல்கின்றவ ரானார்கள்.-எ-று.

தாம் மலைநாடு சாரச்செல்லுங் கருத்தினராகலின் 'மேல்பாற் செல்கின்றார்' என்றதென்க. (௧௨௯)

வேறு.

பொன்பரப்பி மணிவரன்றிப் புனல்பரக்குங் காவேரித்
தென்கரைபோய்ச் சிவன்மகிழ்ந்த கோயில்பல சென்றிறைஞ்சி
மின்பரப்புஞ் சடையண்ணல் விரும்புதிருக் கண்டியூ
ரன்புருக்குஞ் சிந்தையுடன் பணிந்துபுறத் தணைந்தார்கள்.

(இ-ள்.) பொற்பொடிகளைப் பரப்பிக்கொண்டும், முத்துக்களை வாரிக்கொண்டும் நீர் பரவிச் செல்லுகின்ற காவேரி நதியின் தென்கரையையடைந்து சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளும் பல திருக்கோயில்களை யடைந்து வணங்கி, மின்போலொளிவீசுஞ் சடைமுடியை யுடைய சிவபெருமான் விரும்பி வீற்றிருந்தருளுந் திருக்கண்டியூரை அன்போடும் உருகுகின்ற திருவுள்ளத்துடன் வணங்கிப் புறத்தில் சென்றார்கள்.—எ-று.

திருக்கண்டி யூரென்றது பிரமன் சிரங்கொண்ட திருப்படைவீடு, இது அட்டவீரட்டத்தொன்று. இதனைப் 'பூமன்சிரங்கண்டி' என்றதனாலறிக.(௧௩0)

வடகரையிற் றிருவையா றெதிர்தோன்ற மலர்க்கரங்க
ளுடலுருக வுள்ளுருக வுச்சியின்மேற் குவித்தருளிக்
கடல்பரந்த தெனப்பெருகுங் காவிரியைக் கடந்தேறித்
தொடர்வுடைய திருவடியைத் தொழுவதற்கு நினைவுற்றார்.

(இ-ள்.) (அந்நதியின்) வடகரையிலே திருவையாறென்னுந் திருப்பதி யானது எதிரில் தோன்ற, தேக முருகவும் திருவுள்ள முருகவும் தாமரை மலர் போன்ற திருக்கரங்களைச் சிரமேற் குவித்து, கடல்பரந்து பெருகுவதுபோலப் பெருகி வருகின்ற காவிரிநதியைக்கடந்து கரையேறித் தங்களுக்குப் பற்றுக வுடைய திருவடியை வணங்குவதற்குத் திருவுள்ளங் கொண்டார்கள்.—எ-று.

ஆன்மாக்களுக்கு இறைவன்பற்றுக நிற்பன்; இதனை "பற்றுக பற்றற் றான் பற்றினை" என்றும், "பற்றாய பெருமானே" என்றுமதனை யுணர்ந்த பெரி யோர் வாக்கானறிக. வெள்ளத்தின் மிகுதியையுணர்த்த 'கடல்பரந்த தெனப் பெருகுங் காவிரி' என்றார். (கசுக)

வேறு.

ஐயா றதனைக் கண்டுதொழு தருளா ரூரர் தமைநோக்கிச்
செய்யாள் பிரியாச் சேரமான் பெருமா ளருளிச் செய்கின்றார்,
மையார் கண்டர் மருவுதிரு வையா றிறைஞ்ச மனமுருகி
நையா நின்ற திவ்வாறு கடந்து பணிவோ நாமென்ன.

(இ-ள்.) இலக்ஷுமியானவள் நிலைபெற்று வாழ்கின்ற சேரமான்பெரு மாணுயனார் திருவையாற்றைத் தரிசித்து வணங்கி, திருவருளையுடைய ஸ்ரீ சுந் தரமூர்த்திசுவாமிகளை நோக்கி யருளிச்செய்கின்றார்; (சுவாமிகளே! அடியே னுக்கு) காளகண்டராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருவையாற்றை வணங்கவேண்டி என் மனமுருகி வருந்துகின்றது; ஆதலால் நாம் இவ்வாற் றைக் கடந்து சென்று வணங்குவோமென்று கூறியருள.—எ-று.

சிவபெருமானு லளிக்கப்பட்ட செல்வமாதலின் 'செய்யாள் பிரியாச் சேரமான் பெருமாள்' என்றதென்க. மையார் கண்டமென்றது சீகண்டமென்ற துணர்த்தற்கு. (கசுஉ)

ஆறு பெருகி யிருகரையும் பொருது விசும்பி லெழுவதுபோல்
வேறு நாவா யோடங்கள் மீது செல்லா வகைமிகைப்ப,
நீறு விளங்குந் திருமேனி நிருத்தர் பாதம் பணிந்தன்பி,
லூறு நெறியாச் செலவுரியார் தரியா தழைத்துப் பாடுவார்.

(இ-ள்.) காவிரிநதி வெள்ளம் பெருகி இரண்டு கரைகளையு மோதி ஆகாயத்தை யளாவுவதுபோல, வேறே கப்பல்களும் ஓடங்களும் மேல் போகா வண்ணம் அதிகப்பட்டிருக்க, திருவெண்ணீறு விளங்குந்திருமேனியையுடைய சிவபெருமானது திருவடிகளை வணங்கி, அன்பின் வழியே செல்லுதற்குரியவ ராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் மனந்தரியாமல் சிவபெருமானை யழைத் துத் திருப்பதிகம் பாடுவா ராயினர்.—எ-று.

செம்பொன் மேனியில் வெண்ணீறு சண்ணித்தலின் 'நீறுவிளங்குந் திருமேனி நிருத்தர்' என்றும், அவனையணைவ தன்பானுகலின், 'பாதம்பணிந் தன்பினூறு நெறியா' என்றுங் கூறினர். (கசுந)

பரவும் பரிசென் றெடுத்தருளிப் பாடுந் திருப்பாட் டினின்முடிவி,
லரவம் புனைவார் தமையையா றுடைய வடிக ளோவென்று
விரவும் வேட்கை யுடனழைத்து விளங்கும் பெருமைத் திருப்பதிக
நிரவு மிசையில் வன்றொண்டர் நின்று தொழுது பாடுதலும்,

(இ-ள்.) "பரவும் பரிசு" என்று முதலெடுத்துப் பாடுகின்ற திருப் பாடலி னிறுதியில், பாம்பை யாபரணமாக வணிந்த சிவபெருமானை "ஐயா றுடைய வடிகளோ" என்றமைத்து, கலந்த பெருவிருப்பத்துடன் அழைத்து, மேன்மை விளங்குகின்ற திருப்பதிகத்தை ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் கலந்த இசையோடு நின்று வணங்கிப் பாடி யருளவும்.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (௧௬௪)

### திருவையாறு - பண் - கந்தார பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

பரவும்பரிசொன்றறியேனான்பண்டேயுமைப்பயிலாதே
யிரவும்பகலுநினைந்தாலுமெய்தநினையமாட்டேனான்
கரவிலருவிகமுகுண்ணத்தெங்கங்குலைக்கீழ்க்கருப்பாலை
யரவந்திரைக்காவிரிக்கோட்டத்தையாறுடையவடிகளோ. (௧)

எங்கேபோவேனாயிடினுமங்கேவந்தென்மனத்தீராய்ச்
சங்கையொன்றுமின்றியேதலைநாள்கடைநாளாக்கவே
கங்கைசடைமேற்கரந்தானேகலைமான்மறியுங்கனன்மழுவுந்
தங்குந்திரைக்காவிரிக்கோட்டத்தையாறுடையவடிகளோ. (௨)

மருவிப்பிரியமாட்டேனான்வழிநின்றொழிந்தேனொழிகிலேன்
பருவிவிச்சிமலைச்சாரற்பட்டைகொண்டுபகடாடிக்
குருவியோப்பிக்கிளிகடிவார்குழன்மேன்மாலைகொண்டோட்டந்
தரவந்திரைகாவிரிக்கோட்டத்தையாறுடையவடிகளோ. (௩)

பழகநின்றுபணிசெய்வார்பெற்றபயனொன்றறிகிலனி
கழாதுமக்காட்பட்டோர்க்குவேகபடமொன்றரைசாத்திக்
குழகவாழைக்குலைத்தெங்குகொணர்ந்துகரைமேலெறியவே
யழகார்திரைக்காவிரிக்கோட்டத்தையாறுடையவடிகளோ. (௪)

பிழைத்தபிழையொன்றறியேனான்பிழையைத்தீரப்பணியாயே
மழைக்கணல்லார்குழைந்தாடமலையுநிலனுங்கொள்ளாமைக்
கழைக்கொள்பிரசங்கலந்தெங்குங்கழனிமண்டிக்கையேறி
யழைக்குந்திரைக்காவிரிக்கோட்டத்தையாறுடையவடிகளோ. (௫)

கார்க்கொள்கொன்றைச்சடைமேலொன்றுடையாய்விடையாய்கையினான்
மூர்க்கர்புரமூன்றெரிசெய்தாய்முன்னீபின்னீமுதல்வனீ
வார்க்கொளருவிபலவாரிமணியுமுத்தும்பொன்னுங்கொண்
டார்க்குந்திரைக்காவிரிக்கோட்டத்தையாறுடையவடிகளோ. (௬)

முலைக்கண்மடவாளொருபாலாய்ப்பற்றியுலகம்பலிதேர்வாய்
சிலைக்கொள்கணையாலெயிலெய்தாய்செங்கண்விடையாய்தீர்த்தனீ
மலைக்கொளருவிபலவாரிமணியுமுத்தும்பொன்னுங்கொண்
டலைக்குந்திரைக்காவிரிக்கோட்டத்தையாறுடையவடிகளோ. (௭)

போழுமதியம்புனங்கொன்றைபுனல்சேர்சென்னிப்புண்ணியா
சூழுமரவச்சுடர்ச்சோதியுன்னைத்தொழுவார்துயர்போக

வாழுமவர்களங்கங்கேவைத்தசிந்தையுய்ந்தாட்ட
வாழுந்திரைக்காவிரிக்கோட்டத்தையாறுடையவடிகளோ. (அ)

கதிர்க்கொள்பசியையொத்தேநான்கண்டேனும்மைக்காணாதே
னெதிர்த்துநீந்தமாட்டேனெம்மான்றம்மான்றம்மானே
விதிர்த்துமேகமழைபொழியவெள்ளம்பரந்துநுரைசிதறி
யதிர்க்குந்திரைக்காவிரிக்கோட்டத்தையாறுடையவடிகளே. (கூ)

கூசியடியாரிருந்தாலுங்குணமொன்றில்லீர்குறிப்பில்லீர்
தேசவேந்தன்றிருமாலும்மலர்மேலயனுங்காண்கிலாத்
தேசமெங்குந்தெளிந்தாடத்தெண்ணீரருவிகொணர்ந்தெங்கும்
வாசந்திரைக்காவிரிக்கோட்டத்தையாறுடையவடிகளோ. (க0)

கூடியடியாரிருந்தாலுங்குணமொன்றில்லீர்குறிப்பில்லீ
ரூடியிருந்துமுணர்கிலேனும்மைத்தொண்டனூரனேன்
தேடியெங்குங்காண்கிலேன்றிருவாரூரேசிந்திப்ப
வோடுந்திரைக்காவிரிக்கோட்டத்தையாறுடையவடிகளோ. (கக)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-செம்பொற்சோதி யீசுவரர்; தேவியார்-அறம்வளர்த்த நாயகி.

மன்றினிறைந்து நடமாட வல்லார், தொல்லை யையாற்றிற்,
கன்று தடையுண் டெதிரழைக்கக், கதறிக் கனைக்கும் புனிற்றாப்போ,
லொன்று முணர்வாற், சராசரங்க ளெல்லாங் கேட்க, வோலமென
நின்று மொழிந்தார், பொன்னிமா நதியு நீங்கி நெறிகாட்ட.

(இ-ள்.) திருச்சிற்றம்பலத்தில் நிறைந்து திருநடனஞ்செய்ய வல்லவராகிய சிவபெருமான் பழமையாகிய திருவையாற்றுத் திருப்பதியில், கன்றானது தடைபட்டு எதிரில் நின்றழைக்க (அதைக்கேட்டுக்) கதறிக்கனைக்கின்ற தாய்ப்பசுவைப்போல, சராசரங்களனைத்தும் பொருந்திய உணர்வினாற் கேட்கும்படி, காவிரிநதி பிரிந்து வழிகாட்டும் பொருட்டு, "ஓலம்" என்று நின்று சொல்லியருளினர்.—எ-று.

புனிற்றா = இளம்பசு; அதாவது, தலையீற்றுப் பசு என்றபடி. நடமாட வல்லார் நெறிகாட்ட ஓலமென நின்று மொழிந்தார் என்க. மெய்யடியார் உள்ளத்தே நிறைந்திருப்பதுமன்றி யெனப் பொருடருதலான் உம்மை இறந்தது தழீஇயது; இவ்விரண்டிடத்து நிறைந்திருக்கின்றன ரென்பதனை 'சிறைவார் புனற்றில்லைச் சிற்றம்பலத்துமென் சிந்தையுள்ளு - முறைவான்' எனப்பெரியாருங் கூறலானுமுணர்க. (கஙௌ)

விண்ணின் முட்டும் பெருக்காறு மேல்பாற் பளிங்கு வெற்பென்ன
நண்ணி நிற்கக், கீழ்பானீர் வடிந்து நடுவு நல்லவழிப்
பண்ணிக், குளிர்ந்த மணற்பரப்பக் கண்ட தொண்டர், பயின்மாரி
கண்ணிற் பொழிந்து, மயிர்ப்புளகங் கலக்கக், கையஞ் சலிகுவித்தார்.

(இ-ள்.) ஆகாயத்தை யளாவி வருகின்ற பெருவெள்ளத்தை யுடைய காவிரி நதியானது உடனே, மேற்றிசைநீர் பளிங்குமலைபோலத் தங்கி நிற்க, கீழ்த்திசைநீர் வடிந்து நடுவானது நல்ல வழிபண்ணிக் குளிர்ந்திருக்கின்ற

மணற்பரப்பைக்கண்ட அடியார்கள் விளங்குகின்ற ஆனந்த பாஷ்பத்தைக் கண்களினின்றுஞ் சொரிந்து உரோமாஞ்சித முண்டாகக் கைகளை அஞ்சலியாகக்குவித்தார்கள்.—எ-று.

கண்ணீர் பெருகலும் மயிர்ப்புளக மரும்பலும் அன்பு நிகழ்ச்சியின் காரியமென்க. (௧௩௬)

நம்பி பாதஞ் சேரமான் பெருமாள் பணிய,நாவலூர்ச்
செம்பொன் முந் நூன் மணிமார்பர் சேரர் பெருமா னெதிர்வணங்கி,
யும்பர் நாத ருமக்களித்த தன்றே வென்ன வுடன்மகிழ்ந்து,
தம்பி ரானைப் போற்றிசைத்துத்,தடங்கா வேரி நடுவணைந்தார்.

(இ-ள்.) நம்பியாரூரரது திருவடிகளைச் சேரமான் பெருமாணயனர் வணங்க, திருநாவலூரி லவதரித்த செம்பொன் மயமாகிய முப்புரிநூலை யணிந்த அழகிய திருமார்பினையுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் அச்சேரமான் பெருமாணயனருக் கெதிரில் வணங்கி, தேவர்கள் நாயகராகிய சிவபெருமான் உமக்கருளிய தன்றோ? என்று கூறியருளி அவருடன் மகிழ்வடைந்து சிவ பெருமானைத்துதித்துப் பெரிய காவிரி நதியின் நடுவேசென்றருளினர்.—எ-று.

நம்பி என்றது நம்பியாரூரனை,மும்மைப்பெருந்தேவருக்கு மிறைவனுகலின் உம்பர் நாதனென்றார். இருபிறப்பாள ரென்பது தோன்றச் செம்பொன் முந்நூ லணிமார்பரென்ற தென்க. (௧௩௭)

செஞ்சொற் றமிழ்நா வலர்கோனுஞ் சேரர் பிரானுந், தம்பெருமா
னெஞ்ச லில்லா நிறையாற்றி னிடையே யளித்த மணல்வழியி,
றஞ்ச முடைய பரிசனமுந் தாமு மேறித் தலைச்சென்று,
பஞ்ச நதிவா ணனைப்பணிந்து விழுந்தா ரெழுந்தார் பரவினர்.

(இ-ள்.) செவ்விய சொற்களமைந்த தமிழ்த்தலைவராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளும் சேரமான் பெருமாணயனரும் சிவபெருமான் நீர் குறைவில்லாமல் நிறைந்து வருகின்ற காவிரிநதியினிடையில் காட்டியருளிய மணல்வழியே, ஆதரவாகச் சூழ்ந்துவருகின்ற பரிசனங்களுந் தாமுமாகச்சென்று வடகரையிலேறிப் பஞ்சநதீசுவரரை வணங்கி நிலமுற வீழ்ந்து நமஸ்கரித்தெழுந்து துதித்தார்கள்.—எ-று.

பஞ்சநதிவாணனென்றது ஐயாற் றப்பராகிய செம்பொற்சோதியானை. 'அர்ச்சனைபாட்டேயாகுமாதலா னம்மையென்றும், சொற்றமிழ் பாடுகென்றார்' என்றதனல்,இவரது திருவாக்குத் தமிழ்வேதமாகலின் செஞ்சொற்றமிழென்ற தென்க. (௧௩௮)

அங்க ணரனர் கருணையினை யாற்று தாற்றித்,திளைத்திறைஞ்சித்,
தங்கள் பெருமான் றிருவருளாற் றாழ்ந்து,மீண்டுந் தடம்பொன்னிப்
பொங்கு நதியின் முன்வந்த படியே நடுவு போந்தேறத்,
துங்க வரைபோ னின்றநீர் தூர்ந்து தொடரப் பெருகியதால்.

(இ-ள்.) அருட்கண்ணராகிய சிவபெருமானது பெருங்கருணையை நிரம்பப் பருகிப் பேரானந்த வெள்ளத்தில் முழுகி வணங்கி, தங்கள் சிவபெருமானது திருவருளினல் வீழ்ந்து நமஸ்கரித்து, திரும்பவும், வெள்ளம் பெருகுகின்ற பெரிய காவிரி நதியின்முன்வந்த வழியாகவே நடுவேவந்து தென்கரையி

லேற, உடனே, உயர்ந்த பளிங்கு மலைபோல நின்ற நீரான்து நீங்கித்தொடர்ந்துபெருகியது.—எ-று.

திருவையாற்றிற் காவிரி பெருக்கெடுத்து வந்தமைபோல் ஈண்டும் வந்தமையால் மீண்டும் துரந்து தொடரப்பெருகிய தென்றார். வெள்ளத்தின் மிகுதியை யுணர்த்தத் துங்கவரை போனின்ற நீரென்றதென்க. (கஙௌ)

ஆய செயலி னதிசயத்தைக்,கண்டக் கரையி லையாறு
மேய பெருமா னருள்போற்றி வீழ்ந்து தாழ்ந்து மேல்பாற்போய்த்,
தூய மதிவாழ் சடையார்தம் பதிகள் பிறவுந் தொழுதேத்திச்
சேய கொங்கர் நாடணைந்தார் திருவா ரூரர் சேரருடன்.

(இ-ள்.) (தடைபட்டு நின்ற காவிரி நதி வெள்ளமானது) மீண்டும் பெருகிச்சென்ற செயலி னதிசயத்தைக்கண்டு, வடகரையிலுள்ள திருவையாற்றில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானது திருவருளைத் துதித்து நிலமுறவீழ்ந்து வணங்கி மேற்றிசையாகச்சென்று, தூய்மையாகிய இளம்பிறை வாழுஞ் சடைமுடியையுடைய சிவபெருமானது மற்றத் திருப்பதிகளையும் வணங்கித் துதித்து, ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் சேரமான் பெருமாணயனாரோடு சிறந்த கொங்கைநாட்டை யடைந்தருளினார்.—எ-று.

மதிக்குத் தூய்மையும் வாழ்வையுந் தந்தமையால், 'தூயமதிவாழ் சடையார்' என்றதென்க. பதிகள் பிறவு மென்றது, சத்ததானத்தி லேனைய பதிகளையும் திருமழபாடி முதலிய பிறவுமாம். (கச0)

கொங்கு நாடு கடந்துபோய்க் குலவு மலைநாட் டெல்லையுற
நங்கள் பெருமான் றோழனார் நம்பி தம்பி ரான்றோழ
ரங்க ணுடனே யணையவெழுந் தருளா நின்றா ரெனும்விருப்பா
லெங்கு மந்நாட் டுள்ளவர்க ளெல்லா மெதிர்கொண் டின்புறுவார்.

(இ-ள்.) கொங்கநாட்டைக்கடந்து சென்று, விளங்குகின்ற மலைநாட்டி னெல்லையையடைய, அந்நாடெங்கு முள்ளவர்களனைவரும் நமது அரசராகிய சேரமான் பெருமாணயனார் தமது திருத்தோழராகிய நம்பியாரூரரும், தம்பிரான் றோழருமாகிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளுடனே அவ்விடத்தில் வரும்படி யெழுந்தருள்கின்றா ரென்னும் பெரு விருப்பினால் எதிர்கொண்டு மகிழ்வுறவா ராயினார்கள்.—எ-று.

நங்கள் பெருமான் றோழனார் என்றது தம்பிரான் றோழராகிய சுந்தரமூர்த்திசுவாமிகளை. (கசக)

பதிக ளெங்குந் தோரணங்கள் பாங்கரெங்கும் பூவனங்கள்
மதிக ளெங்குங் குளிர்ப்பந்தர் மனைக ளெங்கு மகிற்புகைக்கார்
நதிக ளெங்கு மலர்ப்பிறங்க னாங்க ரெங்கு மோங்குவன
நிதிக ளெங்கு முழவினொலி நிலங்க ளெங்கும் பொலஞ்சுடர்ப்பூ.

(இ-ள்.) ஊர்கடோறுந் தோரணங்களும், பக்கங்களெங்கும் நந்த வனங்களும், வழிகளெங்குங் குளிர்ந்த தண்ணீர்ப் பந்தல்களும், வீடுகடோறுங் கரிய அகிற்புகைகளும், நதிகளெங்கும் மலர்த்தொகுதிகளும், அந்நதிப்பக்கவிடங்களெங்கும் சிறந்த அன்னங்களும், பொக்கிஷ சாலைகளெங்கும் முழவி

ளுலிகளும், மற்ற இடங்களெங்கும் பொன்மயமாக விளங்குகின்ற மலர் களும்.—எ-று.

அகிற்புகைவிம்மி மேகம்போற்றோன்றலின், அகிற்புகைக்காரென்றார். வதிகளென்றது-வழிகளை. காவலிருப்போ ரடித்துக்கொண்டிருத்தலின் நிதிக ளெங்கு முழவொலி யென்றதென்க.

'பாங்கரெங்கும் பலவிளங்கள்' என்றும்பாடம். (௧௪௨)

திசைக டோறும் வரும்பெருமை யமைச்சர் சேனைப் பெருவெள்ளங்
குசைகொள் வாசி நிரைவெள்ளங் கும்ப யானை யணிவெள்ள
மிசைகொள் பண்ணும் பிடிவெள்ள மேவுஞ் சோற்று வெள்ளங்கண்
டசைவி லின்பப் பெருவெள்ளத் தமர்ந்து கொடுங்கோ ளூரணைந்தார்.

(இ-ள்.) திக்குகள் தோறும் நிறைந்து வருகின்ற மேன்மையையுடைய மந்திரிகளது சேனையாகிய பெருவெள்ளமும், கடிவாளம் பூண்ட குதிரைப் பந்தியாகிய வெள்ளங்களும், மத்தகத்தையுடைய யானைப்படைகளின் அழகிய வெள்ளங்களும், பொருந்திய அன்னசாலை வெள்ளங்களுமாகிய இவை களைக்கண்டு, கெடாத பேரின்ப வெள்ளத்தில் முழுகிக் கொடுங்கோளூரை யடைந்தார்கள்.—எ-று.

கலிமா வென்னும் பெயர்பற்றிப் பரியைக் 'குசைகொள் வாசி' என்றார்.

கொடுங்கோ ளூரின் மதில்வாயி லணிகோ டித்து மறுகிலுடுத்
தொடுங்கோ புரங்கண் மாளிகைகள் சூளி கரிசா லைதெற்றி
நெடுங்கோ நகர்க ளாடரங்கு நிரந்த மணித்தா மங்கமுகு
விடுங்கோ தைப்பூந் தாமங்க ணிரைத்து வெவ்வே றலங்கரித்து.

(இ-ள்.) கொடுங்கோளூரினது மதில் வாயிலை அழகாக அலங்கரித்து, வீதிகளிலுள்ள நக்ஷத்திர மண்டலத்தைத் தொடுகின்ற கோபுரங்களும், மாளி கைகளும், மண்டபங்களும், யானைச்சாலைகளும், தெற்றிகளும், உயர்ந்த இராச வீதிகளும், நடனசாலைகளுமாகிய எவ்விடங்களிலும் வரிசையாகிய இரத்தின ரங்களும், கமுக மரங்களும், வாசனை வீசுகின்ற மலர்மாலைகளும் வரிசையாய்க் கட்டி வெவ்வேறு அலங்காரஞ்செய்து.—எ-று.

கோபுரங்களின் நீட்சியையுணர்ந்த உடுத்தொடுங் கோபுரங்களென்றார். கோதை, தாமமென்பன மாலைகளின் பேதங்களை.

இதுமுதலிரண்டுபாடலுங்குளகம். (௧௪௪)

நகர மாந்த ரெதிர்கொள்ள நண்ணி யெண்ணி லரங்குதொறு
மகரக் குழைமா தர்கள்பாடி யாடி மணிவீ தியிலணைவார்
சிகர நெடுமா ளிகையணைவார் சென்று திருவஞ் சைக்களத்து
நிகரி லுண்டர் தமைக்கொண்டு புகுந்தா ருதியர் நெடுந்தகையார்.

(இ-ள்.) அந்நகரத்திலுள்ள மனிதர்கள் எதிர்கொள்ளும்படிவந்து எண் ணில்லாத அழகிய வீதியில் வர, சிகரங்களையுடைய நீண்ட திருமாளிகைக்கு வருகின்றவராகிய சேரமான் பெருமாணாயனார் ஒப்பற்ற ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவா மிகளை யழைத்துக்கொண்டுசென்று திருவஞ்சைக் களமென்னுந் திருக்கோயி லினுள்ளே புகுந்தருளினார்.—எ-று.

இறைவனால் வலியவந் தாட்கொள்ளப்பட்டவராகலின் மிகரில் தொண்டரென்றார். சிவபெருமானது திருவருள்பெற் றரசாள்பவராகலின் 'உதியர் செங்கோல் தகையார்' என்றதென்க. (௧௬௫)

இறைவர் கோயின் மணிமுன்றில் வலங்கொண் டிறைஞ்சி யெதிர்புக்கு
நிறையுங் காத லுடன்வீழ்ந்து பணிந்து நேர்நின் றாரூரர்
முறையில் விளம்புந் திருப்பதிக முடிப்பது கங்கை யென்றெடுத்துப்
பிறைகொண்முடியார்தமைப்பாடிப்பரவிப் பெருமாளுடன்றொழுதார்.

(இ-ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் சேரமான் பெருமாணாயனாரோடு சிவபெருமானது திருக்கோயிலின் திருமுன்றிலைப் பிரதக்ஷணஞ்செய்து வணங்கி எதிரேபுகுந்து நிறைந்த பேரன்புடன் வீழ்ந்து வணங்கித்திருமுன்னின்று முறைமைப்படி யருளிச்செய்யுந்திருப்பதிகத்தை "முடிப்பதுகங்கை" என்று முதலெடுத்துச் சந்திர சேகரராகிய சிவபெருமானைப் பாடியருளித் துதித்து வணங்கியருளினார்.—எ-று.

பெருமாளென்பது சேரர்பெருமானை. (௧௬௬)

---

**முடிப்பது கங்கை - பண் - கொல்லிக் கௌவாணம்.**

திருச்சிற்றம்பலம்.

முடிப்பதுகங்கையுந்திங்களுஞ்செற்றதுமூவெயில்
நொடிப்பதுமாத்திரைநீறெழக்கணை நூறினார்
கடிப்பதுமேறுமென்றஞ்சுவன் றிருக்கைகளாற்
பிடிப்பதுபாம்பன் றியில்லையோவெம்பிரானுக்கே.

காய்சினமால்விடைமாணிக்கத்தெங்கறைக்கண்டத்
தீசனையூரனெட்டோடிரண்டும்விரும்பிய
வாயினேர்ப்பகைஞானியப்பனடித்தொண்டன்றூ
னேசினபேசுமின்றொண்டர்காளெம்பிரானையே.

திருச்சிற்றம்பலம்.

தொழுது திளைத்துப் புறம்போந்து தோன்றப்பண்ணும் பிடிமேற்பார்
முழுது மேத்த, நம்பியைமுன் பேற்றிப், பின்பு தாமேறிப்,
பழுதின் மணிச்சா மரைவீசிப் பைம்பொன் மணிமா ளிகையில்வரும்
பொழுது, மருகி லிருபுடையு மிடைந்தார் வாழ்த்திப் புகல்கின்றார்.

(இ-ள்.) வணங்கிச் (சிவாநந்த வெள்ளத்தில்) முழுகிப் புறத்தில் வர, (சேரமான் பெருமாணாயனார்) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளை உலகத்தாரனைவருந் துதிக்கும்படி அலங்கரித்த யானையின் மேலேற்றிப் பின்பு தாமும் ஏறிக் குற்றமற்ற மணிகளிழைத்த வெண்சாமரம் வீசிக்கொண்டு பசும்பொன் மயமாகிய அழகிய திருமாளிகைக்கு வரும்பொழுது, திருவீதியி னிருபுறத்திலும் நெருங்கி வருகின்றவர்கள் வாழ்த்திக் கூறுகின்றார்கள்.—எ-று. (௧௬௭)

நல்ல தோழர் நம்பெருமா டமக்கு நம்பி யிவரென்பார்,
சொல்லை யில்லாத் தவமுன்பென் செய்தோ மிவரைத் தொழவென்பார்,

செல்வ மினியென் பெறுவதினிச் சிலம்பு நாட்டுக், கெனவுரைப்பார்.
சொல்லுந்தரமோ பெருமாள்செய்தொழிலைப்பாரீரெனத்தொழுவார்.

(இ-ள்.) நமது சேரர் பெருமானுக்கு நம்பியாரூரராகிய இவர் நல்ல திருத்தோழரென்று கூறுவார்கள்; நாம் இவரைத் தொழுவதற்கு அளவில்லாத பெருந்தவம் முன்பு யாதுசெய்தோ மென்பார்கள்; மலைநாட்டுக்கு இனிப்பெற வேண்டுவதாகிய செல்வம் யாதென்று கூறுவார்கள்; நமது சேரமான் பெருமான்செய்யுந் தொண்டுகள் சொல்லுந் தரத்தனவோ? அவற்றைப்பாருங்களென்று வணங்குவார்கள்.—எ-று.

சிலம்பு நாடென்றது, மலைநாட்டை. இவரைக்கண்ட பேறு சிவப்பேறாகலின், செல்வமினி யென்பெறுவதென்றார். (கசஅ)

பூவும் பொரியும் பொற்சுகளும் பொழிந்து பணிவார், பொருவிலிவர்
மேவும் பொன்னித் திருநாடே புவிக்குத் திலக மெனவியப்பார்,
பாவுந் துதிக ளெம்மருங்கும் பயில, வந்து மாளிகையின்
மாவுங் களிறு நெருங்குமணி வாயில் புகுந்து மருங்கிழிந்தார்.

(இ-ள்.) புஷ்பங்களையும் பொரிகளையும் பொற் பொடிகளையு மிறைத்து வணங்குவார்கள்; ஒப்பற்ற இந்நம்பியாரூரர் வாழ்ந்தருளுங் காவிரி நதி பொருந்திய சோழநாடே பூலோக திலகமா யுள்ளதென்று அதிசயிப்பார்கள்; இவ்வாறு பரவிய துதிகள் எவ்விடத்தும் விளங்கும்படி வந்து, குதிரைகளும் யானைகளும் நெருங்கியிருக்கின்ற திருமாளிகைத் திருவாயிலினுள்ளே புகுந்து அருகிலிறங்கினார்கள்.—எ-று.

பலவரசர் திறைகொணர்ந்த குதிரையினின்றிழிந்து மலர்க்கப்பட்ட மாளிகைவாயிலாகலின் மாவும் களிறு நெருங்குமணி வாயிலென்றார். செல்வத் தியாகராசரே எழுந்தருளியிருக்கப்பட்டதாகலின் புவிக்குத் திலகமென்றதென்க. (கசகூ)

கழறிற் றறியுந் திருவடியும், கலைநா வலர்தம் பெருமானர்
முழவிற் பொலியுந் திருநெடுந்தோள் முனைவர் தம்மையுடன்கொண்டு,
விழவிற் பொலியு மாளிகையில் விளங்கு சிங்கா சனத்தின்மிசை,
நிழலிக் கொளிரும் பூணாரை யிருத்தித் தாமு நேர்நின்று.

(இ-ள்.) சேரமான்பெருமாணயனரும், சாஸ்திரங்களை யுணர்ந்த திருநாவலூரர் தலைவராகிய மத்தளம்போன்று விளங்கும் நீண்ட திருத்தோள்களையுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளைத் தம்முடனழைத்துக்கொண்டு மங்களகரமாகவிளங்குகின்ற திருமாளிகையில் ஒளியமைந்தசிங்காசனத்தின்மேல் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளை யெழுந்தருளச்செய்து தாமும் எதிரில் நின்று.—எ-று.

நிழலிக்கொளிரும்பூணாரை, என்றது திக்குகடோறும் ஒளிவிளங்குகின்ற இரத்தினபரணங்களையணிந்தவரை.

கழறிற்றறியுந் திருவடி என்றது, சேரமான் பெருமானை. என்றும் மங்கலகரமாகவே விளங்கலின் விழவிற்பொலியு மாளிகை என்றார்.

இது முதல் மூன்று பாடலுங் குளகம். (கடு௦)

செம்பொற் கரக வாசநீர் தேவி மார்க ளெடுத்தேந்த,
வம்பொற் பாதந் தாம்விளக்கி யருளப், புகலூ|மாரூரர்
தம்பொற் றூளை வாங்கி யிது தகாதென் றருளத், தரணியில்வீழ்ந்
தெம்பெற் றிமையாற் செய்தனவிங் கெல்லா மிசைய வேண்டுமென.

(இ-ள்.) செம்பொன்னாலாகிய கரகத்தில் நறுமணங்கமழும்நன்னீரைத் தமது பத்தினிமார்களெடுத்து ஏந்த, (நாயனார்) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளது அழகிய பொன்மயமாகிய திருவடிகளை யலம்பத்தொடங்கவும், அந்நம்பியாரூரர் தமது பொன்மயமாகிய திருவடிகளை வாங்கிக்கொண்டு, நீர் செய்யு மிக்காரியந் தகாதென்று கூறியருள, அவர் பூமியில் வீழ்ந்து வணங்கி, (சுவாமிகளே!) அடியேங்களுடைய விருப்பத்தினால் இங்குச் செய்தனவாகிய எல்லாப் பூசனைகளுக்குந் தேவரீர் திருவுள்ள மிசையவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய.

பெருமாள் வேண்ட, வெதிர்மறுக்க மாட்டா ரன்பிற் பெருந்தகையார்,
திருமா னெடுந்தோ ளுதியர்பிரான் செய்த வெல்லாங் கண்டிருந்தா,
ரருமா னங்கொள் பூசனைக ளடைவே யெல்லா மளித்ததற்பி,
னொருமா மதிவெண் குடைவேந்த ருடனே, யமுது செய்துவந்தார்.

(இ-ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் தம்மைச் சேரமான்பெருமானாயனார் வேண்டிக்கொள்ள, அதனை எதிரே மறுக்கமாட்டாதவராய், விஜயலக்ஷ்மிபொருந்திய பெரிய திருத்தோள்களையுடைய சேரர்பெருமான் செய்த பூசனைகளனைத்தையுங் கண்டு மகிழ்வுற்றிருந்தார்; அரிய மேன்மைபொருந்திய பூசனைகளனைத்தும் முறைப்படி செய்தானபின்பு, ஒப்பற்ற பூரணசந்திரன் போலும் வெண்கொற்றக்குடையினையுடைய அவ்வரசர்பெருமான், அச்சுந்தரமூர்த்திசுவாமிகளுடன் திருவமுதுசெய்து மகிழ்ச்சியடைந்தருளினார்.—எ-று.

அரசர் பெருஞ்செல்வத்தினராகலின் ஒருமாமதி வெண்குடை வேந்தரென்றார். (௧௫௨)

அலம்பி
சேர ருடனே திருவமுது செய்த பின்பு, கைகோட்டி
யார நறுமென் கலவையுடன் மதச்சாந் தாடை யணிமணிப்பூ
ணீர வினைமென் மலர்ப்பணிக ளினைய முதலா யினவருக்குஞ்
சார வெடுத்து வன்றொண்டர்ச் சாத்தி, மிக்க தமக்காக்கி.

(இ-ள்.) சேரமான்பெருமானாயனாரோடு திருவமுதுசெய்தருளியபின்பு கைகளை யலம்பிக்கொண்டு சந்தனத்தினது நறுமணங் கமழும் மெல்லிய கலவைச்சாந்தும், கஸ்தூரிக்குழம்பும், பீதாம்பரங்களும், அழகிய இரத்தினாபரணங்களும், குளிர்ந்த மணம் பொருந்திய மெல்லிய மலர்மாலைகளும் இவைமுதலாகிய பல பொருள்களையும் ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளுக்குப் பொருந்தவெடுத்தணிந்து மிகுந்தவைகளைத் தாமணிந்துகொண்டு.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௧௫௩)

பாட லாடல், லின்னியங்கள் பயிறன், முதலாம் பண்ணையினி,
னீடு மினிய விநோதங்கள் நெருங்கு காலந் தொறுநிகழ,
மாடு விரைப்பூந் தருமனைஞ்செ யாரா மங்கள் வைகுவித்துக்,
கூட முனைப்பா டியர்கோவைக் கொண்டு மகிழ்ந்தார், கோதையார்.

(இ-ள்.) பாடுதல் - ஆடுதல் - இனிய வாத்தியங்கள் வாசித்தல் முதலாகிய கூட்டங்களில் இனிமை மிக்க வேடிக்கைகள் இவர்களடையுங் காலங்கடோறும் நடக்க, பக்கங்களில் நறுமணங்கமழும் மலர்களையுடைய விருக்ஷங்கள் நற்கந்தம் வீசுகின்ற சோலைகளில் வசிக்கச்செய்து, சேரமான்பெருமாணாயனார் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளைத் தம்முடன்கொண்டு மகிழ்வடைந்தருளினார்.—எ-று.

முனைப்பாடியர் கோவை என்றது, நம்பியாரூரனை. கோதை என்றது, சேரர்பிரானை. (கருச)

வேறு.

செண்டாடுந் தொழின்மகிழ்வுஞ்,சிறுசோற்றுப் பெருஞ்சிறப்பும்,
வண்டாடு மலர்வாவி மருவியநீர் விளையாட்டுந்,
தண்டாழும் மதகும்பத் தடமலைப்போர்,சலமற்போர்,
கண்டாரா விருப்பெய்தக்,காவலனார் காதல் செய்நாள்.

(இ-ள்.) செண்டாடுந் தொழிலா லுண்டாகின்ற மகிழ்ச்சியும், சிறுசோறிடுகின்ற பெருஞ் சிறப்புக்களும், வண்டுகள் சுழல்கின்ற தாமரைத்தடாகங்களில் பொருந்திய நீர்விளையாடல்களும், தடுக்கப்படாத மும்மதங்களையுடைய மத்தகம்பொருந்திய யானைப்போர்களும், கோபத்தோடு செய்கின்ற மல்லயுத்தங்களும், பார்த்து நீங்காத பெருவிருப் புண்டாகச் சேரமான்பெருமாணாயனார் விருப்பஞ்செய்துகொண் டிருக்குநாள்களில்.—எ-று. (கருரு)

நாவலர்தம் பெருமானுந் திருவாரூர் நகராளுந்
தேவர்பிரான் கழலொருநாண் மிகநினைந்த சிந்தையரா,
யாவியையா ரூரானை,மறக்கலுமா மேயென்னு
மேவியசொற் றிருப்பதிகம் பாடியே வெருவுற்றார்.

(இ-ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளும் திருவாரூர்த் திருப்பதியை யாண்டருளும் தேவர்கள்நாயகராகிய ஸ்ரீதியாகராசப்பெருமானது திருவடிகளை ஒருதினம் மிகவும் நினைந்த திருவுள்ள முடையவராய், என துயிர்போன்றவரை, "ஆரூரானை மறக்கலுமாமே" என்னு மிறுதியை யுடைய பொருந்திய சொற்க ளமைந்த திருப்பதிகத்தைப்பாடி யச்சமுற்றருளினார்.—எ-று. (கருசு)

---

திருவாரூர்-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

பொன்னுமெய்ப்பொருளுந்தருவானைப்போகமுந்திருவும்புணர்ப்பானைப், பின்னையென்பிழையைப்பொறுப்பானைப்பிழையெலாந்தவிரப்பணிப்பானை, யின்னதன்மையனென்றறிவொண்ணாவெம்மானையெளிவந்தபிரானை, யன்னம்வைகும்வயற்பழனத்தணி யாரூரானைமறக்கலுமாமே.

ஒருவொன்றுலகங்களுக்கெல்லாமுனைக்கலாம்பொருளாயுடன்கூடிக்
காரூருங்கமழ்கொன்றைமாலைமுடியன்காரிகைகாரணமாக
வாரூனைமறத்தற்கரியானையம்மான்றன்றிருப்பேர்கொண்டதொண்ட
னாரூரன்னடி நாவுரைவல்லாரமரலோகத்திருப்பவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

*திருவாரூர் தனைநினைந்து சென்றுதொழு வேனென்று*
*மருவார்வத் தொண்டருடன் வழிக்கொண்டு செல்பொழுதி,*
*லொருவாதன் புள்ளுருக வுடனெழுந்து கைதொழுது,*
*பெருவான வரம்பனார் பிரிவாற்றார் பின்செல்வார்.*

(இ-ள்.) திருவாரூரைச்சிந்தித்து நான் அதனைச்சென்று வணங்குவேனென்று அன்பு பொருந்திய திருத்தொண்டர்களுடன் புறப்பட்டுப் போகும் பொழுது, சிறந்த சேரமான்பெருமானாயனார் நீங்காத நண்பானது உள்ளேயுருக அவருடனெழுந்து கைகுவித்து வணங்கிப் பிரிவாற்றாதவராய்ப் பின் செல்வாராயினார்.—எ-று.

வானவரம்ப னென்றது, சேரர்பிரானை ; அவர் சுந்தரமூர்த்திசுவாமிகளைப் பிரிவது மிக வரிதாக எண்ணுகின்றமையான் 'பிரிவாற்றார் பின்செல்வார்' என்றார். (கஙஎ)

வன்றொண்டர் முன்னெய்தி மனமகிழ்ந்த வுணர்வினரா,
யின்றுமது பிரிவாற்றே னென்செய்கேன் யானென்ன
வொன்றுநீ வருந்தாதே யுமதுபதி யினகணிருந்
தன்றினார் முனைமுருக்கி யரசாளு மெனமொழிந்தார்.

(இ-ள்) (நாயனார்) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு முன்னேவந்து, மனமகிழ்ந்த பேருணர்ச்சியுடையவராய், அடியேன் இன்று தேவரீரது பிரிவினையாற்றகில்லேன் ; யாதுசெய்வேனென்றுகூற, (அதற்கு ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள்) நீர் சிறிதும் வருந்தாமல் உமது இராச்சியத்திலிருந்து பகைவர்களைப்போர்செய்து வென்று அரசாள்வீராகவென்று கூறியருளினார்.—எ-று.

ஆரூரர் மொழிந்தருள வதுகேட்ட வருட்சேரர்,
பாரோடு விசும்பாட்சி யெனக்குமது பாதமலர்
தேரூரு நெடுவீதித் திருவாரூர்க் கெழுந்தருள
நேரூரு மனக்காத னீக்கவு மஞ்சுவனென்றார்.

(இ-ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் இவ்வாறு கூறியருள, அதனைக் கேட்ட அருட்செல்வராகிய சேரமான்பெருமானாயனார் (சுவாமிகளே!) தேவரீருடைய திருவடித்தாமரைகளின் சேவையே அடியேனுக்கு மண்ணுலகத்தோடு விண்ணுலகத்தையும் அரசாட்சி செய்வதாகும்; (அத்தகையதேவரீர்) தேரோடுந் திருவீதியையுடைய திருவாரூருக்கு எழுந்தருளும்பொருட்டு நேரே கொண்டருளிய மனவிருப்பத்தைத் தடைசெய்வதற்கும் அஞ்சுகின்றேனென்று கூறினார்.—எ-று. (கஙக)

மன்னவனா ரதுமொழிய வன்றொண்ட ரெதிர்மொழிவா,
ரென்னுயிருக் கின்னுயிரா மெழிலாரூர்ப் பெருமானை,
வன்னெஞ்சக் கள்வனேன் மறந்திரேன் மதியணிந்தா
ரின்னருளா லரசளிப்பீர் நீரிருப்பீ ரெனவிறைஞ்ச.

(இ-ள்.) சேரமான்பெருமானாயனார் அவ்வார்த்தை கூற, ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் அதற்கு எதிர்வார்த்தை கூறியருளுவார், அழகிய திருவாரூரிலெழுந்தருளிய எனதுயிர்க்குயிராகிய ஸ்ரீ தியாகராசப்பெருமானைக் கல்நெஞ்

சனாகிய அடியேன் மறந்திருக்கமாட்டேன்; சந்திரசேகரராகிய பெருமானது திருவருளினால் அரசாட்சிசெய்கின்ற நண்பரே! நீரிவ்விடத்திலேயே இருந்து அரசாள்வீராகவென்று வணங்கியருள.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (சகூ0)

மற்றவரும் பணிந்திசைந்தே,மந்திரிக டமையழைத்துப்,
பொற்புநிறை தொன்னகரி லிற்றைக்கு முன்புகுந்த,
நற்பெரும்பண் டாரநா ணவருக்க மானவெலாம்,
பற்பலவா ளாளின்மிசை யேற்றிவரப் பண்ணுமென.

(இ-ள்.) சேரமான்பெருமாணாயனாரும் வணங்கி அதற்குடன்பட்டு, மந்திரிமார்களையழைத்து, அழகுபொருந்திய பழையநகரத்தினின்றும் நேற்றுவரையிற் கொண்டுவரப்பட்ட பலவகையாகிய நமது பெருந்திரவியங்களனைத்தையும், பல ஆள்களில் சுமையேற்றிக்கொண்டு வரும்படி செய்வீர்களென்று கட்டளையிட்டருள.—எ-று.

சேரமான்பெருமாணாயனார் அரசுசெய்தற்குரிய நகரமாதலின், 'பொற்புநிறைதொன்னகரில்' என்றார். (சகூச)

ஆங்கவரு மன்றுவரை யாயமா கியதனங்க,
ளோங்கியபொன், னவமணிக,ளொளிர்மணிப்பூண் டுகில்வருக்க,
ஞாங்கர்நிறை விரையுறுப்பு வருக்கமுத னலஞ்சிறப்பத்,
தாங்குபொதி வினைஞர்மேற், றலமலியக்,கொண்டணைந்தார்.

(இ-ள்.) அம்மந்திரிமார்களும் அன்றுவரையிற் சேர்ந்திருந்த திரவியங்களையும், விலையுயர்ந்த பொற்குவைகளையும், நவரத்தினங்களையும், விளங்குகின்ற இரத்தினாபரணங்களையும், ஆடைவருக்கங்களையும், பக்கத்தில்நிறைந்த கந்தவருக்கங்களையும், இவைமுதலியமற்றப் பொருள்களையும் நன்மைமிகும்படி சுமைதூக்கும் ஆள்களின்மேல் அவ்வூர்நிறையக்கொண்டுவந்தார்கள்.

ஆயமாகிய தனங்களென்றது-திறைமுதலியவற்றானடைந்ததனங்களை.

மற்றவற்றின் பரப்பெல்லாம் வன்றொண்டர் பரிசனத்தின்
முற்படவே செலவிட்டு,முனைப்பாடித் திருநாடர்
பொற்பதங்கள் பணிந்தவரைத் தொழுதெடுத்துப் புனையலங்கல்
வெற்புயர்தோ ளுறத்தழுவி விடையளித்தார் வன்றொண்டர்.

(இ-ள்.) பலவகையாகிய இப்பொருள்களனைத்தையும் ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளது பரிசனத்தடியார்களுக்கு முன்னேபோகும்படி யனுப்பிவிட்டு, அவரது பொன்மயமாகிய திருவடிகளை வீழ்ந்துவணங்கிய சேரமான்பெருமாணாயனாரை ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் வணங்கியெடுத்து, மாலையையணிந்த மலைபோன்ற தோளில் பொருந்தத் தழுவி அவருக்கு விடைகொடுத்தருளினார்.

ஆரூர ரவர்தமக்கு விடையருளி யங்ககன்று,
காரூரு மலைநாடு கடந்தருளிக் கற்சுரமு
நீரூருங் கான்யாறு நெடுங்கானும் பலகழியச்
சீரூருந் திருமுருகன் பூண்டிவழிச் செலவணைந்தார்.

(இ-ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் சேரமான்பெருமாணாயனாருக்கு விடைகொடுத்தருளி, அவ்விடத்தினின்று நீங்கி, மேகங்கள் தவழும் மலைகளை

யுடைய சேரநாட்டைக்கடந்து, பருக்கைக் கற்களையுடைய பாலைநிலமும், நீரோடுகின்ற கானாறுகளும் பெரியகாடுகளும் பலகடந்து, சிறப்புமிக்க திருமுருகன் பூண்டியென்னுந் திருப்பதியின் வழியே செல்வதற்குத் திருவுள்ளங்கொண்டு போயினார்.—எ-று.

மேகங்கள் தங்குமிடமாகலின் காரூருமலையெனச் சிறப்பித்தார். ()

திருமுருகன் பூண்டியயற் செல்கின்ற போழ்தின்கட்,
பொருவிடையார், நம்பிக்குத் தாமேபொன் கொடுப்பதலா
லொருவர்கொடுப் பக்கொள்ள வொண்ணாமைக், கதுவாங்கிப்,
பெருகருளாற் றாங்கொடுக்கப், பெறுவதற்கோ வதுவறியோம்.

(இ-ள்.) திருமுருகன்பூண்டிப்பதிக்குச் சமீபத்திற் செல்லும்பொழுது, போர்செய்கின்ற இடபவாகனத்தையுடைய சிவபெருமான் தாமே ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு வேண்டிய பொன்னைக்கொடுப்பதல்லாமல் வேறொருவர் கொடுக்க அதனை இவர் பெறக்கூடாமை பொருட்டு அதனைவாங்கி, மிக்க திருவருளினால், பின்பு தாம்கொடுத்தருள அவர் பெறுதற் பொருட்டோ? அதனை இன்னதென்றறியோம்.—எ-று.

மால்விடையாகலின், 'பொருவிடை' என்றதென்க. (கசு௫)

வென்றிமிகு பூதங்கள் வேடர்வடி வாய்ச்சென்று.
வன்றொண்டர் பண்டாரங் கவரவருள் வைத்தருள,
திரிபுரம் வென்றினார் புரமெரித்தா ரருளால்வேட் டுவப்படையாய்ச்
சென்றவர்தாம், வரும்வழியி லிருபாலுஞ் செயிர்த்தெழுந்து.

(இ-ள்.) (சிவபெருமான்) வெற்றிபொருந்திய பூதங்கள் வேடுவ ருருவங் கொண்டுபோய் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் கொண்டுவருந் திரவியங்களைப் பிடுங்கிக் கொள்ளும்படி திருவருள் வைத்தருள, பகைவர்களது மும்புரங்களைச் சிரித்தெரித்தருளிய அவ் வெம்பெருமானது திருவருளினால் பூதங்கள் வேடுவப் படையாக வுருவங்கொண்டு சென்று, ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் வருகின்ற வழியில் இருபுறங்களிலுங் கோபித்தெழுந்து நின்று.—எ-று.

அருள் விளையாட்டாதலின், 'பண்டாரங் கவரவருள் வைத்தருள' என்று கூறினார்.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கசுசு)

வில்வாங்கி, யலகம்பு விசைநாணிற் சந்தித்துக்,
கொல்லுவோமிங் கிட்டுப்போ மெனக்கோபத் தாற்குத்தி,
யெல்லையில்பண் டாரமெலாங் கவர்ந்துகொள, விரிந்தோடி,
யல்லலுடன், பறியுண்டா, ராரூரர் மருங்கணைந்தார்.

(இ-ள்.) வில்லை வளைத்துக் கூர்மைபொருந்திய அம்புகளை விசையோடு நாணில் தொடுத்து, உங்களைக்கொன்று போடுவோம் அத்திரவியங்களனைத்தையும் இங்குப் போட்டு விட்டுப்போய்விடுங்களென்று கோபத்தினால் குத்தி, அளவற்ற திரவியங்களையும் பிடுங்கிக்கொள்ள, பறிகொடுத்த சுமையாள்கள் வருத்தத்தோடும் பல வழியாகச் சிதறியோடி ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளருகிலடைந்தார்கள்.—எ-று.

சேரமான்பெருமாணாயனார் அளித்ததிரவியங்கள் அளவிடப்படாதன வாகலின், எல்லையில் பண்டாரமெலாமென்றார். (௧௬௭)

ஆரூரர் தம்பாலவ் வேடுவர்சென் றணையாதே,
நீரூருஞ் செஞ்சடையா ரருளினா னீங்கவவர்
சேரூராந் திருமுருகன் பூண்டியினிற் சென்றெய்திப்,
போரூரு மழவிடையார் கோயிலினா டிப்புக்கார்.

(இ-ள்.) கங்கை நதி தங்கிய சிவந்த சடைமுடியை யுடைய சிவபெருமானது ஆஞ்ஞையினாலே அவ்வேடுவர்கள் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளிடத்திலே செல்லாமல் நீங்கிவிட, அவ்வேடுவர்கள் சென்ற ஊராகிய திருமுருகன் பூண்டியில் சென்றடைந்து, போர்த்தொழிலைச் செய்கின்ற இளைய இடப வாகனத்தையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக்கோயிலைவிரும்பி யடைந் தருளினார்.—எ-று.

'அவர் சேரூர்' என்பதற்கு, ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் அடையும் ஊர், எனப்பொருள் கூறினுமாம். (௧௬௮)

அங்கணர்தங் கோயிலினை யஞ்சலிகூப் பித்தொழுது,
மங்குலுற நீண்டதிரு வாயிலினை வந்திறைஞ்சிப்,
பொங்குவிருப் புடன்புக்கு வலங்கொண்டு, புனிதநதி
திங்கண்முடிக் கணிந்தவர்தந் திருமுன்பு சென்றணைந்தார்.

(இ-ள்.) சிவபெருமானது திருக்கோயிலைக் கைகளை யஞ்சலியாகக் குவித்துவணங்கி, மேகமண்டலத்தைப் பொருந்த வுயர்ந்த திருவாயிலை யடைந்து வணங்கி, மிக்க விருப்பத்தோடும் உள்ளே புகுந்து பிரதக்ஷணஞ்செய்து, தூய்மையாகிய கங்கை நதியையும் இளம்பிறையையுந் திருமுடியி லணிந்த சிவபெருமானது திருமுன்னே சென்றடைந்தருளினார்.—எ-று. (௧௬௯)

உருகியுவன் பொடுகைகள் குவித்துவிழுந் துமைபாக
மருவியதம் பெருமான்முன் வன்றொண்டர் பாடினார்,
வெருவுறவே டுவர்பறிக்கும் வெஞ்சுரத்தி லெத்துக்கிங்
கருகிருந்தீ ரெனக்கொடுகு வெஞ்சிலையஞ் சொற்பதிகம்.

(இ-ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் மனமுருகுகின்ற பேரன்போடுந் திருக்கரங்கள் குவித்து விழுந்து வணங்கிப் பார்வதிபாகராகிய சிவபெருமான் திருமுன்னே, யாவரு மஞ்சும்படி வேடுவர்கள் பறிக்கின்ற வெவ்விய காட்டினிடத்திலே, "எத்துக் கிங்கிருந்தீ ரெம்பிரானீரே" என்று திருப்பாட்டினிறுதி தோறுமமைத்து, "கொடுகு வெஞ்சிலை" என்னு முதலையுடைய அழகிய சொற்களமைந்த திருப்பதிகத்தைப்பாடி யருளினார்.—எ-று. (௧௭௦)

---

திருமுருகன்பூண்டி - பண் - பழம் பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

கொடுகுவெஞ்சிலைவடுகவேடுவர்விரவலாமைசொல்லித்,
திடுகுமொட்டெனக்குத்திக்கூறைகொண்டாறலைக்குமிடம்
முடுகுநாறியவடுகர்வாழ்முருகன்பூண்டிமாநகர்வாய்,
யிடுகுநுண்ணிடைமங்கைதன்னொடுமெத்துக்கிங்கிருந்தீரெம்பிரானீரே.

வில்லைக்காட்டிவெருட்டிவேடுவர்விரவலாமைசொல்லிக்
கல்லினாலெறிந்திட்டுமோதியுங்கூறைகொள்ளுமிட
முல்லைத்தாதுமணங்கமழ்முருகன்பூண்டிமாநகர்வா
யெல்லைக்காப்பதொன்றில்லையாகினீரெத்துக்கிங்கிருந்தீரெம்பிரானீரே.

பசுக்களேகொன்றுதின்றுபாவிகள்பாவமொன்றறியார்
உசிர்க்கொலைபலநேர்ந்துநாடொறுங்கூறைகொள்ளுமிட
முசுக்கள்போற்பலவேடர்வாழ்முருகன்பூண்டிமாநர்வா
யிசுக்கிழியப்பயக்கங்கொண்டுநீரெத்துக்கிங்கிருந்தீரெம்பிரானீரே. (௩)

பீறைகூறையுடுத்தோர்பத்திரங்கட்டிவெட்டனராய்ச்
சூறைப்பங்கியராகிநாடொறுங்கூறைகொள்ளுமிட
மோறைவேடுவர்கூடிவாழ்முருகன்பூண்டிமாநகர்வா
யேறுகாலிற்றதில்லையாய்விடிலெத்துக்கிங்கிருந்தீரெம்பிரானீரே. (௪)

தயங்குதோலையுடுத்தசங்கராசாமவேதமோதி,
மயங்கியூரிடுபிச்சைகொண்டுணுமார்க்கமொன்றறியீர்,
முயங்குபூண்முலைமங்கையாளொடுமுருகன்பூண்டிமாநகர்வா
யியங்கவுமிடுக்குடையவராய்விடிலெத்துக்கிங்கிருந்தீரெம்பிரானீரே.

விட்டிசைப்பனகொக்கரைகொடுகொட்டித்தத்தளகந்
தொட்டிப்பாடுமித்துந்துமியொடுகுடமுழாநீர்மகிழ்வீர்
மொட்டலர்ந்துமணங்கமழ்முருகன்பூண்டிமாநகர்வா
யிட்டபிச்சைகொண்டுண்பதாகில்நீரெத்துக்கிங்கிருந்தீரெம்பிரானீரே.

வேதமோதிவெண்ணீறுபூசிவெண்கோவணந்தற்றயலே
யோதமேவியவொற்றியூரையுமுத்திநீர்மகிழ்வீர்
மோதிவேடுவர்கூறைகொள்ளுமுருகன்பூண்டிமாநகர்வா
யேதுகாரணமேதுகாவல்கொண்டெத்துக்கிங்கிருந்தீரெம்பிரானீரே.

படவரவுநுண்ணேரிடைப்பணைத்தோள்வரிநெடுங்கண்
மடவரலுமைநங்கைதன்னையோர்பாகம்வைத்துகந்தீர்
முடவரல்லீரிடரீர்முருகன்பூண்டிமாநகர்வா
யிடமேறியும்போவதாகில்நீரெத்துக்கிங்கிருந்தீரெம்பிரானீரே. (அ)

சாந்தமாகவெண்ணீறுபூசிவெண்பற்றலைகலனா
வேய்ந்தவெண்பிறைக்கண்ணிதன்னையோர்பாகம்வைத்துகந்தீர்
மோந்தையோடுமுழக்கறுமுருகன்பூண்டிமாநகர்வா
யேந்துபூண்முலைமங்கைதன்னொடுமெத்துக்கிங்கிருந்தீரெம்பிரானீரே.

முந்திவானவர்தாந்தொழுமுருகன்பூண்டிமாநகர்வாய்ப்
பந்தணைவிரற்பாவைதன்னையோர்பாகம்வைத்தவனைச்
சிந்தையிற்சிவதொண்டனூரனுரைத்தனபத்துங்கொண்
டெந்தம்மடிகளையேத்துவாரிடரொன்றுந்தாமிலரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - ஆவுடையநாயகர்; தேவியார் - ஆவுடையநாயகியம்மை.

பாடியவர் பரவுதலும்,பரம்பொருளா மவரருளால்,
வேடுவர்தாம் பறித்தபொரு ளவையெல்லாம் விண்ணெருங்க,
நீடுதிரு வாயிலின்முன் குவித்திடலு,நேரிறைஞ்சி,
யாடுமவர் திருவருளா லப்படியே கைக்கொண்டார்.

(இ-ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் திருப்பதிகம்பாடித் துதிக்கவும் மெய்ப்பரம்பொருளாகிய சிவபெருமானுடைய திருவருளினால் வேடுவர்கள் தாங்கள் பறித்துக்கொண்டுபோன திரவியங்க ளெல்லாவற்றையும், உயர்ந்த திருவாயிலின் முன்னே ஆகாயத்தை யளாவும்படி குவிக்கவும், (ஸ்ரீ சுந்தர மூர்த்திசுவாமிகள்) எதிரே வணங்கி நடன மூர்த்தியாகிய சிவபெருமானது திருவருளால், முன்னிருந்தபடியே பெற்றுக்கொண்டார்.—எ-று.

திருடர்க ளபகரித்தால் கிஞ்சித்தேனுஞ் செலவாயிருக்கக் கூடும், அவ் வாறொன்று மில்லாமல்முன்புகட்டிய கட்டுப்படியே சிறிதுங்குறைவறப்பெற் றுக்கொண்டன ரென்பார், ‘அப்படியே கைக்கொண்டார்’ என்று கூறினார்.

கைக்கொண்டு கொடுபோமக் கைவினைஞர் தமைபேவி,
மைக்கொண்ட மிடற்றாரை வணங்கிப்போய்க் கொங்ககன்று,
மெய்க்கொண்ட காதலினால் விரைந்தேகி,மென்கரும்புஞ்
செய்க்கொண்ட சாலியுஞ்சூழ் திருவாரூர் சென்றணைந்தார்.

(இ-ள்.) அப்பொருள்களைப் பெற்றுக்கொண்டு, அவற்றை யெடுத்துக் கொண்டு செல்கின்ற சுமையாட்களை யனுப்பிவிட்டு, காளகண்டத்தையுடைய சிவபெருமானை வணங்கிச்சென்று கொங்குதேசத்தினின்று நீங்கி, மெய்ம்மை பொருந்திய பேரன்பினால் விரைந்துசென்று, மெல்லிய கருப்பஞ்சோலைக ளும், வயல்களிற் பொருந்திய செந்நெற்பயிர்களுஞ் சூழ்ந்துள்ள திருவாரூர்த் திருப்பதியைச்சென்று சேர்ந்தருளினார்.—எ-று.

“நிலத்துக்கணியென்ப நெல்லுங்கரும்பும்” என்பவாகலின் ‘மென் கரும்புஞ் செய்க்கொண்டசாலியுஞ் சூழ்திருவாரூர்’ என்றார். (௧எ௨)

நாவலர்மன் னவரருளால் விடைகொண்ட நரபதியா
ராவியினொன் றாநண்பி னாரூரர் தமைநினைந்து,
மாவலரு மலர்ச்சோலை மகோதையினின் மன்னிமலைப்
பூவலயம் பொதுநீக்கி,யரசுரிமை புரிந்திருந்தார்.

(இ-ள்.) திருநாவலூரர் தலைவராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளது திரு வருளினால் விடைபெற்றுச்சென்ற சேரமான்பெருமாணாயனார் உயிர்போன் றொற்றுமையுள்ள நண்பினையுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளைச் சிந்தித்து, மாவிருக்ஷங்கள் புஷ்பிக்கின்ற மலர்களையுடைய சோலைசூழ்ந்த மகோதைப்பதி யையடைந்து, மலைகள் சூழ்ந்த சேரதேசத்தைப் பொதுவற அரசாட்சி செய் திருந்தனர்.—எ-று. (௧எ௩)

இந்நிலைமை,புதியர்பிரா னெம்பிரான் வன்றொண்டர்
பொன்னிவள நாடகன்று,மகோதையினின் மேற்புகுந்து,
மன்னுதிருக் கயிலையினின்,மதவானைமே லெழுந்தருள,
முன்னர்வயப் பரியுகைக்குந்,திருத்தொழிலின் மொழிகின்றாம்.

(இ-ள்.) இவ்வாறாகிய பெருந்தன்மையினையுடைய சேரமான்பெருமாளுயனார், எமது முதல்வராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் தாம் வசித்தருளிய சோழநாட்டினின்று நீங்கி, மகோதையென்னுந் திருப்பதியையடைந்து (ஊழிதோறூழிமுற்றுமுயர்ந்தோங்குகின்ற) நிலைபெற்ற திருக்கயிலாயமலைக்கு மதம் பொருந்திய வெள்ளானையின்மேல் (அரிபிரமேந்திராதிதேவர்கள் எதிர்கொள்ளும்படி) எழுந்தருளுதலும், அவருக்குமுன்னே வெற்றிபொருந்திய குதிரையேறிச் செலுத்தியருளிய திருத்தொண்டின் மேன்மையினைப் பின்னாற் சொல்லுகின்றோம்.—எ-று. (கஎச)

மலைமலிந்த திருநாட்டு மன்னவனார் மாகடல்போற்
சிலைமலிந்த கொடித்தானைச் சேரலனார் கழல்போற்றி
நிலைமலிந்த மணிமாட நீண்மறுகு நான்மறைசூழ்
கலைமலிந்த புகழ்க்காழிக் கணநாதர் திறமுரைப்பாம்.

(இ-ள்.) மலைகள் (மிகுதியாக) நெருங்கப்பெற்றுள்ள சேரநாட்டுத்தலைவராகிய பெரிய கடலைப்போலும் வில்லைப்பிடித்த கொடிப்படைகளையுடைய சேரமான்பெருமாளுயனாரது திருவடிகளைத் துதித்து, மேனிலைகள் நிறைந்த அழகிய மாளிகைகளையுடைய பெரிய திருவீதிகளில் நான்கு வேதவோசைகளும் சூழ்ந்துள்ள சாஸ்திரப்பயிற்சிகள் நிரம்பிய புகழையுடைய சீகாழிப்பதியிலவதரித்தருளிய கணநாதநாயனாரது அன்பின் திறத்தைச் சொல்லுகின்றோம்.—எ-று. (கஎரு)

**சேரமான்பெருமாளுயனார் புராணம்-முற்றிற்று.**

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம்-உ0உ௪.

---



கணநாதநாயனார்

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# கணநாதநாயனார் புராணம்.

ஆழி மாநிலத் தகிலமீன் றளித்தவ டிருமுலை யமுதுண்ட
வாழி ஞானசம் பந்தர்வந் தருளிய வனப்பின தளப்பில்லா
வூழி மாகடல் வெள்ளத்து மிதந்துல கினுக்கொரு முதலாய
காழி மாநகர்த் திருமறை யவர்குலக் காவலர் கணநாதர்.

(இ-ள்.) சமுத்திரஞ் சூழ்ந்த பெரிய நிலவுலகத்தில் எல்லா வுயிர்களையு மீன்றளித்தருளிய உமாதேவியாரது திருமுலைப்பாலமு துண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவவதாரஞ் செய்தருளிய பேரழகினை யுடையதும், அளவிடப்படாத யுகாந்தகாலத்துண்டாகிய பெரிய கடல்வெள்ளத்தில் மிதந்து உலகத்திற்கு ஒரு முதன்மையானதுமாகிய சீகாழிப்பதியில் சிறந்த வேதியர்குலத்தலைவராக அவதரித்தவர்; (அவர் யாரெனின்) கணநாதநாயனாரென்னுந் திருநாமமுடையவர்.—எ-று. (க)

ஆய வன்பர்தா மணிமதிற் சண்பையி னமர்பெருந் திருத்தோணி
நாய னார்க்குநற் றிருப்பணி யாயின நாளுமன் பொடுசெய்து
மேயவத்திருத்தொண்டினில் விளங்குவார் விரும்பிவந் தணைவார்க்குத்
தூயகைத்திருத்தொண்டினிலவர்தமைத்துறைதொறும்பயில்விப்பார்.

(இ-ள்.) அத்தன்மையாகிய கணநாதநாயனார் அழகிய மதிலையுடைய சீகாழிப்பதியில் நிலைபெற்ற பெரிய திருத்தோணியென்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானுக்கு அன்போடு தினந்தோறும் நல்ல திருப்பணிகளைச்செய்து பொருந்திய அத்திருத்தொண்டிலேயே விளங்குகின்றவர்; தம்மை விரும்பி வந்தடைபவர்களுக்குத் தூய்மையாகிய கைத்திருத்தொண்டில் அவர்களை அவ்வத்துறைகள்தோறும் பயில்விக்கின்றவர்.—எ-று.

'மேயவத் திருத்தொண்டினில் விளங்குவார் விரும்பிவந்தணைவார்க்கு' என்பதற்கு, அத்திருத்தொண்டில் விளங்குகின்றவராய்த் தம்மை விரும்பி வந்தடைந்தவர்களுக்கு, எனினுமாம். பெருந்தோணிநாயனாரென்றது பிரமபுரேசனை. (உ)

நல்ல நந்தன வனப்பணி செய்பவர் நறுந்துணர் மலர்கொய்வோர்
பன்ம லர்த்தொடை புனைவர் கொணர்திரு மஞ்சனப் பணிக்குள்ளோ
ரல்லு நண்பக லுந்திரு வலகிட்டுத் திருமெழுக் கமைப்போர்க
ளெல்லை யில்விளக் கெரிப்பவர் திருமுறை யெழுதுவோர் வாசிப்போர்.

(இ-ள்.) சிறந்த திருநந்தனவனத் திருப்பணி செய்பவர்கள்; நறுமணங்கமழும் பூந்துணர்களைப் பறிப்பவர்கள்; பலவகையாகிய மலர்மாலை கட்டுப

வர்கள்; திருமஞ்சனங் கொண்டுவந்து கொடுக்குந் திருப்பணிசெய்பவர்கள்; இரவிலும் நடுப்பகலிலுந் திருவலகிட்டுத் திருமெழுக்கிடுவோர்கள்; அளவற்ற திருவிளக்கேற்றுபவர்கள்; திருமுறை யெழுதுபவர்கள்; அத்திருமுறைகளை வாசிப்பவர்கள்.—எ-று.

துணர் = பூங்கொத்து. நந்தனவனப்பணி செய்தல், மலர்கொய்தல், புனைதல் முதலிய சரியைத்தொண்டென்க.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (ரு)

இனைய பல்திருப் பணிகளி லிணைந்தவர்க் கேற்றவத் திருத்தொண்டின்
வினைவி ளங்கிட வேண்டிய குறையெலா முடித்துமே வச்செய்தே
யனைய வத்திறம் புரிதலிற் றொண்டரா யாக்கியன் புறுவாய்மை
மனைய றம்புரிந் தடியவர்க் கின்புற வழிபடுந் தொழின்மிக்கார்.

(இ-ள்.) இத்தன்மையனவாகிய பலவகைத் திருத்தொண்டுகளில் தம்மை விரும்பியடைந்தவர்களுக்கு, அவரவர்களுக்கேற்ற அவ்வத்திருத்தொண்டுகளின் தொழில் நன்குவிளங்கும்படி அவர்களுக்கு வேண்டிய குறைகளனைத்தையும் முடித்துப் பொருந்தச்செய்து, அத்தகைய திருத்தொண்டுகளை விரும்பிச்செய்தலால் சிவனடியார்களாக்கி, அன்புபொருந்திய மெய்ம்மையாகிய இல்லறத்தைக் குறைவற நடத்தி, சிவனடியார்களுக்கு இன்பமுண்டாகும்படி அவர்களை வழிபாடுசெய்யுந் திருத்தொண்டிற் சிறந்தவர்.—எ-று.

இல்லறத்துக்கு அன்பு சிறப்புடைமையான் 'அன்புறுவாய்மை மனையறம்புரிந்து' என்றார். (சு)

இப்பெ ருஞ்சிறப் பெய்திய தொண்டர்தா மேறுசீர் வளர்காழி
மெய்ப்பெ ருந்திரு ஞானபோ னகர்கழன் மேவிய விருப்பாலே
முப்பெ ரும்பொழு தருச்சனை வழிபாடு மூளுமன் பொடுநாளு
மொப்பில் காதல்கூ ருளங்களி சிறந்திட வொழுகினர் வழுவாமல்.

(இ-ள்.) இத்தன்மையாகிய பெருஞ்சிறப்பினையடைந்த கணநாதநாயனார் மிகுந்த மேன்மைவளர்கின்ற சீகாழித்திருப்பதியில் வீற்றிருந்தருளும் மெய்ம்மையாகிய சிறந்தசிவஞானப் பாலமுதுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவடிகளைப்பொருந்திய பெருவிருப்பினால் முக்காலமும் பூசனைவழிபாடுகளை மிகுதியாகிய பேரன்புடன் தினந்தோறும் ஒப்பற்ற விருப்பமிக்க மனத்தில் மகிழ்ச்சி சிறந்தோங்கும்படி தவறாமல் செய்துகொண்டு வந்தார்.—எ-று.

ஞானபோனகர் என்றது ஆளுடைய பிள்ளையாரை, முப்பெரும் பொழுதென்றது காலை, உச்சி, மாலை என்பன. (எ)

ஆன தொண்டினி லமர்ந்தபே ரன்பரு மகலிடத் தினிலென்றும்
ஞான முண்டவர் புண்டரீ கக்கழ லருச்சனை நலம்பெற்றுத்
தூந றுங்கொன்றை முடியவர் சுடர்நெடுங் கயிலைமால் வரையெய்தி
மான நற்பெருங் கணங்கட்கு நாதராம் வழித்தொண்டி னிலைபெற்றார்.

(இ-ள்.) அவ்வாறாகிய திருத்தொண்டிற் சிறந்துவிளங்குகின்ற பெரிய கணநாதநாயனார் உலகத்தில் எந்நாளும் சிவஞானப் பாலமுதுண்டருளிய திருஞான சம்பந்தப்பிள்ளையாரது தாமரைமலர்போன்ற திருவடிகளைப்பூசனைசெய்

தலாகிய தன்மையையடைந்து, தூய்மையாகிய நறியகொன்றைமலர் மாலையை யணிந்த திருமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் ஒளிவிளங்கு கின்ற திருக்கைலாசமலையையடைந்து பெருமைமிக்க நல்லசிவகணங்களுக்கு த்தலைவராயிருக்கும் வழித்திருத்தொண்டின் மேன்மையையடைந்தார்.—எ-று.

வழித்தொண்டு - பரம்பரையாகச் செய்துவருந்தொண்டு. ஆனதொண் டென்றது மேற்கூறிய தொண்டுகளை. (௬)

உலகு முய்யநஞ் சுண்டவர் தொண்டினி னுறுதிமெய் யுணர்வெய்தி
யலகி றொண்டருக் கறிவளித் தவர்திற மவனியின் மிசையாக்கு
மலர்பெ ரும்புகழ்ப் புகலியில் வருங்கண நாதனார் கழல்வாழ்த்திக்
குலவு நீற்றுவண் கூற்றுவ னார்திறங் கொள்கையின் மொழிகின்றாம்.

(இ-ள்.) சர்வலோகங்களும் உயிர்பெற்றுய்யும்பொருட்டு ஆலகாலவிஷ த்தையுண்டருளிய சிவபெருமானுடைய திருத்தொண்டினுறுதியில் மெய்ம்மை யாகிய பேருணர்ச்சியடைந்து அளவற்ற திருத்தொண்டர்களுக்கு மெய்ஞ்ஞா னத்தையூட்டி அவர்களது திருத்தொண்டின் றிறத்தை உலகத்தில் விருத்தி செய்தருளிய பரந்தபெரும்புகழையுடைய சீகாழிப்பதியி லவதரித்தருளிய கணநாதநாயனாரது திருவடிகளைத்துதித்து, விளங்குகின்ற திருவெண்ணீற் றையணிந்த சிறந்த கூற்றுவநாயனாரது திருத்தொண்டின் நிலைமையை முறை ப்படி சொல்லுகின்றோம்.—எ-று.

தம்மை யன்பினலடைய ரேனும் சரண்புகுந்தாற் காக்குந் திறனோக்கி 'உலகமுய்ய நஞ்சுண்டவர்' என்றார். இதனை 'ஆலால முண்டிலனே லன்ற யன்மா லுள்ளிட்ட - மேலாய தேவரெலாம் வீடுவர்' என்ற திருவாக்காலு முணர்க. (௭)

கணநாதநாயனார் புராண முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

ஆ. திருவிருத்தம் ௨0௩௧.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# கூற்றுவநாயனார் புராணம்.

தன்னார் முனைக டோள்வலியால் வென்று சூலப் படையார்த
நன்னா மந்தந் திருநாவி னாலு நவிலு நலமிக்கார்
பன்னா ளீச ரடியார்தம் பாதம் பரவிப் பணிந்தேத்த
முன்னா கியநற் றிருத்தொண்டின் முயன்றார் களந்தை முதல்வனார்.

(இ-ள்.) பகைவர்களது போரை புஜபலத்தினால் செயித்து, சூலாயுதத்தையேந்திய சிவபெருமானது சிறந்த திருநாமத்தைதமது திருநாவினால் எந்நாளும் உச்சரிக்கின்ற சிறப்பின்மிக்கவர் ; அநேகநாள்கள் சிவனடியார்களது திருவடிகளைவணங்கித் துதிக்க முதன்மையாகிய நல்ல திருத்தொண்டில் முயன்று செய்தவர் ; (அவர்யாரெனின்) களந்தைப்பதியின் தலைவராகிய கூற்றுவநாயனார் என்பவர்.—எ-று.

சூலப்படையார்த நன்னாமமென்றது, ஸ்ரீபஞ்சாக்கரத்தை. (க)

அருளின் வலியா லரசொதுங்க வவனி யெல்லா மடிப்படுப்பார்
பொருளின் முடிவு காண்பரிய வகையாற் பொலிவித் திகல்சிறக்க
மருளுங் களிறு பாய்புரவி மணித்தேர் படைஞர் முதன்மாற்றார்
வெருளுங் கருவி நான்குநிறை வீரச் செருக்கின் மேலானார்.

(இ-ள்.) திருவருளின் வல்லமையினால் பகையரசர்கள் (தோல்வியடைந்து) ஒதுங்க, உலகமுழுதுந்தனது அரசாட்சியின்கீழ்ச்செலுத்துகின்றவராகிய கூற்றுவநாயனார் திரவியங்களின் முடிவு இவ்வளவினவென்று கண்டறிதற்கரிய முறைமையினால் விர்த்திசெய்து, வலிமைமிகும்படி மதத்தால் மயங்குகின்ற யானையும், தாவிச்செல்லுங்குதிரையும், மணிகளையுடையதேரும், காலாள்களும் முதலாகிய பகைவர்களஞ்சத்தக்க சதுரங்கசேனைகளும் நிறைந்த வீரபராக்கிரமத்தில் சிறப்புற்று விளங்கினார்.—எ-று.

கருவி என்றது சேனையை, 'மணித்தேர்' என்பதற்கு, மணிகளிழைத்ததேர், எனினுமாம். (உ)

வென்றி வினையின் மீக்கூர வேந்தர் முனைகள் பலமுருக்கிச்
சென்று தும்பைத் துறைமுடித்துஞ் செருவில் வாகைத் திறங்கெழுமி
மன்றன் மாலை மிலைந்தவர்தம் வளநா டெல்லாங் கவர்ந்துமுடி
யொன்று மொழிய வரசர்திரு வெல்லா முடைய ராயினார்.

(இ-ள்.) வெற்றித்தொழிலிற் சிறப்புமிகும்படி பகையரசர்களது பல போரைச் செயித்துச்சென்று தும்பைமாலையைச்சூடியும், போரில் வெற்றிபொருந்திய நறுமணங்கமழும் வாகைமாலைசூடி, அப்பகையரசர்களது செழிப்பா

மை இராச்சியங்களனைத்துங் கவர்ந்து, கிரீடம் ஒன்றுதவிர, அரசர் செல்வங்களனைத்து முடையவராயினார்.—எ-று.

தும்பை என்றது போர்செய்வதற் கணியுமாலையை, இதனைப் 'பொருவது தும்பையாம்' என்றதனானறிக. (௩)

மல்லன் ஞாலம் புரக்கின்றார் மணிமா மவுலி புனைவதற்குத்
தில்லை வாழந் தணர்தம்மை வேண்ட வவருஞ் செம்பியர்தந்
தொல்லை நீடு குலமுதலோர்க் கன்றிச் சூட்டோ முடியென்று
நல்கா ராகிச் சேரலன்றன் மலைநா டணைய நண்ணுவார்.

(இ-ள்.) வளப்பமிக்க நிலவுலகத்தையரசாட்சி செய்கின்றவராகிய கூற்றுவநாயனார் தமக்கு நவரத்தினங்களிழைத்த முடி சூட்டும்பொருட்டுத்தில்லைவாழந்தணர்களைவேண்ட, அவர்களும் பழைமையாகச்சிறந்த சோழகுலத் தரசர்களுக்கேயன்றி மற்றவர்களுக்கு முடிசூட்டோமென்று மறுத்து, அவருக்கு முடிசூட்டச் சம்மதியாதவர்களாய்ச் சேரராசனது மலைநாட்டையடையச் சேர்வாராயினார்.—எ-று.

இரணியவன்மன் முதலிய சோழக்குலத்தரசர் முடிசூட்டிக்கொண்டவிடமாதலின் தில்லைவாழந்தணர்தமை வேண்டினார் என்றார். (௪)

ஒருமை யுரிமைத் தில்லைவாழந் தணர்க டம்மி லொருகுடியைப்
பெருமை முடியை யருமையுரி காவல் பேணும் படியிருத்தி
யிருமை மரபுந் தூயவர்தாஞ் சேரர் நாட்டி லெய்தியபின்
வருமை யுறவான் மனந்தளர்ந்து மன்று ளாடுங் கழல்பணிவார்.

(இ-ள்.) (ஸ்ரீ நடராசப்பெருமானுக்கு) ஒருமைப்பட்ட அன்பினுரிமையையுடைய தில்லைவாழந்தணர்கள் தங்களில் ஒருகுடியைப் பெருமை பொருந்திய மணிமுடியை அருமையாகக் காவல்செய்யும்படி யிருத்தி, இருவகை மரபினுந் தூய்மையுடையவர்களாகிய தில்லைவாழந்தணர்கள் சேரமண்டலத்தை யடைந்தபின்பு, (கூற்றுவநாயனார் தமதுள்ளத்தில்) தோன்றிய ஐயுறவினால் மனஞ் சோர்ந்து கனகசபையில் திருநடனஞ் செய்தருளும் சிவபெருமானது திருவடிகளை வணங்குவாராயினார்.—எ-று.

தாய்மரபு தந்தைமரபு என்னும் இருவகை மரபுகளிலுஞ் சிறிதுங் குற்றமில்லாத நன்மரபினராகலின், 'இருமை மரபுந் தூயவர்' என்று கூறினார்; அன்றி, வைதிக லௌகிக வொழுக்கங்களாகிய இருவகை மரபு எனினுமாம். ஐயுறவாவது—நாம் முடிசூட்டும்படி தில்லைவாழந்தணர்களை வேண்டிக்கொண்டதற்கு அவர்கள் மறுத்துக்கூறினமையின், அது காரணமாக நாம் யாதேனுந் தீங்கு செய்வோமென்று கருதி, நம் தேசத்தை விட்டுச் சேரநாட்டைச் சென்றடைந்தனர்போலுமென் றுண்டாகிய சந்தேகம். (௫)

அற்றை நாளி லிரவின்க ணடியேன் றனக்கு முடியாகப்
பெற்ற பேறு மலர்ப்பாதம் பெறவே வேண்டு மெனப்பரவும்
பற்று விடாது துயில்வோர்க்குக் கனவிற் பாத மலரளிக்க
உற்ற வருளா லவைதாங்கி யுலக மெல்லாந் தனிபுரந்தார்.

(இ-ள்.) அன்றுநாளிரவிலே எம்பெருமானே ! அடியேனுக்கு மணிமுடியாக அடைதற்குரிய பேறனது தேவரீரது திருவடிகளையே பெறவேண்டுமென்று துதிக்கின்ற பேரன்பு நீங்காமல் நித்திரைசெய்யுங் கூற்றுவநாயனருக்குச் சொப்பனத்திலே தோன்றி ஸ்ரீ நடராசப்பெருமான் தமது திருவடித்தாமரைகளைத் திருமுடியாகச் சூட்டியருள, (நாயனர்) பொருந்திய திருவருளினுல் அத்திருவடிகளையே மணிமுடியாகச் சூடி உலகமுழுவதையும் பொது நீக்கி யரசாண்டருளினர்.—எ-று. (௬)

அம்பொ னீடு மம்பலத்து ளாரா வமுதத் திருநடஞ்செய்
தம்பி ரானர் புவியின் மகிழ் கோயி லெல்லாந் தனித்தனியே
யிம்பர் ஞாலங் களிகூர வெய்தும் பெரும்பூ சனையியற்றி
யும்பர் மகிழ வரசளித்தே யுமையாள் கணவ னடிசேர்ந்தார்.

(இ-ள்.) அழகிய பொன்னினுல் சிறந்து விளங்குகின்ற திருச்சிற்றம்பலத்திலே நீங்காத அமுதம்போலுந் திருநடனஞ் செய்தருளுகின்ற சிவபெருமான் இந் நிலவுலகத்தில் மகிழ்ந்தெழுந்தருளுந் திருக்கோயில்களிலெல்லாம் தனித்தனியே இவ்வுலகத்தார் களிப்படையும்படி சிறந்த பெரிய பூசனையைச் செய்து, தேவர்கள் மகிழும்படி அரசாட்சி செலுத்திப் பார்வதிபாகராகிய சிவபெருமானது திருவடிகளை யடைந்தருளினர்.—எ-று.

உம்பர் மகிழ வரசளித்தலாவது,—உலகத்தை நீதியோடு அரசுசெலுத்துவதன்றி வேள்வி முதலியவற்றைச் செய்து அவிர்ப்பாகாதிகளால் தேவர்களும் மகிழ்வுறும்படி செய்தல். (எ)

காதற் பெருமைத் தொண்டினிலைக் கடல்சூழ் வையங் காத்தளித்துக்
காதங் ககல முயல்களந்தைக் கூற்ற னர்தங் கழல்வணங்கி
நாத மறைதந் தளித்தாரை நடைநூற் பாவி னவின்றேத்தும்
போத மருவிப் பொய்யடிமை யில்லாப் புலவர் செயல்புகல்வாம்.

(இ-ள்.) விருப்பமிகுகின்ற பெருமையினையுடைய திருத்தொண்டின் றன்மையமைந்த சமுத்திரஞ்சூழ்ந்த நிலவுலகத்தை யாளுகைசெய்து, குற்றநீங்கும்படி முயற்சிசெய்தவராகிய களந்தைப்பதியி லவதரித்தருளிய கூற்றுவநாயனரது திருவடிகளை வணங்கி, ஒலிவடிவாகிய வேதங்களைச் செய்தருளிய சிவபெருமானை நல்ல நடையினையுடைய நூற்பாவினுல் பாடித் துதித்தருளுகின்ற மெய்ஞ்ஞான முற்றுப் பொய்யடிமையில்லாத புலவர்கள் செய்த திருத்தொண்டைச் சொல்லுகின்றேம்.—எ-று.

வேதம் சத்தரூபமாதலின் 'நாதமறை' என்றார் ; அவை மூவகைய, எடுத்தல், படுத்தல், நலிதலெனு ; இவையிற்றை வடநூலார் உதாத்தம், அநுதாத்தம், சுவரித மென்ப. (அ)

தேனுங் குழலும் பிழைத்ததிரு மொழியாள் புலவி தீர்க்கமதி
தானும் பணியும் பகைதீர்க்குஞ் சடையார் தூது தருந்திருநாட்
கூனுங் குருடுந் தீர்த்தேவல் கொள்வார் குலவு மலர்ப்பாதம்
யானும் பரவித் தீர்க்கின்றே னேழு பிறப்பின் முடங்குகூன்.

(இ-ள்.) தேனையும் வேய்ங்குழலையும் வென்ற சிறந்த சொல்லினையுடைய பரவைநாச்சியாரடைந்த பிணக்கைத் தீர்க்கும்படி, சந்திரனும் பாம்பும் பகைதீரும்படி யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமான் தூதுசென்றருளிய நன்னாளில், கூனையுங் குருடையுந் தீர்த்து அடிமைகொண்டருளிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளது விளங்குகின்ற தாமரைமலர்போன்ற திருவடிகளை அடியேனுந் துதித்து என் எழுவகைப் பிறப்பினும் முடங்கலாக வருகின்ற வினைக்கூனை யொழிக்கின்றேன்.—எ-று.

ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் திருவொற்றியூரிற் சங்கிலியாரை மணஞ்செய்துகொண்டமை பரிசனங்களாற் கேள்விப்பட்டுப் பிணங்கிக்கொண்டபோது பரமசிவனையே அவர்பால் தூதுநடத்தினமையால் 'தேனுங் குழலும் பிழைத்ததிரு மொழியாள் புலவி தீர்க்கமதி - தனும் பணியும் பகைதீர்க்குஞ் சடையார்' என்றும்; கோல் பிடித்ததனால் கிய கூனும், குருடும் திருக்கச்சியேகம்பத்தும் திருவாரூரினும் நீங்கப்பெற்று வலிய வந்தாட்கொள்ளப்பட்டவராகலின், கூனுங்குருடுந்தீர்த்தேவல்கொள்வார்' என்றும், அவர் ஸ்ரீபாதத்தையணைந்தாருக்கும் பாசமோசனமும் பிறவிநீக்கமுமுண்டாமாகலின் மலர்ப்பாதம்யானும்பரவித் தீர்க்கின்றேனேழு பிறப்பின் முடங்குகூன்' என்றுங் கூறினூர். (௪)

திருச்சிற்றம்பலம்.

கூற்றுவநாயனூர் புராண முற்றிற்று.

---

ஆ- திருவிருத்தம் ௨௦௪௦.

வார்கொண்டவனமுலையாள்சருக்கம் முற்றுப்பெற்றது.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஏழாவது,

## பொய்யடிமை யில்லாத புலவர் சருக்கம்.

# பொய்யடிமை யில்லாத புலவர் புராணம்.

செய்புணிகழ் சொற்றெளிவுஞ் செவ்விய நூல் பலநோக்கு
மெய்யுணர்வின் பயனிதுவே யெனத்துணிந்து விளங்கியொளிர்
மையணியுங் கண்டத்தார் மலரடிக்கே யாளானார்
பொய்யடிமை யில்லாத புலவரெனப் புகழ்மிக்கார்.

(இ-ள்.) (பாண்டிவள நாட்டிலே துவாதசாந்த க்ஷேத்திரமாகிய மதுராபுரியிலே கடைச்சங்கப் புலவர்களாகிய கபிலர் - பரணர் - நக்கீரர் முதலிய நாற்பத்தொன்பதின் மரும்) செய்யுள் செய்வதில் விளங்குகின்ற சொற்றெளிவும், சிறந்த (அகத்தியந் தொல்காப்பிய முதலிய) பல நூலாராய்ச்சியும், மெய்யுணர்ச்சியின் பயனிதுவேயென்று துணிந்து, சிறந்து விளங்குகின்ற நீலகண்டராகிய சிவபெருமானது தாமரை மலர்போன்ற ஸ்ரீபாதங்களுக்கே யடிமையானவர்கள் அவர்களே பொய்யடிமையில்லாத புலவர்களென்று கூறும் பேரறிவினையுடையோர்.—எ-று.

இப் பொய்யடிமையில்லாத புலவர்கள், கபிலராதி கடைச்சங்கப்புலவர்கள் நாற்பத்தொன்பதின்மரென்பதனை,—

"தரணியிற் பொய்ம்மை யிலாத்தமிழ்ச் சங்க மதிற்கபிலர்
பரணர்நக் கீரர் முதனாற்பத் தொன்பது பல்புலவோ
ரருணமக் கீயுந் திருவால வாயரன் சேவடிக்கே
பொருளமைத் தின்பக் கவிபல பாடும் புலவர்களே." என்பதனா

னுணர்க. பொய்யடிமையில்லாத புலவரென எதிர்மறை முகத்தாற் கூறினார். அதனை வலியுறுத்தற்கு; "பொய்தீ ரொழுக்க நெறிநின்றார் நீடு வாழ்வார்" என்புழிப்போல. (க).

பொற்பமைந்த வரவாரும் புரிசடையார் தமையல்லாற்
சொற்பதங்கள் வாய்திறவாத் தொண்டுநெறி தலைநின்ற
பெற்றியினின் மெய்யடிமை யுடையாராம் பெரும்புலவர்
மற்றவர்தம் பெருமையா ரறிந்துரைக்க வல்லார்கள்.

(இ-ள்.) அழகுபொருந்திய சர்ப்பங்கள் விளங்குகின்ற முறுக்காகிய சடைமுடியையுடைய சிவபெருமானையன்றி ஒரு பதங்களையும் வாய்திறந்து



பொய்யடிமையில்லாதபுலவர்.

**(வீணைப்)** பாடாத திருத்தொண்டினுறைப்பில் முதன்மையாகநின்ற தன்மையி னால் மெய்யடிமையுடையவர்களாகின்ற சிறந்த புலவர்கள்; அப் பொய்யடிமை யில்லாத புலவர்களது மேன்மையை யார் இவ்வளவினவென்று தெரிந்து கூற வல்லவர்கள். (ஒருவருமில்லை.)—எ-று.

யாரறிந் துரைக்கவல்லார் என்பதில் 'யார்' என்பது இன்மை குறித்து நின்றது; 'யாஅ ருலகத்தோர் சொல்லில்லார்' என்றாற்போல. "தம்மை யேபுகழ்ந் திச்சை பேசினுஞ் சார்வினுந் தொண்டர் தருகிலாப்-பொய்ம்மை யாளரைப் பாடாதே யெந்தை புகலூர் பாடுமின் புலவீர்காள்" என்ற திருநெறியி னொழுகுகின்றமையான் 'சொற்பதங்கள் வாய்திறவாத்தொண்டு நெறிதலை நின்ற பெற்றியினின்' என்றதென்க. (௨)

ஆங்கவர்த மடியிணைக டலைமேற்கொண் டவனியெலாந்
தாங்கியவெண் குடைவளவர் குலஞ்செய்த தவமனையா
ரோங்கிவளர் திருத்தொண்டி னுண்மையுணர் செயல்புரிந்த
பூங்கழலார் புகழ்ச்சோழர் திருத்தொண்டு புகல்கின்றாம்.

(இ-ள்.) அந்தப் பொய்யடிமை யில்லாத புலவர்களது இரண்டு திருவடி களையுஞ் சிரமேற்கொண்டு வணங்கி, உலகமுழுதையும் ஆளுகைசெய்த வெண் கொற்றக்குடையினையுடைய சோழர் குலஞ் செய்த தவப்பயன் போல்பவரும், சிறந்து வளர்கின்ற திருத்தொண்டினது உண்மையை யுணரத்தக்க நற்செய்கை யைச் செய்தருளிய அழகிய வீரக்கழலை யுடையவருமாகிய புகழ்ச்சோழநாயனா ரது திருத்தொண்டின் தன்மையைச் சொல்லத்தொடங்குகின்றோம்.—எ-று.

சோழர்மரபு இப் புகழ்ச்சோழர் தோன்றத் தவஞ்செய்தமையான் 'அவனியெலாந் தாங்கியவெண் குடைவளவர் தவஞ்செய்த தவமனையார்' என்றார்.

திருச்சிற்றம்பலம்.

பொய்யடிமை யில்லாத புலவர் புராண முற்றிற்று.

---

ஆ- திருவிருத்தம் ௨௦௪௯.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# புகழ்ச்சோழநாயனார் புராணம்.

குலகிரியின் கொடுமுடிமேற் கொடிவேங்கைக் குறியெழுதி
நிலவுதரு மதிக்குடைக்கீழ் நெடுநிலங்காத் தினிதளிக்கு
மலர்புகழ்வண் டமிழ்ச்சோழர் வளநாட்டு மாமூதா
ருலகில்வள ரணிக்கெல்லா முள்ளுறையு ராமுறையூர்.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய இமயமலைச் சிகரத்தில் புலிக்கொடியினுடைய வடிவத்தை யெழுதி, நிலவை வீசுகின்ற சந்திரவட்டக்குடையின் கீழிருந்து பெரிய நிலவுலகத்தைப் பாதுகாத்து அரசாண்டுவருகின்ற பரந்த புகழையுடைய தமிழ் வளம்பொருந்திய சோழவள நாட்டிலே, உலகத்தில் வளர்கின்ற அழகுக்கெல்லாம் இருப்பிடமாகவுள்ள பழைய வூரானது உறையூராகும்.

சேரசோழ பாண்டியரென்னு முப்பெரு வேந்தருந்தங்கள் வெற்றிக்கொடியை இமயமலையிற் குறித்தெழுதிவைத்தல் இயல்பாகலான் "குலகிரியின் கொடுமுடிமேற் கொடிவேங்கைக் குறி யெழுதி" என்று கூறினார். இதனை "பொன்மலைப் புலிவென்றோங்கப் புதுமலை யிடித்துப் போற்று-மந்நெறி வழியேயாக வயல்வழி யடைத்த சோழன்"—என்று எறிபத்த நாயனார் புராணத்தும், "புண்டரிகம் பொன்வரை மேலேற்றிப் புவியளிக்குந்-தண்டரள வெண்கவிகைத் தார்வளவர் சோணாட்டில்" என்று எனாதி நாதநாயனார் புராணத்தும் வருவனவற்றானு முணர்க. "வலனுயர்த்த வண்ணலஞ்சேல் வான்றோய்பொற் கோட்டிமைய வரையிற் றீட்டி - யலர்தலைமா நிலம்புரக்கு மதிவீர ராமனிக லரசரேறே" எனப் பாண்டியர்கள் மீனக்கொடியைப் பொறித்தலையும், சேரர்கள் விற்கொடியைத் தீட்டிவைத்தலையும் "போர்தையங் கண்ணி வேந்துவிற்பொறித்த" எனக் கூறலானுமுணர்க. (க)

அளவில்பெரும் புகழ்நகர மதனிலணி மணிவிளக்கு
மிளவெயிலின் சுடர்ப்படலை யிரவொழிய வெறிப்பனவாய்க்
கிளரொளிசேர் நெடுவானைப் பெயர்யாற்றுக் கொடிகெழுவும்
வளரொளிமா ளிகைநிரைகண் மருங்குடைய மறுகெல்லாம்.

(இ-ள்.) அளவற்ற பெரும்புகழையுடைய அவ்வுறையூரிலுள்ள அழகிய மணிவிளக்குகளும் இளஞ்சூரியன்போலுஞ் சுடர்ப்பரப்பினை இரவொழிய விளக்குகின்றனவாய், மிக்க வொளிபொருந்திய ஆகாய கங்கையினிடத்துக் கொடிகளுயர்ந்து விளங்குகின்ற ஒளிவளருந் திருமாளிகை வரிசைகள் வீதிகளின் பக்கங்க ளெங்கு முள்ளன.—எ-று.

மணிவிளக்கு மிளவெயிலின் சுடர்ப்பரப்பினு லங்கசரிற் பகலேயன்றி யிரவின்மை காணக்கூடாமையான் 'இரவொழிய வெறிப்பனவாய்' என்றார்.()

நாகதலத் தும்பிலத்து நானிலத்து நலஞ்சிறந்த
போகமனைத் தினுக்குறுப்பாம் பொருவிறந்த வளத்தினவாய்
மாகநிறைந் திடமலிந்த வரம்பில்பல பொருள்பிறங்கு
மாகரமொத் துளவளவி லாவணவீ திகளெல்லாம்.

(இ-ள்.) அளவற்ற கடைவீதிகளனைத்தும் விண்ணுலகத்திலும், பாதலத்திலும், இந்நிலவுலகத்திலும் நன்மைசிறந்து விளங்குகின்ற பலவகைப் போகங்களுக்கும் உறுப்பாகிய அளவற்ற பெருவளமுடையனவாய், ஆகாயமளாவும்படி நிறைந்த அளவற்ற பல பொருள்கள் விளங்குகின்ற இருப்பிடத்தை யொத்துள்ளன.—எ-று.

நானிலமென்றது ஆறலைப்போர் வசிக்கும் பாலையை யொழித்த நாற்றிணையையும். செல்வத்துள் வளவன் சிறந்தவனாகலி னவனகரத்தை வரம்பில் பல பொருள்பிறங்கு மாகரமுளது என்றார். (௩)

பார்நனைய மதம்பொழிந்து பனிவிசும்பு கொளமுழங்கும்
போர்முகவெங் களிறடியும் புடையினமென் றடையவருஞ்
சோர்மழையின் விடுமதத்துச் சுடருநெடு மின்னோடைக்
கார்முகிலும் பலதெரியா களிற்றினிரைக் களமெல்லாம்.

(இ-ள்.) யானை வரிசைகளையுடைய களமெங்கும், பூமிநனையும்படி மதத்தைப் பொழிந்து குளிர்ந்த விண்ணுலக மளாவும்படி பிளிறுகின்ற போர்த்தொழிலையுடைய வெவ்விய யானைகளும், அவ்வியானைகளிடத்துத் தம்மினமென்று கருதிச் சேரவருகின்ற பெய்யும் மழையாகிய மதத்தையும், விளங்குகின்ற நெடிய மின்னலாகிய நெற்றிப்பட்டத்தையு முடையகரிய பல மேகங்களும் வேறுபாடு தெரியாவாம்.—எ-று.

இது மயக்கவணி. மழையை மதமாகவும், மின்னை யோடையாகவும் யானைக்கேற்பக் கூறினார். கார்முகில் என்றதற்குக் கரிய மேகமேயென விரிப்பதன்றிக் கார்காலத்து மேகமெனினு மமையும். களிற்றி னிரைக்கள மென்றது யானைக்கொட்டாரத்தை. (௪)

படுமணியும் பரிச்செருக்கு மொலிகிளரப் பயில்புரவி
நெடுநிரைமுன் புல்லுண்வாய் நீர்த்தரங்க நுரை நிவப்ப
விடுசுடர்மெய் யுறையடுக்கன் முகில்படிய விளங்குதலாற்
றொடுகடல்க ளனையபல துரங்கசா லைகளெல்லாம்.

(இ-ள்.) ஒன்றோடொன்று தாக்குகின்ற மணிகளும், குதிரைச் செருக்கா லுண்டாகின்ற கனைப்புமாகிய ஓசை யுண்டாகலானும், கட்டப்பட்டுள்ள நெடிய குதிரைப்பந்திகள் முன்னே புல்லையுண்ணப்பட்ட வாயினின்று, நீரினலையோடு நுரைகள் பொங்குதலாலும், ஒளி வீசுகின்ற கவச வரிசைகளாகிய மேகங்கள் படிந்து விளங்குதலாலும், பல அசுவசாலைக ளனைத்தும், சகரர்களால் தோண்டப்பட்ட கடல்களை யொத்துள்ளன.—எ-று.

குதிரைச்சாலையில் கிண்கிணி மாலையும் கனைப்புமாகிய வொலியுடைமையாலும் நுரையுடைமையாலும், அக்குதிரை வாய்நுரை யுடைமையாலும், கவசவரிசை விளங்கலாலும் மேகங்கள் படிதலுடைமையாலும், கடலில், முத்

ம முதலிய மணிகள் தோன்றுதலானும், உச்சைசிரவமென்னும் தெய்வப்புர தோன்றலானும், அலைகளோடு கூடிய நுரையுடைமையானும், மேகங்கள் ப ந்து நீருண்ணும் மேன்மையானும் துரங்கசாலைகளைக் கடலோடு உவமித்து சிலேடை வகையாற் பொருள் பயப்பக் கூறினர். (டு

துளைக்கையிரா பதக்களிறுந் துரங்கவர சுந்திருவும்
விளைத்தவமு துந்தருவும் விழுமணியுங் கொடுபோத
வுளைத்தகட லிவற்றொன்று பெறவேண்டி யும்பரூர்
வளைத்ததுபோ லுளதங்கண் மதில்சூழ்ந்த மலர்க்கிடங்கு.

(இ-ள்.) அந்நகரத்தின் புறமதிலைச் சூழ்ந்திருக்கின்ற மலர்களையுடை அகழியானது துளைபொருந்திய கையினையுடைய ஐராவதமென்னும் யானை யும், உச்சைசிரவமென்னுங் குதிரையையும், இலட்சுமியையும், மதுரம்பெ ருந்திய அமுதத்தையும், கற்பகத் தருவையும், சிறந்த கவுத்துவ மணியையும் இந்திராதியர் அபகரித்துச் செல்ல, இவைகளை வருந்திப் பெற்ற கடலானது இப்பொருள்களில் யாதேனு மொரு பொருளை யடைய விருப்புற்று, விண்ணு லகத்தை வளைத்ததுபோன்றுள்ளது.—எ-று.

அயிராபத மென்றது இராபதமென முதல் குறைந்து நின்றது. துரங் வரசென்றது உச்சைசிரவத்தை. திருவென்றது திருமகளை. விளைந்தவமு தெ றது சாவா மருந்தென்க. சாவாமை விளைத்தலான் விளைந்தவமு தென்றார். த வென்றது கற்பகம், மந்தாரம், பாரிசாதம், அரிசந்தனம். சந்தான மென் வற்றை. விழுமணியென்றது கவுந்துவத்தை ; சிந்தாமணி யெனினுமாம். (சு

காரேறுங் கோபுரங்கள் கதிரேறு மலர்ச்சோலை
தேரேறு மணிவீதி திசையேறும் வசையிலணி
வாரேறு முலைமடவார் மருங்கேறு மலர்க்கணையொண்
பாரேறும் புகழுறைந்தைப் பதியின்வளம் பகர்வரிதால்.

(இ-ள்.) மேகங்க ளேறிச்செல்லுங் கோபுரங்களும், சந்திர சூரியர்க தவழ்ந்து செல்லும் மலர்களையுடைய சோலைகளும், தேரோடுந் திருவீதிகளு திக்குகள் தோறும் நிறைந்த குற்றமற்ற பேரழகும், கச்சணிந்த ஸ்தனங்க யுடைய மாதர்களிடத்துச் செல்லும் புஷ்ப பாணங்களும், சிறந்த நிலவுலக தில் நிறைந்த பெரும்புகழும் (நிலைபெற்று விளங்குகின்ற) உறையூர் என்னு ந ரத்தின் வளப்பத்தைச் சொல்லுதற் கரிதாகும்.—எ-று. (எ

மேகமண்டல மளாவிய கோபுரங்க ளாகலின் காரேறுங் கோபுரங்க என்றும், சந்திர சூரியர் மண்டலங்களை யளாவிய சோலைக ளாகலின் கதிரே மலர்ச்சோலை என்றுங் கூறினர்.

அந்நகரிற் பாரளிக்கு மடலரச ராகின்றார்
மன்னுதிருத் தில்லைநகர் மணிவீதி யணிவிளக்குஞ்
சென்னிநீ டனபாயன் றிருக்குலத்து வழிமுதலோர்
பொன்னிநதிப் புரவலனார் புகழ்ச்சோழ ரெனப்பொலிவார்.

(இ-ள்.) அத்தகைய சிறப்பினையுடைய உறையூரில் இந்நிலவுலகத்தை யாளுகை செய்கின்ற வலிமை தங்கிய அரசராயுள்ளவர் (யாரெனின்) நிலை

ற்ற திருத்தில்லைப்பதியின்கண் அழகிய திருவீதியைச் சிறப்பாக விளங்கச் செய்த அநபாயசோழமகாராஜாவினுடைய சிறந்த குலத்தலைவரா யுள்ளவரும், காவிரிநதி சூழ்ந்த சோழநாட் டரசருமாகிய புகழ்ச்சோழநாயனுரென்று விள ங்குந் திருநாமத்தை யுடையவர்.—எ-று. (அ)

ஒருகுடைகீழ் மண்மகளை யுரிமையினின் மணம்புணர்ந்து
பருவரைத்தோள் வென்றியினுற் பார்மன்னர் பணிகேட்பத்
திருமலர்த்தும் பேருலகுஞ் செங்கோலின் முறைநிற்ப
வருமறைச்சை வந்தழைப்ப வரசளிக்கு மந்நாளில்.

(இ-ள்.) ஒருகுடைக்கீழிருந்து நிலமகளை உரிமையாக மணம்புரிந்து பருத்தமலைபோலும் புயத்தின் வெற்றியினுல், உலகத்துள்ள வேற்றரசர்கள் ஏவல் கேட்கவும், பலவகைச்செல்வங்களும் விளங்கச்செய்கின்ற பெரிய நில வுலகமும் செங்கோல்முறைப்படி நடக்கவும், பரம்பரையாகவருகின்ற வேத சம்பந்தமாகிய சித்தாந்தசைவமானது தழைத்தோங்கவும் அரசாட்சிசெய்யும் நாள்களில்.—எ-று.

அருமறைச் சைவந் தழைப்ப என்றுர் வைதிகசைவ மென்பதுபற்றி.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௯)

பிறைவளருஞ் செஞ்சடையார் பேணுசிவா லயமெல்லா
நிறைபெரும்பூ சனைவிளங்க நீடுதிருத் தொண்டர்தமைக்
குறையிரந்து வேண்டுவன குறிப்பின்வழி கொடுத்தருளி
முறைபுரிந்து திருநீற்று முதனெறியே பாலிப்பார்.

(இ-ள்.) இளம்பிறைவளருஞ் சிவந்த சடைமுடியையுடைய சிவபெரு மான் விரும்பி வீற்றிருந்தருளுஞ் சிவாலயங்கடோறும் நிறைந்த பெரியபூசனை யை விளங்கவமைத்து, சிறந்த சிவனடியார்களைக் குறையிரந்து அவர்களுக்கு வேண்டியவைகளைக் குறிப்பின்வழி யுணர்ந்து கொடுத்தருளிச் செங்கோல்செ லுத்தித் திருவெண்ணீற்றுச் சார்பாயுள்ள முதன்மைபொருந்திய சைவநெறி யையே விருத்திசெய்வாராயினுர்.—எ-று.

வேதத்திலுள்ளது நீறு என்பவாகலின் 'திருநீற்று முதனெறியே' என் றுர். (௧௦)

அங்கணினி துறையுநா ளரசிறைஞ்ச வீற்றிருந்து
கொங்கரொடு குடபுலத்துக் கோமன்னர் திறைகொணரத்
தங்கள்குல மரபின்முதற் றனிநகராங் கருவூரின்
மங்கலநா ளரசுரிமைச் சுற்றமுடன் வந்தணைந்தார்.

(இ-ள்.) அவ்வுறையூரில் இனிமையோடு அரசுசெய்யும்நாளிலே வேற்ற ரசர்கள் வணங்கும்படி வீற்றிருந்து, கொங்கதேசத்தரசருங் குடகதேசத்தரச ருந் திறைகொண்டுவர, தங்கள் குலமரபிற்குரிய முதன்மைபொருந்திய ஒப்ப ற்ற நகரமாகிய கருவூர் என்னும் இராசதானியிலே சுபதினத்திலே அரசுரிமை யினையுடைய சுற்றத்தாருடன் வந்தடைந்தார்.—எ-று.

சோழர்கள் இராசதானியாகிய நகரங்களில் கருவூரு மொன்ருகலின் 'தங்கள்குல மரபின்முதற் றனிநகராங் கருவூர்' என்றுர். (௧௧)

வந்துமணி மதிற்கருவூர் மருங்கணைவார் வானவர்சூ
ழிந்திரன்வந் தமரர்புரி யெய்துவா னெனவெய்திச்
சிந்தைகளி கூர்ந்தரனார் மகிழ்திருவா னிலைக்கோயின்
முந்துறவந் தணைந்திறைஞ்சி மொய்யொளிமா ளிகைபுகுந்தார்.

(இ-ள்.) அவ்வாறுவந்து பலவகை மணிகள்பதித்த மதிலையுடைய கருவூரினருகில் வருகின்ற புகழ்ச்சோழநாயனார் இந்திரனானவன் தேவர்கள் சூழும்படி வந்து அமராபதி நகரத்தையடைந்ததன்மைபோல வந்தடைந்து மனமகிழ்வுற்று, சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளுந் திருவாநிலையென்னுந் திருக்கோயிலை முற்பட்டு வந்து வணங்கி மிக்க ஒளிபொருந்திய திருமாளிகையினுள்ளே புகுந்தார்.—எ-று.

வானவர் சூழ இந்திரன் - என்பது, வானவர்சூ ழிந்திரன் எனத் தொகுத்தல்விகாரம் பெற்றது. ஆநிலை கருவூரிலுள்ள ஆலயத்தின்பெயர். (கஉ)

மாளிகைமுன் னத்தாணி மண்டபத்தின் மணிபுனைபொற்
கோளரியா சனத்திருந்து குடபுலமன் னவர்கொணர்ந்த
வோளிநெடுங் களிற்றினணி புலப்பில்பரி துலைக்கனக
நீளிடையில் விலகுமணி முதனிறையுந் திறைகண்டார்.

(இ-ள்.) திருமாளிகைக்கு முன்னேயுள்ள அத்தாணிமண்டபத்திலே இரத்தினங்களிழைத்த பொன்னாலாகிய சிங்காசனத்தில் வீற்றிருந்து குடகுதேசத்தரசர்கள் கொண்டுவந்த பெரிய யானையணிகளும், கெடாதகுதிரைகளும், துலாநிறையாகக் கொண்டுவந்த பொற்குவைகளும், நெடுந்தூரம் ஒளி விளங்குகின்ற நவரத்தினங்களும் இவைமுதலாக நிறைந்திருக்கின்ற திறைப்பொருள்களைப் பார்த்தருளினார்.—எ-று.

அத்தாணிமண்டபம்=அரசிருக்கைமண்டபம். ஒளி=யானைக்கூட்டம்.

திறைகொணர்ந்த வரசற்குச் செயலுரிமைத் தொழிலருளி
முறைபுரியுந் தனித்திகிரி முறைநில்லா முரணரச
ருறையரண முளவாகிற் றெரிந்துரைப்பீ ரெனவுணர்வு
நிறைமதிநீ டமைச்சர்க்கு மொழிந்தருளி நிகழுநாள்.

(இ-ள்.) திறைப்பொருள் கொண்டுவந்த அரசர்களுக்கு அரசுரிமைக்குரிய தொழிலை யருள்புரிந்து, பேரறிவுநிறைந்த சிறந்த மந்திரிகளைப்பார்த்து, செங்கோல்முறைமைப்படி நீதிசெலுத்துகின்ற நமது ஒப்பற்ற ஆஞ்ஞாசக்கரத்தின் முறையே நில்லாத பகையரசர் வசிக்கின்ற அரணங்களுளவாகில் தெரிந்து சொல்லுங்களென்று கூறியருளி நிகழும்நாள்களில்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கச)

சென்றுசிவ காமியார் கொணர்திருப்பள் ளித்தாம
மன்றுசித றுங்களிற்றை யறவெறிந்து பாகரையுங்
கொன்றவெறி பத்தரொடு மன்னவனுங்கொன் றருளுமென
வென்றிவடி வாள்கொடுத்துத் திருத்தொண்டின் மிகச்சிறந்தார்.

(இ-ள்.) சிவகாமியாண்டார் கொண்டுவந்த திருப்பள்ளித்தாமத்துக்குரிய மலர்களை மகாநவமியின் முதனாளிற் சிதறிய பட்டவர்த்தன யானையை

இறக்கும்படி வெட்டி யானைப்பாகர்களையுங் கொன்றருளிய எறிபத்தநாயனாருக் கெதிரில் சென்று அடியேனையுங்கொன் றருளுமென்று வெற்றிபொருந்திய வடித்தவாளைக்கொடுத்துத் திருத்தொண்டில் மிகவுஞ் சிறப்புற்றிருந்தனர். சிவத்தொண்டிற் குரிமைவாய்த்தலின், வென்றிவடி வாளென்றார்.

விளங்குதிரு மதிக்குடைக்கீழ் வீற்றிருந்து பாரளிக்குந்
துளங்கொளிநீண் முடியார்க்குத் தொன்முறைமை நெறியமைச்ச
ரளந்ததிறை முறைகொணரா வரசனுள னொருவனென
வுளங்கொள்ளும் வகையுரைப்ப வுறுவியப்பான் முறுவலிப்பார்.

(இ-ள்.) பிரகாசிக்கின்ற அழகிய சந்திரவட்டக்குடையின் கீழே வீற்றிருந்து நிலவுலகத்தை அரசாளுகின்ற ஒளிவிளங்கும் நீண்ட மணிமுடியையுடைய புகழ்ச்சோழநாயனாருக்கு பழைய முறைமைவழியே ஒழுகுகின்ற மந்திரிகள், அளக்கப்பட்ட திறைப்பொருளை முறைப்படி கொண்டுவராததொரு அரசனிருக்கின்றானென்று, திருவுள்ளத்திற் கொள்ளும்படி கூற, (புகழ்ச்சோழநாயனார்) பொருந்திய வியப்பினாலே புன்சிரிப்படைவாராயினார்.—எ-று.(கசு)

ஆங்கவன்யா ரென்றருள வதிகனவ னணித்தாக
வோங்கெயில்சூழ் மலையரணத் துள்ளுறைவா னெனவுரைப்ப
வீங்குநமக் கெதிர்நிற்கு மரணுளதோ படையெழுந்தப்
பாங்கரணந் துகளாகப் பற்றறுப்பீ ரெனப்பகர்ந்தார்.

(இ-ள்.) (புகழ்ச்சோழ நாயனார்) அவன் யாவனென்று வினவியருள, மந்திரிகள் அவன் அதிகனென்பவன்; அவன் சமீபத்திலே உயர்ந்த மதில் சூழ்ந்த மலையரணத்துள்ளே வசிக்கின்றானென்று சொல்ல, (அது கேட்ட புகழ்ச்சோழர்) இவ்வுலகத்தில் உங்களுக்கெதிரில் பகைத்து நிற்கும் அரணுள்ளதோ? நீங்கள் படையெடுத்துச்சென்று, அருகிலுள்ள அவ்வரணத்தைத் துகளாகும்படி பற்றறுத்துவாருங்களென்று கூறியருளினார்.—எ-று. (கஎ)

அடல்வளவ னாணையினா லமைச்சர்களும் புறம்போந்து
கடலனைய நெடும்படையைக் கைவகுத்து மேற்செல்வார்
படர்வனமு நெடுங்கிரியும் பயிலரணும் பொடியாக
மிடலுடைநாற் கருவியுற வெஞ்சமர மிகவிளைத்தார்.

(இ-ள்.) வலிய புகழ்ச்சோழ நாயனாரது ஆஞ்ஞையினாலே மந்திரிகளும் வெளியிலேவந்து கடல்போலதிகப்பட்டுள்ள பெருஞ்சேனையை அணிவகுத்துப்போர்மேற் செல்பவர்களாய்ப் படர்ந்த காடும் உயர்ந்த மலையும், மலையரணும் பொடியாகும்படி வலிமை பொருந்திய நால்வகைச் சேனைகளும் பொருந்தக் கொடிய போரை அதிகமாகவிளைத்தார்கள்.—எ-று. (கஅ)

வளவனார் பெருஞ்சேனை வஞ்சிமலர் மலைந்தேற்ப
வளவிலர ணக்குறும்பி லதிகர்கோ னடற்படையு
முளநிறைவெஞ் சினந்திருகி யுயர்காஞ்சி மலைந்தேற்பக்
கிளர்கடல்க ளிரண்டென்ன விருபடையுங் கிடைத்தனவால்.

(இ-ள்.) புகழ்ச்சோழ நாயனாரது பெரிய சேனைகள் வஞ்சிமலர்மாலையையணிந்து போர்செய்யும்படி யெதிர்க்க, மிக்க வுறுதிபொருந்திய குறும்பரச

ளுகிய அதிகனென்பவனது வலிய சேனைகளும் மனத்தில் நிறைந்த கடுங்கோபமுற்று உயர்ந்த காஞ்சிமாலையை யணிந்தெதிர்க்க, இவ் விருபடைகளும் விலங்குகின்ற இரண்டு கடல்போல ஒன்றோடொன் றெதிர்த்தன.—எ-று.

வஞ்சி என்பது, பகைவர்மேற் செல்வோ ரணியு மாலை; காஞ்சி என்பது, படைமுன்னெதிருன்றும் வீரர்களணியுமாலை. (கக)

வேறு.

கயமொடு கயமெதிர் குத்தின
வயமுட னயமுனை முட்டின
வயவரும் வயவரு முற்றனர்
வியனமர் வியலிட மிக்கதே.

(இ-ள்.) யானைகளோடு யானைகள் (ஒன்றுக்கொன்று) தாக்கின; வீரர்களோடு வீரர்கள் எதிர்த்துப் போர்செய்தார்கள்; விசாலமாகிய போர்க்களமானது பெரும்போரினால் சிறந்து விளங்கியது.—எ-று. (உ0)

மலையொடு மலைகண் மலைத்தென
வலைமத வருவி கொழிப்பொடு
சிலையினர் விசையின் மிசைத்தெறு
கொலைமத கரிகொலை யுற்றதே.

(இ-ள்.) மலைகளோடு மலைக ளெதிர்த்தாற்போல, அலைகின்ற மதமாகிய அருவி பொழியும் யானையோடு வில்வீரர்கள் வேகமாக அவ்யானையின்மேல் விடுகின்ற கொலைத்தொழிலினால் மதயானையானது கொல்லப்பட்டது.—எ-று.

வேறு.

சூறை மாருத மொத்தெதி
ரேறு பாய்பரி வித்தகர்
வேறு வேறுதலைப்பெய்து
சீறி யாவிசெ குத்தனர்.

(இ-ள்.) எதிரேறிச்செலுத்தும் பாய்கின்ற குதிரைவீரர்கள் சுழல்காற்றுக்கொப்பாகச் சுழன்று வெவ்வேறிடங்களில் தனித்தனி சென்று, பகைவர்களுயிரைக் கோபித்துக் கொன்றார்கள்.—எ-று. (உஉ)

மண்டு போரின் மலைப்பர்
துண்ட மாயிட வுற்றெதிர்
கண்ட ராவி கழித்தன
ருண்ட சோறு கழிக்கவே.

(இ-ள்.) நெருங்கிய போரில் எதிர்த்துச் சண்டை செய்யும் வீரர்கள் துண்டமாகும்படி யெதிரிலடைந்து அவர்களுண்ட சோற்றை யொழிக்கும் பொருட்டு அவ்வீரர்களுடைய உயிரைக் கொன்று நீக்கினார்கள்.—எ-று. (உங)

வீடி னருட லிற்பொழி
நீடு வார்குரு திப்புன
லோடும் யாறென வொத்தது
கோடு போல்வ பிணக்குவை.

(இ-ள்.) போர்செய்து இறந்த வீரர்களுடைய உடம்பினின்றும் பெருகுகின்ற மிக்க உதிரவெள்ளமானது (புரண்டோடுகின்ற) ஆறுபோன்றிருந்தது; பிணக்குப்பல்கள் பெரிய மலைபோன்றிருந்தன.—எ-று. (உச)

வானி லாவு கருங்கொடி
மேனி லாவு பருந்தின
மேனை நீள்கழு கின்குல
மான ஆறொடெ ழுந்தவே.

(இ-ள்.) ஆகாயத்தில் பறக்கின்ற கரிய காக்கைகளும், அவற்றிற்கு மேல் சுழல்கின்ற பருந்தின் கூட்டங்களும், மற்றப் பெரிய கழுகுமுதலியவற்றின் கூட்டங்களும் சிறந்த உணவோடும் மேலெழுந்து பறந்தன.—எ-று. (உரு)

வேறு.

வரிவிற் கதைசக் கரமுள் கரம்வாள்
சுரிகைப் படைசத் திகழுக் கடைவே
லெரிமுத் தலைகப் பணமெற் பயில்கோன்
முரிவுற் றனதுற் றதமொய் களமே.

(இ-ள்.) கட்டமைந்த வில்லும், கதையும், முற்கரமும், வாளும், உடைவாளும், கைவேலும், ஈட்டியும், வேலும், விளங்குகின்ற முத்தலைச் சூலமும், ஒளிவிளங்குகின்ற அம்பும் அழிவினையுடைய நெருங்கிய யுத்தகளத்தில் முரிந்துபோயின.—எ-று.

முற்கரம் என்பது ஒருவகையாயுதம், சம்மட்டி யெனினுமாம். (உசு)

வடிவே லதிகன் படைமா ளவரைக்
கடிசூ ழரணக் கணவாய் நிரவிக்
கொடிமா மதில்நீ டுகுறும் பொறையூர்
முடிநே ரியனார் படைமுற் றியதே.

(இ-ள்.) வடித்த வேற்படையையுடைய அதிகனென்பவனது சேனைகளழிந்துபோகவும், மலைக்காவல்சூழ்ந்த அரணமாகிய கணவாயை யிடித்துநிரவி, கொடிகளும் பெரிய மதில்களுமுயர்ந்த அம்மலைநாட்டோரைக் கிரீடத்தையணிந்த புகழ்ச்சோழ நாயனாரது சேனையடைந்தது.—எ-று.

கணவாய்=மலைச்சாரனிலம். (உஎ)

முற்றும் பொருசே னைமுனைத் தலையிற்
கற்றிண் புரிசைப் பதிகட் டழியப்
பற்றுந் துளைநொச் சிபரிந் துடையச்
சுற்றும் படைவீ ரர்துணித் தனரே.

(இ-ள்.) போர் முற்றிய சேனைகள் செய்யும் போர்முகத்தில் கற்களாலாகிய வலியமதில் சூழ்ந்தமலையரணனது அழகு கெடவும், எல்லையாகக் கட்டப்பட்ட மதிலானது கெட்டழியவும் சுழற்றுகின்ற ஆயுதத்தையுடைய வீரர்கள் அழித்தார்கள்.—எ-று. (உஅ)

மாறுற் றவிறற் படைவா ளதிக
னூறுற் றபெரும் படையூ ழில்படப்

பாறுற் றவெயிற் பதிபற் றறவிட்
டேறுற் றனனோ டியிருஞ் சுரமே.

(இ-ள்.) பகையையுடைய வலியசேனைகளையும் வாளையுமுடைய அதிக னென்னுங் குறும்பரசன் அழிக்கப்பட்டதனது பெரிய சேனைகள் இறந்து குவியவும், அழிந்த மதிலையுடைய மலைக்கோட்டையை அறவேயொழித்து ஓடிப்போய் பெரிய காட்டையடைந்தான்.—எ-று. (௨௯)

அதிகன் படைபோர் பொருதற் றதலைப்
பொதியின் குவைவெண் ணிலபோ யினபி
னிதியின் குவைமங் கையர்நீள் பரிமா
வெதிருங் கரிபற் றினரெண் ணிலரே.

(இ-ள்.) அதிகனுடைய சேனைகள் போர்செய்து அறுபட்ட அளவற்ற தலைப்பொதியின்குவைகள் முன்னே சென்றபின்பு, அளவற்ற போர்வீரர்கள் நிதிக்குவைகளையும், மாதர்களையும், உயர்ந்தகுதிரைகளையும், எதிர்ந்து போர் செய்யும் யானைகளையுங் கைக்கொண்டார்கள்.—எ-று.

பரிமா - இருபெயரொட்டு. (௩0)

அரண்முற் றியெதிர்ந் தவமைச் சர்கடா
மிரணத் தொழில்விட் டெயில்சூழ் கருவூர்
முரணுற் றசிறப் பொடுமுன் னினர்நீ
டரணித் தலைவன் கழல்சார் வுறவே.

(இ-ள்.) மலையரணையடைந்து போர்செய்த மந்திரிமார்கள் போர்த்தொழிலைவிட்டு பெரிய நிலவுலகத்திற் கரசராகிய புகழ்ச்சோழநாயனாரது திருவடிகளை யடையும் பொருட்டு மதில்சூழ்ந்த கருவூர் இராஜதானியைவலிய பெருஞ்சிறப்போடும் அடைந்தார்கள்.—எ-று. (௩௧)

மன்னுங் கருவூர் நகர்வா யிலின்வாய்
முன்வந் தகருந் தலைமொய் குவைதான்
மின்னுஞ் சுடர்மா முடிவேல் வளவன்
றன்முன் புகொணர்ந் தனர்தா னையுளோர்.

(இ-ள்.) சேனைவீரர்கள் நிலைபெற்ற கருவூர் இராஜதானியின் திருவாயிலில் முன்னேவந்த கரிய தலைக்குவையை ஒளிவிளங்குகின்ற பெரிய மணிமுடியை யணிந்த வேற்படையுடைய புகழ்ச்சோழநாயனாருக்குமுன்னே கொண்டுவந்தார்கள்.—எ-று. (௩௨)

மண்ணுக் குயிரா மெனுமன் னவனு
மெண்ணிற் பெருகுந் தலையா வையினு
நண்ணிக் கொணருந் தலையொன் றினடுக்
கண்ணுற் றதொர்புன் சடைகண் டனரே.

(இ-ள்.) உலகத்திற்கு உயிர்போல் விளங்கும் புகழ்ச்சோழநாயனார் தமக்குமுன்னே கொண்டுவந்தடைந்த கணக்கில் அதிகரித்திருக்குந் தலைக்குவைகளில் ஒருதலையின் நடுவிலேபொருந்திய ஒரு புன்சடையைப்பார்த்தருளினார்.

வேறு.

கண்டபொழு தேநடுங்கி மனங்கலங்கிக் கைதொழுது
கொண்டபெரும் பயத்தினுடன் குறித்தெதிர்சென் றதுகொணர்ந்த
திண்டிறலோன் கைத்தலையிற் சடைதெரியப் பார்த்தருளிப்
புண்டரிகத் திருக்கண்ணீர் பொழிந்திழியப் புரவலனர்.

(இ-ள்.) அப்புன்சடையைப் பார்த்தபொழுதே நடுக்கங்கொண்டு திருவுள்ளங்கலங்கிக் கைகூப்பிவணங்கி அடைந்த பெரும்பயத்தோடுஞ் சிந்தித்து எதிரேபோய் அதனைக் கொண்டுவந்த மிக்கவல்லமை பொருந்திய வீரனது கையிலுள்ளதலையின் புன்சடை தெரியப்பார்த்துத் தாமரைமலர்போன்ற திருக்கண்களினின்றுங் கண்ணீர் பெருகியொழுகப் புகழ்ச்சோழநாயனர்.—எ-று.

இதுமுதலிரண்டு பாடலுங்குளகம். (ருச)

முரசுடைத்திண் படைகொடுபோய் முதலமைச்சர் முனைமுருக்கி
யுரைசிறக்கும் புகழ்வென்றி யொன்ருெழிய வொன்ருமாற்
றிரைசரித்த கடலுலகிற் றிருநீற்றி னெறிபுரந்தியா
னரசளித்த படிசால வழகிதென வழிந்தயர்வார்.

(இ-ள்.) முதன்மைபொருந்திய மந்திரிமார்கள் வெற்றிமுரசினையுடைய வலியசேனைகளை யழைத்துப்போய்ப் (பகைவர்களது) போரையழித்துச்சொல்லாற் சிறந்திருக்கின்ற புகழையுடைய வெற்றியானது ஒன்ருெழிய வொன்ருகநேர்ந்தது ; யான் கடல்சூழ்ந்த இந்நிலவுலகத்தில் திருநீற்றுச்சார்பாயுள்ள சைவநெறியைப் பரிபாலித்து அரசாட்சி செய்தபடி மிகவுமழகாயிருக்கின்றதென்று வருந்திச் சோர்வாராயினர்.—எ-று.

உரையும் சிறக்கும் புகழும் வென்றியும் எனக் கொள்ளினு மமையும். இதனை 'உரைப்பா ருரைப்பவை யெல்லாம்' என்ற திருக்குறட்குப் பரிமேலழகருரையானு மறிக. (ருரு)

தார்தாங்கிக் கடன்முடித்த சடைதாங்குந் திருமுடியார்
நீர்தாங்குஞ் சடைப்பெருமா னெறிதாங்கண் டவரானர்
சீர்தாங்கு மிவர்வேணிச் சிரந்தாங்கி வரக்கண்டும்
பார்தாங்க விருந்தேனே பழிதாங்கு வேனென்ருர்.

(இ-ள்.) போர்க்குரிய மாலையைச் சூடித் தமது செஞ்சோற்றுக்கடனை முடித்த சடையைத் தாங்கிய திருமுடியையுடையவர் கங்கைநதியை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமா னருளிச்செய்த மெய்ந்நெறியைக் கண்டவராயினர் ; சிறப்புப் பொருந்திய இவ்வடியவரது சடைத்தலையைத் தாங்கி வரப்பார்த்தும் பெரும்பழியைத்தாங்கிய பாதகனகிய யான் பூமியைத் தாங்குவதற்கு இருந்தேனே ? என்று வருந்திக்கூறினர்.—எ-று.

'தார்தாங்கிக் கடன்முடித்த' என்பதற்கு, நல்லொழுக்கினை மேற்கொண்டு தமது செய்கடனை முடித்த எனப் பொருள் கூறலு மொன்று. பார் ஆகுபெயர். ஓகாரம் இரக்கத்தின்கண் வந்தது. (ருசு)

என்றருளிச் செய்தருளி யிதற்கிசையும் படிதுணிவார்
நின்றநெறி யமைச்சர்க்கு நீணிலங்காத் தரசளித்து

மன்றினடம் புரிவார்தம் வழித்தொண்டின் வழிநிற்ப
வென்றிமுடி யென்குமரன் றனைப்புனைவீ ரெனவிதித்தார்.

(இ-ள்.) இவ்வாறு வருந்திக் கூறியருளி, இது செய்தற்கிசையும்படி துணிவுகொண்டவராய், தம்முன்னே நின்ற நன்னெறியையுடைய மந்திரிமாரைப்பார்த்து, பெரிய நிலவுலகத்தைக்காத்துஅரசாட்சிசெய்து கனகசபையில் திருநடனஞ் செய்தருளுஞ் சிவபெருமானது வழித்தொண்டின்முறையே நிற்கும்பொருட்டு என்னுடைய புத்திரனுக்கு வெற்றிபொருந்திய மணிமுடி சூட்டுங்களென்று கட்டளையிட்டருளினர்.—எ-று.

நீதிநூல்வழி நிற்போ ராகலின் நின்றநெறி யமைச்ச ரென்றார். (கூஎ)

அம்மாற்றங் கேட்டழியு மமைச்சரையு மிடரகற்றிக்
கைம்மாற்றுஞ் செயற்குமே கடனாற்றுங் கருத்துடையார்
செம்மார்க்கந் தலைநின்று செந்தீமுன் வளர்ப்பித்துப்
பொய்ம்மாற்றுந் திருநீற்றுப் புனைகோலத் தினிற்பொலிந்தார்.

(இ-ள்.) (உயிர்க்குயிர் கொடுத்தலாகிய) கைமாற்று செயற்கடனைத்தாமேசெய்யுங் கருத்தினையுடைய புகழ்ச்சோழநாயனார் அந்த வார்த்தையைக்கேட்டு மனம்வருந்துகின்ற மந்திரிமார்களையுந்தேற்றி, நன்மார்க்கத்தில் முதன்மையாகநின்று சிவந்த அக்கினியை முன்னேவளர்ப்பித்து, அஞ்ஞானத்தையொழிக்குந் திருவெண்ணீறணிந்த திருக்கோலத்தோடும் விளங்கினர்.—எ-று.

'புனிதந்தருவது நீறு' என்பவாகலின் 'பொய்ம்மாற்றுந் திருநீறு' என்று கூறினர். அஞ்ஞானத்தைப் பொய் என்றதென்க. (கூஅ)

கண்டசடைச் சிரத்தினையோர் கனகமணிக் கலத்தேந்திக்
கொண்டுதிரு முடித்தாங்கிக் குலவுமெரி வலங்கொள்வா
ரண்டர்பிரான் றிருநாமத் தஞ்செழுத்து மெடுத்தோதி
மண்டுதழற் பிழம்பினிடை மகிழ்ந்தருளி யுள்புக்கார்.

(இ-ள்.) தாம் பார்த்தருளிய சடைத்தலையை ஒரு பொன்மயமாகிய இரத்தினகலசத்தி லேந்திக்கொண்டு தம்முடைய திருமுடியிலே தாங்கிக் கொழுந்துவிட்டெரிகின்ற அக்கினியை வலஞ்செய்து தேவர்கள் நாயகராகிய சிவபெருமான் றிருநாமமாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை எடுத்து உச்சரித்துக்கொண்டு பற்றியெரிகின்ற தீக்கொழுந்தினிடத்தில் பெருமகிழ்வுற்று அதனுள்ளே புகுந்தருளினர்.—எ-று.

"அம்மையி னுந்துணை யஞ்செ ழுத்துமே" ஆகலின் 'அண்டர்பிரான் றிருநாமத் தஞ்செழுத்து மெடுத்தோதி' என்றார். (கூகூ)

புக்கபொழு தலர்மாரி புவிநிறையப் பொழிந்திழிய
மிக்கபெரு மங்கலதூ ரியம்விசும்பின் முழக்கெடுப்பச்
செக்கர்நெடுஞ் சடைமுடியார் சிலம்பலம்பு சேவடியி
னக்கருணைத் திருநிழற்கீ ழாராமை யமர்ந்திருந்தார்.

(இ-ள்.) அவ்வாறு அக்கினியினுள்ளே புகுந்தபொழுது (தேவர்கள் பொழியும்) கற்பகமலர்மழையானது பூமி நிறையும்படி பொழிந்து சிந்தவும்,

சிறந்த பெரிய மங்கலவாத்தியங்கள் ஆகாயத்தில் முழக்கெடுத்தொலிக்கவும், செவ்வானம்போலும் நீண்ட சடைமுடியையுடைய சிவபெருமானது (வேதமாகிய) திருச்சிலம்பொலிக்குந் திருவடியின் கருணைத்திருவுருவாகவுள்ள நீழலின் கீழே நீங்காதெழுந்தருளியிருந்தனர்.—எ-று.

சிலம்பலம்பு சேவடி என்றது குஞ்சிதபாதத்தை. (சுo)

முரசங்கொள் கடற்றானை மூவேந்தர் தங்களின்முன்
பிரசங்கொ ணறுந்தொடையற் புகழ்ச்சோழர் பெருமையினைப்
பரசுங்குற் றேவலினா லவர்பாதம் பணிந்தேத்தி
நரசிங்க முனையர்திற நாமறிந்த படியுரைப்பாம்.

(இ-ள்.) வெற்றிமுரசைக்கொண்ட கடல்போலும் பெருஞ் சேனைகளையுடைய (சேர சோழ பாண்டியரென்னும்) மூவேந்தர்களிலே முதன்மையாகிய தேன்பொருந்திய நறுமணங்கமழும் ஆத்திமாலையை யணிந்த புகழ்ச்சோழநாயனாரது திருத்தொண்டின் மேன்மையைத் துதிக்கின்ற குற்றேவலினால் அவருடைய திருவடிகளை வணங்கித் துதித்து, இனி நரசிங்கமுனையரையநாயனாரது திருத்தொண்டின் திறத்தை நாம் அறிந்தவாறு சொல்லுகின்றோம்.—எ-று.

தேர்வரிசைகளே மரக்கலங்களாகவும், குதிரைவரிசைகளே அலைகளாகவும், முரசுகளே கடலொலியாகவும், வாட்படைகளே மீன்களாகவும், சாமரைக் கூட்டங்களே நுரைகளாகவும், யானை வரிசைகளே மேகங்களாகவு முடைமையின், சேனையைக் கடலாகக் கூறுதல் நூல்வழக்காகலின், 'கடற்றானை' என்றார். இதனை :— "தேர்நிரை கலனாய்ச் செல்ல பரிநிரை திரையாய்த் துள்ள - வார்முர சொலியாய்க் கல்ல வாட்கலன் மீனாய்க் கொட்பத் - தார்நிரை கவரிக் காடு நுரைகளாய்த் ததும்ப வேழங் - கார்நிரை யாகத் தானைக் கடல்வழிக் கொண்ட தன்றே" என்னுந் திருவிளையாடற் புராணத்தானு முணர்க. (சுக)

புகழ்ச்சோழநாயனார் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம் - உ0அச.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நரசிங்கமுனையரையநாயனார் புராணம்.

கோடாத நெறிவிளங்குங் குலமரபி னரசளித்து
மாடாக மணிகண்டர் திருநீறே மனங்கொள்வார்
தேடாத பெருவளத்திற் சிறந்ததிரு முனைப்பாடி
நாடாளுங் காவலனார் நரசிங்க முனையரையர்.

(இ-ள்.) நீதிதவறாத நன்னெறியில் விளங்குகின்ற சிறந்த குறுநிலமன்னர் மரபில் அவதரித்து அரசாட்சிசெய்து, காளகண்டராகிய சிவபெருமானது திருவெண்ணீறே தமக்குரிய பெருஞ்செல்வமாக மனத்திற்கொள்பவர்; தேடுதற்கரிய பெரிய வளப்பத்தினால் சிறப்புற்றிருக்குந் திருமுனைப்பாடிநாட்டை யாளுகைசெய்யும் அரசரா யுள்ளவர் : (அவர் யாரெனின்) நரசிங்கமுனையரையநாயனா ரென்னுந் திருநாம முடையவர்.—எ-று.

"அருத்தமதாவது நீறு" என்பவாகலின் 'மாடாக மணிகண்டர் திருநீறு' என்றார். (க)

இம்முனையர் பெருந்தகையா ரிருந்தரசு புரந்துபோய்த்
தெம்முனைகள் பலகடந்து தீங்குநெறிப் பாங்ககல
மும்முனைநீ ளிலைச்சூல முதற்படையார் தொண்டுபுரி
யம்முனைவ ரடியடைவே யரும்பெரும்பே றெனவடைவார்

(இ-ள்.) இந் நரசிங்கமுனையரைய நாயனார் வீற்றிருந்து அரசுபுரிந்து சென்று பகைவர்களது பல போரைச் செயித்துத் துன்மார்க்கங்கள் தூரத்தில் நீங்க நீண்ட இலைவடிவாகிய முதன்மை பொருந்திய முத்தலைச் சூலப்படையினையுடைய சிவபெருமானது திருத்தொண்டைச்செய்கின்ற மெய்யடியார்களுடையதிருவடிச்சார்பே தமக்குரிய அரிய பெரும்பேறென்று (அதனையேஉறுதியாக) அடைகின்றவர்.—எ-று. (உ)

சினவிடையார் கோயிறொறுந் திருச்செல்வம் பெருக்குநெறி
யனவிடையா ருயிர்துறக்க வருமெனினு மவைகாத்து
மனவிடையா மைத்தொடைய வணிமார்பர் வழித்தொண்டு
கனவிடையா கிலும்வழுவாக் கடனாற்றிச் செல்கின்றார்.

(இ-ள்.) கோபிக்கின்ற இடபவாகனத்தை யுடைய சிவபெருமானது திருக்கோயில்கடோறுஞ் சிறந்த பெருஞ்செல்வத்தை விருத்திசெய்யும் நன்னெறிகளில் தமது உயிரைத் துறக்க நேர்ந்தாலும் பின்வாங்காதவராய் அவைகளைக் காத்து, எலும்பு மணியி னிடையில் ஆமையோட்டைக் கோத்த மாலையையணிந்த திருமார்பினை யுடைய சிவபெருமானது வழித்தொண்டைச் சொப்பனத்திலும் வழுவாத முறைமைப்படி நடத்தி வருகின்றவர்.—எ-று. (ங)

ஆறணிந்த சடைமுடியார்க் காதிரைநா ளொறுமென்றும்
வேறுநிறை வழிபாடு விளங்கியபூ சனைமேவி
நீறணியுந் தொண்டரணைந் தார்க்கெல்லா நிகழ்பசும்பொ
னூறுகுறை யாமலளித் தின்னமுது நுகர்விப்பார்.

(இ-ள்.) கங்கைநதியை யணிந்த சடைமுடியை யுடைய சிவபெருமானுக்குத் திருவாதிரைநக்ஷத்திரந்தோறும் எப்பொழுதும் வேறாகிய விசேட வழிபாட்டோடு விளங்குகின்ற பெரும்பூசை செய்வித்து, தம்மிடத்தில் எழுந்தருளிவருந் திருவெண்ணீறணிந்த திருத்தொண்டர்க ளனைவருக்கும் விளங்குகின்ற நூறுபசும்பொன் குறையாமற் கொடுத்துத் திருவமுது செய்விப்பவர்.

ஆதிரைநாள் சிவபிரானுக் குரியநாளென்பதை ஆதிரையான் என்னும் வழக்கானு மறிக. (ச)

ஆனசெயன் முறைபுரிவா ரொருதிருவா திரைநாளின்
மேன்மைநெறித் தொண்டர்க்கு விளங்கியபொன் னிடும்பொழுதின்
மானநிலை யழிதன்மை வருங்காமக் குறிமலர்ந்த
வூனநிகழ் மேனியரா யொருவர்நீ றணிந்தணைந்தார்.

(இ-ள்.) இவ்வாறாகிய திருத்தொண்டை முறைமைப்படி செய்கின்ற நாயனார் ஒரு திருவாதிரை நக்ஷத்திரத்தில் மேன்மையாகிய நன்னெறியை யுடைய திருத்தொண்டர்களுக்கு விளங்குகின்ற பொன்னைத் தனித்தனிகொடுக்கும்பொழுது பெருமை நிலையையழியத்தக்க தன்மைவாய்ந்த காமக்குறி தோன்றுங் குற்றம்பொருந்திய தூர்த்தவேட முடையவராய் ஒருவர் திருநீறணிந்துகொண்டு வந்தனர்.—எ-று. (ரு)

மற்றவர்தம் வடிவிருந்த படிகண்டு மருங்குள்ளா
ருற்றவிகழ்ச் சியராகி யொதுங்குவார் தமைக்கண்டு
கொற்றவனா ரெதிர்சென்று கைகுவித்துக் கொடுபோந்தப்
பெற்றியினார் தமைமிகவுங் கொண்டாடிப் பேணுவார்.

(இ-ள்.) அவருடைய வடிவமானது இருந்ததன்மையை அருகிலுள்ள அடியார்கள் பார்த்து இகழ்கின்றவர்களாய் ஒதுங்குபவர்களை நரசிங்கமுனையரையநாயனார் பார்த்து அவரெதிரே சென்று கைகுவித்து வணங்கி அழைத்துக் கொண்டுபோய் அத்தூர்த்தவேட முடையவரை மிகவும் புகழ்ந்து விரும்புவாராயினார்.—எ-று. (சு)

சீலமில ரேயெனினுந் திருநீறு சேர்ந்தாரை
ஞாலமிகழ்ந் தருநரக நண்ணாம லெண்ணுவார்
பாலணைந்தார் தமக்களித்த படியிரட்டிப் பொன்கொடுத்து
மேலவரைத் தொழுதினிய மொழிவிளம்பி விடைகொடுத்தார்.

(இ-ள்.) நல்லொழுக்க மில்லாதவர்க ளெனினும் திருவெண்ணீறணிந்தவர்களை உலகத்தாரிகழ்ந்து நரகத்தில் விழாவண்ணம் எண்ணுகின்ற நாயனார் தம்மிடத்தடைந்த அடியார்களுக்குக் கொடுத்தற்கு இரட்டிப்பாகிய இருநூறு பொன்னைக் கொடுத்து மேன்மையாக அவரை வணங்கி இனியமொழி கூறிவிடைகொடுத் தனுப்பினார்.—எ-று.

"அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோயரா யாவுரித்துத் தின்றுழ லும் புலையரேனும், கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராகி லவர்கண்டீர் நாம் வணங்குங் கடவுளாரே' என்பதூஉம் இப் பெற்றிநோக்கி எழுந்த திருவாக் கென்க. (எ)

இவ்வகையே திருத்தொண்டி னருமைநெறி யெந்நாளுஞ்
செவ்வியவன் பினிலாற்றித் திருந்தியசிந் தையராகிப்
பைவளர்வா ளரவணிந்தார் பாதமலர் நிழல்சேர்ந்து
மெய்வகைய வழியன்பின் மீளாத நிலைபெற்றார்.

(இ-ள்.) இவ்வாறாகவே அருமையாகிய திருத்தொண்டி னெறியை எப்பொழுதும் சிறந்த பேரன்போடு நடத்தித் திருத்தமாகிய திருவுள்ளமுடையாராய்ப் படம் வளர்கின்ற பெரிய பாம்பை யாபரணமாக வணிந்த சிவபெருமானது திருவடித் தாமரை நிழலை யடைந்து மெய்ம்மையாகிய வழியன்பினால் நீங்காத முத்திநிலையை யடைந்தருளினார்.—எ-று. (அ)

விடநாக மணிந்தபிரான் மெய்த்தொண்டு விளைந்தநிலை
யுடனாகு நரசிங்க முனையரையர்பிரான் கழலேத்தித்
தடநாக மதஞ்சொரியத் தலஞ்சொரியுங் கலஞ்சேருங்
கடனாகை யதிபத்தர் கடனாகைக் கவினுரைப்பாம்.

(இ-ள்.) விடம் பொருந்திய சர்ப்பாபரணராகிய சிவபெருமானது மெய்த்திருத்தொண்டு விளைதற் கேதுவாகிய நன்னிலையினையுடைய நரசிங்கமுனையரையநாயனாரது திருவடிகளைத் துதித்து, பெரிய யானைகள் மதங்களைச் சொரியும்படி அவற்றை நிலத்தில் இறக்குகின்ற கப்பல்கள் அதிகப்பட்டிருக்கின்ற கடற்கரையிலுள்ள நாகபட்டணத்தில் வாழ்ந்திருந்த அதிபத்தநாயனாரது திருத்தொண்டின் சிறப்பைச் சொல்லுவோம்.—எ-று. (கூ)

**நரசிங்கமுனையரையநாயனார் புராணம் முற்றிற்று.**

திருச்சிற்றம்பலம்.

ஆக திருவிருத்தம் - உ0கூரு.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அதிபத்தநாயனார் புராணம்.

மன்னி நீடிய செங்கதி ரவன்வழி மரபிற்
றொன்மை யாமுதற் சோழர்தந் திருக்குலத் துரிமைப்
பொன்னி நாடெனுங் கற்பகப் பூங்கொடி மலர்போ
னன்மை சான்றது நாகபட் டணத்திரு நகரம்.

(இ-ள்.) நிலைபெற்றோங்கிய சிவந்த கிரணங்களையுடைய சூரியவமிசத்தில் பழைமையாகிய முதன்மை பொருந்திய சோழர்குலத்தாருக் குரிமையாகவுள்ள சோழநாடென்று கூறும் அழகிய கற்பகக்கொடியினிடத்தில் அலர்ந்த மலர்போல நன்மை சிறந்து விளங்குவது, நாகபட்டண மென்னும் சிறந்த நகரமாகும்.—எ-று.

பொன்னி - காவிரிக் கொருபெயர். அந் நதியாற் சூழப்பட்ட நாடாகலிற் பொன்னிநாடென்றார். (க)

தாம நித்திலக் கோவைகள் சரிந்திடச் சரிந்த
தேம லர்க்குழன் மாதர்பந் தாடுதெற் றிகள்சூழ்
காமர் பொற்சுடர் மாளிகைக் கருங்கடன் முகந்த
மாமு கிற்குல மலையென வேறுவ மருங்கு

(இ-ள்.) ஒழுங்காகக் கோக்கப்பட்ட முத்துமாலைகள் சரியும்படி சரிந்த தேன் பொருந்திய மலர்மாலையை யணிந்த கூந்தலையுடைய மாதர்கள் பந்தாடுகின்ற திண்ணைகள் சூழ்ந்த அழகிய பொன்னொளிவீசும் மாளிகைகளிற் கருங்கடலில் நீர்முகந் தெழுந்த கரிய மேகக்கூட்டங்கள் மலையென்று கருதி அம்மாளிகையின் பக்கங்களில் ஏறுவனவாம்.—எ-று.

மா-கருமை; இதனை 'மைத்தழையா நின்ற மாமிடற் றம்பலவன்' என்ற திருக்கோவையாருக் குரையானு முணர்க. (உ)

பெருமை யிற்செறி பேரொலி பிறங்கலிற் சிறந்து
திரும கட்குவாழ் சேர்விட மாதலில் யாவுந்
தருத லிற்கட றன்னினும் பெரிதெனத் திறைபோற்
கரிப ரித்தொகை மணிதுகில் சொரிவதாங் கலத்தால்.

(இ-ள்.) பெருமையோடு நெருங்கிய பேரொலி விளங்குதலாலும், சிறப்புற்றுத் திருமகளுக்குப் பெருவாழ்வு சேர்தற்குரிய வாசஸ்தானமா யிருப்பதனாலும், எந்நிலத்துப் பொருள்களையுந் தருதலினாலும், சமுத்திரமானது இந்நகரந் தன்னினுஞ் சிறந்ததென்று கருதித் திறை கொடுப்பதுபோல மரக்கலங்க

ளாகிய கரத்தினால் யானைக்கூட்டங்களையும், குதிரைக்கூட்டங்களையும், நவமணிகளையும், பட்டாடைகளையும் கொடுக்கின்றதாகும்.—எ-று. (௩)

நீடு தொல்புகழ் நிலம்பதி னெட்டினு நிறைந்த
பீடு தங்கிய பலபொருண் மாந்தர்கள் பெருகிக்
கோடி நீடனக் குடியுடன் குவலயங் காணு
மாடி மண்டலம் போல்வதவ் வணிகிளர் மூதூர்.

(இ-ள்.) பழைமையாகச் சிறந்த புகழையுடைய பதினெண் ணிலங்களிலும் நிறைந்திருக்கின்ற பெருமை மிக்க பல பொருள்களையுடைய மனிதர்கள் மிகுந்து கோடிகோடியாக நீண்ட பெருந்திரவியங்களை யுடைய குடிகளுடன் (நிறைந்திருத்தலால்) அவ் வழகுவிளங்குகின்ற பழைமையாகிய நாகபட்டணமானது, உலகமுழுதையும் ஒருங்கே காணத்தக்க கண்ணாடிமண்டலம்போல விளங்குவது.—எ-று.

நிலம் பதினெட்டென்பதனை:—"சிங்களஞ் சோனகஞ் சாவகஞ் சீனந் துளுக்குடகம் - கொங்கணங் கன்னடங் கொல்லந் தெலுங்கங் கலிங்கம் வங்கம் - கங்க மகதம் கடாரங் கவுடங் கடுங்குசலந் - தங்கும் புகழ்த்தமிழ் சூழ்பதி னேழ்புவி தாமிவையே' என்பதனா னறிக. (௪)

அந்நெ டுந்திரு நகர்மருங் கலைகடல் விளிம்பிற்
பன்னெ டுந்திரை நுரைதவழ் பாங்கரின் ஞாங்கர்
மன்னு தொன்மையின் வலைவளத் துணவினின் மலிந்த
தன்மை வாழ்குடி மிடைந்தது தடநுளைப் பாடி.

(இ-ள்.) அந்தப் பெரிய நாகபட்டண நகரத்தினருகிலுள்ள அலைகின்ற நீரையுடைய கடற்கரையிலே பல பெரிய அலைநுரைகள் தவழ்கின்ற பக்கவிடத்தில், நிலைபெற்ற பழைமையினால் வலைவீசிச் சம்பாதிக்கும் வளத்தின் உணவினால் சிறந்திருக்கின்றதன்மையோடு வாழ்கின்ற பரதவர் குடிகள் நெருங்கியுள்ளது பெரிய நுளைப்பாடி.—எ-று.

நுளைப்பாடி = கறையார் குப்பம். நுளைப்பாடி மிடைந்தது எனக் கூட்டுக. (௫)

புயல ளப்பன வெனவலைப் புறம்பணைக் குரம்பை
யயல ளப்பன மீன்விலைப் பசும்பொனி னடுக்கல்
வியல ளக்கரில் விடுந்திமில் வாழ்நர்கள் கொணர்ந்த
கயல ளப்பன பரத்தியர் கருநெடுங் கண்கள்.

(இ-ள்.) மேகமண்டலத்தை யளப்பனபோலுயர்ந்த வலைக்கூட்டங்களையுடைய புறவிடங்களிலுள்ள சிறுகுடிசைகளினயலில் மீன்விலைப்படுத்தும் பசும்பொன் அடுக்குகள் அளந்து கட்டப்படுவன; பெரிய கடலிற் செலுத்துகின்ற கப்பலோட்டிகள் கொண்டுவந்த கயல்மீன்களைப் பரதவமாதர்களது கரியநீண்டகண்கள் அளக்கின்றனவாம்.—எ-று. (௬)

உணங்கன் மீன்கவர் வுறுநசைக் குருகுட னணைந்த
கணங்க ளோதிமங் கருஞ்சினைப் புன்னையங் கான

லணங்கு நுண்ணிடை நுளைச்சிய ரணிநடைக் கழிந்து
மணங்கொள் கொம்பரின் மருங்குநின் றிழியல மருளும்.

(இ-ள்.) சருவாட்டு மீனைக் கவர்ந்துசெல்லும் விருப்புடன் நாரைக ளோடு சேர்ந்து வந்த கூட்டமாகிய அன்னப்பறவைகள் பெரிய கிளைகளை யுடைய புன்னைமரச்சோலையில், துன்பத்தைச் செய்கின்ற சிற்றிடையினை யுடைய பரத்தியர்களது அழகிய நடைக்குத் தோற்று, நறுமணங்கமழும் கிளை களினருகினின்றுங் கீழிறங்காமல் மயங்கியிருக்கும்.—எ-று.

கானல்=கடற்கரைச்சோலை. இழியல-என்பது முற்றெச்சம். (எ)

வலைநெ டுந்தொடர் வடம்புடை வலிப்பவ ரொலியும்
விலைப கர்ந்துமீன் குவைகொடுப் பவர்விளி யொலியுந்
தலைசி றந்தவெள் வளைசொரி பவர்தழங் கொலியு
மலைநெ டுங்கட லதிரொலிக் கெதிரொலி யனைய.

(இ-ள்.) வலைகளிற்கட்டிய நீண்ட தொடராகவுள்ள கயிற்றைப் பக்கங் களில் வலிப்பவர்களதுஓசையும், விலைபேசி மீன்குவைகளைக் கொடுப்பவர்கள் அழைக்குமோசையும், தலைமையாகச் சிறந்த வெள்ளிய சங்குகளைக் (கரையில்) கொட்டுகின்றவர்களது பேரோசையும் அலைகளையுடைய பெரிய கடலின் அதி ருமோசைக்கு எதிரோசையை யொத்திருந்தன.—எ-று. (அ)

அனைய தாகிய வந்நுளைப் பாடியி லமர்ந்து
மனைவ ளம்பொலி நுளையர்தங் குலத்தினில் வந்தார்
புனையி ளம்பிறை முடியவ ரடித்தொண்டு புரியும்
வினைவி ளங்கிய வதிபத்த ரெனநிகழ் மேலோர்.

(இ-ள்.) அத்தன்மையாகிய நுளைப்பாடியிலே பொருந்தி இல்வாழ்க்கை நிறைந்த பரதவர்குலத்திலே அழகிய இளம்பிறையையணிந்த திருமுடியையு டையசிவபெருமானது திருவடித்தொண்டுசெய்யும் நற்செய்கை விளங்கியஅதி பத்தநாயனாரென்று கூறும் பெரியோர் அவதரித்தனர்.—எ-று. (௯)

ஆங்க வன்பர்தா நுளையர்தந் தலைவரா யவர்க
ளோங்கு தெண்டிரைக் கடலிடைப் பலபட வியக்கிப்
பாங்கு சூழ்வலை வளைத்துமீன் படுத்துமுன் குவிக்கு
மோங்கு பல்குவை யுலப்பில வுடையரா யுயர்வார்.

(இ-ள்.) அவ்வதிபத்தநாயனார் பரதவர்களுக்குத் தலைவராய், அப்பரத வர்கள் சப்திக்கின்ற தெள்ளிய அலைகளையுடைய கடலில் பல படவுகளைச் செ லுத்திப் பக்கங்களிற் சூழ்ந்த வலைகளை வளைத்து வீசி மீன்களைப் பிடித்து முன் னே குவிக்கின்ற உயர்ந்த கெடாத பல குவைகளையுடையவராய்ச் சிறந்திருப் பார்.—எ-று.

ஆங்கு - அசைநிலை. (௧௰)

முட்டின் மீன்கொலைத் தொழில்வளத் தவர்வலை முகந்து
பட்ட மீன்களி லொருதலை மீன்படு தோறு
நட்ட மாடிய நம்பருக் கெனநளிர் முந்நீர்
விட்டு வந்தனர் விடாதவன் புடனென்றும் விருப்பால்.

(இ-ள்.) குறைவில்லாத மீன்களைக் கொலைத்தொழில்செய்யும் பரதவர்கள் வலை வீசி அகப்பட்ட மீன்களில் ஒரு தலைமையாகிய மீன் அகப்படுந்தோறும், (இது கனகசபையில்) திருநடனஞ் செய்தருளுஞ் சிவபெருமானுக்கென்று, நீங்காத பேரன்புடன் என்றும் ஆசையோடு குளிர்ந்த சமுத்திரத்தில் விட்டுவந்தனர்.—எ-று.

படுதொறுமென வினைத்தொகை பெயரைக்கொண்டு முடிவதேனும், இடைச்சொல் ஒருபுடைபெயரோடொப்புடைமையாற் பெயரைக்கொண்டது. "நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தோறும்" என்புழிப்போல. (௧௧)

மாகு சேர்வலை நாடொறு மொன்றின் மீனொன் றுவரினு
மேக நாயகர் தங்கழற் கெனவிடு மியல்பா
லாகு நாள்களி லனேகநா ளடுத்தொரு மீனே
மேக நீர்படி வேலையிற் படவிட்டு வந்தார்.

(இ-ள்.) கடலில் வீசுகின்ற வலையில் ஒரு நாளில் ஒரு மீனே அகப்படினும் இது சிவபெருமான் திருவடிகளுக்கே பிரீதியென்று விட்டுவருகின்ற இயல்பினால், இவ்வாறு நிகழும் நாள்களில் அடுத்தடுத்து அநேக நாள்கள் ஒவ்வொருமீனே மழைநீர் படிகின்ற கடலில் அகப்பட, அதனை விட்டுவந்தனர்.—எ-று.

மேகங் கடலிற் படிதலைக் "கார்கோண் முகந்த கமஞ்சூன் மாமழை" என்பதனானு மறிக. (௧௨)

மீன்வி லைப்பெரு குணவினின் மிகுபெருஞ் செல்வந்
தான்ம றுத்தலி னுணவின்றி யருங்கிளை சாம்பும்
பான்மை பற்றியும் வருந்தலர் பட்டமீ னொன்று
மான்ம றிக்கரத் தவர்கழற் கெனவிட்டு மகிழ்ந்தார்.

(இ-ள்.) மீன் விலைப்படுத்திலினாற் பெருகுகின்ற உணவுகாரணமாக அதிகப்படுகின்ற பெருஞ்செல்வமானது குறைந்தமையால் அரிய சுற்றத்தார்கள் உணவின்றி வருந்துகின்ற தன்மையைக் கருதியும் வருந்தாமல், வலையிற்பட்ட ஒருமீனை மான்கன்றையேந்திய திருக்கரத்தையுடைய சிவபெருமானது திருவடிகளுக்கே யென்று விட்டு மகிழ்ந்திருந்தார்.—எ-று. (௧௩)

சால நாள்களிப் படிவரத் தாமுண வயர்த்துக்
கோல மேனியுந் தளரவுந் தந்தொழில் குறையாச்
சீல மேதலை நின்றவர் தந்திறந் தெரிந்தே
யால முண்டவர் தொண்டரன் பெனுமமு துண்பார்.

(இ-ள்.) இவ்வாறு அநேகநாள்கள்வர, தாமும் உணவு ஒழிந்து அழகிய திருமேனி தளரவும் தமது திருத்தொண்டிற் சிறிதுங் குறையாத நல்லொழுக்கத்திலேயே முதன்மையாகநின்ற அந்நாயனாரது அன்பின்றிறத்தை யுணர்ந்து, ஆலகாலவிஷத்தை யுண்டருளிய சிவபெருமான் அவ்வதிபத்தநாயனாரது அன்பென்னும் அமுதை யுண்பாராயினர்.—எ-று. (௧௪)

ஆன நாளொன்றி லவ்வொரு மீனுமங் கொழித்துத்
தூநி றப்பசுங் கனகநற் சுடர்நவ மணியான்

மீனு றுப்புற வமைத்துல கடங்கலும் விலையாம்
பான்மை யற்புதப் படியதொன் றிடுவலைப் படுத்தார்.

(இ-ள்.) இவ்வாறு நிகழுநாள்களில் வேறொருநாள் (பரதவர்கள்) அவ்வொருமீனையும் அவ்வாறேவிட்டு, தூய்மையாகிய நிறத்தையுடைய பசும்பொன்னினாலும், நல்லொளிவீசுகின்ற நவரத்தினங்களினாலும் மீனின் உறுப்புகள் பொருந்த வமைத்து உலகமடங்கலும் விலைப்படுத்தத்தக்க தன்மையையுடைய அற்புதமாகிய ஒரு மீனை வீசியவலையிற் பிடித்தார்கள்.—எ-று. (௧௫)

வாங்கு நீள்வலை யலைகடற் றிரையில்வந் தேற
வோங்கு செஞ்சுட ருதித்தென வுலகெலாம் வியப்பத்
தாங்கு பேரொளி தழைத்திடக் கண்டலு மெடுத்துப்
பாங்கு நின்றவர் மீனொன்று படுத்தன மென்றார்.

(இ-ள்.) வளைந்த பெரிய வலையானது அலைகின்ற கடலலையினாற் கரையில் ஏறியபோது உயர்ந்த செவ்விய கிரணங்களையுடைய சூரியனுதித்தாற் போல உலகமெல்லாம் அதிசயிக்கும்படி நிலைபெற்ற பேரொளிவீசக்காணவும், அருகிலுள்ள பரதவர்கள் அதனையெடுத்து ஒரு மீன் பிடித்தோமென்று சொன்னார்கள்.—எ-று. (௧௬)

என்று மற்றுளோ ரியம்பவு மேறுசீர்த் தொண்டர்
பொன்றி ரட்சுடர் நவமணி பொலிந்தமீ னுறுப்பா
லொன்று மற்றிது வென்னையா ளுடையவர்க் காகுஞ்
சென்று பொற்கழல் சேர்கெனத் திரையொடுந் திரித்தார்.

(இ-ள்.) இவ்வாறு பரதவர்கள்சொல்லவும், உயர்ந்த சிறப்பினையுடைய அதிபத்தநாயனார் பொற்றிரள்களும் விளங்குகின்ற நவரத்தினங்களும் உறுப்பினல் விளங்கப்பெற்ற இவ்வொருமீன் என்னை அடிமையாகவுடைய சிவபெருமானுக்கு ஆகும் என்று கருதி, நீ சென்று எம்பெருமானது அழகிய திருவடியை யடைகவென்று அலைநீரோடு கடலில் விட்டார்.—எ-று. (௧௭)

அகில லோகமும் பொருண்முதற் றுமெனு மளவிற்
புகலு மப்பெரும் பற்றினைப் புரையற வெறிந்த
விகலில் மெய்த்திருத் தொண்டர்முன் னிறைவர்தாம் விடைமேன்
முகில்வி சும்பிடை யணைந்தனர் பொழிந்தனர் முகைப்பூ.

(இ-ள்.) சர்வலோகங்களுக்கும் பொருளே முதன்மையானதென்று கூறும் அப்பெரும்பற்றைக் குற்றநீங்க அறவே யொழித்த பகைமையில்லாத மெய்ம்மையாகிய அதிபத்தநாயனாருக்கு முன்னே சிவபெருமான் இடபாரூடராய் மேகங்கள்சூழும் ஆகாயத்திலெழுந்தருளினர்; (தேவர்கள்) கற்பகமலர்மழை பொழிந்தார்கள்.—எ-று.

பொருளானன்றி எச்செயலு நடவாமையின் அகிலலோகமும் பொருண்முதற்றுமென்றார். இதனை "முநிவருமனைவரு முன்னுவபொன்னான் முடியும்" என்பதனானறிக. (௧௮)

பஞ்ச நாதமு மெழுந்தன வதிபத்தர் பணிந்தே
யஞ்ச லிக்கரஞ் சிரமிசை யணைத்துநின் றவரை

நஞ்சு வாண்மணி மிடற்றவர் சிவலோக நண்ணி
யஞ்சி றப்புடை யடியர்பாங் குறத்தலை யளித்தார்.

(இ-ள்.) ஐவகை நாதங்களும் ஆகாயத்திலொலித்தன; அதிபத்தநாயனார் வணங்கி அஞ்சலியாகக் குவித்த திருக்கரங்களைச்சிரத்தின்மேல் வைத்துத் துதித்துநின்ற அந்நாயனாரை விஷம்பொருந்திய ஒளிவிளங்குங் கரிய கண்டத்தையுடைய சிவபெருமான் தமது சிவலோகத்தையடைந்து அழகிய சிறப்பினையுடைய அடியார்களிடத்திலிருக்கும்படி முதன்மையாகிய பேறளித்தருளினார்.

பஞ்சநாதமாவன.—தோற்கருவி - துளைக்கருவி - நரம்புக்கருவி-கஞ்சக் கருவி-மிடற்றுக்கருவி என்பன; இவை அவ்வவற்றின் நாதபேதத்தால் ஐந்து வகைப்படுதல் காண்க. (கக)

தம்மறம் புரிமரபினிற் றரும்பெருந் தொண்டு
மெய்ம்மையாற் பெரியதிபத்தர் விளங்குதாள் வணங்கி
மும்மையா முலகங்கண் முறைமையிற் போற்றுஞ்
செம்மைநீதியார் கலிக்கம்பர் திருத்தொண்டு பகர்வாம்.

(இ-ள்.) தமது குலகருமத்தைச் செய்கின்ற பரதவர்மரபினில் அவதரித்து, தகுந்த பெரிய திருத்தொண்டின் மெய்ம்மையை விரும்பிச் செய்தருளிய அதிபத்தநாயனாரது பிரகாசிக்கின்ற திருவடிகளை வணங்கி, (சுவர்க்க மத்திய பாதலமென்னும்) மூன்றுலகத்தாரும் முறைமைப்படி துதிக்கப்பெற்ற செம்மையாகிய நீதியையுடைய கலிக்கம்பநாயனாரது திருத்தொண்டைச் சொல்லத் தொடங்குவோம்.—எ-று.

'தம்மறம்புரிமரபு' என்பதற்கு, (மீன்முதலியவற்றைப் பிடித்துக் கொலைசெய்தலாகிய) தமது கொடுந்தொழிலைச் செய்யும் பரதவர்குலமரபு, எனப் பொருள்கூறினுமாம். (உ௦)

அதிபத்தநாயனார் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம் - உகசரு.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# கலிக்கம்ப நாயனார் புராணம்.

உரிமை யொழுக்கந் தலைநின்ற வுயர்தொன் மரபி னீடுமனைத்
தரும நெறியால் வாழ்குடிக டழைத்து வளருந் தன்மையதாய்
வருமஞ் சுறையு மலர்ச்சோலை மருங்கு சூழ்ந்த வளம்புறவிற்
பெருமை யுலகு பெறவிளங்கு மேல்பாற் பெண்ணா கடமூதூர்.

(இ-ள்.) தமக்குரிமையாகிய குலவொழுக்கத்தில் முதன்மையாக நின்ற உயர்ந்த பழைமையாகிய நன்மரபிலே சிறந்த இல்லறமார்க்கத்தில் வாழ்கின்ற குடிகள் செழித்து விருத்தியடையுந் தன்மையை யுடையதாய், வருகின்ற மேகங்கள் தவழும் மலர்களையுடைய சோலைகள் பக்கங்களில் சூழ்ந்த வளவிய முல்லைநிலத்திலே உலகமானது மேன்மைபெறும்படி விளங்குகின்ற மேற்றிசையிலே திருப்பெண்ணாகடமென்னும் பழைமை பொருந்திய நகரமானது விளங்குகின்றது.—எ-று.

இத்திருவிருத்தத்திற்குப் பயனிலை வருவித்துரைக்கப்பட்டது. (க)

மற்றப் பதியி னிடைவாழும் வணிகர் குலத்து வந்துதித்தார்
கற்றைச் சடையார் கழற்காத லுடனே வளர்ந்த கருத்துடையா
ரற்றைக் கென்று தூங்கானை மாடத் தமர்ந்தா ரடித்தொண்டு
பற்றிப் பணிசெய் கலிக்கம்ப ரென்பார் மற்றோர் பற்றில்லார்.

(இ-ள்.) அப்பெண்ணாகடமென்னுந் திருப்பதியிலே வாழ்கின்ற வைசியர் குலத்தில் அவதரித்தவர்; கூட்டமாகிய சடைமுடியையுடைய சிவபெருமானது திருவடிகளில் அன்போடு வளர்ந்த கருத்தினையுடையவர்; (தமக்கறிவு விளைந்த) நாள் தொடங்கி எந்நாளும் திருத்தூங்கானை மாடமென்னுந் திருக்கோயிலில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானது திருவடித்தொண்டையே (உறுதியாகப்) பிடித்துத்திருப்பணி செய்யுங் கலிக்கம்ப நாயனாரென்னுந் திருநாமமுடையவர்; வேறொருபற்றுமில்லாதவர்.—எ-று.

'அற்றைக்கன்று' எனப்பாடமாயின், அன்றன்று [தினந்தோறும்] எனப்பொருள்கொள்க. (உ)

ஆன வன்பர் தாமென்று மரனா ரன்பர்க் கமுதுசெய
மேன்மை விளங்கு போனகமும் விரும்பு கறிநெய் தயிர்தீம்பா
றேனி னினிய கனிகட்டி திருந்த வமுது செய்வித்தே
யேனை நிதியம் வேண்டுவன வெல்லா மின்ப முறவளித்தார்.

(இ-ள்.) இவ்வாறாகிய கலிக்கம்பநாயனார் நாடோறும் சிவனடியார்களுக்குத்திருவமுது செய்யும்பொருட்டுச் சிறப்புமிக்க அன்னமும், விரும்புகின்ற பதார்த்தவகையும், நெய்யும், தயிரும், மதுரம்பொருந்தியபாலும், தேனுமினிமையாகிய கனிவகைகளும், சர்க்கரைக்கட்டியுமிவை முதலியவைகளைத் திருத்தமாக அமுதுசெய்வித்து மற்றும் வேண்டுவனவாகிய பொருளனைத்தும் இன்பம் பொருந்தக்கொடுத்து வந்தார்.—எ-று. (௩)

அன்ன வகையாற் றிருத்தொண்டு புரியு நாளி லங்கொருநாள்
மன்னு மனையி லமுதுசெய வந்த தொண்டர் தமையெல்லாந்
தொன்மை முறைமை யமுதுசெயத் தொடங்கு விப்பா ரவர்தம்மை
முன்ன ரழைத்துத் திருவடிக ளெல்லாம் விளக்க முயல்கின்றார்.

(இ-ள்.) அவ்வாறாகிய முறைமையினால் திருத்தொண்டு செய்துவரும் நாளில் ஒருநாள் நிலைபெற்ற தமது திருமாளிகையில் திருவமுது செய்யவந்த அடியார்களையெல்லாம், பழையமுறைமைப்படி திருவமுது செய்விப்பவராய், அவ்வடியார்களை முன்னேயழைத்து அவர்களுடைய திருவடிகளை விளக்கும்பொருட்டு முயல்கின்றவராயினார்.—எ-று. (௪)

திருந்து மனையார் மனையெல்லாந் திகழ விளக்கிப் போனகமும்
பொருந்து சுவையிற் கறியமுதும் புனிதத் தண்ணீ ருடன்மற்று
மருந்து மியல்பி னுள்ளனவு மமைத்துக் கரக நீரளிக்க
விரும்பு கணவர் பெருந்தவர்தா ளெல்லாம் விளக்கும் பொழுதின்கண்.

(இ-ள்.) திருத்தமாகிய (கற்பினையுடைய) மனைவியார் திருமாளிகை முழுதும் விளங்கத் திருவலக்கிட்டு மெழுகி, அன்னமும், மிக்கசுவையினையுடைய கறியமுதும், தூய்மையாகிய தண்ணீருடன் இன்னும் உண்ணத்தக்க பொருள்களும் அமைத்துக் கரகநீர் வார்க்க, விரும்புகின்ற நாயகராகிய நாயனார் மிக்க தவத்தினையுடைய அடியார்களது திருவடிகளை விளக்கும் பொழுது.—எ-று.

இதுமுதல் நான்கு பாடலுங் குளகம். (௫)

முன்பு தமக்குத் தொழில்செய்யுந் தமரா யேவல் முனிந்துபோ
யென்பு மரவு மணிந்தபிரா னடியா ராகி யங்கெய்து
மன்ப ருடனே திருவேடந் தாங்கி யணைந்தா ரொருவர்தாம்
பின்பு வந்து தோன்றவவர் பாதம் விளக்கும் பெருந்தகையார்.

(இ-ள்.) முன்பு தமக்குப் பணிவிடை செய்பவராயிருந்து, ஏவற்றொழிலினின்றும் விரோதித்துச் சென்று, எலும்பையும் பாம்பையும் ஆபரணமாகவணிந்த சிவபெருமானடியவராகி அங்குவருகின்ற அடியார்களுடனே திருவேடங்கொண்டுவந்த ஒரு அடியவர் பின்னேவர, அவரது திருவடிகளை விளக்குங்கலிக்கம்பநாயனார்.—எ-று. (௬)

கையா லவர்த மடிபிடிக்கக் காதன் மனையார் முன்பேவல்
செய்யா தகன்ற தமர்போலு மென்று தேரும் பொழுதுமலர்
மொய்யார் வாசக் கரகநீர் வார்க்க முட்ட முதற்றொண்டர்
மையார் கூந்தன் மனையாரைப் பார்த்து மனத்துட் கருதுவார்.

(இ-ள்.) தமது திருக்கரத்தினால் அவருடைய பாதங்களைப் பிடிக்க, ஆசைபொருந்திய மனைவியார், இவர் முன்பு (நம்மிடத்தில்) பணிவிடைசெய்யாமல் நீங்கிப்போனவர்போலுமென்று சிந்திக்கும்பொழுது, அதனால், மலர்கள் நெருங்கிய நறுமணங்கமழுங் கரகநீரைவார்க்கத் தடைபட, முதன்மைபொருந்திய கலிக்கம்பநாயனார் கருநிறம் விளங்குங் கூந்தலையுடைய மனைவியாரைப் பார்த்துத் தமதுள்ளத்திற் சிந்திப்பாராயினார்.—எ-று. (எ)

வெறித்த கொன்றை முடியார்த மடியா ரவர்முன் மேவுநிலை
குறித்து வெள்கி நீர்வாரா தொழிந்தா ளென்று மனங்கொண்டு
மறித்து நோக்கார் வடிவாளை வாங்கிக் கரகம் வாங்கிக்கை
தறித்துக் கரக நீரெடுத்துத் தாமே யவர்தாள் விளக்கினார்.

(இ-ள்.) நறுமணங்கமழுங் கொன்றைமலர் மாலையையணிந்த திருமுடியையுடைய சிவபெருமானடியவராகிய இவர் முன்பு இருந்த நிலைமையைக் குறித்து வெள்கிநீர் வார்க்காமல் ஒழிந்தாள் என்று மனத்திற்கருதி, அவ்வம்மையாரைத்திரும்பிப்பாராமல், வடித்தவாளையெடுத்து அம்மனைவியார் கையிற்கொண்டகரகத்தை வாங்கிக்கீழேவைத்துவிட்டு அக்கையைத்தறித்து அக்கரகநீரையெடுத்துத்தாமே அவருடைய பாதங்களை விளக்கினார்.—எ-று. (அ)

விளக்கி யமுது செய்வதற்கு வேண்டுவனதா மேசெய்து
துளக்கில் சிந்தை யுடன்றொண்டர் தம்மை யமுது செய்வித்தா
ரளப்பில் பெருமை யவர்பின்னு மடுத்த தொண்டின் வழிநின்று
களத்தி னஞ்ச மணிந்தவர்தா ணிழற்கீ ழடியா ருடன்கலந்தார்.

(இ-ள்.) அவ்வாறுவிளக்கி அடியவர்கள் திருவமுதுசெய்வதற்கு வேண்டுவனவெல்லாந் தாமேசெய்து கலங்காத சிந்தையுடன் சிவனடியார்களைத்திருவமுதுசெய்வித்தார், அளவற்ற பெருமையினையுடைய அக்கலிக்கம்பநாயனார் பின்னும்பொருந்திய திருத்தொண்டின் வழியேநின்று, கண்டத்தில் விடத்தையணிந்த சிவபெருமானுடைய திருவடிநிழலில் அடியார்களுடன் அடைந்தருளினார்.—எ-று. (கூ)

ஓத மலிநீர் விடமுண்டா ரடியார் வேட மென்றுணரா
மாத ரார்கை தடிந்தகலிக் கம்பர் மலர்ச்சே வடிவணங்கிப்
பூத நாதர் திருத்தொண்டு புரிந்து புவனங் களிற்பொலிந்த
காத லன்பர் கலிநீதி யார்தம் பெருமை கட்டுரைப்பாம்.

(இ-ள்.) குளிர்ந்த கடலிற்றோன்றிய விடத்தை யுண்டருளிய சிவபெருமானது அடியார்வேடமென்று உணராத மனைவியாருடைய கையைவெட்டி, கலிக்கம்பநாயனாரது தாமரைமலர்போன்ற சிவந்த திருவடிகளை வணங்கிப் பூதகணநாதராகிய சிவபெருமானுடைய திருத்தொண்டைச் செய்து உலகங்களிற்சிறந்து விளங்கிய விருப்பமிக்க மெய்யன்பராகிய கலிநீதிநாயனாரது திருத்தொண்டின்மேன்மையைச் சொல்லுவோம்.—எ-று. (கம)

கலிக்கம்பநாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆக திருவிருத்தம் - உகஉங.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# கலிநீதிநாயனார் புராணம்.

பேருலகி லோங்குபுகழ்ப் பெருந்தொண்டை நன்னாட்டு
நீருலவுஞ் சடைக்கற்றை நிருத்தர்திருப் பதியாகுங்
காருலவு மலர்ச்சோலைக் கன்னிமதில் புடைசூழ்ந்து
தேருலவு நெடுவீதி சிறந்ததிரு வொற்றியூர்.

(இ-ள்.) பெரிய நிலவுலகத்தில் உயர்ந்த புகழையுடைய சிறந்த தொண்டைவளநாட்டிலே, கங்கைநதிதவழுஞ் சடைக்கற்றையையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருப்பதியாகவுள்ளது, மேகங்கள் தவழும் மலர்ச்சோலைகளும் அழியாத மதில்களும் பக்கங்களிற் சூழப்பெற்றுத் தேரோடுந் திருவீதிகளையுடைய சிறந்த திருவொற்றியூராகும்.—எ-று. (௧)

பண்ணுதிருப் பதிகவிசைப் பாட்டோவா மண்டபங்க
ளன்னநடை மடவார்க ளாட்டோவா வணியரங்கு
பண்முறைதூ ரியமுழக்கும் விழவோவா பயில்வீதி
செந்நெலடி சிற்பிறங்க லூணோவா திருமடங்கள்.

(இ-ள்.) மண்டபங்களில் புகழப்பட்ட திருப்பதிகங்களின் சப்தசுரங்களோடுகூடிய திருப்பாடல்கள் நீங்காதிருக்கும்; அழகிய நடனசாலைகளில் அன்னம்போலும் நடையினையுடைய மாதர்கள் செய்யும் ஆடல்கள் நீங்காதிருக்கும்; சனசஞ்சாரமாகிய வீதிகளிற் பலவகையாகவுள்ள வாத்தியங்களை முழக்குகின்ற திருவிழாக்கள் நீங்காதிருக்கும்; அன்னசத்திரங்களில் செந்நெலரிசிச் சோற்றுமலையாகிய உணவுகள் நீங்காதிருக்கும்.—எ-று. (௨)

கெழுமலர்மா தவிபுன்னை கிளைஞாழ றலையவிழுங்
கொழுமுகைய சண்பகங்கள் குளிர்பொருந்தி வளர்கைதை
முழுமணமே முந்நீருங் கமழமலர் முறுகுயிர்க்குஞ்
செழுநிலவின் றுகளனைய மணற்பரப்புந் திருப்பரப்பு.

(இ-ள்.) அரும்புகின்ற மலர்களையுடைய குருக்கத்திக்கொடிகளும், புன்னைமரங்களும், கிளைகளையுடைய குங்குமமரங்களும், முறுக்கவிழுஞ் செழிய அரும்புகளையுடைய சண்பகமரங்களும், குளிர்ச்சி பொருந்திய செருந்திமரங்களும், வளர்கின்ற தாழைகளும், சமுத்திரமும் முழுமணங் கமழும்படி தேனைச் சிந்தும் கடற்கரைப் பரப்பானது செழிய நிலாத்துகள்போன்ற மணலைப் பரப்பாநிற்கும்.—எ-று. (௩)

எயிலணையு முகின்முழக்கு மெறிதிரைவே லையின்முழக்கும்
பயிறருபல் லியமுழக்கு முறைதெரியாப் பதியதனுள்
வெயிலணிபன் மணிமுதலா விழுப்பொருளா வனவிளக்குந்
தயிலவினைத் தொழின்மரபிற் சக்கரப்பா டித்தெருவு.

(இ-ள்.) மதிலையணைகின்ற மேகத்தின் முழக்கமும், அலைவீசுகின்ற சமுத்திரத்தின் முழக்கமும், வாசிக்கின்ற பல வாத்தியங்களின் முழக்கமும், வேறுபாடு தெரியாத அத்திருவொற்றியூர்த் திருப்பதியில் ஒளிவீசுகின்ற பல இரத்தின முதலாகிய சிறந்த பொருள்களை விளக்குகின்ற தயிலவாணிபத் தொழிலையுடைய செக்கார் மரபினர் வசிக்கின்ற சக்கரப்பாடித்தெருவாகும்.-எ-று.

அக்குலத்தின் செய்தவத்தா லவனிமிசை யவதரித்தார்
மிக்கபெருஞ் செலவத்து மீக்கூர விளங்கினார்
தக்கபுகழ்க் கலியனா ரெனுநாமத் தலைநின்றார்
முக்கணிறை வர்க்குரிமைத் திருத்தொண்டி னெறிமுயல்வார்.

(இ-ள்.) அச்செக்கார்குலஞ்செய்த அரியதவத்தினால் இந்நிலவுலகத்தில் அவதரித்தவர்; மிக்க பெருஞ்செல்வத்தினால் சிறப்புமிக விளங்கினவர்; தகுந்த புகழையுடைய கலிநீதிநாயனாரென்னுந் திருநாமத்தைப் பெற்றவர்; (சோம சூரியாக்கினியென்னும்) மூன்றுகண்களையுமுடைய சிவபெருமானுக்குச் செய்யும் உரிமைத்திருத்தொண்டின் வழியேமுயன்று செய்கின்றவர்.—எ-று.

சோம சூரி யாக்கினி யென்னும மூன்று கண்ணுடையா ரென்பதனை, "இமையாத முக்கண் - மூவரிற் பெற்றவர்" என்பதனானு மறிக. (ரு)

எல்லையில்பல் கோடிதனத் திறைவரா யிப்படித்தாஞ்
செல்வநெறிப் பயனறிந்து திருவொற்றி யூரமர்ந்த
கொல்லைமழ விடையாரதங் கோயிலினுள் ளும்புறம்பு
மல்லுநெடும் பகலுமிடுந் திருவிளக்கி னணிவிளைத்தார்.

(இ-ள்.) அளவற்ற பலகோடி திரவியங்களுக்குத் தலைவராய் இத்தன்மைத்தாகிய பெருஞ்செல்வத்தின் நன்னெறிப்பயனை யுணர்ந்து திருவொற்றியூரில் வீற்றிருந்தருளுங் கொலைத்தொழிலையுடைய இளைய இடபவாகனராகிய சிவபெருமானது திருக்கோயிலின் உள்ளும்புறம்பும் இரவிலும் பகலிலும், ஏற்றுகின்ற திருவிளக்கினது சிறந்த திருத்தொண்டைச் செய்துவந்தனர்.—எ-று.

கொல்லை என்பதில் ஐகாரம் சாரியை. அன்றி, கொல்லையிலிருக்கும்மழ விடை, என, விடையின்சுபாவ விலக்கணநோக்கிக் கூறுவது மொன்று. (சு)

எண்ணிறிரு விளக்குநெடு நாளெல்லா மெரித்துவரப்
புண்ணியமெய்த் தொண்டர்செயல் புலப்படுப்பா ரருளாலே
யுண்ணிறையும் பெருஞ்செல்வ முயர்த்தும்வினைச் செயலோவி
மண்ணிலவ ரிருவினைபோன் மாண்டதுமாட் சிமைத்தாக.

(இ-ள்.) அளவற்ற திருவிளக்குகளை அநேகநாள்களெரித்துவர, புண்ணியத்தையுடைய மெய்யன்பராகிய கலிநீதிநாயனாரது திருத்தொண்டின் செயலை வெளிப்படுத்துபவராகிய சிவபெருமானது திருவருளினால், உள்ளே நிறையத்தக்க பெருஞ்செல்வத்தை உயர்த்துகின்ற வினைச்செயலொழிந்து, உலகத்தில் அந்நாயனாரது இருவினையொழிவுபோல மாட்சிமையோடொழிந்தது.-எ-று

திருமலிசெல் வத்துழனி தேய்ந்தழிந்த பின்னையுந்தம்
பெருமைநிலைத் திருப்பணியிற் பேராத பேராளர்
வருமரபி லுள்ளோர்பா லெண்ணெய்மா றிக்கொணர்ந்து
தருமியல்பிற் கூலியினாற் றமதுதிருப் பணிசெய்வார்.

(இ-ள்.) சிறப்புமிக்க செல்வமென்னு மோசையானது குறைந்தழிந்த பின்னும், தமதுமேன்மையாகிய நிலையினையுடைய திருத்தொண்டினின்றுந் தவறாத கலிநீதிநாயனார் தமது மரபிலுள்ளோரிடத்தில் எண்ணெய்வாங்கி விற்றுக் கொண்டுவந்து கொடுத்து, அவர்கள் கொடுக்கின்ற கூலியினாலே தமது திருப பணியைச் செய்வாராயினார்.—எ-று. (அ)

வளமுடையார் பாலெண்ணெய் கொடுபோய்மா றிக்கூலிக்
கொளமுயலுஞ் செய்கையுமற் றவர்கொடா மையின்மாறத்
தளருமன முடையவர்தாஞ் சக்கரவெந் திரமபுரியுங்
களனில்வரும் பணிசெய்து பெறுங்கூலி காதலித்தார்.

(இ-ள்.) செல்வவான்களிடத்தில் எண்ணெய் வாங்கிக்கொண்டுபோ விலைகூறி விற்றுக் கூலிகொள்ள முயலுஞ் செய்கையும் அவர்கள் கொடாமெ ழிய, அதனால் தளர்ந்த மனத்தினையுடைய அந்நாயனார் எண்ணெய்ச்செக்காட் மிடத்தில் கிடைத்த தொழில்செய்து பெறுகின்றகூலியைவிரும்பினார்.—எ-

செக்குநிறை யெள்ளாட்டிப் பதமறிந்து திலதயிலம்
பக்கமெழ மிகவுழந்தும் பாண்டில்வரு மெருதுய்த்துந்
தக்கதொழிற் பெறுங்கூலி தாங்கொண்டு தாழாமை
மிக்கதிரு விளக்கிட்டார் விழுத்தொண்டு விளக்கிட்டார்.

(இ-ள்.) சிறந்த திருத்தொண்டை விளக்கினவராகிய கலிநீதிநாயன செக்குநிறைந்த எள்ளையாட்டிப பக்குவமறிந்து எண்ணெய் பக்கத்திலெ அதனால் மிக வருந்தியும், அச்செக்கில் கட்டிவருகின்ற எருதை யோட்டியு தக்க தொழிலினால் பெறுகின்ற கூலியைக்கொண்டு தவறாமல் சிறந்த திருவி க்கிட்டுவந்தார்.—எ-று. (க0

அப்பணியால் வரும்பேறு மவ்வினைஞர் பலருளரா
யெப்பரிசுங் கிடையாத வகைமுட்ட விடருழந்தே
பொப்பின்மனை விற்றெரிக்கு முறுபொருளு மாண்டதற்பின்
செப்பருஞ்சீர் மனையாரை விற்பதற்குத் தேடுவார்.

(இ-ள்.) அத்தொழிலால் வருகின்ற பொருளும் அத்தொழில் செய்வோ கள் பலராகப் பெருகினமையால் எவ்வகையிலும் பொருள் கிடையாத வகை முட்டுப்பாடுண்டாக, அதனால் துன்புற்று, ஒப்பற்ற வீட்டைவிற்றுத்திருவிளக் கெரிக்கின்ற அப்பொருளும் அழிந்த பின்பு, சொல்லுதற்கரிய சிறந்த கற்பினை யுடைய மனைவியாரை விற்பதற்குத் தேடுவாராயினார்.—எ-று. (கக)

மனமகிழ்ந்து மனைவியார் தமைக்கொண்டு வளநகரிற்
றனமளிப்பார் தமையெங்குங் கிடையாமற் றளர்வெய்திச்
சினவிடையார் திருக்கோயிற் றிருவிளக்குப் பணிமுட்டக்
கனவிலுமுன் பறியாதார் கையறவா லெய்தினார்.

(இ-ள்.) தமது மனத்தில் மகிழ்வடைந்து மனைவியாரை யழைத்துவந்து விலைகூறி, சிறப்புப்பொருந்திய அத்திருவொற்றியூரில் எங்கும் பொருள்கொடுப்பவரைக் காணுமல் மனத்தளர்ச்சியடைந்து, கோபிக்கின்ற இடபவாகனத்தையுடைய சிவபெருமானது திருக்கோயிலில் திருவிளக்குத் திருப்பணி முட்டுப்பட முன்பு சொப்பனத்திலு மறியாதவராகிய அக்கலிநீதிநாயனுர் மிக்க வருத்தத்தோடு மடைந்தார்.—எ-று. (கஉ)

பணிகொள்ளும் படம்பக்க நாயகர்தங் கோயிலினு
ளணிகொள்ளுந் திருவிளக்குப் பணிமாறு மமையத்தின்
மணிவண்ணச் சுடர்விளக்கு மாளிலியான் மாள்வனெனத்
துணிவுள்ளங் கொளநினைந்தவ் வினைமுடிக்கத் தொடங்குவார்.

(இ-ள்.) பாம்பையாபரணமாகவணிந்த படம்பக்கநாதரது திருக்கோயிலினுள்ளே அழகு கொண்டிருக்கின்ற திருவிளக்குத் திருப்பணி செய்யுஞ் சமயத்தில் மாணிக்கவண்ணம்போலுஞ் சுடரையுடைய திருவிளக்குப்பற்றி யவியின், யான் இறந்துவிடுவேனென்று துணிவானது உள்ளத்திற் பொருந்தச் சிந்தித்து, அத்திருத்தொண்டை நிறைவேற்றத் தொடங்குவாராயினுர்.—எ-று.

'பணிகொள்ளும்' என்பதற்கு, அடியார்களுடைய திருத்தொண்டுகளையேற்றருளும், எனப் பொருள்கூறலு மொன்று. படம்பக்கநாயகர் என்பது, திருவொற்றியூரில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானுக்குரிய திருநாமம். (கங)

திருவிளக்குத் திரியிட்டங் ககல்பரப்பிச் செயனிரம்ப
வொருவியவெண் ணெய்க்கீடா வுடலுதிரங் கொடுநிறைக்கக்
கருவியினுன் மிடறரிய வக்கையைக் கண்ணுதலார்
பெருகுதிருக் கருணையுட னேர்வந்து பிடித்தருளி.

(இ-ள்.) அங்கு அகல்களைப் பரப்பித் திருவிளக்குத் திரியிட்டுத் தமது திருத்தொண்டு நிரம்பும்படி நீங்கிய எண்ணெய்க்குப் பிரதியாக உடம்பிலுள்ள உதிரத்தைக்கொண்டு நிறைக்கும்பொருட்டு ஆயுதத்தினுல் தமது கழுத்தை யரிய, அக்கையினை நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் மிக்க பெருங்கருணையோடும் எதிரே வந்து பிடித்தருளி.—எ-று.

'ஒருவிய வெண்ணெய்க்குடமா' என்றும் பாடபேதம்.

இதுமுத லிரண்டு பாடலுங் குளகம். (கச)

மற்றவர்த முன்னுக மழவிடைமே லெழுந்தருள
உற்றலூ றதுநீங்கி யொளிவிளங்கு முச்சியின்மேற்
பற்றியவஞ் சலியினராய் நின்றவரைப் பரமர்தாம்
பொற்புடைய சிவபுரியிற் பொலிந்திருக்க வருள்புரிந்தார்.

(இ-ள்.) அக்கலிநீதிநாயனுருக்கு முன்னே இளமைபொருந்திய இடபவாகனத்தின்மேலெழுந்தருள, கழுத்திற்பொருந்திய ஊறுநீங்கி ஒளிவிளங்குகின்ற உச்சியின்மேல் அஞ்சலியாகக்குவித்த திருக்கரமுடையவராய்நின்ற கலிநீதிநாயனுரைச் சிவபெருமான் அழகிய சிவலோகத்தில் சிறப்புற்றிருக்கத் திருவருள் புரிந்தருளினுர்.—எ-று.

சிவஞானச்செல்வர்கள் சிறந்து வாழப் பெறுவதும், புண்ணியவடிவா ய்ப் பொலியப் பெறுவதும், சர்வலோகசரண்யனுகிய சிவபெருமான் வீற்றிருந் தருளப் பெறுவதுமாகலின், 'பொற்புடைய சிவபுரி' என்று கூறினர். (கக)

தேவர்பிரான் றிருவிளக்குச் செயன்முட்ட மிடறரிந்து
மேவரிய வினைமுடித்தார் கழல்வணங்கி வியனுலகில்
யாவரொரு தரனடியார் தமையிகழ்ந்து பேசினரை
நாவரியுஞ் சத்தியார் திருத்தொண்டி னலமுரைப்பாம்.

(இ-ள்.) தேவர்கள் நாயகராகிய சிவபெருமானுக்குச் செய்யுந் திருவிளக் குத் திருப்பணியானது முட்டுப்படத் தமது கழுத்தை யரிந்து, பொருந்துதற் கரிய திருவிளக்குத் திருப்பணியை நிறைவேற்றினவராகிய கலிநீதிநாயனரது திருவடிகளை வணங்கி, பெரிய நிலவுலகத்தில் சிவனடியார்களை இகழ்ந்து பே சினவர்களை யாவரொன்று விசாரியாமல் (தண்டாயத்தினல்) அவர்கள் நாவை யரிகின்ற சத்திநாயனரது திருத்தொண்டின் சிறப்பைச் சொல்லுவோம்.

'வினைமுடித்தார்' என்பதற்கு, இருவினைகளையும் பற்றற வொழித்த வர், எனப் பொருள்கூறினும் பொருந்தும். உறவினரொன்றும், பகையினரொன் றும், அன்னியரொன்றும், அரசரொன்றும், செல்வவான்களென்றும், புறச்சமயிக ளென்றும் விசாரியாமல் சிவனடியார்களைத் தூஷித்தவுடனே அவர்களது நாவை வலித்து அரிகின்றவரென்பார், 'யாவரொரு தரனடியார் தமையிகழ்ந்து பேசி னரை நாவரியுஞ் சத்தியார்' என்று கூறினர். (கஉ)

கலிநீதி நாயனர் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம்-உகககக.

---



சத்திநாயனர்

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சத்திநாயனார் புராணம்.

களமர் கட்ட கமலம் பொழிந்ததேன்
குளநி றைப்பது கோலொன்றி லெண்டிசை
யளவு மாணைச் சயத்தம்ப நாட்டிய
வளவர் காவிரி நாட்டு வரிஞ்சியூர்.

(இ-ள்.) உழவர்கள் களைகடிந்தெறிந்த தாமரைகள் சிந்திய தேன்பெருக்கானது தடாகங்களை நிறைக்கப்பெறுவது, ஒப்பற்ற செங்கோலினால் எட்டுத்திக்குகளிலும் தமது ஆக்கினையாகிய வெற்றிஸ்தம்பத்தை நாட்டிய சோழராஜாக்களது காவிரிநதி சூழ்ந்த சோழநாட்டிலுள்ள வரிஞ்சியூராகும்.—எ-று. (க)

வரிஞ்சி யூரினில் வாய்மைவே ளாண்குலம்
பெருஞ்சி றப்புப் பெறப்பிறப் பெய்தினார்
விரிஞ்சன் மான்முதல் விண்ணவ ரெண்ணவு
மருஞ்சி லம்பணி சேவடிக் காட்செய்வார்.

(இ-ள்.) அந்த வரிஞ்சியூரிலே மெய்ம்மை பொருந்திய வேளாளர் குலமானது மிக்க சிறப்படையும்படி அவதரித்தவர்; பிரம விஷ்ணுக்கள் முதலிய தேவர்கள் நினைத்தற்கு மரிதாகிய (வேதமாகிய) திருச்சிலம்பணிந்த சிவபெருமானது திருவடிகளுக்கு அடிமைசெய்கின்றவர்.—எ-று. (உ)

அத்த ராகிய வங்கண ரன்பரை
யித்த லத்தி லிகழ்ந்தியம் பும்முரை
வைத்த நாவை வலித்தரி சத்தியாற்
சத்தி யாரொனு நாமந் தரித்துளார்.

(இ-ள்.) முதல்வராகிய சிவபெருமா னடியவர்களை இந்நிலவுலகத்தில் இகழ்ந்துகூறுஞ் சொற்களை வைத்திருக்கின்ற நாவை இழுத்து அரிகின்ற சத்தியினால், சத்திநாயனார் என்னுந் திருநாமம் பெற்றுள்ளவர்.—எ-று. (ரு)

தீங்கு சொற்ற திருவிலர் நாவினை
வாங்க வாங்குதண் டாயத்தி னால்வலித்
தாங்க யிற்கத்தி யாலரிந் தன்புட
னோங்கு சீர்த்திருத் தொண்டி னுயர்ந்தனர்.

(இ-ள்.) பழிவார்த்தை கூறுகின்ற பாதகர்களுடைய நாவைப் பிடுங்கும்படி வளைந்ததண்டாயத்தினாலிழுத்து அவ்விடத்திலேயே கூர்மையாகிய கத்தியி

னல் அரிந்து, அன்புடன் மிக்க சிறப்பினையுடைய திருத்தொண்டினில் மேம்ப ட்டுள்ளவர்.—எ-று.

தண்டாயம் = ஒருவகையாயுதம்; அது குறடுபோல்வது. (ச)

அன்ன தாகிய வாண்மைத் திருப்பணி
மன்னு பேருல கத்தில் வலியுடன்
பன்னெ டும்பெரு நாள்பரி வாற்செய்து
சென்னி யாற்றினர் செங்நெறி யாற்றினர்.

(இ-ள்.) அத்தன்மையாகிய வீரம் பொருந்திய திருப்பணியை நிலைபெ ற்ற பெரிய நிலவுலகத்தில் பராக்கிரமத்தோடும் பலவாகிய அநேக நாள்கள் அன்போடு செய்து, திருமுடியில் கங்கைநதியை யணிந்த சிவபெருமானது சிற ந்த திருத்தொண்டை நடத்திவந்தனர்.—எ-று. (ரு)

ஐய மின்றி யரிய திருப்பணி
மெய்யி னூற்செய்த வீரத் திருத்தொண்டர்
வைய முய்ய மணிமன்று ளாடுவார்
செய்ய பாதத் திருநிழல் சேர்ந்தனர்.

(இ-ள்.) சந்தேகமில்லாமல் செய்தற்கரிய திருப்பணியை உண்மை யோடு செய்த வீரத்தொண்டராகிய சத்திநாயனூர், உலகத்தாருய்யும்பொருட்டு அழகிய கனகசபையில் ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளுஞ் சிவபெருமானது சிவந்த திருவடிநிழலை யடைந்தனர்.—எ-று. (சு)

நாய னூர்தொண் டனைநலங் கூறலார்
சாய நாவரி சத்தியார் தாள்பணிந்
தாய மாதவத் தையடி கள்ளெனுந்
தூய காடவர் தந்திறஞ் சொல்லுவாம்.

(இ-ள்.) சிவபெருமா னடியார்களைப் பழிக்கின்ற பாதகர்களிறக்கும்படி அவர்கள் நாவை யரிந்த சத்திநாயனூரது திருவடிகளை வணங்கி, மகத்தாகிய தவத்தினையுடைய ஐயடிகள் என்று கூறுந் தூய்மையாகிய காடவர்கோனுயனு ரது திருத்தொண்டின் சிறப்பைக் கூறுவோம்.—எ-று. (எ)

**சத்திநாயனூர் புராணம் முற்றிற்று.**

திருச்சிற்றம்பலம்.

ஆ. திருவிருத்தம்-உகசசு.

---



ஐயடிகள் காடவர்கோன் நா

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஐயடிகள் காடவர்கோனாயனார் புராணம்.

வையநிகழ் பல்லவர்தங் குலமரபின் வழித்தோன்றி
வெய்யகலி யும்பகையு மிகையொழியும் வகையடக்கிச்
செய்யசடை யார்சைவத் திருநெறியா லரசளிப்பா
ரையடிக ணீதியா லடிப்படுத்துஞ் செங்கோலார்.

(இ-ள்.) உலகத்தில் விளங்குகின்ற பல்லவர்களது குலமரபிலே முறைமையாக அவதரித்து, கொடிதாகிய வறுமையும், பகைமையும், குற்றங்களும் நீங்கும்வண்ணம் அடக்கி, சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமானது சிறந்த சைவமார்க்க முறைமைப்படி யரசாட்சிசெய்கின்றவர். (அவர் யாரெனின்,) நீதியினால் (உலகத்தைத்) தமதடிக்கீழடக்கி நடத்துகின்ற செங்கோன்மையையுடைய ஐயடிகள் காடவர்கோனாயனாரென்பவர்.—எ-று. (க)

திருமலியும் புகழ்விளங்கச் சேணிலத்தி லெவ்வுயிரும்
பெருமையுட னினிதமரப் பிறபுலங்க ளடிப்படுத்துத்
தருமநெறி தழைத்தோங்கத் தாரணிமேற் சைவமுட
னருமறையின் றுறைவிளங்க வரசளிக்கு மந்நாளில்.

(இ-ள்.) சிறப்புமிக்க புகழ்விளங்கவும் பெரிய நிலவுலகத்தில் எந்த உயிர்களும்மேன்மையோடு இனிது வாழவும், அன்னியதேசங்களைத் தமதரசாட்சியின் கீழ்ப்படுத்தித் தருமமார்க்கம் தழைத்தோங்கவும், உலகத்தில் சைவமார்க்கத்துடன் அரிய வைதிக மார்க்கமுஞ் சிறந்து விளங்கவு மரசாட்சி செய்கின்ற நாள்களில்.—எ-று.

இதுமுதலிரண்டுபாடலுங் குளகம். (உ)

மன்னவரும் பணிசெய்ய வடநூறென் றமிழ்முதலாம்
பன்னுகலை பணிசெய்யப் பாரளிப்பா ரரசாட்சி
யின்னலென விகழ்ந்ததனை யெழிற்குமரன் மேலிழிச்சி
நன்மைநெறித் திருத்தொண்டு நயந்தளிப்பா ராயினார்.

(இ-ள்.) வேற்றரசர்கள் ஏவல் செய்யவும், சமஸ்கிருதம் தமிழ் முதலாகிய சொல்லப்பட்ட பல கலைகளும் பணி செய்யவும் உலகத்தைப் பாதுகாக்கின்ற அந்நாயனார், இவ்வரசாட்சியானது துன்பமுடையதென்றிகழ்ந்து அதனை அழகிய தமது புத்திரனிடத்தாக்கி, நன்னெறியாகிய திருத்தொண்டை விரும்பிச் செய்கின்றவராயினார்.—எ-று.

'பன்னுகலை பணிசெய்ய' என்றது, அக்கலைகளில் மிக்க தேர்ச்சியுற்றமையைக் குறிப்பித்தவாறு. (ந)

தொண்டுரிமை புரக்கின்றார் சூழ்வேலை யுலகின்க
ணண்டர்பிரா னமர்ந்தருளு மாலயங்க ளானவெலாங்
கண்டிறைஞ்சித் திருத்தொண்டின் கடனேறப் பணிசெய்தே
வண்டமிழின் மொழிவெண்பா வோரொன்று வழுத்துவார்.

(இ-ள்.) திருத்தொண்டினுரிமையைச் செய்கின்ற அந்நாயனார் சமுத்திரஞ்சூழ்ந்த நிலவுலகத்திலுள்ள தேவர்கள் நாயகராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக்கோயில்க ளனைத்தையுந் தரிசித்து வணங்கித் திருத்தொண்டின் முறைமை சிறக்கத் திருப்பணியைச் செய்து வளவிய தமிழ்மொழியினாலாகிய வெண்பாக்கள் (ஒவ்வொரு க்ஷேத்திரத்திற்கு) ஒவ்வொன்றாகப் பாடித் துதிப்பாராயினார்.—எ-று. (௪)

பெருத்தெழுகா தலின்வணங்கிப் பெரும்பற்றத் தண்புலியூர்த்
திருச்சிற்றம் பலத்தாடல் புரிந்தருளுஞ் செய்யசடை
நிருத்தனார் திருக்கூத்து நேர்ந்திறைஞ்சி நெடுந்தகையார்
விருப்பினுடன் செந்தமிழின் வெண்பாமென் மலர்புனைந்தார்.

(இ-ள்.) அதிகரித்தெழுகின்ற அன்புடன் வணங்கிக் குளிர்ந்த பெரும்பற்றப்புலியூ ரென்னுஞ் சிதம்பரத்தில் சிற்சபையில் ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளுஞ் சிவந்த சடைமுடியையுடைய ஸ்ரீ நடராஜப்பெருமானது திருநடனத்தை யடைந்து வணங்கி, பெருந்தன்மையையுடைய ஐயடிகள்காடவர்கோனாயனார் அன்புடன் செந்தமிழ் வெண்பாவாகிய மெல்லிய மலர்மாலையை யணிந்தருளினார்.—எ-று. (௫)

---

## க்ஷேத்திரத்திருவெண்பா.

---

திருச்சிற்றம்பலம்.

ஓடுகின்ற நீர்மை யொழிதலுமே யுற்றாருங்
கோடுகின்றார் மூப்புங் குறுகிற்று - நாடுகின்ற
நல்லச்சிற் றம்பலமே நண்ணாமு னன்னெஞ்சே
தில்லைச்சிற் றம்பலமே சேர்.

உய்ய மருந்திதனை யுண்மினென வுற்றாருங்
கையிற் பிடித்தெதிரே காட்டியக்கால் - பைய
வெழுந்திருமி யான்வேண்டே னென்னாமு னெஞ்சே
செழுந்திரும யானமே சேர்.

திருச்சிற்றம்பலம்.

---

அவ்வகையா லருள்பெற்றங் கமர்ந்துசில நாள்வைகி
யிவ்வுலகிற் றம்பெருமான் கோயில்களெல் லாமெய்திச்
செவ்வியவன் பொடுபணிந்து திருப்பணியேற் றனசெய்தே
யெவ்வுலகும் புகழ்ந்தேத்து மின்றமிழ்வெண் பாமொழிந்தார்.

(இ-ள்.) அவ்வாறாகிய முறைமையினால் திருவருள்பெற்று அங்குச் சிலகாலம் விரும்பி வசித்திருந்து, இந்நிலவுலகத்தில் சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கோயில்களனைத்தையு மடைந்து, சிறந்த பேரன்போடு வணங்கி இசைந்த திருப்பணிகளைச் செய்து எவ்வுலகத்தாரும் புகழ்ந்து துதிக்கின்ற இனிய தமிழ்வெண்பாவைப் பாடியருளினார்.—எ-று. (௬)

இந்நெறியா லரனடியா ரின்பமுற விசைந்தபணி
பன்னெடுநா ளாற்றியபின் பரமர்திரு வடிநிழற்கீழ்
மன்னுசிவ லோகத்து வழியன்பர் மருங்கணைந்தார்
கன்னிமதில் சூழ்காஞ்சிக் காடவரை யடிகளார்.

(இ-ள்.) அழியாத மதில்சூழ்ந்த ஸ்ரீகாஞ்சீபுரத்தி லவதரித்த ஐயடிகள்காடவர்கோனாயனார் இம்முறைமையினால் சிவனடியார்கள் பேரின்பமடையும்படி தமக்கிசைந்த திருத்தொண்டுகளை அநேகநாள்கள் செய்துவந்தபின்பு, சிவபெருமானது திருவடி நிழலின்கீழே நிலைபெற்ற சிவலோகத்தில் வழியடியார்களினது அருகிலடைந்தருளினார்.—எ-று. (எ)

பையரவ மணியார மணிந்தார்க்குப் பாவணிந்த
வையடிகள் காடவனா ரடியிணைத்தா மரைவணங்கிக்
கையணிமான் மழுவுடையார் கழல்பணிசிந் தனையுடைய
செய்தவத்துக் கணம்புல்லர் திருத்தொண்டு விரித்துரைப்பாம்.

(இ-ள்.) படம்பொருந்திய பாம்பையும் எலும்பு மணிமாலையையுமணிந்தசிவபெருமானுக்குச் செந்தமிழ்த்திருவெண்பாமாலையணிந்தருளிய ஐயடிகள் காடவர்கோனாயனாரது திருவடித் தாமரைகளைவணங்கி, திருக்கரத்தில் மான்கன்றையும், மழுப்படையையுமேந்திய சிவபெருமானது திருவடிகளைவணங்குங் கருத்தினையுடைய அருமையாகச் செய்ததவம் நிரம்பப்பெற்ற கணம்புல்ல நாயனாரது திருத்தொண்டின் பெருமையை விளங்கச் சொல்லுவோம்.—எ-று.

'மணியாரமணிந்தார்' என்பதற்கு, அழகிய ஆத்திமாலை யணிந்தவர், எனப் பொருள்கூறினுமாம். (அ)

உளத்திலொரு துளக்கமிலோ முலகுய்ய விருண்டதிருக்
களத்துமுது குன்றர்தரு கனகமாற் றினில்விட்டு
வளத்தின்மலிந் தேழுலகும் வணங்குபெருந் திருவாரூர்க்
குளத்திலெடுத் தார்வினையின் குழிவாய்நின் றெனையெடுத்தார்.

(இ-ள்.) சர்வலோகங்களும் உய்யும் பொருட்டு இருண்டிருக்கப்பெற்ற திருமிடற்றினையுடைய ஸ்ரீமுதுகுன்றநாதர் கொடுத்தருளிய பொன்னை மணிமுத்தாநதியிலிட்டு, எழுலகத்தாரும் சிறப்போடு நெருங்கிவணங்குகின்ற பெரிய திருவாரூர்த் திருக்குளத்திலெடுத்தருளிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் தீவினையாகிய படுகுழியினின்றும் என்னைக் கரையேற்றியருளினார்; ஆதலால், இனி யாம் மனத்தில் ஒரு சஞ்சலமும் இல்லாதவர்களாயினோம்.—எ-று. (௯)

ஐயடிகள்காடவர்கோனாயனார் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம் ௨௧௫௫.

பொய்யடிமையில்லாத புலவர்சருக்கம் முற்றுப்பெற்றது.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

எட்டாவது,

## கறைக்கண்டன் சருக்கம்.

# கணம்புல்லநாயனார் புராணம்.

திருக்கிளர்சீர் மாடங்க டிருந்துபெருங் குடிநெருங்கிப்
பெருக்குவட வெள்ளாற்றுத் தென்கரைப்பாற் பிறங்குபொழில்
வருக்கைநெடுஞ் சுளைபொழிதேன் மடுநிறைத்து வயல்விளைக்கு
மிருக்குவே ளூரென்ப திவ்வுலகில் விளங்குபதி.

(இ-ள்.) இலக்ஷுமிவிலாசம் பொருந்திய சிறந்தமாளிகைகளில் திருத்தமுற்றிருக்கின்ற பெரியகுடிகள் நெருங்கப்பெற்று, நீர்ப்பிரவாகத்தையுடைய வடவெள்ளாற்றின் தென்கரையிலே விளங்குகின்ற சோலைகளிலுள்ள பெரிய பலாச்சுளைகள் பொழிகின்றதேனானது மடுக்களை நிறைத்து வயல்களை விளைவிக்கின்ற இருக்குவேளூர் என்று சொல்லப்படுவது இந்நிலவுலகத்தில் விளங்குகின்ற திருப்பதியாகும்.—எ-று. (க)

அப்பதியிற் குடிமுதல்வர்க் கதிபரா யளவிறந்த
வெப்பொருளு முடிவறியா வெய்துபெருஞ் செல்வத்தா
ரொப்பில்பெருங் குணத்தினா லுலகின்மேம் படநிகழ்ந்தார்
மெய்ப்பொருளா வனவீசர் கழலென்னும் விருப்புடையார்.

(இ-ள்.) அப்பதியில்வாழும் பெருங்குடிகளுக்குத் தலைவராய், அளவற்ற எவ்வகைப்பொருளும் முடிவறியாத பெருஞ்செல்வத்தைப் பெற்றவர்; ஒப்பற்ற பெருங்குணத்தினால் உலகத்தில் சிறப்பாக விளங்குகின்றவர்; மெய்ப்பொருளாயுள்ளவை சிவபெருமான்திருவடிகளேயென்னும் பெருவிருப்புடையவர்.—எ-று. (உ)

தாவாத பெருசெல்வந் தலைநின்ற பயனிதுவென்
றோவாத வொளிவிளக்குச் சிவன்கோயி லுள்ளெரித்து
நாவாரப் பரவுவார் நல்குரவு வந்தெய்தத்
தேவாதி தேவர்பிரான் றிருத்தில்லை சென்றடைந்தார்.

(இ-ள்.) கெடாத பெருஞ்செல்வத்தைச் சிறப்பாகப்பெற்ற பயனிதுவேயென்று நீங்காத வொளியினையுடைய திருவிளக்குகளைச் சிவாலயங்களில்

எரித்து நாவினால் நிரம்பத் துதிக்கின்றவர், தமக்கு வறுமைவந்தடைய, தேவர்கள் நாயகராகிய சிவபெருமான்வீற்றிருந்தருளுந் திருத்தில்லைப் பதியைச்சென்றுசேர்ந்தருளினர்.—எ-று. (க)

தில்லைநகர் மணிமன்று ளாடுகின்ற சேவடிக
ளல்கியவன் புடனிறைஞ்சி யமர்கின்றார் புரமெரித்த
வில்லியார் திருப்புலீச் சரத்தின்கண் விளக்கெரிக்க
வில்லிடையுள் ளனமாறி யெரித்துவரு மந்நாளில்.

(இ-ள்.) திருத்தில்லைத்திருப்பதியில் அழகிய கனகசபையில் திருநடனஞ்செய்தருளுஞ் சிவபெருமான் றிருவடிகளைப் பொருந்திய பேரன்புடன் வணங்கி வசிக்கின்றவர், திரிபுரமெரித்த மேருமலையாகிய வில்லையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருப்புலீச்சரமென்னுந் திருக்கோயிலில் திருவிளக்கெரித்தற்பொருட்டுத் தமது மனையிலுள்ள பொருள்களை விற்றுத்திருவிளக்கெரித்துவருகின்றநாளில்.—எ-று. (௪)

இதுமுதலிரண்டுபாடலுங் குளகம்.

ஆயசெயன் மாண்டதற்பி னயலவர்பா லிரப்பஞ்சிக்
காயமுயற் சியிலரிந்த கணம்புல்லுக் கொடுவந்து
மேயவிலைக் குக்கொடுத்து விலைப்பொருளா னெய்மாறித்
தூயதிரு விளக்கெரித்தார் துளக்கறுமெய்த் தொண்டனார்.

(இ-ள்.) தமது வீட்டிலுள்ள பொருளை விற்குந்தொழில் முடிந்தபின்பு அன்னியரிடத்தில் சென்று இரப்பதற்கு அச்சமுற்று, தேகமுயற்சியினால் அரிந்த கணம்புல்லைக் கொண்டுவந்து கிடைத்தவிலைக்குக் கொடுத்து அவ்விலைப்பொருளினால் நெய்யைவாங்கி, அசைவற்ற மெய்த்தொண்டராகிய அந்நாயனர் தூய்மையாகிய திருவிளக்கு எரித்தார்.—எ-று. (ங)

இவ்வகையாற் றிருந்துவிளக் கெரித்துவர வங்கொருநாண்
மெய்வருந்தி யரிந்தெடுத்துக் கொடுவந்து விற்கும்பு
லெவ்விடத்தும் விலைபோகா தொழியவுமிப் பணியொழியா
ரவ்வரிபுல் லினைமாட்டி யணிவிளக்கா யிடவெரிப்பார்.

(இ-ள்.) இவ்வாறாகத் திருத்தமாகிய திருவிளக்கெரித்துவர, அங்கு ஒருதினம் தேகம் வருந்தி அரிந்தெடுத்துக் கொண்டுவந்து விற்கும் புல்லானது எவ்விடத்திலும் விலைபடாதொழியவும் இத்திருப்பணியை நீங்காதவராய் அவ்வரிந்தபுல்லை யிட்டு அழகிய திருவிளக்காக எரிப்பாராயினர்.—எ-று. (ச)

முன்புதிரு விளக்கெரிக்கு முறையாமங் குறையாமன்
மென்புல்லு விளக்கெரிக்கப் போதாமை மெய்யான
வன்புபுரி வாரடுத்த வினைக்குத்தந் திருமுடியை
யென்புருக மடுத்தெரித்தா ரிருவினையின் றொடக்கெரித்தார்.

(இ-ள்.) முன்பு திருவிளக்கெரிக்கும் சாமம்வரையிலும் குறையாமல் மெல்லிய புற்கள் திருவிளக்கெரிக்கப் போதாமையால் மெய்ம்மையாகிய பேரன்பு செய்கின்றவராகிய இருவினைத்தொடக்கை யெரித்த அந்நாயனர் நேர்ந்த குறைவுக்குத் தமது திருமுடியை எலும்பு முருகும்படி மடுத்து எரித்தார்.—எ-று.

தங்கள்பிரான் றிருவுள்ளஞ் செய்துதலைத் திருவிளக்குப்
பொங்கியவன் புடனெரித்த பொருவிறிருத் தொண்டர்க்கு
மங்கலமாம் பெருங்கருணை வைத்தருளச் சிவலோகத்
தெங்கள்பிரான் கணம்புல்ல ரினிதிறைஞ்சி யமர்ந்திருந்தார்.

(இ-ள்.) தங்கள் முதல்வராகிய சிவபெருமான் திருவுள்ளங் கூர்ந்தருளி முடியை மாட்டி யெரிக்குந் திருவிளக்கினை மிக்க பேரன்போடும் எரித்தருளிய ஒப்பற்ற திருத்தொண்டருக்கு மலங்கலகரமாகிய பெருங்கருணை செய்தருள, சிவலோகத்தில் எமது முதல்வராகிய கணம்புல்லநாயனார் இனிமையோடு வணங்கி மகிழ்ந்திருந்தருளினார்.—எ-று. (அ)

பூரியார் கலியுலகின் முடியிட்ட திருவிளக்குப்
பேரியா றணிந்தாருக் கெரித்தார்தங் கழல்பேணி
வேரியார் மலர்ச்சோலை விளங்குதிருக் கடவூரிற்
காரியார் தாஞ்செய்த திருத்தொண்டு கட்டுரைப்பாம்.

(இ-ள்.) வலிமை பொருந்திய கடல்சூழ்ந்த நிலவுலகத்தில் திருமுடியை மடுத்தெரிக்குந் திருவிளக்குத் திருப்பணியைப் பெரிய கங்கைநதியை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானுக்கு எரித்தவராகிய கணம்புல்லநாயனாரது திருவடிகளை விரும்பி வணங்கி, மணம் பொருந்திய மலர்களையுடைய சோலைகள் விளங்குகின்ற திருக்கடவூர் என்னுந் திருப்பதியில் அவதரித்த காரிநாயனார் செய்தருளிய திருத்தொண்டின் சிறப்பைச் சொல்லுவோம்.—எ-று. (க)

கணம்புல்லநாயனார் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ_ திருவிருத்தம்-௨கசுச.

---

உ.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# காரிநாயனார் புராணம்.

மறையாளர் திருக்கடவூர் வந்துதித்து வண்டமிழின்
றுறையான பயன்றெரிந்து சொல்விளங்கிப் பொருண்மறைய
குறையாத தமிழ்க்கோவை தம்பெயராற் குலவும்வகை
முறையாலே தொகுத்தமைத்து மூவேந்தர் பாற்பயில்வார்.

(இ-ள்.) வேதியர்கள் வாழுந் திருக்கடவூர்த் திருப்பதியில்வந்து அவதரித்துச் செந்தமிழ்த்துறையாகிய மெய்ப்பொருளுணர்ந்து, சொல்விளங்கிப்பொருண்மறைந்து கிடக்கத் தமது திருப்பெயரினால், குறையாத பொருள் நிரம்பப்



காரிநாயனர்.

பெற்ற தமிழ்க்கோவையை விளங்கும் வண்ணம் முறைமையாய்ச் செய்தமைத்துத் தமிழ்நாட்டு மூவேந்தர்களிடத்திலும் பழகுகின்றவர்.—எ-று. (க)

அங்கவர்தா மகிழும்வகை யடுத்தவுரை நயமாக்கிக்
கொங்கலர்தார் மன்னவர்பாற் பெற்றநிதிக் குவைகொண்டு
வெங்கணரா வொடுகிடந்து விளங்குமிளம் பிறைச்சென்னிச்
சங்கரனு ரினிதமருந் தானங்கள் பலசமைத்தார்.

(இ-ள்.) அவ்வரசர்கள் சந்தோஷிக்கும்படி பொருந்திய உரைகளை நயமாகக்கூறி, நறுமணங்கமழும் மலர்மாலையை யணிந்த அவ்வரசர்களிடத்திற் பரிசாகப்பெற்ற திரவியங்களைக்கொண்டு, வெவ்விய கண்ணையுடைய பாம்புடன் பொருந்தி விளங்குகின்ற இளம்பிறையையு மணிந்த திருமுடியையுடைய சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளும் பல திருக்கோயில்களைக் கட்டுவித்தார்.—எ-று.

யாவர்க்கு மனமுவக்கு மின்பமொழிப் பயனியம்பித்
தேவர்க்கு முதற்றேவர் சீரடியா ரெல்லார்க்கு
மேவுற்ற விருநிதிய மிகவளித்து விடையவர்தாங்
காவுற்ற திருக்கயிலை மறவாத கருத்தினராய்.

(இ-ள்.) எவர்களுக்கும் மனமகிழத்தக்க இன்பமாகிய சொற்களையுரைத்து, எல்லாத் தேவர்களுக்கு முதற்றேவராகிய சிவபெருமானடியார்கள் யாவருக்கும் பொருந்திய பெரும்பொருளை மிகுதியாகக்கொடுத்து, இடபவாகனத்தையுடைய சிவபெருமானரசுசெய்தருளுந் திருக்கைலாசமலையை மறவாத திருவுள்ள முடையவராய்.—எ-று.

'விடையவர்தங் காவுற்ற திருக்கயிலை' எனப் பாடமாயின், இடபவாகனத்தையுடைய சிவபெருமானது சோலைகள் சூழ்ந்த திருக்கயிலை, எனப் பொருள்கொள்க. (ங)

ஏய்ந்தகடல் சூழுலகி லெங்குந்த மிசைநிறுத்தி
யாய்ந்தவுணர் விடையறா வன்பினரா யணிகங்கை
தோய்ந்தநெடுஞ் சடையார்த மருள்பெற்ற தொடர்பினால்
வாய்ந்தமனம் போலுடம்பும் வடகயிலை மலைசேர்ந்தார்.

(இ-ள்.) நிலைபெற்ற கடல்சூழ்ந்த நிலவுலகமெங்குந் தம்முடைய கீர்த்தியை நிறுத்தி, தெளிந்த பேருணர்ச்சியில் நீங்காத அன்பினையுடையவராய் அழகிய கங்கைநதிபொருந்திய நீண்ட சடைமுடியையுடைய சிவபெருமானது திருவருளைப்பெற்ற சார்பினால், திருக்கயிலையை மறவாத திருவுள்ளம்போலத் திருமேனியும் வடக்கின் கண்ணுள்ள திருக்கயிலைமலையை யடையப்பெற்றார்.—எ-று. (ச)

வேரியார் மலர்க்கொன்றை வேணியா ரடிபேணுங்
காரியார் கழல்வணங்கி யவரளித்த கருணையினால்
வாரியார் மதயானை வழுதியவர்த மதிமரபிற்
சீரியார் நெடுமாறர் திருத்தொண்டு செப்புவாம்.

(இ-ள்.) மணம்பொருந்திய கொன்றைமலர்மாலையை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானது திருவடிகளை விரும்பியடைந்த காரிநாயனு

ரது திருவடிகளைவணங்கி, அவரது பெருங்கருணையினால், கடல்போலு மதத்தைச்சொரிகின்றயானைச் சேனையையுடைய பாண்டியர்களது சந்திரவமிசத்தி லவதரித்த பெரியோராகிய நின்றசீர் நெடுமாறநாயனாரது திருத்தொண்டின் மேன்மையைச் சொல்லுவோம்.—எ-று. (௬)

காரிநாயனார்புராணம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-உ௧௬௧.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நின்றசீர்நெடுமாறநாயனார் புராணம்.

தடுமாறு நெறியதனைத் தவமென்று தம்முடலை
யடுமாறு செய்தொழுகு மமண்வலையி லகப்பட்டு
விடுமாறு தமிழ்விரகர் வினைமாறுங் கழலடைந்த
நெடுமாற னார்பெருமை யுலகேழு நிகழ்ந்ததால்.

(இ-ள்.) தடுமாறத்தக்க பொய்ந்நெறியைத் தவநெறியென்று கருதித் தம்முடலையழிக்கும்படி தீமைசெய்தொழுகிய சமணர்களது பொய்ச்சமயவலையிலகப்பட்டு, அதனை யொழிக்கும்வண்ணம் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளது ஞானமயமாகிய திருவடிகளைச்சார்பாகவடைந்த நின்றசீர்நெடுமாறநாயனாருடைய பெருமையானது ஏழுலகத்திலும் விளங்கியிருந்தது.—எ-று. (௧)

அந்நாளி லாளுடைய பிள்ளையா ரருளாலே
தென்னாடு சிவம்பெருகச் செங்கோலுய்த் தறமளித்துச்
சொன்னமை நெறிபோற்றிச் சுரர்நகர்க்கோன் றனைக்கொண்ட
பொன்னார மணிமார்பிற் புரவலனார் பொலிகின்றார்.

(இ-ள்.) அக்காலத்தில் திருஞானசம்பந்தப்பிள்ளையாருடைய திருவருளினால் பாண்டிநாடு சிவமணங்கமழச் செங்கோல்செலுத்தி அறநெறியை விருத்திசெய்து சொல்லுகின்ற சிவநாமமாகியசைவநெறியைப் பாதுகாத்து, தேவர்களுலகத்திற்கரசனாகிய இந்திரனை யேவல்கொண்ட (பாண்டியர் குலத்தலைவராகிய) பொன்னரிமாலையையணிந்த அழகிய மார்பினையுடைய நின்றசீர்நெடுமாற நாயனார் விளங்குவாராயினார்.—எ-று. (உ)

ஆயவர சளிப்பார்பா லமர்வேண்டி வந்தேற்ற
சேயபுலத் தெவ்வரெதிர் நெல்வேலிச் செருக்களத்துப்
பாயபடைக் கடன்முடுகும் பரிமாவின் பெருவெள்ளங்
காயுமதக் களிற்றினிரை பரப்பியமர் கடக்கின்றார்.

(இ-ள்.) அத்தன்மையாகிய அரசாட்சிசெய்யும் அரசர்பெருமானிடத்துப் போர்செய்யவிரும்பிவந்து எதிர்த்த, தூரமாகிய வடபுலத்துப்பகையரசர்களோடு திருநெல்வேலிப்போர்க்களத்திலே பரவியசேனைக்கடலையும், எதிர்க்கி

ன்ற பெரியகுதிரைவெள்ளத்தையும், கோபிக்கின்ற மதத்தினையுடைய யானை வரிசைகளையும் அணிவகுத்துப் போர்செய்வாராயினார்.—எ-று. (ங)

எடுத்துடன்ற முனைநாட்பி னிருபடையிற் பொருபடைஞர்
படுத்தநெடுங் கரித்துணியும் பாய்மாவி னறுகுறையு
மடுத்தமர்செய் வயவர்கருந் தலைமலையு மவர்செந்நீர்
மடுத்தகடன் மீளவுந்தாம் வடிவேல்வாங் கிடப்பெருக.

(இ-ள்.) படையெடுத்துக் கோபித்துச்செய்யும்போரில் இரண்டு சேனைகளிலும் போர்செய்யும்வீரர்கள் வெட்டிய பெரியயானைத்துண்டங்களும், குதிரைகளின் அறுபட்டதுண்டங்களும், அடுத்துப்போர்செய்கின்றவீரர்களது கருந்தலையாகிய மலைகளும், அவர்களுதிரப் பெருக்கையுங்கொண்ட கடலானது மீளவும் இப்பாண்டியர்பெருமான் வடித்தவேல்வாங்கி யெறியும்பொருட்டுப் பெருக்கெடுக்க.—எ-று.

'மீளவுந் தாம் வடிவேல் வாங்கிட' என்றது, முன்பு உக்கிரகுமார பாண்டியரால் கடல் சுவற வேல்விட்டு அதன் வலி யடக்கினமைபோல, ஈண்டும் வடிவேல்விட்டு வலியடக்கும்படி பெருகவென்க.

முனைநாட்பு-இருபெயரொட்டு, 'அலைசெந்நீர்' என்றும்பாடம்.

இதுமுதல் ஐந்துபாடலுங் குளகம். (ச)

வயப்பரியின் களிப்பொலியு மறவர்படைக் கலவொலியும்
கயப்பொருப்பின் முழக்கொலியுங் கலந்தெழுபல் லியவொலியும்
வியக்குமுகக் கடைநாளின் மேகமுழக் கெனமூளச்
சயத்தொடர்வல் லியுமின்று தாம்விடுக்கும் படிதயங்க.

(இ-ள்.) வெற்றிபொருந்திய குதிரைகளினது களிப்பினொலியும், வீரர்களது படைக்கலங்களினொலியும், மலைபோன்ற யானைகளின்பிளிறொலியும், கலந்துண்டாகின்ற பலவாத்தியங்களினொலியும், வியக்கத்தக்க யுகாந்தகாலத்திலெழுகின்ற மேகமுழக்கம்போல அதிகரித்தோங்கவும், விஜயலக்ஷுமியும் இன்று போரையொழிக்கும்படி விளங்கவும்.—எ-று. (ரு)

தீயுமிழும் படைவழங்குஞ் செருக்களத்து முருக்குமுட
றோயுநெடுங் குருதிமடுக் குளித்துநிணந் துய்த்தாடிப்
போயபரு வம்பணிகொள் பூதங்க ளேயுன்றிப்
பேயுமரும் பணிசெய்ய வுணவளித்த தெனப்பிறங்க.

(இ-ள்.) நெருப்பைச்சிந்துகின்ற ஆயுதங்களைவீசிப் போர்செய்யும் யுத்தகளத்தில், வெட்டுண்ட உடல்களில்தோய்ந்த உதிரமாகிய மடுவில்குளித்து நிணங்களையுண்டு கூத்தாடி, சென்றகாலத்தில் பணிகொள்ளுகின்ற பூதங்களேயல்லாமல் பேயும் உரியபணிசெய்யும்படி உணவளித்ததென்று விளங்கவும். ()

இனையகடுஞ் சமர்விளைய விகலுழந்த புறந்தலையிற்
பனைநெடுங்கை மதயானைப் பஞ்சவனார் படைக்குடைந்து
முனையழிந்த வடபுலத்து முதன்மன்னர் படைசரியப்
புனையுநறுந் தொடைவாகை பூழியர்வேம் புடன்புனைந்து.

(இ-ள்.) இத்தன்மையாகிய கொடும்போர்விளையும்படி சண்டைசெய்த போர்க்களத்தில், பனைபோலும்நீண்ட துதிக்கைபொருந்திய மதயானையையுடைய பாண்டியராஜாவினது சேனைகளுக்குத் தோற்றுப்போரிலழிந்த முதன்மைபொருந்திய வடபுலத்தரசர்களுடைய சேனைகளிறக்க, அப்பாண்டியர்பெருமான் அலங்கரிக்கப்பட்ட நறியவாகைமாலையை வேப்பமாலையுடனணிந்து.

வளவர்பிரான் றிருமகளார் மங்கையருக் கரசியார்
களபமணி முலைதிளைக்குந் தடமார்பர் கவுரியனு
ரிளவளவெண் பிறையணிந்தார்க் கேற்றதிருத்தொண் டரெல்லா
மளவில்புகழ் பெறவிளக்கி யருள்பெருக வரசளித்தார்.

(இ-ள்.) சோழராஜபுத்திரியாராகிய மங்கையர்க்கரசியாரது கலவைச்சாந்தணிந்த ஸ்தனங்கள் மூழ்கப்பெற்ற விசாலமாகிய மார்பினையுடைய நின்றசீர்நெடுமாறநாயனார் இளமைபொருந்திய வளவிய வெண்பிறையையணிந்த சிவபெருமானுக்குரிய திருத்தொண்டர்களெல்லாம் அளவற்ற பெரும்புகழ்பெறும்படி சிறப்புச்செய்து திருவருள்பெருக அரசாட்சிசெய்தருளினார்.—எ-று.

'இளவரவெண்பிறையணிந்தார்' என்றும் பாடபேதம். (அ)

திரைசெய்கட லுலகின்கட் டிருநீற்றி னெறிவிளங்க
வுரைசெய்பெரும் புகழ்விளக்கி யோங்குநெடு மாறனா
ரரசுரிமை நெடுங்கால மளித்திறைவ ரருளாலே
பரசுபெருஞ் சிவலோகத் தின்புற்றுப் பணிந்திருந்தார்.

(இ-ள்.) அலைவீசுகின்ற கடல்சூழ்ந்த நிலவுலகத்தில் திருநீற்றுச்சார்பாயுள்ள சைவசமயம் விளங்கும்பொருட்டுச், சொல்லத்தக்க பெரும்புகழைவிளக்கிச் சிறந்த நின்றசீர்நெடுமாறநாயனார் அநேககாலம் அரசாட்சிசெய்து சிவபெருமான் றிருவருளினால் (யாவரும்) துதிக்கத்தக்க பெரிய சிவலோகத்தில் பேரின்புற்று வணங்கியிருந்தார்.—எ-று. (௯)

பொன்மதில்சூழ் புகலிகா வலரடிக்கீழ்ப் புனிதராந்
தென்மதுரை மாறனார் செங்கமலக் கழல்வணங்கிப்
பன்மணிக டிரையோதம் பரப்புநெடுங் கடற்படப்பைத்
தொன்மயிலை வாயிலார் திருத்தொண்டி னிலைதொழுவாம்.

(இ-ள்.) மௌனமயமாகிய மதில்சூழ்ந்த சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளது திருவடிச்சார்பினால் பரிசுத்தராகிய அழகிய மதுராபுரியில் அரசுசெலுத்திய நின்றசீர்நெடுமாறநாயனார் செந்தாமரைமலர்போன்ற திருவடிகளைவணங்கி, குளிர்ந் அலைநீரானது பலவகை மணிகளைப்பரப்புகின்ற பெரிய கடற்கரையூராகிய பழைய திருமயிலைப்பதியி லவதரித்த வாயிலார்நாயனாரது திருத்தொண்டின் தன்மையைத் துதித்துச் சொல்லுவோம்.—எ-று.

நின்றசீர்நெடுமாறநாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆக திருவிருத்தம் - உகஎக.

---



திருமயிலைவாயிலார்நாயனர்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# வாயிலார்நாயனார் புராணம்.



சொல்வி ளங்குசீர்த் தொண்டைநன் னாட்டிடை
மல்ல னீடிய வாய்மை வளம்பதி
பல்பெ ருங்குடி நீடு பரம்பரைச்
செல்வ மல்கு திருமயி லாபுரி.

(இ-ள்.) புகழ் விளங்குகின்ற சிறந்த தொண்டைவளநாட்டிலே செழிப்புமிக்க மெய்ம்மையாகிய திருப்பதியாகவுள்ளது; பலபெருங்குடிகள் நீடித்து வாழ்கின்ற பரம்பரையாகவுள்ள செல்வங்கள் நிறைந்த திருமயிலாபுரியாகும்.

நீடு வேலைதன் பானிதி வைத்திடத்
தேடு மப்பெருஞ் சேமவைப் பாமென
வாடு பூங்கொடி மாளிகை யப்பதி
மாடு தள்ளுறு மரக்கலச் செப்பினால்.

(இ-ள்.) பெரிய கடலானது தன்னிடத்துள்ள பொருள்களை வைப்பதற்குத்தேடிய பெரிய சேமவைப்பாமென்று சொல்லும்படி, ஆடுகின்ற அழகிய கொடிகள் கட்டியமாளிகைகளையுடைய அத் திருப்பதியினருகில் மரக்கலங்களாகிய பாத்திரத்தினால் பலபொருள்களைத் தள்ளும்.—எ-று.

சேமவைப்பு—புதையல்; இருபெயரொட்டு. (௨)

கலஞ்சொ ரிந்த கரிக்கருங் கன்றுமுத்
தலம்பு முந்நீர் படிந்தணை மேகமு
நலங்கொண் மேதிநன் னாகுந் தெரிக்கொணா
சிலம்பு தெண்டிரைக் கானலின் சேணெலாம்.

(இ-ள்.) மரக்கலங்கள் சொரிந்த கரியயானைக்கன்றுகளையும், முத்துக்களலம்புகின்ற கடலில் நீருண்டணைந்த மேகங்களையும், நன்மைமிக்க எருமைகளினது நல்ல இளங்கன்றுகளையும், அலம்புகின்றதெள்ளிய அலைகளையுடைய கடற்கரைச்சோலையினிடங்களெங்கும் வேறுபாடு சொல்லமுடியா.—எ-று. (௩)

தவள மாளிகைச் சாலை முடங்கிறைத்
துவள்ப தாகை நுழைந்தணை தூமதி
பவள வாய்மட வார்முகம் பார்த்தஞ்சி
யுவள கஞ்சேர்ந் தொதுங்குவ தொக்குமால்.

(இ-ள்.) அசைகின்ற கொடிச்சீலைகள் கட்டிய வெண்மையாகிய மாளிகை வரிசைகளின் வளைவாகிய இறப்புகளில் நுழைந்து வருகின்ற தூய்மையா

கிய சந்திரன், பவளம்போலுஞ் சிவந்த வாயினையுடைய மாதர்களது முகத்தைக்கண்டு அஞ்சி அந்தப்புரஞ்சேர்ந்து ஒதுங்குதலையொத்திருக்கும்.—எ-று.

'மருங்குறை' என்றும் பாடம். (ச)

வீதி யெங்கும் விழாவணி காளையர்
தூதி யங்குஞ் சுரும்பணி கோதைய
ரோதி யெங்கு மொழியா வணிநிதி
பூதி யெங்கும் புனைமணி மாடங்கள்.

(இ-ள்.) வீதிகளிலெல்லாம் மங்கலவிழவுச் சிறப்புக்களும், புருஷர்களுக்குத் தூதுசெல்லத்தக்க வண்டுகள் மொய்க்கின்ற மாதர்களது கூந்தல்களிலெல்லாம் தரிக்கப்பட்ட ஆபரணங்களும், அலங்கரிக்கப்பட்ட அழகிய மாளிகைகளிலெல்லாம் செல்வங்களும் நீங்காதிருக்கும்.—எ-று. (ரு)

மன்னு சீர்மயி லைத்திரு மாநகர்த்
தொன்மை நீடிய சூத்திரத் தொல்குல
நன்மை சான்ற நலம்பெறத் தோன்றினார்
தன்மை வாயிலா ரென்னுந் தபோதனர்.

(இ-ள்.) நிலைபெற்ற சிறப்பினையுடைய திருமயிலையென்னும் பெரிய திருப்பதியில் பழைமையாக நீடித்துவாழ்கின்ற சூத்திரகுலத்தில் நன்மைமிக்க மேன்மை பெறும்படி நற்குணமமைந்த வாயிலார்நாயனாரென்னுந் தவமுனிவர் அவதரித்தார்.—எ-று. (சு)

வாயி லாரென நீடிய மாக்குடித்
தூய மாமர பின்முதற் றோன்றியே
நாய னார்திருத் தொண்டி னயப்புறு
மேய காதல் விருப்பின் விளங்குவார்.

(இ-ள்.) நீடித்துள்ள பெருங்குடியில் தூய்மையாகிய சிறந்த மரபிலே வாயிலார்நாயனாரென்று முதன்மையாக அவதரித்து, சிவபெருமானது திருத்தொண்டில் விருப்புறுகின்ற பொருந்திய அன்பாகிய பெருவிருப்பொடும் விளங்குவாராயினார்.—எ-று. (எ)

வேறு.

மறவாமை யானமைத்த மனக்கோயி லுள்ளிருத்தி
யுறவாதி தனையுணரு மொளிவிளக்குச் சுடரேற்றி
யிறவாத வானந்த மெனுந்திருமஞ் சனமாட்டி
யறவாணர்க் கன்பென்னு மமுதமைத்தர்ச் சனைசெய்வார்.

(இ-ள்.) (அவர் சிவபெருமானை) மறவாமையால் சமைத்த மனமாகிய ஆலயத்தில் எழுந்தருளுவித்து, உறவாதிகளை யுணரத்தக்க ஞானமாகிய சுடர் விளக்கேற்றி, கெடாத பேரானந்தமென்னுந் திருமஞ்சனங்கொண்டு அபிஷேகஞ்செய்து, அவ் வெமதுசிவபெருமானுக்கு அன்பாகிய திருவமுதை நிவேதித்துப் பூசைசெய்வாராயினார்.—எ-று. (அ)

அகமலர்ந்த வர்ச்சனையி லண்ணலார் தமைநாளு
நிகழவரு மன்பினா னிறைவழிபா டொழியாமே



முனையடுவார்நாயனர்.

திகழுநெடு நாள்செய்து சிவபெருமா னடிநிழற்கீழ்ப்
புகலமைத்துத் தொழுதிருந்தார் புண்ணியமெய்த் தொண்டனார்.

(இ-ள்.) மனமகிழ்ந்து செய்கின்ற ஞானபூசையில் சிவபெருமானை நாடோறும் விளங்கவருகின்ற பேரன்பினால் நிறைந்த வழிபாடு நீங்காமல் அநேககாலம் விளங்கச்செய்து, புண்ணியத்தை யுடைய மெய்யன்பராகிய அவ் வாயிலார்நாயனார் சிவபெருமானது திருவடிநிழலையடைந்து வணங்கியிருந்தார்.

நீராருஞ் சடையாரை நீடுமன வாலயத்து
ளாராத வன்பினா லர்ச்சனைசெய் தடியவர்பாற்
பேராத நெறிபெற்ற பெருந்தகையார் தமைப்போற்றிச்
சீராருந் திருநீடூர் முனையடுவார் திறமுரைப்பாம்.

(இ-ள்.) கங்கைநீர்தங்கிய சடைமுடியையுடைய சிவபெருமானைச் சிறந்தமனமாகிய திருக்கோயிலிலே நீங்காதபேரன்பினால் பூசனைசெய்து மெய்யடியார்களிடத்தினின்றும் நீங்காத முத்திநெறியைப்பெற்ற வாயிலார்நாயனாரைத் துதித்து, சிறப்புமிக்க திருநீடூரில் அவதரித்த முனையடுவார்நாயனாரது திருத்தொண்டின் திறத்தைக்கூறுவோம்.—எ-று. (கo)

வாயிலார்நாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆக திருவிருத்தம் - உகஅக.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# முனையடுவார்நாயனார் புராணம்.

மாறு கடிந்து மண்காத்த வளவர் பொன்னித் திருநாட்டு
நாறு விரைப்பூஞ் சோலைகளி னனைவாய் திறந்து பொழிசெழுந்தே
னாறு பெருகி வெள்ளமிடு மள்ளல் வயலின் மள்ளருழுஞ்
சேறு நறுவா சங்கமழுஞ் செல்வ நீடூர் திருநீடூர்.

(இ-ள்.) (வேற்றரசர்களது) பகைமையை யொழித்து இந்நிலவுலகத்தைப் பாதுகாத்த சோழராஜாக்களது காவிரிநாட்டிலே வாசனை வீசுகின்ற மலர்ச்சோலைகளிலுள்ள அரும்புகள் வாய்விண்டு பொழிகின்ற செழிய தேனானது ஆறுபோலப் பெருகி வெள்ளமிடுகின்ற சேற்றினையுடைய வயல்களில் உழவர்கள் உழுகின்ற சேறானது நறுமணங்கமழத்தக்க செல்வங்கள் நிறைந்த வூரானது திருநீடூராகும்.—எ-று. (க)

விளங்கும் வளமைத் திருநீடூர் வேளாண் டலைமைக் குடிமுதல்வா,
களங்கொள் மிடற்றுக் கண்ணுதலார் கழலிற் செறிந்த காதன்மிகு
முளங்கொ டிருத்தொண் டுரிமையினி லுள்ளார் நள்ளார்முனையெறிந்த
வளங்கொ டிறைவ ரடியார்க்கு மாறா தளிக்கும் வாய்மையார்.

(இ-ள்.) சிறந்து விளங்குகின்ற வளப்பத்தையுடைய அத்திருநீடூரிலே முதன்மையாகிய வேளாளர்குலத் தலைவராயுள்ளவர்; காளகண்டராகிய சிவபெருமானது திருவடிகளிற் பொருந்திய பேரன்புமிக்க திரு வுள்ளத்திற் கொண்ட திருத்தொண்டுரிமையிலுள்ளவர்; பகைவர்களது போரைவென்று கிடைத்தபொருளைக்கொண்டு சிவபெருமானடியார்களுக்கு நீங்காதுகொடுக்கும் மெய்யன்பினையுடையவர்.—எ-று.

'விளங்கும் வண்மைமிக்குள்ள' என்றும்பாடம். (உ)

மாற்றார்க் கமரி லழிந்துள்ளோர் வந்து தம்பான் மாநிதிய, மாற்றும் பரிசு பேசினு லதனை நடுவு நிலைவைத்துக், கூற்று மொதுங்கு மாவ்வினையாற் கூலி யேற்றுச் சென்றெறிந்து, போற்றும் வென்றி கொண்டிசைந்த பொன்னுங் கொண்டு மன்னுவார்.

(இ-ள்.) போர்முனையில் பகைவர்களுக்குத்தோற்றவர்கள் தம்மிடத்தில் வந்து பெரும்பொருள் கொடுக்கும்படி பேசினுல், அதனை நடுவுநிலைமையாக வைத்து, இயமனும் அஞ்சியொதுங்கத்தக்க போர்த்தொழிலினுல் கூலிபெற்றுச்சென்று போர்செய்து, துதிக்கத்தக்க வெற்றிபெற்று, அதனுல் கிடைத்த பொருளையுங் கொண்டு வாழ்கின்றவர்.—எ-று. (௩)

இன்ன வகையாற் பெற்றநிதி யெல்லா மீச னடியார்கள்
சொன்ன சொன்ன படிநிரம்பக் கொடுத்துத் தூய போனகமுங்
கன்ன னறுநெய் கறிதயிர்பால் கனியுள் ளூறுத்த கலந்தளித்து,
மன்னு மன்பி னெறிபிறழா வழித்தொண் டாற்றி வைகினுர்.

(இ-ள்.) இவ்வகையாகக் கிடைத்த திரவியங்களையெல்லாம் சிவபெருமானடியார்கள் சொன்ன சொன்னபடியே நிரம்பக்கொடுத்துத் தூய்மையாகிய அன்னமும், வெல்லம், நல்லநெய், பதார்த்தம், தயிர், பால், பழம் முதலிய வைகளையுங் கலந்துகொடுத்து நிலைபெற்ற அன்பின்முறைமை தவருவண்ணந் திருத்தொண்டுசெய்து வசித்தருளினுர்.—எ-று. (௪)

மற்றிந் நிலைமை பன்னெடுநாள் வையம் நிகழச் செய்துவழி
யுற்ற வன்பின் செந்நெறியா லுமையாள் கணவன் றிருவருளாற்
பெற்ற சிவலோ கத்தமர்ந்து பிரியா வுரிமை மருவினுர்.
முற்ற வுழந்த முனையடுவா ரென்னு நாம முன்னுடையார்.

(இ-ள்.) மிக்கபேரன்புசெய்த முனையடுவாரென்னுந் திருநாமத்தைமுதன்மையாகப்பெற்ற அந்நாயனுர் இவ்வாருகிய திருத்தொண்டினிலைமையை உலகத்தில் அநேகநாள்கள் விளங்கச்செய்து, அத்திருத்தொண்டின்வழியாகக் கிடைத்த அன்பின் நன்னெறியினுல் பார்வதிபாகராகிய சிவபெருமானது திருவருளினுல் கிடைத்த சிவலோகத்தில் அமர்ந்து வசித்து என்றும் நீங்காத உரிமையை யடைந்தருளினுர்.—எ-று. (௫)

யாவ ரெனினு மிகலெறிந்தே, யீச னடியார் தமக்கின்ப
மேவ வளிக்கு, மூர்த்தியார் விரைப்பூங் கமலக் கழல் வணங்கித்,
தேவர் பெருமான் சைவநெறி விளங்கச், செங்கோன் முறைபுரியுங்
காவல் பூண்ட கழற்சிங்கர் தொண்டி னிலைமை கட்டுரைப்பாம்.

(இ-ள்.) எத்தன்மையராயினும் போரில் வென்று, சிவனடியார்களுக்கு இன்பம்பொருந்தக் கொடுத்தருளிய மூர்த்தியார் நாயனாரது நறுமணங்கமழுந் தாமரைமலர்போன்ற திருவடிகளைவணங்கி, தேவர்கள் நாயகராகிய சிவபெருமானது சைவசமயம் உலகத்தில் சிறந்தோங்கும்பொருட்டுச்செங்கோன் முறைமையைச்செலுத்தும் அரசாட்சியை மேற்கொண்ட கழற்சிங்கநாயனாரது திருத்தொண்டின் நிலைமையைக் கூறுவோம்.—எ-று. (சு)

செறிவுண் டென்று திருத்தொண்டிற் சிந்தை செல்லும் பயனுவக்குங்
குறிபுண், டன்று கினுங்குறையொன் றில்லோ, நிறையுங் கருணையினால்
வெறியுண் சோலைத் திருமுருகன் பூண்டி வேடர் வழிபறிக்கப்,
பறியுண் டவரெம் பழவினைவேர் பறிப்பா ரென்னும் பற்றாலே.

(இ-ள்.) மேன்மை யுண்டென்று கருதித் திருத்தொண்டில் சிந்தை செல்லுகின்ற மெய்ப்பயனை விரும்புகின்ற குறிப்பு உண்டு; அஃது இல்லையாயினும், (சிவபெருமானது) நிறைந்த பெருங்கருணையினால் வாசனைபொருந்திய சோலைசூழ்ந்த திருமுருகன்பூண்டி யென்னுந் திருப்பதியிலே வேடர்கள் வழியில் பறிக்க, அவர்களால் பறிக்கப்பட்டவராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் எமது பழைமையாகிய இருவினையின் வேரையும் பறித்தருளுவாரென்னுந்தொடர்பினால் சிறிதுங்குறையில்லோ மாயினோம்.—எ-று.

'பழவினைநோய்' என்றும் பாடம். (எ)

மூர்த்தியார்நாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆக திருவிருத்தம்-உகககூ.

கறைக்கண்டன்சருக்கம் முற்றுப்பெற்றது.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஒன்பதாவது,

## கடல்சூழ்ந்த சருக்கம்.

௰

# கழற்சிங்கநாயனார் புராணம்.

படிமிசை நிகழ்ந்த தொல்லைப் பல்லவர் குலத்து வந்தார்
கடிமதின் மூன்றுஞ் செற்ற கங்கைவார் சடையார் செய்ய
வடிமல ரன்றி வேறொன் றறிவினுட் குறியா நீர்மைக்
கொடிநெடுந் தானை மன்னர் கோக்கழற் சிங்க ரென்பார்.

(இ-ள்.) உலகத்தில் விளங்குகின்ற பழைமையாகிய பல்லவர் குலத்தில் அவதரித்தவர்; (அவர்யாரெனின்,) காவலையுடைய முப்புரங்களையு மெரித்தருளிய கங்கைநதிதவழுஞ் சடைமுடியையுடைய சிவபெருமானது சிவந்த திருவடித்தாமரைகளை யன்றி வேறொன்றையும் அறிவில் சிந்தியாத பெருங்குணமமைந்த நெடிய கொடிப்படையையுடைய அரசர்பெருமானாகிய கழற்சிங்க நாயனாரென்பவர்.—எ-று. (௧)

காடவர் குரிசி லாராங் கழற்பெருஞ் சிங்கர் தாமு
மாடக மேரு வில்லா ரருளினா லமரிற் சென்று
கூடலர் முனைகள் சாய வடபுலங் கவர்ந்து கொண்டு
நாடற நெறியில் வைக நன்னெறி வளர்க்கு நாளில்.

(இ-ள்.) காடவர் தலைவராகிய பெரிய அந்தக் கழற்சிங்கநாயனார், பொன்மயமாகிய மேருமலையை வில்லாகவுடைய சிவபெருமான்றிருவருளினால் போருக்குச் சென்று பகைவர்களது போர்கெடும்படி வென்று வடபுலத்தைக் கவர்ந்துகொண்டு, உலகமுழுதும் தருமநெறியில் வாழும்பொருட்டு நன்மார்க்கத்தை விருத்திசெய்யும் நாள்களில்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௨)

குவலயத் தரனார் மேவுங் கோயில்கள் பலவுஞ் சென்று
தவலரு மன்பிற் றாழ்ந்து தக்கமெய்த் தொண்டு செய்வார்
சிவபுரி யென்ன மன்னுந் தென்றிரு வாரூ ரெய்திப்
பவமறுத் தாட்கொள் வார்தங் கோயிலுட் பணியப்புக்கார்.

(இ-ள்.) நிலவுலகத்தில் சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல திருக்கோயில்களையுமடைந்து நீங்காத பேரன்புடன் வணங்கித் தகுந்த மெய்ம்மையாகிய திருத்தொண்டு செய்கின்றவராகிய அந்நாயனார், (பூலோக) சிவலோகமென்று சொல்லும்படி நிலைபெற்றிருக்கின்ற அழகிய திருவாரூரையடைந்து



கழற்சிங்கநாயனர்.

(ஆன்மாக்களது) பாவங்களை யொழித்து அதடிமைகொண்டருளுஞ் சிவபெருமானது திருக்கோயிலினுள்ளே வணங்கப் புகுந்தருளினார்.—எ-று. (க)

அரசிய லாயத் தோடு மங்கணர் கோயி லுள்ளான்
முரசுடைத் தானை மன்னன் முதல்வனை வணங்கும் போதில்
விரைசெறி மலர்மென் கூந்த லுரிமைமெல் லியலார் தம்மு
ளுரைசிறந் துயர்ந்த பட்டத் தொருதனித் தேவி மேவி.

(இ-ள்.) சிவபெருமானது திருக்கோயிலினுள்ளே, வெற்றிமுரசையுடைய சேனைகளை பொருந்திய கழற்சிங்க நாயனார் தமது அரசுரிமைச் சுற்றத்தாரோடுஞ் சிவபெருமானை வணங்கும்பொழுது, நறுமணங்கமழும் மலரையணிந்தகூந்தலையுடைய இராஜபத்தினிமார்களில் புகழ்சிறந்தோங்கிய ஒப்பற்ற பட்டத்து மனைவியாரடைந்து.—எ-று.

இதுமுதல் இரண்டுபாடலுங் குளகம். (உ)

கோயிலை வலங்கொண் டங்கட் குலவிய பெருமை யெல்லாஞ்
சாயன்மா மயிலே போல்வா டனித்தனி கண்டு வந்து
தூயமென் பள்ளித் தாமந் தொடுக்குமண் டபத்தின் பாங்கர்
மேயதோர் புதுப்பூ வங்கு விழுந்ததொன் றெடுத்து மோந்தாள்.

(இ-ள்.) திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்து அங்கு விளங்குகின்ற சிறப்புக்களெல்லாவற்றையும், சாயலையுடைய சிறந்த மயில்போல்பவராகிய தேவியார் தனித்தனியே பார்த்துக்கொண்டுவந்து தூய்மையாகிய மெல்லிய திருமாலை கட்டுந் திருமண்டபத்தி னருகிலே அங்கு விழுந்துகிடந்த ஒரு புதுப்பூவை எடுத்து மோந்தார்.—எ-று. (ங)

புதுமலர் மோந்த போதிற் செருத்துணைப் புனிதத் தொண்ட
ரிதுமலர் திருமுற் றத்து ளெடுத்துமோந் தனளா மென்று
கதுமென வோடிச் சென்று கருவிகைக் கொண்டு பற்றி
மதுமலர்த் திருவொப் பாடன் மூக்கினைப் பிடித் தரிந்தார்.

(இ-ள்.) அந்தப் புதுப்பூவையெடுத்து மோந்தபொழுது, தூய்மையாகிய திருத்தொண்டராகிய செருத்துணைநாயனார் இம்மலரைப் புஷ்பமண்டபத்துள் எடுத்து மோந்தனளென்று கருதி விரைந்தோடிவந்து பிடித்துக் கையில் கத்தியைக்கொண்டு, தேன்பொருந்திய தாமரைமலரில் வாழுந் திருமகளை யொத்த அப்பட்டத்து மனைவியாரது மூக்கைப்பிடித்து அரிந்தார்.—எ-று. (ச)

வார்ந்திழி குருதி சோர மலர்க்கருங் குழலுஞ் சோரச்
சோர்ந்துவீழ்ந் தரற்றுந் தோகை மயிலெனத் துளங்கி மண்ணிற்
சேர்ந்தயர்ந் துரிமைத் தேவி புலம்பிடச் செம்பொற் புற்று
ளார்ந்தபே ரொளியைக் கும்பிட் டரசனு மணைய வந்தான்.

(இ-ள்.) பட்டத்துத் தேவியார் ஒழுகியோடுகின்ற உதிரமொழுகவும், மலரையணிந்த கரிய கூந்தல் சோரவும், சோர்ந்து விழுந்து அழுகின்ற கலாபத்தையுடைய மயிலைப்போல நடுங்கிப் பூமியில் விழுந்து அயர்ந்து புலம்ப, அப்பொழுது கழற்சிங்கநாயனாரும் செம்பொன்மயமாகிய புற்றினிடத்தில் வீற்றிருந்தருளும் பேரொளிப் பிழம்பாகிய ஸ்ரீவன்மீகநாதரை வணங்கிச் சமீபமாக வந்தனர்.—எ-று. (ரு)

வந்தணைவுற்ற மன்னன் மலர்ந்தகற் பகத்தின் வாசப்
பைந்தளிர்ப் பூங்கொம் பொன்று பார்மிசை வீழ்ந்த தென்ன
நொந்தழிந் தரற்று வாளை நோக்கியிவ் வண்டத் துள்ளோர்
சிந்தையுஞ் சினையஞ் சாதே யார்செய்தா ரென்னு மெல்லை.

(இ-ள்.) வந்துசேர்ந்த கழற்சிங்கநாயனார், மலர்ந்த கற்பகத்தினது நறுமணங்கமழும் பசிய தளிர்களையுடைய ஒரு பூங்கொம்பானது பூமியில் விழுந்தாற்போல மனம்வருந்திப் புலம்புகின்ற தேவியாரைப் பார்த்து, இக்கொடுஞ்செய்கையை இவ்வண்டத்துள்ளவர்களில் அஞ்சாமல் செய்தவர்கள் யாவரென்று வினவும்பொழுது.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (அ)

அந்நிலை யணைய வந்து செருத்துணை யாரா மன்பர்
முன்னுறு நிலைமை யங்குப் புகுந்தது மொழிந்த போது
மன்னனு மவரை நோக்கி மற்றிதற் குற்ற தண்டந்
தன்னையவ் வடைவே யன்றோ தடிந்திடத் தகுவதென்று.

(இ-ள்.) அப்பொழுது செருத்துணை நாயனார் அவருக்குச் சமீபத்தில் வந்து அங்கு முன்புநடந்தசங்கதியைச் சொன்னபொழுது, கழற்சிங்க நாயனாரும் அச்செருத்துணை நாயனாரைப்பார்த்து, இதற்குச் செய்யவேண்டிய தண்டனையை அவ்வரிசையாகவே யன்றோ துணிக்கத் தகுவதென்று கூறி.—எ-று.

கட்டிய வுடைவா டன்னை யுருவியக் கமழ்வா சப்பூத்
தொட்டுமுன் னெடுத்த கையா முற்படத் துணிப்ப தென்று
பட்டமு மணிந்து காதல் பயில்பெருந் தேவி யான
மட்டவிழ் குழலாள் செங்கை வளையொடுந் துணித்தா னன்றே.

(இ-ள்.) இடையிற்கட்டிய உடைவாளை யுருவி, அந்த நறுமணங்கமழும் புதுப்பூவை முதலில்தொட்டு எடுத்த கையினையே முன்னே துணிக்கத்தக்கதென்று, பட்டத்தை யணிந்து அன்பு மிகுத்திருக்கின்ற மாதேவியாகிய தேன் சிந்துங்கூந்தலையுடைய அம்மனைவியாரது(புஷ்பமெடுத்த) சிவந்த கையை வளையலோடும் வெட்டித் துணித்தார்.— எ-று. (௧௦)

ஒருதனித் தேவி செங்கை யுடைவாளாற் றுணித்த போது
பெருகிய தொண்ட ரார்ப்பின் பிறங்கொலி புவிமேற் பொங்க
விருவிசும் படைய வோங்கு மிமையவ ரார்ப்பும் விம்மி
மருவிய தெய்வ வாச மலர்மழை பொழிந்த தன்றே.

(இ-ள்.) ஒப்பற்ற பட்டத்துத் தேவியாரது சிவந்த கையை உடைவாளினால் தடிந்தபொழுது, மிக்க திருத்தொண்டர்கள் செய்யும் ஆரவாரத்தின் பேரொலியானது உலகத்தில் மிகுத்து ஓங்க, பெரிய ஆகாய முழுதும் நிறைந்த தேவர்களது ஆரவாரமும் அதிகரித்து நிலைபெற்ற தெய்வமணங்கமழும் கற்பக மலர்மாரிபொழிந்தது.—எ-று. (௧௧)

அரியவத் திருத்தொண் டாற்று மரசனு ரவனில் கால
மருவிய வுரிமை தாங்கி மாலயற் கரியார் மன்னுந்
திருவருட் சிறப்பி னாலே செய்யசே வடியி னீழற்
பெருகிய வுரிமை யாகும் பேரரு ளெய்தி னாரே.

(இ-ள்.) செய்தற்கரிய அத்தகைய திருத்தொண்டைச் செய்த கழற்சிங்க நாயனார் அநேககாலம் நிலைபெற்ற அரசுரிமையைத் தாங்கி, அரிபிரமர்களால் காணுதற்கரிய சிவபெருமானது பொருந்திய திருவருட்சிறப்பினால் சிவந்த திருவடி நிழலில் நிறைந்த பேரின்புற்றிருக்கும் மிக்க திருவருளடைந்தார்.—எ-று.

'பேரரசெய்தினர்' என்றும் பாடம். (கஉ)

வையக நிகழக் காதன் மாதேவி தனது செய்ய
கையினைத் தடிந்த சிங்கர் கழலிணை தொழுது போற்றி
யெய்திய பெருமை யன்ப ரிடங்கழி யாரென் றேத்து
மெய்யரு ளுடைய தொண்டர் செய்வினை விளம்பலுற்றாம்.

(இ-ள்.) உலகத்தில் சிறந்தோங்கும்படி பெருவிருப்பினையுடைய பட்டத்து மனைவியாரது சிறந்த கையை வெட்டிய கழற்சிங்கநாயனாருடைய இரண்டு திருவடிகளையும் வணங்கித் துதித்து, நிலைபெற்ற பெருமையினையுடைய மெய்யன்பராகிய இடங்கழி நாயனாரென்று (உலகததார) துதிக்கின்ற மெய்யருளுடைய திருத்தொண்டரது திருத்தொண்டின்சிறப்பைச் சொல்லத்தொடங்குவோம்.—எ-று. (கரு)

கழற்சிங்கநாயனார் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம் உஉ0௯

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# இடங்கழிநாயனார் புராணம்.

எழுந்திரைமா கடலாடை யிருநிலமா மகண்மார்பி
லழுந்துபட வெழுதுமிலைத் தொழிற்றெய்யி லணியினவாஞ்
செழுந்தளிரின் புடைமறைந்த பெடைகளிப்பத் தேமாவின்
கொழுந்துணர்கோ திக்கொண்டு குயிலாடு கோனாடு.

(இ-ள்.) செழித்த துளிர்களி னிடையில் மறைந்த பெண்குயில்கள் மகிழும்படி தேமாமரத்தினது நல்ல துளிர்களைக்கோதிக் கடித்துக்கொண்டு ஆண்குயில்கள் கூவித்தேடுகின்ற கோனாடானது, அலைகளெழுந்து மோதுகின்ற பெரிய கடலாகிய ஆடையையுடைய பெரிய நிலவுலகமாகிய பெண்ணினது மார்பிலே அழுந்தும்படி எழுதிய திருத்தமாகிய சித்திரத்தின் அழகினை யொத்திருக்கும்.—எ-று. (க)

முருகுறுசெங் கமலமது மலர்துதைந்த மொய்யளிகள்
பருகுறுதெண் டிரைவாவிப் பயில்பெடையோ டிரையருந்தி
வருகுறுதண் டுளிவாடை மறையமா தவிச்சூழற்
குருகுறங்குஞ் சோனாட்டுக் கொடிநகரங் கொடும்பாளூர்.

(இ-ள்.) நறுமணங்கமழுஞ் செந்தாமரையின் தேனினை மலரில் நெருங்கிய வண்டுகள் உண்ணுகின்ற தெள்ளியஅலைகளையுடைய தடாகத்தில், பொருந்திய பெண் பறவைகளோடு இரையையுண்டு, மோதிக்கொண்டு வருகின்ற குளிர்ந்த துளிகளையுடைய வாடைக்காற்றானது மறையும்படி குருக்கத்திச் சோலையில் ஆண் பறவைகள் உறங்குகின்ற சோனாட்டிலே கொடிகளையுடைய நகரமாகவுள்ளது கொடும்பாளூராகும்.—எ-று. (உ)

அந்நகரத் தினிலிருக்கும் வேளிர்குலத் தரசளித்து
மன்னியபொன் னம்பலத்து மணிமுகட்டிற் பாக்கொங்கிற்
பன்னுதுலைப் பசும்பொனாற் பயில்பிழம்பா மிசையணிந்த
பொன்னெடுந்தோ ளாதித்தன் புகழ்மரபிற் குடிமுதலோர்.

(இ-ள்.) அந்தக் கொடும்பாளூரில்வாழ்கின்ற சிற்றரசர்களது வமிசத்திலரசாட்சிசெய்து, நிலைபெற்ற பொன்னம்பலத்திலே இரத்தினமயமாகிய சிகரத்தில் அழகிய கோங்கமலர்போன்ற ஒருதுலாம் பசும்பொன்னினால் ஒளிமயமாக மேலேவேய்ந்த விஜயலக்ஷ்மிதங்கிய நீண்ட தோள்களையுடைய ஆதித்தச்சோழனது புகழினையுடைய மரபில் குடிக்குமுதல்வரா யுள்ளவர்.—எ-று.

அரசளித்துக் குடிமுதலோராயுள்ளவர் எனமுடிக்க. அன்றி, அரசளித்துமன்னிய எனக் கூட்டலுமொன்று. 'பொன்னெடுந்தோள்' என்பதற்கு, பொன்னாபரணத்தையணிந்த நீண்டதோள் எனப் பொருள்கூறினுமாம். கனகசபையின் முகட்டில் பொன் ஓடு வேய்ந்த அநபாயச்சோழமகாராஜாவினுக்கு, ஆதித்தச்சோழன் திருநீற்றுச்சோழன் முதலியன சிறப்புப்பெயராதலால், ஈண்டு, 'பொன்னெடுந்தோளாதித்தன்' என்று கூறினார். (௩)

இடங்கழியா ரெனவுலகி லேறுபெரு நாமத்தா
ரடங்கலர்முப் புரமெரித்தா ரடித்தொண்டி னெறியன்றி
முடங்குநெறி கனவினிலு முன்னுதா ரொருநாளுந்
தொடர்ந்தபெருங் காதலினாற் றொண்டர்வேண் டியசெய்வார்.

(இ-ள்.) இடங்கழிநாயனா ரென்று உலகத்தில் சிறந்தோங்குகின்ற பெரிய திருநாமத்தையுடையவர்; பகையசுரர்களது முப்புரங்களையுமெரித்தருளிய சிவபெருமானது திருவடித்தொண்டு செய்யும் நன்னெறியேயன்றி, முடங்கலாகிய புறச்சமயநெறியைச் சொப்பனத்திலுங் கருதாதவர்; எப்பொழுதுந் தொடர்ந்துவருகின்ற பேரன்பினால் சிவனடியார்கள் வேண்டுவனவற்றைச் செய்கின்றவர்.—எ-று.

முடங்கு நெறியாவது,—வேதாகமத்திற்கு விரோதமாக வுள்ள புறச்சமயநெறி. (௪)

சைவநெறி வைதிகத்தின் றருமநெறி யொடுந்தழைப்ப
மைவளருந் திருமிடற்றார் மன்னியகோ யில்களெங்கு

மெய்வழிபாட் டர்ச்சனைகள் விதிவழிமேன் மேல்விளங்க
மொய்வளர்வண் புகழ்பெருக முறைபுரிபு மந்நாளில்.

(இ-ள்.) சைவமார்க்கமும் வைதிக தருமமார்க்கங்களுந் தழைக்கும் பொருட்டுக் கருநிறம் வளருங் கண்டத்தினை யுடைய சிவபெருமான் வீற்றிருந் தருளுந் திருக்கோயில்கடோறும் மெய்ம்மையாகிய வழிபாட்டோடு பூசனைகள் வேதாகமவிதிப்படி மேன்மேலும் விருத்தியாகவும், நெருங்கிய பெரும் புகழ் பெருகவும் செங்கோல் செலுத்துகின்ற நாள்களில்.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (௬)

சங்கரன்ற னடியாருக் கமுதளிக்குந் தவமுடையா
ரங்கொருவ ரடியவருக் கமுதொருநா ளாக்கவுட
லெங்குமொரு செயல்காணு தெய்திடிசெய் தொழின்முட்டப்
பொங்கியெழும் பெருவிருப்பாற் புரியும்வினை தெரியாது.

(இ-ள்.) அந்நகரத்தில், சிவனடியார்களுக்குத் திருவமுது செய்விக்கும் ஒரு அடியவர் சிவனடியார்களுக்கு ஒருநாள் திருவமுது செய்விக்கப் பொருள் சேகரிக்க எங்கும் வழிகாணுமல், தாம்செய்துவந்த திருத்தொண்டு தவற, மிகுத்தெழுகின்ற பெருவிருப்பினுல் பொருள்சம்பாதிக்குந் தொழில் இதுஎன்பது தெரியாமல்.—எ-று. (௬)

அரசரவர் பண்டாரத் தந்நாட்டி னெற்கூட்டி
னிரைசெறிந்த புரிபலவா நிலைகொட்ட காரத்திற்
புரைசெறிநள் ளிருளின்கட் புகுகுமுகந் தெடுப்பவனை
முரசெறிகா வலர்கண்டு பிடித்தரசன் முன்கொணர்ந்தார்.

(இ-ள்.) அரசராகிய இடங்கழிநாயனுருடைய பல பொருட்சாலையிலே, அந்நாட்டினது நெற்கூட்டுவரிசைகள் நெருங்கிய பலபோர்களிருக்கின்ற கொட்டகாரத்திலே குற்றமிக்க அர்த்தராத்திரியில் புகுந்து (நெற்களை) முகந்தெடுக்கின்றவனை வெற்றிமுரசடிக்கின்ற காவலாளர்கள் பார்த்துப் பிடித்து, இடங்கழிநாயனுருக்குமுன்னே கொண்டுவந்தார்கள்.—எ-று. (எ)

மெய்த்தவரைக் கண்டிருக்கும் வேன்மன்னர் வினவுதலு
மத்தனடி யாரையா னமுதுசெய்விப் பதுமுட்ட
வித்தகைமை செய்தேனென் றியம்புதலு மிகவிரங்கிப்
பத்தரைவிட் டிவரன்றோ பண்டார மெனக்கென்பார்.

(இ-ள்.) மெய்த்தவத்தினையுடைய அவ்வடியவரைப் பார்த்திருந்த வேற்படையையுடைய இடங்கழிநாயனுர் (நீர் நம்முடைய நெல் அம்பாரத்தை ஏன் கவர்ந்தீர் என்று) வினவவும், அவர் அடியேன் சிவனடியார்களைத் திருவமுதுசெய்விக்குந்திருப்பணியானது (பொருளில்லாமல்) முட்டுப்பட, (அதுகாரணமாக) இவ்வாறு செய்தேனென்றுகூறவும், (அதுகேட்டு) மிகவும் மனமிரங்கி அவரை இவ்வடியவரன்றோ? எனக்குப் பெரும்பொருளாயுள்ளவரென்பவராய்.—எ-று.

இதுமுதலிரண்டுபாடலுங் குளகம். (அ)

நிறையழிந்த வுள்ளத்தா னெற்பண்டா ரமுமன்றிக்
குறைவினிதிப் பண்டார மானவெலாங் கொள்ளைமுகந்

திறைவனடி யார்கவர்ந்து கொள்கவென வெம்மருங்கும்
பறையறையப் பண்ணுவித்தார் படைத்தநிதிப் பயன்கொள்வார்.

(இ-ள்.) தாமடைந்த பொருளினாலாகிய பயனைப் பெறுகின்றவராகிய அந் நாயனார் உறுதி யழிந்த திருவுள்ளத்தோடும் நெற்பண்டார மாத்திரமே யன்றிக் குறைவற்ற மற்ற நிதிப்பண்டாரங்க ளனைத்தையும் சிவனடியார்கள் கொள்ளைகொண்டு வாரிச் செல்லக்கடவதென்று எவ்விடங்களிலும் பறையறையச் செய்வித்தார்.—எ-று.

பாரம்பரியமாகத் தம் முன்னோர்காலந்தொட்டுச் சேர்த்துவைத்த பெரும்பொருளாதலின், 'குறைவினிதிப்பண்டாரம்' என்றார். (கூ)

எண்ணில்பெரும் பண்டார மீசனடி யார்கொள்ள
வுண்ணிறைந்த வன்பினா லுறுகொள்ளை மிகவூட்டி
தண்ணளியா னெடுங்காலந் திருநீற்றி னெறிதழைப்ப
மண்ணிலருள் புரிந்திறைவர் மலரடியி னிழற்சேர்ந்தார்.

(இ-ள்.) அளவற்ற பெரும்பொருள்களைச் சிவனடியார்கள் கொண்டு செல்லும்படி தமதுள்ளத்தில் நிறைந்த பேரன்பினால் பெருங்கொள்ளையாக விட்டு, குளிர்ந்த பேரருளோடு அநேககாலம் திருநீற்றுச்சார்பாயுள்ள சைவசமயந் தழைத்தோங்கும்படி நிலவுலகத்தில் செங்கோல் செலுத்திச் சிவபெருமானது திருவடி நிழலை யடைந்தருளினார்.—எ-று. (க0)

மைதழையு மணிமிடற்றார் வழித்தொண்டின் வழிபாட்டி
லெய்துபெருஞ் சிறப்புடைய விடங்கழியார் கழல்வணங்கி
மெய்தருவார் நெறியன்றி வேறொன்று மேலறியாச்
செய்தவராஞ் செருத்துணையார் திருத்தொண்டின் செயன்மொழிவாம்.

(இ-ள்.) கருநிறம் விளங்கும் கண்டத்தினையுடைய சிவபெருமானது பரம்பரைத் திருத்தொண்டின் வழிபாட்டினால் அடைந்த பெருஞ் சிறப்பினையுடைய இடங்கழிநாயனாரது திருவடிகளை வணங்கி, மெய்ஞ்ஞானத்தைத் தருகின்ற சிவபெருமானது சைவநெறியேயன்றி வேறொன்றையுமறியாத தவமுனிவராகிய செருத்துணைநாயனாரது திருத்தொண்டின் செயலை இனிச் சொல்லுவோம்.—எ-று. (கக)

இடங்கழிநாயனார் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ. திருவிருத்தம்-உஉஉ0.

---



செருத்துணைநாயனார்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# செருத்துணைநாயனார் புராணம்.

உள்ளும் புறம்புங் குலமரபி னொழுக்கம் வழுக்கா வொருமைநெறி
கொள்ளு மியல்பிற் குடிமுதலோர் மலிந்த செல்வக் குலப்பதியாந்
தெள்ளுந் திரைகண் மதகுதொறுஞ் சேலுங்கயலுஞ் செழுமணியுந்
தள்ளும் பொன்னி நீர்நாட்டு மருக னாட்டுத் தஞ்சாவூர்.

(இ-ள்.) அகம் புறம் என்னு மிரண்டிடத்துந் தங்குலமரபினொழுக்கத்தி னின்றுஞ் சிறிதுந் தவறாத ஒருமைப்பட்ட நன்னெறியினை மேற்கொண் டொழுகு மியல்பினையுடைய அவ்வக்குடித்தலைவர்கள் நெருங்கியிருக்குஞ் செல்வம் பொருந்திய சிறந்த நகரமாகவுள்ளது (யாதெனின்,) தெளிவாகிய அலைகள் மதகுகள்தோறும் சேல்மீன்களையுங் கயல்மீன்களையுஞ் செழிய முத்துக்களையு மொதுக்குகின்ற காவிரிநதியையுடைய சோழநாட்டின்கண்ணுள்ள மருகனாட்டிலே தஞ்சாவூராகும்.—எ-று. (க)

சீரின் விளங்கு மப்பதியிற் றிருந்து வேளாண் குடிமுதல்வர்
நீரின் மலிந்த செய்யசடை நீற்றர் கூற்றி னெஞ்சிடித்த
வேரி மலர்ந்த பூங்கழல்சூழ் மெய்யன் புடைய சைவரெனப்
பாரி னிகழ்ந்த செருத்துணையார் பரவுந் தொண்டி னெறிநின்றார்.

(இ-ள்.) சிறப்போடு விளங்குகின்ற அத்தஞ்சாவூரிலே உயர்ந்த வேளாளர் குடித்தலைவரா யுள்ளவர்; கங்கைநீர் விளங்குஞ் சிவந்த சடைமுடியை யுடைய சிவபெருமானது இயமனுடைய மார்பொடியும்படி யுதைத்தருளிய நறுமணங்கமழுந் தாமரைமலர்போன்ற திருவடிகளில் பொருந்திய மெய்யன்புடைய சைவரென்று உலகத்தில் விளங்குஞ் செருத்துணைநாயனார், யாவருந் துதிக்கத்தக்க திருத்தொண்டின் நெறியிலே நின்றவர்.—எ-று.

'வேரின்மலிந்த பூங்கழல்கள்' என்றும் பாடம். (உ)

ஆன வன்பர் திருவாரு ராழித் தேர்வித் தகர்கோயின்
ஞான முனிவ ரிமையவர்க ணெருங்கு நலஞ்சேர் முன்றிலினுண்
மான நிலவு திருப்பணிகள் செய்து காலங் களில்வணங்கிக்
கூன விளவெண் பிறைமுடியார் தொண்டு பொலியக் குலவுநாள்.

(இ-ள்.) அவ்வாறாகிய செருத்துணைநாயனார் திருவாரூர்த் திருப்பதியில் சக்கரமமைந்த(பூமியாகிய)இரதத்தினையுடைய சிவபெருமான்வீற்றிருந்தருளுந் திருக்கோயிலில் மெய்ஞ்ஞானத்தையுடையமுனிவர்களும் தேவர்களும் நெருங் கிய நன்மைமிக்க திருமுற்றத்தில் பெருமை பொருந்திய பல திருப்பணிகள்

செய்து காலங்கடோறும் வணங்கி, கூனலாகிய இளைய வெண்பிறையை யணிந்த திருமுடியையுடைய சிவபெருமானது திருத்தொண்டு விளங்கும்படி வாழும்நாள்களில்.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (௩)

உலகு நிகழ்ந்த பல்லவர்கோச் சிங்க ருரிமைப் பெருந்தேவி,
நிலவு திருப்பூ மண்டபத்து மருங்கு நீங்கிக் கிடந்ததொரு
மலரை யெடுத்து மோந்ததற்கு வந்து பொறாமை வழித்தொண்ட,
ரிலகு சுடர்வாய்க் கருவியெடுத் தெழுந்த வேகத் தாலெய்தி.

(இ-ள்.) உலகத்தில் விளங்குகின்ற பல்லவர்குலத் தலைவராகிய கழற்சிங்கநாயனாரது பட்டத்து மாதேவியார் விளங்குகின்ற பூமாலை கட்டும் மண்டபத்தினருகில் விழுந்துகிடந்த ஒரு புதுப்பூவையெடுத்து மோந்ததற்கு, அதனைப் பொறாமல் வழித்தொண்டராகிய அச் செருத்துணைநாயனார் ஒளிவிளங்குங் கத்தியையெடுத்து எழுந்த வேகத்தோடு வந்தடைந்து.—எ-று. (௪)

கடிது முட்டி மற்றவடன் கருமென் கூந்தல் பிடித்தீர்த்துப்,
படியில் வீழ்த்தி மணிமூக்கைப் பற்றிப் பரமர் செய்யசடை
முடியி லேறுந் திருப்பூமண் டபத்து மலர்மோந் திடுமூக்கைத்,
தடிவ னென்று கருவியினா லரிந்தார் தலைமைத் தனித்தொண்டர்.

(இ-ள்.) ஒப்பற்ற செருத்துணைநாயனார்விரைந்து நெருங்கி அப்பட்டத்துத் தேவியாரது கருமையாகியமெல்லிய கூந்தலைப்பிடித்திழுத்துப் பூமியில் தள்ளி, இரத்தினாபரணமணிந்த மூக்கைப்பிடித்து, சிவபெருமானது சிவந்த சடைமுடியில் சூடும் புஷ்பமண்டபத்திலுள்ள மலரை யெடுத்து மோந்த மூக்கைத் தறிப்பேனென்று கத்தியினாலரிந்தார்.—எ-று.

மணிமூக்கு என்பதற்கு, அழகிய மூக்கு எனப் பொருள்கூறினும் பொருந்தும். (௫)

அடுத்த திருத்தொண் டுலகறியச் செய்த வடலே றனையவர்தாந்,
தொடுத்த தாம மலரிதழி முடியா ரடிமைத் தொண்டுகட
லுடுத்த வுலகி னிகழச்செய் துய்யச் செய்ய பொன்மன்று
ளெடுத்த பாத நிழலடைந்தே யிறவா வின்ப மெய்தினார்.

(இ-ள்.) பொருந்திய திருத்தொண்டை உலகத்தா ரறியும்படி செய்த வலிய ஆண்சிங்கம் போன்றவராகிய செருத்துணைநாயனார் தொடுக்கப்பட்ட கொன்றைமலர்மாலையை யணிந்த சடைமுடியை யுடைய சிவபெருமானது அடிமைத் திருத்தொண்டைச் சமுத்திரஞ் சூழ்ந்த நிலவுலகத்தில் விளங்கச்செய்து தாமுய்யும்பொருட்டுச் செம்பொன்னாலாகிய திருச்சிற்றம்பலத்தில் (ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளும்படி) தூக்கிய குஞ்சிதபாத நிழலை யடைந்து ஓர் காலத்துங் கெடாத பேரின்பமடைந்தருளினார்.—எ-று. (௬)

செங்கண் விடையார் திருமுன்றில் விழுந்த திருப்பள் ளித்தாம,
மங்க ணெடுத்து மோந்ததற் கரச னுரிமைப் பெருந்தேவி.
துங்க மணிமூக் கரிந்தசெருத் துணையார் தூய கழலிறைஞ்சி.
யெங்கு நிகழ்ந்த புகழ்த்துணையா ருரிமை யடிமை யெடுத்துரைப்பாம்.

(இ-ள்.) சிவந்த கண்களையுடைய இடபத்தை வாகனமாக வூர்ந்தருளிய சிவபெருமான் றிருக்கோயிலின் திருமுற்றத்திலே விழுந்துகிடந்த புதுமலரை அங்கு எடுத்து மோந்ததற்காகக் கழற்சிங்கநாயனாரது அரசுரிமைக்குரிய பட்டத்து மாதேவியாரது உயர்ந்த இரத்தினாபரணமணிந்த மூக்கை யரிந்த செருத்துணைநாயனாரது தூய்மையாகிய திருவடிகளை வணங்கி, எங்கும் விளங்கிய புகழ்த்துணைநாயனாருடைய உரிமையாகிய அடிமைத் திருத்தொண்டை யெடுத்துச் சொல்லுவோம்.—எ-று. (எ)

செருத்துணைநாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம்-உஉஉஎ

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# புகழ்த்துணைநாயனார் புராணம்.

செருவிலிபுத் தூர்மன்னுஞ், சிவமறையோர் திருக்குலத்தார்,
அருவரைவில் லாளிதனக் ககத்தடிமை யாமதனுக்
கொருவர்தமை, நிகரில்லா ருலகத்துப் பரந்தோங்கிப்
பொருவரிய புகழ்நீடு புகழ்த்துணையா ரெனும்பெயரார்.

(இ-ள்.) செருவிலிபுத்தூரிலே நிலைபெற்று வாழும் ஆதிசைவவேதியர் குலத்தில் அவதரித்தவர், அரிய மேருமலையை வில்லாகவுடைய சிவபெருமானுக்கு அகத்தடிமைசெய்வதில் தமக்கு ஒருவரும் நிகரில்லாதவர், நிலவுலகத்திற் பரவி யோங்கி ஒப்பற்ற பெரும்புகழ் நீடித்திருக்கின்ற புகழ்த்துணைநாயனாரென்னுந் திருநாமமுடையவர்.—எ-று.

'அருவிவரைவில்லாளிக்கு' எனப் பாடமாயின, அருவியாற்றையுடைய மேருமலையை வில்லாகவுடைய சிவபெருமானுக்கு எனப் பொருள் கொள்க.()

தங்கோனைத் தவத்தாலே தத்துவத்தின் வழிபடுநாட்,
பொங்கோத ஞாலத்து வற்கடமாய்ப், பசிபுரிந்து,
மெங்கோமான் றனைவிடுவே னல்லேனென் றிராப்பகலுங்
கொங்கார்பன் மலர்கொண்டு, குளிர்புனல்கொண் டருச்சிப்பார்.

(இ-ள்.) தமது சிவபெருமானை மெய்த்தவத்தினால் உண்மையாகிய சிவாகமவிதிப்படி அருச்சனை செய்துவரும் நாள்களில், பொங்குகின்ற கடல்சூழ்ந்த நிலவுலகத்தில் பஞ்சம்நேர்ந்து பசியால் வருந்தியும், எமது சிவபெருமானருச்சனையை விடுவேனல்லேனென்று இரவும்பகலும், நறுமணங்கமழும் பல மலர்களைகொண்டு குளிர்ந்த நீரினால் பூசிப்பாராயினார்.—எ-று. (உ)

மாலயனுக் கரியானை மஞ்சனமாட் டும்பொழுது,
சாலவுறு பசிப்பிணியால் வருந்திநிலை தளர்வெய்திக்,
கோலநிறை புனலுங்கு குடந்தாங்க மாட்டாமை,
யாலமணி கண்டத்தார் முடிமீது விழ்த்தயர்வார்.

(இ-ள்.) அரிபிரமர்களால் காணப்படாதவராகிய சிவபெருமானைத் திருமஞ்சனமாட்டும்பொழுது, மிகப்பொருந்திய பசிநோயினால் வருந்திச் சரீரநிலை தளர்ந்து அழகிய நீர்நிறைந்த திருமஞ்சனக்குடத்தைத் தாங்கமாட்டாமையால் விஷத்தையணிந்த கண்டத்தையுடைய சிவபெருமானது திருமுடியின்மேல் தவறிவீழ்த்துச் சோர்வாராயினர்—எ-று.

மஞ்சனமாட்டுதல் - அபிஷேகஞ்செய்வித்தல், வாசனைத்திரவியங்கலந்த நன்னீராதலால், 'கோலநிறைபுனல்' என்றார். (௩)

சங்கரன்ற னருளால்,ஓர் துயில்வந்து தமையடைய,
வங்கணனுங் கனவின்கணருள்புரிவா,னருந்துணவு.
மங்கியநாட் கழிவளவும்,வைப்பதுநித் தமுமொருகா
சிங்குனக்கு நாமென்ன,விடர்நீங்கி யெழுந்திருந்தார்.

(இ-ள்.) அப்பொழுது சிவபெருமானுடைய திருவருளினால் ஒரு சிறு துயில் அவரை வந்தடைய, சிவபெருமான் சொப்பனத்திலெழுந்தருளி யருள் செய்வார், (அன்பனே !) அருந்துகின்ற உணவுகுறைந்த இப்பஞ்சகாலம் நீங்கும்வரையிலும் நாம் உனக்கு இங்குநித்தமும் ஒருகாசுவைப்போம், என்று அருளிச்செய்ய, புகழ்த்துணைநாயனர் துன்பம் நீங்கி யெழுந்திருந்தார்.—எ-று.

இவரது துன்பத்தைப்பார்ப்பதற் கியலாமல், அருள்புரிந்த கிருபா நோக்கமுடையவரென்பார், 'அங்கணன்' என்றார். (௪)

பெற்றமுகந் தேறுவார் பீடத்தின் கீழொருகா
சற்றமடங் கிடவளிப்ப,வன்பருமற் றதுகைக்கொண்
டுற்றபெரும் பசியதனு லுணங்குமுடம் புடனுவந்து
முற்றுணர்வு தலைநிரம்ப,முகமலர்ந்து களிகூர்ந்தார்.

(இ-ள்.) இடபத்தை விரும்பி யேறியருளும் சிவபெருமான் தமது பீடத்தின்கீழே ஒருகாசை அவரது சோர்வுநீங்கும்படி யளித்தருள, புகழ்த்துணை நாயனரும் அக்காசினைக்கையிற்கொண்டு,பொருந்திய பெரும்பசியினால் மெலிந்திருக்குமுடம்போடு சந்தோஷித்துப் பேருணர்ச்சி யுண்டாக முகமலர்ந்து மகிழ்கூர்ந்தருளினர்.—எ-று.

தலைநிரம்புதல் - மிகுதியாக வுண்டாதல். (௫)

அந்நாள்போ லெந்நாளு,மளித்தகா சதுகொண்டே.
யின்னாத பசிப்பிணிவந் திருத்தநா ணீங்கியபின்,
மின்னார்செஞ் சடையார்க்கு மெய்யடிமைத் தொழில்செய்து.
பொன்னாட்டி னமரர்தொழப் புனிதரடி நிழற்சேர்ந்தார்.

(இ-ள்.) அந்நாள்போலவே எந்நாளுங் கொடுத்தருளும் ஒவ்வொரு காசைப்பெற்று கொடிய பசிநோய்வந்து வருத்திய பஞ்சகாலம் நீங்கினபின்பு,

மின்போல்விளங்குஞ் சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமானுக்கு மெய்ம்மையாகிய அகத்தடிமைத் தொழில்செய்து விண்ணுலகத்துள்ள தேவர்கள்வணங்கும்படி சிவபெருமானது திருவடிநிழலை யடைந்தருளினார்.—எ-று. (சு)

பந்தணையு மெல்விரலாள் பாகத்தர் திருப்பாதம்
வந்தணையு மனத்துணையார் புகழ்த்துணையார் கழல்வாழ்த்திச்
சந்தணியு மணிப்புயத்துத் தனிவீர ராந்தலைவர்
கொந்தணையு மலரலங்கற் கோட்புலியார் செயலுரைப்பாம்.

(இ-ள்.) பந்துபொருந்திய மெல்லிய திருவிரலையுடைய உமாதேவியாரை வாமபாகத்திலுடைய சிவபெருமான் திருவடியை வந்தடைந்த மனத்துணையாக வுள்ளவராகிய புகழ்த்துணைநாயனாரது திருவடிகளைத்துதித்து, சந்தனமணிந்த அழகிய தோள்களையுடைய ஒப்பற்றவீரர்கள் தலைவராகிய கொத்தாகப் பொருந்திய மலர்மாலையையணிந்த கோட்புலிநாயனாரது திருத்தொண்டின் செயலைச் சொல்லுவோம்.—எ-று. (எ)

புகழ்த்துணைநாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம் - உஉகூச.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# கோட்புலிநாயனார் புராணம்.

---

நலம்பெருகுஞ் சோணாட்டு நாட்டியத்தான் குடிவேளாண்
குலம்பெருக வந்துதித்தார் கோட்புலியா ரெனும்பெயரார்
தலம்பெருகும் புகழ்வளவர் தந்திரியா ராய்வேற்றுப்
புலம்பெருகத் துயர்விளைப்பப் போர்விளைத்துப் புகழ்விளைப்பார்.

(இ-ள்.) நன்மைமிக்க சோழவளநாட்டிலே திருநாட்டியத்தான் குடியென்னுந் திருப்பதியில் வேளாளர்குலம் விளங்கும்படி வந்து அவதரித்தவர்; கோட்புலிநாயனாரென்னுந் திருநாமமுடையவர்; உலகத்திற்சிறந்த புகழையுடைய சோழராஜாவிடத்தில் சேனாதிபதித் தொழிலுடையவராய்ப் பகைவர்களது தேசங்கள் மிக்க துயர்விளையும்படி போர்செய்து கீர்த்தியை விளைவிக்கின்றவர்.—எ-று. (க)

மன்னவன்பாற் பெறுஞ்சிறப்பின் வளமெல்லா மதியணியும்
பின்னுசடைத் தங்கோயிற் றிருவமுதின் படிபெருகச்
செந்நென்மலைக் குவடாகச் செய்துவருந் திருப்பணியே
பன்னெடுநாள் செய்தொழுகும் பாங்குபுரிந் தோங்குநாள்.

(இ-ள்.) சோழராஜாவினிடத்துப் பெறுகின்ற சிறப்பினையுடைய வளங்களனைத்தையும், சந்திரசேகரராகிய சிவபெருமானது திருக்கோயில்கடோறுந் திருவமுதின் கட்டளை விருத்தியாகும்படி சம்பாநெல்லை மலைச்சிகரம்போலக் கட்டி, வருகின்ற திருப்பணியைப்பலநாள் செய்தொழுகுகின்ற தன்மையைச் செய்து சிறந்திருக்கும்நாள்களில்.—எ-று.

பிஞ்ஞகர் - தலைக்கோலமுடையவர். இத்திருவிருத்தம் இனவெதுகையாகவந்தது. பாங்கு - பகுதி.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (உ)

வேந்தனை வலிற்பகைஞர் வெம்முனைமேற் செல்கின்றார்,
பாந்தள்பூ ணனைவணிந்தார் தமக்கமுது படியாக.
வேந்தலார் தாமெய்து மளவும்வேண் டுஞ்செந்நெல்
வாய்ந்தகூ டவைகட்டி,வழிக்கொள்வார் மொழிகின்றார்.

(இ-ள்.) சோழராஜனது ஏவலினால் பகைவர்களது வெவ்விய போர்முனைமேற் செல்கின்றவராகிய கோட்புலிநாயனார், பாம்பையாபரணமாகவணிந்த சிவபெருமானுக்கு அமுதுபடியாகும்பொருட்டுத் தாம் திரும்பிவருமளவும் வேண்டிய சம்பாநெற்கள்பொருந்திய கூடுகளைக்கட்டிவைத்துச் செல்லும் நாயனார் சொல்லுகின்றார்.—எ-று. (ங)

தந்தமர்க ளாயினார் தமக்கெல்லாந் தனித்தனியே.
யெந்தையார்க் கமுதுபடிக் கேற்றியநெல் லிவையழிக்கச்
சிந்தையாற் றனினைவார், திருவிரையாக் கலியென்று.
வந்தனையா லுரைத்தகன்றார் மன்னவன்மாற் றார்முனைமேல்.

(இ-ள்.) தம்முடைய சுற்றத்தார்களா யுள்ளவர்களனைவருக்கும் தனித்தனியே எமது சிவபெருமானுக்கு அமுதுபடிக்குக் கட்டிய இந்நெற்கூடுகளை அழிக்கும்படி மனத்தினால் நினைக்கின்றவர்கள் "திருவிரையாக்கலி" என்று வந்தனையுடன் ஆணையிட்டுச் சோழராஜனது பகைவர்களுடைய போருக்குப் போயினார்.—எ-று.

'திருவிரையாக்கலி' என்பது, சிவபெருமானைக்குறித்து உறுதிகூறுஞ் சத்தியமொழி. (ச)

மற்றவர்தாம் போயினபின், சிலநாளில்,வற்கால
முற்றலுமச் சுற்றத்தா,ருணவின்றி யிறப்பதனிற்,
பெற்றமுயர்த் தவரமுது படிகொண்டா கிலும்பிழைத்துக்
குற்றமறப் பின்கொடுப்போ மெனக்கூடு குலைத்தழித்தார்.

(இ-ள்.) கோட்புலிநாயனார் போயினபின்பு சிலநாளில் பஞ்சம்வரவும், அந்தச்சுற்றத்தார்கள் போசனமின்றி யிறப்பதைப்பார்க்கிலும் இடபத்தைக்கொடியாக வுயர்த்திய சிவபெருமானுக்குக் கட்டிவைத்த அமுதுபடியை யெடுத்தாகிலும்(உண்டு)பிழைத்து, குற்றம்நீங்கப் (பஞ்சம்நீங்கின)பின் கொடுப்போமென்று அந்நெற்கூட்டைக்குலைத்து எடுத்துச் செலவழித்தார்கள்.—எ-று. ()

மன்னவன்றன் றெம்முனையில் வினைவாய்த்து, மற்றவன்பா
னன்னிதியின் குவைபெற்ற நாட்டியத்தான் குடித்தலைவ,

ரந்நகரிற் றமர்செய்த பிழையறிந்த தறியாமே,
துன்னினார் சுற்றமெலாந் துணிப்பனெனுந் துணிவினராய்.

(இ-ள்.) சோழராஜனுடைய போர்முனையில் வெற்றிபெற்று, அவ்வரசனிடத்தில் நல்லபொருட் குவைகளைப்பெற்ற கோட்புலிநாயனார் அந்நகரத்தில் தமது சுற்றத்தார்கள்செய்த குற்றத்தையறிந்த தறியாமுன்னமே, அச்சுற்றத்தாரையெல்லாம் வெட்டுவேனென்னுந் துணிவுள்ளவராய் வந்தடைந்தார். ()

எதிர்கொண்ட தமர்க்கெல்லா மினியமொழி பலமொழிந்து,
மதிதங்கு சுடர்மணிமா ளிகையின்கண் வந்தணைந்து.
பதிகொண்ட சுற்றத்தார்க் கெல்லாமுபைந் துகினிதிய
மதிகந்தந் தளிப்பதனுக் கழைமின்க ளென்றுரைத்து.

(இ-ள்.) தம்மையெதிர்கொண்டுவந்த சுற்றத்தாருக்கெல்லாம் பல இனியவசனங்கூறி, சந்திரன் தங்குகின்ற ஒளிவிளங்கும் அழகிய திருமாளிகையில் வந்தடைந்து ஊரிலுள்ள தமது சுற்றத்தாரனைவருக்கும் பசிய வஸ்திரங்களையுந் திரவியங்களையும் மிகுதியாகக் கொடுப்பதற்கு அழையுங்களென்று சொல்லி.

பட்டாடை முதலிய சிறந்த வஸ்திரமென்பார், 'பைந்துகில்' என்றார்.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (எ)

எல்லாரும் புகுந்ததற்பி னிருநிதிய மளிப்பார்போ.
னல்லார்தம் பேரோன்முன் கடைகாக்க நாதன்றன்
வல்லாணை மறுத்தமுது படியழித்த மறக்கிளையைக்.
கொல்லாதே விடுவேனோ வெனக்கனன்று கொலைபுரிவார்.

(இ-ள்.) (அவ்வாறே) எல்லாரும் வந்தபின்பு நல்லவராகிய கோட்புலிநாயனார் பெருந்திரவியத்தைக் கொடுப்பவர்போல, கோட்புலியென்னுந் தமது பெயருள்ள காவலாளனைத் தலைவாயிலைக் காக்கும்படிவைத்து, சிவபெருமானது (திருவிளையாக்கலி என்னும்) வலிய ஆணையை மறுத்து அமுதுபடியையெடுத்துச் செலவழித்த அதிபாதகத்தை யுடைய சுற்றத்தாரைக் கொல்லாமல் விடுவேனோவென்று கோபித்துக் கொலைசெய்வாராயினார்.—எ-று.

சிவநேச முடையவராகலின், 'நல்லார்' என்றும், சிவநிவேதனத்திற்கு வைத்திருந்த நெற்போரை யழித்துண்ட அதிபாதக முடையவராகலின், 'மறக்கிளை' என்றுங் கூறினார். (அ)

தந்தையார் தாயார்மற் றுடன்பிறந்தார் தாரங்கள்
பந்தமார் சுற்றத்தார் பதியடியார் மதியணியு
மெந்தையார் திருப்படிமற் றுண்ணவிசைந் தார்களையுந்
சிந்தவாள் கொடுதுணித்தார் தீயவினைப் பவந்துணிப்பார்.

(இ-ள்.) தந்தையார், தாயார், உடன்பிறந்தார், மனைவிமார்கள், பந்தத்தையுடைய உறவினர்கள், அவ்வூரிலுள்ள தமது பணிவிடைக்காரர்கள், சந்திரசேகரராகிய எமது சிவபெருமானது திருப்படியை உண்ண இசைந்தவர்கள் ஆகிய அனைவர்களையும் தீவினைசம்பந்தமாகிய பிறவியை துணிக்கவல்லவராகிய கோட்புலிநாயனார் வாளைக்கொண்டு உயிர் சிந்தும்படி வெட்டினார்.—எ-று.

தந்தையார் முதலியோரைக் கொன்றதனால் தீங்குறாது, அந்த புண்ணியத் தொழிலாய்ப் பிறப்பொழிந்து முத்தி யெய்துதற்குரிய பக்குவம் வாய்ந்தவராகலின் 'தீயவினைப் பவந்துணிப்பார்' என்றார். (௯)

பின்னங்குப் பிழைத்ததொரு பிள்ளையைத்தம் பெயரோனவ்
வன்னந்துய்த் திலதுகுடிக் கொருபுதல்வ, னருளுமென.
இந்நெல்லுண் டாண்முலைப்பா லுண்டதென, வெடுத்தெறிந்து,
மின்னல்ல வடிவாளா, லிருதுணியாய் விழவேற்றார்.

(இ-ள்.) பின்பு அவ்விடத்துப் பிழைத்திருந்த ஒரு குழந்தையைக் கோட்புலியென்னுங் காவலாளன் (வெட்டாமல் தடுத்து, சுவாமிகளே! இக்குழந்தை அவ்வன்னத்தை யுண்டதன்று, (அன்றியும்) ஒரு குடிக்கு ஒரே புதல்வனாகலால் வெட்டாதருளுமென்று வேண்ட, (நாயனார்) இக்குழந்தை இந்நெல்லரிசிச் சோற்றை யுண்டவளது முலைப்பாலை யுண்டதென்று கூறி, எடுத்து மேலெறிந்து மின்போல் விளங்கும் நல்ல வடித்த வாளினால் இருதுண்டாய் விழும்படி துணித்தார்.—எ-று.

சிவசொத்தைப் புசித்தவளது பாலை யுண்டது தமது குழந்தையென்று சிறிதுங் கவனியாமல் 'வாளாலிரு துணியாய் விழவேற்றார்' என்றதனால், சிவத்துரோகஞ் செய்தவர்களுக்கேயன்றி, அவர்களோடு சேர்ந்தவர்களுக்குந் தீங்குண்டாமென்பது, இதனால் குறிப்பித்ததாயிற்று. (௧௦)

அந்நிலையே சிவபெருமா னன்பரெதிர் வெளியேநின்,
றுன்னுடைய கைவாளா லுறுபாச மறுத்தகிளை,
பொன்னுலகின் மேலுலகம் புக்கணையப் புகழோய்நீ,
யிந்நிலைநம் முடனணைகென், றேவியெழுந் தருளினார்.

(இ-ள்.) அப்பொழுதே சிவபெருமான் கோட்புலிநாயனாருக்கெதிரில் ஆகாயத்தில்நின்று, பெரும்புகழையுடைய அன்பனே! உன்னுடைய கைவாளினால் பொருந்திய பாசங்களை யறுத்த உன் சுற்றத்தார்கள் விண்ணுலகிற்கு மேலுலகமாகிய சிவலோகத்தில் அடைய, நீ இவ்வண்ணமே நம்முடன் வரக்கடவை யென்று கட்டளையிட்டு எழுந்தருளினார்.—எ-று.

சிவத்துரோகமுடையார் மீளாநரகெய்துவ ரென்பது திண்ணமாயினும், இவரது கைவாளால் வெட்டுண்டமையின், அப்பாவநீங்கிப் புண்ணியமெய்தப் பெறுதலின், 'உன்னுடைய கைவாளா லுறுபாசமறுத்த கிளை' என்றார். (௧௧)

அத்தனை யன்னையா யாருயிரா யமிர்தாகி,
முத்தனை முதல்வன்றா ளடைந்துகிளை முதறடிந்த.
கொத்தலர்தார்க் கோட்புலியா ரடிவணங்கிக், கூட்டத்திற்
பத்தராய்ப் பணிவார்தம் பரிசினையாம் பகருவாம்.

(இ-ள்.) தந்தையாகியும், தாயாகியும், அரிய உயிராகியும், அமுதமாகியும், முத்தனாகியுமுள்ள சிவபெருமானது திருவடிகளையடைந்து சுற்றத்தாருடைய வினைமுதலை யறுத்த கொத்தாகிய மலர்மாலையையணிந்த கோட்புலிநாயனாரது திருவடிகளை வணங்கி, திருக்கூட்டத்தவர்களில் பத்தராய்ப்பணிவார்களுடைய அன்பின் தன்மையை யாம் சொல்லுவோம்.—எ-று.

சிவனடியார்கள் சிவபெருமானையே தந்தை தாய் முதலிய வெல்லாப் பொருள்களுமாகக் கொண்டொழுகும் முறைமை யுடையவர்களாதலால், 'அத்தனு யன்னையா யாருயிரா யமிர்தாகி - முத்தனு முதல்வன்' என்று கூறினுர். இதனை :—"தந்தை தாய் குரவனுசான் சங்கர னிராசை பெண்டிர் - மைந்தர் பல்லுயிருஞ் சுற்ற மாசிலா வீசனன்ப - ரந்தமில் பிறவியேழு மபெகை யென்ப தோர்ந்தே - மெந்தையார் கருணைகாட்டி யெம்மை யாட்கொண்ட வன்றே' எனவருந் திருவிளையாடற் புராணத்தானு முணர்க. (சஉ)

மேவரிய பெருந்தவம்யான் முன்புவிளைத் தனவென்னே
யாவதுமோர் பொருளல்லா வென்மனத்து மன்றியே
நாவலர்கா வலர்பெருகு நதிவழிய வழிநடந்த
சேவடிப்போ தெப்போதுஞ் சென்னியினு மலர்ந்தனவால்.

(இ-ள்.) வெள்ளம் பெருகியோடிய காவிரிநதியானது விலகும்படி (திருவையாற்று) வழியே நடந்தருளிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளுடைய திருவடித் தாமரைகள் யாது மோர் பொருளல்லாத அடியேனுடைய மனத்துமன்றிச் சிரசின்மேலும் மலர்ந்தன ; ஆதலால், அடியேன் அடைதற்கரிய பெருந்தவம் முன்பு யாது செய்தனவோ ? (அறியேன்.)—எ-று.

பெருந்தவ மில்வழி ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளிடத்து அன்பு நிகழாதாகலின், 'மேவரிய பெருந்தவம் யான் முன்பு விளைத்தன வென்னே' என்றார்.

கோட்புலிநாயனுர் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ. திருவிருத்தம்-உஉசங.

---

கடல்சூழ்ந்த சருக்கம் முற்றுப்பெற்றது.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

பத்தாவது,

## பத்தராய்ப்பணிவார் சருக்கம்.

# பத்தராய்ப்பணிவார் புராணம்.

ஈசருக்கே யன்பானார் யாவரையுந் தாங்கண்டாற்
கூசிமிகக் குதுகுதுத்துக் கொண்டாடி மனமகிழ்வுற்
றாசையினா லாவின்பின் கன்றணைந்தாற் போலணைந்து
பேசுவன பணிந்தமொழி யினியனவே பேசுவார்.

(இ-ள்.) சிவபெருமானுக்கே அன்பராயுள்ளவர்கள், எக்குலத்தாராயினுமவர்களைக்கண்டால் அச்சங்கொண்டு மிகுதியாகக் குதுகலிப்படைந்து கொண்டாடி மனமகிழ்ந்து அத்தியந்த ஆசையுடன் பசுவுக்குப்பின்னே கன்றுதொடர்ந்தணைவதுபோல அணைந்து, அவர்களுடன் பேசும்வார்த்தைகள் பணிவான மொழியால் இனியவற்றையே பேசுவார்கள்.—எ-று.

கன்று தாய்ப்பசுவை யாதரவாகக் கொண்டு பின்றொடர்ந்து செல்வது போல, மெய்யன்பர்களுக்குச் சிவனடியார்களே பெரும்பற்று யுள்ளவர்களாகலின், 'கன்றணைந்தாற் போலணைந்து' என்று கூறினார். (௧)

தாவரிய வன்பினாற் சம்புவினை யெவ்விடத்தும்
யாவர்களு மர்ச்சிக்கும் படிகண்டா லினிதுவந்து
பாவனையா னோக்கினாற் பலர்காணப் பயன்பெறுவார்
மேவரிய வன்பினான் மேலவர்க்கு மேலானார்.

(இ-ள்.) எவ்விடத்துஞ் சிவபெருமானை யாவர்களும் கெடாத பேரன்புடன் அருச்சித்தலைக்கண்டால், மனமகிழ்ந்து, பாவனையினாலும் தரிசனத்தினாலும் பலருங்காணும்படி பிறவிப்பயனை யடைவார்கள்; அடைதற்கரிய பேரன்பினால் சிறந்தவர்களுக்குஞ் சிறந்தவர்களாயுள்ளவர்கள்.—எ-று. (௨)

அங்கணனை யடியாரை யாராத காதலினாற்
பொங்கிவரு முவகையுடன் றாம்விரும்பிப் பூசிப்பார்
பங்கயமா மலர்மேலான் பாம்பணையா னென்றிவர்க
டங்களுக்குஞ் சார்வரிய சரண்சாருந் தவமுடையார்.

(இ-ள்.) சிவபெருமானையும் சிவனடியார்களையும் நீங்காத அன்பினால் அதிகரித்தெழுகின்ற பெருமகிழ்வோடும் விரும்பிப்பூசிப்பவர்கள்; சிறந்த தாமரைமலரில் வாழும் பிரமனும், சேஷசயனத்தையுடைய விஷ்ணுவுமென்று

கூறுமிருவராலு மடைதற்கரிய திருவடியைச் சார்ந்திருக்கும் பெருந்தவமுடையவர்கள்.—எ-று.

சிவபூசையைப் போலவே சிவனடியார் பூசையுஞ் சிறந்ததாகலின், 'அண்ணலை யடியவரை யாராத காதலினாற் - பொங்கிவரு முவகையுடன் றாம்விரும்பிய பூசிப்பார்' என்றார். (௧)

யாதானு மிவ்வுடம்பாற் செய்வினைக ளேறுயர்த்தார்
பாதார விந்தத்தின் பாலாக வெனும்பரிவாற்
காதார்வெண் குழையவர்க்காம் பணிசெய்வார் கருக்குழியிற்
போதார்க ளவர்புகழ்க்குப் புவனமெலாம் போதாவால்.

(இ-ள்.) யாதேனும் இவ்வுடம்பினால் செய்யும் புண்ணியங்களனைத்தும் இடபத்தைக்கொடியாகவுயர்த்திய சிவபெருமானது திருவடித்தாமரைகளுக்கே பிரீதியாகக்கடவன வென்னும் அன்பினால், வெள்ளிய சங்கக்குழையை யணிந்த திருச்செவியினையுடைய சிவபெருமானுக்கிசைந்த திருப்பணியைச் செய்கின்றவர்கள்; ஜனனமாகிய குழியில் செல்லாதவர்கள்; அத்தகைய பத்தர்களுடைய புகழுக்கு இவ்வுலகமனைத்தும் இடம்போதாவாம்.—எ-று. (௨)

சங்கரனைச் சார்ந்தகதை தான்கேட்குந் தன்மையரா
யங்கணனை மிகவிரும்பி யயலறியா வன்பினால்
கங்கைநதி மதியிதழி காதலிக்குந் திருமுடியார்
செங்கமல மலர்ப்பாதஞ் சேர்வதனுக குரியார்கள்.

(இ-ள்.) சிவசம்பந்தமாகிய சரித்திரங்களையே விரும்பிக்கேட்குங்குணமுடையவர்களாய்ச் சிவபெருமானை விரும்பி அயலறியாத பேரன்பினால், கங்கைநதியையும் இளம்பிறையையுங் கொன்றைமலர்மாலையையும் விரும்பியணிந்தருளுந் திருமுடியையுடைய அச்சிவபெருமானது செந்தாமரை மலர்போன்ற திருவடிகளையே யடைதற்குரியவர்கள்.—எ-று. (௩)

ஈசனையே பணிந்துருகி யின்பமிகக் களியெய்திப்
பேசினவாய் தழுதழுப்பக் கண்ணீரின் பெருந்தாரை
மாசிலா நீறழித்தங் கருவிதர மயிர்சிலிர்ப்பக்
கூசியே யுடல்கம்பித் திடுவார்மெய்க் குணமிக்கார்.

(இ-ள்.) சிவபெருமானையே வணங்கி மனமுருகி இன்பமிகும்படி களிப்புற்றுப் பேசும் நாவானது தழுதழுக்கும்படி ஆனந்தக்கண்ணீரின் பெருந்தாரையானது குற்றமற்ற திருவெண்ணீற்றை யழித்து அருவிபோலொழுக, மயிர்க்கூச்செறிய கூச்சத்துடன் உடலங் கம்பிப்பார்கள்; மெய்ம்மையாகிய நற்குணமிக்க பத்தர்களாயுள்ளவர்கள்.—எ-று.

இதனை—"எத்து மெந்தை யியற்கை யுணர்தொறு - நாத்து டித்தெழும் பாமை நகைப்புறம்-பூத்த மூத்தந் துடித்தல் விபூதிகொண்-டார்த்த ணிந்ததன் னங்கங் குலுங்குதல்" "மயிர்ப்பு றம்புள கித்தல் வரன்முறை - வியர்த்த றன்வச மன்றி விளம்புநாப்-பெயர்த்தி டாமையா னந்தப் பெருங்கணீ-ரயர்ப்ப டுத்துதல் வாய்விட் டழுதலே" என்னும் உபதேச காண்டத்தானும், "தொண்டரடித்தொழல் பூசைத்தொழின் மகிழ்த லழகார் துளங்கிய வர்ச்சனை புரிதரு

குதி நியமங்கள்-கொண்டபணி திருவடிக்கே கொடுத்த லீசன் குணமருவு மரு ங்கதையைக் குலவிக்கேட்டு - மண்டிவிழி துளும்பன் மயிர்சிலும்ப லுன்னன் மருவு திருப்பணி காட்டிவருவ வாங்கி - யுண்டிகொளா தொழிதலென விவை யோ லொட்டு முடையரவர் பத்தரென வுரைத்துளாரோ" என்னுந் திருத்தொண் டர் புராணசாரத் தானுமுணர்க. (சு)

நின்றாலு மிருந்தாலுங் கிடந்தாலு நடந்தாலு
மென்றாலுந் துயின்றாலும் விழித்தாலு மிமைத்தாலு
மன்றாடு மலர்ப்பாத மொருகாலு மறவாமைக்
குன்றாத வுணர்வுடையார் தொண்டராங் குணமிக்கார்.

(இ-ள்.) நிலத்தில் நின்றிருந்தாலும், உட்கார்ந்திருந்தாலும், படுத்திருந் தாலும், நடந்துசென்றாலும், மென்றாலும், நித்திரைசெய்தாலும், விழித்திருந் தாலும், கண்ணிமைத்தாலும், கனகசபையில் ஆனந்தத்தாண்டவஞ் செய்தரு ளுஞ் சிவபெருமானது தாமரைமலர்போன்ற திருவடிகளை ஒருபொழுதும் மற வாமையாகிய குறையாத பேரறிவுடையவர்கள்; பத்தர்களாகிய நற்குண மிக்க வர்கள்.—எ-று.

இதனை :—"நின்று மிருந்துங் கிடந்து நடந்துநினை-யென்றுஞ் சிவன் றாளிணை" என்னுங் குறள்வெண்பாவானும், "இருக்கினு நிற்கும்போது மிரவு கண் டுயிலும் போதும் - பொருக்கென நடக்கும்போதும் பொருந்தியுண் டுய்க் கும்போது - முருக்கிதழ்க் கனிவா யாரை முயங்கிநெஞ் சழியும்போதுந்-திருக் களா வுடையநம்பா சிந்தையுன் பாலதாமே" என்னுந் திருவிருத்தத்தானு முணர்க. (எ)

சங்கரனுக் காளான தவங்காட்டித் தாமதனாற்
பங்கமறப் பயன்றுய்ப்பார் படிவிளக்கும் பெருமையினா
ரங்கணனைத் திருவாரூ ராள்வானை யடிவணங்கிப்
பொங்கியெழுஞ் சித்தமுடன் பத்தராய்ப் போற்றுவார்.

(இ-ள்.) தாங்கள் சிவபெருமானுக் கடிமையான தவவேடத்தைக் கா ட்டி, அதனால் வருகின்றபயனைப் பழுதுநீங்க சீவனஞ்செய்யார்கள்; உலகத்தை விளக்கும் மேன்மையினையுடையவர்கள்; அருட்கண்ணராகிய திருவாரூரில் வீற்றிருந்தரசு செய்யுஞ் சிவபெருமானைத் திருவடிகளில் வணங்கி, அன்பு அதி கரித்தெழுகின்ற திருவுள்ளத்தோடும் பத்தராய்த்துதிப்பார்கள்.—எ-று. (அ)

பத்தராய்ப்பணிவார் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆக திருவிருத்தம்-உஉநிகூ.

---



பரமனையே பாடுவார்.

சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்.

௳

சிவமயம்.

திருச்சிற்றம்பலம். ௬

# பரமனையேபாடுவார்புராணம்.

புரமூன்றுஞ் செற்றானைப் பூணாக மணிந்தானை
யுரனில்வரு மொருபொருளை யுலகனைத்து மானானைக்
கரணங்கள் காணாமற் கண்ணார்ந்து நிறைந்தானைப்
பரமனையே பாடுவார் தம்பெருமை பாடுவாம்.

(இ-ள்.) திரிபுரங்களையுமெரித்தழித்தவரும், பாம்பையாபரணமாகவணிந்தவரும், ஞானத்தில்தோன்றி விளங்கும் ஒப்பற்ற பெரும்பொருளாயுள்ளவரும், சர்வலோகங்களுந் தாமேயாக வுள்ளவரும், புறக்கரணங்களாற் காணப்படாமல் அகக்கண்ணில் நிறைந்து நின்றவருமாகிய சிவபெருமானைப்பாடும் மெய்யடியார்களுடைய பெருமையை பாடத்தொடங்குவோம்.—எ-று. (௧)

தென்றமிழும் வடகலையுந் தேசிகமும் பேசுவன
மன்றினிடை நடம்புரியும் வள்ளலையே பொருளாக
வொன்றியமெய் யுணர்வோடு முள்ளுருகிப் பாடுவார்
பன்றியுடன் புட்காணாப் பரமனையே பாடுவார்.

(இ-ள்.) பன்றியுருவங்கொண்டு தேடிய விஷ்ணுவினாலும், அன்னவுருவங்கொண்டு தேடிய பிரமனாலுங் காணப்படாத சிவபெருமானைப்பாடு மெய்யடியார்கள் தமிழும், சம்ஸ்கிருதமும், மற்றும் அவ்வந்நாட்டுப் பாஷைகளும் பேசப்படுவனவாகிய கனகசபையில் ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளுஞ் சிவபெருமானையே மெய்ப்பொருளாகக் கருதி ஒருமைப்பட்ட மெய்யுணர்ச்சியுடன் திருவுள்ளமுருகிப் பாடுவார்கள்.—எ-று. (௨)

பரமனையே பாடுவார் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ. திருவிருத்தம்-௨௨௫௭.

௳

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சித்தத்தைச் சிவன்பாலேவைத்தார் புராணம்.

காரணபங் கயமைந்தின் கடவுளர்தம் பதங்கடந்து
பூரணமெய்ப் பரஞ்சோதி பொலிந்திலங்கு நாதாந்தத்
தாரணையாற் சிவத்தடைந்த சித்தத்தார் தனிமன்று
ளாரணகா ரணக்கூத்த ரடித்தொண்டின் வழியடைந்தார்.

(இ-ள்.) ஆதாரகாரணமாகவுள்ள ஐந்து தாமரைகளிலும் வீற்றிருந்தரு ளும் (பிரமன் முதலிய) பஞ்சகர்த்தாக்களுடைய ஸ்தானங்களைக்கடந்து வியா பகமான மெய்ம்மையாகிய சிவபரஞ்சுடர் ஓங்கி விளங்கும் நாதாந்தத்தாரணையி ளுலே சிவத்தை யடைந்த திருவுள்ளமுடையவர்கள்; ஒப்பற்ற கனகசபை யிலே வேதசம்பந்தமாகிய பஞ்சகிருத்தியத் தாண்டவஞ்செய்தருளுஞ் சிவபெரு மானது திருவடித்தொண்டு செய்யும் நன்னெறியை யடைந்தவர்கள்.—எ-று.

'காரண பங்கயமைந்தின் கடவுளர் தம்பதங் கடந்து - பூரண மெய்ப் பரஞ்சோதி பொலிந்திலங்கு நாதாந்தத் - தாரணையாற் சிவத்தடைந்த சித்தத் தார்' என்றது, சிவபெருமானைச் சகமார்க்கமாகிய யோகமுறையினுல் தரிசிக்கு மன்பர்கள்; அவர்கள், ஆசனப் பிராணுயாம பிரத்தியாகார மென்னும் மூவித அரிய விஷயங்களை யறிந்து பழகிய பின், தமது சரீரத்திலுள்ள குண்டலித் தானத்திலிருக்கும் பிரணவ ரூபியான குண்டலிசத்தியைப் பிரணவ மந்திரத்தா லெழுப்பித் தமது இதயத்தில் சுவர்ணவர்ணமாய் நாற்கோணமாய், லகாராக்ஷரத் தினையுடையதாய் விளங்கும் பிருதுவி பூதத்திற்கு அதிதெய்வமாகிய பிரமனைத் தியானித்து, பின்பு, பிறைவடிவாய் வெண்ணிறமாய் வகாராக்ஷரத்தினையுடைய தாய் விளங்கும் அப்பு பூதத்திற்கு அதிதெய்வமாகிய விஷ்ணுவைக் கண்டத்தின் மத்தியில் தியானித்து, பின்பு, முக்கோணமாய் செந்நிறமாய் ரகாராக்ஷரத்தினை யுடையதாய் விளங்கும் அக்கினி பூதத்திற்கு அதிதெய்வமாகிய ருத்திரனை உண் ணுக்கினிடையில் தியானித்து, பின்பு, அறுகோணமாய் கருநிறமாய் யகாரா க்ஷரத்தினையுடையதாய் விளங்கும் வாயுபூதத்திற்கு அதிதெய்வமாகிய மகேச்சு வரனைப் புருவமத்தியில் தியானித்து, பின்பு, வெண்ணிறமாய் வட்டமாய் வகா ராக்ஷரத்தினையுடையதாய் விளங்கும் ஆகாய பூதத்திற்கு அதிதெய்வமாகிய சதா சிவனைப் பிரமரந்திரத்தில் தியானித்து, பின்பு இதுகாறுங் கண்ட பூதரூபங்க ளாகிய பல கமலங்களும், அக்ஷரங்களும், அதிதெய்வங்களும், நித்தியராகிய சிவ பெருமானது அம்சலேசங்க ளாதலால் அவற்றைக்கடந்து பிரமந்திர வழியே சென்று நிராதாரமாகிய துவாதசாந்தத்திலே தேசோரூபியாய் விளங்கும் நிஷ் களு சிவத்தை யடைந்தனுபவிக்குந் திருவுள்ள முடையவர்களாம். இவற்றின் வகையினைக் காசிகண்டம் யோகநிலையுரைத்த அத்தியாயத்தில் விளங்கக் கூறி யிருத்தலின் ஆண்டுக்கண்டுணர்க.

**சித்தத்தைச் சிவன்பாலேவைத்தார் புராணம் முற்றிற்று.**

திருச்சிற்றம்பலம்.

---



திருவாரூர்ப்பிறந்தார்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவாரூர்ப்பிறந்தார் புராணம்.

அருவாகி யுருவாகி யனைத்துமாய் நின்றபிரான்
மருவாருங் குழலுமையாண் மணவாளன் மகிழ்ந்தருளுந்
திருவாரூர்ப் பிறந்தார்க டிருத்தொண்டு தெரிந்துரைக்க
வொருவாயாற் சிறியேனு லுரைக்கலாந் தகைமையதோ.

(இ-ள்.) அருவமாகியும், உருவமாகியும், அனைத்துந் தாமாகியும், (அல்லவாகியும்) நின்றருளும் பெருமானும் (இயற்கை) மணங்கமழுங் கூந்தலையுடைய உமாதேவி நாயகருமாகிய சிவபெருமான் மகிழ்ந்து வீற்றிருந்தருளுந் திருவாரூர்த் திருப்பதியில் பிறந்தவர்களுடைய திருத்தொண்டின் சிறப்பை அறிந்துணரும்படி, ஒருவாயினாலே அடியேனால் சொல்லத்தகுந் தன்மையை யுடையதோ? (அன்று.)—எ-று.

அருவாகி யுருவாகி யனைத்துமாய் நின்ற பிரான் என்பதனை :—"அருவமோ ரூபா ரூப மானதோ வன்றி நின்ற-வுருவமோ வுரைக்குங் கர்த்தா வடிவெனக் குணர்த்திங் கென்னி-லருவமும் ரூபா ரூப மானது மன்றி நின்ற-வுருவமு மூன்றுஞ் சொன்ன வொருவனுக் குள்ள தாமே" என்னுஞ் சிவஞான சித்தியாரானு முணர்க. (க)

திருக்கயிலை வீற்றிருந்த சிவபெருமான் றிருக்கணத்தார்
பெருக்கியசீர்த் திருவாரூர்ப் பிறந்தார்க ளாதலினாற்
றருக்கியவைம் பொறியடக்கி மற்றவர்தந் தாள்வணங்கி
யொருக்கியநெஞ் சுடையவர்க்கே யணித்தாகு முயர்நெறியே.

(இ-ள்.) திருக்கயிலாசத்தில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானது கணங்களே மிக்க சிறப்பினையுடைய திருவாரூரிற் பிறந்தவர்களாதலால் தருக்குற்றிருக்கும் ஐம்பொறிகளையும் (புறத்திற் செல்லவொட்டாது) அடக்கி, அத்திருவாரூர்ப் பிறந்தார்களுடைய திருவடிகளை வணங்கி, (அதுகாரணமாக) ஒருமைப்படுத்திய திருவுள்ளமுடைய அன்பர்களுக்கே (அவர்களைச் சிறப்பித்துக் கூறும்) உயர்ந்த நன்னெறியானது சமீபமாகும்.—எ-று.

ஐம்பொறியாவன :—மெய் வாய் கண் மூக்குச் செவி யென்பன. (உ)

திருவாரூர்ப் பிறந்தார் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம்-உஉகூ0.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முப்போதுந் திருமேனி தீண்டுவார் புராணம்.

எப்போது மினியபிரா னின்னருளா லதிகரித்து
மெய்ப்போத நெறிவந்த விதிமுறைமை வழுவாமே
யப்போதைக் கப்போது மார்வமிகு மன்பினராய்
முப்போது மர்ச்சிப்பார் முதற்சைவ ராமுனிவர்.

(இ-ள்.) (சர்வான்மாக்களுக்கும்) எக்காலத்து மினியவராகவுள்ள சிவபெருமானது இனிய திருவருளினால் அதிகரித்து, மெய்ஞ்ஞானத்தை யுணர்த்தும் சிவாகமநெறிப்படிவந்த விதிமுறைகள் வழுவாமல் அவ்வப்பொழுதிலும் விருப்பமிக்க பேரன்புடையவர்களாய்க் (காலை - உச்சி - மாலை யென்னும்) மூக்காலத்தும் அருச்சிப்பார்கள் ; ஆதிசைவர்களாகிய (முப்போதுந்திருமேனி தீண்டுவாரென்னும்) தவமுனிவர்கள்.—எ-று.

'முதற்சைவரா முனிவர்' என்றது, எழுவகைச் சைவர்களுள் ஆதிசைவர்களை. சைவர்கள் எழுவராவார், அநாதிசைவர், ஆதிசைவர், மகாசைவர், அநுசைவர், அவாந்தரசைவர், பிரவரசைவர், அந்தியசைவர் என்பவர்கள்; இவருள்,—அநாதிசைவர் சதாசிவமூர்த்தி. ஆதிசைவராவார் சதாசிவமூர்த்தியினது சத்தியோசாதம், வாமதேவம், அகோரம், தற்புருடம், ஈசானம் என்னும் ஐந்து திருமுகங்களினின்றுந் தோன்றிய கௌசிகர், காசிபர், பாரத்துவாசர், கவுதமர், அகத்தியரென்னும் பஞ்சருஷி கோத்திரத்திலே தோன்றிய சிவப்பிராமணர்கள். மகாசைவராவார் பிரமன் முகத்தில் தோன்றிய வைதிகப் பிராமணருள்ளே சிவதீக்ஷை பெற்றவர்கள். அநுசைவராவரர் சிவதீக்ஷைபெற்ற க்ஷத்திரியர்களும் வைசியர்களுமாம். அவாந்தர சைவராவார் சிவதீக்ஷைபெற்ற சூத்திரர்கள். பிரவரசைவராவார் சிவதீக்ஷை பெற்ற அநுலோமர்கள். அந்தியசைவராவார் சிவதீக்ஷைபெற்ற மற்றையர்கள். இதனை—"அரியசதா சிவனென்போ னநாதிசைவ னவன்பா லவதரித்த சிவமறையோ ராதிசைவ ரிவர்பா, லுரியசிவ தீக்கை பெற்ற பூசுரர்மா சைவ ருயர்ந்தவர சான்வணிக னநுசைவ ராவார், பெரிய குவளைப்புயத்தோ னவாந்தரசை வன்சீர் பெறுசவன்ன னுதியநு லோமர்பிர வரராம், விரியவனி மிசையொழிந்தோ ரந்தியசை வத்தோர் விரிந்திடு மேழ் சைவவித மிவையெனநூல் விளம்பும்" என்னுஞ் செய்யுளானுணர்க. (க)

தெரிந்துணரின் முப்போதுஞ் செல்கால நிகழ்காலம்
வருங்கால மானவற்றின் வழிவழியே திருத்தொண்டின்
விரும்பியவர்ச் சனைகள்சிவ வேதியர்க்கே யுரியனவப்
பெருந்தகையார் குலப்பெருமை யாம்புகழும் பெற்றியதோ.



முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார்

௫.௨.௰

(இ-ள்.) தெரிந்துணருமிடத்து முப்பொழுதும், இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்னு மிக்காலங்களில் பரம்பரைப்படியே (செய்துவருகின்ற) திருத்தொண்டினது விருப்பமிக்க அர்ச்சனைகள் ஆதிசைவ வேதியர்களுக்கே யுரியனவாகும்; அத்தன்மையாகிய மேலோர்களது குலத்தின் மேன்மை எம்மால் புகழ்ந்து கூறுந்தன்மையையுடையதோ? (அன்று)—எ-று.

திருக்கோயில்களுள் வீற்றிருந்தருளும் பரார்த்த லிங்கபூசை ஆதிசைவர்களுக்கே யுரித்தன்றி ஏனையோர்க் கின்றென்பதும், ஏனையோர் பூசிக்கின் உலகிற்குக் கேடுண்டாமென்பதுங் கருதி, 'விரும்பிய வர்ச்சனைகள் சிவவேதியர்க்கே யுரியன' என்றார். இதனை—"வைதிகர் பெறினுஞ் சைவ தீக்கையை வாய்க்க வேதங் - கையினாற் பரார்த்த லிங்கந் தீண்டுதல் கடனே வன்று-வையகந் தனக்குநாசம் வருமிவர் தீண்டிற் சுத்த-சைவராற் பரிகா ரத்தைப் புரிகநூல் சாற்று மாற்றால்" என்னுஞ் செய்யுளா னறிக. (௨)

வே று.

நாரணற்கு நான்முகற்கு மறிய வொண்ணா நாதனையெம் பெருமானை ஞான மான, வாரணத்தி னுட்பொருள்க ளனைத்து மாகு மண்ணலையெண் ணியகால மூன்று மன்பின், காரணத்தா லர்ச்சிக்கு மறையோர் தங்கள் கமலமலர்க் கழல்வணங்கிக் கசிந்து சிந்தைப், பூரணத்தான் முழுநீறு பூசிவாழும் புனிதர்செய லறிந்தவா புகல லுற்றேன்.

(இ-ள்.) திருமால் பிரமனென்னுமிருவராலு மறிதற்கரியவரும், எமது முதல்வரும், மெய்ஞ்ஞான சொரூபமாகிய வேதத்தினுட் பொருள்களனைத்துமாகவுள்ளவருமாகிய சிவபெருமானை நினைக்கத்தக்க முக்காலத்தும் அன்புகாரணமாக அருச்சிக்கும் ஆதிசைவவேதியர்களது தாமரைமலர்போன்ற திருவடிகளைவணங்கி மனமுருகி, திருவுள்ளத்தின் நிறைவினால் திருமேனிமுழுவதுந் திருநீறுபூசிவாழும் பரிசுத்தர்களாகிய அடியார்களது செயலை யானறிந்தவண்ணஞ்சொல்லத்தொடங்கினேன்.—எ-று. (௩)

மூப்போதுந் திருமேனிதீண்டுவார் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆக திருவிருத்தம்-௨௨௬௫.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முழுநீறுபூசிய முனிவர் புராணம்.

ஆதார மாயனைத்து மாகி நின்ற வங்கணனெம் பெருமானீ ரணிந்த வேணிக், காதார்வெண் டிருக்குழையா னருளிச்செய்த கற்பமநு கற்பமுப கற்பந் தானும், ஆகாதென் றங்குரைத்தவகற்ப நீக்கி யாமென்று முன்மொழிந்த மூன்று பேத, மோகாதி குற்றங்க ளறுக்கு நீற்றை மொழிவதுநம் மிருவினைகள் கழிவ தாக.

(இ-ள்.) (எல்லாப்பொருள்களுக்கும்) ஆதாரமாகியும் அனைத்துந்தாமே யாகியும் நின்றருளிய அருட்கண்ணராகிய எமது ஆண்டவரும், கங்கைநதியை யணிந்த சடைமுடியுடன், வெள்ளிய சங்கக்குழையை யணிந்த திருச்செவியையுடையவருமாகிய சிவபெருமான் (சிவாகமத்தில்) அருளிச்செய்த கற்பம்-அநுகற்பம் - உபகற்பமென்னும் பேதங்களும், ஆகாததென்று அவ்வாகமத்திற் கூறிய அகற்பத்தை நீக்கி, ஆகுமென்று முன்புகூறிய மூவகைப் பேதங்களையுடையதாகிய மோகமுதலிய அறுவகைக்குற்றங்களையு மொழிக்கத்தக்க திருவெண்ணீற்றின் மேன்மையை நமது இருவினைகளும் நீங்கும்பொருட்டுச் சொல்லப்படுவதாகும்.—எ-று.

கற்பம்-அநுகற்பம். உபகற்பம் என்பதனை,—“ கற்பமநு கற்பமுப கற்பமெனும் விதத்தா-லற்புதநீ றெண்ணிடின்மூன் றாம் ”என்னுஞ் சைவசமயநெறியானு முணர்க. அகற்பமாவது, இம்மூவகையாலும் அமைத்த விபூதியல்லாதது.

இம்மூவகை விபூதியும், வைதிகவிபூதி லௌகிகவிபூதியென்னு மிருவகையில் லௌகிக விபூதியிற் சேர்ந்தவை. வைதிக விபூதியாவது, பிரமன் ஓமகுண்டத்திலே தோன்றுவதாகிய புராதனியென்றும், பிராமணர் ஓமகுண்டத்திலே தோன்றுவதாகிய சத்தியோசாதை யென்றும் இருபகுதியினை யுடையதாம். லௌகிக விபூதியாவது தீக்ஷிதர்க்குரிய சைவவிபூதி யென்றும் அதீக்ஷிதர்க்குரிய அசைவ விபூதியென்றும் இருவகைப்படும். இவற்றுள், தீக்ஷிதர்களாகிய சைவர்கள் தரிக்கும் விபூதி உற்பத்திபேதத்தால் மேற்கூறிய கற்பாதி மூன்றுவகைப்படும். இதனை, “இயம்புவை திகநீ றென்றூ லிலௌகிக பூதி யென்றூப், பயந்தருநீறிரண்டாம் பகர்ந்தவை திகவெண்பூதி,யுயர்ந்திடு மோம குண்டத் தொளிர்வதா மற்றைப் பூதி, வயந்தரு புனித நல்லான் மயத்தினூ லுவதாகும்.” “தகுபுராதனியேயென்றுஞ் சத்தியோ சாதை யென்று, மிகவில்லை திகவெண் பூதி யிருதிற னுகு நேரோ, புகழ்தகு வேத வோம குண்டத்திற் பூப்ப தொன்று, பகர்தரு மறையோ ரோம்பு மங்கியிற் படுவ தொன்றாம்.” “ இலௌகிக பூதிதானு மிருதிற னுகும் பாவ, முலைவுற வாற்றுந் தீக்கை யுற்றவர்க் குரியதாக, நிலைபெற நிறுவுஞ் சைவ நீறென்றுந் தீக்கை யின்றி, யலைவுறு மாந்தர் தங்கட் கடுத்திடு மசைவ மென்றும்” என்னுஞ் செய்யுட்களா னுணர்க.



முழுநீறு பூசியமுனிவர்.

இவ்விபூதி ஆன்மாக்களுக்கு இரக்ஷிப்பருளால் இரக்ஷையென்றும், பாவங்களை நீறுக்கலால் நீறென்றும், செல்வமளித்தலால் விபூதியென்றும், அஞ்ஞானமாகிய வழுக்கினை நீக்கலால் சாரமென்றும், ஞானப்பிரகாசத்தைத் தருதலால் பசிதமென்றும் பெயர்பெறும். இதனை;—"இரக்கிக்கை யாலே யுயிரினை யெல்லா-மிரக்கையெனும் பேரா மிதற்கு" எனவும், "பூதியினைத் தான்கொடுக்கை யாற்பூதி யென்னும்பே - ரோதுவர்வெண் ணீற்றினுக்கென் றோர்" எனவும், "நீடூழுறுந்தீ வினையனைத்து நீற்றிவிடலா னீறென்றும்-வீடில் வெறுக்கை தருதலினல் விபூதி யென்று முயிர்தோறுங்-கூடு மலமா சினைக்கழுவுங் குணத்தாற் சார மென்றுமட-மோட வளர்சோ தியைத்தரலாற் பசிதமென்று மோைப்பாரால்" என வருஞ் செய்யுட்களா னுணர்க. (௬)

அம்பலத்தே யுலகுய்ய வாடு மண்ண லுவந்தாடு மஞ்சினையு மளித்த வாக்க, ளிம்பர்மிசை யநாமயமா யிருந்த போதி லீன்றணிய கோமயமந் திரத்தினலேற், றும்பர்தொழ வெழுஞ்சிவமந் திரவோ மத்தாலுற்பவித்த சிவாங்கிதனி லுணர்வுக் கெட்டா, வெம்பெருமான் கழனினைந்தங் கிட்ட தூநீ றிதுகற்ப மென்றெடுத்திங் கியம்ப லாகும்.

(இ-ள்.) உலகத்தாருய்யும்பொருட்டுக் கனகசபையிலே திருநடனஞ் செய்தருளும் ஸ்ரீ நடராஜப்பெருமான் மகிழ்ந்து அபிஷேகங் கொண்டருளும் பஞ்சகவ்வியங்களையுங் கொடுக்கின்ற பசுக்கள் கன்றை ஈன்ற சமீபகாலத்தி லிடுகின்ற கோமயத்தை வாமதேவமந்திரத்தினல் ஏற்று, தேவர்கள் தொழும்படி யெழுகின்ற சிவமந்திரங்கொண்டு செய்யும் யாகத்தில் தோன்றிய சிவாக்கினியில், பாசவுணர்வுக்கெட்டாத எமது சிவபெருமானுடைய திருவடிகளைச் சிந்தித்து அங்குச் சமைத்தெடுத்த தூய்மையாகிய திருவெண்ணீற்றினைக் கற்பமென்று இங்கு எடுத்துக் கூறலாகும்.—எ-று.

அஞ்சு என்றது, பஞ்ச கௌவியங்களை; அவை பால் - தயிர் - நெய் கோசலம் - கோமயம் என்பன. கற்பமாவது-ஸ்ரீ கயிலாசத்திலிருக்கும் இடபத்துடன் வாழ்கின்ற நந்தை - பத்திரை - சுரபி - சுசீலை - சுமனையென்னு மைந்து பசுக்களின் வழியாய்ச் சிவாக்கினையால் திருப்பாற்கடலி னின்று மிவ்வுலகிற் பரவிய உத்தமமான பசுக்களில், கன்றின்று பத்துதினத்திற் குட்பட்டதும், கன்று பிரசவியாத கிடாரியும், நோயுடையதும், கன்று செத்ததும், கிழத்தன்மையுடையதும், மலமும், மலந்தின்பதுமாகிய இவைகளை யொழித்துச் சிறந்த பசுக்களில், பங்குனி மாதத்தில் பசானத்தாளை மேய்ந்த பசுவின் சாணத்தைத் தாமரையிலையில், அஷ்டமி, அமாவாசை, பௌர்ணமி, சதுர்த்தசி இத்திதிகளில் சத்தியோசாத மந்திரஞ்சொல்லி யேற்று, மேலிருக்கும் வழும்பை யொழித்து, வாமதேவ மந்திரஞ்சொல்லிப் பஞ்சகௌவியம் விட்டு அகோரமந்திரத்தாற் பிசைந்து, தற்புருட மந்திரத்தா லுருண்டைசெய்து, ஈரமாக வேனும், உலர்ந்த பின்பேனும் ஓமாக்கினியில் ஈசானமந்திரத்தால் சுட்டெடுத்த விபூதியே கற்பமெனப்படும். இதனை—"பிறந்திளைய கன்றுபெருக் கன்னி பிணியா - லிறந்த கன்று மாகா விழுக்கு" "மூப்பு மலமு முடைமலந் தின்பதெனு-மாத்தானுந் தாய்தலவா கா" எனவும், "பங்குனி மாதம் பசானத்தாண் மேய்ந்தபசு - மங்கலமாங் கொள்கோ மயம்" "இருநான்கு பஞ்சதசி யேழிரண்டு தன்னில்-வர்

மாகுங் கொள்கோ மயம்" எனவும், "ஏற்றிடுக சாதத்தா லானின் மணமயிலை யின் - மாற்றிடுக மேலே வழும்பு" "பெய்ததனிற் கவ்வியத்தை வாமத்தினுற் பிசைக - பைய வகோரம்பகர்ந்து" "உருட்டிப் புருடத்தோ மாங்கிதனில் வைக்க - திரட்டிப் பதர்மேற் செறித்து" "அன்றெடுத் தன்றுருட்டி யன்றழலின் வைத்திடுக - வன்றியுலர்த் திச்சுடலு மாம்" எனவும் வருஞ் சைவசமய நெறியா னுணர்க. (உ)

ஆரணியத் துலர்ந்தகோ மயத்தைக் கைக்கொண் டழகுற நுண் பொடியாக்கி யாவின் சுத்த, நீரணிவித் தத்திரமந் திரத்தி ஞலே நிசை யமுறப் பிடித்தோம நெருப்பி லிட்டுச், சீரணியும் படிவெந்து கொண்ட செல்வத் திருநீறு மநுகற்பந் தில்லை மன்றுள், வாரணியு முலையுமை யாள் காண வாடு மாணிக்கக் கூத்தர்மொழி வாய்மை யாலே.

(இ-ள்.) வனத்திலுலர்ந்த கோமயத்தைக் கொண்டுவந்து அழகுபொருந்த நுண்ணிய பொடியாகச்செய்து பசுவினது தூய்மையாகிய நீர்விட்டு அத் திருமந்திரத்தினுல் உருண்டையாகப்பிடித்து யாகாக்கினியிலிட்டுச் சிறப்போடு வெந்து எடுத்துக்கொண்ட திருநீறு, திருத்தில்லைத் திருச்சிற்றம்பலத்துள் கச்சணிந்த ஸ்தனங்களையுடைய உமாதேவியார் காணும்படி திருநடனஞ் செய்தருளும் மாணிக்கக்கூத்தராகிய சிவபெருமான் ஆகமத்தி லருளிச்செய்த உண்மையினுல் இது அநுகற்பமாகும்.—எ-று.

அநுகற்பமாவது சித்திரைமாதத்தில் வனத்தில் உலர்ந்து கிடக்கும் பசுவின் சாணத்தை யெடுத்துத் தூளாக்கிக் கோசலம் விட்டு முன்சொன்ன மந்திரத்தால் பிசைந்து உருட்டி மேல்கற்பவிதிக்குக்கூறிய முறைப்படி சிவாக்கினியில் விளைவித் தெடுப்பதாகும். இதனை—"வனந்தனிற் சித்திரை மாதத்திற் சென்றே - யுலர்ந்தமயங் கொண்டோ ரிடத்து" "வைத்திடித்துத் தூளாக்கி வார்த்ததனுட் கோசலத்தைக்-கைத்தலத்தி னுலே கலந்து" "அள்ளிப்பிசைந் துருட்டி யங்கிதனில் வைத்தெடுத்துக்-கொள்கமுனஞ் சொன்னமனுக் கொண்டு" என்னும் மேற்படி நூலானுணர்க. (௩)

அடவிபடு மங்கியினுல் வெந்த நீறு மாநிலைக ளனறொடக்க வெந்த நீறு, மிடவகைக ளெரிகொளுவ வெந்த நீறு மிட்டிகைகள் சுட்ட வெரி பட்ட நீறு, முடனன்றி வெவ்வேறே யாவி னீரா லுரைதிகழு மந்திரங்கொண் டுண்டை யாக்கி, மடமதனிற் பொலிந்திருந்த சிவாங்கி தன்னுல் வெந்ததுமற் றுபகற்ப மாபினுகும்.

(இ-ள்.) வனத்தில் (மரத்தோடு மரம் இணைந்து) தானே யுண்டாகிய அக்கினியினுல் வெந்த சாம்பலும், பசுக்கோட்டங்கள் தீப்பற்றியெரிந்ததனுல் வெந்த சாம்பலும், வேறிடங்கள் தீப்பற்றியெரிய வெந்த சாம்பலும், செங்கற்கள் சுட்டவிடத்து எரிந்த சாம்பலும், ஒன்றுகச் சேர்க்காமல் வெவ்வேறே கோசலத்தினுல், சொற்கள் விளங்கும் வாமதேவமந்திரத்தினுலே உருண்டையாகச்செய்து, திருமடங்களில் சிறந்தெரியும் சிவாக்கினியினுல் வெந்தது உபகற்ப விபூதியின் முறைமையாம்.—எ-று.

உபகற்பமாவது, வனத்தில் காடாக்கினியா லுண்டாகிய சாம்பலையெடுத்துப் பஞ்ச கௌவியம் விட்டு முன்சொன்ன மந்திரங்களைக்கொண்டு பிசை

ந்து ருட்டிச் சிவாக்கினியில் விளைவித் தெடுப்பதாகும். இதனை—"வன்னிவன ந் தன்னி லுறவியல்பாய் வாய்த்தபொடி - தன்னை யெடுத்திடுக தான்" "வார்த் திடுக வானைந்து மற்றதனிற் கையாலே - சேர்த்திடுக பாகந்தெரிந்து" "அள் ளிப் பிசைந்துருட்டி யங்கிதனில் வைத்தொடுத்துக் -.கொள்கமுனஞ் சொன் னமலுக் கொண்டு" என்னும் மேற்படி நூற்குறளா னறிக. (௫)

இந்தவகை யாலமைத்த நீறு கொண்டே யிருதிறமுஞ் சுத்திவ ரத் தெறித்த பின்ன, ரந்தமிலா வரனங்கி யாறு மெய்ம்மை யறிவித்த குருநன்மை யல்லாப் பூமி, முந்தவெதி ரணியாதே யணியும் போது முழுவதுமெய்ப் புண்டரஞ்சந் திரனிற் பாதி, நந்தியெரி தீபநிகழ் வட் ட மாக நாதரடி யாரணிவர் நன்மை யாலே.

(இ-ள்.) இந்த மூவகைக் கற்பவிதியினால் அமைத்த திருவெண்ணீ ற்றை யெடுத்து இருபக்கத்திலுஞ் சுத்தியுண்டாகும்படி தெளித்தபின்பு, முடி வில்லாத சிவபெருமானுக்கெதிரிலும், அக்கினிக்கெதிரிலும், நடக்கும் வழியி லும், மெய்ஞ்ஞானத்தை யுபதேசித்த குருவுக்கெதிரிலும், அசுத்தமான நிலத் திலுமிருந்தணியாமல், (சுத்தபூமியிலிருந்து) அணியும்பொழுது தேகமுழுதுமா கவும், திரிபுண்டரமாகவும், அர்த்தசந்திரரூபமாகவும் ஒளிவிட்டெரிகின்ற தீபம் போன்றும், விளங்கு வட்டவடிவமாகவும் சிவனடியார்கள் நன்மையோடு மணி வார்கள்.—எ-று. (௬)

சாதியினிற் றலையான தரும சீலர் தத்துவத்தி னெறியுணர்ந்தோ ர் தங்கள் கொள்கை, நீதியினிற் பிழையாது நெறியி னிற்போர் நித்த நிய மத்துநிக ழங்கி தன்னிற், பூதியினைப் புதியபா சனத்துக் கொண்டு புலியதளி னுடையானைப் போற்றி நீற்றை, யாதிவரு மும்மலமு மறு த்த வாய்மை யருமுனிவர் முழுவதுமெய் யணிவ ரன்றே.

(இ-ள்.) தலைமையான குலத்தினையுடைய தருமகுணமுடையவர்க ளும், தத்துவமார்க்கத்தை யுணர்ந்தவர்களும், தங்களுக்குரிய கொள்கைகளில் தவறாமல் நன்மார்க்கத்தி லொழுகுபவர்களுமாகிய வேதியர்கள் வளர்க்கும் நித்தியாக்கினியில் விளைந்த விபூதியைப் புதுப்பாண்டத்தில் வைத்துக்கொ ண்டு, புலித்தோலை யாடையாகவுள்ள சிவபெருமானைத் துதித்து, திருவெண் ணீற்றைப் பழைமையாக வருகின்ற மும்மலங்களையு மறுத்த மெய்ம்மையை யுடைய அரிய தவமுனிவர்கள் திருமேனிமுழுவதுந் தரித்துக் கொள்வார்கள்.

ஆதிவரு மும்மலம் என்பதனை;— "ஏகனேக னிருள்கரும மாயை யிரண்-டாகவிவை யாறுதியில்" என்னுந் திருவருட் பயனானறிக. (௭)

முழுநீறுபூசிய முனிவர்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம் - உஉ௬௬.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அப்பாலுமடிச்சார்ந்தார் புராணம்.

மூவேந்தர் தமிழ்வழங்கு நாட்டுக் கப்பான் முதல்வனு ரடிச்சார் ந்த முறைமை யோரு, நாவேய்ந்த திருத்தொண்டத் தொகையிற் கூறு நற்றெண்டர் காலத்து முன்னும் பின்னும்,பூவேய்ந்த நெடுஞ்சடைமே லடம்பு தும்பை புதியமதி நதியிதழி பொருந்த வைத்த, சேவேந்து வெல்கொடியா னடிச்சார்ந் தார்கள் செப்பியவப் பாலுமடிச் சார்ந்தார் தாமே.

(இ-ள்.) (சேரசோழ பாண்டியர்களென்னும்) மூவேந்தருக்கு முரிய தமிழ்நாட்டிற்கு அப்புறத்திலே சிவபெருமானுடைய திருவடிகளையடைந்த அடியார்களும், (ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள்) தமது திருநாவினால் அருளிச் செய்த திருத்தொண்டத்தொகையிற் சொல்லப்பட்ட சிறந்த திருத்தொண்டர்களுடைய காலத்துக்கு முற்காலத்தும் பிற்காலத்தும் பொலிவினையுடைய நீண்ட சடைமுடியின்மேல் அடம்பமலரையும், இளம்பிறையையும், கங்கைநதியையும், கொன்றைமாலையையும் பொருந்தவணிந்தருளிய வெற்றிபொருந்திய இடபக்கொடியை யுயர்த்திய சிவபெருமானது திருவடியிலடைந்தவர்கள் முற் கூறிய அப்பாலுமடிசார்ந்தார்களென்று சொல்லப்படுவார்கள்.—எ-று.

மூவேந்தர் தமிழ்வழங்கு நாட்டுக்கப்பால், என்றது, தமிழ் வழங்கும் நிலமொழிந்த மற்றைப் பதினேழ் நிலங்களையுமாம். அவை—"சிங்களஞ் சோனகஞ் சாவகஞ் சீனந் துழுக்குடகங் - கொங்கணங் கன்னடங் கொல்லந் தெலுங்கங் கலிங்கம் வங்கங்-கங்க மகதங் கடராங் கவுடங் கடுங்குசலந் தங்கும் புகழ்த்தமிழ் சூழ்பதி னேழ்புவி தாமிவையே" என்பதனாலறிக. முன்னும் பின்னும் சிவபெருமானடியை யடைந்தவர்களாவார், திருவெண்காட்டிகள் முதலிய சிவானு பூதிமான்கள். சே - இடபம். (க)

செற்றார்தம் புரமெரித்த சிலையார் செல்வத் திருமுருகன் பூண்டியினிற் செல்லும் போதிற், சுற்றுருஞ் சிலைவேடர் கவர்ந்து கொண்ட தொகுநிதியின் பரப்பெல்லாஞ் சுமந்து கொண்டு, முற்றாத முலையுமையாள் பாகன் பூத முதற்கணமே யுடன்செல்ல முடியாப் பேறு, பெற்றார்தங் கழல்பரவ வடியேன் முன்னைப் பிறவியினிற் செய்ததவம் பெரிய வாறே.

(இ-ள்.) பகைவர்களது முப்புரங்களையு மெரித்தருளிய மேருவில்லையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் செல்வங்கணிறைந்த திருமுருகன் பூண்டியென்னுந் திருப்பதியின்வழியாகச் செல்லும்பொழுது, சூழ்ந்துவந்தவில்லையுடைய வேடர்கள் கவர்ந்துசென்ற மிக்க நிதிப்பரப்புகளனைத்தையும் சுமந்துகொண்டு, இளமையாகிய ஸ்தனங்களையுடைய பார்வதிபாகராகிய சிவபெரு

மானது முதன்மைபொருந்திய பூதகணங்கள் தம்முடன் செல்லத்தக்க முடியாத பேறுபெற்றருளிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளது திருவடிகளைத் துதிக்கும்படி அடியேன் முற்சனனத்தில் செய்ததவம் மிகப்பெரியனவாம்.—எ-று.

சிவபெருமானது பிரதம கணங்களே பொருட்குவைகளைச் சுமந்து தம்முடன் செல்லத்தக்க பேற்றைப்பெற்ற ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளது திருவடியை வணங்கத்தக்க பூர்வ புண்ணிய மிருந்தவாறு சிறந்ததென்க. (உ)

அப்பர்லுமடிச்சார்ந்தார் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம் - உஉஎக.

பத்தராய்ப்பணிவார்சருக்கம் முற்றுப்பெற்றது.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பதினொன்றாவது,

## மன்னியசீர்ச் சருக்கம்.

---

# பூசலார் நாயனார் புராணம்.

---

அன்றினார் புரமெ ரித்தார்க் காலய மெடுக்க வெண்ணி,
யொன்றுமங் குதவா தாக,வுணர்வி னாலெடுக்குந் தன்மை,
நன்றென மனத்தி னாலே நல்லவா லயந்தான் செய்த,
நின்றவூர்ப் பூச லார்த நினைவினை யுரைக்க லுற்றாம்.

(இ-ள்.) பகைவர்களது முப்புரங்களையு மெரித்தருளிய சிவபெருமானுக்கு ஆலயஞ்சமைக்கக் கருதி (அதற்குவேண்டிய உபகரணங்கள்) ஒன்றுமுதவாதிருக்க, பின்பு தமது மெய்யுணர்வினால் சமைத்தலே நன்றென்று கருதி மனத்தினால் சிறந்த சிவாலயங்கட்டிய திருநின்றவூரி லவதரித்தருளிய பூசலார் நாயனாரது மானசத்திருத்தொண்டின் றன்மையைச் சொல்லுவோம்.—எ-று.

உணர்வினா லெடுத்தல் - மானசிகமாகச் சமைத்தல். (க)

உலகினி லொழுக்க மென்று முயர்பெருந் தொண்டை நாட்டு,
நலமிகு சிறப்பின் மிக்க நான்மறை விளங்கு மூதூர்.
குலமுதற் சீல மென்றுங் குறைவிலா மறையோர் கொள்கை .
நிலவிய செல்வ மல்கி நிகழ்திரு நின்ற வூராம்.

(இ-ள்.) நிலவுலகத்துள்ள நல்லொழுக்கங்களனைத்தும் நாள்தோறுஞ் சிறந்தோங்குகின்ற பெரியதொண்டைவள நாட்டிலே நன்மைமிக்க சிறப்பினாலுயர்ந்த நான்கு வேதங்களும் பொலிந்துவிளங்கும் பழைய ஊராவது (யாதெ

னின்,) குலவொழுக்க முதலிய நல்லொழுக்கங்களனைத்தும் எக்காலத்துங் குறைவில்லாது விருத்தியாகின்ற வேதியர்களது நற்கொள்கைகள் விளங்கப் பெற்ற செல்வங்கள் நிறைந்தோங்குந் திருநின்றவூராகும்.—எ-று.

குலமுதற்சீலம் என்றது, குலங்கோத்தரஞ் சூத்திர முதலியவைகள்.

அருமறை மரபு வாழ வப்பதி வந்து.சிந்தை
தருமுணர் வான வெல்லாந் தம்பிரான் கழன்மேற் சார.
வருநெறி மாறு வன்பு வளர்ந்தெழ வளர்ந்து.வாய்மைப்
பொருள்பெறு வேத நீதிக் கலையுணர் பொலிவின் மிக்கார்.

(இ-ள்.) அருமையாகிய வேதியர்குலம் வாழும்படி அத்திருநின்றவூரி லவதரித்து மனத்திற் றோன்றும் உணர்வனைத்துஞ் சிவபெருமான் றிருவடிக ளிற்சாரும்படி, வருகின்ற நன்னெறியினின்று நீங்காத பேரன்பு வளர்ந்தோங்க வளர்ந்து, மெய்ப்பொருளை யுணர்தற்குரிய வேதமுதலிய கலைஞானங்களை யுண ரத்தக்க சிறப்பில் மிக்கவராயினர்.—எ-று.

'வாய்மைப்பொருள் பெறு' என்பதற்கு, மெய்ப்பொருளைக் கொண்டி ருக்கின்ற எனப்பொருள் கூறினுமாம். (௩)

அடுப்பது.சிவன்பா லன்பர்க் காம்பணி செய்த லென்றே.
கொடுப்பதெவ் வகையுந் தேடி யவர்கொளக் கொடுத்துக், கங்கை
மடுப்பொதி வேணி யையர் மகிழ்ந்துறை வதற்கோர்.கோயி.
லெடுப்பது மனத்துக் கொண்டா,ரிருநிதி யின்மை யெண்ணார்.

(இ-ள்.) தமக்கடுத்த முறையாவது சிவபெருமானடியார்களுக்கு இசை ந்த திருப்பணியைச் செய்தலேயென்று கருதி, கொடுக்கத்தக்க பொருள்களை எவ்வாற்றயினுந் தேடி அவ்வடியார்கள் பெறும்படி கொடுத்து, கங்கைநதி தங் கிய சடைமுடியையுடைய சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளுதற்கு ஒரு திரு க்கோயில் கட்டுவதை மனதிற்கொண்டார்; அதற்கு வேண்டிய பொருள் முத லிய உபகரணங்க ளின்மையை யெண்ணாதவராகிய அந்நாயனர்.—எ-று.

இருநிதியின்மையெண்ணார் மனத்துக்கொண்டார், எனக் கூட்டுக. (௪)

மனத்தினாற் கருதி.யெங்கு மாநிதி வருந்தித் தேடி.
யெனைத்துமோர் பொருட்பே றின்றி.யென்செய்கே னென்று நைவார்.
நினைப்பினா லெடுக்க நேர்ந்து.நிகழ்வுறு நிதிய மெல்லாந்
தினைத்துணை முதலாத் தேடிச்.சிந்தையாற் றிரட்டிக் கொண்டார்.

(இ-ள்.) திருக்கோயில்கட்ட மனத்தில் சிந்தித்து (அதற்கு வேண்டிய) மிக்க திரவியங்களை கஷ்டப்பட்டுத் தேடி, அதனால் சிறிதும் பொருள் பெறுத லில்லாமல் இதற்கு யாதுசெய்வேனென்று வருந்தி, மனதினால் கட்ட விரும் பிப் பொருந்திய திரவியங்களனைத்துந் தினையளவாகத் தேடிச் சிந்தையினால் சேர்த்து வைத்துக்கொண்டார்.—எ-று. (௫)

சாதனத் தோடு தச்சர் தம்மையு மனத்தாற் றேடி.
நாதனுக் கால யஞ்செய் நலம்பெறு நன்னாட் கொண்டே,
யாதரித் தாக மத்தா லடிநிலை பாரித்,தன்பாற்
காதலிற் கங்குற் போதுங் கண்படா தெடுக்க லுற்றார்.



பூசலார்நாயனார்

(இ-ள்.) வேண்டிய உபகரணங்களுடன் சிற்பர்களையும் மனத்தினுல் தேடிச் சிவபெருமானுக்கு ஆலயங்கட்டுதற்குரிய நன்மைமிக்க சுபதினங் குறித்துச் சிவாகமவிதிப்படி விரும்பி அடிகோலி அன்புடன் பெருவிருப்பினுல் இரவிலும் நித்திரையின்றிக் கட்டத்தொடங்கினுர்.—எ-று.

சாதனமாவது, கல் சுண்ணம் மரம் முதலிய உபகரணங்கள். (௬)

அடிமுத லுபான மாதி யாகிய படைக ளெல்லாம்,
வடிவுறுந் தொழில்கண் முற்ற, மனத்தினுல் வருத்து, மான
முடிவுறு சிகரந் தானு முன்னிய முழத்திற் கொண்டு,
நெடிதுநாள் கூடக், கோயி னிரம்பிட நினைவாற் செய்தார்.

(இ-ள்.) அடிநிலைமுதல் உபானமாதியாகவுள்ள அடுக்குகளனைத்தும் அழகுமிக்க சிற்பத்தொழில்கள் நிரம்ப மனத்தினுல் செய்து, பெருமைமிக்க சிகரத்தைக்கருதிய முழவளவாகக்கொண்டு ஆலயங்கட்டிமுடியப் பலநாள் செல்லும்படி நினைவினுல் செய்தருளினுர்.—எ-று.

உபானம்=கோபுரத்தின் கீழ்ச்செய்யுஞ் சித்திரவரி.

'படிகளெல்லாம்' என்றும் பாடபேதம். (௭)

தூபியு நட்டு, மிக்க சுதையுநல் வினையுஞ் செய்து,
கூவலு மமைத்து, மாடு கோயில்சூழ் மதிலும் போக்கி,
வாவியுந் தொட்டு, மற்றும் வேண்டுவ வகுத்து, மன்னுந்
தாபரஞ் சிவனுக் கேற்க, விதித்தநா ளாரு நாளில்.

(இ-ள்.) ஸ்தூபியும் நிறுத்தி, மிக்க சுதை தீற்றுதலாகிய நல்ல தொழில்களைச் செய்து, கிணறு எடுத்து, அருகில் திருக்கோயிலைச் சூழ்ந்த திருமதிலுங் கட்டி, திருக்குளமெடுத்து இன்னும் வேண்டியவைகளனைத்துஞ் செய்தமைத்து, சிவபெருமானுக்கேற்க நிலைபெற்ற பிரதிஷ்டை செய்தற்கு விதித்த சுபதினம் வரும்பொழுது.—எ-று.

இதுமுதல் மூன்றுபாடலுங் குளகம். (அ)

காடவர் கோமான், கச்சிக், கற்றளி யெடுத்து முற்ற,
மாடெலாஞ் சிவனுக் காகப் பெருஞ்செல்வம் வகுத்தல் செய்வா,
ணுடமா லறியா தாரைத் தாபிக்கு மந்நாண் முன்னு,
ளேடலர் கொன்றை வேய்ந்தா, ரிரவிடைக் கனவி லெய்தி.

(இ-ள்.) காடவராஜாவானவர் காஞ்சிபுரத்திலே கருங்கல்லினுல் ஒரு சிவாலயங்கட்டுவித்து அவ்வாலயத்தினருகிலெல்லாம் சிவபெருமானுக்காக (மடம் - தடம் - தண்ணீர்ப் பந்தல் - யாகசாலை முதலிய) பெருஞ்சிறப்புக்களமைத்தவராய், விஷ்ணுவினுல் தேடிக் காணப்படாதவராகிய சிவபெருமானைப்பிரதிஷ்டைசெய்ய நிச்சயித்திருந்த அச்சுபதினத்திற்கு முன்னுளிரவில் இதழலர்ந்த கொன்றைமலர்மாலையை யணிந்த சிவபெருமான் (அவ்வரசருடைய) சொப்பனத்திலெழுந்தருளி.—எ-று. (௯)

நின்றவூர்ப் பூச லென்பா, னெடிதுநா ளினைந்து செய்த
நன்றுநீ டால யத்து, நாளைநாம் புகுவோ, நீயிங்

கொன்றிய செயலை நாளை யொழிந்துபின் கொள்வா யென்று,
கொன்றைவார்சடையார்தொண்டர்கோயில்கொண்டருளப்போந்தார்

(இ-ள்.) திருநின்றவூரில்வாழும் பூசல் என்னும் ஒரு அன்பன் அநேக நாள் சிந்தித்துக்கட்டிய நன்மைமிக்க ஆலயத்தில் நாளைக்கு நாம் எழுந்தருளுவோம்; ஆதலால் நீ இங்குப் பிரதிஷ்டை செய்யக்கருதிய செயலை நாளையொழிந்து பின்பு மற்றொருநாளில் வைத்துக்கொள்ளக்கடவாய் என்றருளிச்செய்து, கொன்றைமாலையை யணிந்த நீண்ட சடைமுடியையுடைய சிவபெருமான் அப்பூசலார்நாயனாரது இருதயாலயத்தில் எழுந்தருளும்பொருட்டு மறைந்தருளினார்.—எ-று.

நீ கட்டிய ஆலயத்தினும் அதுமிக்க சிறப்பினதென்று குறிப்பித்தனரென்பார் 'நன்றி நீடாலயம்' என்றுகூறினார். (க0)

தொண்டனை விளக்கத் தூயோ னருள்செயத் துயிலை நீங்கித்
திண்டிறன் மன்ன னந்தத் திருப்பணி செய்தார் தம்மைக்
கண்டுநான் வணங்க வேண்டு மென்றெழுங் காத லோடுந்
தண்டலைச் சூழல் சூழ்ந்த நின்றவூர் வந்து சார்ந்தான்.

(இ-ள்.) சிவபெருமான் திருத்தொண்டராகிய பூசலார்நாயனாரது (அன்பின்றிறத்தை) விளக்கும்பொருட்டு அருளிச்செய்து மறைந்தருள, மிக்கவல்லமைபொருந்திய காடவராஜாவானவர் நித்திரையினின்று நீங்கி அத்தகைய திருப்பணிசெய்த பூசலார்நாயனாரை அடியேன் தரிசித்து வணங்கவேண்டுமென்று எழுந்தபெருவிருப்போடும் சோலைகள்சூழ்ந்த திருநின்றவூரைவந்தடைந்தார்.

தண்டலைச்சூழல்=இருபெயரொட்டு, சூழல்=சூழ்ந்துள்ளது என்னும் பொருட்டு. (கக)

அப்பதி யணைந்து பூச லன்பரிங் கமைத்த கோயி
லெப்புடை யதுவென் றங்க ணெய்தினார் தம்மைக் கேட்கச்
செப்பிய பூசல் கோயில் செய்ததொன் றில்லை யென்றார்
மெய்ப்பெரு மறையோ ரெல்லாம் வருகவென் றுரைத்தான் வேந்தன்.

(இ-ள்.) அத்திருநின்றவூரை யடைந்து அங்குள்ளவர்களைப் பார்த்து, பூசலார்நாயனார் இங்குக்கட்டிய திருக்கோயில் எங்கிருக்கின்றதென்றுகேட்க, (அவர்கள் அவரைப்பார்த்து) நீர் சொல்லிய பூசலார்நாயனார் கட்டிய கோயில் இங்கு ஒன்றுமில்லை யென்றார்கள். (அப்பொழுது) அரசர், மெய்ம்மை பொருந்திய சிறந்தவேதியர்களனைவரும் வரக்கடவர்களென்று அழைத்தார்.—எ-று. ()

பூசுர ரெல்லாம் வந்து புரவலன் றன்னைக் காண
மாசில்சீர்ப் பூச லார்தா மாரென மறையோ ரெல்லா
மாசில்வே தியனிவ் வூரா னென்றவ ரழைக்க வொட்டா
தீசனா ரன்பர் தம்பா லெய்தினான் வெய்ய வேலான்.

(இ-ள்.) அவ்வாறேவேதியர்களனைவரும் வந்துகாடவராஜாவைக்காண, (அரசர் அவர்களைப்பார்த்துக்) குற்றமற்ற சிறப்பினையுடைய பூசலார் நாயனார் யாவர் என்றுவினவ, வேதியர்களனைவரும், குற்றமற்ற அவ்வேதியர் இவ்வூரார் என்று சொல்ல, அவரை அழைக்கவொட்டாமல், கொடிய வேற்படையையு

டைய காடவராஜாவானவர் சிவபெருமானடியவராகிய அப்பூசலார்நாயனாரிடத்துச் சென்றார்.—எ-று.

'மாசிலாப் பூசலார்' எனவும் பாடம். (௧௩)

தொண்டரைச் சென்று கண்ட மன்னவன் றொழுது, நீரிங்
கெண்டிசை யோரு மேத்த வெடுத்தவா லயந்தான் யாதிங்
கண்டர்நா யகரைத் தாபித் தருளுநா ளின்றென் றும்மைக்,
கண்டடி பணிய வந்தேன், கண்ணுத லருள்பெற் றென்றான்.

(இ-ள்.) திருத்தொண்டராகிய பூசலார்நாயனாரைப் போய்ப் பார்த்த அரசர் வணங்கி, எட்டுத்திக்கிலுள்ளவர்களுந் துதிக்கும்படி தேவரீர் இங்குக் கட்டிய ஆலயம் யாது? தேவர்கள் நாயகராகிய சிவபெருமானைப் பிரதிஷ்டை செய்யும் நன்னாள் இன்றேயென்று அவ்வெம்பெருமானது திருவருளைப்பெற்று உம்மைத் தரிசித்துத் திருவடியை வணங்க வந்தேனென்று கூறினார்.—எ-று.

மன்னவ னுரைப்பக் கேட்ட வன்பர்தா மருண்டு நோக்கி,
யென்னையோர் பொருளாக்கொண்டே யெம்பிரா னருள்செய் தாரேன்,
முன்வரு நிதியி லாமை மனத்தினான் முயன்ற கோயி,
லின்னதா மென்று சிந்தித் தெடுத்தவா றெடுத்துச் சொன்னார்.

(இ-ள்.) இவ்வாறு காடவராஜா சொல்லக் கேட்ட பூசலார்நாயனார் மயங்கிப் பார்த்து, சிறியேனை யோர்பொருளாகக்கொண்ட சிவபெருமான் இவ்வாறு அருள்செய்தாராயின், முன்னே பெறவேண்டிய திரவிய மில்லாமையால் மனோபாவனையினால் முயன்று கட்டிய ஆலயம் இத்தன்மையதாமென்று, தாம் மனதினாற் சிந்தித்துக் கட்டிய வகையை யெடுத்துக் கூறினார்.—எ-று. (௧௫)

அரசனு மதனைக் கேட்டங் கதிசய மெய்தி, யென்னே
புரையறு சிந்தை யன்பர் பெருமையென் றவரைப் போற்றி,
விரைசெறி மாலை தாழ நிலமிசை வீழ்ந்து தாழ்ந்து,
முரசெறி தானை யோடு மீண்டுதன் மூதூர்ப் புக்கான்.

(இ-ள்.) காடவராஜாவும் அவ்வார்த்தையைக்கேட்டு அவ்விடத்தில் ஆச்சரியமுற்று, குற்றமற்ற திருவுள்ளத்தையுடைய இம் மெய்யன்பரது பெருமையிருந்தவாறு என்னே! என்று அவரைத் துதித்து, நறுமணங்கமழும் மலர்மாலை தாழும்படி பூமியிற் பொருந்த விழுந்து வணங்கி, வெற்றிமுரசினை யடிக்குஞ் சேனைகளுடன் திரும்பித் தமது பழைமையாகிய நகரத்திற்குச்சென்றார்.-எ-று.

அன்பரு மமைத்த சிந்தை யாலயத், தரனார் தம்மை,
நன்பெரும் பொழுது சாரத் தாபித்து, நலத்தி னோடும்,
பின்புபூ சனைக ளெல்லாம் பெருமையிற் பலநாட் பேணி,
பொன்புனை மன்று ளாடும் பொற்கழ னீழல் புக்கார்.

(இ-ள்.) பூசலார்நாயனாரும் தாம் கட்டிய இருதயாலயத்தில் சிவபெருமானைப்பெருமைபொருந்திய சுபதினத்திலே எழுந்தருளப் பிரதிஷ்டைசெய்து நன்மை மிக்க பேரன்புடன் பின்பு அருச்சனைகளனைத்தும் பெருமையோடு

அநேகநாள்கள் விரும்பிச்செய்து, கனகசபையில் ஆனந்தத்தாண்டவஞ் செய தருளுஞ் (சிவபெருமானது) அழகிய திருவடியை யடைந்தருளினார்.—எ-று. ()

நீண்டசெஞ் சடையி னார்க்கு நினைப்பினாற் கோயி லாக்கிப்
பூண்டஅன் பிடைய றாத பூசலார் பொற்றாள் போற்றி
யாண்டகை வளவர் கோமா னுலகுய்ய வளித்த செல்வப்
பாண்டிமா தேவி யார்தம் பாதங்கள் பரவ லுற்றேன்.

(இ-ள்.) நீளமாகிய சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமானுக்குச் சிந்தனையினால் ஆலயமமைத்துத் தாம் மேற்கொண்ட அன்பை இடைவிடாது செய்தருளிய பூசலார்நாயனாரது பொன்மயமாகிய திருவடிகளைத்துதித்து, ஆண் தன்மையையுடைய சோழர்பெருமான் உலகத்தா ருய்யும்படி பெற்றருளிய திருவருட்செல்வத்தையுடைய மங்கையர்க்கரசியாரது திருவடிகளைத் துதிக்கத் தொடங்கினேன்.—எ-று. (கஅ)

பூசலார்நாயனார் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ. திருவிருத்தம்-உஉஅக.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மங்கையர்க்கரசியார் புராணம்.

மங்கையர்க்குத் தனியரசி யெங்க டெய்வம், வளவர்திருக் குலக்கொழுந்து, வளைக்கை மானி, செங்கமலத் திருமடந்தை, கன்னி நாடா டென்னர்குலப் பழிதீர்த்த தெய்வப் பாவை, யெங்கள்பிரான் சண்பையர்கோ னருளி னாலே, யிருந்தமிழ்நா டுற்றவிடர் நீக்கித் தங்கள், பொங்கொளிவெண் டிருநீறு பரப்பி னாரைப், போற்றுவார் கழலெம்மாற் போற்ற லாமே.

(இ-ள்.) மங்கையர்களுக்கு ஒப்பற்ற அரசியாயுள்ளவரும், எங்கள் குலதெய்வமாகவுள்ளவரும், சோழர்பெருமானுடைய சிறந்தகுலத்திற்குக் கொழுந்து போல்பவரும், வளையலையணிந்த திருக்கரத்தையுடைய மானியென்னுந் திருநாமமுடையவரும், செந்தாமரை மலரில் வாழும் இலட்சுமி போல்பவரும், பாண்டியநாட்டையரசாளும் பாண்டியர்களது குலத்திற்குநேர்ந்த (சமணசமயச்சார்பாகிய) பெரும்பழியைத் தீர்த்ததெய்வப்பதுமை போல்பவரும், எங்கள் முதல்வராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரது திருவருளினாலே பெரிய தமிழ்வளம் பொருந்திய பாண்டியநாடடைந்த துன்பத்தை யொழித்துத் தங்களுரிமையாகிய ஒளிவிளங்குந் திருவெண்ணீற்றைப் பரவச்செய்தவருமாகிய

எமதன்னையாரைத் துதிக்கின்ற பெரியோர்களுடைய திருவடிகளே எம்மால்
துதிக்கத்தக்கதாகும்.—எ-று. (க)

பூசுரர்சூளாமணியாம் புகலிவேந்தர், போனகஞானம்பொழிந்த
புனிதவாக்காற், றேசுடைய பாடல்பெறுந் தவத்தினாரைச், செப்புவ
தியா மென்னறிந்து | தென்னர் கோமான், மாசில்புகழ் நெடுமாறன்
றனக்குச் சைவ வழித்துணையாய் நெடுங்கால மண்ணிற்பின்னை, யாசினெ
றி யவரோடுங் கூட, வீச ரடிநிழற்கீ ழமர்ந்திருக்க வருளும் பெற்றார்.

(இ-ள்.) வேதியர் சூளாமணியாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிவ
ஞானப்பாலமுதுண்டருளிய தூய்மையாகிய திருவாக்கினால் மெய்ஞ்ஞானதே
ஜசு விளங்குந் திருப்பதிகம் பாடப்பெற்ற பெருந்தவமுடைய அவ்வம்மையா
ரது பெருமையைக்குறித்து யாம் யாது தெரிந்து சொல்லுவோம்; பாண்டியர்
பெருமானாகிய குற்றமற்ற கீர்த்தியையுடைய நின்றசீர்நெடுமாறநாயனாருக்குச்
சமயச்சார்பாயுள்ள பெருந்துணையாய் நெடுநாள் வாழ்ந்திருந்து, பின்பு நல்லொ
ழுக்கமுடைய அந்நாயனாரோடுகூடச் சிவபெருமானது திருவடிநிழலில் வீற்
றிருந்தருளத்தக்க திருவருளையும் பெற்றனர்.—எ-று. (உ)

வருநாளென் றும்பிழையாத் தெய்வப் பொன்னி, வளம்பெருக
வளவர்குலம் பெருக்குந் தங்க, டிருநாடு போற்செழியர் தென்னாடு விள
க்குஞ் சீர்விளக்கின் செய்யசி றடிகள் போற்றி, யொருநாளுந் தன்செ
யலில் வழுவா தன்பர்க் குடைகீளுங் கோவணமு நெய்து நல்கும்,
பெருநாமச் சாலியர்தங் குலத்தில் வந்த பெருந்தகையார் நேசர்திறம்
பேச லுற்றாம்.

(இ-ள்.) வெள்ளம் பெருகிவரும் நாள்கள் எக்காலத்துந்தவறாத தெய்வ
த்தன்மைபொருந்திய காவிரிநதியானது வளப்பமிக்கோங்கச் சோழர்குலத்தை
விருத்திசெய்யுந் தங்களது சோழநாட்டைப்போலப் பாண்டியர்களது பாண்டி
நாட்டை விளக்குவித்த சிறந்த தீபம்போல்பவராகிய மங்கையர்க்கரசியாரது
சிவந்த சிறிய திருவடிகளைத் துதித்து, தமது திருத்தொண்டில் ஒருநாளுந் தவ
றுமல் சிவனடியார்களுக்கு, உடையும், கீளும், கோவணமும் நெய்து கொடுத்
தருளிய மிக்க புகழ்பொருந்திய சாலியர்குலத்தில்அவதரித்த பெருங்குணத்தை
யுடைய நேசநாயனாரது திருத்தொண்டின் றிறத்தைச் சொல்லத்தொடங்கி
னோம்.—எ-று.

தங்கள்திருநாடு என்றது, தாம் அவதரித்த நாடாகிய சோழதேசத்தை.

மங்கையர்க்கரசியார் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ. திருவிருத்தம்-உஉகஉ.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நேசநாயனார் புராணம்.

சீர்வளர் சிறப்பின் மிக்க,செயன்முறை யொழுக்கங் குன்றா,
நார்வளர் சிந்தை வாய்மை நன்மையார் மன்னி வாழும்,
பார்வளர் புகழின் மிக்க பழம்பதி,மதிதோய் நெற்றிக்
கார்வளர் சிகர,மாடக் காம்பீலி யென்ப தாகும்.

(இ-ள்.) மேன்மைவளருஞ் சிறப்பாலுயர்ந்த தங்கடங்கள் செயல்முறைகளிலும் நல்லொழுக்கத்திலுங் குறைவுபடாத அன்புவளருஞ் சிந்தையினையும் மெய்ம்மையினையுமுடைய பெரியோர்கள் நிலைபெற்று வாழ்கின்ற உலகத்தில் வளரும் புகழாற் சிறந்த பழைய நகரமாகவுள்ளது (யாதெனின்,) சந்திரன் தோய்கின்ற முகப்பில் மேகங்கள் தவழுஞ் சிகரங்களையுடைய மாளிகைகள் நெருங்கிய காம்பீலியென்பதாகும்.—எ-று. (௧)

அந்நக ரதனில் வாழ்வா,ரறுவையர் குலத்து வந்தார்,
மன்னிய தொழிலிற் றங்கண் மரபின்,மேம் பாடு பெற்றார்,
பன்னகா பரணற் கன்பர் பணிதலைக் கொண்டு,பாதஞ்
சென்னியிற் கொண்டு போற்றுந் தேசினார், நேச ரென்பார்.

(இ-ள்.) அக்காம்பீலிநகரத்தில் வாழ்கின்றவர் ; சாலியர்குலத்தில் அவதரித்தவர் ; சர்ப்பாபரணராகிய சிவபெருமானடியார்களிடுகின்ற திருப்பணிகளைத் தலைமேற்கொண்டு, அவர்கள் திருவடிகளைச் சிரசிற்சூடித் துதிக்கின்ற அன்பினையுடையவர் ; நேசநாயனாரென்னுந் திருநாமமுடையவர்.—எ-று.

தேசு-ஒளி, ஈண்டு அன்பு என்னும் பொருளில்வந்தது. (௨)

ஆங்கவர் மனத்தின் செய்கை,யரனடிப் போதுக் காக்கி,
யோங்கிய வாக்கின் செய்கை யுயர்ந்தவஞ் செழுத்துக் காக்கித்,
தாங்குகைத் தொழிலின் செய்கை தம்பிரா னடியார்க் காகப்,
பாங்குடை யுடையுங்,கீளும்,பழுதில்கோ வணமு,நெய்வார்.

(இ-ள்.) அந்நாயனார் தம்முடைய மனத்தின் செய்கையைச் சிவபெருமானுடைய திருவடித்தாமரைகளுக்கு ஆக்கி, சிறந்த வாக்கின்செய்கையை (பல மந்திரங்களினும்) உயர்ந்த ஸ்ரீ பஞ்சாக்ஷரத்துக்கு ஆக்கி, தாம் அடைந்திருக்கின்ற கைத்தொழிலின் செய்கையைச் சிவபெருமானடியார்களுக் காகும்பொருட்டுப் பாகுபாட்டையுடைய வஸ்திரமும் - கீளும், குற்றமற்ற கோவணமும் நெய்கின்றவர்.—எ-று. (௩)

உடையொடு நல்ல கீளு மொப்பில்கோ வணமு நெய்து,
விடையவ ரடியார் வந்து வேண்டுமா றீயு மாற்றா,
விடையறா தளித்து நாளு மவர்கழ லிறைஞ்சி யேத்தி,
யடை வுறு நலத்த ராகி யரனடி நீழல் சேர்ந்தார்.

(இ-ள்.) உடையும், கல்ல கீளும், ஒப்பற்ற கோவணமும் செய்து, இடபவாகனத்தையுடைய சிவபெருமானடியார்கள் அடைந்து விரும்பியவண்ணங் கொடுக்கும் வகையினால் இடைவிடாது கொடுத்து, எந்நாளும் அவ்வடியார்களது திருவடிகளை வணங்கித்துதித்து, அதுகாரணமாகப்பெற்ற பெரும்புண்ணியமுடையவராய்ச் சிவபெருமானது திருவடிநிழலை யடைந்தனர்.—எ-று. (ச)

வேறு.

கற்றை வேணி முடியார்தங் கழல்சேர் வதற்குக், கலந்தவினை
செற்ற நேசர் கழல்வணங்கிச், சிறப்பான் முன்னைப் பிறப்புணர்ந்து,
பெற்ற முயர்த்தார்க் காலயங்கள் பெருக வமைத்து, மண்ணாண்ட
கொற்ற வேந்தன், கோச்செங்கட் சோழன் பெருமை கூறுவாம்.

(இ-ள்.) கற்றையாகிய சடைமுடியையுடைய சிவபெருமானது திருவடிகளை யடைதற்பொருட்டுத், தம்மைக்கலந்திருந்த இருவினைகளையு மொழித்தருளிய நேசநாயனாரது திருவடிகளைவணங்கி, சிறப்பினால் முற்பிறப்பின் றன்மையையுணர்ந்து இடபக்கொடியை யுயர்த்திய சிவபெருமானுக்கு ஆலயங்கள் மிகுதியாகக் கட்டுவித்து நிலவுலகத்தை ஆளுகைசெய்த வெற்றிபொருந்திய அரசராகிய கோச்செங்கட்சோழநாயனாருடைய திருத்தொண்டின் பெருமையைச் சொல்லுவோம்.—எ-று. (ரு)

நேசநாயனார் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆக திருவிருத்தம்-உஉகஎ.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# கோச்செங்கட் சோழநாயனார் புராணம்.

துலையிற் புறவி னிறையளித்த சோழ ருரிமைச் சோணாட்டி,
லலையிற் றரள மகிலொடுசந் தணிநீர்ப் பொன்னி மணிகொழிக்குங்,
குலையிற் பெருகுஞ் சந்திரதீர்த் தத்தின் மருங்கு, குளிர்சோலை
நிலையிற் பெருகுந் தருமிடைந்த, நெடுந்தண் கான மொன்றுளதால்.

(இ-ள்.) தராசுத் தட்டிலே புறவின் நிறைக்குச் சரியாக (த்தமது மாமிசத்தை யரிந்து நிறுத்து)க்கொடுத்த சோழராஜாக்களுக் குரிமையாகிய சோழவளநாட்டிலே அழகிய நீரையுடைய காவிரிநதியானது அலைக்கரங்களால் முத்துக்களையும், அகிற்கட்டைகளையும் சந்தனக்கட்டைகளையும் பலவகை மணிகளையுங் கொழிக்கின்ற கரையில் சிறந்து விளங்குகின்ற சந்திரபுஷ்கரணிக் கருகிலே குளிர்ந்த சோலைகளில் நிலைத்து வளர்ந்திருக்கும் பெரிய விருக்ஷங்கள் நிறைந்த பெரிதாகிய குளிர்ந்த ஒருவனம் இருந்தது.—எ-று.

ஒரு புறாவின் உயிரைக் காத்தற்பொருட்டு ஒரு வேடனுக்குத் தனதுடலின் மாமிசத்தை யரிந்து அப்புறாவினிடையாக நிறுத்துக்கொடுத்துச் செங்கோல்முறைமைசெலுத்திய சூரியகுலவமிசத் தரசனாகிய சிபிச்சக்கிரவர்த்தி இச்சோழர்குலத்தில் தோன்றிய பூர்வவரசனாகலின், 'துலையிற் புறவி னிறையளித்த சோழ ருரிமைச் சோணாட்டில்' என்றார். (௧)

அப்பூங் காவில் வெண்ணாவ லதன்கீழ் முன்னா ளரிதேடு
மெய்ப்பூங் கழலார் வெளிப்படலு மிக்க தவத்தோர் வெள்ளானை
கைப்பூம் புனலு முகந்தாட்டிக் கமழ்பூங் கொத்து மணிந்திறைஞ்சி
மைப்பூங் குவளைக் களத்தாரை நாளும் வழிபட் டொழுகுமால்.

(இ-ள்.) அந்தப் பூஞ்சோலையில் ஒருவெண்ணாவல் மரத்தின்கீழே, முற்காலத்தில் விஷ்ணுவினால் தேடப்பட்ட மெய்ம்மையாகிய தாமரை மலர்போன்ற திருவடிகளையுடைய சிவபெருமான் வெளிப்படவும், மிக்க தவத்தினையுடைய ஒரு வெள்ளானை தனது துதிக்கையினால் அழகிய நீரைமுகந்து அபிஷேகஞ்செய்து நறுமணங்கமழும் பூங்கொத்துக்களை யணிந்து வணங்கிக் கரிய நீலோற்பல மலர்போலுங் கண்டத்தினையுடைய அச்சிவலிங்கப்பெருமானை நாடோறும் பூசனை செய்தொழுகும்.—எ-று. (௨)

ஆன செயலாற் றிருவானைக் காவென் றதற்குப் பெயராக
ஞான முடைய வொருசிலந்தி நம்பர் செம்பொற் றிருமுடிமேற்
கானல் விரவுஞ் சருகுதிரா வண்ணங் கலந்த வாய்நூலான்
மேனற் றிருமேற் கட்டியென விரிந்து செறியப் புரிந்துளதால்.

(இ-ள்.) இவ்வாறாகிய செயலினால் அத்தலத்திற்குத் திருவானைக்கா என்று பெயர்வழங்க, மெய்ஞ்ஞானத்தையுடைய ஒருசிலந்திப்பூச்சியானது அச்சிவபெருமானுடைய செம்பொன்மயமாகிய திருமுடியின்மேல் சூரியவெப்பமும், கலந்திருக்கின்ற சருகுகளும் உதிராதபடி தனது வாயினின்றுந் தோன்றிய நூலினால், சிறந்த மேற்கட்டிபோல விரிந்து நெருங்கச் செய்தது.— எ-று.

வெள்ளானை பூசித்தகாரணத்தினால், திருவானைக்கா வென்னும் பெயர் வழங்கியதென்க. (௩)

நன்று மிழைத்த சிலம்பிவலைப் பரப்பை நாத னடிவணங்கச்
சென்ற யானை யநுசிதமென் றதனைச் சிதைக்கச் சிலம்பிதா
னின்று களிற்றின் கரஞ்சுலவிற் றென்று மீள விழைத்ததனை
யன்று கழித்த பிற்றைநா ளடல்வெள் ளானை யழித்ததால்.

(இ-ள்.) (சருகு உதிரா வண்ணம்) திருத்தமாகவும் மேற்கட்டி செய்த சிலந்தியினது வலைபரப்பைச் சிவலிங்கப்பெருமானுடைய திருவடியை வணங்கச்சென்ற வெள்ளானைகண்டு அது அநுசிதமென்று நினைத்து அதனைச் சிதைக்க, சிலந்திபார்த்து இன்று யானையின் துதிக்கை சுழன்றதனால் விதானம் சிதைவுண்டதென்று கருதி மீண்டுங் கட்டிய அம்மேற்கட்டியை அன்று கழித்த மறுநாள் வலிமைபொருந்திய அவ்வெள்ளானை முன்போல்) அழித்தது.—எ-று.

எம்பி ரான்றன் மேனியின்மேற் சருகு விழாமை யான்வருந்தி
யும்ப ரிழைத்த நூல்வலைய யழிப்ப தேயென் றருத்தெழுந்து



கோச்செங்கட்சோழநாயனார்

வெம்பிச், சிலம்பி துதிக்கையினிற் புக்குக் கடிப்ப, வேகத்தாற்
கும்ப யானை கைநிலத்தின் மோதிக், குலைந்து வீழ்ந்ததால்.

(இ-ள்.) எமது சிவபெருமானுடைய திருமேனியின்மேல் சருகுகள் விழாவண்ணம் யான் வருந்தி மேலே கட்டிய நூல்விதானத்தை இது அழிக்கலாமோவென்று கோபித்தெழுந்து கலங்கி, அச்சிலந்தியானது துதிக்கையினுள்ளே புகுந்துகடிக்க, மத்தகத்தையுடைய வெள்ளானையானது தன்னுடைய துதிக்கையை நிலத்தில் வேகமாகமோதி வருந்திவீழ்ந்து இறந்தது.—எ-று. (௭)

தரையிற் புடைப்பக், கைபுக்க சிலம்பி தானு முயிர்நீங்க,
மறையிற் பொருளாந், தருமாற்றான் மதயா னைக்கும் வரங்கொடுத்து,
முறையிற் சிலம்பி தனைச்சோழர் குலத்து வந்து முன்னுதித்து,
நிறையிற் புவனங் காத்தளிக்க, வருள்செய் தருள, நிலத்தின்கண்.

(இ-ள்.) வெள்ளானை நிலத்தில் மோத அதன் துதிக்கையினுள்ளே புகுந்த சிலந்தியும் இறக்க, வேதத்தின் மெய்ப்பொருளாயுள்ள சிவபெருமான் அருள்செய்யு முறைமையால் மதத்தையுடைய அவ்வெள்ளானைக்கும் வரத்தைக் கொடுத்து, முறைப்படி சிலந்தியைச் சோழர்குலத்தில் வந்துமுன்னே பிறந்து பொறுமையோடு உலகத்தை அரசாட்சி செய்யும்படி திருவருள் செய்தருளவும் இந்நிலவுலகத்தில்.—எ-று.

இதுமுதல் ஐந்துபாடலுங் குளகம். (௯)

வேறு.

தொன்மைதரு சோழர்குலத் தரசனாஞ் சுபதேவன்,
றன்னுடை பெருந்தேவி கமலவதி யுடன்சார்ந்து,
மன்னுபுகழ்த் திருத்தில்லை மன்றுடு மலர்ப்பாதஞ்
சென்னியுறப் பணிந்தேத்தித், திருப்படிக்கீழ் வழிபடுநாள்.

(இ-ள்.) பழைமைபொருந்திய சோழர்குலத்தரசனாகிய சுபதேவனென்பவன் தன்னுடைய மாதேவியாகிய கமலவதியுடன் நிலைபெற்ற புகழையுடைய ஸ்ரீசிதம்பரத்தை யடைந்து கனகசபையில் ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளும் ஸ்ரீநடராசப்பெருமானுடைய திருவடிகளைச் சிரசிற்பொருந்த வணங்கித் துதித்துத் திருப்படியின்கீழ் உபாசனை செய்துகொண்டிருக்கும் நாள்களில்.—எ-று.

மக்கட்பே றின்மையினான், மாதேவி வரம்வேண்டச்,
செக்கர்நெடுஞ் சடைக்கூத்தர் திருவுள்ளஞ் செய்தலினான்,
மிக்கதிருப் பணிசெய்த சிலம்பிகுல வேந்தாமகி
முக்கமல வதிவயிற்றி, னணிமகவாய் வந்தடைய.

(இ-ள்.) புத்திரப்பேறு இல்லாமையால் மாதேவியாகிய கமலவதியார் வரத்தைக்குறித்துப் பிரார்த்திக்க, செவ்வானம்போலும் நீண்ட சடைமுடியையுடைய சிவபெருமான் திருவருள் செய்தமையால் (வாய்நூலால் மேற்கட்டி கட்டுதலாகிய) சிறந்த திருப்பணியைச் செய்த சிலந்தியானது சுபதேவச்சோழமகாராஜன் காதல்கொண்டிருக்கும் மாதேவியாகிய அக்கமலவதியாரது வயிற்றில் அழகிய குழந்தையாய் வந்து தங்க.—எ-று.

'மாதேவியார்தமக்கு' என்றும் பாடம். (அ)

வேறு.

கழையார் தோளி கமலவதி தன்பாற், கருப்ப நாணிரம்பி,
விழைவார் மகவு பெறவடுத்த வேலை யதனிற் காலமுணர்
பழையா ரொருநா ழிகைகழித்துப் பிறக்கு மேலிப் பசுங்குழவி
யுழையார் புவன மொருமூன்று மளிக்கு மென்ன, வொள்ளிழையார்.

(இ-ள்.) மூங்கில்போலும் அழகிய தோள்களையுடைய கமலவதியாரிடத்தில் பிரசவகாலம் நிரம்பி விருப்பமிக்க குழந்தையைப் பிரசவிப்பதற்கு அடுத்தபொழுது, காலங்களை யுணர்ந்த மூதறிவினராகிய சோதிடர்கள் இப்பசுங்குழந்தை ஒருநாழிகைகழித்துப்பிறக்குமாகில் இடமகன்ற மூன்றுலகங்களையும் அரசாட்சிசெய்யுமென்று கூற, (அதனைக்கேட்ட) ஒளிவிளங்கும் ஆபரணமணிந்த அக்கமலவதியார்.—எ-று. (௯)

பிறவா, தொருநா ழிகைகழித்தென் பிள்ளை பிறக்கும் பரி, சென்கா
லுறவார்த் தெடுத்துத், தூக்குமென, வுற்ற செயன்மற் றதுமுற்றி,
யறவா ணர்கள்சொல் லியகால மணையப், பிணிவிட், டருமணியை [ருள்.
யிறவா தொழிவாள் பெற்றெடுத்தென் கோச்செங் கண்ணனோவென்

(இ-ள்.) என் பிள்ளை இப்போது பிறவாமல் இன்னும் ஒருநாழிகை கழிந்துப் பிறக்கும் வண்ணம் என் கால்களைப் பொருந்தக்கட்டி மேல் தூக்குங்களென்று சொல்ல, அவ்வாறே அச்செயலைச் செய்துமுடித்துச் சோதிடர்கள் சொல்லிய காலம்வர, கட்டவிழ்த்துவிட்டு, அரிய மாணிக்கம்போன்ற பிள்ளையை அக்கமலவதியார் பெற்றெடுத்து (அது பிறக்குங்காலந் தாழ்த்தமையால் சிவந்தகண்களையுடைத்தா யிருத்தல்கண்டு) "என் கோச்செங் கண்ணனோ?" என்று கூறினாள்.—எ-று.

இவ்விரண்டு திருவிருத்தத்துங் கூறியுள்ளதனை :—" ஐயிருநன் மதியடைப்ப வகடுளைந்து கமலவதி - மெய்யினையக் கருமதலை மிளிர்ந்து சிரங் கீழ்நோக்க - வொய்யெனச்சென் றரசனிடை யுழையருரைத் தலுங்கணிகள் - பையவிது பொழுதகலிற் பார்த்திபனே நன்றென்றார்"—"நன்முகூர்த்தம் வருமளவு நளிமைந்தன் பிறவாமை - யென்முயன்று மெனவரச னினைகின்ற செயல்கேளா - வன்மதியிற் கமலவதி மற்றென்னைத் தலைகீழா - வென்மணிநூபுரத்தாளின் யாத்தினித்தூக் குகவென்றாள்."—" ஈங்கிதுவுந் திருவருளா லியன்றதென வலித்தரச - னாங்கதுவே புரிமினென வயலிருந்தா ரதுபுரிந்து - தீங்குறுகா லங்கடந்த செவ்வியினி லிறக்கினா - ரோங்குவலம் புரிமுத்தி னொருமைந்த னுதித்திட்டான் "—"தக்கபவ முறுங்காலந் தாழ்த்தலினாற் றனிமைந்தன் - செக்கர்நிற விழியினனாய்த் திகழ்ந்தொளிருஞ் செயனோக்கி - மைக்கணுறு கமலவதி வளர்கோச்செங் கண்ணனோ-தொக்கவறந் தலையெடுப்பத் தோன்றியவிம் மணியென்றாள்" என்வருந் திருவானைக்காப்புராணத்தா னறிக. மணி - உவமையாகுபெர். கமலவதியார் சுபலக்கினம் வருமளவுந் தங் காலை மேலே தூக்கிக் கட்டப்பட்டிருந்து பின் காலம் வந்தபின்பு கட்டவிழ்க்கப்பெற்றுப் பிரசவித்துக் குழந்தையைத் தங் கண்ணாற் பார்க்குமளவும் உயிர்பெற்றிருந்தமையின், 'இறவாதொழிவாள்' என்றார். (௧0)

தேவி புதல்வற் பெற்றிறக்கச், செங்கோற் சோழன், சுபதேவ
னாவி யனைய வரும்புதல்வன் றன்னை, வளர்த்தங் கணிமகுட
மேவு முரிமை முடிகவித்துத், தானும் விரும்பு பெருந்தவத்தின்
றூவி னெறியைச் சென்றடைந்து, தலைவர் சிவலோ கஞ்சார்ந்தான்.

(இ-ள்.) மாதேவியார் புதல்வனைப்பெற்று உடனே இறந்துவிடவும், செங்கோலையுடைய சுபதேவச்சோழமகாராஜன் தனதுயிரையொத்த அவ்வரிய புதல்வனை வளர்த்து அழகிய மகுடஞ்சூடு முரிமைப்படி கிரீடந்தரித்து, தாமும் விரும்புகின்ற பெருந்தவத்தின் குற்றமற்ற நன்னெறியைச் சென்றடைந்து சிவபெருமானது சிவலோகத்தையடைந்தனன்.—எ-று. (கக)

கோதை வேலான் கோச்செங்கட் சோழன் றானிக் குவலயத்தி
லாதி மூர்த்தி யருளான்முன் னறிந்து பிறந்து மண்ணாள்வான்,
பூத நாதன் றான்மகிழ்ந்து பொருந்தும பெருந்தண் சிவாலயங்கள்
காத லோடும் பலவெடுக்குந் தொண்டு புரியுங் கடன்பூண்டான்.

(இ-ள்.) மாலையையணிந்த வேற்படை யேந்திய கோச்செங்கட் சோழநாயனார் இந்நிலவுலகத்தில் முதற்பெருங் கடவுளாகிய சிவபெருமானுடைய திருவருளினாலே பூர்வசன்ம வுணர்ச்சியையறிந்து பிறந்து, இவ்வுலகத்தை யரசாட்சி செய்பவர் பூதகணநாதராகிய சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளும் பெருமை மிக்க பல சிவாலயங்களை விருப்பத்தோடு கட்டுவிக்குந் திருத்தொண்டு செய்யுங்கடமையை மேற்கொண்டனர்.—எ-று.

'முன்னறிந்து பிறந்து மண்ணாள்வான்' என்றது, முற்சனனத்தில் சிலந்திப்பூச்சியாயிருந்து சிவத்தொண்டுபுரிந்து அதுகாரணமாகச் சோழராஜ புத்திரனாய்ப் பிறந்திருக்கின்றோமென்னும் பூர்வவுணர்ச்சியோடும் அரசாட்சி செய்கின்றவர் என்க. வாய்நூலால் சிவபெருமான்மீது சருகுதிராவண்ணம் மேற்கட்டி செய்தற்கு அரசனாகப்பிறக்கும் பேறுபெற்றமையின், விசேடமாகத் திருப்பணிசெய்யின் முத்திப்பயனு மெளிதிற் கைகூடுமென்று விரும்பிச் செய்தனரென்பார், 'பூதநாதன் றான்மகிழ்ந்து பொருந்தும் பெருந்தண்சிவாலயங்கள் - காதலோடும் பலவெடுக்குந் தொண்டுபுரியுங் கடன் பூண்டான்' என்று கூறினார். (கஉ)

ஆனைக் காவிற் றான்முன்ன மருள்பெற், றதனை யறிந்தங்கு,
மானைத் தரித்த திருக்கரத்தார் மகிழுங் கோயில் செய்கின்றான்
ஞானச் சார்வாம் வெண்ணாவ லுடனே கூட, நலஞ்சிறக்கப்
பானற் களத்துத் தம்பெருமா னமருங் கோயிற், பணிசமைத்தான்.

(இ-ள்.) திருவானைக்காவில் தாம் முன்பு திருவருள் பெற்றமையை யுணர்ந்து அவ்விடத்தில் மான்கன்றை யேந்திய சிவபெருமான் மகிழ்ந்து வீற்றிருந்தருளுந்திருக்கோயில் கட்டுவிக்கின்ற அந்நாயனார் மெய்ஞ்ஞானச் சார்பாயுள்ள வெண்ணாவல் மரத்துடன் நன்மை மிகும்படி நீலோற்பல மலர்போலுங் கண்டத்தினையுடைய தமது சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக்கோயிற் றிருப்பணியைச் செய்வித்தார்.—எ-று. (கங)

வேறு.

மந்திரிக டமையேவி வள்ளல்கொடை யநபாயன்
முந்தைவருங் குலமுதலோ ராயமுதற் செங்கணார்
வந்தமில்சீர்ச் சோணாட்டி லகனாடு தொறுமணியார்
சந்திரசே கரனமருந் தானங்கள் பலசமைத்தான்.

(இ-ள்.) வள்ளல்போலுங் கொடையினையுடைய அநபாயச் சோழ மகாராஜாவினுக்கு முன்னே வந்த சோழகுலத்தலைவராகிய முதன்மை பொருந்திய கோச்செங்கட் சோழநாயனார் தமது மந்திரிமார்களை யேவி முடிவற்ற சிறப்பினையுடைய சோழநாட்டின் உள்நாடுகள்தோறும் அழகு விளங்குகின்ற சந்திரசேகரராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல திருக்கோயில்களைக் கட்டுவித்தார்.—எ-று.

வள்ளல்-வரையாது கொடுக்கும் ஈகைத்தன்மையுடையவர்கள். அவர்கள் முதல்வள்ளல், இடைவள்ளல், கடைவள்ளல் என மூவகைப்படுவோர்கள். இவர்களை:—"மிக்கசெம் பியனே காரி விராடனே நிருதி தானுந் - தக்கதுந் துமாரி தானுஞ் சகரனு நளனுந் தாமுன் - னக்குரன் சந்தி மான்றோ டந்திமான் சிசுபாலன்னே - வக்கிரன் கன்னன் சந்த னிடைவள்ளல் வகுத்த வாறே"—"பாரியா யெழிலி நள்ளி பசுந்தொடை மலையன் பேக-னோரியே கடையி லுற்றோருறுபொரு டண்டா தீந்தும் - வாரியி லிரந்தோர்க் கிட்டும் வளர்புகழ் துதிக்கவீந்தும் - பேரியல் வைய மெண்ணப் பெற்றனர் முப்பா லாகும்" என்னுஞ் சூடாமணி நிகண்டா னறிக. (௧௪)

அக்கோயி றொறுஞ்சிவனுக் கமுதுபடி முதலான
மிக்கபெருஞ் செல்வங்கள் விருப்பினான் மிகவமைத்துத்,
திக்கனைத்துந் தனிச்செங்கோ னுறைநிறுத்தித், தேர்வேந்தன்,
முக்கண்முத னடமாடு முதற்றில்லை முன்னினான்.

(இ-ள்.) இரதாதிபதியாகிய கோச்செங்கட் சோழநாயனார் அவ்வாலயங்கடோறும் சிவபெருமானுக்கு அமுதுபடி முதலாகிய மிக்க பெருஞ்செல்வமாகிய நிபந்தங்களை மிக்க விருப்பத்தோடமைத்து, அஷ்டதிக்குகளிலும் ஒப்பற்ற செங்கோன்முறைமை செலுத்தி, (சோமசூரியாக்கினி யென்னும்) மூன்று கண்களையுடைய சிவபெருமான் ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளும் முதன்மை பொருந்திய ஸ்ரீ சிதம்பரத்தைச் சிந்தித்து அடைந்தார்.—எ-று. (௧௫)

திருவார்ந்த செம்பொன்னி னம்பலத்தே நடஞ்செய்யும்,
பெருமானை யடிவணங்கிப் பேரன்பு தலைசிறப்ப,
உருகாநின் றுளங்களிப்பத் தொழுதேத்தி யுறையுநாள்.
வருவாய்மை மறையவர்க்கு மாளிகைகள் பலசமைத்தான்.

(இ-ள்.) செல்வங்கணிறைந்த அழகியபொன்னம்பலத்தில் திருநடனஞ் செய்தருளும் ஸ்ரீ நடராசப்பெருமானைத் திருவடிகளில் பேரன்பு சிறந்தோங்க மனமுருகிக் களிகூர்ந்து வணங்கித் துதித்து வாழும்நாளில், மெய்ம்மைபொருந்திய தில்லைவாழந்தணர்களுக்குப் பல திருமாளிகைகள் கட்டுவித்தார்.—எ-று.



திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார்

தேவர்பிரான் றிருத்தொண்டிற் கோச்செங்கட் செம்பியர்கோன்,
பூவலயம் பொதுநீக்கி யாண்டருளிப், புவனியின்மே
லேவியநற் றொண்டுபுரிந், திமையவர்க ளடிபோற்ற,
மேவினன் றிருத்தில்லை வேந்தர்திரு வடிநிழற்கீழ்.

(இ-ள்.) கோச்செங்கட் சோழநாயனர் தேவர்கள் நாயகராகிய சிவபெருமானுக்குச் செய்யுந் திருத்தொண்டுடன் இந்நிலவுலகத்தைப் பொதுநீக்கி யரசாட்சிசெய்து, உலகத்தில் ஏவிய திருத்தொண்டுகளைச்செய்து, தேவர்கள் தமது திருவடியை வணங்கத், திருத்தில்லைபபதியில் திருநடனஞ் செய்தருளும் ஸ்ரீநடராஜப்பெருமானுடைய திருவடிநிழலில் அடைந்தருளினர்.—எ-று.

பூவலயம்-பூமியாகிய வட்டம். (௧௭)

வேறு.

கருநீல மிடற்றார் செய்ய கழலடி நீழல் சேர,
வருநீர்மை யுடைய செங்கட் சோழன்றன் மலர்த்தாள் வாழ்த்தித்,
தருநீர்மை யோசையாழின் றலைவராயுலக மேத்துந
திருநீல கண்டப பாணர் திறமினிச் செப்ப லுற்றேன்.

(இ-ள்.) கரிய நீலகண்டத்தையுடைய சிவபெருமானது வீரக்கழலையணிந்த சிவந்த திருவடிநிழலை யடையததக்க பேரன்பினையுடைய கோச்செங்கட் சோழநாயனருடைய தாமரைமலர்போன்ற திருவடிகளைத் துதித்து, இனிய ஓசையைத்தருகின்ற யாழ்த்தலைவராக உலகத்தார் துதிக்குந் திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனருடைய திருத்தொண்டின்றிறத்தை இனிச் சொல்லததொடங்கினேன்.—எ-று. (௧௮)

கோச்செங்கட்சோழ நாயனர் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம்-௨௩௧௫.

---

உ

சிவமயம.

திருச்சிற்றம்பலம்.

---

## திருநீலகண்டயாழ்ப்பாணநாயனர் புராணம்.

---

எருக்கத்தம் புலியூர் மன்னி வாழ்பவ, ரிறைவன் றன்சீர்
திருத்தகும் யாழி லிட்டுப் பரவுவார், செழுஞ்சோ ணாட்டில்
விருப்புறு தான மெல்லாம் பணிந்துபோய், விளங்கு கூடற்
பருப்பதச் சிலையார் மன்னு மாலவாய் பணியச் சென்றார்.

(இ-ள்.) திருவெருக்கத்தம்புலியூரென்னுந் திருப்பதியில் நிலைபெற்று வாழ்பவர்; சிவபெருமானுடைய புகழைத் திருத்தமாகிய யாழிலமைத்துப் பாடு

இன்றவர் ; வளப்பமிக்க சோழநாட்டில் சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளுந் திருப்பதிகடோறும் வணங்கிச்சென்று,விளங்குகின்ற மதுராபுரியில் மேருமலையாகிய வில்லையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருவாலவாய் என்னுந் திருக்கோயிலை வணங்கச்சென்றார்.—எ-று.

திருத்தகும் யாழ் என்றது, நால்வகை யாழினுட் சகோடயாழை. இதனை:—" ஆங்கு வேதியி லருதசெந் தீவலஞ் சுழிவுற்- றோங்கி முன்னையி லொருபடித் தன்றியே யொளிரத் - தாங்கு நூலவர் மகிழ்வுறச் சகோடயாழ்த் தலைவர் - பாங்கு பாணியாருட னருளாற் பள்ளி கொண்டார் " — என முற்கூறினமையா லறிக. நால்வகையாழாவன - பேரியாழ் - மகரயாழ் - சகோடயாழ்- செங்கோட்டியாழ் என்பன. என்னை ? " பேரியாழ் பின்னு மகரஞ் சகோடமுடன் - சீர்பொலியுஞ் செங்கோடு செப்பினார் - தார்பொலிந்து - மன்னுந் திருமார்பா வண்கூடற் கோமானே - பின்னுமுளவேபிற " என்றாராகலின், இவற்றிற்கு நரம்புகொள்ளுமிடத்துப் பேரியாழிற்கு இருபத்தொன்றும், மகரயாழிற்கு பதினேழும், சகோடயாழிற்குப் பதினாறும்,செங்கோட்டியாழிற்கு ஏழுங் கொள்ளப்படும். என்னை ? " ஒன்று மிருபது மோரேழ்மேற் பத்துடனே-நின்ற பதி னாறேழு நேடுங்காற் - குன்றாத - நால்வகை யாழிற்கு நன்னரம்பு சொன் முறையே-மேல்வகைநூலோர் விதி" என்பதனாற் கொள்க. இவ் வியாழ்வாசிக்கு முறையை, " நல்லிசை மடந்தை நல்லெழில் காட்டி - யல்லியம் பங்கயத் தயனினிது படைத்த - தெய்வஞ் சான்ற தீஞ்சுவைநல் யாழ்- மெய்பெறவணக்கி மேலொடு கீழ்புணர்த் - திருகையின் வாங்கி யிடவயி னிரீஇ - மருவியவினயமாட்டுதல் கடனே " என்பதனா னறிக. (௪)

ஆலவா யமர்ந்தார் கோயில் வாயிலை யடைந்து நின்று,
பாலையீ ரேழு கோத்த பண்ணிற்,கருவி வீக்கிக்,
காலயா தரித்த பண்ணிற்,கைபல முறையு மாராய்ந்,
தேலவார் குழலார் பாகர்,பாணிகள் யாழி லிட்டார்.

(இ-ள்.) திருவாலவாயில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானது திருக்கோயிற் றிருவாயிலையடைந்து நின்று, பதினான்கு வகைப்பாலையாழ்த் திறத்திலமைத்த பண்ணினால் நரம்பைவீக்கி,அவ்வக்காலத்திற் கமைந்த பண்ணால் கைவந்த பலமுறைமைகளையு மாராய்ச்சிசெய்து, மயிர்ச்சாந்தணிந்த நீண்ட கூந்தலையுடைய பார்வதி பாகராகிய சிவபெருமானைக்குறித்துப் பாடுவனவாகிய பாணிகளை யாழிலமைத்து வாசித்தார்.—எ-று.

' பாலையீ ரேழிற் கோத்த பண் ' என்றது, பாலைப்பண் நான்குவகையினுள் ஆயப்பாலையை ; அவை நான்குவகையாவன,—ஆயப்பாலை-சதுரப்பாலை-திரிகோணப் பாலை வட்டப்பாலை - யென்பன. " ஆயஞ் சதுரந் திரிகோணம் வட்டமெனப் - பாய நான்கும் பாலையாகும் " என்பதனா லறிக. (உ)

மற்றவர் கருவிப் பாடன், மதுரைநீ டால வாயிற்
கொற்றவன் றிருவுள் ளத்துக் கொண்டுதன் றொண்டர்க் கெல்லா
மற்றைநாட் கனவி லேவ,வருட்பெரும் பாண னாரைத்,
தெற்றினார் புரங்கள் செற்றார் திருமுன்பு கொண்டு புக்கார்.

(இ-ள்.) அத்திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனார் பாடும் யாழ்ப்பாடல்களை மதுராபுரியில் திருவாலவாயென்னும் திருக்கோயிலில் வீற்றிருக்கருளும் ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமான் தமது திருவுள்ளத்திற்கொண்டு அன்றிரவிலே தம்முடைய அடியார்களுக்கெல்லாம் சொப்பனத்தில் தோன்றி ஆஞ்ஞாபிக்க, (அவ்வடியார்கள்) திருவருளையுடைய பெரிய திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனாரை மறுநாள் பகையசுரர்களது முப்புரங்களையு மெரித்தருளிய சிவபெருமானது திருமுன்னே அழைத்துக்கொண்டு வந்தார்கள்.—எ-று. (ரு)

அன்பர்கள் கொண்டு புக்க பொழுதினி, லரிவை பாகன்
றன்பெரும் பணியா மென்று தமக்குமெய் யுணர்த லாலே,
மன்பெரும் பாண ராகு மாமறை பாட வல்லார்,
முன்பிருந்,தியாழிற்,கூடன் முதல்வனைப் பாடு கின்றார்.

(இ-ள்.) அடியார்கள் அவரை யழைத்துக்கொண்டு திருமுன்னே சென்றபொழுது,இது பார்வதிபாகராகிய சிவபெருமானுடைய கட்டளையாகுமென்று தமக்கு மெய்யுணர்வு வந்து தெளிந்தமையினால், நிலைபெற்ற பெரிய திருநீலகண்ட யாழ்ப்பாணராகிய சிறந்த வேதங்களை யாழிலமைத்துப்பாடவல்ல நாயனார், ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமான் திருமுன்னேயிருந்து மதுராபுரியில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானையாழிலமைத்துப்பாடத் தொடங்கினார்.—எ-று.

திரிபுர மெரித்த வாறுந்,தேர்மிசை நின்ற வாறுங்,
கரியினை யுரித்த வாறுங்,காமனைக் காய்ந்த வாறு,
மரியயற் கரிய வாறு,மடியவர்க் கெளிய வாறும்,
பரிவினாற் பாடக் கேட்டுப்,பரமனா ருருளி னாலே.

(இ-ள்.) முப்புரங்களை யெரித்தருளிய மான்மியத்தையும், (பூமியாகிய) இரதத்தின்மேல் நின்றருளிய மகிமையையும், (கயாசுரனென்னும்) யானையின் தோலையுரித்துப் போர்த்தருளிய மகத்துவத்தையும், (நெற்றிக்கண்ணினால்) மன்மதனை யெரித்தருளிய மேன்மையையும், அரிபிரமர்களுக்குக் காணப்படாதமேம்பாட்டுத் தன்மையையும்,மெய்யடியார்களுக்கு இனியராயிருக்கும் பேருட்டன்மையையும் மிக்க பேரன்போடும் (யாழிலமைத்துப்) பாடக்கேட்டுச் சிவபெருமானுடைய திருவருளினால்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௬)

அந்தரத் தெழுந்த வோசை;யன்பினிற் பாணர் பாடுஞ்
சந்தயாழ்,தரையிற் சீதந் தாக்கில்,வீக் கழியு மென்று,
சுந்தரப் பலகை முன்னீ ரிடுமெனத்,தொண்ட ரிட்டார்.
செந்தமிழ்ப் பாண னாருந் திருவருள் பெற்றுச்,சேர்ந்தார்.

(இ-ள்.) ஆகாயத்தினின்றெழுந்த அசரீரியோசையால் இத்திருநீலகண்டயாழ்ப்பாணர் அன்போடு பாடுகின்ற சந்தபேதத்தினையுடைய யாழானது பூமியிலேயுள்ள சீதந்தாக்கினால் முறுக்கு அழியுமென்று அருளிச்செய்து (அதற்கு) அழகிய பொற்பலகையை இவருக்குமுன்னே இடுங்களென்று ஆஞ்ஞாபித்தருள, (அதைக்கேட்ட)அடியார்கள் அவ்வாறேயிட்டார்கள்; செந்தமிழையுடைய திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனாரும் திருவருள்பெற்று (அப்பொற்பலகையை) அடைந்தார்.—எ-று. (எ)

தமனியப் பல்கை யேறித், தந்திரிக் கருவி வாசித்,
துமையொரு பாகர் வண்மை யுலகெலா மறிய வேத்தி,
யிமையவர் போற்ற வேகி, யெண்ணிறு ளங்கள் கும்பிட்,
டமரர்நா டாளா தாரூ ராண்டவ, ராரூர் சேர்ந்தார்.

(இ-ள்.) பொற்பலகையின்மேலேறி, நரம்பினையுடையயாழைவாசித்துப பார்வதி பாகராகிய சிவபெருமானது பெரும்புகழ்களை உலகமெல்லாம் உணரும்வண்ணந் துதித்து, தேவர்கள் போற்றும்படி (அத்திருப்பதியினின்றுஞ்) சென்று, அளவற்ற திருப்பதிகளையடைந்து வணங்கி, விண்ணுலகத்தை யாளுகை செய்யாமல் (கழித்துத்) திருவாரூரை யாண்டருளும் சிவபெருமானது திருவாரூர்த் திருப்பதியை வந்தடைந்தருளினார்.—எ-று. (எ)

வேறு.

கோயில் வாயின் முன்னடைந்து, கூற்றஞ் செற்ற பெருந்திறலுந்,
தாயி னல்ல பெருங்கருணை, யடியார்க் களிக்குந் தண்ணளியு,
மேயுங்கருவி யிற்றொடுத்தங் கிட்டுப், பாடக் கேட்டங்கண்
வாயில்வேறு வடதிசையில் வகுப்பப்புகுந்து வணங்கினார்.

(இ-ள்.) (நாயனார்) திருவாரூர்த்திருக்கோயிற் றிருவாயிலின் முன்னேயடைந்து, இயமனை யுதைத்துககொன்றருளிய மிக்க பராக்கிரமத்தையும், தமமுடையமெய்யடியார்களுக்குத் தாயைப்பார்க்கிலுஞ் சிறந்தபெருங்கருணையைத் தந்தருளுங் குளிர்ந்த பேரருட்டிறத்தையும், பொருந்திய யாழிலே தொடுத தமைத்துப் பாட, (அதனைச் சிவபெருமான்) கேட்டருளி, அவ்விடத்தில் வட திசையிலே வேறு ஒரு திருவாயிலைவகுத்தருள, (அதன்வழியாக) உள்ளேபுகுந்து சிவபெருமானை வணஙகினார் —எ-று.

சிவபெருமான் தமது மெய்யடியார்களுக்குத் தாயைப்பார்க்கிலும் பெருங்கருணை கூர்ந்து திருவருள்புரிபவராகலின, 'தாயினல்லபெருங்கருணையடியார்க்களிக்குந் தண்ணளியும்' என்றார். இதனை:—"தாயினும் நல்ல சங்கரனுக் கன்பா" என்னுந் தமிழ்வேதத்தா னறிக. (அ)

மூலத் தானத் தெழுந்தருளி யிருந்த முதல்வன் றனைவணங்கிச்,
சாலக் கால மங்கிருந்து, தம்பி ரான்றன் றிருவருளாற்,
சீலத் தார்கள் பிரியாத திருவா ரூரி னின்றுபோ,
யாலத் தாழ்ந்த கண்டத்தா ரமருந் தானம் பலவணங்கி.

(இ-ள்.) திருமூலஸ்தானத்தில் வீற்றிருந்தருளிய சிவபெருமானை வணங்கி நெடுநாள் அங்கு வசித்திருந்து அவ்வெம்பெருமானுடைய திருவருளினால், நல்லொழுக்கமுடைய பெரியோர்கள் நீங்காது வாழுந் திருவாரூர்த் திருப்பதியினின்றுஞ் சென்று, ஆலாகல விஷத்தினால் பொருந்தியிருக்குங் கண்டத்தினையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பலதிருப்பதிகளையடைந்து வணங்கி.—எ-று. (கூ)

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம்.

ஆழி சூழுந் திருத்தோணி யமர்ந்த வம்மா னருளாலே,
யாழின மொழியா ளுமையூஞான மூட்ட, வுண்ட வெம்பெருமான்

காழி நாடன் கவுணியர்கோன் கமல பாதம் வணங்குதற்கு,
வாழி மறையோர் புகலியினில் வந்தார் சந்த விசைப்பாணர்.

(இ-ள்.) சமுத்திரஞ்சூழ்ந்த திருத்தோணியென்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானுடைய திருவருளினாலே, யாழ்போலும்இனியமொழியினையுடைய உமாதேவியார் சிவஞானப்பா லமுதத்தையுண்பிக்க வுண்டருளிய எமது முதல்வரும், சீகாழிப்பதியிலவதரித்தவரும், கவுணியர் குலத்தலைவருமாகிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரது தாமரைமலர்போன்ற திருவடிகளை வணங்கும்பொருட்டு,வேதியர்கள்வாழுஞ் சீகாழித் திருப்பதிக்குச் சந்தபேதங்களையுடைய இசையமைந்த திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார் வந்தருளினார்.-எ-று.

ஞான முண்டார் கேட்டருளி, நல்ல விசையாழ்ப் பெரும்பாணர்க்
கான படியாற் சிறப்பருளி, யமரு நாளி லவர்பாடு
மேன்மைப் பதிகத் திசையாழி லிடப்பெற், றுடனே மேவியபின்,
பானற் களத்தார் பெருமணத்தி, லுடனே பரமர் தாளடைந்தார்.

(இ-ள்.) சிவஞானமுதத்தை யுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அவரது வருகையைக்கேட்டருளிச் சிறந்த இசையினையுடைய திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனாருக்குத் தக்கவகையாகச் சிறப்புகளைச்செய்து வாழும்நாளில், அப்பிள்ளையார் பாடியருளும் சிறந்த திருப்பதிகத் திசையை யாழிலிட்டு வாசிக்கப்பெற்று அவருடன் வசித்தபின்பு, நீலோற்பல மலர்போலுங்கரிய கண்டத்தினையுடைய சிவபெருமானது திருநல்லூர்ப்பெருமணத்திலே அத்திருஞானசம்பந்தப் பிள்ளையாருடனே சிவபெருமானதுதிருவடியை யடைந்தருளினார்.—எ-று. (௧௧)

வரும்பான் மையினிற் பெரும்பாணர் மலர்த்தாள் வணங்கி, வயற்சாலிக்
கரும்பார் கழனித் திருநாவ லூரிற் சைவக் கலைமறையோ,
ரரும்பா நின்ற வணிநிலவும் பணியு மணிந்தா ரருள்பெற்ற
சுரும்பார் தொங்கற் சடையனார் பெருமை சொல்ல லுறுகின்றாம்.

(இ-ள்.) மிகுத்தெழுகின்ற பேரன்புடன் திருநீலகண்டப் பெரும்பாண நாயருடைய தாமரைமலர்போன்ற திருவடிகளைவணங்கி, வயலிலுள்ள செந்நெற்பயிராகிய கரும்புகள் நிறைந்த கழனிகள்சூழ்ந்த திருநாவலூரில் வாழ்ந்திருந்த சாஸ்திரங்களையுணர்ந்த ஆதிசைவ வேதியராகிய கலைகள்வளரும் அழகிய இளம்பிறையையும் பாம்பையுமணிந்த சிவபெருமான் திருவருளைப் பெற்ற,வண்டுகள்மொய்க்கும் மலர்மாலையை யணிந்த சடையநாயனாரது பெருமையைச் சொல்லத்தொடங்குகின்றோம்.—எ-று.

நாள்தோறு மொவ்வொரு கலையாக வளருந் தன்மையினையுடைய தாகலின், 'அரும்பாநின்ற வணிநிலவும்' என்று கூறினார். சாலிக்கரும்பு என்பதற்கு, சாலிகளும் கரும்புகளும் எனினுமாம். (௧௨)

திருநீலகண்டயாழ்ப்பாண நாயனார் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம் - ௨௬௨௭.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## சடையநாயனார் புராணம்.

தம்பி ரானைத் தோழமைகொண் டருளித், தமது தடம்புயஞ்சேர்
கொம்ப னார்பா லொருதூது செல்ல வேவிக் கொண்டருளு,
மெம்பி ரானைச், சேரமான் பெருமா னிணையி றுணைவரா,
நம்பி யாரு ரனைப்பயந்தார், ஞால மெல்லாங் குடிவாழ.

(இ-ள்.) சிவபெருமானைத் தோழமைகொண்டருளித் தமது விசாலமாகிய புயத்தைத்தழுவிய பூங்கொம்புபோன்றவராகிய பரவைநாச்சியாரிடத்தில் அவ்வம்மையார்கொண்ட பிணக்கு நீக்கும்படி, ஒப்பற்ற தூதுசெல்ல வேவிக் கொண்டருளிய எமது முதல்வரும், சேரமான்பெருமாணயனருக்கு ஒப்பற்ற துணைவருமாகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளை உலகத்துள்ள ஆன்மகோடிகளனைத்தும் மெய்ஞ்ஞானம் பெற்றுய்யும்பொருட்டுப் பெற்றருளினார்; (சடையநாயனார் என்னும் பெரியோர்).—எ-று. (க)

சடையநாயனார்புராணம் முற்றிற்று.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## இசைஞானியார் புராணம்.

ஒழியாப் பெருமைச் சடையனா ருரிமைச் செல்வத் திருமனையா,
ரழியாப் புரங்க ளெய்தழித்தா ராண்ட, நம்பி தனைப்பயந்தா,
ரிழியாக் குலத்தி னிசைஞானிப் பிராட்டி யாரை, யென்சிறுபுன்
மொழியாற் புகழ முடியுமோ, முடியா தெவர்க்கு முடியாதால்.

(இ-ள்.) நீங்காதபெருமையினையுடைய சடையநாயனாரது இல்லறவுரிமைக்குரிய செல்வத்தினையுடைய சிறந்த மனைவியாராயுள்ளவர்; அழியாத முப்புரங்களையு நகைத்தெரித்தருளிய சிவபெருமான் தடுத்தடிமைகொண்டருளிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளைப் புத்திரராகப்பெற்றவரும், உயர்ந்த ஆதிசைவகுலத்தில் அவதரித்தருளிய இசைஞானியா ரென்னுந்திருநாமமுடையவருமாகிய எமது பெருமாட்டியாரை அடியேனது சிறிய அற்பமொழியினால் புகழ்தற்கு முடியுமோ? மற்றியாவராலும் புகழ முடியாதாகும்.—எ-று. (க)

இசைஞானியார் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

மன்னியசீர்ச் சருக்கம் முற்றுப்பெற்றது.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# வெள்ளானைச் சருக்கம்.

மூலமான திருத்தொண்டத் தொகைக்கு முதல்வ ராயிந்த,
ஞால முய்ய வெழுந்தருளு நம்பி தம்பி ரான்றோழர்,
காலை மலர்ச்செங் கமலக்கட் கழறிற் றறிவா ருடன்கூட
வால முண்டார் திருக்கயிலை யணைந்த தறிந்த படியுரைப்பாம்.

(இ-ள்.) (மெய்யடியார்களது மான்மியங்கள் வெளிப்படுவதற்கு) மூலமாகிய திருத்தொண்டத்தொகைக்கு முதல்வராய், இவ்வுலகத்தா ருய்யும்பொருட்டு அவதரித்தருளிய நம்பியாரூரரும் தம்பிரான் றோழருமாகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் காலைப்பொழுதில் மலர்கின்ற செந்தாமரை மலர்போலுங் கண்களையுடைய ஸ்ரீ சேரமான்பெருமாணாயனாருடன் ஆலாகலவிஷத்தையுண்டருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக்கயிலாசமலையை யடைந்தருளிய தன்மையை யாமறிந்தவண்ணஞ் சொல்லுவோம்.—எ-று. (க)

படியி னீடும் பத்திமுதி லன்பு நீரிற் பணைத்தோங்கி,
வடிவு நம்பி யாரூரர் செம்பொன் மேனி வனப்பாகக்,
கடிய வெய்ய விருவினையின் களைகட் டெழுந்து, கதிர்பரப்பி,
முடிவி லாத சிவபோக முதிர்ந்து, முறுகி விளைந்ததால்.

(இ-ள்.) உலகத்திற் சிறந்து விளங்கும் மெய்ப்பத்தியாகிய விதையானது அன்பாகிய நீரினால் பருத்து வளர்ந்து, பேரழகினையுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்திகளது செம்பொன்மயமாகிய திருமேனியே அழகாகக்கொண்டு கடுமையாகிய கொடிய இருவினையென்னுங் களையைக் கடிந்து எழுந்து, கதிரைப்பரப்பி முடிவில்லாத சிவபோகக் கனிபழுத்து முதிர்ந்து விளைந்தது.—எ-று.

முதல் - ஆகுபெயர். சிவபெருமானது பேரழகின் பிரதிபிம்பத் திருவுருவினராகலின், 'வடிவு நம்பியாரூரர்' என்றார். (உ)

ஆரமுரக மணிந்தபிரா னன்ப ரணுக்க வன்றொண்டர்,
ஈர மதுவார் மலர்ச்சோலை யெழிலா ரூரி லிருக்குநாட்,
சேரர் பெருமா டணைநினைந்து தெய்வப் பெருமான் கழல்வணங்கிச்,
சாரன் மலைநா டணைவதற்குத் தவிரா விருப்பி னுடன்போந்தார்.

(இ-ள்.) பாம்பைமாலையாக வணிந்த சிவபெருமானுக்கு அணுக்கத் திருத்தொண்டராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் குளிர்ந்த தேன்பொருந்திய மலர்களையுடைய சோலைசூழ்ந்த அழகிய திருவாரூர்த்திருப்பதியில் வாழும் நாளில், (தமது தோழராகிய) சேரமான்பெருமாணாயனாரை நினைந்து தெய்வநாயகராகிய ஸ்ரீ தியாகராஜப்பெருமானுடைய திருவடிகளை வணங்கி, மலைச்சாரலையுடைய சேரநாட்டையடையும் பொருட்டு நீங்காத பெருவிருப்புடன் சென்றருளினார்.—எ-று. (ங)

நன்னீர்ப் பொன்னித் திருநாட்டு நாதர் மகிழுந் திருப்பதிகண்
முன்னி யிறைஞ்சி யகன்றுபோய்முல்லைப் படப்பைக் கொல்லைமான்
றுன்னி யுகைக்குங் குடக்கொங்கி லணைந்து தூய மதிவானீர் [தார்.
சென்னி மிசைவைத் தவர்செல்வத் திருப்புக் கொளியூர் சென்றடைந்

(இ-ள்.) நல்ல நீரையுடைய காவிரிநதிவளங் கொழிக்குஞ் சோழநாட்டிலே சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளிய திருப்பதிகளை விரும்பி வணங்கி நீங்கிச்சென்று,முல்லைநிலங்களில் மான்கள் பொருந்திவிளையாடுகின்ற மேற்றிசையிலுள்ள கொங்கதேசத்தை யடைந்து, தூய்மையாகிய இளம்பிறையையும், ஆகாய கங்கையையுஞ் சிரசில்தரித்தருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பலவகைச் செல்வங்சணிறைந்த திருப்புக்கொளியூரென்னுந் திருப்பதியைச் சென்று சேர்ந்தருளினர்.—எ-று. (௫)

மறையோர் வாழு மப்பதியின் மாட வீதி மருங்கணைவார்,
நிறையுஞ் செல்வத் தெதிர்மனைக ளிரண்டி[ல்]னிகழ்மங் கலவியங்க
ளறையு மொலியொன் றினில்லொன்றி லழுகையொலிவந்தெழுதலுமங்
குறையு மறையோர் களையிரண்டு முடனே நிகழ்வ தென்னென்றார்.

(இ-ள்.) வேதியர்கள்வாழும் அத்திருப்புக்கொளியூர்த் திருப்பதியின் மாடவீதியினருகிற் சென்றருளும் ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள், எதிரெதிராகவுள்ள நிறைந்த செல்வத்தினையுடைய இரண்டுவீடுகளில், ஒருவீட்டில் விளங்குகின்ற மங்கலவாத்தியங்கள் முழங்கு மோசையும், மற்றொருவீட்டில் அழுகின்ற ஓசையுமுண்டாகவும்,அங்குவசிக்கும் வேதியர்களைப்பார்த்து இவ்விரண்டொலியும்ஒருங்கேநிகழ்வது என்னகாரணமென்று வினவியருளினர்.—எ-று.

அந்த ணாளர் வணங்கியருஞ் புதல்வ ரிருவ ரைந்து யாண்டு
வந்த பிராயத் தினர்குளித்த மடுவின் முதலை யொருமகனை
முந்த விழுங்கப்,பிழைத்தவனை முந்நூ லணியுங் கலியாண
மிந்த மனைமற் றந்தமனை யிழந்தா ரழுகை யென்றுரைத்தார்.

(இ-ள்.) (அதைக்கேட்ட) வேதியர்கள்வணங்கி, ஐந்துவயசுடைய அருமையாகிய இரண்டு புதல்வர்கள் குளித்தமடுவிலே முதலையானது ஒரு புதல்வனை முன்னேவிழுங்க, பிழைத்த புதல்வனுக்கு இந்தவீட்டில் பூணூல் கலியாணஞ் செய்யுமொலியும், அந்தவீட்டில் புதல்வனை யிழந்தவர்கள் அழுகின்ற ஒலியுமாகுமென்று சொன்னார்கள்.—எ-று. (௬)

இத்தன் மையினைக் கேட்டருளி,யிரங்குந் திருவுள் ளத்தினரா,
மொய்த்த முகைத்தார் வன்றொண்டர் தம்மைமுன்னே கண்டிறைஞ்ச
வைத்த சிந்தை மறையோனு மனைவி தானு[ம்]மகவிழந்த
சித்த சோகந் தெரியாமே வந்து,திருத்தா ளிறைஞ்சினார்.

(இ-ள்.) இவ்வாறாகிய தன்மையைக் கேட்டு இரக்கங்கொண்ட திருவுள்ள முடையவராகிய வண்டுகள்மொய்க்கும் மலர் மாலையையணிந்த ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளை முன்னே தரிசித்து வணங்க மனத்திற் கருதிய (அப்புதல்வனையிழந்த) வேதியனும், மனைவியும் புதல்வனையிழந்த மனவருத்தந் தெரியாமல் ஓடிவந்து அவருடைய திருவடிகளை வணங்கினார்கள்.—எ-று. (௭)



ஸ்ரீ சுந்தரமூர்த்திகள் திருக்கயிலைக்கு எழுந்தருளியது.

இன்ப மகல் முகமலர்ந்து தொழுவார் தம்மை நோக்கியந்த
வின்ப மைந்தன் றனையிழந்தீர் நீரோ வென்ன,வெதிர்வணங்கி,
முன்பு புகுந்து போனதது,முன்னே வணங்க முயல்கின்றோ,
மன்பு பழுதா காமலெழுந் தருளப் பெற்றே மெனத்தொழுதார்.

(இ-ள்.) துன்பநீங்கும்படி முகமலர்ச்சியுடன் தம்மை வணங்குகின்ற அவ்விருவரையும் பார்த்தருளி, அந்த இன்பத்தைத் தரத்தக்க புதல்வனை யிழந்தவர்கள் நீங்களோ?வென்று வினவியருள,அவர்கள் பின்னும் எதிரேவணங்கி, சுவாமீ! அது முன்னே நிகழ்ந்துபோயிற்று; அடியேங்கள் அதற்குமுன்னமே நெடுங்காலமாகத் தேவரீரை வணங்கும்பொருட்டு விருப்புற்றிருக்கின்றோம்; எங்களுடைய அன்பு பழுதாகாதபடி தேவரீர் இங்கு எழுந்தருளப் பெற்றோம் என்று விண்ணப்பஞ்செய்து வணங்கினார்கள்.—எ-று.

'தொழுவார் தம்மை முகநோக்கி' என்றுபாடம். (அ)

மைந்தன் றன்னை யிழந்ததுயர் மறந்து,நான்வந் தணைந்ததற்கே
சிந்தை மகிழ்ந்தார் மறையோனு மனைவி தானுஞ்,சிறுவனையா
னந்த முதலை வாய்நின்று மழைத்துக் கொடுத்தே,யவிநாசி
யெந்தை பெருமான் கழல்பணிவே னென்றார்,சென்றா,ரிடர்களைவார்.

(இ-ள்.) அவர்களது துன்பத்தை நீக்குகின்றவராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் இவ்வேதியனும் மனைவியும் தங்கள்புதல்வனையிழந்த துன்பத்தைமறந்து நாம்வந்ததற்காகவே மனமகிழ்ந்தார்கள்; ஆகையால், நாம் அப்புதல்வனை அந்த முதலைவாயினின்றும் அழைத்துக் கொடுத்து அவிநாசியில் வீற்றிருந்தருளும் எமது சிவபெருமானுடைய திருவடிகளை வணங்குவோமென்று சென்றருளினார்.—எ-று.

இடர்களைவார் சென்றார் எனக்கூட்டுக. (௯)

இவ்வா றருளிச் செய்தருளி,யிவர்கள் புதல்வன் றனைக்கொடிய
வெவ்வாய் முதலை விழுங்குமடு வெங்கே யென்று வினவிக்கேட,
டவ்வாழ் பொய்கைக் கரையிலெழுந் தருளி,யவனை யன்றுகவா
வைவா ளெயிற்று முதலைகொடு வருதற் கெடுத்தார், திருப்பதிகம.

(இ-ள்.) இவ்வாறு அருளிச்செய்து இவர்களது புதல்வனைக் கொடுமையாகிய வெவ்விய வாயையுடைய முதலையானது விழுங்கிய மடு எங்கேயென்று வினவிக்கேட்டு, அந்த ஆழமாகிய மடுவின்கரையி லெழுந்தருளி, அந்தப்புதல்வனை அந்நாளில்விழுங்கிய கூர்மையாகிய வொளிபொருந்திய பற்களையுடைய முதலையானது கொண்டுவரும்பொருட்டுத் திருப்பதிக மருளிச்செய்யத்தொடங்கினார்.—எ-று. (௧0)

உரைப்பா ருரையென் றெடுத்ததிருப் பாட்டு முடியா முன்,னுயர்ந்த
வரைப்பான் மையினீ டடம்புயந்து மறலி,மைந்த னுயிர்கொணர்ந்து,
திரைப்பாய் புனலின் முதலைவயிற் றுடலிற்,சென்ற வாண்டுகளுந்
தரைப்பால் வளர்ந்த தெனநிரம்ப,முதலை வாயிற் றருவித்தான்.

(இ-ள்.) (திருப்பதிகந்தொடங்கி) "உரைப்பாருரை" என்று எடுத்த நான்காந் திருப்பாடல் முடிவதற்கு முன்னமே மலைபோலுயர்ந்த நீண்ட

விசாலமாகிய புயத்தினையுடைய இயமனானவன் அபபுதல்வனுயிரைக்கொண்டு வந்து அலைகள்பாய்கின்ற அந்தமடுவின்நீரில் முதலைவயிற்றினுள்ளே, அவ்வுடலுக்குச் சென்றவருஷங்களும் பூமியில் வளர்ந்ததென்னும்படிநிரம்ப முதலை வாயினின்றுங் கொடுப்பித்தான்.—எ-று. (கக)

---

## திருப்புக்கொளியூர் அவிநாசி - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

எத்தான்மறக்கேனெழுமைக்குமெம்பெருமானையே,
யுற்றாயென்றுன்னையேயுள்குகின்றேனுணர்ந்துள்ளத்தார்,
புற்றாடரவா,புக்கொளியூரவிநாசியே
பற்றாகவாழ்வேன்,பசுபதியேபரமேட்டியே. (க)

வழிபோவார்தம்மோடும்வந்துடன்கூடியமாமணிநீ
யொழிவதழகோ,சொல்லா,யருளோங்குசடையானே,
பொழிலாருஞ்சோலைப்புக்கொளியூரிற்குளத்திடை
யிழியாக்குளித்தமாணியெனைக்கிறிசெய்ததே. (உ)

எங்கேனும்போகினு,மெம்பெருமானைநினைந்தக்காற்,
கொங்கேபுகினுங்கூறைகொண்டாறலைப்பாரிலைப்,
பொங்காடரவாபுக்கொளியூரவிநாசியே,
யெங்கோனே,யுனைவேண்டிக்கொள்வேன்பிறவாமையே. (௩)

உரைப்பாருரையுகந்துள்கவல்லார்தங்களுச்சியா
யரைக்காடரவா,வாதியுமந்தமுமாயினாய்,
புரைக்காடுசோலைபபுக்கொளியூரவிநாசியே,
கரைக்கான்முதலையைப்பிள்ளைதரசசொல்லு,காலனையே. (௪)

அரங்காவதெல்லா,மாயிடுகாடதுவன்றியுஞ்,
சரங்கோலைவாங்கிவரிசிலைநாணியிற்சந்தித்துப்,
புரங்கெடவெய்தாய்புக்கொளியூரவிநாசியே,
குரங்காடுசோலைக்கோயில்கொண்டகுழகனே. (௫)

நாத்தானுமுனைப்பாடலின்றிநவிலாதென்னுச்
சோத்தென்றுதேவர்தொழநின்றசுந்தரச்சோதியாய்,
பூத்தாழ்சடையாய்புக்கொளியூரவிநாசியே
கூத்தாவுனக்குநாட்பட்டகுற்றமுங்குற்றமே. (௬)

மந்திகடுவனுக்குணப்பழநாடிமலைப்புறஞ்
சந்திகடோறுஞ்சலபுட்பமிட்டுவழிபடப்
புந்தியுறைவாய்புக்கொளியூரவிநாசியே
நந்தியுனைவேண்டிக்கொள்வேனரகம்புகாமையே. (எ)

பேணாதொழிந்தேனுன்னையலாற்பிறதேவரைக்
காணாதொழிந்தேன்காட்டுதியேலின்னுங்காண்பனான்
பூணாரவாபுக்கொளியூரவிநாசியே
காணாதகண்கள்காட்டவல்லகறைக்கண்டனே. (அ)

கள்ளாறுதெள்ளாரத்துறைவாயெங்கணம்பனே
வெள்ளாடைவேண்டாய்வேங்கையின்றோலிரும்பினும்
புள்ளேறுசோலைப்புக்கொளியூரிற்குளத்திடை
யுள்ளாடப்புக்கமாணியெனைக்கிறிசெய்ததே. (௯)

நீரேறவேறுநிமிர்புன்சடைநின்மலமூர்த்தியைப்
போரேறதேறியைப்புக்கொளியூரவிநாசியைக்
காரேறுகண்டனைத்தொண்டனாரூரன்கருதிய
சீரேறுபாடல்கள்செப்பவல்லார்க்கில்லைதுன்பமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெர் - அவிநாசியப்பர்; தேவியார் - பெருங்கருணை நாட்டத்தம்மை.

---

பெருவாய் முதலை கரையின்கட் கொடுவந் துமிழ்ந்த பிள்ளைதனை,
யுருகா நின்ற தாயோடி யெடுத்துக் கொடுவந் துயிரளித்த
திருவா ளன்றன் சேவடிக்கீழ்ச் சில மறையோ னுடன்வீழ்ந்தாண்,
மருவார் தருவின் மலர்மாரி பொழிந்தார் விசும்பில் வானோர்கள்.

(இ-ள்.) பெரிய வாயையுடைய முதலையானது கரையில்கொண்டுவந்து உமிழ்ந்த புதல்வனைப்பார்த்து மனமுருகுகின்ற தாயானவள் ஓடி யெடுத்துக் கொண்டுவந்து புதல்வனுயிரைக் கொடுத்தருளிய அருட்பெருஞ் செல்வராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளது திருவடிகளில் நல்லொழுககத்தினையுடைய தனது கணவனுடன் வீழ்ந்து வணங்கினள்; இவ்வற்புதத்தைக்கண்ட தேவர்கள் ஆகாயத்தில் நறுமணங்கமழுங் கற்பகமலர்மாரி பொழிந்தார்கள்.—எ-று. (௧௨)

மண்ணி லுள்ளோ ரதிசயித்தார்,மறையோ ரெல்லா முத்தரியம
விண்ணி லேற விட்டார்த்தார்,வேத நாத மிக்கெழுந்த,
தண்ண லாரு மவிநாசி யரனார் தம்மை,யருமறையோன்
கண்ணின் மணியாம் புதல்வனையுங் கொண்டுபணிந்தார் காசினிமேல்.

(இ-ள்.) இந் நிலவுலகத்திலுள்ளவர்கள் ஆச்சரியமடைந்தார்கள்; வேதியர்களனைவரும் உத்தரீயங்களை ஆகாயத்தில் வீசி யாரவாரித்தார்கள்; வேத கோஷ மதிகரித்தெழுந்தது; ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளும் அருமையாகிய அவ் வேதியனுடைய கண்மணிபோன்ற புதல்வனையழைத்துக்கொண்டு சென்று அவிநாசியில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானைப பூமியில்வீழ்ந்து வணங்கினா.

பரவும் பெருமைத் திருப்பதிகம் பாடிப் பணிந்து போந்தன்பு
விரவு மறையோன் காதலனை வெண்ணூல் பூட்டி,யண்ணலார்,
முரச மியம்பக் கலியாண முடித்து,முடிச்சே ரலர்தம்பாற்
குரவ மலர்ப்பூந் தண்சோலை குலவு மலைநா டணைகின்றார்.

(இ-ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் யாவருந் துதிக்கத்தக்கதிருப்பதிகம்பாடி வணங்கிச்சென்று, அன்புமிக்க அவ்வேதியனுடைய புதல்வனுக்கு மங்கல முரசமொலிக்கப் பூணூல் கலியாணஞ்செய்துமுடித்து, குராமலர்களையுடைய அழகிய குளிர்ந்த சோலை சூழ்ந்த மலைநாட்டில் மணிமுடியணிந்த சேரமான்பெருமானுயனரிடத்துச் செல்வாராயினர்.—எ-று. (௧௪)

சென்ற சென்ற குடபுலத்துச் சிவனு ரடியார் பதிகடோறு
நன்று மகிழ்வுற் றின்புற்று நலஞ்சேர் தலமுங் கானகமுந்
துன்று மணிநீர்க் கான்யாறுந் துறுகற் சுரமுங் கடந்தருளிக்
குன்ற வளநாட் டகம்புகுந்தார் குலவு மடியே னகம்புகுந்தார்.

(இ-ள்.) துதிக்கின்ற அடியேனுடைய மனத்தில் வீற்றிருந்தருளிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள், தாமசென்றருளும் மேற்றிசையில் சிவனடியார்கள் வாழும் திருப்பதிகடோறும் மிகமகிழ்ந்து பேரின்புற்று, நன்மைபொருந்திய திருப்பதிகளையும், காடுகளையும், முத்துக்கள்பொருந்திய நீரையுடைய காட்டாறுகளையும், துறுகற்களையுடைய பாலைநிலங்களையுங்கடந்து வளப்பமிக்க மலைநாட்டிற்புகுந்தருளினார்.—எ-று. (கரு)

முனனாண் முதலை வாய்ப்புகக மைந்தன முன்போல வரமீட்டுத,
தெனனா ரூர ரெழுந்தருளா நின்றா ரென்று,சேராபிரா ற,
கந்நாட டரனு ரடியார்கள்,முன்னே யோடி யறிவிப்பப,
பொனனார கிழியு மணிப்பூணுங் காசுந் தூசும பொழிந்தளித்தார்

(இ-ள்.) முன்னாளில் முதலைவாயிலகப்பட்டிறந்த புதல்வனை முன்போல உயிர்பெற்றுவரும்படி மீட்டு அழகிய நம்பியாரூரராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் எழுந்தருளுகின்றாரென்று, அம்மலைநாட்டிலுள்ள சிவனடியார்கள் முனவிரைந்து ஓடிச் சேரமான்பெருமாணாயனாருக்கு அறிவிக்க, (அந்நாயனார் அவர்களுக்குப்) பொற்கிழியையும், இரத்தினாபரணங்களையும், இரத்தினங்களையும, வஸதிரங்களையும் மிகுதியாகக் கொடுத்தருளினார்.—எ-று. (கசு)

செய்வ தொன்று மறியாது,சிந்தை மகிழ்ந்து களிகூர்ந்தென்
னைய னணைந்தா னென்னையாளு மண்ணலணைந்தா னாரூரிற்
சைவ னணைந்தா னென்றுணையாந் தலைவ னணைந்தா னரணியெலா
முய்ய வணைந்தா னணைந்தானென் றோகை முரசஞ் சாற்றுவித்தார்.

(இ-ள்.) தாம்செய்வது இன்னதென்று சிறிது முணராமல் மனமகிழ்கூர்ந்து, எமது ஆண்டவர் எழுந்தருளினார்; எம்மை யடிமைகொண்டருளும் முதல்வர் எழுந்தருளினார்; திருவாரூரில் வீற்றிருந்தருளிய சைவசிகாமணியார் எழுந்தருளினார்; எம்முயிர்த்துணைவராகிய தலைவர் எழுந்தருளினார்; உலகமெல்லாம் உய்யும்பொருட்டு அவதரித்தருளிய பரமாசாரியர் எழுந்தருளினார் என்று சந்தோஷமாகிய மங்கல முரசு அறைவித்தார்.—எ-று. (கஎ)

பெருகு மதிநூ லமைச்சர்களை யழைத்துப்,பெரியோ ரெழுந்தருளப,
பொருவி னகர மலங்கரிக்கப் பண்ணிப்,பயணம் புறப்படுவித்,
தருவி மதமால் யானையினை யணைந்து,மிசைகொண் டரசர்பெருந
தெருவு கழிய,வெதிர்வந்தார் சேரர் குலமுய்ந் திடவந்தார்.

(இ-ள்.) சேரராஜர்களது வமிசம் உய்யும்படி யவதரித்தருளிய சேரமான்பெருமாணாயனார் சிறந்த மதிநூலையுணர்ந்த மந்திரிமார்களையழைத்துப்பெரியோராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிக ளெழுந்தருளுதற்கு ஒப்பற்ற நமதுநகரத்தை யலங்காரஞ்செய்து பிரயாணப்படுத்தி, அருவிபோலும் மதத்தைப்பொழிகின்ற மயக்கத்தையுடைய பட்டத்து யானையையடைந்து அதன்மீதேறி பெரிய இராஜவீதிகடந்து, ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளுக்கெதிரே வந்தருளினார்.—எ-று.

மலைநாட் டெல்லை யுட்புகுத வந்த வன்றொண் டரைவரையிற்
சிலைநாட் டியவெல் கொடித்தானைச் சேரர் பெருமா னெதிர்சென்று,
தலைநாட் கமலப் போதனைய சரணம் பணியத், தாவில்பல
கலைநாட் டமுத வாரூரர் தாமுந் தொழுது, கலந்தனரால்.

(இ-ள்.) மலைநாட்டின் எல்லையினுள்ளே புகும்படி வந்தருளிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளை, இமயமலையில் வெற்றிபொருந்திய தமது விற்கொடியை நாட்டிய கொடிப்படையையுடைய சேரமான்பெருமாணாயனார் எதிர்கொண்டுசென்று அன்றலர்ந்த தாமரை மலர்போன்ற அவரது திருவடிகளை வணங்க, கெடாத பல திருப்பதிகங்களையருளிச்செய்தருளுகின்ற அமுதம்போன்ற (திருவாக்கினை யுடைய) ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளும் அச் சேரர்பெருமானை வணங்கித் தழுவினார்.—எ-று. (௧௯)

சிந்தை மகிழுஞ் சேரலனார் திருவாரூர ரெனுமிவர்க
டந்த மணிமே னிகள்வேறா மெனினு,மொன்றாந் தன்மையராய்,
முந்த வெழுங்கா தலிற்றொழுது முயங்கி, யுதியர் முதல்வேந்த,
னெந்தை பெருமான் றிருவாரூர்ச் செல்வம் வினவி யின்புற்றான்.

(இ-ள்.) மனமகிழ்ந்தருளிய சேரமான்பெருமாணாயனார் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளென்னு மிவ்விருவர்களது திருமேனிகள் வேறாக இருந்தாலும் ஒன்றாகிய தன்மையுடையவர்களாய், முற்பட்டெழுகின்ற பேரன்போடு வணங்கிக்கலந்து சேரமான்பெருமாணாயனார் எமது ஆண்டவராகிய ஸ்ரீதியாகராஜப பெருமான் வீற்றிருந்தருளுந் திருவாரூரின் சிறப்பை (ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளிடமாக) வினவி இன்புற்றருளினார்.—எ-று. (௨0)

ஒருவ ரொருவ ரிற்கலந்து, குறைபா டின்றி, யுயர்காத
லிருவர் நண்பின் செயல்கண்ட விரண்டு திறத்து மாந்தர்களும்,
பெருகு மகிழ்ச்சி கலந்தார்த்தார், பெருமா டமிழின் பெருமானை,
வருகைவரையின்மிசையேற்றித்தாம்பின் மதிவெண்குடைகவித்தார்.

(இ-ள்.) ஒருவரோடொருவர்கலந்து குறைவற்றோங்குகின்ற பேரன்பினையுடைய அவ்விருவர்களது நட்புத்தன்மையையுணர்ந்த அவ்விருதிறத்து பரிசனர்களும் மிக்க மகிழ்கூர்ந்து ஆரவாரித்தார்கள் ; சேரமான்பெருமாணாயனார் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளை மலைபோன்ற பட்டத்து யானையின்மேலேற்றித் தாம்பின்னேவெள்ளியசந்திரவட்டக்குடையைப் பிடித்தருளினார்.—எ-று.

உதியர் பெருமாள் பெருஞ்சேனை, யோதங் கிளர்ந்த தெனவார்ப்பக்,
கதிர்வெண் டிருநீற் றன்பர்குழாங், கங்கை கிளர்ந்த தெனவார்ப்ப,
வெதிர்வந் திறைஞ்சு மமைச்சர்குழா, மேறு மிவுளித் துகளார்ப்ப,
மதிதங் கியமஞ் சணியிஞ்சி, வஞ்சி மணிவா யிலையணைந்தார்.

(இ-ள்.) சேரமான் பெருமாணாயனாருடைய பெரியசேனைகள் கடல் முழங்கியதுபோல ஆரவாரிக்கவும், விளங்குகின்ற திருவெண்ணீறணிந்த அடியார் கூட்டங்கள் கங்கைமுழங்கியதுபோல ஆரவாரிக்கவும் எதிரில்வந்து வணங்குகின்ற மந்திரி கூட்டங்கள் ஏறுகின்ற குதிரைத் துகள்கள் நிறைந்தோங்கவும், சந்திரன் தங்கிய மேகங்கள் தவழும் மதிலையுடைய வஞ்சியென்னு நகரத்தின் அழகிய திருவாயிலையடைந்தனர்—எ-று. (௨௧)

வேறு.

ஆரண மொழிகண் முழங்கிட வாடினர் குணலைக ளந்தணர்
வாரண மதமழை சிந்தின வாசிகள் கிளரொளி பொங்கின
பூரண கலச மலிந்தன பூமழை மகளிர் பொழிந்திடுந்
தோரண மறுகு புகுந்தது தோழர்க ளடைவிய குஞ்சரம்.

(இ-ள்.) வேதியர்கள் வேதவாக்கியங்கள் முழங்கக் குணலைக் கூத்தாடினார்கள்; யானைகள் மதமாகிய மழையைப்பொழிந்தன; குதிரைகளின் கனைப பொலிகளதிகரித்தன; பூரண கலசங்கள் நெருங்கின; மாதர்கள் பூமாரி பொழிகின்ற தோரணங்களையுடைய வீதியில் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளும் அவர் திருத்தோழராகிய சேரமான்பெருமாணயனாரும் நடத்திய பட்டத்து யானை சென்றது.—எ-று. (௨௩)

அரிவையர் தெருவி னடம்பயி லணிகிளர் தளிரடி தங்கிய
பரிபுர வொலிகள் கிளர்ந்தன பணைமுர சொலிகள் பரந்தன
சுரிவளை நிரைகண் முரன்றன துணைவர்க ளிருவரும் வந்தணி
விரிதரு பவன நெடுங்கடை விறன்மத கரியி னிழிந்தனர்.

(இ-ள்.) வீதியில் நடனஞ்செய்கின்ற மாதர்களது அழகிய தளிர்போலும் பாதங்களிலணிந்த சிலம்பொலிகள் அதிகரித்தெழுந்தன; பருத்த மங்கல முரசின்றொலிகள் பரவின; சுரிந்த சங்கவாத்திய வரிசைகள் சப்தித்தன, துணைவர்களாகிய ஸ்ரீநம்பியாரூரரும், சேரர்பெருமானும்வந்து அழகுமிக்க அரண்மனையின் நீண்ட கடைவாயிலில் வலிமைபொருந்திய மதயானையினின்றும் கீழிறங்கினார்கள்.—எ-று. (௨௪

தூநறு மலர்தர ளம்பொரி தூவிமு னிருபுடை யின்கணு
நானமறை முனிவர்கண் மங்கல நாமநன மொழிகள் விளம்பிட
மேனிறை நீழல்செய் வெண்குடை வீசிய கவரி மருங்குற
வானவர் தலைவரு நண்பரு மாளிகை நடுவு புகுந்தனர்.

(இ-ள்.) நறுமணங்கமழுந் தூய்மையாகிய மலரையும், முத்துக்களையும பொரிகளையும் தூவி, முன்னே, இருபக்கங்களிலும் நான்குவேதங்களையு முணர்ந்த வேதியர்கள் மங்கலகரமாகிய சிறந்த ஆசிமொழிகள் கூறவும், திருமுடியின் மேல் நிழலைச்செய்கின்ற வெண்கொற்றக்குடையும் வீசுகின்ற சாமரைகளும பக்கங்களிற்பொருந்தவும் சேரமான்பெருமாணயனாரும் அவர் திருத்தோழராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளும் திருமாளிகையின் நடுவில்சென்றார்கள்.எ-று

'வானவர்' என்றது சேரதேசத்தினரை. (௨௫)

அரியணை யதனின் விளங்கிட வடன்மழ விடையென நம்பியை
வரிமல ரமளிய மர்ந்திட மலையர்க டலைவர பணிந்தபி
னுரிமைநல் வினைகள் புரிந்தன வுரைமுடி விலவென முன்செய்து
பரிசன மனமகி ழும்படி பலபடி மணிநிதி சிந்தினர்.

(இ-ள்.) சிங்காசனத்தின்மேல் விளங்கும்படி வலிமைதங்கிய இளைய இடபம்போல ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளை வண்டுகள்மொய்க்கும் புஷ்பசயனத்தில் எழுந்தருளும்படி சேரமான்பெருமாணயனார் வணங்கின பின்பு, உரி

மையாகிய நற்கருமங்களைச்சொல்லமுடியாதனவாக முன்னேசெய்து, பரிசனத்தடியார்கள் மனமகிழும்படி பலவகையாக இரத்தினங்களையும். திரவியங்களையு மிறைத்தார்.—எ-று. (உசு)

வேறு.

இன்ன தன்மையி னுதியர்க டலைவர்தா மிடர்கெட முனைப்பாடி
மன்னர் தம்முடன் மகிழ்ந்தினி துறையுநாண் மலைநெடு நாட்டெங்கும்
பன்ன கம்புனை பரமர்தந் திருப்பதி பலவுடன் பணிந்தேத்திப்
பொன்னெ டுந்தடமதிலின் மகோதையிற் புகுந்தனர் வன்றொண்டர்.

(இ-ள்.) இவ்வாறாகிய தன்மையோடு சேரமான்பெருமாணாயனார் தமது பிறவித்துன்ப நீங்கும்பொருட்டு ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளுடன் மகிழ்கூர்ந்து வசித்தருளும் நாளில், பெரியமலை நாடெங்கும் சர்ப்பத்தை யாபரணமாக வணிந்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல திருபபதிகளை ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் சேரமான் பெருமாணாயனாருடன் வணங்கித்துதித்து, பொன்மயமாய் நீண்ட விசாலமாகிய பழையமதிலையுடைய மகோதை நகரத்தையடைந்தார்.

ஆய செய்கையி னாள்பல கழிந்தபி னரசர்கண் முதற்சேரர்
தூய மஞ்சனந் தொழிலினிற் றொடங்கிடத் துணைவராம வன்றொண்டர்
பாய கங்கைசூழ் நெடுஞ்சடைப் பரமரைப் பண்டுதாம் பிரிந்தெய்துஞ்
சேய நன்னெறி குறுகிடக் குறுகினார் திருவஞ்சைக் களந்தன்னில்.

(இ-ள்.) அவ்வாறு மகோதைநகரத்தில் வசித்தருளும் நாள்களில் பல நாள் கழிந்தபின்பு, மூவேந்தர்களில் தலைவராகிய சேரமான்பெருமாணாயனார், தூயமையாகிய திருமஞ்சனஞ் செய்யத்தொடங்க, அவர் திருத்தோழராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் பரவிய கங்கைநதி சூழ்ந்த நீண்ட சடைமுடியையுடைய சிவபெருமானை முன்பு தாம் பிரிந்து (இந்நிலவுலகத்து) வந்தருளிய சேய்மையாகிய நன்னெறியானது சமீபிககவும், திருவஞ்சைக்களம் என்னுந் திருக்கோயிலின்கண் எழுந்தருளினார்.—எ-று.

மஞ்சனம்=ஸ்நானம். பண்டுதாம் பிரிந்தெய்தியதாவது-ஆலாலசுந்தரராய் நறுமலர்கொய்யத் திருநந்தன வனத்திற்குச்சென்ற காலததுக் கமலினி அனிந்திதி யென்னுஞ் சேடியாமேல் மோகங்கொள்ள அதுகாரணமாக நிலவுலகத்து அவதரித்தற்பொருட்டு எழுந்தருளியது. (உஅ)

கரிய கண்டர்தங் கோயிலை வலங்கொண்டு காதலாற் பெருகன்பு
புரியு முள்ளத்த ருள்ளணைந் திறைவர்தம பூங்கழ லிணைபோற்றி
யரிய செய்கையி லவனியில் வீழ்ந்தெழுந் தலைப்புறு மனைவாழ்க்கை
சரிய வேதலைக் குத்தலை மாலையென றெடுத்தனர் தமிழ்மாலை.

(இ-ள்.) பெருவிருப்பினால் அதிகரிக்கின்ற மெய்யன்பினையுடைய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் காளகண்டராகிய சிவபெருமானது திருக்கோயிலைப் பிரதக்ஷிணஞ்செய்து உள்ளே யெழுந்தருளிச் சிவபெருமானுடைய தாமரை மலர்போன்ற இரண்டு திருவடிகளையுந் துதித்து, அருமையாகிய செய்கையோடும் பூமியில்விழுந்து நமஸ்கரித்தெழுந்து, அலைச்சலைத் தருகின்ற இல்லறவாழ்க்கையானது நீங்கும்பொருட்டு "தலைக்குத் தலைமாலை" என்று தமிழ்த்திருப்பதிக முதலெடுத்துப் பாடியருளினார்.—எ-று. (உகூ)

திருவஞ்சைக்களம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

தலைக்குத்தலைமாலையணிந்ததென்னேசடைமேற்கங்கை வெள்ளந் தரித்ததென்னே, யலைக்கும்புலித்தோல்கொண்டசைத்ததென்னேயத ன்மேற்கதநாகக்கச்சார்த்ததென்னே, மலைக்குநிகரொப்பனவன்றிரைக ள்வலித்தெற்றிமுழங்கிவலம்புரிகொண், டலைக்குங்கடலங்கரைமேன் மகோதையணியார்பொழிலஞ்சைக்களத்தப்பனே.

எந்தம்மடிகளிமையோர்பெருமானெனக்கென்றுமளிக்கு மணிமி டற்ற,னந்தண்கடலங்கரைமேன்மகோதையணியார் பொழிலஞ்சைக்க ளத்தப்பனை, மந்தம்முழவுங்குழலுமியம்பும்வளர்நாவலர்கோனம்பியூ ரன்சொன்ன, சந்தம்மிகுதண்டமிழ்மாலைகள்கொண்டடிவீழவல்லார்தடு மொற்றிலரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-அஞ்சைக்களத்தப்பர் ; தேவியார்-உமையம்மை.

---

எடுத்த வத்திருப் பதிகத்தி னுட்குறிப் பிவ்வுல கினிற்பாச
மடுத்த வாழ்க்கையை யறுத்திட வேண்டுமென் றன்பரன் பினிற்பாடக்
கடுத்த தும்பிய கண்டர்தங் கயிலையிற் கணத்தவ ருடன்கூடத்
தடுத்த செய்கைதான் முடிந்திடத் தங்கழற் சார்புதந் தளிக்கின்றார்.

(இ-ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் தாம் தொடங்கிய திருப்பதிகத்தி னுட் குறிப்பினால், இந்நிலவுலகத்தில் பாசசம்பந்தமாக நேர்ந்த இல்வாழ்க்கை யை நீக்கியருளவேண்டுமென்று அன்புடன் பாடியருள, ஆலாகலவிஷம் விளங் கப்பெற்ற கண்டத்தினையுடைய சிவபெருமான் தமது ஸ்ரீமஹாகயிலாசத்தில் சிவகணத்தவர்களுடன் கூடத் தடுத்தருளிய செய்கையானது முடிவெய்தத் தமது திருவடிச்சார்பைக் கொடுத்தருள்வாராயினார்.—எ-று. (௯0)

மன்ற லந்தரு மிடைந்தபூங் கயிலையின் மலைவல்லி யுடன்கூட
வென்றி வெள்விடைப் பாகர்தாம் வீற்றிருந் தருளிய பொழுதின்க
ணொன்று சிந்தைநம் மூரனை யும்பர்வெள் ளானையி னுடனேற்றிச்
சென்று கொண்டிங்குவாருமென் றயன்முதற் றேவர்கட் கருள்செய்தார்.

(இ-ள்.) நறுமணங்கமழும் அழகிய விருக்ஷங்கள் நெருங்கிய சிறந்த திரு க்கயிலாசமலையில் பர்வதராஜபுத்திரியாகிய உமாதேவியாருடன் வெற்றி பொரு ந்திய வெள்ளிய இடபவாகனத்தையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளிய பொழுது, ஒருமைப்பட்ட மனத்தினையுடைய நமது சுந்தரனை உயர்ந்த வெள ளானையின்மேலேற்றி, போய்க் கொண்டுவாருங்களென்று பிரமன் முதலிய தேவர்களுக்குக் கட்டளையிட்டருளினார்.—எ-று. (௯௧)

வான நாடர்க ளரியயன் முதலினோர் வணங்கிமுன் விடைகொண்டு
தூந லந்திகழ் சோதிவெள் ளானையுங் கொண்டுவன் றொண்டர்க்குத்
தேன லம்புதண் சோலைசூழ் மகோதையிற் றிருவஞ்சைக் களஞ்சேரக்
கானி லங்கொள வலங்கொண்டு மேவினார் கடிமதிற் றிருவாயில்.

(இ-ள்.) விண்ணுலகவாசிகளாகிய தேவர்கள் - திருமால் - பிரமன் முத லானவர்கள் திருமுன்னே வணங்கி விடைபெற்றுக்கொண்டு, ஸ்ரீ சுந்தரமூர் த்திசுவாமிகளுக்குத் தூய்மையாகிய நன்மைமிக்க பிரகாசத்தையுடைய வெள் ளானையையு முடன்கொண்டு, தேன் ததும்புகின்ற குளிர்ந்த சோலைசூழ்ந்த மகோதைநகரத்தில் திருவஞ்சைககளத்தை யடைந்து பாதங்கள் பூமியிற் பொ ருந்தப் பிரதக்ஷிணஞ்செய்து காவலையுடைய மதில்சூழ்ந்த திருக்கோயிற்றிருவா யிலை யடைந்தார்கள்.—எ-று. (௧௨)

தேவர் தங்குழா நெருங்கிய வாய்தலிற் றிருநாவ லூரார்தங்
காவலன் மன்னரும் புறப்பட வெதிர்கொண்டு கயிலைவீற் றிருக்கின்ற
பூவ லம்புதண் புனறசடை முடியவ ரருளுப்பா டெனப்போற்றி
யேவ லென்றபின் செய்வதொன் றிலாதவாபணிந்தெழுந்தெதிரேற்றார்.

(இ-ள்.) தேவர்கூட்டங்கள் நெருங்கிய திருவாயிலில் திருநாவலூரர் தலைவராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் புறப்பட, அத்தேவர்கள் எதிர்கொ ண்டு, திருக்கைலாசமலையில் வீற்றிருந்தருளும் பூககளலம்புகின்ற குளிர்ந்த கங்கைநதியையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானது அருளுப்பாடெ ன்று துதித்து அவ்வெம்பெருமானுடைய ஏவலென்று கூறியபின்பு, செய்வது சிறிதுமில்லாதவராய் நமஸ்கரித்தெழுந்து எதிரேற்றருளினர்.—எ-று. (௧௩)

ஏற்ற தொண்டரை யண்டாவெள் ளானையி னெதிர்வலங் கொண்டேற்ற
நாற்ற டங்கடன் முழக்கென வைவகை நாதமீ தெழுந்தார்ப்பப்
போற்றி வானவர் பூமழை பொழிந்திடப் போதுவா ருயிரெல்லாஞ்
சாற்றுமாற்றங்களுணர்பெருந்துணைவரை மனத்தினிற்கொடுசார்ந்தார்

(இ-ள்.) தேவர்கள், அவ்வாறு ஏற்றுக்கொண்ட ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவா மிகளை வெள்ளானையினெதிரே வலஞ்செய்து எழுந்தருளுவிக்க, விசாலமாகிய நாற்றிசைக்கடலின் பெருமுழக்கம்போலப் பஞ்சவாத்தியங்களும் ஆகாயத்தில் தோன்றி யாரவாரிக்கவும், தேவர்கள் துதித்துப பூமழைபொழியவும் எழுந்தரு ளுகின்ற ஸ்ரீ சுந்தரமூர்ததிசுவாமிகள், எல்லாவுயிர்களும் சொல்லும் வார்த்தை களை யுணர்கின்ற சிறந்த திருததோழராகிய சேரமான்பெருமாணயனாரைத் தமது திருவுள்ளத்திற் சிந்தித்துக்கொண்டு சென்றருளினா.—எ-று. (௧௪)

சேரர் தம்பிரான் றமபிரான் றோழர்தஞ் செயலறிந் தப்போதே, சார நின்றதோர் பரியினை மிசைக்கொண்டு திருவஞ்சைக் களஞ்சார் ந்து, வீர வெண்களி றுகைத்துவிண் மேற்செலு மெய்த்தொண்டர் தமைக்கண்டு, பாரி னின்றிலர் சென்றதம் மனத்தொடு பரியுமுன் செலவிட்டார்.

(இ-ள்.) சேரமான்பெருமாணயனர் ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளுடைய திருவுள்ளக்கருத்தை யுணர்ந்து அப்பொழுதே அருகில் நின்ற ஓர் குதிரையின் மேலேறிக்கொண்டு திருவஞ்சைக்களத்தையடைந்து,வீரத்தன்மை பொருந்திய வெள்ளானையைச் செலுத்திக்கொண்டு ஆகாசமார்க்கத்திற் சென்றருளும் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளைக் கண்டு, பூமியில் நில்லாதவராய் அவர் பின் செ ன்ற தமது மனசுடனே (அதிவேகமாக) குதிரையும் முன்னே செல்லும்படி செலுத்தினர்.—எ-று.

விட்ட வெம்பரிச் செவியினிற் புவிமுதல் வேந்தர்தாம் விதியாலே
யிட்ட மாஞ்சிவ மந்திர மோதலி னிருவிசும் பெழப்பாய்ந்து [தை
மட்ட லர்ந்தபைந் தெரியல்வன் றொண்டர்மேல் கொண்டமா தங்கத்
முட்ட வெய்திமுன் வலங்கொண்டு சென்றது மற்றதன் முன்னாக.

(இ-ள்.) இந்நிலவுலகத்திற்கு முதல்வேந்தராகிய சேரமான்பெருமாணு யனார் அவ்வாறு செலுத்திய வெவ்விய குதிரையின் செவியிலே விதிப்படி இஷ்டசித்தியைத் தரத்தக்கதாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை யோதியருளவும், உடனே பெரிய ஆகாயத்தில் பாய்ந்தெழுந்து, தேன் ததும்புகின்ற பசிய மலர்மாலையை யணிந்த ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் ஏறிச்செல்லும் வெள்ளானையைப் பொருந்தவடைந்து முன்னே வலஞ்செய்து அதற்கு முன்னாகச் சென்றது.—எ-று.

உதியர் மன்னவர் தம்பெருஞ் சேனையி னுடன்சென்ற படைவீரர்
கதிகொள் வாசியிற் செல்பவர் தம்மைத்தங் கட்புலப் படுமெல்லை
யெதிர்வி சும்பினிற் கண்டுபின் கண்டில ராதலி னெல்லாரு
முதிரு[1]மன்பினி லுருவிய சுரிகையான் முறைமுறை யுடல்வீழ்த்தார்.

(இ-ள்.) சேரமான்பெருமா ணயனாருடைய பெரிய சேனைகளுடனே சென்ற படைவீரர்கள் நால்வகைக் கதியினையுடைய குதிரையின்மேலேறிச் செல்லும் சேரமான்பெருமா ணயனாரைத் தங்கள் கண்களுக்குப் புலப்படும் வரையிலும் ஆகாயத்தில் எதிரே பார்த்துப் பின்பு காணாமையால், எல்லாரும் முதிர்ந்த திடபத்தியினாலே உருவிய உடைவாளினால் வரிசைவரிசையாகத் தங்கள் தேகத்தை(ச்சேதித்து) வீழ்த்தினார்கள்.—எ-று. (௯எ)

வீரயாக்கையை மேல்கொண்டு சென்றுபோய் வில்லவர் பெருமானைச
சார முன்சென்று சேவக மேற்றனர் தனித்தொண்டர் மேல்கொண்ட
வாரு மும்மதத் தருவிவெள் ளானைக்கு வயப்பரி முன்வைத்துச
சேரர் வீரருஞ் சென்றனர் மன்றவர் திருமலைத் திசைநோக்கி.

(இ-ள்.) வீரயாக்கையைப் பெற்றுச் சென்று சேரமான்பெருமாணய னாரை நெருங்கி முற்பட்டுச் சென்று சேவித்துப்போனார்கள்; ஒப்பற்ற மெய்த் தொண்டராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் ஏறிச்செல்லும் மும்மதமாகிய அருவியைச் சொரியும் வெள்ளானைக்கு முன்னே வெற்றிபொருந்திய குதிரையைச் செலுத்திச் சேரமான்பெருமாணயனாரும் சிவபெருமானுடைய திருக்கயிலாசத் திருமலையின் திசையைநோக்கிச் சென்றருளினார்.—எ-று. (௯அ)

யானை மேல்கொண்டு செல்கின்ற பொழுதினி லிமையவர் குழா மென்னுந், தானை முன்செலத் தானெனை முன்படைத் தானெனுந் தமிழ்மாலை, மான வன்றொண்டர் பாடிமுன் னணைந்தனர் மதிநதி பொதி வேணித், தேன லம்புதண் கொன்றையார் திருமலைத் தென்றிசைத் திருவாயில்.

(இ-ள்.) பெருமை மிக்க ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் வெள்ளானையின் மேல் ஆரோகணித்துக்கொண்டு செல்லும்பொழுது தேவர்கூட்டங்களென்னுஞ் சேனைகள் முன்னே செல்ல, "தானெனை முன்படைத்தான்" என்னு முதலையுடைய தமிழ்த்திருப்பதிகத்தை[1]யருளிச்செய்து, இளம்பிறையுங் கங்

கைநதியுந் தங்கிய சடைமுடியில் தேன்றதும்புகின்ற குளிர்ந்த கொன்றைமாலையைத் தரித்த சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக்கயிலாசத் திருமலையின் தென்றிசைத் திருவாயிலின் முன்னே யடைந்தருளினார்.—எ-று. (௧௧)

---

**திருநொடித்தான்மலை - பண் - பஞ்சமம்.**

*திருச்சிற்றம்பலம்.*

தானெனைமுன்படைத்தானதறிந்துதன்பொன்னடிக்கே
நானெனப்பாடலந்தோநாயினேனைப்பொருட்படுத்து
வானெனைவந்தெதிர்கொள்ளமத்தயானையருள்புரிந்து
ஊனுயிர்வேறுசெய்தானொடித்தான்மலையுத்தமனே. (௧)

ஆனைபுரித்தபகையடியேனொடுமீளக்கொல்லோ
ஊனையுயிர்வெருட்டியொள்ளியானைநினைந்திருந்தேன்
வானைமதித்தமரர்வலஞ்செய்தெனையேறவைக்க
வானையருள்புரிந்தானொடித்தான்மலையுத்தமனே. (௨)

மந்திரமொன்றறியேன்மனைவாழ்க்கைமகிழ்ந்தடியேன்
சுந்தரவேடங்களாற்றுரிசேசெயுந்தொண்டனெனை
யந்தரமால்விசும்பிலழகானையருள்புரிந்த
துந்தரமோநெஞ்சமேநொடித்தான்மலையுத்தமனே. (௩)

வாழ்வையுகந்தநெஞ்சமடவார்தங்கள்வல்வினைப்பட்
டாழமுகந்தவென்னையதுமாற்றியமரரெல்லாஞ்
சூழவருள்புரிந்துதொண்டனேன்பரமல்லதொரு
வேழமருள்புரிந்தானொடித்தான்மலையுத்தமனே. (௪)

மண்ணுலகிற்பிறந்துநும்மைவாழ்த்தும்வழியடியார்
பொன்னுலகம்பெறுதறொண்டனேனின்றுகண்டொழிந்தேன்
விண்ணுலகத்தவர்கள்விரும்பவெள்ளையானையின்மே
லென்னுடல்காட்டுவித்தானொடித்தான்மலையுத்தமனே. (௫)

அஞ்சினையொன்றிநின்று அலர்கொண்டடிசேர்வறியா
வஞ்சனையென்மனமேவைகிவானநன்னாடர்முன்னே
துஞ்சுதன்மாற்றுவித்துத்தொண்டனேன்பரமல்லதொரு
வெஞ்சினவானைதந்தானொடித்தான்மலையுத்தமனே. (௬)

நிலைகெடவிண்ணதிரநிலமெங்குமதிர்ந்தசைய
மலையிடையானையேறிவழியேவருவேனெதிரே
யலைகடலாலரையனலர்கொண்டுமுன்வந்திறைஞ்சும்
உலையணையாதவண்ணநொடித்தான்மலையுத்தமனே. (௭)

அரவொலியாகமங்களறிவாரறிதோத்திரங்கள்
விரவியவேதவொலிவிண்ணெலாம்வந்தெதிர்ந்திசைப்ப
வரமலிவாணன்வந்துவழிதந்தெனக்கேறுவதோர்
சிரமலியானைதந்தானொடித்தான்மலையுத்தமனே. (௮)

இந்திரன்மால்பிரமனெழிலார்மிகுதேவரெலாம்
வந்தெதிர்கொள்ளவென்னைமத்தயானையருள்புரிந்து
மந்திரமாமுனிவரிவனாரெனவெம்பெருமா
னந்தமனூரனென்றானொடித்தான்மலையுத்தமனே (௯)

ஊழிதோறூழிமுற்றுமுயர்பொன்னொடித்தான்மலையைச்
சூழிசையின்கருமபின்சுவைநாவலவூரன்சொன்ன
ஏழிசையின்றமிழாலிசைநதேத்தியபத்தினையு
மாழிகடலரையாவஞ்சையப்பர்க்கறிவிப்பதே (௧௦)

திருச்சிற்றம்பலம்.

திருநொடித்தான்மலை என்பது, திருக்கயிலாயத்திருமலை.

---

மாசில் வெண்மைசேர் பேரொளி யுலகெலா மலர்ந்திட வளர்மெய்ம்மை
யாசி லன்பர்தஞ் சிந்தைபோல் விளங்கிய வணிகிளர் மணிவாயிற்
றேசு தங்கிய யானையும புரவியு மிழிநதுசே ணிடைச்செல்வா
ரீசர் வெள்ளிமா மலைத்தடம் பலகடந் தெய்தினர் மணிவாயில்.

(இ-ள்.) தூய்மையாகிய வெண்மைபொருந்திய பேரொளியானது உலக மெங்கும் விளங்க,மெய்ம்மைவளாகின்ற குற்றமற்ற அன்பாகளது திருவுள்ளம் போல விளங்குகின்ற அழகுமிக்க தெனறிசைத் திருவாயிலில் பிரகாசந்தங்கிய வெள்ளானையினின்றுங் குதிரையினின்று மிறங்கித் தூரத்திற் செல்கின்றவா கள் சிவபெருமானது வெள்ளிமலையின் பல வாயிலிடங்களையுங் கடந்து அழ கிய திருவணுக்கன் றிருவாயிலை யடைந்தார்கள்.—எ-று. (௪௦)

அங்க ணெய்திய திருவணுக் கன்றிரு வாயிலி னடற்சேரர்
தங்கள் காவலர் தடையுண்டு நின்றனர் தம்பிரா னருளாலே [நத
பொங்கு மாமதம் பொழிந்தவெள் ளானையி னுமபர்போற் றிடப்போ
நங்கள் நாவலூர் காவலா நண்ணின ரண்ணலார் திருமுன்பு.

(இ-ள்.) அங்குப்பொருந்திய திருவணுக்கன் றிருவாயிலினிடத்தில் வலிய சேரமான்பெருமாணாயனார் தடைப்பட்டு நின்றார்; சிவபெருமானுடைய திருவருளினால் மிக்க மதம் பொழிகின்ற வெள்ளானையிலேறித் தேவர்கள்துதி க்கும்படி சென்றருளிய நமது திருநாவலூரர் தலைவராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிவபெருமான் திருமுன்னே யடைந்தருளினார்.—எ-று.

'நங்கள் காவலர் நாவலர் காவலர் நண்ணினார் திருமுன்பு' என்றும் பாடம். (௪௧)

சென்று கண்ணுத றிருமுன்பு தாழ்ந்துவீழ்ந் தெழுந்துசே ணி
டைவிட்ட,கன்று கோவினைக் கண்டணைந் ததுவெனக் காதலின்விரை
ந்தெய்தி, நின்று போற்றிய தனிப்பெருந் தொண்டரை நேரிழை வலப்
பாகத்,தொன்று மேனிய ரூரனே வந்தனை யென்றனா ருலகுய்ய.

(இ-ள்.) அவ்வாறு சென்று சிவபெருமானுடைய சந்நிதியிலே வீழ்ந்து வணங்கி யெழுந்து, தூரத்திலே விட்ட இளங்கன்றானது தாய்ப்பசுவைக் கண்டணைந்தாற் போலப் பெருவிருப்போடும் விரைந்து அடைந்து நின்று

ஸ்தோத்திரஞ்செய்த ஒப்பற்ற பெருந்தொண்டராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளைப்பார்வதிபாகராகிய சிவபெருமான் உலகத்தா ருய்யும்படி (பார்த்தருளி) சுந்தரனே! வந்தனையோ? என்று திருவாய்மலர்ந்தருளினார்.—எ-று. ()

அடிய னேன்பிழை பொறுத்தெனை யாண்டுகொண் டத்தொடக்
கினைநீக்கி, முடிவி லாநெறி தரும்பெருங் கருணையென் றரத்ததோ
வெனமுன்னர்ப், படியு நெஞ்சொடு பன்முறை பணிந்தெழும் பரம்ப
ரா யானந்த, வடிவு நின்றது போன்றின்ப வெள்ளத்து மலர்ந்தனர்
வன்றொண்டர்.

(இ-ள்.) (அதைக்கேட்ட) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் (எம்பெருமானே! தேவரீர்) அடியேன்செய்த குற்றங்களைப் பொறுத்து என்னை யடிமைகொண்டருளி, கொடிய பந்தத்தினின்று நீக்கி முடிவில்லாத முத்திநெறியைத் தந்தருளிய பெருங்கருணை அடியேன் தரத்ததோ? என்றுகூறி, தாழ்ந்த சிந்தையோடும் சந்நிதியில் பலமுறை நமஸ்கரித்தெழுகின்ற தொன்றுதொட்டு வருகின்ற பேரானந்தத் திருவுருவம் நிற்பதுபோன்று பேரின்பவெள்ளத்தில் விளங்கினார்.—எ-று. (சங)

நின்ற வன்றொண்டர் நீரணி வேணிய நின்மலர்க் கழல்சாரச்
சென்று சேரலன் றிருமணி வாயிலின் புறத்தின னெனச்செப்பக்
குன்ற வில்லியார் பெரியதே வரைச்சென்று கொணர்கென வவரெய்தி
வென்றிவானவர்க்கருளுப்பாடெனவவர்கழல்வீழ்ந்துவிரைந்தெய்தி.

(இ-ள்.) திருமுன்னே வணங்கிநின்ற ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள், கங்கைநதியையணிந்த சடைமுடியையுடைய எம்பெருமானே! தேவரீருடைய திருவடிகளையடையும் பொருட்டுச் சேரமான்பெருமாள் வந்து திருவனுக்கன் றிருவாயிலின் புறத்திலே தடைபட்டு நிற்கின்றானென்றுவிண்ணப்பஞ்செய்ய, (அதைக்கேட்ட) மேருமலையாகிய வில்லையுடைய சிவபெருமான் பெரியதேவரை யழைத்து நீபோய் அழைத்துவரக்கடவையென்று கட்டளையிட்டருள, அவர்சென்று, வெற்றிபொருந்தியசேரமான் பெருமாணாயனாருக்கு (சிவபெருமானுடைய) அருளுப்பாடு இன்னதென்று கூற, (நாயனார்) அப்பெரியதேவருடையதிருவடிகளில் வீழ்ந்து நமஸ்கரித்து விரைந்துவந்து.—எ-று.

'நீரணிவேணியர் நிறைமலர்க்கழல்சார' என்றும் பாடபேதம்.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (சச)

மங்கை பாகர்தந் திருமுன்பு சேய்த்தாக வந்தித்து மகிழ்வெய்திப்
பொங்கு மன்பினிற் சேரலர் போற்றிடப் புதுமதி யலைகின்ற
கங்கை வார்சடைக் கயிலைநா யகர்திரு முறுவலின் கதிர்காட்டி
யிங்கு நாமழை யாமைநீ யெய்திய தென்னென வருள்செய்தார்.

(இ-ள்.) சேரமான்பெருமாணாயனார் பார்வதி பாகராகிய சிவபெருமான் திருமுன்னே தூரமாகநின்று வந்தனைசெய்து அதிகரித்தெழுகின்ற பேரன்போடு துதிக்க, இளம்பிறையலையுங் கங்கை நதியையணிந்த நீண்ட சடைமுடியையுடைய சிவபெருமான் புன்சிரிப்பி னொளியைக்காட்டி நாம் இங்கு அழையாதிருக்க, நீ இங்கு அடைந்தது யாதுகாரணமென்று வினவியருளினார்.

அரச ரஞ்சலி கூப்பிநின் றடியனே னூரர் கழல்போற்றிப்
புரசை யானைமுன் சேவித்து வந்தனன் பொழியுநின் கருணைத்தெண்
டிரைசெய் வெள்ளமுன் கொடுவந்து புகுதலிற் றிருமுன்பு வரப்பெற்
றேன், விரைசெய் கொன்றைசேர் வேணியா யினியொரு விண்ணப்ப
முளதென்று.

(இ-ள்.) (அதற்குச்) சேரமான்பெருமாணயனார் கைகூப்பி வணங்கி நின்று, (எம்பெருமானே!) அடியேன் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளுடைய திருவடிகளைத்துதித்து (அவரேறிவந்த) கழுத்தணி கயிற்றையுடைய வெள்ளானையின் முன்னே சேவித்துக்கொண்டுவந்தேன்; பெருகுகின்ற தேவரீரது பெருங்கருணையாகிய தெள்ளிய அலைகளையுடைய வெள்ளமானது முன்னேகொண்டுவந்து சேர்த்தலினால் தேவரீருடைய திருமுன்னே வரத்தக்க பாக்கியம்பெற்றேன்; நறுமணங்கமழுங் கொன்றைமலர் மாலையையணிந்த எம்பெருமானே! இனி, (அடியேன்கூறும்) ஒருவிண்ணப்ப முள்ளதென்று.—எ-று.

இதுமுத லிரண்டு பாடலுங் குளகம். (சுசு)

பெருகு வேதமு முனிவருந் துதிப்பரும் பெருமையா யுனையன்பாற்
றிருவு லாப்புறம் பாடினேன் றிருச்செவி சாத்திடப் பெறவேண்டு
மருவு பாசத்தை யகன்றிட வன்றொண்டர் கூட்டம்வைத் தாயென்ன
வருளு மீசருஞ் சொல்லுக வென்றன ரன்பருங் கேட்பித்தார்.

(இ-ள்.) சிறந்த வேதங்களாலும் முனிவர்களாலுந் துதித்தற்கரிய மேன்மையினையுடைய எம்பெருமானே! தேவரீர் மேலே அன்பினால் திருவுலாப் பிரபந்தத்தைப் புறத்திற் பாடியிருக்கின்றேன்; அதனைத் தேவரீர் திருச்செவி சாத்தல்வேண்டும்; பொருந்திய பந்த நீங்கும்பொருட்டு ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளுடைய திருக்கூட்டத்தில் சேர்த்தருளிய பெருங்கருணாநிதியே! என்று விண்ணப்பஞ் செய்ய, பேரருள் புரியுஞ் சிவபெருமானும் அவ்வுலாவைச்சொல்லென்று திருவாய்மலர்ந்தருளினர். உடனே, ள, சேரமான்பெருமாணயனாரும் அதனைக் கேட்பித்தார்.—எ-று. (சுஎ)

---

சேரமான் பெருமாணயனா ரளிச்செய்த

திருஆதியுலா.

திருச்சிற்றம்பலம்.

திருமாலு நான்முகனுந் தேர்ந்துணரா தன்றங்
கருமா லுறவழலாய நின்ற—பெருமான்

* * * * * * * *

காரேறு கொன்றைந்தார்க் காபாலிகட்டங்க
னூரேறு போந்த துலா.

திருச்சிற்றம்பலம்.

---

சேரர் காவலர் பரிவுடன் கேட்பித்த திருவுலாப் புறங்கொண்டு
நாரி பாகரு நலமிகு திருவருள் நயப்புட னருள்செய்வா

ரூர னாகிய வாலால சுந்தர னுடனமர்ந் திருவிருஞ்
சாரு கங்கண நாதராந் தலைமையிற் றங்குமென் றருள்செய்தார்.

(இ-ள்.) சேரமான்பெருமாணாயனார் அன்புடன்கேட்பித்த திருவுலாப் பிரபந்தத்தையேற்றுப் பார்வதி பாகராகிய சிவபெருமானும் நன்மைமிக்க திருவருளை விருப்புடன் அருளுவார்; நம்பியாரூரனாகிய ஆலால சுந்தரனுடன் நீயும் அமர்ந்து நீங்களிருவரும் நமது சிவகணத்தலைவரா யிருக்குந்தன்மையி லிருங் களென்று திருவாய்மலர்ந்தருளினார்.—எ-று. (௪௮)

அன்ன தன்மையி லிருவரும் பணிந்தெழுந் தருளை மேற்கொண்டு
மன்னும் வன்றொண்ட ராலால சுந்தர ரங்குந்தாம் வழுவாத
முன்னை நல்வினைத் தொழிற்றலை நின்றனர் முதற்சேரர் பெருமானு
நன்மை சேர்கண நாதரா யவர்செய் நயப்புறு தொழில்பூண்டார்.

(இ-ள்.) அவ்வாறாகிய தன்மையினால் இருவரும் நமஸ்கரித்து எழுந்து திருவருளைச் சிரமேற்கொண்டு நிலைபெற்ற ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் ஆலால சுந்தரராகித் தாம் முன்பு வழுவாமல் செய்திருந்த நல்ல திருத்தொண்டில் நின்றருளினார்; முதன்மைபொருந்திய சேரமான் பெருமாணாயனாரும் நன்மை பொருந்திய சிவகணநாதராகி அவர்கள்செய்யும் நன்மைமிக்க திருத்தொழிலை மேற்கொண்டார்.—எ-று. (௪௯)

தலத்து வந்துமுன் னுதயஞ்செய் பரவையார் சங்கிலி யாரென்னு
நலத்தின் மிக்கவர் வல்வினைத் தொடக்கற நாயகி யருளாலே
யலத்த மெல்லடிக் கமலினி யாருட னனிந்திதை யாராகி
மலைத்த னிப்பெரு மான்மகள் கோயிலிற் றந்தொழில் வழிநின்றார்.

(இ-ள்.) முன்னே பூமியில்வந்து அவதரித்த பரவைநாச்சியார் சங்கிலி நாச்சியாரென்னு நன்மைமிக்க இருவரும் வலிய வினைத்தொடக்கு நீங்க, உமா தேவியாரது திருவருளினால், செம்பஞ்சு ஊட்டிய மெல்லிய பாதங்களையுடைய கமலினியாரும் அநிந்திதையாருமாகிப் பர்வதராஜபுத்திரியாகிய அவ்வுமாதேவி யாரது திருக்கோயிலிலே தமது திருத்தொண்டில் நின்றார்கள்.—எ-று. (௫௰)

வாழி மாதவ ராலால சுந்தரர் வழியிடை யருள்செய்த
வேழி சைத்திருப் பதிகமிவ் வுலகினி லேத்திட வெறிமுந்நீ
ராழி வேந்தனும் வருணனுக் களித்திட வவனுமவ் வருள்சூடி
யூழியிற்றனியொருவர்தந் திருவஞ்சைக் களத்திலுய்த் துணர்வித்தான்.

(இ-ள்.) மகத்தாகிய தவத்தினையுடைய ஆலாலசுந்தரர் தாம் வழியிலே அருளிச்செய்த ஏழிசையோடு பொருந்திய திருப்பதிகத்தை இவ்வுலகத்தில் துதிக்கும்பொருட்டு, அலையெறிகின்ற சமுத்திரராஜனாகிய வருணனிடத்திலே கொடுத்தருள, அவ்வருணராஜனுந் திருவருளை மேற்கொண்டு முறைமைப்படி ஒப்பற்ற சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருவஞ்சைக்களத்திற் கொணர்ந்து (யாவருக்கும்) தெரிவித்தான்.—எ-று. (௫௧)

சேரர் காவலர் விண்ணப்பஞ் செய்தவத் திருவுலாப் புறமன்று
சாரல் வெள்ளியங் கயிலையிற் கேட்டமா சாத்தனார் தரித்திந்தப்

பாரில் வேதியர் திருப்பிட வூர்தனில் வெளிப்படப் பகர்ந்தெங்கு
நார வேலைசூ ழுலகினில் விளங்கிட நாட்டினர் நலத்தாலே.

(இ-ள்.) சேரமான்பெருமாணாயனார் (சிவபெருமான் திருமுன்னே) விண்ணப்பஞ் செய்தருளிய அத்திருவுலாப் பிரபந்தத்தை அக்காளில் சாரலையுடைய திருக்கயிலாசத் திருமலையிற் கேட்ட மாசாத்தரானவர் அதனைத் தரித்து, இந்த நிலவுலகத்திலே வேதியர்கள் வாழுந் திருப்பிடவூரில் வெளிப்படச் சொல்லி, நீரையுடைய சமுத்திரஞ்சூழ்ந்த உலகமெங்கும் விளங்க நன்மையோடு நாட்டியருளினார்.—எ-று. (இ௨)

வேறு.

என்று மின்பம பெருகு மியல்பினா
லொன்று காதலித் துள்ளமு மோங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கு நிலவி யுலகெலாம.

(இ-ள்.) எக்காலத்தும் பேரின்பமானது அதிகரிக்குமியல்பினால், நிலைபெற்ற பேரன்புற்றுத் திருவுள்ளஞ் சிறந்தோங்கும்படி, ஸ்ரீ நடராஜப்பெருமானுடைய மெய்யடியார்களாகிய சிவஞானிகளது பெரும்புகழானது உலகமெங்கும் பரவி நிலைபெற்றது.—எ-று.

அரிப்பிரமேந்திராதி தேவர்கள் எதிர்கொண்டுபோற்றும்படி ஸ்ரீ மஹாகயிலாசத்திற்கு வெள்ளானையின்மீ தாரோகணித்துச் சென்றருளிய இவ்வெமது அருள்வள்ளலாகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளைக் குறித்து இத்திருத்தொண்டர்புராணத்தி லமைந்துள்ள அற்புதச் சரித்திரங்களே யன்றி, இன்னும், அனேக மான்மியங்கள் பல நூல்களிற் கேட்கப்படுகின்றன; அவைவருமாறு,

எமது ஸ்ரீ வன்றொண்டப்பெருமான் விருத்தாசலத்தில் பழமலைநாதர் கொடுத்தருளிய பன்னீராயிரம் பொன்னுக்கும் அவ்வெம்பெருமானிடத்தில் மாதிரிப்பொன் வாங்கிக்கொண்டு கிடைத்த பொன்னை மணிமுத்தாநதியிலிட்டுப் பின்னர் அதனைத் திருவாரூரிற் கமலாலயதீர்த்தத்தி லெடுத்து அங்கெழுந்தருளியிருந்த விநாயகரிடங்காட்டித் தம்மிடத்திருந்த மாதிரிபபொன்னுக்குச் சரியாய் மாற்றுரை பார்க்கச்செய்து ஒப்புக்கொண்டனவொன்றும், இவர் சோமாசிமாறநாயனாரிடம் போகும்படி சிவபெருமானை வேண்டிக்கொண்டவாறு சுவாமிகள் அந்நாயனார் செய்த யாகத்தில் சண்டாளரூபந் தாங்கி மதுக்குடமும், மாமிசகண்டமு மேந்திச் சென்று காட்சிகொடுத்தருளின வொன்றும், அம்மதுக்குடம் பொங்கிய இடம் பொங்குசாறுயநல்லூர் எனப் பிரசித்தி பெற்றிருக்கிறதென்றும், இவர், ஸ்ரீ காஞ்சிப்பதியிற் சென்றபொழுது சிவபெருமான் அங்கொரு வயலிற்சென்று மறைந்திருக்க, அங்குத் தேடிச்சென்று, தாம் திருவொற்றியூரி விழந்த இரண்டு கண்ணில் ஒரு கண்ணை அவரிடம் பெற்றனர். அந்த இடம் இப்போது கள்ளக்கம்பன்பட்டை யெனப் பிரசித்திபெற்று இன்றும் மகோற்சவம் நடந்தேறிவருகின்ற தென்றும், திருப்பேரூருக்குச் சென்றருளியபொழுது அங்கு சுவாமியும் அம்மையும் திருக்கோயிலினின்று நீங்கித் தமதிருப்பிடத்தைச் சுந்தரமூர்த்திக்குச் சொல்லவேண்டாமென்று திருநந்திதேவருக்குக் கட்டளையிட்டு அவ்வூர்ப் புறவயலில் பள்ளனும் பள்ளியுமாக

அம்மையப்பர்களைக் காணாமல் திருநந்திதேவரை வினவ, அவர் சுவாமியினது கட்டளையைக் கடக்கக்கூடாமலும் கேட்டவருக்குப் பொய்சொல்லமாட்டாமலும் அவருக்குப்பதில்சொல்ல விசையாதவர்போல, அம்மையப்பர்களிருக்குந் திசையாகத்தமதுமுகத்தைத் திருப்பிக்கொண்டனர்; அதனையுணர்ந்தஸ்ரீசுந்தரமூர்த்திகள் அத்திசைநோக்கிச் சுவாமி யொளித்திருந்தவயலிற்சென்று, அங்குக் களைபறித்திருந்த பள்ளனும் பள்ளியுமே, சுவாமியும் அம்மையுமென் றுணர்ந்து திருப்பதிகத்தாற் றுதிக்க, சிவபெருமான் மகிழ்கூர்ந்து அவர் தரிசிக்குமாறு திருநடனப்பொலிவைக் காட்டியருளினரென்றும், திருவீங்கோய் மலைக்குச் சென்றபொழுது, அங்குத்திருக்கோயிலில் சுவாமியைக்காணாமையால் சுற்றுப்புறத்தில் தேடி அதற்கடுத்த ஒரு புளியமரத்தின்மேல் சுவாமி யொளித்திருக்கக் கண்டு வணங்கி பொன்வேண்டித்துதிக்க, அவ்வெம்பெருமான் பொற்புளியங்காயை யறுத்து முன்னேபோட்டனர்; அதனைச் சுந்தரமூர்த்திகள்பெற்றுக்கொண்டு திருப்பாச்சிலாச்சிராமத்திற்குச் சென்று, அங்குவணிகராகவெழுந்தருளிய சிவபெருமானைக் கண்டு பொற்புளியங்காயைக் கொடுத்து மாற்றுரை பார்க்கச்சொல்ல, அவர் அவ்வாறே பார்த்து இது உயர்ந்த பொன்னென்று கொடுத்தமையால், அன்று முதலத்தில் சிவபெருமானுக்கு மாற்றறிவாணர் என்று பெயர் வழங்குகிறதென்றும், மீண்டும் சுந்தரமூர்த்திகள் திருவீங்கோய் மலைக்கு வந்து முற்கூறிய புளியமரத்தில் சுவாமியைக்கண்டு, “பொன்னம்பலவாணரே! புளியங்காய் பறிக்கின்றீரோ” என்ன, அவர் “இவ்வுலகாளும் புலவரே! நெருப்புக்காய் பறிக்கின்றோம்” என்று மரத்திலிருந்து சிலகாய்களையுதிர்க்க, அவற்றைச் சுந்தரமூர்த்திகளெடுத்து நறுக்கிப்பார்க்க அவை புகைந்துங் கரிந்தும்போயின வென்றும், இன்று மத்தலத்தில் புளியமரங்கள் காய்த்துப் பழுக்கிறசமயத்தில், அக்காய்கள் கரிந்துகெட்டுப் போகின்றனவென்றும், விறன்மிண்ட நாயனார் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளிடங்கொண்ட பகைகாரணமாக அவரது ஞாபகத்தைக்குறிக்குந் திருவாரூரைப் பிரஸ்தாபிப்பவர்களுடைய காலைவெட்டுவதாக நியமங்கொண்டொழுகுநாளில் தியாகராசப்பெருமானை அந்நாயனாரிடத்திற் சென்று தமதூர் திருவாரூர் என்று கூறவும், அவர் இவரது காலை வெட்டும்படி துரத்திவர, சிவபெருமான் திருவாரூரெல்லையில்வந்து நின்றனர். அவரைத் துரத்திவந்த நாயனார் அத்திருவாரூரெல்லையை மிதித்த தமது ஒற்றைக்காலை வெட்டத்தொடங்கலுஞ் சிவபெருமான் காட்சி கொடுத்தருளினரென்றும், சுந்தரமூர்த்திகளும் பரவையாரும் அர்த்தசாமத்தில் திருமஞ்சனத்தி லிருக்குங்காட்சியுடன் சந்நிதானத்திற்கு வரும்படி தியாகராஜப்பெருமான் கட்டளையிட்டருள, அவ்வாறே வருகின்ற அவர்கள் தேவாசிரிய மண்டபத்தில் விறன்மிண்ட நாயனாரைக் கண்டுமயங்க, அப்பொழுது சிவபெருமான் வேறு கள்ளவாயி லுண்டாக்கி அவர்களை வரவழைத்துக் காட்சிக் கொடுத்தருளினரென்றுக் பற்பல புராணங்களிற் கூறப்பட்டுள்ளன. இதுபோலவே,

ஸ்ரீ வாகீசமூர்த்திக ளென்னுந் திருநாவுக்கரசுசுவாமிகள் தாம் திருவதிகைப்பதியை யடுத்து ஒருதலத்திற்சென்று திருப்பதிகம் பாடியருளி உழவாரப்படை பெற்றனர் என்றும், திருக்காளத்திப்பதியை யடைந்துதரிசித்து அதனைக்கடந்து செல்லுகையில் ஒருகாட்டில் அகஸ்தியரது சாபமேற்றுத் திரிந்து

கொண்டிருந்த காட்டானையொன்று எதிரில்வந்து சுவாமிகளது திருமேனியை த்தீண்டேலும் தனது சாபமொழிந்து பழைய உருவத்தைப்பெற்றுப் போயிற் றென்றும், திருக்கேதாரமென்னுந் திருப்பதியிற் சென்றபொழுது அங்கு வியாசமுனிவரர் பலமுனிவர்களுடன் எதிர்கொண்டு சந்தித்து "வாகீசமுனி வரே !" என்றழைத்துப்பணிந்து தமக்கு விளங்காதிருந்த பல சந்தேகங்களை வினவித்தெளிந்து சென்றனரென்றும், திருக்கயிலாய தெரிசனஞ் செய்யும் பொருட்டு வடதிசைநோக்கிச்செல்லுங்கால், நீண்ட யாத்திரையால் ஓரிடத்து அயர்ந்து மூர்ச்சித்துக்கிடந்தபொழுது பார்வதி பரமேஸ்வரக ளிருவருமெழுந் தருளிப் பாலூட்டித் தெளிவித்தனரென்றும் பற்பல தலபுராணங்களிற் கூறப் பட்டுள்ளன. ஸ்ரீ சேக்கிழார்பெருமான் புராணஞ் செய்யத்தொடங்கிய காலத் தில் இவ்வற்புதங்களுக்குத் தனியே திருப்பதிகங்களின்மையால் தாமருளிச் செய்த இத்திருத்தொண்டர் புராணத்துட் கூறாதுவிடுத்தனர். கற்றுவல்லோர் அவ்வத்தலபுராணங்களிலும் சம்பிரதாயங்களையுணர்ந்த ஆன்றோர்களிடத்துங் கேட்டு மகிழ்வாராக. (ருங)

---

வாழ்த்து.

வைய நீடுக மாமழை மன்னுக
மெய்வி ரும்பிய வன்பர் விளங்குக
சைவ நன்னெறி தாந்தழைத் தோங்குக
தெய்வ வெண்டிரு நீறு சிறக்கவே.

(இ-ள்.) உலகத்தி லுள்ளவர்கள் நீடித்து வாழக்கடவர்கள்; சிறந்த மேகங்கள் நிலைபெற்று மாதமும்மாரி பெய்யக்கடவன; மெய்ஞ்ஞானத்தை விரும்பிச் சிந்திக்கும் சிவனடியார்கள் விளங்கியோங்கக்கடவர்கள்; சற்சமய மாகிய சைவமார்க்கந் தழைத்தோங்கக்கடவது; தெய்வத்தன்மைபொருந்திய திருவெண்ணீறு சிறந்து விளங்கக்கடவது.—எ-று.

வெள்ளானைச்சருக்கம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம் - உகூஅகூ.

இரண்டாவதுகாண்டம் முற்றுப்பெற்றது.

ஆ காண்டம் இரண்டிக்குத் திருவிருத்தம் - சஉஅசு.

---

# பெரியபுராணம் முற்றுப்பெற்றது.

அருண்மொழித்தேவரடியிணைவாழ்க.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் தோத்திரப்பா

## காப்பு.

தந்திமாமுகத் - தெந்தைதாண்மலர்
பந்தமோயவே - சிந்தைசெய்குவாம்.

## எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

தூங்குசீர்பெறுகுன்றையம்பதியி னுலவுசேக்கிழாருயர்குலக்கொழுந்தாய்
வீங்குசீர்புனையருண்மொழித்தேவாம் விழுப்பமாரபிதானமுற்றமர்ந்து
பாங்குமேவியவளவனல்லமைச்சாய்ப் பகருமுத்தமச்சோழப்பல்லவனுந்
தேங்குபட்டமுற்றோங்குமெம்மாசே சேக்கிழாரெனுந்தேசிகமணியே. (௧)

சித்தனுருயிர்க்கருள்சுரந்தளித்த நிகமவாகமநெறிமுறைபிழைத்துக்
கத்தியேயலைந்தழிவுறுமமணர் கட்டுரைத்தசிந்தாமணிக்கதையைத்
தத்துவாம்பரிவளவன்பாராட்டத் தகுதியன்றெனச்சாற்றிமெய்ச்சரிதஞ்
சித்தமேவுறத்தெருட்டியகலத்தோய் சேக்கிழாரெனுந்தேசிகமணியே. (௨)

கல்லைமேவியநெஞ்சகச்சமணர் கற்பனைக்கிடனுக்கலங்காமற்
றில்லைவான்பதியடைந்தரனருளாற் றிகழ்ந்தெழுந்தசொல்லுலகெலாமென்னுஞ்
சொல்லையேதுணையெனக்கொடுபரமன் றொண்டர்மாபுராணம்புகல்தூயோய்
செல்லைமேவியபொழில்சுலாங்குன்றைச் சேக்கிழாரெனுந்தேசிகமணியே. (௩)

காண்டமோரிரண்டொழிவறுசருக்கங் கருதுமோர்பதின்மூன்றிலன்பர்கடம்
மாண்டசீர்புகழ்த்தேத்தியவின்னை வாதராயணமாமுனியென்கோ
நீண்டகாவியத்தலைவனுமொருவான் மீமிசையென்கெனோவிலவியசாகை
நீண்டருஞ்சுடரருள்பெறுகுன்றைச் சேக்கிழாரெனுந்தேசிகமணியே. (௪)

[illegible]மேவியசாஞ்சிலைச்சிறக்கப் புகன்றதோர்திடிற்பொருகடல்வையத்
தனக்[illegible]தன் சீரமையவீண்டுரைத்தருளினைபோலும்
கனிபழுக்குகல்லிர[illegible]யின்பக் கட்டியேயருட்கனை[illegible]ஞானந்
[illegible] சேக்கிழாரெனுந்[illegible]மணியே. (௫)

## ௬௫ ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் தோத்திரப்பா.

ஆதியந்தமிலாப்பரனடிக்கு மம்பொனம்பலமுன்றினி [illegible] வார்
நீதிவேந்தர்களாதியோர்பரவ நிகழுமன்பர்தம்பெருங்கதைவிரித்துக்
கோதில்சாமரமபயனின்றிரட்டக் குஞ்சரத்தின்மேல்வலம்வருங்கோவே
சீதவான்பொழினிலவியகுன்றைச் சேக்கிழாரொனுந்தேசிகமணியே. (௬)

கடலினிற்பெருங்கடலடைத்ததுபோற் கதித்தவான்புகழன்பர்தங்கதையைப்
புடவிமீதினிலொருவகைப்படுத்தி புனிதனல்லருளாற்புகன் றளித்தோய்
மடலவிழ்ந்தொழுகியவருட்டேனே மன்னுதேனினுண்மலிபெருஞ்சுவையே
திடனுலவியமதிலெழிற்குன்றைச் சேக்கிழாரொனுந்தேசிகமணியே. (எ)

[illegible]ஊர்வருநம்பியன் றுரைத்த நற்றிருத்தொண்டத்தொகைவழிநவில்சீர்ப்
[illegible]ரார்புகழ்நாரையூர்த்தலைவர் புகன்றளித்தவந்தாதியின்வகையே
சேவின்மேலரனடியவர்சரிதஞ் செகத்தின்மேவுறவிரித்தருள்திறத்தோய்
தேவர்மாதவர்சூழ்தருகுன்றைச் சேக்கிழாரொனுந்தேசிகமணியே. (அ)

அல்லைமேவியகளத்திறைசீட்டங் கன்றளித்திடவரும்புறத்தொண்டர்க்
கொல்லையேயெழில்வீட்டினையுதவு மோங்குகொற்றவன்குடிவளர்பெருமான்
எல்லையில்லதோர்நின்பெருஞ்சீர்த்தி யேத்திடுனெனிலென்றரத்ததுவோ
செல்லநீர்த்திடமன்பர்சூழ்குன்றைச் சேக்கிழாரொனுந்தேசிகமணியே. (௯)

அம்பலத்தரனருளினுலுரைத்த வளவிலாப்பெருங்காப்பியமதனை
இம்பர்போற்றுநல்லடியரோடெலையுமிருத்தியின்னருள்சுரந்தவின்னமுதே
நம்புதிவ்வெளியேன் றுயரகற்றி நானிலத்தினிற்காத்தனின்கடன்காண்
செம்பொன்மாளிகைசூழ்தருகுன்றைச் சேக்கிழாரொனுந்தேசிகமணியே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

இஃது இப் பெரியபுராண உரையாசிரியராகிய தமிழ்ப்பண்டிதர்
ஆ-சுப்பராயநாயகர்வர்களால் இயற்றப்பட்டது.



